## Contents

## கடவுள் வாழ்த்து

*அறுசீர் விருத்தம்*

***4740. அலங்கலில் தோன்றும் பொய்ம்மை***
***அரவு என, பூதம் ஐந்தும்***
***விலங்கிய விகாரப்பாட்டின்***
***வேறுபாடு உற்ற வீக்கம்***
***கலங்குவது எவரைக் கண்டால் ?***
***அவர், என்பர்- கைவில் ஏந்தி,***
***இலங்கையில் பொருதார்; அன்றே,***
***மறைகளுக்கு இறுதி யாவார்!***

***மறைகளுக்குஇறுதியாவார்*** *- வேதத்தின் எல்லை நிலமாக இருக்கின்ற ஞானிகள்;* ***எவரைக் கண்டால்*** *- எவரைத் தரிசித்த உடனே;* ***விலங்கிய பூதம் ஐந்தும்*** *- ஒன்றோடொன்று ஊடுருவிக் கலந்த ஐந்து பூதங்களும்;* ***வேறுபாடுஉற்ற வீக்கம்*** *- வேறு வேறு விதமாக அமைந்த பன்மைத் தோற்றம்;* ***அலங்கலில் தோன்றும் பொய்ம்மை*** *- மாலையில் தோற்றமளித்த பொய்;* ***அரவு என*** *- பாம்பு போல;* ***கலங்குவது*** *- இல்லாது போதல் (நிகழுமோ):* ***அவர் அன்றே*** *- அவர் அல்லவா;* ***கைவில் ஏந்தி*** *- கரத்திலே கோதண்டத்தைத் தாங்கி;* ***இலங்கையில் பொருதார்*** *- இலங்கை மாநகரத்தில் போர் செய்தவர்;* ***என்பர்*** *- என்று கூறுவர். பொய்யான பாம்பு மெய்யான மாலையைக் கண்டு உண்மை தெரிந்தவுடன் மறையும். அதுபோலப் பொய்யான பிரபஞ்சம் மெய்யான பரம்பொருளைப் பார்த்ததும் மறையும். மெய்யுணர்ச்சி தோன்றியதும் பிரபஞ்சம் இறைவனாகவோ இறைவனின் மேனியாகவோ தோன்றும். உள்ளது - மாலை; உள்ளது - பரம்பொருள்; இல்லது - பாம்பு; இல்லது - பிரபஞ்சம். பிரபஞ்சத் தோற்றத்துக்கு ஆதாரமான பரம்பொருள் வில்லேந்தி வந்தது. ஐந்து பூதங்களும்தம்மிற் கலத்தலால் விகாரங்கள் உண்டாயின. கலத்தல்இது பஞ்சீகரணம் என்று பேசப்படும். ஈண்டுப் பூதம் என்றது*

*தன் மாத்திரைகள்.'தன்மாத்திரைகள் ஐந்தினையும் ஒரொன்று இரண்டாய்ப் பகுத்து, ஒன்றை நன்னாலாக்கித் தன்பாதி ஒழிந்த நாலின் உடன்கூட்டி இன்னே யல்லாதவை நான்கின் இயல்பிற்கூட்ட, வானாதி பின்னே தூல பூதமெனப் பிறக்கும்' என்று பிரம்ம கீதை பேசும். நிறைவாய் நிற்கும் அப்பிரமத்தில் தோன்றும் ஐம்பூத விகாரம்.... கற்பனையினாலே செனித்த என்று கைவல்ய நவநீதம் பேசும்.*

*உள்பொருளின்கண்இல்லாத பொருளைக் காண்பதை 'ஆரோபம்', 'அத்தியாயம்', 'கற்பனை' என்பர். இல்பொருளைக் காணாது உள் பொருளைக் காண்பதை 'அபவாதம்' என்பர். ஆரோபம் 'நாரூடு பணியாய்த் தோன்றல்!' என்றும், அபவாதம் 'அரவன்று, கயிறு என்றாற்போல்.... புரமன்று, புவனமன்று பூதங்கள் அன்று பிரம்மம் என்று தெளிவதே!' என்றும் கைவல்ய நவநீதம் கூறும்.*

*நக்கீரர், 'கற்றோர்க்குத் தாம் வரம்பாகிய தலைவர்' என்றார் (முருகு 134- 135) கவிச்சக்கரவர்த்தி மறைகளுக்கு இறுதியாவார் என்றார். மறைகளுக்கு இறுதியாவார் - உபநிடதமாக இருக்கும் ஞானிகள் - (எழுவாய்) முன்னோர்கள், இலங்கையில் பொருதார் மறைகளுக்கு இறுதியாவார் என்று பொருள் கொண்டனர்.*

*‘எல்லாப்பொருளும் இராமபிரான்’ என்று தமிழ் வேதம் பேசும். ‘ஊனின் மேய ஆவி நீ, உறக்கமோ டுணர்ச்சி நீ. ஆனின் மேய ஐந்தும் நீ, அவற்றுள் நின்ற தூய்மை நீ, யானும் நீ அதன்றி எம்பிரானும் நீ இராமனே’ என்பது திருச்சந்த விருத்தம். (பிரபந்தம் - 845) பண்பும் பண்பியும், இவற்றுக்கு மூலகாரணமாகிய பூதங்களும் இவற்றுக்கு மூலப் பொருளாகிய இறைவனும் இராமபிரான் என்பது அப் பாசுரத்தின் உட்கருத்து. உலகஇதிகாசங்களில் முதன்மை வகிக்கும் இராமாயணம் ஏழு காண்டங்களைத் தன்னகத்தே கொண்டது. ஒரு காண்டம் பருவத்தாலும் (பால) மூன்று காண்டங்கள் இடத்தாலும் (அயோத்தி, ஆரண்ய, கிட்கிந்தா) ஒரு காண்டம் செயலாலும் (யுத்த) இரு காண்டங்கள் பண்பாலும் (சுந்தர, உத்தர) பெயர் பெற்றுள்ளன. தமிழில் கவிச்சக்கரவர்த்தி கம்பர் உத்தர காண்டம் பாடவில்லை. இராமாயணத்துக்குள் சுந்தரத்தைப் பற்றிப் பேசுவதால் அக்காண்டம் சுந்தர காண்டம் எனப்பெயர் பெற்றது. அதனால் அது உயர்ந்தது என்பர். பெருமான் மன்னுயிர் வாழ உலகில் அவதரித்தலைக் கூறும் பால காண்டத்தைவிட, இளவலுக்கு அரசு தந்து தியாக மூர்த்தியாய்க் காடேகும் அண்ணலைப் பற்றிக் கூறும் அயோத்தியா காண்டத்தைவிட, தேவர் சிறை மீட்பதற்காகப் பிராட்டி சிறைபுகுதலைப் பற்றிக் கூறும் ஆரண்ய காண்டத்தைவிட, அறத்தைக் காக்க வேண்டும் என்னும் ஒரே குறிக்கோளுடன் கீழே இறங்கிய இராகவன் வாலியைக் கொன்று, காசில்கொற்றத்தைக் காட்டிய கிட்கிந்தா காண்டத்தைவிட, பெருமான் மணிமுடி சூடியதைக் கூறும் யுத்த காண்டத்தைவிட சுந்தரகாண்டம் எவ்வகையில் உயர்ந்தது என்னும் ஐயம் தோன்றுவது இயற்கையே. இவ் ஐயத்தைப் போக்க பலர் முயன்று பலவாறு கூறுகின்றனர்.*

*சிறையிலிருக்கும்பிராட்டியின்பால் இராமதூதன் பெருமானின் திருமேனி அழகைப் பலபடியாக விவரிக்கின்றான்; அதனாலும், பெருமானைப் பிரிந்த பிராட்டி மென் மருங்குல் போல் வேறுள அங்கமும் மெலிந்து புடமிட்ட பொன்போல விளங்குவதைக் கூறுவதாலும், சுந்தரனாகிய அனுமன் புகழ் ஒன்றே விவரிக்கப்படுவதாலும் இக்காண்டம் சுந்தர காண்டம் எனும் பெயர் பெற்றது என்று பலர் கூறுகின்றனர். இக் காரணங்கள் அனைத்தும் அன்பின் அடிப்படையிலும் உண்மையின் அடிப்படையிலும் எழுந்தனவே. ஆயினும், இவற்றினும் மேலான உண்மை ஒன்று உள்ளது. இராவணன் வரபலத்தாலும், படை பலத்தாலும், தேசத்தார்க்கு இடுக்கண் தந்தான். தேவியைச் சிறையில் வைத்தான். மன்னுயிர் புடைத்துத் தின்றான். இதனால் அறத்தின்பால் ஈடுபாடு கொண்ட சமுதாயம், இராவணன் வீழ்ச்சியை எதிர்பார்த்துக் கொண்டிருந்தது. இராவணன் வீழ்ச்சியடைய மாட்டானா ? அவன் படை அழியாதா ? அவன் நகர் தொலையாதா ? அவன் செல்வங்கள் சிதையாவா ? செருக்குக் கொண்ட அரக்கர்கள் ஒழியார்களா ? என்று மானுட சமுதாயம் எதிர்பார்த்துக் கொண்டிருந்தது. அந்த எதிர்பார்ப்பு முழுமையையும் நிறைவேற்றி வைக்கின்றான் இராம தூதனாகிய அனுமன். அனுமன் சோலையை அழிக்கின்றான். சேனையைத் துவைக்கின்றான். இராவணன் இதயத்தில் அச்சத்தை விதைக்கின்றான். பாவபண்டாரமான இலங்கையை எரிக்கின்றான். தருமத்தின் வெற்றியை எதிர்பார்த்து, எதிர்பார்த்து, ஏமாந்து காய்ந்து கிடந்த புண்ணிய இதயங்கள், இராவணன் வீழ்ச்சிக்குக் கால்கோள் விழாவை வழங்கிய இக் காண்டத்தைச் சுந்தரம் என்று பெயரிட்டு மலரிட்டுப் பூசித்துப் பேரின்பம் பெற்றன. அறச் சிந்தனையாளர்களின் எண்ணங்களே வால்மீகியின் இதயத்தில் சுந்தர காண்டமாக மலர்ந்தது. இக்காண்டத்தின் நாயகன் அனுமனே. இராவணன் முதலான அரக்கர்களும் இந்திரசித்தன் முதலான வீரர்களும் வீடணன் போன்ற சான்றோர்களும் உப பாத்திரங்களே. பிராட்டியும்கூட அனுமனின் பேருருவுக்கு முன்னே அனுமனின்*

*தியாகத்துக்கு முன்னே, அனுமனின் தொண்டுக்கு முன்னே உப பாத்திரமாக ஒளி வீசுகிறாள். இக் காண்டத்திற்கு ஒரே எழுவாய் உண்டு. அவன் அனுமனே. மற்றவையெல்லாம் செயப்படுபொருளே.*

*அனுமன், கடலைக்கடந்து, இலங்கையைத் தேடி, பிராட்டியைக் கண்டு, கணையாழியைத் தந்து, பொழிலைச் சிதைத்து, அரக்கரை வதைத்து, இராவணன் செருக்கைக் குலைத்து, மீண்டு வந்து வேதமுதல்வன் பாதத்தை வணங்கி, உயர்வற உயர்நலம் பெறுகிறான். இதுவே சுந்தர காண்டம்.*

## கடல் தாவு படலம்

*அனுமன் மகேந்திரமலையிலிருந்து தென்பெருங்கடலைக் கடந்து பவளமால் வரையில் பாய்ந்த செய்தியைக் கூறுகிறது. இப்படலத்தில் மைந்நாகன், சுரசை, அங்காரதாரை என்னும் மூன்று பாத்திரங்களை அனுமன் சந்திக்கின்றான். பேருருக் கொண்டு அனுமன் கடல் கடந்து செல்லும்போது அவனுக்கு உதவி செய்வதற்காக மைந்நாகமலை கடலிலே தோன்றி, அனுமனைத் தன்மீது தங்கி இளைப்பாறிச் செல்ல வேண்டுகிறது. அனுமன், 'இராமன் திருத்தொண்டு செய்யும் நான் ஓய்வை விரும்பேன். திரும்பி வரும்பொழுது உன்னைக் காண்கிறேன்' என்று சொல்லிக் கடந்து செல்கிறான். கடந்து செல்கிற அனுமனைத் தேவர்கள் ஏவலால் சுரசை தடுக்கிறாள். அவள் 'எனக்குப் பசியாக இருக்கிறது. உன்னை உண்பேன்' என்று வாயைத் திறக்கிறாள். அனுமன் அவள் வாய்க்குள் புகுந்து வெளியே வருகிறான். சுரசையை வென்ற அனுமன் அங்கார தாரையைச் சந்திக்கின்றான். அங்கார தாரை அனுமனை விழுங்குகின்றாள். அனுமன் அவள் உடலைப் பிளந்து வெளிப்படுகிறான். அரக்கி இறக்கிறாள். தேவர்கள் அனுமனை வாழ்த்துகின்றனர். அனுமன், வருகின்ற இடையூறுகள் எல்லாம் நீங்க வேண்டும் என்று கருதி, இராம நாமத்தைத் தியானிக்கின்றான். மூன்று தடையைக் கடந்த அனுமன் பவளமால் வரையில் பாய்ந்து இலங்கையின் வளங்களை நோக்குகிறான். பத்துவிதமானபொறி புலன்களின் வயப்பட்ட ஆன்மாவின் வீடுபேற்றிற்காக நற்குரவன் சம்சார சாகரத்தைக் கடந்து புனித ஆன்மாவை நோக்கி வருவது இப் படலத்தின் உட்குறிப்பு என்பர். இங்கு அனுமன் நற்குரவன், பிராட்டி புனித ஆன்மா என்று கொள்வர்.*

*அனுமன்துறக்க நாட்டை இலங்கை என்று ஐயுற்றுத் தெளிதல்*

**அறுசீர்விருத்தம்**

*4741.* ***ஆண்தகைஆண்டுஅவ் வானோர்***
***துறக்க நாடுஅருகில் கண்டான்;***
***'ஈண்டு, இதுதான்கொல் வேலை***
***இலங்கை?' என்று ஐயம் எய்தா,***
***வேண்டு அருவிண்ணாடு என்னும்***
***உள்ளம் மீட்டான் 'காண்தகுகொள்கை உம்பர்***
***இல்'என,கருத்துள் கொண்டான்.***

**ஆண்தகை** - *ஆண்மையிற் சிறந்த அனுமன்;* **ஆண்டு** - *அங்கே; அவ்வானோர் - அந்தத் தேவர்களின்;* **துறக்க நாடு** - *சுவர்க்க லோகத்தை;* **அருகில் கண்டான்** - *பக்கத்தில் பார்த்தான்; (பார்த்த அனுமன்)* **ஈண்டு** - *இங்கே தெரிகின்ற;* **இது** - *இந்த உலகம்;* **வேலை இலங்கை** - *கடலால் சூழப்பட்ட இலங்கையோ;* **என்று ஐயம் எய்தா** - *என்று சந்தேகம் அடைந்து;* **வேண்டு அரும்** - *யாவரும் விரும்புகின்ற, அரிய;* **விண்ணாடு என்னும்** - *தேவநாடு என்கின்ற;* **மெய்ம்மை கண்டு** - *உண்மையைத் தெரிந்து;* **உள்ளம் மீட்டான்** - *(அங்கே தேடும்) எண்ணத்தை விலக்கி;* **காண்தகு கொள்கை** - *தேடிக் காண வேண்டிய கோட்பாடாகிய பிராட்டி;* **உம்பர் இல் என** - *விண்ணுலகில் இல்லை என்று;* **கருத்துள் கொண்டான்** - *மனத்தில் நினைத்துக்கொண்டான்.*

*ஆண்தகை -புலனடக்கம் பெற்றவன். 'காண்டகு தோகை' என்று பாடம் கொண்டு காணவேண்டிய பிராட்டி என்று உரைகூறுதல் உண்டு. "விண்நாடு வேண்டு அரு நாடு" என்றதால், இலங்கை பிறர் வெறுக்கும் நாடு என அறிக. மீட்டான் - மீட்டு, முற்றெச்சம். இல் - இல்லை. (விளம்-மா-மா-விளம்-மா-மா) என்னும் சீர்களை முறையே பெற்றுவரும் அறுசீர் விருத்தம், இராம காதையில் இத்தகைய விருத்தங்கள் 2536 பாடல்கள் உள்ளன என்று அமரர் கம்பனடிப்பொடி அவர்கள் வரைந்துள்ளார் (கம்பன் மணிமலர் 1976) (1)*

***4742. கண்டனன்,இலங்கை மூதூர்க்***
***கடிபொழில்கனக நாஞ்சில்***
***மண்டல மதிலும்,கொற்ற***
***வாயிலும், மணியின் செய்த***
***வெண்தளக் களபமாட***
***வீதியும்,பிறவும் எல்லாம்;***
***அண்டமும்திசைகள் எட்டும்***
***அதிர,தோள் கொட்டி ஆர்த்தான்***

*(அனுமன்)*

***இலங்கை மூதூர்** - பழைமையான இலங்கை நகரின்; **கடிபொழில்** - காவற் சோலைகளையும்; **கனக நாஞ்சில்** - பொன்னாற் செய்த குருவித் தலையையும்; **மண்டலமதிலும்** - வட்டமான மதிலையும்; **கொற்ற வாயிலும்** - வெற்றியை அறிவிக்கும் கோபுர வாயிலையும் ; **மணியின் செய்த வெண்தள** - மணிகள் பதிக்கப் பெற்ற வெண்மையான; **களப மாட வீதியும்** - சுண்ணம் பூசப்பெற்ற, மாளிகைகளை உடைய வீதியையும்; **பிறவும் எல்லாம்** - (கூறப்பெறாது விடுத்த) பிறவற்றையும்; **கண்டனன்** - பார்த்தான்; **அண்டமும்** - வானத்தின் உச்சியும்; **திசைகள் எட்டும்** - எட்டுத் திக்குகளும்; **அதிர** - எதிரொலிக்க; **தோள் கொட்டி ஆர்த்தான்** - தோள்களைப் புடைத்து ஆரவாரித்தான்.*

*அனுமன் இலங்கைமூதூரின் காவற்சோலை முதலியவற்றைப் பார்த்து மகிழ்ச்சியால் தோள்களைப் புடைத்து ஆரவாரித்தான். இலங்கை மூதூர் -மூது இலங்கை ஊர். நாஞ்சில் - மதில் மேல் குருவித் தலைபோல் அமைக்கப் பெற்ற உறுப்பு. சிலப்பதிகாரத்தில் அடைக்கலக் காதையில் காண்க (217) அண்டம் - பிரபஞ்ச உருண்டை என்றும் கூறலாம். திசைகள் கூறப் பெற்றமையால் (அண்டம் என்பதற்கு) வான்முகடு கூறப் பெற்றது. 'அண்டமுற நிமிர்ந்தாடும் அப்பன்' என்பர் அம்மையார் (மூத்த திருப்பதிகம்). அதிர - எதிரொலிக்க. வீரர்கள் உற்சாகத்தால் தோள் கொட்டுவர். 'தன் தோள் கொட்டித் தடவரையை... எடுத்தான்' (நாவரசர் - ஆராத இன்னமுதை 10) கண்டனென்... பிறவும் என்னா... ஆர்த்தான் என்னும் பாடம் கொண்டு மதில் முதலானவற்றைப் பார்த்தேன் என்று கூறி ஆரவாரித்தான் என்று பொருள் கூறுவாரும் உளர். தளம் - சுண்ணச் சாந்து. தாழியும் சாந்தும் தளம் ஆகும். (பிங் 3615) கடிபொழில் என்பது காவற்காட்டை. இது காட்டரண். கொற்றவாயில் - கோபுரவாசல். நம் கோன் கொற்றவாயில் (சிலம்பு 20-16) களப மாட வீதி - யானை செல்லும் வீதி என்றும் கூறலாம். (2)*

***4743. வன்தந்தவரிகொள் நாகம்,***
***வயங்குஅழல் உமிழும் வாய,***
***பொன்தந்தமுழைகள்தோறும்***
***புறத்து உராய்ப் புரண்டு போவ -***
***நின்று, அந்தம்இல்லான் ஊன்ற -***
***நெரிந்துகீழ் அழுந்தும் நீலக்***
***குன்றம் தன்வயிறு கீறிப்***
***பிதுங்கினகுடர்கள் மான.***

***அந்தம்இல்லான்*** *- அழிவில்லாத அனுமன் ;* ***நின்று ஊன்ற*** *- நின்று (திருவடிகளை) வன்மையாக (மலையில்) பதிக்க (அதனால்);* ***நெரிந்து*** *- சிதைந்து ;* ***கீழ் அழுந்தி*** *- பூமிக்கு அடியிலே புதைந்து;* ***நீலக்குன்றம்*** *- நீலநிறமுடைய மகேந்திர மலை ;* ***தன் வயிறு கீறி*** *- தன்னுடைய வயிறு கிழிபட்டு ;* ***பிதுங்கிய குடர்கள் மான*** *- வெளியிட்ட குடல்களைப் போல;* ***பொன்தந்த முழைகள் தோறும்*** *- பொன்னைத் தருகின்ற குகைகள் தோறும்;* ***வயங்கு அழல் உமிழும் வாய*** *- விளங்குகின்ற நெருப்பைக் கக்கும் வாயை உடைய;* ***வன்தந்த வரிகொள் நாகம்*** *- வலிமையான பற்களையும் கோடுகளையும் பெற்ற பாம்பு;* ***உராய்ப் புரண்டு புறத்து போவ*** *- உராய்ந்து கொண்டு புரண்டு வெளியே சென்றன. அனுமன்திருவடியின் அழுத்தம் பெற்ற மலையின் குடல்வெளிப்பட்டாற் போலப் பாம்புகள் புறத்தே போந்தன. அந்தம் இல்லான்- அழிவற்றவன் (சிரஞ்சீவி). பாம்பைத் 'தந்தி' என்பர், கச்சியப்பர் - தந்தி நஞ்சம் தலைக்கொளச் சாய்ந்தவர் (கந்த 3-10-21) ஊன்ற - அழுத்த 'அருவரை நெரிய வூன்றும் குழகனே' (நாவரசர் - நெற்றி மேல் 10). பொன், மலையின்கண் தோன்றலின் பொன் தந்த முழைகள் என்றான். பொன்படு நெடுவரை. (சிலம்பு 28, 142) வரி அரவம் - கோடுகளை உடைய பாம்பு. வரி அரவே நாணாக, மால்வரையே வில்லாக (சம்பந்தர் விடியலோர் 7). அனுமன் கடல் தாவப் போகிறான் - அதற்கு ஆயத்தப் படுத்த அவன் திருவடியை வன்மையாகப் பதித்தான். வால்மீகி, "அனுமன் கடலைக் கடக்க விரும்பிக் கைகளாலும் கால்களாலும் அந்த மலையை அழுத்தினான். அப்பொழுது அந்தப்பர்வதம் ஒரு முகூர்த்த காலம் கிடுகிடென்று நடுங்கிற்று" என்பர். பிதுங்குதல் - அழுத்தம் பெற்ற பொருளுக்கு உள்ளே உள்ளவை வெளிப்படுதல். இலங்கைக் கோமான் தன்னைக் கதிர் முடியும், கண்ணும் பிதுங்க ஊன்றி (நாவரசர் தூண்டு சுடர் 10)* ***(3)***

***4744. புகல்அரும் முழையுள் துஞ்சும்***
***பொங்கு உளைச் சீயம்பொங்கி,***
***உகல்அருங் குருதிகக்கி,***
***உள்ளுறநெரிந்த; ஊழின்,***
***அகல் இரும் பரவைநாண***
***அரற்றுறுகுரல ஆகி,***
***பகல்ஒளி கரப்ப,வானை***

*மறைத்தன,பறவை எல்லாம்.*

***புகல் அரும்*** *- நுழையமுடியாத;* ***முழையுள் துஞ்சும்*** *- குகையின்கண் உறங்கின்ற;* ***பொங்கு உளைச்சீயம்*** *- சிலிர்க்கின்ற பிடரி மயிரையுடைய சிங்கங்கள்;* ***பொங்கி*** *- கொந்தளித்து;* ***உகல் அருங் குருதி கக்கி*** *- சிந்தக் கூடாத இரத்தத்தை வெளிப்படுத்தி;* ***உள்ளுற நெரிந்த*** *- உள்ளே சிதைந்தன;* ***பறவை எல்லாம்*** *- எல்லாப் பறவைகளும்;* ***அகல் இரும் ஊழின் பரவைநாண*** *- பரந்த பெரிய ஊழிக்காலத்துக் கடல்கள் வெட்கம் அடைய;* ***அரற்றுறு குரல ஆகி*** *- கதறுகின்ற கூக்குரலை உடையனவாய்;* ***பகல் ஒளி கரப்ப*** *- சூரியனுடைய பிரகாசம் மறையும்படி;* ***வானை மறைத்தன*** *- ஆகாயத்தை மூடின.    அனுமன் திருவடிபடஅழுந்திய மலைக்குகைக்குள் சிங்கங்கள் குருதி கக்கி நெரிந்தன. பறவைகள் வானை மறைத்தன. நெரிதல் - சிதைதல், நொறுங்குதல். வாளரக்கன் தலை பத்தும் நெரித்தவன் (நாவரசர் - மன்னு மலைமகள் 10)*
***(4)***

*4745.  மொய்யுறுசெவிகள் தாவி,*
*முதுகுஉற,முறைகால் தள்ள,*
*மைஅறு விசும்பினூடு*
*நிமிர்ந்தவாலதிய, மஞ்சின்*
*மெய்உறத்தழீஇய, மெல்லென்*
*பிடியொடும்வெருவ லோடும்*
*கையுற மரங்கள்சுற்றி,*
*பிளிறின-களிநல் யானை.*

***களிநல் யானை*** *- மதமயக்கமுடைய பெரிய யானைகள்;* ***மைஅறு விசும்பினூடு*** *- மேகம் இல்லாத ஆகாயத்தின்கண்;* ***நிமிர்ந்த வாலதிய*** *- நீண்ட வாலையுடைய (யானைக் கன்றுகள்);* ***மொய்உறு செவிகள்*** *- வலிமை மிக்க காதுகள்;* ***தாவி முதுகுற*** *- பரவி முதுகைச்சார (அதனால்);* ***முறைகால் தள்ள*** *-பருவக்  காற்று வீச;* ***மஞ்சின் மெய்யுறத் தழீஇய*** *- மேகத்தைப் போல(த்தம்) உடம்பைத் தழுவிக் கொண்ட;* ***மெல்லென் பிடியொடும்*** *- மென்மையான பெண் யானைகளுடன்;* ***வெருவலோடும்*** *- அச்சத்தோடும்;* ***கைஉற மரங்கள் சுற்றி*** *- கைகளால் மரங்களைச் சுற்றிக் கொண்டு;* ***பிளிறின*** *- வீறிட்டுக் கதறின.     யானை, கன்று,பிடியுடன் அச்சத்தோடு மரங்களைப் பற்றிப் பிளிறின. வாலதிய - வாலையுடைய கன்று. வாலதி - வால். அ -  உடைமைப் பொருளைக்குறித்தது. வாலதிய என்னும் பலவின்பால் வினைமுற்று வினையாலணையும் பெயராயிற்று.*                              ***(5)***

*4746.  பொன்பிறழ் சிமயக் கோடு*
*பொடியுற,பொறியும் சிந்த,*
*மின்பிறழ்குடுமிக் குன்றம்*
*வெரிந்உறவிரியும் வேலை,*
*புன் புற மயிரும்பூவா,*
*கண்புலம்புறத்து நாறா,*

**வன்பறழ் வாயில்கவ்வி,**
**வல்லியம்இரிந்த மாதோ.**

***மின்பிறழ்குடுமிக் குன்றம்*** *- ஒளி விளங்கும்தலைமையுடைய மகேந்திர மலையின்;* ***வெரிந்*** *- முதுகின்கண்;* ***பொன்பிறழ் சிமயக்கோடு*** *- பொன்போலப் பொலிவு பெற்ற சிகரமானது;* ***உற*** *- நன்றாக அழுந்த (அதனால்);* ***பொடியுறப் பொறி சிந்த*** *- பொடிப் பொடியாகிப் பொறி பறக்க;* ***விரியும் வேலை*** *- பிளவுபடும் சமயத்தில்;* ***வல்லியம்*** *- புலிகள்;* ***புன்புற மயிரும் பூவா*** *- மெல்லிய உடம்பில் பூனை மயிரும் முளைக்காத;* ***புறத்துக் கட்புலம் நாறா*** *- வெளியில் தோன்றும்படி கண்கள் திறவாத;* ***வன்பறழ்*** *- (தம்முடைய) வலிமையான குட்டிகளை;* ***வாயில் கவ்வி இரிந்த*** *- வாயில் பற் றிஅஞ்சியோடின.*

*சிகரம்பொடியாகி மலை பிளந்தது என்றும் கூறலாம். கோடு அழுந்தக் குன்றம் பிளந்தது என்று இங்கே கொள்ளப் பட்டது. சிமயம் - சிகரம் - இமையவர் உறையும் சிமையப் பிடர்த்தலை (சிலம்பு 5-97) கோடு - சிகரத்தின் நுனி. பொற்கோட்டு இமயமும் பொதியமும் போன்றே (புறம் 2). உடலில் தோன்றும் புல்லிய மயிரைப் பூனைமயிர் என்பர். சங்க இலக்கியம் அரிமயிர் என்று பேசும். பறழ் - குட்டி, நாய், புலி முதலான விலங்குகளின் குட்டியைப் பறழ் என்பது மரபு. புலிப்பறழ் அன்ன பூஞ்சினை வேங்கை (மரபியல் மேற்கோள்) மலைக்கு முதுகு கூறப்பெற்றுள்ளது.*
***(6)***

*747.* **தேக்குஉறுசிகரக் குன்றம்**
**திரிந்துமெய்ந் நெரிந்து சிந்தத்**
**தூக்குறு தோலர்,வாளர்,**
**துரிதத்தின் எழுந்த தோற்றம்,**
**தாக்குறுசெருவில், நேர்ந்தார்**
***தாள்அறவீச, தாவி,***
**மேக்குறவிசைத்தார் என்னப்**
**பொலிந்தனர்-விஞ்சை வேந்தர்.**

**தேக்கு உறுசிகரக் குன்றம்** *- தேக்கு மரங்கள் மிகுதியாகப் பெற்ற மகேந்திர மலை;* ***திரிந்து*** *- தன் இயல்பு வேறுபட்டு;* ***மெய்ந் நெரிந்து சிந்த*** *-உடல் சிதைந்து சிதற (அதனால்);* ***விஞ்சை வேந்தர்*** *- வித்தியாதரத் தலைவர்கள்;* ***தூக்குறு தோலர்*** *- உயர்த்திப் பற்றிய கேடகமுடையவராய்;* ***வாளர்*** *- வாளை ஏந்தியவராய்;* ***துரிதத்தின் எழுந்த தோற்றம்*** *- வேகமாக எழுந்த காட்சி;* ***தாக்குறு செருவில்*** *- மோதிச் செய்கின்ற போரில்;* ***நேர்ந்தார்தாள்அற வீச*** *- எதிர்த்த பகைவர்களின் முயற்சியற்றுப் போக ஆயுதங்களைச்சுழற்ற;* ***மேக்கு உறத் தாவி*** *- வானிலே நன்றாகப் பாய்ந்து;* ***விசைத்தார்என்னப் பொலிந்தனர்*** *- வேகம் பெற்றவர்களைப் போல விளங்கினார்கள். சலிப்பற்றதுமலை. அஃது இன்று சலித்தது. நிலை திரிந்தது. சுழன்றது; அதனால் அங்குள்ள வித்தியாதரத் தலைவர்கள் ஏந்திய கேடகத்தோடும் தாங்கிய வாளோடும் விண்ணில் சென்றனர். அக் காட்சி பகைவரைத் தாக்க எழுந்தது போல் இருந்தது. பகைவரால் தாக்கப்பெற்று மேல் எழுந்த வீரர் என்றும் பொருள் கொள்ளலாம்.*
***(7)***

***4748.தாரகை,சுடர்கள், மேகம்***
***என்று இவைதவிரத் தாழ்ந்து,***
***பாரிடை அழுந்துகின்ற***
***படர்நெடும்பனிமாக் குன்றம்,***
***கூர் உகிர்க்குவவுத் தோளான்***
***கூம்புஎனக்குமிழி பொங்க***
***ஆர் கலி அழுவத்துஆழும்***
***கலம் எனல்ஆயிற்று அன்றே.***

***தாரகை சுடர்கள்மேகம் என்று இவை*** *- நட்சத்திரம், சூரிய சந்திரர்கள்; மேகம் என்னும் இப்பொருள்கள்;* ***தவிர*** *- (சார்ந்து வராமல்) நீங்கிநிற்க;* ***தாழ்ந்து*** *- இறங்கி;* ***பாரிடை அழுந்துகின்ற*** *- பூமியின்கண் கீழ்நோக்கிப் போகும்;* ***படர்நெடும் பனிமாக் குன்றம்*** *- விரிந்து நீண்ட குளிர்ந்த மலை;* ***கூர்உகிர் குவவுத் தோளான்*** *- கூர்மையான நகங்களையும் திரண்ட தோள்களையும் உடைய அனுமன்* ***; கூம்புஎன*** *- பாய்மரம் போலிருக்க* ***; ஆர்கலி அழுவத்து*** *- கடலின் ஆழத்திலே* ***; குமிழி பொங்க*** *-நீர்க்குமிழிகள் கொந்தளிக்க;* ***ஆழும் கலம் எனல்ஆயிற்று*** *-மூழ்குகினற் கப்பல் என்று கூறும் தன்மையைப் பெற்றது.*

*அனுமன் கப்பலின்பாய்மரம் போன்றிருந்தான். அழுந்தும் மலை கடலுள் ஆழும்கப்பல் போன்றிருந்தது.* ***கூம்பு - பாய்மரம்.*** *வங்கத்தின் கூம்பேறும் மாப்பறவை போன்றேனே (குலசேகரர் 5-5). கப்பலையும் மலையையும் ஒப்பிடுதலைக் குறுந்தொகையில் காண்கிறோம். 'வாழி தோழி தெண்டிரைக் கடல் ஆழ் கலத்தில் தோன்றி - மாலை மறையும் அவர் மணி நெடுங் குன்றே (குறு 240) அழுவம் - ஆழம் பரப்பும் ஆம்.* ***(8)***

***4749. தாதுஉகுநறுமென் சாந்தம்,***
***குங்குமம்,குலிகம், தண்தேன்,***
***போதுஉகுபொலன்தாது, என்று இத்***
***தொடக்கத்த யாவும் பூசி,***
***மீதுஉறு சுனைநீர்ஆடி,***
***அருவிபோய் உலகின் வீழ்வ,***
***ஓதிய குன்றம்கீண்டு***
***குருதிநீர்சொரிந்தால் ஒத்த.***

***அருவி -*** *மகேந்திரமலையின் அருவி;* ***தாது -*** *காவிக் கற்களையும்;* ***உகுநறுமென் சாந்தம் -*** *கரைந்து தேய்ந்த நறுமணம் வீசும் சந்தனக் குழம்பையும்;* ***குங்குமம் -*** *குங்குமப் பூக்களையும்;* ***குலிகம் -*** *சாதிலிங்கத்தையும்;* ***தண்தேன் -*** *குளிர்ந்த ;* ***போதுஉகு -*** *மலர்கள்சிந்திய;* ***பொலன்தாது -*** *பொன் நிறம் பெற்ற மகரந்தங்களையும்;* ***என்று இத் தொடக்கத்த யாவும் -*** *இது முதலான பல பொருள்களையும்* ***; பூசி -*** *தன்மேல் பூசிக் கொண்டு* ***; மீதுறு -*** *மலையின் மேலே உள்ள* ***; சுனை நீர்அடி -*** *சுனை நீரிலே குளித்து* ***; உலகின் போய் வீழ்வ -*** *பூமியில் பரந்து வீழும் காட்சி* ***; ஓதிய குன்றம் -*** *பேசப்பெற்ற மலை;* ***கீண்டு -*** *வயிறு பிளக்கப் பெற்று* ***; குருதி நீர் சொரிந்தால் ஒத்த -*** *இரத்தமாகிய நீரைச் சொரிவதைப் போன்றிருந்தன.*

*மணமுள்ளபொருள்களைப் பூசி நீராடுவார் போல அருவி, மகரந்தம் முதலானவற்றைப் பூசிச் சுனையில் நீராடின. அது, நிலத்தில் பாயும்போது மலை பிளந்து குருதி வீழ்வது போன்றிருந்தது. உகும் - கரைந்து தேயும். உப்பு இயல் பாவை உறை உற்றதுபோல் உக்கு விடும், என் உயிர் என்னும் கலிப்பாவுக்கு (நெய்தல் 21-16-17) உரை வகுத்த நச்சினார்க்கினியர், 'உயிர்.... கரைந்து விடா நின்றது' என்று உரை வகுத்தார். குலிகம் - சாதிலிங்கம். குன்றுக்குக் குருதி குறிக்கப் பெறுகிறது.* ***(9)***

***4750. 'கடல்உறுமத்துஇது' என்னக்***
***கருவரை திரியும் காலை,***
***மிடல்உறுபுலன்கள் வென்ற***
***மெய்த்தவர் விசும்பின் உற்றார்;***
***திடல்உறுகிரியில் தம்தம்***
***செய்வினைமுற்றி, முற்றா***
***உடல்உறு பாசம்வீசாது,***
***உம்பர்செல்வாரை ஒத்தார்.***

***கருவரை** - கரிய மகேந்திரமலை ; **கடல்உறு** - பாற் கடலைச் சார்ந்த ; **மத்து இது என்ன** - மத்து என்று கூறும்படி ; **திரியும் காலை** - சுழல்கின்ற சமயத்தில் ; **மிடல்உறு** - வன்மை மிக்க ; **புலன்கள் வென்ற மெய்த்தவர்** - ஐம்புலன்களும் பொறிவழியே போகாமல் அடக்கிய முனிவர்கள் ; **விசும்பின் உற்றார்** - ஆகாயத்தை அடைந்தார்கள் (அவர்கள்) ; **திடல்உறு கிரியில்** - மேட்டுப் பாங்கான மலையில் ; **தம்தம் செய்வினை முற்றி முற்றா** - தாம் தாம் செய்யவேண்டிய கடமைகளைத் தொடங்கி நிறைவு செய்யாமல் ; **உடல்உறு பாசம் வீசாது** - உடலின்கண் கொண்ட பற்றை விடாமல் ; **உம்பர் செல்வாரை, ஒத்தார்** - விண்ணுலகத்திற்குச் செல்பவரை ஒத்தார். முனிவர்கள்ஆகாயத்தை அடைந்தது பற்றை விடாமையால் சுவர்க்கம் அடைந்தவரை ஒத்தனர். திரிதல் - சுழல்தல். மண்ணகந்திரிய... மால்வரை திரிய காலும் கதிரொடு திரிய (3517). செய்ய வேண்டியவற்றை நிறைவேற்றியிருந்தால் முத்தி பெற்றிருப்பர். நிறைவேற்றாமையால் அவர்கள் சுவர்க்கம் சென்றனர். (கீதை - தியான யோகம் 40)* ***(10)***

***4751. வெயில்இயல் குன்றம் கீண்டு***
***வெடித்தலும், நடுக்கம் எய்தி,***
***மயில்இயல்தளிர்க்கை மாதர்***
***தழீஇக்கொளப் பொலிந்த வானோர்,***
***அயில் எயிற்றுஅரக்கன் அள்ளத்***
***திரிந்தநாள், அணங்கு புல்லக்***
***கயிலையில் இருந்த தேவைத்***
***தனித் தனிகடுத்தல் செய்தார்.***

***வெயில்இயல்குன்றம்** - ஒளியமைந்த மகேந்திர மலை ; **கீண்டு வெடித்தலும்** - பிளவுபட்டு இரண்டாதலும் ; **மயில்இயல் தளிர்க்கை மாதர்** - மயில் போன்ற சாயலும், தளிர் போன்ற கைகளும் கொண்ட தெய்வப் பெண்கள் ; **நடுக்கம் எய்தி தழீஇக் கொள்ள** - அச்சமுற்றுத் தழுவிக்கொள்ள (அதனால்) ; **பொலிந்த வானோர்** - பூரித்த*

*தேவர்கள் ;* ***அயில் எயிற்று அரக்கன் -*** *கூரிய பற்களைப் பெற்ற இராவணன் ;* ***அள்ள -*** *பெயர்த்தெடுக்க ;* ***திரிந்த நாள் -*** *(கயிலாய மலை) அசைந்த காலத்தில் ;* ***அணங்குபுல்ல -*** *உமாதேவி தழுவிக்கொள்ள ;* ***கயிலையில் இருந்த தேவை -*** *கயிலாய மலையில்வீற்றிருந்த சிவபிரானை ;* ***தனித்தனி கடுத்தல் செய்தார் -*** *ஒவ்வொருவரும்தனித்தனியே ஒத்திருந்தார்கள். தத்தம்தேவிமாரால் தழுவப்பெற்ற தேவர்கள் உமையம்மை தழுவக் கயிலாய மலையில் மகிழ்ந்த சிவபிரானை ஒத்திருந்தனர். வெயில் - ஒளி - வெயில்விரி கனகக் குன்றத்து எழில் கெட - (கம்பன் - மிகை 226)* ***(11)***

***4752. ஊறியநறவும் உற்ற***
***குற்றமும்உணர்வை உண்ண,***
***சீறிய மனத்தர்,தெய்வ***
***மடந்தையர்ஊடல் தீர்வுற்று***
***ஆறினர்,அஞ்சுகின்றார்,***
***அன்பரைத்தழுவி உம்பர்***
***ஏறினர், இட்டு,நீத்த***
***பைங்கிளிக்கு இரங்குகின்றார்.***

***ஊறிய நறவும் -*** *(வியஞ்சனத்துடன்) ஊறிக்கிடந்த மதுவும் ;* ***உற்ற குற்றமும் -*** *நேர்ந்த பிழையும் ;* ***உணர்வை உண்ண -*** *அறிவை அழிக்க (அதனாலே) ;* ***சீறிய மனத்தர் -*** *கொதிப்புற்ற மனத்தையுடைய ;* ***தெய்வ மடந்தையர் -*** *தேவலோகப் பெண்கள் (மலையின் அதிர்ச்சியால்) ;* ***ஊடல் தீர்வுற்று ஆறினர் -*** *ஊடல் நீங்கி அமைதியடைந்தனர் ;* ***அஞ்சுகின்றார் -*** *அச்சம் அடைந்து ;* ***அன்பரைத் தழுவி -*** *கணவரைத் தழுவிக்கொண்டு ;* ***உம்பர் ஏறினர் -*** *விண்ணின் கண்ணே சென்று ;* ***இட்டு நீத்த -*** *கூண்டுக்குள் அடைத்து விட்டு விட்டுவந்த ;* ***பைங்கிளிக்கு -*** *இளமையான கிளியின் பொருட்டாக ;* ***இரங்குகின்றார் -*** *கவலைப்படுகிறார்கள்.*

*கூட்டுக்குள்செறிக்காமல் இருந்தால் கிளி பறந்து சென்று பிழைக்குமே, பறக்கவியலாதபடி அடைத்தோமே என்று வருந்தியதை இட்டு நீத்த என்னும் தொடர் உணர்த்தும். மலையின் அசைவால் ஊடல் துன்பம் போயிற்று. இட்டு நீத்த பைங்கிளியால் வந்த துன்பம் வளர்ந்தது. பிராட்டிகூடத் தான் விட்டுவந்த கிளியைப் பாதுகாக்கும்படி தன் சகோதரிகட்குக் கூறும்படி சுமந்திரனிடம் கூறினாள். 'இது என் பைங்கிளி எடுத்த பைங்கிளி' என்னும் ஐங்குறுநூற்றுப் பாடல் (375) மகளிர் கிளிகள்பால் கொண்ட பாசத்தைப் புலப்படுத்தும். பைங்கிளி - இளங்கிளி; பசுமை - இளமை. பசுங்கதிர்க் கொத்தொடு (தக்க பரணி 605) என்னும் தொடருக்கு விளக்கம் கூறும்போது பசுங்கதிர் - பச்சைக் கதிர். பசுமை நிறத்திற் சென்றதன்று. இளமையிற் சென்றது, என்று தெளிவித்தது ஈண்டும் ஏற்கும். பாரதிகூட 'பச்சைக் குழந்தை' என்பார். 'பச்சைப் பிள்ளை' எனப் பேச்சு வழக்கிலும் இளங்குழந்தை குறிக்கப்படுவதை நினைவிற் கொள்க.* ***(12)***

***4753. இத்திறம் நிகழும் வேலை,***
***இமையவர், முனிவர், மற்றும்***
***முத் திறத்து உலகத்தாரும்,***
***முறை முறை விரைவில் மொய்த்தார்,***

***தொத்துஉறு மலரும், சாந்தும்***
***சுண்ணமும் இனைய தூவி,***
***'வித்தக சேறி' என்றார்***
***வீரனும் விரைவது ஆனான்.***

***இத்திறம்நிகழும் வேலை*** *- இப்படிப்பட்டநிகழ்ச்சிகள் நடைபெறுங் காலத்தில் ;* ***இமையவர் முனிவர் மற்றை முத்திறத்து உலகத்தாரும்*** *- தேவர்களும், முனிவர்களும் இன்னும் மூவகையான உலகத்தில் இருப்பவர்களும் ;* ***முறை முறை*** *- தகுதிக்கேற்ற வரிசைப்படி ;* ***விரைவில் மொய்த்தார்*** *- விரைவாக ஆகாயத்தில் ஒன்று கூடினர் ;* ***கொத்து உறுமலரும்-*** *கொத்துக் கொத்தான பூக்களையும் ;* ***சாந்தும்*** *- சந்தனத்தையும் ;* ***சுண்ணமும்-*** *வாசனைப் பொடிகளையும் ;* ***இனைய*** *- இப்படிப்பட்ட பொருள்களையும் ;* ***தூவி*** *- (அனுமன் திருமேனியில்) அள்ளி வீசி ;* ***வித்தக*** *- அறிஞனே !;* ***சேறிஎன்றார்*** *- 'செல்க !' என்று கூறினார்கள் ;* ***வீரனும் விரைவது ஆனான்-*** *அனுமனும்வேகமாகப் போக முற்பட்டான்.*

*இதுவரை அனுமன்திருவடி அழுத்திய காரணத்தால் மலையின்கண் நிகழ்ந்தவற்றைக் கவிச்சக்கரவர்த்தி விவரித்தார்.* ***(13)***

***4754. 'குறுமுனிகுடித்த வேலை***
***குப்புறும்கொள்கைத்து ஆதல்***
***வெறுவிது;விசயம் வைகும்***
***விலங்கல்-தோள் அலங்கல் வீர !***
***'சிறிதுஇது' என்றுஇகழற்பாலை***
***அல்லை; நீசேறி' என்னா;***
***உறுவலித் துணைவர்சொன்னார்;***
***ஒருப்பட்டான்; பொருப்பை ஒப்பான்.***

***உறுவலித் துணைவர்-*** *மிக்கவலிமையையுடைய நண்பர்கள் (அனுமனை நோக்கி) ;* ***விசயம் வைகும்*** *- வெற்றி குடிகொண்ட ;* ***விலங்கல்தோள் அலங்கல்வீர*** *- மலைபோன்ற தோளில் மாலையணிந்த வீரனே !;* ***குறுமுனி குடித்த வேலை*** *- அகத்திய முனிவனால் பருகப்பட்ட இந்தக் கடல் ;* ***குப்புறும் கொள்கைத்தாதல்*** *- பாய்ந்து கடக்க வேண்டிய கோட்பாட்டுக்கு உரிய பொருளாயிருத்தல் ;* ***வெறுவிது*** *- மதிக்கத் தகாதது (பயனற்றது) ;* ***இது சிறிது*** *- இந்தக் கடல் (என் வலிமைக்கு) அற்பம் ;* ***என்று இகழற்பாலையல்லை*** *- என்று இக் கடலை அவமதிக்கும் பான்மையை அடையாதே ;* ***நீ சேறி*** *- நீ செல்வாயாக ;* ***என்னா*** *- என்று ;* ***சொன்னார்*** *- கூறினார்கள் (அம்மொழி கேட்டு) ;* ***பொருப்பை ஒப்பான்*** *- மலையை ஒத்த அனுமான் ;* ***ஒருப்பட்டான்*** *- (அவர்கள் சொற்களுக்கு) உடன் பட்டான்.*

*'பேருருக் கொண்டஎன் ஆற்றலுக்குக் குறுமுனி குடித்த கடல் அற்பம்' என்று நீ கருதாது செல்க என்று துணைவர்கள் கூறினார்கள். அவர்கள் மொழிகட்கு அனுமன் உடன் பட்டான். குறுமுனி - அகத்தியர். குப்புறுதல் - பாய்ந்து கடத்தல்.*
***(14)***

***4755.. 'இலங்கையின் அளவிற்று அன்றால்,***
***"இவ்வுரு எடுத்த தோற்றம்;***
***விலங்கவும் உளதுஅன்று" என்று***
***விண்ணவர்வியந்து நோக்க,***
***அலங்கல்தாழ்மார்பன் முன்தாழ்ந்து***
***அடித்துணைஅழுத்தலோடும்,***
***பொலன்கெழுமலையும் தாளும்***
***பூதலம்புக்க மாதோ!***

**இவ்வுரு** - *(அனுமன்மேற்கொண்ட) இந்த வடிவத்தின் ;* **எடுத்த தோற்றம்** - *பெருமிதமான உயர்ச்சி ;* **இலங்கையின் அளவிற்றன்று** - *இலங்கையை எல்லையாகக் கொண்டது அன்று ;* **விலங்கவும்** - *(அனுமனைத்) தடுத்து நிறுத்தவும் ;* **உளது அன்று என்று** - *ஒரு பொருளும் இல்லையென்று ;* **விண்ணவர்** - *தேவர்கள் ;* **வியந்து நோக்க** - *ஆச்சரியப்பட்டுப் பார்க்க ;* **அலங்கல் தாழ்மார்பன்** - *மாலைகள் தங்கிய மார்பை உடைய அனுமான் ;* **முன் தாழ்ந்து** - *முன் புறமாக மேனியை வளைத்து ;* **அடித்துணை அழுத்த லோடும்** - *இரண்டு திருவடிகளையும் ஊன்றியவுடன் ;* **பொலன்கெழு மலையும் தாளும்** - *பொன் மயமான மகேந்திர மலையும் அதன் அடிச் சாரலும் ;* **பூதலம் புக்க** - *பூமியின் அடித்தளத்தைச் சென்று சேர்ந்தன.*

*அனுமன் கொண்டபேருரு இலங்கையை எல்லையாகக் கொண்டதன்று. இவன் இலங்கையடைந்ததும் இவனைத் தடுத்து நிறுத்தும் பொருள் இல்லையே என்று தேவர்கள் கருதினர். அளவு - எல்லை. தோற்றம் - உயர்ச்சி. நிலையில் திரியாது அடங்கியான் தோற்றம் (குறல் 124) தாழ் - தங்கிய, மாலைதாழ் வியன்மார்ப; (கலித்தொகை 33) தொங்குதல் என்றும் கூறலாம். தாள் - அடிவாரம். இருள்கீள விரி தாள் கயிலாய மலையே (3-ஆம் திருமறை)* ***(15)***

***4756. வால்விசைத்து எடுத்து, வன்தாள்***
***மடக்கி,மார்பு ஒடுக்கி, மானத்***
***தோள் விசைத்துணைகள் பொங்கக்***
***கழுத்தினைச் சுருக்கி, தூண்டும்***
***கால்விசைத்தடக்கை நீட்டி,***
***கண்புலம்கதுவா வண்ணம்***
***மேல்விசைத்துஎழுந்தான், உச்சி***
***விரிஞ்சன்நாடு உரிஞ்ச - வீரன்.***

**வீரன்** - *அனுமன் ;***வால்விசைத்து எடுத்து** - *வாலை வேகமாக உயர்த்தி ;* **வன்தாள் மடக்கி** - *வலிமையான திருவடிகளை மடக்கி ;* **மார்பு ஒடுக்கி** - *மார்பைச் சுருக்கி ;* **மானத் தோள்விசைத் துணைகள் பொங்க** - *பெருமையும் புகழும் வெற்றியும் பெற்ற இரண்டு புயங்கள் பூரிக்க ;* **கழுத்தினைச் சுருக்கி** - *கழுத்தை ஒடுக்கி ;* **தூண்டும் கால்விசைத் தடக்கை நீட்டி** - *தூண்டுகின்ற காற்றைப் போன்று வேகமாகக் கைகளை*

*நீட்டி ; **உச்சி விரிஞ்சன் நாடு உரிஞ்ச** - தலை பிரம்ம லோகத்தை உராயும்படி ; **கண்புலம் கதுவா வண்ணம்** - கண்ணின் பார்வை பற்ற முடியாதபடி ; **மேல் விசைத்து எழுந்தான்** - விண்ணில் வேகமாக எழும்பினான். அனுமன் வால்எடுத்து, தாள் மடக்கி, மார்பு ஒடுக்கி, கழுத்தினைச் சுருக்கி, கை நீட்டி உச்சி விரிஞ்சன் நாடு உரிஞ்ச விசைத்து எழுந்தான். கடல் கடக்க எழுந்த அனுமனின் மெய்ப்பாடு விளக்கப்படுகிறது. விசையம் என்னும் சொல் அம் சாரியை குறைந்து வந்துள்ளது. வன்மை என்றும் வேகம் என்றும் கூறலாம். **(16)***

*4757.* **ஆயவன்எழுதலோடும்**
**அரும்பணைமரங்கள் யாவும்**
**வேய்உயர்குன்றும், வென்றி**
**வேழமும்,பிறவும், எல்லாம்**
**'நாயகன் பணிஇது' என்னா,**
**நளிர்கடல்இலங்கை தாமும்**
**பாய்வன என்ன,வானம்**
**படர்ந்தன,பழுவம் மான.**

*ஆயவன்** - அந்த அனுமான் ;**எழுதலோடும்** - மலையை விட்டு எழுந்தவுடன் ; **அரும்பணை மரங்கள் தாமும்** - சிறந்த கிளையைப் பெற்ற மரங்களும் ; **வேய்உயர் குன்றும்** - மூங்கில் வளர்ந்த மலைகளும் ; **வென்றி வேழமும்** - வெற்றியையுடைய யானைகளும் ; **பிறவும் எல்லாம்** - கூறப்பெறாத எல்லாப் பொருள்களும் ; **நாயகன் பணி இது என்னா** - இராமபிரானுக்குச் செய்யும் தொண்டு இது என்று கருதி ; **நளிர்கடல் இலங்கை** - குளிர்ந்த கடலால் சூழ்ந்த இலங்கை ; **தாமும் பாய்வன என்ன** - தாங்களும்பாய்ந்து செல்வன என்று கூறும்படி ; **பழுவம் மான** - சோலைபோல ; **வானம்படர்ந்த** - வானத்திற் பரவிச் சென்றன ; ஆயவன் - அத்தகையவன்(ஆய + அன்) **(17)***

*4758.* **இசையுடை அண்ணல் சென்ற**
**வேகத்தால், எழுந்த குன்றும்,**
**பசையுடை மரனும்,மாவும்,**
**பல்உயிர்க் குலமும், வல்லே**
**திசை உறச்சென்று சென்று,**
**செறிகடல்இலங்கை சேரும்**
**விசை இலவாகதள்ளி**
**வீழ்ந்தனஎன்ன வீழ்ந்த.**

***இசையுடை அண்ணல்-** புகழ்பெற்ற அனுமன் ; **சென்ற வேகத்தால்** - பாய்ந்துபோன வேகத்தினாலே ; **எழுந்த குன்றும்** - எழுந்து சென்ற மலைகளும் ; **பசையுடை மரமும்** - பிசினைப் பெற்ற மரங்களும் ; **மாவும்** - விலங்குகளும் ; **பல் உயிர்க் குலமும்** - பல உயிர்த் தொகுதிகளும் ; **வல்லே** - விரைவாக ; **திசையுறச் சென்று சென்று** - அனுமன் சென்ற திக்கின் வழியேபோய்ப் போய் ; **கடல்செறி இலங்கை சேரும் விசை இலவாக** - கடலால்சூழப் பெற்ற இலங்கையை அடையும் ஆற்றல் அற்றவையாய் ; **தள்ளி***

***வீழ்ந்தன என்ன*** - தள்ளப்பட்டுக் கீழ் வீழ்ந்தாற்போல ; ***வீழ்ந்த*** - கடலிலே விழுந்தன. ***(18)***

***4759. மாவொடு மரனும், மண்ணும்,***
***வல்லியும்,மற்றும் எல்லாம்***
***போவது புரிந்தவீரன்***
***விசையினால், புணரி போர்க்கத்***
***தூவின; கீழும்மேலும்***
***தூர்த்தன;சுருதி அன்ன***
***சேவகன் சீறாமுன்னம்***
***சேதுவும் இயன்ற மாதோ !***

***போவது புரிந்தவீரன் விசையினால்*** - இலங்கை நோக்கிச்சென்ற அனுமனின் வேகத்தால் ; ***மாவொடு மரனும் மண்ணும்*** - விலங்குகளும் மரங்களும் வேரடிமண்ணும் ; ***வல்லியும் மற்றும் எல்லாம்*** - கொடியும் பிற பொருள்களும் ; ***புணரி போர்க்க*** - கடல் மூடும்படி ; ***தூவின*** - தூவப் பெற்றன ; ***மேலும் கீழும் தூர்த்தன*** - கடலின் மேலும் ஆழத்திலும் தூர்க்கப்பட்டன ; ***சுருதி அன்ன*** -வேதம் போன்ற ;***சேவகன் சீறா முன்னம்*** - இராமபிரான் கடலைச் சீறுவதற்குமுன்பு ; ***சேதுவும் இயன்ற*** - சேதுவும் அமைந்தது. அனுமன் பின்சென்ற மரம் முதலான பொருள்கள் வீழ்ந்து கடல் மேடாயிற்று. அது அணைபோல் இருந்தது. 'அனுமன் சென்ற விசையால் மரம் முதலியன கடலில் ஆங்காங்கு விழுந்திருப்பவை, இராமபிரான் இனிக் கட்டப் போகின்ற சேதுவுக்காக நூல் பிடிப்பதற்கு நாட்டிய முளைகள் போலும்' என சம்பூ ராமாயணத்தில் இச் செய்யுளினும் சிறிது கருத்து வேறுபடக் கூறியுள்ளது என்று வை.மு.கோ. குறிப்பிடுவார். இயன்றது என்பது ஈறுகெட்டு இயன்ற என நின்றது. சேது ஒன்றேயாதலின் பன்மை முடிபு ஏலா. ஒருமை பன்மை மயக்கம் என்று கூறின், ஏற்பார் ஏற்க. ***(19)***

***4760. கீண்டதுவேலை நல்நீர்;***
***கீழ்உறக்கிடந்த நாகர்***
***வேண்டிய உலகம்எல்லாம்***
***வெளிப்பட,மணிகள் மின்ன,***
***ஆண்தகை அதனைநோக்கி,***
***'அரவினுக்குஅரசன் வாழ்வும்***
***காண்தகுதவத்தென் ஆனேன்***
***யான் !' எனக் கருத்துள் கொண்டான்.***

***நல்நீர் வேலைகீண்டது*** - மிக்க நீரையுடைய கடல்பிளவுபட்டு ; ***உறக்கீழ் கிடந்த*** - மிகவும் கீழான இடத்தே அமைந்துள்ள ; ***நாகர்*** - நாகலோகத்தவர்கள் ; ***வேண்டிய உலகம் எல்லாம்*** - விரும்புகின்ற உலகம் முழுவதும் ; ***வெளிப்பட*** - வெளிப்பட்டுத் தெரிய (அதனால்) ; ***மணிகள் மின்ன***- மாணிக்கங்கள் ஒளிவீச ; ***ஆண்தகை அதனை நோக்கி*** - ஆண்மை மிக்கஅனுமன் அதைப் பார்த்து ; ***அரவினுக்கு அரசன் வாழ்வும்*** - பாம்புகளின்வேந்தனான ஆதிசேடனின் செல்வச் செழிப்பையும் ; ***யான் காண்தகுதவத்தென் ஆனேன்*** - நான் பார்க்கும் தவத்தைச் செய்தவனாய் விட்டேன்

***;எனக் கருத்துள் கொண்டான் -*** *என்று உள்ளத்தே எண்ணினான். மணிகள், செல்வச் செழிப்பைக் காட்டிற்று. கடல் உப்பு நீர் உடைத்து ஆதலின் நல்நீர் என்னும் சொல் மிகுதிப் பண்பை உணர்த்திற்று. நல்ல பாம்பு, நல்ல வெயில் என்றாற்போல. மகாவித்துவான் வி. கோவிந்தப் பிள்ளை கடலின் நல்ல ஸ்வபாவம் என்று வரைந்தார். **(20)***

***4761. வெய்தின்வான் சிறையினால் நீர்***
***வேலையைக்கிழிய வீசி,***
***நொய்தின்ஆர்அமுதம் கொண்ட***
***நோன்மையேநுவலும் நாகர்,***
***'உய்தும் நாம்என்பது என்னே ?***
***உறுவலிக்கலுழன் ஊழின்***
***எய்தினான் ஆம்'என்று அஞ்சி,***
***அலக்கண்உற்று, இரியல் போனார்.***

***வான்சிறையினால் -*** *பெரிய சிறகுகளாலே **;நீர் வேலையை -** நீர் நிரம்பிய கடலை **; வெய்தின் கிழிய வீசி -** வேகமாகப் பிளவு படும்படி வீசி **; நொய்தின் -** எளிதாக **; ஆரமுதம் கொண்ட -** அருமையான அமுதத்தைக் கவர்ந்த (கருடனின்) **; நோன்மையே நுவலும் -** வலிமையைப் பேசிக் கொண்டிருக்கும் **; நாகர் -** நாகலோக வாசிகள் **; உறுவலிக் கலுழன் -** மிக்க வலிமையுடைய கருடன் **; ஊழின் எய்தினான் ஆம் -** நம்முடைய தீயூழால் (மறுபடியும்) வந்து சேர்ந்தான் ஆகும் **; நாம் உய்தும் என்பது என்னே -** நாம் தப்பிப் பிழைப்போம் என்று கூறுவது எப்படி? **; என்று அஞ்சி -** என்று கூறி பயந்து **; அலக்கண் உற்று -** பெருந்துயர் அடைந்து **; இரியல் போனார் -** சிதறி ஓடினார்கள். எய்தினன் ஆம்என்பதில் உள்ள ஆம் அசை. **(21)***

***4762. துள்ளிய மகர மீன்கள்***
***துடிப்பு அற,சுறவு தூங்க,***
***ஒள்ளிய பனைமீன்துஞ்சும்***
***திவலைய,ஊழிக்காலின்***
***வள்உகிர் வீரன்செல்லும்***
***விசைபொரமறுகி, வாரி,***
***தள்ளிய திரைகள்முந்துற்று,***
***இலங்கைமேல்தவழ்ந்த மாதோ.***

***துள்ளிய மகரமீன்கள் துடிப்புஅற -*** *செருக்கிப் பாயும்இயல்புடைய மீன்கள் கிளர்ச்சியற்றுப் போகவும் **; சுறவு தூங்க -** சுறாமீன்கள் அடங்கிக் கிடக்கவும் **; ஒள்ளிய பனைமீன் துஞ்சும் -** ஒளிமிக்க பனைமீன்கள் இறக்க இடனாகும் **; திவலைய ஊழிக்காலின் -** நீர்த்திவலைகளை வீசுகின்ற யுகமுடிவில் வீசுகின்ற காற்றைப்போல **;வள்உகிர் வீரன் -** கூர்மையான நகத்தைப் பெற்ற அனுமன் **; செல்லும் -** பாய்ந்து செல்கின்ற **; விசைபொர மறுகி -** வேகமானது தாக்க (அதனால்) அல்லோலப்பட்டு **; வாரி தள்ளிய திரைகள் -** கடலில் உந்தப் பெற்ற அலைகள் **; இலங்கைமேல் -** இலங்கை மாநகரின்கண் **; முந்துற்று தவழ்ந்த -** அனுமனுக்கு முன் தத்திச் சென்றன.*

*மாது; ஓ - அசைகள். மகர மீன், சுறவு, பனைமீன் - மீன் வகைகள். முந்துற்று - அனுமனுக்கு முன்னே தாம் செல்வன போலச் சென்று என்பது ஐயரவர்கள் பதிப்பின் குறிப்பு. **(22)** வானில் செல்லும்அனுமன் தோற்றம்*

***4763.* இடுக்கு உறுபொருள்கள் என்ஆம் ?**
**எண்திசைசுமந்த யானை**
**நடுக்குஉறவிசும்பில் செல்லும்**
**நாயகன்தூதன், நாகம்**
**ஒடுக்குறு காலை,வன்காற்று**
**அடியொடும்ஒடித்த அந்நாள்,**
**முடுக்குறக்கடலில் செல்லும்**
**முத்தலைக்கிரியும் ஒத்தான்.**

***எண்திசை சுமந்தயானை -** எட்டுத் திசைகளையும் தாங்கும் யானைகள் **; நடுக்குற -** நடுக்கம் அடையும்படியாக **; விசும்பில் செல்லும் நாயகன் தூதன் -** ஆகாயத்திற் பறந்து செல்லும் இராம தூதனான அனுமன் **; நாகம் ஒடுக்குறு காலை -** ஆதிசேடன் மேருமலையைத் தன் படங்களில் ஒடுக்கிக் கொண்ட சமயத்தில் **; வன்காற்று -** கொடுங்காற்று **; அடியொடும் ஒடித்த அந்நாள் -** அடியொடு முறித்த அக்காலத்தில் **; முடுக்குறக் கடலில் செல்லும் -** வேகமாக உந்தப்படத் தென் கடலின்கண் போகும் **; முத்தலைக் கிரியும் ஒத்தான் -** மூன்று தலைகளைப் பெற்ற திரிகூட மலையையும் ஒத்திருந்தான் (என்றால்) **; இடுக்குஉறு -** அவன் போகும் வழி இடையிலுள்ள **; பொருள்கள் என்னாம் -** என்ன பாடுபடும்.*

*நாகம் - பாம்பு(ஆதிசேடன்) அனுமனின் இரண்டு தோள்களும் தலையும் - முத்தலைச் சிகரம் போன்றிருந்தன. ஆதிசேடனும் வாயுதேவனும் தங்கள் வலிமையை நிலைநிறுத்த மேற்கொண்டவஞ்சினப்படி ஆதிசேடன்மேருமலையைத் தன்னுடைய ஆயிரம் படங்களால் மூடிக் கொண்டான். வாயுதேவன் மலையை அசைத்துப் பார்த்தான். தேவர்கள் வேண்டிக்கொள்ள சேடன் தன்னுடைய மூன்று படங்களை உயர்த்த வாயுதேவன் மூன்று சிகரங்களைக் கடலில் இட்டான். **(23)***

***4764.* கொட்புறுபுரவித் தெய்வக்**
**கூர்நுதிக்குலிசத்தாற்கும்,**
**கண்புலன் கதுவல்ஆகா**
**வேகத்தான், கடலும் மண்ணும்**
**உட்படக்கூடிஅண்டம்**
**உறஉளசெலவின், ஒற்றைப்**
**புட்பகவிமானம்தான் அவ்**
**இலங்கைமேல் போவது ஒத்தான்.**

***கொட்புறு புரவி -** சுழன்றுசுழன்று செல்கின்ற குதிரைமேல் உள்ள; **தெய்வக் கூர்நுதி -** தெய்வத் தன்மை பெற்ற கூரிய நுனியையுடைய; **குலிசத்தாற்கும் -** வச்சிராயுதத்தை ஏந்திய இந்திரனுக்கும்; **கண்புலன் கதுவல் ஆகா வேகத்தான் -** கண்ணின் பார்வை*

*பின்பற்ற முடியாத வேகமுடைய அனுமன்;* ***கடலும் மண்ணும்*** *- கடலும் கடலாற் சூழ்ந்த உலகமும்;* ***உட்படக்கூடி*** *- தன்னுள் ஒடுங்கும்படி (பேருருக் கொண்டவனாய்);* ***அண்டம் உற உள*** *- அண்டத்தின் உச்சியானது மோதும்படி;* ***செலவின்*** *- செல்கின்ற பயணத்தால்;* ***ஒற்றைப் புட்பக விமானம்*** *- ஒப்பற்ற புட்பக விமானம்;* ***இலங்கைமேல் போவது ஒத்தான்*** *- இலங்கை மாநகருக்குப் போவதை ஒத்திருந்தான்.*

*இந்திரனின்பார்வைக்கும் எட்ட முடியாத வேகமுடைய அனுமன், புட்பகவிமானம் இலங்கைக்குப் போவதைப் போன்றிருந்தான். கடலும் உலகும் தன்னுள் அடங்கும்படி பேருருக் கொள்வதால் புட்பக விமானம்போல் அனுமன் இருந்தான். விமானம் எவ்வளவு மக்கள் வந்தாலும் விரியும். '' அண்டம் உறவுள செலவின்'' அநேக அண்டங்கள்வைத்தாலும் கடக்கும் செலவு என்பது பழைய உரை.*
*(24)*

***4765. விண்ணவர்ஏத்த, வேத***
***முனிவரர்வியந்து வாழ்த்த,***

***மண்ணவர்இறைஞ்ச செல்லும்***
***மாருதி, மறம்உள் கூர,***
***'அண்ணல்வாள்அரக்கன் தன்னை***
***அமுக்குவென்'இன்னம் என்னாக்***
***கண்ணுதல் ஒழியச்செல்லும்***
***கைலைஅம்கிரியும் ஒத்தான்.***

***விண்ணவர் ஏத்த*** *- தேவர்கள் போற்றவும்;* ***வேத முனிவர் வியந்து*** *-வேதங்களை அறிந்த சிறந்த முனிவர்கள் வியப்புற்று;* ***வாழ்த்த*** *- வாழ்த்தவும்;* ***மண்ணவர் இறைஞ்ச*** *- மண்ணுலகத்தவர் வணங்கவும்;* ***செல்லும் மாருதி*** *- போகும் அனுமான்;* ***உள் மறம் கூர -*** *உள்ளத்தே (இராவணன் மேல்) கோபம்மிகுதியாவதால்;* ***அண்ணல் வாள்*** *- பெருமிதமுடைய கொடிய;* ***அரக்கன்தன்னை*** *- இராவணனை;* ***இன்னும் அமுக்குவென்*** *- மறுபடியும்அமுழ்த்துவேன்;* ***என்னா*** *- என்று கருதி;* ***கண்ணுதல் ஒழிய*** *- சிவபிரான்இல்லாமல்;* ***செல்லும்*** *- தனித்துப் போகின்ற;* ***கைலைஅம் கிரியும்*** *- கயிலாயமலையையும் ;* ***ஒத்தான்*** *- ஒத்திருந்தான். வெண்ணிறமுடையஅனுமன் இராவணன் மேல் கொண்ட சீற்றம் அதிகரிக்க அவனை அமுக்கச் செல்லும் கயிலாயம் போன்றிருந்தான். மறம் - சினம். கைலைஅம்கிரி - அம் சாரியை. (25)*

***4766. மாணிஆம்வேடம் தாங்கி,***
***மலர்அயற்குஅறிவு மாண்டு, ஓர்***
***ஆணிஆய் உலகுக்குஎல்லாம்,***
***அறம்பொருள் நிரப்பும் அண்ணல்,***
***சேண்உயர்நெடுநாள் தீர்ந்த***
***திரிதலைச் சிறுவன் தன்னைக்***
***காணிய,விரைவில் செல்லும்***

***கனகமால்வரையும் ஒத்தான்.***

***மாணிஆம் வேடம்தாங்கி -*** *பிரமசாரியாகியகோலத்தை மேற்கொண்டு;* ***மலர் அயற்கு*** *- பிரம்ம தேவனைவிட;* ***அறிவு மாண்டு*** *- அறிவால் மாட்சிமை பெற்று;* ***உலகுக்கெல்லாம் ஓர் ஆணியாய்*** *- எல்லா உலகங்களுக்கும் ஒப்பற்ற அச்சாணிபோல அமைந்து;* ***அறம் பொருள்*** *- அறத்தையும் பொருளையும்;* ***நிரப்பும் அண்ணல்*** *- பூரணத்துவமடையச் செய்யும் அனுமன்;* ***நெடுநாள்தீர்ந்த*** *- நீண்ட நாட்களுக்குமுன் பிரிந்து போன;* ***சேண்உயர்*** *- மிக்க உயர்வினையுடைய ;* ***திரிதலைச் சிறுவன்தன்னை*** *- திரிகூடம் என்னும் புதல்வனை;* ***காணிய விரைவில் செல்லும்*** *- காண்பதற்காக வேகமாகப் போகிற;* ***கனகமால் வரையும் ஒத்தான்*** *- பொன் வடிவமான மேருமலையைப் போன்றிருந்தான்.*

*அனுமன் திரிகூடமலையாகிய மைந்தனைத் தேடிச் செல்லும் மேருமலையைப் போன்றிருந்தான். நிலையில் திரியாது அடங்கும் அனுமனை மேருமலை என்றும் இல்லறத்திற்கும் துறவறத்திற்கும் ஆதாரமானது அனுமன் மேற்கொண்ட பிரம்மசரியம் ஆதலின் ஆணி என்றும் கூறினான். அயற்கு அறிவு மாண்டு - உருபு மயக்கம் ( தொல் - சொல் 111) இராமபிரான் அனுமனை 'ஆணி இவ்வுலகுக்கு எல்லாம்' என முன்பு கூறினான் (3769).* ***(26)***

*4767.* ***மழைகிழித்து உதிர மீன்கள்***
***மறிகடல்பாய, வானம்***
***குழைவுற, திசைகள்கீற***
***மேருவும்குலுங்க, கோட்டின்***
***முழையுடைக்கிரிகள் முற்ற***
***முடுக்குவான், முடிவுக்காலத்து***
***அழிவுறக்கடுக்கும் வேகத்***
***தாதையும்அனையன் ஆனான்.***

***மழைகிழித்துஉதிர -*** *மேகத்தைப் பிளந்துகொண்டு உதிரும்படி;* ***மீன்கள்*** *- நட்சத்திரங்கள்;* ***மறிகடல் பாய*** *- அலைகள் மடங்கும் கடலிலே பாயவும்;* ***வானம் குழைவுற*** *- ஆகாயம் நெகிழ்ச்சியடையவும்;* ***திசைகள் கீற*** *- திக்குகள் கிழிபடவும்;* ***மேருவும் குலுங்க*** *- மேருமலையும் அசையவும்;* ***கோட்டின் முழை உடைக் கிரிகள் முற்ற*** *- சிகரங்களில் குகைகளை உடையமலைகள் நீரால் சூழப் பெறவும்;* ***முடுக்குவான்*** *- வேகமாகச் செல்லும்அனுமன்;* ***முடிவுக் காலத்து*** *- ஊழிக் காலத்தில்;* ***அழிவுறக் கடுக்கும்*** *-யாவும் அழிந்துபடச் சினந்து செல்கின்ற;* ***வேகத் தாதையும் அனையன்ஆனான்*** *- வேகத்தையுடைய (தன்) தந்தையான வாயுதேவனைப் போலவும்இருந்தான்.*

*வான் வெட்டவெளியன்று. வெளியில் உள்ள நுண்ணிய பூதம். இது காற்றினும் நுட்பமானது. வானத்தை வெறும் வெளியாகக் கருதியவர்கள் அதற்குக் குழைவு இன்மையின் வான் என்பதற்கு விண்ணுலகு எனப் பொருள் கொண்டனர்.*
***(27)***

***4768. தடக்கைநால் - ஐந்து பத்துத்***
***தலைகளும்உடையான் தானே***
***அடக்கிஐம்புலன்கள் வென்ற***
***தவப்பயன்அறுத லோடும்,***
***கெடக்குறி ஆக,மாகம்***
***கிழக்குஎழுவழக்கு நீங்கி,***
***வடக்கு எழுந்துஇலங்கை செல்லும்***
***பிரிதிவானவனும் ஒத்தான்.***

***நால்ஐந்துதடக்கை*** *-இருபது பெரிய கரங்களையும்;* ***பத்துத் தலைகளும்*** *- பத்துத் தலைகளையும்;* ***உடையான்*** *- உடைய இராவணன்;* ***ஐம்புலன்கள்*** *- ஐந்து புலன்களையும்;* ***தானே அடக்கி*** *- பிறர் உதவியின்றி ஒன்றியாக இருந்து ஒடுக்கி;* ***வென்ற தவப்பயன்*** *- வெற்றி கொண்ட தவத்தின் பயனான புண்ணியம்;* ***அறுதலோடும்*** *- அற்றுத் தீர்ந்தவுடன்;* ***கெடக்குறி ஆக*** *- உற்பாதமாக;* ***மாகம்*** *- வானத்தில்;* ***கிழக்கு எழு வழக்கு நீங்கி*** *- கீழ்த்திசையில் உதித்தலாகிய இயல்பிலிருந்து விலகி;* ***வடக்கு எழுந்து*** *- வடக்குத் திசையில் உதித்து;* ***இலங்கை செல்லும்*** *- இலங்கை நோக்கிப் போகும்;* ***பிரிதி வானவனும் ஒத்தான்*** *- சூரிய பகவானை ஒத்திருந்தான்.;*

*தவப்பயன் -புண்ணியம். கெடக்குறி - ஒரு சொல். கெடலூழ் என்பதுபோல. (பெருங்கதை 25-168) கெட - கெட்டுப் போக; குறி - அடையாளமாய் என்றும் கூறலாம்.* ***(28)***

***4769. புறத்துஉறல்அஞ்சி, வேறுஓர்***
***அரணம்புக்கு உறைதல் போக்கி,***
***மறத்தொழில்அரக்கன் வாழும்***
***மாநகர்,மனுவின் வந்த***
***திறத் தகைஇராமன் என்னும்***
***சேவகற்பற்றி, செல்லும்***
***அறத்தகை அரசன்திண்போர்***
***ஆழியும்அனையன் ஆனான்.***

***புறத்துஉறல்அஞ்சி*** *-வெளிப்படையாக இருக்கப் பயப்பட்டு;* ***வேறுஓர்அரணம் புக்கு*** *- மற்றொரு பாதுகாப்பான இடத்தில்;* ***உறைதல் போக்கி*** *-தங்குதலை விலக்கியும்;* ***மனுவின் வந்த*** *- மனிதனைப் போன்றுமண்ணுலகுக்கு வந்த;* ***திறத்தகை இராமன் என்னும் சேவகற் பற்றி*** *- வலிமையும் தகுதியும் பெற்ற இராமபிரான் என்னும் வீரனை இறுகப் பிடித்துக் கொண்டு;* ***மறத்தொழில் அரக்கன் வாழும்*** *- வீரத்தையே தொழிலாகக் கொண்ட இராவணன் வாழுகின்ற;* ***மாநகர்*** *- பெரிய நகருக்கு;* ***செல்லும்*** *- போகிற;* ***அறத்தகையரசன்*** *- தகுதிபெற்ற தருமராஜனின்;* ***திண்போர் ஆழியும் அனையன் ஆனான்*** *- வலிமை மிக்க போர்புரியும் ஆணைச் சக்கரத்தை (அனுமன்) ஒத்திருந்தான்.*

*தருமராசன்(யமன்) இலங்கைக்குள் அடியெடுத்து வைத்தான் என்பது குறிப்பு. ஆதியில் தர்ம தேவதைஎன்றும் கூறலாம். திருமாலின் சக்கரம் என்று உரைகாண்பது அபசாரம் மனுவின் - மனிதனைப்போல், மனுகுலம் என்றும் கூறலாம்.*
***(29)***

***4770. கேழ்உலாம் முழு நிலாவின்***
***கிளர்ஒளிஇருளைக்கீற,***
***பாழி மா மேரு நாண,***
***விசும்புஉறப் படர்ந்த தோளான்,***
***ஆழி சூழ் உலகம்எல்லாம்***
***அருங் கனல்முருங்க உண்ணும்***
***ஊழி நாள்,வடபால் தோன்றும்***
***உவா முழுமதியும் ஒத்தான்.****

***கேழ் உலாம் முழுநிலாவின் கிளர்ஒளி*** *- எல்லா இடத்திலும் ஒளிபரப்பும் பூரண சந்திரிகையைப் போன்று கிளர்ச்சிபெற்ற (அனுமனின்) ஒளியானது;* ***இருளைக் கீற*** *- இருளைப் போக்கவும்;* ***பாழி மா மேரு நாண*** *-பருத்த மேருமலை நாணம் அடையவும்;* ***விசும்பு உறப் படர்ந்த தோளான்*** *-ஆகாயம் அளாவும் தோளையுடைய அனுமான்;* ***ஆழிசூழ் உலகம் எல்லாம் முருங்க*** *- கடலால் சூழப்பெற்ற எல்லா உலகங்களும் அழிய;* ***அருங்கனல் உண்ணும் ஊழி நாள்*** *- நெருப்பு விழுங்கும் ஊழிக் காலத்தில்;* ***வடபால் தோன்றும் உவாமுழு மதியம் ஒத்தான்*** *- வடதிசையில் உதிக்கும் பௌர்ணமிக் காலத்து முழு மதியையும் ஒத்திருந்தான்.*

*அனுமன்ஊழிக்காலத்தில் வடக்குத் திக்கில் உதிக்கும் முழுமதி போன்றிருந்தான். கேழ் - நிறம் (இங்கே வெண்மை ஒளி) மேரு, அனுமனுக்கு உவமை. நிலவு என்றது சந்திரிகையை - சந்திரனையன்று. சந்திரன் போன்றஒளியுடையவன். சந்திரன் போன்றிருந்தான் என்பது சிறப்பன்று.* ***(30)***

***4771. அடல்உலாம்திகிரி மாயற்கு***
***அமைந்ததன் ஆற்றல் காட்ட,***
***குடல் எலாம்அவுணர் சிந்த,***
***குன்றுஎனக்குறித்து நின்ற***
***திடல் எலாம்தொடர்ந்து செல்ல,***
***சேண்விசும்பு ஒதுங்க, தெய்வக்***
***கடல் எலாம்கலங்க, தாவும்***
***கலுழனும் அனையன் ஆனான்.****

***அடல்உலாம்திகிரி மாயற்கு*** *- (அனுமன்) பகைவரைஅடக்குவதில் மிக்க வல்லமை பரவிய சக்கரப்படை ஏந்திய திருமாலுக்கு;* ***அமைந்த தன் ஆற்றல்காட்ட*** *- அடங்கிய தன்னுடைய வன்மையைக் காண்பிக்க;* ***அவுணர் எலாம் குடல் சிந்த*** *- எல்லா அசுரர்களும் குடல் கலங்கவும்;* ***குன்று எனக் குறித்து நின்ற*** *- மலை என்று பேசப்பட்டு நிமிர்ந்து நிற்கின்ற;* ***திடல் எலாம் தொடர்ந்து செல்ல*** *- மேடுகள் யாவும் தொடர்ந்து போகவும்;* ***விசும்பு சேண் ஒதுங்க*** *- ஆகாயம் தூரத்தில் ஒதுங்கிக் கொள்ளவும்;* ***தெய்வக்***

***கடல் எலாம் கலங்க*** - *தெய்வத் தன்மையுடைய எல்லாச் சமுத்திரங்களும் கலங்கவும்;* ***தாவும் கலுழனும்*** - *பறந்து சென்ற கருடனையும்;* ***அனையன் ஆனான்*** - *ஒத்தவன் ஆனான்.*

*அனுமன் -தோன்றா எழுவாய். சக்கரப்படை ஏந்திய திருமாலுக்குத் தன்னுடைய வலிமையைக் காட்டப் பறந்து சென்ற கருட பகவானைப்போல அனுமன் விளங்கினான்.* ***(31)***
*அனுமன் வானில்சென்ற காட்சி*

***4772. நாலினோடுஉலகம் மூன்றும்***
***நடுக்குற,அடுக்கு நாகர்***
***மேலின்மேல்நின்றகாறும்***
***சென்றகூலத்தன், 'விண்டு***
***காலினால் அளந்தவான***
***முகட்டையும்கடக்கக் கால***
***வாலினால் அளந்தான்' என்று***
***வானவர்மருள, சென்றான்.***

***நாலினோடு உலகம்மூன்றும் நடுக்குற -*** *கீழ் ஏழு உலகங்களும் நடுக்கம் அடைய;* ***நாகர் மேலின்மேல் நின்ற*** - *தேவர்கள் மேலும் மேலும் சிறப்புடன் நிலைத்துள்ள;* ***அடுக்கு காறும்*** - *அடுக்கப்பெற்ற உலகம் வரையிலும்;* ***சென்ற கூலத்தன்*** - *பயணம் செய்த வாலையுடைய அனுமன்;* ***விண்டு காலினால் அளந்த வானமுகட்டையும் கடக்க -*** *திருமாலின் திருவடியால் அளந்த வானத்தின் உச்சியையும் கடப்பதற்கு;* ***கால வாலினால் அளந்தான் என்று*** - *காலபாசம் போன்ற வாலினால் அளந்து விட்டான் என்று;* ***வானவர் மருளச் சென்றான்*** - *தேவர்கள் வியப்படையப் போயினான்.*

*மாயன் காலால்அளந்த உலகத்தை அனுமன் வாலால் அளந்தானோ என்று வானவர் மருண்டனர். கூலம் - வால். விண்டு - திருமால். கால வால் -கால பாசத்தை ஒத்தவால்.* ***(32)***

***4773. விளித்துப்பின் வேலை தாவும்***
***வீரன்வால், வேதம் எய்க்கும்***
***அளி, துப்பின் அனுமன் என்னும்***
***அருந்துணைபெற்றதாயும்,***
***களித்துப் புன்தொழில்மேல் நின்ற***
***அரக்கர்கண் ணுறுவர் என்ன***
***ஒளித்து, பின்செல்லும் கால***
***பாசத்தைஒத்தது அன்றே.***

***விளித்துப் பின்வேலை தாவும்*** - *அறைகூவி பிறகு கடலைத் தாவுகின்ற;* ***வீரன்வால்*** - *வீரனுடைய வாலானது;* ***வேதம் எய்க்கும்*** - *வேதங்களை அறிந்துள்ள;* ***அளி துப்பின் அனுமன் என்னும்*** - *கருணையையும் உற்சாகத்தையும் உடைய அனுமனாகிய;* ***அருந்துணை பெற்றதாயும்*** - *அரிய உதவியை அடைந்ததாய்;* ***களித்துப்புன்***

**தொழில்மேல்நின்ற அரக்கர்** - கள்ளுண்டு களித்து, அற்பத் தொழிலை மேற்கொண்டஅரக்கர்கள்; **கண்ணுறுவர் என்ன** - கண்டு கொள்வார்களோ என்று கருதி; **ஒளித்து பின் செல்லும்** - மறைந்து அனுமனுக்குப் பின்னே போகின்ற; **காலபாசத்தை ஒத்தது** - யமனுடைய பாசத்தைப் போன்றிருந்தது. அனுமன் வால்துப்பறியும் அரக்கர்களுக்கு அஞ்சி அனுமனுக்குப் பின்னே மறைந்து போகும் காலபாசத்தை ஒத்தது. துப்பு - அறிவை உணர்த்தி ஆராய்ச்சியை விளக்கிற்று. கள்ளுண்டு ஆராயும் இயல்பு பேசப்பெற்றது. இன் - அல்வழிச் சாரியை. துப்புத் தொழில் என்க. ஆராயும் தொழில். அன்று, ஏ - அசைகள். *(33)*

*4774.* **மேருவை முழுதும் சூழ்ந்து,**
**மீதுற்றவேக நாகம்,**
**கார் நிறத்துஅண்ணல் ஏவ,**
**கலுழன் வந்துற்ற காலை**
**சோர்வுறு மனத்ததுஆகி**
**சுற்றியசுற்று நீங்கிப்**
**பேர்வுறுகின்றவாறும்**
**ஒத்தது,அப் பிறங்கு பேழ்வால்.**

**அப் பிறங்குபேழ்வால் -** அந்த விளக்கமானபெரிய வால்; **கார்நிறத்து அண்ணல்ஏவ** - கரிய நிறத்தையுடைய திருமால் கட்டளையிட; **கலுழன் வந்து உற்ற காலை** - கருட பகவான் வந்த சமயத்தில்; **மேருவை முழுதும் சூழ்ந்து** - மேருமலையை முற்றிலும் பற்றிக்கொண்டு; **மீதுஉற்ற வேகநாகம்** - சிகரத்திலே தங்கிய விடம் பெற்ற ஆதிசேடன்; **சோர்வுறு மனத்ததாகி** - தளர்ச்சியுற்ற மனத்தை உடையதாய்; **சுற்றிய சுற்று நீங்கி** - மேருமலையைச் சுற்றியிருந்த கட்டு விலகி; **பேர்வுறுகின்ற ஆறும் ஒத்தது** - நீங்கிப் போகின்ற தன்மையையும் ஒத்திருந்தது.

மேருமலையைப்பிணித்திருந்த ஆதிசேடன் கருடன் வந்ததும் பிணிப்பு நீங்கி விலகிச் செல்வதுபோல் அனுமன் வால் இருந்தது. வேகம் - நஞ்சு - அரவு கான்ற வேகம் ( சிந்தாமணி 1274) விரைவு என்ற கூறினும் அமையும்,
*(34)*

*4775.* **குன்றொடு குணிக்கும் கொற்றக்**
**குவவுத்தோள் குரக்குச் சீயம்,**
**சென்றுறு வேகத்திண்கால்**
**எறிதர,தேவர் வைகும்**
**மின்தொடர்வானத்து ஆன**
**விமானங்கள், விசையின் தம்மின்**
**ஒன்றொடு ஒன்றுஉடையத் தாக்கி,**
**மாக் கடல்உற்ற மாதோ.**

***குன்றொடுகுணிக்கும்*** - *மலைகளுடன் ஒப்புமையாகப் பேசப்படும்;* ***கொற்றக் குவவுத்தோள்*** - *வெற்றியையுடைய பருத்த தோள்களை உடைய;* ***குரக்குச் சீயம்*** - *வானர சிங்கமாகிய அனுமன்;* ***சென்றுஉறு வேகத் திண்கால்*** - *செல்வதால் உண்டாகும் கடுங்காற்று;* ***எறிதர*** - *மோத (அதனால்);* ***மின்தொடர் வானத்து ஆன தேவர் வைகும் விமானங்கள்*** - *மின்னல்இடையறாது இயங்கும் வானில் தேவர்கள் தங்கியுள்ள விமானங்கள்;* ***விசையின்*** - *வேகத்தால்;* ***தம்மின் ஒன்றொடு ஒன்று உடையத் தாக்கி*** - *தங்களுக்குள் ஒன்றுடன் ஒன்று உடையும்படி மோதி;* ***மாக்கடல் உற்ற*** - *கருங்கடலில் விழுந்தன.     அனுமன் வேகமாகச்செல்வதால் உண்டான பெருங்காற்று மோத அதனால் தேவர்களின் விமானங்கள் ஒன்றோடொன்று தாக்கிக் கடலில் விழுந்தன. மாது, ஓ -அசைகள்.* ***(35)***

***4776.  வலங்கையின் வயிர ஏதி***
***வைத்தவன்வைகும் நாடும்***
***கலங்கியது,'ஏகுவான்தன்***
***கருத்துஎன்கொல் ?' என்னும் கற்பால்;***
***'விலங்குஅயில்எயிற்று வீரன்***
***முடுகியவேகம் வெய்யோர்***
***இலங்கையின்அளவுஅன்று' என்னா,***
***இம்பர்நாடுஇரிந்தது இப் பால்.***

***வலங்கையின்*** *-வலக்கரத்தில்;* ***வயிர ஏதி வைத்தவன்*** - *வச்சிராயுதத்தை ஏந்திய இந்திரன்;* ***வைகும் நாடும்*** - *தங்கிய உலகமும்;* ***கலங்கியது*** - *கலக்கம் அடைந்தது;* ***ஏகுவான்தன்*** - *செல்லும் அனுமனுடைய;* ***கருத்து என்கொல் என்னும் கற்பால்*** - *திருவுள்ளம் யாதோ என்னும் ஆராய்ச்சியால்;* ***இப்பால் விலங்கு அயில் எயிற்று வீரன்*** - *இவ்வுலகில் வளைந்த கூர்மையான பற்களை உடைய அனுமன்;* ***முடுகிய வேகம்*** - *கடுமையான வேகமானது;* ***வெய்யோர் இலங்கையின் அளவு அன்று என்னா*** - *அரக்கர்களுக்குரிய இலங்கையின் எல்லையுடன் அடங்குவது அன்று என்று கூறி;* ***இம்பர் நாடு இரிந்தது*** - *இந்த உலகம் கலங்கிச் சிதறியோடிற்று.*

*அனுமன் வேகம்இலங்கையுடன் அடங்குவதன்று, நம்மீதும் பாயலாம் என்று கருதி உலக மக்கள் கலங்கி ஓடினர். 'வலக் கை' என்பது எதுகை நோக்கி'வலங்கை' எனத் திரிந்தது. கற்பு - கல்வி, ஆராய்ச்சி; உலகம் தாங்கிய மேம்படு கற்பின் (பதிற்றுப் 59-8) என்றது காண்க. வயிர ஏதி - வச்சிராயுதம். முள்ளுக்கு இட்ட நெருப்பு மூப்பனையும் அழிக்கும். அதுபோல் தீயவர்மேல் கொண்ட சீற்றம் நமக்கும் ஊறு விளைக்கும் என்று உலகத்தவர் கருதினர். (காஞ்சிப் புராணம் - நாட்டுப்படலம் 102)* ***(36)***

***4777.  'ஓசனை உலப்பு இலாத***
***உடம்புஅமைந்துடைய' என்னத்***
***தேசமும் நூலும்சொல்லும்***
***திமிங்கிலகிலங்களோடும்***
***ஆசையை உற்றவேலை***
***கலங்க,அன்று அண்ணல் யாக்கை***

*வீசிய காலின்வீந்து*
*மிதந்தன,மீன்கள் எல்லாம்.**

***உலப்பிலாதஉடம்பு*** - *அழிவற்ற உடலானது;* ***ஓசனை அமைந்து உடைய என்ன*** - *ஒரு யோசனை தூரம் பெற்றுள்ளது என்று;* ***தேசமும் நூலும் சொல்லும்*** - *உலக மக்களும் புராணங்களும் கூறுகின்ற;* ***திமிங்கிலகிலங்களோடும்*** - *திமிங்கில கிலம் என்னும் கடற் பிராணியுடன்;* ***ஆசையை உற்ற வேலை*** - *திக்குகளை அளவிய கடல்கள்;* ***கலங்க*** - *கலக்கம் அடைய;* ***அன்று*** - *கடலைத் தாண்டிய தினத்தில்;* ***அண்ணல் யாக்கை வீசிய காலின்*** - *அனுமன் திருமேனியானது உந்தித் தள்ளிய காற்றினாலே;* ***மீன்கள் எல்லாம்*** - *கடல் மீன்கள் யாவும்;* ***வீந்து மிதந்தன*** - *இறந்து மிதந்தன.*

*அனுமன் வேகமாகச்சென்றதனால் உண்டான காற்றால் கடலும் திமிங்கல கிலங்களும் கலங்கின. மீன்கள் இறந்தன. திமிங்கிலத்தை உண்ணும் பிராணியைத் திமிங்கில கிலம் என்பர். கிலம் - அழிவு.* ***(37)***

*4778.* **பொருஅரும் உருவத்து அன்னான்**
**போகின்றபொழுது, வேகம்**
*தருவன தடக் கை,தள்ளா*
*நிமிர்ச்சிய, தம்முள் ஒப்ப,*
*ஒருவுஅருங் குணத்துவள்ளல்*
*ஓருயிர்த்தம்பி என்னும்*
*இருவரும்முன்னர்ச் சென்றால்*
*ஒத்த; அவ்விரண்டு பாலும்.*

**பொருஅரும்உருவத்து அன்னான்** - *ஒப்புமையற்ற திருமேனியை உடைய அனுமன்;* **போகின்றபொழுது** - *கடல் கடந்து தாவும் சமயத்தில்;* ***தள்ளாநிமிர்ச்சிய*** - *அடக்க முடியாத உயர்வை உடையனவும்;* ***தம்முள் ஒப்ப*** - *தமக்குள் ஒரே மாதிரி இருப்பனவும்;* **வேகம் தருவன** - *விரைவைக் கொடுப்பனவுமான;* ***தடக்கை*** - *பெருங்கைகள்;* **ஒருவுஅரும் குணத்து வள்ளல்** - *பிரிதல் இல்லாத நற்குணத்தை உடைய இராமபிரானும்;* **ஒருயிர்த் தம்பி** - *(அவனுக்கு) ஒப்பற்ற உயிர்போன்ற தம்பியும்;* **என்னும் இருவரும்** - *என்று கூறப்பெற்ற இரண்டு சகோதரர்களும்;* **அவ் இரண்டு பாலும் முன்னர்ச் சென்றால் ஒத்த** - *இரண்டு பக்கத்திலும் அனுமனுக்கு முன்பக்கம் போவது போன்றிருந்தன.*

*அனுமனின் கைகள்அடக்க முடியாத பெருமிதத் தோற்றத்தாலும் ஒன்று போன்றிருந்தன. (அனுமனுக்கு) இரண்டு புறத்திலும் பாதுகாப்பாகச் செல்லும் இராம இலக்குவர்களை ஒத்திருந்தன. அனுமன் தோழர்கள்பால் 'நும் அருளும், எம்கோன் ஏவலும் சிறைகளாகக் கலுழனிற் கடப்பல்' என்று பேசியதை ஒப்பிடுக (4734).*
***(38)***

*மைந்நாக மலையின்தோற்றம்*

**கலிநிலைத் துறை**

***4779. இந் நாகம்அன்னான் எறிகால் என***
***ஏகும்வேலை,***
***திந் நாகமாவில், செறி கீழ்த் திசை***
***காவல்செய்யும்***
***கைந் நாகம்,அந்நாள் கடல்வந்தது ஓர்***
***காட்சிதோன்ற,***
***மைந் நாகம்என்னும் மலை வான் உற***
***வந்ததுஅன்றே.***

***இ*** *- இந்த;* ***நாகம்அன்னான்*** *- மலையை ஒத்த அனுமன்;* ***எறிகால் எனஏகும் வேலை*** *- பெருங்காற்றைப் போலப் போகின்ற சமயத்தில்;* ***மைந்நாகம்என்னும் மலை*** *- மைந்நாகம் என்று பேசப்படும் மலையானது;* ***தி(க்)நாகமாவில்*** *- எட்டுத் திசைகளிலும் உள்ள யானைகளுக்குள்;* ***செறி கீழ்த்திசை*** *- (மேகம்) செறிந்துள்ள கிழக்குத் திசையில்;* ***காவல் செய்யும் கைநாகம்*** *- பாதுகாக்கும் ஐராவதம்என்னும் மலை;* ***அந்நாள்*** *- பழங்காலத்தில்;* ***கடல் வந்தது ஓர் காட்சி தோன்ற*** *- கடலில் எழுந்து வந்த காட்சியானது புலப்பட;* ***வானுற வந்தது*** *- ஆகாயம் அளாவும்படி தோன்றிற்று.*

*பாற்கடல்கடைந்தபோது ஐராவதம் என்னும் யானை (கடலிலிருந்து) வெளிப்பட்டாற்போல மைநாகமலை அனுமனுக்கு எதிரே வெளிப்பட்டது. திக் +நாகம் - திந்நாகம் மைநாகம் என்னும் சொல் எதுகை நயம் கருதி மைந்நாகம் என அமைக்கப் பெற்றது. நாகமாவில் - யானை என்னும் விலங்குகளில். மாவில் செறி கீழ்த்திசை - சிறந்த ஒளி செறிந்த கிழக்குத்திசை என்று கூறுவாரும் உளர். அன்று, ஏ - அசைகள். கம்பன் அடிப்பொடி அவர்கள் இத்தகைய பாடல்களை அளவியற் கலிநிலைத்துறை என்பர். இத்தகைய பாடல்கள் கம்பராமாயணத்தில் 128 பாடல்கள் உள்ளன. (மணிமலர் 1976)* ***(39)***

***4780. மீ ஓங்குசெம்பொன் முடிஆயிரம்***
***மின் இமைப்ப,***
***ஓயா அருவித்திரள்***
***உத்தரியத்தை ஒப்ப,***
***தீயோர் உளர்ஆகியகால்,***
***அவர் தீமைதீர்ப்பான்,***
***மாயோன் மகரக்கடல்நின்றுஎழும்***
***மாண்பதுஆகி.***

***மீஓங்குசெம்பொன்முடி ஆயிரம்*** *- வானம் அளாவிய பொன் மயமானஆயிரம் சிகரங்கள் (கிரீடங்கள்);* ***மின் இமைப்ப*** *- ஒளி விளங்கவும்;* ***ஓயாஅருவித் திரள்*** *- வற்றாத அருவிகளின் கூட்டம்;* ***உத்தரியத்தை ஒப்ப*** *-மேலாடையை ஒத்திருக்கவும்;* ***தீயோர் உளர்ஆகியகால்*** *- கொடியவர்கள்தோன்றும் காலத்தில்;* ***அவர் தீமை தீர்ப்பான்*** *- அவர்களால் பெருகும்தீமையை அழிக்கும் பொருட்டு;* ***மாயோன்*** *- (எங்கும் மறைந்துள்ள) திருமால்;* ***மகரக் கடல் நின்று எழும் மாண்பது ஆகி*** *- மீன்கள் உலாவும்கடலிலிருந்து எழுகின்ற சிறப்பை உடையதாய். ஆயிரம்சிகரங்களையும் அருவித் திரள்களையும் பெற்ற மைந்நாகமலை, ஆயிரம் முடிகளையும்*

*உத்தரியத்தையும் உடைய திருமாலை ஒத்தது. தீயோர்களின் தீமையை அழிக்கத் திருமால் அரவணையிலிருந்து எழும் காட்சியைப் பரவசப்பட்டுப் பேசுவார் கம்பர். முடி -மலைச்சிகரம்; இங்கே கிரீடம் என்னும் பொருளைத்தரும். புருஷ சூக்தம்இறைவனின் ஆயிரம் முடியைச் சிறப்பித்துப் பேசும். தாரார் முடியாயிரம் (சடகோபரந்தாதி) 'சஹஸ்ர சீர்ஷ புருஷ'* ***(40)***

***4781. நூல்ஏந்துகேள்வி நுகரார், புலன்***
***நோக்கல்உற்றார்***
***போல், ஏந்திநின்ற தனியாள் மெய்***
***பொறாது நீங்க,***
***கால் ஆழ்ந்துஅழுந்திக் கடல்புக்குழி,***
***கச்சம்ஆகி,***
***மால்ஏந்த ஓங்குநெடுமந்தர***
***வெற்புமான.****

***நூல் ஏந்துகேள்வி நுகரார் -*** *நூல்களால் கூறப்பெறும்அறிவை உட்கொள்ளாமல்;* ***புலன் நோக்கல் உற்றார்போல்*** *- புலன்வழியே சென்று உலகைப் பார்ப்பவரைப் போன்று;* ***ஏந்தி நின்ற தனியாள் மெய் பொறாது நீங்க*** *- ஏந்தி நின்ற ஒப்பற்ற நிலமகள் மேனி பொறாமல் விலகிச் செல்ல (அதனாலே);* ***கால் ஆழ்ந்து அழுந்தி*** *- அடிப்பாகம் கீழே சென்று முழுகி;* ***கடல் புக்குழி*** *- கடலில் புகுந்த இடத்தில்;* ***கச்சம் ஆகி*** *- ஆமை வடிவம் கொண்டு;* ***மால்ஏந்த ஓங்கும்*** *- திருமால் ஏந்துவதால் கடலுக்கு மேல் வந்த;* ***நெடுமந்தர வெற்பு மான*** *- பெரிய மந்தரமலையை ஒப்ப,*

*புலன்வழிச்சென்றவர் போல் ஆண்மை நீங்க, அதனால் கடலில் அழுந்தும்போது ஆமை உருக்கொண்ட திருமாலால் தாங்கப்பெற மேல்வந்த மந்தரமலை போல மைநாகமலை மேலே வந்தது. கச்சம் - ஆமை.* ***(41)***

***4782. தள்ளற்குஅரு நல்சிறை மாடு***
***தழைப்பொடுஓங்க,***
***எள்ளற்கு அருநல்நிறம் எல்லை***
***இலாதுபுல்ல,***
***வள்ளல் கடலைக்கெட நீக்கி,***
***மருந்து வவ்வி,***
***உள்உற்றுஎழும்ஓர் உவணத்து***
***அரசேயும்ஒக்க,****

***தள்ளற்கு அரும்நல்சிறை -*** *பிறரால் வெட்ட முடியாதநல்ல இறக்கைகள் ;* ***மாடு தழைப்பொடு ஓங்க -*** *பக்கத்தில் செழிப்புடன் உயரவும்;* ***எள்ளற்கு அரு நன்னிறம் -*** *இகழ்ச்சி இல்லாத நல்ல வண்ணம்;* ***எல்லை இலாது புல்ல -*** *மிகுதியாகத் தழுவி விளங்கவும்;* ***வள்ளல் கடலைக் கெட நீக்கி -*** *வளமான கடலரசன் தோற்றுப்போகவென்று அவனை விலக்கி;* ***மருந்து வவ்வி -*** *தேவாமிர்தத்தை*

*அபகரித்து;* ***உள்உற்று எழும் -*** *கடலுக்குள் புகுந்து மேலே எழுந்து வருகின்ற;* ***ஓர் உவணத்து அரசேயும் ஒக்க -*** *ஒப்பற்ற கருடராசனைப் போல.*

*தள்ளற்கு அரு - வெட்டமுடியாத தன் தலையைத் தள்ளத் தரும் என்றவாள்பூட்டிய தடங்கையினன் (திருத்தொண்டர் அந் - 14) மைந்நாகமலை -இந்திரனின் வச்சிரத்தால் வெட்டப்படாமையையும் கருடன் சிறகும் அங்ஙனமேஇருத்தலையும் அறிக. கடலை - ஐ - அல் வழிச் சாரியை - கடல் கெடஎன்க. கெட - தோற்றுப்போக.* ***(42)***

***4783. ஆன்று ஆழ்நெடு நீரிடை, ஆதியொடு***
***அந்தம்ஆகித்***
***தோன்றாதுநின்றான் அருள் தோன்றிட,***
***முந்துதோன்றி,***
***மூன்றுஆம்உலகத்தொடும், முற்றுஉயிர்***
***ஆயமற்றும்,***
***ஈன்றானை ஈன்றசுவணத் தனி***
***அண்டம்என்ன,****

***ஆதியொடு அந்தம்ஆகித் தோன்றாது நின்றான் -*** *ஆதியும் முடிவும் ஆகி வெளிப்படையாகத் தெரியாது நிலைத்து நிற்கும் பரம்பொருளின்;* ***அருள்தோன்றிட -*** *திருவருள் வெளிப்பட (அதனால்);* ***ஆன்றுஆழ் நெடு நீரிடை -*** *அமர்ந்து ஆழமான கடலின்கண்ணே;* ***முந்து தோன்றி -*** *முதலில் வெளிப்பட்டு;* ***மூன்றுஆம் உலகத் தொடும் -*** *மூன்று ஆகிய உலகங்களையும்;* ***முற்று உயிர் ஆய மற்றும் -*** *ஆன்மாவுடன் கூடிய மற்றவற்றையும்;* ***ஈன்றானை ஈன்ற -*** *பெற்றெடுத்த பிரம்ம தேவனை வெளிப்படுத்திய;* ***தனி சுவண அண்டம் என்ன -*** *ஒப்பற்ற பொன் முட்டையைப் போல.*

*உலகங்களைப்படைக்கத் திருவுள்ளம் பற்றிய பரம்பொருள் பிரம தேவனைத் தனக்குள் அடக்கிய பொன் முட்டையைக் கடலில் படைத்தான். அந்தமுட்டைபோல மைந்நாகமலை இருந்தது. இறைவன் புனலில் வித்திய வித்து, பொன் முட்டையாக வடிவம் கொண்டது. அதிலிருந்து பிரமன் வெளிப்பட்டான். சுவணம் (சுவர்ணம்) - பொன். அண்டம் முட்டை.* ***(43)***

***4784. 'இந் நீரின் என்னைத் தரும் எந்தையை***
***எய்திஅன்றி,***
***செந் நீர்மைசெய்யேன்' என, சிந்தனை***
***செய்து,நொய்தின்***
***அந் நீரில்வந்த முதல் அந்தணன்***
***ஆதிநாள்அம்***
***முந்நீரில்மூழ்கி, தவம்முற்றி***
***முளைத்தவாபோல்,****

***இந்நீரில் -*** *இந்தக்கடலிலே;* ***என்னைத் தரும் எந்தையை எய்தி அன்றி -*** *என்னைப் பெற்றெடுத்த என்னுடைய தந்தையை அடையாமல்;* ***செந்நீர்மை செய்யேன் என -***

*செம்மையான செயல்களைச் செய்ய மாட்டேன் என்று;* ***நொய்தின் சிந்தனை செய்து -*** *எளிதாக உள்ளத்தில் எண்ணி;* ***அந்நீரில் வந்த முதல் அந்தணன் -*** *அந்தக் கடலில் தோன்றிய பிரம தேவன்;* ***ஆதிநாள் -*** *முற்காலத்தில் ( முதல் ஊழிக்காலத்தில்);* ***அம் முந்நீரில் மூழ்கி -*** *அந்தக் கடலிலே முழுகி;* ***தவம் முற்றி முளைத்த வாபோல் -*** *தன்னுடைய தவம் நிரம்பி மறுபடி எழுந்தது போல்.*

*முதலில்தோன்றிய பிரமதேவன் தன்னைப் படைத்தவனைத் தேடிக் கடலடியில் தவஞ்செய்து வெளிப்பட்டான். அதைப்போல மைந்நாகம் வெளிப்பட்டது. செந்நீர்மை - செம்மையான பண்பு. அது செயலைக் குறிக்கிறது. அருஞ்செயலை எளிதாக எண்ணினான் பிரமன். ஆதலின் நொய்தின் என்றான். முந்நீர் - மூன்று தன்மையைப் பெற்றது என்பது பொருள். படைத்தல், காத்தல், அழித்தல் என்னும் முத்தொழிலைச் செய்வது கடல். ஆற்றுநீர், ஊற்றுநீர், மேல்நீர் என்னும் மூன்று நீர்களை உடையது என்பதும் ஒன்று, முன்னீர் என்று பாடம் ஓதி நிலத்திற்கு முன்னாகிய நீர் என்றும் உரைப்ப. 'பார் முதிர் பனிக்கடல்' (முருகு)* ***(44)***

***4785. பூவால்இடையூறு புகுந்து,***
***பொறாதநெஞ்சின்***
***கோ ஆம் முனிசீறிட, வேலை***
***குளித்தஎல்லாம்***
***மூவா முதல் நாயகன் மீள***
***முயன்ற அந்நாள்***
***தேவா சுரர்வேலையில் வந்து எழு***
***திங்கள்என்ன,****

***பூவால் இடையூறுபுகுந்து -*** *இந்திரனுக்கு வழங்கிய மாலையால் துன்பம் உண்டாகி;* ***பெறாத நெஞ்சின் -*** *பொறுமையற்ற உள்ளமுடைய;* ***கோஆம் முனி -*** *தலைமைப் பண்புடைய துருவாச முனிவன்;* ***சீறிட -*** *சீற்றம் அடைய;* ***வேலை குளித்த எல்லாம் -*** *கடலில் மூழ்கிய எல்லாப் பொருள்களும்;* ***மூவா முதல் நாயகன் -*** *முதுமை அடையாத முதன்மையான திருமால்;* ***மீள -*** *அப்பொருள்கள் மீண்டும் வரும்படி;* ***தேவாசுரர் முயன்ற அந்நாள் -*** *தேவாசுரர் மூலம் கடல் கடைந்து முயற்சி செய்த காலத்தில்;* ***வேலையில் வந்து எழு -*** *கடலின் கண்ணே உதயமான;* ***திங்கள் என்ன -*** *சந்திரனைப்போல.*

*தான் வழங்கியமாலையை அவமதித்த இந்திரனைத் துருவாச முனிவர் சபிக்க, விண்ணுலகப் பொருள்கள் கடலில் மறைந்தன. திருமாலும் தேவர்களும் கடல் கடைந்தபோது அவை வெளிப்பட்டன. அப்பொருள்களுடன் வெளிப்பட்ட சந்திரனைப்போல் மைந்நாகமலை வெளிப்பட்டது.* ***(45)***

***786. நிறம்குங்குமம் ஒப்பன, நீல்நிறம்***
***வாய்ந்தநீரின்***
***இறங்கும் பவளக்கொடி சுற்றின,***
***செம்பொன்ஏய்ந்த***
***பிறங்கும்சிகரம் படர்***
***முன்றில்தொறும், பிணாவொடு***

***உறங்கும்மகரங்கள் உயிர்ப்பொடு***
***உணர்ந்துபேர,****

***குங்கும நிறம்ஒப்பன -*** *குங்கும நிறத்தை ஒத்திருப்பவையும்;* ***நீல்நிறம்வாய்ந்த -*** *நீலநிறம் பெற்றவையும்;* ***நீரின் இறங்கும் பவளக் கொடி சுற்றின-*** *தண்ணீரிலே வேரை வீழ்த்திய பவளக் கொடியால் சுற்றப் பெற்றவையும்;* ***செம்பொன் ஏய்ந்த -*** *செம்பொன்னை ஒத்தவையும்;* ***பிறங்கும் சிகரம்படர் -*** *விளங்குகின்ற சிகரத்தில் பரவிய;* ***முன்றில் தொறும் -*** *முற்றங்கள் தோறும்;* ***பிணாவொடு உறங்கும் மகரங்கள் -*** *பெட்டைகளுடன் உறங்குகின்றமகரமீன்கள்;* ***உணர்ந்து உயிர்ப்பொடு பேர -*** *உறக்கம் நீங்கிப் பெருமூச்சுடன் பெயர்ந்து செல்ல.* *மைந்நாகமலையின் சிகரங்கள் குங்குமத்தைப் போலவுள்ளன. நீலநிறம் பெற்றுள்ளன. பவளக் கொடியால் சுற்றப்பட்டுள்ளன. பொன் போன்றன. அம் மலையின் முற்றங்களில் மகரமீன்கள் பெட்டையுடன் உலாவுகின்றன.* ***(46)***

***4787. கூன் சூல்முதிர் இப்பி குரைக்க***
***நிரைத்தபாசி***
***வான் சூல் மழைஒப்ப, வயங்கு***
***பளிங்குமுன்றில்***
***தான் சூலிநாளில் தகைமுத்தம்***
***உயிர்த்தசங்கம்***
***மீன் சூழ்வரும்அம்முழு வெண் மதி***
***வீறு,கீற,****

***கூன் சூல் முதிர்இப்பி -*** *உடல் வளைந்த முற்றிய கருப்பம் பெற்ற சிப்பிகள்;* ***குரைக்க -*** *ஒலிக்க;* ***நிரைத்த பாசி -*** *வரிசை வரிசையான பாசியானது;* ***வான்சூல் மழை ஒப்ப -*** *வானத்தில் உள்ள கருவுற்ற மேகத்தை ஒத்திருக்க;* ***வயங்கு பளிங்கு முன்றில் -*** *விளங்குகின்ற பளிங்குமுற்றத்தில்;* ***சூலி நாளில் தான் -*** *கருவுயிர்க்கும் காலத்தின் கண்;* ***தகை முத்தம் உயிர்த்த -*** *சிறப்புடைய முத்துக்களை வெளிப்படுத்திய;* ***சங்கம் -*** *சங்கு;* ***மீன் சூழ் வரும் -*** *நட்சத்திரங்கள் சூழ்ந்து வருகின்ற;* ***முழுவெண்மதி வீறு கீற -*** *வெண்மையான பூரண சந்திரனின் பெருமையைக் குறைக்க.*

*கடற்பாசிகள்மேகத்தை ஒத்துள்ளன. முத்துக்களைப் பெற்ற சங்கு நட்சத்திரங்களால் சூழப்பெற்ற பூரண சந்திரனைப் போன்றிருந்தது. சூல் முதிர்கூன் இப்பி என்க. இப்பி - சிப்பி. குரை - ஒலிக்க, தான் - அசை, சூல நாள் எனப் பாடங் கொண்டு, இரேவதி நட்சத்திரத்தில் என்று பொருள் கூறுவர் சிலர். இரேவதி (பிங்கலந்தை 2657)* ***(47)***

***4788. பல்ஆயிரம் ஆயிரம் காசு இனம்***
***பாடு இமைக்கும்***
***கல் ஆர் சிமயத்தடங் கைத்தலம்***
***நீண்டுகாட்டி,***

***தொள்ஆர்கலியுள் புக மூழ்கி***
***வயங்குதோற்றத்து***
***எல்ஆர் மணிஈட்டம் முகந்து,***
***எழுகின்றதுஎன்ன*.***

***பல் ஆயிரம்ஆயிரம்*** *-கணக்கற்ற;* ***காசுஇனம் பாடு இமைக்கும் -*** *மணிகளின் வகைகள் சுற்றுப் பக்கங்களில் ஒளி வீசுகின்ற;* ***கல் ஆர் தட சிமையம் -*** *கற்கள் நிரம்பிய விசாலமான மலையுச்சியாகிய;* ***கைத்தலம் நீண்டு காட்டி -*** *கைகளை மேலே உயர்த்திக் காட்டி;* ***தொல் ஆர்கலி உள்புக மூழ்கி -*** *பழமையான கடலில் முத்துக்கள் பெற நன்றாக முழுகி;* ***வயங்கு தோற்றத்து -*** *விளங்குகின்ற பொலிவினையுடைய;* ***எல்ஆர் மணி ஈட்டம் -*** *ஒளி மிக்க மணித் தொகுதிகளை;* ***முகந்து எழுகின்றது என்ன -*** *வாரிக் கொண்டு மேலே வருபவனைப் போல,*

*மைந்நாகமலைகடலில் முழுகி மணிகளை வாரிக்கொண்டு மேலே எழுவதைப் போன்றிருந்தது. மலைச் சிகரங்கள் கைகளைப் போன்றிருந்தன.* ***(48)***

***4789. மனையில்பொலி மாக நெடுங்கொடி***
***மாலை ஏய்ப்ப***
***வினையின் திரள்வெள் அருவித் திரள்***
***தூங்கி வீழ***
***நினைவின் கடலூடுஎழலோடும்,***
***உணர்ந்துநீங்காச்***
***சுனையில், பனைமீன் திமிலோடு***
***தொடர்ந்துதுள்ள****

***மனையில்பொலிமாக நெடுங்கொடி -*** *தேற்றாமரத்தின் மேலே விளங்கும், ஆகாயம் அளாவும் நீண்ட கொடி;* ***மாலை ஏய்ப்ப -*** *மாலையை ஒத்திருக்கவும்;* ***வினையின் திரள் -*** *விதியைப் போல மறைந்துள்ள;* ***வெள் அருவித்திரள் -*** *வெண்மையான அருவிக்கூட்டம்;* ***தூங்கி வீழ -*** *தாழ்ந்து விழவும்;* ***நினைவின் கடலூடு எழலோடும் -*** *மனிதர்களின் எண்ணத்தைப் போலக் கடலின் நடுவே உதித்தவுடனே;* ***உணர்ந்து நீங்கா -*** *உறக்கத்திலிருந்து விழித்து இருப்பிடத்தை விட்டு நீங்காமல்;* ***சுனையில் -*** *மலைக்குளத்தில்;* ***பனைமீன் திமிலொடு தொடர்ந்து துள்ள -*** *பனை மீனும் திமிங்கிலமும் இடையறாது துள்ளவும். கடலிலிருந்துமேலே எழுந்த மைந்நாக மலையில் உள்ள தேற்றாமரத்தைச் சார்ந்த நீள்கொடி, மாலையைப் போல இருந்தது, அம்மலைச் சுனைகளில் பனை மீனும் திமிங்கலமும் துள்ளுகின்றன. மனை என்பதற்குவீடு என்றே பொருள் கூறப் பெற்றது. கொடி மாலை ஏய்ப்ப என்னும் தொடர் பலவிதமாகப் பொருள் கூறப்பெற்றுப் பொலிவிழந்தது. மாலை ஏய்ப்ப - வரிசைகளைப் போலவும் என்று பொருள் கூறினர். மாலை ஏய்ப்ப - மாலையை ஒத்திருக்க என்று இங்கு கூறப் பெற்றது. கொடியானது மாலையை ஒத்திருந்தது என்பதே இயல்பான பொருள். மனை - தேற்றாமரம். தேற்றாமரத்தைப் பரிபாடல் மனைமரம் என்றே கூறும். 'மனைமரம் வான் வீரம் (11-19) என்னும் தொடரைக் காண்க. கவிச்சக்கரவர்த்தி 'மனை' என்றான். அவனுக்கு வழிகாட்டியவர் கொங்குவேளிர். 'காரிருள் வீடு' என்று பேசுவார் (பெருங்கதை 41-33). இல்லம்*

*எங்கணும் வான்தொட இழைத்திடும் குன்றம் (காஞ்சி - நாட்டு - 48)*
***(49)***

***4790. கொடு நாலொடு இரண்டு குலப்பகை***
***குற்றம்மூன்றும்***
***சுடுஞானம்வெளிப்பட உய்ந்த***
***துய்க்கு இலார்போல்***
***விடநாகம்முழைத்தலை விம்மல்***
***உழந்து,வீங்கி,***
***நெடுநாள்,பொறைஉற்ற உயிர்ப்பு***
***நிமிர்ந்துநிற்ப.****

***நாலொடு இரண்டுகொடும் குலப்பகை -*** *ஆறு வகையான கொடிய பரம்பரையாக வரும் பகையையும்;* ***குற்றம் மூன்றும் -*** *மூன்று குற்றத்தையும்;* ***சுடுஞானம் -*** *அழிக்கின்ற ஞானமானது;* ***வெளிப்பட -*** *ஆன்மாவிலே தோன்ற;* ***உய்ந்த துய்க்கு இலார்போல் -*** *தப்பிப் பிழைத்த பற்றற்ற ஞானிகளைப் போல;* ***முழைத்தலை நெடுநாள் விம்மல் உழந்து -*** *மலைக் குகைகளில் நீண்ட நாட்கள் பொருமி வருந்தி;* ***வீங்கி பொறையுற்ற -*** *உடல் பருத்து அடங்கிக் கிடந்த;* ***விடநாகம் -*** *விடப் பாம்புகள்;* ***உயிர்ப்பு நிமிர்ந்துநிற்ப -*** *பெருமூச்சு வெளிப்பட்டு நிலைக்க; மலையின்குகையில் அகப்பட்ட பாம்புகள் ஆறு வகையான பகையையும் மூன்று குற்றமும் நீங்கிய ஞானிகளைப் போல விடுதலை பெற்று உயிர்த்தன. பகை ஆறு - காமம், வெகுளி, கடும்பற்றுள்ளம், மானம், உவகை, மதம் என்பவை. முக்குற்றம் - ஐயம், திரிபு, அறியாமை.தனம், குலம், கல்விஎன்று குற்றம் மூன்று என்று பழைய உரை பேசும். வஞ்ச முக்குறும்பு - என்று இராமானுச நூற்றந்தாதி பேசும்.* ***(50)***

***4791. எழுந்துஓங்கி விண்ணொடு மண் ஒக்க,***
***இலங்கும்ஆடி***
***உழுந்து ஓடுகாலத்திடை, உம்பரின்***
***உம்பர்ஓங்கிக்***
***கொழுந்துஓடிநின்ற கொழுங்குன்றை***
***வியந்துநோக்கி,***
***அழுங்கா மனத்துஅண்ணல் 'இது என்கொல்'***
***எனாஅயிர்த்தான்.***

***அழுங்கா மனத்துஅண்ணல் -*** *போகங்களில் தாழாதசோர்வு இல்லாத உள்ளத்தையுடைய அனுமன்;* ***இலங்கும் ஆடி -*** *விளங்குகின்ற கண்ணாடியின்கண்;* ***உழுந்து ஓடுகாலத்திடை -*** *உழுந்தானது ஒருமுறை உருள்வதற்குள்;* ***எழுந்து ஓங்கி -*** *கடலிலிருந்து மேலே எழுந்து;* ***விண்ணொடு மண்ஒக்க -*** *ஆகாயமும் பூமியும் ஒன்றாகும்படி;* ***உம்பரின் உம்பர் ஓங்கி -*** *மேலும் மேலும் வளர்ந்து பரவி;* ***கொழுந்து ஓடி நின்ற -*** *மலைச் சிகரங்கள் வளர்ந்த;* ***கொழுங்குன்றை*** *- மைந்நாக மலையை;* ***வியந்து நோக்கி -*** *ஆச்சரியத்துடன் பார்த்து;* ***இது என்கொல் எனா அயிர்த்தான் -*** *இப்பொருள் யாதோ என்று ஐயம் உற்றான்.*

*மைந்நாகமலை,கண்ணாடியில் உழுந்து ஒருமுறை சுழல்வதற்குள் எழுந்தது கண்டு அனுமன் இது யாதோ என்று அதிசயப்பட்டான். ஓடுதல் - சுழலுதல். ஓடுவளை திருத்தியும் என்னும் முல்லைப் பாட்டுக்கு (82) சுழலுகின்ற வளையைச் சுழலாமல் செறித்தும் என்றும் உரை கண்டனர். சம்பந்தப் பிரான், 'எழிற்கண்ணாடி உழுந்துருளும் அளவையின் ஒளி எரி கொள வெஞ்சிலை வளைத்தோன்' என்பர். (ஏரிசையும் - முதல் திருமுறை)* ***(51)***

*அனுமன் மைந்நாகத்தின் மேல் உயர்தல்*

***4792. நீர்மேல்படரா, நெடுங்குன்று***
***நிமிர்ந்துநிற்றல்***
***சீர்மேல் படராதுஎனச் சிந்தை***
***உணர்ந்துசெல்வான்***
***வேர்மேல் பட வன்தலை கீழ்ப்பட***
***நூக்கி,விண்ணோர்***
***ஊர்மேல் படரக்கடிது உம்பரின்***
***மீது உயர்ந்தான்.***

***நெடுங்குன்று -*** *பெரியமைந்நாக மலையானது;* ***நீர்மேல் படரா நிமிர்ந்து நிற்றல் -*** *கடலின் மேலே விரிந்து உயர்ந்திருத்தல்;* ***மேல்சீர் படராது எனச் சிந்தை உணர்ந்து -*** *மேலான சிறப்பைப் பெருக்காது என்று மனத்தே கருதி;* ***செல்வான் -*** *செல்பவனாகிய அனுமன்;* ***வேர்மேல்பட -*** *மலையின் வேரானது மேலே தெரியவும்;* ***வன்தலை கீழ்ப்பட -*** *வலிமையான சிகரம் கீழே விழவும்;* ***நூக்கி -*** *(அந்த மலையை) உந்தித் தள்ள;* ***விண்ணோர் ஊர்மேல் படர -*** *தேவர்களின் ஊர் தன் மேல் பரவும்படி;* ***கடிது -*** *வேகமாக;* ***உம்பரின் மீது உயர்ந்தான் -*** *வானின்கண் பாய்ந்தான்;*

*மைந்நாகமலையைக்கண்ட அனுமன் இத் தடையால் சிறப்பு உண்டாகாது என்று கருதி மேல் நோக்கிப் பாய்ந்தான். வெள்ளம் தடையைக் கண்டபோது அதைக் கடக்க மேலே போவது போன்றது அனுமன் செயல். ஆதலின் உம்பரின் ஊடு பாய்ந்தான் என்றான்.* ***(52)***

*மைந்நாகம் அனுமனொடு உரையாடல்*

***4793. உந்தாமுன் உலைந்து உயர்வேலை***
***ஒளித்தகுன்றம்***
***சிந்தாகுலம் உற்றது; பின்னரும்***
***தீர்வில்அன்பால்***
***வந்துஓங்கி ஆண்டு ஓர்சிறு***
***மானிடவேடம்ஆகி***
***எந்தாய்இதுகேள்என இன்ன***
***இசைத்ததுஅன்றே.***

**வேலை ஒளித்தஉயர்குன்றம்** - கடலில்இந்திரனுக்குப் பயப்பட்டு மறைந்திருந்த பெரியமலை; **உந்தாமுன்** - உந்திக் கொண்டு வருவதற்குள்; **உலைந்து சிந்தா குலம் உற்றது** - அச்சமடைந்து மனத்தில் மயக்கம் அடைந்தது; **பின்னரும்** - மறுபடியும்; **தீர்வு இல்அன்பால்** - ஒதுக்க முடியாத அன்புடன்; **ஆண்டு** -அவ்விடத்தில்; **ஓர்சிறு மானிடவேடம் ஆகி** - ஒப்பற்ற மனித வேடத்தைமேற்கொண்டு; **வந்து ஓங்கி** - அனுமனுக்கு எதிரேவந்து நிமிர்ந்து; **எந்தாய்** - என்னுடைய தந்தையே; **இது கேள் என இன்ன இசைத்தது** - இந்த மொழியைக் கேட்பாயாக என்று பின்வரும் சொற்களைக் கூறிற்று.

*மைந்நாகமலை,அனுமன் உந்தித்தள்ள அதனால் மனமயக்கம் உற்று, மனித வடிவத்துடன் வந்து, இதைக்கேள் என்று இம் மொழியைக் கூறிற்று. உலைதல் - அச்சம் அடைந்து, சிந்தாகுலம் - மனமயக்கம். இன்ன - இந்த, அன்னோ - அசை, சிந்தாகுலம் உற்று என்னைகொல் வாட்டத் திருத்தியதே (திருக்கோவையார்)*
*(53)*

*4794.* **வேற்றுப்புலத்தோன் அலென் ஐய,**
**விலங்கல்எல்லாம்**
**மாற்றுச்சிறைஎன்று அரி வச்சிரம்**
**மாண ஓச்ச**
**வீற்றுப்பட நூறியவேலையின்**
**வேலையுய்த்து**
**காற்றுக்கிறைவன் எனைக் காத்தனன்**
**அன்புகாந்த.**

**ஐய** - தலைவனே !;**வேற்றுப் புலத்தோன் அலென்** - யான் வேறுபட்ட நாட்டைச் சார்ந்தவன் அன்று ; **அரி** -பகைவர்களை அழிக்கும் இந்திரன்; **விலங்கல் எல்லாம் சிறை** - எல்லா மலைகளின் சிறகுகளை; **மாற் றுஎன்று** - அழிப்பாயாக என்று கூறி; **வச்சிரம் மாண ஓச்ச** - வச்சிராயுதத்தைச்சிறப்பு உண்டாக வீசி; **வீற்றுப்பட நூறிய வேலையின்** - தனித் தனியாகச்சிதைத்த காலத்தில்; **அன்பு காந்த** - அன்பு விளங்கும்படியாக; **எனைக்காற்றுக்கிறைவன்** - என்னை வாயு பகவான்; **வேலை உய்த்துக் காத்தனன்** - கடலிலே தள்ளிக் காப்பாற்றினான். என்னைப் பகைவன்என்று கடியற்க; இந்திரன் மலைகளின் சிறகுகளை அரிந்த காலத்து உன் தந்தையால் பாதுகாக்கப் பெற்றவன் என்று மைந்நாகமலை கூறியது. வேற்றுப் புலத்தோன் - பகைவர் நாட்டவன். வேற்றுப் புலத்திறுத்து (புறம் - 31) *(54)*

*4795.* **அன்னான்அருங்காதலன் ஆதலின்**
**அன்பு தூண்ட**
**என்னால் உனக்குஈண்டு செயற்கு**
**உரித்தாயதுஇன்மை**
**பொன்னார் சிகரத்து இறை ஆறினை**
**போதி என்னா,**
**உன்னாஉயர்ந்தேன் - உயர்விற்கும்**
**உயர்ந்ததோளாய் !**

***உயர்விற்கும்உயர்ந்த தோளாய்*** - *உயர்ந்துள்ளபொருள்கள் அனைத்திலும் உயர்ந்த தோள்களையுடையவனே;* ***அன்னான்*** - *அந்த வாயு தேவனுடைய;* ***அருங்காதலன் ஆதலின்*** - *அருமை மைந்தன் நீ ஆகையால்;* ***அன்பு தூண்ட*** - *அவன்பால் யான் கொண்ட அன்பானது உந்தித்தள்ள;* ***ஈண்டு என்னால் உனக்கு*** - *இங்கே என்னால் உனக்கு;* ***செயற்கு உரித்து ஆயது இன்மை*** - *செய்வதற்கு உரிய உபகாரம் வேறு இல்லாததால்;* ***பொன்னார் சிகரத்து*** - *பொன் நிரம்பிய சிகரத்தில்;* ***இறை ஆறினை போதி என்னா*** - *சிறிது இளைப்பாறிப் போவாய் என்று;* ***உன்னா*** - *நினைந்து;* ***உயர்ந்தேன்*** - *மேலே கிளர்ந்து வந்தேன்.*

*அனுமனே ! எனக்குஉதவி செய்த வாயுதேவன் புதல்வன் நீ ஆகையினாலே உனக்கு உதவி செய்வதற்கு மேலே கிளர்ந்து வந்தேன் என்று மைந்நாகமலை கூறிற்று. ஆறினை - இளைப்பாறியவனாய்.* ***(55)***

***4796. 'கார்மேகவண்ணன் பணிபூண்டனன்***
***காலின்மைந்தன்***
***தேர்வான்வருகின்றனன் சீதையைத்***
***தேவர்உய்யப்***
***பேர் வான் அயல்சேறி; இதில் பெறும்***
***பேறு இல்'என்ன***
***நீர்வேலையும்என்னை உரைத்தது"***
***நீதிநின்றாய்***

***நீதி நின்றாய்*** *-ஒழுக்கத்தில் நிலைத்து நிற்பவனே !;* ***கார்மேக வண்ணன்*** - *கருத்த மேகம் போன்ற நிறமுடைய இராமபிரானின்;* ***பணி பூண்டனன் காலின் மைந்தன்*** - *கட்டளை மேற்கொண்ட வாயுதேவனின் புத்திரன்;* ***தேவர் உய்யச் சீதையைத் தேர்வான் வருகின்றனன்*** - *தேவர்கள்வாழ வேண்டும் என்று சீதா பிராட்டியைத் தேடும்பொருட்டு வருகின்றான்;* ***பேர் வான் அயல் சேறி*** - *பெரிய ஆகாயத்தின் பக்கத்தில் சேர்வாயாக;* ***இதில்*** - *இதைவிட;* ***பெரும்பேறு இல் என்ன*** - *பெரிய பாக்கியம் இல்லை என்று;* ***என்னை*** - *என்னிடத்தில்;* ***நீர் வேலையும் உரைத்தது*** - *நற்பண்பு வாய்ந்த கடலும் கூறிற்று.*

*இராமபிரானின்கட்டளை மேற்கொண்டு வாயு புத்திரன் சீதையைத் தேடி வருகின்றான். நீ அவனுக்கு உதவுக என்று கடல் கூறிற்று என்று மைந்நாகமலை பேசிற்று. பணி - கட்டளை; பூண்டனன் - முற்றெச்சம். கால் - காற்று. (வாயு தேவன்) நன்நெடுங்காலின் மைந்தன் நாமமும் அனுமன் (சுந் - உரு 31)*
***(56)***

***4797. நற்றாயினும் நல்லன் எனக்கு இவன்***
***என்று நாடி***
***இற்றே இறைஎய்தினை ஏய்ந்தது***
***கோடி என்னால்***
***பொற்றார் அகல்மார்ப ! தம் இல்லுழை***
***வந்தபோதே***

***உற்றார்செயல்மற்றும் உண்டோ ? என***
***உற்றுஉரைத்தான்***

***பொன்தார் அகல்மார்ப*** *-பொன்மாலை அணிந்த விரிந்த மார்பை உடையவனே;* ***இவன்*** *- இந்த அனுமன்;* ***எனக்கு நற்றாயினும் நல்லன்*** *- என்னிடம் பெற்ற தாயைவிட அன்புடையவன்;* ***என்று நாடி இற்றே இறை எய்தினை*** *- என்று ஆராய்ந்து இங்கே சிறிது வந்து;* ***என்னால் ஏய்ந்தது கோடி*** *- என்னால் தரக்கூடியதை ஏற்றுக் கொள்வாயாக;* ***தம் இல்உழை வந்த போதே*** *- (விருந்தினர்) தம்முடைய வீட்டிற்கு வந்த உடனே;* ***உற்றார் செயல் மற்றும் உண்டு*** *- வீட்டுக்கு உரியவர்களின் செய்கை (விருந்தோம்பலைவிட) வேறு இருக்க முடியுமோ ?;* ***என உற்று உரைத்தான்*** *- என்று அனுமனை அடைந்து கூறினான்.*

*நான், தாயினும்சிறந்தவன் என்று கருதி என்பால் வந்து தங்கி என்னுடைய உபசாரத்தை ஏற்றுக்கொள். விருந்தினர் வந்தால் உபசரிப்பதை விட இல்லறத்தார்க்கு வேறு கடமை உண்டோ என்று மைந்நாகமலை கூறிற்று. நற்றாய் - பெற்ற தாய். கோடி - கொள்க. கொள் + தி = கோடி.* ***(57)***

***4798. உரைத்தான்உரையால் 'இவன் ஊறு இலன்***
***என்பதுஉன்னி***
***விரைத் தாமரை வாள்முகம் விட்டு***
***விளங்க வீரன்***
***சிரித்தான்அளவே; சிறிது அத்திசை***
***செல்லநோக்கி***
***வரைத்தாள்நெடும் பொற்குடுமித்தலை***
***மாடு கண்டான்.***

***வீரன்*** *- வீரனானஅனுமான்;* ***உரைத்தான் உரையால்*** *- உபசார வார்த்தைகளைக் கூறிய மைந்நாகமலையின் மொழியால்;* ***இவன்ஊறு இலன் என்பது உன்னி*** *- இவன் குற்றமற்றவன் என்பதை அறிந்து;* ***விரைத் தாமரை வாள்முகம்*** *- மணமிக்க தாமரை போன்ற ஒளிமிக்க முகமானது;* ***விட்டு விளங்க*** *- நன்றாக ஒளி வீசும்படி;* ***அளவே சிரித்தான்*** *- புன்னகை செய்து;* ***சிறிது அத்திசை செல்ல நோக்கி*** *- மெல்ல மொழி வந்த திசையில் நன்றாகப் பார்த்து;* ***வரைத்தாள் நெடும் பொன் குடுமித்தலை*** *- மூங்கில் வளர்ந்த சாரலைப் பெற்ற மைந்நாகமலையின் நீண்ட பொன்மயமான சிகரத்தை;* ***மாடு கண்டான்*** *- பக்கத்தில் பார்த்தான்.*

*மைந்நாகமலையின்மொழியால் இவன் நல்லவன் என்பதை அறிந்த அனுமான் புன்னகை செய்து நன்றாக நோக்கி மைநாக மலையின் சிகரத்தைப் பார்த்தான். உன்னி - அறிந்து. இவ்வழி நோக்கும் என்பதை உன்னவர் (ஆரண்ய - சூர்ப்ப - சூழ்ச்சி 8) விட்டு விளங்கல் நன்றாகப் பிரகாசிக்க (சென்னை - பல் - கழக அகராதி) தாள் - சாரல்; தாள் உயர் தடங்கிரி (கம்ப - 829).* ***(58)***

***4799. வருந்தேன்;அது என்துணை வானவன்***
***வைத்தகாதல்***

***அருந்தேன் இனியாதும், என் ஆசை***
***நிரப்பிஅல்லால்***
***பெருந்தேன்பிழிசாலும்நின் அன்பு***
***பிணித்தபோதே***
***இருந்தேன்நுகர்ந்தேன்; இதன்மேல் இனி***
***ஈவதென்னோ ?***

*மைநாகமலையைப்பார்த்து அனுமான்,* ***வருந்தேன்*** *- நான் பறந்து வந்ததால் சோர்வு அடையேன்;* ***அது*** *- அதற்குக் காரணம்;* ***என்துணை வானவன் வைத்த காதல்*** *- எனக்கு ஆதரவாக இருக்கும்இராமபிரான் என்பால்கொண்ட அன்பாகும்;* ***இனி*** *- இப்போது;* ***என் ஆசை நிரப்பி அல்லால்*** *- என் விருப்பம் நிறைவேறினால் அல்லாமல்;* ***யாதும் அருந்தேன்*** *- எதையும் உண்ணமாட்டேன்;* ***பெருந்தேன் பிழி சாலும் நின் அன்பு*** *- பெரியதேனின் பிழிவினை ஒத்த உன்னுடைய அன்பானது;* ***பிணித்த போதே*** *- கட்டிப் பிடித்த அப்பொழுதே;* ***இருந்தேன்*** *- உன் வீட்டில் தங்கி;* ***நுகர்ந்தேன்*** *- உண்டவன் ஆனேன்;* ***இனி இதன்மேல் ஈவது என்னோ*** *- இப்போது இதற்குமேல் கொடுக்கக்கூடிய பொருள் யாது ?      இராமபிரான்என்பால் வைத்த கருணையால் யான் சோர்வு அடையமாட்டேன். என்னுடைய விருப்பம் நிறைவேறினால் அல்லாமல் எதையும் உண்ணேன். உன் அன்பு என்னைப் பிணித்து விட்டது. அதனாலேயே உண்டவன் ஆனேன். இனிமேல் தருவதற்கு யாதுளது என்று அனுமன் கூறினான். நிரப்புதல் - நிறைவேறுதல். நிற்றேடி வருந்த நிரப்பினையோ (கம்ப. 3611) பெருந்தேன் - மலைத்தேன் (குறுந்தொகை 3)* ***(59)***

***4800. முன்பிற் சிறந்தார் இடையுள்ளவர்***
***காதல்முற்றப்***
***பின்பிற்சிறந்தார் குணம் நன்று; இது***
***பெற்றயாக்கைக்கு***
***என்பிற்சிறந்தாய தோர் ஊற்றம் உண்டு***
***என்னல்ஆமே ?***
***அன்பிற்சிறந்தாயதோர் பூசனை***
***யார்கண்உண்டே ?***

***காதல் முற்ற*** *-அன்பானது நிறைவு பெறுவதாலே;* ***முன்பிற் சிறந்தார்*** *-முற்காலத்தே சிறந்திருந்த தலையேழு வள்ளல்களும்;* ***இடையுள்ளவர் -*** *இடையேழு வள்ளல்களும்;* ***பின்பிற் சிறந்தார்*** *- பிற்காலத்தே சிறந்திருந்த கடையெழு வள்ளல்களும் (மேற்கொண்ட);* ***குணம் நன்று*** *- பண்பாகிய அன்பு பெரியது;* ***இது பெற்ற யாக்கைக்கு*** *- இந்த அன்பைப் பெற்றிருக்கும் உடம்புக்கு;* ***என்பிற் சிறந்து ஆயதோர்*** *- எலும்பைவிடச் சிறப்புற்ற;* ***ஊற்றம் உண்டு*** *- வலிமையுள்ளது;* ***என்னல் ஆம்*** *- என்று கூறுவது தகுதியுடையது தான்;* ***அன்பின் சிறந்தாய தோர்*** *- அன்பைவிடச் சிறப்புற்ற;* ***பூசனை*** *- வழிபாடு;* ***யார்கண் உண்டு*** *- எவர்பால் உள்ளது?      மூவகை வள்ளல்கள்பெற்றிருந்த அன்பு மிகப் பெரியது. இந்த அன்பைப் பெற்றுள்ள உடம்புக்கு எலும்பைவிடச் சிறந்த வலிமை உள்ளது. அன்பைவிடச் சிறந்த வழிபாடு கிடையாது. என்பினும் சிறந்தது அன்பு என்க. ஆதலின் ததீசி அன்புக்காக என்பை வழங்கினான். வலிமையுள்ளவர்பால் அன்பு கொள்வது சிறந்ததே என்பது கருத்து.*

*அன்பிற் சிறந்த பூசனையில்லை என்ற உயர்ந்த கருத்து இங்கே உரைக்கப்படுகிறது.* ***(60)***

***4801. ஈண்டே கடிதுஏகி இலங்கை***
***விலங்கல்எய்தி***
***ஆண்டான் அடிமைத்தொழில்***
***ஆற்றலின் ஆற்றல் உண்டே ?***
***மீண்டால்நுகர்வென் நல் விருந்தென***
***வேண்டிமெய்ம்மை***
***பூண்டானவன்கட்புலம் பிற்பட***
***முன்புபோனான்***

***மெய்ம்மைபூண்டான்** - உண்மையை ஆபரணமாக அணிந்த மாருதி (மைநாகத்தைப் பார்த்து); **ஈண்டே** - இப்பொழுதே; **கடிது ஏகி** - வேகமாகச் சென்று; **இலங்கை விலங்கல் எய்தி** - இலங்கைத் தீவில் உள்ள திரிகூட மலையை அடைந்து; **ஆண்டான் அடிமைத் தொழில்** - இராமபிரானுக்கு அடிமைப் பணியை; **ஆற்றலின் ஆற்றல் உண்டே** - செய்வதில் வலிமை உள்ளதே **?; மீண்டால்** - திரும்பி வந்தால்; **நல் விருந்து நுகர்வேன் என வேண்டி** - உன்னுடைய விருந்தை உண்பேன் என்று சொல்லி; **அவன் கட்புலம் பின்பட** - அந்த மைநாகனின் பார்வையானது பின்னே தொடர; **முன்பு போனான்** - முன்நோக்கிப் பறந்து சென்றான்.*

*யான் இலங்கையைஅடைந்து பெருமானின் பணி செய்து மீண்டால் உன் விருந்தை ஏற்பேன் என்று கூறி அனுமன் சென்றான். இலங்கையில் உள்ள திரிகூட மலையே இராவணனின் இருப்பிடம். ‘இலங்கை வெற்பில்... நங்கையைக் கண்டேன்’ என்று பின்னே பேசப்படும். விருந்து என்பது இங்கே உண்டியை.* ***(61)***

***4802. செவ்வான்கதிரும் குளிர்திங்களும்***
***தேவர்வைகும்***
***வெவ்வேறுவிமானமும் மீனொடு***
***மேகம்மற்றும்***

***எவ்வாய்உலகத்தவும் ஈண்டி***
***இருந்ததம்மின்***
***ஒவ்வாதன ஒத்திடஊழிவெங்***
***காலும் ஒத்தான்.****

*(அனுமன் சென்றவிரைவால்)*

***செவ்வான்கதிரும் -** சிவந்த வானத்துச் சூரியனும்; **குளிர் திங்களும் -** குளிர்ந்த சந்திரனும்; **தேவர் வைகும் வெவ்வேறு விமானமும் -** தேவர்கள் தங்கியிருக்கின்ற பல்வேறு வகைப்பட்ட விமானங்களும்; **மீனொடு மேகம் மற்றும் -** நட்சத்திரங்களும்*

*மேகமும் மற்றைய பொருள்களும்;* ***எவ்வாய் உலகத்தவும்*** *- எந்த இடங்களில் உள்ள உலகத்தைச் சார்ந்த பொருள்களும்;* ***ஈண்டி இருந்த*** *- ஒன்றாகச் சேர்ந்திருந்தன;* ***தம்மில் ஒவ்வாதன ஒத்திட*** *- தமக்குள்ளே ஒத்துப் போகாதவை ஒத்துப் போகும்படியிருந்தமையால் (அனுமன்);* ***ஊழி வெங்காலும் ஒத்தான்*** *- பிரளயகாலத்துக் காற்றுப் போன்று இருந்தான்.*

*வேறு வேறு வகையானபொருள்கள் அனுமனின் வேகத்தால் ஒன்று சேர்ந்தன. ஆதலால் அவன் ஊழிக்காலத்தை ஒத்திருந்தான். ஈண்டியிருத்தலாவதுஓரிடத்தில் கூடியிருத்தல். முன் சூரியனுக்கோரிடம், சந்திரனுக்கோரிடம் மற்றைக் கிரகங்களுக்கு வெவ்வேறிடம். இப்போது எல்லாம் ஓரிடத்தைச் சேர்தலாயின அனுமன் செல்லும் வேகத்தால் என்க, என்று திரிசிரபுரம் மகாவித்துவான் வி.கோவிந்த பிள்ளை எழுதிய விளக்கம் இங்கே நினைவு கூரத் தகும். ஈண்டியிரிந்த என்னும் பாடத்திற்கு சூரியன் முதலானவை ஒன்று சேர்ந்து விலகின என்பது பொருள்.* ***(62)***

***4803. நீர்மாக்கடல்மேல் நிமிர்கின்ற***
***நிமிர்ச்சி நோக்காப்***
***பார்மேல் தவழ்சேவடி பாய்நட***
***வாப் பதத்து என்***
***தேர்மேல் குதிகொண்டவன் இத்திறன்***
***சிந்தைசெய்தான்***
***ஆர்மேல்கொல்என்று எண்ணி அருக்கனும்***
***ஐயம்உற்றான்.***

***அருக்கனும்*** *- சூரியனும்;* ***நீர் மா கடல்மேல்*** *- நீரைப் பெற்ற பெரிய கடலைவிடப் பெரிதாக;* ***நிமிர்கின்ற நிமிர்ச்சி நோக்கா*** *- உயர்கின்றஉயர்ச்சியைப் பார்த்து;* ***பார்மேல் தவழ் சேவடி*** *- பூமியிலே தவழ்கின்ற சிவந்த பாதங்கள்;* ***பாய் நடவாப் பதத்து*** *- பூமியிலே பதிந்து நடவாத பருவத்திலே;* ***என் தேர்மேல் குதி கொண்டவன்*** *- என்னுடைய தேரிலே குதித்த இந்த அனுமன்;* ***இத்திறன்*** *- இப்படி;* ***ஆர்மேல் சிந்தை செய்தான் கொல்*** *- எவர்மேல் பாயக் கருதுகிறானோ;* ***என்று எண்ணி*** *- என்று கருதி;* ***ஐயம் உற்றான்*** *- சந்தேகம் அடைந்தான்.*

*அனுமன்கடலைவிடப் பெரிதாக வளரும் உயர்ச்சியை நோக்கிய சூரியன், தவழ்கின்ற பருவத்தில் என் தேர்மேல் பாய்ந்தான். இப்போது யார்மேல் பாய்கின்றானோ என்று ஐயம் உற்றான். பெரிய பொருளுக்கு உவமையாக்கப்படுவது கடல். அதனால் கடல்மேல் நிமிர்கின்ற நிமிர்ச்சி என்பதற்கு இங்ஙனம் கூறப்பெற்றது.* ***(63)***

***4804. வாள் ஒத்துஒளிர் வால்எயிறு ஊழின்***
***மருங்குஇமைப்ப***
***நீள்ஒத்துஉயர்வாலின் விசும்பு***
***நிரம்புமெய்யன்***
***கோள்ஒத்தபொன்மேனி விசும்பு இரு***
***கூறுசெய்யும்***

***நாள் ஒத்தது;மேல்ஒளி கீழ் இருள்***
    ***உற்றஞாலம்.****

**வாள்ஒத்துஒளிர்வால் எயிறு** - *வாளைப் போலப்பிரகாசிக்கும் வெண்மையான பற்கள்;* **மருங்கு ஊழின் இமைப்ப** - *பக்கத்தில் முறையாக ஒளிவீச;* **நீள்ஒத்து உயர் வாலின்** - *நீளத்தைப் பெற்று உயர்ந்த வாலினாலே;* **விசும்பு நிரம்பு** - *ஆகாயத்தை நிறைவுபெறச் செய்யும்;* **மெய்யன்** - *சத்திய வடிவான அனுமனின்;* **கோள் ஒத்த பொன்மேனி** - *வலிமை மிக்க பொன்னிறமான திருமேனி;* **விசும்பு இரு கூறு செய்யும்** - *ஆகாயத்தை இரண்டு விதமாகக் கூறுபடுத்தும்;* **நாள் ஒத்தது** - *நாளைப் போன்றிருந்தது;* **ஞாலம்** - *உலகமானது;* **மேல் ஒளி கீழ் இருள் உற்ற** - *மேலே ஒளியையும் கீழே இருளையும் அடைந்த.*

*அனுமனின்திருமேனியின் விரிவால் பூமியில் இருள் உண்டாயிற்று. அவனுக்கு மேலே ஒளி இருந்தது. ஆதலால் அவன் ஒளியையும் இருளையும் உண்டாக்கும் நாளைப் போன்றிருந்தான். மெய்யன் என்பதற்குஉடம்பைப் பெற்றவன் என்று கூறின், வானை நிரப்பியது வாலா, மேனியா என்னும் ஐயப்பாடும் இவனுக்குக் குறைவும் உண்டாக்கும். ஆதலின் மெய்யன் என்பது அனுமன் என்று கூறப்பட்டது. 'மெய்ம்மை பூண்டான்' என்று 61-ஆம் பாடல் பேசும். கோள் - வலிமை.* ***(64)***

***4805. மூன்றுற்றதலத்திடை முற்றிய***
    ***துன்பம்வீப்பான்***
***ஏன்றுற்றுவந்தான் வலி மெய்ம்மை***
    ***உணர்த்துநீ என்று***
***ஆன்றுற்றவானோர் குறை நேர***
    ***அரக்கிஆகித்***
***தோன்றுற்றுநின்றாள் சுரசைப் பெயர்ச்***
    ***சிந்தைதூயாள்.***

**ஆன்று உற்றவானோர்** - *அறிவு நிரம்பி அங்கு வந்த தேவர்கள்;* **உற்ற மூன்று தலத்திடை** - *பொருந்திய மூன்று உலகத்தில்;* **முற்றிய துன்பம் வீப்பான்** - *முதிர்ந்த துன்பத்தை ஒழிக்கும்படி;* **ஏன்றுற்று வந்தான்** - *ஏற்றுக்கொண்டு வந்துள்ள அனுமானின்;* **மெய்ம்மை வலிநீ உணர்த்து** - *வலியின் உண்மையை எங்கட்கு நீ அறிவிப்பாயாக;* **என்று குறை நேர** - *என்று வேண்டிக் கொள்ள;* **சுரசைப்பெயர் சிந்தை தூயாள்** - *சுரசை என்ற பெயரை உடைய தூய மனத்தைஉடையவள்;* **அரக்கி ஆகி தோன்றுற்றுநின்றாள்** *-(அனுமனுக்கு எதிரில்)அரக்கி வடிவத்துடன் தோன்றி நின்றாள். அனுமன் வலிமையைஎங்கட்கு அறிவிக்க என்று தேவர் வேண்டிக் கொள்ள சுரசை அரக்கியாகி அனுமனுக்கு எதிரே தோன்றினாள். சுரசையை, தாட்சாயணி என்றும், நாகமாதா என்றும் கூறுவர். வால்மீகம், நாகமாதா (சுந்தர 1-162) என்றும், தாட்சாயணி (சுந்தர 187) என்றும் கூறும்.* ***(65)***

***4806. பேழ்வாயொர் அரக்கி உருக்கொடு***
    ***பெட்பின்ஓங்கி***
***கோள்வாய் அரியின் குலத்தாய்; கொடுங்***

***கூற்றும்உட்க***
***வாழ்வாய் எனக்குஆமிடமாய் வரு***
***வாய்கொல் என்னா***
***நீள்வாய்விசும்பும் தனதுச்சி***
***நெருக்க நின்றாள்.***

*(அந்தச் சுரசை)*

***பேழ்வாய்அரக்கி உருக்கொடு** - பெரிய வாயை உடையஅரக்கி வடிவத்தை ஏற்று; **பெட்பின் ஓங்கி -** (மனித) ஆசைபோல் வளர்ந்து; **கோள்வாய் அரியின் -** வலிமை மிக்க குரங்கின்; **குலத்தாய் -** குலத்தில் பிறந்தவனே; **கொடுங்கூற்றும் உட்க -** கொடுமையான யமனும் அஞ்சும்படி; **வாழ்வாய் -** வாழ்வாயாக; **எனக்கு ஆமிடமாய் வருவாய் என்னா -** எனக்கு (உண்ணும்) மாமிசமாக வருவாயாக என்று; **நீள்வாய் விசும்பும் -** ஓங்கிய இடத்தைப் பெற்ற ஆகாயமும்; **தனது உச்சி -** தனது தலையை; **நெருக்க நின்றாள் -** அணுகி நெருக்கும்படி (வளர்ந்து) நின்றாள்.*

*சுரசை அரக்கிஉருவத்துடன் குரங்கு மரபில் வந்தவனே எனக்கு உணவாய் வருவாயாக என்று கூறி நின்றாள். பேழ்வாய் - பெரியவாய் / பிளந்த வாய் என்றும் கூறலாம். ஆமிடம் - உண்ணும் மாமிசம். யான் இனி இதனுக்கு ஆமிடம். (கம்ப - 3664).* ***(66)***

***4807. தீயேஎனல்ஆய பசிப்பிணி***
***தீர்த்தல்செய்தாய்***
***ஆயே விரைவுற்றெனை அண்மினை***
***வண்மை யாள!***
***நீயே இனிவந்துஎன் நிணம்கொள்***
***பிணங்குஎயிற்றின்***
***வாயே புகுவாய்; வழிமற்றிலை***
***வானின் என்றாள்.***

*(சுரசை அனுமனைநோக்கி)*

***வண்மையாள! -** கொடைப் பண்புடையவனே; **தீயே எனல் ஆய -** நெருப்பே என்று கூறத்தக்க; **பசிப்பிணி -** பசியாகிய நோயை; **தீர்த்தல் செய்வாய் ஆயே -** நீக்குதலைச் செய்பவனாக ஆகி; **விரைவுற்று எனை அண்மினை -** விரைவாக என்னைச் சார்ந்தாய்; **இனி -** இப்போது; **நீயே வந்து -** நீயாக வந்து; **என் நிணங்கொள் பிணங்கு -** எனது கொழுப்பைக் கொண்ட ஒன்றோடொன்று பினனியிருக்கும்; **எயிற்றின் வாயே -** கோரைப் பற்களையுடைய வாயிலே; **புகுவாய் -** நுழைவாயாக; **வானின் -** ஆகாயத்தின்கண்; **மாற்றுவழி இலை -** வேறு வழியில்லை என்று; **என்றாள் -** கூறினாள்.*

*நீ என்னுடையபசிப்பிணி தீர்க்க வந்துள்ளாய். வண்மையுடையவனே நீயே என் வாய்ப்பக்கம் வருக என்று சுரசை கூறினாள். பிணங்கு எயிற்றில் - ஒன்றோடொன்று பின்னிய பற்கள். எயிறு - வளைந்த பற்கள் என்றே உரை கூறப்பெற்றது. நான்தான்*

*உண்பேன் - நான்தான் உண்பேன் என்று தம்முள் பிணங்கும் எயிறு என்று கூறினும் அமையும்.* ***(67)***

***4808. பெண்பால்ஒருநீ பசிப்பீழை***
***ஒறுக்கநொந்தாய்***
***உண்பாய் எனதுஆக்கையை யான்உத***
***வற்குநேர்வல்***
***விண்பாலவர்நாயகன் ஏவல்***
***இழைத்துமீண்டால்***
***நண்பால் எனச்சொல்லினன் நல்அறி***
***வாளன்; நக்காள்.***

***நல்அறிவாளன் -*** *நல்லஅறிவுடைய அனுமான் (சுரசையிடம்);* ***நீ ஒரு பெண்பால் -*** *நீ பெண்ணாக உள்ளாய்;* ***பசிப்பீழை -*** *பசியாகிய துன்பம்;* ***ஒறுக்க நொந்தாய் -*** *வருத்துவதால் துன்புற்றாய்;* ***விண்பாலவர் நாயகன் -*** *விண்ணுலகத்தவரின் தலைவனான இராமபிரானின்;* ***ஏவல் இழைத்து மீண்டால்-*** *கட்டளையைப் புரிந்து திரும்பினால்;* ***எனது ஆக்கையை உண்பாய் -*** *(அப்போது) என்னுடைய உடலை உண்பாயாக;* ***நண்பால் உதவற்கு யான்நேர்வல் -*** *நட்புடன் வழங்க நான் உடன்பட்டேன்;* ***எனச் சொல்லினன் -*** *என்று கூறினான்;* ***நக்காள் -*** *(அது கேட்டவுடன் சுரசை) ஏளனமாகச்சிரித்தாள்.      இராமபிரானின்கட்டளையை நிறைவேற்றி மீண்ட பிறகு நீ என்னுடைய உடம்பை உண்ணுக. நான் உனக்கு அதை வழங்குவேன் என்று அனுமன் கூறினான். அதுகேட்ட சுரசை சிரித்தாள். இங்கே விண் என்றது பரமபதத்தை. விண்பால் இருப்பாய் - என்னும் திருவாய்மொழிப் பாசுரத்துக்கு நம்பிள்ளை வரைந்த உரையைப் பார்க்கவும். பீழை -துன்பம்.* ***(68)***

***4809. காய்ந்தேழ் உலகங்களும் காணநின்***
***யாக்கை தன்னை***

***ஆர்ந்தேபசி தீர்வென்இது ஆணைஎன்று***
***அன்னாள்சொன்னாள்***
***ஓர்ந்தானும்உவந்து ஒருவேன் நினது***
***ஊழ்இல்பேழ்வாய்***
***சேர்ந்தேகுகின்றேன் வலையாமெனின்***
***தின்றிடுஎன்றான்.***

***அன்னாள் -*** *அந்தச்சுரசை;* ***ஏழ் உலகங்களும் காண -*** *ஏழ் உலகங்களும் பார்க்கும்படியாக;* ***நின் யாக்கை தன்னை -*** *உன்னுடைய உடம்பை;* ***காய்ந்து -*** *வாட்டி;* ***ஆர்ந்து பசிதீர்வென் -*** *உண்டு பசியாறுவேன்;* ***இது ஆணை என்று -*** *இது சபதம் என்று;* ***சொன்னாள் -*** *கூறினாள்;* ***ஓர்ந்தானும் உவந்து -*** *சுரசையின் எண்ணத்தை அறிந்த அனுமானும்மகிழ்ச்சியடைந்து;* ***ஒருவேன் -*** *நான் விலகிப் போகமாட்டேன்;* ***நினது -*** *உன்னுடைய;* ***ஊழ்இல் பேழ் வாய் -*** *முறை முடிவற்ற பெரிய வாயை;* ***சேர்ந்து***

***ஏகுகின்றேன் -*** *அடைந்து செல்லப் போகின்றேன்;* ***வலையாமெனின் -*** *வலிமை உடையவள் ஆனால்;* ***தின்றிடு என்றான் -*** *தின்பாயாக என்று கூறினான்.     காய்தல் - சுடுதல், வாட்டுதல். புலாலைச் சுடும் முறையைப் பேசுகின்றான். காய்ந்து என்பதற்குக் கோபித்து என்று பொருள் கூறுவதில் சிறப்பு இருந்தால் ஏற்க. சினந்து உண்ணுதல் அரக்கியர்க்கு ஏற்கும் போலும். ஆணை - சபதம்.* ***(69)***

***4810. அக்காலைஅரக்கியும் அண்டம்***
***அனந்தமாகப்***
***புக்கால் நிறையாத புழைப் பெரு***
***வாய் திறந்து***
***விக்காது விழுங்க நின்றாள், அது***
***நோக்கிவீரன்***
***திக்கார்அவள்வாய் சிறிதாம்வகை***
***சேணில்நீண்டான்.***

***அக்காலை -*** *அவ்வாறுஅனுமன் கூறிய போதில்;* ***அரக்கியும் அண்டம் அனந்தமாக -*** *அரக்கியானவளும் அண்டங்கள் எல்லையறப் பெருகி;* ***புக்கால் -*** *புகுந்தாலும்;* ***நிறையாத புழைப்பெருவாய் திறந்து -*** *நிரம்பாத குகைபோன்ற பெரிய வாயைத் திறந்து;* ***விக்காது விழுங்க நின்றாள் -*** *விக்காமல்விழுங்குவதற்குஆயத்தமாக நின்றாள்;* ***அது வீரன் நோக்கி -*** *அவள் செயலை அனுமன் பார்த்து;* ***திக்கு ஆர் அவள் வாய் -*** *திசைகளைப் பொருந்திய அவளுடைய வாயானது;* ***சிறிதாம் வகை -*** *சிறிதாகும்படி;* ***சேணில் நீண்டான் -*** *ஆகாயத்தில் படிப்படியாக வளர்ந்தான்.*

*அரக்கியின்வாய் திசைகளின் எல்லையில் இருந்தது. அனுமன் பேருரு வானையளாவி இருந்தது. புழை - குகை. மேருப் புழை என தொக்கு அடங்கித் துயில்தரு கண்ணினான். (யுத்த - கும்ப 68) அரக்கியும் இதில் உள்ள உம் - அசை புக்காலும் என்பதிலுள்ள உம்மை தொக்கு புக்கால் என வந்துள்ளது.*
***(70)***

***4811. நீண்டான்உடனே சுருங்கா***
***நிமிர்வாள் வயிற்றின்***
***ஊண்தான் எனஉற்று ஓர் உயிர்ப்பு***
***உயிராதமுன்னர்***
***மீண்டான் அதுகண்டனர் விண்உறை***
***வோர்கள் எம்மை***
***ஆண்டான்வலன்என்றுஅலர் தூஉய் நெடிது***
***ஆசிசொன்னார்.***

***நீண்டான் -*** *வளர்ந்துஉயர்ந்த அனுமன்;* ***உடனே சுருங்கா -*** *சடக்கெனத் தன்னைச் சுருக்கிக் கொண்டு;* ***நிமிர்வாள் வயிற்றின் -*** *ஓங்கி வளர்ந்த சுரசையின் வயிற்றில்;* ***ஊண்தான் என உற்று -*** *உணவு என்று சொல்லும்படி பொருந்தி;* ***ஓர் உயிர்ப்பு உயிராத முன்னர் -*** *அவள் ஒரு மூச்சு விடுவதற்கு முன்;* ***மீண்டான் -*** *வெளி வந்தான்;* ***விண்***

***உறைவோர்கள் -*** *தேவர்கள்;* ***அது கண்டனர் -*** *அச் செயலைப் பார்த்தனர்;* ***எம்மை ஆண்டான் வலன் என்று -*** *எம்மைப் பாதுகாக்க வந்த அனுமன் வல்லமை உடையவன் என்று;* ***அலர் தூஉய் நெடிது ஆசி சொன்னார் -*** *மலர் தூவி நீண்ட ஆசி கூறினார்கள்.*

*நெடிது வளர்ந்துஉடனே சுருங்கி வயிற்றில் நுழைந்து வெளி வந்தது அனுமனது சாதுர்யத்தையும் வல்லமையையும் உணர்த்தியமையால் தேவர் மகிழ்ந்தனர்.*
***(71)***

*அனுமன் செயலைநோக்கிய தேவர்கள் வாழ்த்துக் கூறல்*

***4812. மின்மேற்படர் நோன்மையனாய் உடல் வீக்கம்நீங்கி***

***தன்மேனியளாய் அவள், தாயினும் அன்பு தாழ***
***'என்மேல்முடியாதன' என்று இனிது ஏத்திநின்றாள்***
***பொன்மேனி யனும்நெடிது ஆசி புனைந்துபோனான்--***

***அவள் -*** *அந்தச் சுரசை;* ***தன் மேனியளாய் -*** *தனக்குரிய இயல்பான உடம்பைப் பெற்றவளாய்;* ***உடல் வீக்கம் நீங்கி -*** *உடலின் பருமன் நீங்கி;* ***தாயினும் அன்பு தாழ -*** *தாயைவிட அன்பு அதிகரிக்க;* ***மேல் -*** *இனிமேல்;* ***முடியாதன என் என்று -*** *உன்னால் செய்ய முடியாதவை யாவை? என்று கூறி;* ***இனிது ஏத்தி நின்றாள் -*** *வாழ்த்தி நின்றாள்;* ***பொன் மேனியனும் -*** *பொன் போன்ற திருமேனி பெற்ற அனுமன்;* ***மின்மேல் படர் நோன்மையனாய் -*** *மின்னலின் மேல் படர்ந்து செல்லும் வலிமையுடையவனாய் ;* ***நெடிது ஆசி புனைந்து போனான் -*** *பெரிய வாழ்த்துக்களை அணிந்து சென்றான்.*

*சுரசை இயல்பானமேனி பெற்று உன்னால் செய்ய முடியாத செயல்கள் இல்லை என்றாள். அனுமன் சுரசையின் ஆசி பெற்றுச் சென்றான். 'முடியாதது என் எனக்கேல் இனி' என்று நம்மாழ்வார் பேசினார் (2-6,7) சுரசை என்மேல் முடியாதன என்று கூறினாள்.* ***(72)***

**கலிநிலைத்துறை**

***4813. கீதங்கள்இசைத்தனர் கின்னரர் கீதம்நின்ற***
***பேதங்கள்இயம்பினர் பேதையர் ஆடல்மிக்க***
***பூதங்கள்தொடர்ந்து புகழ்ந்தன பூசு ரேசர்***
***வேதங்கள்இயம்பினர் தென்றல் விருந்துசெய்ய.***

***கின்னரர்கீதங்கள் -*** *கின்னரர்கள்பாடல்களை;* ***இசைத்தனர் -*** *பாடினார்கள் ;* ***பேதையர் கீதம் நின்ற -*** *மகளிர்கள் பாடல்கள் அமைந்த;* ***பேதங்கள் இயம்பினர் -*** *இசை விகற்பங்களைப் பாடினார்கள்;* ***ஆடல்மிக்க பூதங்கள் -*** *ஆடுதலிற் சிறப்புப் பெற்ற பூத கணங்கள்;* ***தொடர்ந்து புகழ்ந் தன-*** *விடாமற்போற்றின;* ***பூசுரேசர் -*** *தலைசிறந்த அந்தணர்கள்;* ***வேதங்கள் இயம்பினர் -*** *வேதங்களை இசைத்தனர்;* ***தென்றல் விருந்து செய்ய -*** *தென்றல் காற்று புதியஊக்கத்தை வழங்க. அனுமனின் அரியசெயலைக் கண்டு கின்னரர் முதலானவர்கள் கொண்டாடியதைப் பேசுகிறது. (73)*

***4814. மந்தாரம்உந்து மகரந்தம்***
***மணந்தவாடை***
***செந்தாமரைவாள்முகத்திற் செறி***
***வேர்சிதைப்ப***
***தந்தாம்உலகத்திடை விஞ்சையர்***
***பாணிதள்ளும்***
***கந்தார வீணைக்களி செஞ்செவிக்***
***காது நுங்க.***

***மந்தாரம் உந்து-*** *மந்தாரமரங்கள் நிரம்பிய சோலையானது வெளிப்படுத்தின;* ***மகரந்தம் மணந்த வாடை -*** *மலர்த்தாதுகள் மணக்கின்ற வாடைக்காற்று;* ***செந்தாமரை வாள்முகத்து -*** *செந்தாமரை போன்ற ஒளிமிக்க முகத்தில்;* ***செறிவேர் சிதைப்ப -*** *மிகுந்துள்ள வேர்வையைப் போக்க;* ***விஞ்சையர் -*** *வித்தியாதரர்;* ***தம்தாம் உலகத்திடை -*** *தங்கள் தங்கள் உலகத்தில் இருந்து கொண்டு;* ***பாணி தள்ளும் -*** *தாளம் பிறழாத;* ***கந்தார வீணை -*** *கந்தாரப் பண்பாடும் பொருட்டு நரம்பு திருத்தப் பெற்ற வீணையிலிருந்து புறப்பட்ட;* ***களி -*** *இசையாகிய தேனை;* ***செஞ்செவி காது நுங்க -*** *சிறப்புற்ற செவியின் துளைகள் அனுபவிக்க.*

*அனுமனின்முகவியர்வையை மந்தாரச் சோலைக் காற்று போக்கிற்று. அவனுடைய திருச்செவிகள் விஞ்சையரின் பண்ணை அனுபவித்தன. மந்தாரம் - தேவலோகத்துத் தெய்வ மரங்களில் ஒன்று. கந்தாரம் - சுரபேதம் என்று பழைய உரை பேசும். (அடை - பதி). காது - துளை. காதற்ற ஊசியும் (பட்டினத்தார் பாடல்) கந்தாரம் - பண் - கந்தாரம் செய்து களிவண்டு முரன்றுபாட (சிந்தாமணி 1959) (74)*

*அங்காரதாரையுடன் அனுமன் பேசுதல்*

***கலிவிருத்தம்***

***4815. வெங்கார்நிறப் புணரி வேறேயும் ஒன்றப்***
***பொங்குஆர்கலிப் புனல்தரப்பொலிவதேபோல்***
***'இங்குஆர்கடத்திர்' எனை என்னா எழுந்தாள்***
***அங்கார தாரைபெரிது ஆலாலம் அன்னாள்.***

***பெரிது ஆலாலம்அன்னாள் -*** *பெரிய ஆலகால விடத்தைப் போன்ற;* ***அங்கார தாரை -*** *அங்கார தாரை என்பவள்;* ***அப்பொங்கு புனல் ஆர்கலி-*** *அந்த பொங்குகின்ற புனலைப் பெற்றுள்ள கடல்;* ***வேறேயும் ஒன்று -*** *தன்னினும் வேறுபட்ட ஒரு;* ***வெங்கார் நிறப்***

***புணரி*** - வெப்பமான கரிய நிறம்பெற்ற கடலை; ***தர*** - பெற்றெடுத்து; ***பொலிவதே போல்*** - விளங்குவதையேஒப்ப (தோன்றி); ***எனை*** - என்னை; ***இங்கு ஆர் கடத்திர்*** - இங்கேதாண்டிப் போகின்றீர்; ***என்னா*** - என்று கூறி; ***எழுந்தாள்*** - வளர்ந்தாள். கடல் மற்றொருகடலை ஈன்றதுபோல் அங்கார தாரை கடலில் தோன்றினாள். அவள் என்னை எவர் கடக்கப் போவது என்று கூறினாள். அங்கார தாரை - நெருப்புக் கொழுந்து போன்றவள். ஒன்று புணரியை - எனக்கூட்டி யுரைக்கப் பெற்றது. ***(75)***

***4816. காதக்கடுங்குறி கணத்து இறுதி கண்ணாள்***
***பாதச்சிலம்பின்ஒலி வேலைஒலி பம்ப,***
***வேதக்கொழுஞ்சுடரை நாடிநெடு மேல்நாள்***
***ஓதத்தின்ஓடும்மது கைடவரை ஒத்தாள்.***

***கணத்து இறுதி*** - ஒருகணத்தின் முடிவுக்குள்; ***காதம்*** - காத தூரத்திலுள்ள பொருளை; ***கடுங்குறி கண்ணாள்*** - வேகமாக அறியும் கண்களையுடைய அங்கார தாரை; ***பாதச் சிலம்பின் ஒலி*** - பாதத்தின் சிலம்பின் ஒலியாலே; ***வேலையொலி பம்ப*** - கடல் அலையின் ஒலி அடங்க; ***நெடுமேல் நாள்*** - நீண்ட காலத்துக்கு முன்; ***வேதக் கொழுஞ்சுடரை*** - வேதங்கள் உணர்த்தும் ஒளிமயமான திருமாலை; ***நாடி*** - போர்செய்ய விரும்பி; ***ஓதத்தின் ஓடும்*** - கடலிலே ஓடி வருகின்ற; ***மது கைடவரை*** - மதுவையும் கைடவனையும்; ***ஒத்தாள்*** - ஒத்திருந்தாள்.

அங்காரதாரை -நீண்ட தூரத்தில் உள்ள பொருள்களைக் காணும் கண்களைப் பெற்றவள். அவள் திருமாலுடன் போர் செய்ய வந்த மது கைடவர்களைப் போன்றிருந்தாள். கடும்குறி - வேகமாக அறியும். கலுழன்தன் கடுமையிற் கரந்தான் *(6237)* (வேலை - அலை பம்பு - அடங்கி) ***(76)***

***4817. துண்டப் பிறைத்துணை எனச்சுடர் எயிற்றாள்***
***கண்டத்திடைக்கறை யுடைக்கடவுள் கைம்மா***
***முண்டத்து உரித்தஉரியால் முளரிவந்தான்***
***அண்டத்தினுக்குஉறை அமைத்தனைய வாயாள்.***

***பிறைத் துண்டத்துணை என*** - பிறைத் துண்டத்தின்இரட்டை என்றுசொல்லும்படி; ***சுடர் எயிற்றாள்*** - விளங்குகின்ற கோரைப் பற்களை உடையவள்; ***கண்டத் திடைக் கறையுடைக் கடவுள்*** - கழுத்தின்கண் விடத்தால் உண்டாகிய நீலநிறம் பொருந்திய சிவபிரான்; ***கைம்மா*** - யானையினது; ***முண்டத்து உரித்த உரியால் - உடம்பிலிருந்து உரித்த தோலாலே; முளரி வந்தான் அண்டத்தினுக்கு*** - பிரமதேவனால் ஆகிய அண்டத்துக்கு; ***உறை அமைத்து அனைய*** - உறை தைத்துப் போட்டால் எவ்வளவு பெரிதாக இருக்குமோ அத்தகைய; ***வாயாள்*** - வாயினை உடையவள்.

தலையற்ற உடலைமுண்டம் என்றும், உடலற்ற தலையைக் குண்டம் என்றும் கூறும் வழக்குண்டு. முனிவர்கள் ஏவிய யானையைச் சிவபிரான் உரித்துப் போர்த்துக் கொண்ட செய்தி புராணங்களில் காண்க. இது கஜ சம்ஹாரமூர்த்தம் - கோயில்களில் காணலாம். ***(77)***

***4818. நின்றாள்நிமிர்ந்து அலைநெடுங் கடலின் நீர்தன்***
***வன்தான் அலம்பமுடிவான் முகடு வெளவ***
***அன்றுஆய்திறத்தவன், அறத்தை அருளோடும்***
***தின்றாள்ஒருத்திஇவள் என்பது தெரிந்தான்.***

***நிமிர்ந்துஅலைநெடுங் கடலின் நீர் -*** *பெருகி அலையுடன் கூடிய கடலின் தண்ணீரானது;* ***தன்வன்தாள் -*** *தன்னுடைய வலிமையான பாதத்தை;* ***அலம்ப -*** *கழுவ;* ***வான் முகடு முடி வெளவ -*** *ஆகாயத்தின் உச்சியை தலை அளாவ;* ***நின்றாள் -*** *(அனுமனுக்கு எதிரே) நின்றாள்;* ***ஆய் திறத்தவன்-*** *ஆராயும் வலிமைபெற்ற அனுமன்;* ***இவள் -*** *இந்த அரக்கி;* ***அறத்தை -*** *தருமத்தை;* ***அருளோடும் தின்றாய் ஒருத்தி -*** *கருணையுடன் சேர்த்துஉண்டாளாகிய ஒருத்தி;* ***என்பது -*** *என்னும் உண்மையை;* ***அன்று தெரிந்தான்-*** *அப்போது தெரிந்து கொண்டான்; அரக்கியானவள்பேருருக்கொண்டு நின்றாள். அனுமன் இவள் அறத்தையும் அருளையும் தின்ற ஒருபெண் என்பதை அறிந்தான். அலம்புதல் - கழுவுதல்.ஆழி வடிம்பு அலம்ப நின்றான் என்று நளவெண்பா பேசும்.* ***(78)***

***4819. பேழ்வாய்அகத்துஅலது பேர்உலகம் மூடும்***
***நீள்வான்அகத்தினிடை ஏகும்நெறி நேரா***
***ஆழ்வான்அணுக்கன் அவள்ஆழ்பில வயிற்றைப்***
***போழ்வான் நினைத்தினைய வாய்மொழி புகன்றான்:***

***பேர்உலகம் மூடும்நீள்வான் அகத்தின் இடை -*** *பெரிய உலகை மூடுகின்ற நீண்ட ஆகாயத்தில்;* ***பேழ்வாய் அகத்து அலது -*** *(அரக்கியின்) பிளந்த வாயே அல்லாமல்;* ***ஏகும் நெறி நேரா ஆழ்வான் -*** *செல்லும் வழி கிடையாமல் துன்புற்ற ;* ***அணுக்கன்-*** *(இராமபிரானின்) அணுக்கத் தொண்டனாகிய அனுமன்;* ***அவள் ஆழ்பில வயிற்றைப் -*** *அவள் ஆழமானகுகைபோன்ற வயிற்றைப்;* ***போழ்வான் -*** *பிளப்பதற்கு;* ***நினைத்து -*** *எண்ணி;* ***இனைய வாய்மொழி -*** *இப்படிப்பட்ட வார்த்தையை;* ***புகன்றான் -*** *கூறினான். வானில் கடந்துசெல்வதற்கு அரக்கியின் வாயைத் தவிர வேறு இடம் இன்மையால் துன்புற்ற அனுமன் அரக்கியின் வாயைப் பிளக்க எண்ணி இந்த வார்த்தையைக் கூறினான்.* ***(79)***

***4820. 'சாயா வரம்தழுவினாய் தழியபின்னும்***
***ஓயாஉயர்ந்தவிசை கண்டுமுணர் கில்லாய்***
***வாயால் அளந்துநெடு வான்வழி அடைத்தாய்***
***நீயாரை ? என்னைஇவண்நின்றநிலை' என்றான்.***

***சாயாவரம்தழுவினாய் -*** *நிழலைப் பிடித்துஇழுக்கும் வரத்தால் என்னை இழுத்தாய்;* ***தழிய பின்னும் -*** *இழுத்த பிறகும்;* ***ஓயா உயர்ந்த விசை-*** *தளர்ச்சி யடையாத வேகத்தை;* ***கண்டும் -*** *பார்த்தும்;* ***உணர்கில்லாய் -*** *(என் வலிமையை) அறியாமலுள்ளாய்;* ***நெடுவான் வழி -*** *பெரிய ஆகாயமார்க்கத்தை;* ***வாயால் -*** *வாயினால்;* ***அளந்து அடைத்தாய்-*** *அளாவித்தடுத்தாய்;* ***நீ யாரை -*** *நீ யார்?;* ***இவண் நின்ற நிலைஎன்னை? -*** *இவ்விடத்தேநிற்கின்ற நிலைமைக்குக்காரணம் யாது;* ***என்றான் -*** *என்று வினவினான். அரக்கியே !நிழலை இழுக்கும் வரத்தால் என்னை இழுத்தாய். யானே அதற்கு அடங்காமல் செல்கிறேன். என் ஆற்றலை உணராமல் உள்ளாய். நீ வான்வழி அடைத்து*

*நிற்கும் காரணம் யாது என்று அனுமன் கேட்டான்.சாயாவரம் - நிழல்மூலமாக ஆட்களை இழுக்கும் வரம். நிலை - தன்மை. நில்லா உலகின்நிலை (கம்ப.3289)* ***(80)***

***4821. பெண்பால்எனக்கருது பெற்றியொழி உற்றால்***
***விண்பால்அவர்க்குமுயிர் வீடுறுதல் மெய்யே***
***கண்பால்அடுக்கவுயர் காலன்வரு மேனும்***
***உண்பேன்ஒருத்தியது ஒழிப்பதரி தென்றாள்.***

*(அனுமன் மொழி கேட்டஅங்கார தாரை)*

***பெண்பால்எனக்கருது பெற்றி ஒழி -*** *(என்னை) ஒருபெண்தானே என்று நினைக்கும் தன்மையை விட்டுவிடு;* ***உற்றால் -*** *என்எதிரே வந்தால்;* ***விண்பால் அவர்க்கும் -*** *தேவ லோகத்தில் உள்ள தேவர்க்கும்;* ***உயிர் வீடுறுதல் மெய்யே -*** *உயிரானது உடம்மை விடுதல் உறுதியாகும்;* ***கண்பால் -*** *என்னுடைய கண்ணின் பக்கம்;* ***உயர் காலன் அடுக்க வருமேனும் -*** *யமன் அணுக வருமேயாயினும்;* ***உண்பான் அருத்தியது -*** *உண்ணவிரும்பிய செயலை;* ***ஒழிப்பது அரிது -*** *விலக்க முடியாது;* ***என்றாள் -*** *என்று கூறினாள். அரக்கி அனுமனைநோக்கி ''என்னைப் பெண்தானே என்று கருதாதே; எனக்கு முன் வந்தால் உண்பேன்'' என்று கூறினாள். பெற்றி - தன்மை. வீடுவது - அழிவது. மெய் -உறுதி.* ***(81)***

*அனுமன் அங்காரதாரை வயிற்றைக் கிழித்தேகல்*

***4822. திறந்தாள்எயிற்றை, அவள்; அண்ணலிடை சென்றான்***
***அறந்தான்அரற்றியது அயர்த்தமரர் எய்த்தார்***
***இறந்தான்எனக்கொடுஓர் இமைப்பதனின் முன்னம்***
***பிறந்தான்எனப்பெரிய கோளரி பெயர்ந்தான்.***

***அவள் திறந்தாள்எயிற்றை -*** *(அனுமனை விழுங்க)அங்காரதாரை வாயைத் திறந்தாள்;* ***அண்ணல் -*** *பெருமையை உடைய அனுமன்;* ***இடை -*** *அந்த வாயின் வழியில்;* ***சென்றான் -*** *போனான்;* ***இறந்தான் எனக்கொடு -*** *அனுமன் இறந்து விட்டான் என்று நினைத்துக்கொண்டு;* ***அறம் அரற்றியது -*** *அறக்கடவுள் கதறியது;* ***அமரர் எய்த்தார் -*** *தேவர்கள் வருந்தினர்;* ***பெரிய கோளரி -*** *பெரிய சிங்கம் போன்ற அனுமன்;* ***ஓர் இமைப்பதனின் முன்னர் -*** *ஒருமுறை கண்ணை இமைப்பதற்கு முன்பு;* ***பிறந்தான் என -*** *பிறந்து விட்டான்என்று கூறும்படி;* ***பெயர்ந்தான் -*** *திரும்பி வந்தான். அனுமன்அரக்கியின் வாயின் வழியில் வயிற்றில் புகுந்தான். அது கண்டு அறம் அரற்றியது. தேவர்கள் வருந்தினர். அப்போது அனுமன் இமைப்பதன் முன்பு பிறந்தான் என்று கூறும்படி திரும்பினான்.* ***(82)***

***4823. கள்வாய் அரக்கி கதற, குடர்கணத்தில்***
***கொள்வார் தடக்கையன் விசும்பின்மிசை கொண்டான்***
***முள்வாய்பொருப்பின்முழை எய்திமிக நொய்தின்***
***உள்வாழ்அரக்கொடு எழு திண்கலுழன் ஒத்தான்.***

***கள்வாய் அரக்கி***- *கள்ஒழுகும் வாயை உடைய அங்கார தாரை;* ***கதற-*** *கூக்குரலிடும்படி (உடலைப் பிளந்து);* ***வார்குடல் கொள் தடக்கையன் -*** *நீண்ட குடலைப் பற்றிய நீண்ட கையை உடைய அனுமன்;* ***கணத்தில் -*** *ஒருநொடிக்குள்;* ***விசும்பின்மிசை -*** *ஆகாயத்தின்கண் சென்று;* ***கொண்டான் -*** *சேர்ந்தான் (அந்த அனுமன்);* ***முள்வாய் பொருப்பின் முழை -*** *முட்செடிகள்முளைத்த மலையின் குகையை;* ***எய்தி -*** *அடைந்து;* ***மிகநொய்தின் -*** *மிகஎளிமையாக;* ***உள்வாழ் அரக்கொடு -*** *அந்த மலைக்குள் வாழ்கின்றபாம்புகளை எடுத்துக்கொண்டு;* ***எழு திண் -*** *மேலே பறந்து வந்தவலிமையான;* ***கலுழன் ஒத்தான் -*** *கருடனை ஒத்திருந்தான். அங்கார தாரைமலை போன்றிருந்தாள். அவள் வாய் குகை போன்றிருந்தது. அதில் நுழைந்து குடலுடன் வந்த அனுமன் மலைக் குகையில் புகுந்த பாம்புடன் மேலே வந்த கருடனை ஒத்திருந்தான். உவமையணி - அரா என்பது 'அர' எனக்குறுகி நின்றது.*
***(83)***

***4824. சாகா வரத்தலைவரில் திலகம் அன்னான்***
***ஏகா அரக்கிகுடர்கொண்டுஉடன் எழுந்தான்***
***மாகால் விசைக்கவடம்மண்ணிலுற வாலோடு***
***ஆகாயம் உற்றகதலிக்கு உவமை யானான்.***

***சாகாவரத்தலைவரில் -*** *இறவா வரம் பெற்றசிரஞ்சீவிகளில்;* ***திலகம் அன்னான் -*** *திலகம் போன்ற அனுமன்;* ***ஏகா -*** *அரக்கியின் வயிற்றினுள் சென்று;* ***உடன் -*** *விரைவில்;* ***அரக்கி குடர்கொண்டு -*** *அரக்கியின் குடலை எடுத்துக்கொண்டு;* ***எழுந்தான் -*** *மேலே எழுந்தான்;* ***(அவன்) மாகால் விசைக்க -*** *பெரிய காற்றடிக்க;* ***வடம்மண்ணில் உற -*** *கயிறானது மண்ணில் இருக்க;* ***வாலோடு*** *-வாலுடனே;* ***ஆகாயம்உற்ற கதலிக்கு -*** *ஆகாயத்திற் பறக்கின்ற காற்றாடிக்கு;* ***உவமையானான் -*** *ஒப்புமையானான்.*

*சிரஞ்சீவியர்கள் எழுவராவர். அசுவத்தாமன், மாபலி, வியாசன், அனுமன், விபீடணன், மார்க்கண்ட முனி, பரசுராமன் (பொருட்டொகை நி - 599) என்பவர். அவருள் அனுமன் சிறந்தவன் என்று கவிச்சக்கரவர்த்தி திருவுளம் பற்றுகிறார். ஆதலின் சாகாவரத் தலைவரில் திலகம் அன்னான் என்றால். கதலி - கற்றாடி.*
***(84)***

***4825. ஆர்த்தனர்கள் வானவர்கள்; தானவர் அழுங்கா***
***வேர்த்தனர்;விரிஞ்சனும் வியந்து, மலர்வெள்ளம்***
***தூர்த்தனன்;அகன்கயிலையில் தொலைவு இலோனும்***
***பார்த்தனன்;முனித்தலைவர் ஆசிகள் பகர்ந்தார்.***

*(அனுமன் செயலைக்கண்டு)*

***வானவர்கள்ஆர்த்தனர் -*** *தேவர்கள் ஆரவாரம்செய்தனர்;* ***தானவர் அழுங்கா வேர்த்தனர் -*** *அசுரர்கள் மனம் வருந்தி (அச்சத்தால்) உடல்வெயர்த்தனர்;* ***விரிஞ்சனும் -*** *பிரம்மதேவனும்;* ***வியந்து -*** *ஆச்சரியப்பட்டு;* ***மலர் வெள்ளம் தூர்த்தனன் -*** *மலரை வெள்ளம் போல் தூர்த்தான்;* ***அகன்கயிலையில் தொலைவிலோனும் -*** *அகன்ற கயிலை மலையில் உள்ளஇறுதியில்லாத சிவபெருமானும்;* ***பார்த்தனன் -*** *கடைக்கணித்தான்;* ***முனித்தலைவர் -*** *தலைமை சான்ற முனிவர்கள்;* ***ஆசிகள் பகர்ந்தனர் -*** *வாழ்த்துக்களை*

*கூறினார். அனுமனின்செயலைக் கண்டு தேவர்களும் தெய்வங்களும் அடைந்த மகிழ்ச்சி பேசப்படுகிறது. ஆர்த்தனர்கள் - கள், அசை - விகுதிமேல் விகுதி என்பர். திருமால் இராமனாக அவதரித்தமையின் மும்மூர்த்திகளில் இருமூர்த்தி களே பேசப்படுகின்றனர். தனுவின் புதல்வர்கள் ஆகையினால் அசுரர்கள் தானவர் என்று கூறப்பெற்றனர். பார்த்தனன் - அருளொடு நோக்கினான். பாராயோ என்னை முகம் - பார்த்து ஒருகால் என் கவலை தீராயோ என்பர் தாயுமானவர். தொலைவிலோன் - சிவபெருமான்.* ***(85)***

***4826. மாண்டாள்அரக்கி; அவள்வாய் வயிறுகாறும்***
***கீண்டான்இமைப்பினிடை மேருகிரி கீழா***
***நீண்டான்;வயக்கதி நினைப்பின் நெடி தென்னப்***
***பூண்டான்;அருக்கன் உயர் வானின்வழி போனான்.***

***அரக்கிமாண்டாள் -** அங்கார தாரைஇறந்தாள்; (அனுமன்) **அவள்வாய் -** அவளுடைய வாயை; **வயிறு காறும் கீண்டான் -** வயிறுவரை இரண்டாகப் பிளந்தான்; **இமைப்பினிடை -** கண் இமைப்பதற்கு முன்பு; **மேருகிரி கீழா நீண்டான் -** மகா மேருமலை தன்கீழே இருக்கும்படி பேருருக்கொண்டான்; **நினைப்பின் நெடிது என்ன-** எண்ணத்தை விட வேகம் என்றுகூறும்படி; **வயக்கதி பூண்டான் -** வேகமாகப் பறத்தலை மேற்கொண்டான்; **அருக்கன் உயர்வானின் வழி போனான் -** சூரியன் இயங்கும் உயர்ந்தவான வழியே சென்றான்.* ***(86)***

*இராமநாமம்இடையூறு நீக்கும்*

***4827. 'சொற்றார்கள் சொற்ற தொகையல்ல துணை ஒன்றோ***
***முற்றா முடிந்தநெடுவானினிடை முந்நீ***
***ரில்தாவி எற்றுஎனினும் யான்இனி இலங்கை***
***உற்றால்,விலங்கும் இடையூறு' என, உணர்ந்தான்.***

***சொற்றார்கள் -** வழியைக்கூறியவர்கள்; **சொற்ற -** கூறிய துன்பங்கள்; **தொகை அல்ல -** எண்ணுக்கு உட்பட்டவை அல்ல; **துணை ஒன்றோ -** அத்துன்பங்களை நீக்கும் துணை ஒன்றா (பல); **நெடுவானின் இடை -** பெரிய ஆகாயத்தில் (அவைகள்); **முற்றாமுடிந்த -** அடியோடும் ஒழிந்துபோயின; **முந்நீரில் தாவி -** கடலில் தாவிப்போய்; **எற்று எனினும் -** எத்தகைய இடையூறு வந்தாலும்; **யான்இனி -** நான் இப்போது; **இலங்கை உற்றால் -** இலங்கையை அடைந்தால்; **இடையூறு விலங்கும் -** இடையூறு விலகிப் போகும்; **என உணர்ந்தான் -** (என்று அனுமான்) அறிந்தான்.*

*வழி கூறியவானரர்கள் குறித்த துன்பங்கள் மிகப்பல. அவற்றை நீக்கும் துணைகளும் பல. அத்துன்பங்கள் யாவும் ஒழிந்தன. யான் இலங்கை அடைந்தால் துன்பம் முற்றும் நீங்கும் என்று அனுமன் கருதினான்.* ***(87)***

***4828. ஊறுகடிதுஊறுவன ஊறில் அறம் உன்னா***
***தேறல்இல்அரக்கர்புரி தீமை அவைதீர***
***ஏறும்வகை எங்குளது? 'இராம'என எல்லாம்***
***மாறும் அதின்மாறுபிறிதுஇல்' என வலித்தான்.***
*(அனுமன்)*

***ஊறு* - துன்பங்கள்; *கடிது ஊறுவன* - வேகமாக அடைகின்றன; *ஊறுஇல் அறம்* - அழிவில்லாத தருமத்தை; *உன்னா* - மதியாத; *தேறல்இல் அரக்கர்* - ஆராய்தல் இல்லாத அரக்கர்கள்; *புரிதீமை அவைதீர* - செய்கின்ற அந்தத் தீமை நீங்க; *ஏறும் வகை எங்குளது* - (துன்பங்களிலிருந்து) ஏறுகின்ற வழி எங்கே இருக்கிறது? *இராமஎன எல்லாம் மாறும்* - இராம என்றுகூற எல்லாத் துன்பமும் (இன்பமாக) மாறும்; *அதின் பிறிது மாறு இல்* - அதைவிட வேறான பரிகாரம் இல்லை; *என* - என்று; *மனத்திடை நினைத்தான்* - மனத்திலே உறுதிப் படுத்திக்கொண்டான்.**

*அனுமன்,துன்பங்கள் அதிகமாக வருகின்றன. அவை நீங்க இராமநாமத்தைச் செபிக்க வேண்டும் என்று கருதினான்.* ***(88)***

**அறுசீர் விருத்தம்**

***4829. தசும்புடைக் கனக நாஞ்சில்***
***கடிமதில்தணித்து நோக்கா***
***அசும்புடைப்பிரசத் தெய்வக்***
***கற்பகநாட்டை அண்மி***
***விசும்பிடைச்செல்லும் வீரன்***
***விலங்கிவேறு இலங்கை மூதூர்ப்***
***பசும்சுடர்ச்சோலைத்து ஆங்கோர்***
***பவளமால்வரையில் பாய்ந்தான்.***

***பிரசம் அசும்புடை*- தேன்கசிதலைப் பெற்ற; *தெய்வக் கற்பக நாட்டை அண்மி* - கற்பக மரங்கள் செழித்த தேவலோகத்தை எட்டி; *விசும்பு இடைச் செல்லும் வீரன்* - ஆகாயத்தே செல்லும் அனுமன்; *தணித்து* - வேகத்தைக் குறைத்து; *தசும்புடை* - குடங்களைப் பெற்றுள்ள; *கனக நாஞ் சில்*- பொன்மயமான ஏப்புழை அமைந்த; *கடிமதில்* - காவலுடன்கூடியமதிலை; *நோக்கா* - பார்த்து; *வேறு விலங்கி* - செல்லும் வழியை மாற்றிக் கொண்டு; *மூதூர் இலங்கை* - பழைய ஊராகிய இலங்கையிலுள்ள; *பசும்சுடர்சோலைத்து* - பசுமையான ஒளியை உடைய; *ஆங்கு ஓர்* - சோலையின் ஒருபக்கத்தில் உள்ள; *பவளமால் வரையில்* - பவளமலையில்; *பாய்ந்தான்* - குதித்தான்.**
*அனுமன்இலங்கையின் மதிலைப் பார்த்து, வேகத்தைக் குறைத்துக்கொண்டு செல்லும் வழியை மாற்றிக்கொண்டு பவள மலையில் குதித்தான். விசும்பிடைச் செல்லும் வீரனின் காட்சியும் சிந்தனையும் (89-195 பாடல்வரை). தசும்பு - கோபுரங்களில் உள்ள கலசம். நாஞ்சில் பொன் மயமாய் இருக்கும் போலும். இலங்கை முதல் ...... கனக நாஞ்சில் என்று முன்பு கூறப் பெற்றது. (கம்ப. 4742).* ***(89)***

***4830. மேக்குறச்செல்வோன் பாய***
***வேலைமேல்இலங்கை வெற்பு***
***நூக்கு உறுத்துஅங்கும் இங்கும்***
***தள்ளுறநுடங்கும் நோன்மை,***
***போக்கினுக்குஇடையூ றாகப்***
***புயலொடுபொதிந்த வாடை***

***தாக்குறத்தகர்ந்து சாயும்***
  ***கலம்எனத்தக்கது அன்றே.***

  ***மேக்கு உறச்செல்வோன் -*** *ஆகாயத்தில் வேகமாகப்போகும் அனுமன்;* ***பாய -*** *குதித்தலினால்;* ***வேலைமேல் இலங்கை -*** *கடலின் மேல் உள்ள இலங்கை;* ***வெற்பு -*** *மலை;* ***நூக்கு உறுத்து -*** *தள்ளப்பட்டு;* ***அங்கும் இங்கும் தள்ளுற -*** *அங்கும் இங்குமாகத் தள்ளப்பட்டு;* ***நுடங்கும் நோன்மை -*** *நுடங்குகின்ற தன்மையால்;* ***போக்கினுக்கு -*** *பயணம் செய்வதற்கு;* ***இடையூறாக -*** *தடையாக;* ***புயலொடு பொதிந்த வாடை தாக்குற -*** *மேகத்துடன் கூடி வாடைக் காற்று மோத;* ***தகர்ந்து சாயும் -*** *சிதைவுபட்டு அங்கும் இங்கும் சாய்கின்ற;* ***கலம் எனத் தக்கது -*** *கப்பல் என்று கூறப் பொருந்தியது.*

  *அனுமன்பாய்வதால் தள்ளாடும் இலங்கை புயற் காற்றால் அடிபட்டு நிலைகுலையும் கப்பலைப் போன்றிருந்தது. மேக்கு - ஆகாயம். நூக்குறுத்து - தள்ளப்பட்டு அன்று, ஏ - அசை.* ***(90)***

***4831. மண்அடிஉற்று, மீது***
  ***வான்உறுவரம்பின் தன்மை***
***எண்அடி யற்றகுன்றில்***
  ***நிலைத்துநின்று எய்த நோக்கி,***
***விண்இடை உலகம்என்னும்***
  ***மெல்லியல்மேனி நோக்கக்***
    ***கண்ணடி வைத்ததுஅன்ன***
  ***இலங்கையைத் தெரியக் கண்டான்.***

*(அனுமன்)*

  ***அடிமண் உற்று-*** *கீழ்ப்பாகம் பூமியில் பொருந்தி;* ***மீதுவான் உறும் -*** *மேலே உள்ள ஆகாயத்தைப் பொருந்தியிருக்கும்;* ***வரம்பின் தன்மை -*** *எல்லையின் தன்மை;* ***எண்அடி அற்ற -*** *நினைக்க வியலாத;* ***குன்றில் -*** *பவளமலையில்;* ***நிலைத்து நின்று -*** *ஊன்றி நின்றுகொண்டு;* ***விண்ணிடை உலகம் -*** *வானத்தில் உள்ள தேவலோகம்;* ***என்னும் மெல்லியல் -*** *என்னும் பெண்ணானவள்;* ***மேனி நோக்க -*** *தன்னுடைய உடம்பைப் பார்ப்பதற்கு;* ***கண்ணடி வைத்தது அன்ன -*** *கண்ணாடி வைத்தாற்போன்று;* ***இலங்கையை -*** *இலங்கை மாநகரை;* ***எய்த நோக்கி -*** *நன்றாக ஆராய்ந்து;* ***தெரியக் கண்டான் -*** *கண்களாறப் பார்த்தான்.*

  *வரம்பு - எல்லை(சிகரம்) எய்த நோக்கி - நன்றாக ஆராய்ந்து இருவரை எய்த நோக்கி கம்ப. 375)* ***(91)***

***4832. நல்நகர்அதனை நோக்கி***
  ***நளினக் கைமறித்து 'நாகர்***
***பொன்னகர் இதனைஒக்கும்***
  ***என்பதுபுல்லிது அம்மா***
***அந்நகர் இதனில்நன்றேல்***

*அண்டத்தைமுழுதும் ஆள்வான்*
*இந்நகர் இருந்துவாழ்வான் ?*
*இது அதற்குஏது என்றான்.+*

*(அனுமன்)*

***நல்நகர்அதனை நோக்கி** - அழகிய இலங்கை மாநகரைப் பார்த்து; **நளினக்கை மறித்து** - தாமரை போன்ற கையை அசைத்து; **நாகர் பொன்நகர்-** தேவர்களின் அமராவதி நகரானது; **இதனை ஒக்கும் என்பது** - இந்தஇலங்கையைப் போன்றிருக்கும் என்று கூறுவது; **புல்லிது** - அறிவற்றது; **அம்மா** - இங்ஙனம் கூறுவது அதிசயம்; **இதனில்-** இந்த இலங்கையை விட; **அந்நகர் நன்றேல்** - அழகுடையதாயிருக்குமானால்; **அண்டத்தை முழுதும்ஆள்வான்** - அண்டங்கள் யாவற்றையும் ஆளும் இராவணன்; **இந்நகர்இருந்து வாழ்வான் ?** - இந்த இலங்கையிலிருந்து வாழ்வானோ; **அதற்கு** - இந்நகர் அதனினும்சிறந்தது என்ற கருத்துக்கு; **இது ஏது** - இது காரணம் ஆகும்; **என்றான்.***

*எல்லா அண்டங்களுக்கும்உரிய இராவணன் தலைநகராக இலங்கையைக்கொண்டதனால் அமராவதியினும் சிறப்புடைத்து என்று தெரிகிறது.அனுமானத்தில் மேற்கோளை (பிரதிக்கிளை) உறுதிப்படுத்தும் வசனத்தை ஏதுஎன்றும், ஏது வாசகம் என்றும் பக்கதன்ம வசனம் என்றும் கூறுவர். இலங்கைஅமராவதியினும் சிறந்தது என்பது மேற்கோள் (பிரதிக்னை). அதனைமெய்ப்பிக்க மேற்கொண்ட ஏது அண்டங்களுக்குத் தலைவன் இலங்கையைத்தலைநகராகக் கொண்டுள்ளான் என்பது. இங்கே ஏது என்றது ஏது வாசகத்தை.ஏது என்பது தர்க்கத்தில் பேசப்படும் ஏதுவேயன்றிச் சாதாரண காரணம்அன்று. நன்னகர் - அழகிய நகர். இங்கு நல் என்பது அழகு என்னும் பொருள் தரும். நல்லிசை யாழ் என்னும் தொடருக்கு அழகிய இசையுடைய யாழ் என்று உரை கூறப்பெற்றது (புறப்பொருள் வெ.மா. 2.2.10).* ***(92)***

***4833. 'மாண்டதோர் நலத்திற்று ஆம்'என்று***
***உணர்த்துதல் வாய்மைத்து அன்றால்;***
***வேண்டிய வேண்டின்எய்தி,***
***வெறுப்புஇன்றி விழைந்து துய்க்கும்***
***ஈண்ட அரும் போகஇன்பம்***
***ஈறுஇலது;யாண்டுக் கண்டாம் ?***
***ஆண்டது துறக்கம்;அஃதே***
***அருமறைத்துணிவும் அம்மா.+***

***வேண்டிய வேண்டின்எய்தி** - விரும்பிய பொருள்களை விரும்பியபடி பெற்று; **வெறுப்பு இன்றி** - வெறுப்பு இல்லாமல்; **விழைந்து துய்க்கும்** - விரும்பி அனுபவிக்கும்; **ஈண்டு அரும் போக இன்பம்** - இங்கே கிடைக்காத போகத்தின் இன்பமானது; **ஈறுஇலது யாண்டுக் கண்டாம்** - முடிவின்மையை எங்கு பார்க்கின்றோமே; **ஆண்டு அது துறக்கம்** - அவ்விடத் திருப்பதே சுவர்க்க நகர்; **அஃது** - அந்தக் கருத்து; **அருமறைத் துணிவும்** - அருமையான வேதங்களின் கருத்தாகும்; **(ஆதலால்) மாண்டது ஓர் நலத்திற்றாம் என்று** - மாண்புமிக்க நன்மையை உடையதாம் என்று (சுவர்க்கத்தை); **உணர்த்துதல் வாய்மைத்து அன்று** - அறிவித்தல் உண்மையொடு கூடியதன்று.*

*வேண்டியதை அடைந்துவாழும் இடம் சுவர்க்கம் என்பது வேதம் உடன்பட்ட உண்மை. (அவ்வின்பம்) இலங்கையில் உள்ளது. தேவலோகத்தில் இல்லை. ஆதலின் இலங்கையினும் அமராவதி உயர்ந்தது என்று கூறுதல் உண்மையாகாது. அமராவதியில் உள்ளவர்கள் இராவணனுக்கு அடிமைப்பணி செய்கின்றனர். அவர்கள் வேண்டியவை எட்டாப்பொருள் ஆதலின் அது துறக்கம் அன்று.* ***(93)***

***4834. உட்புலம்எழுநூறு என்பர்***
***ஓசனை;உலகம் மூன்றில்***
***தெட்புறுபொருள்கள் எல்லாம்***
***இதனுழைச்செறிந்த என்றால்***
***நுட்புலம் நுணங்குகேள்வி***
***நுழைவினர்எனினும் நோக்கும்***
***கட்புலம்வரம்பிற் றாமே ?***
***காட்சியும்கரையிற் றாமே ?***

***உள்புலம் -*** *(இலங்கையின்) அகநகரப் பகுதி;* ***எழுநூறு ஓசனை என்பர் -*** *எழுநூறு யோசனை என்று கூறுவார்கள்;* ***மூன்று உலகில் -*** *மூன்று உலகங்களிலும் (உள்ள );* ***தெட்பு உறு பொருள்கள் -*** *சிறப்புடைய பொருள்கள்;* ***எல்லாம் -*** *யாவும்;* ***இதன் உழை செறிந்த என்றால் -*** *இந்தஇலங்கையில் மிகுந்து உள்ளன என்றால்;* ***நுட்புலம் -*** *நுண்மையான அறிவும்;* ***நுணங்கு கேள்வி -*** *நுட்பமான கேள்வியும் (பெற்ற);* ***நுழைவினர் எனினும் -*** *எதனையும் ஊடுருவிப் பார்ப்பவர் என்றாலும்;* ***நோக்கும் -*** *பார்க்கின்ற;* ***கண்புல வரம்பிற்று -*** *கண் அறிவின் எல்லைக்குள்;* ***ஆமே -*** *அடங்குமா;* ***காட்சியும் கரையிற்று ஆமே -*** *காணும் அறிவும் எல்லைக்குள் அடங்குமா. இலங்கையில்மூன்று உலகப் பொருள்களும் அடங்கியிருக்கிறது என்றால் (அவ்விலங்கை) கட்புலனுக்கு அடங்குமா ? அறிவின் எல்லைக்குள் அடங்குமா?* ***(94)***

## ஊர் தேடு படலம்

*பவளமால் வரையில்தங்கிய அனுமன் இலங்கை வளங்களையெல்லாம் நோக்கி வியக்கின்றான். அன்று முன்னிருட்டுத் தோன்றுகிறது. பின்பு நிலவு உதயமாகிறது. நிலாவின் வெளிச்சத்திலே இலங்கையின் தோற்றத்தைக் கண்டு அனுமன் அதிசயப்படுகிறான். அனுமன் இலங்காதேவியைச் சந்திக்கின்றான். இலங்கா தேவி இந்நகருக்குள் போகாதே; வெளியேசெல் என்கிறாள். அவள் அனுமன்மேல் மூவிலை வேலை ஏவுகிறாள். அனுமன் அந்த வேலை முறித்து இலங்காதேவியைக் கரத்தால் தாக்குகிறான். அவள் கீழே வீழ்கிறாள். இலங்காதேவி 'அறம் வெல்லும்! பாவம் தோற்கும்! என்று சத்தியம் கூறி விண்ணுலகிற்குச் செல்கிறாள். அனுமன்,கும்பகர்ணன், வீடணன் முதலானவர்களைக் கண்டு இராவணன் அரண்மனைக்குள் புகுகிறான். அங்கு இராவணன்பால் காதல்கொண்ட உரிமை மகளிர்களையும் மண்டோதரியையும் காண்கிறான். இறுதியில் அனுமன்இராவணனைக் கண்டு சீற்றம் கொள்கிறான். தாக்க நினைக்கிறான். பிறகு எண்ணாது செய்வது பிழை என்று தன் சீற்றத்தை அடக்கிக் கொள்கிறான். இராவணன்அரண்மனையைக் கடந்து வெளிப் போந்த அனுமன், பலவாறு கூறிப் புலம்புகிறான். இறுதியில் அசோகவனத்தைக் காண்கிறான். இப் படலம் புனிதஆன்மாக்களைச் சம்சார மண்டலத்தில் குரவர் பிரான்தேடுவதைக் குறிக்கும். உலகில் பெரும்பான்மையானவர்கள் பொறிபுலன்களின்வயப்பட்டவர்கள் என்பதை இலங்கையிலுள்ள அரக்கர்களும், அரக்கியர்களும்,உரிமை மகளிர்களும் வெளிப்படையாகவும், குறிப்பாகவும் தெரிவிக்கின்றனர்.*

*இலங்கைமாநகர வருணனை*

**கலிவிருத்தம்**

***4835. பொன்கொண்டு இழைத்த? மணியைக் கொடு பொதிந்த?***
***மின்கொண்டுஅமைத்த ? வெயிலைக்கொடு சமைத்த?***
***என்கொண்டுஇயற்றிய எனத்தெரிவு இலாத-***
***வன்கொண்டல்விட்டுமதி முட்டுவன மாடம்.***

**வன்கொண்டல்விட்டு -** *வலிமையான மேகமண்டலத்தைப் பின்னே தள்ளிவிட்டு;* **மதிமுட்டுவன மாடம் -** *சந்திர மண்டலத்தை மோதுவனவான மாடிவீடுகள்;* **பொன்கொண்டு இழைத்த ? -** *பொன்னைக் கொண்டு செய்யப் பெற்றனவா (அதன்மேல்);* **மணியைக் கொடு பொதிந்த ? -** *மாணிக்கங்களைக் கொண்டு மூடப்பெற்றனவா ?;* **மின்கொண்டு அமைத்த? -** *மின்னலைக் கொண்டு அமைக்கப் பெற்றனவா (அதன்மேல்);* **வெயிலைக் கொடு சமைத்த ? -** *(சூரியனின்) வெயிலைக் கொண்டு முலாம் பூசப் பெற்றனவா;* **என்கொண்டு இயற்றிய -** *எந்தப் பொருளைக் கொண்டு இயற்றப்பெற்றன;* **எனத் தெரிவு இலாத -** *என்று ஆராய்ச்சி செய்ய முடியாதபடி உள்ளன.*

*மணியைக் கொண்டுபொதித்த என்று கூறப்பெற்றதால் அதற்கேற்ப வெயிலைக் கொண்டு பொதிந்த என்பதற்கு வெயிலைக் கொண்டு முலாம் பூசப் பெற்றது என்று கூறப்பெற்றது. மாடம் - உப்பரிகை அமைந்த வீடு. கொண்டல், மதி என்பவை*

*ஆகுபெயராக அந்த அந்த மண்டலத்தை உணர்த்தின. இப்பாடல் முதல் 136வரை அனுமனின் எண்ண ஓட்டம். கவியின் மொழியன்று.* ***(1)***

***4836.***

***நாகாலயங்களொடு நாகர் உலகும், தம்***
***பாகு ஆர்மருங்குதுயில்வென்ன உயர்பண்ப;***
***ஆகாயம்அஞ்சஅகல் மேருவை அனுக்கும்***
***மாகால் வழங்குசிறு தென்றல்என நின்ற.***

***நாகாலயங்களொடு-*** *நாகங்கள் வாழும் பாதாள உலகமும்;* ***நாகர் உலகும் -*** *தேவர்கள் வாழும் விண்ணுலகமும்;* ***தம் -*** *தம்முடைய;* ***பாகு ஆர்மருங்கு -*** *அழகு நிரம்பிய பக்கத்தில்;* ***துயில்வென்ன -*** *தங்குவன என் றுகூறும்படி;* ***உயர்பண்ப -*** *உயரிய இயல்பைப் பெற்ற மாடங்கள்;* ***ஆகாயம்அஞ்ச -*** *விண்ணுலகம் அஞ்சும்படியாக;* ***அகல் மேருவை அனுக்கும் -*** *பரந்த மேருமலையை வருத்துகின்ற;* ***மாகால் -*** *பெரிய சண்ட மாருதமும்;* ***வழங்கு சிறு தென்றல் -*** *(மெல்ல) இயங்குகின்ற தென்றல் காற்று;* ***என நின்ற-*** *என்று கூறும்படி தலைநிமிர்ந்து நிற்பன. மாடங்களின்கீழ்ப் பகுதியில் பாதாளவுலகமும், மேற்பகுதியில் விண்ணுலகமும் தங்கியுள்ளன என்று கூறும்படி நிலவறைகளையும் மேல் உப்பரிகைகளையும் பெற்றுள்ளது என்பது கருத்து. மாகால் தென்றல்என நின்ற என்றதனால் மாடங்களின் உறுதி தெரிகிறது. பண்ப - பண்பை உடைய மாளிகைகள் - எழுவாய். நின்ற - பலவின்பால் வினைமுற்று. பயனிலை. பண்பநின்ற என்று கூட்டிப் பார்க்கவும்.* ***(2)***

***4837. மாகாரின் மின்கொடி மடக்கினர் அடுக்கி;***
***மீகாரம்எங்கணும் நறுந்துகள் விளக்கி***
***ஆகாய கங்கையினைஅங்கையினின் அள்ளிப்***
***பாகுஆய;செஞ்சொலவர் வீசபடு காரம்.***

***செஞ்சொலவர் -*** *செவ்வியசொற்களைப் பேசும் மகளிர்;* ***மாகாரின் -*** *பெரிய மேகத்தில் உள்ள;* ***மின்கொடி -*** *மின்னல் கொடிகளை;* ***மடக்கினர் அடுக்கி -*** *மடக்கி ஒன்றன்மேல் ஒன்றாக வைத்து அடுக்கி;* ***மீகாரம் எங்கணும் -*** *உயர்ந்த மாளிகையின் எல்லாப் பகுதியினும்(உள்ள);* ***நறுந்துகள் விளக்கி -*** *நறுமணம் வீசும்மகரந்தக் குப்பைகளைத் துடைத்து (பிறகு);* ***அங்கையினில் ஆகாயகங் கையினை -*** *கைகளால் ஆகாய கங்கைநீரை;* ***அள்ளி -*** *முகந்து எடுத்து;* ***வீசுபடுகாரம் -*** *தெளிக்கின்ற திறமை;* ***பாகுஆய -*** *அழகாக உள்ளது. படுகாரம் - பாகாயஎனக்கூட்டுக. படுகாரம் என்பதற்குப் பெரிய வீடு என்று பொருள்கூறி அது அழகாக உள்ளது என்றும் கூறுவர். மேல்தளங்களில் உள்ள குங்குமத் துகள்களை விளக்கி, ஆகாய கங்கை நீரைக் கையாலே முகந்து தெளிக்கும் சாமர்த்தியம் அழகாயது என்பது பழைய உரை.* ***(3)***

**கலிநிலைத்துறை**

***4838. பஞ்சிஊட்டிய, பரட்டுஇசைக் கிண்கிணிப் பதுமச்***
***செஞ்செவிச்செழும் பவளத்தின் கொழுஞ்சுடர் சிதறி***

***மஞ்சின் அஞ்சனநிறம் மறைத்து, அரக்கியர் வடித்த***
***அம்சில்ஓதியோடு உவமைய ஆக்குற அமைவ.***

***பஞ்சி ஊட்டிய -*** *செம்பஞ்சுக் குழம்பு பூசப்பெற்றதும்;* ***பரட்டு இசை கிண்கிணி -*** *கெண்டைக்காலில் அமைந்த கிண்கிணியோடு கூடியதும் (ஆகிய);* ***பதுமம் -*** *தாமரை போன்ற பாதங்களின்;****செஞ்செவி -*** *செம்மையானஅழகிய;* ***செழும் பவளத்தின் -*** *செழிப்பான பவளம் போன்ற விரல்களின்;* ***கொழும்சுடர் சிதறி -*** *ஒளியானது பரவி;* ***மஞ்சின் -*** *மேகத்தின்;* ***அஞ்சன நிறம் மறைத்து -*** *மையை ஒத்த கரிய நிறம்மறையச் செய்து;* ***அரக்கியர் வடித்த -*** *அரக்கியர்கள் ஒழுங்கு செய்த;* ***அம்சில் ஓதியோடு -*** *அழகிய மென்மையான (சிவந்த) கூந்தலுடன்;* ***உவமைய ஆக்குற -*** *ஒப்புமையாகச் செய்ய;* ***அமைவ -*** *பொருந்தியிருப்பன.*

*மகளிரின் கால்விரலின் ஒளிபட்டு கரிய மேகம் அரக்கியரின் சிவந்த கூந்தலின் நிறத்தைப் பெற்றது. பரடு அமை கிண்கிணி - கெண்டைக் காலில் அமைந்த கிண்கிணி; பரடுபுல்லிக் கிண்கிணி சிலம்பொடு ஆர்ப்ப (சிந்தாமணி - இலக்கணை 98) சுடர் - எழுவாய். சில் ஓதி - மென்மையான கூந்தல். மா - விளம் - விளம் - மா எனும் சீர்களை முறையே பெற்றுவரும் இக் கலித்துறை. இத்தகைய பாடல்கள் 1223 இந்நூலில் உள்ளன.* ***(4)***

***4839. நானநாள்மலர்க் கற்பக நறுவிரை நான்ற***
***பானம் வாய்உறவெறுத்த, தான்ஆறுடைப் பறவை***
***தேன்அவாம்விரைச் செழுங் கழுநீர்த் துயில்செய்ய***
***வானயாறுதம்அரமியத் தலம்தொறும் மடுப்ப.***

***நாள் -*** *அன்று பூத்த;* ***நான மலர்க் கற்பகம் -*** *மணத்துடன் கூடிய மலர்களைப் பெற்ற கற்பக மரங்களின்;* ***நறுவிரை நான்ற பானம் -*** *நல்ல மணத்துடன் பெருகிய தேன்;* ***வாய் உற வெறுத்த -*** *தம்முடைய வாயில் பெருக (உண்டு) தெவிட்டிய;* ***ஆறு தாள் உடைப் பறவை -*** *ஆறு கால்களைப் பெற்ற வண்டுகள்;* ***தேன் அவாம் -*** *வேறு தேனை உண்ண விரும்பி;* ***விரை செழுங்கழுநீர் -*** *மணத்துடன் கூடிய செங்கழுநீர்ப் பூவில்;* ***துயில் செய்ய -*** *தங்குதலை மேற்கொள்ளும்படி;* ***வான யாறு -*** *ஆகாய கங்கையானது;* ***தம் அரமியத் தலந்தொறும் -*** *அவரது நிலா முற்றங்கள்தோறும்;* ***மடுப்ப -*** *பாயப் பெற்றன.*

*பானம் வாயுறஎன்பதற்கு உண்ட தேன் வாய்வழியே வெளிப்பட என்றும் கூறலாம்.* ***(5)***

***4840. குழலும் வீணையும் யாழும் என்று இனையன குழைய***
***மழலை மென்மொழிகிளிக்கு இருந்து அளிக்கின்ற மகளிர்***
***சுழலும் நல்நெடுந்தடமணிச் சுவர்தொறும் துவன்றும்***
***நிழலும்தம்மையும் வேற்றுமை தெரிவு அரு நிலைய***

*(இலங்கை மாடங்கள்)*

***குழலும் வீணையும்யாழும் என்று இனையன குழைய -*** *குழல் வீணை யாழ் என்று கூறப்படுகின்ற இப்படிப்பட்ட இசைக் கருவிகள் மனம் நெகிழ;* ***மென் மழலை மொழி -*** *மென்மையான மழலைச் சொற்களை;* ***இருந்து -*** *வீற்றிருந்து;* ***கிளிக்கு அளிக்கின்ற மகளிர் -*** *கிளிகட்குச் சொல்லிக் கொடுக்கும் பெண்கள்;* ***சுழலும் -*** *சுற்றிலும் உள்ள;* ***நெடும் நல் -*** *பெரிய நல்ல;* ***தடமணி சுவர்தொறும் -*** *பெரிய மணிகள் பதிக்கப்பெற்ற சுவர்தோறும்;* ***துவன்றும் நிழலும் -*** *செறிந்துள்ள நிழலையும்;* ***தம்மையும் -*** *தங்களையும்;* ***வேற்றுமை தெரிவு அரு நிலைய -*** *வேறுபாடு உணரமுடியாத நிலைமை உடையன. பெண்கள்தம்மையும் தம்முடைய நிழலையும் பிரித்து அறிய முடியாதபடி உள்ளன. மாடங்கள் மகளிர் தெரிவரும் நிலையில் உள்ளன. சுழலும் - சுற்றிலும் உள்ள.* ***(6)***

## *4841. இனையமாடங்கள் இந்திரற்கு அமைவர எடுத்த*
## *மனையின்மாட்சிய என்னின், அச் சொல்லும் மாசுண்ணும்;*
## *அனையதாம்எனின்அரக்கர்தம் திருவுக்கும் அளவை*
## *நினையலாம்;அன்றி உவமையும் அன்னதாய் நிற்கும்.*

***இனைய மாடங்கள்-*** *இப்படிப்பட்ட மாடிவீடுகள்;* ***இந்திரற்கு அமைவர -*** *இந்திரன் இருப்பதற்கு ஏற்ப;* ***எடுத்த மனையின் -*** *கட்டப்பெற்ற அரண்மனையின்;* ***மாட்சிய என்னின் -*** *சிறப்புடையன என்று கூறினால்;* ***அச்சொல்லும் மாசுண்ணும் -*** *அச்சொல்லும் குற்றப்படும்;* ***அனையது ஆம் எனின் -*** *அவ்வாறு கூறுவதே குற்றம் என்றால்;* ***அரக்கர்தம் திருவுக்கும் -*** *அரக்கர்களின் செல்வத்துக்கும்;* ***அளவை -*** *எல்லையை;* ***நினையலாம் அன்றி -*** *மனத்தாலே எண்ணலாம் அன்றி;* ***உவமையும் -*** *(அதற்குக் கூறப்படும்) உவமானமும்;* ***அன்னதாய் நிற்கும் -*** *' அந்த மாட்சிய' என்னும் சொல்லைப் போல் மாசுபட்டுப் போகும்.*

*சொல்லுக்கு மாசாவது 'ஏற்பக் கூறாமல்' ஏதோ கூறல்.* ***(7)***

## *4842. மணிகள்எத்துணை பெரியவும், மால்திரு மார்பின்*
## *அணியும்காசினுக்கு அகன்றன உளஎனல் அரிதால்;*
## *திணியும்நல்நெடும் திருநகர், தெய்வமாத் தச்சன்*
## *துணிவின்வந்தனன், தொட்டுஅழகு இழைத்தஅத் தொழில்கள்*

***எத்துணை பெரியமணிகள் -*** *எவ்வளவு பெரியமாணிக்கங்களும்;* ***மால் -*** *திருமால்;* ***திருமார்பின் அணியும் -*** *அழகிய மார்பில் அணிந்துள்ள;* ***காசினுக்கு அகன்றன உள எனல் -*** *கவுத்துவம் என்னும் மணியைவிடச் சிறந்துள்ளவை உள்ளன என்று கூறுவது இல்லை; (அதைப்போல்)* ***தெய்வமாத் தச்சன் -*** *தேவதச்சன் (மயன்);* ***துணிவின் வந்தனன் -*** *உறுதியுடன் வந்து;* ***தொட்டு அழகு இழைத்த -*** *(பிறரை ஏவாமல்) தன் கையில் தொட்டு;* ***அத்தொழில்கள் -*** *செய்த வேலைப்பாடுகள்;* ***நல்நெடுந்திருநகர் -*** *நல்ல பெரிய இலங்கையில்;* ***திணியும் -*** *(ஒப்பற்றுச்) செறிந்திருக்கும்.*

*அதுபோல் எனும்உவமஉருபு மறைந்துள்ளமையால் எடுத்துக் காட்டுவமையணி. காசு - மணி. தெய்வமாத்தச்சன் - மயன். விசுவகன்மன் என்றும் கூறலாம். இந்தக் கவி*

*'அன்மயப் பொருள்' என்பது பழைய உரை. அன்மயம் - கொண்டுகூட்டுப் பொருள்கோள்.* ***(8)***

## *4843. மரம்அடங்கலும் கற்பகம்; மனைஎலாம் கனகம்;*
## *அரம டந்தையர்சிலதியர் அரக்கியர்க்கு; அமரர்*
## *உரம்மடங்கிவந்து உழையராய் உழல்குவர்; ஒருவர்*
## *தரம் அடங்குவதுஅன்றுஇது; தவம்செய்த தவமால்.*

***மரம்அடங்கலும் -*** *(இலங்கையில்) எல்லா மரங்களும்;* ***கற்பகம் -*** *கற்பக மரங்கள்;* ***மனை எலாம் -*** *எல்லா வீடுகளும்;* ***கனகம் -*** *பொன்னால் கட்டப்பட்டவை;* ***அரக்கியர்க்கு*** *- அரக்கப் பெண்களுக்கு;* ***சிலதியர் அரமடந்தையர் -*** *தொண்டு புரிபவர் தேவமகளிர்;* ***(அரக்கர்களுக்கு) அமரர்-*** *தேவர்கள்;* ***உரம்மடங்கி வந்து -*** *வலிமை ஒடுங்கி (அரக்கர் வீட்டுக்கு)வந்து;* ***உழையராய் உழல்குவர் -*** *பணியாளராய் வருந்துபவர்கள்;* ***இது -*** *இந்தச்சிறப்புகள்;* ***ஒருவர் தரம் அடங்குவது அன்று -*** *ஒருவனுடைய தகுதியால் வந்து சேர்வது அன்று;* ***தவம் செய்த -*** *தவங்கள் எல்லாம் கூடிச் செய்த;* ***தவமால் -*** *தவத்தின் பயனாகும். தரம் - தகுதி.ஒருவர் தகுதியால் பெற்ற சிறப்புகள் அளவுபட்டிருக்கும். இது அளவு கடந்திருத்தலின் தவத்தின் பயன் என்று கூறப்பெற்றது.*

*தவம் செய்ததவம் - நல்வினைகளால் உண்டானதவம். தவமும் தவம் உடையார்க்கு ஆகும். என்னும் குறளுக்கு மணக்குடவர் தவம் செய்தலும் முன்பு நல்வினை செய்தார்க்கு வரும் என்று கூறினார்.*

*பெரும்பான்மையானபாடம் 'தவம் செயத் தகுமால்' என்பது. அப்பாடம் அரக்கர் தவத்தால் சிறப்புப்பெற்றனர். ஆகையால்''தவமே செய்யத் தரும்' என்று பொருள் தரும்.* ***(9)***

## *4844. தேவர்என்பவர் யாரும் இத்திரு நகர்க்கு இறைவற்கு*
## *ஏவல் செய்பவர்,செய்கிலாதவர் எவர் என்னின்,*
## *மூவர் தம்முளும்ஒருவன் அங்கு உழையனா முயலும் !*
## *தாவில் மாதவம்அல்லது பிறிதொன்று தகுமோ ?*

***திருநகர்க்குஇறைவற்கு -*** *இந்த இலங்கைஅரசனுக்கு;* ***தேவர் என்பவர் யாரும் -*** *தேவர் என்று சொல்லப்படுபவர் அனைவரும்;* ***ஏவல் செய்பவர் -*** *அடிமைப் பணி புரிவோர்;* ***(ஏவல்) செய்கிலாதவர் எவர் என்னின் -*** *(அவனுக்கு) பணிபுரியாதவர் எவர் என்றால்;* ***மூவர் தம்முளும் -*** *மும்மூர்த்திகளில்;* ***ஒருவன் -*** *ஒருவனாகிய பிரமதேவன்;* ***அங்கு -*** *அந்த இலங்கையில்;* ***உழையனா முயலும் -*** *பணிசெய்பவனாக முயல்கின்றான்;* ***தா இல் மாதவம் அல்லது -*** *குற்றமற்ற பெருந்தவம் அல்லது;* ***பிறிது ஒன்று தகுமோ -*** *வேறு ஒன்று செய்தற்குத் தகுதியுடையது ஆகுமோ.*

*உழையன் -அருகிருப்போன்; ஏவல்கூவல் செய்பவன். தேவரும் பிரமதேவனும் ஏவலர் ஆனது மாட்சியால் என்பதால் தவத்தால் எதையும் பெறலாம் என்பது விளங்கும். தவமே செய்யத்தக்கது என்பதாம்.* ***(10)***

***4845. ‘போர் இயன்றன தோற்ற’ என்று இகழ்தலின்
புறம்போய்
நேர் இயன்ற வன்திசைதொறும் நின்றமா நிற்க
ஆரியன்தனிஐங்கரக் களிறும், ஓர் ஆழிச்
சூரியன் தனித்தேருமே இந்நகர் தொகாத.***

**போர் இயன்றன -** *போரைச்செய்ய உடன்பட்டு;* **தோற்ற என்று -** *தோற்றுப் போயின என்று;* **இகழ்தலின் -** *(இராவணன்) அலட்சியம்செய்தமையால்;* **புறம்போய் -** *வெளியே சென்று;* **நேர் இயன்ற -** *எதிரெதிராக உள்ள;* **வன்திசை தொறும் -** *வலிமைமிக்க திசைகள் தோறும்;* **நின்றமா -** *நிற்கின்ற யானைகள்;* **நிற்க -** *ஒதுங்கி நிற்க;* **இ நகர் தொகாத -** *இந்நகரைச் சாராதவைகள் (யானைகளில்);* **ஆரியன் -** *(யானைகளில்) சிவபிரான் பெற்றெடுத்த;* **தனி ஐங்கரக் களிறும் -** *ஒப்பற்ற ஐந்து கரங்களைப்பெற்ற விநாயகராகிய யானையும்;* **சூரியன் -** *தேர்களில் சூரியனின்;* **ஓர்ஆழித் தனித்தேருமே -** *ஒரு சக்கரத்தையுடைய ஒப்பற்ற தேருமே யாகும்.*

*ஐங்கரக் களிறு -விநாயகப் பிரான், ஆரியன் என்றது தட்சிண மூர்த்தியான சிவபிரானை. பாசமாம் பற்றறுத்துப் பாரிக்கும் ஆரியன் என்பார் மணிவாசகர். ஆரியன் சாஸ்தா என்றும் கூறலாம். சாஸ்தாவின் வாகனம் யானை.* ***(11)***

***4846. வாழும் மன்னுயிர் யாவையும் ஒருவழி வாழும்
ஊழி நாயகன்திருவயிறு ஒத்துளது, இவ்வூர்;
ஆழி அண்டத்தின்அருக்கன்தன் அலங்கு தேர்ப்புரவி
ஏழும் அல்லன, ஈண்டுஉள குதிரைகள் எல்லாம்.***

**இவ்வூர் -** *இந்தஇலங்கை மாநகர்;* **வாழும் மன்னுயிர் யாவையும் -** *உலகில் வாழ்கின்ற உயிர்கள் எல்லாம்;* **ஒருவழி வாழும் -** *ஓரிடத்தில் கூடி வாழ்கின்ற;* **ஊழி நாயகன் -** *ஊழிமுதல்வனான திருமாலின்;* **திருவயிறு ஒத்துளது -** *திருவயிற்றை ஒத்திருக்கிறது;* **ஆழி அண்டத்தின் -** *வட்டமான அண்டத்திலுள்ள;* **அருக்கன்தன் -** *சூரியனின்;* **அலங்குதேர் -** *அசைகின்ற தேரில் பூட்டப்பெற்ற;* **புரவி ஏழும் அல்லன -** *ஏழு குதிரைகளைத் தவிர (மற்றைய);* **குதிரைகள் எல்லாம் -** *எல்லாக் குதிரைகளும்;* **ஈண்டுஉள -** *இங்கே உள்ளன.*

*ஆழி -வட்டம்* ***(12)***

***4847.. தழங்குபேரியின் அரவமும், தகைநெடுங் களிறு
முழங்கும் ஓதையும்மூரிநீர் முழக்கொடு முழங்கும்;
கொழுங் குழல்புதுக் குதலையர் நூபுரக்குரலின்
வழங்குபேர் அருஞ்சதிகளும் வயின்தொறும் மறையும்.***

**தழங்கு -** *ஒலிக்கும்;* **பேரியின் அரவமும் -** *முரசின் ஒலியும்;* **தகை நெடுங்களிறு -** *தகுதிமிக்க யானைகள்;* **முழங்கும் ஓதையும் -** *முழங்குகின்றமுழக்கமும்;* **மூரிநீர் முழக்கொடு -** *கடலின் முழக்கத்துக்குச் சமமாக;* **முழங்கும் -** *ஒலிக்கும்;* **கொழும் குழல் -** *வளமான புல்லாங்குழல்போல;* **புதுக்குதலையர் -** *புதுமையாக மழலைமொழி பேசும் மகளிர் அணிந்த;* **நூபுரக் குரலின் -** *சிலம்பின் ஓசையினாலே;* **பேர் வழங்கும் -**

*பெருமை தருகின்ற;* ***அரும் சதிகளும் -*** *அருமையான தாள ஒத்துக்கள்கூட;* ***வயின்தொறும் -*** *இடங்கள் தோறும்;* ***மறையும் -*** *ஒடுங்கிப் போகும்.*
***(13)***

***4848. மரகதத்தினும் மற்றுஉள மணியினும் வனைந்த***
***குரக தத்தடந்தேரினம் அவைபயில் கொட்டில்***
***இரவி வெள்கநின்று இமைக்கின்ற இயற்கைய***
***என்றால்***
***நகரம் ஒக்குமால்நல்நெடுந் துறக்கம், இந்நகர்க்கு.***

***மரகதத்தினும் -*** *மரகதக்கற்களாலும்;* ***மற்றுள -*** *வேறுவகையாக உள்ள;* ***மணியினும் -*** *மாணிக்கங்களாலும்;* ***வனைந்த -*** *அமைக்கப்பட்ட;* ***குரகதத் தடந்தேர் இனம் -*** *குதிரைகளால் இயங்கும் தேர்க்கூட்டமாகிய;* ***அவைபயில் -*** *அவைகள் தங்கியிருக்கும் தேர்ச்சாலைகள்;* ***இரவி -*** *சூரியனும்;* ***வெள்க நின்று -*** *நாணம் அடையும்படி இருந்து;* ***இமைக்கின்ற இயற்கைய -*** *ஒளிவீசும் தன்மையுடையன;* ***என்றால் -*** *என்று கூறப்பெறுமானால்;* ***இந்நகர்க்கு -*** *இந்த இலங்கைக்கு (ஒப்புக்கூறின்);* ***நல்நெடும் துறக்கம் -*** *நல்லபெரிய சுவர்க்கம்;* ***நரகம் ஒக்கும் -*** *நரகமே போன்றிருக்கும்.*

*இமைத்தல் - ஒளி வீசுதல்* ***(14)***

***4849. திருகுவெஞ்சினத்து அரக்கரும் கருநிறம் தீர்ந்தார்;***
***அருகு போகின்ற திங்களும் மறுஅற்றது;-அழகைப்***
***பருகும் இந்நகர்த் துன்ஒளி பாய்தலின்;- பசும்பொன்***
***உருகுகின்றதுபோன்று உளது; உலகுசூழ் உவரி.***

***அழகைப் பருகும் -*** *உலகஅழகையெல்லாம் தன்பால் அடக்கும்;* ***இந்நகர் -*** *இந்த இலங்கையில்;* ***துன்ஒளி -*** *நிரம்பிய ஒளியானது;* ***பாய்தலின் -*** *(எங்கும்) பரவுதலாலே;* ***திருகும் -*** *மாறுபட்ட;* ***வெஞ்சினத்து அரக்கரும் -*** *கொடுங்கோபத்தைஉடைய அரக்கர்களும்;* ***கருநிறம் தீர்ந்தார் -*** *கரிய நிறம் நீங்கப் பெற்றனர்;* ***அருகு -*** *பக்கத்தில்;* ***போகின்ற திங்களும் -*** *செல்கின்ற சந்திரனும்;* ***மறு அற்றது -*** *(தன்பால்பெற்ற) களங்கம் நீங்கியது;* ***உலகு சூழ் உவரி -*** *உலகைச் சுற்றியுள்ள கருங்கடல்;* ***பசும்பொன் -*** *மாற்றுயர்ந்த பொன்னானது;* ***உருகுகின்றது போன்று உளது -*** *உருகி (அலையடிப்பது) போன்றுள்ளது.*

*அருகு பேர்கின்றதிங்கள் என்னும் பாடம் சிறக்கும். பேர்கின்ற என்பது போகின்ற என்றும் படிக்கப்படும். பேர்தல் - நிலை குலைதல். உவரி - கருங்கடல், பசும்பொன் - மாற்று உயர்ந்த பொன் (புறம் 141).* ***(15)***

***4850. அண்டம்முற்றவும் வீங்கு இருள் அகற்றி நின்று***
***அகல்வான்***
***கண்ட அத்தனிக்கடிநகர் நெடுமனை; கதிர்கட்கு***
***உண்டு அவ்ஆற்றல் என்று உரைப்பரிது; ஒப்பிடின்***

***தம்முள்***
***விண்டவாய்ச்சிறு மின்மினி என்னவும் விளங்கா.***

***அண்டம் முற்றவும்-*** *எல்லாஅண்டங்களிலுமுள்ள;* ***வீங்கு இருள் அகற்றி நின்று -*** *நிரம்பிய இருளைப் போக்கிநின்று;* ***அகல்வான்கண்ட -*** *விரிந்த ஆகாயத்தை அளாவிய;* ***அத்தனிக்கடிநகர் -*** *அந்த காவலுடன் கூடிய இலங்கையிலுள்ள;* ***நெடுமனை -*** *பெரிய மாளிகை வீடுகள்;* ***ஆற்றல் -*** *அந்தப் பெரும் சக்தி;* ***கதிர்கட்கு -*** *(பல இடங்களில் திரியும்) பன்னிரண்டு சூரியர்களுக்கு;* ***உண்டு என்று உரைப்பரிது -*** *உள்ளது என்று கூறவியலாது;* ***ஒப்பிடின் -*** *(கதிர்களை நகர மனையுடன்) ஒப்பிட்டுக் கூறினால்;* ***தம்முன் -*** *தங்கட்கு முன்னே;* ***விண்டவாய் -*** *தோற்றுப் போனவாய்;* ***சிறு -*** *சிறிய;* ***மின்மினி என்னவும் -*** *மின்மினியைப் போலக்கூட;* ***விளங்கா -*** *ஒளிவிட்டு விளங்கா.*

*கவிச்சக்கரவர்த்தி புறப்பாட்டைக் கருதினார் போலும் (புறம்5)* ***(16))***

***4851. தேனும்சாந்தமும் மான்மதச் செறிநறுஞ் சேறும்***
***வான நாள்மலர்க்கற்பக மலர்களும் வயமாத்***
***தான வாரியும்நீரொடு மடுத்தலின், தழீஇய***
***மீனும் தானும்ஓர் வெறிமணம் கமழும் அவ்வேலை.***

***தேனும்சாந்தமும் -*** *தேனையும் சந்தனத்தையும்;* ***செறிநறும் -*** *நறுமணம் செறிந்துள்ள;* ***மான்மதச் சேறும் -*** *கஸ்தூரிக் குழம்பையும்;* ***வான நாள் -*** *வானிலுள்ள நட்சத்திரங்களைப்போல;* ***மலர் -*** *மலர்ந்த;* ***கற்பகமலர்களும் -*** *கற்பகப் பூக்களையும்;* ***வயமா -*** *வெற்றி பெற்ற யானைகளின்;* ***தானவாரியும் -*** *மதவெள்ளத்தையும்;* ***நீரொடு மடுத்தலின் -*** *நதியின் நீருடன் உட்கொண்ட காரணத்தால்;* ***அவ்வேலை -*** *அக் கடலானது;* ***தழீஇய மீனும் -*** *தன்னைச் சார்ந்து வாழ்கின்ற மீன்களும்;* ***தானும் -*** *(கடலாகிய) தானும்;* ***ஓர் வெறிமணம் கமழும் -*** *ஒப்பற்ற தெய்வமணம் பெறும்.*

*கடலானது, தேன்முதலாகிய பொருள்களை நதியில் நீருடன் மடுப்பதால் மீனும் தானும் தெய்வமணம் பெற்றது. வெறி - தெய்வத்தன்மை - வெறியுறு சிறப்பு (தொல் - பொருள்) நீர் என்றது நதியை. நீர்ப்பிணக்கு, நிலப்பிணக்கு என்னும் தொடர் காண்க - (தனிச்சுலோகி - கிட்கிந்தா) நாள் - நட்சத்திரம். மலர் என்பது கற்பகத்தைச் சாராது மலரைச் சார்ந்தது, தழாத்தொடர்.* ***(17)***

***4852. தெய்வத்தச்சனைப் புகழ்துமோ ? செங்கண்வாள்***
***அரக்கன்***
***மெய்ஒத்துஆற்றிய தவத்தையே வியத்துமோ ?***
***விரிஞ்சன்***
***ஐயப்பாடு இலாவரத்தையே மதித்துமோ ? அறியாத்***
***தொய்யல்சிந்தையேம், யாவரை யாதென்று துதிப்போம்.***

***தெய்வத்தச்சனைப புகழ்துமோ ? -*** *(இந் நகரை அமைத்த) தேவசிற்பியைப் புகழ்வோமா..?;* ***செங்கண்வாள் அரக்கன் -*** *சிவந்த கண்களையும் வாளையும் பெற்ற இராவணன்;* ***மெய் ஒத்து -*** *சத்தியத்துடன் ஒன்றுபட்டு;* ***ஆற்றிய -*** *செய்த;* ***தவத்தையே -***

*தவம் ஒன்றையே;* ***வியத்துமோ*** *- மதிப்போமா?* ***விரிஞ்சன்*** *- பிரம்மதேவன் (வழங்கியது);* ***ஐயப்பாடு இலா*** *- சந்தேகத்துக்கு இடம் இல்லாத;* ***வரத்தையே*** *- வரத்தை மட்டும்;* ***மதித்துமோ*** *- மதிப்போமா?* ***அறியா*** *- (ஒன்றைத் தேர்ந்து புகழ்வதை) அறியாத;* ***தொய்யல் சிந்தையேம்*** *- தளர்ந்த மனத்தைப் பெற்றயாம்;* ***யாவரை*** *- தச்சன், பிரம்மன் - இராவணன் என்னும் இவருள் எவரை;* ***யாதென்று*** *- எவ்வாறு;* ***துதிப்போம்*** *- புகழ்வோம்.*

*'யாவரை யாதுஎன்று துதிப்போம்' என்னும் பாடம் நிரம்பவுள்ளது. எவ்வகை துதிப்போம் என்னும் பாடம் சிறந்தது என்பது என் கருத்து. யாவரை - யாது என்று அமைத்தால் திணை வழுவுள்ளது.* ***(18)***

## *4853. வானும் நிலனும் பெறுமாறு, இனி மற்றும் உண்டோ---*
## *கானும்பொழிலும், இவைசெங் கனகத்தினாலும்*
## *ஏனைம் மணியாலும்இயற்றிய வேனும், யாவும்*
## *தேனும் மலரும்கனியும் தரச்செய்த செய்கை ? **

***கானும் பொழிலும்இவை*** *- காடுகளும் சோலைகளும் ஆகிய இப்பொருள்கள்;* ***செம் கனகத்தினாலும்*** *- செந்நிறமுடைய பொன்னாலும்;* ***ஏனைய மணியாலும்*** *- மற்றமணியாலும்;* ***இயற்றியவேனும்*** *- செய்யப்பெற்றிருந்தாலும்;* ***யாவும்*** *- (செயற்கையாக அங்கே உள்ள) எல்லாமரங்களும்;* ***தேனும்*** *- தேனையும்;* ***மலரும்*** *- மலரையும்;* ***கனியும்*** *- பழங்களையும்;* ***தர*** *- வழங்கும்படி;* ***செய்த செய்கை*** *- அமைத்த வினைத்திட்பத்தை;* ***வானும்*** *- விண்ணுலகமும்;* ***நிலமும்*** *- மண்ணுலகமும்;* ***பெறும் ஆறு*** *- அடையும் வழிகள் (தவத்தைத்தவிர);* ***இனிமற்றும் உண்டோ*** *- இனி வேறும் உள்ளதா.*

*மற்றும் உண்டோஎன்பதில் உள்ள உம்மை, அசை. காமக்கடல் மற்றும் உண்டோ - என்னும் குறளில் பரிமேல் அழகர் 'உம்' அசை என்பார். பெறும் ஆறு மற்றுண்டோ எனச் சேர்க்க. பெறும் வகை உண்டோ என்றும் (வை.மு.கோ). பெறும் வழி வேறு எங்கேனும் உண்டோ (அடை - பதி) என்றும் கூறப்பெறும்.* ***(19)***

*தவத்தை வியந்தது*

## *4854. நீரும் வையமும் நெருப்பும் மேல்நிமிர் நெடுங்காலும்*
## *வாரி வானமும்வழங்கல ஆகும். தம் வளர்ச்சி*
## *ஊரின் இந்நெடுங்கோபுரத்து உயர்ச்சிகண்டு உணர்ந்தால்*
## *மேரு எங்ஙனம்விளர்க்குமோ, முழுமுற்றும் வெள்கி ?*

***ஊரின்*** *- இந்த இலங்கைமாநகரின்;* ***இ*** *- இந்த;* ***நெடுங்கோபுரத்து*** *- நீண்ட கோபுரத்தினுடைய;* ***உயர்ச்சி கண்டு உணர்ந்தால்*** *- வளர்ச்சியைப் பார்த்து அறிந்தால்; (அறிஞர்களால்)* ***நீரும் வையமும் நெருப்பும்*** *- தண்ணீரும் மண்ணும் தீயும்;* ***மேல்நிமிர்*** *- மேல்நோக்கி வீசும்;* ***நெடுங்காலும்*** *- பெருங்காற்றும் என்று கூறப்பெற்ற பூதங்களின்;* ***வாரிவானமும்*** *- பெரும்பரப்பையுடைய ஆகாயமும்;* ***தம் வளர்ச்சி*** *- சிறப்புக்கள்;* ***வழங்கல ஆகும்*** *- கொண்டாடப்படாமல் போகும்; (இதையறிந்தால்)* ***மேரு*** *-மகாமேரு*

*மலையானது;* ***முழுமுற்றும் வெள்கி -*** *(தன்னுடைய) உடல் முழுவதும் நாணத்தால் சுருங்கி;* ***எங்ஙனம் விளர்க்குமோ -*** *எப்படி வெளுத்துப் போகுமோ.*

*வையம் -பிருதிவி (மண்) வழங்குதல் - கொண்டாடப்படுதல். 'வழங்கு தாரவன்' என்னும் தேவரின் தொடருக்கு நச்சர் உலகம் கொண்டாடப்படுதலின் வழங்குதாரவன் என்றார், என விளக்கினார். (சிந்-2504) அவற்றின் வளர்ச்சி வழக்கு வீழ்ந்தனவாகும் என்றும் கூறலாம்.* ***(20)***

***4855. முன்னம்யாவரும் 'இராவணன் முனியும் என்று எண்ணி***
***பொன்னின்மாநகர் மீச்செலான்கதிர்' எனப் புகல்வார்-***
***கன்னி ஆரையின்ஒளியினில் கண்வழுக்குறுதல்***
***உன்னிநாள்தொறும் விலங்கினன் போதலை உணரார்.***

***முன்னம் -*** *முன்பு;* ***யாவரும் -*** *எல்லாப் புலவர்களும்;* ***கதிர் -*** *(ஆயிரம்) கதிர்களையுடைய சூரியன்;* ***இராவணன் -*** *(அழப்பண்ணும்) இராவணன்;* ***முனியும் என்று எண்ணி -*** *கோபிப்பான் என்று பயந்து கொண்டு;* ***பொன்னின் மாநகர் மீ -*** *பொன்மயமான இலங்கைக்கு மேலே;* ***செலான் -*** *போக மாட்டான்;* ***எனப்புகல்வர் -*** *என்று கூறுவார்கள்; (அவர்கள்)* ***கன்னி ஆரையின் -*** *பிறரால் பற்றப்படாத மதில்களின்;* ***ஒளியினில் -*** *பிரகாசத்தாலே;* ***கண் வழுக்குறுதல் உன்னி -*** *கண் கூசுதலை நினைந்து (சூரியன்);* ***நாள்தொறும் -*** *தினந்தோறும்;* ***விலங்கினன் போதலை -*** *விலகிச் செல்வதை;* ***உணரார் -*** *அறியார்.*

*கதிர் -சூரியன். உணரார், புகல்வார் என்க. பிறரால் பற்றப்படாதவள் கன்னி. அதுபோன்ற மதில். காவலில் கலையூர் கன்னியை ஒக்கும் (பால- அயோ - 9)*

*இருசுடர் வழங்காப்பெருமூதிலங்கை (ஆசிரிய மாலை)* ***(21)***

***4856. தீயசெய்குநர் தேவரால்; அனையவர்சேரும்***
***வாயில் இல்லதுஓர்வரம்பு அமைக்குவென் என***
***மதியா காயம் என்னும் அக் கணக்கறு பதத்தையும் கடக்க***
***ஏயும் நன்மதில்இட்டனன் - கயிலையை எடுத்தான்.***

***கயிலையைஎடுத்தான் -*** *கயிலையைப் பெயர்த்துஎடுத்த இராவணன்;* ***தேவர் -*** *தேவர்கள்;* ***தீய செய்குநர் -*** *தீமையைச் செய்பவர்கள்;* ***அனையவர் -*** *அந்தத் தேவர்கள்;* ***சேரும் -*** *இலங்கையை அடையும்;* ***வாயில் இல்லது -*** *வழியே இல்லாத;* ***ஓர் வரம்பு அமைக்குவென் -*** *ஒரு தடையை அமைப்பேன்;* ***என -*** *என்று;* ***மதியா -*** *ஆலோசித்து;* ***காயம் என்னும் -*** *ஆகாயம் என்று கூறப்பெற்ற;* ***அக்கணக்கறு பதத்தையும் -*** *அந்த முடிவற்ற மண்டலத்தையும்;* ***கடக்க -*** *தாண்டி அப்பாற் செல்லும்படியாக;* ***ஏயும் -*** *பொருந்திய;* ***நன்மதில் இட்டனன் -*** *நல்ல மதிலை (இலங்கைக்கு) அமைத்தான்.*

*வரம்பு - தடை.காதளவு வருவன, கடப்பன ஆகல் ஆகாது என இட்ட வரம்பு (தக்க - பரணி - 132உரை)*

*"ஏயும் நன்மதில்எடுத்தனன் கயிலையன்று எடுத்தான்' என்னும் பாடம் கட்டுரைச் சுவைபடவுள்ளது ஆல் - அசை. ஆகையினாலே என்று பொருள் கூறினும் பிழையில்லை.* ***(22)***

***4857. கறங்குகால்புகா; கதிரவன் ஒளிபுகா; மறலி***
***மறம் புகாது; இனிவானவர் புகார் என்கை வம்பே !***
***திறம்புகாலத்துள் யாவையும் சிதையினும், சிதையா***
***அறம் புகாது,இந்தஅணி மதிள் கிடக்கை நின்று***
***அகத்தின் !****

***இந்த - ; அணி -*** *அழகிய;* ***மதிள் கிடக்கை நின்று -*** *மதிளின் பரப்பிலிருந்து;* ***அகத்தின் -*** *இலங்கைக்குள்ளே;* ***கறங்கு கால் புகா -*** *சுழன்று வீசும் காற்றுகள் நுழையா;* ***கதிரவன் ஒளி புகா -*** *சூரியனின் வெப்பக்கதிர்கள் நுழையா;* ***மறலி மறம் புகாது -*** *யமனுடைய கொலைத்தொழில் நுழையாது;* ***இனி -*** *இனிமேல்;* ***வானவர் புகார் என்கை -*** *தேவர்கள் (போர் செய்ய எண்ணி) நுழையார் என்று கூறுதல்;* ***வம்பே -*** *வீண் மொழியாகும்;* ***திறம்பு காலத்துள் -*** *(பொருள்யாவும் மாறுபடும்) ஊழிக்காலத்தில்;* ***யாவையும் சிதையினும் -*** *எல்லாம் அழிந்தாலும்;* ***சிதையா -*** *விகாரம் அடையாத;* ***அறம் -*** *அறக்கடவுள்;* ***புகாது -*** *நுழையாது. மறம் - கொலைத்தொழில். மறம் திருந்தான் என்னும் கலிக்கு (குறிஞ்சி 2) கொலைத் தொழில் குறைவின்றித்திருந்திய கானவர் என்றார் நச்சர். கிடக்கை - பரப்பு. முருக அமர் பூமுரண் கிடக்கை - (பட்டினப் - 37) நச் - உரை புகுதல்என்பது நுழைதல் என்னும் சாதாரணப் பொருள் தராமல் போர் செய்யப்புகுதல் என்னும் பொருள் தந்தது. மேற்செலவு என்பது படை எடுப்பதைக்குறித்தலைப் போல.*
***(23)***

***4858. கொண்டவான்திரைக் குரைகடல் இடைதாய்,***
***குடுமி***
***எண்தவா விசும்புஎட்டநின்று இமைக்கின்ற எழிலால்***
***பண்டு அராஅணைப்பள்ளியான் உந்தியில் பயந்த***
***அண்டமேயும் ஒத்துஇருந்தது, இவ் அணிநகர்***
***அமைதி.***

***வான் திரை கொண்ட -*** *பேரலைகளைத் தன்பால்கொண்டுள்ள;* ***குரை கடல் இடையதாய் -*** *ஒலிக்கின்ற கடலைச் சார்ந்ததாய்;* ***எண்தவா -*** *நினைவின் அளவுக்கு உட்படாத;* ***விசும்பு -*** *ஆகாயத்தை;* ***எட்டநின்று -*** *தொடும்படி நின்று;* ***இமைக்கின்ற -*** *ஒளி வீசுகின்ற;* ***குடுமி எழிலால் -*** *(நகரத்தின்) மாட விமானங்களின் அழகால்;* ***இ -*** *இந்த;* ***அணிநகர் அமைதி -*** *அழகிய இலங்கையின் அமைப்பு;* ***அராஅணைப் பள்ளியான் -*** *பாம்புப் படுக்கையில் படுத்துக் கொண்டுள்ள திருமால்;* ***பண்டு -*** *முற்காலத்தில்;* ***உந்தியில் பயந்த -*** *தன்னுடைய உந்தியிலிந்து வெளிப்படுத்திய;* ***அண்ட மேயும் ஒத்து இருந்தது -*** *(பொன்மயமான) முட்டையை ஒத்திருந்தது.*

*நீலக்கடலின்நடுவில் வானளாவி நிற்கும் பொன்மயமான இலங்கை நீலநிறமுடைய திருமாலின் உந்தியில் தோன்றிய பொன் முட்டையை ஒத்திருந்தது. அண்டம் - பொன்முட்டை. திருமாலின் உந்தியின்கண் முதலில் பொன்முட்டை தோன்றியது. அதிலிருந்து பிரம்மதேவன் பிறந்தான் என்று புராணம் பேசும். அண்டம் முற்றும் ஈன்றானை ஈன்ற சுவணத்தனி அண்டம் (கடல் தாவு 43)*

*ஏ, உம் இவைகள்அசை, அண்டம் ஒத்துளது என்க. தேற்றப் பொருளும் உம்மைப் பொருளும் ஈண்டு ஒவ்வா.* ***(24)*** *அரக்கர்பெருமித வாழ்வு*

***4859. பாடுவார் பலர் என்னின், மற்று அவரினும் பலரால்***
***ஆடுவார்கள்;மற்று அவரினும் பலர்உளர், அமைதி***
***கூடுவாரிடைஇன்னியம் கொட்டுவார்; முட்டுஇல்***
***வீடு காண்குறும்தேவரால் விழு நடம்காண்பார்.***

***பாடுவார் பலர்எனின் -*** *பாடலை இசைப்பவர்கள் பலர் என்றால்;* ***ஆடுவார்கள் -*** *பாடலுக்கேற்றபடி ஆடுகின்றவர்கள்;* ***அவரினும் பலர் -*** *அவர்களை விடப் பலராவார்;* ***அவரினும் -*** *ஆடுபவர்களினும்;* ***அமைதி -*** *சமயம் சேர்ந்து பொருந்தி;* ***கூடுவாரிடை -*** *அவையில் கூடியவரிடையே;* ***இன்னியம் -*** *இசைக் கருவியாகிய தண்ணுமை முதலானவற்றை;* ***கொட்டுவார் -*** *கொட்டுபவர்களும்;* ***வீடு காண்குறும் -*** *விடுதலையைக் காண விரும்பும்;* ***தேவரால் -*** *தேவமங்கையர்களால் (ஆடப்பெறும்);* ***விழுநடம் காண்பார் -*** *சிறந்த நாட்டியத்தைப் பார்ப்பவர்களும்;* ***பலர் உளர் -*** *பலர் உள்ளார்கள்;*

***'பலர் உளர்'*** *என்னும்சொல் இருமுறை பிரித்துக்கூட்டப்பெற்றது.* ***(25)***

***4860. வான மாதரோடு இகலுவர் விஞ்சையர் மகளிர்;***
***ஆன மாதரோடுஆடுவர் இயக்கியர்; அவரைச்***
***சோனைவார்குழல்அரக்கியர் தொடர்குவர்;***
***தொடர்ந்தால்***
***ஏனை நாகியர்அருநடக் கிரியை ஆய்ந்திருப்பார்.***

*(நடனக் கொள்கையில்)*

***விஞ்சையர்மகளிர் -*** *வித்தியாதரப் பெண்கள்;* ***வான மாதரோடு இகலுவர் -*** *தேவமகளிருடன் மாறுபட்டு ஆடுவார்கள்;* ***ஆன மாதரோடு -*** *வெற்றியடைந்த விஞ்சை மகளிருடன்;* ***இயக்கியர் ஆடுவர் -*** *இயக்கப் பெண்கள் ஆடுவார்கள்;* ***சோனை வார் குழல் -*** *மேகம் போன்ற கூந்தலைப் பெற்ற;* ***அவரை -*** *அந்த இயக்கப் பெண்களை (மாறுபட்டு);* ***அரக்கியர் -*** *அரக்கப் பெண்கள்;* ***தொடர்குவர் -*** *(ஆடலைத்) தொடர்ந்து மேற்கொள்வார்கள்;* ***தொடர்ந்தால் -*** *வாடாமல் ஆடினால்;* ***ஏனை -*** *மற் றைய;* ***நாகியர் -*** *நாகலோகப் பெண்கள்;* ***அரு -*** *அருமையான;* ***நடக்கிரியை -*** *நாட்டியத்துக்கென்று அமைக்கப்பட்ட கிரியைகளை;* ***ஆய்ந்திருப்பார் -*** *ஆராய்ந்தபடியிருப்பர். கிரியை - செயல். சிலம்பில் பண்ணுக்கு எட்டுக்கிரியைகள் பேசப்பட்டுள்ளன. இது போல் நாட்டியக்கிரியைகள் உண்டு. சோனைவார் குழல் அவரை என்பதைச் சேர்கிறது.*

*அரக்கியர் கூந்தல் மேகம் போன்று இராதே. தொல்காப்பியர் இங்ஙனம் சொல்லை மாற்றுதலை மொழிமாற்று என்பார் (எச்ச - 14)* ***(26)***

***4861. இழையும்ஆடையும் மாலையும் சாந்தமும் ஏந்தி,***
***உழையர்என்னநின்று, உதவுவ நிதியங்கள்; ஒருவர்***
***விழையும்போகமே, இங்கு இது ?வாய்கொடு விளம்பின்***
***குழையும்;நெஞ்சினால் நினையினும் மாசுஎன்று கொள்ளும்.***

*(அரக்கர்களுக்கு)*

***நிதியங்கள்-*** *நவநிதிகளும்;* ***உழையர் என்ன நின்று -*** *பணியாளர்களைப்போல (ஒதுங்கி நின்று);* ***இழையும் ஆடையும் -*** *ஆபரணங்களையும் ஆடைகளையும்;* ***மாலையும் சாந்தமும் -*** *மாலையையும் சந்தனத்தையும்;* ***ஏந்தி உதவுவ -*** *கைகளில் தாங்கிக் கொடுப்பன;* ***இங்கு -*** *இலங்கையில் (இது);* ***ஒருவர் விழையும் போகம் -*** *ஒருவர் அனுபவிக்கும் போகமாகும்;* ***இது -*** *இந்தப் போகத்தை;* ***வாய்கொடு விளம்பின் -*** *வாயால் எடுத்துக் கூறினால்;* ***குழையும் -*** *(கேட்பவர்களின் உறுதிப்பாடு) தளர்ச்சியடையும்;* ***நெஞ்சினால் நினையினும் -*** *மனத்தால் நினைப்பினும்;* ***மாசு என்று -*** *(என்னுடைய விரதத்துக்கு) குற்றம் என்று;* ***கொள்ளும் -*** *அனுமன் கருதினான்.*

*இது அனுமனின்எண்ண ஓட்டம். என்றனன் இலங்கை நோக்கி (42) என்னும் பாடலை நோக்கி (42) அறிக. கடல் தாவு படலத்தில் உள்ள விசும்பிடைச் செல்லும் வீரன் (77) எழுவாய்; என்றனன் பயனிலை.*

*மாசு என்றுகுறித்தான் (25) என்னும் பாடம் ஏற்கலாம் போலும்.* ***(27)***

***4862. பொன்னின் மால்வரைமேல் மணி பொழிந்தன பொருவ***
***உன்னி,நான்முகத்து ஒருவன் நின்று ஊழ்முறை உரைப்ப***
***பன்னி, நாள்பலபணிஉழந்து, அரிதினில் படைத்தான்-***
***சொன்ன வானவர்தச்சனாம்,இந்நகர் துதிப்பான்.***

***நான்முகத்துஒருவன் -*** *நான்கு முகங்களைப் பெற்ற பிரம்மதேவன்;* ***பொன்னின் மால்வரைமேல் -*** *பெரிய பொன்மயமான மேருமலைபோல்;* ***மணி பொழிந்தன பொருவ -*** *மாணிக்கத்தைச் சொரிவன ஒப்ப;* ***பன்னி -*** *(தேவதச்சனைப்) புகழ்ந்து;* ***நின்றுஉன்னி -*** *உறுதியுடன் ஆராய்ந்து;* ***ஊழ்முறைஉரைப்ப -*** *நகர் அமைய வேண்டிய முறையைக் கூற;* ***சொன்ன வானவர்தச்சன் -*** *பிரம்மனால் சொல்லப்பெற்ற தேவதச்சன்;* ***பலநாள் -*** *பலநாட்கள்;* ***பணி உழந்து -*** *வருந்திப் பணியை மேற்கொண்டு;* ***இந்நகர் -*** *இந்த இலங்கை மாநகரை;* ***துதிப்பான் -*** *உலகம் கொண்டாடும்படி;* ***அரிதினில்படைத்தான் -*** *அருமையாகச் சிருட்டித்தான். நன்கு பணிசெய்யும் பொருட்டுப் பணியாளனைப் புகழ்வது சால்பென்க. சொர்ணாபிஷேகம் என்னும்*

*வழக்கை நோக்கவும். பொன்னின் மலைமேல் மணி பொழிந்தாற்போலத் தேவதச்சன், இந்நகரைப் படைத்தான் என்று பொருள் கூறப்பெற்றது.* ***(28)***

***4863. மகரவீணையின் மந்தர கீதத்து மறைந்த,***
***சகர வேலையின்ஆர்கலி; திசைமுகம் தடவும்***
***சிகர மாளிகைத்தலம்தொறும் தெரிவையர் தீற்றும்***
***அகரு தூமத்தின்அழுந்தின முகிற்குலம் அனைத்தும்.***

***மகர வீணையின் -*** *மகரவடிவாய் அமைந்த வீணையில் தோன்றிய;* ***மந்தர கீதத்து -*** *மென்மையான கீதத்தினாலே;* ***சகரவேலையின் -*** *சகரரால் தோண்டப்பெற்ற கடலினுடைய;* ***ஆர்கலி மறைந்த -*** *பேரொலி மறைந்துவிட்டன;* ***திசை முகம் தடவும் -*** *நான்கு திசைகளையும் தடவுகின்ற;* ***சிகரம் -*** *விமானங்களைப் பெற்ற;* ***மாளிகைத் தலம் தொறும் -*** *மாளிகையின்இடங்கள் தோறும்;* ***தெரிவையர் தீற்றும் -*** *பெண்கள் புகைக்கின்ற;* ***அகருதூமத்தின் -*** *அகிலின் புகைப்பரப்பில்;* ***முகில் குலம் அனைத்தும் -*** *எல்லாமேகக் கூட்டங்களும்;* ***அழுந்தின -*** *மறைந்து விட்டன. மந்தரகீதத்தில் கடல்ஒலி அடங்கிவிட்டன. அகிற்புகையில் மேகங்கள் மறைந்தன. மந்தரம் - மெல்லோசையாற் பாடுதல் 'மந்தரம், மத்திமம், தாரம் இவை மூன்றில் (கல்லாடம் 21-50) மந்தரம் - படுத்தல். இசை கேட்டுக் கடல் அமைதி பெற்றது. ஏழுகடலும் இடை துளும்பா (பெரிய புரா - ஆனாயர் - 35) இப்பாடலில் இசையின் அமைதியும் புகையின் மிகுதியும் பேசப்பட்டது.* ***(29)***

***4864. பளிக்கு மாளிகைத் தலம்தொறும்,***
***இடம்தொறும், பசுந்தேன்***
***துளிக்கும் கற்பகத் தண்நறுஞ்***
***சோலைகள்தோறும்,***
***அளிக்கும்தேறலுண்டு ஆடுநர்***
***பாடுநர்ஆகிக்***
***களிக்கின்றார் அலால் கவல்கின்றார்***
***ஒருவரைக்காணேன்.***

***பளிக்குமாளிகைத் தலந்தொறும் -*** *பளிங்கால்அமைக்கப்பெற்ற மாளிகைகளின் உப்பரிகை தோறும்;* ***இடந்தொறும் பசுந்தேன் துளிக்கும் -*** *எல்லா இடங்களிலும் தேனைத்துளிக்கின்ற;* ***தண்நறும் -*** *குளிர்ந்த நறுமணம் வீசும்;* ***கற்பகச் சோலைகள் தோறும் -*** *கற்பக மரங்கள் நிரம்பிய சோலைகள் தோறும்;* ***அளிக்கும் -*** *பணியாட்கள் வழங்கும்;* ***தேறல் உண்டு -*** *கள்ளைப் பருகி;* ***ஆடுநர் பாடுநர் ஆகி -*** *(மயக்கத்தால்) ஆடுபவர்களாகவும் பாடுபவர்களாகவும் இயல்பு திரிந்து;* ***களிக்கின்றார் அலால் -*** *செருக்குக் கொள்பவரைத் தவிர;* ***கவல்கின்றார் ஒருவரை -*** *கவலைப்படுகின்ற ஒரு மனிதரை;* ***காணேன் -*** *(யான்) காணவில்லை.*

*கவல்கின்றார்என்பது பிராட்டியைக் குறிப்பதாக வலிந்து பொருள் கூறுவாரும் உளர். இடந்தொறும் ஆடுநர் பாடுநர் என்றும் கூறலாம். ஏற்பின் கொள்க. இங்கு அது கற்பகமரத்துக்கு அடைமொழியாகப் பேசப் பெற்றது. இடந்தொறும் தேன் துளிக்கும் கற்பகம் என்க.* ***(30)***

***4865. தேறல் மாந்தினர்; தேன்இசை***
***மாந்தினர்; செவ்வாய்***
***ஊறல் மாந்தினர்; இன்னுரை***
***மாந்தினர்; ஊடல்***
***கூறல் மாந்தினர்; அனையவர்த்***
***தொழுது அவர் கோபத்து***
***ஆறல் மாந்தினர் - அரக்கியர்க்***
***குயிர் அன்ன அரக்கர்.***

***அரக்கியர்க்குஉயிர் அன்ன*** - *அரக்கிகளுக்குஉயிர்போன்ற;* ***அரக்கர்*** - *இராக்கதர்கள்;* ***தேறல் மாந்தினர்*** - *(மகளிர் வழங்கிய) மதுவைக் குடித்தார்கள்;* ***தேன் இசை மாந்தினர்*** - *(அவர்கள்பாடும்) தேன் போன்றஇசையைச் சுவைத்தார்கள்;* ***செவ்வாய் ஊறல் மாந்தினர்*** - *அதரபானத்தை உறிஞ்சினார்கள்;* ***இன்னுரை மாந்தினர்*** - *(கலவிப் போரில் அவர்கள் மிழற்றிய) காதல் மொழியை அனுபவித்தனர்;* ***ஊடல் கூறல் மாந்தினர்*** - *(அவர்களின்) ஊடலின் கூறுபாடுகளை எல்லாம் கண்டு அனுபவித்தனர்;* ***அனையவர்த் தொழுது*** - *அம் மகளிரை வணங்கி;* ***அவர் கோபத்து ஆறல் மாந்தினர்*** - *ஊடலின் தணிவினை உட்கொண்டு அமைதி பெற்றனர்.*

*மாந்துதல் -பலபொருள் கொண்ட ஒரு சொல். அது உண்ணுதல், குடித்தல் வருந்துதல். அடங்குதல் (சாந்தி பெறுதல்) என்று பலபொருள் தரும்.* ***(31)***

***4866. எறித்தகுங்குமத்து இளமுலை***
***எழுதியதொய்யில்,***
***கறுத்த மேனியில்பொலிந்தன;***
***ஊடலில்கனன்று,***
***மறித்தநோக்கியர் மலர்அடி***
***மஞ்சுளப்பஞ்சி,***
***குறித்தகோலங்கள் பொலிந்தில;***
***அரக்கர்தம் குஞ்சி.***

***இளமுலை*** - *(அரக்கியர்களின்) இளமையான முலையின் கண்ணே;* ***எறித்த குங்குமத்து*** - *(சிவந்த) ஒளியை வீசுகின்ற குங்குமக் குழம்பால்;* ***எழுதிய தொய்யில்*** - *எழுதப் பெற்ற வரிக் கோலங்கள்;* ***கறுத்த மேனியில்*** - *(அரக்கர்களின்) கரிய மேனியில்;* ***பொலிந்தன*** - *விளக்கமாகத் தெரிந்தன;* ***ஊடலில்*** - *ஊடற்பிணக்கத்தாலே;* ***கனன்று*** - *சீற்றங் கொண்டு;* ***மறித்த நோக்கியர்*** - *மாறுபாடு பெற்ற விழிகளைப் பெற்ற அரக்கியர்களின்;* ***மலரடி*** - *(தாமரை) மலர்போன்ற பாதத்தில்;* ***மஞ்சுளப் பஞ்சி*** - *செம்பஞ்சுக் குழம்பாலே;* ***குறித்த கோலங்கள்*** - *எழுதிய கோலங்கள்;* ***அரக்கர் குஞ்சி*** - *அரக்கர்களின் தலைமயிரின்கண்;* ***பொலிந்தில*** - *விளங்கித் தோன்றவில்லை. அரக்கர்களின்கரியநிறமும் அவர்களின் தலைமயிரின் சிவந்த நிறமும் பேசப்பட்டது. தொய்யில் -மகளிரின் மார்பில் அணியப் பெறும் வரிக்கோலம். இது கொடிவடிவாகவும், கரும்பு வடிவாகவும் எழுதப்பெறும்.* ***(32)***

*4867.* **விளரிச் சொல்லியர் வாயினால்**
**வேலையுள்மிடைந்த**
**பவளக் காடுஎனப்பொலிந்தது;**
**படைநெடுங்கண்ணால்,**
**குவளைக்கோட்டகம் கடுத்தது;**
**குளிர்முகக்குழுவால்**
**முளரிக் கானமும்ஒத்தது-**
**முழங்குநீர்இலங்கை.**

**முழங்குநீர்இலங்கை -** ஒலிக்கும் கடலால்சூழப்பெற்ற இலங்கை; **விளரிச் சொல்லியர் -** விளரிப்பண் போன்ற மொழி பேசும் அரக்கியர்களின்; **வாயினால் -** (சிவந்த) வாயினால்; **வேலையுள் மிடைந்த -** கடலில் நெருங்கிக்கிடக்கும்; **பவளக் காடு எனப்பொலிந்தது -** பவளக்காடுபோல் விளங்கிற்று; **படைநெடுங்கண்ணால் -** (அரக்கியரின்) வேல்போன்ற கண்களால்; (இலங்கை) **குவளைக் கோட்டகம் கடுத்தது -** குவளைப் பூக்கள் மலர்ந்த பொய்கையை ஒத்திருந்தது; **குளிர்முகக் குழுவால் -** (அரக்கியரின்) குளிர்ந்த முகங்களின் கூட்டத்தால்; **முளரிக்கானமும் ஒத்தது -** தாமரைக் காட்டையும் போன்றது.

கோட்டகம் -பொய்கை. வாயினால் என்பதை 'ஓதியால்' என்று பாடம் கொண்டு சிவந்த கூந்தலால் பவளக்காடு போலும் எனப் பொருள் கூறலும் ஒன்று.
*(33)*

**அறுசீர் விருத்தம்**

*4868.* **எழுந்தனர்திரிந்து வைகும்**
**இடத்ததாய், இன்று காறும்**
**'கிழிந்திலதுஅண்டம்' என்னும்**
**இதனையேகிளப்பது அல்லால்**
**அழிந்துநின்றுஆவது என்னே ?**
**அலருளோன் ஆதியாக,**
**ஒழிந்த வேறுஉயிர்கள் எல்லாம்**
**அரக்கருக்குஉறையும் போதா.**

**அலர் உளோன்ஆதியாக -** பிரம்மன் முதலாக; **ஒழிந்த -** உலகிலே தங்கியுள்ள; **வேறு உயிர்கள் எல்லாம் -** பல்வேறுபட்ட உயிர்கள் யாவும்; **உறையும் போதா -** உறையிடவும் போதாதபடியுள்ள; **அரக்கருக்கு -** இராக்கதர்களுக்கு; **எழுந்தனர் திரிந்து வைகும் -** (தாராளமாக) எழுந்து உலாவித்தங்குதற்கு; **இடத்ததாய் -** இடத்தைக் கொடுப்பதாய், இருந்தும்; **இன்றுகாறும் -** இன்றுவரை; **அண்டம் -** இந்தப் (பழைய) உலகமானது; **கிழிந்திலது -** சிதையவில்லை; **என்னும் இதனையே -** என்கின்ற இந்த உண்மையையே; **கிளப்பது அல்லால் -** விதந்து கூறி மகிழ்வதே அன்றி; **அழிந்து நின்று -** மனம் வருந்தி நிற்பதால்; **ஆவது என் ? -** உண்டாகும் பயன்தான் யாதோ ?

அண்டம் -முட்டை, முட்டை மெல்லியது ஆகலின் கிழிந்திலது என்றார். பொருள்களைக்கணக்கிடுவோர் நினைவின் பொருட்டு பத்துக்குப் பிறகோ நூற்றுக்குப் பிறகோ அடையாளமாக இடும் கல் முதலியவற்றைக் குறிக்கும் சொல் 'உறை'.
***(34)***

***4869. காயத்தால்பெரியர்; வீரம்***
***கணக்குஇலர்; உலகம் கல்லும்***
***ஆயத்தார்;வரத்தின் தன்மை***
***அளவற்றார்; அறிதல் தேற்றா***
***மாயத்தார்;அவர்க்கு எங்கேனும்***
***வரம்பும்உண் டாமோ ? மற்று ஓர்***
***தேயத்தார்தேயம் சேறல்***
***தெருவிலோர் தெருவில் சேறல்.***

***காயத்தால்பெரியர் -*** உடம்பால்மிகப்பெரியவர்கள்; ***வீரம் கணக்கு இலர் -*** வீரத்தாலும் அளவற்றவர்கள்; ***உலகம் கல்லும் -*** உலகத்தைத் தோண்டி மேலே எடுக்கும்; ***ஆயத்தார் -*** சேனைக் கூட்டத்தை யுடையவர்கள்; ***வரத்தின் தன்மை -*** பெற்ற வரத்தினுடைய இயல்பால்; ***அளவு அற்றார் -*** பிறரால் அளக்கமுடியாதவர்கள்; ***அறிதல் தேற்றா -*** பிறரால் அறிய முடியாதவர்கள்; ***மாயத்தார் -*** மாயைகளை உடையவர்கள்; ***அவர்க்கு -*** அவ்அரக்கர்களுக்கு; ***எங்கேனும் -*** எந்த இடத்திலாவது; ***வரம்பும் உண்டாமோ -*** எல்லையும் உள்ளதாகுமோ? ***தெருவிலோர் -*** ஒரு தெருவில் இருப்பவர்; ***தெருவில் சேறல் -*** மற்றொரு தெருவுக்குப் போவது; ***மற்று ஓர் தேயத்தார் -*** பிற தேயத்தார்; ***தேயம் சேறல் -*** வேறு தேயத்தை அடைவது போலும். பேருடலும்பேராற்றலும் கொண்ட அரக்கர்கள் தங்கியுள்ள இலங்கைக்கு எல்லையில்லை. அவ்விலங்கையில், ஒரு தெருவினர் மற்றொரு தெருவுக்குப் போதல். ஒரு தேயத்தார், வேறு தேயத்துக்குப் போதல் போலாகும். ஒரு தேயத்தில் உள்ளவர்கள் மற்றொரு தேசத்துக்குப் போவது என்பது அரக்கர்களுக்கு ஒரு தெருவிலிருந்து மற்றொரு தெருவுக்குப்போவது போல எனவும் பொருள் கூறலாம்.

அவர்க்குஎங்கேனும் வரம்பும் உண்டாமோ, மற்றோர் தேயத்தார் தேயம் சேறல் தெறுவிலார் செருவில் சேறல் என்னும் பாடத்தை மேற்கொண்டு (அண்ணாமலை பதிப்பு 109) - அவ்வரக்கர்களின் தொகைக்கு எல்லை என்பது எங்காவது உண்டாகுமோ? போர் முகத்துக்குப் போகாவிடில் என்று நல்உரை வழங்குவோரும் உளர் - ஏற்பன கோடல் இயல்பு. ***(35)***

***4870. கழல்உலாம்காலும், கால***
***வேல்உலாம் கையும், காந்தும்***
***அழல் உலாம்கண்ணும்,***
***இல்லாஆடவர் இல்லை; அன்னார்***
***குழல் உலாம்களிவண் டார்க்கும்***
***குஞ்சியால், பஞ்சி குன்றா***
***மழலையாழ்க்குதலைச் செவ்வாய்***
***மாதரும் இல்லை மாதோ.***

***கழல் உலாம்காலும் -*** *வீரக்கழல்கள் அணிந்த கால்களும்;* ***காலவேல் உலாம் கையும் -*** *யமனைப் போன்ற வேலேந்திய கைகளும்;* ***காந்தும் -*** *எரிகின்ற;* ***அழல் உலாம் கண்ணும் -*** *நெருப்பைப் போல் அழல்கின்ற கண்களும்;* ***இல்லா -*** *பெற்றிராத;* ***ஆடவர் இல்லை -*** *ஆண் மக்கள் இல்லை;* ***அன்னார் -*** *அந்த மகளிரின்;* ***குழல் உலாம் -*** *கூந்தலில் சூழ்ந்துள்ள;* ***களிவண்டு -*** *வண்டுகள்;* ***ஆர்க்கும் -*** *ஆரவாரிக்கின்ற;* ***குஞ்சியால் -*** *(ஆடவர்களின்) தலைமயிரினாலே;* ***பஞ்சி குன்றா -*** *(பாதத்தில்) செம்பஞ்சிக்குழம்பு சிதையாத;* ***மழலையாழ் -*** *இனிய ஓசையுடைய யாழைப் போல;* ***குதலைச்செவ்வாய் -*** *இளஞ்சொற்களைப் பேசுகின்ற வாயையுடைய;* ***மாதரும்இல்லை -*** *பெண்களும் இல்லை.    மகளிரின்கூந்தலின் வண்டு மொய்க்கும் குஞ்சி என்பது வேட்கைக் குறிப்பு.கொம்பர் மடப்பெடை வண்டும் கருங்குழல் களிக்கும் வண்டும் கடிமணம் புணரக் கண்டார்' என்னும் வரைக் காட்சிப் படலப் பாடல் காண்க (கம்ப.859) காதல் பரிமாற்றத்தை  வண்டைக் கொண்டுகாட்டுவது கவிச்சக்கரவர்த்தியின் இயல்பு. (கம்ப.910) மாது, ஓ - அசைகள்.* ***(36)***

***4871.  கள்ளுறக்கனிந்த பங்கி***
***அரக்கரைக்கடுத்த - காதல்***
***புள்உறத்தொடர்வ, மேனி***
***புலால் உறக் கடிது போவ,***
***வெள்உறுப்புஎயிற்ற, செய்ய***
***தலையன,கரியமெய்ய,***
***உள்உறக் களித்தகுன்றின்***
***உயர்ச்சிய- ஓடை யானை.***

***காதல் -*** *அன்பினாலே;* ***புள்உறத்தொடரும் -*** *வண்டுகள் பின்பற்றிச் செல்லும்;* ***மேனி -*** *உடம்பிலே;* ***புலால்உற -*** *புலால் நாற்றம் நிரம்பும்படி;* ***கடிது போவ -*** *வேகமாகச் செல்பவையும்;* ***வெள் உறுப்பு எயிற்ற -*** *வெண்மையான நீண்ட தந்தங்களை உடையவையும்;* ***செய்ய தலையன -*** *சிவந்த தலையைப் பெற்றனவும்;* ***கரிய மெய்ய -*** *கருத்த உடம்பை உடையவையும்;* ***உள்உறக்களித்த -*** *ஊக்கமிகுதியால் செருக்குப் பெற்றவையும்;* ***குன்றின் உயர்ச்சிய -*** *மலைபோன்ற தோற்றம் உடையனவும்; (ஆன)* ***ஓடையானை -*** *முகபடாம் அணிந்த யானையானது;* ***கள்உற -*** *தேனைப்போல்;* ***கனிந்த -*** *சிவந்த;* ***பங்கி -*** *தலைமயிரை உடைய;* ***அரக்கரைக் கடுத்த -*** *அரக்கர்களை ஒத்திருந்தன.*

*அரக்கர்கள்வெண்மையான பற்களையுடையவர்கள். யானை வெண்மையான தந்தங்களைப் பெற்றிருக்கும். அரக்கர்களும் செந்தலையும் கரிய மெய்யும் உடையவர். யானையும் சிவந்த தலையும் கரிய மெய்யும் உடைய. அரக்கர் எப்போதும் ஊக்கம் உடையவர்கள். யானையும் ஊக்கம் பெற்றிருப்பன. அரக்கர்கள் மலை போன்ற எடுப்பான தோற்றத்தர். யானையும் மலைபோன்ற உயர்வை உடையன. ஆதலால் யானை அரக்கரைப் போன்றிருந்தன. பொருள் உவமையாயிற்று; உவமை பொருளாயிற்று. (தொல் உவம - 9). உள் - ஊக்கம். உப்பு இலி வெந்தை தின்று உள் அற்று வாழ்பவே (நாலடி)* ***(37)***

***4872.  வள்ளிநுண்மருங்குல் என்ன,***
***வானவர்மகளிர், உள்ளம்***
***தள்ளுற, பாணிதள்ளா***

***நடம்புரிதடங்கண் மாதர்,***
***வெள்ளிய முறுவல்தோன்றும்,***
***நகையர்,தாம் வெள்கு கின்றார்-***
***கள்இசை அரக்கர்மாதர்***
***களியிடும்குரவை காண்பார்.***

***வள்ளி நுண்மருங்குல் என்ன -*** *கொடியைஒத்த (தம்முடைய) இடையைப் போல;* ***வானவர் மகளிர் -*** *காணுகின்ற தேவர் மகளிரது;* ***உள்ளம்தள்ளுற -*** *மனமானது (ஊசல்) ஆடும்படி;* ***தள்ளா -*** *விலக்கப்படாத;* ***பாணி -*** *தாள ஒழுங்குக்கேற்ப;* ***நடம்புரி -*** *நாட்டியம் ஆடவல்ல;* ***தடங்கண்மாதர் -*** *நீண்ட கண்களையுடைய தேவமாதர்கள்;* ***கள்இசை -*** *கள்உண்டு பாடுகின்றஇசையுடைய;* ***அரக்கர் மாதர்*** *- அரக்கப் பெண்களின்;* ***களியிடும் குரவைகாண்பார் -*** *(முறையற்ற) குரவைக் கூத்தைப் பார்ப்பதற்கு;* ***வெள்ளியமுறுவல் தோன்றும் -*** *வெண்பற்கள் சிறிதே தெரியும்படி;* ***நகையர் -*** *புன்னகை செய்தவராய்;* ***வெள்குகின்றார் -*** *நாணம் அடைகின்றனர்.*

*பாணி ஒழுங்கிற்கேற்ப ஆடவல்ல தேவமகளிர்கள் அரக்கியர்களின் (முறையற்ற) குரவைக் கூத்தைக் காண்பதற்கு நாணம் அடைகின்றனர். பாணி - தாள ஒழுங்கு. தாம் - உரையசை.* ***(38)***

***4873. ஒறுத்தலோநிற்க; மற்று ஓர்***
***உயர்படைக்கு ஒருங்குஇவ் ஊர் வந்து***
***இறுத்தலும்எளிதாம் ? மற்றும்***
***யாவர்க்கும் இயக்கம் உண்டே ?***
***கறுத்த வாள்அரக்கி மாரும்***
***அரக்கரும்கழித்து வீசி***
***வெறுத்த பூண்வெறுக்கையாலே***
***தூரும், இவ்வீதி எல்லாம்.***

***ஒறுத்தல் (ஓ)நிற்க -*** *(படைகள்) பகைவர்களைக் கொல்வது கிடக்கட்டும்;* ***மற்று ஓர் உயர்படைக்கு -*** *வேறு ஒரு உயர்ந்த படைக்கு;* ***ஒருங்கு இவ் ஊர் வந்து -*** *ஒரு சேர இந்த ஊரைச்சார்ந்து;* ***இறுத்தலும் எளிதாம் -*** *தங்குவதும் எளிதான செயலே;* ***கறுத்த வாள் -*** *கோபம் கொண்டகொடிய;* ***அரக்கி மாரும் -*** *அரக்கப் பெண்களும்;* ***அரக்கரும் -*** *அரக்கர்களும்;* ***கழித்து -*** *ஒதுக்கி;* ***வீசிவெறுத்த -*** *எறிந்த வெறுப்புக்கொண்ட;* ***பூண் வெறுக்கையாலே -*** *ஆபரணச் செல்வங்களால்;* ***தூரும் -*** *மேடிட்டுக்கிடக்கும்;* ***இவ் வீதி எல்லாம் -*** *இந்த எல்லா வீதிகளிலும்;* ***யாவர்க்கும் -*** *எல்லார்க்கும்;* ***இயக்கம் உண்டே -*** *இயங்குதல் முடியுமா ?.*

*அரக்கர்கள்இன்பம் உறும்போது இடையூறு என்று கருதி ஆபரணங்களை வீசி விட்டனர் (வால்மீகி)* ***(39)***

***4874. வடங்களும்,குழையும், பூணும்***
***மாலையும்சாந்தும், யானைக்***
***கடங்களும்கலினமா விலாழியும்***

*கணக்குஇலாத*
*இடங்களின்இடங்கள்தோறும்*
*யாற்றொடும் எடுத்தஎல்லாம்*
*அடங்கியதுஎன்னில் என்னே !*
*ஆழியின்ஆழ்ந்தது உண்டோ ?*

***வடங்களும்குழையும் -*** *ஆரங்களும், குண்டலங்களும்;* ***பூணும் மாலையும் -*** *ஆபரணங்களும் மாலைகளும்;* ***சாந்தும் -*** *சந்தனக் குழம்பும்;* ***யானைக் கடங்களும் -*** *யானைகளின் மும்மதங்களும்;* ***கலின மா -*** *கடிவாளம் பெற்ற குதிரைகளின்;* ***விலாழியும் -*** *வாய் நுரையும் (இன்னும்);* ***கணக்கு இலாத -*** *கணக்கிட முடியாதவையும்;* ***இடங்களின் -*** *வீடுகளின்;* ***இடங்கள்தோறும் -*** *விசாலமான இடப் பரப்புகள் தோறும்;* ***யாற்றொடும் -*** *ஆறுகளாக வந்தனவற்றோடும்;* ***எடுத்த எல்லாம் -*** *எடுத்துக்கொண்டு வந்த எல்லாப் பொருள்களும்;* ***அடங்கியது என்னில் -*** *அடங்கிவிட்டது என்றால்;* ***ஆழியின் ஆழ்ந்தது -*** *கடலினும் ஆழமான நீர்நிலைகள்;* ***உண்டோ -*** *உள்ளதா;* ***என்னோ -*** *என்ன அதிசயம்.*

*வடம் முதலியவும்ஆறுகள் கொண்டுவந்தனவும் அடங்கியது என்றால் கடலினும் ஆழமான பொருள் உண்டோ. இலங்கையில் கழித்த பொருள்கள் அடங்குவதால் கடல் பெரியதாம் என்று வியந்து பேசப்பெற்றது. யாறொடு - ஒடு - அசை. இன்றொடு நாளைக் குறுகவரும் கூற்று.... (புறப்பொருள் 270) அன்றி ஒடு உருபை ஆல் உருபாகக் கொள்ளலாம். அப்போது ஆற்றால் எடுக்கப்பெற்ற என்றும் பொருள் கிட்டும். இடம் - வீடு. இடமே பாத்தி ... வீடு என்றிசைப்பர் (திவா - இடப்பெயர்). குப்பை கொட்டும் பள்ளமே கடல் (வை.மு.கோ. உரை)* ***(40)***

*4875.* ***விற்படைபெரிது என்கேனோ ?***
***வேற்படைமிகும்என் கேனோ ?***
***மற்படைஉடைத்தென் கேனோ ?***
***வாட்படைவலிது என்கேனோ ?***
***கற்பணம் தண்டுபிண்டி***
***பாலம்என்று இனைய காந்தும்***
***நற்படை பெரிதுஎன்கேனோ ?***
***நாயகற்குஉரைக்கும் நாளில்.***

***நாயகற்கு -*** *தலைவனாகிய இராமபிரானுக்கு;* ***உரைக்கும் நாளில் -*** *தூதுச் செய்தியைக் கூறும் போதில்; (இலங்கை மாநகரில்)* ***வில்படை -*** *வில்லேந்திய சேனை;* ***பெரிது என்கேனோ -*** *பெரியது என்று கூறுவேனா ?* ***வேல்படை -*** *வேல் ஏந்திய சேனை;* ***மிகும் என்கேனோ -*** *(விற்படையினும்) மிக அதிகம் என்று கூறுவேனா ?* ***மற்படை -*** *மற்போர் புரிகின்ற சேனை;* ***உடைத்து என்கேனோ -*** *மிகுதியானது என்று கூறுவேனா ?* ***வாள்படை -*** *வாள் ஏந்திய சேனை;* ***வலிது என்கேனோ -*** *வலிமையுடையது என்று கூறுவேனா ?* ***காந்தும் -*** *நெருப்பை உமிழும்;* ***கற்பணம் தண்டு -*** *கப்பணம், தண்டாயுதம்;* ***பிண்டி பாலம் என்று -*** *பிண்டி பாலம் என்று கூறப்பெற்ற;* ***இனைய காந்தும் நற்படை -*** *இந்த எரிகின்ற ஆயுதங்கள் ஏந்திய சேனை;* ***பெரிது என்கேனோ -*** *மிகப் பெரியது என்று கூறுவேனா ?*

*இராமபிரானுக்குயான், விற்படை, வேற்படை, மற்படை, வாட்படை என்னும் இவற்றுள் எது சிறந்தது என்று எப்படிக் கூறுவேன், என்று அனுமன் வியந்தான்.*

*பெரிது, மிகும்,உளது, வலிது என்னும் செய்வினை முற்றுகளுக்கிடையே மற்படை உடைத்து என்னும் செயப்பாட்டு வினை இருப்பது நலம், ஆதலின் உடைத்து என்னும் பாடத்தினும் உளது என்னும் பாடம் சிறப்புடைத்து.*

*உளது -மிகுதியானது, இருப்பைக் குறிக்காமல் மிகுதியைக் குறித்தது. உளது என்று இறுமாரார் (இரண்டாம் அந்தா). கற்பணம் - கப்பணம். யானை நெருஞ்சி முள் வடிவமாகச் செய்யப்பெறும் ஆயுதம் - பிண்டிபாலம் - ஒருவகைப் போர்ப்படை.* ***(41)***

*அனுமன்பவளக்குன்றில் இருத்தல்*

***4876. என்றனன்,இலங்கை நோக்கி***
***இனையனபலவும் எண்ணி,***
***நின்றனன்;அரக்கர் வந்து***
***நேரினும்நேர்வர் என்னாத்***
***தன்தகை அனையமேனி***
***சுருக்கிஅச்சரளச் சாரல்***
***குன்றிடைஇருந்தான்; வெய்யோன்***
***குடகடல்குளிப்ப தானான்.***

*(அனுமன்)* ***இலங்கைநோக்கி -*** *இலங்கையைப் பார்த்து;* ***(மதி முட்டுவன மாடம் -*** *(உளர்) விற்படை பெரிது என்கோ 43);* ***என்றனன் -*** *இவ்வாறு கூறினான்;* ***இனையன -*** *இப்படிப்பட்ட;* ***பலவும் -*** *பலவற்றையும்;* ***எண்ணி -*** *சிந்தித்து;* ***நின்றனன் -*** *நின்றான்;* ***அரக்கர் -*** *கொடிய அரக்கர்கள்;* ***வந்து -*** *முன்னே வந்து;* ***நேரினும் நேர்வர் -*** *எதிர்த்தாலும் எதிர்ப்பர்;* ***என்னா -*** *என்று சிந்தித்து;* ***தன்தகை அனைய -*** *தன்னுடைய தகுதிக்குப் பொருத்தமான;* ***மேனி சுருக்கி -*** *திருமேனியைச் சுருக்கிக் கொண்டு;* ***அச்சரளச்சாரல் -*** *அந்த தேவதாரு மரங்கள் நிறைந்த அடிவாரத்தைப் பெற்ற;* ***குன்றிடை இருந்தான் -*** *பவளமலையில் இருந்தான்; (அப்போது)* ***வெய்யோன் -*** *சூரியன்;* ***குட கடல் குளிப்பதானான் -*** *மேற்குக் கடலில் மறைவதானான்.*

*அனுமன் இவ்வாறுசிந்தித்தபின் அரக்கர்கள் போருக்கு வந்தாலும் வருவர் என்று கருதித் தன்னுடைய மேனியைச் சுருக்கிப் பவளமலையில் இருந்தான். 'விசும்பிடைச் செல்லும் வீரன் - பவளமால் வரையில் பாய்ந்து,' 'முட்டுவன மாடம்' 'படை பெரிது என்கோ' (கம்ப. 4829, 4835, 4875) என்றனன் என்பது கம்பர் கண்ட மாட்டு.* ***(42)***

*இலங்கையில் இருள்பரவுதல்*

**கலிவிருத்தம்**

***4877. ஏய்வினைஇறுதியில் செல்வம் எய்தினான்***
***ஆய்வினை மனத்துஇலான், அறிஞர் சொற்கொளான்***
***வீவினைநினைக்கிலான், ஒருவன் மெய்இலான்***
***தீவினை என இருள்செறிந்தது எங்குமே.***

***ஏய் வினை -*** *தகுதியுடையதவமுயற்சியால்;* ***இறுதியில் -*** *அழிவற்ற;* ***செல்வம் எய்தினான் -*** *செல்வத்தை அடைந்தவனும்;* ***மனத்து -*** *உள்ளத்தில்;* ***ஆய்வினை இலான் -*** *ஆராய்வதைப்பெற்றிராதவனும்;* ***அறிஞர் -*** *அறிஞர்களின்;* ***சொல் கொளான் -*** *அறிவுரையை மதியாதவனும்;* ***வீவினை நினைக்கிலான் -*** *தனக்கு வரும் மரணத்தை நினையாதவனும்;* ***மெய்இலான் -*** *சத்தியப் பற்றில்லாதவனும் (ஆகிய);* ***ஒருவன் -*** *ஒரு மனிதனுடைய;* ***தீவினை என -*** *தீச்செயல்கள் போல;* ***எங்கும் -*** *எல்லா இடத்திலும்;* ***இருள் செறிந்தது -*** *இருளானது அடர்ந்து பரவிற்று.*

*முயற்சியால்செல்வம் பெற்று முறை பிறழ்ந்தவனின் தீச்செயல் போல் இருள் செறிந்தது. ஏய்வினை - முயற்சி. வினைக்கண் வினையுடையான் (குறள் 519) இங்குள்ள வினைக்கு நல்வினை என்றும் தீவினை என்றும் கூறப் பெற்றமை நன்றெனில் கொள்க. தவ முயற்சியால் பொருள் பெற்றவன் இராவணன் ஆதலின் வேறு கூறற்க. இராவணன் குறிப்பாற் பேசப்படுகிறான்.*

*விளம் - விளம்- மா - கூவிளம் என்னும் சீர்களை இவ் விருத்தம் பெற்றுவரும். அமரர் கம்பன் அடிப்பொடி அவர்கள் இராமாவதாரத்தில் 2173 பாடல்கள் உள்ளதாகக் குறிப்பிட்டுள்ளனர். (மணிமலர் 76)* ***(43)***

***4878. கரித்தமூன்று எயிலுடைக் கணிச்சி வானவன்***
***எரித்தலைஅந்தணர் இழைத்த யானையை***
***உரித்தபேர்உரிவையால் உலகுக்கு ஓர்உறை***
***புரித்தனனாம்என, பொலியும் பொற்பதே.***

*(இருள்)*

***கரித்த -*** *கரியாக்கிய;* ***மூன்று எயில் உடை -*** *மூன்று மதில்களையுடைய;* ***கணிச்சி வானவன் -*** *(மழுவை ஏந்திய) சிவபிரான்;* ***அந்தணர் -*** *(தாருகவனத்தைச் சேர்ந்த) முனிவர்கள்;* ***எரித்தலை இழைத்த -*** *வேள்வியின் கண்ணே படைத்த;* ***யானையை -*** *யானையை;* ***உரித்த -*** *உரித்தெடுத்த;* ***பேர் உரிவையால் -*** *பெரிய தோலினாலே;* ***உலகுக்கு -*** *இந்த உலகத்துக்கு;* ***ஓர் உறை -*** *ஒரே உறையை;* ***புரித்தனன் ஆம் என -*** *அமைத்தான் ஆம் என்று கூறும்படி;* ***பொலியும் -*** *தெளிவான;* ***பொற்பது -*** *ஒப்புமை உடையது. எரித்த -எயிலுடைக் கணிச்சிவானவன் என்னும் தொடர் வடமொழியைப் பின்பற்றி அமைந்தது. அருங்கேடன் என்பது போல் (விளக்கம் - திருக்குறள் - நுண்பொருள் மாலை 46 - பக்). புரிந்தனன் நான்முகன் என்பது நல்ல பாடம் - பிரான் உரித்த தோல் நான்முகனால். பொற்பு - உவம உருபு - பொற்ப போல் (தொல் உவம 297) ஏ - அசை.*
***(44)***

***4879. அணங்கு அரா அரசர்கோன் அளவில் ஆண்டுஎலாம்***
***பணங்கிளர்தலைதொறும் உயிர்த்த பாய்விடம்***

***உணங்கலில்,உலகெலாம் முறையின் உண்டுவந்து***
***இணங்குஎரிபுகையொடும் எழுந்ததென்னவே.***

***அணங்கு*** *- வருந்துகின்ற;* ***அரா அரசர் கோன்*** *- பாம்புகளின் வேந்தனான ஆதிசேடன்;* ***அளவில் ஆண்டு எலாம்*** *- அளவற்ற ஆண்டு முழுவதும்;* ***பணங்கிளர் தலைதொறும்*** *- படம் விளங்குகின்ற தலைகள் தோறும்;* ***உயிர்த்த*** *- வெளிப்படுத்தி;* ***பாய்விடம்*** *- பரவிய நஞ்சினாலே;* ***உணங்கல்இல் உலகுஎலாம்*** *- கெடுதலில்லாத உலகங்கள் எல்லாவற்றையும்;* ***முறையின்*** *- கிரமப்படி;* ***உண்டு வந்து*** *- விழுங்கியதனால் வந்து;* ***இணங்கு எரி*** *- (எரிக்கும் பொருளொடும் ஒன்றுபட) உண்டாகிய அக்கினி;* ***புகையொடும்*** *- புகையுடன்;* ***எழுந்தது என்ன*** *- பரவியதைப் போல (இருள் பரந்த 47).*

*ஆதிசேடனின்தலைகள் தோறும் வெளிப்பட நஞ்சால் உலகத்தை எரித்த அக்கினி புகையுடன் பரவியதுபோல். உலகம், விடங்கலந்திருத்தலின் அதை எரித்த அக்கினி கருநிறம் பெற்றது. அன்றிப் புகையின் மிகுதியால் அக்கினி கறுத்தது என்றும் கொள்க. ஆதிசேடன் உலகத்தை அக்கினியால் எரிப்பான் என்பது மரபு. அரங்கர் சயனமுறக் காற்றுப் புலரும்படி முதல் வீசும் கார் ஆழித்தீச் சுடும் (திருவரங்க மாலை 17). இதுவும் அடுத்த பாடலும் ஒரு தொடர் - எரி எழுந்தது என்ன (46) புகை விரிந்தது என்ன (47) இருள் பரந்த ஆயிடை எனச் சேர்க்க. எழுந்தது,பரவியது, நாமத் தன்மை நன்கலம் படி எழ (பரிபாடல் 15-25). ஏ - அசை.* ***(45)***

***4880. வண்மைநீங்கா நெடுமரபின் வந்தவன்,***
***பெண்மை நீங்காதகற்புடைய பேதையை***
***திண்மைநீங்காதவன் சிறைவைத்தான்எனும்,***
***வெண்மைநீங்கியபுகழ் விரிந்தது என்னவே.***

***வண்மை நீங்கா*** *- கொடைப்பண்பிலிருந்து விலகாத;* ***நெடுமரபின்*** *- உயர்ந்த குலத்திலே;* ***வந்தவன்*** *- பிறந்த இராவணன்;* ***பெண்மை நீங்காத*** *- பெண்மைத் தன்மை குறையாத;* ***கற்புடைய*** *- கற்பைப் பெற்றிருக்கும்;* ***பேதையை*** *- சீதா பிராட்டியை;* ***திண்மை நீங்காதவன்*** *- வலிமை குறையாதஇராவணன்;* ***சிறை வைத்தான்*** *- சிறையிலே அடைத்து விட்டான்;* ***எனும்*** *- என்று பலரால் பேசப்படும்;* ***வெண்மை நீங்கிய புகழ்*** *- வெள்ளிய நிறம் நீங்கப்பெற்ற அவப் புகழானது;* ***விரிந்தது என்ன*** *- பரவியது என்று கூறும்படி (இருள் பரந்த).*

*இராவணன்பிராட்டியைச் சிறை வைத்தமையால் வெள்ளிய நிறம் நீங்கப் பெற்ற புகழ் விரிந்தாற்போல. (இருள் பரந்த) இராவணன் புலத்தியன் மரபில் பிறந்தவன் ஆதலின் வண்மை நீங்கா நெடுமரபு என்று பேசப்பட்டது. புகழின் நிறம் வெண்மை என்பது நற்புகழுக்கு ஆகும் - இது அவப்புகழ் ஆதலின் இருள் நிறமாயிற்று.*

*நெடுமரபில்வந்தவன் இராமபிரான் எனப் பொருள் கொண்டு இராமபிரானுக்கு உரிய பிராட்டியைச் சிறையில் வைத்தவனுடைய வெண்மை நீங்கிய புகழ் என்று பொருள் கூறினாரும் ஊர் (வை.மு.கோ.) ஏ அசை.* ***(46)***

*இருளில்அரக்கர் இயங்கல்*

***4881. அவ்வழிஅவ்இருள் பரந்த ஆயிடை
எவ்வழிமருங்கினும் அரக்கர் எய்தினார்;
செவ்வழிமந்திரத் திசையர் ஆகையால்
வெவ்வழிஇருள்தர, மிதித்து, மீச்செல்வார்.***

*__அவ்வழி__ - அவ்விடத்தில்; __அவ் இருள்__ - (விடம் போலவும் வெண் மைநீங்கிய புகழ் போலவும் உள்ள) அந்த இருளானது; __பரந்த ஆயிடை__ - பரவியஅப்பொழுது; __அரக்கர்__ - இராக்கதர்கள்; __செவ் வழி__ - செம்மையானமுறையின்; __மந்திரத் திசையர்__ - மந்திர ஆற்றலால் நினைத்த திசையில்செல்லவல்லவர்; __ஆகையால்__ - ஆதலால்; __வெவ்வழி__ - கொடிய வழியை. __இருள்தர__ - இருளானது காண்பிக்க; __மிதித்து__ - (அதைப்படியாக் கொண்டு)மிதித்துக் கொண்டு; __மீச் செல்வார்__ - மேல்நோக்கிப் போகின்றவராய்; __எவ்வழி மருங்கினும்__ - எந்த வழியிலும் எல்லாப்பக்கங் களிலும்; __எய்தினார்__ - போயினார். இருள் பரவியசமயத்தில் - அரக்கர் - மந்திரவன்மையால் இருளை மிதித்துச் சென்றனர். அரக்கரை நிசிசரர் என்பர் - அது இங்கு கற்பனை ஆற்றலால் பேசப்படுகிறது. மனிதர்களுக்குத் தடையான இருள் அரக்கர்களுக்குப் படியாயிற்று. __(47)__*

***4882. இந்திரன்வளநகர்க்கு ஏகுவார்; எழில்
சந்திரன்உலகினைச் சார்குவார்; சலத்து
அந்தகன்உறையுளை அணுகுவார்; அயில்
வெந்தொழில்அரக்கனது ஏவல் மேயினார்.***

*__அயில்__ - வேற்படையுடைய; __வெந்தொழில்__ - கொடுந் தொழிலைச் செய்யும்; __அரக்கனது ஏவல்__ - இராவணனுடைய கட்டளையை; __மேயினார்__ - தலையில் சுமந்த இராக்கத வீரர்கள்; __இந்திரன்__ - இந்திரனுடைய; __வளநகர்க்கு ஏகுவார்__ - வளம் மிக்க நகருக்குச் செல்வார்கள்; __எழில்__ - அழகுமிக்க; __சந்திரன் உலகினைச் சார்குவார்__ - சந்திரனுடைய உலகை அடைவார்கள்; __சலத்து__ - வஞ்சனையால்; __அந்தகன் உறையுளை__ - எமன் தங்கியிருக்கும் உலகத்தை; __அணுகுவார்__ - நெருங்குவார்கள்.*

*அரக்கன்ஏவலாளர் இந்திரன் முதலான தேவர்களின் தலைநகரை அடைவார்கள். இராவணனின் ஆணை பரவிய இடம் பேசப்பட்டது. செய்வினைக்குத் தக்க தண்டனை உண்டு என்பதை மெய்ப்பிக்கும் நகரம் அந்தகன் உறையுள். ஆதலின் அங்கு அரக்கர்கள் விரும்பிச் செல்லார். ஆதலின் சலத்து அந்தகன் உறையுளை அணுகுவர் என்று கூறப்பெற்றது. 'சலித்து' என்று பாடம் கொண்டு வெறுத்துச் செல்வர் எனச் சொல்லலும் ஒன்று. __(48)__*

***4883. பொன்னகர்மடந்தையர், விஞ்சைப் பூவையர்
பன்னகவனிதையர், இயக்கர் பாவையர்,
முன்னின பணிமுறைமாறி முந்துவார்,
மின்இனம்மிடைந்தென விசும்பின் மீச்செல்வார்.***

*__பொன் நகர்மடந்தையர்__ - தேவலோக மகளிர்களும்; __விஞ்சைப் பூவையர்__ - வித்தியாதரப் பெண்களும்; __பன்னக வனிதையர்__ - நாக கன்னியர்களும்; __இயக்கர் பாவையர்__ - யட்ச மங்கையர்களும்; __முன்னின பணி__ - (தாங்கள்) ஏற்றுக்கொண்டு செய்து*

*முடித்த வேலையானது;* ***முறைமாறி -*** *கிரமப்படி மாறுகின்ற காரணத்தால்;* ***முந்துவார் -*** *விரைபவராய்;* ***விசும்பின் -*** *ஆகாயத்திலே;* ***மின்இனம்மிடைந்தென -*** *மின்னல்கூட்டம் நெருங்குவது போல்;* ***மீச்செல்வார் -*** *மேலே போவார்கள்.*

*பணி செய்துமுற்றிய மகளிர்கள் தம் பணியைப் பிறர்பால் ஒப்படைத்துவிட்டு விண்ணில் செல்வது மின்னற்கூட்டம் நெருங்குவது போல் உள்ளது. முந்துவார் - முந்தி, முற்றெச்சமாகக் கொள்ளப்பட்டது. முறை மாறுதல் - தம்பணியைப் பிறர்பால் ஒப்படைத்தல். சிலம்பில் மாதரி, 'நெய் முறை நமக்கு இன்று' என்று கூறியதைக் கருதுக. இவர்கள்பகற்பணியாளர்கள்.பகற்பணிக்கு மகளிரும் இரவுப் பணிக்கு ஆடவரும் அமைந்தனர் போலும்.* ***(49)***

***4884. தேவரும் அவுணரும் செங்கண் நாகரும்***
***மேவரும் இயக்கரும், விஞ்சை வேந்தரும்,***
***ஏவரும் விசும்புஇருள்இரிய ஈண்டினார்,***
***தாஅரும் பணிமுறைதழுவும் தன்மையார்.***

***தேவரும் அவுணரும்-*** *தேவர்களும் அசுரர்களும்;* ***செங்கண் நாகரும்-*** *சிவந்த கண்களையுடைய நாகலோகத்தவர்களும்;* ***மேவுஅரும் இயக்கரும் -*** *எல்லோரும் விரும்பும் யட்சர்களும்;* ***விஞ்சை வேந்தரும் -*** *வித்தியாதரத்தலைவர்களும்;* ***யாவரும் -*** *(கூறப்பெறாத) மற்றவர்களும்;* ***தா அரும் பணி -*** *தீமை அற்ற வேலைகளை;* ***முறை தழுவும் -*** *கிரமப்படி மேற்கொள்ளும்;* ***தன்மையார் -*** *இயல்பை உடையவராய்;* ***விசும்பு -*** *ஆகாயத்தின்கண்;* ***இருள்இரிய -*** *இருளானது சிதறி ஓடும்படி;* ***ஈண்டினார் -*** *ஒன்று கூடினார்கள்.*

*தேவர்கள்முதலானவர்கள், தங்கள் தங்கள் பணியைச் செய்ய இருள் சிதறியோடும்படி விண்ணில் ஒன்று கூடினர். அவுணர் - அசுரர் - இவர்கள் இரவில் பணிபுரிபவர்.* ***(50)***

***4885. சித்திரப்பத்தியின் தேவர் சென்றனர்***
***இத்துணைதாழ்த்தனம்; முனியும் என்றுதம்***
***முத்தின்ஆரங்களும் முடியும் மாலையும்***
***உத்தரீ யங்களும்சரிய ஓடுவார்,***

***சித்திரப்பத்தியின் -*** *ஓவியங்களின்வரிசைபோல;* ***சென்றனர் தேவர் -*** *சென்று கொண்டுள்ள தேவர்கள்;* ***இத்துணை தாழ்த்தனம் -*** *இவ்வளவு நேரம்தாமதித்து விட்டோம்;* ***முனியும் என்று -*** *(இராவணன்) கோபிப்பான் என்றுகருதி (அச்சமுற்று);* ***தம் -*** *தம்முடைய;* ***முத்தின் ஆரங்களும் -*** *முத்துக்கள் கோக்கப் பெற்ற ஆரங்களும்;* ***முடியும் மாலையும் -*** *கிரீடங்களும் பூமாலைகளும்;* ***உத்தரீயங்களும் -*** *மேலாடைகளும்;* ***சரிய -*** *நழுவி விழும்படி;* ***ஓடுவார் -*** *ஓடுவார்கள். இராவணன்தேவர்கள்பால் பகையுடையான் ஆதலின் அவர்கள் பணிவில் காலதாமதம் நேர்ந்தால் சினப்பான். அவுணர் முதலானவர்கள் அரக்கர்களின் செல்லப் பிள்ளைகள் போலும். இராவணன்கொடுங்கோன்மை கூறப்பட்டது.* ***(51)***

*நிலவு தோன்றிப்பரவுதல்*

***4886. தீண்டஅருந் தீவினை தீக்கத் தீந்து போய்***
***மாண்டு அறஉலர்ந்தது; மாருதிப் பெயர்***
***ஆண்தகைமாரிவந்து அளிக்க, ஆயிடை***
***ஈண்டு அறம்முளைத்துஎன முளைத்தது இந்துவே.***

***தீண்ட அரு -*** *எவரும்அணுக முடியாத (கொடிய);* ***தீவினை -*** *தீய பாவங்கள்;* ***தீக்க -*** *சுட்டுப் பொசுக்க;* ***தீந்து போய் -*** *கருகிப் போய்;* ***அறம் -*** *அறமானது (தருமமானது);* ***மாண்டு -*** *மடிந்து;* ***அற உலர்ந்தது -*** *பசையற்றுக் காய்ந்து போயிற்று;* ***மாருதிப் பெயர் -*** *மாருதி என்னும் பெயரைப் பெற்ற;* ***ஆண்தகை மாரி -*** *ஆண்மை மிக்க மழையானது;* ***வந்து அளிப்ப -*** *இலங்கைக்கு வந்து திருவருள் செய்ய;* ***ஆயிடை -*** *அப்போது;* ***ஈண்டு -*** *இந்த உலகத்தில்;* ***முளைத்து என -*** *முளைத்தால் போல;* ***இந்து -*** *சந்திரன்;* ***முளைத்தது -*** *உதயம் ஆயிற்று.*

*தீவினையால்தீய்ந்துபோன தருமம், அனுமன் என்னும் மழையால் மீய முளைத்ததைப் போல சந்திரன் உதித்தான் மீண்டு அறம் முளைத்த வெண்ணிலா' என்ற பாடமும் சிறப்புடைத்து.* ***(52)***

***4887. வந்தனன்இராகவன் தூதன்; வாழ்ந்தனன்***
***எந்தையேஇந்திரன் ஆம் என்று ஏமுறா***
***அந்தம்இல்கீழ்த்திசை அளகவாள் நுதல்***
***சுந்தரிமுகம்எனப் பொலிந்து தோன்றிற்றே.***

***(முளைத்த இந்து)***

***இராகவன் தூதன் -*** *இராமபிரானுடைய தூதனாகிய அனுமன்;* ***வந்தனன்-*** *இலங்கைக்கு வந்துவிட்டான் (அதனால்);* ***இந்திரனாம் -*** *இந்திரனாகிய;* ***எந்தையே -*** *என்னுடைய தந்தையே;* ***வாழ்ந்தனன் -*** *நல்வாழ்வுபெற்றுவிட்டான்;* ***என்று -*** *என்று நினைத்து;* ***ஏம்உறா -*** *மகிழ்ச்சியடைந்து;* ***அந்தம் இல் -*** *எல்லை இல்லாத;* ***கீழ்த்திசை -*** *கிழக்குத் திசையாகிய;* ***அளகவாள் நுதல் சுந்தரி -*** *சுருள்குழல் அசையும் நெற்றியையுடையசுந்தரியின்;* ***முகம் என -*** *முகம்போல;* ***பொலிந்து தோன்றிற்று -*** *வெளிப்பட்டது. அனுமன்இலங்கைக்கு வந்ததால் இந்திரன் வாழ்வுபெறுவான், என்று கிழக்குத் திசைப் பெண்ணின் முகம் போலச் சந்திரன் தோன்றினான். சந்திரன் ஆரம்பத்தில் அறம்போல முளைத்தான் இப்போது அவன் சுந்தரியின் முகம்போலப் பொலிந்தான். மனைவி கணவனைத் தந்தைஎன்று கூறாள், என்று கருதி 'எந்தை' என்பதற்கு'தலைவன்' என்று உரை கூறினார்கள். சங்க காலத் தலைவி, தலைவனை,அன்னையும் அத்தனும் அல்லரோ' என்று பேசினாள் (குறுந்-93).* ***சுந்தரி*** *- இந்திராணியையும் குறிக்கும். 'கிழக்குத்திசைப் பெண்ணை - இந்திரன் மனைவி'என்றான் கவிச்சக்கரவர்த்தி.* ***அளகம் -*** *முன்நெற்றி மயிர். அது சிறிதேவளர்ந்து நெற்றியில் அசையும்'* ***மஞ்சொக்கும் அளக ஓதி'*** *(கம்ப. 3136). இனிஇந்திரனே சுவாமி ஆவான் எனச் சந்தோஷத்துடன் சந்திரன் எழுந்தது. இவ்உரையின்படி' ஏமுற்று என்ற எச்சம் இந்துவைச் சாரும். சந்திரன் இந்திரன்எந்தையென்று போற்றுகிறான்.* ***(53)***

***4888. கற்றைவெண்கவரிபோல் கடலின் வெண்திரை***
***சுற்றும் நின்றுஅலமர, பொலிந்து தோன்றிற்றால்-***

***'இற்றது என்பகை'என எழுந்த இந்திரன்***
***கொற்றவெண்குடைஎனக் குளிர்வெண் திங்களே.***

***என்பகை*** *- என்னுடையஅரக்கப் பகை;* ***இற்றது என*** *- இறந்துவிட் டதுஎன்று (பூரித்து);* ***எழுந்த*** *- (உலாவச் செல்லப்) புறப்பட்ட;* ***இந்திரன்*** *- இந்திரனுடைய;* ***வெண்கொற்றக்குடை என*** *- வெண்கொற்றக் குடை போல;* ***குளிர்வெண்திங்கள்*** *- குளிர்ந்த வெள்ளிய பூரண சந்திரன்;* ***கடலின்வெண்திசை*** *- கடலில் உள்ள வெண்மையான அலைகள்;* ***கற்றை*** *- தொகுதியான;* ***வெண்கவரி போல்*** *- வெண்சாமரையைப் போல;* ***சுற்றி நின்று அலமர*** *- சுற்றுப் பக்கத்தில் இருந்து சுழன்று சுழன்று அசைய;* ***பொலிந்து தோன்றிற்று*** *- பொலிவு பெற்று விளங்கிற்று.*

*எழுந்த -புறப்பட்ட 'அருட்கொம்பு ஆயினான் எழுந்திலன்' (கம்ப. 754.) ஆல், அசை.* ***(54)***

***4889. தெரிந்துஒளிர் திங்கள் வெண்குடத்தினால், திரை***
***முரிந்து உயர்பாற்கடல் முகந்து, மூரிவான்***
***சொரிந்ததேஆம்என துள்ளும் மீனொடும்,***
***விரிந்தது;வெண்நிலா மேலும் கீழுமே.***

***மூரிவான்*** *- பெரியஆகாயம்;* ***தெரிந்து*** *- உலகுக்கு நன்மை செய்ய எண்ணி;* ***ஒளிர்*** *- ஒளிவீசுகின்ற;* ***திங்கள் வெண்குடத்தினால்*** *- சந்திரனாகியகுடத்தினாலே;* ***திரை முரிந்து உயர்*** *- அலைகள் மடங்கி மடங்கி எழுகின்ற;* ***பாற்கடல் முகந்து*** *- பாற்கடலையே முகந்தெடுத்து;* ***சொரிந்ததே என*** *- கொட்டியது என்று கூறும்படி;* ***வெண்நிலா*** *- வெண்மையான நிலாவெளிச்சம்;* ***மேலும் கீழும்*** *- மலைப்புறத்திலும், தரைப்புறத்திலும்;* ***துள்ளும்*** *- துள்ளுகின்ற;* ***மீனொடும் விரிந்தது*** *- நட்சத்திரங்களுடன் பரவிற்று.*

*ஆகாயம் உலகுக்குநன்மை செய்ய எண்ணிப் பாற்கடலையே முகந்தெடுத்துப் பொழிந்தாற் போல நிலாவின் வெளிச்சம் எங்கும் பரவிற்று (கம்ப.549) மூரிவான் - எழுவாய்; சொரிந்தது - பயனிலை. ஆம், ஏ, அசைகள்* ***(55)***

***4890. அருந்தவன்சுரபியே, ஆதி வான்மிசை***
***விரிந்தபேர்உதயமா, மடிவெண் திங்களா,***
***வருந்தல்இல்பசுங்கதிர் வழங்கு தாரையா***
***சொரிந்தபால்ஒத்தது நிலவின் தோற்றமே.***

***அருந்தவன்*** *- அரியதவம் புரிந்த வசிட்டனுக்குரிய;* ***சுரபி*** *- காமதேனு;* ***ஆதி வான் மிசை*** *- கிழக்கு வானத்திலே;* ***விரிந்த*** *- விரிவுபெற்ற;* ***பேர்உதயமா*** *- பெரிய உதய கிரியாகவும்;* ***மடி*** *- அப்பசுவின் மடி;* ***வெண்திங்களா*** *- வெண்மையான பூரண மதியமாகவும்;* ***பசுங்கதிர்*** *- அந்தமதியின் பசுமையான கதிர்கள்;* ***வருந்தல் இல்*** *- வருந்துதல் இல்லாமல் (உவப்புடன்);* ***வழங்கு தாரையா*** *- (அப்பசு) பொழிகின்ற பீர்களாகவும்;* ***நிலவின் தோற்றம்*** *- நிலாவெளிச்சத்தின் காட்சி;* ***சொரிந்த பால் ஒத்தது*** *- எவ்விடத்தும் கொட்டப்பட்ட பால் வெள்ளம் போன்றது.*

*வசிட்டனுக்குஉரிய காமதேனு உதயமலையாகவும், அப்பசுவின் மடி பூரணச் சந்திரனாகவும் சந்திரனின் கதிர்கள் பசு பொழிகின்ற பீர்களாகவும் அந்த நிலாவின் வெளிச்சம் எங்கும் சொரிந்த பாலாகவும் பேசப்பட்டன.*

*உதயகிரி - பசு.திங்கள் மடி - கதிர் - பீர். நிலவு - வெள்ளம் உதயம் - உதயகிரி. முடி நாட்டிய கோட்டு உதயத்து முற்றம் உற்றான் (ஆரண் - அயோமுகி 30) ஆதிவான் - சூரியன் உதிக்கும் வானம். ஆதிவான் - அந்திவான் - ஒப்பிடுக.* ***(56)***

***4891. எண்ணுடைஅனுமன்மேல் இழிந்த பூமழை***
***மண்ணிடைவீழ்கில; மறித்தும் போகில;***
***அண்ணல் வாள்அரக்கனை அஞ்சி ஆய்கதிர்***
***விண்ணிடைத்தொத்தின போன்ற, மீன்எலாம்.***

***மீன் எலாம் -** நட்சத்திரங்கள் யாவும்; **எண்ணுடை -** யாவராலும் மதிக்கப் பெறும்; **அனுமன்மேல் -** அனுமனின் திருமேனிமேல்; **இழிந்த பூ மழை -** (தேவர்களால்) (தூவப்பெற்று) இறங்கிய பூமாரி; **அண்ணல் -** பெருமைமிக்க; **வாள் அரக்கனை அஞ்சி -** கொடிய இராவணனுக்குப் பயந்து; **மண்ணிடை வீழ்கில -** பூமியில்விழாதனவாயும்; **மறித்தும் போகில -** திரும்பி மேலேசெல்லாதனவாயும்; **ஆய்கதிர் -** அசைகின்ற ஒளியைப் பெற்றுள்ள; **விண்ணிடை -** ஆகாயத்தில்; **தொத்தின போன்ற -** தொத்திக் கொண்டிருப்பன போன்றுள்ளன.*

*ஆய்கதிர் -அசைகின்ற கதிர். திருக்கோவை (125) வாள் அரக்கன் - வாளை ஏந்திய அரக்கன் என்றும் கூறலாம். மீன்களை அமரர் தூவிய மலராகப் பேசும் பெரிய திருவந்தாதி (61). சேவடி மேல் மண்ணளந்த அந்நாள்--வானாடர்--பூத்தெளித்தால்--விசும்பின்--மீன், என்று பேசும்.* ***(57)***

***4892. எல்லியின்நிமிர்இருட் குறையும், அவ்இருள்***
***கல்லியநிலவின்வெண் முறியும், கவ்வின;***
***புல்லிய பகைஎனப்பொருவ போன்றன-***
***மல்லிகைமலர்தொறும் வதிந்த வண்டுஎலாம்.***

***மல்லிகை மலர்தொறும் -** மல்லிகைப் பூக்கள்தோறும்; **வதிந்த -** மொய்த்திருக்கின்ற; **வண்டு எலாம் -** வண்டுகள் யாவும்; **எல்லியின் -** இரவுக் காலத்திலே; **நிமிர் -** செருக்குக் கொள்ளும்; **இருள் குறையும் -** இருளின் துண்டங்களும்; **அங் இருள் -** அந்த இருளை; **கல்லிய -** பெயர்த் தெடுத்த; **நிலவின் வெண்முறியும் -** சந்திரனின் வெள்ளிய துண்டங்களும்; **கவ்வின -** (தமக்குள்) கடித்துப் பிடுங்கி (எதிரியை); **புல்லிய பகையென -** அற்பப்பகை என்று கருதி; **பொருவ போன்றன -** போராடுவது போன்றிருந்தன.*

*மல்லிகைப்பூவில் வண்டுகள் மொய்ப்பது, இருளின் துண்டமும் நிலவின் துண்டமும், தம்முள் கடித்துப் பிடிங்கிப் போராடுவது போன்றிருந்தது. சந்திரனால் ஒழிந்த இருள் துண்டம் துண்டமாகி, அந்தச்சந்திரன் எடுத்தசிற்றுருவில் போர் பண்ணுகிறது போல. மல்லிகை, சந்திரன் எடுத்த சிற்றுரு. (பழைய உரை). கவ்வுதல் - கடித்துப் பிடுங்குதல். (நாலடி 70.)* ***(58)***

***4893. வீசுறு பசுங்கதிர்க் கற்றை வெண்நிலா
ஆசுற எங்கணும்நுழைந்து அளாயது
காசுஉறு கடிமதில்இலங்கைக் காவல்ஊர்த்
தூசு உறையிட்டதுபோன்று தோன்றிற்றே.***

***வீசுறும்*** - *திசைகள்தோறும் பரப்புகின்ற;* ***பசும்*** - *பசுமையான;* ***கதிர்கற்றை*** - *கிரணத் தொகுதிகளையுடைய;* ***வெண்நிலா*** - *வெண்மையான சந்திரன்;* ***ஆசு உற*** - *வேகமாக;* ***எங்கணும்*** - *எல்லா இடங்களிலும்;* ***நுழைந்து அளாயது*** - *புகுந்து கலந்திருப்பது;* ***காசு உறு*** - *மணிகள் பதித்த;* ***கடிமதில்*** - *விளக்கமான மதில்களால்;* ***காவல்*** - *காக்கப் பெறுகின்ற;* ***இலங்கை ஊர்*** - *இலங்கை நகருக்கு;* ***தூசு*** - *வெண்மையான மெல்லிய ஆடையால் (அமைந்த);* ***உறையிட்டது போன்று தோன்றிற்று*** - *போர்வை இட்டாற்போலக் காட்சி தந்தது.*

*வெண்ணிலாஎங்கணும் புகுந்து கலந்திருப்பது வெள்ளைப் போர்வையை இலங்கைக்குப் போர்த்தினாற் போன்றிருந்தது.*

*பசும் -குளிர்ந்த, பசுநிலா விரிந்த பல்கதிர் மதி (அகம்.57) தூசு - வெள்ளாடை. ஏ. அசை.* ***(59)***

***4894. இகழ்வுஅரும்பெரும் குணத்து இராமன் எய்ததுஓர்
பகழியின்செலவுஎன, அனுமன் பற்றினால்,
அகழ்புகுந்துஅரண்புகுந்து இலங்கை, அன்னவன்
புகழ்புகுந்துஉலாயது ஓர் பொலிவும் போன்றதே.***

*(வெள்நிலா)*

***அனுமன்பற்றினால்*** - *அனுமனின் தொடர்பால்;* ***இகழ்வு அரும்*** - *பழிக்கப்படுதல் இல்லாத;* ***பெருங்குணத்து*** - *சிறந்த பண்புகளைப் பெற்ற;* ***இராமன் எய்தது*** - *இராமபிரானால் ஏவப் பெற்ற;* ***ஓர் பகழியின் செலவு என*** - *ஒப்பற்ற அம்பின் பயணம் போல;* ***அன்னவன் புகழ்*** - *அந்த இராமபிரானின் புகழானது;* ***அகழ் புகுந்து*** - *அகழி கடந்து புகுந்தும்;* ***இலங்கை புகுந்து*** *-இலங்கை மாநகருக்குள்புகுந்தும்;* ***உலாயது*** - *பரவியதாகிய;* ***ஓர்*** - *ஒப்பற்ற;* ***பொலிவு போன்றது*** - *விளக்கம் போன்றிருந்தது.*

*(வெண்நிலவு)அனுமன் தொடர்பால் இராமபிரான் புகழ் அகழ் முதலான இடங்களில் அவன் ஏவும் அம்புபோல் பரவியது.*

*மேற்பாட்டில்கூறப்பெற்ற வெண்நிலவின் ஒளி இப்பாட்டிலும் பேசப்படுகிறது. பொலிவும் - இதில் உள்ள உம் - அசை. பகழியின் செலவை அனுமனுக்கு ஏற்றிக் கூறுவாரும் உளர். ஏற்பின் கொள்க. 'செலவு என' என்னும் தொடரை ஆய்க. ஏ.அசை.* ***(60)***

*அனுமன் மதில்கண்டு வியத்தல்*

***4895. அவ்வழிஅனுமனும், அணுக லாம்வகை***
***எவ்வழி என்பதைஉணர்வின் எண்ணினான்;***
***செவ்வழிஒதுங்கினன், தேவர் ஏத்தப் போய்***
***வெவ்வழிஅரக்கர் ஊர் மேவல் மேயினான்.***

***அனுமன் -*** *அனுமன்;* ***அவ்வழி -*** *அந்தச் சமயத்தில்;* ***அணுகல் ஆம் வகை -*** *இலங்கையில் நுழையும் முறை;* ***எவ்வழி என்பதை -*** *எந்தமுறை என்பதை;* ***உணர்வின் எண்ணினான் -*** *அறிவினால் ஆராய்ந்து (பிறகு);* ***செவ்வழி -*** *(இலங்கைக்கு அமைந்த) நேரான வழியில் செல்லாமல்;* ***ஒதுங்கினன் -*** *விலகினவனாய்;* ***தேவர் ஏத்த -*** *தேவர்கள் கொண்டாட;* ***போய் -*** *வேறுவழியாகச் சென்று;* ***வெவ்வழி -*** *கொடிய வழியில் செல்லும்;* ***அரக்கர் ஊர் -*** *அரக்கருடைய இலங்கையை;* ***மேவல் மேயினான் -*** *அடைய முற்பட்டான்.*

*இலங்கையில்எம்முறைப்படி செல்வது என்பதை ஆராய்ந்த அனுமன் (அரக்கர்கள் அமைத்த) செவ்வழியில் போகாமல் வேறு வழியாகச் சென்றான். வால்மீகம், அனுமன் வழியில்லா இடத்தில் பிரவேசித்தான் என்று கூறும் (சுந்த 4 சர்க்கம் 1)* ***(61)***

***கலிவிருத்தம்***

***4896. ஆழிஅகழாக, அருகா அமரர் வாழும்***
***ஏழ் உலகின்மேலைவெளி காறும், முகடேறக்***
***கேழ் அரியபொன்கொடு சமைத்த, கிளர்வெள்ளத்து***
***ஊழிதிரி நாளும்உலையா மதிலை உற்றான்.***
***(அனுமன்)***

***ஆழி அகழ் ஆக -*** *கடலையேஅகழாகக் கொண்டு;* ***அருகா -*** *அழியாத;* ***அமரர் வாழும் -*** *தேவர்கள் வாழ்கின்ற;* ***ஏழ் உலகின் -*** *ஏழு உலகங்களுக்கும்;* ***மேலை வெளிகாறும் -*** *மேலே உள்ள வெட்ட வெளி வரையிலும்;* ***முகடு ஏறி -*** *உச்சியானது உயர்ந்து சென்று;* ***கேழ் -*** *ஒளியுடைய;* ***அரிய பொன் கொடு -*** *சிறந்த பொன்னைக் கொண்டு;* ***சமைத்த -*** *அமைக்கப் பெற்ற;* ***கிளர் வெள்ளத்து -*** *சீறுகின்ற வெள்ளப் பெருக்கால்;* ***ஊழி -*** *யுகமானது;* ***திரிநாளும் -*** *மாற்றம் அடைகின்ற காலத்திலும்;* ***உலையா மதிலை -*** *வேறுபாடடையாத மதிலை;* ***உற்றான் -*** *அடைந்தான்.*

*ஏழ் உலகின் -இன் - அசை. மருள் நோக்கு என்பதைத் தேவர் மருளின் நோக்கு என்றார். நச்சர். இன் 'அசை' என்றார். (சிந்தா - 2290) மா - காய் - காய் - மா என்னும் சீர்களைப் பெற்று வரும் (மணிமலர் 76).* ***(62)***

***4897. கலங்கல்இல் கடுங்கதிர்கள், மீது கடிது ஏகா,***
***அலங்கல் அயில்வஞ்சகனை அஞ்சி, எனின்***
***அன்றால்***
***இலங்கை மதில்இங்கு இதனை ஏறல்அரிது என்றே***
***விலங்கிஅகல்கின்றன, விரைந்து என வியந்தான்.***

***கலங்கல் இல் -*** *நிலையிலிருந்து பிறழாத;* ***கடுங்கதிர்கள் -*** *வெப்பமானசூரியர்கள்;* ***அலங்கல்அயில் -*** *வெற்றிமாலையணிந்த வேலேந்திய;* ***வஞ்சகனை -*** *வஞ்சகனாகிய*

*இராவணனுக்கு;* ***அஞ்சி -*** *பயப்பட்டு;* ***மீது -*** *இலங்கை நகருக்கு மேலே;* ***கடிது ஏகா எனின் -*** *வேகமாகப் போகாது என்றுகூறப்பெறின் (அது);* ***அன்று*** *உண்மையன்று;* ***இங்கு -*** *இங்கே தெரிகின்ற;* ***இலங்கை மதில்தனை -*** *இலங்கையின் மதிலை;* ***ஏறல் அரிது -*** *கடந்துபோவது கடினம்;* ***என்று -*** *என்று மனத்திலே நினைந்து;* ***விரைந்து -*** *வேகமாக;* ***விலங்கி அகல்கின்றன -*** *ஒதுங்கி அப்பாற் போகின்றன;* ***எனவியந்தான் -*** *என்று (அனுமன்) அதிசயமுற்றான்.*

*கதிர்கள்பன்னிரண்டு என்பது புராண வழக்கு. இதுபற்றிக் கதிர்கள் என்றான். கடுங்கதிர் என்றதனால் சூரியர்கள் பேசப்படுகின்றார்கள். ஊர்தேடு படலம் 21 ஆம் பாடல் இந்தக் கருத்தையே பேசிற்று. அங்கு சூரியனே குறிக்கப் பெறுகிறான். கதிர்கள், சூரியனின் கிரணங்கள் என்று பொருள் செய்தாரும் உளர். மதிள் இஞ்சிதனைஏறல் - என்னும் பாடம் இருந்ததுபோலும் பாகார் இஞ்சிப் பொன்மதில் (கம்ப. 4916.) என்னும் பகுதியை நினைக்கவும்.* ***(63)***

***4898. தெவ் அளவுஇலாத; இறை தேறல் அரிது அம்மா !***
***அவ்வளவு அகன்றதுஅரண், அண்டம் இடையாக***
***எவ் அளவின்உண்டு வெளி ! ஈறும், அது ! என்னா,***
***வெவ்வள அரக்கனைமனக்கொள வியந்தான்.***

***தெவ் -*** *இராவணன் கவர்ந்தபொருள்கள்;* ***அளவு இலாத -*** *அளவற்றுள்ளன;* ***இறை தேறல் -*** *(அதுபற்றி) சிறிய அளவு தெளிதலும்;* ***அரிது -*** *மிகக் கடினம்;* ***அரண் -*** *(அப்பொருள் குவித்துள்ள) கோட்டையானது;* ***வெளி -*** *ஆகாயம்;* ***அண்டம் இடை ஆக -*** *அண்டங்கள் தங்குவதற்கு இடமாக;* ***எவ் அளவின் உண்டு -*** *எந்த அளவுக்கு இருக்கிறதோ;* ***அவ்அளவு -*** *அந்த அளவுக்கு;* ***அகன்றது -*** *பரந்திருக்கிறது;* ***ஈறும் -*** *கோட்டையின் உயர்வும்;* ***அது -*** *அந்த ஆகாயம் போன்றது;* ***என்னா -*** *என்று கருதி;* ***வெவ்வள அரக்கனை -*** *கொடுஞ்செல்வம் பெற்ற இராவணனை;* ***மனக்கொள -*** *மனம் கொள்ளும்படி;* ***வியந்தான் -*** *அதிசயித்தான்.*

*இடை - இடம்.தெவ்வுதல் - கொள்ளையடித்தல் அது - அதுபோன்றதே. (திருக்குறள் நுண்மாலை) மணங்கொள என்பது மணக்கொள என வந்தது வழி எதுகை நயங்கருதினான் போலும்.* ***(64)***

***4899. மடங்கல்அரியேறும், மதமால் களிறும், நாண***
***நடந்து தனியேபுகுதும் நம்பி, நனிமூதூர்***
***அடங்குஅரிய தானைஅயில் அந்தகனது ஆணைக்***
***கடுந்திசையின்வாய்அனைய-வாயில்எதிர்கண்டான்.***

***மடங்கல்(உம்) -*** *ஊழித்தீயும்;* ***அரியேறும் -*** *ஆண்சிங்கமும்;* ***மதம் -*** *மதங்கொண்ட;* ***மால்களிறும் -*** *பெரிய யானையும்;* ***நாண -*** *வெட்கமடையும்படி;* ***தனியே -*** *தனியாக;* ***நனிமூதூர் -*** *பழமையான இலங்கைக்குள்;* ***நடந்து புகுதும் நம்பி -*** *நடந்து புகும் அனுமன்;* ***அடங்கு அரிய -*** *பிறருக்கு அடங்காத;* ***தானை -*** *சேனையையும்;* ***அயில் -*** *சூலாயுதத்தையும் (பெற்ற);* ***அந்தகனது -*** *யமனுடைய;* ***ஆணை -*** *கட்டளைகள் நிறைவேற்றப்படும்;* ***திசையின் -*** *தெற்குத் திசையின்;* ***கடும் வாய் அனைய -*** *கொடுமை மிக்க வாய்போன்ற;* ***வாயில் -*** *(இலங்கையின்) கோபுரவாயிலை;* ***எதிர்கண்டான் -*** *கண்*

*எதிரில் பார்த்தான். மடங்கல் -ஊழித்தீ. 'கொழுந்துவிட்டு அழன்று எரி மடங்கல்' (கம்ப. 7727). மடங்கலும் என்பது மடங்கல் என வந்தது 'உம்மைத் தொகை'.* ***(65)***

***4900. மேருவை நிறுத்தி வெளி செய்தது கொல் ? விண்ணோர்***
***ஊர்புக அமைத்தபடுகால்கொல் ? உலகு ஏழும்***
***சோர்வு இலநிலைக்க நடுஇட்டது ஒரு தூணோ ?***
***நீர்புகு கடற்குவழியோ என நினைந்தான்.***

*(கோபுர வாயில்)*

**மேருவை -** *மகாமேரு மலையை;* **நிறுத்தி -** *(கோபுரமாக) நட்டுவைத்து (பிறகு);* **வெளிசெய்ததுகொல் -** *(அதில்) இடையில் வெளியமைக்கப்பட்டதோ ? (கோபுரம்)* **விண்ணோர் -** *(பணி செய்து முற்றிய) தேவர்கள்;* **ஊர்புக -** *தங்கள் ஊரை அடைவதற்காக;* **அமைத்த படுகால் கொல் -** *அமைக்கப் பெற்ற ஏணியோ?* **உலகு ஏழும் -** *ஏழு உலகங்களும்;* **சோர்வில நிலைக்க -** *சிதைவற்றனவாய் நிலைத்திருக்க;* **நடு -** *(உலகின்) நடுப்பகுதியில்;* **இட்டது ஒருதூணோ -** *நாட்டப்பெற்ற ஒப்பற்ற தூணோ ? (வாயில்)* **கடற்கு -** *கடலின்கண்;* **நீர்புகு வழியோ -** *வெள்ளம் புகுவதற்கு (முன்னம்) அமைக்கப்பட்ட வழியோ;* **என -** *என்று பலவிதமாக;* **நினைத்தான் -** *(அனுமன்) எண்ணினான்.* ***(66)***

***4901. 'ஏழ்உலகின் வாழும்உயிர் யாவையும் எதிர்ந்தால்***
***ஊழின்முறைஇன்றி, உடனேபுகும்; இது ஒன்றோ ?***
***வாழியர்இயங்குவழி ஈதுஎன வகுத்தால்***
***ஆழிஉள ஏழின்அளவுஅன்றுபகை' என்றான்.***

**ஏழ் உலகில் -** *ஏழுஉலகத்திலும்;* **வாழும் -** *வாழ்கின்ற;* **உயிர்யாவையும் -** *எல்லா உயிர்களும்;* **எதிர்ந்தால் -** *ஒன்று கூடினாலும்;* **ஊழின் முறை இன்றி -** *ஒருவர்பின் ஒருவர் புகும் முறையில்லாமல்;* **உடனே புகும் -** *ஒருசேர உள்ளே நுழையும்;* **இது ஒன்றோ -** *இப்படிப்பட்ட வாயில் இஃது ஒன்று தானா (பல);* **வாழியர் -** *இலங்கையில் உள்ளவர்கள்;* **இயங்குவழி -** *நடமாடுவதற்கு அமைக்கப்பெற்ற வழி;* **ஈது என -** *இப்படிப்பட்ட தென்று கருதும்படி;* **வகுத்தால் -** *அமைக்கப் பெற்றிருந்ததென்றால்;* **பகை -** *(இலங்கைக்குள் உள்ள) நம்முடையபகை;* **உள --** *நீர் நிரம்பிய;* **ஆழி ஏழின் அளவு அன்று -** *ஏழு கடல்களின் அளவன்று (அவற்றினும்பெரிது);* **என்றான் -** *என்று சிந்தித்தான்.*

*இவ்வாயிலில்உலக உயிர்கள் ஒன்று கூடினாலும் ஒருசேர உள்ளே நுழையலாம். இப்படிப்பட்ட வாயில் இது ஒன்று தானா ? பல. இவர்கள் இயங்குவதற்கு அமைந்த வழி இது என்றால், பகை ஏழு கடலினும் மிகுதியாகும்.*

*எதிர்ந்தால் -ஒன்று கூடினால் (சந்தித்தால்) மக்களை நேருவார் - எதிர்ந்தார்கள்' (கம்ப. 1938). யாவையும் - ஐ - அசை (உருபன்று) புகழான் விளக்கினான் என்பதை (சிந்-2605) புகழானை விளக்கினான் - என்று தேவர் அமைத்தார். ஐ - சாரியை என்றார், இனியர் - (சிந்-2605)* ***(67)***

***4902. வெள்ளம் ஒரு நூறொடு இரு நூறும் மிடைவீரர்***
***கள்ளவினைவெவ்வலி அரக்கர், இரு கையும்***
***முள்எயிறும்வாளும்உற, முன்னம்முறை நின்றார்***
***எள்அரியகாவலினை அண்ணலும் எதிர்ந்தான்.***

***ஒரு நூறொடு இரு நூறுவெள்ளம் -*** *முந்நூறு வெள்ளச்சேனையாக;* ***மிடை -*** *(வாயிலில்) நெருங்கிய;* ***வீரர் -*** *வீரர்களாகிய;* ***கள்ளவினை -*** *பிறர் பொருளைக் கவரும் தொழிலும்;* ***வெவ்வலி அரக்கர் -*** *கொடிய வலிமையும் உடைய அரக்கர்கள்;* ***இரு கையும் -*** *(வாயிலின்) இருபுறத்திலும்;* ***முள்எயிறும் -*** *முள்போன்ற பற்களும்;* ***வாளும் -*** *வாளாயுதமும்;* ***உற -*** *பொருந்த;* ***முன்னம் முறை நின்றார் -*** *முற்படத் (தம்) தகுதிக்கேற்ப நின்று கொண்டுள்ளாரது;* ***எள்அரிய -*** *பிறரால் அவமதிக்க முடியாத;* ***காவலினை -*** *பாதுகாப்பை;* ***அண்ணல் எதிர்ந்தான் -*** *பெருமைமிக்க அனுமன் கண்டான்.*
***(68)***

***4903. சூலம்,மழு,வாளொடு,அயில், தோமரம், உலக்கை,***
***கால வரிவில்,பகழி, கப்பணம், முசுண்டி,***
***கோல், கணையும்,நேமி, குலிசம், சுரிகை, குந்தம்***
***பாலம் முதல்ஆயுதம் வலத்தினர் பரித்தார்.***

***வலத்தினர் -*** *ஆற்றல்மிக்க அரக்கர்கள்;* ***சூலம் மழு வாளொடு -*** *சூலம், மழு, வாள்;* ***அயில் தோமரம் உலக்கை -*** *வேல், ஈட்டி, உலக்கை;* ***கால வரிவில் பகழி -*** *யமனைப் போன்ற வில் அம்பு;* ***கப்பணம் முசுண்டி -*** *இரும்புநெரிஞ்சி, முசுண்டி;* ***கோல் கணையம் நேமி -*** *தடி, வளைதடி, சக்கரம்;* ***குலிசம், சுரிகை, குந்தம் -*** *வச்சிரம், உடைவாள், கைவேல்;* ***பாலம் -*** *பிண்டிபாலம்;* ***முதல் ஆயுதம் -*** *முதலான ஆயுதங்களை;* ***பரித்தார் -*** *தாங்கி நின்றார்கள்.*

*ஆற்றல்மிக்கஅரக்கர்கள் சூலம் முதலான ஆயுதங்களை ஏந்தி நின்றனர். சூலம் - முத்தலைவேல். மழு - கோடாலி. இப்பாடலில் உள்ள ஒடுவைமூன்றனுருபாக் கொண்டதால் எல்லாவற்றிலும் உம்மையை விரித்து உரைகூறினர். உம்மை விரித்தால் முதல் என்பது வேண்டா. அடியார்க்கு நல்லார்,கொடித்தார் வேந்தரொடு எனும் தொடரில் உள்ள (சிலம்பு 5-182) ஒடுவைஅசையாக்கினும் அமையும் என்றார். ஈண்டும் அது.* ***(69)***

***4904. அங்குசம்,நெடுங்கவண், அடுத்து உடல் விசிக்கும்***
***வெங்குசையபாசம், முதல் வெள்ள பயில் கையர்;***
***செங்குருதிஅன்னசெறி குஞ்சியர், சினத்தோர்***
***பங்குனி மலர்ந்துஒளிர் பலாசவனம் ஒப்பார்.****

***செங்குருதி அன்ன-*** *சிவந்தஇரத்தம் போன்ற;* ***செறி குஞ்சியர் -*** *அடர்ந்த தலைமயிரை உடையவர்களும்;* ***சினத்தோர் -*** *கோபம் உடையவர்களும்;* ***பங்குனி மலர்ந்து -*** *பங்குனி மாதத்திலே பூத்து;* ***ஒளிர் -*** *(இலையின்றி) ஒளி வீசுகின்ற;* ***பலாசவனம் ஒப்பார் -*** *புரசங்காட்டிற்கு ஒப்பானவர்களுமான அரக்கர்கள்;* ***அங்குசம் -*** *மாவெட்டி;*

***நெடுங்கவண்*** - *நீண்ட தூரத்தில் கல் எறியும் கவண்;* ***அடுத்து*** - *பகைவரைச் சார்ந்து;* ***உடல் விசிக்கும்*** - *உடலைப் பிணிக்கும்;* ***வெம்குசைய*** - *வெவ்விய கடிவாளம் போன்ற;* ***பாசம்முதல்*** - *பாசம் முதலான;* ***வெய்ய*** - *கொடிய ஆயுதங்கள்;* ***பயில்கையர்*** - *பழகிய கைகளை உடையவராய் இருந்தனர். பலாச வனம்போல் சிவந்த தலைமயிரை உடைய அரக்கர்கள் அங்குசம் முதலான படைக்கலங்களை ஏந்தியவராய் இருந்தனர். குசை - கடிவாளம். இதற்குத் தருப்பை என்றும், கச்சு என்றும் பொருள் கூறப் பெற்றது. தருப்பைபோல் அறுக்கவல்ல பாசம் என்று விளக்கம் பேசப்பட்டது. குசைய - கடிவாளம் போன்ற - அ. அசை. ஆளி போல் மொய்ம்பு என்றார் - நச்சர் - அ - அசை என்றார் (சிந்-517)* ***(70)***

## *4905. அளக்கஅரிதுஆகிய கணக்கொடு அயல்நிற்கும்*
## *விளக்குஇனம்இருட்டினை விழுங்கி ஒளிகால*
## *உளக்கடிய காலன்மனம் உட்கும் மணிவாயில்*
## *இளக்கம்இல்கடற்படை இருக்கையை எதிர்ந்தான்.*

***அளக்க*** - *அளந்துகாண்பதற்கு;* ***அரிது ஆகிய*** - *கடினமாக உள்ள;* ***கணக்கொடு*** - *கூட்டத்துடன்;* ***அயல் நிற்கும்*** - *பக்கத்தே நிற்கின்ற;* ***விளக் குஇனம்*** - *விளக்குக் கூட்டம்;* ***இருட்டினை விழுங்கி*** - *இருளை உட்கொண் டு;* ***ஒளிகால*** - *வெளிச்சத்தை வெளிப்படுத்த (அதனால்);* ***கடிய உளக்காலன்*** - *கடினமான உள்ளமுடைய யமனின்;* ***மனம்உட்கும்*** - *மனமும் பயப்படும்படியான;* ***மணிவாயில்*** - *மணிகள் பதிக்கப் பெற்ற கோபுரவாயிலின் கண் உள்ள;* ***இளக்கம் இல்*** - *தளர்ச்சியில்லாத;* ***கடற்படை இருக்கையை*** - *கடல்போன்ற படைகளின் இருப்பிடத்தை;* ***எதிர்ந்தான்*** - *எதிரே கண்டான்.*

*இரவினில் வந்துஉயிர்க்குலத்தினை அழிக்கும் காலன் ஒளி வாயிலைக் கண்டு அஞ்சினான் போலும் (பாரதி தந்த பிச்சை) சந்திரன் கீழ் வானில் இருப்பதால் நகரில் இருள் சூழ்ந்தது. அதனால் விளக்கு இருளை விழுங்கிற்று என்றார் கவிச்சக்கரவர்த்தி.* ***(71)***

## *4906. எவ்அமரர், எவ் அவுணர், ஏவர் உளர் - என்னே !-*
## *கவ்வைமுதுவாயிலின் நெடுங்கடை கடப்பார் ?*
## *தெவ்வர் இவர்;சேமம்இது; சேவகனும் யாமும்*
## *வெவ்வமர்தொடங்கிடின் எனாய் விளையும் ?*
## *என்றான்.*

***கவ்வை*** - *ஆரவாரம் மிக்க;* ***முதுவாயிலின்*** - *பழமையான கோபுரவாயிலின்;* ***நெடுங்கடை*** - *நீண்ட முற்றத்தை;* ***கடப்பார்*** - *கடந்து செல்ல வல்லவர்கள்;* ***எ அமரர்*** - *எந்தத் தேவர்குழுவில்;* ***எ அவுணர்*** - *எந்த அசுரர் குழுவில்;* ***ஏவர் உளர்*** - *எவர்கள் இருக்கின்றார்கள்;* ***என்னே*** - *என்ன அதிசயம்;* ***தெவ்வர் இவர்*** - *பகைவர்கள் இத்தகையவர்;* ***சேமம் இது*** - *பாதுகாப்பு இத்தகையது (என்றால்);* ***சேவகனும் யாமும்*** - *இராமபிரானும் யாங்களும்;* ***வெவ் அமர் தொடங்கிடின் எனாய் விளையும்*** - *கொடிய போரைத் தொடங்கினால் எதுவாக முடியுமோ;* ***என்றான்*** - *என்று (அனுமன்) சிந்தித்தான். நெடுங்கடை -நீண்டமுற்றம் - , முரசெய்து ! கடைத்தலை (பால-கையடை-10)* ***(72)***

***4907. கருங்கடல்கடப்பது அரிதுஅன்று; நகர் காவற்***
***பெருங்கடல்கடப்பது அரிது; எண்ணம் இறைபேரின்***
***அருங்கடன்முடிப்பது அரிதுஆம்; அமர் கிடைக்கின்***
***நெருங்கு அமர்விளைப்பர் நெடுநாள் என***
***நினைந்தான்.***

***கருங்கடல்கடப்பது -*** *ஆழமான கடலைத்தாண்டுவது;* ***அரிது அன்று-*** *பெருஞ்செயல் அன்று;* ***நகர் -*** *நகரிலே அமைந்த;* ***காவல் பெருங்கடல் -*** *காவலாகிய பெரிய கடலை;* ***கடப்பது அரிது -*** *கடந்து செல்வதுபெருஞ்செயல்;* ***எண்ணம் -*** *என்னுடைய ஆலோசனை (உணர்வின் வயப்பட்டு);* ***இறை பேரின் -*** *சிறிது பிறழ்ந்தால்;* ***அருங்கடன் -*** *பிராட் டியைக்காண்பதாகிய கடமையை;* ***முடிப்பது அரிது ஆம் -*** *நிறைவேற்றுதல்முடியாமல்போம்;* ***அமர் கிடைக்கின் -*** *(இவர்கட்கு) போர் செய்யும்வாய்ப்புக்கிட்டினால்;* ***நெடுநாள் -*** *பலமாதங்கள்;* ***நெருங்கு அமர் விளைப்பர்-*** *செறிவான போரை வளர்ப்பார்கள்;* ***என நினைந்தான் -*** *என்று (அனுமன்)சிந்தித்தான்.*

*அனுமன் வீரன்ஆகையால் பகைவரைக் கண்டதும் உணர்ச்சி வயப்பட்டான். நிலைதெரிந்து அடங்கினான்.*

*ஆழக் கடல் கருமைநிறம் பெறும். ஆதலின் கருங்கடல் என்பதற்கு ஆழமான கடல் என்று கூறப்பெற்றது.* ***(73)***

***4908. வாயில்வழிசேறல்அரிது; அன்றியும் வலத்தோர்;***
***ஆயில், அவர்வைத்தவழி ஏகல் அழகு அன்றால்;***
***காய்கதிர்இயக்குஇல் மதிலைக் கடிது தாவிப்***
***போய், இந்நகர்புக்கிடுவென், என்று ஓர்***
***அயல்போனான்.***

***ஆயில் -*** *ஆராய்ந்தால்;* ***வாயில்வழி -*** *இந்தக் கோபுர வாயிலின் வழியே;* ***சேறல் அரிது -*** *செல்வது கடினமானதாகும்;* ***அன்றியும் -*** *அல்லாமலும்;* ***அவர் வைத்த வழி -*** *அவர்கள் அமைத்த வழியில்;* ***ஏகல் -*** *செல்வது;* ***வலத்தோர் -*** *(எம்போல்) வலிமை யுடையவர்களுக்கு;* ***அழகு அன்று -*** *சிறப்பான செயல் அன்று (ஆதலினாலே);* ***காய்கதிர் இயக்கு இல் -*** *சூரியன் இயக்கம் இல்லாத (உயர்ந்த);* ***மதில் -*** *மதிலை;* ***கடிது தாவிப் போய்-****வேகமாகக் கடந்துசென்று;* ***இந் நகர் புக்கிடுவென் -*** *இந்த நகருக்குள் புகுவேன்;* ***என்று -*** *என்று கருதி;* ***ஓர் அயல் போனான் -*** *ஒரு பக்கத்தில் சென்றான்.*

*என்று ஓர் அயல்போனான் - இதில் உள்ள 'ஓர்' அசை கோவலன் கூறும் கட்டுரை என்பதை அடிகள் கோவலன் கூறும் ஓர் குறியாக் கட்டுரை என்றார். உரை வகுத்த நல்லார், 'ஓர்' இடைச்சொல் என்றார். ஆய்க. ஒரு என்னும் சொல் பெயர் அன்று (ஒரு என்பது அசைச்சொல்லாகவே வழங்கப் பெறுகிறது. நீ மனிதனா என்பதை நீ ஒரு மனிதனா என்பர்)* ***(74)***

*இலங்காதேவிஅனுமனைத் தடுத்தல்*

**சந்தக்கலித்துறை**

***4909. நாள்நாளும்தான் நல்கிய காவல் நனிமூதூர்
வாழ்நாள்அன்னாள் - போவதின் மேலே வழி
நின்றாள்;
தூண் ஆம்என்னும்தோள் உடையானை -
சுடரோனைக்
காணா வந்தகட்செவி என்னக் கனல் கண்ணாள்.***

***(அவ்வமயத்தில்)***

***நாள் நாளும் -*** *தினந்தோறும்;* ***தான் -*** *தன்னால்;* ***காவல் நல்கிய -*** *பாதுகாப்பு வழங்கப்பெற்ற;* ***நனி மூதூர் -*** *மிகப் பழமையான இலங்கையின்;* ***வாழ்நாள் அன்னாள் -*** *ஆயுட்காலம் போன்றவளும்;* ***சுடரோனை -*** *ஒளிவீசுகின்ற சூரியனை;* ***காணா வந்த -*** *கண்டு விழுங்குவதற்கு வந்த;* ***கட் செவி என்ன -*** *பாம்பைப் போல;* ***கனல் கண்ணாள் -*** *நெருப்பைக்கக்கும் கண்களையுடையவளும்;* ***தூணாம் என்னும் -*** *தூணே நிகராகும் என்று கூறத்தக்க;* ***தோள் உடையானை -*** *தோள்களைப் பெற்ற அனுமன்;* ***போவதின் வழி மேலே -*** *செல்லும் வழியின் கண்ணே;* ***நின்றாள் (மறித்து) -*** *நிற்பவளும்.*

*தோளுடையானை - ஐ- சாரியை இரண்டன் உருபு அன்று யாவும் சூனியம், சத்து எதிர் - என்று கூற வேண்டியதை "யாவையும் சூனியம் சத்து எதிர்" என்றார் மெய்கண்டார். பாடிய காரர் இரண்டன் உருபு விரியாமையைக் கண்டு தெளிக. மலைப் பாம்புபோல் ஐ பாட்டிலுள்ளது. இரண்டன் உருபு என்று கருதிப் பாடபேதம் செய்தவர்உளர். மா - மா -விளம் - மா - காய் என்னும் சீர்களை முறையே பெற்றுவரும் இந்த யாப்பை வடநூலார் 'மத்தமயூரம்' என்பர், இத்தகைய பாடல்கள் இந்நூலுள் 154 உள்ளன (மணிமலர் 76)* ***(75)***

***4910. எட்டுத்தோளாள், நாலு முகத்தாள்; உலகு ஏழும்
தொட்டுப் பேரும்சோதி நிறத்தாள்; சுழல்
கண்ணாள்;
முட்டிப்போரில், மூவுலகத்தை முதலோடும்
கட்டிச் சீறும்காலன் வலத்தாள்; கமை இல்லாள்.***

***எட்டுத் தோளாள்-*** *எட்டுத்தோள்களையுடையவளும்;* ***நாலு முகத்தாள் -*** *நான்கு முகத்தையுடையவளும்;* ***உலகு ஏழும் -*** *ஏழு உலகத்தையும்;* ***தொட்டுப் பேரும் -*** *தீண்டி, அதற்கு மேலும் செல்கின்ற;* ***சோதி -*** *ஒளியைப் பெற்ற;* ***நிறத்தாள் -*** *மார்பை உடையவளும்;* ***சுழல் கண்ணாள் -*** *எல்லாப் பக்கத்திலும் சுழல்கின்ற கண்களையுடையவளும்;* ***முட்டிப் போரில் -*** *முட்டி யுத்தத்தில்;* ***மூ உலகத்தை -*** *மூன்று உலகங்களையும்;* ***முதலோடும் கட்டி -*** *உயிருடன் பிணித்து;* ***சீறும் -*** *கோபிக்கின்ற;* ***காலன் வலத்தாள் -*** *யமனின் வன்மையுடையவளும்;* ***கமை இல்லாள் -*** *பொறுமையற்றவளும்.*

*எட்டுத்தோள்முதலானவற்றைப் பெற்றவள் முட்டிப்போர் - முட்டியுத்தம் - இப்போரில் எதிரியைப் பிளத்தல் கண்கூடு. அவள் வலிமை - காலன் வலிமை. முதல் - ஆன்மா.* ***(76)***

***4911. பாரா நின்றாள், எண்திசை தோறும்; பலர் அப்பால்***
***வாரா நின்றாரோ? என;மாரி மழையே போல்***
***ஆரா நின்றாள்;நூபுரம் அச்சம் தரு தாளாள்;***
***வேரா நின்றாள்;மின்னின் இமைக்கும் மிளிர்***
***பூணாள்.***

*(அவள்)*

***அப்பால் -*** *நீண்ட தூரத்துக்கு அப்புறத்திலே;* ***பலர் வாரா நின்றாரோ-*** *பலர் வந்து கொண்டிருக்கிறார்களோ;* ***என -*** *என்று ஐயங்கொண்டு;* ***எண்திசை தோறும் -*** *எட்டுத் திக்குகளிலும்;* ***பாரா நின்றாள் -*** *நோக்கியவண்ணம் இருப்பவளும்;* ***மாரி மழையே போல் -*** *கார்கால மேகம் போல்;* ***ஆரா நின்றாள் -*** *முழங்கி நிற்பவளும்;* ***அச்சம் தரு -*** *பகைவர்களுக்குஅச்சத்தை விளைவிக்கும்;* ***நூபுரம் தாளாள் -*** *சிலம்பணிந்தபாதத்தையுடையவளும்;* ***வேரா நின்றாள் -*** *கோபித்து நிற்பவளும்;* ***இமைக்கும் மின்னின் -*** *இமைக்கின்ற மின்னலைப் போல;* ***மிளிர் பூணாள் -*** *ஒளிவிடுகின்ற ஆபரணம் அணிந்தவளும்.*

*நின்றாள்,முதலானவை, இயல்பைக் காட்டி நின்றன. வேரா நின்றாள் இதிலுள்ள வேரா - சினத்தைக் காட்டும். இமைத்தல் - இடையிட்டுத் தோன்றுதல்.*
***(77)***

***4912. வேல்,வாள், சூலம், வெங்கதை, பாசம், விளிசங்கம்***
***கோல், வாள்சாபம், கொண்ட கரத்தாள் வடகுன்றம்***
***போல்வாள், திங்கள்-போழின் எயிற்றாள், புகைவாயில்***
***கால்வாள்;காணின் காலனும் உட்கும்கதம் மிக்காள்.***

***வேல் வாள் சூலம்-*** *வேலும்வாளும் சூலமும்;* ***வெங்கதை பாசம் -*** *கொடிய கதையும், பாசமும்;* ***விளி சங்கம் -*** *சேனைகளை அழைக்கின்ற சங்கும்;* ***கோல் வாள் சாபம் -*** *அம்பும் கொடிய வில்லும்;* ***கொண்ட கரத்தாள் -*** *ஏந்திய கையையுடையவளும்;* ***வடகுன்றம் போல்வாள் -*** *மேருமலையை ஒத்தவளும்;* ***திங்கள் போழின் -*** *சந்திரனின் பிளவைப் போன்ற;* ***எயிற்றாள் -****பற்களையுடையவளும்;* ***வாயில் புகை கால்வாள் -*** *வாயில் புகையைக்கக்குபவளும்;* ***காணின் -*** *உற்றுப் பார்ப்பாளாயின்;* ***காலனும் உட்கும் -*** *யமனும் பயப்படும்;* ***கதம் மிக்காள் -*** *கோபம் மிக்கவளும். வாள் இருமுறை இக்கவிதையில் காட்சி தருகிறது. இரண்டாம் வாள் கொடுமை எனும் பொருள் தருகிறது. கோல் 'தோல்' என்ற பாடம் ஒரு பிரதியில் காணப்படுகிறது. தோல் - கேடயம், இப்பாடம் சிறக்கும்போலும்.*

*போழ் - பிளவு. திங்கட்பிளவு - பிறைச்சந்திரன். காணில் - எமன் செயலாக்கினும் அமையும்.* ***(78)***

***4913. அஞ்சுவணத்தின் ஆடை உடுத்தாள்; அரவு எல்லாம்***
***அஞ்சு உவணத்தின்வேகம் மிகுத்தாள் அருள்***
***இல்லாள்***
***அம் சுவணத்தின்உத்தரியத்தாள் அலையாரும்***

***அம்சு வள்நத்தின் முத்து ஒளிர் ஆரத்து அணி***
***கொண்டாள்;+***

***அஞ்சு வணத்தின்-*** *ஐந்துநிறங்களைப் பெற்ற;* ***ஆடை உடுத்தாள் -*** *சேலையை அணிந்தவளும்;* ***அரவு எல்லாம் அஞ்சும் -*** *எல்லாப் பாம்புகளும்பயப்படும்படியான;* ***உவணத்தின் -*** *கருடனைப் போல;* ***வேகம் மிகுத்தாள் -*** *மிக்க வேகம் உடையவளும்;* ***அருள் இல்லாள் -*** *கருணையற்றவளும்;* ***அம் -*** *அழகிய;* ***சுவணத்தின் உத்தரியத்தாள் -*** *பொன் இழையால் அமையப்பெற்ற மேலாக்கையுடையவளும்;* ***அம் -*** *நீர் நிரம்பிய;* ***சுவள் நத்தின் -*** *அழகாக ஒளி பொருந்திய சங்கிற்பிறந்த;* ***முத்து ஒளிர் -*** *முத்து விளங்கும்;* ***ஆரத்து அணி கொண்டாள் -*** *ஆரங்களால் அழகு பெற்றவளும். சுவணத்தின் முத்து- சுவணதேய முத்து என்று வரத நஞ்சையப்பர் கூறுவார் - சுவர்ண தேயம், இலங்கை போலும்.* ***(79)***

***4914. சிந்துஆரத்தின் செச்சை அணிந்தாள்; தெளிநூல் யாழ்***
***அம்தா ரத்தின்நேர்வரு சொல்லாள்; அறைதும்பி***
***கந்தா ரத்தின்இன்இசை பன்னிக் களிகூரும்***
***மந்தா ரத்தின்மாலை அலம்பும் மகுடத்தாள்.***

***சிந்து ஆரத்தின்-*** *கடலில்தோன்றிய முத்துக்களால் ஆன;* ***செச்சை அணிந்தாள் -*** *சட்டை தரித்தவளும்;* ***நூல் தெளி -*** *நூல்களால் சிறந்தது என்று முடிவு பண்ணிய;* ***யாழ் -*** *யாழின்கண் தோன்றிய;* ***அம்தாரத்தின் -*** *அழகிய 'தாரம்' என்னும் சுரத்தை;* ***நேர் வரு சொல்லாள் -*** *ஒத்திருக்கும் சொல்லையுடையவளும்;* ***அறை தும்பி -*** *தேனுண்டு இசைபாடும் வண்டுக்கூட்டங்கள்;* ***இன் -*** *இனிய;* ***கந்தாரத்து இசை -*** *காந்தாரம் என்னும் பண்ணை;* ***பன்னி -*** *(பண்ணி) பாடி;* ***களிகூரும் -*** *மகிழ்ச்சியடையும்;* ***மந்தாரத்தின் -*** *மந்தார மலர்களால் கட்டப்பெற்ற;* ***மாலை அலம்பும் -*** *மாலை அசைகின்ற;* ***மகுடத்தாள் -*** *கீரிடத்தை அணிந்தவளும்.*

*இன் இசை பண்ணி- இனிய இசையைப் பாடி மாலை மருதம் பண்ணி, காலை -- 'செவ்வழி பண்ணி' என்றும் (புறம் 149) 'யாழோர் மருதம் பண்ண' என்றும் (மதுரைக் 658) பெருக வந்த வழக்கு அருகின. பன்னி - என்று மாற்றப் பெற்றது. ஒரு ஏடு (25) பண்ணி என்னும் பாடத்தை வழங்கிற்று, வாழ்க.*

*இப்பாடலின்பின்னிரண்டு அடிகளோடு சீவகசிந்தாமணியுள் "மந்தார மாலை மலர் வேய்ந்து தீந்தேன், கந்தாரஞ் செய்து களிவண்டு முரன்று பாட (சிந்.1959) என்னும் அடிகளையும் களிவண்டு மந்தார மாலையின் மலரை மொய்த்து அதிற்றேனை உண்டு மகிழ்ந்து காந்தாரம் என்னும் பண்ணையாக்கி ஆளாபனஞ் செய்து பாடும்படி" என வரும் உரைப் பகுதியையும் ஒப்பிடுக. (அண் - பல்கலை - கழ - பதிப்பு)*

*அமைவண்டு -பெரும்பான்மையான பாடம், அமை -அழகு.* ***(80)***

***4915. எல்லாம்உட்கும் ஆழி இலங்கை இகல்மூதூர்***
***நல்லாள்;அவ்ஊர் வைகுஉறை ஒக்கும் நயனத்தாள்;***
***'நில்லாய்! நில்லாய்!' என்று உரை நேரா***
***நினையாமுன்***
***வல்லேசென்றாள்; மாருதி கண்டான்; வருகஎன்றான்.***

***எல்லாம் உட்கும்-*** *எல்லாஉயிர்க் கூட்டங்களும் பயப்படும்படியான;* ***ஆழி இலங்கை -*** *கடலாற் சூழப்பெற்ற இலங்கையாகிய பழமையான ஊர்க்கு;* ***இகல் மூதூர் நல்லாள் -*** *வலிமை மிக்க நன்மை செய்பவளும்;* ***அ ஊர் வைகும் -*** *அந்த இலங்கை தங்கும்;* ***உறை ஒக்கும் நயனத்தாள் -*** *உறை போன்ற கண்களையுடையவளும் ஆகிய இலங்கை மாதேவி; (அனுமனை நோக்கி)* ***நில்லாய் நில்லாய் -*** *நில், நில்;* ***என்று உரை நேரா -*** *என்று முழங்கி;* ***நினையா முன் -*** *(எதிரே வருவார் யார் என்று அனுமன்) எண்ணுவதற்கு முன்னே;* ***வல்லே சென்றாள் -*** *வேகமாக (அனுமன் முன்) போனாள்;* ***கண்டான் மாருதி -*** *அதைக் கண்ட அனுமன்;* ***வருக என்றான் -*** *வருவாயாக என்று கூறினான்.*

*ஆழி - கடற்கரை.ஆழி கடல் அரையா - சுந்தரர். பெருங்கடற்கு ஆழியனையன் (புறம் 330). சான்றாண்மைக்கு ஆழி எனப்படுபவர் (குறள் 989) அழகர் உரை.*
***(81)***

***4916. ஆகாசெய்தாய் ! அஞ்சலை போலும் ?***
***அறிவுஇல்லாய்!***
***சாகாமூலம் தின்றுஉழல்வார்மேல் சலம் என்னாம் ?***
***பாகு ஆர்இஞ்சிப் பொன்மதில் தாவிப் பகையாதே,***
***போகாய் என்றாள் - பொங்கு அழல் என்னப்புகை***
***கண்ணாள்.***

***பொங்கு அழல்என்ன -*** *மூண்டு எரிகின்ற நெருப்பைப் போல;* ***புகை கண்ணாள் -*** *புகையும் கண்களையுடைய இலங்கைத்தேவி; (அனுமனை நோக்கி)* ***அறிவு இல்லாய் -*** *அறிவற்ற பேதையே;* ***ஆகா செய்தாய் -*** *செய்யத் தகாதவற்றைப் புரிந்தாய்;* ***அஞ்சலை -*** *நீ சிறிதும் பயப்படவில்லை;* ***சாகா மூலம் தின்று -*** *இலைகளையும் கிழங்குகளையும் தின்று;* ***உழல்வார் மேல் -*** *திரிகின்ற அற்பக்குரங்குகள் மேல்;* ***சலம் என்னாம் -*** *கோபம் கொள்வதால் என்ன பயன்;* ***பாகு ஆர் -*** *சுண்ணக்குழம்பு பூசப்பெற்ற;* ***இஞ்சிப் பொன்மதில் -*** *கோட்டையொடு கூடிய மதிலை;* ***தாவிப் பகையாதே-*** *கடந்து சென்று (என்னுடன்) பகைத்துக் கொள்ளாதே;* ***போகாய் -*** *ஓடிப்போவாயாக;* ***என்றாள் -*** *என்று கூறினாள்.*

*சாகம் - இலை.'அருந்தவத்தின் சாகம் தழைத்து' (கம்ப. 1671) பகையாதே போகாய் - பகையாமல் செல்க, என்றும் கூறலாம். பகையாதே என்பது ஏவலாகவும் எதிர் மறைப் பெயர் எச்சமாகவும் வரும்.* ***(82)***

*அனுமனும் இலங்கைத்தேவியும் உரையாடுதல்*

***4917. களியா உள்ளத்து அண்ணல் மனத்தில் கதம்மூள***
***விளியா நின்றே,நீதி நலத்தின் வினை ஓர்வான்,***
***'அளியால் இவ்ஊர் காணும் நலத்தால்***
***அணைகின்றேன்;***
***எளியேன்உற்றால் யாவது உனக்கு இங்கு இழவு ?'***
***என்றான்.***

***நீதி -*** *நீதியுடன்ஒன்றுபட்ட;* ***நலத்தின் வினை -*** *நன்மையின் பயனை;* ***ஓர்வான் -*** *அறிந்தவனும்;* ***களியா -*** *செருக்கடையாத;* ***உள்ளத்து அண்ணல் -*** *உள்ளத்தைப்*

*பெற்றவனுமான அனுமன்;* ***மனத்தில் கதம்மூள -*** *கோபத்தீ மூண்டு எரிய;* ***விளியா நின்று -*** *(அதனை) அழித்து (இலங்கைத் தேவியைப் பார்த்து);* ***இ ஊர் -*** *இந்த ஊரை;* ***நலத்தால் -*** *இந்நகரின் அழகால்;* ***காணும் அளியால் -*** *காணவேண்டும் என்னும் ஆசையால்;* ***அணைகின்றேன் -*** *அடைந்துள்ளேன்;* ***எளியேன் -*** *பலமில்லாத யான்;* ***இங்கு உற்றால் -*** *இவ்விடத்தை அடைந்தால்;* ***உனக்கு இழவு யாது -*** *உனக்கு நேரும் நட்டம் யாது;* ***என்றான் -*** *என்று அமைதியாகப் பேசினான். இவ்வூர், நீதிநலத்தின் வினை ஓர்வான் - அணைகின்றேன் என்று ஒரு தொடராக்கி இந்த ஊரின் நீதியையும் அழகையும் ஆராய வந்துள்ளேன் என்று உரை கூறுவதும் நன்றே.*

*நலத்தால் -இன்பத்துடன் - நல் எண்ணத்தால் (அண். பல்கலை பதிப்பு)*
***(83)***

***4918. என்னாமுன்னம், 'ஏகு' என, ஏகாது, எதிர்மாற்றம்***
***சொன்னாயே ? நீயாவன் அடா ? தொல்புரம் அட்டான்***
***அன்னாரேனும்அஞ்சுவர், எய்தற்கு; அளியுற்றால்***
***உன்னால் எய்தும்ஊர்கொல் இவ்ஊர், என்று, உறநக்காள்.***

***என்னா முன்னம் -*** *என்றுஅனுமன் கூறுவதற்கு முன்னே;* ***(இலங்கைத்தேவி*** *அனுமனை நோக்கி)* ***ஏகு என -*** *நான், 'போ' என்று கட்டளையிடவும்;* ***ஏகாது -*** *போகாமல்;* ***எதிர் மாற்றம் சொன்னாயே -*** *எதிர் மொழி பேசுகிறாயே;* ***அடா -*** *அற்பனே;* ***நீ யாவன் -*** *நீ யார்?;* ***தொல் -*** *பழமையான;* ***புரம் அட்டான் அன்னாரேனும் -*** *முப்புரம் எரித்த சிவபிரான் போன்றவர்களும்;* ***எய்தற்கு -*** *என்முன் வருவதற்கு;* ***அஞ்சுவர் -*** *பயப்படுவார்கள் (அப்படியிருக்க);* ***அளி உற்றால் -*** *ஊரைக் காண வேண்டும் என்னும் ஆசை உனக்கு வந்தால்;* ***இவ் ஊர் -*** *இந்த இலங்கை;* ***உன்னால் எய்தும் ஊர்கொல் -*** *உன்னால் அடையத்தக்க எளிய ஊரா?* ***என்று -*** *என்று கூறி;* ***உற நக்காள் -*** *மிகுதியாகச் சிரித்தாள்.*

*எய்துதற்கு -(இந்த நகரை) அடைய என்னும் பொருள் கூறப்பெற்றது.*
***(84)***

***4919. நக்காளைக்கண்டு ஐயன் மனத்து ஓர்நகை கொண்டான்;***
***நக்காய்,நீயார் ? ஆர்சொல வந்தாய் ? உனது ஆவி***
***உக்கால் ஏதுஆம்? ஓடலை ? என்றாள் இனி இவ்வூர்***
***புக்கால் அன்றிப் போகலென் என்றான் புகழ் கொண்டான்.***

***ஐயன் -*** *ஒப்பற்ற அனுமன்;* ***நக்காளைக் கண்டு -*** *சிரித்த இலங்கைத் தேவியைப் பார்த்து;* ***மனத்து -*** *உள்ளத்துக்குள்ளே;* ***ஓர் நகை கொண்டான் -*** *சிரித்துக் கொண்டான்; (அப்போதுஇலங்கைத் தேவி ஐயனைநோக்கி)* ***நக்காய் -*** *(அடே நீ) என்னைப் பார்த்துச் சிரிக்கவா செய்தாய்;* ***நீ யார் -*** *நீ யாவன்;* ***யார் சொல வந்தாய் -*** *எவர் கட்டளையிட வந்திருக்கிறாய்;* ***உனது ஆவி -*** *உன்னுடைய உயிர் (என்னால்);* ***உக்கால் ஏது ஆம் -***

*அழிந்தால் (உனக்கு) பயன் யாது?;* ***ஓடலை -*** *அடே ! ஓடிப் போக மாட்டாய்;* ***என்றாள் -*** *என்று கூறினாள்; (அப்போது)* ***புகழ் கொண்டான் -*** *புகழ் பெற்ற அனுமன்;* ***இனி -*** *இப்போது;* ***இ ஊர் புக்கால் அன்றி -*** *இந்த நகருக்குள் நுழையாமல்;* ***போகலென் -*** *(திரும்பிச்) செல்ல மாட்டேன்;* ***என்றான் -*** *என்று கூறினான்.*

*இனி - இப்போது;இனி நினைந்து இரக்கம் ஆகின்று (புறம்) இனிமேல் என்று அதற்குப் பொருள் கூறுவது நன்றேல் கொள்க. புக்கு - ஆல் - புகுந்தால் (நுழைந்தால்) ஆல் - எதிர்கால வினை எச்ச விகுதி. உருபு அன்று.* ***(85)***

*இலங்காதேவிஅனுமனுடன் பொருதல்*

***4920. வஞ்சங்கொண்டான்; வானரம் அல்லன்; வருகாலன்***
***துஞ்சும், கண்டால் என்னை; இவன் சூழ்திரை ஆழி***
***நஞ்சம் கொண்டகண்ணுதலைப் போல் நகுகின்றான்***
***நெஞ்சம் கண்டே,கல்என நின்றே, நினைகின்றாள்.***

***வருகாலன் -*** *(என்பால்) போர்க்கு வரும் யமன்;* ***என்னைக் கண்டால் -*** *என்னைப் பார்ப்பானேயானால்;* ***துஞ்சும் -*** *இறப்பான் (அப்படியிருக்க);* ***இவன் -*** *இந்த அற்பன்;* ***திரை சூழ் ஆழி -*** *அலைகள் சூழ்ந்த கடலில் தோன்றிய;* ***நஞ்சம் கொண்ட -*** *விடத்தை உணவாகக் கொண்ட;* ***கண்ணுதலைப் போல் -*** *சிவபெருமானைப் போல்;* ***நகுகின்றான் -*** *சிரிக்கின்றான்; (ஆதலால்)* ***வஞ்சம் கொண்டான் -*** *வஞ்சகம் உடைய இவன்;* ***வானரம் அல்லன் -*** *குரங்கு அல்லன்;* ***என -*** *என்று (ஆராய்ந்து);* ***நெஞ்சம் கண்டே -*** *அனுமன் கருத்தை யறிந்து பார்த்த அளவிலே;* ***கல் என நின்று -*** *கல்போல் நின்று;* ***நினைக்கின்றாள் -*** *கவலையடைந்தாள்.*

*என்னையறியாமையால் போர்க்கு வரும் யமன், என்னைக் கண்ட மாத்திரத்தில் இறப்பான். அங்ஙனம் இருக்க, இவன் என்னைக் கண்டு சிவபிரான் போல் சிரிக்கிறான். இவன் குரங்கு அல்லன் என்று ஆராய்ந்து மலைபோல் நின்றாள்.*

*எமன் என்னைக்கண்டு பயப்படுவான். இவன் எமனையும் அழித்த சிவபிரானே என்று கருதினாள். நெஞ்சம் கண்டேகல் என நின்றே என்பதை அவ்வாறே வைத்துப் பொருள் செய்தல் 'பாவம்' என்னும் கவிதை நலத்துக்குத் துணையாகும். கண்டு + ஏ எனப்பிரித்து, ஏகல் எனக் கூட்டிப் பொருள் செய்தலும் ஒன்று. ஏகல் - உயர்ந்த மலை - ஏகல் வெற்பன் என்னும் தொடர் சங்க நூல்களில் காணலாம். ஏகல் வெற்பன் (குறுந் 265 நற்றிணை 116 அகம் 52) கண்டு + ஏ என்று பிரித்து 'ஏ' யை அசை ஆக்கினர். ஏற்பின் கொள்க. நினைவு - நினைவுடைச் சொற்கள் (கம்ப. 5255, சிந்தாமணி. 333) நினைவு - எண்ணம் என்று பொருள் கொண்டோர் பட்ட இடர்ப்பாடு பெரிது. ஏ - கல் எனப் பிரித்தல் வலிந்து செய்தலாகக் கருதுவார் ஏற்பன கொள்க.* ***(86)***

***4921. கொல்வாம்; அன்றேல் கோளுறும் இவ்ஊர் எனல்***
***கொண்டாள்;***
***'வெல்வாய், நீயேல், வேறி'என, தன் விழிதோறும்***
***வல்வாய்தோறும், வெங்கனல் பொங்க, மதிவானில்***

***'செல்வாய்' என்னா மூவிலை வேலைச்***
***செலவிட்டாள்.****

***(இலங்கைத் தேவி)***

***கொல்வாம்*** *- நாம்இவளைக் கொல்வோம்;* ***அன்றேல்*** *- கொல்லப்படாமல் விட்டு விட்டால்;* ***இ ஊர்*** *- இந்த இலங்கை;* ***கோள் உறும்*** *- (இவனால்) அழிக்கப்படும்;* ***எனல் கொண்டாள்*** *- என்று மனத்திலே எண்ணி;* ***வெல்வாயேல்*** *- என்னை வெற்றி கொள்ள முடிந்தால்;* ***நீ வேறி*** *- நீ வெல்லுக;* ***என*** *- என்று கூறி;* ***விழிதோறும்*** *- கண்கள் தோறும்;* ***வல்வாய்தோறும்*** *- கொடிய வாய்கள் தோறும்;* ***வெங்கனல் பொங்க*** *- கொடிய நெருப்பு மூண்டு எரிய;* ***மூ இலை வேலை*** *- மூன்று தலைகளையுடைய சூலத்தை;* ***மதி வானில்*** *- சந்திரன் ஒளி வீசும் வானிலே;* ***செல்வாய் என்னா*** *- செல்லுவாயாக என்று கூறி;* ***செலவிட்டாள்*** *- அனுமன்மேல் வீசி எறிந்தாள்.*

*'சூலம்' முத்தலைபெற்று, வேல்போல இருத்தலின் வேல் என்று கூறினான்.*
***(87)***

***4922. தடித்துஆம்என்னத் தன்எதிர் செல்லும்***
***தழல்வேலைக்***
***கடித்தான்,நாகம் விண்ணில் முரிக்கும் கலுழன்***
***போல்***
***ஒடித்தான்கையால் - உம்பர் உவப்ப, உயர்காலம்***
***பிடித்தாள்நெஞ்சம் துண்ணென, - எண்ணம்***
***பிழையாதான்.***

***எண்ணம்பிழையாதான்*** *- நினைவாலும் தவறு செய்யாத அனுமன்;* ***உம்பர் உவப்ப*** *- தேவர்கள் மகிழும்படி;* ***உயர்காலம் பிடித்தாள்*** *- சிறந்த பாசத்தைப் பற்றிய இலங்கைத்தேவி;* ***துண் என*** *- திடுக்கிடும்படியாகவும்;* ***தடித்து ஆம் என்ன*** *- மின்னலே ஒப்பு என்று கூறும்படி;* ***தன் எதிர் செல்லும்*** *- தன் முன்னே வரும்;* ***தழல்வேலை*** *- நெருப்பைக் கக்கும் வேலாயுதத்தை;* ***கடித்தான்*** *- பற்களால் கடித்து;* ***கையால்*** *- கைகளால்;* ***விண்ணில்*** *- ஆகாயத்தின்கண்;* ***நாகம்*** *- பாம்புகளை;* ***முரிக்கும் கலுழன்போல்*** *- முறிக்கின்ற கருடனைப் போல;* ***ஒடித்தான்*** *- துண்டு துண்டாகச் சிதைத்தான்.*

*காலம் - பாசம்.''சூலம் எனில் அன்று. இது தொல்லை வரும் காலம்' (கம்ப . 8378) அண் - கழகம்) காலம் பிடித்தாள் - அச்சூலத்தை நீண்ட காலம் பிடித்தவள் என்று கூறப் பெற்றவுரை நன்றேல் கொள்க. காலம் பிடித்தாள் (என்பதை) - சூலம் பிடித்தான் என்று பாடபேதம் செய்தாரும் உளர்.* ***(88)***

***4923. இற்றுச்சூலம் நீறு எழல் காணா, எரி ஒப்பாள்***
***மற்றும் தெய்வப்பல்படை கொண்டே மலைவாளை***
***உற்றுக் கையால்ஆயுதம் எல்லாம் ஒழியாமல்***
***பற்றிக்கொள்ளா விண்ணில் எறிந்தான்,***
***பழிஇல்லான்.****

***சூலம்*** - அனுமன் மேல் ஏவியசூலப்படை; ***இற்று*** - முறிந்து; (அதனால்) ***நீறு எழல் காணா*** - புழுதி கிளம்புவதைப் பார்த்து; ***எரி ஒப்பாள்***- நெருப்பைப் போன்று சீறி; ***மற்றும்*** - பிறகும்; ***பல்தெய்வப் படைகொண்டு*** - பலவிதமான தெய்வீகப்படைகளைக் கொண்டு; ***மலைவாளைஉற்று*** - போர் செய்யும் இலங்கைத் தேவியை அணுகி; ***பழிஇல்லான்*** - பழியற்றவனாகிய அனுமன்; ***கையால்*** - தன்னுடைய கைகளால்; ***ஆயுதம்எல்லாம்*** - எல்லா ஆயுதங்களையும்; ***ஒழியாமல்*** - தப்பாமல்; ***பற்றிக் கொள்ளா*** - கவர்ந்துகொண்டு (அவள் மேல் வீசாமல்); ***விண்ணில்எறிந்தான்*** - ஆகாயத்தில் வீசி எறிந்தான். சூலம் பொடியாகிஅதனால் புழுதி எழுவதைக் கண்டு நெருப்புப் போற் சினங் கொண்டு இலங்கைத் தேவி வேறு படைகளைக் கொண்டுபோரிட அனுமன் அவள்போர்க்கு வராதபடி ஆயுதங்களைப் பறித்து விண்ணில் எறிந்தான்.

*நீறு - சூலம்முறித்த அதிர்ச்சியால் உண்டான புழுதி. சூலம் இற்றதே அன்றிப் பொடியாகவில்லை.*

*'பழி ஓர்வான்' என்று பாடம் கொண்டு பெண்ணைக் கொல்வதால் உண்டாம் பழியை நினைத்துப் படைக்கலங்களை விண்ணில் எறித்து அவளைக் கொல்லாது விட்டான் எனல் சிறப்புடைத்து.* ***(89)***

***4924. வழங்கும்தெய்வப் பல்படை காணாள், மலைவான்மேல்***
***முழங்கும் மேகம்என்ன முரற்றி முனிகின்றாள்-***
***கழங்கும் பந்தும்குன்றுகொடு ஆடும் கரம் ஓச்சித்***
***தழங்கும்செந்தீச் சிந்த அடித்தாள் - தகவு இல்லாள்.***

***தகவு இல்லாள்*** - நற்பண்புஅற்ற இலங்கைத் தேவி; ***வழங்கும்*** - பகைவர் மேல் எறியும்; ***பல்தெய்வப் படை*** - பலவிதமான தெய்வீகப் படைகள்; ***காணாள்*** - சிதறிய இடங்களை அறியாமல்; ***வான்மலைமேல்*** - வானம் அளாவிய மலையின்மேல்; ***முழங்கும்*** - இடிக்கின்ற; ***மேகம் என்ன*** - மேகத்தை ஒப்ப; ***முரற்றி*** - கர்ச்சித்து; ***முனிகின்றாள்*** - சீற்றங்கொண்டு; ***குன்று*** - மலைகளை; ***கழங்கும் பந்து கொடு*** - கழற்சிக் காய்களாகவும் பந்துகளாகவும் பாவித்துக் கொண்டு; ***ஆடும்*** - விளையாடுகின்ற; ***கரம் ஓச்சி*** - கைகளை உயரத் தூக்கி; ***தழங்கும் செந்தீ*** - முழங்குகின்ற தீயானது; ***சிந்த*** - சிதறும்படி; (அனுமனை) ***அடித்தாள்*** - தாக்கினாள்.

*அமைதியானமலையில் மேகம் இடிப்பதுபோல் அனுமனை இலங்கைத் தேவி அடித்தாள். மலை, வான் - வான் மலை எனக் கூட்டுக. வானத்தில் முழங்கும் மேகம் என்று சிலர் உரை கூறின் ஆய்க. மழைவான்மேல் என்று பாடம் கொண்ட வரும் உளர்.* ***(90)***

***4925. அடியாமுன்னம் அம்கை அனைத்தும் ஒருகையால்***
***பிடியா 'என்னே? பெண்இவள்; கொல்லின் பிழை' என்னா,***
***ஒடியா நெஞ்சத்துஓர்அடி கொண்டான், உயிரோடும்***
***இடியேறு உண்டமால்வரைபோல், மண்ணிடை வீழ்ந்தாள்.***

***அடியாமுன்னம்-*** *அவள் அடிப்பதற்கு முன்னே;* ***அம்கை அனைத்தும் -*** *அவளுடைய எட்டுக்கைகளையும்;* ***ஒரு கையால் பிடியா -*** *ஒரு கையாற் பற்றிக் கொண்டு;* ***இவள் -*** *இந்தப் பகைத்தி;* ***பெண் -*** *பெண்ணாக உள்ளாள் (ஆதலால்);* ***என் -*** *யான் எப்படிப் போரிடுவேன்;* ***கொல்லின் -*** *கொன்றால்;* ***பிழை -*** *பாபமாகும்;* ***என்னா-*** *என்றுகருதி;* ***ஓடியா-*** *மனம் இரங்கி;* ***நெஞ்சத்து -*** *அவள் மார்பில் (மற்றொரு கையால்);* ***இடியேறு உண்ட -*** *பெருத்த இடியால் தாக்கப்பெற்ற;* ***மால்வரைபோல் -*** *பெருமலைபோல்;* ***உயிரோடும் -*** *உயிருடன்;* ***மண் இடை வீழ்ந்தாள் -*** *பூமியிலே சாய்ந்தாள்.*
***(91)***

***4926. விழுந்தாள், நொந்தாள், வெங்குருதிச் செம்புனல்***
***வெள்ளத்து***
***அழுந்தாநின்றாள், நான்முகனார்தம் அருள் ஊன்றி***
***எழுந்தாள்;யாரும் யாவையும், எல்லா உலகத்தும்***
***தொழும்தாள்வீரன் தூதுவன்முன் நின்று, இவை***
***சொன்னாள்.***

***(இலங்கைத் தேவி)***

***விழுந்தாள் -*** *பூமியிலேவிழுந்தாள்;* ***நொந்தாள் -*** *(தன்னை) நொந்து கொண்டாள்;* ***வெம் -*** *வெப்பமான;* ***குருதிச் செம்புனல் வெள்ளத்து -*** *இரத்தமாகிய செந்நீர் வெள்ளத்து;* ***அழுந்தா நின்றாள் -*** *முழுகினாள் (பிறகு);* ***நான்முகனார்தம் -*** *பிரம்ம தேவனுடைய;* ***அருள் ஊன்றி -*** *திருவருளைப் பற்றிக் கொண்டு;* ***எழுந்தாள் -*** *எழுந்து நின்றாள்;* ***எல்லா உலகத்தும் -*** *எல்லா உலகங்களிலும் உள்ள;* ***யாரும் -*** *உயர்திணைப் பொருள்களும்;* ***யாவையும் -*** *அஃறிணைப் பொருள்களும்;* ***தொழும் -*** *கைகூப்பிப் பணியும்;* ***தாள்வீரன் -*** *திருவடியையுடைய இராமபிரானின்;* ***தூதுவன் முன் நின்று -*** *தூதுவனுக்கு முன்னே நின்று;* ***இவை சொன்னாள் -*** *இந்த மொழியைக் கூறினாள்.*

*இலங்கைத் தேவி,பூமியிலே விழுந்தாள்; நொந்தாள்; பிரம்மதேவனின் திருவருளைப் பற்றிக்கொண்டு எழுந்தாள். இராமதூதனைப் பார்த்துப் பின்வருமாறு பேசினாள்.*

*யாவரும் உயர்திணை, முப்பாலையும், யாவை, அஃறிணை ஒருமை பன்மையையும் உணர்த்தும் - (தொல்-சொல்-210, 219)* ***(92)*** *இலங்கைத் தேவி தன்வரலாறு கூறுதல்*

***அறுசீர் விருத்தம்***

***4927. 'ஐய ! கேள்; வையம் நல்கும்***
***அயன் அருள்அமைதியாக***
***எய்தி, இம்மூதூர் காப்பென்;***
***இலங்கைமாதேவி என்பேர்;***
***செய்தொழில்இழுக்கி னாலே,***
***திகைத்து,இந்தச் சிறுமை செய்தேன்***
***'உய்தி' என்றுஅளித்தி யாயின்,***
***உணர்த்துவல் உண்மை' என்றாள்.***

***ஐய -*** *ஒப்பற்றவனே;* ***வையம் நல்கும் அயன் -*** *உலகம் படைத்த பிரம்ம தேவனின்;* ***அருள் -*** *திருவருளே;* ***அமைதியாக -*** *கட்டளையாக;* ***இம்மூதூர் எய்தி -*** *இந்த பழமையான இலங்கையடைந்து;* ***காப்பென் -*** *பாதுகாத்து வந்தேன்;* ***என்பேர் -*** *என்னுடைய பெயர்;* ***இலங்கைமாதேவி -*** *இலங்கைத் தேவி;* ***செய்தொழில் -*** *மேற்கொண்ட காவல் தொழிலில்;* ***இழுக்கினாலே -*** *தவறு நேர்ந்தபடியால்;* ***திகைத்து -*** *மனங்கலங்கி;* ***இந்தச் சிறுமை செய்தேன் -*** *இந்த அற்பச் செயலைச் செய்தேன்;* ***உய்தி என்று -*** *(நீ) தப்பிப்போ; ! என்று;* ***அளித்தியாயின் -*** *அருள்செய்வாயேயானால்;* ***உண்மை உணர்த்துவல் -*** *உண்மையைக் கூறுவேன்;* ***என்றாள் -*** *என்று கூறினாள்.*
***(93)***

***4928. எத்தனைகாலம் காப்பென்***
***யான் இந்தமூதூர் ? என்று,***
***முத்தனை வினவினேற்கு,***
***'முரண்வலிக் குரங்கு ஒன்று உன்னைக்***
***கைத்தலம்அதனால் தீண்டிக்,***
***காய்ந்தஅன்று, என்னைக் காண்டி;***
***சித்திர நகரம்,பின்னை***
***சிதைவதுதிண்ணம்' என்றான்.***

***யான் -*** *நான்;* ***இந்தமூதூர் -*** *இந்தப் பழமையான இலங்கையை;* ***எத்தனை காலம் காப்பென் -*** *எவ்வளவு காலம் பாதுகாப்பேன்;* ***என்று -*** *என்று;* ***முத்தனை வினவினேற்கு*** *-வினைகளைக்கடந்தபிரம்ம தேவனை வினாவிய என்னிடம்; (அந்த முத்தன்)* ***முரண் வலி -*** *பெரு வலி பெற்ற;* ***குரங்கு ஒன்று -*** *ஒரு குரங்கு;* ***உன்னை -*** *(இலங்கைக் காவலை மேற்கொண்ட) உன்னை;* ***கைத்தலம் அதனால் தீண்டி-*** *தன்னுடைய கைகளால் தொட்டு;* ***காய்ந்த அன்று -*** *சினம் கொண்டகாலத்தில்;* ***என்னைக் காண்டி -*** *என்னைப் பார்ப்பாய்;* ***பின்னை -*** *பிறகு;* ***சித்திர நகரம் -*** *அழகிய இலங்கை நகரம்;* ***சிதைவது திண்ணம் என்றான் -*** *அழிவது உறுதி என்று கூறினான்.*

*காளிதாசன்பிரம்மதேவனைப் பரம் பொருள் என்பான் (குமாரசம்பவம்) முத்தன் - பரமன். இராமனை முத்தனார் என்பார் (கும்ப 261)* ***(94)***

***4929. அன்னதேமுடிந்தது ஐய!***
***'அறம்வெல்லும் பாவம் தோற்கும்'***
***என்னும் ஈதுஇயம்ப வேண்டும்***
***தகையதோ ?இனி மற்று உன்னால்,***
***உன்னிய எல்லாம்முற்றும்,***
***உனக்கும்முற்றாதது உண்டோ ?***
***பொன்நகர் புகுதிஎன்னாப் புகழ்ந்து***
***அவள்இறைஞ்சிப் போனாள்.***

***ஐய -*** *ஐயனே !;****அன்னதே -*** *பிரம்மனின் சொல்லே;* ***முடிந்தது -*** *நிறைவேறியது;* ***அறம் வெல்லும் பாவம் தோற்கும் -*** *தர்மம் வெல்லும் பாவம் தோல்வியடையும்;* ***என்னும் ஈது -*** *என்று பேசப்படும் சத்திய வசனம்;* ***இயம்ப -*** *ஒருவர் மற்றவர் எடுத்துக் கூறுதலை;*

**வேண்டும் தகையதோ -** அவாவி நிற்கும் எளிய நிலையிலிருப்பதா?; **இனி -** இனிமேல்; **உன்னால் -** உன்னாலே; **உன்னிய எல்லாம் -** நினைக்கப்படும் எல்லாச் செயல்களும்; **முற்றும் -** நிறைவேறும்; **உனக்கும் -** உன்னாலேயும்; **முற்றாதது -** செய்ய முடியாத செயல்; **உண்டோ -** உள்ளதா?; **பொன் நகர் புகுதி -** பொன்மயமான இலங்கைக்குள் புகுக; **என்னா -** என்று; **புகழ்ந்தவள் -** அனுமனைப் புகழ்ந்த இலங்கைத் தேவி; **இறைஞ்சிப் போனாள் -** வணங்கிச் சென்றாள். *(95)*

*இலங்கையுள்அனுமன் புகுதல்*

*4930.* **வீரனும்விரும்பி நோக்கி**
**மெய்ம்மையே; விளைவும் அஃது என்று**
**ஆரியன் கமலபாதம்**
**அகத்து உறவணங்கி ஆண்டு, அப்**
**பூரியர் இலங்கைமூதூர்ப்**
**பொன்மதில் தாவிப் புக்கான்-**
**சீரிய பாலின்வேலைச்**
**சிறுபிரைதெறித்தது அன்னான்.**

**வீரனும் -** வீரனாகியஅனுமனும்; **விரும்பி நோக்கி -** (இலங்கைத் தேவியை) அன்புடன் பார்த்து; **மெய்ம்மையே -** நீ கூறியது சத்தியமே; **விளைவும் அஃது -** நிகழப் போவதும் அதுதான்; **என்று -** என்று கூறி; **ஆண்டு -** அவ்வமயத்தில்; **அ -** அது; **ஆரியன் -** ஏற்றமுடைய இராமபிரானின்; **கமலபாதம் -** தாமரை போன்ற பாதங்கள்; **அகத்து உற -** உள்ளத்தே காட்சிவழங்க; **வணங்கி -** தொழுது; **பொன் மதில் -** பொன்னால் அமைந்த மதிலை; **தாவி -** கடந்து; **சீறிய பாலின் வேலை -** சிறந்த பாற்கடலின் கண்ணே; **சிறுபிரை தெறித்தது அன்னான் -** மோர்த்துளி தெளித்தது போன்று; **பூரியர்-** அற்பர்கள் வாழ்கின்ற; **இலங்கை மூதூர் -** பழைய இலங்கைக்குள்; **புக்கான் -** புகுந்தான்.

அறம் வெல்லும் -என்பதை மெய்ம்மை என்றும், உள்ளியதெல்லாம் முற்றும் என்பதை விளைவும் அஃதே என்றும் உடன்பட்டு அனுமன் கூறினான்.

'என்று' என்னும்செய்து வாய்பாட்டெச்சத்தை 'என' என்னும் செய என்னும் எச்சமாக மாற்றுக. அன்னான் என்னும் குறிப்பு வினைமுற்று ஒப்ப என்னும் பெயரெச்சப் பொருளில் வந்தது.

அனுமன்இலங்கையில் பல பகுதியில் தேடுதல், மோர் பாற்கடலில் கலப்பதை ஒத்திருந்தது (புறம் 179) *(96)*

*இலங்கையின்ஒளியை வியத்தல்*

*4931.* **வான்தொடர் மணியின் செய்த**
**மைஅறு மாடகோடி,**
**ஆன்றபேர்இருளைச் சீத்துப்**
**பகல்செய்தஅழகை நோக்கி,**

***ஊன்றிய உதயத்துஉச்சி***
***ஒற்றைவான்உருளைத் தேரோன்,***

***தோன்றினன்கொல்லோ ? என்னா***
***அறிவனும்துணுக்கம் கொண்டான்.***

***மைஅறு மணியில்செய்த -*** *குற்றம் அற்ற மணிகளால் அமைக்கப் பெற்ற;* ***வான்தொடர் -*** *ஆகாயம் அளாவிய;* ***மாடகோடி -*** *மாளிகையின் சிகரம்;* ***ஆன்ற -*** *எங்கும் நிரம்பியிருக்கின்ற;* ***பேர் இருளை -*** *மிக்க இருளை;* ***சீத்து -*** *போக்கி;* ***பகல் செய்த -*** *ஒளியைத் தோற்றுவித்த;* ***அழகை நோக்கி -*** *தன்மையைப் பார்த்து;* ***அறிவனும் -*** *அறிஞனாகிய அனுமனும்;* ***வான் -*** *வானத்தில் இயங்கும்;* ***ஒற்றை உருளைத் தேரோன் -*** *ஒரு சக்கரத்தால் இயங்கும் தேரையுடைய சூரியன்;* ***ஊன்றிய -*** *நிலைத்த;* ***உதயத்து உச்சி -*** *உதயகிரியின் சிகரத்திலே;* ***தோன்றினன் கொல் -*** *உதித்து விட்டானோ;* ***என்று -*** *என்று நினைத்து;* ***துணுக்கம் கொண்டான் -*** *திடுக்கிட்டான்.*

*மாடம் -உதயகிரி. மாடகோடி - சூரியன். பகல் - ஒளி - பகற்காலம். 'பகல் கான்று எழுதரு பல்கதிர்ப் பருதி (பழம்பாட்டு) மாடம் - மாளிகை. கோடி - உச்சி (சிகரம்)* ***(97)***

***4932. மொய்ம்மணி மாட மூதூர்,***
***முழுது இருள் அகற்றா நின்ற,***
***மெய்ம்மையைஉணர்ந்து, நாணா***
***'மிகை' எனவிலங்கிப் போனான்;***
***இம்மதில்இலங்கை நாப்பண்***
***எய்துமேல்,தன்முன் எய்தும்***
***மின்மினி அல்லனோ, அவ்***
***வெயிற்கதிர் வேந்தன்? அம்மா!***

***மொய் -*** *நெருங்கிய;* ***மணி -*** *மணிகளால் அமைக்கப் பெற்ற;* ***மாட மூதூர் -*** *மாடங்கள் நிரம்பிய இலங்கை நகர்;* ***முழுது இருள் -*** *எல்லா இருளையும்;* ***அகற்றா நின்ற -*** *நீக்குகின்ற;* ***மெய்ம்மையை -*** *பிரத்தியட்சமானஉண்மையை;* ***உணர்ந்து -*** *அறிந்து;* ***வெயில் கதிர் வேந்தன் -*** *வெயிலையும்கிரணத்தையும் உடைய சூரியன்;* ***நாணா -*** *வெட்கம் அடைந்து;* ***மிகை என -*** *(நாம் இங்கு) அதிகப்படி என்று கருதி;* ***விலங்கிப் போனான் -*** *ஒதுங்கிப்போய்விட்டான்; (அவன் நாணம் இல்லாமல்)* ***மதில் -*** *மதில்களால்சூழப்பெற்ற;* ***இ -*** *இந்த;* ***இலங்கை நாப்பண் -*** *இலங்கைக்கு நடுவிலே;* ***எய்துமேல் -*** *வருவானேயாயின் (அவன்);* ***தன்முன் எய்தும் -*** *தனக்கு முன்னே(அறிவின்றி) வந்த;* ***மின்மினி அல்லனோ -*** *மின்மினிப்பூச்சியாக மாட்டானோ;* ***அம்மா -*** *(இது) அதிசயம். (இது வியப்புடைச்சொல்)* ***(98)***

***4933. பொசிவுறு பசும்பொன் குன்றில்,***
***பொன்மதில் நடுவண், பூத்து,***
***வசைஅற விளங்கும்சோதி,***
***மணியினால்அமைந்த மாடத்து,***

*அசைவுஇல் இவ்இலங்கை மூதூர்,*
*ஆர்இருள்இன்மை யாலோ,*
*நிசிசரர்ஆயிற்று அம்மா,*
*நெடுநகர்நிருதர் எல்லாம்.*

**பொசிவு உறு -** ஒளிக் கசிவைப் பெற்றிருக்கின்ற; **பசும்பொன் குன்றில்-** பசிய பொன்மயமான திரிகூட மலையின்கண்; **பொன் மதில் நடுவண் -** பொன்னாற் செய்த மதிலுக்கு நடுவில்; **பூத்து -** மலர்ந்து; **வசை அற -** குற்றம்எல்லாம் இல்லாது போக; **விளங்கும் -** பிரகாசிக்கின்ற; **சோதி மணியினால் -** ஒளிக்கப்பெற்ற மாணிக்கங் களால்; **அமைந்த மாடத்து -** அமைந்தமாடங்களால்; **அசைவு இல் -** நடுங்குதல் இல்லாத; **இவ் இலங்கை மூதூர் -** இலங்கை நகரில்; **ஆர் இருள் இன்மையாலோ -** மிக்க இருள் இல்லாதகாரணத்தாலோ; **நெடுநகர் -** பெரு நகரில் (வாழ்கின்ற); **நிருதர் எல்லாம் -** எல்லா அரக்கர்களும்; **நிசிசரர் ஆயிற்று -** இரவில் சஞ்சரிப்பவர்கள்ஆயினது. இது தற்குறிப்பேற்றம். பிற - பிறவே. பொசிவுறுதல் - கசிதல். நீர்ப்பொசிவு, கண்டுள்ளோம். இங்கு ஒளிப்பொசிவு பேசப்படுகிறது இதுவே கவிச் சக்கரவர்த்தியின் திருவுள்ளம் பொசிவு - நெகிழ்வு என்பர். ஈண்டு நெகிழ்ச்சி வேண்டின் கொள்க.

98-99 ஆம்பாடல்கள் அனுமனின் கற்பனை ஓட்டம். 98 ஆம் பாடல் சூரியனை மின்மினியாக்கிற்று. 99ஆம் பாடல் அரக்கரை நிசிசரர் ஆக்கிற்று. இது கவிதைச் சித்து.

நிருதர்நிசிசரர் ஆயினது இருள் இன்மையாலே என்க. ஆயிற்று என்பது 'ஆயது' என்றும் பொருள்தரும் தொழிற்பெயர் ஆம் - முற்று அன்று. இன்மையாலோ - இதில் உள்ள ஓகாரம் அசையாகவும் கொள்ளலாம் அசையாகக் கொண்டால் இருள் இன்மையால் நிருதர் நிசிசரர் ஆயினர் என்க. **(99)**

*அனுமன் மறைந்துசெல்லுதல்*

*4934.* ***என்றனன்இயம்பி, 'வீதி***
***ஏகுதல்இழுக்கம்' என்னா,***
***தன்தகை யனையமேனி***
***சுருக்கி,மாளிகையில் சார***
***சென்றனன் -என்ப மன்னோ -***
***தேவருக் கமுதம் ஈந்த***
***குன்று எனஅயோத்தி வேந்தன்***
***புகழ்என,குலவு தோளான்.***

**தேவருக்கு -** தேவர்களுக்கு; **அமுதம் ஈந்த -** அமுதத்தை வழங்கிய; **குன்று என -** (மந்தர) மலையைப் போலவும்; **அயோத்தி வேந்தன் -** அயோத்தி அரசனான இராமபிரானின்; **புகழ் என -** புகழைப் போலவும்; **குலவு தோளான் -** திரண்ட தோள்களைப் பெற்ற அனுமன்; **என்றனன் இயம்பி -** என்று (இலங்கையின் அழகைத்) தனக்குள் கூறிக் கொண்டு; **வீதி ஏகுதல் -** வீதி வழியே போவது; **இழுக்கம் என்னா -** தவறு நேர்வதற்குக் காரணம் என்று நினைத்து; **தன் தகையனையமேனி -** தன்னுடைய சிறப்புக்கேற்ற திருமேனியை; **சுருக்கி -** சுருக்கிக் கொண்டு; **மாளிகையில் சார-** மாளிகை சார; **சென்றனன் -** போயினான்.

*'மாளிகையின்சாரல்' என்று பாடம் கொண்டு மாளிகையாகிய மலைச் சாரலில் எனப் பொருள் உரைப்பர். சாரல் என்றதனால் மாளிகை மலையாயிற்று. மாளிகையை ஒட்டிய பகுதியைச் சாரல் என்பர். என்ப - உரையசை மன், ஓ, இடைச்சொற்கள், அசை நிலையாய்வந்தன. தெருவில் சென்றால் அரக்கரால் வரும் இடையூற்றை 'இழுக்கம்' என்றான்.* ***(100)***

***4935. ஆத்துறுசாலை தோறும்,***
***ஆனையின்கூடம் தோறும்,***
***மாத்துறு மாடம்தோறும்,***
***வாசியின் பந்தி தோறும்,***
***காத்துறு சோலைதோறும்,***
***கருங்கடல்கடந்த தாளான்***
***பூத்தொறும்வாவிச் செல்லும்***
***பொறிவரிவண்டின் போனான்.***

***கருங்கடல் கடந்ததாளான் -*** *பெரிய கடலைக் கடந்ததிருவடியுடைய அனுமன்;* ***ஆத்துறு சாலை தோறும் -*** *பசுக்கள் நெருங்கியுள்ள கொட்டில்கள் தோறும்;* ***ஆனையின் கூடம் தோறும் -*** *யானைக் கொட்டாரங்கள் தோறும்;* ***மாத்துறு மாடந் தோறும் -*** *பலவகை விலங்குகள் உள்ள மாடங்கள்தோறும்;* ***வாசியின் பந்தி தோறும் -*** *குதிரைச் சாலைகள் தோறும்;* ***கா -*** *பாதுகாப்பு;* ***துறும் -*** *நெருங்கியுள்ள;* ***சோலை தோறும் -*** *சோலைகள் தோறும்;* ***பூத்தொறும் வாவிச் செல்லும் -*** *மலர்கள் தோறும் தாவிப் போகின்ற;* ***பொறிவரி வண்டின் -*** *புள்ளிகளும் வரிகளுமுடைய வண்டினைப் போல்;* ***போனான் -*** *சென்றான்.*

*கடல்கடந்ததிருவடியுடைய அனுமன், பூக்கள் தோறும் தாவிப் போகும் வண்டைப் போல் - சாலைகள் தோறும், கூடந்தோறும். மாடந் தோறும், பந்தி தோறும் சென்றான். ஆ - பசு. ஆன் - எருது என்றும் பொருள் கூறலாம். ஆன் அலாது ஊர்தியில்லை என்று திருமுறை பேசும். (நாவரசர் தானலாது) ஆன்+ஐ- ஐ சாரியை. ஊர் உற்றது என்று கூற வேண்டியதைக் கவிச் சக்கரவர்த்தி 'ஊரை உற்றது' என்பான் - (நகர் நீங்கு படலம் 230). மாத்து - உயர்வு என்று கூறுவாரும் உளர். அனுமன் பிறர் அறியாவண்ணம் சென்றான். அதை விளக்கவே பூத்தொறும் தாவிச் செல்லும் வண்டு வந்தது. அவனுக்குக் கூடமும் மாடமும் பூவாக இருந்தன. 'காத்து உறு சோலை' என்று பிரித்து, பாதுகாத்துப் பயன் படுத்தும் சோலைகள் எனப் பொருள் உரைத்தல் பொருந்துமேல் கொள்க.*
***(101)***

***4936. பெரியநாள்ஒளிகொள் நானா***
***வித மணிப்பித்திப்பத்தி,***
***சொரியும் மா நிழல் அங்கங்கே***
***சுற்றலால்,காலின் தோன்றல்,***
***கரியன்ஆய்,வெளியன் ஆகிச்***
***செய்யனாய்காட்டும் - காண்டற்கு***
***அரியன்ஆய்எளியன் ஆய்த் தன்***
***அகத்து உறைஅழகனேபோல்.***

***நாள் ஒளி கொள்-*** *நட்சத்திரங்களின் ஒளியைப் பெற்ற;* ***நானாவித -*** *பலவிதமான;* ***பெரியமணி -*** *பெரியமணிகள் (பதிக்கப்பெற்ற);* ***பித்திப் பத்தி -*** *சுவரின் வரிசைகள்;* ***சொரியும் -*** *பொழிகின்ற;* ***மா நிழல் -*** *சிறந்தஒளியானது அங்கங்கே; அனுமன் செல்லுகின்ற இடமெல்லாம்* ***சுற்றலால் -*** *அனுமனைச் சூழ்ந்துள்ளகாரணத்தால்;* ***காலின் தோன்றல் -*** *வாயுதேவனின் புதல்வனான அனுமன்;* ***காண்டற்கு அரியனாய் -*** *கண்ணாற் காண்பதற்கு அரியவனாய்;* ***எளியனாய் -*** *அறிவால் காண்பதற்கு எளியவனாய்;* ***தன் அகத்து -*** *தன்னுடைய மனத்திலே;* ***உறை அழகனே போல் -*** *தங்கியிருக்கும் இராமபிரானைப் போல;* ***கரியனாய் -*** *கரிய நிற முடையவனாகவும் (திருமால்);* ***வெளியனாய் -*** *வெண்ணிறமுடையவனாகவும் (பிரம்மதேவன்);* ***செய்யனாய் -*** *செந்நிறமுடையவனாகவும் (சிவபிரான்);* ***காட்டும் -*** *(தன்னைப் பலவிதமாகக்) காண்பித்துக் கொண்டான்.*

*பலவிதமாகஒளியைப் பாய்ச்சும் சுவர்களின் சார்பால் அனுமன் தன் உள்ளத்தில் உள்ள இராமபிரானைப் போலக் கரியவனாகவும் வெளியவனாகவும் சிவந்தவனாகவும் தன்னைத் தோற்றுவித்துக் கொண்டான், அனுமன் நீலம், முத்து, மாணிக்க மணிகளின் ஒளியால் சுற்றப்படும் போது முறையே கரியன், வெளியன், செய்யன் ஆகிறான் என்க.* ***(102)***

*அனுமன்அரக்கர்களைக் காணுதல்*

***4937. ஈட்டுவார்,தவம்அலால் மற்று***
***ஈட்டினால்,இயைவது இன்மை***
***காட்டினார்விதியார்; அஃது***
***காண்கிற்பார் காண்மின் அம்மா!-***
***பூட்டுவார் முலைபொறாத***
***பொய் இடைநையப் பூநீர்***
***ஆட்டுவார் அமரர்மாதர்;***
***ஆடுவார்அரக்க மாதர்.+***

***வார் பூட்டு -*** *கச்சால் இறுக்கிக் கட்டப்பெற்ற;* ***முலை பொறாத -*** *கொங்கைகளைச் சுமக்கவியலாத;* ***பொய் இடை -*** *நுட்பமான இடையானது;* ***நைய -*** *வருத்தம் அடையும்படி;* ***அமரர் மாதர் -*** *;தேவ மகளிர்;* ***பூ நீர் -*** *சங்கமுகநதியில்;* ***ஆட்டுவார் -*** *நீராட்டுவார்கள்;* ***அரக்க மாதர் -*** *அரக்க மகளிர்;* ***ஆடுவார் -*** *நீராடுவார்கள்;* ***அஃது -*** *அக்காட்சியால்;* ***விதியார் -*** *நல்வினை என்பவர்;* ***ஈட்டுவார் -*** *தேடிச் சேர்க்க விரும்புவர்;* ***தவம் அ(ல்)லால் -*** *தவம் ஒன்றைத் தவிர;* ***மற்று -*** *(பொருள் முதலான) பிறவற்றை;* ***ஈட்டினால் -*** *சேர்த்து வைத்தால்;* ***இயைவது இன்மை -*** *ஏற்றதாக (அறம்) அமையாததை;* ***காட்டினார் -*** *கண்கூடாக்கினார். (இதை);****காண்கிற்பார் -*** *காணும்ஆற்றலுடையவர்கள்;* ***காண்மின் -*** *காணுங்கள் (அம்மா - உரையசை).*

*இடை வருந்தத்தேவமகளிர் நீராட்ட அரக்கியர்கள் நீராடு கின்றனர் அக்காட்சியால் தேடிச் சேர்க்க விரும்புபவர் தவத்தைத் தவிரப் பிறவற்றைச் சேர்த்தால் அவை இயையாமையை விதியார் அறிவித்தார். காணும் ஆற்றலுடையவர்கள் காணுங்கள்.*

*100 முதல் 103வரை கவிக் கூற்று. இழிந்த அரக்கியர்க்கு உயர்ந்த தேவ மாதர் பணி செய்தனர். இது தவத்தின் பயன். 'அறத்தாறு' என்னும் குறளில் 'இது' என்பது ஈண்டு அது என வந்தது.*

*இஃது என்னும் பாடபேதம் சிறந்தது. பூ நீர் - சங்கமுக நதி; பூ - சங்க முகம். நீர் - நதி. பூம்புகார் என்பதன் தொடரை ஆய்க. பூ நீர் - பன்னீர் என்று பொருள் கூறப் பெற்றது. அம்மா வியப்பிடைச்சொல்.* ***(103)***

***4938. கானகமயில்கள் என்ன,***
***களிமடஅன்னம் என்ன,***
***ஆனனக் கமலப்போது***
***பொலிதர,அரக்கர் மாதர்,***
***தேன்உகு சரளச்சோலை***
***தெய்வநீர்ஆற்றின் தெண்நீர்,***
***வானவர் மகளிர்ஆட்ட***
***மஞ்சனம்ஆடுவாரை-***

**ஆனன கமலப் போது-** *முகமாகிய தாமரை மலர்கள்;* **பொலிதர -** *விளங்கித் தோன்ற (மகிழ்ச்சியுடன்);* **வானவர் மகளிர் -** *தேவலோகப் பெண்கள்;* **தேன் உகு சரளச் சோலை -** *தேன்சிந்தும் தேவதாரு சோலையில்;* **தெள்நீர் -** *தெளிந்த தண்ணீரால்;* **ஆட்ட -** *நீராட்ட;* **கானக மயில்கள் என்ன -** *காட்டு மயில்கள் போலவும்;* **தெய்வநீர் ஆற்றில் -** *(ஆகாய) கங்கையாற்றில்;* **ஆட்ட -** *நீராட்ட;* **களிமட அன்னம் என்ன -** *களிப்பும் இளமையும் பெற்ற அன்னம் போலவும்;* **ஆடுவார் -** *நீராடுகின்ற;* **அரக்கர் மாதரை -** *அரக்கப் பெண்களையும்.*

*நீராட்டும்தேவமகளிர் மலர்ந்த முகத்துடன் பணி செய்கின்றனர் என்பதை விளக்க கமலப் போது பொலிதர என்றான். இவ்வடை மொழி அரக்கியர்க்கு அமையாமையை அறிக. சோலையில் மயில் போலவும், ஆற்றில் அன்னம் போலவும் நீராடினர். மயில்கள் போலவும், அன்னம் போலவும் சோலையில், ஆற்றில் ஆட்ட ஆடும் அரக்கியரை - என்றுபொருள் கூறுவர்.104முதல் 121 ஆம் பாடல் வரை ஒரு தொடர் இரண்டாம் வேற்றுமை 'ஐ' கண்டார் என்பதை அவாவும்.* ***(104)***

***4939. 'இலக்கணமரபிற்கு ஏற்ற***
***எழுவகைநரம்பின் நல்யாழ்***
***அலத்தகத்தளிர்க்கை நோவ,***
***அளந்துஎடுத்து அமைத்த பாடல்***
***கலக்குறமுழங்கிற்று' என்று***
***கன்னியர்சேடி மார்கள்***
***மலர்க்கையால்,மாடத்து உம்பர்***
***மழையின்வாய்பொத்து வாரை-***

**இலக்கண மரபிற்குஏற்ற -** *நூல் முறைக்குப் பொருந்திய;* **எழுவகை நரம்பின் -** *ஏழுவகையான நரம்பைப் பெற்ற;* **நல்யாழ் -** *சிறந்த யாழில்;* **அலத்தகம் -** *செம்பஞ்சு*

பூசப்பெற்ற; **தளிர்க்கை நோவ -** தளிர்போன்ற கைகள் வருந்த; **கன்னியர் -** அரக்கப் பெண்கள்; **அளந்து -** தாளத்திற்கேற்ப அளக்கப்பட்டு; **எடுத்து அமைத்த பாடல் -** எடுப்பாக அமைத்த பாசுரம்; **கலக்குற -** கலக்கம் அமையும்படி; **முழங்கிற்று என்று -** இடிக்கின்றதென்று; **மழையின்வாய் -** மேகத்தின் வாயை; **மலர்க்கையால் -** (தம்முடைய) மலர்போன்ற கைகளால்; **பொத்துவார் -** மூடுகின்ற; **சேடிமாரை -** (அரக்கியரின்) தோழியர்களையும்.

யாழில் உருக்கள்சுரங்களுடன் பாடப்பெறும் சுரங்களுடன் பாடும்பா பாசுரம் என்க. அளந்து எடுத்து அமைந்த பாடல் - இசைநூல் வல்லார் ஆராய வேண்டிய பகுதி. இயற்றமிழ் ஒன்றே அறிந்தவர் உண்மை காண ஒண்ணாதது அலத்தகம் - செம்பஞ்சுக் குழம்பு. 'அலத்தகப் பஞ்சு அடுத்த பரிபுரப் பல்லவம்' (கம்ப. 2385) என்னும் தொடரை நோக்குங்கால் அலத்தகம் குழம்பை உணர்த்திடுமோ என்று தோன்றுகிறது. இது அரத்தகம் என்றும் வழங்கப்படும். பொத்துவார் - முற்று பெயரெச்சப் பொருளில் வந்தது. ***(105)***

***4940. சந்தப்பூம்பந்தர் வேய்ந்த***
***தமனியஅரங்கில், தம்தம்***
***சிந்தித்ததுஉதவும் தெய்வ***
***மணிவிளக்கு, ஒளிரும் சேக்கை,***
***வந்து ஒத்தும்திருத மாக்கள்***
***விளம்பிதநெறிவழாமை***
***கந்தர்ப்ப மகளிர் ஆடும்***
***நாடகம்காண்கின்றாரை-***

**சந்தம் -** அழகிய; **பூம்பந்தர் -** பூவால் அமைந்த பந்தல்; **வேய்ந்த -** மேற்கட்டியாக அமைந்ததும்; **சிந்தித்தது உதவும் -** நினைத்தவற்றை வழங்கும்; **தெய்வ -** தெய்வத்தன்மை பெற்ற; **மணிவிளக்கு ஒளிரும் -** மணிகள் ஒளி வீசுவதும் (ஆன); **தமனிய அரங்கில் -** பொன்னாலான அரங்கத்தில்; **வந்து -** இசை மரபை நன்றாக அறிந்து; **திருதம் ஒத்தும் மாக்கள் -** தாளத்தை ஒத்துகின்றவர்களின்; **விளம்பித நெறி -** விளம்பித வழிகள்; **வழாமை -** தவறுபடாமல்; **கந்தர்ப்ப மகளிர் -** காந்தருவப் பெண்கள்; **ஆடும் -** ஆடுகின்ற; **நாடகம் -** நாடகத்தை; **தம்தம் -** தங்கள் தங்கட்குரிய; **சேக்கை -** ஆசனத்தில் இருந்து கொண்டு; **காண்கின்றாரை -** காண்பவராகிய அரக்க மகளிரை.

விளக்கு, அரங்கிற்கு இன்றியமையாதது. அதை அறிந்தால் அதைக் காணும் அவைக்குச் சேர்த்து மயங்கார் - இவ் விளக்கை மாண் விளக்கு என்பர் அடிகள் (சிலம்பு 3 - 108) சேக்கை என்பதற்கு 'நாயகப்பந்தி' என்று பொருள் கொள்ளின். சேக்கை - ஆடும் நாயகப் பத்தி. திருதம் - தாளவகை. 'விளம்பிதம்' என்பது தாளஒத்துக் கேற்ற கட்டுகளாகும். இசை நூற்கூறு - 'விளம்பின' என்றபாடம் பொருட்சிறப்பின்று. ***(106)***

***4941. திருத்தியபளிக்கு வேதி***
***தெள்ளியவேல்கள் என்ன***
***கருத்து இயல்புஉரைக்கும்***

உண்கண்கருங்கயல், செம்மைகாட்ட
வருத்தியகொழுநர் தம்பால்
வரம்பின்றி வளர்ந்த காம
அருத்தியபயிர்க்கு நீர்போல்
அருநறவுஅருந்து வாரை

**திருத்திய** - *நன்றாகஅமைக்கப் பெற்ற;* **பளிக்கு வேதி** - *பளிங்குத் திண்ணை;* **தெள்ளிய வேல்கள் என்ன** - *கூர்மையான வேல்களைப் போல வருத்த அதை மறக்க;* **கருத்து இயல்பு** - *மனத்தின் இயற்கையை;* **உரைக்கும்** - *வெளிப்படுத்துகின்ற;* **உண்** - *மை பூசப் பெற்ற;* **கண் கருங்கயல்** - *கண்ணாகிய கயல் மீன்கள்;* **செம்மை காட்ட** - *ஊடற் சீற்றத்தால் ஆகிய, செந்நிறத்தை வெளிப்படுத்தும்படியாக;* **வருத்திய** - *(பரத்தையின் தொடர்பால்)துன்புறுத்திய;* **கொழுநர் தம்பால்** - *கணவர் மாட்டு;* **வரம்பு இன்றி** - *எல்லையில்லாமல்;* **வளர்ந்த காமம்** - *பெருகிய காமமாகிய;* **பயிர்க்கு நீர் போல்** - *பயிரில் பாய்ச்சப்படும் தண்ணீரைப் போலவும்;* **அருத்திய** - *(தாம்) விருப்பம் கொண்ட;* **அருநறவு** - *சிறந்த மதுவை;* **அருந்துவாரை** - *உண்பவராகிய அரக்க மகளிரையும்.*

*கருங்கயல் -பிரிவைக் காட்டுகிறது. வருத்துதல் - பரத்தையர்பால் பிரிந்து வருத்துதல். அடிகள், கண்ணகி கருங்கயல், மாதவி செங்கண் என்றார் (இந்திர - 237) கருங்கண் என்றது கண்ணகிக்குப் புணர்ச்சியின்மையால் செங்கண் என்று உரைத்தது மாதவிக்குப் புணர்ச்சி விதும்பலால் என்று அரும்பதவுரை பேசும். கயற்கண் அன்புப் பார்வையைக் காட்டும். வேல்வழி சீற்றத்தைக் காட்டும். (கம்ப.983) இது விப்பிரலம்பம் (பிரிவு)*
***(107)***

*4942.* கோது அறுகுவளை நாட்டம்
கொழுநர்கண் வண்ணம் கொள்ள,
தூதுளங் கனியைவென்று
துவர்த்தவாய் வெண்மை தோன்ற,
மாதரும் மைந்தர்தாமும்
ஒருவர்பால்ஒருவர் வைத்த
காதல்அம்கள்உண் டார்போல்,
முறைமுறைகளிக்கின் றாரை-

**கோது அறு** - *குற்றம்இல்லாத;* **குவளை நாட்டம்** - *(அரக்கியரின்) குவளைப் பூப் போன்ற கரிய கண்கள்;* **கொழுநர்** - *தம் கணவரின்;* **கண்வண்ணம் கொள்ள** - *கண்ணின் (சிவந்த) இயல்பைப் பெறவும்;* **தூதுளங்கனியை** - *தூதுளம் பழத்தை;* **வென்று** - *(நிறத்தால்) வெற்றி கொண்டு;* **துவர்த்த வாய்** - *செந்நிறம் பெற்றவாயில்* **வெண்மை தோன்ற** - *வெண்மை நிறம் வெளிப்படவும்; (பூரண இன்பம் பெற்று)* **மாதரும்** - *அரக்கப் பெண்களும்;* **மைந்தர்தாமும்** - *ஆடவர்களும்;* **ஒருவர் மேல் ஒருவர் வைத்த** - *ஒருவர் பால் ஒருவர் கொண்டுள்ள;* **காதல்அம் கள்** - *காதலாகிய மதுவை;* **உண்டார்போல்** - *உண்டவர்போல்;* **முறைமுறை** - *மாறி மாறி;* **களிக்கின்றாரை** - *செருக்குக் கொள்பவராகிய காதலர்களையும்.*

*கரியகண்கள்சிவத்தலும், சிவந்த வாய் விளர்த்தலும் புணர்ச்சியால் உண்டாகும். களி - உள்ளச் செருக்கு - (திருக்கோவை 52. பேராசிரியர்)இச்செருக்கு - உவகை மிகுதி தந்தது. இது சம்போகம் (புணர்ச்சி)* ***(108)***

***4943. விற்படர்பவளப் பாதத்து***
***அலத்தகம்எழுதி, மேனி***
***பொற்பு அளவு இல்லா***
***வாசப்புனைநறுங் கலவை பூசி,***
***அற்புத வடிக்கண்வாளிக்கு***
***அஞ்சனம்எழுதி, அந்தில்***
***கற்பகம்கொடுப்ப வாங்கி***
***கலன்தெரிந்து அணிகின்றாரை-***

***படர்வில் -*** *பரவியஒளியைப் பெற்ற;* ***பவளப் பாதத்து -*** *பவளம் போன்ற பாதங்களில்;* ***அலத்தகம் எழுதி -*** *செம்பஞ்சுக் குழம்பை அலங்கரித்துப் பூசி;* ***அளவு இல்லா -*** *அளவு கடந்த;* ***பொற்பு -*** *பொலிவைப் பெற்ற;* ***வாசம் -*** *மணமுடைய;* ***புனை -*** *கற்பூரம் முதலானவை சேர்க்கப்பெற்ற;* ***நறுங்கலவை -*** *நல்ல கலவைச் சந்தனத்தை;* ***மேனி பூசி -*** *மேனியில் அணிந்து (பிறகு);* ***அற்புத -*** *அதிசயமான;* ***வடி -*** *கூர்மையான;* ***கண் வாளிக்கு -*** *கண்களாகிய அம்புக்கு;* ***அஞ்சனம் எழுதி -*** *மையிட்டு;* ***அம் பொன் -*** *அழகிய பொன்மயமான;* ***கற்பகம் -*** *கற்பக மரம்;* ***கலன்கொடுக்க -*** *ஆபரணங்களை வழங்க (அவற்றுள்);* ***தெரிந்து -*** *தமக்கு ஏற்றவற்றை அறிந்து;* ***வாங்கி -*** *பெற்று;* ***அணிகின்றாரை -*** *அணிபவர்களாகிய அரக்கப் பெண்டிரையும்.*

*வாங்கி என்றான்மரத்திற்குக் கீழே தம் கையைத் தாழ்த்தாமல் எடுத்துக் கொண்டமை நோக்கி.* ***(109)***

***4944. புலிஅடு மதுகை மைந்தர்***
***புதுப்பிழை உயிரைப் புக்கு,***
***நலிவிட அமுதவாயால்***
***நச்சுஉயிர்த்து, அயிற்கண் நல்லார்,***
***மெலிவுடைமருங்குல் மின்னின்***
***அலமர,சிலம்பு விம்மி***
***ஒலிபட உதைக்கும்தோறும்***
***மயிர்ப்புளகு உறுகின் றாரை-***

***புலிஅடும் -*** *புலியைக்கொல்லும்;* ***மதுகை மைந்தர் -*** *வலிமையுடைய வீரக்கணவர் புரிந்த;* ***புதுப்பிழை -*** *புதிய குற்றமானது;* ***புக்கு -*** *உள்ளத்தே நுழைந்து;* ***உயிரை நலிவிட -*** *உயிரையே துன்பம் செய்ய;* ***அயில் கண் நல்லார் -*** *வேல்போன்ற கண்களையுடைய மகளிர்;* ***அமுத வாயால் -*** *(முன்பு) அமுதம் வழங்கிய வாயால்;* ***நச்சு உயிர்த்து -*** *(நச்சு) பாம்பைப் போல மூச்சை வெளிப்படுத்தி;* ***மெலிவு உடை மருங்கில் -*** *மெலிந்துள்ள இடையானது;* ***மின்னின் அலமர -*** *மின்னலைப் போலத் தடுமாறவும்;* ***சிலம்பு -*** *சிலம்பானது;* ***விம்மிஒலிபட -*** *துடித்து ஒலிக்கவும்;* ***உதைக்கும் தோறும் -*** *உதைக்கும்*

*போதெல்லாம்;* ***மயிர்ப்புளகு உறுகின்றாரை -*** *மயிர் சிலிர்க்கப் பெறுகின்றவர் களையும்;*

*தலைவி உதைப்பதுதலைவனுக்கு இன்பம் தரும். உய்ந்த பிள்ளை ஊடலைக் காட்டும் குறிப்பாக உதைத்தலை அபிநயித்தார். அப்போது எம்பார், 'அவனுக்கு அது தேட்டம், என்றார். வைணவ உரைவளம் (30பக்) காண்க.*
***(110)***

***4945. உள்ளுடைமயக்கால் உண்கண்***
***சிவந்து,வாய்வெண்மை ஊறி,***
***துள்இடைப் புருவம்கோட்டித்***
***துடிப்ப,வேர்பொடிப்ப, தூய***
***வெள்ளிடை மருங்குலார்தம்***
***மதிமுகம்வேறு ஒன்று ஆகிக்,***
***கள்ளிடைத்தோன்ற நோக்கிக்***
***கணவரைக்கவல்கின் றாரை-***

***தூய -*** *(மேகம் முதலானவைஇல்லாத) சுத்தமான;* ***வெள்ளிடை -*** *வெட்ட வெளி போன்ற;* ***மருங்குலார் -*** *இடையை உடைய மகளிர்;* ***தம் மதிமுகம் -*** *தம்முடைய சந்திரனை ஒத்த முகம்;* ***வேறு ஒன்றாகி -*** *பிறிதொருவடிவமாகி;* ***கள்ளிடை தோன்ற -*** *கள்ளின் சாடியிலே தெரிய;* ***நோக்கி -*** *அதைப் பார்த்து (அதனால்);* ***உள் உடை மயக்கால் -*** *மனம் சிதைந்ததால்உண்டாம் மயக்கத்தால்;* ***உண்கண் சிவந்து -*** *மையுண்ட கண்கள்சிவக்கப்பெற்று;* ***வாய்வெண்மை ஊறி -*** *வாயில் வெண்ணிறம் பரவி;* ***துள் -*** *துள்ளுகின்ற;* ***புருவம் -*** *புருவம்;* ***இடை -*** *நடுவில்;* ***கோட்டி துடிப்ப -*** *வளைந்து துடிக்க;* ***வேர் பொடிப்ப -*** *வியர்வை அரும்பித் தோன்ற;* ***கணவரை -*** *(தன்னைத் தேடும்)கணவரை;* ***கனல்கின்றாரை -*** *சீறுகின்ற மகளிரையும். இப் பாடலைப்பின்பற்றி பரஞ்சோதியார் அமைத்த பாடல் - திருவிளையாடற் புராணம் தருமிக்குப் பொற்கிழியளித்த படலத்தில் (75) காண்க. புலவர் புராணம், பரஞ்சோதி... கம்பன் தனை நம்பிக் கள்ளுண்டாட்டுரைத்தது என்று கூறும்.* ***(111)***

***4946. ஆலையில்,மலரில், சாரல்***
***முழையினில், அமுதவாரிச்***
***சோலையில்,துவசர் இல்லில்***
***சோனகர்மனையில், தூய***
***வேலையில் கொளஒணாத***
***வேற்கணார்குமுதச் செவ்வாய்***
***வால் எயிற்று ஊறுதீம்தேன்***
***மாந்தினர்மயங்கு வாரை-***

***ஆலையில் மலரில்-*** *கரும்பிலும் மலரிலும்;* ***சாரல் முழையினில் -*** *மலைச்சாரலையடுத்த குகையிலும்;* ***அமுதவாரிச் சோலையில் -*** *நீர்ப் பெருக்குடைய சோலையிலும்;* ***துவசர் இல்லில் -*** *துவசர்களின் வீட்டிலும்;* ***சோனகர் மனையில் -*** *யனவர் மனையிலும்;* ***தூய வேலையில் -*** *தூய பாற்கடலிலும்;* ***கொள ஒணாத -*** *பெற*

*முடியாத;* ***வேல் கண்ணார் -*** *வேல் போன்ற கண்ணைப் பெற்ற மகளிரின்;* ***குமுதச் செவ்வாய் -*** *குமுத மலர் போன்ற வாயில்;* ***ஊறும் வால் எயிற்று -*** *வெள்ளிய பற்களுக்கிடையில் ஊறுகின்ற;* ***தீம் தேன் -*** *இனிய தேனை;* ***மாந்தினர் -*** *நன்றாகக் குடித்து;* ***மயங்குவோரை -*** *மயங்குபவர்களாய அரக்கரையும்.*

*துவசர் -கள்விற்பவர்.* ***(112)***

***4947. நலன்உறுகணவர் தம்மை***
***நவைஉறப்பிரிந்து, விம்மும்***
***முலைஉறு கலவைதீய,***
***முள்இலாமுளரிச் செங்கேழ்***
***மலர்மிசைமலர்பூத் தென்ன,***
***மலர்க்கையால் வதனம் தாங்கி,***
***அலமரும்உயிரி னோடும்***
***நெடிதுஉயிர்த்து அயர்கின்றாரை-***

***நலன்உறு -*** *அழகுமிக்க;* ***கணவர்தம்மை -*** *கணவர் பால்;* ***நவைஉற -*** *குற்றம் உண்டாக;* ***பிரிந்து -*** *ஊடலால் அவரை விட்டு நீங்கி;* ***விம்மும் -*** *பருத்துள்ள;* ***முலை -*** *முலையின்கண்ணே;* ***உறுகலவை -*** *மிகுதியாகப் பூசப்பெற்ற சந்தனம்;* ***தீய -*** *தீய்ந்து போகும்படி;* ***முள்இலா -*** *முள்ளே இல்லாத;* ***செங்கேழ் -*** *சிவந்த ஒளிபெற்ற;* ***முளரிமலர்மிசை -*** *தாமரை மலரில்;* ***மலர் பூத்த என்ன -*** *மலரானது மலர்ந்தாற் போல;* ***மலர்க்கையில் வதனம் தாங்கி -*** *மலர் போன்ற கையால் முகத்தைத் தாங்கி;* ***அலமரும் -*** *ஊசலாடுகின்ற;* ***உயிரினோடும் -*** *உயிருடன்;* ***நெடிது உயிர்த்து -*** *பெருமூச்சு விட்டு;* ***அயர்கின்றாரை -*** *கவலைப்படுகின்ற மகளிர்களையும்;*

*துன்பம்உண்டாக்கப் பிரிந்தவர் துன்புறுதல் அதிசயம் - இவர்கள் கோபம் ஊடற்கோபமோ ? விரகக் கோபமோ ? உணர்வரிது. சேக்கிழார், புலவியோ, பிரிவோ என்பார் (ஏயர்கோன் 315) திருக்குறள் இந்நிலையை 'நிறையழிதல்' என்னும் அதிகாரத்தில் பேசும். கணவர் தம்மை - கணவர்பால் - இரண்டன் உருபை ஏழன் உருபாக்குக. நவை - துன்பம்.* ***(113)***

***4948. ஏதிஅம்கொழுநர் தம்பால்***
***எய்தியகாத லாலே,***
***தாது இயங்குஅமளிச் சேக்கை,***
***உயிர்இலாஉடலின் சாய்வார்,***
***மாதுயர்க் காதல்தூண்ட,***
***வழியின்மேல் வைத்த கண்ணார்,***
***தூதியர் முறுவல்நோக்கி***
***உயிர்வந்துதுடிக்கின்றாரை-***

***ஏதி அம்கொழுநர் தம்பால் -*** *ஆயுதம் ஏந்தியகணவர்பால்;* ***எய் தியகாதலால் -*** *ஒன்றுபட்ட காமத்தாலே; (அவர்பிரிய)* ***தாது இயங்கு -*** *மகரந்தப்பொடிகள், அசைகின்ற;* ***அமளிச்சேக்கை -*** *படுக்கையிடத்தில்;* ***உயிர் இலா -*** *உயிர் அற்ற;* ***உடலின்***

***சாய்வார்*** - *உடம்பைப் போல் விழுந்து;* ***மாதுயர்*** - *மிக்க துன்பத்தை உண்டு பண்ணும்;* ***காதல் தூண்ட*** - *காதலானதுஉந்துதலாலே;* ***வழியின் மேல் வைத்த*** - *(அவர் வரும்) வழியிலே நிறுத்திவைத்த;* ***கண்ணார்*** - *கண்களையுடையவராய்;* ***தூதியர் முறுவல் நோக்கி*** - *தூதாகச் சென்ற பெண்களின் புன்னகையைப் பார்த்து;* ***உயிர் வந்து*** - *சென்ற உயிர் மீளவும் வரப் பெற்று;* ***துடிக்கின்றாரை*** - *துடிக்கின்றவர்களையும்;*

*ஏதி - ஆயுதம்,அமளி - படுக்கை; சேக்கை - இடம்.* ***(114)***

***4949. சங்கொடுசிலம்பும், நூலும்***
***பாதசாலகமும் தாழ,***
***பொங்குபல்முரசம் ஆர்ப்ப***
***இல்உறைதெய்வம் போற்றி,***
***கொங்குஅலர்கூந்தல், செவ்வாய்,***
***அரம்பையர், பாணி கொட்டி***
***மங்கல கீதம்பாட***
***மலர்ப்பலிவகுக்கின்றாரை-***

***சங்கொடுசிலம்பும்*** - *சங்கு வளையல்களும்காற்சிலம்பும்;* ***நூலும்*** - *அரை நூல் மாலையும் (மேகலை);* ***பாத சாலகமும்*** - *பாதத்தில் அணியும் கொலுசும்;* ***தாழ*** - *ஒலி குன்றும்படியாக;* ***பொங்கு*** - *மிக்கு ஒலிக்கின்ற;* ***பல்முரசம் ஆர்ப்ப*** - *பலவகை முரசங்கள் ஒலிக்கவும்;* ***கொங்கு அலர் கூந்தல்*** - *மணத்தைப் பரப்பும் கூந்தலையும்;* ***செவ்வாய்*** - *சிவந்த வாயையும் (உடைய);* ***அரம்பையர்*** - *தேவமாதர்கள்;* ***பாணி கொட்டி*** - *தாளத்தை ஒற்றி;* ***மங்கல கீதம் பாட*** - *மங்கலப் பாடல்களைப் பாடவும்;* ***இல்லுறை தெய்வம் போற்றி*** - *வீட்டுத் தேவதைகளைப் புகழ்ந்து;* ***மலர்ப்பலி*** - *அருச்சனைப் பூக்களை;* ***வகுக்கின்றாரை*** - *தூவுகின்ற இல்லுறை மகளிர்களையும்;*

*இல்லுறை தெய்வம்- வீட்டுத் தேவதை. இலக்கணையார் இலம்பகத்தில் இனியர் 17 ஆம் பாடலில் இல்லுறை தெய்வத்திற்குப் பூப்பலியைச் சிந்தினார் என்று வரைந்தார். 'பூப்பலி செய்து' (சிலம்பு - 28 - 231) பூப்பலி - அருச்சனை (குறிப்புரை) நூல் - அரைநூல்மரவை (மேகலை)* ***(115)***

***4950. இழைதொடர் வில்லும் வாளும்***
***இருளொடு மலைய, யாணர்க்***
***குழைதொடர்நயனம் கூர்வேல்***
***குமரர்நெஞ்சு உருவக் கோட்டி,***

***முழைதொடர் சங்கு பேரி***
***முகில்என முழங்க, மூரி***
***மழைதொடர் மஞ்ஞை என்ன***
***விழாவொடு வருகின்றாரை-***

***இழை தொடர்*** - *ஆபரணங்களிலிருந்து புறப்படும்;* ***வில்லும்*** - *(விட்டுவிட்டு வரும்) ஒளியும்;* ***வாளும்*** - *இடையீடின்றி வரும் ஒளியும்;* ***இருளொடு மலைய*** - *இருளுடன்*

*போர் செய்யுவும்;* ***குழை தொடர் -*** *காதணிகளை அளாவும்;* ***நயனம் -*** *கண்களாகிய;* ***யாணர் -*** *புதுமையான;* ***கூர்வேல் -*** *கூர்மையான வேலை;* ***கோட்டி -*** *செலுத்தி (அதனால்);* ***குமரர் நெஞ்சு -*** *இளைஞர்களின் நெஞ்சங்களை;* ***உருவ -*** *துளைக்கவும்;* ***தொடர் -*** *அடுக்கடுக்கான;* ***முழைசங்கு -*** *துளை பெற்ற சங்குகளும்;* ***பேரி -*** *முரசங்களும்;* ***முகில் என -*** *மேகம் போல;* ***முழங்க -*** *ஆரவாரிக்கவும்;* ***மூரி மழை தொடர் -*** *வலிய மேகத்தின் பால் அன்பு கொண்ட;* ***மஞ்ஞை என்ன -*** *மயில்களைப் போல;* ***விழாவொடு வருகின்றாரை -*** *விழாக் கோலத்துடன் வரும் பெண்டிரையும்; மலைய, உருவ,முழங்க, வருகின்றாரை எனக்கூட்டுக - அன்றி - மலைய, முழங்க, வேல் உருவக் கோட்டி வருகின்றாரை என்றும் பொருள் கொள்ளலாம். வில் - விட்டுவிட்டுப் பிரகாசிப்பது வாள் - தொடர்ந்து பிரகாசிப்பது. வில்லும் வாளும் இருளொடு போர் செய்கிறது (சிலேடை) பெண்மையைச் சிறப்பிக்கும் சங்க நூல்கள் 'விழவு மேம்பட்ட நலன்' (குறுந் 125) குறுமகள் வந்தென விழவாயிற்று (குறுந் 294) என்று பேசும்.* ***(116)***

***4951.. பள்ளியில், மைந்த ரோடும்***
 ***ஊடிய பண்புநீங்கி,***
***ஒள்ளிய கலவிப்பூசல்***
 ***உடற்றுதற்குஉருத்த நெஞ்சர்,***
***மெள்ளவே இமையைநீக்கி,***
 ***அஞ்சன இழுதுவேய்ந்த,***
***கள்ளவாள்நெடுங்கண் என்னும்***
 ***வாளுறைகழிக்கின்றாரை-***

***பள்ளியில் -*** *படுக்கையில்;* ***மைந்தரோடும் -*** *தம்முடைய கணவருடன்;* ***ஊடிய பண்பு நீங்கி -*** *பிணங்கிய இயல்பை விடுத்து;* ***ஒள்ளிய -*** *சிறந்த;* ***கலவிப் பூசல் உடற்றுதற்கு -*** *புணர்ச்சிப் போர்புரிவதற்கு;* ***உருத்தநெஞ்சர் -*** *சீறிய மனத்தையுடையவராய்;* ***மெள்ள -*** *மெதுவாக;* ***இமையை நீக்கி -*** *கண்ணிமைகளைத் திறந்து;* ***அஞ்சனம் -*** *மையாகிய;* ***இழுது வேய்ந்த -*** *நெய் பூசப் பெற்ற;* ***கள்ளவாள் -*** *வஞ்சகமும் கொடுமையும் பெற்ற;* ***நெடுங்கண் என்னும் -*** *பெரிய கண்கள் ஆகிய;* ***வாள் -*** *வாளாயுதத்தை;* ***உறை கழிக்கின்றாரை -*** *உறையிலிருந்து கழித்தெடுப்பவரையும்.*

*ஈங்கு பேசப்படும்மகளிர் ஊடலால் உறங்குவதுபோல் பாசாங்கு புரிபவர்கள். அவர்களின் உள்ளக் காதலே ஊடலை நீக்கிற்று. கணவன் காணாதபோது அவனைக் கண்டு அவன் நிலையை ஆராய்தலின் கள்ள நெடுங்கண் என்றார். கலிங்கத்துப் பரணி இத்துயிலைப் பொய்த்துயில் என்று பேசும். போர் என்றமையால் 'உருத்த நெஞ்சர்' என்றார். மை நெய்யாகவும், இமை உறையாகவும் கொள்க. இழையை நீக்கி என்பது பாடமாயின் அணிகள் கலவிப் போர்க்கு இடையூறு நல்கிற்று என்று நீங்கியதாகக் கொள்க (கம்ப. 1017).* ***(117)***

***4952. ஓவியம்அனைய மாதர்***
 ***ஊடினர்,உணர்வோடு உள்ளம்***
***மேவிய கரணம்மற்றும்***
 ***கொழுநரோடுஒழிய, யாணர்த்***
***தூவியம் பேடைஎன்ன***

***மின்இடைதுவள ஏகி,***
***ஆவியும் தாமுமேபுக்கு***
***அருங்கதவு அடைக்கின்றாரை-***

***உணர்வோடுஉள்ளம் -*** *உணர்ச்சியும்ஊக்கமும்;* ***மேவிய கரணம் -*** *ஒன்றியிருக்கும் அந்தக் கரணங்களும்;* ***மற்றும் -*** *பிற பொருள்களும்;* ***கொழுநரோடு ஒழிய -*** *கணவர்பால் சென்று தங்க (தனித்திருந்து);* ***ஊடினர் -*** *ஊடல் கொண்டு;* ***யாணர் -*** *அழகிய;* ***தூவியம் பேடை என்ன -*** *இறகையுடைய பெண் அன்னம் போல;* ***மின் இடை -*** *மின்னல் போன்ற இடையானது;* ***துவள ஏகி -*** *துவளும்படியாகப் புறம்பே போய்;* ***ஆவியும் தாமுமேயாய் -*** *பெருமூச்சும் தாமுமாக இருந்துகொண்டு;* ***அருங்கதவு அடைக்கின்றார் -*** *சிறந்த கதவை அடைக்கின்ற;* ***ஓவியம் அனைய மாதர் (ஐ) -*** *சித்திரம் போன்ற மாதரையும். கரணம்- மனம்,புத்தி சித்தம், அகங்காரம். உணர்வு-அறிவு உள்ளம்- ஊக்கம். தலைவிக்கு உதவியாக இருந்தது பெருமூச்சே., உள்ளம் மேவிய கரணம் என்பதை ஒரு தொடராக்கி அந்தக் கரணம் என்று உரை கூறுவர், சிலர். உள்ளம் - மனம் என்பர் சிலர். ஆவி-உயிர் என்று கூறப்பெற்றது. ஆவி-பெருமூச்சு. 'உணர்வு அழுங்க உயிர்த்தனள் ஆவியே' (கம்ப. 1092.) ஐ உருபு மாதருடன் கூட்டப் பெற்றது - அடைக்கின்ற மாதரை என அமைக்க.* ***(118)***

*4953.* ***கின்னரமிதுனம் பாடக்,***
***கிளர்மழைகிழித்துத் தோன்றும்***
***மின் எனத்தரளம் வேய்ந்த***
***வெண்நிறவிமானம் ஊர்ந்து,***
***பன்னக மகளிர்சுற்றிப்***
***பலாண்டுஇசை பரவ, பண்ணைப்***
***பொன்நகர்வீதிதோறும்;***
***புதுமனைபுகுகின் றாரை-***

***கிளர் -*** *மேல்நோக்கி எழுகின்ற;* ***மழை -*** *மேகத்தை;* ***கிழித்துத் தோன்றும் -*** *பிளந்து கொண்டு வெளிப்படுகின்ற;* ***மின் என -*** *மின்னலைப் போல;* ***தரளம் வேய்ந்த -*** *முத்துக்களால் போர்ததப் பெற்ற;* ***வெண்நிற -*** *வெண்மையான நிறத்தைப் பெற்ற;* ***விமானம் ஊர்ந்து -*** *விமானத்தைச் செலுத்தி; (தமக்குரிய இடத்தைச் சார்ந்து) (அங்கே)* ***கின்னர மிதுனம் பாட -*** *கின்னரப் பறவைகள் பாடவும்;* ***பன்னக மகளிர் -*** *நாகலோகப் பெண்கள்;* ***சுற்றி -*** *சூழ இருந்து கொண்டு;* ***இசை -*** *பண்ணுடன்;* ***பலாண்டு பரவ -*** *பல்லாண்டுகளால் வாழ்த்தவும்;* ***பண்ணை -*** *நீர்நிலைகளைப் பெற்ற;* ***பொன்நகர் வீதிதோறும் -*** *புதிய நகரத்தில் அமைந்த வீதிதோறும்;* ***புதுமனைபுகுகின்றாரை -*** *புதிதாகக் கட்டப்பெற்ற வீடுகளில் புகுபவரையும்; 'பொன்' என்றசொல் புதுமையைக் காட்டும். பொன்ஏர் - என்பது முதலில் உழுதலைக் குறிப்பதை அறிக. பண்ணை - நீர்நிலை. தக்கை இராமாயணம் 'இல்லறவீதியும் புதுமனையும் கட்டிக் குடியேறும் பலரைக் கண்டான்' என்று பேசும் (சௌந்தரிய - ஊர் தேடு - 8) நகரும் புதிது வீடும் புதிது. கின்னர மிதுனம் - இசைபாடும் பறவை. கின்னரம் முரலும் அணங்குடைச்சாரல் (பெரும்பாண் 494) பெரியாழ்வார், கின்னரம் மிதுனங்களும் கின்னரம் தொடுகிலோம் என்றனர். (பெரியாழ்வார் திருமொழி 3 - 6) என்று பாடுகிறார். மணவாள மாமுனிகள், கொண்டு பாடித்திரிகையாலே கிந்நரமிதுனங்கள் என்றுஜகத்பிரஸித்தங்களாய் இருக்கின்றவர்கள் என்று விளக்கம் தந்தார். ஆழ்வாரின்*

*திருவுள்ளம். கின்னரமிதுனம் தேவர்கள் என்று கருதுகின்றது. கம்பர் பாடுகின்ற கின்னர மிதுனங்கள் என்பார். ஏற்பன கொள்க.* ***(119)***

***4954. கோவையும்குழையும் மின்ன,***
***கொண்டலின் முரசம் ஆர்ப்ப,***
***தேவர்நின்று ஆசிகூற,***
***முனிவர்சோபனங்கள் செப்ப,***
***பாவையர்குழாங்கள் சூழ,***
***பாட்டொடுவான நாட்டுப்***
***பூவையர் பலாண்டுகூற,***
***புதுமணம்புகுகின்றாரை-***

***கொண்டலின் -*** *மேகத்தைப்போல;* ***முரசம் ஆர்ப்ப -*** *முரசங்கள் முழங்கவும்;* ***நின்று -*** *நின்றுகொண்டு;* ***தேவர் ஆசிகூற -*** *தேவர்கள் ஆசிகள் கூறவும்;* ***முனிவர் -*** *முனிவர்கள்;* ***சோபனங்கள் செப்ப -*** *மங்கல வாழ்த்துக்கள் பாடவும்;* ***பாவையர் குழாங்கள் -*** *பெண்கள் கூட்டங்கள்;* ***பாட்டொடு -*** *பாட்டுக்களோடு;* ***சூழ -*** *சுற்றியிருக்கவும்;* ***வானநாட்டுப் பூவையர் -*** *தேவலோகப் பெண்கள்;* ***பலாண்டு கூறு -*** *பல்லாண்டுகள் பாட;* ***கோவையும் -*** *முத்துக்களாலும் மணிகளாலும் அமைந்த மாலைகள்;* ***குழைகள் மின்ன -*** *மகரக் குழைகள் ஒளி வீசவும்;* ***புதுமணம் புணர்கின்றாரை -*** *புதுமணம் புரிகின்றவர்களையும்.* ***(120)***

*அனுமன்கும்பகருணனைக் காணுதல்*

***4955. இயக்கியர், அரக்கி மார்கள்,***
***நாகியர்,எஞ்சுஇல் விஞ்சை***
***முயல்கறைஇல்லாத் திங்கள்***
***முகத்தியர், முதலி னோரை-***
***மயக்குஅற நாடிஏகும்***
***மாருதி, மலையின் வைகும்***
***கயக்கம்இல்துயிற்சிக் கும்ப***
***கருணனைக் கண்ணின் கண்டான்.***

***இயக்கியர் -*** *யட்சப்பெண்கள்;* ***அரக்கிமார்கள் -*** *அரக்கப் பெண்கள்;* ***நாகியர் -*** *நாகலோகப் பெண்கள்;* ***எஞ்சு இல் -*** *குறைவற்ற;* ***முயல்கறை-*** *முயலாகிய களங்கம்;* ***இல்லாத் திங்கள் -*** *இல்லாத சந்திரனைப் போன்ற;* ***முகத்தியர் -*** *முகத்தையுடைய;* ***விஞ்சை -*** *வித்தியாதரப்பெண்கள்;* ***முதலினோரை -*** *முதலான பெண்களை;* ***மயக்கு அற -*** *சந்தேகம்இல்லாதபடி;* ***நாடி ஏகும் மாருதி -*** *ஆராய்ந்து செல்லும் ஆஞ்சநேயன்;* ***மலையின் வைகும் -*** *மலைபோல் உள்ளவனும்;* ***கயக்கம் இல் துயிற்சி -*** *இடையீடில்லாத உறக்கத்தை உடையவனும் ஆகிய;* ***கும்பகருணனை -*** *கும்பகர்ணனை;* ***கண்ணின் கண்டான் -*** *கண்களால் பார்த்தான்.*

*இயக்கியர்முதலானோரை நாடிச்செல்லும் மாருதி கும்பகர்ணனைப் பார்த்தான். முகத்தியர்,என்னும் குறிப்பு வினைமுற்று பெயரெச்சப்பொருளில் வந்தது. வினை*

*எஞ்சு கிளவியும் வேறு பல்குறிய (தொல்-சொல் 457-சேனா) விஞ்சை என்பது ஆகுபெயராய் விஞ்சையரைக் குறித்தது. 'வித்தைகள் வித்தை ஈசர்' என்னும் சித்தியாரில் வித்தை என்பது மந்திரேசுரரைக் குறித்தமை காண்க (சித்தி. சுபக்கம் 1-25) கயக்கம் - இடையீடு. 104 முதல் 121 வரை ஒரு தொடர்.*
***(121)***

**கலிவிருத்தம்**

***4956. ஓசனைஏழ்அகன்று உயர்ந்தது; உம்பரின்***
***வாசவன் மணிமுடிகவித்த மண்டபம்***
***ஏசுற விளங்கியது;இருளை எண்வகை***
***ஆசையின்நிலைகெட அலைக்கல் ஆன்றது.***

*(கும்பன் அரண்மனை)*

***ஏழ் ஓசனை -** ஏழு யோசனை தூரம்; **அகன்று உயர்ந்தது -** விரிவு பெற்று அதற்கேற்ப உயர்ந்தது; **உம்பரின் -** விண்ணுலகத்தில்; **வாசவன் -** இந்திரன்; **மணி முடி கவித்த மண்டபம் -** அழகிய முடியைத் தரித்துக் கொண்ட மண்டபமானது; **ஏசுற -** பழியடையும்படி; **விளங்கியது -** (அதனினும் சிறப்பாக) ஒளி வீசுவது; **எண்வகை ஆசையின் -** எட்டுத் திக்கின் கண்ணும் உள்ள; **இருள் -** இருளானது **நிலைகெட -** நிலைகெட்டு அழிய; **அலைக்கல் ஆன்றது -** ஓடச்செய்தலால் (மன) நிறைவு பெறுவது.*

*இந்திரன் மணிமுடிசூடும் மண்டபம் இந்திரனின் மணிமுடியைச் சூடிய மண்டபம் என்றும் இந்திரனின் மணி முடியைப் பறித்துக் கொண்டு வந்து கும்பகர்ணன் அதைஅணிந்து கொண்டமண்டபம் என்றும் கூறலாம். 'மன்னும் புரந்தரன்தன் முடிபதித்த மணிமண்டபத்து' என்று எம்பெருமான் கவிராயர் பாடுகின்றார் (தக்கை ராமாயணம் சௌந்தரிய - ஊர்தேடு. 9) கலிவிருத்தம். ஊர் தேடு படலத்தில் 43 ஆம் பாடலின் குறிப்பைக் காண்க.* ***(122)***

***4957. அன்னதன்நடுவண், ஓர் அமளி மீமிசை***
***பன்னக அரசுஎனப்பரவை தான்என,***
***துன்இருள்ஒருவழித் தொக்க தாம்என,***
***உன்னஅருந்தீவினை உருக்கொண் டென்னவே.***

***அன்னதன் நடுவண்-** அந்தமண்டபத்தின் நடுவில், **ஓர் அமளி மீமிசை -** ஒரு கட்டிலின் மேலே **; பன்னக அரசு என -** பாம்பரசனான ஆதிசேடனைப் போலவும்; **பரவைதான் என -** பாம்பரசனான ஆதிசேடனைப் போலவும்; **பரவைதான் என -** கடலைப் போலவும்; **ஒரு வழி -** ஒரு பக்கத்தில்; **தொக்கது -** ஒன்று கூடிய; **துன் இருள் என -** மிக்க இருள் போலவும்; **உருக் கொள் -** வடிவம் பெற்ற; **உன்ன அரும் -** சிந்திக்க அறியாத; **தீவினை என்னவும் -** பாபத்தைப் போலவும் (உள்ள கும்பகருணன்).*

*தொக்கது இருள் -ஒன்று கூடிய இருள் தொக்கது என்னும் முற்று பெயரச்சப் பொருளில் வந்தது. (முகவை கவிராயர். நன் 351) இங்ஙனம் மாற்றாக்கால் அரசு என, பரவை என - யாவும் பெயராக வருதலும் தொக்கது என முற்று வினையாக வருதலும்*

*சிறப்பின்மை ஓர்க. ஆம் - அசை 'உடற்றவே கொல் ஆம் இப்படை எடுத்தது' என்ற இடத்து ஆம் அசையாயிற்று (கம்ப. 2308.)* ***(123)***

***4958. முன்னிய கனைகடல் முழுகி, மூவகைத்***
***தன்இயல்கதியொடு தழுவி, தாது உகு***
***மன்நெடுங் கற்பகவனத்து வைகிய***
***இன்இளந்தென்றல்வந்து இழுகி ஏகவே.***

***(அரண்மனையில்)***

***தாது உகு -*** *மகரந்தப் பொடிகள் சிந்துகின்ற;* ***மன்நெடுங் கற்பக வனத்து -*** *நிலைபெற்ற பெரிய கற்பகச் சோலையில்;* ***வைகிய -*** *தங்கியிருந்த;* ***இன் -*** *இனிமையான;* ***இளந்தென்றல் -*** *இளமையான தென்றற் காற்றானது;* ***முன்னிய -*** *கிளர்ந்துள்ள;* ***கனைகடல் முழுகி -*** *ஆரவாரிக்கும் கடலில் நீராடி;* ***தன் இயல் -*** *தனக்குப் பொருத்தமான;* ***மூவகைக் கதியொடும் தழுவி -*** *மூன்றுவகையான நடையைமேற்கொண்டு;* ***வந்து -*** *கும்பகர்ணனின் பக்கம் வந்து;* ***இழுகி ஏக -*** *வருடிச் செல்லவும்.*

*முன்னிய -கிளர்ந்தெழுந்த. நளிகடல் முன்னியது போலவும் (பரிபாட்டு 12-7) பணி செய்வோர் நீராடித் தூய்மையுடன் வந்து தொண்டு புரிவர். அதனையே தென்றல் மேற்கொண்டது. மூவகை இயல், மந்த நடை, மத்திய நடை, துரித நடை (அடை பதி) குளிர்ச்சி, மந்தம், பரிமணம் ஆக கதி மூன்றினையும் என்பது பழைய உரை. (அடை - பதி) காளிதாசரும் இம் மூன்று பண்பையே போற்றுவார். கங்கை நீர் தோய்ந்ததால் குளிர்ச்சியும், தேவதாரு மரங்களின் சார்பால் மணமும், மயில்தோகையை அலைத்ததால் மென்மையும் பெற்ற காற்று வேடர்களின் நலிவைப் போக்கிற்று என்பர் (குமார 1-15)* ***(124)***

***4959. வானவர்மகளிர் கால்வருட, மாமதி***
***ஆனனம் கண்டமண்டபத்துள், ஆய்கதிர்க்***
***கால்நகு காந்தம்மீக்கான்ற காமர்நீர்த்***
***தூநிற நறுந்துளிமுகத்தில் தோற்றவே.***

***வானவர் மகளிர்-*** *தேவமகளிர்;* ***கால் வருட -*** *கால்களைப் பிடித்து விடவும்;* ***மாமதி -*** *நிறைந்த பூரண சந்திரனானவன்;* ***ஆனனம் கண்ட -*** *தன் முகத்தைப் பார்த்துக் கொள்ளும்;* ***மண்டபத்துள் -*** *மண்டபத்தின்கண்;* ***ஆய்கதிர் -*** *மென்மையான ஒளி;* ***நகு -*** *விளக்கம் பெற்ற;* ***காந்தக் கால் -*** *காந்தத்தால் அமைத்த தூண்;* ***மீ கான்ற -*** *மேலே வெளிப்படுத்திய;* ***காமர் -*** *இனிமை யானதும்;* ***தூ -*** *தூய்மையானதும்;* ***நிறம் -*** *சிறப்பு மிக்கதும் (ஆன);* ***நறும் நீர்த்துளி -*** *நறுமணம் மிக்க நீர்த்துளி;* ***முகத்தில் -*** *முகத்திலே;* ***தூற்ற -*** *மெல்ல வீசப் பெறவும்.*

*சந்திரன் தன்முகஅழகைப் பார்க்கும் மண்டபம். சந்திரன் பார்வை பட்டதால் காந்தத் தூண்கள் நறுந்துளி தூற்றின.* ***(125)***

***4960. மூசியஉயிர்ப்பு எனும் முடுகு வாதமும்,
வாசலின்புறத்திடை நிறுவி, வன்மையால்
நாசியின்அளவையின் நடத்த, கண்டவன்
கூசினன்;குதித்தனன், விதிர்த்த கையினான்.***

***மூசிய -*** *ஒன்றன் பின்ஒன்றாய் மொய்த்து வருகின்ற;* ***உயிர்ப்பு எனும் -*** *மூச்சுக்காற்று எனப்படும்;* ***முடுகு வாதமும் -*** *வேகமான காற்றும்;* ***வாசலின் புறத்திடை நிறுவி -*** *(அனுமனைக்கும்பகர்ணன் கிடந்தஅரண்மனை) வாயிலின் புறத்தை விட்டு அப்பாற் செல்ல வொட்டாது நிறுத்தி;* ***வன்மையால் -*** *தன் ஈர்ப்பு வலிமையினாலே;* ***நாசியின் அளவையின் நடத்த -*** *கும்பகர்ணனது மூக்கு வரை இழுப்பது ஆக இயக்க;* ***கண்டவன் -*** *அதனை அநுபவத்தால் உணர்ந்த அனுமன்;* ***கூசினன் -*** *மூக்கின் உள்ளே செல்லக்கூசி;* ***விதிர்த்த கையினான் குதித்தனன் -*** *அச்சத்தால் கைகளை உதறிக் குதித்து அப்பாற் சென்றான்.*

*புறத்தேஅனைத்தையும் கண்டுவரும் அனுமனைக் கும்பகர்ணனது சுவாசக் காற்று தன் வாசலை விட்டுப் புறஞ் செல்லாது நிறுத்தி மூக்குவரை இழுக்க உள்ளே போகாது தன் ஆற்றலால் தப்பிக் கை உதறிக் குதித்தான் எனவே அத்தகு சுவாச காதம் உடையனாய் உள்ளான் கும்பகருணன் என்பதாம். 'வீரன் வாயில் திறத்தலும் சுவாத காதம் மண்டுற, வீரர் எல்லாம் வருவது போவதாக' (கம்ப.7320) எனப் பின்வருவது இங்கு ஒப்பு நோக்கத் தக்கது.* ***(126)***

***4961. பூமியின்தொகைவிசும்பு அணவப் போய்ப்புகும்
கேழ்இல்வெங்கொடியவன் உயிர்ப்பு - கேடுஇலா
வாழிய உலகுஎலாம்துடைக்கும் மாருதம்
ஊழியின்வரவுபார்த்து உழல்வது ஒத்ததே.***

***விசும்பு -*** *ஆகாயத்தில்;* ***பூமியின் தொகை -*** *புழுதிக்கூட்டம்;* ***அணவ -*** *மேல் நோக்கிச் செல்லும்படி;* ***போய் -*** *வெளியே சென்று;* ***புகும் -*** *உள்ளே நுழையும்;* ***கேழ் இல் -*** *ஒப்புமையற்றதும்* ***வெம் -*** *வெப்பமானதும் ஆய;* ***கொடியவன்-*** *கும்பகர்ணனது;* ***உயிர்ப்பு -*** *உறக்க மூச்சு;* ***கேடு இலா -*** *கெடுதல் இல்லாத;* ***உலகு எலாம் -*** *எல்லா உலகங்களையும்;* ***துடைக்கும் -*** *அழிக்கின்ற;* ***மாருதம் -*** *பிரளயக் காற்று;* ***ஊழியின் வரவு பார்த்து -*** *யுகமுடிவை எதிர்பார்த்து;* ***உழல்வது ஒத்ததே -*** *திரிந்து கொண்டிருப்பதைப் போன்றது.*

*புழுதித் தொகைவிண்ணிற் படர விண்ணிலே சென்று மீண்டு வரும் உறக்க மூச்சு, ஊழிக்காலத்தை எதிர்பார்க்கும் பிரளயக்காற்று ஒத்தது. சண்டமாருதம் ஊழிக்காலம் வருதே என்று பார்ப்பது போன்று மூச்சு வெளியே புறப்பட்டது. அந்த வாயு நமக்கு இன்னும் காலம் வரவில்லை என்று பின்வாங்கல் ஒத்தது என்ற உ.வே.சா. நூல்நிலையப் பதிப்பு உரை சிறப்பாக உள்ளது. வாழிய - அசை.* ***(127)***

***4962. பகைஎன, மதியினைப் பகுத்து, பாடுஉற
அகைஇல்பேழ்வாய் மடுத்து, அருந்துவான்எனப்,
புகையொடுமுழங்குபேர் உயிர்ப்புப் பொங்கிய
நகைஇலா முழுமுகத்துஎயிறு நாறவே.***

***பகைஎன*** - பகை என்று கருதி; ***மதியினை*** - பூரண சந்திரனை; ***பகுத்து*** - இரண்டு கூறு படுத்தி; ***அகைஇல்*** - வருத்தம் இல்லாத; ***பேழ்வாய்*** - பெரியவாயின்; ***பாடு*** - இரண்டு பக்கத்திலும்; ***உற மடுத்து*** - நன்றாக உட்கொண்டு; ***அருந்துவான் என*** - உண்பவனைப் போல; ***புகையொடு*** - புகையும்; ***முழங்குபேர் உயிர்ப்பு*** - முழங்குகின்ற பெருமூச்சு; ***பொங்கிய*** - மிக்கிருக்கின்ற; ***நகை இலா*** - புன்னகையில்லாத; ***முழுமுகத்து*** - பெரியமுகத்திலே; ***எயிறு நாற*** - பற்கள் தோன்றவும்.

*சந்திரனை இரண்டுகூறுபடுத்தி உண்பவனைப் போல இரண்டு பக்கங்களிலும் வெண்மையான பற்கள் தோன்றவும். புகையும், உயிர்ப்பும் உள்ள முகம் நாற - வெளிப்பட்டுத்தெரிய அகையில் - வருத்தம் இல்லாத. உணவு இல்லாமையால் வருத்த மடையாத வாய். அகை - வருத்தம். அகையேல் அமர் கோழி (சிந்த 1524)*
***(128)***

## *4963. தடைபுகு மந்திரம் தகைந்த நாகம்போல்,*
## *இடைபுகல் அரியதுஓர் உறக்கம் எய்தினான்,*
## *கடையுக முடிவு எனும்காலம் பார்த்து அயல்*
## *புடைபெயராநெடுங் கடலும் போலவே.*

***யுகம் முடிவு எனும்*** - யுகங்களின் முடிவு என்று கூறப்படும்; ***கடை காலம் ஓர்ந்து*** - பிரளய காலத்தை எதிர்பார்த்து; ***அயல் புடை பெயரா*** - கரையைவிட்டுச் செல்லாத; ***நெடும்*** - பெரிய; ***கடல் போல*** - சமுத்திரத்தைப் போலவும்; ***தடைபுகு மந்திரம்*** - தடையைச் செய்யும் மந்திரத்தால்; ***தகைந்த*** - கட்டுப்பட்ட; ***நாகம் போல்*** - நல்ல பாம்பைப் போலவும்; ***இடை*** - இடையூறு; ***புகல் அரியது*** - புகவியலாத; ***உறக்கம் எய்தினான்*** - உறக்கத்தைஅடைந்தான். ***(129)***

*அனுமன் கும்பகர்ணனைஇராவணனோ என ஐயுற்றுத் தெளிதல்*

**கலிநிலைத்துறை**

## *4964. ஆவ தாகியதன்மைய அரக்கனை, அரக்கர்*
## *கோ எனாநின்றகுணமிலி இவன்எனக் கொண்டான்*
## *காவல்நாட்டங்கள் பொறியுகக் கனலெனக் கனன்றான்*
## *ஏவனோஇவன் ? மூவரின் ஒருவனாம் ஈட்டான் !*

***மூவரின்*** - மும்மூர்த்திகளில்; ***ஒருவன் ஆம் எனும்*** - ஒப்பற்ற சிவபிரான் ஒப்பாவான் என்று கூறப்படும்; ***ஈட்டான்*** - வலிமையுடைய அனுமன்; ***ஆவது ஆகிய தன்மைய*** - அப்படிப்பட்ட தன்மையுடைய; ***அரக்கனை*** - அரக்கனாய கும்பகருணனை; ***இவன் ஏவனோ*** - இவன் யாரோ (என ஐயுற்று); ***அரக்கர் கோ எனா*** - அரக்கர்களின் தலைவன் என்று; ***நின்ற*** - நிலைபெற்றுள்ள; ***குணம் இலி*** - பண்பற்றவன்; ***இவன் எனா*** - இவன் என்று; ***கொண்டான்*** - மனத்திலே எண்ணிக் கொண்டு; ***காவல் நாட்டங்கள்*** - உலகைப் பாதுகாக்கும் கண்கள்; ***பொறி உக*** - நெருப்புப் பொறி பறக்க; ***கனல் என*** - தீயைப் போன்று; ***கனன்றான்*** - சினங் கொண்டான்.

*பிறர், 'அரக்கனை இராவணன் என்று கருதியதாகவும், பிறகு மூவரில் (இராவணன், கும்பன், மேகநாதன்) யாவர் என்று எண்ணியதாகவும் கூறுவர். வை.மு.கோ. இவன் திரிமூர்த்திகளுள் யாராயினும் ஒருவன் என்று சொல்லத்தக்க பெருமை உடையவனான அனுமன் என்று இறுதியடிக்கு உரை வகுத்தார்.* ***(130)***

***4965. குறுகி,நோக்கி, மற்று அவன்தலை ஒருபதும், குறித்த***
***இறுகு திண்புயம்இருபதும், 'இவற்குஇலை' என்னா,***
***மறுகி ஏறியமுனிவுஎனும் வடவைவெங் கனலை***
***அறிவு எனும்பெரும் பரவை அம் புனலினால், அவித்தான்.***

***மற்று*** - *பிறகு;* ***குறுகிநோக்கி*** - *(அரக்கனை) நெருங்கிப் பார்த்து;* ***அவன்*** - *அந்த இராவணனுக்கு அடையாளமான;* ***ஒருபது தலையும்*** - *பத்துத் தலைகளும்;* ***குறித்த*** - *கணக்கிட்ட;* ***இறுகு*** - *செறிவைப் பெற்றுள்ள;* ***இருபது திண்புயமும்*** - *இருபது தோள்களும்;* ***இவற்கு இலை*** - *இந்த அரக்கனுக்குக் கிடையாது;* ***என்னா*** - *என்று ஆராய்ந்து அறிந்து (அனுமன்);* ***மறுகி*** - *உள்ளம் கலங்கி;* ***ஏறிய*** - *மேலும் மேலும் பெருகி வருகின்ற;* ***முனிவு எனும்*** - *கோபம் என்கின்ற;* ***வடவை வெங்கனலை*** - *கொடிய வடவைத் தீயை;* ***அறிவு எனும்*** - *ஞானம் என்கின்ற;* ***பெரும்*** - *பெருமையுடைய;* ***அம்*** - *அழகிய;* ***பரவைப் புனலினால்*** - *கடலின் தண்ணீரினால்;* ***அவித்தான்*** - *அணைத்தான்.*

*எதிரே இருப்பவன்இராவணன் என்று கருதியபோது உண்டாகிய சீற்றம் ( இராவணன் அல்லன் என்ற போது) அவிந்தது. இராவணன் செய்த தீச்செயலால் அனுமன் அவன்பால் சீற்றம் கொண்டான். வெறும் புல்லர் தீமையை வேரற்றொழிக்கும்..... கொடும் சினம் மாசற்றார் கோள் (உரைச் சூத்திரம்)* ***(131)***

*கும்பகருணனைக் கடந்து அப்பால்சென்று தேடுதல்*

***4966. அவித்துநின்று, எவன் ஆயினும் ஆக என்று அங்கை***
***கவித்துநீங்கிடச் சில்பகல் என்பது கருதாச்***
***செவிக்குத்தேன்என இராகவன் புகழினைத் திருத்தும்***
***கவிக்கு நாயகன்அனையவன் உறையுளைக் கடந்தான்.***

***இராகவன் புகழினை*** - *இராமபிரானுடைய கீர்த்தியை;* ***செவிக்குத் தேன் என*** - *செவிகட்குத் தேன் போல;* ***திருத்தும்*** - *பரிமாறுகின்ற;* ***கவிக் குநாயகன்*** - *வானரர்களின் தலைவனாகிய அனுமன்;* ***அவித்து நின்று*** - *கோபக்கனலைத் தணித்துக் கொண்டு;* ***எவன் ஆயினும் ஆக*** - *இங்கேயிருப்பவன் யாவன் ஆயினும் ஆகட்டும்;* ***என்று*** - *என்று எண்ணி;* ***அங்கைகவித்து*** - *அகங்கையைப் புறங்கை ஆக்கி;* ***'நீங்கிட சிலபகல்'*** - *இறப்பதற்குச் சில நாள்களே உள்ளன;* ***என்பது கருதா*** - *என்பதை மனத்திலே எண்ணி;* ***அனையவன்*** - *அந்த கும்பகருணனின்;* ***உறையுளை*** - *மாளிகையை;* ***கடந்தான்*** - *புறந்தள்ளிச் சென்றான்.*

*இராகவன் புகழினைத் தன் செவிக்கும் பிறர் செவிக்கும்பரிமாறும் அனுமன் திருத்துதல் - பரிமாறுதல். செம்மையாக்குதல் என்றும் கூறலாம். எவ்விடத்தும் ராமன் சரிதையாம் - அவ்விடத்தினும் அஞ்சலி யத்தனாய் இருந்து இராமகாதை கட்பவன் அனுமன் ஆதலின், புகழினைத் திருத்தும் கவிக்கு நாயகன் என்றான். திருத்துதல் - கறி திருத்துதல் என்பதுபோலப் பக்குவம் செய்தலாம். உறையுள் - தங்குமிடம். கிட - இகழ்ச்சிக் குறிப்பு. இப்பாடல் பின்னிரண்டு வரிகள் கவிச்சக்கரவர்த்தி கம்பனுக்கும் பொருந்தும் என்பர் சான்றோர். கம்பனுக்குக் கொள்ளுங்கால் திருத்தும் என்பது செம்மைப்படுத்தல் என்பது பொருள். **(132)***

***4967. மாட கூடங்கள், மாளிகை ஒளிகை, மகளிர்***
***ஆடு அரங்குகள்,அம்பலம், தேவர் ஆலயங்கள்,***
***பாடல் வேதிகை,பட்டி மண்டபம் முதல் பலவும்***
***நாடி ஏகினன்இராகவன் புகழ்எனும் நலத்தான்.***

***இராகவன் புகழ்எனும் நலத்தான் -** இராமபிரானின்கீர்த்தியின் வடிவமான அனுமன்; **மாட கூடங்கள் -** மாடகூடங்களையும்; **மாளிகை ஒளிகை -** மாளிகை வரிசைகளையும்; **மகளிர் ஆடு அரங்குகள் -** பெண்கள் விளையாடும் மேடைகளையும்; **அம்பலம் -** சபைகளையும்; **தேவர் ஆலயங்கள் -** கடவுளர் கோவில்களையும்; **பாடல் வேதிகை -** இசையரங்குகளையும்; **பட்டி மண்டபம் -** விவாத மேடைகளையும்; **முதல் -** இவை முதலான; **பலவும் -** பலவற்றையும்; **நாடி -** (பிராட்டியைத்) தேடி; **ஏகினன் -** சென்றான். இராமபிரானின்புகழின் வடிவமான அனுமன், மாடகூடங்கள் முதலானவற்றைத் தேடிச் சென்றான். இராமபிரானின்புகழையே எப்போதும் அனுமன் சிந்தித்தபடி இருத்தலின் அவனை இராமபிரானின் புகழாகவே கவிஞன் இசைத்தான். ஒளிகை - வரிசை. அம்பலம் - பலர்கூடும் இடம். வேதிகை -மேடை. **(133)***

***4968. மணிகொள்வாயிலில், சாளரத் தலங்களில், மலரில்***
***கணிகொள்நாளத்தில், கால்என, புகைஎனக் கலக்கும்***
***நுணுகும், வீங்கும்; மற்றுஅவன்நிலை யாவரே***
***நுவல்வார் ?***
***அணுவில்,மேருவில் ஆழியான் எனச்செலும்; அனுமன்***

***ஆழியான் என -** சக்கரப்படை ஏந்திய திருமாலைப் போல; **அணுவின்-** சிறிய அணுவின் கண்ணும்; **மேருவின் -** பெரிய மேருமலையின் கண்ணும்; **செலும் அனுமன் -** ஊடுருவிச் செல்ல வல்ல அனுமன்; **மணிகொள்வாயிலில் -** மணிகள் பதிக்கப்பெற்ற வாசல்களிலும்; **சாளரத் தலங்களில் -** பலகணி இடங்களிலும்; **மலரில் -** பூவின் கண்ணும்; **கணிகொள் நாளத்தில் -** நுட்பமான பூக்களின் தண்டின் கண்ணும்; **கால்என -** காற்றைப் போலவும்; **புகை என் -** புகையைப் போலவும்; **கலக்கும் -** ஒன்று படுவான்;**நுணுகும் -** நுட்பமாகுவான்; **வீங்கும் -** பருமன் ஆகுவான்; **அவன் நிலை -** அந்த அனுமனின் நிலைமையை; **நுவல்வார் -** உள்ளபடி எடுத்துக் கூறவல்லவர்; **யாவர் ? -** எவர் ?*

*மலரின்கண்ணும்,மலர்த்தண்டின் கண்ணும் புகைபோலக் காற்றைப் போல ஒன்றுபட்டுத் தேடினான் அனுமன். திருமால், மேருமலையிலும், அணுவிலும் அந்தர் யாமியாய் இருப்பான். அதுபோல் அனுமன் பெரும் பொருளிலும் சிறிய பொருளிலும்*

*கலந்துள்ளான் என்க. நம்பிள்ளை, ''பரமாணுக்கள் தோறும் நிறைந்திருப்பான். ஓர் அண்டத்தைச் சமைத்து அவ்வண்டத்தில் ஒருவனைத் தனியாக வைத்தது போன்று இருப்பான்,'' என்று வரைந்தார் (திருவாய் 11,10) தூணிலும் உளன்... கோணிலும் உளன் என்பது பிரகலாதனின் உறுதிப்பாடு. (கம்ப, 6312)* ***(134)***

*வீடணனைக் காணுதல்*

***4969.*** **ஏந்தல்,இவ்வகை எவ்வழி மருங்கினும் எய்தி,**
**காந்தள்மெல்விரல் மடந்தையர் யாரையும் காண்பான்**
**வேந்தர்,வேதியர், மேல்உளோர், கீழ்உளோர்,**
**விரும்பப்**
**போந்தபுண்ணியன் கண்அகன் கோயிலுள் புக்கான்.**

***ஏந்தல் -*** *அன்பர்களைப் பாதுகாக்கும் அனுமன்;* ***காந்தள் மெல்விரல் -*** *காந்தள் இதழ்போன்ற மெல்லிய விரல்களைப் பெற்ற;* ***மடந்தையர் யாரையும் -*** *பெண்கள் யாவரையும்;* ***காண்பான் -*** *காணும் பொருட்டாக;* ***இவ்வகை -*** *(நுணுகிப் பெருகி) இப்படி;* ***எவ்வழி மருங்கினும் -*** *எல்லா இடங்களிலும்;* ***எய்தி -*** *அடைந்து;* ***வேந்தர் வேதியர் -*** *அரசர்களும் அந்தணர்களும்;* ***மேல் உளோர் -*** *தேவர்களும்;* ***கீழ்உளோர் -*** *நாகலோகத்தவர்களும்;* ***விரும்ப -*** *விருப்பம் கொள்ளும்படி;* ***போந்த புண்ணியன் -*** *அவதரித்த வீடணனின்;* ***கண் அகன் -*** *இடம் அகன்ற;* ***கோயிலுள் புக்கான் -*** *அரண்மனைக்குள் நுழைந்தான்.*

*அனுமன், மகளிர்யாவரையும் ஆராய்ந்து காண்பதற்காக, எல்லா இடங்களிலும் தேடி வீடணனின் அரண்மனையை அடைந்தான். ஏந்தல் - அன்பர்களை ஏந்துபவன் (காரணப் பெயர்) காந்தள் மலரைக் குறிக்காது இதழைக்குறித்தது ஆகுபெயர். மலர் கைக்கும், இதழ் விரலுக்கும் உவமையாகும். புண்ணியன் என்று வீடணனைக் குறித்தது போற்றி உணரத்தக்கது.* ***(135)***

***4970.*** **பளிக்கு வேதிகைப் பவளத்தின் கூடத்துப் பசுந்தேன்**
**துளிக்கும் கற்பகப் பந்தரில், கருநிறத் தோர்பால்**
**வெளித்து வைகுதல்அரிதுஎன அவர்உரு மேவி,**
**ஒளித்துவாழ்கின்ற தருமம் அன்னான்தனை உற்றான்.**

***(அனுமன்)***

***கருநிறத்தோர்பால் -*** *கரிய நிறமுடையஅரக்கர்களின் நடுவில்;* ***வெளித்து -*** *வெண்ணிறங் கொண்டு (வெளிப்படையாக);* ***வைகுதல் அரிது என -*** *வாழ்வது கடினம் என்று கருதி;* ***அவர் உரு மேவி -*** *அவ்வரக்கர்களின் கரிய வடிவத்தை அடைந்து;* ***பவளத்தின் கூடத்து -*** *பவளத்தாற் செய்யப்பட்ட கூடத்திலே;* ***பசுந்தேன் துளிக்கும் -*** *பசுமையான தேன் சிதறுகின்ற;* ***கற்பகப் பந்தரில் -*** *கற்பகப் பந்தலின் அடியில்;* ***பளிக்கு வேதிகை -*** *பளிங்காலமைந்த மேடையில்;* ***ஒளித்து -*** *மறைத்து;* ***வாழ்கின்ற -*** *வாழும்படியான;* ***தருமம் அன்னான்தனை -*** *தருமம் போன்ற வீடணனை;* ***உற்றான் -*** *அணுகிப் பார்த்தான். அறத்தின் நிறம்வெண்மை என்பது இலக்கிய வழக்கு. இராமபிரானின் பல்லின் வெண்மையைப் பேசவந்த அனுமன், 'துறையறத்தின் வித்து*

*முளைத்த அங்குரல் கொல்' என்று பேசினான் (கம்ப. 5280) " ஆரருள சுரக்கும் நீதி அறம் நிறம்கரிதோ" (கம்ப. 6492) எனப்பின் வருவதும் இங்கு கருதுக.* ***(135)***

### *4971.* உற்றுநின்று, அவன் உணர்வைத் தன் உணர்வினால் உணர்ந்தான்
### ' குற்றம்இல்லதோர் குணத்தினன் இவன்' எனக் கொண்டான்
### செற்றம்நீங்கிய மனத்தினன், ஒருசிறைச் சென்றான்
### பொற்றைமாடங்கள் கோடிஓர் நொடியிடைப் புக்கான்.

**உற்றுநின்று -** *(வீடணனை)அணுகியிருந்து;* **அவன் உணர்வை -** *அந்த வீடணனின் உணர்ச்சியை;* **தன் உணர்வினால் -** *தன்னுடைய ஆய்வுணர்வால்;* **உணர்ந்தான் -** *அறிந்து கொண்டு;* **இவன் -** *இங்கே உறங்கும் இவன்;* **குற்றம் இல்லது -** *குற்றங்கள் இல்லாத;* **ஓர் குணத்தினன் -** *ஒப்பற்ற குணமுடையவன்;* **எனக் கொண்டான் -** *என்று தெரிந்து கொண்டு (அதனால்);* **செற்றம் நீங்கிய -** *பகைமை விலகிய;* **மனத்தினன் -** *உள்ளத்தைஉடையஅனுமன்;* **ஒருசிறைசென்றான் -** *வேறொரு வழியிலே போய்;* **பொற்றை மாடங்கள் கோடி -** *மலைகள் போன்ற மாடங்கள் கோடியளவானவை;* **ஓர் நொடி இடை -** *ஒருமுறை கைநொடிக்கும் நேரத்துள்;* **புக்கான் -** *புகுந்து பார்த்தான்.*

*ஒருத்தி தன்உணர்ச்சியைப் பிறவற்றில் செலுத்திப் பார்ப்பதை வடநூலார்'ஸம்யக் ஞானம்' என்பர். (விவேகானந்தர் ராஜயோகம் யோக சூத்திரம் விபூதிபாதம்). செற்றம் - நீங்காச் சினம் - 'இகலொடு செற்றம் நீங்கிய மனத்தினர்'என்பர் நக்கீரர். பொற்றை - மலை. பொற்றைமாமுழைப் புலாலுடைவாய்(ஆரண்ய. கரன் 135) நொடி கை நொடிக்கும் நேரம். ஒரு மாத்திரை அளவு.குற்றெழுத்து உச்சரிக்கும் காலம்.*
***(137)***

*அனுமன்இந்திரசித்தனைக் காணுதல்*

### *4972.* முந்துஅரம்பையர் முதலினர், முழுமதி முகத்துச்
### சிந்துரம் பயில்வாச்சியர், பலரையும் தெரிந்து,
### மந்திரம்பலகடந்து, தன்மனத்தின்முன் செல்வான்
### இந்திரன் சிறைஇருந்த வாயிலின் கடை எதிர்ந்தான்.

**முந்து -** *முதன்மையான(சிறந்த);* **அரம்பையர் முதலினர் -** *அரம்பையர் முதலான;* **முழுமதி முகத்து -** *பூரண சந்திரனைப் போன்ற முகத்தையும்;* **சிந்துரம் பயில் வாய்ச்சியர் -** *செந்நிறம் மிக்க வாயையும் உடைய;* **பலரையும் -** *பலபெண்களையும்;* **தெரிந்து -** *(இவர்கள் பிராட்டியோ என்று) ஆராய்ந்து;* **பலமந்திரம் கடந்து -** *பல அரண்மனைகளைத் தாண்டி;* **தன் -** *தன்னுடைய;* **மனத்தின்முன் -** *மனத்தைவிட முன்னோக்கி;* **செல்வான் -** *வேகமாகச் செல்லும் அனுமன்;* **இந்திரன் சிறை இருந்த -** *இந்திரன் சிறைக் கைதியாயிருந்த;* **வாயிலின் கடை -** *சிறைச்சாலையின் முன்புறத்தை;* **எதிர்ந்தான் -** *எதிரே கண்டான்.*

*(அனுமன்)அரம்பையர் முதலான மகளிரைத் தேடிச் செல்லும் அனுமன் இந்திரன் கைதியாயிருந்த சிறைக் கோட்டத்தின் முற்றத்தை அடைந்தான். முழுமதி முகத்துச்*

*சிந்துரம்பயில் வாய்ச்சியர் என்னும் நீள்தொடர் மகளிர் என்னும் சுருங்கிய பொருள் தந்து நிற்கின்றது. இனியர், தம் உரையில் இத்தகைய தொடரைச் சுட்டுப் பொருள் தந்ததென்றார். மந்திரம், வீடன்று. அரண்மனை. 'மாளிகை, சாலை மந்திரம் பவளம் - கோயில் என்ப குலமும் அதற்கே (பிங்கலம். ஆலய வகை 652) சிறையிருப்பார் எப்போதும் வாயிலையே நோக்கியிருத்தலின்சிறையிருந்தவாயிலின்கடை என்று பேசப்பட்டது. அனுமன் மனத்தைவிட வேகமாகச் சென்றான். வாயுவேகம், மனோவேகம் என்பர்.* ***(138)***

## *4973. ஏதிஏந்திய தடக்கையர், பிறைஎயிறு இலங்க மூதுரைப் பெருங்கதைகளும் பிதிர்களும் மொழிவார் ஓதில் ஆயிரம்ஆயிரம் உறுவலி அரக்கர் காது வெஞ்சினக்களியினர், காவலைக் கடந்தான்.*

*( அவ்விடத்தில்)(அனுமன்)*

***ஏதி ஏந்திய*** *- ஆயுதங்களைத் தாங்கிய;* ***தடக்கையர்*** *- பெருங்கரங்களைப் பெற்றவர்களும்;* ***ஓதில்*** *- பேசத் தொடங்கினால்;* ***பிறை எயிறு இலங்க*** *- பிறையைப் போன்ற பற்கள் துலங்க;* ***மூதுரை*** *- பழமொழிகளையும்;* ***பெருங்கதைகளும்*** *- பெரிய கதைகளையும்;* ***பிதிர்களும்*** *- விடுகதைகளையும்;* ***மொழிவார்*** *- பேசுபவர்களும்;* ***காது*** *- பகைவர்களைக் கொல்லும்;* ***வெஞ்சினக் களியினர்*** *- சீற்றமாகிய மதுவை அருந்தியவர்களும் ஆகிய;* ***உறுவலி*** *- மிக்க வலிமையுடைய;* ***ஆயிரம் ஆயிரம் அரக்கர்*** *- பல்லாயிரக்கணக்கான எண்ணிக்கை பெற்ற அரக்கர்கள்;* ***காவலை*** *- காக்கும் இடங்களை;* ***கடந்தான்*** *- தாண்டி உள்ளே போனான்.*

*ஓதில் என்னும்எச்சச் சொல் மூதுரை முதலானவற்றைப் பேசுபவர்களைச் சாரும். பலர் பழமொழியில்லாமலும் விடுகதையில்லாமலும் பேசத்தெரியாமல் உள்ளனர். ஏது நுதலிய முதுமொழி என்பர் காப்பியர். பிசியைக் கவிச்சக்கரவர்த்தி 'பிதிர்' என்றார். பிசியின் இலக்கணம் தொல்காப்பியச் செய்யுளியலிற் காண்க. பிசி, பிதிராகி இன்று புதிராகிவிட்டது.* ***(139)***

## *4974. முக்கண்நோக்கினன் முதல்மகன் அறுவகை முகமும் திக்கு நோக்கியபுயங்களும், சில கரந்தனையான், ஒக்கநோக்கியர் குழாத்திடை உறங்குகின்றானைப் புக்குநோக்கினன் புகைபுகா வாயிலும் புகுவான்.*

***புகைபுகா வாயிலும்புகுவான்*** *- புகை நுழையாத இடத்திலும் புகும் அனுமன்;* ***முக்கண் நோக்கினன்*** *- மூன்று கண்ணாற் பார்க்கின்ற இறைவனின்;* ***முதல்மகன்*** *- சிறப்புற்ற மகனான முருகப்பிரான்;* ***அறுவகை முகமும்*** *- ஆறுவகையான முகங்களிலும்;* ***திக்கு நோக்கிய புயங்களும் (கரங்களும்)*** *- திசைகளை நோக்கிய பன்னிருகரங்களிலும்;* ***சில-*** *சில முகங்களையும் சில கரங்களையும்;* ***கரந்தனையான்*** *- ஒளித்துக் கொண்டாற் போன்று தோன்றுபவனும்;* ***ஒக்க நோக்கியர்*** *- ஒரேபடித்தான அழகுடைய மகளிர்களின்;* ***குழாத்திடை*** *- கூட்டத்தின் நடுவில்;* ***உறங்கு கின்றானை*** *- உறங்குபவனும் ஆகிய இந்திரஜித்தனை;* ***புக்கு*** *- அவன் அரண்மனைக்குள் புகுந்து;* ***நோக்கினன்*** *- பார்த்தான்.*

*ஒக்கநோக்கியர் - அவயவம் முழுதும் அழகிய பெண்கள் என்பது பழையவுரை (அடை -பதி)* ***(140)***

***4975. வளையும்வாள்எயிற்று அரக்கனோ? கணிச்சியான் மகனோ?***
***அளையில்வாள்அரி அனையவன்-யாவனோ ? அறியேன்;***
***இளைய வீரனும்ஏந்தலும், இருவரும், பலநாள்***
***உளைய உள்ளபோர் இவனொடும் உளது என உணர்ந்தான்.***

***அளையில் வாள்அரி அனையவன் -*** *குகையில் உறங்கும் கொடுஞ்சிங்கம் போன்ற இவ்வீரன்;* ***வளையும் வாள் எயிறு -*** *வளைந்த ஒளியுள்ள பற்களையுடைய ;* ***அரக்கனோ? -*** *அரக்கர் குலத்தவனோ (அன்றேல்);* ***கணிச்சியான் -*** *மழுப்படை ஏந்திய சிவபிரானின்;* ***மகனோ? -*** *புதல்வனாகிய முருகப் பெருமானோ?* ***யாவனோ -*** *எவனோ (யாரென);* ***அறியேன் -*** *அறியாமல் உள்ளேன் (ஆனால்);* ***இளைய வீரனும் -*** *இளமைப் பருவமுடைய இலக்குவனும்;* ***ஏந்தலும் -*** *சரண் புக்காரைக் காக்கும் இராமபிரானும் (ஆகிய);* ***இருவரும் -*** *இரண்டு மகா வீரர்களும்;* ***உளைய -*** *மன உளைச்சல் அடையும்படி;* ***உள்ள போர் -*** *இனி நிகழக்கூடிய யுத்தம்;* ***பல நாள் -*** *பல நாள்கள்;* ***இவனொடும் -*** *இந்த வீரனுடன்;* ***உளது -*** *நிகழப் போகிறது;* ***என -*** *என்ற உண்மையை;* ***உணர்ந்தான் -*** *அறிந்தான்.*

*கணிச்சி - மழு.கணிச்சி மணிமிடற்றோன் (புறம் 56) அளை - குகை. இவனை யார் என அறியேன். ஆனால் இவன் போர் வல்லான் என்பதை அறிகிறேன், என்ற அனுமனின் தீர்க்கதரிசனம் கூர்மையானது. ஏந்தல் - சரணாகதி அடைந்தவரை ஏந்துபவன். காரணப்பெயர்.* ***(141)***

***4976. இவனைஇன்துணை உடையபோர் இராவணன் என்னே***
***புவனம் மூன்றையும்வென்றது ஓர் பொருள்எனப் புகறல்?***
***சிவனை நான்முகத்தொருவனைத் திருநெடு மாலாம்***
***அவனை அல்லவர்நிகர்ப்பவர் என்பதும் அறிவோ?***

***சிவனை -*** *சிவபெருமானும்;* ***நான்முகத்து ஒருவனை -*** *நான்கு முகம் கொண்ட பிரம்மதேவனும்;* ***திருநெடுமாலாம் அவனை -*** *திருமால் என்று புகழப்படும் அவனும்;* ***அல்லவர் -*** *அல்லாத தேவர்கள் (இவனை);* ***நிகர்ப்பவர் என்பதும் -*** *ஒப்பாவார் என்று கூறுவதும்;* ***அறிவோ -*** *அறிவாகுமா ?* ***இவனை -*** *இந்த வீரனை;* ***இன் துணையுடைய -*** *நல்ல உதவியாளனாகப்பெற்ற;* ***போர் இராவணன் -*** *போர் விருப்பம் பெற்ற இராவணன்;* ***புவனம் மூன்றையும் -*** *மூன்று உலகங்களையும்;* ***வென்றது -*** *வெற்றி கொண்டது;* ***ஓர் பொருள் எனப்புகறல் -*** *ஒரு அருஞ்செயல் என்று கூறுவது;* ***என்னே -*** *என்ன அதிசயம்.*

*மும்மூர்த்திகட்குச் சமமான வீரனைத் துணையாகப் பெற்ற இராவணன் மூன்று உலகத்தை வென்றது செயற்கரும் செயலன்று. சிவனை, ஒருவனை, அவனை -*

*என்பதில் உள்ள 'ஐ' வேற்றுமையன்று. அசை - நாடார் புகழாளை - கூறி, என்ற (சிந் - 26 பதி) இடத்தில் புகழாள் - விசயை, ஐ - அசை என்று இனியர் குறித்தார். பொருள் - செயல். 'ஒரு பொருள் சொல்லுவதுடையேல்' (கலி. 8) என்ற இடத்தில் இனியர் வரைந்ததைக் காண்க.* ***(142)***

*அனுமன் பிறஇடங்களில் தேடுதல்*

***4977*** **என்றுகைம்மறித்து 'இடைநின்று காலத்தை இகப்பது**
**அன்று; போவதுஎன்று, ஆயிரம் ஆயிரத் தடங்காத்**
**துன்று மாளிகைஒளிகள் துரிசு அறத் துருவி**
**சென்று தேடினன்;இந்திர சித்தனைத் தீர்ந்தான்.**

***என்று -*** *என்று(இந்திரசித்தனைப் புகழ்ந்து) கூறி;* ***கைமறித்து -*** *இது இப்படி இருக்கட்டும் என்று கையை அசைத்து;* ***இடை நின்று காலத்தை -*** *தனக்கும் தேடத் தகும் பிராட்டிக்கும் நடுவில் நின்ற காலத்தை (புகழ்வதில்);* ***இகப்பது -*** *கடத்துவது;* ***அன்று -*** *தகாது;* ***போவது -*** *தேடிச் செல்வது (நல்லது);* ***என்று -*** *என்று கருதி;* ***இந்திர சித்தனைத்தீர்ந்தான் -*** *இந்திர சித்தனைநீங்கி;* ***ஆயிரம் ஆயிரத்து அடங்கா -*** *ஆயிரத்தால் பெருக்கப்பட்ட ஆயிரம் என்னும் எண்ணிக்கையில் அடங்காமல்;* ***துன்று -*** *நெருங்கியுள்ள;* ***மாளிகை ஒளிகள் -*** *மாளிகை வரிசைகளை ;* ***துரிசு அற -*** *குற்றங்கள் இல்லாமல்;* ***துருவிச் சென்று -*** *ஊடுருவிப் போய்;* ***தேடினன் -*** *தேடிப் பார்த்தான்.*

*கைமறித்தல் -சரி மேலே ஆவன செய்வோம் என்னும் பொருளை உணர்த்தும் கரச்செயல். கைமறித்தல், கவிச்சக்கரவர்த்தி விரும்பும் சொல். துருவி, தேடினன் - என்ற தொடர் ஆழமானது. துருவுதல் ஊடுருவிப் பார்த்தல். கவிச்சக்கரவர்த்தி இதனைத் தேடுதல் என்னும் சாதாரணப் பொருளிலும், ஊடுருவிப் பார்த்தல் என்னும் சார்புப் பொருளிலும் பேசுவார். 'துருவுமாமணி ஆரம்' (கம்ப. 1105) என்ற இடத்தில் துளையிடுதல் என்னும் பொருள் தந்தது. அதன் சார்புப் பொருளே ஊடுருவல்.*
***(143)***

***4978.*** **அக்கன்மாளிகை கடந்துபோய், மேல், அதிகாயன்**
**தொக்ககோயிலும் தம்பியர் இல்லமும் துருவி**
**தக்க மந்திரத்தலைவர்மா மனைகளும் தடவிப்**
**புக்கு நீங்கினன், இராகவன் சரமென, புகழோன்.***

***புகழோன் -*** *புகழ்மிக்க அனுமன்;* ***அக்கன் மாளிகை கடந்து -*** *அட்சய குமாரன் மாளிகைளைக் கடந்து;* ***மேல் போய் -*** *அப்பாற் சென்று;* ***தொக்க -*** *நெருங்கியுள்ள;* ***அதிகாயன் கோயிலும் -*** *அதிகாயனின் அரண்மனையும்;* ***தம்பியர் இல்லமும் -*** *அவனுக்கு இளையவர்களின் வீட்டையும்;* ***துருவி -*** *ஊடுருவிப் பார்த்து;* ***தக்க -*** *தகுதியுடைய;* ***மந்திரத் தலைவர் -*** *தலைமை அமைச்சர்களின்;* ***மாமனைகளும் -*** *பெரிய வீடுகளையும்;* ***தடவி -*** *துழவி;* ***புக்கு -*** *புகுந்து;* ***இராகவன் சரமென -*** *இராமபிரானின் அம்பைப் போல;* ***நீங்கினன் -*** *சென்றான்.*

*கடந்துசெல்லுதலும், துருவிச் செல்லுதலும், தடவிச் செல்லுதலும் இராகவனின் அம்பின் இயல்பு.'மராமரத்தூடு செல் அம்பு' என்றும் (கம்ப. 4280) 'மலைஉருவி, மரம்*

*உருவி, மண்ணுருவிற்று ஒருவாளி', என்றும் (கம்ப. 662)'உடல்புகுந்து தடவியதோ ஒருவன் வாளி' (கம்ப 9940) என்றும் பேசப்படுபவை உலகம் அறியும். மாருதி இராமபிரானின் அம்புக்கிணையாகப் பேசப்படுவதைப் போலவே அங்கதன்',வீரன் வெஞ்சிலையிற் கோத்த அம்பென விரைவிற் போனான்', (கம்ப. 6986) என்று பேசப்பட்டான்.* ***(144)*** *அனுமன் இடைநகர் அகழியைக் காண்டல்*

***4979. இன்னர்ஆம்இரும் பெரும்படைத் தலைவர்கள் இருக்கைப்***
***பொன்னின்மாளிகை ஆயிர கோடியும் புக்கான்,***
***கன்னிமாநகர்புறத்து அகன் கரந்துறை காண்பான்***
***சொன்ன மூன்றினுள் நடுவணது அகழியைத் தொடர்ந்தான்.***

***இன்னர் ஆம்*** *- இத்தன்மையராகிய;* ***இரும்பெரும் படைத்தலைவர்கள்-*** *மிகப்பெரிய சேனாதிபதிகளின்;* ***இருக்கை -*** *இருப்பிடங்களான;* ***பொன்னின்-*** *பொன்னாற் செய்யப்பெற்ற;* ***ஆயிர கோடி மாளிகையும் -*** *ஆயிர கோடிமாளிகைக்குள்ளே;* ***புக்கான் -*** *புகுந்து பார்த்து;* ***கன்னி மாநகர்ப் புறத்து -*** *அழியாத பெரிய நகருக்குள்ளே;* ***அகன் கரந்து உறை -*** *அகன்ற(இராவணனது) ஒளித்து வாழ்கின்ற இடத்தை;* ***காண்பான் -*** *காணும்பொருட்டாக;* ***சொன்ன -*** *கூறப்பெற்ற;* ***மூன்றனுள் -*** *மூன்று வகையானஅரண்களுக்குள்;* ***நடுவணது அகழியை -*** *இடையில் உள்ள அகழியை;* ***தொடர்ந்தான் -*** *சேர்ந்தான். கடலகழியும்,இவ்வகழியும், இனிப் பேசப்படும் அகழியும் இலங்கையைச் சூழ்ந்துள்ளன. மூன்றாம் அகழி 'தீயவன் இருக்கை அயல் செய்த அகழ் இஞ்சி' என்று பேசப்படும் (கம்ப. 5000) மதிலைக் கன்னி மதில் என்பர் கவிஞர். இத்தொடர்க்கு அழகிய மணவாளப் பெருமாள் நாயனார்', புதுமையழியாத திருமதில்' என்று பெரிய திருமடலில் உரையிட்டார் (திவ்யமடல் 116)* ***(145)***

***4980. தனிக்கடக்களிறுஎன ஒரு துணையிலான் தாய,***
***பனிக்கடல்பெருங் கடவுள்தன் பரிபவம் துடைப்பான்***
***இனி கடப்ப அரிதுஏழ்கடல் கிடந்தது' என்று இசைத்தான்-***
***கனிக்கு அடல்கதிர்தொடர்ந்தவன், அகழியைக் கண்டான்***

***ஒரு துணையிலான் -*** *ஒரு துணையையும் வேண்டாத வீரன்;* ***தனி -*** *ஒப்பற்ற;* ***கட -*** *மதம்பிடித்த;* ***களிறு என -*** *யானை போல;* ***தாய -*** *கடக்கப் பெற்ற;* ***பெரும் -*** *பெரிய;* ***பனி -*** *குளிர்ந்த;* ***கடல் கடவுள்தன் -*** *கடலின் தெய்வத்தின்;* ***பரிபவம் -*** *அவமானத்தை;****துடைப்பான் -*** *துடைக்கும்பொருட்டு;* ***ஏழ்கடல் கிடந்தது -*** *ஏழு கடல் தடையாகக் கிடக்கிறது;* ***இனி -*** *இப்போது;* ***கடப்ப அரிது என்று இசைத்தான் -*** *தாண்டிச் செல்வது கடினம் என்று இசைத்து;* ***கனிக்கு -*** *உண்ணும் கனியின் பொருட்டாக;* ***அடல் கதிர் -*** *வலிமைமிக்க சூரியனை;* ***தொடர்ந்தவன் -*** *பின்பற்றிச் சென்ற அனுமன்;* ***அகழியைக் கண்டான் -*** *(இராவணனின் அரண்மனை) அகழியைப் பார்த்தான்.*

*கடல், அனுமன்கடந்ததால் உண்டான கடல் தெய்வத்தின் அவமானத்தைத் துடைக்க எண்ணுகிறது. அனுமன் ஒரு கடலைக் கடந்ததனாலே, அந்த கடலின் இறைவன் தன்பழி ஒழிக்க, ஏழு கடலும் கூட்டி வந்து கிடந்தது போன்ற அகழியைக் கனிக்காக ஆதித்தனைத் தொடர்ந்தவன் கண்டான் என்பது பழைய உரை (அடை-பதி)*
***(146)***

## *4981. பாழி நல்நெடுங் கிடங்கெனப் பகர்வரேல் பல்பேர்*
## *ஊழி காலம்நின்றுஉலகுஎலாம் கல்லினும் உலவாது*
## *ஆழிவெஞ்சினத்துஅரக்கனை அஞ்சி, ஆழ்கடல்கள்*
## *ஏழும், இந்நகர்சுலாயகொலாம் என இசைத்தான்*

*(அனுமன்) (இந்நீர்ப்பரப்பை)*

***பாழி -*** *பெரும்பரப்புடைய;* ***நல் -*** *சிறந்த;* ***நெடுங் கிடங்கு என -*** *நீண்ட அகழி என்று;* ***பகர்வரேல் -*** *யாவராவது கூறுவாரேயானால்; (பொருந்தாது ஏன்எனில்)* ***பலபேர் -*** *பலமனிதர்கள்;* ***ஊழிகாலம் நின்று -*** *உகமுடிவுக்காலம் வரை உறுதியாயிருந்து;* ***உலகுஎலாம் -*** *எல்லாவுலகங்களையும்;* ***கல்லினும் -*** *தோண்டினும்;* ***உலவாது -*** *அமைக்கவியலாது; (ஆதலால்) இஃது* ***ஆழி -*** *ஆழமான;* ***வெஞ்சினத்து -*** *கொடுஞ்சினத்தையுடைய;* ***அரக்கனை அஞ்சி -*** *அரக்கனுக்குப் பயந்து;* ***ஆழ்கடல்கள் ஏழும் -*** *ஏழுபெருங்கடல்களும்;* ***இந்நகர் -*** *இந்த இலங்கையைச்;* ***சுலாய கொல் -*** *சுற்றியுள்ளனவோ;* ***என -*** *என்று;* ***இசைத்தான் -*** *கூறினான்.*

*மனிதரால்படைக்கப்படுவது அகழி. இஃது அன்னது அன்று, என்பது கருத்து. கொல் - ஐயம் ஆம் - அசை.* ***(147)***

## *4982. ஆயது ஆகியஅகன்புனல் அகழியை அடைந்தான்*
## *'தாய வேலையின்இருமடி விசைகொடு தாவிப்*
## *போய காலத்தும்போக்குஅரிது' என்பது புகன்றான்-*
## *நாயகன் புகழ்நடந்த பேர்உலகெலாம் நடந்தான்.*

***நாயகன் -*** *இறைவனானஇராமபிரானின்;* ***புகழ் நடந்த -*** *புகழ் பரவிய;* ***பேர் -*** *பெரிய;* ***உலகெலாம் -*** *எல்லா உலகங்களிலும்;* ***நடந்தான் -*** *பரவிய அனுமன்;* ***ஆயது ஆகிய -*** *மேலே கூறப்பெற்ற தன்மையுடையதாகிய;* ***அகன் புனல் அகழியை அடைந்தான் -*** *அகன்ற நீரை உடைய அகழியைச் சார்ந்து;* ***தாய வேலையின் -*** *முன்பு கடந்த கடலைப் போல;* ***இருமடி -*** *இரண்டு மடங்கு;* ***விசைகொடு -*** *வேகத்தை மேற்கொண்டு;* ***தாவி -*** *கடந்து;* ***போய காலத்தும் -*** *போன போதிலும்;* ***போக்கு அரிது -*** *(இவ் அகழியைக்) கடப்பது கடினம்;* ***என்பது -*** *என்னும் மனக் கருத்தை;* ***புகன்றான் -*** *வெளிப்படையாகப் பேசினான்.*

*கடலைத் தாண்டியதுபோல இருமடங்கு வேகமாகத் தாண்டினாலும் கடக்க முடியாது என அனுமன் பேசினான். இராகவன் புகழ் பேசப்படும் இடங்களில் எல்லாம் பேசப்படும் புகழாளன் அனுமன். நடத்தல் - பரவுதல். மறவர் குறை அழல்*

*நடப்பக் குறும்பு எறிந்தன்று (புறவெ - மாலை - வெட்சி - 8 கொ)*
***(148)***

*இடைநகர் அகழியின்ஏற்றம்*

**கலிவிருத்தம்**

***4983. மேக்குநால்வகை மேகமும் கீழ்விழத்
தூக்கினால் அன்னதோயத்தது ஆய் துயர்
ஆக்கினான்படைஅன்ன அகழியை
வாக்கினால் உரைவைக்கலும் ஆகுமோ ?***

***மேக்கு -*** *மேலே உள்ள;* ***நால்வகை மேகமும் -*** *நான்கு வகையான மேகங்களும்;* ***கீழ்விழ -*** *(நீர்வேட்கையால்) கீழே விழுந்து விட;* ***தூக்கினால் அன்ன -*** *அம்மேகத்தைத் தூக்கி வைத்தாற் போன்ற;* ***தோயத்தது ஆய் -*** *தண்ணீரை உடையதாய்;* ***துயர் ஆக்கினான் -*** *உலகிற்குத் துன்பம் விளைவித்த இராவணனின்;* ***படை அன்ன -*** *சேனை போன்ற (கடக்க முடியாத);* ***அகழியை -*** *அகழியின் அமைப்பை;* ***வாக்கினால் -*** *வார்த்தைகளால்;* ***உரை வைக்கலும் -*** *விரித்துக் கூறவும்;* ***ஆகுமோ -*** *இயலுமா.*

*இது அனுமனின்எண்ணம் - படை எங்கனம் கடக்கவொண்ணாதோ அதுபோல் அகழியும் கடக்க ஒண்ணாதது. அழச் செய்பவன் - என்னும் பொருள்தரும் சொல் இராவணன். கம்பர், அழுகைக்கு மூலகாரணமாகிய துயரத்தைத் தருபவன் என்றார். அளவடிநான்குடைக் கட்டளைக்கலிப்பா. மா - விளம் - விளம் - விளம் என்னும் சீர்களைப் பெற்று வரும். பாடலின் முதற்சீர் நேரசையாயின் பதினோரெழுத்தும், நிரையசையாயின் பன்னீரெழுத்தும் கொண்டு அமையும். இந்நூலில் இவ்விருத்தங்களின் தொகை 1198. (மணிமலர் 76)* ***(149)***

***4984. ஆனைமும்மதமும் பரி ஆழியும்
மான மங்கையர்குங்கும வாரியும்
நானம் ஆர்ந்தநறைக்குழல் ஆவியும்
தேனும் ஆரமும்தேய்வையும் நாறுமால்***

*(அவ்வகழி)*

***ஆனை மும்மதமும் -*** *யானைகள் வெளிப்படுத்தும் மூன்று மதப் புனல்களும்;* ***பரி ஆழியும் -*** *குதிரையின் வாயின் நுரையும்;* ***மானமங்கையர் -*** *பெருமைமிக்க பெண்களின்;* ***குங்கும வாரியும் -*** *குங்குமம் கலந்த நீர்ப் பெருக்கும்;* ***நானம் ஆர்ந்த -*** *நீராடும் பெண்களின்;* ***நறை -*** *நறுமணம் வீசும்;* ***குழல் ஆவியும் -*** *கூந்தலிற் பூசிய கஸ்தூரியும்;* ***தேனும் ஆரமும் -*** *தேனும்சந்தனமும்;* ***தேய்வையும் -*** *கலவைக் குழம்பும்;* ***நாறும் -*** *கமழும். அகழி, மும்மதம்முதலானவை மணக்கும். மகளிர் கூந்தல் மணமுடையது என்னும் இலக்கிய வழக்கு நறைக்குழல் என்று பேசச் செய்தது, கூந்தலின் நறியவும் உளவோ என்று குறுந்தொகை பேசும். ஆரம் - சந்தனம். 'கோவா மலை ஆரம் கோத்த கடலாரம்' என்று சிலம்பு பேசும். தேய்வை - குழம்பு ஆல் - அசை*
***(150)***

***4985. உன்னம்,நாரை, மகன்றில், புதா, உளில்***
***அன்னம் கோழிவண்டானங்கள், ஆழிப்புள்***
***கின்னரம்குரண்டம் கிலுக்கம், சிரல்***
***சென்னம்,காகம், குணாலம் சிலம்புமே***

*(அவ்வகழியில்)*

***உன்னம் -*** *உன்னப்பறவைகளும்;* ***நாரை -*** *பலவகையான நாரைப் பறவைகளும்;* ***மகன்றில் -*** *அன்றில் பறவைகளும்;* ***புதா -*** *குருகுகளும்;* ***உளில் -*** *உள்ளான் பறவைகளும்;* ***அன்னம் -*** *அன்னப் பறவைகளும்;* ***கோழி -*** *நீர்க்கோழிகளும்;* ***வண்டானங்கள் -*** *பெருநாரைகளும்;* ***ஆழிப்புள் -*** *சக்கரவாளப் பறவைகளும்;* ***கின்னரம் -*** *கின்னரப் பறவைகளும்;* ***குரண்டம் -*** *கொக்குகளும்;****கிலுக்கம் -*** *கிலுக்கப்பறவைகளும்;* ***சிரல் -*** *மீன் கொத்திப் பறவைகளும்;* ***சென்னம் -*** *நீர்ப் பறவைகளும்;* ***காகம் -*** *காக்கைகளும்;* ***குணாலம் -*** *குணாலம் என்னும் நீர்ப்பறவையும்;* ***சிலம்பும் -*** *ஒலிக்கும்.*

*அவ்வகழியில்,உன்னம் முதலான பறவைகள் ஒலிக்கும். வண்டானங்கள் என்பதில் உள்ள 'கள்' அசை. 'முருகா எனும் நாமங்கள்' (கந்தர் அலங்காரம்) என்னும் தொடரில் உள்ள கள்ளும் அது. உருகச் சுட்டிடுங்கள் (சிந்தாமணி 27773. இனியர்)*
***(151)***

***4986. நலத்தமாதர் நறை அகில், நாவியும்,***
***அலத்தகக்குழம்பும், செறிந்து, ஆடிய***
***இலக்கணக்களிறோடு இளமெல் நடைக்***
***குலப் பிடிக்கும்ஓர் ஊடல் கொடுக்குமால்***

*(அவ்வகழி)*

***நலத்த மாதர் -*** *அழகியபெண்கள்;* ***நறை அகில் -*** *கூந்தலுக்கு ஊட்டிய அகிற்புகையும்;* ***நாவியும் -*** *(அவர்கள்) மேனியின் கஸ்தூரியும்;* ***அலத்தகக் குழம்பும் -*** *(அவர்கள்) பாதத்திற் பூசிய செம்பஞ்சுக் குழம்பும்;* ***செறிந்து -*** *அகழி நீரிற் கரைந்து;* ***ஆடிய -*** *நீராடிய;* ***இலக்கணக் களிறோடு -*** *உத்தம இலக்கணம் அமைந்த ஆண்யானைகட்கும்;* ***இள -*** *இளமையும்;* ***மெல்நடை -*** *மென்மையும் (அமைந்த);* ***குலப்பிடிக்கும் -*** *உயர்குலத்துப்பெண் யானைகட்கும்;* ***ஓர் -*** *ஒப்பற்ற;* ***ஊடல் கொடுக்கும் -*** *ஊடலை வழங்கும்.*

*மகளிரால் நிறம் வேறுபட்ட புனல் மூழ்கிய பறவை ஊடல் கொள்வதை, 'குதலையர் குடைந்த தண்புனல்வாய், குங்குமச் சுவடுற, ஊடிப் பூவுறங்கினும் புள் உறங்கா தன பொய்கை'' என்று கூறியது (கம்ப.460) காண்க.* ***(152)***

***4987. நறவு நாறியநாள்நறும் தாமரை***
***துறைகள் தோறும்முகிழ்த்தன தோன்றுமால்-***
***சிறையின்எய்திய செல்வி முகத்தினோடு***
***உறவு தாம்உடையார் ஒடுங்கார்களோ ?***

***நறவு நாறிய*** - *தேன்மணம்வீசுகின்ற;* ***நாள் நறுந் தாமரை*** - *நறுமணம் வீசும் புதிய தாமரைகள்;* ***துறைகள் தோறும்*** - *அவ்வகழியின் எல்லாத் துறைகளிலும்;* ***முகிழ்த்தன தோன்றும்*** - *குவிந்து தோன்றும்;* ***சிறை எய்திய*** - *சிறையை அடைந்த;* ***செல்விமுகத்தினோடு*** - *பிராட்டியின்முகத்துடன்;* ***உறவு உடையார்தாம்*** - *உறவைப்பெற்றவர்கள்;* ***ஒடுங்கார்களோ*** - *ஒடுங்காமல் இருப்பார்களோ ?      சீதை சிறைபுக்கதால் அவள் முகம் போன்ற தாமரைகள் குவிந்து கிடந்தன - தற்குறிப்பேற்றம். சிறையின் எய்திய செல்வி - என்பதில் உள்ள 'இன்' அசை சிலம்பின் வன்வார்ச் சிறுபறைகரங்க என்னும் சிந்தாமணிப் பாடலுக்கு (கோவிந்தை - 50) உரை வழங்கிய இனியர் 'இன்' அசை என்றார். சிறை எய்திய செல்வி என்க. தாம் - உரையசை.*                ***(153)***

***4988. பளிங்கு செற்றிக் குயிற்றிய பாய்ஒளி***
***விளிம்பும்,வெள்ளமும், மெய்தெரியாது; மேல்-***
***தெளிந்தசிந்தையரும் சிறியார்க ளோடு***
***அளிந்தபோது,அறிதற்கு எளிது ஆவரோ ?***

***பளிங்கு*** - *பளிங்குக்கற்களை;* ***செற்றி*** - *ஒழுங்குபடுத்தி;* ***குயிற்றிய*** - *பதிக்கப்பெற்ற;* ***ஒளிபாய்*** - *ஒளிபரவிய;* ***விளிம்பும்*** - *படிகளின்முகப்பும்;* ***வெள்ளமும்*** - *அதனை அடுத்த வெள்ளமும்;* ***மேல்*** - *மேலாக உள்ள தோற்றத்தில்;* ***மெய் தெரியாது*** - *உண்மையியல்பு அறியப்படாது;* ***தெளிந்த சிந்தையரும்*** - *தெளிவு பெற்ற உள்ளத்தினரும்;* ***சிறியார்களோடு*** - *அற்பர்களோடு;* ***அளிந்தபோது*** - *கலந்தபோதில்;* ***அறிதற்கு*** - *வேறுபடுத்தி அறிவதற்கு;* ***எளிது ஆவரோ*** - *சுலபமாக இருப்பார்களோ.*

*பளிங்காற்செய்யப்பெற்ற படியின் விளிம்பும் அகழியில் தண்ணீரும் மேலாக உள்ள தோற்றத்தால் வேற்றுமை தெரியாது. அற்பர்களுடன் கலந்தால் தெளிந்த அறிஞர்களை வேறுபடுத்திக் காண்பது கடினம். பளிங்கு அறிஞர்கள். அகழிநீர் - அறிவற்றவர்கள். இது வேற்றுப்பொருள் வைப்பணி என்பர்.* ***(154)***

***4989. நீலமேமுதல் நல்மணி நித்திலம்;***
***மேல கீழ,பல்வேறு ஒளி வீசலால்***
***பாலின்வேலைமுதல்பல வேலையும்***
***கால் கலந்தனவோ? என, காட்டுமே.***

*(அவ்வகழி)*

***நீலமே முதல்*** - *நீலம்முதலாக உள்ள;* ***நல்மணி*** - *நல்ல ரத்தினங்களும்;* ***நித்திலம்*** - *முத்துக்களும்;* ***மேல*** - *மேற்பகுதியிலும்;* ***கீழ*** - *அடிப் பகுதியிலும்;* ***பல்வேறுஒளி*** - *மாறுபட்ட ஒளிகளை;* ***வீசலால்*** - *பரப்புதலாலே;* ***பாலின் வேலை முதல்*** - *பாற்கடல் முதலான;* ***பலவேலையும்*** - *பல கடல்களும்;* ***கால்*** - *வாய்க்காலாக;* ***கலந்தனவோ என*** - *ஒன்று சேர்ந்து விட்டனவோ என்று;* ***காட்டும்*** - *நினைக்கச் செய்யும்.*

*நீலம்முதலானவற்றால் பல்வேறு நிறம்பெற்ற அகழி, பாற்கடல் முதலானவை ஒன்று சேர்ந்து விட்டனவோ என்று நினைக்கச் செய்யும். காட்டுதல் - நினைப்பித்தல். 'மூரல் முறுவற்குறிகாட்டி முத்தே உயிரை முடிப்பாயோ' (கம்ப. 6066) நவமணிகளால்*

*வேறுவேறு நிறம் பெற்ற அகழிகளுக்குப் பல்வேறு நிறம் பெற்ற கடல்கள் உவமை.*
***(155)***

*அனுமன் அகழியைக்கடந்து இடைநகருக்குள் தேடுதல்*

***4990. அன்ன வேலைஅகழியை, ஆர்கலி***
***என்னவே கடந்து,இஞ்சியும் பிற்பட***
***துன்ன அருங்கடிமாநகர் துன்னினான்;***
***பின்னர் எய்தியதன்மையும் பேசுவாம்.***

*(அனுமன்)*

***அன்ன** - அப்படிப்பட்ட; **வேலை அகழியை** - அலையுடன் கூடிய அகழியை; **ஆர்கலி என்ன** - முன்பு தாண்டிய கடலைப் போல; **கடந்து** - தாவிச் சென்று; **இஞ்சியும் பிற்பட** - மதில் பிற்பட்டிருப்ப; **துன்ன அரும்** - ஒருவரும் நெருங்கவியலாத; **கடி மாநகர்** - காவலையுடைய இடை நகரத்தை; **துன்னினான்** - அடைந்தான்; **பின்னர்** - அதன்பிறகு; **எய்திய தன்மை** - நிகழ்ந்த செய்தியை; **பேசுவாம்** - கூறுவோம்.*

*அனுமன் அகழியைக்கடலைப் போலத் தாண்டி மதில் பிற்பட இடைநகரை அடைந்தான். பின்பு நிகழ்ந்தவற்றைக் கூறுவோம். வேலை அகழி - என்பதற்குக் கடல்போன்ற அகழி என்று கூறப்பெற்றது. கடல் போன்ற அகழியைக் கடல்போலத் தாவினான் என உரை கூறுவதில் சிறப்பில்லை. ஆதலின் வேலை என்பதற்கு 'அலை' என்று பொருள் கூறப்பெற்றது. 'வேலைப் புணரியம்பள்ளியம்மான் (திருவிருத்தம் 75) அன்றி 'வேலி' என்றும் பொருள் கூறலாம்.* ***(156)***

***4991. கரியநாழிகை பாதியில், காலனும்,***
***வெருவி ஓடும்அரக்கர்தம் வெம்பதி***
***ஒருவனே, ஒரு பன்னிரு யோசனைத்***
***தெருவு மும்மை நூறாயிரம் தேடினான்.***
*(அனுமன்)*

***காலனும்** - யமனும்கூட; **வெருவி ஓடும்** - அச்சமுற்று ஓடும்படியான; **அரக்கர்தம் வெம்பதி** - அரக்கர்களின் கொடிய நகருள்; **கரிய நாழிகை பாதியில்** - இருண்ட நடுயாமத்தில்; **ஒரு பன்னிரு யோசனை** - பன்னிரண்டு யோசனை தூரமுள்ள; **மும்மை நூறாயிரம் தெருவும்** - மூன்று லட்சந் தெருக்களையும்; **ஒருவனே** - தான் ஒருவனாகவே; **தேடினான்** - (பிராட்டியைத்) தேடிச் சென்றான்.*

*அனுமன், யமனும்பயப்படும் அரக்கர் நகருள் நடுயாமத்தில் பன்னிரண்டு யோசனை தூரமுள்ள மூன்று லட்சம் தெருக்களையும் தனியாகத் தேடினான். இருண்ட இரவு - 'கரிய நாழிகை' என்று பேசப்பட்டது. 'கரியநாழிகை ஊழியின் பெரியன', என்பது பெரிய திருமொழி (திவ்ய பெரிய திருமொழி 8-56)* ***(157)***

**கலிவிருத்தம்**

***4992. வேரியும்அடங்கின; நெடுங்கடல் விளம்பும்***
***பாரியும் அடங்கின; அடங்கியது பாடல்***
***காரியம்அடங்கினர்கள் கம்மியர்கள்; மும்மைத்***
***தூரியம்அடங்கின; தொடங்கியது உறக்கம்.***

*(இலங்கையில்)*

***வேரியும்அடங்கின -*** *மது உண்போர் முழக்கம் ஒடுங்கின;* ***நெடுங்கடல் விளம்பும் -*** *கடலைப் போல் முழங்கும்;* ***பாரியும் அடங்கின -*** *பாரி வாத்தியங்களும் ஒடுங்கின;* ***பாடல் அடங்கியது -*** *பாடல்களும் ஒடுங்கிவிட்டது;* ***கம்மியர்கள் -*** *பொற்கொல்லர்கள்;* ***காரியம் அடங்கினர் -*** *தொழில் முடித்து ஒடுங்கி விட்டனர்;* ***மும்மைத் தூரியம் -*** *மூவகையான முரசங்கள்;* ***அடங்கின -*** *ஒடுங்கி விட்டன;* ***உறக்கம் தொடங்கியது -*** *தூக் கம் தொடங்கிவிட்டது.*

*வேரி - கள்.இங்கு கள் குடிப்பவரின் முழக்கத்தைக் குறித்தது. பாரி - இராக் காவலரின் வாத்தியம். மும்மைத் தூரியம் - என்றது தியாக முரசு, வீரமுரசு, மணமுரசு என்னும் மூவகை முரசுகளை. மும்மை என்றது எண்ணப்படு பொருளாகாது மூன்று என்னும் எண்ணைக் குறித்தது. (திருக்குறள் நுண்பொருள் மாலை 23)*
***(158)***

***4993. இறங்கின,நிறம்கொள்பரி, ஏமம்உற எங்கும்***
***கறங்கின,மறம்கொள் எயில் காவலர் துடிக்கண்;***
***பிறங்கு இணர்நறுங்குழலர் அன்பர் பிரியாதோர்***
***உறங்கினர்;பிணங்கி எதிர் ஊடினவர் அல்லார்.****

***நிறம் கொள்பரி-*** *பலநிறங்களைக் கொண்ட குதிரைகள்;* ***இறங்கின -*** *தலை சாய்த்து உறங்கின;* ***மறம்கொள் -*** *வீரத்தைப் பெற்ற;* ***எயில் காவலர் -*** *மதிலைப் பாதுகாப்பவர்களின்;* ***துடிக்கண் -*** *வாச்சியங்களின் கண்கள்;* ***ஏமம்உறஎங்கும் -*** *பாதுகாப்பு உண்டாக எல்லா இடங்களிலும்;* ***கறங்கின -*** *ஒலித்தன;* ***பிறங்கிணர் -*** *விளங்குகின்ற பூங்கொத்துகளை உடைய;* ***நறுங்குழலர் -*** *மணம்மிக்க கூந்தலையுடைய மகளிரும்;* ***பிணங்கி -*** *மாறுபாடு கொண்டு;* ***எதிர் -*** *கணவனின் பணிமொழிக்கு எதிராக;* ***ஊடினவர் -*** *ஊடல் கொண்டவர்;* ***அல்லார் -*** *அல்லாத மற்றைய மகளிரும்;* ***உறங்கினர் -*** *தூங்கினார்கள்.*

*பரிகள்உறங்கின. யாமக் காவலரின் வாக்கியங்கள் ஒலித்தன. மகளிர் உறங்கினர். பிறங்கின நறுங்குழலர் என்றது மணமாகாத கன்னிப் பெண்களை - மணமகளிர்கூந்தல் பிறங்காமை அறிக. தாரும் மாலையும் மயங்குங்கால் கூந்தல் பிறங்குங்கொல் கிழவோன் பணிவுக்கெதிரில் பிணங்குதல் எதிர் ஊடுதல் என்று பேசப்பட்டது.*
***(159)***

***4994. வடம்தருதடம்கொள்புய மைந்தர், கலவிப்போர்***
***கடந்தனர்,இடைந்தனர், களித்த மயில் போலும்***
***மடந்தையர்தடந்தன முகட்டிடை மயங்கிக்***
***கிடந்தனர்;நடந்தது புணர்ச்சிதரு கேதம்.***

***வடம்தரு*** - *வடங்கள்அணியப்பெற்ற;* ***தடம்கொள்*** - *விசாலமான;* ***புயமைந்தர்*** - *தோள்களையுடைய இளைஞர்கள்;* ***கலவிப்போர்*** - *புணர்ச்சிப்போரில்;* ***கடந்தனர்*** - *வெற்றியடைந்து;* ***இடைந்தனர்*** - *போரிலே தோல்வியுற்ற;* ***களித்த மயில் போலும்*** - *செருக்குற்ற மயில் போன்ற;* ***மடந்தையர்*** - *மகளிரின்;* ***தடம்*** - *விரிந்த சாரலைப்பெற்ற;* ***தனமுகட்டிடை*** - *முலைகளின் உச்சியில்;* ***மயங்கிக் கிடந்தனர்*** - *மோகித்துக் கிடந்தார்கள்;* ***புணர்ச்சி தரு கேதம்*** - *புணர்ச்சியால் உண்டான சோர்வு;* ***நடந்தது*** - *(இப்படி) நிகழ்ந்து கொண்டிருந்தது.*

*கலவிப் போரில்வென்ற இளைஞர்கள் தோற்றவர்களின் மார்பில் துயின்றனர். கேதம் - தளர்ச்சி.* ***(160)***

***4995. வாம நறையின் துறை மயங்கினர் மறந்தார்;***
***காம நறையின்திறம் நுகர்ந்தனர் களித்தார்;***
***பூமன் நறை வண்டுஅறை இலங்கு அமளி புக்கார்;***
***தூம நறையின் துறைபயின்றிலர் துயின்றார்.***

***வாமம்*** - *வாம மார்க்கத்தார் சிறப்பிக்கும்;* ***நறையின் துறை*** - *கள்ளின் வகைகளை;* ***மயங்கினர்*** - *உண்டு மயங்கியவர்;* ***மறந்தார்*** - *(இன்பம் அனுபவித்தலையும்) மறந்தார்;* ***காம நறையின் திறம்*** - *மன்மதன் உரைத்தபடி அனுபவிக்கவேண்டிய;* ***நுகர்ந்தனர்*** - *காமத்துறைகளாய கள்ளின் தன்மையை;* ***களித்தார்*** - *மயங்கி உறங்கினர்; (அங்ஙனம் உறங்கியவர்கள்)* ***பூமன்நறை*** - *மலர்களில் நிலைபெற்றுத் தேனுண்ணும்;* ***வண்டு அறை*** - *வண்டுகள் மொய்க்கும்;* ***இலங்கு*** - *விளக்கமான;* ***அமளி புக்கார்*** - *அமளியை அடைந்தும்;* ***தூம*** - *வாசனைப் புகைகளுடன் கூடிய;* ***நறையின் துறை*** - *நன்மையின் வகைகளை;* ***பயின்றிலர்*** - *அனுபவியாது;* ***துயின்றார்*** - *உறங்கினர்.*

*பல்வேறுகாதலர்களின் படுக்கை அறை நிலைகளைக் குறித்தாகக் கொள்க.* ***(161)***

***4996. பண்இமைஅடைத்த, பலகள் - பொருநர் பாடல்***
***விண்இமைஅடைத்தென, விளைந்தது இருள்; வீணை***
***தண்இமைஅடைத்தன; தழங்குஇசை வழங்கும்***
***கண்இமைஅடைத்தன; அடைத்தன கபாடம்.***

***கள்*** - *கள்ளை அருந்தும்;* ***பல பொருநர்*** - *பலவிதமான கூத்தர்களின்;* ***பாடல்*** - *பாடல்கள்;* ***பண்இமை*** - *பண்களாகிய இமைகளை;* ***அடைத்த*** - *மூடியபடி உறங்கின;* ***வீணை*** - *வீணைகள்;* ***தண்*** - *குளிர்ந்த;* ***இமை*** - *இமைகளை;* ***அடைத்தன*** - *மூடியபடி உறங்கின;* ***தழங்கு இசை வழங்கும்*** - *முழங்குகின்ற ஓசையைக் கொடுக்கும்;* ***கண்*** - *முரசம் முதலான கருவிகளின் கண்கள்;* ***அடைத்தன*** - *மூடியபடி உறங்கின;* ***கண்*** - *மக்களின் கண்கள்;* ***இமை*** - *இமைகளை;* ***அடைத்தன*** - *மூடியபடி உறங்கின;* ***கபாடம்*** - *கதவுகள்;* ***அடைத்தன*** - *மூடப்பெற்றன;* ***விண்*** - *ஆகாயமானது;* ***இமை*** - *(ஒளியாகிய) இமைகளை;* ***அடைத்தென*** - *மூடியபடி உறங்கியது போல;* ***இருள் விளைந்தது*** - *எங்கும் இருள் பரவியது, பாடலும், வீணையும், மத்தளம் முதலிய கருவிகளும் கண் அடைத்து உறங்கின. ஆகாயமும் ஒளியாகிய கண் அடைத்து உறங்கின. விண்ணுக்குச் சூரியன், சந்திரன், நட்சத்திரம் முதலானவை கண்கள் 'பகலுக்கு ஒரு கண். இரவுக்கு*

*ஆயிரம் கண்' என்பது புத்தெழுச்சிப் பாவலர் கண்டது. இருள் பரவியது விண் இமைமூடி உறங்குவது போல் எனத் தற்குறிப்பேற்றமாயிற்று. கண் அடைத்தன, கண் இனம் அடைத்தன இரு முறை பிரித்துக்கூட்டப்பெற்றது. முரசு முதலியவற்றின் மண் பூசிய வட்டவுறுப்பைக் கண் என்பர். அதற்கேற்ப உறக்கம் கூறுதல் கவிமரபு. முழவங் கண்துயிலாத முதுநகர் என்பர் தேவர் (சிந்தா - 856)* ***(162)***

***4997. விரிந்தனநரந்தம் முதல் வெண்மலர் வளாகத்து***
***உரிஞ்சிவருதென்றல் உணர்வுஉண்டு அயல்உலாவ***
***சொரிந்தனகருங்கண், வரு துள்ளிதரு வெள்ளம்***
***எரிந்தனபிரிந்தவர்தம் எஞ்சுதனி நெஞ்சம்.***

***நரந்தம் முதல் -*** *நரந்தம்முதலாகக் கூறப்பெற்ற;* ***வெண்மலர் -*** *வெண்மையான பூக்கள்;* ***விரிந்தன -*** *மலர்ந்தன;* ***வளாகத்து -*** *அவ்விடத்தில்;* ***உரிஞ்சி வருதென்றல் -*** *மலர்களை உராய்ந்து வந்த தென்றல்;* ***உணர்வு -*** *உணர்ச்சியை;* ***உண்டு -*** *கவர்ந்து;* ***அயல் உலாவ -*** *பக்கத்தில் இயங்க (அதனால்);* ***கருங்கண் வரு -*** *(கூட்டமின்மையால்) கருத்த கண்களில் வெளிப்படும்;* ***துள்ளி -*** *துளிகள்;* ***தரு -*** *தோற்றுவித்த;* ***வெள்ளம் -*** *நீர்ப்பெருக்குகள்;* ***சொரிந்தன -*** *விழுந்தன;* ***பிரிந்தவர்தம் -*** *காதலரைப் பிரிந்தவர்களுடைய;* ***எஞ்சு -*** *(நாணம் முதலானவை நீங்க) மிஞ்சியிருந்த;* ***தனிநெஞ்சம் -*** *தனியான உள்ளம்;* ***எரிந்தன -*** *(பிரிவாற்றாமல்) வெந்தன.*

*கண்கள் சொரிந்தஅருவி நெஞ்சக் கனலை அவிக்கவில்லை. நரந்தம், புல்லென்பர் சிலர். மலர் என்பர் சிலர். அழகர், நரந்தநறுமலர் என்னும் பரிபாடலுக்கு (பரி 16 - 14 - 15) நரந்தம் போலும் நறியமலர் என்றார். இனியர், 'நரந்தம் நாறிருங்கூந்தல்' என்னும் குறிஞ்சிக் கலிக்கு (குறிஞ்சி 18 - 5) நரந்தம் பூ நாறும் கரிய கூந்தல் என்று உரை வகுத்தார். கவிச்சக்கரவர்த்தி' வெண்மலர்' என்றதால் இனியரை ஆதரித்தனர் போலும்.* ***(163)***

***4998. இளக்கர்இழுது எஞ்ச விழும்எண்அரு விளக்கைத்***
***துளக்கியதுதென்றல், பகைசோர உயர்வோரின்***
***அளக்கரொடுஅளக்கரிய ஆசையுற வீசா,***
***விளக்குஇனம்விளக்குமணி மெய்உறு விளக்கம்.****

***பகை சோர -*** *பகைவர்கள் தளர்ச்சியடைய;* ***உயர்வோரின் -*** *சிறப்பை அடைபவரைப் போல;* ***இளக்கர் -*** *இளகும் தன்மையுடைய;* ***இழுது எஞ்ச -*** *நெய்யானது குறைய;* ***விழும் -*** *ஒளி குறைந்த;* ***எண் அரு விளக்கை -*** *அளவற்ற விளக்குகளை;* ***தென்றல் -*** *தென்றல் காற்று;* ***துளக்கியது -*** *அணைத்துவிட்டது; அப்போது* ***மெய் -*** *மகளிரின் மேனியிலும்;* ***உறுமணி -*** *அம்மேனியில் பொருந்திய ஆபரணங்களிலும் (உள்ள);* ***விளக்கம் -*** *ஒளிகள்;* ***அளக்கஅரிய -*** *அளவிடமுடியாத;* ***அளக்கரொடு -*** *கடலிலும்;* ***ஆசை -*** *திசைகளிலும்;* ***உற -*** *மிகுதியாக;* ***வீசா -*** *வீசி;* ***விளக்கு இனம் -*** *விளக்கைப் போல;* ***விளக்கும் -*** *பிரகாசிக்கும்.*

*ஆடவர்களுக்கும்பெண்களுக்கும் கலவியிலே கடலுக்கு மிகுதியான ஆசை பொருந்தும்படிக்கு எரிந்த விளக்கைக் காற்று அவித்தவுடனே அந்த பெண்கள் அழகிய மேனியின் ஒளியாகிய விளக்கு பரந்தது என்னும் விளக்கம் கம்பராமாயணக்*

*கருப்பொருள் ஏட்டில் உள்ளது (அண்ணாமலைபதி) 'இருள் துரப்பன, தீ விளக்கமோ? மணி விளக்கு; அல்லன மகளிர் மேனியே' (கம்ப 143.)* ***(164)***

***4999. நித்தம்நியமத் தொழிலர்ஆய், நிறையும் ஞானத்து***
***உத்தமர்உறங்கினர்கள்; யோகியர் துயின்றார்;***
***மத்தமதவெங்களிறு உறங்கின; மயங்கும்***
***பித்தரும்உறங்கினர்; இனிப் பிறர்இது என்னாம் ?***

***நித்தம்** - நாள்தோறும்; **நியமத் தொழிலராய்** - முறையாகச் செய்ய வேண்டிய அனுட்டானங்கள் உடையவராய் (அதனால்); **நிறையும்** - நிரம்பிய; **ஞானத்து உத்தமர்** - ஞானத்தை உடைய மேலோர்கள்; **உறங்கினர்** - தூங்கினார்கள்; **யோகியர்** - யோகவழியிலே நிற்பவர்களும்; **துயின்றார்** - தூங்கினார்கள்; **மத்தம்** - மயக்கம் தருகின்ற; **மதம்** - மதம் பிடித்த; **வெங்களிறு** - கொடிய ஆண் யானைகளும்; **உறங்கின** - தூங்கின; **மயங்கும்** - மயங்குகின்ற; **பித்தரும்** - பைத்தியம் பிடித்தவர்களும்; **உறங்கினர்** - தூங்கினார்கள்; **இனி** - இனிமேல்; **பிறர் இது** - பிறருடைய உறக்கம்; **என் ஆம்** - யாதாகும்.*

*உறங்கினர்கள்என்பதில் உள்ள 'கள்' அசை. பிறங்கின கெடுங்கள் (சிந்தா. 1535)*
***(165)***

***5000. ஆயபொழுது,அம் மதில் அகத்து அரசர் வைகும்***
***தூயதெரு ஒன்றொடுஒருகோடி துருவிப் போய்,***
***தீயவன் இருக்கைஅயல், செய்த அகழ் இஞ்சி***
***மேயது கடந்தனன்- வினைப்பகையை வென்றான்.***

***ஆயபொழுது** - (இலங்கைஉறக்கத்திலிருந்த) அப்பொழுது; **வினைப் பகையை வென்றான்** - வினையாகிய பகையை வென்ற அனுமன்; **அம் மதில் அகத்து** - அந்த மதிலுக்குள்ளே; **அரசர் வைகும்** - அரசர்கள் தங்கியிருக்கும்; **தூய** - தூய்மையான; **ஒன்றொடு ஒரு கோடி தெரு** - இரண்டு கோடித் தெருக்களை; **துருவிப் போய்** - தேடி அப்புறத்தே சென்று; **தீயவன்** - இராவணனின்; **இருக்கை அயல் செய்த** - அரண்மனையின் பக்கலில் அமைக்கப்பட்ட; **மேயது** - பொருந்திய; **அகழ் இஞ்சி** - அகழியையும் மதிலையும்; **கடந்தனன்** - தாண்டினான்.*

*அனுமன்,அரசர்கள் இருக்கும் இரண்டு கோடித் தெருக்களைக் கடந்து இராவணனின் அரண்மனையைச் சார்ந்த அகழியையும் மதிலையும் கடந்தான்.*
***(166)***

**கலி விருத்தம்**

***5001. போர் இயற்கை இராவணன் பொன்மனை***
***சீர் இயற்கைநிரம்பிய திங்களா***
***தாரகைக் குழுவின்தழுவித் தொடர்***
***நாரியர்க்குஉறைவுஆம் இடம் நண்ணினான்.***

*(அனுமன்)*

***போர் இயற்கை -*** *போர்புரிதலை இயல்பாகக் கொண்ட;* ***இராவணன் -*** *இராவணனுடைய;* ***பொன்மனை -*** *அரண்மனை;* ***சீர் -*** *சிறப்பும்;* ***இயற்கை -*** *அழகும்;* ***நிரம்பிய -*** *நிறைந்துள்ள;* ***திங்களா -*** *சந்திரன் போல;* ***தாரகைக்குழுவின் -*** *நட்சத்திரக் கூட்டங்களைப் போல;* ***தழுவித் தொடர் -*** *சுற்றிலும்அணைத்துத் தொடர்ந்துள்ள;* ***நாரியர்க்கு -*** *மகளிர்களுக்கு;* ***உறைவு ஆம்இடம் -*** *இருப்பிடமாய் அமைந்த இடத்தை;* ***நண்ணினான் -*** *அடைந்தான். இராவணன் வீடுசந்திரனைப் போலவுள்ளது. அவன் காதலியர்களின் இல்லங்கள் நட்சத்திரங்களைப் போல் இருந்தன என்க. திங்கள் ஆய் - என்பதிலுள்ள 'ஆய்' என்பது உவம உருபுப் பொருளைத் தந்தது. 'எனக்கு ஆவார் ஆர் ஒருவர்' என்னும் பொய்கைப் பிரான் வாக்கை உன்னுக. (திவ்ய முதல் திரு 89)*
*(167)*

## *5002. முயல்கருங்கறை நீங்கிய மொய்ம்மதி*
## *அயர்க்கும்வாள்முகத்து ஆர்அமுது அன்னவர்*
## *இயக்கர்மங்கையர் யாவரும் ஈண்டினார்*
## *நயக்கும் மாளிகைவீதியை நண்ணினான்.**

*(அனுமன்)*

***முயல் -*** *முயலாகிய;* ***கருங்கறை -*** *கறுத்த களங்கம்;* ***நீங்கிய -*** *இல்லாத;* ***மொய்மதி -*** *பூரண சந்திரனை;* ***அயர்க்கும் -*** *ஒத்திருக்கும்;* ***வாள்முகத்து -*** *ஒளிமிக்க முகத்தை உடைய;* ***ஆர் அமுது அன்னவர் -*** *அரிய அமுதம் போன்ற;* ***இயக்கர் மங்கையர் யாவரும் -*** *எல்லா யட்சப் பெண்களும்;* ***ஈண்டினார் -*** *நெருங்கியிருந்து;* ***நயக்கும் -*** *விரும்பியிருக்கும்;* ***மாளிகை வீதியை -*** *மாளிகை நிரம்பிய வீதியை;* ***நண்ணினான் -*** *அடைந்தான்.*

*களங்கம்நீங்கிய முழுமதி போன்ற முகத்தை உடைய யட்சப் பெண்கள் வாழும் வீதியை அனுமன் அடைந்தான். அயிர்த்தல் - என்னும் வினைச்சொல் உவம உருபுப் பொருளைத் தந்தது. எல்லாவினைச் சொற்களும் உவம உருபு போல அமைவதை அறிக. இதனை இனியர் உவம வாசகம் என்பர்.(சிந்தா. 10.)*
***(168)***

## *5003. தழைந்தமொய்ஒளி பெய்ம் மணித் தாழ்தொறும்*
## *இழைந்த நூலினும்இன்இளங் காலினும்,*
## *நுழைந்துநொய்தினின் மெய்உற நோக்கினான் -*
## *விழைந்தவெவ்வினை வேர்அற வீசினான்.*

***விழைந்தவெவ்வினை -*** *பொருள்களைவிரும்புவதால் உண்டான வினைகளை;* ***வேர் அற -*** *மூலம் அற்றுப்போக;* ***வீசினான் -*** *ஒதுக்கித் தள்ளிய அனுமன்;(அந்த மாளிகைகளில்)* ***தழைந்த -*** *மிக்குள்ள;* ***ஒளி -*** *பிரகாசம்;* ***மொய் -*** *மொய்த்துள்ள;* ***மணி -*** *மணிகள்;* ***பெய் -*** *பதிக்கப்பெற்ற;* ***தாழ்தொறும்-*** *தாழ்ப்பாள்கள் தோறும்;* ***இழைந்த நூலினும் -*** *இழைக்கப் பெற்ற நூலைவிட;* ***இன் -*** *இனிமையான;* ***இளங்காலினும் -***

*தென்றலைவிட; **நொய்தினின் -** நுட்பமாக; **மெய் உற -** மேனி அமைய; **நோக்கினான் -** பார்த்தான்.*

*அனுமன்,நூலைவிடவும், தென்றலைவிடவும் நுட்பமான மேனியைப்பெற்று தாழ்கள் தோறும் நுழைந்து பார்த்தான். தாழ் என்றது கதவுத் துளைகளை. முத்தொள்ளாயிரம் 'கதவம் தொளை' என்று குறிப்பிடும். **(169)***

***5004. அத்திரம்புரை யானை அரக்கன் மேல்***
***வைத்தசிந்தையர் வாங்கும் உயிர்ப்பிலர்***
***பத்திரம் புரைநாட்டம் பதைப்பு அற***
***சித்திரங்கள்என இருந்தார் சிலர்.***

***சிலர் -** சிலயட்ச மகளிர்; **அத்திரம் -** மலையை; **புரை -** ஒத்த; **யானை அரக்கன் மேல் -** யானையை உடைய இராவணன்பால்; **வைத்த -** நிறுத்திய; **சிந்தையர் -** மனத்தைப் பெற்றவராய்; **வாங்கும் உயிர்ப்பிலர் -** உள்ளே நுழையும் மூச்சற்று; **பத்திரம் புரை -** அம்பைப் போன்ற; **நாட்டம் -** கண்கள்; **பதைப்பு அற -** இமைத்தல் இன்மையால்; **சித்திரங்கள் என -** ஓவியங்களைப் போல; **இருந்தார் -** அமர்ந்திருந்தனர்.*

*சிந்தை ஒன்றன்பால்பதிந்தால் மூச்சும் கண்களும் தம் இயல்பை மறக்கும். 'யானை போலும் இராவணன்' என உரை கூறல் ஆகாமை. 'மலை போலும் யானை போலும் உவமை' என வந்து உவமைக்குவமை என்னும் குற்றம் வருதலின்.*
***(170)***

***5005. அள்ளல் வெஞ்சர மாரனை அஞ்சியோ ?***
***மெள்ள இன்கனவின் பயன் வேண்டியோ ?***
***கள்ளம் என்கொல் ? அறிந்திலம் - கண் முகிழ்த்து***
***உள்ளம் இன்றி,உறங்குகின்றார் சிலர்.***

***சிலர் -** சில யட்சமகளிர்; **அள்ளல் -** சேற்றில் தோன்றிய; **வெம்சர -** கொடிய மலரம்புகளை உடைய; **மாரனை -** மன்மதனுக்கு; **அஞ்சியோ -** பயப்பட்டோ; **மெள்ள -** மெதுவாக; **இன்கனவின் -** இனிமையான கனவின் பயனை; **வேண்டியோ -** விரும்பியோ ? **கள்ளம் -** உட்கருத்து; **என்கொல் -** யாதோ? **அறிந்திலம் -** யாம் அறிந்தோம் இல்லை; **கண் முகிழ்த்து -** கண்களைமூடியபடி; **உள்ளம் இன்றி -** ஊக்கம் இல்லாமல்; **உறங்குகின்றார் -** தூங்குகின்றனர். கள்ளம் - உட்கருத்து. பிறர் அறியாமல் உள் இருத்தலின் கள்ளம் என்று கூறப்பெற்றது. **(171)***

***5006. பழுதுஇல்மன்மதன் எய்கணை பல்முறை***
***உழுதகொங்கையர், ஊசல் உயிர்ப்பினர்***
***அழுது செய்வது என்? ஆசை அரக்கனை***
***எழுதலாம் கொல்? என்று, எண்ணுகின்றார் சிலர்.***

***சிலர் -** சில யட்சமகளிர்; **மன்மதன் எய் -** மன்மதனால் ஏவப்பெற்ற; **பழுதுஇல்கணை -** குறி தவறாத அம்புகளால்; **பலமுறை -** பலதடவை; **உழுத -** பிளக்கப் பெற்ற; **கொங்கையர் -** தனங்களை உடையவராய்; **ஊசல் உயிர்ப்பினர் -** தளர்ந்த*

*உயிரையுடையவராய்;* ***அழுது செய்வது என்*** *- அழுதலைச் செய்வதால் யாது பயன்?* ***ஆணை*** *- கட்டளையிடுவதில் வல்ல;* ***அரக்கனை*** *- இராவணனை;* ***எழுதல்*** *- ஓவியத்தில் தீட்டுதல்;* ***ஆம் கொல்*** *- நம்மால் இயலுமா ?* ***என்று-; எண்ணுகின்றார்*** *- நினைக்கின்றனர். உயிர்ப்பு, மூச்சுஎன்றும் கூறலாம். சிறப்பெனிற் கொள்க. எழுதல் சித்திரம் வரைதல்.* ***(172)***

***5007. 'ஆவது ஒன்றுஅருளாய்; எனது ஆவியைக்***
***கூவு கின்றிலை; கூறலை சென்று' எனா***
***பாவை பேசுவபோல், கண் பனிப்பு உற***
***பூவை யோடும்புலம்புகின்றார் சிலர்.***

***சிலர்*** *- வேறு சில யட்ச மகளிர்;* ***கண்*** *- கண்கள்;* ***பனிப்பு உற*** *- கண்ணீர் சிந்த;* ***பூவையோடும்*** *- நாகணவாயப் பறவைகளுடன்;* ***பாவை பேசுவபோல்*** *- பதுமை பேசுவதைப் போல;* ***ஆவது ஒன்று*** *- எனக்குத் தகுதியான ஒரு சொல்லையும்;* ***அருளாய்*** *- பேசமாட்டாய்;* ***எனது ஆவியை*** *- (பிரிந்து சென்ற) என் உயிரை;* ***கூவுகின்றிலை*** *- அழைத்து வந்தாயில்லை;* ***சென்று கூறலை*** *- (இப்போதும் என் நிலைமையை) சென்று கூறவில்லை;* ***எனா*** *- என்று;* ***புலம்புகின்றார்*** *- கவலைப்படுகின்றனர்.* ***(173)***

***5008. ஈரத்தென்றல் இழுக, மெலிந்து தம்***
***பாரக்கொங்கையைப் பார்த்தனர்; பாதகன்***
***வீரத்தோள்களின் வீக்கம் நினைந்து, உயிர்***
***சோரச் சோரத்துளங்கு கின்றார் சிலர்.****
***சிலர்*** *- வேறு சில யட்சப் பெண்கள்;* ***ஈரத் தென்றல்*** *- குளிர்ந்த தென்றற் காற்று;* ***இழுக*** *- உராய (அதனால்);* ***மெலிந்து*** *- இளைத்து;* ***தம்*** *- தம்முடைய;* ***பாரக் கொங்கையை*** *- பாரமான தனங்களை;* ***பார்த்தனர்*** *- பார்த்து;* ***பாதகன்*** *- இராவணனின் ;* ***வீரத் தோள்களின்*** *- வீரம் மிக்க தோள்களினுடைய;* ***வீக்கம் நினைந்து*** *- கருவத்தை எண்ணி;* ***உயிர் சோர சோர*** *- உயிர் மிகத் தளர்ச்சியடைய;* ***துளங்குகின்றார்*** *- கலக்கம் அடைகின்றனர்.*

*பாரமானகொங்கைகட்கும், கருவம் உற்ற தோள்களுக்கும் இடை நின்று யட்ச மகளிர் கலங்குகின்றனர். பிரிவுக் காலத்து மகளிர் கொங்கையை வெறுப்பர். 'வாரிய பெண்ணை' என்று தொடங்கும் முத்தொள்ளாயிரப் பாடலைப் பார்க்கவும்.*
***(174)***

***5009. நக்கசெம்மணி நாறிய நாள்நிழல்***
***பக்கம் வீசுறுபள்ளியில் பல்பகல்***
***ஒக்க ஆசை உலக்கஉலந்தவர்***
***செக்கர் வான்தருதிங்கள் ஒத்தார் சிலர்.****

***சிலர்*** *- வேறு சில யட்சமகளிர்;* ***நக்க*** *- விளங்குகின்ற;* ***செம்மணி நாறிய*** *- சிவந்த மணிகள் வெளிப்படுத்திய;* ***நாள் நிழல்*** *- புத்தொளியானது;* ***பக்கம் வீசுறு*** *- பக்கங்களில் பரவப்பெற்ற;* ***பள்ளியில்*** *- படுக்கையில்;* ***பல்பகல்*** *- பலநாட்கள்;* ***ஆசை*** *- ஆசைகள்;* ***ஒக்க*** *- ஒரு சேர;* ***உலக்க*** *- தாக்க (அதனாலே);* ***உலந்தவர்*** *- தளர்ச்சியடைந்தவர்கள்;*

***செக்கர்*** *- சிவந்த;* ***வான்தரு*** *- அந்தி வானில் உதித்த;* ***திங்கள் ஒத்தார்*** *- சந்திரனைப் போன்றிருந்தனர்.*

*பெண் கிரகம்சந்திரன் என்று சோதிட நூல் கூறும். அதற்கேற்ப உவமை அமைந்தது. திங்கள் ஒத்தார், கீற்றுப் பிறையை ஒத்தார் என்பது பழைய உரை (அடை - பதி )*
***(175)***

### *5010. வாளின் ஆற்றிய கற்பக வல்லியர், தோளின்நாற்றிய தூங்கு அமளித்துயில், நாளினால்செவியில் புகும்நாம யாழ்த் தேளினால்திகைப்பு எய்துகின்றார் சிலர்.**

***சிலர்*** *- சில யட்சமகளிர்;* ***வாளின்*** *- ஒளிகளாலே;* ***ஆற்றிய*** *- செய்யப்பெற்ற;* ***கற்பகவல்லியர்*** *- கற்பகக் கொடிபோன்ற சேடியர்கள்;* ***தோளின்*** *- கைகளால்;* ***நாற்றிய*** *- தொங்கவிடப்பட்ட;* ***தூங்கு அமளி*** *- தொங்கும்படுக்கையில்;* ***துயில் நாளினால்*** *- உறங்கும் சமயத்தில்;* ***செவியில் புகும்*** *- காதுகளிற் புகுந்த;* ***நாம யாழ்த் தேளினால்*** *- அச்சந் தரும் யாழாகிய தேளால்;* ***திகைப்பு எய்துகின்றார்*** *- கலக்கம் அடைகின்றனர்.*

*திகைத்தல் -செயலற்றிருத்தல் என்றும் கூறலாம். யாழ் என்றது யாழின் இசையை. செவியிற் புகுவது இசையே, யாழன்று. தூங்கு அமளி - தூங்கு கட்டில். இனியர் (பாலைக்கலி 12) துலங்கு ஊர்தி - தூங்கு கட்டில் என்று வரைந்தார். நாமம் - அச்சம். தோளின் - டோளியைப் போல் என்று உரை வகுத்தவரும் உளர். (டோள் - அசையும் பல்லக்கு) நாளினால் என்பதில் உள்ள 'ஆல்' இடப்பொருள் தந்தது. புள்ளினம் விதி சேரும் பொழுதினால் (கலித் நெய்தல் 6)* ***(176)***

### *5011. கவ்வுதீக்கணை மேருவைக் கால்வளைந்து எவ்வினான்மலைஏந்திய ஏந்து தோள் வவ்வு சாந்து,தம் மாமுலை வவ்விய செவ்வி கண்டுகுலாவுகின் றார்சிலர்.**

***சிலர்*** *- சில யட்சமகளிர்;* ***மேருவை*** *- மகா மேரு மலையை;* ***கால்*** *- அதன் இரண்டு கோடியையும்;* ***வளைத்து*** *- வளையச் செய்து;* ***கவ்வு தீக்கணை*** *- இலக்கைப் பற்றும் நெருப்பு அம்பை;* ***எவ்வினான்*** *- ஏவின சிவபிரான் வீற்றிருக்கும்;* ***மலை*** *- கயிலாய மலையை;* ***ஏந்திய*** *- அனாயாசமாக எடுத்த;* ***ஏந்து தோள்*** *- இராவணனின் தோள்களை;* ***வவ்வு சாந்து*** *- கவர்ந்த சந்தனத்தை;* ***வவ்விய*** *- கொள்ளையடித்த;* ***தம்*** *- தம்முடைய;* ***மாமுலை*** *- பெரிய தனங்களின்;* ***செவ்வி கண்டு*** *- பெருமிதத்தைப் பார்த்து;* ***குலாவுகின்றார்*** *- குதூகலம் அடைகின்றார்.*

*சிவபிரானினும்வலிமை மிக்கவன் இராவணன். அவன் மார்புச் சந்தனத்தை வவ்வியதால் தம் கொங்கை அவனினும் சிறப்புடையது என யட்சமகளிர் கருதினர். செவ்வி - பெருமிதம். எவ்வுதல், ஏவுதல். 'வேறுநின்று எவ்விடத் துணிந்து' (வாலிவதை - 10) ஏந்து தோள் - புயம் என்னும் பொருள் தந்தது. இதனை இனியர் பெயராய் நின்றது என்பர் 'அடியளந்தான் தா அயது' (நுண் பொருள் 6. ப)*
***(177)***

***5012. கூடி நான்குஉயர்வேலையும் கோக்க நின்று***
***ஆடினான் புகழ்,அம்கை நரம்பினால்***
***நாடி, நாற்பெரும்பண்ணும் நயப்புறப்***
***பாடினான் புகழ்பாடுகின்றார் சிலர்.****

***சிலர் -*** *சிலயட்ச மகளிர்;* ***உயர் -*** *சிறந்த;* ***நான்கு வேலையும் -*** *நான்கு கடல்களும்;* ***கூடி -*** *சேர்ந்து;* ***கோக்க -*** *ஒன்றுடன் ஒன்று கலக்க;* ***நின்று ஆடினான் -*** *நிலைத்து ஆடிய சிவபிரானின்;* ***புகழ் -*** *சிறப்புக்களை;* ***நாடி -*** *விரும்பி;* ***அம்கை நரம்பினால் -*** *அழகிய கை நரம்பினால்;* ***நால் பெரும் பண்ணினால் -*** *நான்கு வகைப்பட்ட பண்களாலே;* ***நயப்பு உற -*** *இனிமை உண்டாக;* ***பாடினான் -*** *பாடிய இராவணனின்;* ***புகழ் -*** *கீர்த்தியை;* ***பாடுகின்றார் -*** *பாடுகின்றார்கள்.*

*கோக்க - ஊடுருவ. நான்கு வகையான பண்கள் - குறிஞ்சிப் பண், முல்லைப்பண், மருதப்பண், செவ்வழிப்பண். 'பண்நான்காம் அவை பாலை, குறிஞ்சி மருதம் செவ்வழி என்ன வழங்கும் (பொருள் - நிகண். 807)* ***(178)***

*இராவணனின் உரிமைமகளிராம் அரக்கியரின் நிலைமை*

***5013. இனையதன்மை இயக்கியர் ஈண்டிய***
***மனைஓர் ஆயிரம்ஆயிரம் வாயில் போய்***
***அனையவன் குலத்துஆயிழையார் இடம்***
***நினைவின்எய்தினன் - நீதியின் எய்தினான்.***

***நீதியின்எய்தினான் -*** *நீதியில் நடக்கும்அனுமன்;* ***இனைய தன்மை -*** *இப்படிப்பட்ட இயல்பைக் கொண்ட;* ***இயக்கியர் -*** *யட்சப் பெண்கள்;* ***ஈண்டிய-*** *தங்கியிருக்கும்;* ***ஆயிரம் ஆயிரம் -*** *பத்து லட்சம்;* ***மனைவாயில் -*** *வீடுகளின் வாசல்களில்;* ***போய் -*** *நுழைந்து சென்று;* ***அனையவன் குலத்து -*** *அந்த இராவணனின் குலத்தில் பிறந்த;* ***ஆயிழையார் இடம் -*** *அரக்கியர்தங்கிய தெருவை;* ***நினைவின் -*** *எண்ணத்தைப் போல் (விரைவாக);* ***எய்தினன்-*** *அடைந்தான்.*

*அனுமன்இயக்கியர்கள் தங்கிய வீடுகளை ஆராய்ந்து பார்த்தபின் அரக்கியர்கள் தங்கிய தெருவை அடைந்தான். இல்வாய் என்பது வாயில் என மாறி நின்றது. உள்ளூர், முற்பகல், பிற்பகல், நுனிக்கொம்பர், கடைக்கண், கீழ்நீர் என்பனவும் இப்படிப்பட்டன. இங்ஙனம் வருவதை இலக்கண மரூஉ என்பர். ஓர் - அசை*
***(179)***

*அரக்கியர் நிலை*

**அறுசீர்விருத்தம்**

***5014. எரிசுடர்மணியின் செங்கேழ்***
***இளவெயில்இடைவிடாது***
***விரியிருள்பருகி, நாளும்***
***விளக்கின்றி விளங்கும் மாடத்து,***

***அரிவையர் குழுவும்நீங்க***
***ஆசையும்தாமுமே ஆய்,***
***ஒருசிறை இருந்து,போன***
***உள்ளத்தோடு ஊடுவாரும்.***

***எரிசுடர்*** - *நெருப்பைப் போன்ற;* ***மணியின்*** - *மணிகளின்;* ***செம்கேழ் இளவெயில்*** - *சிவந்த நிறத்தையுடைய இளமையான வெயிலானது;* ***இடை விடாது*** - *இடை விடாமல்;* ***விரி இருள் பருகி*** - *பரவிய இருளைக் குடிப்ப (அதனால்);* ***நாளும்*** - *எப்போதும்;* ***விளக்கு இன்றி*** - *விளக்குகள் இல்லாமல்;* ***விளங்கும் மாடத்து*** - *விளங்குகின்ற மாளிகையில்;* ***அரிவையர் குழுவும் நீங்க*** - *மகளிர் கூட்டம் விலகிச் செல்ல;* ***ஒரு சிறை இருந்து*** - *ஒரு பக்கத்தில் இருந்து கொண்டு;* ***ஆசையும் தாமுமே ஆய்*** - *காதலும் தாங்களுமாக;* ***போன உள்ளத்தோடு*** - *(இராவணன் பால் சென்ற) மனத்துடன்;* ***ஊடுவாரும்*** - *பிணங்குபவர்களும்.*

*குழுவும் - என்பதில் உள்ள 'உம்' அசை. காமக்கடல் மன்னும் உண்டே (குறள்) 'உம்' அசை நின்று பரிமேலழகர் வரைந்தார். அரிவையர் குழு நீங்கத் தாமும் தம் ஆசையுமாக இருந்தோர் இராவணன்பால் சென்ற உள்ளத்தை வெறுத்தனர். காமத்துப்பால், நெஞ்சொடு கிளத்தல் இப்பாடலுக்கு மூலம்.* ***(180)***

***5015. நகைஎரிக்கற்றை நெற்றி***
***நாவிதோய்ந் தனைய ஓதி,***
***புகைஎனத் தும்பிசுற்ற,***
***புதுமலர்ப்பொங்கு சேக்கை***
***பகைஎன ஏகி,யாணர்ப்***
***பளிங்குடைச் சீதப் பள்ளி,***
***மிகைஒடுங் காதகாம***
***விம்மலின், வெதும்பு வாரும்.****

***நகை எரிக்கற்றை நெற்றி*** - *விளங்கும் நெருப்புத்தொகுதி மேலாக;* ***நாவி தோய்ந்து அனைய*** - *(அதில்) கஸ்தூரியைப் பூசினாற் போன்ற;* ***ஓதி*** - *கூந்தலில்;* ***புகை என*** - *புகை போல;* ***தும்பி சுற்ற*** - *வண்டுகள் மொய்க்க;* ***புதுமலர்*** - *புதிய பூக்கள்;* ***பொங்கு சேக்கை*** - *நிரம்பிய படுக்கையை;* ***பகை என ஏகி*** - *பகை என்று கருதிவிலகிச் சென்று;* ***யாணர்*** - *புதுமையான;* ***பளிங்குடை*** - *பளிங்கைப் பெற்ற;* ***சீதப்பள்ளி*** - *குளிர்ந்த படுக்கையில்;* ***மிகை ஒடுங்காத*** - *மிகுதல் குறையாத;* ***காம விம்மலின்*** - *காம ஏக்கத்தால்;* ***வெதும்புவாரும்*** - *வெப்பம் அடைபவர்களும்.*

*அரக்கியர்கூந்தல் செந்நிறமுடையதாதலின் எரிக்கற்றை நெற்றி என்றார். செந்நிறக் கூந்தலில் உள்ள வண்டுகள் நெருப்பைச் சார்ந்த புகை போன்று உள்ளன.*
***(181)***

***5016. சவிபடுதகைசால் வானம்***
***தான்ஒருமேனி ஆக,***
***குவியும் மீன் ஆரமாக,***

*மின்கொடிமருங்குல் ஆக,*
*கவிர்ஒளிச்செக்கர் கற்றை*
*ஓதியா,மழைஉண் கண்ணா*
*அவிர்மதிநெற்றி யாக*
*அந்திவான்ஒக்கின் றாரும்.**

**சவிபடு -** ஒளி பொருந்திய; **தகைசால் வானம் -** சிறப்பு மிக்க ஆகாயம்; **மேனி ஆக -** உடலாகவும்; **குவியும் மீன் -** நெருங்கிய நட்சத்திரங்கள்; **ஆரம் ஆக -** முத்து மாலையாகவும்; **மின்கொடி -** மின்னற் கொடிகள்; **மருங்குல் ஆக -** இடையாகவும்; **கவிர் ஒளிர் -** முருக்கம் பூவைப் போல் ஒளி விடுகின்ற; **செக்கர் -** செவ்வானம்; **கற்றை ஓதியா -** தொகுதியுடன் கூடிய கூந்தலாகவும்; **மழை -** மேகமானது; **உண்கண்ணா -** மை பூசிய கண்களாகவும்; **அவிர்மதி -** பிரகாசிக்கும் பிறைச்சந்திரன்; **நெற்றியாக -** நெற்றியாகவும் (அமைய); **அந்தி வான் ஒக்கின்றாரும் -** அந்தி வானத்தை ஒத்திருப்பவர்களும்.

அரக்கியர்கருநிறத்தவர்கள். ஆதலின் சவிபடுவானம் என்பதற்கு ஒளியழிந்த (இருண்ட) வானம் என்று பொருள் கோடல் சிறக்கும் போலும் - ஒளி மிக்க வானம் அரக்கியர்க்கு ஒவ்வா. மதி என்றது பிறையை - பிறையை அணிந்த இறைவனை ‘குளிர் மதிக் கண்ணியான்’ என்றார் தேவர் (சிந்தா 208) தான் - ஒர் - உரையசை.
***(182)***

***5017.  பானல்உண்கண்ணும் வண்ணம்***
***படிமுறைமாற, பண்ணைச்***
***சோனை போன்றுஅளிகள் பம்பும்***
***சுரிகுழல்கற்றை சோர***
***மேல்நிவந்துஎழுந்த மாட***
***வெண்நிலாமுன்றில் நண்ணி,***
***வானமீன் கையின்வாரி***
***மணிக்கழங்கு ஆடு வாரும்.***

**மேல் நிவந்து -** மேல்நோக்கி உயர்ந்து; **எழுந்த -** நிமிர்ந்துள்ள; **மாட -** மாளிகையின்; **வெண் -** வெண்மையான; **நிலா முன்றில் -** நிலாமுற்றத்தை; **பண்ணை -** விளையாட்டுக்கு; **நண்ணி -** அடைந்து; **கையின் -** கைகளினாலே; **வான மீன் -** ஆகாய நட்சத்திரங்களை; **வாரி -** அள்ளி எடுத்து; **பனால் -** நீலோற்பலம் போன்ற; **உண்கண் -** மை பூசிய கண்கள்; **வண்ணம் -** நிறமும்; **படி -** இயல்பும்; **முறைமாற -** இயல்பிலிருந்து பிறழ; **சோனை போன்று அளிகள் பம்பும் -** விடாப் பெருமழை போல வண்டுகள் இடையறாது மொய்க்கும்; **சுரிகுழல் கற்றை சோர -** சுருண்ட கூந்தல் தொகு திகலைந்து கீழே வீழ; **மணிக் கழங்கு -** கழங்கு விளையாட்டை; **ஆடுவாரும்-** ஆடுபவர்களும். நட்சத்திரங்களின் ஒளியில் கண்களின் நிறம் பல நிறம் பெற்றன. பல பக்கம் செல்லும் கண்கள் மேலும் கீழும் செல்வதால் தம் இயல்பு திரிந்தன. கண்ணும் -உம்- அசை (திருக்குறள் 1164) பண்ணை - விளையாட்டு. கழங்கு என்றது ஆகுபெயராய் ஆட்டத்தை உணர்த்திற்று. ***(183)***

***5018. உழை உழைப்பரந்த வான***
***யாற்றுநின்று, உம்பர் நாட்டுக்***
***குழைமுகத்து ஆயம்தந்த***
***புனல்குளிர்ப்பு இலஎன்று ஊடி***
***இழைதொடுத்துஇலங்கும் மாடத்து***
***இடைதடு மாறஏறி***
***மழை பொதுத்துஒழுகு நீரால்***
***மஞ்சனம்ஆடு வாரும்.***

***உம்பர் நாட்டு -*** *விண்ணுலகத்தைச் சார்ந்த;* ***குழை முகத்து ஆயம் -*** *காதணியணிந்த முகத்தை உடைய மகளிர்;* ***உழை உழை -*** *(ஆகாயத்தில்) இடங்கள் தோறும்;* ***பரந்த -*** *பரவியுள்ள;* ***வான யாற்று நின்று -*** *ஆகாய கங்கையிலிருந்து;* ***தந்த புனல் -*** *கொண்டு வந்த தண்ணீர்;* ***குளிர்ப்பு இல -*** *குளிர்ச்சியில்லாதன;* ***என்று -*** *என்று கருதி;* ***ஊடி -*** *அவற்றை வெறுத்து;* ***இழை தொடுத்து -****ஆபரணங்கள்தொடுக்கப்பெற்று (அதனால்);* ***இலங்கும் மாடத்து -*** *விளங்கும் உப்பரிகையில்;* ***இடை -*** *இடையானது;* ***தடுமாற -*** *வருத்தம் அடைய;* ***ஏறி -*** *ஏறிப் போய்;* ***மழை -*** *மேகத்தை;* ***பொதுத்து -*** *துளையிட்டு;* ***ஒழுகும் நீரால்-*** *பொழியும் நீர்ப்பெருக்கால்;* ***மஞ்சனம் ஆடுவாரும் -*** *நீராடுகின்றவர்களும். யாற்று நீரினும்மேகநீர் குளிர்ச்சியுடையது 'மந்தி... சுனைநீர்... குளிர்ந்தில என்று ஊடி.... கொண்டல் இறைக்கீறி வாய்மடுக்கும் ஈங்கோயே' (ஈங்கோய் 19) இரணியவதைப் படலத்தும் இந்தக் கருத்துப் பேசப்படுகிறது. அங்கு கொண்டல் நீரினும் புறக்கடல் நீர் குளிர்ந்தது என்று பேசப்பட்டது (கம்ப. 6192)* ***(184)***

***5019. பன்னகஅரசர் செங்கேழ்ப்***
***பணாமணிவலிதின் பற்றி,***
***இன்உயிர்க்கணவன் ஈந்தான்***
***'ஆம்' எனஇருத்தி, விஞ்சை***
***மன்னவர் முடியும்,பூணும்***
***மாலையும்,பணையம் ஆக***
***பொன்அணிபலகைச் சூது***
***துயில்கிலர் பொருகின்றாரும்.***

***இன்உயிர்க்கணவன் -*** *இனிய உயிர் போன்ற இராவணன்;* ***பன்னக அரசர் -*** *பாம்புகளின் தலைவனான ஆதிசேடனின்;* ***செங்கேழ் -*** *சிவந்த நிறம் மிக்க;* ***பணாமணி -*** *படத்து மணிகளை;* ***வலிதின் பற்றி -*** *வலிமையால் கவர்ந்து;* ***ஈந்தான் -*** *(எனக்குக்) கொடுத்துள்ளான்;* ***ஆம் -*** *எனக்கு பரிசப் பொருளாம்;* ***என -*** *என்று கூறி;* ***இருத்தி -*** *(அவற்றை) வைத்துக் கொண்டு;* ***விஞ்சை மன்னவர் -*** *வித்தியாதர வேந்தர்களின்;* ***முடியும் -*** *கிரீடங்களையும்;* ***பூணும் -*** *ஆபரணங்களையும்;* ***மாலையும் -*** *மாலைகளையும்;* ***பணையம் ஆக -*** *பந்தயப் பொருள்களாக வைத்து;* ***பொன் -*** *தங்கத்தாற் செய்யப் பெற்ற;* ***அணி -*** *அழகிய;* ***பலகை -*** *சதுரங்கப் பலகையில்;* ***சூது -*** *சூதாட்டப் போரை;* ***துயில்கிலர் -*** *உறங்காமல்;* ***பொருகின்றாரும் -*** *செய்கின்ற சிலரும்.*

*பன்னக அரசர் -ஆதிசேடன் முதலியவர். பணையம் - பந்தயப் பொருள். இராவணன் வழங்கிய பொருளாதலின் 'பணாமணி' பந்தயப் பொருளாக வைக்கப்படவில்லை - அரக்கியர்க்கு வித்தியாதரவேந்தர்களின் முடிமுதலானவை பணையப் பொருளாயின என்றதனால் இலங்கையின் செல்வவளம் பேசப் பெற்றது.* ***(185)***

***5020. தென்நகுகுடம்,உள் பாடல்***
***சித்தியர்இசைப்பத் தீம்சொல்***
***பன்னக மகளிர்வள்வார்த்***
***தண்ணுமைப்பாணி பேண***
***பொன்னகர்த்தரளப் பந்தர்***
***கற்பகப்பொதும்பர், பொன் - தோள்***
***இன்நகை அரம்பைமாரை***
***ஆடல்கண்டுஇருக்கின் றாரும்.***

***கற்பகப்பொதும்பர் -*** *கற்பகச் சோலையில்;* ***பொன் நகர் -*** *அமராவதிநகரிலிருந்து கொணர்ந்த;* ***தரளப் பந்தர் -*** *முத்துப் பந்தலில்;* ***சித்தியர் -*** *சித்தியர் குல மகளிர்;* ***தென் நகு குடம் -*** *அழகு மிக்க குடமுழாவின் தாளஒத்துக் கேற்று;* ***உள் பாடல் -*** *உள்பட்ட பாடலை;* ***இசைப்ப -*** *பாட;* ***தீம்சொல் -*** *இனிய சொற்கள் பேசும்;* ***பன்னக மகளிர் -*** *நாகலோகத்து மகளிர்;* ***வள்வார் -*** *வலிய வாரால் கட்டப் பெற்ற;* ***தண்ணுமை பாணி -*** *மத்தளத்தின்தாளங்கள்;* ***பேண -*** *முழக்க;* ***பொன் தோள் -*** *அழகிய தோள்களையும்;* ***இன்நகை -*** *இனிய பற்களையும் உடைய;* ***அரம்பைமாரை -*** *விண்ணுலக மகளிர்;* ***ஆடல் கண்டு -*** *ஆடுதலைப் பார்த்து;* ***இருக்கின்றாரும் -*** *இருப்பவர்களையும். 'தென்ன' என்றுஅமிர்தப் பாடல்' என்பதனைப் பாடம் கொண்டு அதனுடன்கூடிய இனிய பாடல் என்க. 'தென்ன' என்பது ஆளத்தி தென்ன என்னும் இசை வளர்த்து என்று சிலம்பு மேற்கோள் பகரும். (வேனிற் - 35) வள்வார் - வலிமை மிக்கவார். 'வள்வார் முரசமொடு' என்றும் வருகின்ற (புற - வெண். 3-2) கொளுவுரை காண்க. பாணி - தாளம். கொட்டும் அசையும் தூக்கும் அளவும் - ஒட்டப் புணர்ப்பது பாணியாகும். (பஞ்ச மரபு 190 பக்)* ***(186)***

***5021. ஆணியின்கிடந்த காதல்***
***அகம்சுடஅருவி உண்கண்***
***சேண்உயர்உறக்கம் தீர்ந்த***
***சிந்தையர்செய்வது ஓரார்,***
***வீணையும் குழலும்,தம்தம்***
***மிடறும்வேற்றுமையின் தீர்ந்த***
***பாணிகள் அளந்த பாடல்***
***அமிழ்துஉகப் பாடுவாரும்.***

***ஆணியின் -*** *தைக்கப்பெற்ற ஆணியைப் போல;* ***கிடந்த -*** *தங்கியிருக்கின்ற;* ***காதல் -*** *காதலானது;* ***அகம் சுட -*** *(இராவணனை வெறுத்த) உள்ளத்தை வருத்த;* ***அருவி உண்கண் -*** *அருவி போன்ற கண்களையும்;* ***சேண் உயர் -*** *மிகவுயர்ந்த;* ***உறக்கம் தீர்ந்த -*** *உறக்கம் விலகப் பெற்ற;* ***சிந்தையர் -*** *உள்ளமும் உடையவராய்;* ***செய்வது ஓரார் -*** *செய்யத்தக்கவற்றை அறியாது;* ***வீணையும் -*** *வீணையின் ஓசையும்;* ***குழலும் -*** *குழலின்*

*ஓசையும்;* ***தம்தம் மிடறும் -*** *தங்களுடைய குரலும்;* ***வேற்றுமையின் தீர்ந்த -*** *வேறுபாடு இல்லாததும்;* ***பாணிகள் -*** *தாளத்தால்;* ***அளந்த பாடல் -*** *வரையறுக்கப்பட்டதும் ஆகிய பாடல்களை;* ***அமிழ்து உக -*** *அமிழ்தம் சிந்தும்படி;* ***பாடுவாரும் -*** *பாடுகின்றவர்களும். காதல் அகம்சுடவும், இசை வழாமற் பாடுவது சிறப்பு. அருவி உண்கண் என்பதில் உள்ள உண் என்பது உவம வாசகம் - சேல் உண்ட ஒண்கணார் என்று நாட்டுப் படலம் பேசும் (நாட் - படலம் 13) பாணி - தாளம். அளந்த - வரையறுத்த.*
***(187)***

***5022. தண்டலைவாழை அன்ன***
***குறங்கிடை,அல்குல் தட்டில்,***
***கொண்டபூந்துகிலும், கோவைக்***
***கலைகளும்சோர, கூர்ங்கள்***
***உண்டு அலமந்தகண்ணார்***
***ஊசலிட்டுஉலாவு கின்ற***
***குண்டலம்திருவில் வீச***
***குரவையில்குழறு வாரும்.***

***கூர்ங்கள் உண்டு-*** *மயக்கம் மிக்க கள்ளை உண்டு;* ***அலமந்த கண்ணார் -*** *சுழலும் கண்களை யுடையவர்கள்;* ***தண்டலை -*** *தோட்டத்தில் உள்ள;* ***வாழை அன்ன -*** *வாழை போன்ற;* ***குறங்கிடை -*** *தொடைகளில்;* ***அல்குல் தட்டில் -*** *தேர்த்தட்டுப் போன்ற அல்குலில்;* ***கொண்ட -*** *உடுத்த;* ***பூந்துகிலும் -*** *பூத்தொழிலையுடைய சேலையும்;* ***கோவைக் கலைகளும் -*** *கோக்கப் பெற்ற இடையணிகளும்;* ***சோர -*** *சரிந்து நீங்கவும்;* ***ஊசலிட்டு -*** *ஊசலின் தன்மை பெற்று;* ***உலாவுகின்ற -*** *அசைகின்ற;* ***குண்டலம் -*** *குண்டலமானது;* ***திருவில் வீச -*** *வானவில்லின்ஒளியை வெளிப்படுத்த;* ***குரவையில் -*** *குரவைக் கூத்தாடுவதில் (இலயம்);* ***குழறுவாரும் -*** *தடுமாறுபவர்களும்.*

*மயக்கம் தரும்கள்ளையுண்டு, சேலையும், இடையணியும் சோர, குண்டலம் அசைய ஆடும் குரவையாட்டத்தில் இலயம் தடுமாறுபவர்களும். 186 ஆம் பாடல் காதலால் நிலைகுலைந்தும் முறை தவறாது பாடும் அரக்கியரைக் காட்டினார் கவிஞர். இங்கு கள்ளுண்டமையால் குரவையில் இலயம் தவறியவர்களை அறிமுகப் படுத்துகிறார். தண்டலை - தோட்டம். பூந்திரள் தண்டலை என்னும் மதுரைக்காஞ்சித் (47) தொடர்க்கு இனியர் 'பூத்திரளையுடைய பூந்தோட்டங்கள்' என்று உரை வகுத்தார். பூந்துகில் - பூத்தொழிலை உடைய சேலை. பூந்துகில் மரீஇய ஏந்து கோட்டல்குல் (நெடுநல் 145) குரவை - குரவைக் கூத்து. திருவில் - வானவில். குண்டலம் திருவில் வீச (சிந்தா 677)*
***(188)***

***5023. நச்சுஎனக்கொடிய நாகக்***
***கள்ளொடுகுருதி நக்கி***
***பிச்சரின்பிதற்றி அல்குல்***
***பூந்துகில்கலாபம் பீறி***
***குச்சரித்திறத்தின் ஓசை***
***களம்கொள,குழுக்கொண்டு ஈண்டி***

***சச்சரிப் பாணிகொட்டி***
***நிறைதடுமாறு வாரும்.***

***நாகநச்சு என*** - பாம்பின்விடமென்று கூறத் தக்க; **கொடிய** - கொடுமையான; **கள்ளொடு குருதி நக்கி** - கள்ளையும் குருதியையும் உண்டு; **பிச்சரின் பிதற்றி** - பித்தர்களைப் போலக் குழறிப் பேசி; **அல்குல் பூந் துகில்**- அரையிற் கட்டிய ஆடையையும்; **கலாபம்** - மேகலையையும்; **பீறி** - சிதைத்து; **குச்சரி** - குச்சரி என்று கூறப்பெறும்; **திறத்தின் ஓசை** - திறப்பண்ணின் ஓசையானது; **களம் கொள** - மிடற்றை இடமாகக் கொள்ள; **குழூஉக் கொண்டு** - கூட்டமாகச் சேர்ந்து; **ஈண்டி** - ஒன்றுபட்டு; **சச்சரி** - சச்சரி என்னும் வாத்தியத்தில்; **பாணி கொட்டி** - தாளத்தை வரையறுத்து; **நிறை தடுமாறு வாரும்** - மனத்தை நிறுத்த முடியாமல் குலைபவர்களும்.

கள்ளைப்பாம்பின் விடமென்றார் - பாம்பு வெகுண்டன்ன தேறல். என்றும் (சிறுபாண் - 237) பாம்புக் கடுப்பன்ன தோப்பி என்றும் (அகம் 348) சங்க இலக்கியம் பேசும். குச்சரி - கிளைப்பண்.பெரும்பண்ணிற்கிளைப்பண் திறம் - குச்சரி ஐந்தாம் சாமத்தில் பாடப் பெறும். குச்சரி மல்லரி .... அஞ்சாம் சாமத்தில் பாட என்று பஞ்ச மரபு பேசும் சச்சரி - ஒரு வகை வாத்தியம். கொக்கரை சச்சரி வீணை (71) பாணியாணை (அப்பர் 288 - 7) பாணி கொட்டுதல், தாளத்தை வரையறுத்தல். மறக்க உண்ட மதுவும் பிறவும் பயன்படாமையால் காதல் நினைவால் தடுமாறினர். ***(189)***

***5024. தயிர்நிறத்து உறு கள் உள்ளம்***
***தள்ளுற,அறிவு தள்ளிப்,***
***பயிர்உறத்தெய்வம் என்மேல்***
***படிந்ததுபார்மின் என்னா,***
***உயிர்உயிர்த்துஇரண்டு கையும்***
***உச்சிமேல்உயர நீட்டி,***
***மயிர்சிலிர்த்து, உடலம் கூசி***
***வாய்விரித்து ஒடுங்கு வாரும்.***

**தயிர்நிறத்து உறுகள்** - தயிரின் நிறத்தைப் பெற்ற மிக்க காழ்ப்புடையகள்; **உள்ளம் தள்ளுற** - உள்ளத்தைத் தளரச்செய்ய; **தம்** - தம்முடைய; **அறிவு தள்ளி** - அறிவானது தடுமாற்றம் அடைந்து; **பயிர் உற** - தெய்வங்களை அழைத்தல் மிக (அதன்பின்); **என்மேல்** - என்னிடத்தில்; **தெய்வம் படிந்தது** - தெய்வம் சார்ந்துள்ளது; **பார்மின்** - காணுங்கள்; **என்னா** - என்று கூறி; **உயிர் உயிர்த்து** - பெருமூச்சுவிட்டு; **உச்சிமேல்** - தலையின்மேல்; **இரண்டு கையும்** - இரண்டு கைகளையும்; **உயர நீட்டி** - உயரும்படி நீட்டி; **மயிர்சிலிர்த்து** - மயிரானது சிலிர்க்கப் பெற்று; **உடலம் கூசி** - மேனி கூச்சம் அடைந்து; **வாய் விரித்து** - வாயைத் திறந்து; **ஒடுங்குவாரும்** - ஒய்ந்து போகின்றவர்களும். பிரிவாற்றாமையின் அதீதநிலை. ***(190)***

***5025. இத்திறத்துஅரக்கி மார்கள்***
***ஈர்-இருகோடி ஈட்டம்***
***பத்தியர்உறையும் பத்திப்***
***படர்நெடுந்தெருவும் பார்த்தான்;***

***சித்தியர்உறையும் மாடத்***
***தெருவும்பின் னாகச் சென்றான்;***
***உத்திசை விஞ்சைமாதர்***
***உறையுளைமுறையின் உற்றான்.***
*(அனுமன்)*

***இத்திறத்து* -** *இப்படிப்பட்ட;* ***ஈர் இரு கோடி ஈட்டம்* -** *நான்கு கோடிஎன்னும் தொகையுள்ள;* ***அரக்கிமார்கள்* -** *அரக்க மகளிர்;* ***பத்தியர்* -** *(இராவணன்பால்) காதலுடையவராய்;* ***உறையும்* -** *தங்கியுள்ள;* ***படர்* -** *விரிந்த;* ***பத்தி* -** *வரிசையான;* ***நெடும் தெருவும்* -** *நீண்ட தெருக்களையும்;* ***பார்த்தான்-*** *(பிராட்டியைத் தேடிப்) பார்த்து விட்டு;* ***சித்தியர்* -** *சித்தர்குலப் பெண்கள்;* ***உறையும்* -** *தங்கியிருக்கும்;* ***மாடம்* -** *மாடங்களைப்பெற்ற;* ***தெருவும்* -** *தெருக்களும்;* ***பின் ஆக* -** *பிற்பட்டிருக்க;* ***சென்றான்* -** *தேடிச்சென்று (பிறகு);* ***உத்திசை* -** *இடைப்பட்ட திசையில்;* ***விஞ்சை மாதர்* -** *வித்தியாதர மகளிர்;* ***உறையுளை* -** *தங்கும் வீடுகளை;* ***முறையின் உற்றான்* -** *முறைப்படி அடைந்தான்.*

*பத்தியர் -காதலுடையவராய் 'எரிசுடர்' என்னும் பாடல் முதல் 'தயிர் நிறம்' என்னும் பாடல் ஈறாகப் பேசப்பட்டவர் அரக்கியர்கள்.* ***(191)***

*விஞ்சை மகளிரின்நிலை*

***அறுசீர்விருத்தம்***

***5026. வளர்ந்தகாதலர் மகரிகை நெடுமுடி***
***அரக்கனைவரக் காணார்,***
***தளர்ந்தசிந்தைதம் இடையினும் நுடங்கிட,***
***உயிரொடுதடுமாறி,***
***களந்தவா நெடுங்ககருவியில், கைகளில்***
***செயிரியர்கலைக்கண்ணால்,***
***அளந்த பாடல்வெவ் அரவுதம் செவிபுக***
***அலமரல்உறுகின்றார்.***

***வளர்ந்த காதலர்-*** *மேலும்மேலும் பெருகிய காதலுடைய வித்தியாதர மகளிர்;* ***மகரிகை நெடுமுடி* -** *மகரவடிவாக அமைந்த கிரீடத்தை அணிந்த;* ***அரக்கனை* -** *இராவணன்;* ***வரக் காணார்* -** *தம்பால் வருதலைப் பெறாதவராய்;* ***தளர்ந்த சிந்தை* -** *தளர்ச்சியடைந்த சிந்தையானது;* ***தம் இடையினும்* -** *தம்முடைய இடையை விட (அதிகமாக);* ***நுடங்கிட* -** *நடுக்கம் அடைய;* ***உயிரொடு* -** *உயிருடன்;* ***தடுமாறி* -** *கலக்கம் அடைந்து;* ***செயிரியர்-*** *பாணர்கள்;* ***களந்தவா* -** *கண்டத்தோடு மாறுபடாத;* ***நெடுங்கருவியில்* -** *நீண்ட இசைக்கருவிகளாலும்;* ***கைகளில்* -** *கைகளாலும்;* ***கலைக்கண்ணால்* -** *நூல்களாகிய கண்களைக் கொண்டு;* ***அளந்த பாடல்* -** *வரையறுக்கப் பெற்ற பாடல்களாகிய;* ***வெவ் அரவு* -** *கொடிய பாம்பு;* ***தம் செவி புக* -** *தம்முடைய செவியில் நுழைய;* ***அலமரல் உறுகின்றார்* -** *மனம் கலங்குகின்றனர்.*

*செயிரியர்-பாணர்கள். பிரிந்தார்க்கு இசை பாம்பு போல் வருத்தும். வெதும்பும் மாதர் தம் இன் செவி பையரா நுழைகின்ற போன்றன பண்களின் நெடு பாடலே, என்று கைகேசி சூழ்வினையில் பேசப்பட்டது (கைகேசி 58) அளந்த பாடல் - தாளத்தால் வரையறுக்கப்பெற்ற பாடல். கலைக்கண் உடையவரே வரையறுக்கவல்லார் - பஞ்ச மரபு, 'தென்றல் வடிவும், சிவனார் திருவடிவும் ..... வேத வடிவும் காணஇல் ..... தாளம் காணலாம், என்று பேசிற்று (தாளவியல்) மகரிகை என்பது சுறா வடிவமாகக் கிரீடத்தில் அமையும் ஒருறுப்பு. இவ்விருத்தம் மா - விளம் - விளம் - விளம் - விளம் - காய் என்னும் சீர்களைப் பெற்றுவரும். இத்தகைய பாடல்களின் தொகை இந்நூலில் 48 (மணிமலர் 76).* ***(192)***

***5027. புரியும் நல்நெறி முனிவரும், புலவரும்***
***புகல் இலாப் பொறைகூர***
***எரியும்வெம்சினத்து இகல்அடு கொடுந்திறல்***
***இராவணற்குஎஞ்ஞான்றும்***
***பரியும்நெஞ்சினர் இவர்' என வயிர்த்து ஒரு***
***பகைகொடுபனித்திங்கள்***
***சொரியும்வெங்கதிர் துணைமுலைக் குவைசுட,***
***கொடிகளின்துடிக்கின்றார்.***

***புரியும் -*** *யாவரையும்விரும்புகின்ற;* ***நல்நெறி -*** *நல்வழியில் செல்கின்ற;* ***முனிவரும் -*** *தவசிகளும்;* ***புலவரும் -*** *தேவர்களும்;* ***புகல் இலா -*** *பாதுகாப்பைப் பெறாமையாலே;* ***பொறை கூர -*** *பொறுமை அதிகரித்தும் (கருணையின்றி);* ***எரியும் -*** *எரிகின்ற;* ***வெம்சினத்து -*** *கொடிய கோபத்தால்;* ***இகல் அடு -*** *பகைமை அழிக்கின்ற;* ***கொடுந்திறல் இராவணற்கு -*** *மிக்க வலிமையுடைய இராவணனிடத்தில்;* ***எஞ்ஞான்றும் -*** *எந்தக் காலத்திலும்;* ***பரியும் -*** *அன்பு கொள்கின்ற;* ***நெஞ்சினர் -*** *உள்ளத்தை உடையவர்;* ***இவர் -*** *இந்த வித்தியாதர மகளிர்;* ***என -*** *என்று கருதி (அதனால்);* ***வயிர்த்து -*** *கோபம் கொண்டு;* ***ஒரு பகை கொடு -*** *ஒரு பகையை மனத்தில்வைத்து;* ***பனித்திங்கள் -*** *குளிர்ந்த சந்திரனானவன்;* ***சொரியும் வெம் கதிர் -*** *கொட்டுகின்ற கொடிய கிரணங்கள்;* ***துணை -*** *இரண்டு;* ***குவை முலை சுட -*** *குவிந்த தனங்களைச் சுட (அதனால்);* ***கொடிகளில் -*** *பூங்கொடிகளைப் போல;* ***துடிக்கின்றார் -*** *நடுங்குகின்றார்கள். புகல் - பற்றுக்கோடு, பாதுகாப்பு. (காப்பவர்) புகல் இலா - என்பதற்குக் கூறவியலாத என்றும் கூறலாம். இந்தக் கவியில் எல்லார்க்கும் பகையான இராவணனிடத்திலே விருப்பமாயிருக்கலாமோ என்று சந்திரன் வாட்டுவதொத்தது' என்பது பழையவுரை - (அடை - பதி) கோபம் 'நெடும்பகையால் எரியும் வெம்சினம்' என்று கூறப்பெற்றது. 'சேர்ந்தாரைக் கொல்லி' என்று தமிழ் வேதம் பேசும். துணை - இரண்டு. துணை முலை சாந்து கொண்டு அணியாள் (பெரியதிரு 2 - 7 -2 இத்தொடரை, 'பெரிய வாச்சான் பிள்ளை' புறம்பு உவமானமின்றி தன்னில்தான் ஒப்பாகச் சொல்ல வேண்டும்படி இருக்கிற முலைகள்' என்று விளக்கினார்.* ***(193)***

***5028. சிறுகுகாலங்கள் ஊழிகள் ஆம்வகை***
***திரிந்து,சிந்தனை சிந்த,***
***முறுகு காதலின்வேதனை உழப்பவர்,***
***முயங்கியமுலை முன்றில்***
***இறுகு சாந்தமும்,எழுதிய குறிகளும்***

***இன்உயிர்ப் பொறை ஈர,***
***மறுகு வாட்கண்கள்சிவப்புற நோக்கினர்;***
***வயிர்த்தனர்; உயிர்க்கின்றார்.***

***சிறுகு காலங்கள் -*** *மிகச்சிறிய நாழிகை முதலான காலங்கள்;* ***ஊழிகள் ஆம்வகை -*** *பலயுகங்கள் ஆகும்படியாக;* ***சிந்தனை -*** *மனமானது;* ***திரிந்து சிந்த-*** *வேறுபட்டுச் சிதறிப் போக;* ***முறுகு காதலின் -*** *முற்றிய காமத்தாலே;* ***வேதனை உழப்பவர் -*** *துன்பத்தால் வருந்தி;* ***முயங்கிய -*** *இராவணன். தழுவிய;* ***முலைமுன்றில் -*** *முலைத் தடத்திலே (அவன் பூசிய);* ***இறகு சாந்தமும் -*** *உலர்ந்த சந்தனமும் (அவனால்);* ***எழுதிய -*** *எழுதப்பெற்ற;* ***குறிகளும் -*** *கரும்பு முதலிய சித்திரங்களும்;* ***இன் -*** *இனிமையான;* ***உயிர்ப்பொறை -*** *உயிராகிய பாரத்தை;* ***ஈர -*** *அறுக்க;* ***மறுகு -*** *கலங்குகின்ற;* ***வாட்கண்கள் -*** *வாள் போன்ற கண்களானது;* ***சிவப்புற -*** *செந்நிறம் அடைய;* ***நோக்கினர் வயிர்த்தனர் -*** *(இராவணன் வருகையை) பார்த்து சினம் கொண்டு;* ***உயிர்க்கின்றார் -*** *பெருமூச்சு விடுகின்றனர். சிறு காலங்கள்,நொடி, இமை, முதலியவை. முலைமுன்றில் - மார்பு. இளங்கோ அடிகள் 'கொங்கை முன்றில் குங்குமம் எழுதாள்' என்பர். முலை முதல் முற்றம் என்னும் சிந்தாமணித் தொடருக்கு (25-39) முலை தோன்றுவதற்குக் காரணமாகிய மார்பு என்று இனியர்; விளக்கம் வரைந்தார். நோக்கியதால் கண்கள் சிவந்தன - உயிர்ப்பொறை - உயிராகிய பாரம். பண்புத் தொகை. அதற்கு உடல் என்றும் கூறலாம். முலை முன்றில் இறுகும் சாந்தம் இராவணனுடனே கூடின காலம் அவன் மார்பில் சந்தனங்கள் முலை மத்தியிலே கிடக்கக் கண்டு என்பது பழைய உரை. (அடை - பதி) வயிர்த்தது - காலம் தாழ்த்தியமை பற்றி.* ***(194)***

*அனுமன்மண்டோதரியைக் காணல்*

***5029. ஆயவிஞ்சையர் மடந்தையர் உறைவிடம்***
***ஆறு -இரண்டு அமைகோடித்***
***தூய மாளிகைநெடுந்தெருந் துருவிப் போய்,***
***தொலைவில்மூன்று உலகிற்கும்***
***நாயகன்பெருங்கோயிலை நண்ணுவான்***
***கண்டனன்,நளிர் திங்கள்***
***மாய நந்தியவாள்முகத் தொருதனி***
***மயன்மகள்உறைமாடம்.***

***ஆய -*** *அப்படிப்பட்ட;* ***விஞ்சையர் மடந்தையர் -*** *வித்தியாதரப் பெண்கள்;* ***அமை ஆறு இரண்டு கோடி -*** *தங்கியிருக்கும் பன்னிரண்டு கோடி எண்ணுள்ள;* ***தூய -*** *தூய்மையான;* ***மாளிகை -*** *மாளிகைகளைப் பெற்ற;* ***நெடுந் தெரு -*** *நீண்ட தெருக்களை;* ***துருவிப் போய் -*** *தேடிச் சென்று;* ***தொலைவில் -*** *அழிதல் இல்லாத;* ***மூன்று உலகிற்கும் நாயகன் -*** *மூன்று உலகிற்கும் தலைவனான இராவணனின்;* ***பெருங்கோயிலை -*** *பெரிய அரண்மனையை;* ***நண்ணுவான் -*** *அடையும் அனுமன் (இடையில்);* ***நளிர்திங்கள் -*** *குளிர்ந்த சந்திரனும்;* ***மாய -*** *ஒளி மழுங்க;* ***நந்திய -*** *விளங்கிய;* ***வாண் முகத்து -*** *ஒளியையுடைய முகத்தைப் பெற்ற;* ***ஒரு தனி -*** *ஒப்பற்ற;* ***மயன்மகள் -*** *மயனின் புதல்வியாகிய மண்டோதரி;* ***உறைமாடம் -*** *தங்கியிருக்கும் மாளிகையை;* ***கண்டனன் -*** *பார்த்தான்.*

*மயன் -அசுரர்களின் சிற்பி. மயன்மகளை இராவணன் திருமணம் செய்த வரலாறு உத்தரகாண்டம் இராவணன் பிறப்புப்படலம் பேசும். திங்கள் மாய் - திங்களின் ஒளி குறைய. மாய்தல் - ஒளி குறைதல். பகல் மாய என்னும் நெய்தற் கலித் (26-39(தொடர்க்கு இனியர் பகற்காலத்தின் 'ஒளி மழுங்க' என்று உரை வகுத்தார்.* ***(195)***

***5030. கண்டு,கண்ணொடும் கருத்தொடும் கடாவினன்,***
***காரணம்கடைநின்றது***
***உண்டு வேறுஒருசிறப்பு; எங்கள் நாயகற்கு***
***உயிரினும்இனியாளைக்***
***கொண்டுபோந்தவன் வைத்தது ஓர் உறையுள் கொல்?***
***குலமணிமனைக்கு எல்லாம்***
***விண்டுவின்தடமார்பினின் மணி ஒத்தது***
***'இது' எனவியப்புற்றான்.***

*(அனுமன்)*

***கண் -*** *(மாடத்தைப்) பார்த்து;* ***கண்ணொடும் -*** *கண்களையும்;* ***கருத்தொடும் -*** *அறிவையும்;* ***கடாவினான் -*** *புகுத்தினான் (பிறகு);* ***காரணம் -*** *யான் தேடிவந்த காரணம்;* ***கடை நின்றது -*** *இறுதிப் பகுதியில் உள்ளது;* ***வேறு ஒரு சிறப்பு -*** *மற்ற மாளிகையினும் வேறுபட்ட தனிச்சிறப்பு;* ***உண்டு -*** *(இம்மாளிகைக்கு) இருக்கிறது;* ***எங்கள் நாயகற்கு -*** *எங்கள் தலைவனாகிய இராமபிரானுக்கு;* ***உயிரினும் இனியாளை -*** *உயிரைவிட இனிமை மிக்க பிராட்டியை;* ***கொண்டு போந்தவன் -*** *கொண்டு வந்த இராவணன்;* ***வைத்தது -*** *வைத்துள்ள;* ***ஓர் உறையுள் கொல் -*** *ஒரு மாளிகையோ (இம்மாடம்);* ***இது -*** *இந்த மாளிகை;* ***குலமணி -*** *சிறந்த மணிகள் பதிக்கப்பெற்ற;* ***மனைக்கெல்லாம் -*** *மாளிகை யாவற்றுக்கும்;* ***விண்டுவின் -*** *திருமாலின்;* ***தடமார்பினில் -*** *பெரிய மார்பில் (உள்ள);* ***மணி ஒத்தது -*** *கௌத்துவ மணியை ஒத்துள்ளது;* ***என -*** *என்று நினைந்து;* ***வியப்புற்றான் -*** *அதிசயப்பட்டான்.*

*ஒடு என்னும்மூன்றன் உருபை 'உம்' என்று மாற்றுக. 'தவத்தொடு தானம் செய்வாரில் தலை' இங்கு தவமும் தானமும் எனப் பொருள் கூறப்பெற்றது. 'ஒடு' என்பதை ஆலாக்குவதும் உண்டு. 'ஒடு' உருபாக்கி கண்ணாலும், கருத்தாலும் ஆராய்ந்து என்றும் பொருள் கூறலாம். கண்ணொடு கடவுளைக் கண்டாயே' என்னும் மருதக் கலிக்கு (28) கண்ணால் கடவுளரைக் கண்டாயோ என்று இனியர் உரை வகுத்தார்.* ***(196)***

***5031. அரம்பை, மேனகை, திலோத்தமை, உருப்பசி***
***ஆதியர்,மலர்க்காமன்***
***சரம்பெய்தூணிபோல் தளிர்அடி தாம்தொடச்***
***சாமரைபணிமாற***
***கரும்பையும் சுவைகற்பித்த சொல்லியர்***
***காமரம்கனியாழின்***
***நரம்பின்இன்இசை செவிபுக நாசியில்***
***கற்பகவிரை நாற.***

***காமன்*** *- மன்மதனுடைய;* ***மலர் சரம் பெய்*** *- மலரம்புகள் இட்டு வைத்த;* ***தூணி போல்*** *- அம்பறாத் துணி போன்ற;* ***தளிர் அடிதாம்*** *- தளிர் போன்ற பாதங்களை;* ***அரம்பை .... உருப்பசி ஆதியர்*** *- அரம்பை .... ஊர்வசி முதலான மகளிர்;* ***தாம் தொட*** *- தம் கரத்தால் வருடவும்;* ***சாமரை பணி மாற*** *- சாமரை வீசப்பெறவும்;* ***கரும்பையும்*** *- கரும்பையும்;* ***சுவைகைப்பித்த*** *- இனிய சுவை கசப்பு என்று சொல்லும்படியான;* ***சொல்லியர்*** *- இனிய சொற்களையுடைய மகளிர்;* ***காமரம்*** *- காமரம் என்னும் பண்;* ***கனி யாழின்*** *- முதிர்ச்சியடைந்த யாழினுடைய;* ***நரம்பின் இன் இசை*** *- நரம்பின் இனிய ஓசையானது;* ***செவிபுக*** *- செவியிலே நுழையவும்;* ***கற்பக விரை*** *- கற்பக மலரின் நறுமணம்;* ***நாசியில்*** *- நாசியின் கண்ணே;* ***நாற*** *- வெளிப்படவும்.*

*தூணி -அம்பறாத்தூணி. மன்மதன் அம்பறாத்தூணி போன்ற கணைக்கால் என்பது பழையவுரை. அவ்வுரையாசிரியர் தளிரடி என்பதைக் கணைக்கால் என்று கருதினார். 'சரம் பெய் தூணியின் தளிர் அடி' (கம்ப. மிகை. 105) கரும்பை என்பதில் உள்ள இரண்டனுருபை நான்கன் உருபாக்குக. கரும்புக்கு என்பது பொருள். அன்னவரைக் கற்பிப்போம் (பெரிய திருமடல் 36) சுவை கைப்பித்த என்னும் பாடமும் சிறந்ததே. கரும்பையும் கசப்பு என்னும்படியான சொல் என்று பொருள். சீ காமரம் என்னும் பண்ணின் பெயர் காமரம் என நின்றது. 'காமரம் முரலும் பாடல்' (கம்ப. 3135) ஆதி கவி, இராவணனின் மூச்சுக் காற்றில் மாம்பூ, புன்னைப்பூ, மகிழம்பூவின் மணம் இருப்பதாகப் பேசினார். கவிச்சக்கரவர்த்தி மண்டோதரியின் மூச்சு மணக்கிறது என்றார்.* ***(197)***

***5032. விழைவு நீங்கிய மேன்மையர் ஆயினும்***
***கீழ்மையர்வெகுள்வுற்றால்***
***பிழைகொல்நன்மைகொல் பெறுவது ? என்று ஐயுறு***
***பீழையால்பெருந்தென்றல்***
***உழையர் கூவப்புக்கு 'ஏகு' என பெயர்வது ஓர்***
***ஊசலின்உளதாகும் --***
***பழையம்யாம்எனப் பண்பு அல செய்வரோ***
***பருணிதர்,பயன் ஓர்வார் ?***

***பயன்ஓர்வார்*** *- செயலின் பயனை ஆராய்ந்த;* ***பருணிதர்*** *- பேரறிஞர்கள்;* ***யாம்*** *- நாம்;* ***பழையம் என*** *- நீண்டகால நட்புடையேம் என்று கருதி;* ***பண்பல செய்வரோ*** *- முறையற்ற செயல்களைச் செய்வாரோ? (செய்யமாட்டார்) ஆகையினாலும்* ***கீழ்மையர்*** *- தாழ்ந்த இயல்பைப் பெற்றவர்;* ***வெகுள்வுற்றால்*** *- சினம் அடைந்தால்;* ***விழைவு நீங்கிய*** *- ஆசையிலிருந்து விலகிய;* ***மேன்மையர் ஆயினும்*** *- சிறந்தவராக இருந்தாலும்;* ***பெறுவது*** *- (அத்தீயவரால்) அடைவது;* ***பிழைகொல்*** *- தீமையோ;* ***நன்மைகொல்*** *- நன்மையோ;* ***என்று ஐயுறும்*** *- என்று சந்தேகத்தை வழங்கும்;* ***பீழையால்*** *- அச்சத்தால்;* ***பெருந் தென்றல்*** *- பெருமையுடைய தென்றற்காற்று (உரிமையுடன் உலவாது);* ***உழையர்*** *- ஏவலாளர்கள்;* ***கூவ*** *- அழைக்க;* ***புக்கு*** *- மாளிகைக்கு உள்ளே நுழைந்தும்;* ***ஏகு என*** *- (உழையர்) 'போ' என்று கூற;* ***பெயர்வது ஓர் ஊசலின்*** *- திரும்பிச் செல்வதாகிய ஓர் ஊசல் தன்மையால்;* ***உளதாகும்*** *- தான் இருப்பதாகத் தன்னைக் காட்டிக்கொள்ளும்.*

*'பழையம் எனக்கருதிப் பண்பல செய்யும் கெழுதகைமை கேடு தரும்' என்னும் குறள் இக்கவியுள் அமைந்துள்ளது. தென்றல் வந்து செல்லும் ஊசல் தன்மையால்*

*இருப்பதாக அறியப்படுகிறதே அன்றி தன் இயல்பாகிய வீசும் தன்மையில் அங்கே இல்லை என்பதால் ஆணையின் சிறப்பு புலப்படும். மண்டோதரி இராவணனைப் பிரிந்திருப்பதால் தென்றல் இயல்பாக வீச அஞ்சியது போலும்; அழைத்தால் வந்து அனுப்பினால் போவது என்ற நிலைமையில் இருப்பதாயிற்று.* ***(198)***

***5033. இன்னதன்மையின், எரிமணி விளக்கங்கள்***
***எழில்கெடப் பொலிகின்ற***
***தன்னது இன்ஒளிதழைப்புறத் துயில்வுறு***
***தையலை,தகைவு இல்லான்***
***'அன்னள் ஆகியசானகி இவள்'என***
***அயிர்த்து,அகத்து எழு வெந்தீ***
***துன்னும்ஆர்உயிர் உடலொடு சுடுவது ஓர்***
***துயர்உழந்து இவை சொன்னான்.***

***தகைவுஇல்லான் -*** *(பிறரால்) தடுக்கப் பெறாத அனுமன்;* ***இன்னதன்மையின் -*** *இப்படிப்பட்ட சிறப்புடன்;* ***எரிமணி விளக்கங்கள் -*** *ஒளியைப் பெற்ற மாணிக்க விளக்குகளின்;* ***எழில்கெட -*** *பெருமிதம் கெடும்படி;* ***தன்னது -*** *தன்னுடைய;* ***பொலிகின்ற -*** *விளங்குகின்ற;* ***இன் ஒளி -*** *இனிய ஒளியானது;* ***தழைப்புற -*** *செழிப்படையும்படி;* ***துயில்வுறு -*** *உறக்கத்தை மேற் கொண்ட;* ***தையலை -*** *மண்டோதரியை;* ***அன்னள், ஆகிய -*** *அப்படிப்பட்ட;* ***சானகி இவள் என -*** *சீதா பிராட்டி இவளோ என்று;* ***அயிர்த்து -*** *சந்தேகித்து;* ***அகத்து எழு -*** *மனத்தில் தோன்றுகின்ற;* ***வெம் தீ -*** *கொடிய நெருப்பானது;* ***தன் -*** *தன்னுடைய;* ***உடலொடு துன்னும் ஆர் உயிர் -*** *உடலுடன் நெருங்கிய அரிய உயிரை;* ***சுடுவது -*** *சுடக் கூடிய;* ***ஓர் துயர் உழந்து -*** *துன்பத்தால் வருந்தி;* ***இவை சொன்னான் -*** *இவற்றைக் கூறினான்.*

*தகைவு - தடைஎரிமணி - பிரகாசத்துடன் கூடிய விளக்கு எரிகொள் செஞ்ஞாயிறு (திவ்ய. திருவிருத்தம் 92) மணி விளக்கின் ஒளி மண்டோதரியின் மேனி ஒளியில் மறைந்தது. இப்பாடலில் மண்டோதரியின் பேரெழில் கூறப்பெற்றது. கற்பு மேம்படுதன்மையினால் 'தன்னது ஒளி தழைப்புறல்' என்று பாராட்டிச் சீதையோ என்ற ஐயத்துக்கும் அவ் ஒளி வட்டமே வழிவகுத்தது என்று புலப்படுத்தினார்.* ***(199)***

***5034. எற்புவான்தொடர் யாக்கையால் பெறும்பயன்***
***இழந்தனள்! இதுநிற்க;***
***அற்பு வான்தளைஇற்பிறப்பு அதனொடும்***
***இகந்துதன்அருந் தெய்வக்***
***கற்பு நீங்கியகனங்குழை இவள்எனின்,***
***காகுத்தன்புகழோடும்***
***பொற்பும் யானும்இவ் இலங்கையும் அரக்கரும்***
***பொன்றுதும்இன்று என்றான்.***

***ஏற்பு* -** *எலும்புகளின்;* ***தொடர்* -** *கட்டினால் அமைந்த;* ***வான் ஆக்கையால்* -** *சிறந்த உடம்பினால்;* ***பெறும்* -** *அடைய வேண்டிய;* ***பயன்* -** *பயனை;* ***இழந்தனள்* -** *இழந்துவிட்டாள்;* ***இது நிற்க* -** *இது கிடக்கட்டும்;* ***இவள்* -** *இங்கே துயிலும் இப்பெண்;* ***வான்* -** *சிறந்த;* ***அற்புத் தளை* -** *அன்பாகிய பிணிப்பை;* ***இற்பிறப்பு அதனொடும்* -** *குடிப் பிறப்போடு சேர்த் து;* ***இகந்து* -** *நீக்கி;* ***தன்* -** *தனக்கே உரிய;****அரும் தெய்வக் கற்புநீங்கிய* -** *அரிய தெய்வத்தன்மைவாய்ந்த கற்பை விட்டு விலகிய;* ***கனங்குழை* -** *பாரமான குழையணிந்தவள் (சீதை);* ***எனின்* -** *என்று உறுதிப் பட்டால்;* ***காகுத்தன் புகழொடும்* -** *இராமபிரானின் புகழும்;* ***பொற்பும்* -** *பொலிவும்;* ***யானும்* -** *நானும்;* ***இவ் இலங்கையும்* -** *இந்த இலங்கை மாநகரும்;* ***அரக்கரும்* -** *இராக்கதர்களும்;* ***இன்று* -** *இன்றைய தினத்தில்;* ***பொன்றுதும்* -** *அழிவோம்;* ***என்றான்* -** *என்று கருதினான்;*

*ஏற்பு - என்பு.நிற்க - கிடக்கட்டும். அலட்சியத்தைக் காட்டும் சொல். அது கிடக்கட்டும் என்றான் அனுமன். பொற்பு - பொலிவு. பொன்றுவது இன்று என்றான் - என்னும் பாடம் உள்ளது. பொன்றுவது - அழிதல். தொழிற்பெயர்.*
***(200)***

***5035. மானுயர்த்திரு வடிவினள் அவள்; இவள்***
***மாறுகொண்டனள்; கூறின்***
***தான் இயக்கியோ? தானவர் தையலோ ?***
***ஐயுறும் தகைஆனாள் !***
***கான் உயர்த்ததார் இராமன்மேல் நோக்கிய***
***காதல்காரிகையார்க்கு***
***மீன்உயர்த்தவன் மருங்குதான் மீளுமோ ?***
***நினைந்ததுமிகை என்றான்.***

***அவள்* -** *சீதாப்பிராட்டி;* ***மானுயர் திருவடிவினள்* -** *அழகிய மானிட மங்கையின் வடிவையுடையவள்;* ***இவள்* -** *இங்கே உறங்கும் இவளோ;* ***மாறு கொண்டனள்* -** *(மானிடரினும்) மாறுபட்ட வடிவத்தைப் பெற்றுள்ளாள்;* ***கூறில்* -** *(இவற்றை) கூறுபடுத்தி ஆராய்ந்தால்;* ***தான்* -** *இவள்;* ***இயக்கியோ* -** *யட் சப்பெண்ணோ ? ;* ***தானவர் தையலோ* -** *அசுரகுலப் பெண்ணோ?;* ***ஐயுறும்* -** *சந்தேகப்படுதற்கேற்ற;* ***தகை ஆனாள்* -** *தன்மையைப் பெற்றுள்ளாள்;* ***காரிகையார்க்கு* -** *மகளிர்க்கு;* ***கான் உயர்த்த* -** *மணத்துக்குச் சிறப்பைத்தந்த;* ***தார்* -** *மாலையணிந்த;* ***இராமன் மேல்* -** *இராமபிரான்பால்;* ***நோக்கிய-*** *சென்ற;* ***காதல்* -** *காதலானது;* ***மீன் உயர்த்தவன் மருங்குதான்* -** *மீன்கொடியை உயர்த்திய மன்மதன் பக்கலில்கூட;* ***மீளுமோ* -** *திரும்பிவருமோ?;* ***நினைந்தது* -** *(இவள் சீதை என்று) எண்ணியது;* ***மிகை என்றான்-*** *குற்றம் என்று கருதினான். மானுயர் -மனிதர் - (மானுஷர் - மானுடர் - மானுயர்) மானுயர் இவர் என மனக் கொண்டாய் எனின் (காட்சி 127) மீன் உயர்த்தவன் - மன்மதன்.மீனேறுயர்த்த கொடிவேந்தன் (சிந்தாமணி 6) நோக்கிய - சென்ற - மந்தியும் கடுவனும் மரங்கள் நோக்கின (சித்திரகூட 41). மிகை - குற்றம்.* ***(201)***

***5036. இலக்கணங்களும் சிலஉள; என்னினும்***
***எல்லைசென்று உறுகில்லா***
***அலக்கண் எய்துவதுஅணியது உண்டு; என்று***
***எடுத்து***

*அறைகுவதுஇவள் யாக்கை;*
*மலர்க்கருங்குழல் சோர்ந்து, வாய்வெரீஇச், சில*
*மாற்றங்கள் பறைகின்றாள்*
*உலக்கும் இங்குஇவள் கணவனும்; அழிவும் இவ்*
*வியன்நகர்க்கு உளது என்றான்.*

***சிலஇலக்கணங்களும் உள -*** *(இவள்பால்) சிலநல்லிலக்கணங்கள் உள்ளன;* ***என்னினும் -*** *என்றாலும்;* ***இவள் யாக்கை -*** *இவளுடைய உடலின் அடையாளம்;* ***எல்லை சென்று உறுகில்லா -*** *முடிவைச் சென்று சேராத;* ***அலக்கண் -*** *துன்பத்தை;* ***எய்துவது -*** *அடைவது;* ***அணியது உண்டு -*** *சமீபத்தில் இருக்கிறது;* ***என்று எடுத்து அறைகுவது -*** *என்று எடுத்துரைக்கின்றது (இவள்);* ***மலர்க் கருங்குழல் -*** *மலரணிந்த கரிய கூந்தலானது;* ***சோர்ந்து -*** *அவிழ்ந்து;* ***வாய் வெரீஇ -*** *வாய்குழறி;* ***சில மாற்றங்கள் -*** *சில சொற்களை;* ***பறைகின்றாள் -*** *கூறுகின்றாள்;* ***இவள் கணவனும் -*** *இவளுடைய கணவனும்;* ***இங்கு உலக்கும் -*** *இங்கே இறப்பான்;* ***இ வியன் நகர்க்கு -*** *இந்த பெரிய நகர்க்கு;* ***அழிவும் -*** *நாசமும்;* ***உளது -*** *இருக்கிறது.* ***என்றான் -*** *என்று கருதினான்.*

*பறைகின்றாள் -கூறுகின்றாள். ஏதம் பறைந்து அல்ல செய்து (திவ்ய திருவாய் 4-6-8) யாக்கை என்றது யாக்கையின் அடையாளங்களை.* ***(202)***

***5037. என்றுஉணர்ந்து நின்று ஏமுறும் நிலையினில்***
***'நிற்க இத்திறன்' என்னா***
***பின்றுசிந்தையன் பெயர்ந்தனன்; அம்மனை***
***பிற்படப்பெருமேருக்***
***குன்று குன்றியதகைஉற ஓங்கிய***
***கொற்றமாளிகை தன்னில்***
***சென்று புக்கனன்; இராவணன் எடுப்பருங்***
***கிரியெனத்திரள் தோளான்.***

***இராவணன்எடுப்பரும் -*** *இராவணனால்பெயர்த்தெடுக்க முடியாத;* ***கிரிஎன -*** *மலைபோல;* ***திரள் தோளான் -*** *திரண்ட தோள்களையுடைய அனுமன்;* ***என்று உணர்ந்து -*** *என்று அறிந்து;* ***நின்று -*** *நிலைபெற்று;* ***ஏம் உறு நிலையினில் -*** *இன்பம் பொருந்திய நிலைமையில்;* ***இத்திறன் நிற்க -*** *ஆராயும் இத்தன்மை இருக்கட்டும்;* ***என்னா -*** *என்று கருதி;* ***பின்று -*** *திரும்பிய;* ***சிந்தையன் -*** *மனத்தை உடையவனாய்;* ***அம்மனை -*** *அந்த மண்டோதரியின் மாளிகை;* ***பிற்பட -*** *பின்னே செல்ல;* ***பெயர்ந்தனன் -*** *நீங்கிப்போய்;* ***பெருமேருக்குன்று -*** *பெரிய மேருமலை;* ***குன்றிய தகைஉற -*** *தாழ்ந்த தன்மையடைய;* ***ஓங்கிய -*** *உயர்ந்துள்ள;* ***கொற்ற மாளிகை தன்னில் -*** *வெற்றி பொருந்திய மாளிகையில்;* ***சென்று புக்கனன் -*** *சென்று சேர்ந்தான்.*

*ஏம் - இன்பம்.பின்று சிந்தை - மீண்ட சிந்தனை. குன்றிய தகை - தாழ்ந்த தன்மை.* ***(203)***

***5038. நிலம்துடித்தன; நெடுவரை துடித்தன;***
***நிருதர்தம்குலமாதர்***

***பொலம் துடிக்குஅமை மருங்குல்போல் கண்களும்***
***புருவமும்,பொன் - தோளும்***
***வலம் துடித்தன;மாதிரம் துடித்தன;***
***தடித்துஇன்றி, நெடுவானம்***
***கலந்து இடித்தன;வெடித்தன பூரண***
***மங்கலகலசங்கள்.***

*(அனுமன் அம்மாளிகையில் நுழைந்தபோது)*

***நிலம் -*** *இலங்கையில் பலஇடங்கள்;* ***துடித்தன -*** *அதிர்ந்தன;* ***நெடுவரை -*** *பெரிய மலைகள்;* ***துடித்தன -*** *அதிர்ந்தன;* ***நிருதர்தம் குலமாதர் -*** *அரக்கர்குலப் பெண்களின்;* ***பொலந்துடிக்கு -*** *அழகிய துடிக்கு;* ***அமை -*** *உவமையாகத்தக்க;* ***மருங்குல்போல் -*** *இடையைப்போல;* ***கண்களும் -*** *கண்களும்;* ***புருவமும் -*** *புருவங்களும்;* ***பொன் தோளும் -*** *அழகிய தோள்களும்;* ***வலம் துடித்தன -*** *வலப்பக்கத்தில் துடித்தன;* ***மாதிரம் -*** *திசைகள்;* ***துடித்தன -*** *அதிர்ந்தன;* ***தடித்து இன்றி -*** *மின்னல் இல்லாமலேயே;* ***நெடுவானம் -*** *நீண்ட மேகஆகாயம்;* ***கலந்து -*** *(ஒலி எல்லா இடத்திலும்) கலப்ப;* ***இடித்தன -*** *அதிர்ந்தன;* ***பூரண மங்கல கலசங்கள் -*** *நீர் நிரம்பிய மங்கல கலசங்கள்;* ***வெடித்தன -*** *சிதறின.*

*அமை -உவமையாகத்தக்க. கலந்து என்றும் செய்து என்றும் செய என் எச்சமாக மாற்றுக.*

*இடையைப்போல்கண் முதலானவை துடித்தன. இடையானது மெல்லியது ஆகையால் எப்போதும் துடிக்கும். அதுபோல் மற்றைய அங்கங்கள் துடித்தன. மகளிர்க்கு வலப்புறம் துடித்தல் கேட்டுக்கு அறிகுறி (கம்ப. 5100).* ***(204)***

***5039. புக்குநின்று, தன்புலன் கொடு நோக்கினன்***
***பொருவருந் திருவுள்ளம்***
***நெக்குநின்றனன், நீங்கும் அந்தோ இந்த***
***நெடுநகர்த்திரு என்னா,***
***எக்குலங்களின்யாவரே யாயினும்***
***இருவினை எல்லார்க்கும்***
***ஒக்கும்; ஊழ்முறைஅல்லது, வலியது ஒன்று***
***இல் என,உணர்வுற்றான்.***

*(அனுமன்)*

***புக்குநின்று -*** *போய்நின்று;* ***தன் -*** *தன்னுடைய;* ***புலன்கொடு -*** *அறிவைக்கொண்டு;* ***நோக்கினன் -*** *பார்த்து;* ***இந்த நெடுநகர்த்திரு -*** *இந்த பெரிய நகரின் செல்வம்;* ***நீங்கும் -*** *அழியும்;* ***அந்தோ -*** *ஐயோ !;* ***என்னா-*** *என்று கருதி;* ***பொரு அரு -*** *ஒப்புமை இல்லாத;* ***திருவுள்ளம் -*** *நன்மனம்;* ***நெக்கு நின்றனன் -*** *நெகிழ்ந்து நின்றான்;* ***எக்குலங்களின் -*** *எந்தக் குலத்தினில் (தோன்றிய);* ***யாவரேயாயினும் -*** *எவராக இருந்தாலும்;* ***எல்லோர்க்கும் -*** *யாவருக்கும்;* ***இருவினை -*** *நல்வினை தீவினைகள்;* ***ஒக்கு ம்-*** *ஒரு மாதிரியே ஆகும்;* ***ஊழ் -*** *ஊழ் வினையின்;* ***முறையல்லது -*** *நியதியைத் தவிர;* ***வலியது -***

*வலிமையுடையது;* ***ஒன்று -*** *வேறொரு பொருள்;* ***இல் என -*** *இல்லை என்று;* ***உணர்வுற்றான் -*** *சிந்தித்தான்.*

*அனுமன்,இலங்கையில் நிகழ்ந்த நிலன்துடித்தல் முதலிய உற்பாதங்களைக் கண்டு இந்நகரின் நிலைமை அறிந்து வருந்தினான்.*

*'ஊழிற் பெருவலியாவுள' என்னும் தமிழ்மறை (குறள் 380) அனுமன் மூலம் வெளிப்படுகிறது. பிறர்கேட்டைநினைந்து வருந்தினான் ஆதலின் பொருவறு திருவுள்ளம் என்றான்.* ***(205)***

*இராவணன் நிலையும்அனுமன் நினைவும்*

***5040. நூல்பெருங்கடல் நுணங்கிய கேள்வியன்***
***நோக்கினன்; மறம் கூரும்***
***வேல் பெருங்கடல்புடைபரந்து ஈண்டிய***
***வெள்ளிடைவியன்கோயில்***
***பால் பெருங்கடல்பல்மணிப் பல்தலைப்***
***பாப்புடைப் படர்வேலை***
***மால் பெருங்கடல்வதிந்ததே அனையது ஓர்***
***வனப்பினன்துயில்வானை***

***பெருங்கடல் நூல்-*** *பெருங்கடல் போன்ற நூல் அறிவையும்;* ***நுணங்கிய -*** *நுட்பமான;* ***கேள்வியன் -*** *கேள்வி அறிவையும் உடைய அனுமன்;* ***மறம்கூரும் -*** *வீரம் நிரம்பிய;* ***பெரும் -*** *பெரிய;* ***வேல் கடல் -*** *வேலேந்திய வீரர்கள் திரள்;* ***புடை -*** *பக்கங்களில்;* ***பரந்து ஈண்டிய -*** *பரவி நெருங்கியுள்ள;* ***வெள்ளிடை -*** *வெளி முற்றங்களையுடைய;* ***வியன்கோயில் -*** *பெரிய அரண்மனையில்;* ***பெரும் -*** *பெரிய;* ***பாற்கடல் -*** *பாற்கடலின் கண்ணே;* ***பல்மணி -*** *பல மணிகளையும்;* ***பல்தலை -*** *பல தலைகளையும் உடைய;* ***பாப்பு -*** *ஆதிசேடனை;* ***உடை -*** *உடைய;* ***படர்வேலை -*** *விரிகின்ற அலைகளையுடைய கடலிலே;* ***மால் -*** *திருமாலாகிய;* ***பெருங்கடல் -*** *பெரிய கடல்;* ***வதிந்தது அனையது -*** *தங்கியிருப்பது போன்ற;* ***வனப்பினன் -*** *அழகையுடையவனாய்;* ***துயில்வானை -*** *உறங்குகின்றவனை (இராவணனை);* ***நோக்கினன் -*** *பார்த்தான்.*

*வேலை - அலை.புலர்கின்ற வேலைப் புணரி (திருவிருத்தம் 75) பெரியவாச்சான் பிள்ளை, திரைக்கிளர்ச்சியை உடைய கடல் என்று உரை வகுத்தார். வேலை - கரை என்றும் கொள்ளலாம். கடலின் கரையும் வேலை என்றாகும் (பிங்கலம் - 4111).*

*வெள்ளிடை -அரண்மனையின் முற்றம்.* ***(206)***

***5041. குழவிஞாயிறு குன்று இவர்ந்தனையன***
***குருமணிநெடுமோலி***
***இழைக ளோடுநின்று இளவெயில் எறித்திட,***
***இரவெனும்பொருள் வீய,***
***முழைகொள்மேருவின் முகட்டிடைக் கனகனை***
***முருக்கியமுரண்சீயம்,***

***தழைகொள்தோளொடு தலைபல பரப்பி, முன்***
***துயில்வது ஓர் தகையானை-***

***குன்றுஇவர்ந்தனையன** - மலையின்கண் ஏறிய; **குழவி ஞாயிறு அனைய** - இளஞ்சூரியன் போன்ற; **குருமணி** - ஒளிமிக்க மணிகள் பதிக்கப்பெற்ற; **நெடுமோலி** - நீண்ட கிரீடங்கள்; **இழைகளோடு நின்று** - ஆபரணங்களுடன் நிலைத்து; **இளவெயில்** - மெல்லிய ஒளி; **எறித்திட** - வீசவும்; **இரவெனும்** - இருள் என்று பேசப்படும்; **பொருள் வீய** - பொருள் அழியவும்; **முழைகொள்** - குகைகளைப் பெற்ற; **மேருவின் முகட்டிடை** - மேருமலையின் உச்சியில்; **கனகனை முருக்கிய** - இரணியனைக் கொன்ற; **முரண்சீயம்** - வலிமைபெற்ற நரசிங்கமூர்த்தி; **தழைகொள்** - (பலவாக) தழைத்தலைக் கொண்ட; **தோளொடு** - தோள்களையும்; **தலை பல** - பல தலைகளையும்; **பரப்பி** - பரப்பிக்கொண்டு; **முன் துயில்வது** - முன்னே உறங்குவதைப் போன்ற; **ஓர்** - ஒப்பற்ற; **தகையானை** - தன்மை உடையவனை (இராவணனை).*

*நரசிம்மமூர்த்திமலையின் குகையில் இருப்பதாக உபநிடதம் (நரசிம்ம உபநிடதம் 409) பேசும். அது இங்கு நினைவுக்கு வருகிறது. முழையில் இருந்த சிங்கம் முகட்டில் வந்து இரணியனைக் கொன்றது போலும்.* ***(207)***

***5042. ஆயபொன்தலத்து ஆய்வளை அரம்பையர்***
***ஆயிரர்அணிநின்று***
***தூய வெண்கவரித்திரள் இயக்கிடச்***
***சுழிபடுபசுங்காற்றின்***
***மீய கற்பகத்தேன்துளி விராயன,***
***வீழ்தொறும் நெடுமேனி***
***தீய, நல்தொடிச்சீதையை நினைதொறும்***
***உயிர்த்து,உயிர் தேய்வானை-***

***ஆய** - அப்படிப்பட்ட; **பொன் தலத்து** - பொன்மயமான அரண்மனையில்; **ஆய்வளை** - சில வளையல்களை அணிந்த; **ஆயிர அரம்பையர்** - ஆயிரக்கணக்கான அரம்பையர்கள்; **அணி நின்று** - வரிசையாக இருந்து; **தூயவெண்** - தூய்மையும் வெண்மையும் பெற்ற; **கவரித்திரள்** - கவரிக் கூட்டங்களை;**இயக்கிட** - வீச (அதனாலேஎழுந்த); **சுழிபடு** - சுழித்தலைப் பெற்ற; **பசுங்காற்றின்** - இளங்காற்றால்; **மீய** - மேலேயுள்ள; **கற்பகத் தேன்துளி** - கற்பக மலரில் உள்ள தேன் துளிகள்; **விராயன** - மலருடன் கலந்தனவாய்; **வீழ்தொறும்** - படுந்தோறும்; **நெடுமேனி தீய** - பெரிய உடல் வெப்பமடையவும்; **நல்தொடி** - நல்ல வளையல் அணிந்த; **சீதையை நினைதொறும்** - சீதாபிராட்டியை எண்ணுந்தோறும்; **உயிர்த்து** - பெருமூச்சுவிட்டு; **உயிர்தேய்வானை** - உடல் தேய்கின்றவனை (இராவணனை).*

*பொன்தலத்துஅரம்பையர் எனச் சேர்த்து விண்ணுலக மகளிர் என்றே அனைவரும் பொருள் கொண்டனர். திரிசிரபுரம் மகாவித்துவான் வி. கோவிந்தபிள்ளை அவர்கள், பொன்தலத்து என்பதற்கு பொன்மயமான இடம் என்று உரை வகுத்தார்.*

*வீயகற்பக -என்று பாடங்கொண்டு, கற்பகவீய எனக்கூட்டி கற்பகமலர் என்று பொருள் கொண்டவர் பலர். நன்று போலும்.*

*அணி நின்று -பக்கத்தில் இருந்து (பிறவுரை) உயிர் என்றது உடலை. தேய்வது அதுவாதலின். உயிர் முன்புடைப்ப (சிலம்பு - அடைக்கல - 86) என்னும் தொடரின்கீழே உயிர் என்றது ஆகுபெயரான் உடம்பை என்று வரைந்தார் அரும்பத உரையார்.*
***(208)***

***5043. குழந்தைவெண்மதிக் குடுமியன் நெடுவரை***
***குலுக்கியகுலத்தோளைக்***
***கழிந்து புக்குஇடை கரந்தன, அனங்கன்வெங்***
***கடுங்கணைபலபாய,***
***உழந்தவெஞ்சமத்து உயர்திசை யானையின்***
***ஒளி மருப்புஇற்று, உற்ற***
***பழுந்தழும்பினுக்குஇடைஇடையே சில***
***பசும்புண்கள் அசும்பு ஊற,***

***வெண் -*** *வெண்மையான;* ***குழந்தைமதி -*** *இளஞ்சந்திரனை அணிந்த;* ***குடுமியன் -*** *சடையுச்சியுடைய சிவபிரான் வீற்றிருக்கும்;* ***நெடுவரை -*** *பெரிய கயிலாய மலையை;* ***குலுக்கிய -*** *அசைத்தெடுத்த;* ***குலத்தோளை -*** *கூட்டமான தோள்களை;* ***கழிந்து -*** *கடந்து (மார்பில்);* ***புக்கு -*** *புகுந்து;* ***இடைகரந்தன -*** *நடுவில் மறைந்துள்ள;* ***அனங்கன் பலவெங்கடுங்கணை -*** *மன்மதனின் பல கொடிய அம்புகள்;* ***பாய -*** *பாய்தலாலே;* ***வெம்சமத்து -*** *கொடிய போரிலே;* ***உழந்த -*** *வருந்திய;* ***திசையானையின் -*** *திக்குகளில் உள்ள யானையின்;* ***உயர் -*** *உயர்ந்த;* ***ஒளி மருப்பு -*** *ஒளிமிக்கதந்தங்கள்;* ***உற்ற-*** *பதிந்த;* ***இற்று -*** *முறிந்ததால் உண்டான;* ***பழந்தழும்பினுக்கு -*** *பழைய தழும்புகளுக்கு;* ***இடை இடையே -*** *நடு நடுவே;* ***சில பசும்புண்கள் -*** *சில புதிய புண்கள்;* ***அசும்பு ஊற -*** *குருதி கசிந்து கொண்டிருக்க.*

*யானைகளால்உண்டான பழம் புண்களுக்கிடையே மன்மத பானங்களால் உண்டான புதுப்புண்கள் குருதி கசிய. கடுங்கணை பாய உண்டான புதுப்புண் என்க. தழாத்தொடர் குழவித்திங்கள் .... முடித்த அருமைத்து எனச் சிலம்பு பேசிற்று. அதை அடியொற்றி குழந்தை வெண்மதி என்று கூறப்பெற்றது. தழும்பினுக்கிடையே கருங்கணை பாய (உண்டான) புதுப்புண் என்று சொற்களைப் பிரித்துக் கூட்டினும் அமையும்.* ***(209)***

***5044. சாந்துஅளாவிய கலவைமேல் தவழ்வுறு***
***தண்தமிழ்ப் பசுந்தென்றல்,***
***ஏந்து காமவெங்கனல் உயிர்த்து, இருமடி***
***துருத்தியின் உயிர்ப்பு ஏற***
***காந்தள்மெல்விரல் சனகிமேல் மனம்முதல்***
***கரணங்கள்கடிது ஓடப்***
***பாந்தள்நீங்கிய முழைஎன, குழைவுறு***
***நெஞ்சுபாழ்பட் டானை--***

***கலவை அளாவிய -*** *கற்பூரம்முதலான கலவைகளைப் பெற்ற;* ***சாந்துமேல் -*** *சந்தனப் பூச்சின்மேல்;* ***தவழ்வுறு -*** *தவழ்கின்ற;* ***தண்டமிழ் -*** *குளிர்ந்த தமிழ் மொழியினுடன்*

*பிறந்த;* ***பசுந்தென்றல் -*** *இளந்தென்றல் காற்றால்;* ***காந்து -*** *சுடுகின்ற;* ***வெம் -*** *கொடுமையான;* ***காம கனல் -*** *காமமாகிய நெருப்பு;* ***உயிர்த்து -*** *வெளிப்பட்டு (அதனால்);* ***இருமடி -*** *இரண்ட மடங்கு;* ***துருத்தியின் -*** *துருத்தியைப்போல;* ***உயிர்ப்பு -*** *பெருமூச்சு;* ***ஏற -*** *அதிகரிக்க;* ***காந்தள் மெல்விரல் -*** *காந்தள் மலரைப் போன்ற மெல்லிய விரலைப்பெற்ற;* ***சனகிமேல் -*** *சீதாப் பிராட்டியின்பால்;* ***மனம் முதல் கரணங்கள் -*** *மனம் முதலான கரணங்கள்;* ***கடிது ஓட -*** *வேகமாகச் சென்று சேர (அதனால்);* ***பாந்தள் நீங்கிய -*** *பாம்புகள் நீங்கப்பெற்ற;* ***முழை என -*** *புற்றைப்போல;* ***குழைவுறு -*** *நெகிழ்ந்த;* ***நெஞ்சு -*** *இதயம்;* ***பாழ்பட்டானை-*** *சூனியம்பட்டவனை (இராவணனை).*
*தென்றலுடன்தமிழ் பிறந்தது என்பது இலக்கிய வழக்கு. 'மறம் பயின்றது எங்கோ தமிழ் மாருதம்' என்பர் தொண்டர் சீர் பரவுவார்(பெரிய தடுத்தாட் -167). குமரகுருபரர், 'தென்னந்தமிழினுடன் பிறந்த சிறுகால்' என்பர் (மீனாட்சி - தால் - 1)*

*இராவணனின்அந்தக் கரணங்கள் பாம்பு போன்றவை. அவன் இதயம் புற்றையொப்பது. ஏந்துகாமவெங்கனலினுக்கு உமிழ் அதள் துருத்தியின் உயிர்ப்பேற - எனப்பாடங்கொண்டு, இராவணன் கொண்டுள்ள காமமாகிய கொடியநெருப்புக்கு புகுத்துகிற தோல்துருத்தியின் காற்றாக ஏற எனப்பொருள் உரைப்பர். அவர் துருத்தியின் காற்றாக ஏறுவது தென்றல் என்பர். தென்றல், துருத்தியின் உயிர்ப்பு ஏற, என முடிப்பர்.*

*அதள்துருத்தி -தோல்துருத்தி.* ***(210)***

**அறுசீர் விருத்தம்**

***5045. கொண்டபேர் ஊக்கம் மூள***
**திசைதொறும் குறித்து மேல்நாள்**
**மண்டிய செருவில்,மானத்**
**தோள்களால் வாரி வாரி**
**உண்டதுதெவிட்டிப் பேழ்வாய்க்**
**கடைகள்தோறு ஒழுகிப் பாயும்**
**அண்டர்தம்புகழின் தோன்றும்**
**வெள்எயிற்று அமைதி யானை-***

***மேல்நாள் -*** *முற்காலத்தில்;* ***கொண்ட பேர் ஊக்கம் மூள -*** *மேற்கொண்ட பெரிய கிளர்ச்சி பெருக;* ***திசைதொறும் -*** *திக்குகள் தோறும்;* ***குறித்து -*** *பகைவர்களை வெல்ல எண்ணி;* ***மண்டிய செருவில் -*** *நெருங்கிய போரில்;* ***மானத்தோள்களால் -*** *மானமுடைய கைகளால்;* ***வாரி வாரி -*** *எடுத்தெடுத்து;* ***உண்டது -*** *உட்கொண்டது;* ***தெவிட்டி -*** *தேக்கிட்டு;* ***பேழ் -*** *பெரிய;* ***கடைவாய்கள் தோறும் -*** *கடைவாய்கள் தோறும்;* ***ஒழுகிப்பாயும் -*** *ஒழுகி வழிகின்ற;* ***அண்டர்தம் புகழின் -*** *தேவர்களின் புகழைப்போல;* ***தோன்றும் -*** *காணப்படும்;* ***வெள்எயிறு -*** *வெண்மையான (கோரை) பற் களின்;* ***அமைதியானை -*** *தோற்றத்தை உடையவனை (இராவணனை).* *தோள் - கை.தோள் உற்று ஓர் தெய்வம் (சிந்தாமணி 10 நச்) தெவிட்டுதல் - உண்டது வெளிப்படல். எனக்குத் தெவிட்டி விடுகின்றேனோ என்றபடி (திருவாய் 6-5-5 நம்பிள்ளை) புகழ்வெண்ணிறமாய்ப் பேசப்படும்.* *இவ்விருத்தம்மூன்றும் ஆறும் காய்ச்சீர்கள்;*

*மற்றைய நான்கும் மாச்சீர்கள். இந்நூலில் இத்தகைய பாடல்கள் 110. (மணிமலர் 76)*
***(211)***

***5046. வெள்ளிவெண் சேக்கை வெந்து,***
***பொறிஎழவெதும்பும் மேனி,***
***புள்ளிவெண்மொக்குள் என்னப்,***
***பொடித்துவேர் கொதித்துப் பொங்க,***
***கள்அவிழ்மாலைத் தும்பி***
***வண்டொடும்கரிந்து சாம்ப,***
***ஒள்ளிய மாலைதீய,***
***உயிர்க்கின்ற உயிர்ப்பினானை-****

***வெள்ளி வெண்சேக்கை -*** *மிக வெண்மையானபடுக்கை;* ***வெந்து பொறி எழ -*** *(உடல் வெப்பத்தால்) வெந்து தீப்பொறி பறக்கவும்;* ***வெதும்பும் மேனி -*** *வெப்பம் உற்ற மேனியில்;* ***வேர் -*** *வியர்வை;* ***புள்ளி -*** *புள்ளியாய் எழுகின்ற;* ***வெண் மொக்குள் என்ன -*** *வெண்மையான கொப்புளம் போல;* ***பொடித்து -*** *தோன்றி;* ***கொதித்து -*** *வெப்பம் அடைந்து;* ***பொங்க -*** *அதிகரிக்கவும்;* ***அவிழ் -*** *(மாலையிலிருந்து) வெளிப்பட்ட;* ***கள் -*** *கள்ளையுண்டு;* ***மாலை -*** *மயக்கமடைந்து;* ***தும்பி -*** *ஆண்வண்டுகளும்;* ***வண்டொடும் -*** *பெண் வண்டுகளும்;* ***கரிந்து -*** *கருகி;* ***சாம்ப -*** *அழியவும்;* ***ஒள்ளிய -*** *அழகிய;* ***மாலை -*** *மாலையானது;* ***தீய -*** *தீய்ந்து போகவும்;* ***உயிர்க்கின்ற -*** *வெளிப்படுகின்ற;* ***உயிர்ப்பினானை -*** *பெருமூச்சுடையவனை.*

*மிக்க வெண்மையைஉணர்த்த 'வெள்ளிவெண்' என்று கூறப்பெற்றது. 'வெள்ளி வெண்கடல்' (கம்ப. 6494) வெள்ளி வெண் கோல் (சிந்தாமணி 33)*
***(212)***

***5047. தே இயல்நேமி யானின்,***
***சிந்தைமெய்த் திருவின் ஏக***
***பூ இயல் அமளிமேலாப்***
***பொய் உறக்கு உறங்கு வானை,***
***காவியம் கண்ணிதன்பால்***
***கண்ணியகாதல் நீரின்***
***ஆவியைஉயிர்ப்பு என்று ஓதும்***
***அம்மிஇட்டு அரைக்கின்றானை-****

***சிந்தை -*** *(தன்) மனமானது;* ***தே இயல் -*** *தெய்வத்தன்மை பெற்ற;* ***நேமியானின் -*** *சக்கரப்படை ஏந்திய திருமாலைப்போல்;* ***மெய்த்திருவின் -*** *உண்மையான திருமகள்பால்;* ***ஏக -*** *சென்றுவிட (அதனால்);* ***பூ இயல் -*** *பூக்களால் அமைந்த;* ***அமளி மேலா -*** *படுக்கையின் மேல்;* ***பொய் உறக்கு -*** *பொய்யான உறக்கத்தை;* ***உறங்குவானை -*** *மேற்கொண்டிருப்பவனை (இராவணனை);* ***காவி அம் கண்ணி தன்பால் -*** *நீலமலர் போன்ற கண்களை உடைய பிராட்டியின் பக்கம்;* ***கண்ணிய -*** *பொருந்திய;* ***காதல் நீரின் -*** *காதல்என்னும் நீரால்;* ***ஆவியை -*** *தன்னுடைய உயிரை;* ***உயிர்ப்பு என்று ஓதும் -***

*பெருமூச்சு என்று கூறப்படும்;* ***அம்மியிட்டு -*** *அம்மியிலே வைத்து;* ***அரைக்கின்றானை -*** *அரைக்கின்றவனை (இராவணனை).*

*பிராட்டிபிரிந்தமையால் நேமியான் (இராமன்) உறங்கிலன். பிராட்டின் காதல் பெறாமையால் இராவணன் உறங்கிலன். நேமியான் என்பது திருமாலையும் குறிக்கும் என்பர் (சிலர்) இறைவன் பிராட்டியைப் பிரியான் ஆகையால் அவ்வுரை பொய்யுரை என்க. இராமபிரான் உறக்கத்தைக் கவிச்சக்கரவர்த்தி பலபடியாகப் பேசுவான். கங்குல்பொழுதும் துயிலாத கண்ணன் என்று கடல்காண் படலம் பேசும். பூவியல் அமளி, சிலேடை - இராமனுக்குக் கொள்ளுங்கால் பூமியாகிய அமளி. இராவணனுக்குக் கொள்ளுங்கால் பூக்களால் அமைந்த படுக்கை. உறக்கு உறங்குதல் என்பது அரிய பிரயோகம். உறங்குதல் என்னும் வினை செய்தல் என்னும் பொருளைத் தந்தது. இயங்கலும் இயங்கும், மயங்கலும் மயங்கும் என்னும் சிலம்புப் பகுதியை (22-154) நோக்குக. இங்கு அரும்பதவுரை இயங்குதலைச் செய்யும், மயங்குதலைச் செய்யும் என்று விளக்கம் தந்தது. சில இடங்களில் 'நச்சர், அழகர்' பெயராய் நின்றது என்பர். அதுபோல் இங்கு (பொது) வினையாய் என்று கூறலாம் போலும். 'வெருவந்த' என்னும் குறளுக்கு காரி ரத்தினம் வரைந்த நுண்பொருள் காண்க.*

*கண்ணிய -பொருந்திய. புடை கண்ணிய ஒளிராழியின் வெளிபோதரு புயலின் (ரகு வம்சம் - ரகு - யாக 17)* ***(213)***

***5048. மிகும்தகைநினைப்பு முற்ற***
***உருவெளிப் பட்ட வேலை,***
***நகுந்தகைமுகத்தன், காதல்***
***நடுக்குறுமனத்தன், 'வார்தேன்***
***உகும்தகைமொழியாள் முன்னம்***
***ஒருவகை உறையுள் உள்ளே***
***புகுந்தனள்அன்றோ ?' என்று***
***மயிர்புறம்பொடிக்கின்றானை-****

***மிகும் -*** *பெருகுகின்ற;* ***தகை -*** *தன்மையுடைய;* ***நினைப்பு -*** *எண்ணம்;* ***முற்ற -*** *அதிகரிக்க (அதனால்);* ***உரு -*** *பிராட்டியின் வடிவம்;* ***வெளிப்பட்ட வேலை -*** *வெட்ட வெளியில் தோன்றியபோது;* ***நகும்தகை முகத்தன் -*** *சிரிக்கும் தன்மை கொண்ட முகத்தை உடையவனாய்;* ***காதல் -*** *காதலாலே;* ***நடுக்குறு மனத்தன் -*** *கலங்கிய உள்ளத்தை உடையவனாய்;* ***வார்தேன் -*** *(தேனடையிலிருந்து) ஒழுகும் தேன்;* ***உகும் தகை -*** *சிந்தும் தன்மைபெற்ற;* ***மொழியாள் -*** *மொழியை உடைய சீதை;* ***முன்னம் -*** *(சூர்ப்பனகை) அறிமுகப்படுத்திய போது;* ***ஒருவகை -*** *ஒருவாறு;* ***உறையுள் உள்ளே -*** *என் தங்குமிடத்துக்குள்ளே;* ***புகுந்தனள் அன்றோ -*** *புகுந்தாள் அல்லவா!;* ***என்று -*** *என்று கருதி;* ***புறம் -*** *உடம்பில்;* ***மயிர் பொடிக்கின்றானை -*** *மயிர்க் கூச்சடைபவனை (இராவணனை).*

*முன்பு உள்ளத்தேபுகுந்தவள் வெளிப்பட்டாள் என்று கருதிப் புளகம் உற்றான்.* ***(214)***

***5049. மென்தொழில் கலாப மஞ்ஞை***
***வேட்கைமீக்கூரு மேனும்***
***குன்று ஒழித்துஒருமாக் குன்றின்***
***அரிதின்சேர் கொள்கை போல***
***வன்தொழில்கொற்றப் பொன்தோள்***
***மணந்துஅருமயிலே அன்னார்***
***ஒன்றுஒழித்துஒன்றின் ஏக***
***அரியதோள் ஒழுக்கி னானை-****

***மென்தொழில் -*** *நுட்பமானவேலைப்பாடமைந்த;* ***கலாபம் -*** *தோகைகளையுடைய;* ***மஞ்ஞை -*** *மயில்;* ***வேட்கை மீக்கூருமேனும் -*** *ஆசை அதிகரித்தாலும்;* ***குன்று ஒழித்து -*** *ஒருமலையை விட்டு விட்டு;* ***ஒரு மாக்குன்றின் -*** *ஒரு பெரிய மலையினை;* ***அரிதின் சேர் -*** *வருத்தப்பட்டுச் சேர்கின்ற;* ***கொள்கை போல் -*** *தன்மை ஒப்ப;* ***அருமயிலே அன்னார் -*** *சிறந்த மயில் போன்ற மகளிர்;* ***வன்தொழில் -*** *போர்த்தொழிலும் (அதனால் பெற்ற);* ***கொற்றம் -*** *வெற்றியும் உடைய;* ***பொன்தோள் -*** *அழகிய தோள்களை;* ***மணந்து -*** *தழுவி;* ***ஒன்று ஒழித்து -*** *ஒரு தோளை விட்டுவிட்டு;* ***ஒன்றின் ஏக -*** *மற்றொரு தோளின்பக்கம் செல்ல;* ***அரிய -*** *அருமையாயிருக்கின்ற;* ***தோள் ஒழுக்கினானை -*** *தோள் வரிசையுடையவனை (இராவணனை).*

*மென்மை -நுட்பம். தோகையில் அமைந்த வண்ண நுட்பம், வடிவ நுட்பம். வன்தொழில் - போர். வீரர்களின் தோள்களின் தொழில் 'போர்' என்க.*

*இராவணனின்ஒருதோள் புணர்ந்த மாதர் பின்னும் ஒரு தோளை இச்சித்துச் சென்று கூடுகிறது. ஒரு மலையில் உள்ள மயில் வேறு ஒரு மலைக்குப் பெயர்த்து செல்வது போன்றது (பழையவுரை).* ***(215)***

***5050. தழுவாநின்ற கருங்கடல் மீது***
***உதயகிரியில் சுடர்தயங்க***
***எழுவான் என்ன,மின் இமைக்கும்***
***ஆரம்புரளும் இயல்பிற்றாய்,***
***முழு வானவர்ஆய்உலகம் ஒரு***
***மூன்றும்காக்கும் முதல் தேவர்,***
***மழு, வாள்,நேமி, குலிசத்தின்***
***வாய்மைதுடைத்த மார்பானை-***

***தழுவாநின்ற -*** *(தன்னைச்) சார்ந்துள்ள;* ***கருங்கடல்மீது -*** *கருமையான கடலின் மேலே (உள்ள);* ***உதயகிரியில் -*** *உதயமலையின் கண்ணே;* ***சுடர்தயங்க -*** *ஒளி விளங்க;* ***எழுவான் என்ன -*** *தோன்றும் சூரியனைப்போல;* ***மின் இமைக்கும் -*** *ஒளியைப் பரப்பும்;* ***ஆரம் புரளும் -*** *மணிமாலைகள் புரள்கின்ற;* ***இயல்பிற்றாய் -*** *தன்மை உடையதாய்;* ***முழு வானவராய் -*** *பூரணத்துவம் பெற்ற விண்ணவராய்;* ***உலகம் ஒரு மூன்றும் -*** *ஒப்பற்ற மூன்று உலகத்தையும்;* ***காக்கும் -*** *பாதுகாக்கும்;* ***முதல் தேவர் -*** *தலைமைத் தேவர்களின் (ஏவிய);* ***மழுவாள் நேமிகுலிசத்தின் -*** *மழுப்படை, சக்கரம், வச்சிராயுதம் என்னும்*

*ஆயுதங்களின்;* ***வாய்மை -*** *தப்பாத ஆற்றலை;* ***துடைத்த -*** *இல்லையாக்கின;* ***மார்பானை - ****மார்பையுடையவனை (இராவணனை).*

*சூரியனைப்போன்ற ஆரங்கள். மழுவாள் - மழுப்படை. 'மழுவாள் நெடியோன்' (மதுரைக் - 455) வாய்மை - தப்பாமை - வலம்படு வாய்வாள் ஏந்தி (புறம் 91 -உரை). வாய்மை என்பதற்கு வலிமை என்றும் பொருள் கூறலாம். முடலைகொள் வாய்மை ... துப்பு. (சூடா - நிக - பண்பு 28)* ***(216)***

**அறுசீர் விருத்தம்**

***5051. தோடு உழுததார்வண்டும், திசையானை***
***மதம்துதைந்த வண்டும் சுற்றி***
***மாடு உழுதநறுங்கலவை வயக்களிற்றின்***
***சிந்துரத்தை மாறுகொள்ள***
***கோடு உழுதமார்பானை, கொலை உழுத***
***வடிவேலின்கொற்றம் அஞ்சி***
***தாள் தொழுதபகைவேந்தர் முடி உழுத***
***தழும்புஇருந்த சரணத்தானை--***

***தார் -*** *(இராவணன்அணிந்த) மாலையில் உள்ள;* ***தோடு உழுத -*** *இதழ்களைக் கிண்டுகின்ற;* ***வண்டும் -*** *வண்டுகளும்;* ***திசையானை -*** *திக்குகளில் இருக்கும் யானையின்;* ***மதம் துதைந்த -*** *மதத்தில் மொய்த்த;* ***வண்டும் -*** *வண்டுகளும்;* ***சுற்றி -*** *இங்கும் அங்குமாகச் சுழன்று;* ***மாடு -*** *(இராவணனின்) மார்பில்;* ***உழுத -*** *பூசப்பெற்ற;* ***நறுங்கலவை -*** *நறுமணமிக்க கலவைச் சந்தனம்;* ***வயக்களிற்றின் -*** *வெற்றிமிக்க திக்குயானைகளின்;* ***சிந்துரத்தை -*** *(நெற்றியிலணிந்த) சிந்தூர திலகத்தோடு;* ***மாறுகொள்ள -*** *மாறுபாட்டைப் பெறவும் (நிகழ்ந்த போரில்);* ***கோடு -*** *திக்கு யானைகளின் கொம்புகளால்;* ***உழுத -*** *உழப்பெற்ற;* ***மார்பானை -*** *மார்பை உடையவனை;* ***கொலை உழுத -*** *கொல்லுதலாகிய உழவுத்தொழில் செய்த;* ***வடி -*** *கூர்மையான;* ***வேலின் கொற்றம் அஞ்சி -*** *வேலின் வலிமைக்குப் பயந்து;* ***தாள் தொழுத -*** *பாதத்தைக் கும்பிட்ட;* ***பகை வேந்தர் -*** *பகை அரசர்களின்;* ***முடி உழுத -*** *கிரீடத்தால் உழப்பெற்ற;* ***தழும்பு இருந்த -*** *தழும்புகள் தங்கியுள்ள;* ***சரணத்தானை -*** *பாதங்களையுடையவனை.*

*இராவணனுக்கும்யானைகட்கும் நிகழ்ந்த போர் இரண்டு அடிகளால் பேசப்பெற்றன. சிந்துரம் யானைத்திலகத்திற்கு உபயோகப்படும் சுண்ணம். 'சிந்தூரத்திலக நுதல் சிந்துரத்தின் மருப் பொசித்த செங்கண் மாலே' (வில்லிபாரதம் கிருட்டினன் தூது). சிந்துரம் என்பது யானையின் புகர் முகம் என்ற பிங்கலம் பேசும். புகர்முகம் சிந்துரம் (பிங்கலம் 2440). வண்டு உழுத தோடு- வண்டுகள் கிளரும் மலர் இதழ். 'அறுகால் உழுமலர்சேர் நீர்வஞ்சி' (இரகுவம்சம் தசரதன் சாபம் 95).*

*இவ்விருத்தம் 4காய்ச்சீரும் 2 மாச்சீரும் முறையே பெற்று வரும். இத்தகைய பாடல்கள் இந்நூலில் 132 காணப்படுகின்றன (மணிமலர் 76).* ***(217)***

***5052. கண்டனன்;காண்ட லோடும்***
***கருத்தின்முன் காலச் செந்தீ***
***விண்டன கண்கள்;கீண்டு***
***வெடித்தன;கீழும் மேலும்;-***
***கொண்டது ஓர்உருவம் மாயோன்***
***குறளினும்குறுக நின்றான்-***
***திண்தலைபத்தும், தோள்கள்***
***இருபதும்தெரிய நோக்கி,***

***மாயோன் -*** *திருமால்;* ***கொண்டது -*** *(விரும்பி) ஏற்றுக் கொண்ட;* ***உருவம் குறளினும் -*** *அழகிய வாமன வடிவத்தைவிட;* ***குறுகி நின்றான் -*** *சுருங்கி இருந்த அனுமன்;* ***திண் -*** *வன்மைமிக்க;* ***பத்துத் தலையும் -*** *பத்து தலைகளும்;* ***இருபது தோள்களும் -*** *இருபது கைகளும்;* ***தெரிய -*** *தெரியும்படியாக;* ***நோக்கிக் கண்டனன் -*** *உற்றுப் பார்த்தான் (அப்போது);* ***காண்டலும் கருத்தின் முன் -*** *கண்ட அளவிலே (இவன் இராவணன்) என்றுநினைவதன்முன்;* ***கண்கள் -*** *(அனுமனின்) கண்களிலிருந்து;* ***காலச்செந்தீ -*** *காலாக்கினிகள்;* ***விண்டன -*** *வெளிப்பட்டன;* ***கீழும் -*** *மண்ணுலகமும்;* ***மேலும் -*** *விண்ணுலகமும்;* ***கீண்டு வெடித்தன -*** *வெடித்துச் சிதறின. ஊழிக்காலத்தில்,ஆதிசேடனின் விடக் கனலும் சிவபிரானின் நெற்றித் தழலும் வடவாமுகாக்கினியும் உலகை அழிக்கும். ஆதலின் செந்தீ விண்டன என்று கூறப்பெற்றது. தீ - பால்பகா அஃறிணைப் பெயர். நோக்கிக் கண்டனன் - உற்றுப் பார்த்தான். ஆழ்வார், என் நெஞ்சினால் நோக்கிக் காணீர் என்பர். (திவ்ய திருவாய் 5.5-2). சில பிரதிகளில் பின் இரண்டடி முன்னே இருப்பதாகக் கூறப்பெறுகிறது. அதுவே சரி என்று தெரிகிறது. தோள் - கை. ‘எண்டோள் வீசி நின்று ஆடும்பிரான்’ என்று சான்றோர் பிரயோகம் காண்க (அப்பர் தேவாரம்) மேலே பதினொரு பாடலால் பேசப்பட்ட இராவணனைக் கண்டனன் என்க.*

***(218)கொச்சகக் கலி***

***5053. தோள்ஆற்றல் என்னாகும் ?***
***மேல்நிற்கும் சொல் என்னாம் ?***
***வாள் ஆற்றுகண்ணாளை***
***வஞ்சித்தான் மணிமுடிஎன்***
***தாள் ஆற்றலால்இடித்துத்***
***தலைபத்தும்தகர்த்து இன்றென்***
***ஆள் ஆற்றல்காட்டேனேல்***
***அடியேனாய்முடியேனே !***

*( சீற்றங்கொண்டஅனுமன்)*

***வாள் ஆற்று -*** *வாளை ஒத்த;* ***கண்ணாளை -*** *கண்களை உடைய சீதாபிராட்டியை;* ***வஞ்சித்தான் -*** *வஞ்சித்துச் சிறை வைத்த இராவணனின்;* ***மணிமுடி -*** *மணிகள் பதித்த கீரிடத்தை;* ***என் தாள் ஆற்றலால் -*** *என்னுடைய கால் வலிமையால்;* ***இடித்து -*** *தாக்கி;* ***பத்துத் தலையும் -*** *பத்து தலைகளையும்;* ***தகர்த்து -*** *பொடிப் பொடியாக்கி;* ***இன்று -*** *இன்றைய தினத்தில்;* ***என் -*** *என்னுடைய;* ***ஆள் ஆற்றல் -*** *அடிமையின் வலிமையை;*

***காட்டேனேல் -*** *காட்டாமற் போனால்;* ***தோள் ஆற்றல் -*** *(என்னுடைய) தோளின் வலிமை;* ***என்னாகும் -*** *என்ன பயனுடையதாகும்;* ***மேல் -*** *இனிமேல்;* ***நிற்கும் -*** *நிலை பெற்றிருக்கும்;* ***சொல் -*** *புகழானது;* ***என்னாம் -*** *என்ன சிறப்பை அடையும் (அன்றி);* ***அடியேனாய் -*** *(யான்) தொண்டு புரிபவனாக;* ***முடியேன் -*** *கருதப்படமாட்டேன்.*

*ஆற்றுதல் -ஒத்தல் 'வையகமும் வானகமும் ஆற்றல் அரிது' என்னும் தமிழ் மறைக்கு (குறள் - 101) வரைந்த அழகரின் உரையைக் காண்க.*

*தோள் ஆற்றல்,மேல் நிற்கும் சொல் என்பனவற்றை இராவணனுக்கு ஆக்கி, அவை என்முன் என்னாகும்என்று அனுமன் தன்வீரத்தை நினைத்துக் கூறியதாகவும் கொள்ளலாம். முடியேன் -கருதப்படமாட்டேன். முடிதல் - கருதுதல். அவன் முடிவு யாதோ என்னும் உலக வழக்கு இப்பொருளைக் காட்டும். நான்கு சீர்களும்காய்ச்சீர் பெற்றும், இத்தகு பாடல்கள் இந்நூலில் 120 காணப்படுகின்றன (மணிமலர் 76)*
***(219)***

***5054. நடித்துவாழ் தகைமையதோ***
***அடிமைதான்? நன்னுதலைப்***
***பிடித்து, வாழ்அரக்கனார்***
***யான்கண்டும் பிழைப்பாரோ ?***
***ஒடித்துவான்தோள்அனைத்தும்***
***தலைபத்தும்உதைத்துருட்டி***
***முடித்து, இவ்வூர்முடித்தால், மேல்***
***முடிவதெலாம்முடிந்தொழிக.***

***அடிமை -*** *தொண்டின் இயல்;* ***நடித்து -*** *பாவனை செய்து (அதனால்);* ***வாழ் -*** *உயிர் வாழ்கின்ற;* ***தகைமையதோ -*** *தன்மையுடையதா ?;* ***நன்னுதலை -*** *அழகிய நெற்றியுடைய பிராட்டியை;* ***பிடித்து -*** *சிறையிலடைத்துவிட்டு;* ***வாழ் அரக்கனார் -*** *வாழ்கின்ற இராவணனை;* ***யான் கண்டும் -*** *யான் பார்த்த பிறகும்;* ***பிழைப்பாரோ -*** *(அழியாமல்) தப்புவரோ ?;* ***வான்தோள் அனைத்தும் -*** *(இராவணனின்) பெரிய தோள்கள் யாவற்றையும்;* ***ஒடித்து -*** *முறித்து;* ***தலை பத்தும் -*** *பத்துத் தலைகளையும்;* ***உதைத்து -*** *காலாலே தாக்கி;* ***உருட்டி -*** *(பூமியிலே) உருளச் செய்து;* ***முடித்து -*** *(இராவணனைக்) கொன்று;* ***இவ் ஊர் -*** *இந்த இலங்கையை;* ***முடித்தால் -*** *அழித்தால்;* ***மேல் -*** *பிறகு;* ***முடிவது எல்லாம் -*** *நடக்க வேண்டியவை யாவும்;* ***முடிந்தொழிக -*** *நடக்கட்டும்.*

*நடித்தல் -பாவனை செய்தல். பாசாங்கு செய்தல். நாடகத்தால் உன் அடியார்போல் நடித்து (திருவாசகம்).*

*முடிவது - நடப்பது.ஒழிக - வெறுப்பைக் காட்டும் சொல். 'கெடுத்து ஒழிந்தனை உன்னையும் என்னையும்' (கம்ப. 6212)* ***(220)***

*அனுமன் அந்நினைவுஒழிதல்*

***5055. என்றுஊக்கி, எயிறு கடித்து,***
***இரு கரமும்பிசைந்து, எழுந்து***
***நின்று, ஊக்கி,உணர்ந்து உரைப்பான்***
***நேமியோன்பணி அன்றால்***
***ஒன்று ஊக்கிஒன்று இழைத்தல்***
***உணர்வுஉடைமைக்கு உரித்து அன்றால்***
***பின்தூக்கின்இதுசாலப்***
***பிழை பயக்கும் எனப் பெயர்ந்தான்.***

*__என்று -__ என்று கருதி; __ஊக்கி -__ ஊக்கம் பெற்று; __எயிறு கடித்து -__ தன்னுடைய பற்களைக் கடித்து; __இருகரமும் பிசைந்து -__ இரண்டு கைகளையும் பிசைந்து; __எழுந்து நின்று -__ எழுந்து சென்று நின்று; __ஊக்கி -__ (பிறகு) சினம் நெகிழ்ந்து; __உணர்ந்து -__ ஆராய்ந்து; __உரைப்பான் -__ (தனக்குள்) (பின்வருமாறு) கூறுபவனானான். (இராவணனையும் இலங்கையையும் அழித்தல்) __நேமியோன் -__ இராமபிரானின்; __பணி அன்று -__ கட்டளை அன்று (அன் றியும்); __ஒன்று ஊக்கி -__ ஒரு செயலைச் செய்யத் தொடங்கி; __ஒன்று இழைத்தல் -__ வேறு செயலைச் செய்தல்; __உணர்வு உடைமைக்கு -__ அறிவாகியசெல்வத்துக்கு; __உரித்து அன்று -__ உரிமையான செயலன்று; __பின் -__ பிறகு; __தூக்கின் -__ ஆராய்ந்தால்; __இது -__ யான் எண்ணிய இச்செயல்; __சால -__ மிகுதியாக; __பிழை பயக்கும் -__ துன்பத்தை உண்டுபண்ணும்; __என -__ என்று நினைத்து; __பெயர்ந்தான் -__ பின் வாங்கினான்.*

*பின்வாங்குதல்,செயல் செய்யாமல் ஒதுங்குதல். ஊக்கி உணர்ந்து, என்பதில் உள்ள ஊக்கி என்பது நெகிழ்ந்து என்னும் பொருள் தந்தது. முயங்கிய கைகளை ஊக்க என்னும் பகுதிக்கு (குறள் 1238) அழகர் தழுவிய கைகளைத் தளர்த்தினேன் ஆக என்று உரை வரைந்தார் ஒன்று ஊக்கி, ஒன்று இழைத்து என்பதில் உள்ள ஊக்கி என்பது செய்யத் தொடங்கி என்னும் பொருள் தந்தது.* ***(221)***

***5056. ஆலம்பார்த்து உண்டவன்போல்***
***ஆற்றல்அமைந்துளர் எனினும்***
***சீலம் பார்க்கஉரியோர்கள்***
***எண்ணாதுசெய்பவோ ?-***
***மூலம்பார்க்குறின் உலகை***
***முற்றுவிக்கும் முறைதெரினும்***
***காலம் பார்த்து,இறைவேலை***
***கடவாதகடல் ஒத்தான்.***

***(அனுமன்)***

*__உலகை -__ உலகங்களை; __முற்றுவிக்கும் -__ அழிக்கின்ற; __முறைதெரினும் -__ இயல்பை உடையது என்றாலும்; __காலம் பார்த்து -__ காலத்தின் (ஆணையை) எதிர்பார்த்து; __இறை -__ சிறிதுகூட; __வேலை கடவாத -__ கரையை மீறிப்போகாத; __கடல் ஒத்தான் -__ கடலைப்போல இருந்தான்; __மூலம் -__ (அவ்வாறு அடங்கியதற்கு) காரணத்தை; __பார்க்குறின் -__*

*ஆராய்ந்தால்;* ***பார்த்து*** *- தேவர்களின்துன்பத்தை நோக்கி;* ***ஆலம்*** *- விடத்தை;* ***உண்டவன்போல்*** *- உட்கொண்ட சிவபிரானைப்போல;* ***ஆற்றல்*** *- வலிமை;* ***அமைந்துளர் எனினும்*** *- அமையப் பெற்றவர் என்றாலும்;* ***சீலம்*** *- (தமக்குரிய) ஒழுக்கத்தை;* ***பார்க்க உரியோர்கள்*** *- பாதுகாக்கும் இயல்புடையவர்கள்;* ***எண்ணாது*** *- ஆராயாமல்;* ***செய்பவோ*** *- ஒரு செயலைச் செய்வார்களோ ?.*

*வேலை - கரை. 'வேலை கடவாத பள்ளக்கடல்' (கம்ப - 1925) சீலம் பார்த்தல். ஒழுக்கத்தைப் பாதுகாத்தல். காலம் கருதியிருப்பர்... ஞாலம் கருதுபவர் என்று குறள் பேசும் (குறள் - 485).* ***(222)***

***5057. இற்றைப்போர்ப் பெருஞ்சீற்றம்***
***என்னோடும்முடிந்திடுக;***
***கற்றைப் பூங்குழலாளைச்***
***சிறைவைத்தகண்டகனை***
***முற்றப் போர்முடித்தது ஒரு***
***குரங்குஎன்றால், முனைவீரன்***
***கொற்றப்போர்ச் சிலைத்தொழிற்குக்***
***குறைவு உண்டாம் ! எனக் குறைந்தான்.***

*(அனுமன்)*

***இற்றை*** *- இன்றைய தினத்தில்;* ***போர்*** *- (இராவணனுடன்) போர் செய்ய வேண்டும் என்னும்;* ***பெருஞ்சீற்றம்*** *- பெரியகோபம்;* ***என்னோடு*** *- எனக்குள்ளேயே;* ***முடிந்திடுக*** *- அடங்கிக் கிடக்கட்டும்;* ***பூ*** *- மலரணிந்த;* ***கற்றைக்குழலாளை*** *- அடர்ந்த கூந்தலையுடைய பிராட்டியை;* ***சிறை வைத்த*** *- சிறையிலே வைத்த;* ***கண்டகனை*** *- முள்போலும் இராவணனை;* ***ஒரு குரங்கு*** *- ஒரு குரங்கு;* ***முற்ற*** *- அழிய;* ***போர்*** *- போரிலே;* ***முடித்தது*** *- அழித்தது;* ***என்றால்*** *- என்று பேசப்பட்டால் (அது);* ***முனைவீரன்*** *- போரில் வல்ல இராமபிரானின்;* ***கொற்றம்*** *- வெற்றியைத் தருகின்ற;* ***சிலை போர்த்தொழிற்கு*** *- வில்லாற் செய்யப்படும் போர்ச் செயலுக்கு;* ***குறை உண்டாம்*** *- தாழ்ச்சி உண்டாகும்;* ***என*** *- என்று நினைந்து;* ***குறைந்தான்*** *- சீற்றம் தணிந்தான்.*

*பிராட்டி, ஐயன்வில்லின் ஆற்றலுக்கு மாசு உண்டாம் என்று கருதி, சொல்லினால் சுடாமல் அடங்கியிருந்தாள். அனுமனும் வீரன் சிலைக்குக் குறைவு உண்டாம் என்று கருதி இராவணனோடு போர் செய்தலைத் தவிர்த்தான். கண்டகன் - முள்போன்றவன். கண்டகம் - முள் இளம் கண்டகம் விட நாகத்தின் நாவொக்கும் ஈர்ம்புரவே (பாண்டிக்கோவை 283) முனை - போர். வேந்துடைத்தானை முனைகெட (புறம் 330).* ***(223)***

***5058. அந்நிலையான் பெயர்த்துரைப்பான்;***
***ஆய்வளைக்கை அணி இழையார்***
***இந் நிலையானுடன்துயில்வார்***
***உளரல்லர்;இவன் நிலையும்***
***புல்நிலையகாமத்தால்***
***புலர்கின்ற நிலை; பூவை***

***நல் நிலையின்உளள் என்னும்***
***நலன்எனக்கு நல்குமால் !***

***அந்நிலையான்*** - அவ்வாறுகோபம் அடங்கிய அனுமன்; ***பெயர்த்து*** - மறுபடியும்; ***உரைப்பான்*** - (தனக்குள்) கூறிக் கொண்டான்; ***இந்நிலையானுடன்*** - இந்த நிலையற்றவனுடன்; ***துயில்வார்*** - உறங்குகின்ற; ***ஆய்வளைக்கை*** - சிறந்த வளையலணிந்த கையையுடைய; ***அணியிழையார்*** - மகளிர்; ***உளரல்லர்*** - இல்லை; ***இவன் நிலையும்*** - இவனுடைய தன்மையும்; ***புல் நிலைய*** - புல் போன்ற தன்மையுடைய; ***காமத்தால்*** - காமத்தினாலே; ***புலர்கின்ற நிலை*** - வெப்பம் அடைகின்ற நிலைமையானது; ***எனக்கு*** - எனக்கு; ***பூவை*** - நாகணவாய்ப் பறவை போன்ற பிராட்டி; ***நல்நிலையில்*** - நல்ல கற்புடனே; ***உளன் என்னும்*** - இருக்கின்றாள் என்கின்ற; ***நலன்*** - நல்ல செய்தியை; ***நல்கும்*** - வழங்கும்.

*இராவணனின்விரகதாபம் பிராட்டி கற்பினுடன் இருப்பதைத் தெரிவிக்கும் என்று அனுமன் யூகித்தான். அணியிழையாள் -என்பது மகளிர் என்னும் பொருள் தந்து நின்றது.இனியர் இதனைப் பெயராய் நின்றது என்பர். வளையலணிந்த கையை உடையமகளிர் என்க. நிலையான் -உறுதியற்றவன்.* ***(224)***

*சீதையைக் காணாதஅனுமன் எண்ணம்*

***5059. என்றுஎண்ணி, "ஈண்டு இனியோர்***
***பயன்இல்லை என நினையா***
***குன்றன்னதோளவன்தன்***
***கோமனைபிற்படப் பெயர்ந்தான்;***
***நின்று எண்ணிஉன்னுவான்***
***அந்தோ !இந் நெடு நகரில்***
***பொன் துன்னும்மணிப் பூணாள்***
***இலள்என்ன, பொருமுவான்.***

***என்று எண்ணி*** - என்றுகருதி; ***இனி*** - இனிமேல்; ***ஈண்டு*** - இங்கே (இருப்பதால்); ***ஓர் பயன் இல்லை*** - ஒரு பிரயோசனம் இல்லை; ***என*** - என்று; ***நினையா*** - எண்ணி; ***குன்று அன்ன*** - மலை போன்ற; ***தோளவன்தன்*** - தோளையுடைய இராவணனின்; ***கோமனை*** - அரண்மனை; ***பிற்பட*** - பின்னே நிற்க; ***பெயர்ந்தான்*** - வெளியே சென்ற அனுமன்; ***அந்தோ*** - ஐயோ; ***இ நெடுநகரில்*** - இந்தப் பெரிய நகரத்தில்; ***பொன் துன்றும்*** - பொன்னிலே பதித்த; ***மணிப்பூணாள்*** - மணிகளையுடைய ஆபரணம் அணிந்த பிராட்டி; ***இலள்என்ன*** - இல்லை என்று; ***நின்று*** - திகைத்து; ***எண்ணி*** - ஆலோசித்து; ***உன்னுவான்*** - நினைத்து; ***பொருமுவான்*** - குமுறுபவன் ஆனான்.

*எண்ணுதல்,ஆலோசித்தல், உன்னுதல், நினைத்தல்.* ***(225)***

***5060. கொன்றானோ ? கற்பழியாக்***
***குலமகளை ?கொடுந்தொழிலால்***
***தின்றானோ ?எப்புறத்தே***
***செறித்தானோ சிறை ? சிறியேன்***

***ஒன்றானும்உணரகிலேன்;***
***மீண்டுஇனிப்போய் என்னுரைக்கேன்***
***பொன்றாதபொழுது, எனக்கு இக்***
***கொடுந்துயரம் போகாதால்.***

*(இராவணன்)*

***கற்பு அழியா-*** *கற்பு நிலையிலிருந்து பிறழாத;* **குலமகளை -** *தூய பிராட்டியை;* **கொன்றானோ -** *கொன்றுவிட்டானோ;* **கொடுந்தொழிலால் -** *(புலால் உண்ணும்) கொடிய செயலால்;* **தின்றானோ -** *தின்று விட்டானோ;* **எப்புறத்தே -** *எந்த உலகத்தில்;* **செறித்தானோ -** *சிறையில் அடைத்து வைத்தானோ;* **சிறியேன் -** *அற்ப அறிவுடைய யான்;* **ஒன்றானும் -** *ஒரு சிறிதும்;* **உணரகிலேன் -** *அறியாதவனாய் உள்ளேன்;* **இனி -** *இனிமேல்;* **மீண்டும் போய் -** *திரும்பிச் சென்று (இராமபிரானுக்கு);* **என்உரைக்கேன் -** *யாது கூறுவேன்;* **இக் கொடுந்துயரம் -** *(பிராட்டியைக் காணாத) இப்பெருந்துன்பம்;* **பொன்றாத பொழுது -** *செத்தால் அன்றி;* **எனக்கு -** *(மானமுடைய) எனக்கு;* **போகாது -** *நீங்காது.*

*இறந்தால்துன்பம் நீங்கும் என்பது கருத்து. ஆல் - அசை. ஒன்றானும் - சிறிதும். ஒன்று ஆயினும் என்பது ஒன்றானும் என வந்தது. ஒன்று - சிறிது. ஓம்படை ஒன்றும் சொல்லாள் (சிந்தா - 232) இனியர் பரிகாரம் சிறிதும் கூறாளாய், என எழுதினார். ஆனும் என்பது ஆயினும் என்பதன் திரிபு.* ***(226)***

***5061. 'கண்டுவரும்' என்று இருக்கும்***
***காகுத்தன்கவிக்குலக்கோன்***
***'கொண்டுவரும்'என்றிருக்கும்***
***யான் இழைத்த கோள் 'இதுவால்'***
***புண்டரிகநயனத்தான்***
***பால், இனி, யான் போவேனோ ?***
***விண்டவ ரோடுஉடன்வீயாது***
***யான் வாளாவிளிவேனோ.***

**காகுத்தன் -** *(காகுத்தன் மரபில் தோன்றிய) இராமபிரான்;* **கண்டுவரும் -** *(அனுமன்) சீதையைப் பார்த்து வருவான்;* **என்று இருக்கும் -** *என்று எண்ணியிருப்பான்;* **கவிகுலக்கோன் -** *குரங்குகளின் தலைவன் (சுக்கிரீவன்);* **கொண்டுவரும் -** *(அனுமன்) சீதையைக் கொண்டு வருவான்;* **என்று இருக்கும் -** *என்று எண்ணியிருப்பான்;* **யான் -** *அற்பனாகிய யான்;* **இழைத்த -** *நிறைவேற்றிய;* **கோள் இது -** *இலட்சியமோ இப்படியுள்ளது;* **புண்டரிக நயனத்தான்பால் -** *தாமரைக் கண்ணன் (இராமன்) பால்;* **இனி -** *இனிமேல்;* **யான் போவேனோ -** *யான் செல்வேனோ;* **விண்டவரோடு -** *பகைத்தவர்களுடன்;* **உடன் வீயாது -** *ஒருங்கே சாகாமல்;* **யான் வாளா -** *யான் பயனின்றி;* **விளிவேனோ -** *இறப்பேனோ.*

*விண்டவர்என்பதற்கு, அங்கதன் முதலானவர்கள் என்று பொருள் கூறுவாரும் உளர். அங்கதன் முதலானவர்கள் இறவாமையால் அவ்வுரை வெவ்வுரை. போரில் இறப்பாரை வீரர் விரும்புவர் என்க - மந்திரப்படலம் தசரதன் மொழிகளைப்*

*பார்க்கவும். இந்தச்சத்துருவான அரக்கரைக் கொல்லாமல் வெறுமே சாகேன் என்பது பழையவுரை (அடை -பதி).* ***(227)***

***5062. "கண்ணியநாள் கழிந்துளவால்;***
***கண்டிலமால்கனங்குழையை***
***விண்ணடைதும்"என்றாரை***
***ஆண்டுஇருத்தி விரைந்த யான்,***
***எண்ணியதுமுடிக்ககிலேன்!***
***இனி முடியாதுஇருப்பேனோ ?***
***புண்ணியம் என்றுஒருபொருள்***
***என்னுழைநின்றும் போயதால்.***

***கண்ணியநாள் -*** *(சுக்கிரீவனால்) குறிப்பிட்ட நாள்;* ***கழிந்துள -*** *கடந்தபடியுள்ளன;* ***கனங்குழையை -*** *சீதாபிராட்டியை;* ***கண்டிலம் -*** *கண்டோம் இல்லை (ஆதலால்);* ***விண் அடைதும் -*** *இறந்த விண்ணுலகத்தை அடைவோம்;* ***என்றாரை -*** *என்று கூறிய அங்கதன் முதலானவரை;* ***ஆண்டு -*** *அந்த மகேந்திரமலையில்;* ***இருத்தி -*** *உயிரோடு வாழச்செய்து;* ***விரைந்த யான் -*** *வேகமாக இலங்கையை அடைந்த யான்;* ***எண்ணியது -*** *கருதிய செயலை;* ***முடிக்ககிலேன் -*** *நிறைவேற்றினேன் இல்லை;* ***இனி -*** *இப்போது;* ***முடியாது -*** *இறவாமல்;* ***இருப்பேனோ -*** *உயிருடன் வாழ்வேனோ;* ***புண்ணியம் என்று -*** *அறம் என்று பேசப்படும்;* ***ஒருபொருள் -*** *ஒப்பற்ற பொருள்;* ***என் உழைநின்றும் -*** *என்பக்கத்திலிருந்து;* ***போயது -*** *நீங்கிவிட்டது.*

*தர்மம் என்னும்புனிதப்பொருள் என்னை விட்டு நீங்கி விட்டது. கழிந்துளவால்,போயதால் என்பனவற்றில் உள்ள ஆல் அசை. கனங்குழை - ஆகுபெயர் என்பர் அழகர். அன்மொழித்தொகை என்பர் முனிவர்.* ***(228)***

***5063.. ஏழு நூறுஓசனை சூழ்ந்து***
***எயில்கிடந்தது இவ் இலங்கை***
***வாழும் மா மன்உயிர், யான்***
***காணாதமற்று இல்லை;***
***ஊழியான்பெருந்தேவி***
***ஒருத்தியுமேயான் காணேன்***
***ஆழி தாய், இடர்- ஆழியிடையே***
***வீழ்ந்துஅழிவேனோ ?***

***ஏழுநூறு ஓசனை -*** *எழுநூறு யோசனை அளவுக்கு;* ***எயில் ஆழ்ந்து -*** *மதிலால் சூழப்பெற்று;* ***கிடந்தது -*** *பரவியிருப்பதாகிய;* ***இவ் இலங்கை -*** *இந்த இலங்கை மாநகரில்;* ***வாழும் -*** *வாழ்கின்ற;* ***மா மன்னுயிர் -*** *சிறந்த நிலைபெற்ற பிராணிகளுள்;* ***யான் காணாத -*** *யான் பார்த்திராதவை;* ***இல்லை -*** *கிடையாது;* ***ஊழியான் -*** *ஊழிகளின் தலைவனான இராமபிரானின்;* ***பெருந்தேவி -*** *பெருந்தேவியாகிய;* ***ஒருத்தியுமே -*** *ஒப்பற்றவள் மட்டுமே;* ***யான் காணேன் -*** *நான் பார்க்கவில்லை;* ***ஆழிதாய் -*** *(நீர்) கடலைக் கடந்து;* ***இடர் ஆழியிடையே -*** *துன்பமாகிய கடலில்;* ***வீழ்ந்து -*** *அழுந்தி;* ***அழிவேனோ -*** *இறப்பேனோ.*

*ஓசனை - நான்குகாதம். ‘ஓசனை கமழும்’ என்னும் சிந்தாமணித் தொடர்க்கு ‘நான்கு காதம் எல்லை நாறும்’ என்று இனியர் உரை வகுத்தார். மற்று - அசை.*

*உயிர் என்றதுபிராணிகளை - உயிர் எல்லாம் தன் உயிர் என நல்கும் அந்தணன் (வனம்புகு - 22).*

*பெருந்தேவி -பட்டத்தரசி. உடன் முடிகவித்த இயற்பெருந்தேவி (பெருங்கதை 2.4.24).* ***(229)***

***5064. வல்அரக்கன் தனைப்பற்றி***
***வாயாறுகுருதிஉகக்***
***கல் அரக்கும்கரதலத்தால்***
***காட்டுஎன்று காண்கேனோ ?***
***எல் அரக்கும்அயில் நுதிவேல்***
***இராவணனும்இவ் ஊரும்***
***மெல் அரக்கின்உருகிஉக***
***வெந்தழலால் வேய்கேனோ ?***

***கல் -** மலைகளைக்கூட; **அரக்கும் -** பொடியாக்கும்; **கரதலத்தால் -** (என்னுடைய) கைகளால்; **வல் -** வலிமை உடைய; **அரக்கன்தனை -** இராவணனை; **வாய் -** வாய்வழியாக; **குருதிஆறுஉக -** இரத்த நதி பெருக்கெடுக்க; **பற்றி -** இறுக்கிப் பிடித்து; **காட்டு என்று -** பிராட்டியைக் காட்டுக என்று; **காண்கேனோ -** காண்பேனோ (அல்லது); **எல் -** சூரியனையே; **அரக்கும் -** வருத்துகின்ற; **அயில் -** கூர்மையான; **நுதிவேல் -** நுனியை உடைய வேலேந்திய; **இராவணனும் -** இராவணனும்; **இவ்வூரும் -** இந்த இலங்கையும்; **மெல் அரக்கின் -** மென்மையான அரக்கைப்போல;**உருகிவிழ -** உருகிவிழும்படி; **வெந்தழலால் -** கொடிய நெருப்பினாலே (இந்த ஊரை); **வேய்கேனோ -** மூடுவேனோ (எதைச் செய்வது).* ***(230)***

***5065. வானவரேமுதலோரை***
***வினவுவெனேல், வல் அரக்கன்***
***தான் ஒருவன்உளன் ஆக***
***உரைசெய்யும் தருக்கு இலரால்;***
***ஏனையர்கள்எங்கு உரைப்பார் ?***
***எவ்வண்ணம்தெரிகேனோ ?***
***ஊன் அழியநீங்காத***
***உயிர்சுமந்த உணர்வில்லேன்.***

***ஊன் அழிய -** ஊனால்ஆகிய இவ்வுடம்பு தளர்ச்சியடைய; **நீங்காத -** இவ்வுடலை விட்டு விலகிப் போகாத; **உயிர் சுமந்த -** உயிரைத் தாங்கிக் கொண்டுள்ள; **உணர்வில்லேன் -** அறிவற்ற யான்; **வானவரே முதலோரை -** தேவர் முதலாகியவரை; **வினவுவனேல் -** (பிராட்டியைப் பற்றி) கேட்டால்; **வல் அரக்கன் தான் ஒருவன் உளன் ஆக -** வலிய இராவணனாய ஒருவன் இருக்க; **உரை செய்யும் -** பிராட்டியைப் பற்றி எடுத்துக்கூறும்; **தருக்கு இலர் -** வலிமை அற்றவர்; **ஏனையவர்கள் -** (அத் தேவரினும்*

*தாழ்ந்த) பிற மக்கள்;* ***எங்கு உரைப்பார்*** *- எப்படிக் கூறுவார்கள்;* ***எவ்வண்ணம் தெரிகேன்*** *- எப்படிப் பிராட்டியிருக்குமிடத்தை ஆராய்வேன்.*

*தருக்கு - வலிமை.அரக்கர் - சிதைவு எய்தித் தருக்கு அழிவுற (அகத்தியப் 54) தருக்கிலரால் - ஆல் - அசை தேவர்களின் ஆற்றலின்மையை முனிவர்கள் வாக்கால் உணரலாம் (கம்ப. 2645) பிரம்மதேவனும் ஆற்றல் அற்றவன் என்பதை 'கமலத்தானே முதலினர் தலைபத்து உள்ளாற்கு ஆட் செய்கின்றார்கள்' என்னும் சடாயு மொழிகளால் (கம்ப. 3524) அறிக.* ***(231)***

***5066. எருவைக்கு முதலாய***
***சம்பாதி'இலங்கையில் அத்***
***திருவைக்கண்டனென்' என்றான்***
***அவன்உரையும் சிதைந்த தால்;***
***கருவைக்கும்நெடுநகரைக்***
***கடலிடையேகரையாதே***
***உருவைக் கொண்டு, இன்னமும் நான்***
***உளென் ஆகஉழல்கேனோ ?***

***எருவைக்கு*** *- கழுவின்இனங்களுக்கு* ***; முதலாய*** *- தலைவனான;* ***சம்பாதி*** *- சம்பாதியானவன்;* ***இலங்கையில்*** *- இலங்கை மாநகரில்;* ***அத்திருவை*** *- அந்த பிராட்டியை;* ***கண்டனென்*** *- பார்த்தேன்;* ***என்றான்*** *- என்று கூறினான்;* ***அவன் உரையும்*** *- அவன் கூறிய மொழியும்;* ***சிதைந்தது*** *- பொய்யாகி விட்டது;* ***கருவைக்கும்*** *- (இரத்தினம் முதலானவற்றை) கருப்பமாகவைக்கப் பெற்ற;* ***நெடுநகரை*** *- பெரிய இலங்கையை;* ***கடலிடை*** *- கடலிலே;* ***கரையாதே*** *- கரைக்காமல்;* ***இன்னமும்*** *- இன்னும்;* ***உருவைக் கொண்டு*** *- (பயன்படாத) உடம்பைக் கொண்டு;* ***உளென் ஆகி*** *- உயிருடன் இருப்பவனாய்;* ***உழல்கேனோ*** *- வருந்துவேனோ. எருவை - கழுகு. உரைசிதைதல் ஆவது பொய்யாதல். கரு என்பது ஒரு நகரையோ, கோயிலையோ அமைக்குமுன் பூமியின் அடியில் புதைக்கப்படும் இரத்தினம் பொன் முதலானவை. இவ்வாறு கரு அமைந்ததை சிறுபாணாற்றுப்படை பேசும். கருவொடு பெயரிய நன்மா இலங்கை (சிறுபாண் 119-120) இனியர் 'கருப்பதித்த முகூர்த்தத்தாலே ஒருவராலும் அழித்தற்கரிய மா இலங்கை என்றார். இம்மாவிலங்கை என்பது திண்டிவனம் அருகில் உள்ள சிற்றூர். அவ்வுரையின் அடிப்பகுதியில், தமிழ்த்தெய்வம் (உவே.சா) கருவைக்கும் நெடுநகரம் என்ற பகுதியை மேற்கோள் காட்டியதைப் பார்க்கவும். கர்ப்பநியாசம் என்னும் கோவில் வழக்கை நினைக்கவும்.* ***(232)***

***5067. வடித்துஆய்பூங் குழலாளை***
***வான் அறியமண் அறியப்***
***பிடித்தான் இவ்அடலரக்கன்***
***எனும்மாற்றம் பிழையாதால்;***
***எடுத்து ஆழிஇலங்கையினை***
***இருங்கடல்இட்டு இன்று இவனை***
***முடித்தாலே யான்முடிதல்***
***முறைமன்றஎன்றுணர்வான்.***

*(அனுமன்)*

***வடித்து -*** *சீவப்பெற்று;* ***ஆய் பூ -*** *ஆராய்ந்தெடுக்கப்பெற்ற பூக்கள் அணியப்பெற்ற;* ***குழலாளை -*** *கூந்தலையுடைய பிராட்டியை;* ***இ அடல் அரக்கன் -*** *இந்த வலிமை மிக்க இராவணன்;* ***வான் அறிய -*** *விண்ணுலகம் அறியவும்;* ***மண் அறிய -****மண்ணுலகம் அறியவும்;* ***பிடித்தான் -*** *கவர்ந்தான்;* ***எனும் மாற்றம் -*** *என்று பேசப்படும் மொழி;* ***பிழையாது -*** *தவறாது (நான்);* ***ஆழி இலங்கையினை -*** *கடல் நடுவுள்ள இலங்கை மாநகரை;* ***எடுத்து -*** *பெயர்த்தெடுத்து;* ***இருங்கடல் இட்டு -*** *பெரிய கடலினுள் போகட்டு;* ***இவனை -*** *இந்த இராவணனை;* ***முடித்தால் -*** *அழித்தால் (பிறகு) மன்ற உறுதியாக;* ***யான் -*** *நான்;* ***முடிதல் -*** *அழிதல்;* ***மன்ற முறை -*** *உறுதியாக நியாயம் ஆகும்;* ***என்று உணர்வான் -*** *என்று நினைப்பவன் ஆனான்.*

*வடித்து -சீவப்பெற்று. மஞ்சு ஒக்கும் அளகஓதி மழை ஒக்கும் வடித்த கூந்தல் என்று சூர்ப்பணகை பேசினாள்.*

*பிழையாதால் -ஆல் - அசை. முடித்தாலே - ஏ அசை. ஆழி - வட்டம்.*
***(233)***

***5068. எள்உறையும் ஒழியாமல்***
***யாண்டையுளும் உளனாய்த்தன்***
***உள்உறையும்ஒருவனைப் போல்***
***எம்மருங்கும் உலாவுவான்***
***புள் உறையும்மானத்தை***
***உறநோக்கிஅயல் போவான்***
***கள் உறையும்மலர்ச்சோலை***
***அயல் ஒன்றுகண்ணுற்றான்.***

***தன்உள் உறையும்-*** *தன்னுடைய இதயத்தில் வாழும்;* ***ஒருவனைப் போல் -*** *இராமபிரானைப்போல்;* ***எள் உறையும் -*** *எள் தங்கும் சிற்றிடமும்;* ***ஒழியாமல் -*** *விடாமல்;* ***யாண்டையுளும் -*** *எவ்விடத்திலும்;* ***உளனாய் -*** *இருப்பவனாய்;* ***எம்மருங்கும் உலாவுவான் -*** *எவ்விடத்தும் சஞ்சரிக்கும் அனுமன்;* ***புள் உறையும் -*** *பறவைகள் தங்கியுறையும்;* ***மானத்தை -*** *ஆகாயத்தை;* ***உற நோக்கி -*** *உற்றுப்பார்த்து;* ***அயல் போவான் -*** *அரண்மனையை (விட்டு) வெளியே செல்பவன்;* ***கள் உறையும் மலர் -*** *தேன் பொழிந்த மலர்கள் உடைய;* ***சோலை ஒன்று -*** *ஒரு சோலையை;* ***அயல் -*** *பக்கத்தில்;* ***கண்ணுற்றான் -*** *கண்டான்.*

*ஒருவனைப்போல் என்னும் பாடத்தினும் அழகனைப்போல் என்னும் பாடம் சிறக்கும். 'கரியனாய், வெளியன் ஆகிச் செய்யனாய்க் காட்டும் .... தன் அகத்துறை அழகனே போல்' என்னும் ஊர்தேடு படலம் (கம்ப. 4936).*

*இராமபிரானைப்போன்றவன் அனுமன் என்று பேசப்படுவது இந்திய தத்துவ இயல்பைக் காட்டும். ஊர் - நிறைவு.* ***(234)***

## காட்சிப்படலம்

*அனுமன்பிராட்டியைத்தேடி வந்தபோது, பிராட்டி இருந்த நிலையையும் அவள் எண்ணங்களையும் இப் படலம் விவரிக்கிறது. பிராட்டிமென்மருங்குல்போல் வேறுள அங்கமும் மெலிந்து பிரிவுத் துயரமே பெண்ணுருக்கொண்டாற் போல் விளங்குகிறாள். அவள் என் நிலையைப் பெருமான் உணரவில்லையோ என்று கருதி நெருப்பிற் புக்காற் போன்று வருந்தினாள். பழைய நினைவுகளெல்லாம் பிராட்டியைக் கொல்லாமற் கொல்கிறது. பிராட்டி திரிசடையை நோக்கி, இடப்புறம் துடிக்கின்றது. இனி யாது நிகழும் என்று கேட்கிறாள். திரிசடை எதிர்காலத்தில் இலங்கையில் நிகழும் நிகழ்ச்சியைத் தான் கனவில் கண்டதைக் கூறிப் பிராட்டியைத் தேற்றுகிறாள். இச் சமயத்தில்தான் அனுமன் பிராட்டியின் தவக் கோலத்தைக் கண்டு, பிராட்டியின் மனத்தவத்தை வியந்து, அறம் வெல்லும் ! பாவம் தோற்கும் !' என்னும் சத்தியத்தை எண்ணிப் பூரிக்கிறான். அப்போது அங்கே இராவணன் அரக்கியர் சூழப் பெருமிதத்துடன் தோன்றுகிறான். அவன் - பிராட்டியை நோக்கி, பலவாறு காதல் மொழிகளை இரந்து பேசி பூமியில் வீழ்ந்து வணங்கினான். அது கேட்ட பிராட்டிக்குச் சீற்றம் வந்து வெகுண்டு பேசுகின்றாள். இராவணன் சீற்றங்கொண்டு இவளைப் பிளந்து தின்பேன் என்று கருதுகிறான். அச் சீற்ற நெருப்பைக் காதல் அவிக்கிறது. இராவணன் தன் செய்கைக்குப் பொருந்தாக் காரணம் புகல்கிறான். பலபடியாகப் பேசி பிராட்டியின் மனத்தை மாற்ற முயல்கிறான். இறுதியில் இராவணன் அரக்கிகளைப் பார்த்து, 'இவளை எப்படியாவது வசப்படுத்துங்கள்' என்று கூறிச் செல்கிறான். அரக்கிகள் பிராட்டியை வருத்துகிறார்கள். திரிசடையின் சொற்களால் பிராட்டி தெளிவு பெறுகிறாள். இப் படலம் புனித ஆன்மாவின் பத்து இந்திரியங்களோடு கூடிய மனம் ஆன்மாவுக்கு உலக நாட்டத்தை உண்டுபண்ண முயல்வதையும், புனித ஆன்மா மனத்தை வென்று இறைவன்பால் சார்ந்து நிமிர்ந்து நிற்பதையும் குறிக்கிறது.*

*அனுமன் அசோகவனத்தை யடைதல்*

**கலித்துறை**

**5069. மாடு நின்றஅம் மணி மலர்ச் சோலையை மருவி,**
**'தேடி, அவ்வழிக் காண்பெனேல், தீரும் என்**
**சிறுமை;**
**ஊடுகண்டிலென்என்னின், பின், உரியது ஒன்று**
**இல்லை;**
**வீடுவேன், மற்றுஇவ் விலங்கல்மேல் இலங்கையை**
**வீட்டி'.**

**மாடு நின்ற** - *பக்கத்தில் நிமிர்ந்துள்ள;* **மணிமலர் அ சோலை** - *அழகிய மலர்கள் மலர்ந்த அந்தச் சோலையை;* **மருவி** - *(யான்) அடைந்து;* **அவ்வழி** - *அவ்விடத்தில்;* **தேடி காண்பெனேல்** - *தேடிப் பிராட்டியைப் பார்ப்பேனானால்;* **என் சிறுமை தீரும்** - *என்னுடைய துன்பம் நீங்கும்;* **ஊடு கண்டிலென் என்னின்** - *சோலையின் உள்ளே காணப் பெற்றிலேன் என்றால்;* **பின்** - *பிறகு;* **விலங்கல்மேல் இ இலங்கையை** - *திரிகூட மலையில் உள்ள இந்த இலங்கைமா நகரை;* **வீட்டி** - *பாழாக்கி;* **வீடுவென்** - *யான்*

*இறப்பேன்;* ***உரியது -*** *செய்வதற்கு உரிய செயல்;* ***மற்று ஒன்று இல்லை -*** *வேறு ஒன்று கிடையாது.*

*சிறுமை -தேய்ந்து சிறிதாதல். (குறள் 769. பரிமேல்.) விலங்கல்மேல் உள்ள இலங்கையை வீட்டி என்பதற்கு திரிகூட மலையின்மேலே உள்ள இலங்கையை அழித்து என்று உரை கூறுவார் உளர். இக்கலித்துறை மா - விளம் - விளம் - விளம் - மா என்னும் சீர்களை முறையே பெற்று வரும். இத்தகைய பாடல்கள் இந்நூலில் 1223 உள்ளன (மணிமலர் 76) இதனை வை.மு.கோ. அவர்கள் காப்பியக் கலித்துறை என்று குறிக்கின்றார்.* ***(1)***

***5070. என்று,சோலை புக்கு எய்தினன், இராகவன் தூதன்;***
***ஒன்றி வானவர் பூமழை பொழிந்தனர் உவந்தார்;***
***அன்று, அவ் வாள்அரக்கன் சிறை அவ் வழி வைத்த***
***துன்று அல்ஓதிதன் நிலை இனிச் சொல்லுவான்***
***துணிந்தாம்.***

***என்று -*** *என்று சிந்தித்து;* ***இராகவன் தூதன் -*** *இராமபிரானின் தூதனான அனுமன்;* ***சோலை புக்கு எய்தினன் -*** *சோலைக்குள் சென்று சேர்ந்தான்; (அப்போது)* ***வானவர் -*** *தேவலோகத்திருப்பவர்;* ***ஒன்றி பூ மழை பொழிந்தனர் -*** *ஒன்று சேர்ந்து பூமாரி பொழிந்து;* ***உவந்தார் -*** *மகிழ்ச்சி அடைந்தனர்;* ***இனி -*** *இனிமேல்;* ***வாள் அரக்கன் -*** *வாள் ஏந்திய இராவணனால்;* ***அவ்வழி சிறைவைத்த -*** *அச் சோலையில் சிறை வைக்கப்பெற்ற;* ***அல் துன்று ஓதிதன் -*** *இருள் போன்ற கூந்தலையுடையபிராட்டியின்;* ***அன்று நிலை -*** *அப்போதைய நிலைமையை;* ***சொல்லுவான் துணிந்தாம் -*** *சொல்லுவதற்குத் துணிந்தோம்.*

*அல்துன்று ஓதி -இருள் போன்ற கூந்தல். துன்று - உவமச் சொல். (சிந்தாமணி. 2490 நச்) உவமச் சொல்லாவது வினைச் சொற்களை உவம உருபு போலப் பயன்படுத்தல்.* ***(2)***

*அரக்கியர் கூட்டத்தில்*

*சீதையின் நிலை*

***5071. வன்மருங்குல் வாள் அரக்கியர் நெருக்க, அங்கு***
***இருந்தாள்;***
***கல் மருங்கு,எழுந்து என்றும் ஓர் துளி வரக் காணா***
***நல்மருந்துபோல், நலன் அற உணங்கிய நங்கை,***
***மென்மருங்குபோல், வேறு உள அங்கமும்***
***மெலிந்தாள்.***

***கல் மருங்குஎழுந்து -*** *கல்லின் பக்கத்திலே தோன்றி வளர்ந்து;* ***என்றும் -*** *எக்காலத்திலும்;* ***ஓர் துளி வரக் காணா -*** *ஒரு நீர்த்துளி வருதலை யறியாத;* ***நல் மருந்து போல் -*** *உயர்ந்த மூலிகையைப் போல;* ***வன்மருங்குல் -*** *பருத்த இடையை உடைய;* ***வாள் அரக்கியர் -*** *கொடிய அரக்கியர்கள்;* ***நெருக்க -*** *துன்புறுத்த (அதனால்);* ***நலன் அற உணங்கிய நங்கை -*** *உடல் நலமும் உள நலமும் அற்றுப்போக வாடிய பிராட்டி;* ***மெல் மருங்குல் போல் -*** *மெல்லிய இடையைப் போல;* ***வேறு உள அங்கமும் -*** *மற்றைய*

*அங்கங்களும்;* **மெலிந்தாள் -** *இளைத்து;* **அங்கு இருந்தாள் -** *அசோக வனத்தில் இருந்தாள்.*

*மென்மருங்குல்சிற்றிடையைக்குறிக்கும். அதுபோல் வன்மருங்குல் பேரிடையைக் குறிக்கும். மருந்து - மூலிகை. மருந்து கொள் மரத்தின் வாள் வடு மயங்கி (புறம் 180) 'வாள் அரக்கியர், பல முகத்தார் எழு நூறு பேர்; நல் மருந்து மிருதசஞ்சீவினி என்பன பழையவுரை (அடை - பதி)* ***(3)***

***5072. துயில் எனக் கண்கள் இமைத்தலும் முகிழ்த்தலும் துறந்தாள்;***
***வெயிலிடைத்தந்த விளக்கு என ஒளி இலா மெய்யாள்;***
***மயில் இயல்,குயில் மழலையாள், மான் இளம் பேடை***
***அயில் எயிற்றுவெம் புலிக் குழாத்து அகப்பட்டதன்னாள்.***

**துயில்என -** *உறக்கம்என்று கூறும்படி;* **கண்கள் இமைத்தலும் -** *கண்கள் மூடுதலையும்;* **முகிழ்த்தலும் துறந்தாள் -** *(விழிப்பு என்னும்படி) திறத்தலையும் விட்டுவிட்டு;* **வெயில் இடை தந்த -** *சூரியனுக்கு எதிரே ஏற்றி வைத்த;* **விளக்கு என -** *விளக்கைப் போல;* **ஒளி இலா மெய்யாள் -** *ஒளி குன்றிய மேனியை உடைய;* **மயில் இயல் குயில் -** *மயிலின் சாயலையும் குயிலின் குரலையும்;* **மழலையாள் -** *பெற்ற பிராட்டி;* **இளம் மான் பேடை -** *இளமையுடைய பெண்மான்;* **அயில் எயிற்று வெம்புலிக் குழாத்து அகப்பட்டது அன்னாள் -** *கூரிய பற்களையுடைய கொடிய புலிக் கூட்டத்தில் சிக்கிக் கொண்டாற் போன்று இருந்தாள்.*

*சூரியனுக்கு எதிரேஏற்றப்பட்ட விளக்கைப்போல ஒளியற்ற பிராட்டி, புலியின் கூட்டத்தில் அகப்பட்ட மான்போல இருந்தாள். இமைத்தல் - கண்கள் மூடுதல். 'எரி அர வார மார்பர் இமையாரும் அல்லர் இமைப்பாரும் அல்லர்' (தேவாரம் 4. சிவன் எனும் 2) முகிழ்த்தல் - அரும்புதல். விழித்தல். துயில் எனக் கண்கள் இமைத்தல் என்றதனால் விழிப்பென மூடுதல் இல்லை என்க. வெயில் - சூரியன். 'வெயில் இள நிலவே போல் விரிகதிர் இடைவீச' (கம்ப. 2000) 'மயிலியல், குயில்' மழலையின் மான் இளம் பேடை' என்றும் பாடம் உண்டு. மயிலின் இயலையும் (சாயலையும்) குயிலின் குரலையும் பெற்ற பெண் மான் என்பது அதன் பொருள். "மானின் விழி பெற்ற மயில் வந்தது" என்று காமவல்லியைக் கூறும் கம்பர் இயற்கையை உன்னுக.* ***(4)***

***5073. விழுதல்,விம்முதல், மெய் உற வெதும்புதல், வெருவல்,***
***எழுதல்,ஏங்குதல், இரங்குதல், இராமனை எண்ணித்***
***தொழுதல்,சோருதல், துளங்குதல், துயர் உழந்து உயிர்த்தல்,***
***அழுதல், அன்றி,மற்று அயல் ஒன்றும் செய்குவது அறியாள்.***

*(பிராட்டி)*

**விழுதல் -** பூமியில் விழுதல்; **விம்முதல் -** தேம்பி அழுதல்; **உறமெய் வெதும்புதல் -** அதிகமாக உடல் வெப்பம் அடைதல்; **வெருவல் -** அஞ்சுதல்; **எழுதல் -** எழுந்திருத்தல்; **ஏங்குதல்,இரங்குதல் -** வருந்துதல்,அழுதல்; **இராமனை எண்ணித் தொழுதல் -** இராமபிரானை நினைந்து வணங்குதல்; **சோருதல் -** தளர்ச்சியடைதல்; **துளங்குதல் -** உடல் நடுக்கம் அடைதல்; **துயர் உழந்து உயிர்த்தல் -** துன்பத்தால் சிதைந்து பெருமூச்சுவிடுதல்; **அழுதல் -** புலம்புதல்; **அன்றி -** ஆகிய இச்செயலைத் தவிர; **அயல் ஒன்றும் -** வேறு செயல்கள் எதுவும்; **செய்குவது அறியாள் -** செய்வது அறியாதவளாக இருந்தாள்.

*பிராட்டி அழுதல்முதலான செயல்களைத் தவிர வேறு ஒன்றும் அறியாதவளாய் இருந்தாள். மற்று - அசை. செய்குவது - கு - சாரியை. 'காய்குவள் அல்லளோ' - கலித்தொகை 79.* ***(5)***

**5074. தழைத்தபொன் முலைத் தடம் கடந்து, அருவி**
**போய்த் தாழப்**
**புழைத்த போல,நீர் நிரந்தரம் பொழிகின்ற**
**பொலிவால்,**
**இழைக்கும்நுண்ணிய மருங்குலாள், இணை நெடுங்**
**கண்கள்,**
**'மழைக்கண்'என்பது காரணக் குறி என வகுத்தாள்.**

**இழைக்கும்நுண்ணிய மருங்குலாள் -** நூலின் இழையைவிட நுட்பமான இடையைப் பெற்ற பிராட்டி; **நெடும் இணைகண்கள் -** நீண்ட இரண்டு கண்கள்; **புழைத்த போல -** துளைபட்டுப் போனாற் போல; **தழைத் தபொன்முலைத் தடம் கடந்து -** சீரிய பொன்போன்றபசலை படர்ந்ததனங்களைத் தாண்டி; **அருவி போய்தாழ -** அருவி சென்று கீழே இறங்க; **நீர் -** தண்ணீரை; **நிரந்தரம் -** எப்போதும்; **பொழிகின்ற பொலிவால் -** பொழியும் மிகுதியால்; **மழைக்கண் என்பது -** மழைக்கண் என்றுகூறப்படுவது; **காரணக்குறி என வகுத்தாள் -** காரணப் பெயர் என்று கூறும்படி நியமித்தாள்.

*பிராட்டியின் கண்கள்இடையறாது அருவிபோல் கண்ணீர் பொழிவதால் 'மழைக்கண்' என்றும் பெயர். மேகம் (மழை) போன்ற கண்கள் என்னும் பொருள் பெற்றுக் காரணப் பெயராயிற்று என்கிறான் கவிஞன். மழைக்கண் என்பதை இடுகுறிப் பெயர் என்று கூறியவரை மறுப்பதுபோல் உள்ளது. பொன் - பசலை. பொன் ஈன்ற நீலமாமணி முலையினாளே (சிந்தாமணி 6. 119) வகுத்தல் - நியமித்தல். 'வகுத்தான் வகுத்தவகை' என்று தமிழ் மறை (குறள் 377.) பேசும். பொலிவு - மிகுதி. கழுநீர் பொலிந்த கண் அகன் பொய்கை (மதுரைக் - 171) மருங்குலாள் வகுத்தாள் என்க. அருவி 'போல்' (அண், மல், கழ)* ***(6)***

**5075. அரிய மஞ்சினோடு அஞ்சனம் முதல் இவை அதிகம்**
**கரிய காண்டலும்,கண்ணின் நீர் கடல் புகக்**
**கலுழ்வாள்;**
**உரிய காதலின்ஒருவரோடு ஒருவரை உலகில்**

***பிரிவு எனும்துயர் உருவு கொண்டாலன்ன***
***பிணியாள்.***

**உலகில் -** *இந்தஉலகத்தில்;* **உரிய காதலின் ஒருவரோடு -** *உரிமையாகக் கொண்ட காதலுடைய ஒருவரோடு;* **ஒருவரை -** *ஒப்பற்ற அன்புடையவர்களை;* **பிரிவு எனும் துயர் -** *பிரிதல் என்னும் துன்பமானது;* **உருவு கொண்டால் அன்ன -** *வடிவம் பெற்றாற் போன்ற;* **பிணியாள் -** *நோயை உடைய பிராட்டி;* **அரிய மஞ்சினோடு -** *அழகிய மேகத்துடன்;* **அஞ்சனம் முதல் -** *மை முதலான;* **அதிகம் கரிய இவை -** *சிறப்புற்ற கரிய நிறம் உடைய இப் பொருள்களை;* **காண்டலும் -** *பார்த்தவுடன் (இராமன் மேனியின் நிறம் மனத்தில் தோன்றுதலால்);* **கண்ணின்நீர் -** *கண்ணிலிருந்து வரும் நீர்ப் பெருக்கு;* **கடல் புகக் கலுழ்வாள் -** *கடலில் பாயும்படி மனம் உருகுவாள்.*

*மேகம், மை,முதலான பொருள்கள் இராமபிரானை நினைப்பூட்டுதலால் பிராட்டி துன்புற்றாள். 'இப்பொருள்' என்றது நீலக்கடல், காயாம்பூ முதலானவற்றை. கலுழ்தல் - உருகுதல். கலுழத் தன் கையால் தீண்டி (சிந்தா. 8.38) 'ஒருவரொடு' என்பதில் உள்ள 'ஒடு' உருபை ஐயுருபாகக் கொள்க. உருபு மயக்கம்.' நாகு வேயொடு நக்கு வீங்கு தோள்' என்னும் தொடரை உள்ளுக. 'ஒருவரை' என்பதில் உள்ள 'ஐ' சாரியை. இரண்டன் உருபன்று. 'யாவையும் சூனியம் சத்து எதிர்' - சிவஞான போதம் - 7. யாவும் என்பது யாவையும் என வந்துள்ளது - ஐ - சாரியை.* ***(7)***

***5076. துப்பினால் செய்த கையொடு கால் பெற்ற துளி***
***மஞ்சு***
***ஒப்பினான்தனைநினைதொறும், நெடுங் கண்கள்***
***உகுத்த***
***அப்பினால்நனைந்து, அருந் துயர் உயிர்ப்புடை***
***யாக்கை***
***வெப்பினால்புலர்ந்து, ஒரு நிலை உறாத மென்***
***துகிலாள்.***

**துப்பினால்செய்த -** *பவளத்தால் செய்யப்பெற்ற;* **கையொடு கால் பெற்ற -** *கைகளையும் கால்களையும் பெற்ற;* **துளி மஞ்சு ஒப்பினான்தனை -** *மழை பொழியும் மேகம் போன்ற இராமபிரானை;* **நினைதொறும் -** *நினைக்கும் போதெல்லாம்;* **நெடுங்கண்கள் உகுத்த -** *நீண்ட கண்கள் சிந்திய;* **அப்பினால் நனைந்து -** *கண்ணீரால் நனையப் பெற்று;* **அருந்துயர் உயிர்ப்புடை யாக்கை -** *போக்க முடியாத துன்பமும் பெருமூச்சும் பெற்ற உடம்பின்;* **வெப்பினால் உலர்ந்து -** *வெப்பத்தால் உலர்ந்து;* **ஒருநிலை உறாத -** *ஒருபடித்தாய் இராத;* **மென்துகிலாள் -** *மெல்லிய ஆடையுடையளாய்இராநின்றாள். பவளக்காலும்பவளக்கையும் பெற்ற மேகம், என்றது இல்பொருள் உவமையணி.*
***(8)***

***5077. 'அரிது-போகவோ, விதி வலி கடத்தல் !' என்று***
***அஞ்சி,***
***'பரிதிவானவன்குலத்தையும், பழியையும், பாரா,***
***சுருதி நாயகன்,வரும் வரும்' என்பது ஓர்***
***துணிவால்***

***கருதி, மாதிரம்அனைத்தையும் அளக்கின்ற***
***கண்ணாள்.***

***போகவோ*** *- சிறையிலிருந்து தப்பிச் செல்லுதலோ;* ***விதிவலி கடத்தல் ஓ*** *- விதியின் வலிமையைக்கடந்து போதலோ;* ***அரிது*** *- முடியாததாகும்;* ***என்று அஞ்சி*** *- என்று கருதி அச்சமுற்று;* ***சுருதி நாயகன்*** *- வேதத்தின் தலைவனான இராமபிரான்;* ***பரிதி வானவன் குலத்தையும்*** *- தன்னுடைய சூரிய வம்சத்தையும்;* ***பழியையும்*** *- தனக்கு நேர்ந்த அவமானத்தையும்;* ***பாரா*** *- பார்த்து;* ***வரும் வரும்*** *- (உறுதியாக) வருவான் வருவான்;* ***என்பது ஓர் துணிவால்*** *- என்று (அடிமனம்) கூறும் உறுதிப்பாட்டால்;* ***கருதி*** *- இராமபிரானது வருகையை எதிர்பார்த்து;* ***மாதிரம் அனைத்தையும்*** *- எல்லாத் திசைகளையும்;* ***அளக்கின்ற கண்ணாள்*** *- துழாவிப் பார்க்கும் கண்களையுடையாள்.*

*போதல் என்னும்தொழிற் பெயர் போக என்னும் வடிவம் பெற்றது. வரல் இயலாது - வர இயலாது என வந்தாற்போல, போகவோ என்பதில் உள்ள ஓகாரத்தைக் கடத்தல் என்பதுடன் கூட்டவேண்டும். 'அரிது போகவோ' என்னும் பாடம் சிறப்புடைத்து. போகவோ,*
*கடத்தலோ அரிது - எனமுடிக்க. விதி வலி கடத்தல் போகவோ - அரிது என்று கூட்டி, விதி வலி கடந்து செல்லுதல் என்பது போக முடியாத அரிய காரியம் என்றும் கூறுவர் (அடை - பதி) போகவோ, விதி வலி கடத்தல் அரிது என்று கூட்டி (யான்) உயிர் நீங்குவேன் ஆகவோ என்றால் ஊழ்வினையின் வலிமையை மீளுதல் அரிது என்றும் கூறுவர் (வை.மு.கோ) விதி வலி கடக்கப் போவது அரிது என்று கூட்டி - ஊழ்வலியைக் கடக்கச் செல்லவே இயலாது - என்று கூறும் (அண்மல். கழ) கடக்க என்றும் பாடம் கொள்ளப்பெற்றது. அரிது போகவோ - இவ்வூரை விட்டுப் போகலாம் என்றாலோ மிகவும் அரிதாயிருக்கிறது. விதி - தெய்வசங்கற்பமோ வலி கடத்தல் - நமது செய்கையை விஞ்சியதாக இருக்கிறது என்று உரை வகுத்தவர் வி. கோவிந்தப்பிள்ளை.*
***(9)***

***5078. கமையினாள்திரு முகத்து அயல் கதுப்பு உறக்***
***கவ்வி,***
***சுமையுடைக் கற்றை, நிலத்திடைக் கிடந்த, தூ***
***மதியை***
***அமைய வாயில்பெய்து, உமிழ்கின்ற அயில் எயிற்று***
***அரவின்,***
***குமையுறத்திரண்டு, ஒரு சடை ஆகிய குழலாள்.***

***கமையினாள்*** *- பொறுமைஉடைய பிராட்டியின்;* ***திருமுகத்து அயல்*** *- அழகிய முகத்தின் இரு பக்கங்களிலும்;* ***கதுப்பு உறக் கவ்வி*** *- கன்னங்களில்நன்றாகப் பற்றி;* ***நிலத்திடைக் கிடந்த*** *- பூமியிலே படிந்துள்ள;* ***சுமை உடைகற்றை*** *- பாரம் உடைய கூந்தலின் தொகுதியானது;* ***தூமதியை அமையவாயில் பெய்து*** *- தூய்மையான சந்திரனை வாயில் இட்டு;* ***உமிழ்கின்றஅயில் எயிற்று அரவின்*** *- வெளியிலே உமிழ்கின்ற கூரியபற்களையுடையஇராகுவைப் போல;* ***குமை உறத்திரண்டு*** *- நெருக்கம் மிகுந்து திரட்சியாகி;* ***ஒரு சடை ஆகிய குழலாள்*** *- ஒரு சடையாகிய கூந்தலையுடையாள்.*

*கமை-பொறுமை.கதுப்பு-கன்னம். நிலத்திடைக் கிடந்த கற்றை என மாற்றுக. இது "தோல் போர்த்த என்பு உடம்பு" என்பதனை', என்பு தோல் போர்த்த உடம்பு' (குறள்.80) என்று கூறியதை ஒக்கும். நிலத்திடைக் கிடந்த என்னும் அடைமொழியை மதிக்குச் சேர்ப்பாரும் உளர். குழல் சடையாயிற்று என்பதைப் போலவே 'நறுங்குஞ்சி ஈண்டு சடையாயினது என்று பேசுவார் (கம்ப. 5284)* ***(10)***

***5079. ஆவி அம் துகில் புனைவது ஒன்று அன்றி வேறு***
***அறியாள்;***
***தூவி அன்னம்மென் புனலிடைத் தோய்கிலா***
***மெய்யாள்;***
***தேவுதெண் கடல்அமிழ்து கொண்டு அனங்கவேள்***
***செய்த***
***ஓவியம்புகையுண்டதே ஒக்கின்ற உருவாள்.***

***புனைவது ஒன்றுஅன்றி -*** *உடுத்துக் கொண்டிருக்கும் ஓராடையைத் தவிர;* ***வேறு -*** *வேறு ஒரு;* ***அம் ஆவி துகில் அறியாள் -*** *அழகிய பால் ஆவி ஒத்த ஆடையை அறியாது;* ***தூவி அன்ன -*** *மயிலின் தோகை போன்ற (நீலநிறமுடைய);* ***மென் புனலிடை -*** *தெளிந்த நீரில்;* ***தோய்கிலா மெய்யாள் -*** *குளிக்காத மேனியை உடையவளாய்;* ***தேவு -*** *தெய்வத் தன்மை பெற்ற;* ***தெண்கடல் அமிழ்து கொண்டு -*** *தெளிந்த பாற்கடலில் தோன்றிய அமுதத்தை மூலப் பொருளாகக் கொண்டு;* ***அனங்கவேள் செய்த -*** *மன்மதனால் செய்யப்பெற்ற;* ***ஓவியம் -*** *விக்கிரகம்;* ***புகை உண்டதே ஒக்கின்ற -*** *புகையால் விழுங்கப் பெற்றதை ஒத்திருக்கின்ற;* ***உருவாள் -*** *வடிவத்தை உடையாள்.*

*ஆவியந்துகில் -பாலாவி போன்ற ஆடை ஆவி அன்ன அவிர் நூல் கலிங்கம் (சிறுபாண் 469 நச் - உரை) தூவி - மயில் தோகை மயில் தோகையைத் தூவி என்று பிங்கலம் பேசும். துயில் எழு மயில் ஒன்றின் தூவி (கம்பர் - வரைக்காட்சி - 7) பிராட்டி வீரன் மேனியை மாறும் இவ் வீங்கு நீர்' என்றாள் (சூடாமணி 35) தூவி என்பதைக் 'காக்கைச் சிறகு' என்று கூறுவாரும் உளர். (அடை - பதி) 'தூவி அன்னம் மென்புனல்' என்று பிரித்து அன்னப் பறவைகள் தங்குவதற்கு உரிய மென்மையான தண்ணீர் என்று வை.மு.கோ. உரை வகுத்தார். ஓவியம் - விக்கிரகம். கோபுரத்தில் அமைக்கப்பெற்ற சுதைப் புறாவை ஓவியப் புறா என்பான் கம்பன். செய்த எனும் அடைமொழியால் ஓவியம் என்பது படிவத்தை (விக்கிரகம்) குறிக்கும். இதனை வடநூலார் 'பூர்ண சித்ரம்' என்பர். 'ஆவி அம்துகில் புனைவது ஒன்று அன்றி' என்பதை மொழி மாற்றாது கிடந்தவாறே கொண்டு பாலாவி ஒத்த அழகிய ஆடையை இறுகக் கட்டுதலாகிய ஒரு செயலை அன்றி வேறு செயலை அறியாள்' எனப் பொருள் கூறல் சிறந்தது. கணத்துக்குக் கணம் இளைக்கின்ற மேனியாதலின் ஆடை அணிதலாகிய தொழிலை இடையறாது செய்தல் வேண்டியதாயிற்று என்பது மயிலம். பேராசிரியர் வே.சிவசுப்பிரமணியன் அவர்கள் கருத்து.* ***(11)***

***5080. 'கண்டிலன்கொலாம் இளவலும் ? கனை கடல்***
***நடுவண்***
***உண்டு இலங்கைஎன்று உணர்ந்திலர் ? உலகு***
***எலாம் ஒறுப்பான்***
***கொண்டு இறந்தமைஅறிந்திலராம் ?' எனக்***

குழையா,
புண் திறந்ததில்எரி நுழைந்தாலெனப் புகைவாள்.

**இளவலும் -** இளையபெருமாளும்; **கண்டிலன் கொல் ஆம் -** (மான் பின் போன இராமபிரானை) காணவில்லை போலும்; **உலகு எலாம் ஒறுப் பான்-** எல்லா உலகங்களையும் வருத்தும் இராவணன்; **கொண்டு இறந்தமை -** அபகரித்துக் கொண்டு கடல் கடந்து வந்ததை; **அறிந்திலர் ஆம் -** அறியவில்லை போலும்; (அறிந்தாலும்) **இலங்கை -** இலங்கை மாநகர்; **கனைகடல் நடுவண் உண்டு -** ஆரவாரிக்கும் கடலின் நடுவில் உள்ளது; **என்று உணர்ந்திலர் ? -** என்று அறியவில்லையோ; **என -** என்றுநினைத்து; **குழையா -** மனம் வருந்தி; **எரி -** நெருப்பானது; **புண் திறந்து -** புண்ணைத் திறந்து; **அதில் நுழைந்தால் என -** அதற்குள் புகுந்தாற் போல; **புகைவாள் -** மனம் வருத்தம் அடைவாள்.

கண்டிலன் கொல்ஆம் என்பதில் உள்ள 'கொல் ஆம்' என்னும் ஐய உணர்வுச் சொற்களை உணர்ந்திலர் என்பதனுடன் சேர்க்க. 'கொல்' ஐயப் பொருளையும் 'ஆம்' போலும் என்னும் பொருளையும் தரும் 'காணலனே கொலாம்' (கம்ப. 2751) ஆம் என்பதை அசையாக்குவாரும் உண்டு (அண் - பல்-கலை-பதி)
*(12)*

5081. 'மாண்டுபோயினன் எருவைகட்கு அரசன் மன்;
மற்றோர்,
யாண்டை என்நிலை அறிவுறுப்பார்கள் ? இப்
பிறப்பில்
காண்டலோ அரிது' என்று, என்று, விம்முறும்;
கலங்கும்;
மீண்டு மீண்டுபுக்கு எரி நுழைந்தாலென,
மெலிவாள்.

**எருவைகட்கு அரசன்-** கழுகுகளின் தலைவனான சடாயு; **மாண்டு போயினன் -** இறந்து விண்ணுலகை அடைந்தான்; **மற்றோர் -** வேறுபிறர்; **யாண்டை -** எங்கே; **என் நிலை அறிவுறுப்பார்கள் -**என்னுடைய தற்போதையநிலையைச் (இராமலக்குவர்க்குச்) சொல்வார்கள்; **இப்பிறப்பில் -** (ஆதலால்) இந்தப் பிறப்பிலே (இராமலக்குவர்களை); **காண்டலோ அரிது -** காண்பது அருமையானதாகும்; **என்று என்று -** என்று பலபடியாக எண்ணி; **விம்முறும் -** துன்புறுவாள்; **கலங்கும் -** சஞ்சலம் அடைவாள்; **மீண்டு மீண்டு -** திரும்பத் திரும்ப; **எரி புக்கு -** நெருப்பு புகுந்து; **நுழைந்தால் என -** நுழைந்தாற் போல; **மெலிவாள் -** தளர்ச்சியடைவாள்.

கழுகுகட்கு அரசன்இறந்து போயினனோ என்று பிராட்டி ஐயுறுவதாக உரை கூறுவாரும் உளர். சடாயு இறந்து விட்டான் என்று கருதிப் பிராட்டி "வன்துணை உளன் என வந்த மன்னனும் பொன்றினன்" என்று கூறிப் புலம்புகிறாள் (கம்ப. 3447) ஆதலின் அவ்வுரை பொருந்தாது. எருவைகள் - கழுகுகள். நெருப்புச் சுட்ட இடத்திலேயே மீண்டும் நெருப்புப் புகுந்து சுட்டாற் போலப் பிராட்டி வருந்தினாள் என்க.
*(13)*

***5082. ‘என்னை, நாயகன், இளவலை, எண்ணலா***
***வினையேன்***
***சொன்னவார்த்தை கேட்டு, “அறிவு இலள்” எனத்***
***துறந்தானோ ?***
***முன்னை ஊழ்வினைமுடிந்ததோ ?’ என்று, என்று,***
***முறையால்***
***பன்னி, வாய்புலர்ந்து, உணர்வு தேய்ந்து, ஆர் உயிர்***
***பதைப்பாள்.***

***இளவலை -*** *இளைய பெருமாளை;* ***எண்ணலா வினையேன் -*** *மதியாததீவினையைச் செய்த யான்;* ***சொன்ன வார்த்தை -*** *கூறிய கொடுஞ்சொற்களை;* ***கேட்டு -*** *கேள்விப்பட்டு;* ***நாயகன் -*** *இராமபிரான்;* ***என்னை அறிவு இலள்எனத் துறந்தானோ ? -*** *(அன்புக்குரிய) என்னை அறிவற்றவள் என்று கருதிஒதுக்கித் தள்ளி விட்டானோ; (அல்லது)* ***முன்னை ஊழ்வினை -*** *பழையதீவினையானது; (என்னைத் துன்புறுத்துவதென்று)* ***முடிந்ததோ -*** *தீர்மானித்துவிட்டதோ;* ***என்று என்று -*** *என்று என்று (பலபடியாக);* ***முறையால் -*** *வரிசைப்படி;* ***பன்னி -*** *சொல்லிச் சொல்லி;* ***வாய் புலர்ந்து -*** *நா வறண்டு;* ***உணர்வு தேய்ந்து -*** *உணர்ச்சி தளர்ந்து;* ***ஆர் உயிர் பதைப்பாள் -*** *அரியஉயிர் துடித்து வருந்துவாள். முடிதல் -தீர்மானித்தல். பன்னி - திரும்பத் திரும்பச் சொல்லி ஊழ்வினை முடிந்ததோ என்பதற்கு - முற்பிறப்பில் செய்த கரும வசத்தினால் நேர்ந்ததோ என்றும் (வை.மு.கோ.) பூர்வகர்ம பலன் அவர் வேண்டா என்று சொல்லும்படி முடிதல் ஆயிற்றோ என்றும் (வி.கோ) கூறப்படுகிறது. ஊழ்வினை முடிந்ததோ என்பதற்கு எழுமையும் தொடர்ந்த அன்பு முடிந்ததோ என்றும் கூறலாம். ஊழ்வினையால் உள்ளம் சுடுமால் என்னும் தொடருக்கு (சீவக குணமாலை 114) நச்சர் உழுவல் அன்பாலே என் உள்ளத்தைச் சுடாநின்றது என்று உரை வகுத்தார். இப் பாடலில் உள்ள நாயகன் என்னும் எழுவாயை 15, 16, 17 ஆம் பாடல்களில் சேர்க்க.* ***(14)***

***5083. ‘அருந்தும் மெல் அடகு ஆர் இட அருந்தும் ?’ என்று***
***அழுங்கும்;***
***‘விருந்து கண்டபோது என் உறுமோ ?’ என்று***
***விம்மும்;***
***‘மருந்தும் உண்டுகொல் யான்கொண்ட நோய்க்கு ?’***
***என்று மயங்கும் -***
***இருந்த மா நிலம்செல் அரித்து எழவும் ஆண்டு***
***எழாதாள்.***

***இருந்த மாநிலம்-*** *தான்அமர்ந்துள்ள இடப்பரப்பு;* ***செல் அரித்து எழவும் -*** *கரையானால் அரிக்கப் பெற்றுப் புற்று தோன்றினும்;* ***ஆண்டு எழாதாள் -*** *அவ்விடத்திருந்து பெயர்ந்து போகாத பிராட்டி;* ***அருந்தும் மெல் அடகு -*** *உண்ணும் மெல்லிய ‘இலைக்கறி’ உணவை; (இராமபிரான்)* ***ஆர் இட அருந்தும் -*** *எவர் பரிமாற உண்பான்;* ***என்று அழுங்கும் -*** *என்று கூறி இரங்கித் துன்புறுவாள்;* ***விருந்து கண்ட போது -*** *(பரிமாறும் யான் பக்கத்தில் இல்லாமையால்) விருந்தினரைப் பார்க்கும் சமயத்தில்;* ***என் உறுமோ -*** *என்ன துன்பம் அடைவானோ;* ***என்று -*** *என்று நினைந்து;*

***விம்மும் -*** *ஏக்கம் அடைவாள்;* ***யான் கொண்ட நோய்க்கு -*** *யானே வரவழைத்துக் கொண்ட பிணிக்கு;* ***மருந்தும் உண்டு கொல் -*** *மருந்தும் உள்ளதோ;* ***என -*** *என்று கூறி;* ***மயங்கும் -*** *சோர்வு அடைவாள்.*

*விருந்தினரைஉபசரிக்கவே இல்லாளை மணப்பது இலட்சிய வாழ்வு. இராமபிரான் விருந்தினரை உபசரிக்க முடியாமல் வருந்துவான் என்று பிராட்டி வருந்துகிறாள். 14ஆம் பாடலில் உள்ள நாயகன் இப்பாடலில் அக எழுவாய் பிராட்டி புற எழுவாய். பிராட்டி இராமன்துன்புறுவானோ என்றுவருந்துகிறாள் என்று தொடராக்கி நோக்கின் புற எழுவாய், அக. எழுவாய் புலனாகும். மெல் அடகு - வெற்றிலை என்பாரும் உளர். அப்போது அது வினைத்தொகை.* ***(15)***

***5084. “வன்கண் வஞ்சனை அரக்கர், இத்துணைப் பகல்***
***வையார்;***
***தின்பர்; என் இனிச் செயத்தக்கது ?” என்று,***
***தீர்ந்தானோ ?***
***தன் குலப் பொறை தன் பொறை எனத்***
***தணிந்தானோ ?***
***என்கொல் எண்ணுவேன் ?’ என்னும் - அங்கு,***
***இராப் பகல் இல்லாள்.***

***இராப் பகல்இல்லாள் -*** *இரவையும் பகலையும்அறியாத பிராட்டி;* ***அங்கு -*** *அவ் அசோகவனத்தின்கண்;* ***வன்கண் வஞ்சனை அரக்கர் -*** *கொடுமையும் வஞ்சகமும் உடைய அரக்கர்கள்;* ***இத்துணைப் பகல் வையார் -*** *இவ்வளவு நாள்கள் (பிராட்டியை) உயிருடன் வைத்திருக்கமாட்டார்கள்;* ***தின்பர் -*** *தின்றிருப்பார்கள்;* ***இனி -*** *இப்போது;* ***செயத்தக்கது என் என்று-*** *செய்யக்கூடியது யாது என்று கருதி;* ***தீர்ந்தானோ -*** *(இராமபிரான்) என்னைத்தேடுவதை விட்டுவிட்டானோ ?;* ***தன் குலப்பொறை -*** *(அல்லது) தன்குலத்தவர்கள் மேற் கொண்ட பொறுமை;* ***தன் பொறை என -*** *தன்னுடையபாரம் என்று கருதி;* ***தணிந்தானோ -*** *சாந்தம் அடைந்தானோ;* ***என்எண்ணுவேன் கொல் என்னும் -*** *எதை நினைப்பேன் என்று கூறுவாள். பொறை - பொறுமை. பொறை என்பதற்கு அரசபாரம் எனக் கொண்டு தனக்குரிய அரச பாரத்தை மேற்கொண்டு திரும்பி விட்டானோ என்றும் பொருள் கூறலாம். இப் பொறைக்கு... தன் பொறை எனத் தவிர்ந்தானோ என்னும் பாடம் ஆதரவு தரும். இக் கருத்து அடுத்த பாடலில் வருதலின் இவ்வுரை ஏற்க இயலவில்லை. விரும்பின் கொள்க ? இராப் பகல் இல்லாள் என்னும் எழுவாய் 28 பாடல் வரை தொடரும். 29ஆம் பாடலில் இருந்தனள் என்னும் பயனிலைக்கு இது எழுவாய். ‘ஆங்கு இராப் பகல்’ என்பதில் உள்ள ‘ஆங்கு’ அசை. ‘அவ்விடத்தில்’ என்றும் பொருள் கூறலாம் அது சிறப்பன்று (கலி1.)*
***(16)***

***5085. ‘பெற்ற தாயரும், தம்பியும், பெயர்த்தும் வந்து எய்தி,***
***கொற்ற மா நகர்க் கொண்டு இறந்தார்களோ ?***
***குறித்துச்***
***சொற்ற ஆண்டு எலாம் உறைந்தன்றி, அந் நகர்***
***துன்னான்,***

*உற்றது உண்டு’எனா, படர் உழந்து, உறாதன
உறுவாள்.*

***பெற்ற தாயரும்*** *- தன்னைப்பெற்றெடுத்த தாயார்களும்;* ***தம்பியும்*** *- தம்பியாகிய பரதனும்;* ***பெயர்த்தும் வந்து எய்தி*** *- மறுபடியும் காட்டுக்கு வந்து இராமபிரானை அடைந்து;* ***கொற்ற மாநகர்*** *- வெற்றி யுடைய அயோத்திக்கு;* ***கொண்டு எழுந்தார்களோ*** *- (இராமபிரானை) அழைத்துக்கொண்டு போய்விட்டார்களோ; (இராமபிரான்)* ***குறித்து*** *- குறிப்பிட்டு;* ***சொற்ற ஆண்டு எலாம்*** *- (கைகேயி) கூறிய பதினான்கு வருடமும்;* ***உறைந்து அன்றி*** *- காட்டிலே தங்கித் திரும்புவானே தவிர;* ***அந் நகர் துன்னான்*** *- (உரிய காலத்துக்கு முன்) அந்த அயோத்தியை யடையான்;* ***உற்றது உண்டு எனா*** *- இராமபிரானுக்கு நேர்ந்த துன்பம் பெரியது என்று; (பிராட்டி)* ***படர் உழந்து*** *- துன்பத்தால் மனம் சிதைந்து;* ***உறாதன உறுவாள்*** *- எவரும் அடையாத துன்பத்தால் வருந்துவாள். உண்டு - பெரியது.‘உண்டு இடுக்கண் ஒன்று உடையான்’ என்பது (கம்ப. 2333.) கம்பர் வாக்கு. அங்கு பெரிது என்றும் பொருள் கொள்க. பாடலின் சிக்கல் தீரும். உண்டெனத் தருக நாட்டு வழக்கு.* ***(17)***

*5086. ‘முரன் எனத் தகும் மொய்ம்பினோர் முன்
பொருதவர்போல்,
வரனும், மாயமும்,வஞ்சமும், வரம்பு இல வல்லோர்
பொர நிகழ்ந்ததுஓர் பூசல் உண்டாம் ?’ எனப்
பொருமா,
கரன் எதிர்ந்ததுகண்டனள் ஆம் எனக் கவல்வாள்.*

***முரன்எனத்தகும்*** *- முரன் என்று கூறத்தகுந்த;* ***மொய்ம்பினோர்*** *- வலிமை உடையவர்களாய்;* ***முன்*** *- ஆதி காலத்தில்;* ***பொருதவர்போல்*** *- (திருமாலுடன்) போர் செய்தவர்களைப் போல;* ***வரம்பில*** *- எல்லையற்ற;* ***வரனும்*** *- வரங்கள் பெறுவதிலும்;* ***மாயமும்*** *- மாயங்கள் புரிவதிலும்;* ***வஞ்சமும்*** *- வஞ்சகங்கள் செய்வதிலும்;* ***வல்லோர்*** *- ஆற்றல் பெற்றவர்கள்;* ***பொர*** *- தாக்குதலாலே;* ***நிகழ்ந்தது ஓர் பூசல்*** *- உண்டான ஒப்பற்ற போர்;* ***உண்டு ஆம் என*** *- பெரிதாய் இருக்குமென்று கூறி;* ***பொருமா*** *- மனம் கலங்கி;* ***கரன் எதிர்ந்தது****- கரன்போர்க்களத்தில் போர் புரிவதை;* ***கண்டனள் ஆம் என*** *- நேரே கண்டாற் போல;* ***கவல்வாள்*** *- வருந்துவாள்.*

*கரன் போரைப்பிராட்டி பார்த்ததில்லை. இப்போது அது கண்களுக்குத் தெரிகிறது. அது கண்டனள் - அவர் பொர வந்ததும் பெருமான் கூடப் பொருகிறதும் வானவெளித் தோற்றமாகக் கண்முன்னே அந்தப் போர் கண்டவள் - என்பது பாடியுரை (அடை பதி) கரன் நெரித்து அது கண்டனள் ஆம் எனக் கலுழ்வாள் என்று பாடம் கொண்டு கைகளை நெரித்துக் கொண்டு அப்போரை நேரில் முன் பார்த்தது போல இப்பொழுதும் பாவித்து என்று பொருள் கூறலும் ஆம் (அடை - பதி) பொர - தாக்க. பொருபுனல் (சிறுபாண் - 118) ‘போர் செய்ய’ என்றும் கூறலாம். உண்டு - மிகுதி என்னும் பொருள் தந்தது.* ***(18)***

*பிராட்டியின் பழைய நினைவுகள்* **கலி விருத்தம்**

***5087. 'தெவ் மடங்கிய சேண் நிலம்' -- கேகயர்***
***தம் மடந்தை --'உம் தம்பியது ஆம்' என,***
***மும் மடங்குபொலிந்த முகத்தினன்***
***வெம் மடங்கலைஉன்னி, வெதும்புவாள்.***

***கேகயர்தம்மடந்தை -*** *கேகய அரசனின் மகளானகைகேசி;* ***தெவ் மடங்கிய -*** *பகைவர்கள் புற முதுகு காட்டி ஓடும்படி; (வீரம் பெற்ற)* ***சேண்நிலம் -*** *பரந்த கோசல நாடு;* ***உன் தம்பியது ஆம்என -*** *உன் தம்பியான பரதனுக்கே உரியது என்று கூற;* ***மும்மடங்கு பொலிந்த முகத்தினன் -*** *(இயல்பான நிலையினும்) மூன்று மடங்கு பொலிவாக விளங்கிய முகத்தைப் பெற்ற;* ***வெம் மடங்கலை -*** *யாவரும் விரும்பும் சிங்கம் போலும் இராமபிரானை;* ***உன்னி -*** *நினைந்து;* ***வெதும்புவாள் -*** *(துன்பத்தால்) வெப்பம் அடைவாள்.*

*மும்மடங்குபொலிந்தன (யுத்த) என்னும் பகுதியைக் கருதுக. இக்கலிவிருத்தம் மா-விளம்-விளம்-விளம் என்னும் 4 சீர்களைப் பெற்று வரும். இதனை 'அளவியற் சந்தம்' என்று கம்பன் அடிப்பொடி அவர்கள் குறிக்கிறார்கள். இத்தகைய பாடல்கள்இந்நூலில் 1198 உள்ளன.* ***(19)***

***5088. 'மெய்த்திருப்பதம் மேவு' என்ற போதினும்,***
***'இத் திருத்துறந்து ஏகு' என்ற போதினும்,***
***சித்திரத்தின் அலர்ந்த செந்தாமரை***
***ஒத்திருக்கும்முகத்தினை உன்னுவாள்.***

***மெய்த்திருப்பதம் -*** *உண்மையான அரசபதவியை;* ***மேவு என்ற போதினும் -*** *அடைக என்று (மன்னவன்) கூறிய சமயத்திலும்;* ***இத்திருத் துறந்து -*** *இந்த அரச பதவியை விட்டு விட்டு;* ***ஏகு என்ற போதினும் -*** *கானகம் செல்க என்று (கைகேசி) கூறிய சமயத்திலும்;* ***சித்திரத்தின் அலர்ந்த -*** *சுவர் ஓவியத்திலே மலர்ந்த;* ***செந்தாமரை ஒத்திருக்கும் -*** *செந்தாமரையைப் போன்றிருக்கும்;* ***முகத்தினை உன்னுவாள் -*** *திருமுகத்தை நினைப்பாள்.*

*தாமரை பகலில்மலரும். இரவில் குவியும். ஓவியத் தாமரை எப்போதும் ஒருபடித்தாக இருக்கும். ஓவியத் தாமரை போன்றது இராமன் முகம்.* ***(20)***

***5089. தேங்கு கங்கைத் திருமுடிச் செங்கணான்***
***வாங்கு கோல வடவரை வார் சிலை,***
***ஏங்குமாத்திரத்து, இற்று இரண்டாய் விழ***
***வீங்கு தோளைநினைந்து மெலிந்துளாள்.***

***ஏங்குமாத்திரத்து -*** *(சனகன் முதலானோர்)வில்லை வளைப்பானோ என்று வருந்திய காலத்தில்;* ***கங்கை தேங்கு திருமுடி -*** *கங்கை தங்கிய சடையையும்;* ***செங்கணான் -*** *சிவந்த கண்களையும் பெற்ற சிவபிரான்;* ***வாங்கும் -*** *வளைத்த;* ***கோல வடவரைவார்சிலை -*** *அழகிய மேருமலையின் அம்சமாகிய நீண்ட வில்;* ***இரண்டாய் இற்று விழ -*** *இரண்டாக ஒடிந்து கீழே விழும்படி;* ***வீங்கு தோளை -*** *பூரித்த (இராமபிரானின்) தோள்களை;* ***நினைந்து மெலிந்துளாள் -*** *எண்ணி மனந் தளர்ந்தாள்.*

தோள்வீங்கியதாலேயே வில் முறிந்தது. வில்லை நோக்கவும் வெந்தது வேலை என்னும் ஒற்றர் மொழியை உன்னுக (ஒற்றுக் கேள்வி 69) விழ என்னும் செய என்னும் வாய்ப்பாட்டு எச்சம் காரணப் பொருளில் வந்தது. வில் ஒடிந்ததால் தோள் வீங்கிற்று என்று கூறுவாரும் உளர். தகவு அறிக. சனகன் வேதனை தருகின்ற வில் என்பான் (கார்முகம் 11) இராமபிரான் வில் முறிப்பானோ மாட்டானோ என்று மிதிலை மகளிர் ஏங்கிய ஏக்கத்தைக் கார்முகப் படலம் பேசும் (கம்ப. 692 - 696) மெலிந்து (உள்) ஆள். உள் - துணை வினை. இதற்கு என்று தனிப்பொருள் இல்லை. 'உள்' என்பதற்குத் தனிப் பொருள் செய்து இடர்ப்பாடுற்றோர் பலர். 'நின்றிருந்தேன்' என்பது போலக் கொள்க. **(21)**

***5090. இன்னல் அம்பர வேந்தற்கு இயற்றிய***
***பல் நலம்பதினாலாயிரம் படை,***
***கன்னல்மூன்றில், களப் பட, கால் வளை***
***வில் நலம்புகழ்ந்து, ஏங்கி வெதும்புவாள்.***

**அம்பரவேந்தர்க்கு -** விண்ணுலக அரசனாகியஇந்திரனுக்கும்; **இன்னல் இயற்றிய -** துன்பத்தைச் செய்த; **பல் நலம் -** பலவிதமான சிறப்பைப் பெற்ற; **பதினாலாயிரம் படை -** பதினாலாயிரம் படை வீரர்கள்; **கன்னல் மூன்றில் -** மூன்று நாழிகைக்குள்ளே; **களப்பட -** போர்க்களத்திலே அழிய; **கால் வளை வில் நலம் -** இரு முனையை வளைத்த வில்லின் சிறப்பை; **புகழ்ந்து -** கொண்டாடி; **ஏங்கி வெதும்புவாள் -** ஏக்கமுற்று வெம்மையடைவாள்.

படை என்றது சேனாவீரர்களை காலாட்படை என்னும் வழக்கை நோக்குக. இராமபிரான் பதினாலாயிரம் படையை மூன்று நாழிகையில் அழித்ததை 'வில் ஒன்றில் கடிகை மூன்றில் ஏறினர் விண்ணில்' என்னும் சூர்ப்பனகை மொழியை உன்னுக (கம்ப. 3130) **(22)**

***5091. ஆழ நீர்க்கங்கை அம்பி கடாவிய***
***ஏழை வேடனுக்கு,'எம்பி நின் தம்பி; நீ***
***தோழன்; மங்கைகொழுந்தி' எனச் சொன்ன***
***வாழி நண்பினைஉன்னி, மயங்குவாள்.***

**ஆழ நீர்க்கங்கை -** ஆழமான நீரையுடைய கங்கையிலே; **அம்பி கடாவிய -** ஓடத்தை இயக்கின; **ஏழை வேடனுக்கு -** எளிய வேடனாகிய குகனிடத்தில்; **எம்பி நின் தம்பி -** என்னுடைய தம்பியாகிய இலக்குவன் உன்னுடைய தம்பி; **நீ தோழன் -** நீ எனக்குச் சகோதரன்; **மங்கை கொழுந்தி -** சீதை உன்னுடைய மைத்துனி; **எனச் சொன்ன -** என்று (பாசத்துடன்) கூறிய; **நண்பினை -** சகோதரப் பரிவினை; **உன்னி -** எண்ணி; **மயங்குவாள் -** கலக்கம் அடைவாள்.

வாழி - அசை. 'வாழிநண்பு' என்பதற்குக் குறைவுபடாத சிநேகம்' என்று வி. கோவிந்தப்பிள்ளை அவர்கள் உரை வகுத்தார். இப் பாடல் 'ஏழை, ஏதலன்' என்று தொடங்கும் பெரிய திருமொழிப் பாசுரத்தைப் பின்பற்றி எழுந்தது. ஏழை வேடன் பால் அன்புடையவன், என்பால் வாராமையால் அவன் என்பால் சீற்றங் கொண்டானோஎன்று பிராட்டி மனம்கலங்கினாள். வேடனுக்கு - வேடன்பால்.

*நான்கன் உருபை ஏழன் உருபாக்குக. நாணற்கிழங்கு மணற்கு ஈன்ற முளை என்றாற் போல (மணலின் கண் ஈன்ற முளை என்பது பொருள்)* ***(23)***

## *5092. மெய்த்ததாதை விரும்பினன் நீட்டிய கைத்தலங்களை,கைகளின் நீக்கி, வேறு உய்த்த போது,தருப்பையில் ஒண் பதம் வைத்த வேதிகைச்செய்தி மனக் கொள்வாள்.*

***மெய்த்த** - (யாவும்பிரமம் என்பதை) மெய்ப்பித்த; **தாதை** - தந்தையாகிய சனகன்; **விரும்பினன்** - (திருவடிபற்ற வேண்டும் என்ற) விருப்பத்துடன்; **நீட்டிய கைத்தலங்களை** - (தன் பக்கத்திலே) நீட்டிய கைகளை; **கைகளின் நீக்கி** - தன்னுடைய கைகளாலே விலக்கி; **வேறு உய்த்த போது** - (தன் பாதத்தை) வேறிடத்தில் செலுத்திய காலத்தில்; **ஒண்பதம்** - அழகிய பாதத்தை; **தருப்பையில் வைத்த** - தருப்பைப் புல்லில் வைத்த; **வேதிகைச் செய்தி** - மணவறைச் செயலை; **மனம் கொள்வாள்** - இதயத்தில் எண்ணுவாள்.*

*மெய்த்த -மெய்ப்பித்த, யாவும் பிரம்மம் என்று சனகன் மெய்ப்பித்தவன். திருமணத்துக்கு முன் மணமகனாகிய இராமனுக்குப் பாதபூசை செய்தல் முறையாதலின் அதன் பொருட்டு சனகனாகிய மாஞானி தன் கைகளை இராமனது திருவடி நோக்கி நீட்டினான். ஞானியின் கரங்கள் தன் பாதத்தில் படுதலை முறையன்று கருதிய இராமபிரானின் உயர்வு புலப்படுகிறது. உய்த்த - போக்கிய. உய்த்த கால் உதயத்து உம்பர் (நாவரசர் தேவாரம்) இப்பாடலின் பொருள் அரியது. நல் ஒழுக்கம் தவறாத தனது தந்தையாகிய மகாராசர் விருப்பம் உள்ளவராகிப் பிடித்துக் கொடுத்த தன்கைகளை அவரது கைகளில் வைத்த போது தன்கைகளைச் சனகரிடமிருந்து பெற்றுக் கொண்ட தன் நாயகராகிய இராமர் சப்தபதி என்னும் சடங்கை நிகழ்த்தத் தன் கால்களைப் பிடித்துத் தருப்பைப் புல்லில் வைத்து நடத்திய மணநிகழ்ச்சியை நினைவில் கொள்வாள் என உரை கூறலும் ஒன்று.* ***(24)***

## *5093. உரம்கொள் தே மலர்ச் சென்னி, உரிமை சால் வரம் கொள்பொன் முடி, தம்பி வனைந்திலன், திரங்கு செஞ்சடை கட்டிய செய்வினைக்கு இரங்கி ஏங்கியதுஎண்ணி, இரங்குவாள்.*

***தம்பி** - தன்னுடையதம்பியாகிய பரதன்; **உரம்கொள் தேமலர்** - சிறப்பைக் கொண்ட பூக்களையும்; **உரிமைசால்** - உரிமை நிரம்பிய; **வரம்கொள் பொன் முடி** - (கைகேசி) வரத்தாற் பெற்ற கிரீடத்தையும்; **சென்னி** - தலையில்; **வனைந்திலன்** - அணியாமல்; **திரங்கு செஞ்சடை கட்டிய** - திரிக்கப்பட்ட சடையைக் கட்டிக் கொண்ட; **செய்வினைக்கு** - விதிக்கு; **இரங்கி ஏங்கியது எண்ணி** - மனம் கரைந்து வருந்தியதை நினைத்து; **இரங்குவாள்** - வருத்தம் அடைவாள்.*

*மலர்ச்சென்னிஎன்பதற்கு மலரணிந்த தலை என்று பொருள் கூறினர். தகும் எனிற் கொள்க. செய்வினை - விதி; செய்வினை மருங்கின் எய்தலும் உண்டு (மணிமேகலை)*

*பரதன்பால் கொண்ட பாசம் தன் பால் இல்லையே என்று பிராட்டி தன்னிரக்கம் கொண்டாள்.* ***(25)***

***5094. பரித்தசெல்வம் ஒழியப் படரும் நாள்,***
***அருத்திவேதியற்கு ஆன் குலம் ஈந்து, அவன்***
***கருத்தின் ஆசைக்கரை இன்மை கண்டு, இறை***
***சிரித்த செய்கைநினைந்து, அழும் செய்கையாள்.***

***பரித்த** - தன்குலத்தவரால் சுமத்தப் பெற்ற; **செல்வம்** - அரச செல்வம்; **ஒழிய** - பரதன்பால் தங்க; **படரும் நாள்** - காட்டுக்குச் சென்ற காலத்தில்; **அருந்தி வேதியற்கு** - ஆசைமிக்க திரிசடன் என்னும் அந்தணனுக்கு; **ஆன்குலம் ஈந்து** - பசுக் கூட்டங்களை வழங்கியும்; **அவன்** - அந்தஅந்தணனின்; **கருத்தின் ஆசை** - உள்ளத்தில் உள்ள ஆசைக் கடலுக்கு; **கரை இன்மை கண்டு** - கரை இல்லாமல் இருப்பதைப் பார்த்து; **இறை** - சிறிதே; **சிரித்த செய்கை** - சிரித்த இராமபிரானின் செயலை; **நினைந்து** - எண்ணி; **அழும் செய்கையாள் - ;***

*நாடு துறந்து காடு போம்காலத்தில் திரிசடனுக்குப் பசுக்கூட்டங்கள் வழங்கியும் அவன் ஆசை எல்லையற்றுப் போவதைக் கண்டு சிரித்த இராமபிரானின் செயலை நினைந்து வருந்தினாள். ஒழிய - தங்கல் 'தோழன் நீ எனக்கு இங்கு ஒழி', என்னும் பெரிய திருமொழி ஒழிய - தன்னைவிட்டு நீங்க என்றும் பொருள் கூறலாம்.* ***(26)***

***5095. மழுவின்வாளினன், மன்னரை மூ - எழு***
***பொழுதில் நூறி,புலவு உறு புண்ணின் நீர்***
***முழுகினான் தவமொய்ம்பொடு மூரி வில்***
***தழுவும் மேன்மைநினைந்து, உயிர் சாம்புவாள்.***

***மன்னரை** - அரசர்களை; **மூவெழு பொழுதில்** - இருபத்தொரு தலைமுறையில்; **நூறி** - கொன்று; **புலவு உறு புண்ணின் நீர்** - புலால் கமழும் இரத்தத்தில்; **முழுகினான்** - நீராடிய; **மழுவின் வாளினன்** - மழுவாகிய ஆயுதம் ஏந்திய பரசுராமனின்; **தவம்** - தவத்தையும்; **மொய்ம்பொடு** - வலிமையையும்; **மூரிவில்** - பெரிய வில்லையும்; **தழுவும் மேன்மை** - தழுவிக் கொண்ட சிறப்பை; **நினைந்து** - எண்ணி; **உயிர்சாம்புவாள்** - உயிர் வாடுவாள்.*

*மழுவின் வாளினன்- என்பதில் உள்ள இன் அசை காப்பு ஒப்பு என்று கூற வேண்டியதைக் காப்பின் ஒப்பின் என்று கூறினர் தொல்காப்பியர் (வேற்றுமை 117) மழுவாளியர் என்பாரும் உளர் 'மழுவாளவன் இழுக்கம்' - என்பது கம்பன் வாக்கு (கம்ப. 1354.) இன் என்பது உருபாயின் இடர்பட்டுப் பொருள் கொள்ள நேரும். வி.கோ, மழுவாயுதத்தை உடையவராய்' என்றே உரை கூறினார். மொய்ம்பொடு என்பதில் உள்ள 'ஒடு' தவம், மூவரில் என்பவற்றுடன் சேர்க்கவும். மழுவின் வாளின் நன்மன்னரை என்று பிரித்துப் பொருள் கோடல் எளிது. வாளில் நன்மன்னரை நூறி முழுகின பரசுராமன் என்றும் பொருள் தரும். அப்போது முழுகினான் - வினையால் அணையும் பெயர். முழுகினான் - வினையால் அணையும் பெயர். முழுகினான்*

*வாளினன் என்று இசையும், முழுகினான் என்னும் தெரிநிலைவினைமுற்று பெயரெச்சமாக வந்தது (நன் - புறனடை)* ***(27)***

***5096. ஏக வாளிஅவ் இந்திரன் காதல் மேல்***
***போக ஏவி, அதுகண் பொடித்த நாள்,***
***காகம் முற்றும்ஓர் கண் இல ஆகிய***
***வேக வென்றியைத்தன் தலைமேல் கொள்வாள்.***

***ஏகவாளி*** *- ஒற்றைஅம்பை;* ***அ இந்திரன் காதல் மேல்*** *- (காகமாய் வந்த) அந்த இந்திரன் புதல்வனாகிய சயந்தன் மேல்;* ***போக ஏவி*** *- செல்லும்படி பிரயோகித்து;* ***அது*** *- அந்த அம்பானது;* ***கண் பொடித்த நாள்*** *- கண்ணை அழித்த காலத்தில்;* ***காகம் முற்றும்*** *- எல்லாக் காகங் கட்கும்;* ***ஓர் கண் இலவாகிய*** *- ஒற்றைக் கண் இல்லாதபடி ஆன;* ***வேக வென்றியை*** *- தடையற்ற வெற்றிச் சிறப்பை;* ***தன்தலைமேற்கொள்வாள்*** *- தன்னுடைய தலைமேலே வெற்றி கொண்டாடுவாள்.*

*'சித்திரகூடத்திருப்ப' என்னும் பெரியாழ்வார் பாசுரத்தையும், நாட்டு வழக்கையும் அடியொற்றி இப்பாடல் எழுந்தது. இந்திரன் செம்மல் - சயந்தன்; குற்றவாளியாகிய சயந்தன் கண் ஒன்றுமே இராமன்அம்புக்குஇலக்காயிற்று. எனினும் அவன் இனமும் ஒரு கண் இழந்தன என்பார். 'கண்ணிலவாகிய வேகவென்றி' என்றார். எனவே ஆகிய பாடம் சிறக்கும் என்று அண்ணாமலை - பதி - பேசும். (கண்ணில் என்புழி வாக்கிய பாடம் ஒதுக்கப்பட்டது)* ***(28)***

***5097. வெவ்விராதனை மேவு அருந் தீவினை***
***வவ்வி, மாற்றஅருஞ் சாபமும் மாற்றிய***
***அவ் இராமனைஉன்னி, தன் ஆர் உயிர்***
***செவ்விராது,உணர்வு ஓய்ந்து, உடல் தேம்புவாள்--***

***வெவ் விராதனை*** *- கொடுமைசெய்யும் விராதனை;* ***மேவு*** *- சென்று சேர்ந்த;* ***அருந் தீவினை வவ்வி*** *- கொடிய பாவங்களை வாங்கிக் கொண்டு;* ***மாற்ற அரும்*** *- வேறு எவராலும் போக்க முடியாத;* ***சாபமும்*** *- சாபத்தையும்;* ***மாற்றிய*** *- போக்கிய;* ***அவ் இராமனை உன்னி*** *- அந்த இராமனை நினைந்து;* ***தன் ஆருயிர்*** *- தன்னுடைய அருமையான உயிர்;* ***செவ் இராது*** *- செம்மையாய் (உறுதியாய்) இல்லாமல்;* ***உணர்வு ஓய்ந்து*** *- அறிவு தளர்ச்சி அடைந்து;* ***உடல் தேம்புவாள்*** *- உடல் இளைப்பாள்.*

*விராதனையேமன்னித்த பெருமான் தன்பால் அருளின்றி உள்ளான்; காரணம் தன் மேல் சீற்றம் போலும் என்று கருதும் போது பிராட்டியின் துன்பம் அளவு கடந்தது.* ***(29)***

**கலி விருத்தம்**

***(வேறு)***

***5098. இருந்தனள்;திரிசடை என்னும் இன் சொலின்***
***திருந்தினாள்ஒழிய, மற்று இருந்த தீவினை***

***அருந் திறல்அரக்கியர், அல்லும் நள் உறப்***
***பொருந்தலும்,துயில் நறைக் களி பொருந்தினார்.***

***இருந்தனள் -*** *(பிராட்டி) இருந்தாள்;* ***திரிசடை எனும் -*** *திரிசடை என்கின்ற;* ***இன்சொலின் திருந்தினாள் ஒழிய -*** *இனிய சொற்கள் பேசுவதில் திருத்தம் பெற்ற மங்கையைத் தவிர;* ***இருந்த -*** *(பிராட்டியைக் காத்துக் கொண்ட) சுற்றியிருந்த;* ***அருந்திறல் தீவினை -*** *பேராற்றலும் தீவினையும் உடைய;* ***அரக்கியர் -*** *அரக்கப் பெண்கள்;* ***நள் அல் உற பொருந்தலும் -*** *நடுச்சாமத்தை இரவு அடைந்த அளவில்;* ***துயில் நறைக்களி -*** *உறக்கமாகிய கள்ளின் மயக்கத்தில்;* ***பொருந்தினார் -*** *ஐக்கியமானார்கள்; இன்சொலின்திருந்தினள் என்னும் தொடர் மங்கை என்னும் பொருள் தந்து நின்றது. திரிசடை என்னும் மங்கை என்க. இருந்தனள் என்னும் தெரிநிலை வினைமுற்றுக்கு எழுவாய் ஒளியிலா மெய்யள். 42. உணங்கிய நங்கை எழுவாயாயின் அங்கே ஒரு இருந்தனள் என்னும் முற்று உள்ளது. ஆதலின் அது பொருந்தாது. இவ் விருத்தம் விளம் - விளம் - மா - கூவிளம் என்னும் சீர்களைப் பெற்று வரும். இத்தகைய பாடல்கள் இந்நூலில் 2177 உள்ளன. (மணிமலர் 76)*
***(30)***

*சீதைதிரிசடையிடம் உற்றது கூறல்*

***5099. ஆயிடை,திரிசடை என்னும், அன்பினால்***
***தாயினும்இனியவள்தன்னை நோக்கினாள்,***
***'தூய நீ கேட்டி,என் துணைவி ஆம்' எனா,***
***மேயது ஓர்கட்டுரை விளம்பல் மேயினாள்.***

***ஆயிடை -*** *(அரக்கியர்உறங்கியிருந்த) அப்பொழுது (பிராட்டி);* ***திரிசடை என்னும் -*** *திரிசடை என்னும் பெயர் பெற்ற;* ***அன்பினால் -*** *அன்பினாலே;* ***தாயினும் இனியவள் தன்னை -*** *தாயைவிட இனிமையானவளை;* ***நோக்கினாள் -*** *பார்த்து;* ***தூயநீ -*** *பரிசுத்தமாயிருக்கும் நீ;* ***கேட்டி -*** *கேட்பாயாக !* ***(நீ) என் துணைவியாம் -*** *நீ என்னுடைய தோழியாவாய்;* ***எனா -*** *என்று;* ***மேயது ஓர் கட்டுரை -*** *அனுபவித்ததை உணர்த்தும் ஒப்பற்ற மொழியை;* ***விளம்பல் மேயினாள் -*** *சொல்லத் தொடங்கினாள்.*

*அரக்கியர் உறங்கும்சமயத்தில் பிராட்டி திரிசடையிடம் தான் அனுபவத்திற்கண்டதைக் கூறினாள். மேயது - அனுபவித்தது. மேயது என்னும் தெரிநிலை முற்று பெயரெச்சமாயிற்று. (மேய கட்டுரை) மேய கட்டுரை அனுபவமொழி. கட்டுரை என்பது தனித்தன்மையிழந்து மொழி என்னும் பொருள் தந்தது.* ***(31)***

***5100. 'நலம் துடிக்கின்றதோ ? நான் செய் தீவினைச்***
***சலம் துடித்து,இன்னமும் தருவது உண்மையோ ? --***
***பொலந் துடிமருங்குலாய் ! - புருவம், கண், முதல்***
***வலம்துடிக்கின்றில; வருவது ஓர்கிலேன்.***

***பொலந்துடிமருங்குலாய் -*** *பொன்னால் செய்யப்பெற்ற உடுக்கை போன்ற இடையை உடைய திரிசடையே;* ***புருவம், கண் முதல் -*** *புருவமும், கண்ணும்,*

*முதலியன;* **வலம் துடிக்கின்றில -** வலப்பக்கம் துடிக்கவில்லை; **நலம் துடிக்கின்றதோ -** *நன்மை* *249*

*என்னையடையத் துடித்துக்கொண்டுள்ளதோ (அல்லது);* **நான் செய் -** நான் முன்பு செய்த; **தீவினைச் சலம் -** தீவினையால் எழுந்த கொடுமை; **துடித்து -** துடிதுடித்து (என் பக்கம் வந்து); **இன்னமும் தருவது -** இதற்கு மேலும் தரக்கூடிய துன்பம்; **உண்மையோ ? -** உள்ளதா?; **வருவது ஓர்கிலேன் -** இனிமேல் நிகழ்வதை ஆராய முடியாமல் உள்ளேன். ***(32)***

***5101. 'முனியொடு மிதிலையில் முதல்வன் முந்து நாள்,***
***துனி அறு புருவமும்,தோளும், நாட்டமும்,***
***இனியன துடித்தன; ஈண்டும், ஆண்டு என***
***நனிதுடிக்கின்றன; ஆய்ந்து நல்குவாய்.***

**முதல்வன் -** *(எனக்கு)ஆதாரமான இராமபிரான்;* **மிதிலையில் -** மிதிலை மா நகரில்; **முனியொடு முந்து நாள் -** கோசிக முனிவனுடன் வந்த காலத்தில்; **துனி அறு -** குற்றம் அற்ற; **புருவமும் தோளும் நாட்டமும் -** புருவமும் தோளும் கண்ணும்; **இனியன துடித்தன -** இன்பத்தை விளைவிப்பனவாய் துடித்தன; **ஈண்டும் -** இச்சமயத்திலும்; **ஆண்டு என -** அங்கே துடித்தாற் போல; **நனி துடிக்கின்றன -** இடையறாமல் துடிக்கின்றன; (இதன் காரணத்தை) **ஆய்ந்து நல்குவாய் -** (ஆராய்ந்து) கூறுவாயாக.

*''நல் எழில்உண்கணும் ஆடுமால் இடனே'' (கலி.11)* ***(33)***

***5102. 'மறந்தனென்; இதுவும் ஓர் மாற்றம் கேட்டியால்;***
***அறம் தரு சிந்தைஎன் ஆவி நாயகன்,***
***பிறந்த பார்முழுவதும் தம்பியே பெறத்***
***துறந்து, கான்புகுந்த நாள், வலம் துடித்ததே.***

**மறந்தனென் -** நான்ஒன்றைச் சொல்ல மறந்துவிட்டேன்; **இதுவும் ஓர் மாற்றம் -** இந்த ஒரு மொழியையும்; **கேட்டி -** கேள்; **அறம் தரு சிந்தை -** அறத்தைப் பாதுகாக்கின்ற உள்ளத்தைப் பெற்ற; **என் ஆவி நாயகன் -** என்னுடைய உயிர்த் தலைவன்; **பிறந்த பார் முழுவதும் -** மூத்தவனாகப் பிறந்ததனால் அடைய வேண்டிய பூமி முழுவதையும்; **தம்பியே பெற -** தம்பியாகிய பரதனே அடையும்படி; **துறந்து -** (அவற்றையெல்லாம்) விட்டுவிட்டு; **கான் புகுந்த நாள் -** காடு புகுந்த காலத்து; **வலம் துடித்தது -** வலப்பக்கம் துடித்தது. கேட்டி - ஆல் -அசை. ஆவி நாயகன் - உயிர்த்தலைவன். மகளிர்க்கு வலம் துடித்தல் தீமை யாதலின் இது சீதைக்குத் தீமையை அறிவிப்பதாக ஆயிற்று. ***(34)***

***5103. 'நஞ்சு அனையான், வனத்து இழைக்க நண்ணிய***
***வஞ்சனை நாள்,வலம் துடித்த; வாய்மையால்***
***எஞ்சல; ஈண்டுதாம் இடம் துடிக்குமால்;***
***"அஞ்சல்" என்றுஇரங்குவாய்! அடுப்பது யாது ?'***
***என்றாள்.***

***அஞ்சல் என்றுஇரங்குவாய்*** - *பயப்படாதே என்று கருணை காட்டுபவளே !* ***நஞ்சு அனையான்*** - *விடம் போன்ற இராவணன்;* ***வனத்து*** - *காட்டிலே;* ***வஞ்சனை இழைக்க*** - *வஞ்சகத்தைப் புரிய எண்ணி;* ***நண்ணிய நாள்*** - *(பஞ்சவடியை) அடைந்த அன்று;* ***வலம் துடித்த*** - *வலப்புற அங்கங்கள் துடித்தன;* ***வாய்மையால்*** - *(இத்துடிப்பு நிகழ்ச்சிகள் நன்மை தீமை) உண்மையால் உணர்த்தும்;* ***ஈண்டு*** - *இப்போது;* ***எஞ்சல*** - *குறைவில்லாதன;* ***இடம் துடிக்கும்*** - *இடப்புறத்து அங்கங்கள் துடிக்கும்;* ***அடுப்பது யாது*** - *என்னை வந்து அடையும் நன்மை யாது;* ***என்றாள்*** - *என்று கூறினாள்.*

*இரங்குவாய்என்பது திரிசடையை நோக்கிய விளி. வாய்மை - ஆல், துடிக்கும் ஆல் - ஆல்கள் - அசை. வலம் துடித்த வாய்மையால் என்று சேர்த்துப் பொருள் கூறுவாரும் உளர்.* ***(35)***

*திரிசடை நற்குறிப்பயன் கூறுதல்*

***5104. என்றலும்,திரிசடை, 'இயைந்த சோபனம் !***
***நன்று இது ! நன்று!' எனா, நயந்த சிந்தையாள்,***
***'உன் துணைக்கணவனை உறுதல் உண்மையால்;***
***அன்றியும்,கேட்டி' என்று, அறைதல் மேயினாள்.***

***என்றலும்*** - *என்றுபிராட்டி கூறியதும்;* ***நயந்த சிந்தையாள்*** - *அன்பு நிரம்பிய உள்ளமுடைய;* ***திரிசடை*** - *திரிசடையானவள் (பிராட்டியை நோக்கி);* ***சோபனம் இயைந்த*** - *(உனக்கு) மங்களங்கள் வந்துள்ளன;* ***இது நன்று நன்று*** - *இக் குறி நல்லது நல்லது;* ***எனா*** - *என்று கூறி வாழ்த்தி;* ***உன் துணைக் கணவனை*** - *உன்னுடைய துணைவனான நாயகனை;* ***உறுவது உண்மை*** - *அடைவது சத்தியம்;* ***அன்றியும்*** - *அல்லாமலும்;* ***கேட்டி என்று*** - *யான்கூறுவதைக் கேள் என்று;* ***அறைதல் மேயினாள்*** - *சொல்லத் தொடங்கினாள். சிந்தையாள் -குறிப்புமுற்று, பெயரெச்சமாய் திரிசடை என்னும் பெயர் கொண்டது. அன்றி, சிந்தையை உடையவளாய் அறைதல் மேயினாள் என்று கூறுதலும் நன்று. (உண்மை) ஆல். அசை. சோபனம் - மங்களச் சொல் 'ஏழை சோபனம்' என்பது அனுமன் வாழ்த்து (கம்ப. 9967.)* ***(36)***

***5105. 'உன் நிறம் பசப்பு அற, உயிர் உயிர்ப்புற,***
***இன் நிறத் தேன்இசை, இனிய நண்பினால்,-***
***மின் நிறமருங்குலாய் !- செவியில், மெல்லென,***
***பொன் நிறத்தும்பி வந்து, ஊதிப் போயதால்.***

***நிறம் மின்மருங்குலாய்*** - *நன்னிறம் பெற்றமின்போன்ற இடையை உடைய பிராட்டியே;* ***உன் பசப்பு நிறம் அற*** - *உன்னுடைய மேனியில் உள் ளபசலை நிறம் அற்றுப் போகவும்;* ***உயிர்*** - *உன்னுடைய உயிரானது;* ***உயிர்ப்புஉற*** - *செழிப்படையவும்;* ***பொன் நிறத் தும்பி*** - *பொன் போன்ற மேனியைப்பெற்ற வண்டு;* ***மெல்லென வந்து*** - *மெதுவாக உன் பக்கத்திலே வந்து;* ***செவியில்*** - *உன்னுடைய காதுகளில்;* ***இன்நிறத் தேன் இசை*** - *இனிமையானதேன் போன்ற இசையை;* ***இனிய நண்பினால்*** - *நன்மையை விளைவிக்கும்அன்புடன்;* ***ஊதிப் போயது*** - *இசைத்துச் சென்றது.*

*பசப்பு - பசலை.கணவனைப் பிரிந்தாரின் உடல் நிறம் மாறுவதைப் 'பசலை' என்பர். ஊதுதல் - இசைத்தல். ஒரு செய்தியைப் பிறரறியாமல் கூறுவதை ஊதுதல் என்னும் வழக்கு அன்றும் இருந்தது போலும்.* ***(37)***

## *5106. 'ஆயது தேரின், உன் ஆவி நாயகன்*
## *ஏயது தூது வந்துஎதிரும் என்னுமால்;*
## *தீயது தீயவர்க்குஎய்தல் திண்ணம்; என்*
## *வாயது கேள்' என,மறித்தும் கூறுவாள்.*

***தேரின் -*** *ஆராய்ந்தால்;* ***ஆயது -*** *அந்த வண்டு;* ***உன் ஆவி நாயகன்-*** *உன்னுடைய உயிர் போன்ற தலைவனால்;* ***ஏயது தூது -*** *ஏவப் பெற்றதூதுவன்;* ***வந்து எதிரும் -*** *வந்து சந்திப்பான்;* ***என்னும் -*** *என்று தெரிவிக்கும்;* ***தீயவர்க்கு -*** *கொடியவர்களுக்கு;* ***தீயது எய்தல் -*** *தீமை வருவது;* ***திண்ணம் -*** *உறுதியாகும் (அதைஉறுதிப்படுத்த);* ***என் வாயது -*** *என்பால் நிகழ்ந்த அனுபவத்தை;* ***கேள் என -*** *கேட்பாயாக! என்று;* ***மறித்தும் கூறுவாள் -*** *மேலும் சொல்லத் தொடங்கினாள்.*

*அந்த வண்டு உன்உயிர்த்தலைவனால் ஏவப்பெற்ற தூதுவன் உன்னைச் சந்திப்பான் என்பதை அறிவிக்கும் என்றாள். ஆயது - வெறும் சுட்டாய் உள்ளது. 'ஆயது அறிந்தனர்' (கம்ப. 412)* ***(38)***

## *5107. 'துயில் இலை ஆதலின், கனவு தோன்றல;*
## *அயில்வழி அனையகண் அமைந்து நோக்கினேன்;*
## *பயில்வன பழுதுஇல, பழுதின் நாடு என;*
## *வெயிலினும்மெய்யன விளம்பக் கேட்டியால்.*

***துயில் இலை -*** *நீஉறங்குவது இல்லை;* ***ஆதலின் -*** *ஆகையினால் (உனக்கு);* ***கனவு தோன்றல -*** *கனவுக் காட்சிகள் தெரிவதில்லை;* ***அயில் விழி அனைய கண் அமைந்து -*** *கூரிய வேல் போன்ற கண்கள் மூடுதலாலே;* ***நோக்கினேன் -*** *கனவுக் காட்சிகளைக் கண்டேன்;* ***பழுதின் நாடு -*** *குற்றத்துக்கு உறைவிடமான இந்நாட்டில்;* ***பயில்வன -*** *அந்தக் கனவில் நிகழ்ந்தவை;* ***பழுது இல -*** *குற்றம் அற்றவை;* ***பண்பு தூயன -*** *பண்பால் தூய்மை பெற்றவை;* ***வெயிலினும் -*** *சூரியனை விட;* ***மெய்யன -*** *உண்மையுடையவை (அதனை);* ***விளம்பக் கேட்டி -*** *சொல்லக் கேள்.*

*அயில்விழி - கண் என்னும் பொருட்டாய் நின்றது. வேற்கண் கண்ணென்னும் மாத்திரை என்று உரை வகுத்தார் நச்சர். துயில் 'அலை' என்னும் பாடம் சிறக்கும் போலும். (சிந். 1487) 'மெய்யன' என்பது பாடமானால், உதயமாதலும் அஸ்தமித்தலும் தப்பாதுடைய சூரியன் போல் தப்பாது பலிக்கும் அவைகள். நான் கண்ட சொப்பன வகைகள் என ஆம் (வி.கோ. பிள்ளை)* ***(39)***

## *5108. 'எண்ணெய்பொன் முடிதொறும் இழுகி, ஈறு இலாத்*
## *திண் நெடுங்கழுதை பேய் பூண்ட தேரின்மேல்,*
## *அண்ணல் அவ்இராவணன், அரத்த ஆடையன்,*
## *நண்ணினன்,தென்புலம் - நவை இல் கற்பினாய் !'*

***நவை இல்கற்பினாய் -*** *குற்றமற்ற கற்புடையபிராட்டியே;* ***அண்ணல் வேல் இராவணன் -*** *சிறந்த வேலேந்திய இராவணன்;* ***பொன்முடிதொறும் எண்ணெய் இழுகி -*** *அழகிய பத்துத்தலைகளிலும் எண்ணெய்பூசிக்கொண்டு;* ***இரத்த ஆடையன் -*** *சிவந்த ஆடையை அணிந்தவனாய்;* ***கழுதை பேய் பூண்ட -*** *கழுதைகளும் பேய்களும் பூட்டப்பெற்ற;* ***ஈறு இலா -*** *சென்று சேரும் இறுதியை அறியாத;* ***திண் நெடும் தேரின் மேல் -*** *திண்மையான பெரிய தேரிலே (ஏறி);* ***தென் புலம் நண்ணினன் -*** *தெற்குத் திசையை அடைந்தான்.*

*வாள் அரக்கன்என்று திருமுறைகள் பேசும். கம்பரும் அங்ஙனமே கூறுவார். கனவில் செவ்வாடை, எண்ணெய்ப் பூச்சு, தேரில் செல்லல் தென் திசையில் போதல் முதலியன கேட்டுக்கு அறிகுறி. வால்மீகத்தில் திரிசடை அரக்கியர்பால் கூறுகிறாள்.*
***(40)***

***5109. 'மக்களும்,சுற்றமும், மற்றுளோர்களும்,***
***புக்கனர் அப்புலம்; போந்தது இல்லையால்;***
***சிக்கு அறநோக்கினென்; தீய, இன்னமும்***
***மிக்கன, கேட்க'என, விளம்பல் மேயினாள்.***

***மக்களும்சுற்றமும் -*** *இராவணனின்புதல்வர்களும் உறவினர்களும்;* ***மற்று உளார்களும் -*** *மற்றைய அரக்கர்களும்;* ***அப்புலம் புக்கனர் -*** *அந் தத்தென்திசையை அடைந்தனர்;* ***போந்தது இல்லை -*** *(அவர்கள்) திரும்பிவரவில்லை;* ***சிக்கு அற நோக்கினென் -*** *(இதனை) குழப்பமின்றிப் பார்த்தேன்;* ***இன்னமும் -*** *மேலும்;* ***மிக்கன தீய -*** *மிகுதியான தீமை விளைவிக்கும் கனவுக் காட்சிகளை;* ***கேட்க என -*** *கேட்பாயாக என்று;* ***விளம்பல் மேயினாள் -*** *சொல்லத் தொடங்கினாள்.*

*போந்ததுஎன்பது புகுந்தது என்பதன் மாற்று வடிவம்.* ***(41)***

***5110. 'ஆண் தகைஇராவணன் வளர்க்கும் அவ் அனல்***
***ஈண்டில;பிறந்தவால், இனம் கொள் செஞ் சிதல்;***
***தூண்ட அரு மணிவிளக்கு அழலும் தொல் மனை***
***கீண்டதால், வானஏறு எறிய, கீழை நாள்.***

***ஆண்டகை இராவணன்-*** *ஆண்மையுடைய இராவணன்;* ***வளர்க்கும் அவ் அனல் -*** *வளர்க்கின்ற வேள்விக் கனல்;* ***ஈண்டில -*** *வளரவில்லை (வேள்விக்குண்டத்தில்);* ***இனம் கொள் செஞ்சிதல் -*** *கூட்டமான செங்கரையான்கள்;* ***பிறந்த -*** *உற்பத்தியாகிவிட்டன;* ***தூண்ட அரு மணி விளக்கு -*** *தூண்டுதலை வேண்டாத தீபங்கள்;* ***அழலும் தொல் மனை -*** *ஒளிவீசும் பழைய அரண்மனையானது;* ***கீழைநாள் வான ஏறுஎறிய -*** *விடியற்காலை பேரிடிகள் தாக்கப் பெற்றதால்;* ***கீண்டது -*** *பிளக்கப்பட்டு இடிந்தன.*

*கீழைநாள் -நாளின் கீழ்ப்பகுதி வைகறைவிடியல். மேல்பகுதி - மாலையாகும்.*
***(42)***

***5111. 'பிடி மதம்பிறந்தன; பிறங்கு பேரியும்,***
***இடி எனமுழங்குமால், இரட்டல் இன்றியே;***

***தடியுடைமுகிற்குலம் இன்றி, தா இல் வான்***
***வெடிபடஅதிருமால்; உதிரும், மீன் எலாம்.***

***பிடி** - பெண் யானைகட்கு; **மதம் பிறந்தன** - மதப் புனல் தோன்றின; **பிறங்கு பேரியும்** - விளக்கமான பெரு முரசங்களும்; **இரட்டல் இன்றியே** - (வீரர்களால்) மாறி மாறி அடிக்கப்படாமல்; **இடியென முழங்கும்** - இடியைப் போல (தாமே) முழங்கும்; **தடி உடை முகிற் குலம் இன்றி** - மின்னலுடன் கூடிய மேகக் கூட்டம் இல்லாமலேயே; **தாவு இல் வான்** - நீக்கம் அற்ற ஆகாயம்; **வெடி பட அதிரும்** - (அண்டங்கள்) பிளவு படும்படி அதிரும்; **மின் எலாம் உதிரும்** - எல்லா நட்சத்திரங்களும் சிதறி விழும்.*

*'பிடியெலாம்மதம் பெய்திட ... வான் இடியும் வீழ்ந்திடும்' (கம்ப. 2946) தாவு இல் - நீக்கம் அற்ற. 'யானை தாவரும் திசையில் நின்று சலித்திட' (கம்ப. 7328) இரண்டு கோல்களால் மாறி மாறி அடிப்பதை இரட்டல் என்பர். **(43)***

***5112. 'வில்-பகல் இன்றியே, இரவு விண்டு அற,***
***எல் பகல்எறித்துளது என்னத் தோன்றுமால்;***
***மல் பக மலர்ந்ததோள் மைந்தர் சூடிய***
***கற்பக மாலையும்புலவு காலுமால்.***

***வில்** - ஒளியொடு கூடிய; **பகல் இன்றி** - பகற்காலம் இல்லாமல் (இரவில்); **இரவு விண்டு அற** - இருள் நீங்கி ஒழியும்படி; **எல்பகல் எறிந்துளது என்ன** - சூரியன் பகலிலே ஒளியைப் பரப்புவது போல்; **தோன்றும்** - காட்சி தரும்; **மல்பக** - (எதிர்த்த) மல்லர்கள் பிளவு படும்படி; **மலர்ந்த தோள் மைந்தர்** - விரிந்த தோள்களையுடைய வீரர்கள்; **சூடிய** - அணிந்த; **கற்பக மாலையும்** - (தெய்வத்தன்மையுடைய) கற்பக மலரால் கட்டப் பெற்ற மாலையும்; **புலவு காலும்** - புலால் நாற்றம் வீசும். இரவில்உண்டாகும் ஒளியும், மாலை புலால் நாற்றம் வீசுவதும் கேட்டுக்கு அறிகுறி. கற்பகம் தெய்வத்தன்மை உடையது. அதில் புலால் நாற்றம் வீசுவது அதிசயம். **(44)***

***5113. 'திரியுமால், இலங்கையும் மதிலும்; திக்கு எலாம்***
***எரியுமால்;கந்தர்ப்ப நகரம் எங்கணும்***
***தெரியுமால்;மங்கல கலசம் சிந்தின***
***விரியுமால்;விளக்கினை விழுங்குமால், இருள்.***

***இலங்கையும்மதிலும் திரியும்** - இலங்கை மாநகரமும்மதில்களும் சுழலும்; **திக்கு எலாம் எரியும்** - எல்லாத் திசைகளிலும் தீப்பற்றி எரியும்; **எங்கணும்** - எல்லா இடங்களிலும்; **கந்தர்ப்ப நகரம் தெரியும்** - கந்தர்வ நகரங்கள் காட்சி தரும்; **மங்கல கலசம் சிந்தும்** - மங்கல கலசங்கள் சிதையும்; **விளக்கினை விழுங்கும் இருள்** - விளக்கையே விழுங்கும் இருளானது; **விரியும்** - எவ்விடத்தும் பெருகும்.*

*ஆல்கள் - அசை.வானமேகங்கள் நகரம்போல் காட்சி தருவதைக் கந்தர்வ நகரம் என்று கூறுவர். கந்தர்ப்ப நகரம் - பெண் குறி (வி.கோ. பிள்ளை) கந்தர்வ நகரம் எல்லாத் திக்கிலும் எப்போதும் தோன்றுமாயின் அது அரசனுக்கும் தேசத்திற்கும் பேரச்சத்தை விளைவிக்கும் என்று வராகமிகிரர் கூறியுள்ளார். (வை.மு.கோ) கந்தர்வ நகரம் -*

*மன்மதன் படை வீடான சோலை என்பது பழைய உரை. (அடை - பதி)*
***(45)***

## *5114. 'தோரணம்முறியுமால், துளங்கி; சூழி மால் வாரணம்முறியுமால், வலத்த வாள் மருப்பு; ஆரண மந்திரத்துஅறிஞர் நாட்டிய பூரண குடத்து நீர்நறவின் பொங்குமால்.*

***தோரணம் -*** *நகரில்உள்ள தோரண கம்பங்கள்;* ***முறியும் -*** *ஒடியும்;* ***சூழிமால் வாரணம் -*** *முகபடாம் அணிந்த யானைகள்;* ***துளங்கி -*** *நடுக்கம் அடைய (அதனுடைய);* ***வலத்த வாள் மருப்பு -*** *வலிய நீண்ட தந்தங்கள்;* ***முறியும் -*** *ஒடியும்;* ***ஆரணம் மந்திரத்து அறிஞர் -*** *வேத மந்திரங்களை அறிந்த அந்தணர்களால்;* ***நாட்டிய -*** *பிரதிஷ்டை செய்யப் பெற்ற;* ***பூரண குடத்து நீர் -*** *பூரண கும்பத்தில் உள்ள தீர்த்தம்;* ***நறவில் பொங்கும் -*** *கள்ளைப் போலத் ததும்பி வடியும். துளங்கி என்னும்செய்து என்னும் எச்சம் செய என்னும் வாய்பாட்டுப் பொருளில் வந்துளது. காய்ச்சப் பொங்குவது கூழ் - காய்ச்சாமல் பொங்குவது கள் (அடை - பதி)* ***(46)***

## *5115. 'விண்தொடர் மதியினைப் பிளந்து, மீன் எழும் ; புண் தொடர்குருதியின் பொழியுமால் மழை ; தண்டொடு,திகிரி, வாள், தனு என்று இன்னன, மண்டு அமர்புரியுமால், ஆழி மாறு உற.*

***மீன் -*** *நட்சத்திரங்கள்;* ***விண்தொடர் மதியினைப் பிளந்து -*** *ஆகாயத்தில் செல்லும் சந்திரனைப் பிளந்து கொண்டு;* ***எழும் -*** *மேலே போகும்;* ***மழை -*** *ஆகாயத்தை மூடிய மேகம்;* ***தொடர்புண்குருதி -*** *ஆறாத புண்ணின் இரத்தத்தை;* ***பொழியும் -*** *கொட்டும்;* ***தண்டு திகிரி வாள் தனு என்று இன்னன -*** *தண்டாயுதம், சக்கரம், வாள், வில் என்று பேசப்படுகிற (திருமாலின்) ஆயுதங்கள்;* ***ஆழி மாறு உற -*** *கடல்கள் ததும்பிக் கொந்தளிக்க;* ***மண்டு அமர் புரியும் -*** *நெருங்கிப் போர் செய்யும்.*

*'மண்டு அமர்புரியும்' எனவே ஏவுவார் இன்றி படைகள் தாமே போர் செய்யும் என்க. ஆல் - அசை. குருதி - இன் - பொழியும். இன் - அசை. தண்டொடு என்பதில் உள்ள ஒடு அசை. போது பொதுள என்பதைப் 'போதொடு பொதுள' என்று குறுந்தொகை பேசும் (குறுந்.155.)* ***(47)***

## *5116. 'மங்கையர்மங்கலத் தாலி, மற்றையோர் அங்கையின்வாங்குநர் எவரும் இன்றியே, கொங்கையின்வீழ்ந்தன; குறித்த ஆற்றினால், இங்கு, இதின்அற்புதம், இன்னும் கேட்டியால்.*

***மங்கையர் -*** *அரக்கிகளின்;* ***மங்கலத்தாலி -*** *மங்களத்தை விளைவிக்கும் தாலிகள்;* ***அங்கையில் வாங்குநர் மற்றவர் எவரும் இன்றி -*** *கைகளால் அறுப்பவர்கள் பிறர் எவரும் இல்லாமல் (தாமாகவே);* ***குறித்த ஆற்றினால் -*** *தீய அடையாளங்கள் என்று கூறப்பட்டபடி;* ***கொங்கையில் விழுந்தன -*** *மார்பில் வீழ்ந்தன;* ***இங்கு -*** *இந்த*

*இலங்கையில் (நிகழ்ந்த);* ***இதின் அற்புதம் -*** *(இந்தக்) கனாக் காட்சியின் அதிசயத்தை;* ***இன்னும் கேட்டி -*** *மேலும் கேட்பாயாக.* ***(48)***

***5117. 'மன்னவன்தேவி, அம் மயன் மடந்தைதன்***
***பின் அவிழ்ஓதியும், பிறங்கி வீழ்ந்தன;***
***துன் அருஞ் சுடர்சுடச் சுறுக்கொண்டு ஏறின;***
***இன்னல் உண்டுஎனும் இதற்கு ஏது ஈது எனா;***

***மன்னவன் தேவி -*** *அரசனானஇராவணனின் தேவியாகிய;* ***அ மயன் மடந்தை தன் -*** *அந்த மயனின் புதல்வியாகிய மண்டோதரியின்;* ***அவிழ் பின்ஓதியும் -*** *நெகிழ்ந்த பின்னலையுடைய கூந்தலும்;* ***பிறங்கி வீழ்ந்தன -*** *மாறுபட்டுப் பூமியில் விழுந்தன (அந்தக் கூந்தல்);* ***துன் அரும் -*** *நெருங்க முடியாத (வெப்பமான);* ***சுடர் சுட -*** *நெருப்புச் சுடுதலால்;* ***சுறுக்கொண்டு ஏறின -*** *சுறு நாற்றம் மிக்கன;* ***இதற்கு ஏது ஈது -*** *இந்த நிகழ்ச்சிக்கு ஏது வாசகம். இதுவே;* ***இன்னல் உண்டு எனும் -*** *(இராவணன் செய்த) துன்பம் மிகுதி;* ***என்பதே எனா -*** *என்பதேயாகும். என்று சொன்னாள்.*

*கொண்டு - அசை.அன்றேல், சுறு நாற்றத்தைப் பரப்பிக் கொண்டு இருந்தன என்றும் கூறலாம். 'என்று கொண்டு இளையர் கூறி' ஏது - ஆராய்ச்சி. (கம்ப. 1605)*
***(49)***

***5118. என்றனள்இயம்பி, 'வேறு இன்னும் கேட்டியால்,***
***இன்று, இவண்,இப்பொழுது, இயைந்தது ஓர் கனா;***
***வன் துணைக்கோள்அரி இரண்டு மாறு இலாக்***
***குன்றிடைஉழுவைஅம் குழுக் கொண்டு ஈண்டியே,***

***என்றனள் இயம்பி-*** *என்றுகூறி (திரிசடை);* ***வேறு -*** *வேறுபட்ட;* ***ஓர் கனா, இன்னும் கேட்டி -*** *ஒரு கனவுக் காட்சியை மேலும் கேள் (அக்காட்சி);* ***இன்று இவண் இப்பொழுது -*** *இன்றைத் தினத்தில் இவ்விடத்தில் இச்சமயத்தில்;* ***இயைந்தது -*** *உண்டாகியது;* ***வன் -*** *வலிமை மிக்க;* ***துணை -*** *ஒன்றற்கொன்று துணையாயிருக்கும்;* ***இரண்டு கோள் அரி -*** *இரட்டைச் சிங்கங்கள்;* ***குன்றிடை -*** *மலையின் கண்ணே (இருந்த);* ***மாறு இலா -*** *தமக்குள் கருத்து வேறுபாடில்லாத;* ***உழுவை குழுக் கொண்டு -*** *புலிக்கூட்டத்தைத் துணையாகச் சேர்த்துக் கொண்டு;* ***ஈண்டி -*** *(இலங்கையில்) நெருங்கி.*

*இம் மண் உலகில்செல்வர் இப்போது இல்லை நோக்கினோம் (திருவாய் -3-96) என்ற இடத்தில் உலகில் செல்வர் இல்லை. இப்போதுநோக்கினோம் என்றுகூட்டிப் பொருள் செய்த நம்பிள்ளையை உள்ளுக. கவிதை கிடந்தபடியே பொருள் கொள்வதில் இடர்ப்பாடுகள் பலவுள.* ***(50)***

***5119. 'வரம்பு இலா மத கரி உறையும் அவ் வனம்***
***நிரம்புறவளைந்தன; நெருக்கி நேர்ந்தன;***
***வரம்பு அறுபிணம்படக் கொன்ற; மாறு இலாப்***
***புரம் புக இருந்ததுஓர் மயிலும், போயதால்.***

***வரம்பு இலா*** - *கட்டுப்பாடு என்பது இல்லாத;* ***மத கரி உறையும்*** - *மதயானைகள் வாழ்கின்ற;* ***அவ்வனம்*** - *அந்த வனம் (சிங்கங்கள்);* ***நிரம்பு உற*** - *முடிதல் அடைய;* ***வளைத்தன*** - *சுற்றிக் கொண்டன;* ***நெருக்கி நேர்ந்தன*** - *நெருக்கிப் போர் செய்தன (அப்போது);* ***வரம்பு அறு*** - *எல்லையற்ற;* ***பிணம்படக் கொன்று*** - *பிணங்கள் விழும்படிக் கொன்று;* ***மாறு இலா*** - *பகைமையில்லாத;* ***புரம்புக*** - *தம்முடைய நகரை அடைவதற்காக;* ***இருந்தது ஓர்மயிலும்*** - *அங்கே தங்கியிருந்த ஓர் மயிலும்;* ***போயது*** - *வெளிப் போயது.*

*வனம் - இலங்கை.இரண்டு சிங்கங்கள் - இராமலக்குவர்கள் மயில் - பிராட்டி. மாறிலாப் புரம் - அயோத்தி. இவை கனவின் குறிப்புகள்.* ***(51)***

***5120. 'ஆயிரம்திருவிளக்கு அமைய மாட்டிய***
***சேயொளிவிளக்கம் ஒன்று ஏந்தி, செய்யவள்,***
***நாயகன்திருமனைநின்று, நண்ணுதல்***
***மேயினள்,வீடணன் கோயில்;-மென் சொலாய் !***

***மென் சொலாய்*** - *மென்மையாகப் பேசும் பிராட்டியே;* ***ஆயிரம் திருவிளக்கு*** - *ஆயிரம் விளக்குகள்;* ***அமைய மாட்டிய*** - *பொருத்தமாக அமைந்த;* ***சேய் ஒளி விளக்கம்*** - *நீண்டதூரம் ஒளி தரும் அடுக்குத் தீபமாகிய;* ***ஒன்று ஏந்தி*** - *ஒரு விளக்கை ஏந்திக் கொண்டு;* ***செய்யவள்*** - *சிவந்த நிறமுடைய பெண்;* ***நாயகன் திருமனை நின்று*** - *அரசனான இராவணனின் அரண்மனையிலிருந்து;* ***வீடணன் கோயில்*** - *வீடணனின் கோயிலை;* ***நண்ணுதல் மேயினள்*** - *அடைதலைப் பொருந்தினாள்.* ***(52)***

***5121. 'பொன் மனை புக்க அப் பொரு இல் போதினில்,***
***என்னை நீஉணர்த்தினை; முடிந்தது இல்' என,***
***'அன்னையே !அதன் குறை காண்' என்று, ஆயிழை,***
***'இன்னமும்துயில்க' என, இரு கை கூப்பினாள்.***

***பொன்மனை புக்கஅப் பொருஇல் போதினில்*** - *(அச்செய்யவள் ) வீடணனின் அரண்மனை அடைந்த ஒப்பற்ற சமயத்தில்;* ***நீ என்னை உணர்த்தினை*** - *நீ என்னை எழுப்பினாய்;* ***முடிந்தது 'இல்' என*** - *அக்கனவு நிறைவு பெறவில்லை என்று கூற;* ***ஆயிழை*** - *பிராட்டி;* ***அன்னையே*** - *தாயே;* ***அதன் குறை காண் என்று*** - *அக்கனவின் குறைப் பகுதியைப் பார் என்று பிராட்டி;* ***இன்னமும் துயில்க என*** - *மேலும் உறங்குக என்று கூறி;* ***இரு கை கூப்பினாள்*** - *இரண்டு கரங்களையும் குவித்தாள்.*

*பொன் என்பதைஎழுவாயாக்கி, இராச்சிய லட்சுமி வீடணனின் கோயிலுக்குப் புகுந்த சமயத்தில் என்றும் கூறலாம். 'என்று', 'என' என்று மேற்கோள் குறியீட்டுச் சொற்கள் இரண்டு முறை வந்துள்ளன. 25 ஆம் பிரதி' அதன் குறை காணுதற்கு நீ என்னும் பாடத்தைத் தருகிறது. ஏற்பின் நன்று.* ***(53)***

*அனுமன்சீதையின் இருக்கையைக் காணுதல்*

***5122. இவ் இடை,அண்ணல் அவ் இராமன் ஏவிய***
***வெவ் விடை அனையபோர் வீரத் தூதனும்,***

## அவ் இடைஎய்தினன், அரிதின் நோக்குவான்,
## நொவ் இடைமடந்தைதன் இருக்கை நோக்கினான்

***இவ் விடை*** *- இந்தச்சமயத்தில்;* ***அண்ணல்*** *- பெருமை மிக்க;* ***அ இராமன் ஏவிய*** *- அந்த இராம பிரானால் அனுப்பப் பெற்ற;* ***வெவ் விடை அனைய*** *- ஆற்றல் மிக்க காளை போன்ற;* ***போர் வீரத் தூதனும்*** *- போர் வீரம் பெற்ற தூதனாகிய அனுமன்;* ***அரிதின் நோக்குவான்*** *- (சோலையின் செறிவால்) சிரமப்பட்டுப் பார்ப்பவனாய்;* ***அ இடை மடந்தை தன்*** *- அந்த அசோகவனத்தை அடைந்து;* ***நொவ் இடை மடந்தை தன்*** *- வருந்தும் இடையை உடைய பிராட்டி;* ***இருக்கை*** *- அமர்ந்து தவம் செய்வதை;* ***நோக்கினான்*** *- பார்த்தான்.*

*நோற்பதைநோக்கினான். 'மாண நோற்று ஈண்டு இவள் இருந்த ஆறு', (கம்ப. 5141) என அனுமன் பேசுவான்.* ***(54)*** *துயிலுணர்ந்தஅரக்கியர் நிலை*

## *5123.* அவ் வயின்அரக்கியர் அறிவுற்று, 'அம்மவோ ! செவ்வை இல்துயில் நமைச் செகுத்தது ஈது !' எனா, எவ் வயின்மருங்கினும் எழுந்து வீங்கினார்-- வெவ் அயில்,மழு, எழு, சூல வெங் கையார்.

***அ வயின்*** *- அந்தச்சமயத்தில்;* ***அரக்கியர்*** *- (காவலாய் உள்ள) அரக்கிமார்கள்;* ***அறிவுற்று*** *- உறக்கம் தெளிந்து;* ***அம்மவோ*** *- அந்தோ (ஐயோ);* ***இங்கு ஈது*** *- இவ்விடத்தில் இப்படி;* ***செவ்வை இல் துயில்*** *- சிறப்புத் தராத உறக்கம்;* ***நமை செகுத்தது*** *- நம்மைக் கெடுத்து விட்டதே;* ***எனோ*** *- என்று கூறி;* ***எவ் வயின் மருங்கினும்*** *- எல்லாப் பக்கங்களிலும்;* ***எழுந்து*** *- எழுந்திருந்து;* ***வெவ் அயில்*** *- கொடிய வேலையும்;* ***மழு*** *- கோடாலியையும்;* ***எழு*** *- வளை தடியையும்;* ***சூலம்*** *- சூலத்தையும் (ஏந்திய);* ***வெம் கையார்*** *- கொடிய கைகளையுடையவராய்;* ***வீங்கினார்*** *- நெருங்கினார்கள்.*

*வீங்குதல் -நெருக்குதல் - கலாபம் வீங்க (சிந் 840) என்னும் தொடருக்கு வகுத்த உரை நோக்கத் தக்கது. செகுத்த தீங்கு எனப் பிரித்து, தீங்கு செகுத்த என்றும் உரை கூறலாம். அப்போது செகுத்தது என்பது செகுத்த என்று வந்தது; விகாரம் என்று கொள்க. ஒருமை பன்மை மயக்கம் என்று கொள்ள இடம் தரின் கொள்க. நச்சினார்க்கினியர் 'வேண்டுவ பிறிது ஒன்று உண்டோ (சிந்.2.93) என்னும் தொடரை ஒருமை பன்மை மயக்கம் என்றார்.* ***(55)***

## *5124.* வயிற்றிடைவாயினர்; வளைந்த நெற்றியில் குயிற்றியவிழியினர்; கொடிய நோக்கினர்; எயிற்றினுக்குஇடை இடை, யானை, யாளி, பேய், துயில் கொள்வெம் பிலன் என, தொட்ட வாயினர்.*

*(அந்தஅரக்கிமார்கள்)*

***வயிற்றிடை வாயினர்*** *- வயிற்றிலே வாயை உடையவர்கள்;* ***வளைந்த நெற்றியில்*** *- முன் நோக்கி வளைந்துள்ள நெற்றியிலே;* ***குயிற்றிய விழியினர்*** *- பதிக்கப் பெற்ற கண்களை உடையவர்கள்;* ***கொடிய நோக்கினர்*** *- கொடிய பார்வை உடையவர்கள்;*

***எயிற்றினுக்கு இடையிடை* -** *பற்களுக்கு நடுவில் நடுவில்;* ***யானை, யாளி, பேய்* -** *யானைகளும் யாளிகளும், பேய்களும்;* ***துயில் கொள்*-** *உறங்குகின்ற;* ***வெம்பிலன் என* -** *கொடிய மலைக்குகை போல;* ***தொட்ட வாயினர்* -** *பெரிய வாயை உடையவர்.*
***(56)***

***5125. ஒருபது கையினர், ஒற்றைச் சென்னியர்;***
***இருபது தலையினர்,இரண்டு கையினர்;***
***வெருவருதோற்றத்தர்; விகட வேடத்தர்;***
***பருவரை என, முலைபலவும் நாற்றினர்.****

*(அரக்கிகள்)*

***ஒருபதுகையினர்* -** *பத்துக் கைகளை உடையவர்கள் (ஆனால்);* ***ஒற்றைச் சென்னியர்* -** *ஒரு தலையைப் பெற்றவர்கள்;* ***இருபது தலையினர்* -** *இருபது தலைகளை உடையவர்கள் (ஆனால்);* ***இரண்டு கையினர்* -** *இரண்டுகைகளைப் பெற்றவர்கள்;* ***வெருவரு தோற்றத்தர்* -** *அச்சத்தை உண்டுபண்ணும் தோற்றம் உடையவர்கள்;* ***விகட வேடத்தர்* -** *மாறுபட்ட கோலத்தைப் பூண்டவர்கள்;* ***பருவரை என* -** *பருத்த மலைபோல;* ***முலை பலவும்* -** *இரண்டுக்கு மேற்பட்ட முலைகளை;* ***நாற்றினர்* -** *தொங்கவிட்டுக் கொண்டிருப்பவர்கள்.*

*சில என்பதுஇரண்டையும், பல என்பது இரண்டுக்குமேற்பட்டவற்றையும் குறிக்கும்.* ***(57)***

***5126. சூலம்,வாள், சக்கரம், தோட்டி, தோமரம்,***
***கால வேல்,கப்பணம், கற்ற கையினர்;***
***ஆலமே உருவுகொண்டனைய மேனியர்;***
***பாலமேதரித்தவன் வெருவும் பான்மையர்.****

***சூலம் வாள்சக்கரம்* -** *சூலத்தையும் வாளையும்சக்கரத்தையும்;* ***தோட்டி தோமரம்* -** *அங்குசத்தையும் இருப்புலக்கையையும்;* ***காலவேல் கப்பணம்* -** *காலனை ஒத்த வேலையும் கப்பணத்தையும்; (பிரயோகிப்பதற்கு)* ***கற்ற கையினர்* -** *அறிந்த கையை உடையவர்;* ***உருவு கொண்ட* -** *வடிவம் எடுத்த;* ***ஆலம் அனைய மேனியர்* -** *விடம் போன்ற உடம்பைப் பெற்றவர்கள்;* ***பாலம் தரித்தவன்* -** *மழுவைத் தரித்த சிவபிரானும்;* ***வெருவும்* -** *அஞ்சும் படியான;* ***பான்மையர்* -** *இயல்பைப் பெற்றவர்கள். தோமரம் - இருப்புலக்கை தோட்டி - (யானையை அடக்கும்) அங்குசம், கப்பணம் - யானை நெரிஞ்சி முள் போன்ற ஆயுதம். யானைகள் வராதபடி இது போர்க்களத்தில் பரப்பப் பெறும். கப்பணம் சிதறினானே என்பர் தேவர் (சிந்-285) மதுரைக் காஞ்சி இதைப் பரல் என்று கூறும் 597, 98) பாலம் - மழு. பரசு --- பாலம் என்றைந்தும் மழுவின் பெயரே. (திவாகரம் - செயற்கை 3) பாலம் - கபாலம். முதற்குறை என்பர் (அடை - பதி) கபாலம் தரித்தவன் வைரவ மூர்த்தி.* ***(58)***

***5127. கரி, பரி,வேங்கை, மாக் கரடி, யாளி, பேய்,***
***அரி, நரி, நாய்என அணி முகத்தினர்;***

***வெரிந் உறுமுகத்தினர்; விழிகள் மூன்றினர்;***
***புரிதருகொடுமையர்; புகையும் வாயினர்.****

*(அரக்கிகள்)*

***கரிபரி வேங்கை-*** *யானை,குதிரை, வேங்கைப்புலி;* ***மாக் கரடி யாளிபேய் -*** *பெருங்கரடி, யாளி, பேய்;* ***அரி நரி நாய் என -*** *சிங்கம், நரி, நாய் என்று கூறும்படி;* ***அணி -*** *(தங்கள் இயல்புக்கேற்ப) பொருந்திய;* ***முகத்தினர் -*** *முகத்தையுடையவர்கள்;* ***வெரிந் உறு -*** *முதுகில் அமைந்த;* ***முகத்தினர் -*** *முகத்தை உடையவர்கள்;* ***விழிகள் மூன்றினர் -*** *மூன்று கண்களையுடையவர்கள்;* ***புரி தரு கொடுமையர் -*** *விரும்பி மேற் கொண்ட கொடிய இயல்பை உடையவர்கள்;* ***புகையும் வாயினர் -*** *புகையை வெளிப்படுத்தும் வாயைப் பெற்றவர்கள்.* ***(59)***

***5128. எண்ணினுக்குஅளவிடல் அரிய ஈட்டினர்,***
***கண்ணினுக்குஅளவிடல் அரிய காட்சியர்,***
***பெண் எனப்பெயர் கொடு திரியும் பெற்றியர்,***
***துண்ணெனத் துயில்உணர்ந்து, எழுந்து சுற்றினார்.***

***எண்ணினுக்கு -*** *மனத்தினாலும்;* ***அளவிடல் அரிய -*** *அளவிட முடியாத;* ***ஈட்டினர் -*** *வலிமையுடையவர்கள்;* ***கண்ணினுக்கு அளவிடல் அரிய -*** *கண்களாலும் அளக்கமுடியாத;* ***காட்சியர் -*** *தோற்றத்தை உடையவர்கள்;* ***பெண் எனப் பெயர் கொடு -*** *பெண் என்ற பெயரை வைத்துக் கொண்டு;* ***திரியும் பெற்றியர் -*** *இயல்பு திரிந்த இயல்பையுடையவர்கள்;* ***துண் என -*** *(காண்பவர்)நடுங்கும்படி;* ***துயில்உணர்ந்து -*** *உறக்கத்திலிருந்து விழித்து;* ***எழுந்து சுற்றினார் -*** *எழுந்து பிராட்டியைச் சுற்றினார்கள்.*

*துண் என.விரைவாக என்றும் கூறலாம். எண்ணினுக்கு - கணக்கினாலும் என்றும் கூறலாம். 4 - ஆம் வேற்றுமை கருவிப் பொருளில் வந்தது. (இலக் - விள - வேற்றுமை)* ***(60)***

*சீதையின்வருத்தத்தை அனுமன் காணுதல்.*

***5129. ஆயிடை,உரை அவிந்து, அழகன் தேவியும்,***
***தீ அனையர் முகம்நோக்கித் தேம்பினாள்;***
***நாயகன் தூதனும்,விரைவில் நண்ணினான்,***
***ஓய்விலன், உயர்மரப் பணையின் உம்பரான்.***

***ஆயிடை -*** *அவ்விடத்தில்;* ***அழகன் தேவியும் -*** *இராமபிரானின் தேவியாகிய பிராட்டி;* ***உரை அவிந்து -*** *பேச்சு ஒடுங்கி;* ***தீ அனையவர் முகம் -*** *நெருப்புப் போன்ற அரக்கிகளின் முகங்களை;* ***நோக்கி -*** *பார்த்து;* ***தேம்பினாள் -*** *மனங் கலங்கினாள் (அப்போது);* ***நாயகன் தூதனும் -*** *இராமபிரானின் தூதனான அனுமனும்;* ***ஓய்விலன் -*** *தாமதிக்காமல்;* ***விரைவில் நண்ணினான் -*** *வேகமாக வந்து (பிராட்டியிருந்த);* ***உயர் -*** *உயர்ந்த;* ***மரப் பணையின் உம்பரான் -*** *மரக்கிளையை அடைந்தவன் ஆனான்.*

*பிராட்டி இருந்தமரம் சிஞ்சுகமரம் என்று கூறுகின்றனர். சிஞ்சுகம் - நூக்கம் என்று அகராதி பேசும். சிஞ்சுகம் அசோகம் போலும்.* ***(61)***

***5130. 'அரக்கியர், அயில் முதல் ஏந்தும் அங்கையர்,***
***நெருக்கியகுழுவினர், துயிலும் நீங்கினர்,***
***இருக்குநர்; மற்றுஇதற்கு ஏது என் ?' எனா,***
***பொருக்கெனஅவரிடைப் பொருந்த நோக்கினான்.***

***அரக்கியர் -*** *அரக்கிமார்கள்;* ***அயில் முதல் ஏந்தும் -*** *வேல் முதலானஆயுதங்கள் ஏந்திய;* ***அங்கையர் -*** *கையை உடையவராய்;* ***நெருக்கியகுழுவினர் -*** *அடர்ந்த கூட்டத்தினராய்;* ***துயிலும் நீங்கினார் -*** *உறக்கத்திலிருந்து எழுந்தவராய்;* ***இருக்குநர் -*** *இருக்கின்றார்கள்;* ***இதற்கு ஏது என் எனா -*** *(இவ்விரவில்) இவ்வாறு இருப்பதற்குக் காரணம் யாது என்று ஆராய்ந்து;* ***பொருக்கென -*** *விரைவாக;* ***அவர் இடை -*** *அவ் வரக்கியர்களுக்கு நடுவே;* ***பொருந்த நோக்கினான் -*** *உற்றுப் பார்த்தான். இரவிலேஅரக்கியர்கள் ஆயுதங்கள் ஏந்தியபடி உறங்காமல் உள்ளனர். இதற்குக் காரணம் யாது என்று கருதி கூர்ந்து பார்த்தான்.* ***(62)***

***5131. விரி மழைக் குலம் கிழித்து ஒளிரும் மின் என,***
***கரு நிறத்துஅரக்கியர் குழுவில், கண்டனன்--***
***குரு நிறத்து ஒருதனிக் கொண்டல் ஊழியான்***
***இரு நிறத்துஉற்றவேற்கு இயைந்த காந்தத்தை.***

***ஒரு தனி -*** *ஒப்பற்றசிறப்புற்ற;* ***குரு நிறத்து -*** *ஒளி பொருந்திய நிறத்தை உடைய;* ***கொண்டல் -*** *மேகம் போன்ற;* ***ஊழியான் -*** *யுகத்தின் தலைவனாகிய இராமபிரானின்;* ***இருநிறத்து உற்ற -*** *பெரிய மார்பிலே தைத்த;* ***வேற்கு -*** *பிரிவுத் (துன்பமாகிய) வேலைப் பறித்தெடுக்கும்;* ***இயைந்த காந்தத்தை -*** *பொருந்திய காந்தமாமணி போன்ற பிராட்டியை;* ***கருநிறத்து அரக்கியர் குழுவில் -*** *கரு நிறத்தைப் பெற்ற அரக்கிமார்களின் கூட்டத்தில்;* ***விரிமழைக்குலம் -*** *பரந்த மேகக் கூட்டத்தை;* ***கிழித்து ஒளிரும் -*** *பிளந்து கொண்டு விளங்குகின்ற;* ***மின் என -*** *மின்னலைப் போல;* ***கண்டனன் -*** *பார்த்தான்.*

*மார்பில்பாய்ந்த இரும்புத் துண்டுகளை எடுக்கப் பயன்படும் காந்தம் போல இராமனின் துன்பம் நீக்கும் பிராட்டி என்க. "வரம் எனும் அயில்வேல் --- இப்பொழுது அகன்றது. குலப்பூண் --- ஆரம் ஆம் காந்தமாமணி இன்று வாங்க" எனும் தசரதன் மொழியைக் காண்க (கம்ப. 10068) கொண்டல் ஊழி - ஓர் ஊழி போலும் - பரிபாடல் கொண்டும், புராண வழக்குக் கொண்டும் ஆய்தல் வேண்டும். 'இரு நிறத்துற்ற வெற்கு இயைந்த காந்தத்தை' என்ற சுவடிப்பாடம் கொண்டு முன்னுள்ளோர் பலரும் உரை தடுமாறினர் - 'வேற்கு' எனச் சுவடி எழுத்தின் உண்மைகாட்டி உரை கண்டார் வாகீசகலாநிதி. கி.வா. ஜகந்நாதன் அவர்கள்.* ***(63)***

***5132. 'கடக்க அரும் அரக்கியர் காவல் சுற்று உளாள் !***
***மடக் கொடிசீதையாம் மாதரேகொலாம் ?***
***கடல் துணை நெடியதன் கண்ணின் நீர்ப் பெருந்***
***தடத்திடைஇருந்தது ஓர் அன்னத் தன்மையாள்.***

***கடல் துணை நெடிய-*** *கடல்போலப் பரந்துள்ள;* ***தன் கண்ணின் நீர்-*** *தன்னுடைய கண்ணிலிருந்து வழிந்த நீர் நிரம்பிய;* ***பெருந் தடத்து இடை-*** *பெரிய தடாகத்தின் நடுவில்;* ***இருந்தது -****இருந்த;* ***ஓர்அன்னத் தன்மையள் -*** *ஒப்பற்ற அன்னத் தன்மை கொண்டவள்;* ***கடக்க அரும் -*** *கடந்து போக முடியாத;* ***அரக்கியர் -*** *அரக்கிகளின்;* ***காவற் சுற்றுளாள் -*** *காவற் சுற்றிலே அகப்பட்டுள்ளாள் (ஆதலால், இவள்);* ***மடக்கொடி -*** *இளங்கொடி போன்ற;* ***சீதை ஆம் -*** *சீதையாகிய;* ***மாதரே கொல்? -*** *பெண்ணே போலும்.*

*கொல் என்பதைஅசையாக்கி மாதரே ஆம் என்று பொருள் கொள்வாரும் உளர் அடுத்துவரும் பாடல்தான் அனுமனின் ஐயத்தைப் போக்குகிறது.*
***(64)***

*அரக்கியர் நடுவில்இருப்பவள் சீதையே என அனுமன் தெளிதல்*

***5133. 'எள் அரும் உருவின் அவ் இலக்கணங்களும்,***
***வள்ளல் தன்உரையொடு மாறு கொண்டில,***
***கள்ள வாள் அரக்கன் அக் கமலக் கண்ணனார்***
***உள்உறை உயிரினைஒளித்து வைத்தவா !***

*(அரக்கியர் நடுவில்இருப்பவர் பால்)*

***எள் அரும் -*** *பழிப்பற்ற;* ***உருவின் -*** *திருமேனியின்கண்;* ***அவ் இலக்கணங்களும் -*** *நல்ல சாமுத்திரிகா லட்சணங்களும்;* ***வள்ளல் தன் உரையொடு -*** *இராமனின் மொழிகளோடு;* ***மாறு கொண்டில -*** *வேறுபட்டிருக்கவில்லை. (ஆகையால் இவள் சீதையே);* ***கள்ளவாள் அரக்கன் -*** *வஞ்சனையும் கொடுமையுமுடைய இராவணன்;* ***அக்கமலக் கண்ணனார் -*** *அந்த தாமரை போன்ற கண்களைப் பெற்ற இராமபிரான்;* ***உள் உறை உயிரினை -*** *உள்ளத்தில் வாழும் உயிரை;* ***ஒளித்து வைத்தவா -*** *மறைத்து வைத்த கொடுமை எப்படிப்பட்டது.*

*வைத்த ஆறு என்பதுவைத்தவா எனக் குறைந்து வந்துள்ளது 'என்னே நிருபன் இயற்கை இருந்தவா' (கம்ப, 1713)* ***(65)***

***5134. 'மூவகை உலகையும் முறையின் நீக்கிய***
***பாவி தன் உயிர்கொள்வான் இழைத்த பண்பு***
***இதால்;***
***ஆவதே; அரவணைத் துயிலின் நீங்கிய***
***தேவனே அவன்; இவள் கமலச்செல்வியே.***

***இது -*** *பிராட்டி சிறையிலிருக்கும் கொடுமை;* ***மூவகை உலகையும் -*** *மூன்று வகைப்பட்ட உலகங்களையும்;* ***முறையின் நீக்கிய -*** *நன்னெறியிலிருந்து பிறழச் செய்த;* ***பாவி தன் -*** *பாவியாகிய இராவணனுடைய;* ***உயிர் கொள்வான் -*** *உயிரைக் கவர்வதற்காகத் (திருமால்);* ***இழைத்த -*** *செய்த;* ***பண்பு -*** *செயலாகும்;* ***ஆவதே -*** *இது பொருந்துவதாகுமே?;* ***அவன் -*** *இந்த இராமபிரான்;* ***அரவணைத்துயிலின் நீங்கிய -*** *பாம்புப் படுக்கையில் மேற்கொண்ட உறக்கத்தை விட்டு வந்த;* ***தேவனே -*** *திருமாலே;* ***இவள் -*** *இந்தப் பிராட்டி;* ***கமலச் செல்வியே -*** *தாமரை மலரில் வீற்றிருக்கும்திருமகளே.*

*பாவி தன் உயிர்கொள்வான் இழைத்த பண்பு - என்பதற்கு இராவணன் தன்னுடைய உயிரைத் திருமால் அழிப்பதற்கு (அவனே) செய்த செயல் என்றும், விதி இராவணனை அழிக்க மேற்கொண்ட செயல் என்றும், பிராட்டி (தேவ மகளிரைச் சிறைமீட்க) இராவணனை அழிக்க மேற்கொண்ட செயல் என்றும் பலபடியாகக் கூறுவர்.*
***(66)***

*அனுமன்மகிழ்ச்சி*

***5135. 'வீடினதுஅன்று அறன்; யானும் வீகலேன்;***
***தேடினென்கண்டனென்; தேவியே !' எனா,-***
***ஆடினன்; பாடினன்;ஆண்டும் ஈண்டும் பாய்ந்து,***
***ஓடினன்;உலாவினன்;-உவகைத் தேன் உண்டான்.***

*(அனுமன்)*

***உவகைத் தேன்உண்டான் -*** *மகிழ்ச்சியாகியதேனைக் குடித்து;* ***அறன் வீடினது அன்று -*** *தருமம் அழியவில்லை;* ***யானும் வீகலேன் -*** *யான் அழிய மாட்டேன்;* ***தேடினென் -*** *பிராட்டியைத் தேடிய யான்;* ***கண்டனென் -*** *கண்டு கொண்டேன்;* ***தேவியே -*** *(இவள்) சீதாதேவியே;* ***எனா -*** *என்று கூறி;* ***ஆடினன் பாடினன் -*** *ஆடிப் பாடினான்;* ***ஆண்டும் ஈண்டும் பாய்ந்து -*** *அங்கும் இங்கும் பாய்ந்து;* ***ஓடினன் உலாவினன் -*** *ஓடி உலாவினான்.*

*முன்புபிராட்டியைக் காணாதபோது வீடுவேன் (காட்சி 1) (இறப்பேன்) என்றவன் பிராட்டியைக் கண்டதும் வீகலேன் (இறவேன்) என்றான்.* ***(67)*** *சீதையின் தூய்மையைஅனுமன் வியத்தல்*

***5136. 'மாசுண்டமணி அனாள், வயங்கு வெங் கதிர்த்***
***தேசுண்டதிங்களும் என்னத் தேய்ந்துளாள்;***
***காசுண்டகூந்தலாள் கற்பும், காதலும்***
***ஏசுண்டதுஇல்லையால்; அறத்துக்கு ஈறு உண்டோ ?***

*(அனுமன்)*

***மாசுண்ட மணிஅனாள் -*** *அழுக்கால் மூடப்பெற்ற மணி போன்றவள்;* ***வயங்கு -*** *விளக்கமான;* ***வெங்கதிர் -*** *கொடுமையான சூரியனின்;* ***தேசுண்ட -*** *ஒளியால் மறைக்கப் பெற்ற;* ***திங்கள் என்ன -*** *சந்திரனைப் போல;* ***தேய்ந்துளாள் -*** *(ஒளி) குன்றியுள்ளாள்;* ***காசுண்ட கூந்தலாள் -*** *அழுக்குப் படிந்த கூந்தலையுடைய பிராட்டியின்;* ***கற்பும் -*** *உறுதிப்பாடும்;* ***காதலும் -*** *இராமன்பால் கொண்ட காதலும்;* ***ஏசு உண்டது இல்லை -*** *தாழ்ச்சியடையவில்லை;* ***அறத்திற்கு(ம்) ஈறுண்டோ ? -*** *தருமத்திற்கும் அழிவுவருமா.*

*சீதையின் கற்புமுதலானவை தாழ்ச்சியுறவில்லை என்னும் சிறப்புக்கருத்தை தருமத்துக்கு ஈறுண்டோ என்னும் பொதுக் கருத்தால் உறுதிப்படுத்தலின் இது வேற்றுப் பொருள் வைப்பணி. விழுமணி மாசு மூழ்கிக் கிடந்தது என்பர் தேவர் (சிந்தா)* ***(68)***

***5137. ‘புனை கழல்இராகவன் பொன் புயத்தையோ ?***
***வனிதையர்திலகத்தின் மனத்தின் மாண்பையோ ?***
***வனை கழல்அரசரின் வண்மை மிக்கிடும்***
***சனகர்தம்குலத்தையோ ? யாதைச் சாற்றுகேன் ?***

***கழல்புனை** - வீரக்கழல் அணிந்த; **இராகவன் பொன் புயத்தையோ** - இராமபிரானின் அழகிய தோள்களையே ? **வனிதையர் திலகத்தின்** - பெண்களின் திலகம் போன்ற பிராட்டியின்; **மனத்தின் மாண்பையோ** - திருவுள்ளத்தின் மாட்சிமையையோ ? **கழல் வனை** - வீரக்கழல் அணிந்த; **அரசரின்** - அரசர்களுக்குள்ளே; **வண்மை மிக்கிடும்** - கொடைப்பண்பால் உயர்ந்த; **சனகர்தம் குலத்தையோ** - சனகரின் குலத்தையோ; **யாதைச் சாற்றுகேன்** - எதைப் புகழ்வேன். ஒன்றின் ஒன்றுவிஞ்சி இருத்தலின் யான் எதைப் புகழ்வேன் என்றான். என்றாலும் மரபினும் புயம் உயர்ந்தது. புயத்தினும் மனம் உயர்ந்தது என்பதை அறிக.* ***(69)***

***5138. ‘தேவரும் பிழைத்திலர்; தெய்வ வேதியர்***
***ஏவரும்பிழைத்திலர்; அறமும் ஈறு இன்றால்;***
***யாவது இங்குஇனிச் செயல் அரியது, எம்பிராற்கு?***
***ஆவ ! என்அடிமையும் பிழைப்பு இன்றாம்அரோ.***

***தேவரும்பிழைத்திலர்** - தேவர்களும் பிழைசெய்திலர்; **தெய்வ வேதியர் ஏவரும்** - தெய்வத் தன்மையுடைய எந்த வேதியரும்; **பிழைத்திலர்** - பிழை செய்திலர்; **என் அடிமையும்** - என்னுடைய அடிமைப் பணியும்; **பிழைப்பு இன்றாம்** - பிழையற்றுள்ளது (ஆதலால்); **இனி** - இனிமேல்; **அறமும் ஈறு இன்று** - தருமமும் அழியாது.*

*எம் பிராற்குஇங்கு - எம்பெருமானாகிய இராமபிரானுக்கு இவ்விடத்தில் இனி செயல் அரியது யாவது - செய்யவியலாத செயல் எது ? தேவரும் வேதியரும் தொண்டும் பிழையா இடத்தே அறம் அழியாது. அறம் அழியா இடத்தில் தெய்வம் வெளிப்பட்டு அருளும் என்பது கருத்து. ஆவ - வியப்புக்குறிப்பு. அரோ - அசை.*
***(70)***

***5139. “கேழ் இலாள் நிறை இறை கீண்டதாம்எனின்,***
***ஆழியான் முனிவுஎனும் ஆழி மீக்கொள,***
***ஊழியின் இறுதிவந்துறும்” என்று உன்னினேன்;***
***வாழிய உலகு, இனிவரம்பு இல் நாள் எலாம் !***

***கேழ் இலாள்** - ஒப்புமையற்ற பிராட்டியின்; **நிறை இறை கீண்டது ஆம் எனில்** - நிறையானது சிறிது சிதைந்தாலும்; **ஆழியான்** - (சக்கரம் ஏந்திய) திருமாலாகிய இராமபிரானின்; **முனிவு எனும் ஆழி** - கோபம் என்னும் கடலானது; **மீகொள** - மேலே அதிகரித்துப் பொங்குதலால்; **ஊழியின் இறுதி** - யுகத்தின் முடிவுக்காலம்; **வந்து உறும் என்று** - வந்து விடுமே என்று; **உன்னினேன்** - எண்ணி அஞ்சினேன் (நிறை அழியாமையால்); **இனி** - இனிமேல்; **உலகு** - உலகங்கள்; **வரம்பு இல் நாள்எலாம்** - எல்லையற்ற எல்லா நாட்களிலும்; **வாழிய** - வாழ்வடைக.*

*நிறை -மனத்தைக் கட்டுப்படுத்தல். இறைவன் கோபம் கொள்ளாமல் 'பிராட்டி அடக்கி வெல்வாள்' என்று கூறுவர் சிலர். நிறை- கரை போன்றது.அன்றியும் மகளிரின் நால்வகைப் பண்புகளில் ஒன்றான நிறை என்றும் கூறலாம். கீண்டது ஆம் என்று - ஆம் அசை. உன்னுதல் - அஞ்சுதல். காரியத்தைக் காரணமாகக் கூறப்பெற்றது.* ***(71)***

## *5140. 'வெங் கனல் முழுகியும், புலன்கள் வீக்கியும்,*
## *நுங்குவ, அருந்துவ, நீக்கி, நோற்பவர்*
## *எங்கு உளர்?-குலத்தில் வந்து, இல்லின் மாண்புடை*
## *நங்கையர் மனத்தவம் நவிலற்பாலதோ ?*

***குலத்தின் வந்து-*** *நல்லகுலத்திலே பிறந்து;* ***இல்லின் மாண்புடை -*** *இல்லறச் சிறப்பைப்பெற்ற;* ***நங்கையர் மனத்தவம் -*** *பெண்கள் மனத்தால் செய்யும் தவமானது;* ***நவிலற் பாலதோ -*** *நம்மால் கூறத்தக்க எளிமையானதா. (இம்மங்கையர்களுக்கு முன்);* ***வெங்கனல் முழுகியும் -*** *கொடிய (ஐந்துவித) நெருப்பில் குளித்தும்;* ***புலன்கள் வீக்கியும்*** *- (ஓடும்) ஐந்து புலன்களைக் கட்டியும்;* ***நுங்குவ அருந்துவ -*** *உண்ணும் உணவையும் பருகும் புனலையும்;* ***நீக்கி -*** *ஒதுக்கிவிட்டு;* ***நோற்பவர் -*** *தவம் செய்பவர்கள்;* ***எங்குளர் -*** *எங்கேஇருக்கிறார்கள்.*

*கற்பு மகளிர்க்குமுனிவர்கள் ஒப்பாகார் என்க. எங்கே என்பது ஏற்றத் தாழ்வை உணர்த்தும் உலகச் சொல் 'அவன் எவரிடத்தான் யார் யார்' என்னும் ஆழ்வார் பாசுரம் கருதுக (5-1-7) நங்கையர் என்றது பிராட்டியை.* ***(72)***

## *5141. 'பேண நோற்றது மனைப் பிறவி, பெண்மைபோல்*
## *நாணம் நோற்றுஉயர்ந்தது, நங்கை தோன்றலால்;*
## *மாண நோற்று,ஈண்டு இவள் இருந்தவாறு எலாம்*
## *காணநோற்றிலன், அவன் கமலக் கண்களால் !*

***நங்கைதோன்றலால் -*** *பிராட்டி உலகில்அவதரித்ததால்;* ***மனைப் பிறவி -*** *உயர்ந்த குலப்பிறப்பானது;* ***பேண -*** *மற்றவர்கள் மதிக்கும் படி;* ***நோற்றது -*** *தவம் செய்தது;* ***பெண்மை போல் -*** *பெண் தன்மையைப் போல;* ***நாணம் -*** *(மகளிரின்) நாணமானது;* ***நோற்று உயர்ந்தது -*** *தவஞ்செய்து சிறப்பைப் பெற்றது (ஆனால்);* ***ஈண்டு -*** *இந்த இலங்கையில்;* ***இவள் -*** *இந்தப் பிராட்டி;* ***மாண நோற்று -*** *மாண்படையத் தவம் செய்து (கற்பைக் காத்து);* ***இருந்த ஆறு எலாம் -*** *இருந்த பண்பின் முழுமையையும்;* ***அவன் -*** *அந்த இராமபிரான்;* ***கமலக் கண்களால் -*** *தாமரைபோன்ற கண்களினாலே;* ***காண நோற்றிலன் -*** *காண்பதற்குத் தவம் செய்தானில்லையே. கமலக் கண்களேகாண நோற்றில என்னும் பாடம் சிறக்கும் போலும். பிராட்டியின் தொடர்புடைய மனைப் பிறவி முதலானவை உயர்ந்தன ஆனால் இராவணனுடன் வாழும் கண்கள் தவம் செய்யவில்லையே என்னும் பொருள் நன்று போலும். கமலக் கண்கள் நோற்றில என்பதில் அருமைப்பாடுள்ளது. திறனாய்வுப் புயலில் இது சிதையினும் சிதையும் இது கம்ப சூத்திரம். நான் காண நோற்றேன் என்ற அநுமன் பெருமிதம் உள்ளுறை.*
***(73)***

## *5142. 'முனிபவர்அரக்கியர், முறையின் நீங்கினார்;*
## *இனியவள்தான்அலாது, யாரும் இல்லையால்;*

***தனிமையும்,பெண்மையும், தவமும், இன்னதே !-***
***வனிதையர்க்குஆக, நல் அறத்தின் மாண்பு எலாம் !***

***இனியவள் தான்அலாது -*** *இனிமையைச் செய்யும் பிராட்டியைத் தவிர;* ***யாரும் இல்லை -*** *வேறு யாரும் அவளுக்குத் துணையில்லை;* ***முறையின் நீங்கினார் அரக்கியர் -*** *முறையற்றவர்களாகிய அரக்கியர்;* ***முனிபவர் -*** *பிராட்டியைக் கோபிப்பவர்;* ***தனிமையும் -*** *(இந்நிலையில் இவளது) தனித்து இருக்கையும்;* ***பெண்மையும் -*** *அமைதித் தன்மையும்;* ***தவமும் -*** *கற்புத் தவமும்;* ***இன்னது -*** *இப்படிப்பட்டதாகும்;* ***அறத்தின் மாண்பு எலாம் -*** *அறத்தின் எல்லாச் சிறப்புக்களும்;* ***வனிதையர்க்கு ஆக -*** *பெண்கள் பொருட்டு அமைக்கப்பட்டவையே ஆக.* ***(74)***

***5143. தருமமே காத்ததோ ? சனகன் நல் வினைக்***
***கருமமேகாத்ததோ? கற்பின் காவலோ ?***
***அருமையோ !அருமையே ! யார் இது ஆற்றுவார் ?***
***ஒருமையே, எம்மனோர்க்கு, உரைக்கற்பாலதோ ?***

*(பிராட்டியின்தவத்தை)*

***தருமமேகாத்ததோ -*** *தருமமே பாதுகாத்ததோ ?* ***சனகன் -*** *சனகனுடைய;* ***நல்வினைக் கருமமே -*** *நல்லூழால் செய்யப்பெற்ற செயல்;* ***காத்ததோ -*** *பாதுகாத்ததோ ?* ***கற்பின் காவலோ -*** *கற்பினுடைய பாதுகாப் பா? (இத்தவம்)* ***அருமையே அருமையே -*** *அருமையானது அருமையானது;* ***இது -*** *இப்படிப்பட்ட தவத்தை;* ***யார் ஆற்றுவார் -*** *எவர்கள் செய்வார்கள் ?(இத்தவம்);* ***ஒருமையே-*** *ஒப்பற்றசிறப்புடையது;* ***எம்மனோர்க்கு உரைக்கற் பாலதோ -*** *எம் போன்றவர்கள் சொல்லும் தன்மை உடையதோ.* ***(75)***

***5144. 'செல்வமோஅது ? அவர் தீமையோ இது ?***
***அல்லினும்பகலினும் அமரர் ஆட் செய்வார்,***
***ஒல்லுமோஒருவர்க்கு ஈது ? உறுகண் யாது இனி ?***
***வெல்லுமோதீவினை, அறத்தை மெய்ம்மையால் ?'***

*(அரக்கர்களுக்கு)*

***அல்லினும்பகலினும் -*** *இரவுப் போதிலும் பகற்போதிலும்;* ***அமரர் ஆட் செய்வார் -*** *தேவர்கள் அடிமைத் தொழில் புரிவார்கள்;* ***அவர் செல்வமோ அது -*** *அவர்களுடைய செல்வமோ அப்படி உள்ளது;* ***அவர் தீமையோ இது -*** *அவர் செய்கின்ற கொடுமையோ இப்படியுள்ளது;* ***ஈது ஒருவர்க்கு ஒல்லுமோ -*** *இந்த நிலைமையானது ஒருவருக்கு அடுக்குமா;* ***தீவினை -*** *தீவினையானது;* ***அறத்தை -*** *தருமத்தை;* ***வெல்லுமோ -*** *வென்றுவிடுமோ (வெல்லாது ஆதலால்);* ***இனி உறுகண் யாது -*** *இனிமேல் உலகத்திற்குத் துன்பம் ஏது ?*

*'அறம் வெல்லும்பாவம் தோற்கும்' என்ற உண்மை காவியத்தில் அங்கங்கே கலியால் சுட்டிச் செல்லப் படுகிறது.* ***(76)***

*இராவணன் அங்கேதோன்றுதல்*

***5145. என்று, இவைஇனையன எண்ணி, வண்ண வான்***
***பொன் திணி நெடுமரப் பொதும்பர் புக்கு, அவண்***
***நின்றனன்; அவ்வழி நிகழ்ந்தது என் எனின்,***
***துன்று பூஞ்சோலைவாய் அரக்கன் தோன்றினான்.***

*(அனுமன்)*

***என்று -*** *என;* ***இவை -*** *இவற்றையும்;* ***இனையன -*** *இவை போன்றவற்றையும்;* ***எண்ணி -*** *நினைத்து;* ***வண்ணம் -*** *அழகியதும்;* ***வான் -*** *உயர்ந்ததும் (ஆகிய);* ***பொன் -*** *பொன்னால் அமையப் பெற்றதும்;* ***திணி -*** *செறிவுடையதும் (ஆகிய);* ***நெடுமரப் பொதும்பர் -*** *பெரிய மரச் செறிவில்;* ***புக்கு -*** *புகுந்து;* ***அவண் -*** *அவ்விடத்தில் (மறைந்து);* ***நின்றனன் -*** *நின்றான்;* ***அவ்வழி -*** *அவ்விடத்தில்;* ***நிகழ்ந்தது -*** *நடந்தது;* ***என் எனின் -*** *என்ன வென்றால்;* ***பூ துன்று -*** *மலர்கள் நெருங்கிய;* ***சோலைவாய் -*** *சோலையின்கண்(அனுமனுக்கு);* ***அரக்கன் தோன்றினான் -*** *இராவணன் தோன்றினான்.*

*பொதும்பர் -சிலேடைச் சொல். மரச் செறிவு. மரப் பொந்து என்னும் பொருள்களைத் தரும். 'வெயில்கண் போழாப் பயில் பூம் பொதும்பில்' என்னும் பெருங்கதையும் (1 - 28 - 27) 'பொதும்பு பொள்ளல் பொந்தாம்' எனும் பிங்கல நிகண்டும் (2853) நோக்குக. அனுமன் மரச் செறிவிலிருந்தது நோக்கினான், என்று வான்மீகமும், மரப் பொந்திலிருந்து நோக்கியதாக அபிஷேக நாடகமும் பேசும். கவிச்சக்கரவர்த்தி, இருவர் கருத்தும் பகையாதபடி பொதும்பர் என்னும் பொதுச் சொல்லாற் பேசினார்.*
*(77)*

*இராவணன் வருகின்றகாட்சி*

***எழுசீர் விருத்தம்***

***5146. சிகர வண்குடுமி நெடு வரை எவையும்***
***ஒரு வழித்திரண்டன சிவண,***
***மகரிகை வயிரகுண்டலம் அலம்பும்***
***திண்திறல் தோள் புடை வயங்க,***
***சகர நீர் வேலைதழுவிய கதிரின்,***
***தலைதொறும்தலைதொறும் தயங்கும்***
***வகைய பல் மகுடம்இள வெயில் எறிப்ப,***
***கங்குலும்பகல்பட, வந்தான்.***

***வண் -*** *வளமிக்க;* ***சிகரம் -*** *உயர்ந்த;* ***குடுமி -*** *உச்சியைப் பெற்ற;* ***நெடுவரை எவையும் -*** *பெரிய மலைகள் முழுவதும்;* ***ஒருவழி -*** *ஓரிடத்தே;* ***திரண்டன சிவண -*** *சேர்ந்தன போல்;* ***மகரிகை -*** *மகர வடிவாய் அமைந்த வாகுவலயங்களும்;* ***வயிரம் -*** *வயிரங்கள் பதிக்கப் பெற்ற;* ***குண்டலம் -*** *குண்டலங்களும்;* ***அலம்பும் -*** *தவழ்கின்ற;* ***திண்திறல் -*** *மிக்கவலிமைபெற்ற;* ***தோள்புடை -*** *புயங்களின் பக்கத்தில்;* ***வயங்க -*** *விளங்கவும்;* ***சகர -*** *சகரரால் தோண்டப் பெற்ற;* ***வேலையின்நீர் -*** *கடல் நீரிலே;* ***தழுவிய -***

*பிரதிபலிக்கின்ற;* ***கதிரின் -*** *சூரியனைப் போல;* ***தலைதொறும் தலைதொறும் -*** *எல்லாத் தலைகளிலும்;* ***தயங்கும் -*** *விளங்குகின்ற;* ***பல்வகைய -*** *பலவிதமான;* ***மகுடம் -*** *கிரீடங்கள்;* ***இளவெயில் எறிப்ப -*** *இளஒளியைப் பரப்பவும்;* ***கங்குலும் -*** *இரவுப் போதிலும்;* ***பகல் பட -*** *பகற்காலம் தோன்றும்படி;* ***வந்தான் -*** *வந்தான். தோள்களுக்கு வரைஉவமை. ஆயிரம் குன்றம் சென்று தொக்கனைய ..... திரள்தோள், என்று திருமங்கையாழ்வார் பேசுவார் (திவ்ய. பெரிய திரு -5- 7-6) மகரிகை - மகரவடிவாய் அமைந்த தோள் வலயம். கிரீடங்கள், கரண்ட மகுடம், கிரீட மகுடம் என்பன போல் பலவாயிருத்தலின் பல் மகுடம் எனப் பேசப்பெற்றது. சிற்பச் (11) செந்நூல் 'தலைக்கோலம்' என்னும் தலைப்பில் மகுடம் பற்றி அறிக. கறுத்த இராவணனின் தோள்களில் மேவிய தோள் வலயமும் குண்டலமும் கடலில் பிரதிபலிக்கும் சூரியனைப் போன்றிருந்தன. இளவெயில் என்றதனாலும், சகரவேலை என்றதனாலும் இங்கே குறிப்பிட்ட கடல் கீழைக்கடல் என்க. இதனைக் 'குணாது ...... தொடு கடல்' என்று புறப்பாட்டு பேசும். அங்கு, கீழ்க்கண்ணது சகரரால் தோண்டப் பெற்ற சாகரம். எனப் பொருள் வரையப்பெற்றது கவிச்சக்கரவர்த்தியும் 'சகரவேலை' என்றார்.*

*இவ்விருத்தம்விளம் - மா - விளம் - விளம் - மா என்னும் சீர்களை முறையே பெற்றுவரும். இவ்விருத்தப் பாடல்களை 34 முறை கம்பன் கையாண்டுள்ளான்.*
***(78)***

***5147. உருப்பசிஉடைவாள் எடுத்தனள் தொடர,***
***மேனகைவெள்ளடை உதவ,***
***செருப்பினைத்தாங்கித் திலோத்தமை செல்ல,***
***அரம்பையர்குழாம் புடை சுற்ற,***
***கருப்புரச்சாந்தும், கலவையும், மலரும்,***
***கலந்துஉமிழ் பரிமளகந்தம்,***
***மருப்புடைப்பொருப்பு ஏர் மாதிரக் களிற்றின்***
***வரிக் கைவாய் மூக்கிடை மடுப்ப;***

***உருப்பசி -*** *ஊர்வசியானவள்;* ***உடைவாள் எடுத்தனள் -*** *உடைவாளைஎடுத்துக் கொண்டு;* ***தொடர -*** *பின்னே வரவும்;* ***மேனகை -*** *மேனகையானவள்;* ***வெள்ளடை -*** *வெற்றிலையை;* ***உதவ -*** *(பக்கத்திலிருந்து) வழங்கவும்;* ***திலோத்தமை -*** *திலோத்தமையானவள்;* ***செருப்பினைத் தாங்கி -*** *செருப்பைச் சுமந்தபடி;* ***செல்ல -*** *(ஒருபக்கம்) போகவும்;* ***அரம்பையர் குழாம்-*** *(பிற) தேவ மகளிரின்கூட்டம்;* ***புடை சுற்ற -*** *பக்கங்களில் சூழ்ந்து வரவும்;(மேனியைச் சார்ந்த)* ***கருப்புரச் சாந்தும் -*** *கர்ப்பூரம் கலந்த சந்தனமும்;* ***கலவையும் -*** *குங்குமம் முதலியவற்றின் சாந்தும்;* ***மலரும் -*** *பலவகைப்பூக்களும்;* ***கலந்து -*** *ஒன்று சேர்ந்து;* ***உமிழ் பரிமள கந்தம் -*** *வெளிப்படுத்தும் நறுமணமானது;* ***மருப்புடை -*** *கொம்பைப் பெற்ற;* ***பொருப்புஏர் -*** *மலைகளை ஒத்த;* ***மாதிரக்களிற்றின் -*** *திக்குயானைகளின்;* ***வரி கை வாய் மூக்கிடை -*** *கோடுகளைப் பெற்ற கையிலே வாய்க்கப் பெற்ற மூக்கின் கண்ணே;* ***மடுப்ப -*** *கலக்கவும்.*

*79 பாடல் முதல்96 பாடல்கள் வரை உள்ள மடுப்ப, அவிந்திருப்ப முதலான செய என் எச்சங்கள் 96-பாடலில் உள்ள உலாவி என்னும் செய்து என்னும் வாய்பாட்டை அவாவ, அஃது எய்துகின்றானை என்னும் வினையாலணையும் பெயரின் பகுதியுடன் நிறைவு பெறுகிறது. உலாவி என்பது வினை எச்சமாதலின் பெயர் கொண்டு முடியா, ஆதலின்*

*எய்துகின்ற என்னும் பகுதியுடன் முடிந்தது என்க. இராவணன் மேனியின்கண் மணப்பொருளின் வாசனைபேசப்பெற்றது. கைவாய் மூக்கு - கையிலேஅமைந்த மூக்கு. அப்பர், யானையின் கையே மூக்காக அமைந்ததை நோக்கிநெடுமூக்கிற் கரியினுரி (தேவாரம் 310 -8) குமரகுருபரர், தடக்கை நாசிஎன்பார் (மீனாட்சி பிள்ளைத் தமிழ் 8) வெள்ளடை - வெற்றிலை -வெள்ளடைத் தம்பல் (கம்ப.4176) உலகில் உள்ள மணங்களைத் திக்குயானைகள் அனுபவித்தன. தகரக் குழலின் நறையும், நறைதரு தீம்புகையும்திசைக்களிற்றின் தடக்கை நாசிப் புழை மடுப்ப என்பது குமரகுருபரர் அமுதத்தமிழ் (மீனாட்சி - தமிழ் 61) கலவை - குங்குமம் முதலியவற்றின் கலவை.குங்குமக் கலவையை 'மனாலக் கலவை' என்று பதிற்றுப் பத்து பேசும் (பதிற்று11,10) இராவணன் தன் செல்வச் செருக்கு வெளிப்படத் தேவ மகளிரைஏவலர்கள் ஆக்கி வந்தனன். பிராட்டி மயங்காது வென்றாள். உலகச் சிறப்பைவெறுத்தவளே இறைவனுக்கு ஏற்றவள் என்பது பாவிகம்.*
***(79)***

***5148. நான நெய்விளக்கு நால் - இரு கோடி,***
***நங்கையர்அங்கையில் எடுப்ப,***
***மேல் நிவந்துஎழுந்த மணியுடை அணியின்***
***விரி கதிர் இருள் எலாம் விழுங்க,***
***கால்முதல்தொடர்ந்த நூபுரம் சிலம்ப,***
***கிண்கிணிகலையொடும் கலிப்ப,***
***பால் நிறத்துஅன்னக் குழாம் படர்ந்தென்னப்***
***பற்பலமங்கையர் படர;***

***நால் இருகோடிநங்கையர்** - எட்டுக்கோடி பெண்கள்; **நான நெய் விளக்கம்** - புனுகுத் தைல விளக்கை; **அங்கையின் எடுப்ப** - அகங்கையில் ஏந்தவும்; (அப்பெண்களின்) **மேல்** - மேலே; **நிவந்து எழுந்த** - உயர்ந்து எழுந்த; **மணியுடை** - மணிகளைப் பெற்ற; **அணியின்** - ஆபரணங்களின்; **விரிகதிர்** - விரிந்த ஒளி; **இருள் எலாம்** - எல்லா இருளையும்; **விழுங்க** - உட்கொள்ளவும்; **பற்பல**- பலவிதமான; **மங்கையர்** - மகளிர்; **கால்முதல்** - பாதத்திலே; **தொடர்ந்த** - அணியப்பெற்ற; **நூபுரம் சிலம்ப** - சிலம்பு ஒலித்தலாலும்; **கிண்கிணி** - சதங்கை; **கலையொடும்** - மேகலையுடன்; **கலிப்ப** - ஒலித்தலாலும்; **பால்நிறத்து அன்னக் குழாம்** - வெண்ணிறமுடைய அன்னக்கூட்டம்; **படர்ந்த என்ன** - பரவினாற் போல; **படர** - சுற்றிச் சூழவும்;*

*நானநெய் -புழுகுநெய் -நூபுரம் சிலம்ப, கலையொடும் கலிப்ப என்னும் எச்சங்கள் படர என்னும் எச்சத்தைக் கொண்டு முடிந்தன. பற்பல மங்கையர், நூபுரம் சிலம்ப, கலையொடும் கலிப்ப அன்னக் குழாம் படர்ந்த என்ன படர என முடிந்தது. கலை, மேகலை என்பதன்முதற் குறை.* ***(80)***

***5149. 'அந்தரம் புகுந்தது உண்டு என, முனிவுற்று,***
***அருந் துயில் நீங்கினான்; ஆண்டைச்***
***சந்திர வதனத்து அருந்ததி இருந்த***
***தண் நறுஞ் சோலையின் தனையோ ?***
***வந்தது இங்கு யாதோ ? யாரொடும் போமா ?'***

***என்று, தம் மனம் மறுகுதலால்,***
***இந்திரன் முதலோர், இமைப்பிலா நாட்டத்து***
***எனைவரும், உயிர்ப்பு அவிந்திருப்ப;***

***இமைப்பு இலா -*** *இமைத்தல் இல்லாத;* ***நாட்டத்து -*** *கண்களையுடைய;* ***இந்திரன் முதலோர் -*** *இந்திரன் முதலான;* ***எனைவரும் -*** *எல்லாத் தேவர்களும்; (இராவணன்)* ***அந்தரம் -*** *தீங்கானது;* ***புகுந்தது உண்டு -*** *புகுந்துள்ளது;* ***என -*** *என்று கருதி;* ***முனிவுற்று -*** *சீற்றங் கொண்டு;* ***அருந்துயில் -*** *சிறந்த உறக்கத்தை;* ***நீங்கினான் -*** *நீங்கப் பெற்றான்;* ***இங்கு -*** *இந்த இலங்கையில்;* ***வந்தது யாதோ -*** *வந்த துன்பம் எதுவோ; (இவன் சீற்றம்)* ***ஆண்டை -*** *அங்கே;* ***சந்திர வதனத்து -*** *சந்திரன் போன்ற முகத்தையுடைய;* ***அருந்ததி இருந்த -*** *அருந்ததி யொத்த பிராட்டி தங்கிய;* ***தண் நறுஞ் சோலையின் தனையோ -*** *குளிர்ந்த மணமுள்ள சோலையின் அளவில் அமைவதா? அன்றி;* ***யாரொடும் -*** *எவரை அழிப்பதுடன்;* ***போமா -*** *நீங்குமோ;* ***என்று -*** *என்று கருதி;* ***தம் மனம் மறுகுதலால் -*** *தம் உள்ளம் துன்பத்தில் கலங்குதலால்;* ***உயிர்ப்பு அவிந்து -*** *மூச்சு அடங்கி;* ***இருப்ப -*** *(ஒடுங்கி) இருக்கவும்.*

*'புகுந்தது' என்னும் முற்று, புகுந்து எனும் எச்சப்பொருள் தந்தது. வினைமுற்று வினைஎச்சம் ஆதல் விதி. முதலோர் என்னும் குறிப்புவினைமுற்றுபெயரெச்சப்பொருளில் வந்தது. குறிப்பு முற்று ஈரெச்சம் ஆதல் விதி. சோலையின் தனையோ என்பதில் உள்ள 'தனை' என்பது 'அளவு' என்னும் பொருள்தரும் சொல். இத்தனை, அத்தனை என்னும் வழக்கினை அறிக. அத்தனையும் வேண்டும் அவர்க்கு என்று தனிப்பாடல் பேசும் (இரட்டையர்) 'எண்ணும் கூற்றினுக்கு இத்தனை வேண்டுமோ'' (கம்ப, 623) என்பன் கம்பன். எவர், ஏவர் என்றாகி அது யாவர் என்று மாறி யார் என வந்தது. இராவணன் சீற்றம் பகைவரை அழித்தபின் ஒழியும். இச்சீற்றம் எவரை அழித்தபின் நீங்குமோ என்று தேவர்கள் எண்ணினர்.* ***(81)***

***5150. நீல்நிறக் குன்றின் நெடிது உறத் தாழ்ந்த***
***நீத்தவெள் அருவியின் நிமிர்ந்த***
***பால் நிறப்பட்டின் மாலை உத்தரியம்***
***பண்புற,பசும்பொன் ஆரத்தின்***
***மால் நிறமணிகள் இடை உறப் பிறழ்ந்து***
***வளர்கதிர் இள வெயில் பொருவ,***
***சூல் நிறக்கொண்மூக் கிழித்து இடை துடிக்கும்***
***மின் என,மார்பில் நூல் துளங்க;***

***நிமிர்ந்த -*** *உயர்ந்த;* ***பால்நிறம் -*** *வெண்ணிறம் பெற்ற;* ***பட்டு உத்தரியமாலை -*** *பட்டு அங்கவத்திர வரிசை;* ***நீல்நிறக் குன்றின் -*** *நீலநிறமுடையமலையில்;* ***உற நெடிது தாழ்ந்த -*** *மிகுதியாக உயர்ந்து தாழ்ந்த;* ***வெள் -*** *வெண்மையான;* ***நீத்த அருவியின் -*** *வெள்ளத்தைப் பெற்ற அருவியின்;* ***பண்புற -*** *இயல்பை அடையவும்;* ***பசும் பொன் ஆரத்தின் -*** *பசும்பொன்னாற் செய்யப்பட்ட ஆரத்திலே உள்ள;* ***மால் நிற மணிகள் -*** *பெருமைமிக்க நிறத்த இரத்தினங்கள்;* ***இடை -*** *இடையிடையே;* ***உற பிறழ்ந்து -*** *நன்றாக ஒளியை வீசி;* ***வளர் கதிர் -*** *உதிக்கின்ற சூரியனின்;* ***இளவெயில்பொருவ -*** *மெல்லிய மஞ்சள் வெயிலை ஒத்திருக்கவும்;* ***மார்பின் நூல் -*** *மார்பில் உள்ள பூணூல்;* ***சூல் நிறக் கொண்மூ -*** *கருக்கொண்ட மேகத்தை;* ***கிழித்து -*** *பிளந்து கொண்டு;* ***இடை***

***துடிக்கும் -*** *(அதன்) நடுவில் பளிச்சிடும்;* ***மின் என -*** *மின்னலைப் போல;* ***துளங்க -*** *அசையவும். பட்டின் என்பதில்உள்ள 'இன்' அசை. 'நுசிப்பினை ஒசிய வீங்கி' என்பது சிந்தாமணி (459) 'நுசுப்பு வீங்கி' என்பது பொருள். இனியர், இன்னும் ஐயும் அசைச்சொல் என்றார். உத்தரியம் - மேலாடை. அது பட்டு. 'உத்தரியப் பட்டு ஒருபால் ஒளிர' என்பர் பட்டினத்தடிகள்.உத்தரியம் என்பதுமேலாடை. இஃது இடது தோளிலிருந்து இடுப்புவரை தொங்கி முதுகுப் பக்கத்தில் தொடர்ந்து வந்தடையும். இதற்கு மாற்றாக உத்தரியம் போல் முத்து வடங்களே அமைந்திருப்பதைச் சிற்பங்களில் காணலாம். இது முத்தினாலான உத்தரியம் ஆனதால் 'மௌத்தி சோத்தரீயம்' எனப்படும் (சிற்பச் செந்நூல் 96)* ***(82)***

***5151. தோள்தொறும் தொடர்ந்த, மகரிகை வயிரக்***
***கிம்புரி வலய மாச் சுடர்கள்***
***நாள்தொறும்சுடரும் கலி கெழு விசும்பில்,***
***நாளொடுகோளினை நக்க,***
***தாள்தொறும்தொடர்ந்த தழங்கு பொற்கழலின்***
***தகை ஒளிநெடு நிலம் தடவ,***
***கேள்தொறும்தொடர்ந்த முறுவல் வெண் நிலவின்***
***முகமலர்இரவினும் கிளர;***

***தோள் தொறும் -*** *தோள்கள்தோறும்;* ***தொடர்ந்த -*** *அணியப்பெற்ற;* ***மகரிகை -*** *சுறாமீன் வடிவமாக அமைந்த;* ***வயிர -*** *வயிரம் பதிக்கப் பெற்ற;* ***கிம்புரி வலயம் -*** *தோள் வலயத்தினுடைய;* ***மாச்சுடர்கள் -*** *சிறந்த ஒளிகள்;* ***கலிகெழு விசும்பில் -*** *ஒலிக்கு ஆதாரமாகிய ஆகாயத்தில்;* ***நாள் தொறும் -*** *தினந்தோறும்;* ***சுடரும் -*** *விளங்குகின்ற;* ***நாளொடு கோளினை -*** *நட்சத்திரங்களையும் கிரகங்களையும்;* ***நக்க -*** *அடக்கவும்;* ***தாள் தொறும் -*** *பாதங்கள் தோறும்;* ***தொடர்ந்த -*** *அணியப்பெற்ற;* ***தயங்கு -*** *ஒளிவீசும்;* ***பொன்கழலின் -*** *அழகிய வீரக் கழலின்;* ***தகை ஒளி -*** *சிறந்த ஒளி;* ***நெடுநிலம் தடவ -*** *பெரிய பூமியை அளவளாவவும்;* ***கேள் தொறும் -*** *எல்லாச் சுற்றத்தினரோடும்;* ***தொடர்ந்த -*** *இடைவிடாது செல்லும்;* ***முறுவல் வெள்நிலவின் -*** *புன்னகையின் வெள்ளிய நிலவால்;* ***முகமலர் -*** *(இராவணனின்) முகமாகிய மலர்;* ***இரவினும் கிளர -*** *இரவுப் போதிலும் விளங்கித் தோன்ற.*

*கோளினை நக்கஎன்ற தொடரில் உள்ள 'நக்க' என்பது 'அடக்க' எனப்படும் பொருள் தந்தது. பால்நக்க தீஞ்சொல் - மான் நக்க நோக்கின் மடவார் (சிந்தாமணி -கனகமாலை 310) நாள் நட்சத்திரம். கோள் - கிரகங்கள். வயிரக்கிம்புரி - தோள்வலயம் (வாகுவலயம்)* ***(83)***

***5152. தன்நிறத்தோடு மாறு தந்து இமைக்கும்***
***நீவி அம்தழைபட உடுத்த***
***பொன் நிறத்துூசு, கரு வரை மருங்கில்***
***தழுவிய புதுவெயில் பொருவ;***
***மின் நிறக்கதிரின் சுற்றிய பசும் பொன்***
***விரல்தலைஅவிர் ஒளிக் காசின்***

***கல் நிறக்கற்றை, நெடு நிழல் பூத்த***
***கற்பக முழுவனம் கவின;***

***தன் நிறத் தோடு-*** *தன்னுடைய கரியநிறத்துடன்;* ***மாறு தந்து -*** *வேறுபாட்டை வழங்கி;* ***இமைக்கும் -*** *விளங்குகின்ற;* ***நீவி -*** *கொய்சகம்;* ***அம் -*** *அழகு;* ***தழைபட -*** *செழிப்புற்றுத் தோன்ற;* ***உடுத்த -*** *உடுக்கப் பெற்ற;* ***பொன்நிறத்தூசு -*** *பொன்னிறம் பெற்ற பட்டாடை;* ***கருவரை மருங்கில் -*** *கருத்த மலையின் சூழலில்;* ***தழுவிய -*** *சார்ந்துள்ள;* ***புது வெயில் பொருவ -*** *இளைய (மஞ்சள்) வெயிலை ஒப்பவும்;* ***விரல்தலை -*** *கையின்கண் அணியப் பெற்ற;* ***மின் நிறம் -*** *மின்னல் போன்ற நிறமுடைய;* ***கதிரின் -*** *ஒளி;* ***சுற்றிய -*** *சுற்றப்பெற்ற;* ***பசும்பொன் -*** *பசுமையான கடகத்தில் பதித்த;* ***அவிர் ஒளி -*** *மிக்க ஒளியையுடைய;* ***காசின்கல் -*** *இரத்தினக் கற்களின்;* ***நிறக் கற்றை -*** *நிறங்களின் தொகுதி;* ***நெடுநிழல் -*** *மிக்க ஒளியை;* ***பூத்த -*** *வெளிப்படுத்திய;* ***முழு -*** *பெரிய;* ***கற்பகவனம் -*** *கற்பகவனத்தைப் போல;* ***கவின -*** *அழகு பெறவும்.*

*இராவணனின்மோதிரங்களில் பதித்த மணியின் ஒளியானது கற்பகவனத்தைப் போல அழகு பெறவும். பொன் - மோதிரம். நிழல் பூத்த - ஒளியை வெளிப்படுத்தும். புதுவெயில் என்றதனால்காலை மஞ்சள் வெயில் எனக் கொள்க. கற்பக முழுவனம் கடுப்ப என்று பாடம் கொண்டு இந்தக் குணங்களினாலே கற்பகச்சோலை ஒத்தான் இராவணன் என்று பழைய வுரை கூறும். (அடை - பதி) இப்பாடலின் பின் இரண்டு அடிகளில் மோதிரம் பேசப்பட்டது என்று பலர்கருதுகின்றனர். இராம பிரானின் கோலம் பேசும் பகுதியில் (கடிம. 57)கடகமும் கற்பகமும் நினைக்கப் பெறுகின்றன. கற்பகம் ஈன்ற தாம் என்னகைக் கடகம் மின்ன என்ற பகுதி நோக்கத் தக்கது. ஆதலின் இங்குபசும்பொன் என்பது கடகமே. இங்கு விரல் என்றது கையையே. 'படை கொள் நோன் விரல்' என்னும் முல்லைப்பாடல் (முல்லை 77) நோக்குக. அங்குஇனியர் 'வலிய கை' என்று உரை வகுத்தார். தமிழ்த் தெய்வம். உ.வே.சா அடிப்பகுதியில் கணவனை நோக்கி இணைவிரல் கூப்பி என்னும்பெருங்கதையை மேற்கோள் காட்டினார் (பெருங் -4-7-36) விரல்தலை -கையின்கண். கதிரின் என்பதில் உள்ள 'இன்' அசை. கற்பினின் - (சிந்தா - 604) கதிர் சுற்றிய பசும்பொன்' என்க.* ***(84)***

***5153. சன்னவீரத்த கோவை வெண் தரளம்,***
***ஊழியின்இறுதியில் தனித்த***

***பொன் நெடுவரையில் தொத்திய கோளும்,***
***நாளும்ஒத்து, இடை இடை பொலிய;***
***மின் ஒளிர்மௌலி உதய மால்வரையின்***
***மீப்படர்வெங் கதிர்ச் செல்வர்***
***பன்னிருவரினும்,இருவரைத் தவிர்வுற்று,***
***உதித்ததுஓர் படி, ஒளி பரப்ப;***

***சன்ன வீரத்த -*** *'சன்னவீரம்' என்னும் உறுப்பைப் பெற்ற;* ***வெண்தரளக் கோவை -*** *வெண்மையான முத்தால் அமைந்த வீர சங்கிலி;* ***ஊழியின் இறுதியில் -*** *யுகத்தின் முடிவிலே;* ***தனித்த -*** *தனியாக உள்ள;* ***நெடு பொன் வரையில் -*** *பெரிய மேரு மலையில்;* ***தொத்திய -*** *பற்றியுள்ள;* ***கோளும் நாளும் ஒத்து -*** *கிரகங்களையும் நட்சத்திரங்களையும் ஒத்து;* ***இடையிடை -*** *மற்ற ஆபரணங்களின் நடுவிலே;* ***பொலிய -*** *விளங்கவும்;* ***மின் -***

*மின்னலைப் போல;* ***ஒளிர் மௌலி -*** *விளங்கும் பத்துக் கிரீடங்கள்;* ***உதய மால் வரையின் -*** *உதயகிரியின்;* ***மீப்படர் -*** *மேலே பரவிய;* ***வெங்கதிர்ச் செல்வர் -*** *கதிரையே செல்வமாகப் பெற்ற சூரியர்கள்;* ***பன்னிருவரின் -*** *பன்னிருவர்களுக்குள்ளே;* ***இருவரைத் தவிர்வுற்று -*** *இருவர் நீங்க (மற்றை பதின்மர்);* ***உதித்தது ஓர்படி -*** *உதித்த ஒப்பற்ற இயல்புடன்;* ***ஒளி பரப்ப -*** *ஒளியைப் பரவச் செய்யும்.*

*சன்னவீரம் -வீரசங்கிலியில் அமையும் ஓர் உறுப்பு. கழுத்தினைச் சுற்றியும், மார்பணிகளைச் சுற்றியும் உடலின் ஒரு மூலையிலிருந்து எதிர் மூலைக்குக் குறுக்கே சென்று முதுகிலும் அங்ஙனமே அமைந்த இரு சங்கிலிகளின் பெயர் வீரசங்கிலி, இச்சங்கிலி ஸ்தனத்திலிருந்து கீழ்விரல் அளவு கீழே தொங்கிச் செல்லும். இதற்குச் 'சன்னவீரம்' என்றும் பெயர் உண்டு. (சிறப்புச் செந்நூல் 94)* ***(85)***

***5154. பயில்எயிற்று இரட்டைப் பணை மருப்பு ஒடிய,***
***படியினில்பரிபவம் சுமந்த***
***மயில் அடித்துஒழுக்கின் அனைய மா மதத்த***
***மாதிரக்காவல் மால் யானை,***
***கயிலையின்திரண்ட முரண் தொடர் தடந் தோள்***
***கனகனதுஉயர் வரம் கடந்த***
***அயில் எயிற்றுஅரியின் சுவடு தன் கரத்தால்***
***அளைந்தமாக் கரியின், நின்று அஞ்ச;***

***எயிற்று பயில் -*** *பற்களின்பக்கத்தே செறிந்துள்ள;* ***இரட்டைப் பணை மருப்பு -*** *இரட்டித்த பருத்த கொம்புகள்;* ***ஒடிய -*** *ஒடிந்தமையாலே;* ***படியினில் பரிபவம் சுமந்த -*** *உலகில் அவமானத்தைத் தாங்கியுள்ள;* ***மயில் அடித்து -*** *மயிலின் அடியின் தன்மையை;* ***அனைய -*** *ஒத்த;* ***ஒழுக்கு மா மதத்த -*** *ஒழுகுதலைப் பெற்ற மதத்தை உடைய;* ***மாதிரக் காவல் -*** *திசைகளைப் பாதுகாக்கும்;* ***மால் யானை -*** *பெரிய யானைகள்;* ***கயிலையின் -*** *கயிலாய மலைபோல;* ***திரண்ட -*** *ஒன்று கூடியதும்;* ***தொடர் முரண் -*** *இடைவிடாத வலிமையுடையதும்;* ***தடந்தோள் -*** *வலிமை மிக்க தோள்களையுடைய;* ***கனகனது -*** *இரணியனுடைய;* ***உயர் வரம் கடந்த -*** *உயர்ந்த வரங்களை வென்ற;* ***அயில் எயிற்று -*** *கூரிய பற்களையுடைய;* ***அரியின் சுவடு -*** *நரசிங்கத்தின் பாதச் சுவட்டை;* ***தன்கரத்தால் -*** *தன்னுடைய கையால்;* ***அளைந்த -*** *தடவிப் பார்த்த;* ***மாக்கரியின் -*** *பெரிய யானையைப் போல;* ***நின்று -*** *திகைத்து;* ***அஞ்ச -*** *பயத்தை அடையவும்.*

*நான்குதந்தங்கள் திசையானை மாட்டு உளவாதலின் இரட்டைப் பணை மருப்பு என்று கூறப் பெற்றது. மற்றைய யானைகளுக்கு இரட்டித்த கொம்பு என்க. பயில் - செறிந்த. மரம்பயில் கடிமிளை (புறம் 21) மயில் அடித்து - மயிலடியின் தன்மை. அடி என்றது விரலை. மயிலடி மூன்று. மதமும் மூன்று. ஆதலின் மயிலடித்து --- மாமதம் என்று கூறப் பெற்றது, பரிபவம் சுமந்த யானை என்க. திரண்ட அரி - கடந்த அரி என்க. தடந்தோள் அரிக்கு உரித்து. அரி - நரசிங்கம். அரி உருவாகி (பெரியாழ் திருப்பல்லாண்டு)* ***(86)***

***5155. அம் கயல்கருங் கண் இயக்கியர், துயக்கு இல்***
***அரம்பையர், விஞ்சையர்க்கு அமைந்த***

***நங்கையர், நாகமடந்தையர், சித்த***
***நாரியர்,அரக்கியர் முதலாம்,***
***குங்குமக்கொம்மைக் குவி முலை, கனி வாய்,***
***கோகிலம்துயர்ந்த மென் குதலை,***
***மங்கையர்ஈட்டம் மால் வரை தழீஇய***
***மஞ்ஞை அம்குழு என மயங்க;***

***அம் கயல்கருங்கண் -*** *அழகிய மீன் போன்றகருங்கண்களைப் பெற்ற;* ***இயக்கியர் -*** *யட்சப் பெண்கள்;* ***துயக்கு இல் -*** *தளர்ச்சி இல்லாத;* ***அரம்பையர் -*** *தேவ மகளிர்;* ***விஞ்சையர்க்கு அமைந்த -*** *வித்தியாதரர்க்கு உரிய;* ***நங்கையர் -*** *மகளிர்;* ***நாகமடந்தையர் -*** *நாகலோகக்கன்னியர்கள்;* ***சித்த நாரியர் -*** *சித்த குலப் பெண்கள்;* ***அரக்கியர் முதலாம் -*** *அரக்கியர் முதலான;* ***குங்குமம் -*** *கும்குமச் சாந்து அணியப் பெற்றதும்;* ***கொம்மை -*** *பருத்ததும்;* ***குவி முலை -*** *திரண்டதும் ஆகிய தனங்களையும்;* ***கனிவாய் -*** *கோவைப்பழம் போன்ற வாயையும்;* ***கோகிலம் துயர்ந்த குதலை -*** *குயில்கள் வருந்தும் மொழிகளையும் உடைய;* ***மங்கையர் ஈட்டம் -*** *மகளிரின் தொகுதி;* ***மால் வரைதழீஇய -*** *கருத்த மலையைச் சார்ந்த;* ***மஞ்சை அம் குழுஎன -*** *அழகியமயில் கூட்டம் போல;* ***வயங்க -*** *விளங்கவும். துயக்கு -தளர்ச்சி. 'துயக்கு அற அறிந்து' (மணிமேகலை 27-19) கோகிலம் வருத்தம் அடைவதற்கு ஏதுவான மொழி. துயர்ந்த - வருந்த 'ஆறாது துயரும் என் உள்' (அகம் 195)* ***(87)***

***5156. தொளை உறுபுழை வேய்த் தூங்கு இசைக் கானம்***
***துயலுறாது ஒரு நிலை தொடர,***
***இளையவர் மிடறும்இந் நிலை இசைப்ப,***
***கின்னரர்முறை நிறுத்து எடுத்த***
***கிளை உறு பாடல்,சில்லரிப் பாண்டில்***
***தழுவியமுழவொடு கெழுமி,***
***அளை உறும் அரவும்அமுது வாய் உகுப்ப,***
***அண்டமும்வையமும், அளப்ப;***

***தொளையுறு -*** *தொளைகளைப் பெற்ற;* ***புழைவேய் -*** *உள்ளீடற்ற புல்லாங்குழலின் கண்ணே;* ***தூங்கு இசைக் கானம் -*** *மந்த கதியில் அமைந்த இசை;* ***துயல் உறாது -*** *தொய்வு அடையாதபடி;* ***ஒரு நிலை தொடர -*** *ஒப்பற்ற பண்புடன் தொடரவும்;* ***இந்நிலை -*** *இதே நிலையில்;* ***இளையவர் மிடறும் -*** *மகளிரின் கண்டமும்;* ***இசைப்ப -*** *பாடவும்;* ***கின்னரர் -*** *கின்னரர் எனும் தேவசாதியினர்;* ***முறை நிறுத்த எடுத்த -*** *ஒழுங்கு அமைய எடுத்த;* ***கிளை உறு பாடல் -*** *இளிக்கிரமத்தில் அமைந்த பாட்டு;* ***சில்லரி -*** *சில்லரி என்னும் சிறு தோற்கருவியுடனும்;* ***பாண்டில் தழுவிய -*** *கைத் தாளத்துடனும் கூடிய;* ***முழவுடன் -*** *மத்தளத்துடனும்;* ***கெழுமி -*** *ஒன்றுபட (அதனால்);* ***அளை உறை அரவும் -*** *புற்றின்கண் உள்ள பாம்பும்;* ***வாய் -*** *வாயின்கண்ணே;* ***அமுது உகுப்ப -*** *அமுதத்தைக் கொட்டவும்; (அவரிசை)* ***அண்டமும் -****அண்டங்களையும்;* ***வையமும் -*** *நிலவுலகத்தையும்;* ***அளப்ப -*** *தனக்குள் கட்டுப்படுத்தவும். இசை, சுத்தம்,சாளவம், தமிழ் என்று மூவகை பேசப்படுகிறது. அவற்றுள் சுத்தம் தூங்கிசை. சுத்தமாவது ஓசையை உச்சரித்து நாசியிலே ஓட்டிச் சிரத்தையும் நாபியையும் சம்பித்துத் தூங்கிசையாகப்பாடுவது (பஞ்சமரபு) சில்லரி - வட்ட வடிவமான தோற்கருவி - சில்லரி கறங்கும் (அகம் 301)*

*தமிழ்இசை (145 பக்) பாண்டில் - கைத்தாளம். நுண் உருக்குற்ற விளங்கு அடர்ப்பாண்டில் (மலைபடுகடாம் 4) பாண்டில், தாளம் என்றே அழகர் வரைந்தார் (பரிபாடல் 15 - 42) கிளை உறு பாடல் இளிக்கிரமத்திற் பாடப் பெற்ற பாடல். கிளை என்னும் சொல்லுக்கு பரிபாடலில் (11 - 127) கிளையாகிய இளி என விளக்கினார். யாழ் நூல் - குரற்கிரமம். இளிக்கிரமம் விளரிக்கிரமம் - என்று மூன்று கிரமம் பற்றிப் பேசும் (பக் 82). இளிக்கிரமம் 97 ஆம் பக்கத்தில் விவரிக்கிறார். இளி ஒன்றி நின்ற இசை (யாழ் நூல் - தெய்வ -2)* ***(88)***

***5157. அன்ன பூஞ்சதுக்கம், சாமரை, உக்கம்***
***ஆதியாம்வரிசையின் அமைந்த,***
***உன்னரும்பொன்னின், மணியினின் புனைந்த***
***இழைக்குலம், மழைக் கருங் கடைக் கண்,***
***மின் இடை, செவ்வாய், குவி முலை, பணைத் தோள்***
***வீங்குதேர் அல்குலார் தாங்கி,***
***நல் நிறக்காரின் வரவு கண்டு உவக்கும்***
***நாடகமயில் என நடப்ப;***

**உன்னரும்** - கற்பனை செய்ய முடியாத; **பொன்னின்** - பொன்னாலும்; **மணியினின்** - மணியினாலும்; **புனைந்த** - செய்யப்பெற்ற ; **இழைக்குலம்** - ஆபரணங்களையும்; **மழைக் கருங்கடைக்கண்** - குளிர்ந்த கருத்த கடைக்கண்களையும்; **மின்இடை** - மின்னல் போன்ற இடையையும்; **செவ்வாய்** - சிவந்த வாயையும்; **குவிமுலை** - குவிந்த தனங்களையும்; **பணைத்தோள்** - மூங்கில் போன்ற தோள்களையும்; **வீங்கு தேர் அல்குலார்** - பெரிய தேர் போன்ற அல்குலையும் உடையமகளிர்; **அன்ன** - அப்படிப்பட்ட; **பூஞ்சதுக்கம்** - அழகிய மணை; **சாமரை** - சாமரை; **உக்கம்** - ஆலவட்டம்; **ஆதி ஆம்** - முதலான; **வரிசையின் அமைந்த** - முறைப்படி அமைந்த பொருள்களை; **தாங்கி** - சுமந்து கொண்டு; **நல்நிறக்காரின்** - கரிய நிறமுடைய மேகத்தின்; **வரவுகண்டு** - வருகையைப் பார்த்து; **உவக்கும்** - மகிழ்ச்சியடையும்; **நாடக மயில் என** - ஆடும் மயில்களைப் போல; **நடப்ப** - நடந்து வரவும். *உக்கம் - ஆலவட்டம். உக்கமும் தட்டொளியும் தந்து (திருப்பாவை) கவிஞன் தன் உள்ளம் கருதியதைச் சுட்டிக் கூறுவான். அதை உளமறி சுட்டு என்பர். இங்கே அன்ன என்பதுவும் அது. மழை - குளிர்ச்சி. சவுக்கம் என்று பாடம் கொண்டு நாற்கோணமான விதானம் என்று பொருள் கூறப்பெற்றது (அடை - பதி) பூஞ்சவுக்கம் - பூவினாற் செய்த இளைப்பாறும் இடம் என்பது பழைய உரை - (அடை - பதி)* ***(89)***

***5158. தந்திரிநெறியில் தாக்குறு கருவி***
***தூக்கினர்எழுவிய சதியின்,***
***முந்துறு குணிலோடுஇயைவுறு குறட்டில்,***
***சில்லரிப்பாண்டிலில், முறையின்,***
***மந்தர கீதத்துஇசைப் பதம் தொடர,***
***வகை உறுகட்டளை வழாமல்,***
***அந்தர வானத்துஅரம்பையர், கரும்பின்***
***பாடலார்,அருகு வந்து ஆட;***

***தந்திரிநெறியில் -*** *யாழ்நூல் முறைப்படி;* ***தாக்குறு கருவி -*** *தாக்கப்படும் தாளத்தை;* ***தூக்கினர் -*** *தாங்கியவர்கள்;* ***எழுவிய -*** *எழுப்பிய (அமைத்த);* ***சதியின் -*** *தாளசதியின் படியும்;* ***முந்துறு குணிலோடு இயைவுறு -*** *முற்படும் குறுந்தடியுடன் தொடர்புடைய;* ***குறட்டில் -*** *குறடு என்னும் பறையின்படியும்;* ***சில்லரி (இன்) -*** *சில்லரியின்படியும்;* ***பாண்டிலின் -*** *பாண்டிலின்படியும்;* ***முறையின் -*** *மரபுப்படி;* ***மந்தரம் -*** *மந்த ஓசை;* ***இசை-*** *பொருந்திய;* ***கீதத்துப்பதம் -*** *கீதத்தில் ஒருவகையான பதம்;* ***தொடர -*** *தொடரவும் (அதற்கேற்ப);* ***அந்தரவானத்து அரம்பையர் -*** *மேல் உள்ள விண்ணுலகத் தேவ மகளிர்;* ***வகையுறு -*** *பல்வகையான;* ***கட்டளை வழாமல் -*** *விதி பிறழாதபடி;* ***கரும்பின் பாடலார் -*** *கரும்பு போலப் பாடுபவர்;* ***அருகு உவந்து -*** *பக்கத்தில் மகிழ்ந்து;* ***ஆட -*** *ஆடவும்.*

*சதியில்,குறட்டில், பாண்டிலில் பதம் தொடர, கட்டளை வழாமல் ஆட, என அமைக்க. குறடு - ஒருவகைப் பறை. 'தழங்கு பேரியும் குறட்டொடு பாண்டிலும்' (கம்ப. மிசை. 107) குறடுமாப் பேரி கொட்டி (பிரமாத்திர 3) சில்லரி பாண்டில் (கம்ப. 5156. குறிப்புரை) பதம் -இசைப்பாட்டுவகை.பதங்களில் தண்ணுமை பாணி பண்ணுற.... சதி மிதிப்பவர் (கம்ப. 144)* ***(90)***

***5159. அந்தியில், அநங்கன், அழல்படத் துரந்த***
***அயில்முகப் பகழி வாய் அறுத்த***
***வெந்துறு புண்ணின்வேல் நுழைந்தென்ன,***
***வெண்மதிப் பசுங் கதிர் விரவ,***
***மந்த மாருதம்போய் மலர்தொறும் வாரி***
***வயங்குநீர் மம்மரின் வரு தேன்***
***சிந்து நுண்துளியின் சீகரத் திவலை,***
***உருக்கியசெம்பு எனத் தெறிப்ப;***

***அந்தியில் -*** *மாலைக்காலத்தில்;* ***அனங்கன் -*** *மன்மதன்;* ***அழல் படத் துரந்த -*** *வெப்பம் உண்டாக ஏவிய;* ***அயில் முகப் பகழி -*** *கூரிய முகத்தைப் பெற்ற அம்பு;* ***வாய் அறுத்த -*** *தப்பாமல் அறுத்த;* ***வெந்துறு புண்ணின் -*** *வெந்துள்ள புண்ணிலே;* ***வேல் நுழைந்தென்ன -*** *வேல் புகுந்தாற் போல;* ***வெண்மதி -*** *வெண்மையான சந்திரனின்;* ***பசுங்கதிர் விரவ -*** *இளங்கதிர் கலக்கவும்;* ***மந்த மாருதம் -*** *தென்றக் காற்று;* ***மலர்தொறும் போய் -*** *பூக்கள் தோறும் சென்று;* ***வாரி -*** *அள்ளிக் கொண்டு;* ***வயங்கு நீர் மம்மரின் -*** *விளங்கும் மழைபோலப் பெருகி;* ***வரு -*** *வருகின்ற;* ***சிந்து நுண் -*** *சிந்துகின்ற நுட்பமான;* ***தேன் துளிகள் -*** *தேன் துளிகளும்;* ***சீகரத் திவலை-*** *செழிப்பான நீர்த்துளிகளும்;* ***உருக்கிய -*** *உருக்கப்பெற்ற;* ***செம்பு என -*** *செம்பின் குழம்பு போல;* ***தெறிப்ப -*** *மேனியில் படவும். சீகரம் -செழிப்பு. "சீகரம் மிக்க சூர் செயிர்த்துச் செய்திடும் ஆகுலம்" (கந்தபுரா - மகேந்தர - சயந்தன் புலம்பு 20) சீகரத் திவலை - பனிநீர்ச் செம்பில் நின்று தூவும் நீர்த்துளிகள் என்று அண்ணாமலை - கழகப் பதிப்பு வரைந்தது. சீகரம், பன்னீர்ச் செம்பு என்பதற்கு மேற்கோள் காட்டப்படவில்லை; வி.கோவிந்தப் பிள்ளை இங்ஙனம் உரை கூற வழிகாட்டினார்.*
***(91)***

***5160. இழை புரைமருங்குல் இறும் இறும் எனவும்,***
***இறுகலா வனமுலை இரட்டை***
***உழை புகுசெப்பின் ஒளிதர மறைத்த***

*உத்தரியத்தினர் ஒல்கி*
*குழை புகு கமலம்கோட்டினர் நோக்கும்,*
*குறு நகைக்குமுத வாய் மகளிர்*
*மழை புரை ஒண்கண் செங் கடை ஈட்டம்,*
*மார்பினும்தோளினும், மலைய;*

***இழை புரைமருங்குல் -*** *நூல் போன்ற இடை;* ***இறும் இறும் எனவும் -*** *முறியும் முறியும் என உணர்த்தவும்;* ***இறுகலா -*** *சுருங்காத;* ***இரட்டை வனமுலை -*** *இரட்டித்த அழகிய தனங்கள்;* ***உழைபுகு -*** *இரு பக்கங்களிலும்;* ***செப்பின் -*** *புகுந்த செப்புகளைப் போல;* ***ஒளிதர -*** *விளக்கமுற;* ***மறைத்த -*** *அவற்றை மறைக்கின்ற;* ***உத்தரியத்தினர் -*** *மேலாடை உடையவர்களாய்;* ***ஒல்கி -*** *அசைந்து;* ***குழைபுகு -*** *குண்டலங்கள் பொருந்திய;* ***கமலம் -*** *தாமரை போலும் முகத்தை;* ***கோட்டினர் -*** *வளைத்து;* ***நோக்கும் -*** *பார்க்கும்;* ***குறுநகை -*** *புன்னகையும்;* ***குமுதவாய் மகளிர்*** *குமுத மலர் போன்றவாயையும் உடைய பெண்களின்;* ***மழைபுரை -*** *மேகத்தைப் போன்றதும்;* ***செங்கடை -*** *சிவந்த கடைப்பகுதிகளைக்கொண்டதும் (ஆகிய);* ***ஒண்கண் -*** *அழகிய கண்களின்;* ***ஈட்டம் -*** *தொகுதி;* ***மார்பினும் -*** *மார்பின்கண்ணும்;* ***தோளினும் -*** *தோள்களிலும்;* ***மலைய -*** *போர் செய்யவும்.*

*இறுகலா -சுருங்காத. இறுகல் உறப்பென்னும் ஞானிக்கும் (திருவாய் 4-1- 10) இறுகல் -சங்கோசம் (சுருங்கல்) திவ்யப் பிரபந்தம் அரும்பதவுரை 786 (பக்) திருவேங்கடத்தான் மன்றம். உழை - இருபுறம். மேகம் போலும் கண் என்று கூறுவதில் கவிச்சக்கரவர்த்திக்கு விருப்பம் அதிகம் போலும். "மழைபொரு கண்ணினை மடந்தை மார்" (கம்ப. 573)"மழைக்கண் என்பது காரணக்குறி" (கம்ப. 5074) புரைமழைக்கண் எனப் பிரித்து உயர்ந்த குளிர்ந்த கண் என்றும் கூறலாம்.மழைக்கண் - குளிர்ந்த கண் என்பதே சங்க வழக்கு. பூங்குழைக்கு அமர்ந்தஏந்தெழில் மழைக்கண் (நெடுதல் 38)*
***(92)***

***5161. மாலையும்,சாந்தும், கலவையும், பூணும்,***
***வயங்கு நுண்துரசொடு, காசும்,***
***சோலையின்தொழுதிக் கற்பகத் தருவும்,***
***நிதிகளும்,கொண்டு பின் தொடர,***
***பாலின் வெண்பரவைத் திரை கருங் கிரிமேல்***
***பரந்தெனச் சாமரை பதைப்ப,***
***வேலைநின்றுஉயரும் முயல் இல் வெண் மதியின்,***
***வெண்குடைமீதுற விளங்க;***

***சோலையின்தொழுதி -*** *சோலையின் தொகுதிபோன்ற;* ***கற்பக தருவும் -*** *கற்பக மரங்களும்;* ***நிதிகளும் -*** *சங்கநிதி, பதும நிதி முதலிய நிதிகளும்;* ***மாலையும் -*** *மாலைகளையும்;* ***சாந்தும் -*** *சந்தனத்தையும்* ***கலவையும் -*** *(மற்றைய) குங்குமம் முதலான கலவைகளையும்;* ***பூணும் -*** *ஆபரணங்களையும்;* ***வயங்கு -*** *விளங்கும்;* ***நுண் துரசொடு -*** *நுண்ணிய ஆடைகளையும்;* ***காசும் -*** *மணிகளையும்;* ***கொண்டு -*** *எடுத்துக்கொண்டு;* ***பின்தொடர -*** *பின்பற்றி வரவும்;* ***வெண்பால் பரவை -*** *வெண்மையான பாற்கடலின்;* ***திரை -*** *அலைகள்;* ***கருங்கிரிமேல் -*** *கரிய மலைமேல்;* ***பரந்தென -*** *பரவினாற் போல;* ***சாமரை பதைப்ப -*** *வெண்சாமரை சுழலவும்;* ***வேலை***

***நின்று*** - கடலிலிருந்து; ***உயரும்*** - உயர்ந்து செல்லும்; ***முயல் இல் வெண் மதியின்*** - களங்கமில்லாத வெள்ளிய சந்திரனைப் போல; ***வெண்குடை மீதுற விளங்க*** - வெள்ளிய குடை மேலே விளங்கவும்.

*இழையும் மாலையும்ஆடையும் சாந்தமும் ஏந்தி உழையர் என்ன நின்று உதவுவ நிதியங்கள் என்று முன்பு (கம்ப. 4861) பேசப்பெற்றது. பாலின் வெண்பரவை - இதில் உள்ள 'இன்' அசை.* ***(93)***

***5162. ஆர்கலிஅகழி, அரு வரை, இலங்கை,***
***அடிபெயர்த்து இடுதொறும் அழுந்த,***
***நேர்தரும்பரவைப் பிறழ் திரை, தவழ்ந்து***
***நெடுந்தடந் திசைதொறும் நிமிர,***
***சார்தரும் கடுவின் எயிறுடைப் பகு வாய்***
***அனந்தனும்தலை தடுமாற,***
***மூரி நீர் ஆடைஇரு நில மடந்தை,***
***முதுகு உளுக்குற்றனள் முரல;***

***ஆர்கலி அகழி*** - கடலையேஅகழாகப் பெற்ற; ***அருவரை இலங்கை*** - திரிகூட மலையில் அமைந்த அரிய இலங்கை; ***அடிபெயர்த்திடும் தொறும்*** - (இராவணன்) பாதம் பெயர்த்து வைக்கும் போதெல்லாம்; ***அழுந்த*** - கீழே அமிழவும்; ***நேர்தரும்*** - இலங்கையைச் சூழ்ந்துள்ள; ***பரவைப் பிறழ்திரை*** - கடலில் புரள்கின்ற அலைகள்; ***தவழ்ந்து*** - தத்திச் சென்று; ***நெடும் தடம் திசை தொறும்*** - நீண்ட பெரிய திக்குகள் தோறும்; ***நிமிர*** - கொந்தளிக் கவும்; ***சார் அரும்*** - அணுக முடியாத; ***கடுவின் எயிறுடை*** - விடப் பற்களையும்; ***பகுவாய்*** - பிளந்த வாயையும்(பெற்ற); ***அனந்தனும்*** - ஆதிசேடனும்; ***தலைதடுமாற*** - நிலைகுலையவும்; ***மூரி நீர் ஆடை*** - வலிமை மிக்க கடலை ஆடையாகப் பெற்ற; ***இரு நில மடந்தை*** - பெரிய பூமி தேவியானவள்; ***முதுகு உளுக்குற்றனள்*** - முதுகு நெளியப் பெற்று; ***முரல*** - சுற்றவும்.

*உளுக்குதல் -நெளிதல். 'நிலம் முதுகு உளுக்கிக் கீழ் உற' (கம்ப. 675, 2408)*
***(94)***

***5163. கேடகத்தோடு, மழு, எழு, சூலம்,***
***அங்குசம்,கப்பணம், கிடுகோடு,***
***ஆடகச் சுடர்வாள், அயில், சிலை, குலிசம்***
***முதலியஆயுதம் அனைத்தும்,***
***தாடகைக்கு இரட்டிஎறுழ் வலி தழைத்த***
***தகைமையர்,தட வரை பொறுக்கும்***
***சூடகத் தடக் கை,சுடு சினத்து, அடு போர்,***
***அரக்கியர்தலைதொறும், சுமப்ப;***

***தாடகைக்கு இரட்டி***- தாடகையை விட இரண்டு பங்கு; ***எறுழ்வலி*** - மிக்க வலியை; ***தழைத்த*** - பெருகியுள்ள; ***தகைமையர்*** - தன்மை உடைய; ***தடவரை பொறுக்கும்*** - பெரிய மலையைச் சுமக்கும்; ***சூடகத் தடக்கை*** - வளையல் அணிந்த கைகளால்; ***சுடுசினத்து***

***அடுபோர்*** - *பகைவரை அழிக்கும் போரில் வல்ல;* ***அரக்கியர்*** - *அரக்கிகள்;* ***கேடகத்தோடு*** - *கேடகத்தையும்;* ***மழு*** - *மழுவையும்;* ***எழு*** - *இருப்புலக்கையையும்;* ***சூலம்*** - *சூலத்தையும்;* ***அங்குசம்*** - *அங்குசத்தையும்;* ***கப்பணம்*** - *இரும்பால் செய்த ஆனைநெருஞ்சி முள்ளையும்;* ***கிடுகு*** - *கிடுகையும்;* ***ஆடகச் சுடர்வாள்*** - *பொன்வாளையும்;* ***அயில்*** - *வேலையும்;* ***சிலை*** - *வில்லையும்;* ***குலிசம்*** - *வச்சிராயுதத்தையும்;* ***முதலிய*** - *முதலான;* ***ஆயுதம் அனைத்தும்*** - *எல்லா ஆயுதங்களையும்;* ***தலை தொறும் சுமப்ப*** - *தலைகள் தோறும் தாங்கவும்.*

*கப்பணம் -நெருஞ்சி முள் போன்ற ஆயுதம். காய்ந்தனன் கருக, உந்திக் கப்பணம் சிந்தினாளோ (சிந்தாமணி 285) கிடுகு, கேடக வகைகளில் ஒன்று. கேடக வகைகளைச் சிந்தாமணி 2218 ஆம் பாடல் பேசும். கிடுகு - மயிர்க்கிடுகு என்று இனியர் விளக்கினார். சூடகம் - வளையல். உம்மைப் பொருள் தந்த ‘ஒடு‘வை எல்லாவற்றுடன் கூட்டுக. மழுவொடு, எழுவொடு எனச் சேர்க்கவும்.* ***(95)***

***5164. விரி தளிர், முகை, பூ, கொம்பு, அடை, முதல், வேர்***
***இவைஎலாம், மணி, பொனால், விரிந்த***
***தரு உயர் சோலைதிசைதொறும் கரியத்***
***தழல்உமிழ் உயிர்ப்பு முன் தவழ,***
***திருமகள் இருந்ததிசை அறிந்திருக்கும்,***
***திகைப்புறுசிந்தையான், கெடுத்தது***
***ஒரு மணி நேடும்பல் தலை அரவின்,***
***உழைதொறும், உழைதொறும், உலாவி;***

***விரிதளிர்*** - *விரிந்ததளிர்கள்;* ***முகை*** - *அரும்பு;* ***பூ*** - *மலர்கள்;* ***கொம்பு*** - *கிளைகள்;* ***அடை*** - *இலைகள்;* ***முதல்*** - *அடிப்பகுதி;* ***வேர்*** - *வேர்;* ***இவை எலாம்*** - *இவை முதலிய உறுப்புகள் எல்லாம்;* ***மணிபொனால்*** - *மணியாலும் பொன்னாலும்;* ***விரிந்த*** - *ஆகிய;* ***தருவுயர் சோலை*** - *தருக்களால் உயர்ந்த சோலையானது;* ***திசை தொறும் கரிய*** - *திக்குகள் தோறும் கரியும்படி;* ***தழல் உமிழ்*** - *நெருப்பைக் கக்கும்;* ***உயிர்ப்பு*** - *பெருமூச்சு;* ***முன் தவழ*** - *முன்னே பரவிச் செல்ல;* ***திருமகள் இருந்த*** - *பிராட்டியிருந்த;* ***திசையறிந்திருந்தும்*** - *திசையைத் தெரிந்திருந்தும்;* ***திகைப்புறு சிந்தையான்*** - *தடுமாறிய உள்ளத்தால்;* ***கெடுத்தது*** - *தவறவிட்ட;* ***ஒரு மணி நேடும்*** - *ஒப்பற்ற மணியைத் தேடுகின்ற;* ***பல்தலை அரவின்*** - *பலதலைகளை உடைய பாம்பைப் போல;* ***உழைதொறும் உழைதொறும்*** - *பலபகுதிகளில்;* ***உலாவி*** - *திரிந்து.* ***(96)***

***5165. இனையது ஓர்தன்மை எறுழ் வலி அரக்கர்***
***ஏந்தல்வந்து எய்துகின்றானை,***
***அனையது ஓர்தன்மை அஞ்சனை சிறுவன்***
***கண்டனன்,அமைவுற நோக்கி,***
***‘வினையமும்செயலும், மேல் விளை பொருளும்,***
***இவ் வழிவிளங்கும்’ என்று எண்ணி,***
***வனை கழல்இராமன் பெரும் பெயர் ஓதி***
***இருந்தனன்,வந்து அயல் மறைந்தே.***

***இனையது -*** *இத்தகைய;* ***ஓர்தன்மை -*** *ஒப்பற்ற (ஆடம்பர) இயல்புடன்;* ***வந்து எய்துகின்றானை -*** *அங்கு வந்து சேர்ந்த;* ***எறுழ்வலி -*** *மிக்க வலிமையுடைய;* ***அரக்கர் ஏந்தல் -*** *அரக்கர்களின் தலைவனான இராவணனை;* ***அனையது ஓர் தன்மை -*** *அப்படிப்பட்ட ஒப்பற்றஇயல்புடைய;* ***அஞ்சனை சிறுவன் -*** *அஞ்சனையின் புதல்வனான அனுமன்;* ***கண்டனன் -*** *பார்த்து;* ***அமைவுற நோக்கி -*** *பொருந்த ஆராய்ந்து;* ***வினையமும் -*** *இராவணனின் வஞ்சகமும்;* ***செயலும் -*** *(பிராட்டியின்) செய்கையும்;* ***மேல்விளை பொருளும் -*** *(அதனால்) பின்னே உண்டாகும் பயனும்;* ***இவ்வழி விளங்கும் -*** *இவ்விடத்தில் புலப்படும்;* ***என்று எண்ணி -*** *என்று நினைந்து;* ***கழல்வனை -*** *வீரக்கழல் அணிந்த;* ***இராமன் பெரும் பெயர் -*** *இராமபிரானுடைய புகழை;* ***ஓதி -*** *கூறி;* ***அயல்வந்து -*** *பக்கத்திலே வந்து;* ***மறைந்து இருந்தனன் -*** *மறைவாயிருந்தான்.*

*மேல் 79 ஆம் பாடல்முதல் 95 ஆம் பாடல் முடியவுள்ள பாடல்களில் உள்ள 'செய' என் எச்சம் மேல் பாடலில் உள்ள 'உலாவி' என்பதுடன் நிறைவு பெற்றது. உலாவி என்பது இப்பாடலில் உள்ள எய்துகின்றானை என்பதுடன் சார்கிறது. பெயர் - புகழ். 'பெரும் பெயர்ப் பெண்டிர்' சிலம்பு (நடுகல் 208) பெயர் இராமனுடைய பெயர் என்றும் கூறலாம். வால்மீகம் அனுமன் இராமன் புகழ் ஓதி மரத்தில் இருத்ததாகப் பேசும். அனையது ஓர்தன்மை - உளம் அறிசுட்டு.* ***(97)***

***5166. ஆயிடை,அரக்கன், அரம்பையர் குழுவும்,***
***அல்லவும்,வேறு அயல் அகல,***
***மேயினன்,பெண்ணின் விளக்கு எனும் தகையாள்***
***இருந்துழி; ஆண்டு, அவள், வெருவி,***
***போயின உயிரளாம் என நடுங்கி,***
***பொறி வரி, எறுழ் வலி, புகைக் கண்,***
***காய் சின, உழுவைதின்னிய வந்த***
***கலை இளம்பிணை என, கரைந்தாள்.***

***ஆயிடை -*** *அவ்விடத்தில்;* ***அரம்பையர் குழுவும் -*** *தேவ மகளிர் கூட்டமும்;* ***அல்லவும் -*** *மற்றையர் மகளிர் கூட்டமும்;* ***அயல் -*** *பக்கத்தில்;* ***வேறு -*** *வேறாக;* ***அகல -*** *நீங்க;* ***அரக்கன் -*** *இராவணன்;* ***பெண்ணின் விளக்கு எனும் தகையாள் -*** *பெண்களுக்குள் விளக்கு என்று கூறப்படும் தகுதிபெற்ற பிராட்டி;* ***இருந்துழி -*** *இருந்த இடத்திற்கு;* ***மேயினன் -*** *அடைந்தான்.* ***ஆண்டு -*** *அங்கே;* ***அவள் -*** *பிராட்டி;* ***வெருவி -*** *அச்சம் அடைந்து;* ***போயின உயிரள் ஆம் என -*** *நீங்கிய உயிரை உடையவள் போல;* ***நடுங்கி -*** *பதறி;* ***பொறிவரி -*** *புள்ளிகளையும் வரிகளையும்;* ***எறுழ்வலி -*** *மிக்க வலிமையையும்;* ***புகைக்கண் -*** *புகை எழும் கண்களையும்;* ***காய்சினம் -*** *எரிக்கும்சீற்றத்தையும் (பெற்ற);* ***உழுவை -*** *புலியானது;* ***தின்னிய -*** *(தன்னை) தின்னும் பொருட்டு;* ***வந்த -*** *வருதலைப் பெற்ற;* ***இளம் -*** *இளமையான;* ***கலை பிணை என -*** *ஆண் மானினுக்குரிய பெண்மான் போல்;* ***கரைந்தாள் -*** *புலம்பினாள்.*

*போயின உயிரள்- என்பது 'அருங்கேடன்' என்பது போல் (குறள் 210) வந்த வடமொழி மரபு. திருக்குறள் நுண் பொருள் மாலை இதனை நன்கு விளக்கும். (46-பக்கம்) வந்த - வரப்பெற்ற.* ***(98)*** ***மூவர் மன நிலை***

**கலி விருத்தம்**

***5167. கூசி ஆவிகுலைவுறுவாளையும்,***
***ஆசையால் உயிர்ஆசு அழிவானையும்,***
***காசு இல் கண்இணை சான்று எனக் கண்டனன்-***
***ஊசல் ஆடி உளையும்உளத்தினான்.***

*(அனுமன்)*

***கூசி** - அருவருப்புற்று; **ஆவி குலைவுறுவாளையும்** - உயிர் குலைகின்ற பிராட்டியையும்; **ஆசையால்** - காமத்தால்; **உயிர் ஆசு** - உயிர்க்கு ஆதாரமாகிய ஒழுக்கம்; **அழிவானையும்** - சிதைகின்ற இராவணனையும்; **காசு இல்** - குற்றம் இல்லாத; **இணைகண்** - இரண்டு கண்களும்; **சான்று என** - சாட்சி என்று (அமைத்து); **கண்டனன்** - பார்த்து; **ஊசல் ஆடி** - தடுமாற்றம் அடைந்து (அதனால்); **உளையும்** - உளைச்சல் அடையும்; **உளத்தினான்** - மனம் உடையவன் ஆனான்.*

*அனுமன் குலைகின்றபிராட்டியையும், காமத்தால் சிதைகின்ற இராவணனையும் கண்டு, ஊசல் ஆடி, மனம் உளைச்சல் உற்றான். ஊசல் ஆடுவது பிராட்டிக்கு என்ன நேருமோ என்னும் அச்சத்தால். பிராட்டி கூசுவதால் அவள் கற்பு காக்கப்படும். ஆனால், வேறு தீங்கு நேருமோ என்று அஞ்சினான். ஆசு - ஆதாரம். உயிர்க்கு ஆதாரம் ஒழுக்கம். உயிர்க்கு ஆதாரம் அழிந்தமையின் இராவணன் இறந்தவனே. ''விளிந்தாரின் வேறல்லர்,,,, தெளிந்தாரில் தீமை புரிந்து ஒழுகுவார்'' என்பது தமிழ் மறை (குறள் 143) இவ்விருத்தம் மா - விளம் - விளம் - விளம் என்னும் சீர்களைப் பெற்று வரும். இப் பாடலை. அமரர் கம்பன் அடிப்பொடி அவர்கள் அளவடி நான்குடைக் கட்டளைக்கலிப்பா என்பர். (மணிமலர் 76) **(99)***

***5168. 'வாழி சானகி ! வாழி இராகவன் !***
***வாழி நான்மறை! வாழியர் அந்தணர் !***
***வாழி நல் அறம்!' என்று உற வாழ்த்தினான்-***
***ஊழிதோறும் புதிதுஉறும் கீர்த்தியான்.***

***ஊழிதோறும்** - யுகங்கள்தோறும்; **புதிது உறும்** - புதுமையடையும்; **கீர்த்தியான்** - புகழை உடைய அனுமன்; **சானகி** - சீதாபிராட்டி; **வாழி** - வாழ்க; **இராகவன்** - இராமபிரான்; **வாழி** - வாழ்க; **நான்மறை** - நான்கு வேதங்கள்; **வாழி** - வாழ்க; **அந்தணர்** - அந்தணர்கள்; **வாழியர்** - வாழ்க; **நல்லறம்** - நல்ல தருமம்; **வாழி** - வாழ்க; **என்று** - என; **உற வாழ்த்தினான்** - நன்றாக வாழ்த்தினான்.*

*ஊழிக்காலந்தோறும் புதுமை அடையும் புகழாளனான அனுமன் பிராட்டி வாழ்க, பெருமான் வாழ்க, வேதம் வாழ்க, வேதியர் வாழ்க, நல்லறம் வாழ்க என்று வாழ்த்தினான். சானகி, இராகவன் - தத்திதம்; சனகன் புதல்வி; ரகுவின் மரபினன் இதனைப் பிரயோக விவேகம் சாமானிய தத்திதன் (32) என்று கூறும். உயர்ந்த புகழ் அல்லால் --- நிற்பது ஒன்று இல் என்று வேதம் பேசிற்று. கவிச்சக்கரவர்த்தி அதனை ஒளிமயமாக்கினார். **(100)***

*இராவணன் சீதையைஇரத்தல்*

***5169. அவ் இடத்துஅருக எய்தி, அரக்கன்தான்,***
***'எவ் இடத்துஎனக்கு இன் அருள் ஈவது ?***
***நொவ் இடைக்குயிலே ! நுவல்க' என்றனன்,***
***வெவ் விடத்தைஅமிழ்து என வேண்டுவான்.***

***வெவ்விடத்தை -*** *கொடியநஞ்சினை;* ***அமுதென -*** *அமுதம் என்று கருதி;* ***வேண்டுவான் அரக்கன் தான் -*** *(அதை) விரும்பும் இராவணன் தான்;* ***அவ் இடத்து -*** *அந்த இடத்திலே;* ***அருகு எய்தி -*** *பக்கத்தை எய்தி;* ***நொவ்இடைக்குயிலே -*** *வருந்தும் இடைபெற்ற குயில் போன்றவளே;* ***எனக்கு -*** *(உன்பால் அன்புடைய) எனக்கு;* ***அருள் ஈவது -*** *அருளை வழங்குவது;* ***எவ்இடத்து -*** *எப்போது;* ***நுவல்க என்றனன் -*** *கூறுக என்றான்.*

*நொ - வருத்தம்.அமர்ந்தனன் என்னும் முற்று வினை எச்சப் பொருளில் வந்தது. இது முதல் 14 பாக்கள் இராவணன் மொழிகள்.* ***(101)***

***5170. ஈசற்குஆயினும் ஈடு அழிவுற்று, இறை***
***வாசிப்பாடு அழியாத மனத்தினான்,***
***ஆசைப்பாடும் அந்நாணும் அடர்த்திட,***
***கூசிக் கூசி,இனையன கூறினான்;***

***ஈசற்கு ஆயினும் -*** *(எதிர்வருபவன்) சிவபிரான் ஆனாலும் (அவனுக்கும்);* ***ஈடு அழிவுற்று -*** *வலிமை அழிந்து;* ***இறை -*** *சிறிதும்;* ***வாசிப்பாடு அழியாத -*** *பெருமிதம் குன்றாத;* ***மனத்தினான் -*** *உள்ளத்தை உடைய இராவணன்;* ***ஆசைப்பாடும் -*** *ஆசையும்;* ***அந்நாணும் -*** *அந்த நாணமும்;* ***அடர்த்திட -*** *வருத்திட (அதனால்);* ***கூசிக் கூசி -*** *கூசிக் குறுகி;* ***இனையன -*** *இப்படிப்பட்ட மொழிகளை;* ***கூறினான் -*** *சொன்னான்.*

*ஈடு - வலிமை.வாசிப்பாடு - பெருமிதம். கூசுதல் - வெட்கம் சுருக்கம் என்னும் பொருளில் வந்தன. கண் சுருங்குதலை, சுடர்கண்டு கண் கூசிற்று என்பதால் அறிக. அந்நாண் - உளம் அறிசுட்டு* ***(102)***

***5171. 'இன்றுஇறந்தன; நாளை இறந்தன;***
***என் திறம் தரும்தன்மை இதால்; எனைக்***
***கொன்று,இறந்தபின் கூடுதியோ ? - குழை***
***சென்று, இறங்கி,மறம் தரு செங் கணாய் !***

***குழை சென்று -*** *காதணியின் பக்கலில் போய்;* ***இறங்கி -*** *திரும்பி;* ***மறம் தரு -*** *கொடுமையைச் செய்யும்;* ***செங்கணாய் -*** *சிவந்த கண்களைப் பெற்ற சீதையே;* ***இன்று இறந்தன -*** *(நீ இரங்குவாய் என்று யான் கருதிய) பல இன்றைய தினங்கள் கடந்து போயின;* ***நாளை இறந்தன -*** *(உன் மனம் மாறும் என்று யான் கருதிய) பல நாளைகள் கடந்தன.* ***என்திறம் தரும் -*** *என்பால் நீவழங்கும்;* ***தன்மை இது -*** *அருள் இப்படி (உள்ளது);* ***எனைக் கொன்று -*** *என்னை வருத்தி;* ***இறந்த பின் -*** *யான் இறந்த பிறகு;* ***கூடுதியோ -*** *சேர்வாயோ.*

*செவியின் குழையைக்கண்கள் தொடுவதாகப் பேசுவது. கவி மரபு. "இடைக்குமிழ் ஈர்ந்து கடைக்குமிழ் ஓட்டி" (சிலம்பு 4-69) "மங்கையர் வதன சீதமதி இருமருங்கும் ஓடிச் செங்கயல் குழைகள் நாடும்" (பெரிய - தடுத்தாட் - 1)*
***(103)***

***5172. 'உலகம் மூன்றும் ஒருங்குடன் ஓம்பும் என்***
***அலகு இல்செல்வத்து அரசியல் ஆணையில்,***
***திலகமே ! உன்திறத்து அனங்கள் தரு***
***கலகம் அல்லது,எளிமையும் காண்டியோ ?***

***திலகமே ! -*** *பெண்களுக்குள் திலகம் போன்றவளே;* ***உலகம் மூன்றும் -*** *மூன்று உலகத்தையும்;* ***ஒருங்குடன் -*** *ஒரு சேர;* ***ஓம்பும் -*** *பாதுகாக்கும்;* ***என் -*** *என்னுடைய;* ***அலகு இல் -*** *அளவில்லாத;* ***செல்வத்து -*** *செல்வத்தைப் பெற்ற;* ***அரசியல் ஆணையில் -*** *அரசாட்சியின் அதிகாரத்தில்;* ***உன் திறத்து -*** *உன் காரணமாக;* ***அனங்கன் தரு -*** *மன்மதன் செய்யும்;* ***கலகம் அல்லது -*** *போரேயல்லாமல்;* ***எளிமை(யும்) -*** *(வேறு) தாழ்ச்சியை;* ***காண்டியோ -*** *கண்டுள்ளாயா.*

*என் நாட்டில்கலகம் உண்டு - எளிமை இல்லை என்றான். கலகம் அல்லது எளிமையும் காண்டியால் - மன்மதன் கலகத்தை நீக்கினால் நான் அடிமை செய்யும் எளிமையையும் பின்னிட்டுக் காண்பாய் என்பது பழைய உரை (அடை - பதி) எளிமையும் - உம் - அசை.* ***(104)***

***5173. 'பூந் தண்வார் குழல் பொன் கொழுந்தே ! புகழ்***
***ஏந்து செல்வம்இகழ்ந்தனை; இன் உயிர்க்***
***காந்தன்மாண்டிலன், காடு கடந்து போய்,***
***வாய்ந்து வாழ்வதுமானிட வாழ்வு அன்றோ ?***

***பூந்தண்வார்குழல் -*** *பூவணிந்த குளிர்ந்த நீண்ட கூந்தலையுடைய;* ***பொன் கொழுந்தே ! -*** *பொன்னின் கொழுந்து போன்றவளே ! நீ;* ***புகழ் ஏந்து -*** *புகழைத் தாங்கிய;* ***செல்வம் -*** *என்னுடைய செல்வத்தை;* ***இகழ்ந்தனை -*** *அவமதித்தாய்;* ***இன்உயிர்க் காந்தன் -*** *(உன்னுடைய) உயிர் போன்ற கணவன்;* ***மாண்டிலன் -*** *(என்னால்) இறவாமல் (தப்பி);* ***காடு கடந்து -*** *காடுகளைத் தாண்டி;* ***போய் -*** *அயோத்திக்குச் சென்று;* ***வாய்ந்து -*** *அரசு கிடைக்கப் பெற்று;* ***வாழ்வது -*** *வாழும் வாழ்வு;* ***மானிட வாழ்வன்றோ -*** *மனித வாழ்க்கை அல்லவா.*

*இராவணன்"அரம்பை மாதர் ..... ஏவல் செய்ய உலகம் ஈரேழும் ஆளும் செல்வத்துள் உறைதி' என்று முன்பு பேசுகிறான் (கம்ப. 3384)* ***(105)***

***5174. 'நோற்கின்றார்களும், நுண் பொருள் நுண்ணிதின்***
***பார்க்கின்றாரும், பெறும் பயன் பார்த்தியேல்,***

***வார்க்குன்றா முலை ! என் சொல், மவுலியால்***
***ஏற்கின்றாரொடுஉடன் உறை இன்பமால்.***

***வார்குன்றா முலை!*** - கச்சினுள் அடங்காத தனம் பெற்றவளே ! ***நோற்கின்றார்களும்*** - தவம்புரி பவர்களும்; ***நுண்பொருள்*** - நுட்பமான தத்துவங்களை; ***நுண்ணிதின்*** - சூட்சுமமாக; ***பார்க்கின்றார்களும்*** - ஆராய்பவர்களும்; ***பெறும் பயன்*** - அடையும் பயனை; ***பார்த்தியேல்*** - ஆராய்ந்து பார்த்தால்; ***என் சொல்*** - என்னுடைய கட்டளையை; ***மவுலியால்*** - கிரீடத்தினாலே; ***ஏற்கின்றாரோடு*** - ஏற்றுக் கொள்ளும் தேவருடன்; ***உடன் உறை*** - கூடி வாழும்; ***இன்பம்*** - இன்பம்ஆகும். இன்பமால் -இதில் உள்ள ஆல் அசை. இந்தக் கவிக்குப் பொருள், தவம் பண்ணுவோரும் சகல நூல்களைத் தெரிவோரும், பெறும் பயன் தங்களை எல்லோரும் வந்து வணங்க வேண்டும் என்பது. அப்படி செய்யாதிருக்கையிலே நான் நல்லவார்த்தை சொல்லித் தலையால் இரக்கச் செய்தேயும் ஏன் கிருபை பண்ணுகின்றிலீர் என்பது பழைய உரை (அடை-பதி) உடன் உறைதல் - ஒருங்கே வாழ்தல். "உடன் உறை காலத்து உரைத்த நெய் வாசம்" (சிலம்பு 13 - 83) ***(106)***

***5175. 'பொருளும், யாழும், விளரியும், பூவையும்,***
***மருள, நாளும்,மழலை வழங்குவாய் !***
***தெருளும் நான்முகன் செய்தது, உன் சிந்தையின்***
***அருளும், மின்மருங்கும், அரிது ஆக்கியோ ?***

***பொருளும்*** - குழந்தைகளும்; ***யாழும்*** - யாழும்; ***விளரியும்*** - விளரிப்பண்ணும்; ***பூவையும்*** - நாகணவாய்ப் பறவையும்; ***மருள*** - ஏக்கமடைய; ***நாளும்*** - தினமும்; ***மழலை வழங்குவாய்*** - மழலை மொழி பேசுபவளே ! ***தெருளும்*** - தெளிவடைந்த; ***நான்முகன்*** - பிரம்மதேவன்; ***உன்சிந்தையில்*** - உன் உள்ளத்தில்; ***அருளும்*** - கருணையையும்; ***மின் மருங்கும்*** - மின்னல் போலும் இடையும்; ***அரிது ஆக்கியோ*** - இல்லாமல் ஆக்கிய பிறகோ; ***செய்தது*** - படைத்தது.

*பொருள் -குழந்தை. 'தம் பொருள் என்ப தம் மக்கள்' (குறள்.63) சுந்தரமூர்த்திசுவாமிகள் சுவை நயம் மிக்க கலய நல்லூர்ப் பதிகத்தில் "பெரும்பலம துடை அசுரன் தாரகனைப் பொருது - பொன்று வித்த பொருளினை முன் படைத்து கந்த புனிதன்" என்றார் (திருமுறை 7. 16-9) அரிது - என்பது இன்மைப் பொருள் தந்தது. 'அருங்கேடன்' என்பதுஅறிக. என்னும் குறளின்(210) குறிப்பில் அருளும் இன்மை என்று அழகர் எழுதுகிறர். "ஈயா மாக்கள் தீ மொழி கவர்ந்த சிற்றிடை" என்பர் குமரகுருபரர்.* ***(107)***

***5176. 'ஈண்டு நாளும், இளமையும், மீண்டில;***
***மாண்டு மாண்டுபிறிது உறும் மாலைய;***
***வேண்டு நாள்வெறிதே விளிந்தால், இனி,***
***யாண்டு வாழ்வது ?இடர் உழந்து ஆழ்தியோ ?***

***ஈண்டு*** - இந்த உலகத்தில்; ***நாளும்*** - ஆயுளும்; ***இளமையும்*** - இளமைப் பருவமும்; ***மீண்டில*** - திரும்பி வராதவை (அவை); ***மாண்டு மாண்டு*** - அழிந்து அழிந்து; ***பிறிதுறும்*** - வேறியல்பைப் பெறுகின்ற; ***மாலைய*** - தன்மை உடையன; ***வேண்டும் நாள்*** - (பிறர்) விரும்பும் உன் இளமைப் பருவம்; ***வெறிதே*** - வீணாக; ***விளிந்தால்*** - அழிந்தால்; ***வாழ்வது*** - (இன்புற்று) வாழ்க்கை நடத்துவது; ***யாண்டு*** - எக்காலத்தில்; ***இனி*** - (பருவம்) கடந்த பின்; ***இடர் உழந்து*** - (சென்றதை எண்ணி) துன்பத்தாற் குமைந்து (அதில்);

***ஆழ்தியோ*** - *அமிழ்வாயோ.* *நாள் - ஆயுள்."ஊற்றமும் உடைய நாளும்" (கம்ப,5202)*
*மாலைய - தன்மை உடையன. மாலை -இயல்பு.* ***(108)***

***5177.*** ***'இழவு, எனக்கு, உயிர்க்கு எய்தினும் எய்துக,***
***குழை முகத்து நின்சிந்தனை கோடினால்;***
***பழக நிற்புறும்பண்பு இவை, காமத்தோடு,***
***அழகினுக்கு, இனியார் உளர் ஆவரே ?***

***குழை முகத்து -*** *குண்டலம்அணிந்த முகத்தை உடைய;* ***நின் -*** *நின்னுடைய;* ***சிந்தனை கோடினால் -*** *மனம் வேறுபட்டால் (அதனால்);* ***எனக்கு -*** *(உன்பால் அன்புற்ற) எனக்கும்;* ***உயிர்க்கு -*** *என்னுடைய உயிர்க்கும்;* ***இழவு -*** *அழிவு;* ***எய்தினும் எய்துக -*** *வந்தாலும் வரட்டும் (அதுபற்றி வருந்தேன்) (ஆனால்) (யான் மறைந்த பின்)* ***பழகி -*** *ஒன்று பட்டு;* ***நிற்புறும் -*** *நிலைத்து நிற்கும்;* ***பண்பு இயை -*** *இயல்பைப் பொருந்திய;* ***காமத்தோடு அழகிற்கும் -*** *காமம் அழகு என்னும் இரண்டிலும் (உனக்கு இணையாக);* ***இனி யார் -*** *இனிமேல் எவர் (என்னைப் போல்);* ***உளர் ஆவர்-*** *பிறக்கப் போகின்றார்கள்?* *இழவு - அழிவு.யான் இறப்பது குறித்து வருந்தினேன். உனக்கு இணையானவர்கள் இனிப் பிறவார்களே என்று கவலைப்படுகிறேன் என்றான். உளராதல் - பிறத்தல். பழகப் பழக நிற்பது காமம் என்றான். அழகுக்கு அப்பண்பு இல்லை என்றான். மாயும் அழகு நிற்கும் போதே மாயாத காமம் அனுபவிக்கத் தக்கது என்பது இராவணன் கோட்பாடு.* ***(109)***

***5178.*** ***'பெண்மையும், அழகும், பிறழா மனத்***
***திண்மையும்,முதல் யாவையும், செய்ய ஆய்,***
***கண்மையும்பொருந்தி, கருணைப் படா***
***வண்மை என்கொல்? - சனகரின் மடந்தையே !***

***சனகர் இல்மடந்தையே -*** *சனகரின் குடியிலேபிறந்த பெண்ணே !* ***பெண்மையும் -*** *பெண்மை இயல்பும்;* ***அழகும் -*** *அழகும்;* ***பிறழா -*** *தவறுபடாத;* ***மனத்திண்மையும் -*** *உள்ள ஆற்றலும்;* ***முதல் -*** *(இவை) முதலாகப் பேசப்படும்;* ***யாவையும் -*** *எல்லாப் பண்புகளும்;* ***செய்யவாய் -*** *செம்மையுடையதாய்;* ***கண்மை பொருந்தி -*** *கண்ணோட்டத்துடன் ஒன்று பட் டுபொருந்தி;* ***கருணைப் படா -*** *இரக்கத்துடன் படாது;* ***வண்மை - ஈஈ*** *ஈகைப்பண்பு மாத்திரம் (அழிந்து போன காரணம்);* ***என்கொல் -*** *யாதோ. இல் என்பதற்குமருத நிலப் பெண் என்றும் பொருள் உள்ளது. மனைவி கிழத்தி இல்லாள் இல் என்று அனையவை மருதத் தலைவிக்காகும் என்று திவாகரம் பேசும் (மக்கள் .... தொகுதி) அது கொண்டு, சனகர் குலத்திலே தோன்றிய பெண்ணுக்கு என்றும் பொருள் கூறலாம். உணர்வால் பெறவேண்டிய காதலை இரக்கத்தால் பெற நினைக்கும் இராவணன் செயல் காமச் செவ்வி அறியாமையைப் புலப்படுத்தும். கண்மையும் பொருந்தி, காணக் கண்ணும் பொருந்தி என்பது பழையவுரை (அடை - பதி) 'சனகர்இல் மாண்டவா' என்னும் பாடல் சிறப்புடையது. சனகர் குடியில் வண்மை மட்டும் இல்லாது போனபடி எவ்வாறு என்பதாம்.* ***(110)***

***5179.*** ***'வீட்டும் காலத்து அலறிய மெய்க் குரல்***
***கேட்டும்,காண்டற்கு இருத்திகொல் ? - கிள்ளை ! நீ -***
***நாட்டுங்கால்,நெடு நல் அறத்தின் பயன்***

***ஊட்டும் காலத்து,இகழ்வது உறும்கொலோ ?***

***கிள்ளை ! -*** *கிளி போன்றவளே;* ***வீட்டும் காலத்து -*** *(மாரீசன்) இராமனைக் கொன்ற போதே;* ***அலறிய மெய்க்குரல் கேட்டும் -*** *கதறிய உண்மையான குரலை கேட்ட பின்பும்;* ***நீ காண்டற்கு -*** *இராமனைக் காண்பதற்காக;* ***இருத்தி கொல் -*** *இருக்கின்றாயோ;* ***நல் அறத்தின் பயன் -*** *நல்ல தருமத்தின் பயனானது;* ***நாட்டுங்கால் -*** *(உன்னை நல்ல நிலைமையில்) நிலை நிறுத்தும் சமயத்திலும்;* ***ஊட்டுங்காலத்து -*** *(உயர்ந்தவற்றை) உண்பிக்கும் சமயத்திலும்;* ***இகழ்வது -*** *அவமதிப்பது;* ***உறுங்கொலோ -*** *உனக்கு ஏற்குமோ.*

*வீட்டுதல் -கொல்லுதல். அறத்தின் பயன் உன்னை நிலை நிறுத்தவும் நல்லனவற்றை ஊட்டவும் நினைக்கிறது. இப்போது நீ அவமதிக்கலாமா? என்றான். நாட்டுங்கால் என்பதற்கு உண்மையைக் கூறுமிடத்து என்று உரை கூறப் பெற்றது. விதி, காட்டும் ஊட்டாது என்பர். இங்கே அறத்தின் பயன் ஊட்டுகிறது என்றான். ஊட்டுதல் - அனுபவிக்கச் செய்தல். 'உறற்பால ஊட்டா கழியும்' என்றார் (குறள் 378) ஹா ! சீதா ! லக்ஷ்மணா ! என்று பெருமாள் உரைத்தது என இராவணன் சொன்னான் என்பது பழைய உரை (அடை - பதி)* ***(111)***

***5180. 'தக்கது என் உயிர் வீடு எனின், தாழ்கிலாத்***
***தொக்க செல்வம்தொலையும்; "ஒருத்தி நீ***
***புக்கு உயர்ந்தது"எனும் புகழ் போக்கி. வேறு***
***உக்கது என்னும்உறு பழி கோடியோ ?***

***தக்கது என்உயிர் -*** *சிறப்பு மிக்க என் உயிரானது;* ***வீடு எனின் -*** *(உன்னால்) அழிய;* ***தாழ்கிலா -*** *இழிவற்ற (என்னுடைய);* ***தொக்க செல்வம் தொலையும் -*** *திரண்ட செல்வம் அழிவடையும்;* ***ஒருத்தி நீ -*** *ஒப்பற்ற நீ;* ***புக்கு உயர்ந்தது -*** *வந்து சேர (இலங்கை) உயர்வடைந்தது;* ***எனும் புகழ் -*** *என்கின்ற புகழ் மொழியை;* ***போக்கி -*** *ஒதுக்கிவிட்டு;(சீதையால்) (இலங்கை)* ***வேறு உக்கது -*** *வேறுபட்டுஅழிந்தது;* ***என்னும் -*** *என்று உலகம் பேசும்;* ***உறு பழி -*** *பெரும் பழிச்சொல்லை;* ***கோடியே -*** *ஏற்றுக் கொள்வாயா. சீதை பிறக்கஇலங்கை அழிந்தது என்பது நாட்டு வழக்கு. கொள் + தி =கோடி. முதனிலை திரிந்த தொழிற்பெயர். உறு - மிகுதியை உணர்த்தும் உரிச்சொல். வள்ளுவர் 'உறுபசி' என்பர். (குறள் 734) உக்கது - அழிந்தது. காதல் கைகூடாமற் போனால் அழிவேன் என்கிறான். இவ்வளவு அன்புடைய என்னை நீ ஒதுக்கலாமா என்பது தொனி.* ***(112)***

***5181. 'தேவர் தேவியர் சேவடி கைதொழும்***
***தா இல் மூஉலகின்தனி நாயகம்***
***மேவுகின்றது,நுன்கண்; விலக்கினை;***
***ஏவர் ஏழையர்நின்னின், இலங்கிழாய் ?***

***இலங்கிழாய் ! -*** *விளக்கமான ஆபரணம் அணிந்த பெண்ணே;* ***தேவர் -*** *தேவர்களும்;* ***தேவியர் -*** *தெய்வப் பெண்களும்;* ***சேவடி கை தொழும் -*** *உன் சிவந்த அடிகளைக் கை கூப்பி வணங்கும்படியான;* ***தாவு இல் -*** *அழிவு இல்லாத;* ***மூ உலகின் -*** *மூன்று*

*உலகங்களின்;* ***தனி நாயகம் -*** *ஒப்பற்ற தலைமைப் பதவி;* ***நுன்கண் மேவுகின்றது -*** *உன்பால் வந்து சேர்கின்றது;* ***விலக்கினை -*** *அதனை ஒதுக்கி விட்டாய்;* ***நின்னின் -*** *உன்னைப் போல;* ***ஏழையர் -*** *அறிவற்றவர்கள்;* ***ஏவர் -*** *யாவர்.*

*நாயகம் -தலைமைப் பதவி. மூவுலகுக்கும் தரும் ஒரு நாயகமே (திருவாய்மொழி - 3.10.11) தாவு - அழிவு தாவா நல்லறம் (சிலம்பு 30;125) ஏழை - அறிவற்றவர். ''ஏமுற்றவரினும் ஏழை ..... பகை கொள்பவன்'' (குறள் 873)*
***(113)***

***5182. 'குடிமை மூன்று உலகும் செயும் கொற்றத்து என்***
***அடிமை கோடி;அருளுதியால்' எனா,***
***முடியின் மீதுமுகிழ்ந்து உயர் கையினன்,***
***படியின்மேல்விழுந்தான், பழி பார்க்கலான்.***

***பழிபார்க்கலான் -*** *தன்பால் வரும்பழியைப்பாராத இராவணன்;* ***மூன்று உலகும் -*** *மூன்று உலகத்தவர்களையும்;* ***குடிமை செயும் -*** *குடிமக்களாக வைத்து ஆளும்;* ***கொற்றத்து -*** *வெற்றியைப் பெற்ற* ***; என் -*** *என்னுடைய;* ***அடிமை -*** *அடியனாம் தன்மையை;* ***கோடி -*** *கொள்க;* ***அருளுதியால் எனா -*** *அருள்வாயாக என்று கூறி;* ***முடியின்மீது -*** *தலைகளின் மேல்;* ***முகிழ்த்து -*** *குவித்து;* ***உயர் கையினன் -*** *உயர்ந்த கைகளை உடையவனாய்;* ***படியின்மேல் -*** *பூமியின் மேல்;* ***விழுந்தான் -*** *விழுந்து வணங்கினான்.*

*குடிமை -குடிமக்கள். அடிமை என்றும் கொள்ளலாம். குடிமை செயும் கொடும் புலையன் (அரிச்சந்திரபுராணம் சூழ்வினை - 70) அடிமை - தொண்டு. என்றார்க்கு 'அடிமை புகுத்திவிடும்' என்னும் குறட் பகுதிக்குக் (608) காலிங்கர் 'பகை வேந்தர்க்குத் தான் ஏவல் கேட்டுப் பணிந்து ஒழுகும் அடிமை புகுத்திவிடும் என்று விளக்கம் செய்தார். அழகர் அடிமை - அடியனாம் தன்மை என்பர். அருளுதியால் - இதில் உள்ள ஆல் அசை.* ***(114)*** *இராவணனுக்குச் சீதைவழங்கிய அறிவுரை*

**அறுசீர் விருத்தம்**

***5183. காய்ந்தனசலாகை அன்ன உரை வந்து***
***கதுவாமுன்னம்,***
***தீய்ந்தனசெவிகள்; உள்ளம் திரிந்தது; சிவந்த சோரி***
***பாய்ந்தன,கண்கள்; ஒன்றும் பரிந்திலள், உயிர்க்கும்;***
***பெண்மைக்கு***
***ஏய்ந்தன அல்ல,வெய்ய, மாற்றங்கள் இனைய***
***சொன்னாள்;***

***காய்ந்தன -*** *நெருப்பிலே காயப் பெற்றவையான;* ***சலாகை அன்ன -*** *இரும்புக் கம்பிகள் போன்ற;* ***உரை -*** *சொற்கள்;* ***வந்து -*** *(இராவணன் வாயிலே) புறப்பட்டு;* ***கதுவா முன்னம் -*** *(பிராட்டி பக்கம்) சேர்வதற்கு முன் (அவளுடைய);* ***செவிகள் தீய்ந்தன -*** *காதுகள் வெப்பம் உற்றன;* ***உள்ளம் திரிந்தது -*** *மனம் (கருணையிலிருந்து) மாறுபட்டது;* ***கண்கள் -*** *கண்களில்;* ***சிவந்த சோரி -*** *சிவந்த இரத்தம்;* ***பாய்ந்தன -*** *பாயப் பெற்றன.*

***ஒன்றும்*** - *தன்னுடைய உயிர் பொருட்டாக;* ***பரிந்திலள்*** - *பரிவு கொண்டிலள்;* ***பெண்மைக்கு ஏய்ந்தன*** - *பெண்தன்மைக்கு ஏற்றவையும்;* ***வல்ல*** - *வன்மையுடையனவும்;* ***வெய்ய*** - *வெப்பம் பெற்றதும் (ஆன);* ***இனைய மாற்றங்கள்*** - *இத்தகைய பதிலுரைகளை;* ***சொன்னாள்*** - *கூறினாள்.*

*சலாகை -இரும்புக் கம்பி. சலாகை நுழைந்த மணித்துளை (மணிமேகலை 12 -66) காய்ந்தன -வினைமுற்று. இஃது பெயரெச்சம் போல் சலாகை என்னும் பெயர் கொண்டு முடிந்தது. இருவகை முற்றும் ஈரெச்சம் ஆதலும் (இலக்கணக் கொத்து 82) பெண்மைக்கு ஏய்ந்தன அல்ல - என்று பிரித்துப் பெண்மைக்கு ஏலாத என்று உரை கூறுவர், அவர்கள் பெண் தன்மைக்கு அருள் ஒன்றே உண்டு என்று கருதினர், போலும். எதையும் மென்மையாகக் கூறல் பெண் இயல்பு. கடுமையாகப் பேசுதலின் பெண்மைக்கு ஏய்ந்தன வல்ல எனினும் ஆம். "இல்லொடும் தொடர்ந்த மாதர்க்கு ஏய்ந்தன அல்ல" என்ற அடுத்த பாடலில் யான் இவ்வாறே பொருள் உரைத்திருப்பதும் காண்க. மாற்றம் - விடை. தொல்காப்பியம், கடாஅ மாற்றம் என்பர் (மரபியல் 104) பேராசிரியர் மறுதலை மாற்றத்தினை இடையில் செரித்து - என்று விளக்கினார். இராவணன்இராமபிரானைஇழித்தும், பழித்தும் பேசினான். பிராட்டி அவன் மொழியின் நொய்மையை விளக்குகிறாள். இவ்விருத்தம் விளம் - மா - மா - விளம் - மா - மா என்னும் சீர்களைப் பெற்று வரும். இவ் விருத்தம் இந்நூலில் 2536 இடங்களில் காட்சி தருகின்றது. (மணிமலர் 76)* ***(115)***

***5184. 'மல் அடு திரள் தோள் வஞ்சன் மனம் பிறிது ஆகும் வண்ணம்,***
***கல்லொடும்தொடர்ந்த நெஞ்சம், கற்பின்மேல் கண்டது உண்டோ ?***
***இல்லொடும்தொடர்ந்த மாதர்க்கு ஏய்வன அல்ல, வெய்ய***
***சொல்; இதுதெரியக் கேட்டி, துரும்பு !' எனக் கனன்று, சொன்னாள்.+***

***துரும்பு !*** - *துரும்புபோன்றவனே;* ***கல்லொடும்*** - *கல்லுடனே;* ***தொடர்ந்த*** - *நட்புக் கொண்ட (உறுதியால்);* ***நெஞ்சம்*** - *(மகளிரின்) மனமானது;* ***கற்பின்மேல்*** - *கற்பைவிடச் சிறந்ததாக (வேறு ஒன்றை);* ***கண்டது உண்டோ ?*** - *மதித்தது உண்டா; (உன் மொழிகள்)* ***இல்லொடும்*** - *நற்குடிப்பிறப்புடன்;* ***தொடர்ந்த மாதர்க்கு*** - *தொடர்புடைய மகளிர்க்கு;* ***ஏய்ந்தன அல்ல*** - *(நினைத்தற்கும்) ஏற்றவை அல்ல;* ***வெய்ய சொல்*** - *கொடுஞ்சொல் ஆகும்;* ***தெரிய இது கேட்டி*** - *(என் மொழியை) உள்ளம் உணர இம்மொழியை கேள்;* ***என*** - *என்று;* ***மல் அடு*** - *மல்லர்களை அழிக்கும்;* ***திரள்தோள் வஞ்சன்*** - *திரண்ட தோள்களையுடைய இராவணன்;* ***மனம்*** - *உள்ளமானது;* ***பிறிது ஆகும் வண்ணம்*** - *வேறுபாடு அடையும்படி;* ***கனன்று சொன்னாள்*** - *சினந்து பேசினாள்.*

*கண்டது -மதித்தது (லெக்ஸிகன் காண்க) இராவணன் மனம் மாறும்படி பேசினாள். இல் - குடி. 'இற்பிறந்தார்' (குறள், 951. 1044) 'கனன்று, வஞ்சன் மனம் பிறிதாகும் வண்ணம் சொன்னாள்' என்று முடிக்க பிராட்டி, இராவணனுக்கும் தனக்கும் நடுவில் துரும்பையிட்டுப் பேசியதாக வான்மீகம் பேசும். அதற்கேற்ப துரும்பினை நோக்கிச் சொல்வாள், என்று ஒரு பாடம் காணப்படுகிறது. ஒரு பெண்ணை விரும்பி வந்தவன்*

*மனத்தை முறிக்கிறதற்கு, நெஞ்சம் திடமாயிருக்கிறதற்கு கற்பல்லாமல் வேறு ஒன்று இல்லை என்பது பழையவுரை (அடை - பதி)* ***(116)***

***5185. 'மேருவை உருவ வேண்டின், விண் பிளந்து ஏக***
***வேண்டின்,***
***ஈர்-எழு புவனம்யாவும் முற்றுவித்திடுதல் வேண்டின்,***
***ஆரியன்பகழிவல்லது; அறிந்து இருந்து,-***
***அறிவுஇலாதாய் !-***
***சீரிய அல்லசொல்லி, தலை பத்தும் சிந்துவாயோ?***

***அறிவிலாதாய் -*** *அறிவற்றவனே !* ***ஆரியன் பகழி -*** *இராமபிரானின் அம்பு;* ***மேருவை -*** *மகா மேரு மலையை;* ***உருவ வேண்டின் -*** *துளையிடுதலை விரும்பினாலும்;* ***விண் -*** *ஆகாயத்தை;* ***பிளந்து ஏகவேண்டின் -*** *பிளந்து செல்லுதலை விரும்பினாலும்;* ***ஈரெழு புவனம் யாவும் -*** *பதினான்கு உலகங்களையும் இன்னும் யாவற்றையும்;* ***முற்றுவித்திடுதல் வேண்டின் -*** *அழியச் செய்தலை விரும்பினும்;* ***வல்லது -*** *(அவற்றை நிறைவேற்றும்) ஆற்றல் உடையதாகும்;* ***அறிந்திருந்து -*** *(அதனை) அறிந்திருந்தும்;* ***சீரிய அல்ல சொல்லி -*** *சிறப்பற்றவற்றைப் பேசி;* ***தலை பத்தும் -*** *பத்துத் தலைகளும்;* ***சிந்துவாயோ -*** *சிந்திப் போகச் செய்து கொள்வாயோ.*

*உருவ, ஏக,என்பவை தொழிற்பெயர். எச்சம் போல் தோன்றுகிறது. தொழிற்பெயர் எச்சம் தோற்றம் பெறுமே இது உரைச் சூத்திரம். சில சுவடிகளில் உருவல், ஏகல் என்னும் பாடமும் காணப் பெறுகிறது. ஆரியன் - சிறந்தவன். கும்ப கர்ணன் இராவணனை ஆரிய ! என்று விளித்து பேசினான். குற்றாலத்தைத் திரிகூடராசப்பர், கடவுள் ஆரிய நாடு என்று பேசினார். இராமன் அம்புக்கே இத்தகைய ஆற்றல் உண்டு என்றால் அவன் ஆற்றல் அளக்க ஒண்ணாதது என்பது குறிப்பெச்சம். எச்சத்தை வடநூலார் தொனி என்பர். இப்படிப்பட்ட பாடல்கள் இராவணன் சூழ்ச்சிப் படலத்தும் காணப் பெறுகின்றன. பிராட்டி இராவணன் தனக்கு உள்ளதாகக் கூறிய ஆற்றலை இராமன் (கம்ப. 3378) அம்புக்கு உளது என்கிறாள்.* ***(117)***

***5186. 'அஞ்சினை ஆதலான், அன்று, ஆரியன் அற்றம்***
***நோக்கி,***
***வஞ்சனை மான்ஒன்று ஏவி, மாயையால் மறைந்து***
***வந்தாய்;***
***உஞ்சனைபோதிஆயின், விடுதி; உன் குலத்துக்கு***
***எல்லாம்***
***நஞ்சினைஎதிர்ந்தபோது, நோக்குமோ நினது***
***நாட்டம் ?***

***அஞ்சினை -*** *அச்சமுற்றாய்;* ***ஆதலான் -*** *ஆகையினாலே;* ***அன்று -*** *அன்றைய தினத்திலே;* ***ஆரியன் அற்றம் நோக்கி -*** *இராமபிரான் சோர்வுற்ற சமயத்தைப் பார்த்து;* ***வஞ்சனை மான் ஒன்று ஏவி -*** *சூழ்ச்சி வடிவான ஒரு மானை ஏவிவிட்டு;* ***மாயையால் -*** *பொய்த் தோற்றத்தால் (தவவேடத்தால்);* ***மறைந்து வந்தாய் -*** *உன்னை மறைத்துக் கொண்டு வந்தாய்;* ***உஞ்சனை போதியாயின் -*** *தப்பிப் பிழைக்க விரும்பினால்* ***; விடுதி -*** *என்னை விட் டுவிடு;* ***எதிர்ந்த போது -*** *போர் செய்யும் காலத்தில்;* ***உன் குலத்துக்கு***

***எல்லாம் -*** *உன் குலம் முழுமைக்கும்;* ***நஞ்சினை -*** *நஞ்சு போன்ற இராமபிரானை;*
***நினதுநாட்டம் -*** *உன்னுடைய கண்கள்;* ***நோக்குமோ -*** *பார்க்குமா ?*

*மாயை - பொய்த்தோற்றம். அரவு அலங்கலாகத் தோன்றுவது. அற்றம் - சோர்வு. ஈண்டு அற்றம் என்றது பொய்மானை மெய் என்று கருதியது. எதிர்ந்த போது - போரிடும் போது. சூரியன் பெரும் பகைஞனும் சூரியன்மகனும் நேர் எதிர்ந்தனர். (படைத் தலைவர் 50) நஞ்சு போல்பவன் நஞ்சு என்று பேசப் பெற்றான். நஞ்சுதான் கண்டீர் நம்முடை வினைக்கு நாராயணா என்னும் நாமம் - என்பர் பரகாலர். அங்கு நாமம் நஞ்சு. இங்கு நாமி நஞ்சு. மாயை இறைவன்முன் இல்லாது போம் என்பது குறிப்பெச்சம். 'யாவையும் சூனியம் சத்து எதிர்' என்று சிவஞான போதம் கூறுகிறது. பெருமாள் கண் வட்டத்திலே நிற்கும் நீ தப்புவையோ ? புலி முன்னே நிற்கும் நாய் போலே, பதினாலாயிரம் பேரைத் தனியே நின்று சூறையாடின தனி வீரத்துக்குப் பிரதிக் கிரியையாக மாரீசனைக் கொண்டு நீ பண்ணின கிருத்திமத்திலே (வஞ்சகத்தில்) கண்டிலோமோ ? அவ் வாண் பிள்ளைகள் நாற்றம் கேட்டு நின்றால் பின்பன்றோ உன்னுடைய வெற்றியும் ஆண் பிள்ளைத் தனமும் காணலாம். பெரியவாச்சான் பிள்ளை விரிவுரை (சுந்தர - 21- 3)* ***(118)***

***5187. 'பத்து உளதலையும், தோளும், பல பல பகழி தூவி,***
***வித்தகவில்லினாற்கு, திருவிளையாடற்கு ஏற்ற***
***சித்தர இலக்கம்ஆகும்; அல்லது, செருவில் ஏற்கும்***
***சத்தியை போலும்?'-மேல் நாள், சடாயுவால்***
***தரையில் வீழ்ந்தாய் !***

***மேல் நாள் -*** *அக்காலத்தில்;* ***சடாயுவால் தரையில் வீழ்ந்தாய் ! -*** *சடாயுவாலே பூமியிலே விழுந்தாய் அல்லவா;* ***பத்துள தலையும் -*** *பத்தாக இருக்கும் உன் தலைகளும்;* ***தோளும் -*** *இருபது தோள்களும்;* ***பலபல பகழி தூவி -*** *பலவிதமான அம்புகளை ஏவி;* ***வித்தக வில்லினாற்கு -*** *அதிசய வில் வீரனாகிய இராமபிரானுக்கு;* ***ஏற்றதிருவிளையாடற்கு -*** *விளையாட்டு நிகழ்த்துதற்குப் பொருத்தமான;* ***சித்திர இலக்கம் ஆகும் அல்லது -*** *ஓவிய வடிவமாக அமைக்கப் பெற்ற இலக்குப் பொருளாகுமே அல்லாமல் (வேறு யாதாம்);* ***செருவில் ஏற்கும் -*** *போரிலே இராமனை எதிர்த்து நிற்கும்;* ***சத்தியை போலும் -*** *வலிமை உடையாயே.*

*உன் தலைகளும்தோளும் சித்திர இலக்கமாகும். எதிர்த்துப் போர் புரிய போர்ப் பயிற்சி செய்பவர்கள் எதிரே ஒரு தூணையோ சித்திரத்தையோ நிறுத்தி அதன் மேல் அம்பு எய்வர். சங்க காலத்தில் இஃது முருக்க மரத்தால் செய்த தூணாய் இருந்தது. ''இளம்பல்கோசர் விளங்குபடை கன் மார்.... இகலினர் எறிந்த அகலிலை முருக்கின் பெரு மரக்கம்பம்'' என்று புறம் (169) கூறும். சிந்தாமணி 995 ஆம் பாடல் இது பற்றிக் கூறுகிறது. ஓவியம் போல் ஓர் இலக்காகி நிற்பை என்பது பழைய உரை (அடை -பதி)* ***(119)***

***5188. 'தோற்றனைபறவைக்கு அன்று; துள்ளு நீர் வெள்ளம்***
***சென்னி***
***ஏற்றவன் வாளால்வென்றாய்; அன்றுஎனின், இறத்தி***
***அன்றே ?***

***நோற்ற நோன்பு,உடைய வாழ் நாள், வரம், இவை***
***நுனித்தஎல்லாம்,***
***கூற்றினுக்கு அன்றே ? வீரன் சரத்திற்கும் குறித்தது***
***உண்டோ ?***

***அன்று*** - *அக்காலத்தில்;* ***பறவைக்கு*** - *சடாயுவுக்கு;* ***தோற்றனை*** - *தோற்றுப் போனாய்;* ***துள்ளு நீர்*** - *செருக்குப் பண்பைப் பெற்ற;* ***வெள்ளம்*** - *(கங்கையின்) வெள்ளத்தை;* ***சென்னி ஏற்றவன்*** - *சடையில் தாங்கிய சிவபெருமானின்;* ***வாளால்*** - *வாள் கொண்டு;* ***வென்றாய்*** - *வெற்றி பெற்றாய்;* ***அன்று எனின்*** - *(வாள்) இல்லை என்றால்;* ***அன்றே*** - *அன்றைய தினமே;* ***இறத்தி*** - *இறந்து போயிருப்பாய்;* ***நோற்ற நோன்பு*** - *மேற்கொண்ட தவம்;* ***உடைய வாழ் நாள்*** - *பெற்ற ஆயுள்;* ***வரம்*** - *வரம் (ஆகிய);* ***இவை*** - *இவையும்;* ***நுனித்த எல்லாம்*** - *ஆராய்ந்து பெற்ற பிற யாவும்;* ***கூற்றினுக்கு அன்றே*** - *கூற்றுவன் வராமல் தடுக்கவே அல்லாமல்;* ***வீரன் சரத்திற்கும்*** - *இராமபிரானின் அம்புக்கும்;* ***குறித்தது உண்டோ*** - *(தடையாக) வரையறுக்கப்பட்டதா ?*

*துள்ளுதல் -செருக்குக் கொள்ளுதல். துள்ளும் இருவர்க்கும் (தேவாரம் 91-9) கங்கையை 'வெள்ளம்' என்று திருமுறை பேசும்.வெள்ளநீர்ச் சடையர்போலும் (தேவாரம் 68 - 1) நுனித்தல் - ஆராய்தல். குறித்தல் - வரையறுத்தல். கணித்தலும் குறித்தலும் - வரையறுத்தற் பொருட்டாமே (பிங்கலம் 1777)* ***(120)***

***5189. 'பெற்றுடைவாளும் நாளும், பிறந்துடை உரனும்,***
***பின்னும்***
***மற்றுடை எவையும்,தந்த மலர் அயன் முதலோர்***
***வார்த்தை,***
***வில் தொடைஇராமன் கோத்து விடுதலும்,***
***விலக்குண்டு, எல்லாம்***
***இற்று இடைந்துஇறுதல் மெய்யே;-விளக்கின் முன்***
***இருள் உண்டாமோ ?***

***பெற்றுடை வாளும்நாளும்*** - *நீ பெற்றுள்ள வாளும் ஆயுளும்;* ***பிறந்துடை உரனும்*** - *பிறப்பினால் அமைந்த வலிமையும்;* ***பின்னும்*** - *மேலும்;* ***மற்று உடை எவையும்*** - *வேறு பெற்றுள்ள யாவும்;* ***தந்த*** - *உனக்கு வழங்கிய;* ***மலர் அயன் முதலோர்*** - *மலரில் அமர்ந்த பிரமன் முதலானவர்களின்;* ***வார்த்தை*** - *உறுதிமொழிகள்;* ***இராமன்*** - *இராமபிரான்;* ***வில்*** - *வில்லில்;* ***தொடை கோத்து விடுதலும்*** - *அம்பைத் தொடுத்து விட்டவுடனே;* ***விலக்குண்டு*** - *ஒதுக்கப் பெற்று;* ***எல்லாம் இற்று உடைந்து*** - *எல்லாம் வலிமை குறைந்து தோற்று;* ***இறுதல் மெய்யே*** - *அழிவது உண்மையாகும்;* ***இருள்*** - *இருளானது;* ***விளக்கின் முன் உண்டாமே*** - *விளக்கிற்கு எதிரே நிலைத்து நிற்குமா ?*

*பிறந்துடை உரன்- பிறப்பினால் பெற்ற வலிமை. ''பிறந்து நீயுடை தொல்பதம்'' (கம்ப. 2475) ''வரம் பெற்றனவும், மற்றுள விஞ்சைகளும் ... உண்மையினோன் சரம் பற்றிய சாபம் விடுந்தனையே'' ... என்று சடாயு பேசினான். (கம்ப. 3417) இராமபிரான் திரிசிரா போர்க்கு வந்த போது, ''துன் இருள் இடையது ஓர் விளக்கின் தோன்றினான்,'' என்று பேசப் பெற்றது (கம்ப. 2988) முற்றுடை எவையும் என்பதில் உள்ள மற்று -*

*அசை. தொடை - அம்பு - தோணி சாயகமே பல்லம் தொடை சிலீமுகமே அம்பாம்*
*(சூடா - நிக - செயற்கை 5)* **(121)**

## *5190. ‘குன்று நீஎடுத்த நாள், தன் சேவடிக் கொழுந்தால் உன்னை*
## *வென்றவன்புரங்கள் வேவத் தனிச் சரம் துரந்த மேரு.*
## *என் துணைக் கணவன் ஆற்றற்கு உரன் இலாது, இற்று வீழ்ந்த*
## *அன்று எழுந்துஉயர்ந்த ஓசை கேட்டிலை போலும் அம்மா !*

***நீ குன்று எடுத்தநாள் -*** *நீ கயிலாய மலையைப் பெயர்த்த அந்தக் காலத்தில்;* ***தன் சேவடிக் கொழுந்தால் -*** *தன்னுடைய திருவடியின் கொழுந்து போலும் விரலால்;* ***உன்னை வென்றவன் -*** *உன்னை அடக்கிய சிவபெருமான்;* ***புரங்கள் வேவ -*** *முப்புரங்கள் வெந்து போக;* ***தனிச்சரம் துரந்த -*** *ஒப்பற்ற அம்பை ஏவிய;* ***மேரு -*** *மகா மேரு மலையாகிய வில்;* ***என் துணைக் கணவன் ஆற்றற்கு -*** *என்னுடைய ஆதாரமான தலைவனின் வலிமைக்கு;* ***உரன் இலாது -*** *ஈடு கொடுக்கும் வலிமை இல்லாமல்;* ***இற்று வீழ்ந்த அன்று -*** *ஒடிந்து வீழ்ந்த அக்காலத்தில்;* ***எழுந்து உயர்ந்த ஓசை -*** *தோன்றிப் பெருகிய ஒலியை;* ***கேட்டிலை போலும் -*** *கேட்கவில்லையோ (இது).*

*வெல்லுதல் -அடக்குதல். இராமன் இருக்குமிடம் அயோத்தி. அதுபோல் சிவபிரான் பற்றிய வில் எல்லாம் மேரு. சிவபிரானுக்கு முறியாத வில் இராமன் பற்ற முறிந்தது. இறைவன் வில்லே முறிந்தது என்றால் நீ அவன் முன் பொடிப் பொடியாவாய் என்பது குறிப்பெச்சம். இதனை வடநூலார் ‘தொனி’ என்பர். (புறம் 11. குறள் 1090) அம்பி - வியப்படைச் சொல்.* **(122)**

## *5191. ‘ “மலை எடுத்து, எண் திசை காக்கும் மாக்களை*
## *நிலைகெடுத்தேன்” எனும் மாற்றம் நேரும் நீ,*
## *சிலை எடுத்துஇளையவன் நிற்கச் சேர்ந்திலை;*
## *தலை எடுத்து,இன்னமும், மகளிர்த் தாழ்தியோ ?*

***மலை எடுத்து -*** *கயிலாயமலையைப் பெயர்த்து;* ***எண்திசை காக்கும் மாக்களை -*** *எட்டுத் திக்குகளையும் காக்கும் யானைகளின்;* ***‘நிலை கெடுத்தேன்’ -*** *உறுதிப் பாட்டை அழித்தேன்;* ***எனும் மாற்றம் -*** *என்கின்ற மொழியை;* ***நேரும் நீ -*** *கூறிக் கொண்டுள்ள நீ;* ***இளையவன் -*** *இலக்குவன்;* ***சிலை எடுத்து நிற்க -*** *வில் பற்றி என்னைப் பாதுகாத்து நிற்க (அப்போது);* ***சேர்ந்திலை -*** *வரவில்லை;* ***தலை எடுத்து -*** *தலைகளைச் சுமந்து;* ***இன்னமும்-*** *மேலும்;* ***மகளிர்த் தாழ்தியோ -*** *பெண்களைக் கும்பிடுகிறாயா ? மாக்களை - என்பதில் உள்ள ‘ஐ’ அசை. யானைகளை நிலை கெடுத்தல் என்று நேரே பொருள் கூறினும் பொருந்தும். நேரும் நீ - பேசும் நீ - நேர்தல் - பேசுதல். சீர் சடகோபன் நேர்தல் ஆயிரத்து (திருவாய் 1 - 8 -11) மகளிர்த் தாழ்தியோ - மகளிரால் இழிவுறுவையோ என்றும் கூறலாம். மாக்கள் - வீரர்கள் என்றும் கூறலாம். மகளிர்த் தாழ்தியோ; பெயரை ஒட்டிய ஒற்று (த்) பெயரை வேறுபடுத்தும் வேற்றுமையின் பணியைப் புரிகிறது. ஒற்றும் வேற்றுமை உருபாம் பெயர்ப்பின். இது உரைச் சூத்திரம்.* **(123)**

***5192. 'ஏழை ! நின் ஒளித்துறை இன்னது ஆம் என,***
***வாழி எம்கோமகன் அறிய வந்த நாள்,***
***ஆழியும்இலங்கையும் அழியத் தாழுமோ?***
***ஊழியும்திரியும்; உன் உயிரொடு ஓயுமோ?***

***ஏழை -*** *அறிவற்றவனே;* ***நின் ஒளித்துறை -*** *உனது மறைந்து வாழும் இடம்;* ***இன்னது ஆம் என -*** *இந்த இலங்கை யாகும் என்று;* ***எம் கோமகன் -*** *எம்முடைய அரசன் (இராமபிரான்);* ***அறிய வந்த நாள் -*** *அறிய வரும்படியான நாளானது;* ***ஆழியும் இலங்கையும் -*** *கடலும் இலங்கை மாநகரமும்;* ***அழிய -*** *அழிந்து போவதுடன்;* ***தாழுமோ -*** *தணிந்து போகுமா;* ***உன் உயிரொடு -*** *உன் உயிரை அழிப்பதுடன்;* ***ஓயுமோ -*** *அமைதி பெறுமா (அதனால்);* ***ஊழியும் -*** *ஊழிக் காலமும்;* ***திரியும் -*** *மாறுபட்டு அழியும்.*

*இப்பாடலில்உள்ள நாள் என்பது எழுவாய். வரும் நாள், வந்த நாள் என்றது கால மயக்கம்; வருவது உறுதி பற்றி, இங்ஙனம் கூறுதல் தொல் மரபு (சிந்தாமணி 85) காலமே அனைத்தையும் செய்யும் என்று வாசிட்டம் விவரிக்கும் (வைராக்கியப் பிரகரணம்) காலத்தை எழுவாயாக்காமல், இராமபிரான் சீற்றத்தை வருவித்து அதனை எழுவாயாக்கினர். விரும்பின் ஏற்க. கோமகனை எழுவாயாக்கி, அவன் கடலும் இலங்கையும் அழிப்பதுடன் தணிவானா ? உன் உயிரையும் அழிப்பதுடன் ஓய்வானோ (அவனால்) ஊழித்தீயும் வேகும், என்று வி.கோ. உரை வகுத்தார். இன்னது - இது. இன்னது கேண்மென இசைத்தல் மேயினார் (கந்தபுரா - 2 - 8 -9) இவ்வினா அடுத்த பாடலிலும் தொடரும்- குளகம். வாழி - அசை.* ***(124)***

***5193. 'வெஞ் சின அரக்கரை வீய்த்து வீயுமோ ?***
***வஞ்சனை நீ செய,வள்ளல் சீற்றத்தால்,***
***எஞ்சல் இல் உலகுஎலாம் எஞ்சும், எஞ்சும் ! என்று***
***அஞ்சுகின்றேன்;இதற்கு அறனும் சான்றுஅரோ !***

***வெம்சினஅரக்கரை -*** *(அந்த நாள்) கொடுஞ்சினம் பெற்ற அரக்கரை;* ***வீய்த்து -*** *அழித்து;* ***வீயுமோ -*** *அழிந்து படுமா ?* ***நீ வஞ்சனை செய -*** *நீ வஞ்சகச் செயலைச் செய்ய (அதனால்);* ***வள்ளல் சீற்றத்தால் -*** *இராமபிரானின் கோபத்தால்;* ***எஞ்சல்இல் -*** *குறைபாடுகள் இல்லாத;* ***உலகு எலாம் -*** *எல்லா உலகங்களும்;* ***எஞ்சும் எஞ்சும் என்று -*** *அழிந்து போமோ,அழிந்து போமோ என்று நினைந்து;* ***அஞ்சுகின்றேன் -*** *பயப்படுகிறேன்;* ***இதற்கு -*** *இவ்வாறு நான் கருதுவதற்கு;* ***அறனும் சான்று -*** *அற நூல்களேசாட்சியாகும்.*

*ஒருவன் தீங்குசெய்தால் அவனும் அவன் குடியும் அழியும் என்று அறநூல்கள் கூறுகிறது. அதனால் உன் குடி அழிவது குறித்து வருந்துகிறேன் என்று பிராட்டி பேசினாள். இங்கு அறம் என்று திருக்குறள் குறிப்பாகப் பேசப்படுகிறது. 'குன்று அன்னார் குன்ற மதிப்பின் குடியொடு நின்று அன்னார் மாய்வர் நிலத்து (898) என்னும் குறளை ஒப்பு நோக்கவும் - (அண்ணாமலை - பதி) அறம் என்பதற்கு அறக்கடவுள் என்றும் கூறலாம் அரோ - அசை.* ***(125)***

***5194. 'அங்கண்மா ஞாலமும், விசும்பும், அஞ்ச வாழ்***
***வெங்கணாய்!-புன் தொழில் விலக்கி மேற்கொளாய்;***
***செங் கண் மால்,நான்முகன், சிவன் என்றே***
***கொலாம்,***
***எங்கள்நாயகனையும் நினைந்தது ?-ஏழை, நீ !***

***அங்கண் மாஞாலமும் -*** *அழகிய இடமுடைய பெரியமண் உலகமும்;* ***விசும்பும் -*** *விண்ணுலகமும்;* ***அஞ்ச -*** *அச்சமடையும்படி;* ***வாழ் -*** *வாழ்ந்து கொண்டுள்ள;* ***வெங்கணாய் -*** *கொடியவனே;* ***புன்தொழில் -*** *அற்பத் தொழிலை;* ***விலக்கி -*** *ஒதுக்கிவிட்டு;* ***மேற்கொளாய் -*** *(யான் கூறுவதை) பின்பற்றுவாயாக;* ***எங்கள் நாயகன் தனை -*** *எங்கள் தலைவனான இராமபிரானையும்;* ***செங்கண்மால் -*** *சிவந்த கண்ணைப் பெற்ற திருமால்;* ***நான்முகன் -*** *நான்கு முகமுடைய பிரமன்;* ***சிவன் -*** *சிவபிரான்;* ***என்றே கொல் நீ நீனைந்தது -*** *என்றோ நீ கருதியது (அதனால்);* ***ஏழை -*** *நீ அறிவற்றவனே.*

*இராமபிரானை மும்மூர்த்திகளைப் போல எளியர் என்று கருதியது அறியாமை. சடாயு, முத்தேவரின் மூல முதற் பொருளாம் அத்தேவர் இம்மானுடர் ஆதலினால் எத் தேவரோடு எண்ணுவது, என்று கூறினான் (கம்ப. 3416) ''முப்பரம் பொருளுக்கு முதல்வன்'' என்றபாசுரம் கருதுக (கம்ப.313) தாங்கள் வழிபடும் தெய்வத்தை மும்மூர்த்திகளாகவும் மும்மூர்த்திகளாகவும் மும்மூர்த்திகளின் மேம்பட்டவனாகவும் பேசுவது மரபு. மூவர்க்கும் உன்றனக்கும் வழி முதலே என்பர் மணிவாசகர். (திருவாசகம் 379) பெரியாழ்வார், மூவர் காரியமும் திருத்தும் முதலவன் (நாவகாரியம்) என்றார். காரணகாரிய நிலைபற்றி இங்ஙனம் பேசப்படும். ஆழ்வார்களும் நாயன்மார்களும் கம்பரும் மயக்கமடையார்.* ***(126)***

***5195. ' "மானுயர்இவர்" என மனக் கொண்டாய்எனின்,***
***கான் உயர் வரைநிகர் கார்த்தவீரியன்-***
***தான் ஒருமனிதனால் தளர்ந்துளான்எனின்,***
***தேன் உயர்தெரியலான் தன்மை தேர்தியால்.***

***இவர் -*** *இந்தஇராமலக்குவர்கள்;* ***மானுயர் என -*** *மனிதர் தானே (வெல்லலாம்) என்று;* ***மனக் கொண்டாய் எனின் -*** *நீ மனத்தில் எண் ணினால்(அது தவறு);* ***கான் உயர் -*** *காடுகளால் உயர்வு பெற்ற;* ***வரை நிகர் -*** *மலையை ஒத்த;* ***கார்த்த வீரியன்தான் -*** *கார்த்த வீரியார்ச்சுனனே;* ***ஒருமனிதனால் -*** *ஒரு மனிதன் ஆகிய பரசுராமனால்;* ***தளர்ந்துளான் எனின் -*** *தோல்வி அடைந்து அழிந்தான் என்றால்; (உன்னை அடக்கிய)* ***தேன் உயர் -*** *தேனாற் சிறப்புப் பெற்ற;* ***தெரியலான் -*** *மாலையணிந்த இராமனின்;* ***தன்மை -*** *இயல்பை;* ***தேர்தி -*** *அறிக.*

*நான் புலத்தியன்மரபினன். இராமலக்குவர்கள் மனிதர்கள். தவம் செய்பவர்கள் என்று இராவணன் கருதினான். பிராட்டி, உன்னை வாட்டியவர்களில் ஒருவன் மனிதன்; மற்றொருவன் தவசி என்று கூறினான். இப்படி ஒரு மெய்ப் பொருளை அண்ணாமலைப் பதிப்பு துலக்கிற்று. தான் ஒரு மனிதனால் - என்பதில் உள்ள 'தான்' என்பது உரை அசை - நேர்தியால் - ஆல் - அசை. மானுயர் - மனிதர். சிறு மானுயர் தம்மை என்றான் (நீலகேசி 408)* ***(127)***

***5196. ‘இருவர் என்று இகழ்ந்தனைஎன்னின், யாண்டு எல்லை,***
***ஒருவன் அன்றேஉலகு அழிக்கும் ஊழியான்;***
***செரு வரும்காலை, என் மெய்ம்மை தேர்தியால்-***
***பொரு அருந் திருஇழந்து, அநாயம் பொன்றுவாய்.***

***பொரு வரும் -*** *ஒப்புமையில்லாத;* ***திருவிழந்து -*** *செல்வத்தை இழந்து;* ***அநாயம் -*** *அநியாயமாக;* ***பொன்றுவாய் ! -*** *உயிர் அழியப்போகின்றவனே !* ***இருவர் என்று -*** *இராமலக்குவர்களை இருவர் தானேஎன்று;* ***இகழ்ந்தனை என்னின் -*** *இகழ்ந்து பேசினால் (அது முறையன்று);* ***யாண்டு எல்லை -*** *யுக வருடங்களின் முடிவிலே;* ***உலகு அழிக்கும் -*** *உலகங்களை அழிக்கின்ற;* ***ஊழியான் -*** *ஊழியின் தலைவனான சிவபிரான்;* ***ஒருவன், அன்றே -*** *ஒருவன் அல்லவா;* ***செருவரும் காலை -*** *யுத்தம் வரும் சமயத்தில்;* ***என் மெய்ம்மை -*** *என்னுடைய மொழியின் உண்மையை;* ***தேர்தி -*** *ஆராய்ந்து அறிவாய் (என் மொழியின்படி நடவாய் எனின்).*

*ஊழியான் -சிவபிரான். ஊழி முதல்வனாய் நின்ற ஒருவன் என்று திருவெம்பாவை பேசும். அநாயம் - அநியாயம். ‘ஆவி அநாயமே உகுத்து என் ? ஐய’ (கம்ப. 7412)* ***(128)***

***5197. ‘பொற்கணான், தம்பி, என்று இனைய போர்த் தொழில்***
***வில் கொள் நாண் பொருத தோள் அவுணர், வேறு உளார்,***
***நற்கண் ஆர் நல்அறம் துறந்த நாளினும்,***
***இற்கணார்இறந்திலர்; இறந்து நீங்கினார்.***

***பொற்கணான் -*** *பொன் மேனியைப் பெற்ற இரணியன்;* ***தம்பி -*** *அவனுடைய தம்பி;* ***என்று -*** *என்று பேசப்பெற்ற;* ***இனைய போர்த் தொழில் -*** *போர்த் தொழிலையும்;* ***வில்கண் நாண் -*** *வில்லின்கண் உள்ள நாண்;* ***பொருத தோள் -*** *மோதும் தோள்களையும் உடைய;* ***அவுணர் -*** *அசுரர்களும்;* ***வேறுளார் -*** *மற்றைய கொடியவர்களும்;* ***நல்கண் ஆர் -*** *நல் அறிவைப் பெற்றவர்கள் (போற்றும்);* ***நல் அறம் -*** *நல்ல தருமத்தை;* ***துறந்த நாளினும் -*** *ஒதுக்கிய காலத்திலும்;* ***இல் -*** *மற்றவன் இல்லாளை;* ***க(ண்)ணார் -*** *கருதி;* ***இறந்திலர் -*** *முறை கடந்திலர்; (அவர் பிற மகளிரைக் காணும் போது)* ***இறந்து -*** *ஒதுங்கி;* ***நீங்கினார் -*** *கடந்து போனார்கள்.*

*பொற்கணான் -பொன்னுடல் பெற்றவன் (இரணியன்) கண் - உடல். பொன்கண் பச்சை பைங்கண் மால் என்னும் பரிபாடல் (3.82) பகுதிக்கு உரை வழங்கிய அழகர், சிவந்த உடம்பை உடைய காமனே, என்றும் பசிய உடம்பினை உடைய அநிருத்தனே என்றும் விளக்கினார். நற்கண்ணார் - நல்லறிவு உடையவர். கண் - அறிவு. ‘கண் சாய்பவர்’ என்னும் குறட்கு (927) அழகர், அறிவு தளர்வார் என்று பொருள் பேசினர். பொற்கணான் என்பதை இரணியாட்சனாக்கி இடர்ப்பட்டுவிளக்கம் பேசியதிறம் பாராட்டப்பட வேண்டும். அவர்கள் இரணியன், இளையவன் என்றும், இரணியாட்சன் மூத்தவன் என்றும் பேசினர். அவர்கள் இரட்டைப் பிள்ளைகள் என்றனர். (அடை - பதிப்பு)* ***(129)***

***5198. ‘பூவிலோன் ஆதியாக, புலன்கள் போம் நெறியில் போகாத்***
***தேவரோ,அவுணர்தாமோ, நிலை நின்று வினையின் தீர்ந்தார் ?***
***ஏவல் எவ் உலகும்செல்வம் எய்தினார் இசையின் ஏழாய் !***
***பாவமோ ? முன்நீ செய்த தருமமோ ? தெரியப் பாராய் !***

***ஏழாய் !*** *- அறிவில்லாதவனே;* ***இசையின் -*** *உணர்ந்தால்;* ***பூவிலோன் ஆதியாக -*** *மலர் வீட்டில் இருக்கும் பிரம்ம தேவனைத் தலைமையாகக் கொண்டு;* ***புலன்கள் போம் -*** *ஐம்புலன்களும் ஓடுகின்ற;* ***நெறியில் போகா -*** *தீய வழியில் செல்லாத;* ***தேவரோ -*** *தேவர்களோ;* ***அவுணர்தாமோ -*** *அசுரர்களோ (எவர்);* ***நிலை நின்று -*** *நிலை பெற்று நின்று;* ***வினையில் தீர்ந்தார் -*** *தீவினையிலிருந்து நீங்கியவர்;* ***எவ்வுலகும் -*** *எல்லாவுலகங்களும்;* ***ஏவல் செல்வம் -*** *அடிமை செய்யும்படியான செல்வத்தை;* ***எய்தினார் -*** *பெற்றவர்கள்;* ***முன் நீ செய்த பாவமோ -*** *(உன்னிடத்தில் செல்வம் உள்ளதென்றால் அதற்குக் காரணம்) முன்பு உன்னால் செய்யப்பெற்ற பாவமா (அல்லது);* ***தருமமோ -*** *(முன்பு உன்னால் செய்யப்பெற்ற) அறமா;* ***தெரிய -*** *விளங்கும்படி;* ***பாராய் -*** *ஆராய்வாயாக.*

*பூ இல்லோன் -மலரை இல்லமாகப் பெற்ற பிரமன். கமலவீடு (மீனாட்சி தமிழ் -18)* ***(130)***

***5199. ‘இப் பெருஞ் செல்வம் நின்கண் ஈந்த பேர் ஈசன், யாண்டும்***
***அப் பெருஞ்செல்வம் துய்ப்பான், நின்று மா தவத்தின் அன்றே ?***
***ஒப்பு அருந்திருவும் நீங்கி, உறவொடும் உலக்க உன்னி,***
***தப்புதி அறத்தை;ஏழாய் ! தருமத்தைக் காமியாயோ ?***

***ஏழாய் !*** *- அறிவற்றவனே !* ***நின்கண் -*** *நின்னிடத்தில்;* ***இப் பெரும் செல்வம் -*** *இந்தப் பெரிய செல்வத்தை;* ***ஈந்த -*** *வழங்கி;* ***பேரீசன் -*** *மகாதேவனான சிவபெருமான்;* ***யாண்டும் மாதவத்தின் நின்று -*** *எப்பொழுதும் பெரிய தவத்தில் நிலைத்திருந்து;* ***அப்பெரும் செல்வம் -*** *அந்தப் பெரிய செல்வத்தை;* ***துய்ப்பான் அன்றே -*** *அனுபவித்துக் கொண்டுள்ளான் அல்லவா (அங்ஙனம் இருக்க);* ***ஒப்பரும் திருவும் -*** *ஒப்பற்ற செல்வமும்;* ***நீங்கி -*** *உன்னை விட்டு விலகி;* ***உறவொடும் -*** *சுற்றத்தோடும்;* ***உலக்க உன்னி -*** *அழிய நினைந்து;* ***அறத்தைத் தப்புதி -*** *அறத்திலிருந்து தவறுகிறாய்;* ***தருமத்தைக் காமியாயோ -*** *அறத்தை விரும்பமாட்டாயா?*

*சிவபெருமான் தவத்திலிருப்பது வெளிப்படை. அவன் துய்க்கும் செல்வம் நிலைபேறானது சிவமாயிருத்தல். தப்புதல் - தவறுதல். இறைவன் உனக்குச்*

*செல்வத்தை வழங்கியது நீ தவத்திலிருந்து உயர்வடையவல்லவா, என்று உரை கூறினர் பலர். ஈசன் செல்வம் ஈந்தது (நீ) யாண்டும் மாதவத்தின் நின்று அப் பெரும் செல்வம் துய்ப்பான் அன்றே - எனக் கூட்டிப் பொருள் கொள்வர்.*
***(131)***

***5200. 'மறம் திறம்பாத தோலா வலியினர்எனினும்,***
***மாண்டார்,***
***அறம்திறம்பினரும், மக்கட்கு அருள் திறம்பினரும்***
***அன்றே ?***
***பிறந்து இறந்துஉழலும் பாசப் பிணக்குடைப்***
***பிணியின் தீர்ந்தார்,***
***துறந்து அரும்பகைகள் மூன்றும் துடைத்தவர்,***
***பிறர் யார் ? சொல்லாய் !***

***மறம் திறம்பாத-*** *வீரத்திலிருந்து விலகிச் செல்லாத;* ***தோலா -*** *தோல்வியடையாத;* ***வலியினர் எனினும் -*** *வல்லமையுடையவர் என்றாலும்;* ***மாண்டார் -*** *அழிந்து போனவர்கள்;* ***அறம் திறம்பினரும் -*** *தருமத்திலிருந் துவிலகினவரும்;* ***மக்கள் -*** *மக்களிடம் காட்ட வேண்டிய;* ***அருள் திறம்பினரும்-*** *கருணையிலிருந்து விலகின வரும்;* ***அன்றே -*** *அல்லவா ?* ***துறந்து -*** *ஆசைகளை விலக்கி;* ***அரும்பகைகள் மூன்றும் -*** *கொடியமுப்பகைகளையும்;* ***துடைத்தவர் -*** *அழித்தவர்களே;* ***பிறந்து இறந்து -*** *உலகிலே பிறந்தும் இறந்தும்;* ***உழலும் -*** *சுழன்று கொண்டிருக்கும்;* ***பாசப்பிணக்கு உடை -*** *பாசக்கட்டுடன் கூடிய;* ***பிணியின் தீர்ந்தார் -*** *நோயிலிருந்துவிலகினார்கள்;* ***பிறர் யார் -*** *மற்றவர் யார் ?* ***சொல்லாய் -*** *சொல்வாயாக.*

*வலிமை வாழும்என்பது இராவணன் கருத்து. அறம் வாழும் என்பது பிராட்டியின் கொள்கை. பாசப்பிணக்கு - பாசக்கட்டு. பாசம், கயிறு, பற்று பாசமாம் பற்று (திருவாசகம்) பாசப் பிணிப்பால் ஆன்மா பசு ஆகிறது. முப்பகை - காமவெகுளி மயக்கம். அருளும் அன்பும் நீக்கி, நீங்கா நிரயம் கொள்பவரோடு ஒன்றாது வாழ்க, என்பது பிராட்டியின் செவியறிவுறுஉ.* ***(132)***

***5201. 'தென் தமிழ் உரைத்தோன் முன்னாத் தீது தீர்***
***முனிவர் யாரும்,***
***புன் தொழில்அரக்கர்க்கு ஆற்றேம்; நோற்கிலெம்'***
***புகுந்த போதே,***
***கொன்று அருள்;நின்னால் அன்னார் குறைவது***
***சரதம்; கோவே !***
***என்றனர்; யானேகேட்டேன்; நீ அதற்கு இயைவ***
***செய்தாய்.***

***தென்தமிழ்உரைத் தோன் -*** *இனிய தமிழுக்குஇலக்கணம் கூறிய அகத்தியன்;* ***முன்னா -*** *முதலான;* ***தீதுதீர் -*** *தீமையிலிருந்து விலகிய;* ***முனிவர் யாரும் -*** *எல்லா முனிவர்களும்;* ***கோவே -*** *தலைவனே; (யாங்கள்)* ***புகுந்த போதே -*** *அரக்கர்கள் தண்டகாரணியத்துக்கு வந்த காலத்திலிருந்தே;* ***புன்தொழில் -*** *அற்பத் தொழில் செய்யும்;* ***அரக்கர்க்கு -***

இராக்கதர்களுக்கு; **ஆற்றேம் -** ஈடுகொடுக்க முடியாமல்; **நோற்கிலெம் -** தவம் செய்ய இயலாமல் உள்ளோம் - **நின்னால் -** உன்னால்; **அன்னார் -** அவ்வரக்கர் கள்; **குறைவது -** அழிந்துபடுவது; **சரதம் கொன்று அருள் என்றனர் -** உண்மைஅவர்களைக் கொன்று எமக்கு அருளுக என்று கூறினார்கள்; **யானேகேட்டேன் -** அவர்கள் மொழியை யானே கேட்டேன்; **நீ -** அதை அறியாதநீயும்; **அதற்கு இயைவ செய்தாய் -** அம்மொழிக்குத் தக்க தீமையைச்செய்தாய்.

புகுந்த போதே -என்ற தொடரை யாங்கள் தண்டகாரணியம் புகுந்த போதே' என்று பொருள் கூறினர். முனிவர் பேச்சின் இடையே உள்ள தொடரை மாற்றலாமா. ஏற்பின் கொள்க. புகுந்த போதே - அரக்கர்கள் வரும்போதே என்றும் பொருள் கொள்ளலாம். புகும் போதே என்பது புகுந்த போதே என்றது காலமயக்கம் - (சிந்தா 423)தமிழ் என்றதுஇலக்கணத்தை. 'தமிழ் தந்தான்' (கம்ப. 2611) என்று முன்பு பேசப் பெற்றது. அகத்தியன் படைத்தது மொழியன்று. இலக்கணமே. **(133)**

**5202. 'உன்னையும்கேட்டு, மற்று உன் ஊற்றமும், உடைய நாளும்,**
**பின்னை இவ்அரக்கர் சேனைப் பெருமையும், முனிவர் பேணிச்**
**சொன்னபின்,உங்கை மூக்கும், உம்பியர் தோளும் தாளும்,**
**சின்னபின்னங்கள் செய்த அதனை நீ சிந்தியாயோ ?**

**முனிவர் -** தண்டகாரணிய முனிவர்கள்; **உன்னையும் -** உன்னுடைய தலைமையையும்; **உன்ஊற்றமும் -** உன்னுடைய வலிமையையும்; **உடைய நாளும் -** நீ பெற்றுள்ள (முக்கோடி) ஆயுளையும்; **இ அரக்கர் சேனைப் பெருமையும் -** இந்த அரக்கச் சேனையின் மிகுதியையும்; **பேணி -** நன்கு மதித்துச்; **சொன்னபின் -** கூறிய பிறகு; **கேட்டு -** கேட்டுத் தெரிந்து; **பின்னை -** அதற்குப் பின்பு; **உங்கை மூக்கும் -** உன் தங்கையின் மூக்கையும்; **உம்பியர் தோளும் தாளும்** - உன் தம்பிகளின் தோள்களையும் கால்களையும்; **சின்ன பின்னங்கள் செய்த அதனை -** கண்டங்களாகவும் துண்டங்களாகவும் பண்ணிய செயலை; **நீ சிந்தியாயோ -** நீகருத மாட்டாயோ. மற்று உன் -மற்று - அசை முனிவர்கள் கூறிய உன் பெருமை ஒன்றே போதும் வீரர்கள் ஒடுக்கம் அடைய. அத்தனையையும் கேட்டு உன் பகையை அவர் தேடிக் கொண்டார் என்றால் அவர்கள் வீரர்கள் என்ற முடிவு கட்ட வேண்டாமா என்கிறாள் பிராட்டி. வினைவலியும், தன்வலியும், மாற்றான் வலியும், துணைவலியும் தூக்கிச் செயல் அரசர் இயல்பு. இவற்றை அறிந்தே இராமன் செயலில் ஈடுபட்டார் என்று பிராட்டி கூறுகிறாள். உன் + ஐ = உன்னை. ஐ - தலைமை. ஐயர் - சொல் ஆய்ந்து அமைக்கப்பட்டது. உன்னை என்பதற்கு உன்னைப்பற்றி எனப் பொருள் கொள்ளலாம். பெருமை - மிகுதி. பெருமை உடைத்து இவ்வுலகு (குறள் 336) என்னும் தொடருக்கு அழகர் நிலையாமை மிகுதி உடைத்து என்று உரை வகுத்தார். பேணுதல் - நன்கு மதித்தல். தெய்வம் பேணி சென்மின் (பரிபாடல் 15-48) **(134)**

**5203. 'ஆயிரம் தடக்கையால் நின் ஐந் நான்கு கரமும் பற்றி,**
**வாய் வழி குருதிசோரக் குத்தி வான் சிறையில்**

***வைத்த***
***தூயவன் வயிரத்தோள்கள் துணித்தவன்***
***தொலைந்த மாற்றம்***
***நீஅறிந்திலையோ ? - நீதி நிலை அறிந்திலாத நீசா !***

***நீதி நிலைஅறிந்திலாத நீசா -*** *நீதி நிலையை அறியாதஅற்பனே;* ***ஆயிரம் தடக்கையால் -*** *பெரிய ஆயிரங்கைகளால்;* ***நின் -*** *உன்னுடைய;* ***ஐந்நான்கு கரமும் பற்றி -*** *இருபது கைகளையும் பிடித்து;* ***வாய்வழி -*** *உன்னுடைய வாய்களின் வழியாக;* ***குருதி சோரக் குத்தி -*** *இரத்தம் கொட்டும்படி தாக்கி;* ***வான் சிறையில் வைத்த தூயவன் -*** *சிறந்த சிறையிலே வைத்த தூய கார்த்த வீரியன்;* ***வயிரத் தோள்கள் -*** *வயிரம் பாய்ந்த தோள்களை;* ***துணித்தவன் -*** *வெட்டிய பரசுராமன்;* ***தொலைந்த மாற்றம் -*** *(இராமபிரானுக்கு) தோற்ற செய்தியை;* ***நீ அறிந்திலையோ -*** *நீ அறியவில்லையோ.*

*பரசுராமன்,'ஓராயிரம் உயர் தோள் வயிரப் பணை துணிய தொடு வடிவாய் மழு உடையான்' என்று முன்பு பேசப்பெற்றான். (கம்ப. 1274) உன்னிலும் வலியனான கார்த்தவீரியனை வென்ற பரசுராமன் இராமனால் வெல்லப்பெற்றான் என்றால் உன் நிலையை அறிக என்பது குறிப்பெச்சம். (தொனி) இப்பாடலின் குறிப்புப் பொருளை - ''வெள்ளி மால்வரையைப் பறிக்கும் கபடன் பணைப்புயமோ அவன் பைங்கடகம் செறிக்கும் புயஞ்செற்ற ஆயிரம் திண்புயமோ அவற்றைத் தறிக்கும் திறல் மழுமோ சயத்தாருடைத்தே'' என்னும் பாடல் வெளிப்படுத்தும். (திருவரங்கமாலை 38)*
***(135)***

***5204. 'கடிக்கும் வல் அரவும் கேட்கும், மந்திரம்;***
***களிக்கின்றோயை,***
***"அடுக்கும், ஈது அடாது" என்று, ஆன்ற ஏதுவோடு***
***அறிவு காட்டி,***
***இடிக்குநர்இல்லை; உள்ளார், எண்ணியது எண்ணி,***
***உன்னை***
***முடிக்குநர்;என்றபோது, முடிவு அன்றி முடிவது***
***உண்டோ ?'***

***கடிக்கும் -*** *(காரணமின்றி) கடிக்கும் இயல்பைப் பெற்ற;* ***வல் அரவும் -*** *கொடும் பாம்பு கூட;* ***மந்திரம் கேட்கும் -*** *மந்திரத்துக்கு அடங்கும்;* ***களிக்கின்றோயை -*** *செருக்குக் கொண்ட உன்னை;* ***ஈது அடுக்கும் -*** *இது செய்யத் தக்கது;* ***(ஈது) அடாது -*** *இது செய்யத்தகாதது;* ***என்று -*** *என்று கூறி (அதை மெய்ப்பிக்க);* ***ஆன்ற -*** *பழமையான;* ***ஏதுவொடு -*** *காரணத்துடன் கூடிய;* ***அறிவு காட்டி -*** *அறிவைக் காண்பித்து;* ***இடிக்குநர் -*** *நெருக்கி வற்புறுத்துபவர்கள்;* ***இல்லை -*** *இங்கே இல்லை;* ***உள்ளார் -*** *(உன் அவையில்) இருப்பவர்கள்;* ***எண்ணியது எண்ணி -*** *நீ கருதியதையே மதித்து;* ***உன்னை முடிக்குநர் -*** *உன்னை அழிப்பவர்களே;* ***என்ற போது -*** *என்று அமைந்த காலத்தில்;* ***முடிவு அன்றி -*** *அழிவு அல்லாமல்;* ***முடிவது உண்டோ -*** *(வேறுவிதமாக) நிறைவேறுவது உள்ளதா ?*

*''இடிப்பாரை இல்லாத ஏமரா மன்னன் கெடுப்பார் இலானும் கெடும்'' என்னும் குறள் (448) இப்பாடலுக்கு மூலம். இடிப்பார் - கழறுதற் குரியார் (அழகர்) அடிச்சுப் புத்தி சொல்கிற பெரியோர் (பரிதி) 'இராவணன் பாம்பினும் கொடியவன்' என்பது குறிப்பெச்சம். தலைவன் கருதியதையே மதிப்பவர் அமைச்சராய் இருந்து*

*பயனில்லை. வெம்மையைத் தாங்கி நீதி விடாது நின்று உரைத்தல் வேண்டும்.* ***(130)***

*இராவணன் சீற்றம்*

***கலித் துறை***

***5205. என்று அறத்துறை கேட்டலும், இருபது நயனம்***
***மின் திறப்பனஒத்தன; வெயில் விடு பகு வாய்***
***குன்று இறத்தெழித்து உரப்பின; குறிப்பது என் ?***
***காமத்***
***தின்திறத்தையும் கடந்தது, சீற்றத்தின் தகைமை.***

***என்று** - என்று பிராட்டிகூறிய; **அறத்துறை** - அறநெறியை; **கேட்டலும்** - (இராவணன்) கேட்டவுடனே; **இருபது நயனம்** - (அவனுடைய) இருபது கண்களும்; **மின் திறப்பன ஒத்தன** - மின்னல் (மேகத்தை) பிளப்பதை ஒத்திருந்தன; **வெயில்விடு பகுவாய்** - வெப்பத்தை வெளிப்படுத்தும் பிளந்தவாய்; **குன்று இற** - மலைகள் இற்றுப் போகும்படி; **தெழித்து உரப்பின** - முழக்கி அதட்டின; **குறிப்பது என்** - எப்படிக் குறிப்பிடுவது; **சீற்றத்தின் தகைமை** - அவனுடைய கோபத்தின் பண்பு; **காமத்தின் திறத்தையும்** - அவன்பால் முன்பிருந்த காமத்தின் ஆற்றலையும்; **கடந்தது** - விஞ்சியிருந்தது.அறத்துறை - தருமமார்க்கம். இராவணனின் காமத்தினும் சீற்றம் அதிகமாயிற்று என்பதை சீற்றத்தின் தகைமை காமத்தின் திறத்தையும் கடந்தது, என்பதால் விளக்கப்பட்டது. உள்ளத்தில் உணர்ச்சிகள் மோதுவதை, 'மானமும் சினமும் தாதை மரணமும் ... ஞானமும் துயரும் தம்முள் மலைந்தன நலிந்த' என முன்பு பேசப் பெற்றது (கம்ப. 3542) அடுத்த பாடல் இதனை விளக்கும். இக்கலித்துறை மா - விளம் - விளம் - விளம் - விளம் - மா என்னும் 5 சீர்களைப் பெற்று வரும். இப்பாடல்கள் இந்நூலில் 1223 முறை காட்சி தருகின்றன (மணிமலர் 76)* ***(137)***

***5206. வளர்ந்ததாளினன்; மாதிரம் அனைத்தையும்***
***மறைவித்து***
***அளந்ததோளினன்; அனல் சொரி கண்ணினன்;***
***'இவளைப்***
***பிளந்துதின்பென்' என்று உடன்றனன்;***
***பெயர்ந்தனன்; பெயரான்;***
***கிளர்ந்தசீற்றமும், காதலும், எதிர் எதிர் கிடைப்ப.***

***வளர்ந்ததாளினன்** - வளர்ந்த கால்களைஉடையவனாய்; **மாதிரம் அனைத்தையும்** - எல்லாத் திசைகளையும்; **மறைவித்து** - மறையும்படி செய்து; **அளந்த தோளினன்** - அளாவிய தோள்களை உடையவனாய்; **அனல் சொரி** - நெருப்பை உமிழும்; **கண்ணினன்** - கண்களை உடையவனாய்; (கிளர்ந்த இராவணன்) **இவளை** - இந்தப் பெண்ணை; **பிளந்து தின்பென்** - பிளந்து தின்று விடுவேன்; **என்று உடன்றனன்** - என்று சினந்தான்; **கிளர்ந்த சீற்றமும்** - (மனத்துள்) மிக்கெழுந்த கோபமும்; **காதலும்**- அடங்கிய காமமும்; **எதிர் எதிர் கிடைப்ப** - மாறி மாறிப் போரிட(அதனால்); **பெயர்ந்தனன் பெயரான்** - புறப்பட்டான்-நின்றான் ஆனான்.*

*இராவணன்,கொல்ல எழுந்தான். ஆனால் அவள் மாட்டுக் கொண்ட காதலும் சீற்றமும் எதிரெதிரே சந்தித்துப் போராடியதால் திகைத்துப் போனான்; நின்றுவிட்டான். கிடைத்தல் - போரிடுதல். இருபடைகளும் எதிர் கிடைக்கவே (கலிங்கத்து போர் - 3)* ***(138)***

*அனுமன் சிந்தனை*

***5207. அன்னகாலையில், அனுமனும், "அருந்ததிக் கற்பின்,***
***என்னை ஆளுடைநாயகன், தேவியை, என் முன்,***
***சொன்ன நீசன்,கை தொடுவதன்முன், துகைத்து***
***உழக்கி,***
***பின்னை, நின்றதுசெய்குவென்' என்பது பிடித்தான்.***

***அன்ன காலையில்-*** *அந்தச்சமயத்தில்;* ***அனுமனும் -*** *அனுமனானவன்;* ***அருந்ததி கற்பின் -*** *அருந்ததி போன்ற கற்புடைய;* ***என்னை ஆளுடை -*** *என்னை அடிமையாகக் கொண்ட;* ***நாயகன் தேவியை -*** *இராமபிரானின் பத்தினியை;* ***என்முன் -*** *எனக்கு எதிரில்;* ***சொன்ன நீசன் கை -*** *இழித்துப் பேசிய இராவணன் கை;* ***தொடுவதன் முன் -*** *பிராட்டியைத் தொடுவதற்கு முன்பு;* ***துகைத்து -*** *காலாலே மிதித்து;* ***உழக்கி -*** *கையாலே பிசைந்து (கொன்றபின்);* ***பின்னை -*** *மறுபடி;* ***நின்றது செய்குவென் -*** *நிலைத்த நற்பணியைச் செய்வேன்;* ***என்பது -*** *என்னும் எண்ணத்தை;* ***பிடித்தான் -*** *உறுதியாகப் பற்றிக் கொண்டான்.*

*என்னை ஆளுடைநாயகன் - இராமபிரான். கவிக்கு நாயகர் இருவரும் (அனுமன், கம்பன்) இங்ஙனம் பேசுவர். (கம்ப. 204.) அனுமன், 'நின்றது செய்குவென்' என்றான். அது அடுத்த பாடல் பேசும். அனுமனும் - உம். அசை. 'காமக்கடல் மன்னும் உண்டே' (குறள் 464, உரை)* ***(139)***

***5208. 'தனியன்நின்றனன்; தலை பத்தும் கடிது உகத்***
***தாக்கி,***
***பனியின்வேலையில் இலங்கையைக் கீழ் உறப்***
***பாய்ச்சி,***
***புனித மா தவத்துஅணங்கினைச் சுமந்தனென்***
***போவென்,***
***இனிதின்' என்பதுநினைந்து, தன் கரம்***
***பிசைந்திருந்தான்.***

***தனியன் -*** *தனித்துள்ள யான்;* ***நின்றனன் -*** *எழுந்து நின்ற இராவணனின்;* ***தலைபத்தும் -*** *பத்துத் தலைகளும்;* ***கடிது உகத் தாக்கி -*** *வேகமாகச் சிதறும்படி மோதி;* ***இலங்கையை -*** *இலங்கை மாநகரை;* ***பனி வேலையில் -*** *குளிர்ந்த கடலின்கண்;* ***கீழ் உற -*** *அடிப்பகுதியை அடைய;* ***பாய்ச்சி -*** *அமிழ்த்துவிட்டு (பிறகு);* ***புனிதம் -*** *தூய்மையான;* ***மாதவத்து அணங்கினை -*** *பெருந்தவம் செய்யும் பிராட்டியை;* ***சுமந்தனென் -*** *சுமந்து கொண்டு;* ***இனிதின் போவென் -*** *மகிழ்ச்சியுடன் (இராவணன்பால்) செல்வேன்;* ***என்பதுநினைந்து -*** *என்பதைக் கருதி;* ***தன் கரம் பிசைந்து -*** *தன்னுடைய கரங்களைப் பிசைந்தபடி;* ***இருந்தான் -*** *சந்தர்ப்பம் நோக்கியிருந்தான்;* *தனியன்*

*என்பதைஇராவணனுக்கு ஆக்கின் அஃது அனுமனுக்கு இழுக்கு. இராவணன் தனியே உள்ளான்; கொல்லல் எளிது என்று வீரனான அனுமன் கருதான்.*
***(140)***

*சீற்றம் தணிந்தஇராவணன் பேச்சு.*

***5209. ஆண்டு, அவ்வாள் அரக்கன் அகத்து, அண்டத்தை அழிப்பான்***
***மூண்ட கால வெந்தீ என முற்றிய சீற்றம்,***
***நீண்ட காம நீர்நீத்தத்தின் வீவுறு நிலையின்***
***மீண்டு நின்று,ஒரு தன்மையால் இவை இவை விளம்பும்;***

***ஆண்டு*** *- அப்பொழுது;* ***அ,வாள் அரக்கன்*** *- கொடிய இராவணன்;* ***அகத்து*** *- உள்ளத்தில்;* ***அண்டத்தை அழிப்பான்*** *- அண்டங்களை அழிக்கும் பொருட்டு;* ***மூண்ட*** *- பற்றி எரிகின்ற;* ***வெம்காலத் தீயென*** *- கொடிய காலாக்கினியைப் போல;* ***முற்றிய சீற்றம்*** *- முதிர்ந்த கோபமானது;* ***நீண்ட*** *- மிகுதியான;* ***காமநீர் நீத்தத்தின்*** *- காமமாகிய வெள்ளத்தில்;* ***வீவுறுநிலையின்*** *- அழிந்து போக (அதனால்);* ***மீண்டு*** *- (பிராட்டியைக்) கொல்லவேண்டும் என்னும் நினைவிலிருந்து திரும்பி;* ***நின்று*** *- தாமதித்து;* ***ஒருதன்மையால்*** *- ஒப்பற்ற காமத்தால்;* ***இவை இவை விளம்பும்*** *- இவற்றைப்பேசலானான். தீயைக்காமப்புனல் அவித்தது. "நீர் வந்தால் காம நெருப்பழியும் காணுமே" என்று ஒரு தனிப்பாடல் பேசும். (நீர் சிலேடை) நீத்தம் - வெள்ளம்.* ***(141)***

***அறுசீர்விருத்தம்***

***5210. 'கொல்வென் என்று உடன்றேன்; உன்னைக்***
***கொல்கிலென்; குறித்துச் சொன்ன***
***சொல் உள;அவற்றுக்கு எல்லாம் காரணம் தெரியச் சொல்லின்,***
***"ஒல்வது ஈது; ஒல்லாதுஈது" என்று, எனக்கும் ஒன்று உலகத்து உண்டோ ?***
***வெல்வதும்தோற்றல்தானும் விளையாட்டின் விளைந்த, மேல்நாள்.***

***உன்னைக்கொல்வென்*** *- உன்னைக் கொன்றுவிடுவேன்;* ***என்று உடன்றேன்*** *- என்று சீற்றம் கொண்டேன்;* ***கொல்கிலேன்*** *- கொல்லமாட்டேன்;* ***குறித்துச் சொன்ன*** *- நீ என் மேல் கூறிய;* ***அவற்றுக்கு எல்லாம்*** *- அந்தக் குற்றங்கட்கு;* ***காரணம் தெரியச் சொல்லின்*** *- காரணத்தை விளங்கக் கூறக் கருதின்;* ***சொல் உள*** *- (அதற்கேற்ற) சொற்கள் உள்ளன;* ***ஈது ஒல்வது*** *- இச் செயல் என்னால் நிறைவேற்றக் கூடியது;* ***ஒல்லாது ஈது*** *- இச் செயல் என்னால் நிறைவேற்ற முடியாதது;* ***என்று ஒன்று*** *- என்று வரையறுத்துக் கூறும் ஒரு செயல்கள்;* ***எனக்கும்*** *- பேராற்றல் படைத்த எனக்கும்;* ***உலகத்து உண்டோ*** *- உலகில் உள்ளதா ?* ***மேல்நாள்*** *- முற்காலத்தில்;* ***வெல்வதும்*** *- (பகைவர்) வெற்றி பெறுவதும்;* ***தோற்றல் தானும்*** *- தோல்வியடைந்ததும்;* ***விளையாட்டின் விளைந்த*** *- விளையாட்டைப்*

*போல நிகழ்ந்தன. தோற்றது,கார்த்த வீரியன் பால் 'நான் விளையாட்டாகத் தோற்றேன், உண்மையில் தோற்கவில்லை'. என்பது இராவணனின் போலிவார்த்தை.*
***(142)***

***5211. 'ஒன்றுகேள், உரைக்க; "நிற்கு ஓர் உயிர் என***
***உரியோன் தன்னைக்***
***கொன்று கோள்இழைத்தால், நீ நின் உயிர் விடின்,***
***கூற்றம் கூடும்;***
***என்தன் ஆர்உயிரும் நீங்கும்" என்பதை இயைய***
***எண்ணி,***
***அன்று நான்வஞ்சம் செய்தது; ஆர், எனக்கு அமரில்***
***நேர்வார் ?***

***ஒன்று -*** *ஒரு வார்த்தையை;* ***உரைக்க கேள் -*** *யான் கூற நீ கேட்பாயாக;* ***நிற்கு -*** *உனக்கு;* ***ஓர் உயிர் என -*** *ஒப்பற்ற உயிர் போல;* ***உரியோன் தன்னை -*** *உனக்கு உரிமையான இராமனை;* ***கொன்று -*** *கொன்ற பின்;* ***கோள் இழைத்தால் -*** *உன்னைக் கொண்டு வருதலைச் செய்தால்; (அதனால்)* ***நீ நின் உயிர்விடின் -*** *நீ உன் உயிரை விட்டு விட்டால்;* ***கூற்றம் கூடும் -*** *யமன் வருவான்(அதனால்);* ***என்தன்ஆருயிரும் -*** *என்னுடைய அரிய உயிரும்;* ***நீங்கும் -*** *என்னைவிட்டு நீங்கும்;* ***என்பதை -*** *என்னும் உண்மையை;* ***இயைய எண்ணி -*** *பொருந்த ஆராய்ந்து (அதனால்);* ***நான் அன்று -*** *நான் அன்றைய தினம்;* ***வஞ்சம் செய்தது -*** *வஞ்சகம் செய்தது;* ***அமரில் -*** *போரில்;* ***எனக்கு நேர்வார் யார் ? -*** *எனக்குச் சமமானவர் எவர்.*

*இராவணன், தன்வஞ்சகச் செயலுக்குக் கூறும் சமாதானம் 'மாயையால் மறைந்து வந்தாய்' என்ற பிராட்டியின் சொல்லுக்கு மாற்றம் (பதில்) கோள் இழைத்தல் - கவர்ந்து வருதல். கொள்ளுதல் என்னும் தொழிற் பெயர் கோள் என நின்றது. முதல் நிலை திரிந்த தொழிற்பெயர். 'குற்றம் கூடும்' - என்னும் பாடமும் உள்ளது.*
***(143)***

***5212. 'மான் என்பது அறிந்து போன மானிடர் ஆவார்,***
***மீண்டு,***
***யான் என்பதுஅறிந்தால் வாரார்; ஏழைமை, எண்ணி***
***நோக்கல்;***
***தேன் என்பதுஅறிந்து சொல்லாய் ! தேவர்தாம்***
***யாவரே, எம்***
***கோன் என்பதுஅறிந்த பின்னை, திறம்புவார்,***
***குறையின் அல்லால் ?***

***தேன் என்பது -*** *தேன்என்று சிறப்பித்துப் பேசும் பொருளும்;* ***அறிந்த-*** *(இன்பம்) அனுபவிக்கும்படியான;* ***சொல்லாய் ! -*** *சொற்களைப் பேசுபவளே;* ***மான் என்பது அறிந்து போன -*** *மான் என்பதை அறிந்து அதன்பின்சென்ற;* ***மானிடர் ஆவார் -*** *மனிதராக இருக்கின்றவர்கள்;* ***மீண்டு -*** *திரும்பிவந்து;* ***யான் என்பது அறிந்தால் -*** *(உன்னைக் கவர்ந்து சென்றது) யான்என்று அறிந்தால்);* ***வாரார் -*** *இலங்கைக்கு*

*வரமாட்டார்கள்;* ***எண்ணி நோக்கல் -*** *(அவர்கள்) வருவார் என்று நினைந்து எதிர்பார்த்தல்;* ***ஏழைமை -*** *அறியாமையாகும்;* ***தேவர்தாம் -*** *எந்தத் தேவர்களாக இருந்தாலும்;* ***எம் கோன் என்பது அறிந்த பின்னை -*** *இச் செயல் செய்தவன் எம்தலைவனான இராவணன் என்று அறிந்த பிறகு;* ***குறையின் அல்லால் -*** *மனம் தளர்வாரேயல்லாமல்;* ***யாவர் திறம்புவார் -*** *எவர் முறை தவறி நடப்பார்.*

*தேனும்அனுபவிக்கும் இனிய மொழி. இங்ஙனம் கூறுவது கவிச் சக்கரவர்த்தியின் இயல்பு. "யாழ்க்கும் இன் குழற்கும் இன்பம் அளித்தனஇவையாம் என்னக்கேட்கும் மென் மழலைச் சொல்" (கம்ப. 974) என்று கூறப்பெற்றது. மான் என்பது அறிந்து போன என்பதில் உள்ள அறிதல் அசதி மொழி - மாயமானுக்கும் உண்மை மானுக்கும் வேறுபாடு அறியாதவர்கள் என்றபடி. திறம்புதல் - கடந்து வருதல் (முறை தவறுதல்) குறைதல் - மன எழுச்சி தளர்தல். யாவர் திறம்புவார் என்று முடிக்க. கோன் என்பது பின்னைத் திறம்புவர் குறையின் அல்லார் - ஒரு காரியம் நான் செய்தேன் என்றால் அத் தேவர்கள் அறிந்தாலும் எங்கள் இறைவன் செய்தான் என்பர் அல்லாமல் மாறுபடார். தாழ்வர் என்பது பழைய உரை (அடை - பதி)* ***(144)***

***5213. 'வென்றோரும் இருப்ப; யார்க்கும் மேலவர், விளிவு இலாதோர்,***
***என்றோரும்இருப்ப; அன்றே, இந்திரன் ஏவல் செய்ய,***
***ஒன்றாக உலகம்மூன்றும் உணர்கின்ற ஒருவன், யானே !***
***மென்தோளாய் !இதற்கு வேறு ஓர் காரணம் விரிப்பது உண்டோ ?***

***மென் தோளாய் !-*** *மெல்லிய தோளையுடையவளே;* ***வென்றோரும் இருப்ப -*** *என்னை வென்ற வாலி முதலானோர் இருக்கவும்;* ***யார்க்கும் மேலவர் -*** *எவர்க்கும் மேலாய மும்மூர்த்திகளும்;* ***விளிவு இலாதோர் என்றோரும் இருப்ப -*** *அழிவற்றவர் என்று பேசப்படும் தேவர்களும் இருக்கவும்;* ***அன்றே -*** *அந்த நாளிலிருந்து;* ***இந்திரன் ஏவல் செய்ய -*** *இந்திரன் அடிமைப் பணி செய்ய;* ***உலகம் மூன்றும் -*** *மூன்று உலகங்களையும்;* ***ஒன்றாக உணர்கின்ற -*** *ஒரு சேர ஆட்சியுணர்வு செய்கின்ற;* ***ஒருவன் -*** *ஒப்பற்றவன்;* ***யானே -*** *யானே ஆவேன்* ***இதற்கு -*** *இவ்வாறு யான் ஆள்வதற்கு* ***வேறு ஓர் காரணம் -*** *பிறிதொரு காரணத்தை;* ***விரிப்பது உண்டா -*** *விளக்கிக் கூறுவதற்குள்ளதா ?*

*என்னினும்மேலானவர் இருப்பின் அவர்கள் என்னை அடக்கியிருக்கலாமே. அவ்வாறு நேராமையின் யானே பெரியவன் என்பது இராவணன் எண்ணம்.* ***(145)***

***5214. 'மூவரும் தேவர்தாமும் முரண் உக முற்றும் கொற்றம்,***
***பாவை ! நின்பொருட்டினால், ஓர் பழி பெற, பயன் தீர் நோன்பின்***
***ஆ இயல்மனிதர்தம்மை அடுகிலேன்; அவரை ஈண்டுக்***
***கூவி நின்று,ஏவல் கொள்வேன்; காணுதி-குதலைச் சொல்லாய் !***

***பாவை !*** - பதுமை போன்றவளே; ***குதலைச் சொல்லாய் !*** - இனிய மொழி பேசுபவளே ! ***மூவரும்*** - மும்மூர்த்திகளும்; ***தேவர்தாமும்*** - (மற்றைய) தேவர்களும்; ***முரண் உக*** - வலிமை குறைய; ***முற்றும் கொற்றம்*** - நிறைவு பெற்ற என் வெற்றியானது; ***நின்பொருட்டினால்*** - உன் காரணமாக; ***ஓர் பழி பெற*** - ஒரு பழிச் சொல்லை அடையும் வண்ணம்; ***பயன்தீர்*** - பயனில்லாத; ***நோன்பின்*** - தவத்தையுடைய; ***ஆ இயல் மனிதர் தம்மை*** - பசுவின் தன்மை கொண்ட மனிதரை; ***அடுகிலேன்*** - கொல்லேன்; ***அவரை*** - அந்த இராமலக்குவரை; ***கூவி நின்று*** - அழைத்து; ***ஈண்டு ஏவல் கொள்வென்*** - இந்த இடத்தில் அவர்கள் செய்யும் பணிகளை ஏற்றுக் கொள்வேன்; ***காணுதி*** - நீ அதைப் பார்.

*உன்பால் நான்கொண்ட காதலால் என் வெற்றி பழிபெற்றது. அவர்களைக் கொல்லேன் என்று கூறிய இராவணன் தன் காதலை விவரிக்கிறான். அமைதி, ஆவியல், என்று பேசப்படுகிறது. பாவை - பதுமை (விக்கிரகம்) குதலை - இனிய மொழி - கண்டு படு குதலைப் பசுங்கிளி - (மீனாட்சி தமிழ் 7-1) குதலை - இளமொழி என்று அரும்பதவுரை பேசும் (சிலம்பு - 30 - 114)* ***(146)***

***5215. 'சிற்றியல், சிறுமை ஆற்றல், சிறு தொழில், மனிதரோடே***
***முற்றிய தா இல்வீர முனிவு என்கண் விளையாதேனும்,***
***இற்றை, இப்பகலில், நொய்தின், இருவரை ஒரு கையாலே***
***பற்றினென்கொணரும் தன்மை காணுதி;-பழிப்பு இலாதாய் !***

***பழிப்பு இலாதாய்!*** - பழித்துப் பேசப்படாதவளே ! ***சிற்றியல்*** - சிறுமைப் பண்பும்; ***சிறுமை ஆற்றல்*** - அற்பசக்தியும்; ***சிறுதொழில்*** - இழி தொழிலும் (பெற்ற); ***மனிதரோடே*** - மனிதர்கள்பால்; ***முற்றிய தா இல் வீரம்*** - முதிர்ந்த குற்றமற்ற வீரத்துடன் கூடிய; ***முனிவு*** - கோபம்; ***என்கண் விளையாதேனும்*** - என்னிடம் தோன்றாதுஎன்றாலும்; ***இற்றைஇப்பகலில்*** - இன்றைய தினத்தில் இந்த முகூர்த்தத்தில்; ***நொய்தின்*** - எளிதாக; ***இருவரை*** - இராமலக்குவரை; ***ஒரு கையாலே*** - ஒரு கையாலே; ***பற்றினென் கொணருந்தன்மை*** - பிடித்துக் கொண்டு வரும் என் வலிமையை; ***காணுதி*** - பார்ப்பாயாக.

*மனிதரோடு முனிவுஎன்கண் விளையாது என்று சேர்க்க. பகல் - முகூர்த்தம். பிறன் பழிப்பது இல்லாயின் நன்று - என்று குறள் (49) பேசிற்று. இராவணனே பிராட்டியைப் பழிப்பிலாதாய், என்றான். இராவணன், தன்னை மனிதனாக நினைந்ததே இல்லை. மனித குலத்தினும் மேம்பட்டது தன்குலம் என்று பேசுவதை யாண்டும் காணலாம்.* ***(147)***

***5216. 'பதவிய மனிதரேனும், பைந்தொடி ! நின்னைத் தந்த***
***உதவியை உணரநோக்கின், உயிர்க் கொலைக்கு உரியர் அல்லர்;***
***சிதைவுறல் அவர்க்கு வேண்டின், செய் திறன் தேர்ந்தது எண்ணின்,***

***இதன் நினக்குஈதேஆகின், இயற்றுவல்; காண்டி !***
***இன்னும்,***

***பைந்தொடி** - பசியவளையல் அணிந்தவளே; (இராமலக்குவர்கள்) **பதவு இயல்** - புல்லின் இயல்பைப் பெற்ற; **மனிதரேனும்** - மனிதராக இருந்தாலும்; **நின்னைத் தந்த** - உன்னை எனக்குத் கொடுத்த; **உதவியை** - உபகாரத்தை; **உணர நோக்கின்** - சிந்தித்துப் பார்த்தால்; (அவர்கள்) **உயிர்க் கொலைக்கு உரியர் அல்லர்** - உயிரைக் கொல்வதற்குத் தக்கவராகார்; **அவர்க்கு** - அந்த இராமலக்குவர்க்கு; **சிதைவு உறல் வேண்டின்** - அழிவு வருதலை நீ விரும்பினால்; **செய்திறன்** - யான் செய்யும் உபாயம்; **நேர்ந்தது எண்ணின்** - உன்னால் ஏற்றுக்கொள்ளப்பட்டால்; **நினக்கு** - உனக்கு; **ஈதே இதன்** - இச்செயல் (கொல்லுதல்) நன்மை; **ஆகின்** - ஆனால்; (அச் செயலை) **இன்னும்** - இப்போதே; **இயற்றுவன்** - செய்வேன்.*

*புல் போன்ற மனிதர்கள்; அவர்களைக் கொல்வது எளிது. என்றாலும் நன்றியால் கொல்லேன் என்பது இராவணன் பண்பு. பதவு + இயல் - பதவியல் - பதவு - புல் நல்வேறு செங்கோற் பதவின் வார் குரல் கறிக்கும் (குறுந்தொகை 363) இராமலக்குவர்களை, முன்பாட்டில்பசு என்றான்.இப்பாட்டில் அதனால் மேயப்படும் புல் என்றான் - உண்பதும், உண்ணப்படுவதும் பிரமம் என்னும் கொள்கை அவன் அறியாமல் வந்தது போலும். சீதையே உனக்கு விருப்பம் இருப்பின் அவர்களைக் கொல்வேன் என்பது இராவணாகாரம். கணவனைக் கொன்று மனையாளை அடையும் பண்பு பாலைப்பண்பு விரிப்பின் பெருகும் தொகுப்பின் குறுகும். திறன் - உபாயம். 'உய்திறம் இல்லை என்று உயிர்ப்பு வீங்கினார்' (கம்ப. 196) **(148)***

*இராவணன் சீதையைஅச்சுறுத்திச் செல்லுதல்*

***5217. 'பள்ள நீர் அயோத்தி நண்ணி, பரதனே முதலினோர்***
***ஆண்டு***
***உள்ளவர்தம்மைஎல்லாம் உயிர் குடித்து, ஊழித்***
***தீயின்***
***வெள்ள நீர்மிதிலையோரை வேர் அறுத்து, எளிதின்***
***எய்திக்***
***கொள்வென்,நின் உயிரும்; என்னை அறிந்திலை-***
***குறைந்த நாளோய் !'***

***குறைந்த நாளோய்-** அற்பஆயுளைப் பெற்றவளே; **பள்ளநீர்** - அகழி நீரால் சூழப்பெற்ற; **அயோத்தி நண்ணி** - அயோத்தியை அடைந்து; **பரதன் முதலினோர்** - பரதன் முதலாக; **ஆண்டு** - அங்கே; **உள்ளவர் தம்மை எல்லாம்** - இருப்பவர் யாவரையும்; **உயிர் குடித்து** - உயிரைப்பருகி; **ஊழித்தீயின்** - ஊழிக்காலத்து நெருப்பைப் போலச் சென்று; **வெள்ளநீர்** - மிக்க நீர்வளம் பெற்ற; **மிதிலையோரை** - மிதிலையின்கண் வாழ்பவரை; **வேர் அறுத்து** - அடியோடழித்து; **எளிதின் எய்தி** - எளிதாகத் திரும்பி வந்து; **நின் உயிரும்** - உன்னுடைய உயிரையும்; **கொள்வென்** - வாங்குவேன்; **என்னை அறிந்திலை** - என்னைப்பற்றி அறிந்தாயில்லை.*

*கொள்ளுதல் -வாங்குதல் (கவர்தல்) உயிரை வாங்கி விடுவான் என்னும் வழக்கு நோக்கி அறிக. முதலினோர் - குறிப்பு முற்று. பெயரெச்சப் பொருளில் வந்தது.*
***(149)***

***5218. ஈது உரைத்து, அழன்று பொங்கி, எரி கதிர் வாளை***
***நோக்கி,***
***'தீது உயிர்க்குஇழைக்கும் நாளும் திங்கள் ஓர்***
***இரண்டில் தேய்ந்தது;***
***ஆதலின்,பின்னை, நீயே அறிந்தவாறு அறிதி'***
***என்னா,***
***போது அரிக்கண்ணினாளை அகத்து வைத்து,***
***உரப்பிப் போனான்.***

*(இராவணன்)*

***ஈது உரைத்து -*** *இந்தமொழிகளைக் கூறி;* ***அழன்று பொங்கி -*** *கொதித்துச் சீறி;* ***எரிகதிர் வாளை நோக்கி -*** *(தன் கையில் உள்ள) ஒளிமிக்க வாளைப் பார்த்து (இந்த வாளே);* ***உயிர்க்கு -*** *உன்னுடைய உயிருக்கு;* ***தீது இழைக்கும் -*** *அழிவைச் செய்யும்;* ***நாளும் -*** *முன்பு பேசப்பெற்ற தவணை நாளும்;* ***திங்கள் ஓர் இரண்டில் -*** *இரண்டு மாதத்தில்;* ***தேய்ந்தது -*** *முடிவுபெறும்;* ***ஆதலின் -*** *ஆகையினாலே;* ***பின்னை -*** *மறுபடி;* ***நீ -*** *நீ;* ***அறிந்தவாறு -*** *அறிந்த வழியால்;* ***அறிதி -*** *(துன்பத்தை) அனுபவி;* ***என்று -*** *என்று கூறி;* ***போது அரிக்கண்ணினாளை -*** *தாமரை மலரில் உள்ள வண்டு போன்ற கண்களையுடைய பிராட்டியை;* ***அகத்து வைத்து -*** *மனத்திலே வைத்து (புறத்திலே);* ***உரப்பிப் போனான் -*** *அதட்டிச் சென்றான்.*

*பிராட்டிபுல்லைப் பார்த்துப் பேசினாள். இராவணன் வாளைப் பார்த்துப் பேசினான். அறிதல் - அனுபவித்தல். உற்று அறியும் ஐம்புலன் (திருக்குறள் 1101) போதரிக்கண்ணினாய் - என்பதற்கு, புஷ்பம் போலேயும், மான் போலேயும் இருந்துள்ள கண். அரி என்பது மான். அன்றிக்கே, பூவிலே வண்டு இருந்தாற் போல என்றுமாம். அரி என்பது வண்டு. பூவோடே சீறுபாறு என்றும், கண் என்றுமாம் (திருப்பாவை 13). இராவணன், என்னால் விதிக்கப்பட்ட தவணை, மாதங்கள் இரண்டே, நீ எனது படுக்கையை ஒப்பி ஏறிவிடு. இல்லையேல் உன்னை என் சமையற்காரர்கள் துண்டு துண்டாக வெட்டுவார்கள் என்று பேசியதாக வான்மீகம் பேசும் (சுந்தர - 22) இதுவே, நாளும் திங்கள் ஓர் இரண்டில் தேய்ந்த என்று பேசப்பெற்றது.* ***150)***

***5219. 'அஞ்சுவித்தானும், ஒன்றால் அறிவுறத் தேற்றியானும்,***
***வஞ்சியின்செவ்வியாளை வசித்து, என்பால் வருவீர்;***
***அன்றேல்,***
***நஞ்சு உமக்குஆவென்' என்னா, நகை இலா***
***முகத்து, பேழ் வாய்,***
***வெஞ்சினத்துஅரக்கிமார்க்கு, வேறு வேறு***
***உணர்த்திப் போனான்.****

*(இராவணன்)*

***வஞ்சியின்செவ்வியாளை -*** *வஞ்சிக் கொடியைவிட மென்மை வாய்ந்த சீதையை;* ***ஒன்றால் -*** *ஒரு உபாயத்தால்;* ***அஞ்சுவித்தானும் -*** *அச்சமடையச் செய்தாவது (அன்றேல்);* ***ஒன்றால் -*** *வேறு ஒரு உபாயத்தால்;* ***அறிவுறத் தேற்றியானும் -*** *அறிவில் பொருந்தும்படியாகத் தெளிவை உண்டாக்கியாவது;* ***வசித்து -*** *வசப்படுத்தி (பிறகு);* ***என்பால் வருவீர் -*** *என்னிடத்தில்வருவீராக;* ***அன்றேல் -*** *அவ்வாறு செய்யாமற் போனால்;* ***உமக்கு நஞ்சு ஆவென் -*** *உங்கட்கு நான் விடம் ஆவேன்;* ***என்னா -*** *என்று;* ***நகையிலா முகத்து -*** *சிரிப்பறியா முகத்தையும்;* ***பேழ்வாய் -*** *பிளந்த வாயையும்;* ***வெஞ்சினத்து -*** *கொடுங் கோபமும் (பெற்ற);* ***அரக்கிமார்க்கு -*** *அரக்கிகட்கு;* ***வேறு வேறு -*** *தனித்தனியாக;* ***உணர்த்திப் போனான் -*** *அறிவுறுத்திச் சென்றான்.*

*வசித்து -வசப்படுத்தல். தன்னால் முடியாததைத் தன் பணிப் பெண்கள் முடிப்பர் என்று நினைத்த இராவணனின் அறியாமை பெரிது. ஆசை அறிவை அழிக்கும்.* ***(151)***

*அரக்கியர் சீதையைஅதட்டுதல்*

***5220. போயினன்அரக்கன்; பின்னை, பொங்கு அரா***
***நுங்கிக் கான்ற***
***தூய வெண் மதியம்ஒத்த தோகையைத் தொடர்ந்து***
***சுற்றி,***
***தீய வல்அரக்கிமார்கள், தெழித்து, இழித்து, உரப்பி,***
***சிந்தை***
***மேயின வண்ணம்எல்லாம் விளம்புவான், உடன்று***
***மிக்கார்.***

***அரக்கன்போயினன் -*** *இராவணன்சென்றுவிட்டான்;* ***பின்னை -*** *பிறகு;* ***பொங்கு அரா -*** *குமுறுகின்ற இராகு என்ற பாம்பு;* ***நுங்கிக் கான்ற -*** *விழுங்கிக் கக்கிய;* ***தூயவெண் மதியம் ஒத்த -*** *தூய்மையான சந்திரனைப் போன்ற;* ***தோகையை -*** *மயில்போலும் பிராட்டியை;* ***தீயவல் அரக்கிமார்கள் -*** *தீமை புரிவதில் வல்ல அரக்கிகள்;* ***தொடர்ந்து சுற்றி -*** *நெருங்கிச் சுற்றியிருந்து கொண்டு;* ***தெழித்து -*** *முழக்கி;* ***இழித்து -*** *அவமதித்து;* ***உரப்பி -*** *அதட்டி (பிறகு);* ***சிந்தை மேயின வண்ணம் எல்லாம் -*** *மனம் போனபடிஎல்லாம்;* ***உடன்று விளம்புவான் மிக்கார் -*** *சீறிப் பேசத் தொடங்கினார்கள்.*

*இராவணின்கொடுஞ்சொற்களில் இருந்து மீண்ட பிராட்டி இராகுவின் பிடியிலிருந்து விடுதலை பெற்ற மதி போன்றிருந்தாள். தொடர்ந்து - நெருங்கி. நிமிர்ந்தும் தொடர்ந்தும் (பரிபாடல் 19-82) என்னும் பகுதி இடையிட்டும் நெருங்கியும் என்று அழகரால் விளக்கப் பெற்றது. நுங்குதல் - விழுங்குதல். 'அரவு நுங்குமதியின் ஐயென மறையும்' (அகம் 114).* ***(152)***

***சந்தக் கலித்துறை***

*5221. முன் முன் நின்றார், கண் கனல் சிந்த முடுகுற்றார்;*
*மின் மின் என்னும் சூலமும் வேலும் மிசை ஓச்சி,*
*'கொல்மின் ! கொல்மின் ! கொன்று குறைத்து, குடர்*
*ஆரத்*
*தின்மின் ! தின்மின் ! என்று தெழித்தார், சிலர்*
*எல்லாம்.*

***முன் முன்நின்றார் -*** *பிராட்டியின் முன்னாலேநின்றவர்களாகிய;* ***சிலர் எல்லாம் -*** *சில அரக்கிமார்கள்;* ***கண்கனல் சிந்த -*** *கண்களிலிருந்து நெருப்புச் சிதற;* ***முடுகுற்றார் -*** *(பிராட்டியின்பால்) விரைந்துபோய்;* ***மின்மின் என்னும் -*** *மின்னுகின்ற மின்னல் போலும்;* ***சூலமும் வேலும் -*** *சூலத்தையும் வாளையும்;* ***மிசை ஓச்சி -*** *தலைக்கு மேலே உயர்த்தி (இவளை);* ***கொல்மின் கொல்மின் -*** *கொல்லுங்கள் கொல்லுங்கள்;* ***கொன்று குறைத்து -*** *கொன்று துண்டுகளாக்கி;* ***குடர் ஆர -*** *வயிறு நிரம்ப;* ***தின்மின் தின்மின் -*** *தின்னுங்கள் தின்னுங்கள்;* ***என்று -*** *என்று கூறி;* ***தெழித்தார் -*** *அரட்டினார்கள்.*

*முடுகுற்றார் -முற்றெச்சம், வினை எச்சப் பொருளில் வந்துள்ளது. மிசை - தலைக்கு மேலே. ஓச்சி - உயர்த்தி. மின்மின் - மின்னும் மின்னல். வெல்லும் வேலை வெவ்வேல் என்பதுபோல் வந்தது. குறைத்தல் - துண்டித்தல்.*

*இச் சந்தக்கலித்துறை மா - மா - விளம் - மா - காய் என்னும் ஐந்து சீர்களைப் பெற்றுவரும். இதனை வடநூலார் 'மத்த மயூரம்' என்பர். இத்தகு பாக்கள் இந்நூலில் 154 இடங்களில் காண்கிறோம் (மணிமலர் 76).* ***(153)***

*5222. 'வையம் தந்த நான்முகன் மைந்தன் மகன் மைந்தன்,*
*ஐயன், வேதம்ஆயிரம் வல்லான், அறிவாளன்,*
*மெய் அன்புஉன்பால் வைத்துளது அல்லால், வினை*
*வென்றோன்*
*செய்யும் புன்மையாதுகொல் ?' என்றார், சிலர்*
*எல்லாம்.*

***சிலர் எல்லாம்-*** *வேறுசில அரக்கிமார்கள் (பிராட்டியை நோக்கி;* ***வினை வென்றோன் -*** *செயலில் வெற்றி பெறும் இராவணன்;* ***வையம் தந்த -*** *உலகத்தைப் படைத்த;* ***நான்முகன் மைந்தன் -*** *பிரம்ம தேவனுடைய மகனான புலத்தியனது;* ***மகன் மைந்தன் -*** *மகனின் (விச்சிரவசு) புதல்வன்;* ***ஐயன் -*** *தன்னிகரற்ற தலைவன்;* ***வேதம் ஆயிரம் வல்லோன் -*** *ஆயிரம் வேதங்களை அறிந்தவன்;* ***அறிவாளன் -*** *அறிவிற் சிறந்தவன் (அவன்);* ***உன்பால் -*** *உன்னிடத்தில்;* ***மெய் அன்பு -*** *உண்மையான அன்பை;* ***வைத்துளது அல்லால் -*** *வைத்ததை அன்றி (அவன்);* ***செய்யும் புன்மை -*** *செய்யும் இழிவு;* ***யாது -*** *எதுவோ;* ***என்றார் -*** *என்று சொன்னார்.*

*உயர்குடிப்பிறப்பும், கல்வியும் பெற்றவன். உன் காரணமாக இழிதொழில் செய்கிறான் என்றால் அதற்குக் காரணம் அவன் உன்பால் கொண்ட காதலே என்று கூறிப் பிராட்டியை மருட்டுகின்றனர். அரக்கியர் தம்மை அறியாமல் இராவணன் செயல் புன்மை என்கின்றனர். இராவணின் தந்தை விச்சிரவசு. விச்சிரவசுவின் தந்தை புலத்தியன். புலத்தியன் தந்தை பிரமன். சூர்ப்பனகை, தன்னைப் பூவிலோன் புதல்வன்*

*மைந்தன் புதல்வி என்று பேசுவதை முன்பு பார்த்தோம் (சூர்ப்ப - 39). சாமவேதம் ஆயிரம் சாகை உடையது. ஆதலின் அது ஆயிரவேதம் என்று சிறப்பிக்கப்பெற்றது. ஆயிரமறைப் பொருள் உணர்ந்து அறிவமைந்தாய் என்று இராவணன் புகழப்படுவான். ஐயன் - அழகியவன் என்பது ஏற்புடைப்பொருள் - பெண்டிர் விரும்புவது அழகையாதலின் இராவணன் அழகன் என்று அரக்கியர் குறித்தல் பொருத்தமன்றோ. ''இன்மையும் வனப்பும்'' பெண் விரும்புவது என்னும் பெருங்கதை.*
***(154)***

***5223. 'மண்ணில்தீய மானுயர் தத்தம் வழியோடும்,***
***பெண்ணில்தீயோய் ! நின் முதல் மாயும் பிணி***
***செய்தாய்,***
***புண்ணில்கோல் இட்டாலன சொல்லி; பொது***
***நோக்காது***
***எண்ணிக்காணாய், மெய்ம்மையும்' என்றார், சிலர்***
***எல்லாம்.***

***சிலர் எல்லாம்-*** *வேறுசில அரக்கிமார்கள்;* ***பெண்ணில் தீயோய் -*** *பெண்களுக்குள் தீயவளே;* ***புண்ணில் கோலிட்டாலன -*** *புண்ணிலே அம்பை ஏவினாற்போல;* ***சொல்லி -*** *கொடிய வார்த்தைகளைப் பேசி;* ***நின்முதல் -*** *உன் காரணமாக;* ***தீய மானுயர் -*** *தீய இராமலக்குவர்கள்;* ***தத்தம் வழியோடும் -*** *தங்கள் தங்கள் மரபுடன்;* ***மண்ணில் -*** *பூமியில்;* ***மாயும் பிணிசெய்தாய் -*** *அழிவதற்கு ஏதுவான நோயை உண்டு பண்ணினாய்;* ***பொதுநோக்காது -*** *எல்லோரையும் சமமாகப் பாராமல்;* ***எண்ணி -*** *(சிறப்புற)ஆராய்ந்து;* ***மெய்ம்மையை -*** *உண்மையை;* ***காணாய் -*** *பார்ப்பாயாக;* ***என்றார் -*** *என்று கூறினர்.*

*வழி - மரபு.முதல் - காரணம். எண்ணில் காணாய் - என்று பாடங்கொண்டு பொது நோக்காது எண்ணில் மெய்ம்மை காணாய் என்று கூட்டி, பொதுவாகப் பாராமல் எண்ணினால் மெய்ம்மையைக் காணமாட்டாய் என்று உரை கூறினும் ஏற்கும் - பாரபட்சம் பாராதே என்றுஅறிவுறுத்துகிறார்கள்.* ***(155)***

***5224. 'புக்க வழிக்கும், போந்த வழிக்கும், புகை வெந் தீ***
***ஒக்கவிதைப்பான் உற்றனை அன்றோ ? உணர்வு***
***இல்லாய் !***
***இக் கணம்இற்றாய்; உன் இனம் எல்லாம் இனி***
***வாழா;***
***சிக்க உரைத்தேம்' என்று தெழித்தார், சிலர் எல்லாம்.***

***சிலர் எல்லாம்-*** *வேறுசில அரக்கிமார்கள்;* ***உணர்வு இல்லாய் -*** *அறிவற்றவளே (நீ);* ***புக்க வழிக்கும் -*** *புகுந்த கணவன் மரபுக்கும்;* ***போந்த வழிக்கும் -*** *பிறந்த தந்தை மரபுக்கும்;* ***புகை வெந்தீ -*** *புகையுடன் கூடிய நெருப்பை;* ***ஒக்க -*** *ஒருசேர ;* ***விதைப்பான் உற்றனை அன்றோ -*** *அள்ளித் தெளிக்க வந்துள்ளாய் அல்லவா;* ***இக்கணம் இற்றாய் -*** *நீ இப்பொழுதே அழிந்தாய்;* ***உன் இனம் எல்லாம் -*** *உன் கூட்டம் முழுவதும்;* ***இனி வாழா -*** *இனிமேல் வாழப்போவதில்லை;* ***சிக்க உரைத்தேம் -*** *உறுதியாகச் சொன்னோம்;* ***என்று தெழித்தார் -*** *என்று கூறி அதட்டினர். புக்கவழி - புகுந்த மரபு (தசரதன் மரபு) போந்த வழி -பிறந்த மரபு (சனகன் மரபு) சிக்க - உறுதியாக. அரக்கர் இயல்பு தெழித்துப்*

*பேசுதல் போலும். நாவரசர், இராவணனை திண்ணமாத் தெழித்து நோக்கி உணரா ஆண்மையான், என்று இராவணப் பதிகத்தில் பேசுவார் (தேவாரம் 34).* ***(156)***

***5225. கொல்வான் உற்றோர் பெற்றியும், - யாதும் குறையாதாள்-***
***'வெல்வான், நம்கோன்; தின்னுமின்; வம்!' என்பவர் மெய்யும்,***
***வல் வாய்வெய்யோன் ஏவலும், எல்லாம் மனம் வைத்தாள்,***
***நல்லாள்; நல்லகண்கள் கலுழ்ந்தே நகுகின்றாள்.***

***யாதும்குறையாதாள் -*** *எத்துன்பத்தாலும் மனம்குறையப் பெறாத;* ***நல்லாள் -*** *பிராட்டி;* ***கொல்வான் -*** *கொல்லும் பொருட்டு;* ***உற்றோர் பெற்றியும் -*** *அணுகிய சில அரக்கிகளின் தன்மையையும்;* ***நம்கோன் -*** *நம் தலைவனான இராவணன்;* ***வெல்வான் -*** *வெற்றியடைவான் (ஆகையால்);* ***தின்னுமின் -*** *இவளைத் தின்னுங்கள்;* ***வம் -*** *வாருங்கள்;* ***என்பவர் மெய்யும்-*** *என்று கூறிய சில அரக்கியர்களின் உடற்பருமனையும்;* ***வல்வாய் -*** *கொடியமொழிபேசும்;* ***வெய்யோன் -*** *கொடிய இராவணனின்;* ***ஏவலும் -*** *கட்டளையையும்;* ***எல்லாம் -*** *யாவற்றையும்;* ***மனம் வைத்தாள் -*** *மனத்திலே எண்ணிப் பார்த்து;* ***நல்ல கண்கள் கலுழ்ந்து -*** *நல்ல கண்களில் கண்ணீர் ததும்பி;* ***நகுகின்றாள் -*** *சிரிப்பவளானாள்.*

*பெற்றியும்,மெய்யும், ஏவலும் எல்லாம் மனம் வைத்தாள் கலுழ்ந்து நகுகின்றாள். வல்வாய் வெய்யோன் - எமன். ஏவலில் - அவன் தூதரைப் போல் என்பது பழையவுரை (அடை - பதி). நகுதல் - துயரம் மிகுதியால் வந்தது. கலுழ்தல் - கலங்குதல் - அழுதல். கண்தாம் கலுழ்வது எவன்கொல் என்பது வள்ளுவர் தந்த தொடர்.* ***(157)***

*திரிசடை சொல்லால் சீதை தேறுதல்*

***5226. இன்னோரன்ன எய்திய காலத்து, இடை நின்றாள்,***
***'முன்னேசொன்னேன் கண்ட கனாவின் முடிவு, அம்மா !***
***பின்னே, வாளா பேதுறுவீரேல், பிழை' என்றாள்.***
***'அன்னே, நன்று!' என்றாள்; அவர் எல்லாம் அவிவுற்றார்.***

***இன்னோரன்ன -*** *இப்படிப்பட்ட அவலங்கள்;* ***எய்திய காலத்து -*** *(பிராட்டிக்கு) வந்த சமயத்தில்;* ***இடை நின்றாள் -*** *(அரக்கிகட்கும் பிராட்டிக்கும்) நடுவிலிருந்த திரிசடை (பிராட்டியை நோக்கி;* ***அம்மா -*** *தாயே;* ***கண்ட கனாவின் முடிவு -*** *அறித கனவின் முடிவை;* ***முன்னே சொன்னேன் -*** *முன்பு கூறினேன்;* ***பின்னே -*** *மறுபடியும்;* ***வாளா -*** *வீணாக;* ***பேதுறுவீரேல்-*** *மனங்கலங்கினால்;* ***பிழை என்றாள் -*** *குற்றம் என்று கூறினாள் (அப்போதுபிராட்டி);* ***அன்னே -*** *தாயே;* ***நன்று -*** *நீ கூறியது நல்லது;* ***என்றாள் -*** *என்றுகூறித் தேறினாள் (இம்மொழி கேட்ட);* ***அவரெல்லாம் -*** *வருத்திய அந்தஅரக்கிகள்;* ***அவிவுற்றார் -*** *அடங்கினார்கள்.*

*திரிசடை கனவுகண்டதாகக் கூறியதைக் கேட்ட அரக்கிமார்கள் ஏதோ நம் அறியாததொன்று உள்ளது என்று யூகித்தறிந்து அமைதி பெற்றனர். திரிசடை பிராட்டியின்பால் கனவுச் செய்தியைக் கூறியபோது அரக்கிகள் துயின்றனர். ஆதலின் இப்போது திரிசடை மொழியிலிருந்து அதை அறிந்தனர் என்க. திரிசடை முன்பு கனவின் இடையில் விழித்துக்கொண்டாள். அதன் முடிவைக் கூறு என்று பிராட்டி திரிசடையின்பால் பேசினாள் - திரிசடை உறங்கி முடிவைக் கூறினாள் போலும். 'கனவின் முடிவு' என்னும் சொல் நாடக உத்தியை அடிப்படையாகக் கொண்டது.*
***(158)***

***5227. அறிந்தார், அன்ன முச்சடை என்பாள் அது சொல்ல;***
***பிறிந்தார்சீற்றம்; மன்னனை அஞ்சிப் பிறிகில்லார்;***
***செறிந்தார் ஆயதீவினை அன்னார் தெறல்***
***எண்ணார்;***
***நெறிந்து ஆர்ஓதிப் பேதையும் ஆவி நிலை நின்றாள்.***

***அறிந்தார் அன்ன-*** *முக்காலமும் அறிந்தவரை ஒத்த;* ***முச்சடை என்பாள் -*** *திரிசடை என்பவள்;* ***அது சொல்ல -*** *அம்மொழியைக்கூற;* ***மன்னனை அஞ்சிப் பிரிகில்லார் -*** *அரசனுக்காகப் பயப்பட்டு சீதையை விட்டுப் பிரியாத அரக்கிகள்;* ***சீற்றம் பிரிந்தார் -*** *கோபத்திலிருந்து விலகினர்;* ***ஆய தீவினை அன்னார் -*** *அந்த தீவினைபோலும் அரக்கிகள்;* ***தெறல்எண்ணார் -*** *துன்புறுத்தநினையாமல்;* ***செறிந்தார் -*** *அடங்கியிருந்தனர்;* ***நெறிந்து ஆர் ஓதி -*** *சுருண்ட கூந்தலையுடைய;* ***பேதையும் -*** *பிராட்டியும்;* ***ஆவி நிலை நின்றாள் -*** *உயிர் நிலைக்கப் பெற்றாள்.*

*அறிந்தார் -முக்காலமும் அறிந்த ஞானிகள். மன்னனை அஞ்சிப் பிரியாதார், சீற்றம் பிரிந்தார். தீவினை அன்னார் தெறல் என்றார் செறிந்தார், பேதையும் ஆவி நிலை நின்றாள் என்று கூறுக. திரிசடையைத் தமிழாக்கி முச்சடை என்றான்.*
***(159)***

## உருக்காட்டுப்படலம்

*அனுமன் தன்னுடையமந்திர சக்தியினால் அரக்கியர்களுக்கு உறக்கத்தை வருவிக்கின்றான். அப்போது பிராட்டி பலவாறு புலம்புகிறாள். என்னைச் சிறையிலிருந்து பெருமான் விடுவிக்கின்ற காலத்தில் யான் என் கற்பை எப்படி மெய்ப்பிப்பேன் என்று மனம் நொந்து தற்கொலை செய்துகொள்ள மாதவிச் சோலைக்குச் செல்கிறாள்.*

*அங்கு அனுமன்வெளிப்பட்டு, யான் இராமதூதன்; நீ ஐயம் அடையாதே; கூறிய மொழிகளும், கொடுத்த அடையாளமும் உண்டு என்றான். அது கேட்ட பிராட்டி அவன்பால் நம்பிக்கைகொண்டு வீர! நீ யாவன்? என்றாள். அனுமன் தன் வரலாற்றையும், இராமபிரானின் திருமேனிப் பொலிவையும் விவரிக்கிறான். இவற்றைக் கேட்ட பிராட்டி தழலிலிட்ட மெழுகுபோல் மனம் உருகினாள். அப்போது அனுமன், இராமபிரான் சொல்லியனுப்பிய அடையாள மொழிகளைப் பகர்ந்தான். அடையாளம் கூறிய அனுமன், பெருமான் கொடுத்த திருவாழியைப் பிராட்டியிடம் காண்பித்தான். அதைக் கண்ட பிராட்டி பேருணர்வு பெற்றாள். திருவாழியை வாங்கி மார்பில் வைத்துக் கொண்டாள்; சிரத்தில் தாங்கினாள். கண்களில் ஒற்றிக் கொண்டாள். உணர்ச்சி வயப்பட்ட பிராட்டி அனுமனுக்குச் சிரஞ்சீவிப் பதத்தைத் தருகிறாள். அப்போது அனுமன் பிராட்டியைப் பிரிந்த பிறகு இராமன் உற்ற துன்பத்தையும் அவன் சுக்கிரீவனுடன் நட்புக் கொண்டதையும், இராவணனை வென்ற வாலியைக் கொன்றதையும் பிறவற்றையும் விரிவாகச் சொன்னான். அது கேட்ட பிராட்டி இச்சிறு உருவத்தோடு எங்ஙனம் கடல் கடந்தாய் என்று வினவ, அனுமன் தன் பேருருவைக் காட்டுகிறான். அது கண்டு தேவி வியந்தாள். பேருருவை அடக்குக! என்றாள். அனுமன் சிற்றுருக் கொண்டு பணிந்து நின்றான்.*

*இப்படலம்சம்சார மண்டலத்தில் உழல்கின்ற புனித ஆன்மாவுக்கு இறைவனால் அனுப்பப் பெற்ற குரவர்பிரான் நம்பிக்கை ஊட்டுவதையும், ஆன்மா தெளிவு பெறுவதையும் குறிப்பால் உணர்த்துகிறது என்பர்.*

*திருவாழியைஅனுமன் பிராட்டியின்பால் தருதல் குரவர்பிரான் புனித ஆன்மாவுக்குத் தீட்சை வழங்குதலைக் குறிக்கும்.* ***சந்தக் கலித்துறை***

***5228. 'காண்டற்குஒத்த காலமும் ஈதே; தெறு காவல்***
***தூண்டற்கு ஒத்தசிந்தையினாரும் துயில்கில்லார்;***
***வேண்டத்துஞ்சார்' என்று, ஒரு விஞ்சை வினை***
***செய்தான்;***
***மாண்டுஅற்றாராம் என்றிட, எல்லாம் மயர்பு உற்றார்.***

***(யான்)***

***காண்டற்கு ஒத்த-*** *பிராட்டியைக் காண்பதற்கேற்ற;* ***காலமும் ஈதே -*** *காலமும் இதுவேயாகும் (ஆனால்);* ***தெறுகாவல் -*** *வருத்துகின்ற பாதுகாப்பை (செய்ய);* ***தூண்டற்கு ஒத்த -*** *(ஏவுதற்குப் பொருத்தமான;* ***சிந்தையினார் -*** *உள்ளம் உடையவர்கள்;* ***துயில்கில்லார் -*** *உறங்காமல் உள்ளனர்;* ***வேண்ட -*** *யான் மனத்தால் விரும்ப;* ***துஞ்சார் -***

*உறங்கார்;* ***என்று** - கருதி (அனுமன்);* ***ஒரு** - ஒப்பற்ற;* ***விஞ்சை** - ஒரு மந்திரத்தை;* ***வினைசெய்தான்** - தொழில்படச் செய்தான் (பிரயோகித்தான்);* ***எல்லாம்** - எல்லா அரக்கிகளும்;* ***மாண்டு அற்றார் என்றிட** - இறந்து உயிரற்றவர் போல;* ***மயர்வுற்றார்** - மயக்கம் அடைந்தனர்.*

*தூண்டுதல்,ஏவுதல், சிந்தை காவல் செய்யத் தூண்டுகிறது. வினை செய்தல், தொழிற்படுத்தல். அற்றார் - உயிரற்றவர்கள். அனுமன் 'கல்லாத கலை இல்லை' என்று முன்பு பேசப்பட்டான். ஆதலின் மந்திரத்தால் அரக்கிகள் உறங்கச் செய்தான். மனோவாற்றலால் உறங்கச் செய்யமுடியும் என்பதை உலகம் இன்று காண்கிறது.*
***(1)***

*சீதையின் துயரமொழிகள்.*

***5229. துஞ்சா தாரும் துஞ்சுதல் கண்டாள்; துயர் ஆற்றாள்;***
***நெஞ்சால்ஒன்றும் உய் வழி காணாள்,***
***நெகுகின்றாள்;***
***அஞ்சாநின்றாள்,பல் நெடு நாளும் அழிவுற்றாள்,***
***எஞ்சா அன்பால்,இன்ன பகர்ந்து, ஆங்கு, இடர்***
***உற்றாள்.***

***பல்நெடுநாளும்அழிவுற்றாள்** - பலநாட்கள் துன்புற்றபிராட்டி;* ***துஞ்சாதாரும்** - உறங்காத அரக்கிமார்கள்;* ***துஞ்சுதல் கண்டாள்** - உறங்குவதைப் பார்த்து;* ***துயர் ஆற்றாள்** - துன்பத்தைப் பொறுக்க முடியாமல்;* ***நெஞ்சால்** - உள்ளத்தால்;* ***உய்வழி** - தப்பிச் செல்லும் வழி;* ***ஒன்றும் காணாள்** - சிறிதும் அறியாமல்;* ***நெகுகின்றாள்** - மனம் நெகிழ்ந்து;* ***அஞ்சா நின்றாள்** - பயமடைந்து;* ***எஞ்சா அன்பால்** - குறையாத அன்புடன்;* ***இன்ன பகர்ந்து** - இவற்றைக்கூறி;* ***ஆங்கு இடர் உற்றாள்** - அங்கே துன்பம் அடைந்தாள்;* ***பகர்தல்** - மனத்துடன் பேசுதல்.*

*பிராட்டி,உறங்காத அரக்கிகள் உறங்குவதைப் பார்த்து வழியறியாமல் இவற்றைக் கூறித் துன்புற்றாள். கண்டாள், ஆற்றாள், காணாள், நெகுகின்றாள் முதலிய முற்றுக்கள் எச்சப் பொருளில் வந்தன. அழிவுறுவாள் - என்னும் வினையாலணையும் பெயர் எழுவாய். துஞ்சுதல் - உறங்குதல்.* ***(2)***

**கலி விருத்தம்**

***5230. கரு மேகம்,நெடுங் கடல், கா அனையான்***
***தருமே, தனியேன்எனது ஆர் உயிர்தான் ?***
***உரும்ஏறு உறழ்வெஞ் சிலை நாண் ஒலிதான்***
***வருமே ? உரையாய், வலியார் வலியே !***

***வலியார் வலியே-** வலிமைமிகுந்த இராமலக்குவர்பால் உள்ள வலிமையே !;* ***கருமேகம்** - கருத்த மேகமும்;* ***நெடுங்கடல்** - நெடுங்கடலும்;* ***கா** - சோலையும்;* ***அனையான்** - ஒத்த இராமபிரான்;* ***தனியேன்** - தனித்திருக்கும்;* ***எனது ஆருயிர்** - எனது*

*(ஆருயிரை) அரிய உயிரை;* ***தருமே -*** *எனக்குத் தருவாரா ?;* ***உரும் ஏறு உறழ் -*** *பேரிடி போன்ற;* ***வெஞ்சிலை நாண் ஒலி -*** *கொடிய வில்லின் ஒலியானது;* ***வருமே -*** *இலங்கைக்கு வருமா;* ***உரையாய் -*** *கூறுக.*

*இராமபிரானுக்குமேகம் முதலானவை உவமை. ஆழ்வார், கற்பகக் காவன நற்பெருந் தோளற்கு (திருவாய் 6.6.6) என்றார். அதைப்பின்பற்றி இராமபிரானைக் 'கா' என்றார். தேசிகன், இராமபிரானை, 'நடையாடும் பாரிசாதம்' என்று ரகுவீரகத்தியத்தில் பேசினார் (தண்டகா தபோவந ஐங்கம பாரிஜாத) ஆருயிர்தான் ஒலிதான் - தான் உரை அசை. வலியார் விதியே - என்னும் பாடம் ஒதுக்கப்பட்டது. இராமனின் வில்லை நம்பியிருக்கும் பிராட்டி, விதியை அழைத்துப் பேசாள் என்பது சிலருடைய கருத்தாக இருக்கும். இவ்விருத்தம் மா - புளிமா - புளிமா - புளிமா - என்னும் நான்கு சீர்களைப் பெற்று வரும். இப்பாடல் நேரசையில் தொடங்கினால் 11எழுத்தையும்நிரையசையில் தொடங்கினால் 12 எழுத்தையும் பெற்றுவரும். இப்பாடல்கள் இந்நூலில் 212 இடங்களில் காட்சி தருகின்றன.* ***(3)***

***5231. 'கல்லா மதியே ! கதிர் வாள் நிலவே !***
***செல்லா இரவே !சிறுகா இருளே !***
***எல்லாம் எனையேமுனிவீர்; நினையா***
***வில்லாளனை,யாதும் விளித்திலிரோ ? +***

***கல்லா மதியே -*** *(நன்மையைப்) பயின்று அறியாத சந்திரனே;* ***கதிர்வாள் நிலவே -*** *சூரியனின் ஒளியைப் பெற்ற நிலவே;* ***செல்லா இரவே -*** *கழியாத இராக்காலமே;* ***சிறுகா இருளே -*** *குறைவற்ற இருளே;* ***எல்லாம் -*** *நீங்கள் யாவரும்;* ***எனையே முனிவீர் -*** *தனித்துள்ள என்னையே சீறுகிறீர்;* ***நினையா -*** *என்னைக் கருதிப்பாராத;* ***வில்லாளனை -*** *வில்லேந்திய இராமபிரானை;* ***யாதும் விளித்திலிர் -*** *சிறிதும் கோபிக்கமாட்டீர்.*

*கல்லா - பயிலாதகல்லாமதியே என்பதில் உள்ள 'கல்லா' என்பதை செய்யா என்னும் வாய்ப்பாட்டெச்சமாக்கிக் 'கற்றமதியே' எனப் பொருள் கோடலும் நன்று.*

*கல்லா இளைஞர்(பொருநர் - ஆற்றுப்படை 100) என்னும் தொடருக்கு இனியர் 'முற்றக் கற்ற இளையர்' என்று பொருள் கூறினர். கல்லா என்பது செய்யா என்னும் எச்சம் என்றார். கற்ற சந்திரன், இப்படிச் செய்யலாமா என்றால் பொருள் சிறக்கும். மதியின் கல்வியைப் பற்றிப் பேச வேண்டா. அவன் வில்லைக்கண்டு அஞ்சினிரோ என்று குறிப்பிடுகின்றாள். இதுவும் அடுத்த பாடலும் ஒரு தொடர். ஓ. அசை.*
***(4)***

***5232. 'தழல் வீசி உலாவரு வாடை தழீஇ***
***அழல்வீர்; எனதுஆவி அறிந்திலிரோ ?***
***நிழல் வீரைஅனானுடனே நெடு நாள்***
***உழல்வீர்;கொடியீர் ! உரையாடிலிரோ ? +***

***கொடியீர் -*** *மதிமுதலிய கொடியவர்களே (நீங்கள்);* ***தழல்வீசி -*** *நெருப்பைப் பரப்பி;* ***உலா வரு -*** *திரிந்து வருகின்ற;* ***வாடை தழீஇ -*** *வாடைக்காற்றைத் தழுவி;* ***அழல்வீர் -*** *(என்னைச்) சுடுகின்றீர்;* ***எனது ஆவி அறிந்திலிரோ -*** *என் உயிரின் தன்மை*

*அறியீரோ;* ***நிழல்வீரை அன்னானுடனே-*** *ஒளிவீசும் கடல்போன்ற இராமனுடன்;* ***நெடுநாள் உழல்வீர் -*** *நீண்ட நாட்கள் பழகியிருக்கிறீர்கள்;* ***உரையாடிலிரோ -*** *(உயிர்பற்றிப்) பேசவில்லையோ.*

*நீங்கள்இராமனுடன் பேசியிருந்தால் அவர் என் உயிரின் இயல்பைக் கூறியிருப்பார். நீங்கள் என்னை வருந்தீர். நீங்கள் அவனுடன் அதுபற்றிப் பேசவில்லையோ, பிரிந்தாரை வாட்டும் மதி முதலானவை காவிய நாயகர்களால் இகழப்படும் - நைடதம் முதலானவற்றில் இதைக் காணலாம். வீரை - கடல் - செழுந்தென்றல் அன்றில் .... திரைவீரை என்மேல் பகையாட ஆடும். (திருமாளிகைத் தேவர் - உறவாகிய யோகம். 5* ***(5)***

***5233. 'வாராது ஒழியான் எனும் வண்மையினால்,***
***ஓர் ஆயிர கோடிஇடர்க்கு உடையேன்;***
***தீராய் ஒரு நாள்வலி - சேவகனே !***
***நாராயணனே ! தனிநாயகனே !*** *+*

***(இராமபிரான்)***

***வாராது ஒழியான்-*** *இங்கேவாராமல் அமைதி பெறான்;* ***எனும் -*** *என்கின்ற ;* ***வண்மையினால் -*** *அவன் கருணை மிகுதியால்;* ***ஓர் ஆயிர கோடி -*** *பல்கோடியாகப் பெருகிவரும்;* ***இடர்க்கு உடையேன் -*** *துன்பங்கட்குத் தளராமல் உள்ளேன்;* ***சேவகனே -*** *வீரம் உடையவனே;* ***நாராயணனே -*** *திருமால் போன்றவனே;* ***தனி நாயகனே -*** *ஒப்பற்ற தலைவனே;* ***ஒருநாள் -*** *ஒருதினம்;* ***வலி தீராய் -*** *என்னுடைய நோவைத் தீர்ப்பாயாக.*

*அரசர்களைத்திருமாலாகப் பேசுவது மரபு. அது பற்றித் திருமால் என்று கூறினாள் என்றும் கொள்ளலாம். இதனைப் பூவை நிலை' என்று தமிழ் மரபு பேசும். வலி - நோவு. 'வலியானே யான்பட்ட வலிகாணவாராயோ' (கம்ப. 2833.) இப்பாடலில் உள்ள 'வலி' அனைவர்க்கும் தீராவலியாக உள்ளது. ஏகநாயகன், தனி நாயகன் (கடவுள்) 'ஏகநாயகனை இமயவர்க்கு அரசை' (திருவிசை - சேந்தன் 1-1)* ***(6)***

***5234. 'தரு ஒன்றிய கான் அடைவாய், "தவிர் நீ;***
***வருவென சில நாளினில்; மா நகர்வாய்***
***இரு" என்றனை;இன் அருள்தான் இதுவோ ?***
***ஒருவென் தனிஆவியை உண்ணுதியோ ?*** *+*
***(ஐயனே)***

***தரு ஒன்றிய -*** *மரங்கள் சேர்ந்துள்ள;* ***கான் அடைவாய் -*** *காட்டை அடைய விரும்புபவளே;* ***நீ தவிர் -*** *நீ அந்த எண்ணத்தை விடு;* ***சில நாளினில் -*** *சில தினங்களிலே;* ***வருவென் -*** *(நான்) திரும்பி வருவேன்;* ***மாநகர்வாய் -*** *பெரிய நகரின் கண்ணே;* ***இரு -*** *(அதுவரை) இருப்பாபாக;* ***என்றனை -*** *என்று கூறினாய்;* ***இன் அருள் இதுவோ -*** *உனது இனிய கருணை இப்படிப்பட்டதோ?* ***ஒருவென் -*** *தனித்துள்ள என்னுடைய;* ***தனி ஆவியை -*** *ஆதாரம் இல்லாத உயிரை;* ***உண்ணுதியோ -*** *உண்ணுகின்றாயோ.*

*அடைவாய் -அடையும் சமயத்தில் என்றும் கூறலாம். 'நான் கானகம் வந்தால் துன்புறுவேன் என்று என் வருகையை மறுத்த நீ இன்று நான் சிறையில் இருக்கும் போது வாராமல் உள்ளாய். உன் அருள் இப்படிப்பட்டதோ' என்றாள். உயிர் உண்ணுதல் - உயிரை வாட்டுதல். உருக்கி என் உயிரொடும் உண்டு போனவன். (கம்ப. 533) என்று முன்பு பேசுகிறாள். இறைவனுக்கு உயிருண்ணி என்னும் பெயர் உள்ளதை அறிக. (திருவாசகம்) தான் - உரையசை.* ***(7)***

***5235. 'பேணும் உணர்வே ! உயிரே ! பெரு நாள்***
***நாண் இன்றுஉழல்வீர்; தனி நாயகனைக்***
***காணும் துணையும்கழிவீர்அலிர்; நான்***
***பூணும் பழியோடுபொருந்துவதோ ?***

***பேணும் -*** *(என்னால்)பாதுகாக்கப் பெற்ற;* ***உணர்வே -*** *அறிவே;* ***உயிரே -*** *உயிரே (நீங்கள்);* ***பெருநாய் -*** *பலநாட்கள்;* ***நாண் இன்று -*** *வெட்கம் இல்லாமல் (என்னுடன்);* ***உழல்வீர் -*** *வருத்தமடைகிறீர்கள்;* ***தனி நாயகனை -*** *ஒப்பற்ற தலைவனான இராமபிரானை;* ***காணும் துணையும் -*** *யான் சந்திக்கும் வரை;* ***கழிவீர் அலீர் -*** *(என்னைவிட்டு) நீங்கமாட்டீர்கள்; (நீங்கள் நீங்காமையால்)* ***நான் -*** *யான்;* ***பூணும் -*** *ஏற்றுக்கொண்டுள்ள;* ***பழியோடு -*** *நிந்தையுடன்;* ***பொருந்துவதே -*** *ஒன்றுபட்டு வாழ்வதா ?.*

*உயிர்முதலானவைதன்னைவிட்டு நீங்காமையால் தனக்குப் பழி வந்துள்ளது என்று பிராட்டி கருதுகின்றார். புகழ் எனில் உயிரும் கொடுப்பது நல்லோரியல்பு. அது வாய்க்கப் பெறாது பேசியபேச்சு. இன்று என்னும் எச்சம் இன்றி என வந்தது. வினை எஞ்சு இகரம் உகரமாய் வரும் என்பது விதி. 'மனனே! பெருநாள், பிரியாது உழல்வாய் (கம்ப. 1163) என்று முன்பும் பிராட்டி பேசினாள்.* ***(8)***

***5236. 'முடியா முடி மன்னன் முடிந்திடவும்***
***படி ஏழும் நெடுந்துயர் பாவிடவும்,***
***மடியா நெறி வந்துவனம் புகுதும்***
***கொடியார் வரும் என்று, குலாவுவதோ ?'***

***முடியா -*** *இறப்பு இல்லாத;* ***முடிமன்னன் -*** *முடி சூடிய தசரதன்;* ***முடிந்திடவும் -*** *இறந்து படவும்;* ***படி ஏழும் -*** *ஏழு உலகங்களிலும்;* ***நெடுந்துயர் -*** *பெருந்துன்பம்;* ***பாவிடவும் -*** *பரவிப் பெருகவும்; (இவற்றால் மனம் இரங்காமல்)* ***மடியா நெறி வந்து -*** *முடிவற்ற வழியிலே வந்து;* ***வனம் புகுதும் -*** *காட்டிலே வாழப்புகுந்த;* ***கொடியார் -*** *கொடியவரான இராமன்;* ***வரும் என்று -*** *வந்து காண்பான் என்று (நீங்கள்);* ***குலாவுவதோ -*** *மகிழ்ச்சியடைவதா.*

*மன்னன்இறந்தும், மக்கள் கெஞ்சியும் இரங்காத மனம் என் பொருட்டா, இரங்கப் போகிறது என்கிறாள். தலைவி, ஊடலால் தலைவனைக் 'கொடியன்' என்று கூறுவாள். கடுவனும் அறியும் அக்கொடியோனையே (குறுந் - 26) தமிழ்த்தெய்வம் உ.வே.சா அங்கு வரைந்தவற்றைக் காண்க. கடியன், கொடியன் நெடியமால் என்று சடகோபர் பேசினார் (திருவாய் 5-3-5) செய்யும் எனும் வாய்பாட்டு முற்று பலர்பாலில் வாராது.*

*கொடியார் என்று பாடம் கொள்வது நேரிதன்று; 'கொடியான்' என்ற பாடம் சிறப்புடைத்து.* ***(9)***

*சீதை உயிர்விடத்துணிதல்.*

***5237. என்றுஎன்று, உயிர் விம்மி, இருந்து அழிவாள்,***
**மின் துன்னும்மருங்குல் விளங்கு இழையாள்;**
**'ஒன்று என்உயிர் உண்டு எனின், உண்டு இடர்; யான்**
**பொன்றும்பொழுதே, புகழ் பூணும்' எனா,**

***மின்துன்னும்** - மின்னலைஒத்திருக்கும்; **மருங்குல்** - இடையையும்; **விளங்கு இழையாள்** - விளங்கும் ஆபரணத்தையும் உடைய பிராட்டி; **என்று என்று** - என்று பலவாறு நினைந்து; **உயிர் விம்மி** - பெருமூச்சுவிட்டு; **அழிவாள்** - வருத்தம் அடைவாளாகிய பிராட்டி; **இருந்து** - உறுதிபெற்று; **ஒன்று** - என்னுடன் ஒன்றுபட்டுள்ள; **என் உயிர் உண்டு எனின்** - என் உயிர் இருந்தது என்றால்; **இடர்உண்டு** - துன்பம் உள்ளதாகும்; **யான்** - நான்;**பொன்றும் பொழுதே** - இறக்கும்சமயத்தில்தான்; **புகழ் பூணும்** - புகழ் என்னைச் சேரும்; **எனா** - என்று கருதி.*

*துன்னும் - உவமவாசகம் - வட நூலார் வேற்றுமை உருபை ஆர்த்தி என்றும் கூறுவர் (பிரயோக விவேகம்) இருந்து - வைராக்கியம் பெற்றது. இழையாள் அழிவாள் - அழிவாள் முற்றெச்சம். எனா - செயா எனும் வாய்பாட்டுச் சொல். என்று எனும் பொருள் தரும். 'இறந்தால் துன்பம் நீங்கும் என்று நினைப்பது முறையல்ல' என்பதைப் பிராட்டியின் மூலம் அறிய இவ்வண்ணம் பேசப்பெற்றது போலும்.* ***(10)***

**கலிவிருத்தம்**

***5238. 'பொறை இருந்து ஆற்றி, என் உயிரும் போற்றினேன்,***
**அறை இருங்கழலவற் காணும் ஆசையால்;**
**நிறை இரும் பல்பகல், நிருதர் நீள் நகர்ச்**
**சிறை இருந்தேனை,அப் புனிதன் தீண்டுமோ ?**

***அறை** - ஒலிக்கின்ற; **இருங்கழலவன்** - பெரிய வீரக்கழல் அணிந்த இராமபிரானை; **காணும் ஆசையால்** - காண வேண்டும் என்னும் விருப்பத்தால்; **பொறையிருந்து** - பொறுமையுடன் இருந்து; **ஆற்றி** - அமைதிப்படுத்தி; **என் உயிரும்** - என்னுடைய உயிரையும்; **போற்றினென்** - (நீங்காதபடி) பாதுகாத்தேன். (ஆனால்); **நிருதர் நீள் நகர்** - அரக்கர்களின் பெரிய நகரில்; **நிறை இரும் பல்பகல்** - மிகுதியான பல நாட்கள்; **சிறையிருந்தேனை** - சிறையிலிருந்த என்னை; **அப்புனிதன்** - அந்த ஒப்பற்ற இராமபிரான்; **தீண்டுமோ** - தொடுவானோ.*

*சிறையிருப்புஇழிவாகக் கருதப் பெற்றது ஆதலின் பிராட்டி இப்படிப் பேசினாள். ஆனால் பிராட்டி இருப்பால் சிறை புனிதம் பெற்றது. இராமனைக் காணும் ஆசையால் உயிருடன் இருப்பதாகப் பேசினாள். 'புண்ணிய மூர்த்தி தன்னைக் காணலாம் இன்னும்*

*என்னும் காதலால் இருந்தேன்' - (கம்ப. 7653.) என்று பிராட்டி பின்பு பேசுவாள் போற்றுதல் - காத்தல். போற்றின் அரியவை போற்றல் (திருக்குறள் 613) ஆற்றி - அமைதிப்படுத்தி. இக்கலிவிருத்தம் விளம் - விளம் - மா - கூவிளம் என்னும் 4 சீர்களைப் பெற்றுவரும். இவ்விருத்தம் இந்நூலில் 2177 முறை காட்சி தருகின்றது (மணிமலர். 76)* ***(11)***

***5239. 'உன்னினர்பிறர் என உணர்ந்தும், உய்ந்து, அவர்***
***சொன்னனசொன்னன செவியில் தூங்கவும்,***
***மன் உயிர்காத்து, இருங் காலம் வைகினேன்;***
***என்னின், வேறுஅரக்கியர், யாண்டையார்கொலோ ?***

***பிறர் -*** *அயலவர்;* ***உன்னினர் -*** *என்னை நினைத்து விட்டார்;* ***என உணர்ந்தும் -*** *என்று அறிந்தும்;* ***உய்ந்து -*** *(அதனால் இறவாமல்) பிழைத்து;* ***அவர் சொன்னன சொன்னன -*** *அயலவர் கூறிய இழிமொழிகள்;* ***செவியில் தூங்கவும் -*** *செவியிலே தங்கியிருக்கவும்;* ***மன்உயிர் காத்து -*** *நிலைபெற்ற உயிரைப் பாதுகாத்து;* ***இருங்காலம் -*** *நீண்ட காலம்;* ***வைகினேன் -*** *சிறையில் தங்கினேன்;* ***என்னின் -*** *என்னைப் போல;* ***வேறு -*** *மாறுபட்ட;* ***அரக்கியர் -*** *அரக்கிகள்;* ***யாண்டையார் -*** *எவ்விடத்துள்ளனர் ? தினைத் துணையாம்பழியும் சான்றோர்க்குப் பனைத் துணையாகும். ஆதலின் பிராட்டி இராவணன் தன்னை நினைக்க நேர்ந்தது குறித்து வருந்துகிறாள். பிறர் நெஞ்சு புகுதல் பத்தினிப் பெண்டிர்க்குத் தகாது என்று பேசியது வேறு. இவர்கள் புகக் கூடாது. பிறர் நினைப்பதால் பழிவரும் என்பது பிழை. யான் பிறர் கருதியும் உயிருடன் வாழ்கிறேன். யானே அரக்கி என்று பிராட்டி நினைக்கிறாள். கொல், ஓ - அசைகள்.* ***(12)***

***5240. 'சொல்பிரியாப் பழி சுமந்து தூங்குவேன்;***
***நல் பிறப்புஉடைமையும் நாணும் நன்றுஅரோ !***
***கற்புடைமடந்தையர், கதையுளோர்கள்தாம்,***
***இல் பிரிந்துஉய்ந்தவர் யாவர் யான் அலால் ?***

***பழிபிரியாச்சொல் -*** *நிந்தையிலிருந்து விலகாத சொற்களை;* ***சுமந்து -*** *தாங்கி;* ***தூங்குவென் -*** *கவலையற்றிருக்கும் என்னுடைய;* ***நல் -*** *நல்ல;* ***பிறப்புஉடைமையும் -*** *சிறந்த குடிப்பிறப்பாகிய செல்வமும்;* ***நாணும் -*** *நாணமும்;* ***நன்று -*** *மிகமிக நன்றாக உள்ளது;* ***கற்புடை மடந்தையர் -*** *கற்புடையபெண்களிலும்;* ***கதை உளோர்கள் -*** *வரலாற்றில் பேசப்படுபவர்களிலும்;* ***இல்பிரிந்து -*** *கணவனைப் பிரிந்து;* ***உய்ந்தவர் -*** *உயிருடன் வாழ்பவர்;* ***யான்அலால் -*** *என்னைத் தவிர;* ***யாவர் -*** *வேறு எவர் உள்ளனர்.*

*வாழும் பெண்கள்வரலாற்றுப் பெண்கள், கணவனைப் பிரிந்ததும் இறந்தனர். என்னைப் போல் எவர் உயிருடன் வாழ்ந்தனர். இல் - கணவன். புதுவழக்கு - இல்லாள் என்பதே மரபு. ஆனால் இல்லான் என்று சேக்கிழார் பேசினார் (காரைக்கால்) கவிச்சக்கரவர்த்தியும் அம்மரபைப் பேசுகின்றார் போலும். தாம் - உரை அசை.கதையுளோர்கள் கற்புடைமடந்தையர் என்று கூட்டிக் கதையிலே பேசப்படும் கற்புடைப் பெண்கள் என்று பொருள் கூறப்பெற்றது. கதையின் போக்கை ஆராய்ந்து முடிவு காணுதல் முறை. நன்று - இகழ்ச்சி. அரோ - அசை.* ***(13)***

***5241. ' "பிறர்மனை எய்திய பெண்ணைப் பேணுதல்***
***திறன் அலது"என்று, உயிர்க்கு இறைவன்***
***தீர்ந்தனன்;***
***புறன் அலர்,அவன் உற, போது போக்கி, யான்,***
***அறன் அலதுஇயற்றி, வேறு என் கொண்டு***
***ஆற்றுகேன் ?***

***பிறர்மனைஎய்திய** - அயலவர் வீட்டைஅடைந்த; **பெண்ணைப் பேணுதல்** - பெண்ணை விரும்புதல்; **திறன் அலது என்று** - ஒழுக்கம் அற்ற செயல் என்று; **உயிர்க்கு இறைவன்** - என் உயிரின் தலைவனான இராமபிரான்; **தீர்ந்தனன்** - என்னைக் கைவிட்டு விட்டான்; **புறன்** - வெளி உலகில்; **அவன் அலர் உற** - அந்த இராமபிரான் பழிச்சொல் பெற; **அறன் அலது இயற்றி** - இல்லற நெறிக்கு மாறுபட்டதைச் செய்து; **போது போக்கி** - (இறவாமல்) காலத்தைக் கழித்து (வாழும்); **யான்** - நான்; **வேறு** - தனியாக; **என் கொண்டு** - எதை ஆதாரமாகக் கொண்டு; **ஆற்றுகேன்** - உயிரை வைத்திருப்பேன்.*

*திறம் -ஒழுக்கம், மேன்மை, புகழ் என்னும் பொருள் தரும். அனைத்தும் ஈண்டு ஏற்கும். தீர்தல் - கைவிடுதல். போது போக்குதல் - குறிக்கோளின்றி இருத்தல். 'பொழுது போக்கிப் புறக்கணிப்பாரையும்' என்பர் நாவேந்தர். ஆற்றுதல் - பிழைத்தல் (உய்தல்) ஆற்றுதல், வலிதல், உய்தல் ஆகும் (பிங்கலம் 1828)* ***(14)***

***5242. 'எப் பொழுது, இப் பெரும் பழியின் எய்தினேன்,***
***அப் பொழுதே,உயிர் துறக்கும் ஆணையேன்;***
***ஒப்பு அரும் பெருமறு உலகம் ஓத, யான்,***
***துப்பு அழிந்துஉய்வது, துறக்கம் துன்னவோ ?***

***இப்பெரும்பழி** - இந்தப்பெரிய பழியை; **எப்பொழுது எய்தினேன்** - எப்போது அடைந்தேனோ; **அப்பொழுது** - அந்தச் சமயத்திலேயே; **உயிர்துறக்கும்** - உயிரை விட்டு விடும்; **ஆணையேன்** - ஆன்றோர் மரபை உடைய யான்; **உலகம்** - உலக மக்கள்; **ஒப்பரும் பெருமறு** - ஒப்பற்ற பெரிய நிந்தையை; **ஓத** - கூறிக்கொண்டிருக்க(கவலைப்படாத); **யான்** - நான்; **துப்பு அழிந்து உய்வது** - பெருமை அழிய வாழ்வது; **துறக்கம் துன்னவோ** - சுவர்க்கத்தை அடையவோ.*

*பழி -இலங்கையில் சிறையிருத்தல். துப்பு - பெருமை. ஆணை - ஆன்றோர் மரபு (கம்பராமாயண அகராதி) துறக்கம் துன்னவோ, எதிர்மறைத் தொனி. உயிர்துறத்தல் - உயிரை விட்டுவிடுதல். பழியின் - என்பதில் உள்ள 'இன்' அசை. கற்பினின் திரிதல் இன்றி (சிந்தாமணி 604) இனியர், 'இன்' அசை என்றார். உலகம் பெரும்பழி ஓத யான் உய்வது துறக்கம் துன்னவோ எனக்கூட்டுக.* ***(15)***

***5243. 'அன்பு அழிசிந்தையர் ஆய ஆடவர்,***
***வன் பழிசுமக்கினும் சுமக்க; வான் உயர்,***
***துன்பு அழி,பெரும் புகழ்க் குலத்துள் தோன்றினேன்;***
***என் பழிதுடைப்பவர், என்னின் யாவரே ?***

***அன்பு அழி*** *- அன்பைத்தவிர்த்த;* ***சிந்தையர் ஆய*** *- உள்ளத்தைப் பெற்றவரான;* ***ஆடவர்*** *- இராம லக்குவர்கள்;* ***வன்பழி*** *- கொடும்பழியை;* ***சுமக்கினும் சுமக்க*** *- சுமந்தாலும் சுமக்கட்டும் (கவலையுறேன்);* ***வான் உயர்*** *- வான்வரை உயர்ந்த;* ***துன்பு அழி*** *- பிறர் துன்பத்தைப் போக்கும்;* ***பெரும் புகழ்*** *- மிக்க புகழ் பெற்ற;* ***குலத்துள் தோன்றினேன்*** *- குலத்திலே பிறந்த யான்;* ***என்பழி*** *- என்னுடைய நிந்தையை;* ***துடைப்பவர்*** *- போக்குபவர்கள்;* ***என்னின்*** *- என்னைவிட;* ***யாவர்*** *- எவர் உள்ளார்.*

*அழிசிந்தையர் -தவிர்த்த உள்ளத்தை உடையவர். அழிதல் - தவிர்தல். என் இறப்பால் இராமலக்குவர்களுக்கும் பழிவரும். அதுபற்றிக் கவலேன் என்று வெறுத்துப் பேசுகிறாள். எம் குலம் பிறர் துன்பத்தைப் போக்கும். பிறரால் துன்பத்தைத் துடைத்தலை விரும்பாது. ஆதலால் யான் என் (துன்பத்தை) பழியைத் துடைத்துக் கொள்வேன் என்கிறாள். 'வானுயர் தோற்றம்' என்னும் திருக்குறளில் (குறள். 272) அழகர் வானுயர் தோற்றம் என்பது வான்தோய் குடி (நாலடி 142) என்றாற் போல இலக்கணை. கவிச்சக்கரவர்த்தி இதனை ஒற்றி, 'வான் உயர் .... குலம் என்றார்.*
***(16)***

***5244. 'வஞ்சனைமானின் பின் மன்னைப் போக்கி, என்***
***மஞ்சனை வைது,"பின் வழிக் கொள்வாய்" எனா.***
***நஞ்சு அனையான்அகம் புகுந்த நங்கை யான்***
***உய்ஞ்சனென்இருத்தலும், உலகம் கொள்ளுமோ ?***

***வஞ்சனைமானின் பின்*** *- பொய் மானுக்குப் பின்னே;* ***மன்னைப் போக்கி*** *- தலைவனான இராமபிரானை அனுப்பிவிட்டு;* ***என் மஞ்சனை*** *- என் மகனான இலக்குவனை;* ***வழிக்கொள்வாய் என*** *- இராமனைத் தேடிச் செல்க என்று;* ***பின்வைது*** *- பிறகு இழித்துப்பேசி;* ***நஞ்சு அனையான்*** *- விடம் போன்ற இராவணனின்;* ***அகம் புகுந்த*** *- வீட்டை அடைந்த;* ***நங்கை யான்*** *- பெண்ணாகிய யான்;* ***உய்ஞ்சனென்*** *- உயிர் பிழைத்து;* ***இருத்தலும்*** *- (இறவாமல்) இருப்பதை;* ***உலகம் கொள்ளுமோ*** *- உலகம் ஏற்றுக் கொள்ளுமா.*

*இயல்பாகநிகழ்ந்த நிகழ்ச்சியை உள்நோக்கம் உடையதாகப் பேசுவது உலக மரபு. மானின்பின் இராமனைப் போக்கியது, இலக்குவனை அனுப்பியது யாவும் சந்தர்ப்பத்தால் நேர்ந்தது. தான் செய்யாத குற்றத்தைச் செய்ததாகப் பிராட்டி கருதுகிறாள். இலக்குவன் பால் கொண்ட பாசம் மஞ்சன் என்பதால் புலனாகிறது மஞ்சன் - மகன். சுமித்திரை, சீதையைத் தாயாகக் கருதச் சொன்னது பிராட்டியின் நினைவில் உள்ளது. உயிர்த் தாயர்.... பூங்குழற் சீதை என்று அவள் பேசினாள் இங்கு உலகம் என்றது சான்றோரை. வஞ்சனைமான் - பொய்மான். மாயையும் பெண்ணும் பொய்யும் வஞ்சனை (பிங்கலம் 4014) வஞ்சகமுடைய மான் என்றும் கூறலாம்.*
***(17)***

***5245. 'வல் இயல்மறவர், தம் வடுவின் தீர்பவர்,***
***வெல்லினும்வெல்க, போர்; விளிந்து வீடுக;***
***இல் இயல்அறத்தை யான் இறந்து வாழ்ந்த பின்,***
***சொல்லிய என்பழி அவரைச் சுற்றுமோ ?***

***வல்இயல் மறவர்-*** *வலியஇயல்பை உடைய இராமலக்குவர்கள்;* ***தம் -*** *தம்முடைய;* ***வடுலின் தீர்பவர் -*** *பழிக்குற்றத்திலிருந்து நீங்குபவராய்ப்;* ***போர்வெல்லினும் வெல்லுக -*** *போரில் வென்றாலும் வெற்றியடையட்டும்; (அல்லது)* ***விளிந்து வீடுக -*** *இறந்து அழியட்டும்; (மகிழ்ச்சியோ துன்பமோ அடையேன்)* ***யான் -*** *நான்;* ***இல் இயல் அறத்தை -*** *இல்லறத்திற்கு அமைந் ததர்மத்தை;* ***இறந்து வாழ்ந்தபின் -*** *கடந்து வாழ்ந்த பிறகு;* ***சொல்லிய என்பழி-*** *உலகம் தூற்றிய எனக்குரிய நிந்தைகள்;* ***அவரைச் சுற்றுமோ -*** *இராமலக்குவர்களைச் சூழுமோ ?. யான் அறங்கடவாதுஇருப்பின் என்னை மீட்காத பழி அவரைச் சாரும் யான் அறங் கடந்ததால் என்பழி அவரைச் சாரா, என்றாள் பிராட்டி அறம் கடவாது இருந்தும் மனம் நொந்து இங்ஙனம் பேசினாள்.யான் இறப்பதால்அவர்க்குப் பழிவரின் இறப்பது தீது. பழிவராமையால் இறப்பது நன்று என்று கருதுகிறாள். என் பழி - எனக்குரிய பழி.* ***(18)***

## *5246.* ***'வருந்தல்இல் மானம், மா அனைய மாட்சியர்***
***பெருந் தவம்மடந்தையர் முன்பு, பேதையேன்,***
***"கருந் தனிமுகிலினைப் பிரிந்து, கள்வர் ஊர்***
***இருந்தவள்,இவள்" என, ஏச நிற்பெனோ ?***

***வருந்தல்இல் -*** *(உயிரைவிட) துன்பம் அடையாத;* ***மானம் மா அனைய-*** *மானமுடைமையின்கண் கவரிமானைப் போன்ற;* ***மாட்சியர் -*** *சிறப்பைப்பெற்ற;* ***பெருந்தவ மடந்தையர் முன்பு -*** *பெருந்தவமுடைய மகளிருக்குமுன்னர்;* ***பேதையேன் -*** *அறிவற்ற யான்;* ***கருந்தனி முகிலினை -*** *கரியஒப்பற்ற மேகம் போல்பவனை;* ***பிரிந்து -*** *பிரிந்து;* ***இவள் -*** *இநத்ச் சீதை;* ***கள்வர் ஊர் இருந்தவள் -*** *கள்வர்கள் வாழும் இலங்கையில் வாழ்ந்தவள்;* ***என -*** *என்று;* ***ஏச நிற்பெனோ -*** *பழித்துப்பேச அதுகேட்டு இருப்பேனோ ?*

*சிறுமயிர்நீப்பினும் வாழாத கவரிமான்போல் சிறு பழிச் சொல்லும் பொறாது பலர் இறப்பர். அவர்கள் முன் யான் பிறர் பழிக்க வாழேன் என்றாள். மயிர்நீப்பின் வாழாக்கவரிமா.. என்று பேசியது தமிழ் மறை (குறள்.969)* ***(19)***

## *5247.* ***'அற்புதன், அரக்கர்தம் வருக்கம் ஆசு அற,***
***வில் பணிகொண்டு, அருஞ் சிறையின் மீட்ட நாள்,***
***"இல் புகத் தக்கலை" என்னில், யானுடைக்***
***கற்பினை, எப்பரிசு இழைத்துக் காட்டுகேன் ?***

***அற்புதன் -*** *அதிசயப்பண்புற்ற இராமபிரான்;* ***அரக்கர் தம் வருக்கம் -*** *அரக்கர்களின் குலம்;* ***ஆசு அற -*** *பற்றுக்கோடு இல்லாமல்;* ***வில் பணி கொண்டு -*** *வில்லை ஏவல் கொண்டு;* ***அருஞ்சிறையின் -*** *கொடிய சிறையிலிருந்து;* ***மீட்ட நாள் -*** *மீட்கும் காலத்தில்;* ***இல்புகத் தக்கலை அல்லை -*** *என் வீட்டில் நுழையத் தகுதியுடையை அல்லை என்று;* ***என்னில் -*** *என்று கூறினால்;* ***யானுடைக் கற்பினை -*** *யான் கொண்டுள்ள கற்பை;* ***எப்பரிசு -*** *எந்த வகையால்;* ***இழைத்துக் காட்டுகேன் -*** *நிரூபித்துக் காண்பிப்பேன்.*

*ஆசு - பற்றுக்கோடு. குற்றம் என்றும் கூறலாம். பணி கொண்டு - ஏவல் கொண்டால். 'பாவியேனைப் பணி கொண்டாய்' என்பர்மணிவாசகர்."வானவரைப் பணிகொண்ட மருகாவோ" என்பாள் (கம்ப. 2842.) சூர்ப்பணகை - இராமன் வில்லின் பணி*

*கொண்டான் இழைத்தல் - நிரூபித்தல், பரிசு - தன்மை, மீட்ட நாள் - கால மயக்கு, எதிர்காலம் இறந்தகாலமாகப் பேசப்பட்டது. தக்கலை - முன்னிலை ஒருமை எதிர்மறை வினைமுற்று.* ***(20)***

*சீதை மாதவிப்பொதும்பர் அடைதல். அனுமன் தோன்றுதல்*

***5248. 'ஆதலான், இறத்தலே அறத்தின் ஆறு' எனா,***
***'சாதல்காப்பவரும் என் தவத்தின் சாம்பினார்;***
***ஈது அலாது இடமும்வேறு இல்லை' என்று, ஒரு***
***போது உலாம்மாதவிப் பொதும்பர் எய்தினாள்.***

*(பிராட்டி)*

***ஆதலான் -*** *ஆகையினாலே;* ***இறத்தலே -*** *யான் இறப்பது தான்;* ***அறத்தின் ஆறு -*** *அறத்தினால் காட்டப் பெற்ற வழியாகும்;* ***எனா -*** *என்று உறுதிப்படுத்திக் கொண்டு;* ***சாதல் காப்பவரும் -*** *யான் இறப்பதைத் தடுப்பவரும்;* ***என் தவத்தின் -*** *என்னுடைய தவத்தினாலே;* ***சாம்பினார் -*** *மயங்கியுள்ளனர்;* ***ஈது அலாது -*** *இந்தச் சமயம் தவிர;* ***வேறு இடமும் இல்லை -*** *வேறு சந்தர்ப்பம் இல்லை;* ***என்று -*** *என்று தனக்குள் கூறிக்கொண்டு;* ***உலாம் -*** *சூழ்ந்துள்ள;* ***போது -*** *மலர்களைப் பெற்ற;* ***ஒரு மாதவிப் பொதும்பர் -*** *ஒரு குருக்கத்திச் சோலையை;* ***எய்தினாள் -*** *அடைந்தாள்.*

*'ஆதலால்' என்னும் முடிபுநிலைச்சொல் மேலே போந்த (11-20) பத்துப் பாடலை நோக்க நின்றது. அப்பாடல்களில் இறப்பது நன்று' என்னும் முடிவுக்குக் காரணங்கள் நினைக்கப்பெற்றன. போது உலாம் - மலர் சூழ்ந்த. 'தூசு உலாய்க் கிடந்த அல்குல்' (சிந்தாமணி 550) அங்கு இனியர் உலாய் - சூழ்ந்து என்று குறித்தார்.*
***(21)***

***5249. கண்டனன்அனுமனும்; கருத்தும் எண்ணினான்;***
***கொண்டனன்துணுக்கம்; மெய் தீண்டக் கூசுவான்,***
***'அண்டர் நாயகன்அருள் தூதன் யான்' எனா,***
***தொண்டை வாய்மயிலினைத் தொழுது,***
***தோன்றினான்.***

***அனுமன் கண்டனன்-*** *அனுமன்பிராட்டியைப் பார்த்தான்;* ***கருத்தும் எண்ணினான் -*** *பிராட்டியின் நினைவை ஆராய்ந்து;(அதனால்)* ***துணுக்கம்கொண்டனன் -*** *திடுக்குற்றான்;* ***மெய்தீண்டக் கூசுவான் -*** *பிராட்டியின் மெய்யைத் தீண்ட அஞ்சிய அனுமன்;* ***அண்டர் நாயகன் -*** *தேவர்களின் தலைவனான இராமபிரானின்;* ***அருள் தூதன் யான் -*** *திருவருள் பெற்ற தூதன் யான்;* ***ஏனா -*** *என்றுகூறி;* ***தொண்டைவாய் -*** *கோவைக் கனிபோலும் வாயை உடைய;* ***மயிலினை -*** *மயில்போன்ற பிராட்டியை;* ***தொழுது -*** *வணங்கி;* ***தோன்றினான் -*** *வெளிப்பட்டான்.*

*பிராட்டியின்தற்கொலை முயற்சி அனுமனுக்குத் துணுக்கைத் தந்தது. அவள் செயலைத் தடுக்க வேண்டும் என்றால் மேனி தீண்ட வேண்டும். அது செய்ய அஞ்சிய அனுமன் 'யான் இராமதூதன்' என்றான். பிராட்டிக்கு இப்போது வேண்டுவது*

*இராமனின் அருள். அதன் மூலம்தான் அவள் முயற்சி தடை படும். ஆதலின், அருள் வடிவாக அனுமன் வந்தான். கூசுதல் - அஞ்சுதல். இலங்கைக் கோமானைக் கூச அடர்த்து (தேவாரம் 3 - 1936 - 8) வான்மீகத்தில் தன் சடையைக் கொண்டு தற்கொலை செய்ய முயன்றதாகப் பேசப் பெற்றது. தொண்டை - கோவை. ஆதொண்டை - முதல் குறைந்து நின்றது. தொண்டையங் கனிவாய் மென்சொல் சிற்றிடை (வேதாரணிய புராணம் விசுவா - 29)* ***(22)***

*அனுமன் தன்னைஇராமதூதன் என்று மொழிதல்.*

***5250. 'அடைந்தனென் அடியனேன், இராமன் ஆணையால்;***
***குடைந்து உலகுஅனைத்தையும் நாடும் கொட்பினால்***
***மிடைந்தவர்உலப்பு இலர்; தவத்தை மேவலால்,***
***மடந்தை ! நின்சேவடி வந்து நோக்கினேன்.***

***மடந்தை -*** *அம்மையே;* ***அடியனேன் -*** *அடியவனான யான்;* ***இராமன் ஆணையால் -*** *இராமபிரானின் கட்டளையால்;* ***அடைந்தனென் -*** *இங்கு வந்து சேர்ந்தேன்.* ***உலகு அனைத்தையும் -*** *எல்லா உலகங்களையும்;* ***குடைந்து நாடும் -*** *துருவி உன்னைத் தேடும்;* ***கொட்பினால் -*** *கருத்தினால்;* ***மிடைந்தவர் -*** *நெருங்கிப் புறப்பட்டவர்கள்;* ***உலப்பிலர் -*** *அளவற்றவர்கள்;* ***தவத்தை மேவலால் -*** *யான் தவப் பயனை அடைதலாலே;* ***நின் சேவடி -*** *உன்னுடைய திருவடியை;* ***வந்து நோக்கினேன் -*** *வந்து பார்த்தேன்.*

*கொட்பு -கருத்து. இராசமாதேவி கூட வைக்கும் கொட்பினள் ஆகி (மணிமேகலை 21 - 76 -77 தவப்பயன் தவம் என்று பேசப் பெற்றது. காரியம் காரணமாக உபசரிக்கப் பெற்றது. (திருக்குறள் - உரை - 201) குடைதல் - துருவுதல். தேடும் பொருள் பூமியில் இலை எனின் உலகைத் தோண்டிப் பார்ப்பர். அது சகரர் வரலாற்றில் அறிக.* ***(23)***

***5251. 'ஈண்டு நீஇருந்ததை, இடரின் வைகுறும்***
***ஆண்தகைஅறிந்திலன்; அதற்குக் காரணம்***
***வேண்டுமே ?அரக்கர்தம் வருக்கம் வேரொடு***
***மாண்டில; ஈதுஅலால், மாறு வேறு உண்டோ ?***

***நீ ஈண்டுஇருந்ததை -*** *நீ இங்கே இருப்பதை;* ***இடரின் வைகுறும் -*** *துன்பத்தில் கிடக்கின்ற;* ***ஆண்டகை அறிந்திலன் -*** *இராமபிரான் அறிந்தான் இல்லை;* ***அதற்கு -*** *அறிந்திலன் என்பதற்கு;* ***காரணம் வேண்டுமே ? -*** *காரணத்தைக் கூறவேண்டுமல்லவா;* ***அரக்கர் தம் வருக்கம் -*** *அரக்கர்களின் கூட்டம்;* ***வேரொடு மாண்டில -*** *அடியுடன் அழியவில்லை;* ***ஈது அலால் -*** *இதைத்தவிர;* ***மாறு வேறு -*** *மாறுபட்ட காரணம்;* ***உண்டோ -*** *உள்ளதோ.*

*அரக்கர்கள்அழியாமையால் இராமன் உன் செய்தியை அறிந்திலன் என்று அறிய வேண்டும். இப்பாடல், அறியாமைக்குக் காரணம் பேசாமல் அறிந்திலன் என்பதற்குக் காரணம் கூறுகிறது. காரணம் என்றது அனுமான உறுப்பாகிய ஏதுவை. புகையாகிய காரணத்தால் நெருப்பை அறிகிறோம். அரக்கர்கள் அழியாத காரணத்தால் அவன் சீதை நிலை அறிந்திலன் என்பதை அறிக.* ***(24)***

***5252. 'ஐயுறல்; உளது அடையாளம்; ஆரியன்***
***மெய் உறஉணர்த்திய உரையும் வேறு உள;***
***கை உறுநெல்லியங் கனியின் காண்டியால்;***
***நெய் உறு விளக்குஅனாய் ! நினையல் வேறு'***
***என்றான்.***

***நெய் உறு விளக்குஅனாய் !*** *- நெய் நிறைந்தவிளக்கைப் போன்றவளே;* ***ஐயுறல் -*** *சந்தேகம் கொள்ளாதே;* ***அடையாளம் உளது -*** *அடையாளப் பொருள் உள்ளது;* ***ஆரியன் -*** *இராமபிரான்;* ***மெய் உற உணர்த்திய உரையும் -*** *உண்மையுடன் அறிவுறுத்தியசொற்களும்;* ***வேறு உள -*** *தனியாக உள்ளன;* ***கைஉறு -*** *கையிலே உள்ள;* ***நெல்லியங்கனியின் -*** *நெல்லிக் கனியைப் போல;* ***காண்டி-*** *பார்;* ***வேறு நினையல் -*** *என்னை அயலாகக் கருதாதே;* ***என்றான் -*** *என்றான். அடையாளம்,இராமபிரான் வழங்கிய கணையாழி. என்னை அயலாகக் கருதாதே. நெய்விளக்கு, பிராட்டியின் தூய்மையை உணர்த்துகிறது. பிராட்டி, மாயமானால் ஏமாற்றப்பட்டதிலிருந்து எதையும் நம்பாள். இராவணன் துறவு வேடம் கண்டபின் எவரையும் நம்பாள். ஆகையால் ஐயுறல் என்றும் வேறு நினையல் என்றும் அனுமன் பேசினான். என்னை அருள் தூதனாக எண்ணுக. பகையாகக் கருதேல். விளக்கு உண்மைப் பொருளைக் காண்பிக்கும். பிறர்க்கு உணர்த்த வேண்டிய உனக்கு யான் உணர்த்த வேண்டுமா என்பது குறிப்பு. நெல்லி அங்கனி - அம் சாரியை. ஐயுறல், நினையல் - எதிர்மறை ஏவல் வினைமுற்று.* *(25)*

**அறுசீர்விருத்தம்**

***5253. என்று அவன்இறைஞ்ச நோக்கி, இரக்கமும்***
***முனிவும் எய்தி,***
***'நின்றவன்நிருதன் அல்லன்; நெறி நின்று,***
***பொறிகள் ஐந்தும்***
***வென்றவன்;அல்லனாகில், விண்ணவன் ஆக***
***வேண்டும்;***
***நன்று உணர்வுஉரையன்; தூயன்; நவை இலன்***
***போலும்!' என்னா,***

***என்று அவன்இறைஞ்ச -*** *என்று கூறி அனுமன்வணங்கி நிற்க;* ***நோக்கி -*** *அவனைப் பார்த்து (பிராட்டி);* ***இரக்கமும் முனிவும் எய்தி -*** *இரக்கத்தையும் கோபத்தையும் ஒருங்கே அடைந்து;* ***நின்றவன் -*** *எதிரே நிற்கும் இவன்;* ***நிருதன் அல்லன் -*** *அரக்கன் அல்லன்;* ***நெறி நின்று -*** *நல்ல ஒழுக்கத்திலே நிலைத்திருந்து;* ***பொறிகள் ஐந்தும் -*** *ஐந்து பொறிகளையும்;* ***வென்றவன் -*** *வென்றமுனிவன் ஆவான்;* ***அல்லன் ஆகில் -*** *முனிவன் அல்லன் என்றால்;* ***விண்ணவன் ஆதல் வேண்டும் -*** *தேவனாக இருக்க வேண்டும்;* ***உணர்வு நன்று உரையன் -*** *அறிவு நன்றாக உள்ள பேச்சினன்;* ***தூயன் -*** *தூய்மையானவன்;* ***நவை இலன் போலும் -*** *குற்றம் அற்றவன் போலும்;* ***என்னா -*** *என்று அறிந்து.*

*பிராட்டிக்குமுதலில் இரக்கமும் முனிவும் வந்தன. ஆனால் முனிவு மறைந்து விட்டது. இங்ஙனம் தோன்றி மறையும் உணர்வுகள் பல. முனிவு என்பதற்கு வருத்தம் என்னும் பொருள் கொள்ளலாம். முனிவு இகந்திருந்த முதுவாயிரவல' என்னும்*

*(சிறுபாண் 40)* பகுதியைப் பார்க்கவும். முனிவு, வருத்தம் என்று பேசப்பட்டது. பிராட்டி,அனுமனைப் புலன்கள்வென்றவன் என்றும் தேவன் என்றும் பேசியது அனுமனின் பெருமைக்குச் சிறந்த சான்று. அனுமன் சிறப்பை இராமன் பேசியதை இங்கே கருதுக. அவன் அனுமனின் விசுவருபம் கண்டபின் புகழ்ந்தான். பிராட்டியோ இயல்பான நிலையில் அனுமனை அறிந்து புகழ்ந்தாள். இராமன் 'மறைகளாலும், ஞானத்தாலும் கோட்படாப்பதம்' *(கம்ப. 3783.)* என்றான். விண்ணவன் என்றாள் பிராட்டி, விண்ணவன் என்பது தேவன் என்னும் இயல்பான பொருளும், விண் போன்று ஞானத்தால் அறியமுடியாத நுட்பமானவன் என்னும் ஆழ்ந்த பொருளும் கொண்டுள்ளது. பெருமான், அனுமனின் சொல்லைச் சிறப்பித்து விரிவாகப் பேசினான். இங்கே பிராட்டி 'உரையும் தூயன்' என்றாள். பெருமான் அனுமனை, நவைபடா ஞானத்தாலும் அறியப்படாதவன் என்றான் - பிராட்டி 'நவை இலன்' என்று பேசினாள். நெறி - ஒழுக்கம். பொறிகளை வெல்ல நெறியில் நிற்றல் வேண்டும். பொறிகளை வென்றவன் தேவன் என்பது குறிப்பு. போலும் என்பது அசை. இச்சொல் உறுதிப்படுத்தவியலாத இலேசான ஐயத்தையும் உணர்த்தும். வந்தாய் போல வாராதாய் என்னும் தொடர் கொண்டு அறிக. இதுவும் அடுத்த பாடல்களும் குளகம் *(26-27-28)* ***(26)***

***5254. 'அரக்கனேஆக; வேறு ஓர் அமரனே ஆக; அன்றிக்***
***குரக்கு இனத்துஒருவனேதான் ஆகுக; கொடுமை***
***ஆக;***
***இரக்கமே ஆக;வந்து, இங்கு, எம்பிரான் நாமம்***
***சொல்லி,***
***உருக்கினன்உணர்வை; தந்தான் உயிர்; இதின்***
***உதவி உண்டோ ?'***

*(இவன்)*

***அரக்கனே ஆக-*** *அரக்கனாகவே இருக்கட்டும் (அல்லது);* ***வேறு ஓர் -*** *அரக்கரினும் வேறுபட்ட ஒப்பற்ற;* ***அமரனே ஆக -*** *தேவனாகவே இருக்கட்டும்;* ***அன்றி -*** *அல்லாமல்;* ***குரக்கு இனத்து ஒருவனேதான் ஆகுக -*** *குரக்கு இனத்தைச் சார்ந்த ஒருவனாகவே இருக்கட்டும்; (இவன் பண்பு)* ***கொடுமை ஆக -*** *கொடுமை உடையதாகவே இருக்கட்டும்; (அல்லது);* ***இரக்கமே ஆக -*** *இரக்கம் உடையதாகவே இருக்கட்டும்; (இவன்)* ***இங்கு வந்து -*** *சிறைக்கு வந்து;* ***எம்பிரான் நாமம் சொல்லி -*** *எம்முடைய இராகவன் பெயரைக் கூறி;* ***உணர்வை உருக்கினன் -*** *என்னுடைய உணர்ச்சியை நெகிழச் செய்தான்;* ***உயிர் தந்தான் -*** *உயிரைவழங்கினான்;* ***இதின் உதவி உண்டோ -*** *இதைவிடச் சிறந்த உபகாரம் உள்ளதோ.*

*எம்பிரான்நாமம் சொல்லி உருக்கிய இவன் எவனாக இருப்பினும் கவலையில்லை. இவன் மதிக்கத்தக்கவன் என்று பிராட்டி பேசினாள். எம்பிரான் நாமம் பாலை நிலத்தில் தவிப்பார்க்குக் குளிர் சோலையாய் இருக்கும். திருமாலைப் பாடக்கேட்டு, மடக்கிளியைக் கைகூப்பி வணங்கினாள், என்பர் பரகாலர். சம்பந்தர் 'பிறையாளன் திருநாமம் பேசுக' என்று சிறையாரும் மடக்கிளிக்குப் பணிப்பர். எம்பிரான் நாமம் கூறுபவர், எந்த நிலையிலிருப்பினும் போற்றத் தக்கவர் என்க. ஆக - வியங்கோள். உருகினால் அன்றி உணர்வு வாராது. உணர்வு வந்தாலன்றி உயிர் அமைதி பெறாது*

*என்பது குறிப்பு. உணர்வு, உணர்ச்சி, அறிவு, ஆன்மா என்னும் பல பொருள் தரும் சொல் அனைத்தும் ஈண்டு ஏற்கும். இவரே அந்தாதியில் 'உயிர் உருக்கும்' என்று பேசுகிறார் (சடகோபரந்தாதி)* ***(27)***

***5255. எனநினைத்து, எய்த நோக்கி, 'இரங்கும் என்***
***உள்ளம்; கள்ளம்***
***மனன் அகத்துஉடையர் ஆய வஞ்சகர் மாற்றம்***
***அல்லன்;***
***நினைவுடைச்சொற்கள் கண்ணீர் நிலம் புக,***
***புலம்பா நின்றான்;***
***வினவுதற்கு உரியன்' என்னா, 'வீர ! நீ யாவன் ?'***
***என்றாள்.***

***எனநினைந்து** - என்றுகருதி; (அனுமனை) **எய்த நோக்கி** - செவ்வையாக நோக்கி (இவனால்); **என் உள்ளம் இரங்கும்** - என் மனம் இவனால் உருகும்; (இவன்) **மனன் அகத்து** - உள்ளத்தின் கண்ணே; **கள்ளம் உடையர் ஆய** - கபடத்தைப் பெற்றிருப்பவரான; **வஞ்சகர் மாற்றம் அல்லன்** - வஞ்சகர்களின் சொற்களை உடையவன் அல்லன்; **கண்ணீர் நிலம்புக** - கண்ணீரானது பூமியில் விழ; **நினைவு உடைச் சொற்கள்** - வருத்தத்தால் வந்த சொற்களை; **புலம்பா நின்றான்** - அழுகையுடன் பேசுகின்றான்; (ஆகையாலே) (இவன்) **வினவுதற்கு உரியன்** - பேசுவதற்குத் தகுதியுடையவன்; **என்னா** - என்று ஆராய்ந்தறிந்து (பிராட்டி); **வீர** - வீரனே; **நீ யாவன்** - நீ எவன்; **என்றாள்** - என்று வினவினாள்.*

*இவன் தோற்றம்என்னை உருக்கிற்று. இவன் பேச்சு வஞ்சகமின்மையை உணர்த்திற்று. இவன் புலம்புதல் இவன்தூய்மையைக் காட்டிற்று.ஆதலின் இவன் வினவுதற்கு உரியன் என்று பிராட்டி முடிவு கட்டினாள். தக்காரைக் காணும்போது மனம் உருகுதல் இயற்கை. அனுமன் இராமனைக் கண்டு உருகியதை நினைக்க. என்பு எனக்கு உருகுகின்றது என்று அவன் பேசினான். நினைவு - வருத்தம். 'நினைவின் அகன்றான்' என்னும் சிந்தாமணிக்கு (339) இனியர் வருத்தத்தின் நின்றும் நீங்கினான் என்று விளக்கினார். நினைவு - ஆலோசனை. அனுமன் ஆலோசித்துப் பேசினான் என்று பிராட்டி கருதியதாகவும் கொள்ளலாம். அனுமன் பேச்சு தற்கொலை கூடாது என்பதை நிரூபிக்கும் சொல்லாகவே உள்ளது. புலன்கள் வெல்வது வீரம் என்பது இந்தியத் தொல் மரபு ஆதலின் அனுமனை வீர என்று விளித்தாள்.* ***(28)***

*அனுமன் தன் வரலாறுகூறல்*

***5256. ஆய சொல்தலைமேல் கொண்ட அங்கையன்,***
***'அன்னை ! நின்னைத்***
***தூயவன் பிரிந்தபின்பு தேடிய துணைவன்,***
***தொல்லைக்***
***காய் கதிர்ச்செல்வன் மைந்தன், கவிக்குலம்***
***அவற்றுக்கு எல்லாம்***

***நாயகன், சுக்கிரீவன் என்று உளன், நவையின்***
***தீர்ந்தான்.***

*(பிராட்டி கூறிய)*

***ஆய சொல் -*** *அந்தச்சொல்லை;* ***தலைமேல் கொண்ட -*** *தலையின் மீது ஏற்றுக்கொண்ட;* ***அம்கையன் -*** *அழகிய கைகளைப் பெற்ற அனுமன்;* ***அன்னை ! -*** *தாயே;* ***நின்னை -*** *உன்னை;* ***தூயவன் பிரிந்த பின்பு -*** *இராமன் பிரிந்த பிறகு;* ***தேடிய துணைவன் -*** *தேடிப் பெற்ற நண்பன்;* ***தொல்லை -*** *பழமையான;* ***காய்கதிர்ச் செல்வன் மைந்தன் -*** *சூரியனின் புதல்வன்;* ***கவிக் குலம் அவற்றுக்கு எல்லாம் -*** *எல்லாக் குரங்குக் குலத்துக்கும்;* ***நாயகன் -*** *தலைவன்;* ***நவையில் தீர்ந்தான் -*** *குற்றங்களிலிருந்து விலகியுள்ள;* ***சுக்கிரீவன் என்று உளன் -*** *சுக்கிரீவன் என்று பேசப்பட்டு ஒருவன் உள்ளான்.*

*அனுமன், பிராட்டியின் சொல்லையும் தன்கையையும் தலைமேற் கொண்டான். சொல், அங்கை தலைமேற் கொண்டவன், என்க. விகுதி பிரித்துக் கூட்டுக. (இங்ஙனம் கூறுவதே ஏற்புடைத்து) பிராட்டியின்உள்ளத்தில்நம்பிக்கை தோன்றப் பேசப்பெற்றது. இராமபிரானுக்கு துணைவலி உண்டு என்று குறிப்பித்தபடி இராமன் தூயவன். நண்பன் நவையில் தீர்ந்தான் என்க. 'சான்றோர் சான்றோர் பாலர் ஆப! (புறநா. 218) தேடிய துணைவன் - உறவு கொண்ட தம்பி என்பது பழையவுரை. அனுமன் தன்னைக் கூறாமல் தலைவனைக் கூறியது அவனுடைய பண்பை விளக்குகிறது.* ***(29)***

***5257. 'மற்று, அவன் முன்னோன் வாலி; இராவணன் வலி***
***தன் வாலின்***
***இற்று உகக்கட்டி, எட்டுத் திசையினும் எழுந்து***
***பாய்ந்த***
***வெற்றியன்; தேவர் வேண்ட, வேலையை, விலங்கல்***
***மத்தில்***
***சுற்றிய நாகம்தேய, அமுது எழ, கடைந்த தோளான்.***

***அவன்முன்னோன் -*** *அந்தச்சுக்கிரீவனின் தமையன்;* ***வாலி -*** *வாலியாவான் (அவ்வாலி);* ***தன் வாலில் -*** *தன்னுடைய வாலிலே;* ***இராவணன் வலி -*** *இராவணன் ஆற்றல்;* ***இற்று உக கட்டி -*** *அழிந்து சிதைய வாலிலே கட்டி;* ***எட்டுத் திசையினும் -*** *எட்டுத்திசைகளிலும்;* ***எழுந்து பாய்ந்த வெற்றியன் -*** *நிமிர்ந்து பாய்ந்த வெற்றியுடையவன்;* ***தேவர் வேண்ட -*** *தேவர்கள் வேண்டிக் கொள்ள;* ***வேலையை -*** *பாற்கடலை;* ***விலங்கல் மத்தில் -*** *மந்தரகிரி என்னும் மத்தினாலே;* ***சுற்றிய நாகம் தேய -*** *சுற்றியிருக்கும் வாசுகி தேயும்படி;* ***அமுது எழ -*** *அமிர்தம் தோன்றும்படி;* ***கடைந்த தோளான் -*** *கடைந்த தோளையுடையவன்.*

*இப்பாடல்முற்றும் வாலியின் சிறப்பே பேசப்படுகிறது. வாலி இராவணனை வாலால் கட்டியது பல பகுதியில் பேசப்படும். வாலி கடல் கடைந்த செய்தியைச் சிவஞான முனிவர் 'கருங்கழல் வாலி ..... வாலமும் பணமும் இருங்கையில் பற்றி கடைந்தனன் புணரி' என்பர். (காஞ்சிப்புராணம் - மணிகண்டேச 14) தோள் - கை. தோள்*

*ஒரு நான்கும் சுடர்முகம் ஐந்தும் என்பர் பட்டினத்தார். (திருவிடை மருதூர் மும்மணிக் கோவை) மற்று - அசை.* ***(30)***

***5258. 'அன்னவன்தன்னை, உம் கோன், அம்பு ஒன்றால்***
***ஆவி வாங்கி,***
***பின்னவற்கு அரசுநல்கி, துணை எனப் பிடித்தான்;***
***எங்கள்***

***மன்னவன்தனக்கு,நாயேன், மந்திரத்து உள்ளேன்;***
***வானின்***
***நல் நெடுங்காலின் மைந்தன்; நாமமும் அனுமன்***
***என்பேன்.***

***உம்கோன் -*** *உமதுதலைவனான இராமபிரான்;* ***அம்பு ஒன்றால் -*** *ஒருஅம்பினாலே;* ***அன்னவன் தன்னை -*** *அந்த வாலியின்;* ***ஆவி வாங்கி -*** *உயிரைப் போக்கி;* ***பின்னவற்கு -*** *அவன் தம்பியாகிய சுக்கிரீவனுக்கு;* ***அரசு நல்கி -*** *அரச பதவியை வழங்கி (உன்னைத்தேட);* ***துணை எனப்பிடித்தான் -*** *உதவியாகப் பற்றிக் கொண்ட அவனை;* ***எங்கள் மன்னவன் தனக்கு -*** *எங்கள் அரசனாகிய சுக்கிரீவனுக்கு;* ***நாயேன் -*** *அடியேன்;* ***மந்திரத்து உள்ளேன் -*** *ஆலோசனைச் சபையில் உள்ளேன்;* ***வானின் -*** *ஆகாயத்திலிருந்து தோன்றிய;* ***நல்நெடுங் காலின் மைந்தன் -*** *நல்ல நீண்ட வாயு தேவனின் புதல்வன்;* ***நாமம் -*** *பெயர்;* ***அனுமன் என்பேன் -*** *அனுமன் என்று பேசப்படுவேன்.*

*வானிலிருந்துகாற்று தோன்றிற்று என்று பேசுவது இந்திய மரபு. ஆதலின் வானின் கால் என்று பேசப்பெற்றது. வான் - மூலப்பிரகிருதி இராமபிரான்பால், 'காற்றின் வேந்தற்கு அஞ்சனை வயிற்றின் வந்தேன். நாமமும் அனுமன் என்பேன்' (கம்ப. 3765.) என்று பேசினான். இராவணனை வென்ற வாலி இராமபிரானின் ஓர் அம்பால் இறந்தான். ஆதலால் இராவணனின் வலிமை கண்டு கலங்க வேண்டா என்பது குறிப்பு.* ***(31)***

***5259. 'எழுபது வெள்ளம் கொண்ட எண்ணன; உலகம்***
***எல்லாம்***
***தழுவி நின்றுஎடுப்ப; வேலை தனித் தனி கடக்கும்***
***தாள;***
***குழுவின, உம்கோன் செய்யக் குறித்தது குறிப்பின்***
***உன்னி,***
***வழு இல,செய்தற்கு ஒத்த - வானரம் வானின்***
***நீண்ட.***

***உம்கோன் -*** *உம்தலைவனான இராமபிரான்;* ***செய்யக் குறித்தது -*** *செய்யவேண்டும் என்று நினைத்ததை;* ***குறிப்பின் உன்னி -*** *குறிப்பால் ஆராய்ந்து;* ***வழு இல -*** *குற்றம் இல்லாமல்;* ***செய்தற்கு ஒத்த -*** *செய்வதற்கு உடன்பட்டுள்ள;* ***வானரம் -****குரங்குகள்;* ***எழுபதுவெள்ளம் கொண்ட -*** *எழுபது வெள்ளம் என்னும்;* ***எண்ணன -*** *தொகையைப் பெற்றன;* ***உலகம் எல்லாம் -*** *எல்லா உலகங்களையும்;* ***தழுவி நின்று எடுப்ப -***

*அணைத்து நின்று சுமப்பன;* **வேலை -** *கடல்களை;* **தனித்தனி -** *பிறர் உதவியில்லாமல் தனித்தனியாக;* **கடக்கும் தாள -** *தாண்டும் பாதங்களை உடையன;* **குழுவின -** *கூடியிருப்பன;* **வானின் நீண்ட -** *ஆகாயம் போல் பரவியுள்ளன.*

*எண்ணன, தாள,என்பன குறிப்பு முற்றுகள். அவை வானரம் என்னும் எழுவாய்க்கு உரியன. செய்தற்கு ஒத்த என்பதை எச்சம் ஆக்காமல் முற்றாக்கியும் கூறலாம். அப்போது ஒத்த என்பது ஒன்றுபட்டிருப்பன என்னும் பொருள் தரும். வெள்ளம் - பேரெண்.* ***(32)***

***5260. 'துப்பு உறுபரவை ஏழும், சூழ்ந்த பார் ஏழும், ஆழ்ந்த***
***ஒப்பு உறு நாகர்நாடும், உம்பர்நின்று இம்பர்காறும்,***
***இப் புறம் தேடிநின்னை எதிர்ந்திலஎன்னின்,***
***அண்டத்து***
***அப் புறம்போயும் தேட, அவதியின் அமைந்து போன.***

*(அவ்வானரங்கள்)*

**துப்புஉறு -** வலிமை *மிக்க;* **பரவை ஏழும் -** *ஏழு கடல்களும்;* **சூழ்ந்த-** *சூழ்ந்துள்ள;* **பார் ஏழும் -** *ஏழு உலகங்களையும்;* **ஆழ்ந்த -** *கீழேஆழ்ந்திருக்கும்;* **ஒப்புறு -** *அழகுமிக்க;* **நாகர் நாடும் -** *நாகர் வாழும் பாதாள உலகமும்;* **உம்பர் நின்று -** *சுவர்க்க நாடு முதல்;* **இம்பர் காறும் -** *இவ்உலகம் வரையிலும்;* **இப்புறம் தேடி -** *இவ்வண்டத்திலே தேடிவிட்டு;* **நின்னை எதிர்ந்தில என்னின் -** *நின்னைக் காணவில்லை என்றால்;* **அண்டத்து அப்புறம் போயும் தேட -** *இந்த அண்டத்துக்கு அப்பாலும் தேட;* **அவதியின் -** *காலக் கெடுவுடன்;* **அமைந்து போன -** *உடன்பட்டுச் சென்றுள்ளன.*

*எல்லாஉலகங்களையும் கால எல்லைக்குள் அவை தேடி முடிக்கும். அவதி - காலஎல்லை (காலக்கெடு) வானரங்கள் அண்டங் கடந்து செல்லும் ஆற்றல் வாய்ந்தவை என்பது குறிப்பு. இராவணன் பேசிய பேச்சுக்கு நச்சுமுறியாக அனுமன் வழங்கியவை அனைத்தும் பிராட்டிக்கு நம்பிக்கை ஊட்டுபவை. துப்பு - பவளம் என்றும் கூறலாம். ஒப்புற - அழகுமிக்க. ஒப்புடை ஒருவனை உருவழிய.... விழித்தவனே (சம்பந்தர் 262 -7 ) பார் என்றது கடல்களால் சூழப்பெற்ற நாவலந்தீவு முதலானவற்றை, நாடுகள் யாவும் கடலாற் சூழப் பெற்றவை அறிக. தீவுகளின் பெயரை, தீவு ஏழ் அவைதாம் நாவல், இறலி, குசை, கிரௌஞ்சம்,புட்கரம், தெங்கு,கமுகாம் என்னக் கழறப் படுமே என்று பொருட்டொகை நிகண்டு பேசும் (தெங்கு - தெங்கம் தீவு; கமுகு - இலவந்தீவு) வானரவீரர்களுக்கு ஒருமாதத்திற்குள் பிராட்டியைத் தேடிவர ஆணையிடப் பெற்றது. 'ஒருமதி முற்றுறாத முன் முற்றுதிர் இவ்விடை' (கம்ப. 4457) எதிர்தல் - சந்தித்தல் (பார்த்தல்)* ***(33)***

***5261. 'புன் தொழில் அரக்கன் கொண்டு போந்த நாள்,***
***பொதிந்து தூசில்***
***குன்றின் எம்மருங்கின் இட்ட அணிகலக்***
***குறியினாலே,***
***வென்றியான்அடியேன்தன்னை வேறு கொண்டு***

***இருந்து கூறி,***
***“தென் திசைச்சேறி” என்றான்; அவன் அருள்***
***சிதைவது ஆமோ ?***

***புன்தொழில்அரக்கன் -*** *அற்பத் தொழில்புரியும் இராவணன்;* ***கொண்டு போந்த நாள் -*** *உன்னைக் கவர்ந்து சென்ற காலத்தில்;* ***எம்குன்றின் மருங்கில் -*** *எம்முடைய மலையின் பக்கத்தில்;* ***தூசில் பொதிந்து -*** *ஆடையில் முடிந்து வைத்து;* ***இட்ட -*** *உன்னால் எறியப்பட்ட;* ***அணிகலக் குறியினாலே -*** *ஆபரணங்களின் அடையாளத்தால்;* ***வென்றியான்-*** *வெற்றியே வடிவமான இராமபிரான்;* ***அடியேன் தன்னை -*** *அடியவனானஎன்னை;* ***வேறு இருந்து கொண்டு -*** *தனியாக அமர்ந்து கொண்டு;* ***கூறி -*** *சில அடையாளங்களைச் சொல்லி (என்னை);* ***தென்திசை சேறி என்றான் -*** *நீதெற்குத் திசைக்குப்போ என்று கூறினான்;* ***அவன் அருள் சிதைவதாமோ -*** *அவனுடைய அருள் பழுதுபடுமா.*

*பொதிந்து இட்டஅணிகலம் என்க. இராமன் தென்திசை செல்க என்றான். அதனால் உன்னைக் கண்டேன். இதற்கு காரணம் அவன் அருள். அவன் அருளாலே அவன் தாள் வணங்கும் பேறு கிட்டிற்று. செல்+தி-சேறி. முதல் நிலை திரிந்த தொழிற்பெயர். பிராட்டி அணிகளைப்பொதிந்து இட்டது, கலங்காண்படலத்தில் ‘இழை பொதிந்து இட்டனள்’ (கம்ப. 3903) என்று கூறப்பெற்றது. ‘சீதையை.... அரக்கன் வவ்விய ஞான்றை, நிலம் சேர் மதரணி கண்ட குரங்கின்’ என்று புறப்பாட்டு விளம்பிற்று (புறம் 378) பிராட்டி தென்திசையில் உள்ளாள் என்பதை அணிகலன் காண்பித்தது. புன்மை புரிதலைத் தொழிலாகப் பெற்றவன் இராவணன் என்க. ‘யான் இழைத்திட இல் இழந்து இன்னுயிர் சுமக்கும் மானுடன்’ (கம்ப. 6179) என்று அவன் பேசியதை உலகம் அறியும்.* ***(34)***

***5262. கொற்றவற்கு, ஆண்டு, காட்டிக் கொடுத்த போது***
***அடுத்த தன்மை,***
***பெற்றியின்உணர்தற்பாற்றோ ? உயிர் நிலை பிறிதும்***
***உண்டோ ?***
***இற்றை நாள்அளவும், அன்னாய் ! அன்று நீ இழித்து***
***நீத்த***
***மற்றை நல்அணிகள்காண், உன் மங்கலம் காத்த***
***மன்னோ !***

***அன்னாய் -*** *தாயே;* ***கொற்றவற்கு -*** *இராமபிரானுக்கு;* ***ஆண்டு -*** *கிட்கிந்தையில்;* ***காட்டி -*** *(நீ இட்ட அணிகளை) காண்பித்து;* ***கொடுத்தபோது -*** *(யாங்கள், பெருமானிடம்) வழங்கிய போது;* ***அடுத்த தன்மை -*** *(இராமனைச்) சார்ந்த மெய்ப்பாட்டை;* ***பெற்றியின் -*** *யான் கூறும் இயல்பாலே;* ***உணர்தற் பாற்றோ -*** *அறிந்து கொள்ளும் எளிமையானதோ;* ***உயிர்நிலை -*** *உயிரை நிலையில் வைக்க (அணிகள் தவிர);* ***பிறிதும் -*** *மற்றொரு பொருளும்;* ***உண்டோ -*** *உள்ளதா;* ***அன்று -*** *(இராவணன் உன்னை) கவர்ந்து சென்ற அன்று;* ***நீ இழித்து நீத்த -*** *நீ கழற்றிப் போட்ட;* ***மற்றை நல் அணிகள் -*** *நல்ல பிற ஆபரணங்கள்;* ***இற்றை நாள் அளவும் -*** *இன்று வரை;* ***உன் மங்கலம் -*** *உன்னுடைய மங்கலநாணை;* ***காத்த காண் -*** *பாதுகாத்தன, அறிவாயாக.*

*உலகில் மங்கலநாண் மற்றைய அணிகலன்களைப் பாதுகாக்கும் இங்கு மற்றைய அணிகலன்கள் மங்கல நாணைப் பாதுகாத்தன. பெருமான் அணிகலன்களைக் கண்டபோது அடைந்த மெய்ப்பாட்டைக் கூறி, முற்றும் கூற இயலாதபடியாலே யாது செப்புகேன் என்றார் கவிச்சக்கரவர்த்தி. அதுவே, 'உணர்த்தற்பாற்றோ' என்று பேசப்பெற்றது. மங்கலம், என்றது மங்கல நாணை. 'மங்கலக் கழுத்துக்கெல்லாம்... அணி' என்று முன்பு பேசப்பெற்றது. (கம்ப. 1123.) காண், மன், ஒ, அசைகள்.*
***(35)***

***5263. 'ஆயவன் தன்மை நிற்க; அங்கதன், வாலி மைந்தன்,***
***ஏயவன் தென்பால் வெள்ளம் இரண்டினோடு***
***எழுந்து சேனை***
***மேயின படர்ந்துதீர, அனையவன் விடுத்தான்***
***என்னை,***
***பாய் புனல் இலங்கை மூதூர்க்கு' என்றனன்,***
***பழியை வென்றான்.***

***ஆயவன் தன்மைநிற்க** - அந்த இராமனின் தன்மை இப்படியிருக்க; **தென்பால்** - தெற்குத் திசையில்; **ஏயவன்** - (சுக்கிரீவனால்) ஏவப் பெற்றவனும்; **வாலி மைந்தன்** - வாலியின் புதல்வனும் (ஆகிய); **அங்கதன்** - அங்கதன் என்பவன்; **இரண்டு வெள்ளம் சேனையோடு** - இரண்டு வெள்ளஞ்சேனையுடன்; **எழுந்து படர்ந்து** - எழுச்சி பெற்றுப் பரவி; **மேயின தீர** - வந்தவைகள் முடிவு போகச் செல்ல; **அனையவன்** - அந்த அங்கதன்; **பாய்திரை** - பரவிய அலைகளால் சூழப்பெற்ற; **இலங்கை மூதூர்க்கு** - இலங்கைக்கு; **என்னை விடுத்தான்** - என்னை அனுப்பினான்; **என்றனன்** - என்று கூறினான் (கூறியவன்); **பழியை வென்றான்** - பழிக்கப்படும் புலன்களை வென்ற அனுமன்.*
***(36)***

***5264. எய்து அவன்உரைத்தலோடும், எழுந்து, பேர்***
***உவகை ஏற,***
***வெய்து உறஒடுங்கும் மேனி வான் உற விம்மி***
***ஓங்க,***
***'உய்தல் வந்துஉற்றதோ ?' என்று அருவி நீர் ஒழுகு***
***கண்ணாள்,***
***'ஐய ! சொல், ஐயன் மேனி எப்படிக்கு அறிதி ?'***
***என்றாள்.***

***அருவி** - அருவியைப் போல; **நீர் ஒழுகும் கண்ணாள்** - கண்ணீர் சிந்தும் கண்களையுடைய பிராட்டி; **எய்து அவன்** - தூதனாக வந்த அனுமன்; **உரைத்த லோடும்** - (பெருமான் அன்பை) உரைத்தவுடன்; **எழுந்த** - தோன்றிய; **பேர் உவகை ஏற** - பெருமகிழ்ச்சி கரைகடக்கவும்; **வெய்து உற** - துன்பம் அதிகரித்ததால்; **ஒடுங்கும் மேனி** - இளைத்த திருமேனி; **வானுற** - நன்றாக; **விம்மி ஓங்க** - பூரித்துச் சிறப்பு அடையவும்; **உய்தல் வந்து உற்றதோ** - தப்பிப் பிழைத்தல் என்பால் வந்துவிட்டதோ; **என்று** - என்று கூறி (அனுமனை நோக்கி); **ஐயன் மேனி** - இராமபிரானின் திருமேனி; **எப்படிக்கு** - எந்தவிதமாக; **அறிதி** - அறிந்துள்ளாய்; **சொல் என்றாள்** - கூறுக என்றாள்.*

*உள்ளத்தில்உவகை மிகுந்ததால் உடல் பூரித்தது. துன்பத்தால் ஒடுங்கிய மேனி விம்மி வீங்கிற்று. 'மென்மருங்குல் போல் வேறுள அங்கமும் மெலிந்தாள்' என்று முன்பு பேசப்பெற்றது. 'மெலிவு அகல ஓங்கினாள்' என்றும் 'உடல் தடித்தாள் வேறு ஒருத்தி ஒக்கின்றாள்'என்றும் பேசப்பெறும்(கம்ப. 5071, 7719, 7720.) வான் உற - நன்றாக. 'வயவர் தந்த வான்கேழ்நிதியம்' (சிறுபாண் 249) பிராட்டி மகிழ்ச்சியால் கண்ணீர் சிந்தினாள். அழுத கண்ணீர் கால் அலைந்து ஒழுகிற்று, என்னும் சிந்தாமணிக்கு இனியர் 'உவகைக் கலுழ்ச்சி' என்றார். இதுவும் அது. இதனை நல்லார் 'உவகைக் கண்ணீர்' என்பர் (சிலம்பு 5.237-239) உற்றதோ என்பதில் உள்ள ஓகாரம் ஐயத்தின் முடிவில் தோன்றும் நம்பிக்கையை உணர்த்துவது படி - தன்மை, படித்து - தன்மை உடையது. படி - உவமம் என்று கூறலாம். **(37)***

***5265. 'படி எடுத்துஉரைத்துக் காட்டும் படித்து அன்று,***
***படிவம்; பண்பின்***
***முடிவு உள உவமம்எல்லாம் இலக்கணம் ஒழியும்,***
***முன்னர்;***
***துடிஇடை !அடையாளத்தின் தொடர்வையே***
***தொடர்தி' என்னா,***
***அடி முதல்முடியின்காறும், அறிவுற அனுமன்***
***சொல்வான்.***

***துடி இடை !*** - உடுக்குப்போலும் இடையுடையவளே; ***படிவம் -*** இராமபிரானின் திருமேனி; ***படி உரைத்து -*** உவமானத்தைக் கூறி; ***எடுத்துக்காட்டும் -*** (பொதுத்தன்மையை) விளக்கிக்கூறும் (அளவுக்கு); ***படித்து அன்று -*** (எளிய) இயல்புடையதன்று; ***உவமம் எல்லாம் -*** எல்லா உவமைக்கும்; ***பண்பின் -*** பொதுத்தன்மையாகிய பண்பில்; ***முடிவு உள -*** எல்லைகள் உள்ளன; ***முன்னர் இலக்கணம் ஒழியும் -*** முற்பட்டு இலக்கணத்தால் நிரம்பாது நீங்கும்; (உவமையை நோக்காமல்) ***அடையாளத்தின் -*** யான்கூறும் அடையாளங்களின்; ***தொடர்வையே -*** தொடர்ச்சியையே; ***தொடர்தி -*** பின்பற்றி உணர்க; ***என்னா -*** என்று; ***அடிமுதல் -*** திருவடிமுதல்; ***முடியின்காறும் -*** திருமுடி முடிய; ***அறிவுற -*** அறிந்து கொள்ளும்படி; ***அனுமன் சொல்வான் -*** அனுமன் கூறத் தொடங்கினான்.

*பத்துமதியிருந்தால்தான் விரல் நகத்துக்கு ஒப்பாம் என்றான். மதி ஒன்றே; விரல் நகம் பத்து. இங்ஙனம் உவமை அளவுபடுதலைப் பேசினான். இதுவே உவமைக்கெல்லாம் முடிவுள என்று கூறப் பெற்றது. பிறவும் இப்படியே கருதுக. பெருமான் அழகு என்னால் சொல்லப்படாது. சொன்னது கொண்டு தேவரீர் அறிந்தபடி அளவிட்டுக் கொள்ளும் என்பது பழையவுரை (அடை - பதி)*
***(38)கலி விருத்தம்***

***5266. ' "சேயிதழ்த் தாமரை" என்று, சேண் உளோர்***
***ஏயினர்; அதன்துணை எளியது இல்லையால்,***
***நாயகன் திருஅடிகுறித்து நாட்டுறின்;***
***பாய் திரைப்பவளமும் குவளைப் பண்பிற்றால் !***

*(ஐயன் திருவடி)*

***சேயிதழ் தாமரைஎன்று*** -சிவந்த இதழ்களைப் பெற்ற தாமரை மலர் என்று; ***சேண் உளோர் -*** தூரத்திலிருப்பவர் (திருவடியைப் பாராதவர்); ***ஏயினர் -*** ஒப்பிட்டுப் பேசினர்; ***அதன் துணை -*** அத்தாமரை அளவுக்கு; ***எளியது இல்லை -*** எளிமை உடையது அன்று; ***நாயகன் -*** இராமபிரான்; ***திருவடி குறித்து -*** திருவடியை எண்ணி (அதற்கேற்ப); ***நாட்டுறின் -*** உவமையைக் கூறத் தொடங்கினால்; ***பாய்திரை -*** பரவிய அலையுடன் கூடிய கடலில் உள்ள; ***பவளமும் -*** பவளம் கூட; ***குவளைப் பண்பிற்றாம் -*** குவளையின் பண்பை உடையதாம்.

*சேண் உளோர் -தூரத்திலிருப்பவர் (பாதத்தைப் பாராதவர்) தனித்திருக்கும்போது சிவந்துள்ள பவளம் இராமபிரான் திருவடி அணுகும்போது குவளைபோல் கரியநிறம் பெறும். குவளைப் பண்பினாம் - எனப்பாடங்கொண்டு தாமரையைத் திருவடிக்கு உவமையாக்குவது பவளத்திற்குக் குவளையை உவமை கூறியதற்கு ஒப்பாம் என்று பொருள். பாதாதி கேசவர்ணனை மேற்கொள்ளப்பட்டது. இராமன் பரம் பொருள் என்பது குறிப்பு.* ***(39)***

***5267. 'தளம் கெழு கற்பக முகிழும், தண் துறை***
***இளங் கொடிப்பவளமும் கிடக்க; என் அவை ?***
***துளங்கு ஒளிவிரற்கு எதிர், உதிக்கும் சூரியன்***
***இளங் கதிர்ஒக்கினும் ஒக்கும் - ஏந்திழாய் !***

***ஏந்திழாய் -*** ஆபரணங்களையுடையவளே; (விரலுக்குச் சமம் என்று பேசப்படும்) ***தளம்கெழு -*** இதழ்களைப் பெற்றுள்ள; ***கற்பக முகிழும் -*** கற் பகஅரும்பும்; ***தண்துறை -*** குளிர்ந்த கடலின் துறைகளில் உள்ள; ***இளங்கொடிப்பவளமும் -*** இளைய பவளக் கொடியும்; ***கிடக்க -*** கிடக்கட்டும்; ***அவை -*** அந்த முகிழும் பவளமும்; ***என் -*** என்ன பொருள்; ***துளங்கு ஒளி -*** அசையும் ஒளியுடன் கூடிய; ***விரற்கு எதிர் -*** பெருமானின் திருவிரலுக்கு,எதிராக; ***உதிக்கும்சூரியன் -*** தோன்றும் நிலையில் உள்ள சூரியனின்; ***இளங்கதிர் -*** இளமைப் பொலிவுடைய கதிர்கள்; ***ஒக்கினும் ஒக்கும் -*** ஒத்தாலும் ஒத்திருக்கும்.

*கிடக்க, என்,என்பவை இகழ்ச்சியைக் குறிக்கும். சேனை கிடக்கிடு' என்று குகன் பேசினான். ஏஎ, சீச்சீ எல்என் இகழ் மொழி' என்று பிங்கலம் பேசும் (பிங்கலம் 2105) விரல் பவளம்... ஒப்பாம் என்று உவமான சங்கிரகம் பேசும் (74) ஒக்கினும் ஒக்கும் - ஒத்திருக்கும். இயங்கலும் இயங்கும் மயங்கலும் மயங்கும் என்பது போல் வந்தது. (சிலம்பு 22 - 154) ஏந்திழை, பெண் என்னும் பொருள் தந்தது. புனையா ஓவியம் போன்ற மணிமேகலையைச் சாத்தனார் அணியிழை, ஆயிழை என்றார். இம்மரபு உணராது இடர்ப்பட்டார் உளர். விரல் இளங்கதிர் என்றதனால் திருவடி சூரியன் என்க. நம்மாழ்வார் 'திருப்பாதம்' இளநாயிறு இரண்டு போல் ஒளி உள்ளவா (திருவாய் 8-5-5) என்றார். ஆழ்வார் நினைந்ததைக் கம்பர் வரைந்தார்.* ***(40)***

***5268. 'சிறியவும் பெரியவும் ஆகி, திங்களோ,***
***மறு இல பத்துஉளஅல்ல; மற்று இனி;***
***எறி சுடர்வயிரமோ திரட்சி எய்தில;***
***அறிகிலென்,உகிர்க்கு, யான், உவமம் ஆவன.***

***உகிர்க்கு*** - எம்பெருமான் விரல் நகத்துக்கு; ***திங்கள்*** - சந்திரன்; ***சிறியவும் பெரியவும் ஆகி*** - சிறிய வடிவத்தையும் பெரிய வடிவத்தையும் உடையதாய்; ***மறுவில*** - களங்கமில்லாதவையாய்; ***பத்து உள வல்ல*** - பத்து இல்லை; ***சுடர் எறி*** - ஒளியை வீசும்; ***வயிரம்*** - வயிரங்கள்; ***திரட்சிஎய்தில*** - உருட்சியைப் பெறவில்லை; (ஆதலால்) ***யான் இனி*** - யான் மேலும்; ***உவமம் ஆவன*** - உவமமாகப் பொருந்தக் கூடியனவற்றைச்; ***அறிகிலேன்*** - சிந்திக்கும் ஆற்றல் உடையேன் அல்லன்.

*சந்திரன்,சிறிய வடிவத்தையும், பெரியவடிவத்தையும் பெற்றதாய்ப் பத்து இல்லை. வயிரங்கள் திரட்சியைப் பெறவில்லை. பலவாக இல்லாததால் திங்களும் திரட்சி எய்தாமையால் வயிரமும் உவமையாகும் பேற்றை இழந்தன. உவமம் - ஒப்பு. மற்று - அசை. திங்களோ வயிரமோ - 'ஓ' அசை நிலை. திருவே கொலோ (சிந்தா 639) என்பதில் உள்ள ஓகாரம் அசை என்றார், இனியர். அறிகிலேன் இதில் உள்ள இல் ஆற்றல் உணர்த்தும் இடைச்சொல் ஆழ்வார் ஐம்புலன் வெல்லகில்லேன் என்றார் (திருவாய் 4-7-9)* ***(41)***

### *5269. 'பொருந்தில நிலனொடு, போந்து கானிடை*
### *வருந்தினஎனின்,அது நூலை மாறு கொண்டு*
### *இருந்தது;நின்றது, புவனம் யாவையும்*
### *ஒருங்கு உடன்புணர; அஃது உரைக்கற்பாலதோ ?*

***நிலனொடுபொருந்தில*** - அயோத்தியில்பூமியைச் சேராதிருந்ததும்; ***கானிடைப் போந்து*** - பிறகு காட்டின்கண் வந்து; ***வருந்தின*** - வருத்தம் அடைந்தன; ***எனின்*** - என்றாலும்; ***அது*** - அப்புறவடி; ***நூலை மாறு கொண்டிருந்தது*** - உடற்கூற்று இலக்கண நூலைக் கடந்து மிக அழகாக இருந்தது; ***புவனம் யாவையும்*** - எல்லா உலகங்களையும்; ***ஒருங்கு*** - ஒரே சமயத்தில்; ***உடன் புணர நின்றது*** - ஒன்றுபட்டு சேர நின்ற திருவடிகள்; ***உரைக்கற் பாலதோ*** - பிறர்க்கு உவமையால் உணர்த்தும் அளவு எளிமை உடையதோ.

*எங்கும்நிறைந்துள்ள பொருட்கு வருதலும் போதலும் இல்லையன்றோ. பூதங்கள் தோறும் நின்றாய் என்றும், போக்கிலன் வரவிலன் என்றும் பேசப் பெற்றதை அறிக. (திருவாசகம்) புத்தகத்துக்கு ஒப்பாகாது நின்றது என்றும் பொருள் உரைப்பர். பாதத்தைப் புத்தகத்துக்கு (சுவடி) ஒப்புமையாக்கும் மரபு உண்டு. புத்தகம் ஆமை புறவடி ஒப்பாம் (உவமான 13) என்றும், புற அடி நன்கு அடைந்த புத்தகம் (இரத்தின 23) என்றும் பேசுவதை நினைவு கூர்க.* ***(42)***

### *5270. 'தாங்கு அணைப் பணிலமும் வளையும் தாங்கு நீர்*
### *வீங்கு அணைப்பணிமிசை மேகம் அன்னவன்*
### *பூங் கணைக்காற்குஒரு பரிசுதான் பொரு,*
### *ஆம் கணைக்குஆவமோ, ஆவது ? அன்னையே !*

***அன்னையே !*** - தாயே; ***வீங்கு*** - பூரிக்கின்ற; ***பணி அணை மிசை*** - பாம்புப் படுக்கை மேலே; ***தாங்கு அணை*** - நீரைத் தடுக்கும் கரையின் கண் உள்ள; ***பணிலமும்*** - சங்கையும்; ***வளையும்*** - சக்கரத்தையும்; ***தாங்கும்*** - ஏந்திய; ***நீர்மேகம் அன்னவன்*** - நீர் சுரக்கும் மேகம் போலும் இராமபிரானின்; ***பூங்கணைக் காற்கு*** - அழகிய

*கணைக்காலுக்கு;* ***கணைக்கு ஆம் ஆவமோ -*** *அம்புகட்கு இருப்பிடமாகிய தூணியோ;* ***ஒரு பரிசு -*** *ஒரு பண்பால்;* ***பொரு ஆவது -*** *ஒப்பாவது.*

*'கணைக் காற்கு, ஆவமோ பொரு ஆவது' என்று முடிக்க. ஆவம் - அம்பறாத்தூணி. பரிசு - தன்மை. இங்கு பரிசு என்றது மேலே விரிந்து கீழே சுருங்கியிருக்கை. அம்பறாத் தூணிக்கு வடிவ ஒப்புமையன்றி வேறுபண்பில்லை என்க.ஆவம் அழிக்கும் கணைகட்கு இருப்பிடம். இவன் கணைக்கால் ஆக்கும் திறம் பெற்றது. ஆதலால் ஒப்பாகா என்க. கணைக்காலுக்கு அம்பறாத்தூணி ஒப்பு. அம்புபெய் தூணி... போன்ற கணைக்கால் (உவமான. 12) தான் - அவை.* ***(43)***

***5271. 'அறம் கிளர் பறவையின் அரசன் ஆடு எழில்***
***பிறங்கு எருத்துஅணைவன பெயரும், பொற்புடை,***
***மறம் கிளர் மதகரிக் கரமும் நாணின,***
***குறங்கினுக்குஉவமை, இவ் உலகில் கூடுமோ ?***

*(ஐயனின் தொடைகள்)*

***அறம் -*** *அறத்தைப் போல;* ***கிளர் -*** *கிளர்ச்சி பெற்ற;* ***பறவையின் அரசன் -*** *பறவைகளுக்குத் தலைவனான கருடனின்;* ***ஆடுஎழில் -*** *வெற்றியும் அழகும்;* ***பிறங்கு -*** *விளங்கும்;* ***எருத்து அணைவன -*** *பிடரியை ஒத்திருப்பன;* ***பெயரும் பொற்புடை -*** *அசையும் அழகுடைய (அதைக்கண்டு);* ***மறங்கிளர் -*** *வீரம் கிளர் கின்ற;* ***மதகரிக் கரமும் -*** *மதயானைகளின் கைகள்;* ***நாணின -*** *உவமையாகாமல் நாணம் அடைந்தன (என்றால்);* ***குறங்கினுக்கு -*** *இராமபிரானின் தொடைகளுக்கு;* ***உவமை -*** *ஒப்புமையாகத் தக்க பொருள்கள்;* ***இவ்வுலகில் கூடுமோ -*** *இந்த உலகத்தில் கிட்டுமா ?*
*இறைவனின்வாகனமான கருடனின் கழுத்தே பெருமான் தொடைகட்கு ஒப்பு. பிற ஒப்பாகா. கருடனின் கிளர்ச்சி தருமத்தின் கிளர்ச்சி போன்றது. கருடனின் கிளர்ச்சியை வேதாந்த தேசிகர் கருடதண்டகத்தில் பேசினார். கவிச்சக்கரவர்த்தி நாகபாசப்படலத்தில் இக்கிளர்ச்சியைப் பேசுவர். (கம்ப. 8244 - 49) குறங்கு - தொடை யானையின் தொடைக்கு உவமையாக்குவது மரபு பிறங்கு எருத்தில் இருந்து நீங்கி வந்த தொடை என்று பொருள் கூறினர். ஆய்க. இஃது தூரகை. வடநூலார் 'தூராந்வயம்' என்பர் 'பிறங்கு எருத்து அணைவன குறங்கு' என்று கூட்டினர்.* ***(44)***

***5272. 'வலம் சுழித்து ஒழுகு நீர் வழங்கு கங்கையின்***
***பொலஞ் சுழிஎன்றலும் புன்மை; பூவொடு***
***நிலம் சுழித்துஎழு மணி உந்தி நேர், இனி,***
***இலஞ்சியும்போலும் ? வேறு உவமை யாண்டுஅரோ ?***

***பூவொடு -*** *தாமரைப் பூவையும்;* ***நிலம் -*** *பூமியையும்;* ***சுழித்து எழு -*** *கிளர்ந்து தோன்றிய (பெருமானின்);* ***மணி உந்தி நேர் -*** *அழகிய உந்திக்குச் சமமாக;* ***வலம் சுழித்து -*** *வலப்பக்கம் சுழித்துக்கொண்டு;* ***ஒழுகும்நீர் -*** *பெருக்கெடுக்கும் தண்ணீரை;* ***வழங்கும் -*** *உலகங்கட்குத் தரும்;* ***கங்கையின் -*** *கங்கையின்;* ***பொலஞ்சுழி என்றலும் -*** *அழகிய சுழி என்று கூறுவதும்;* ***புன்மை -*** *இழிவாகும் (அங்ஙனம் இருக்க) (திருவுந்திக்கு);* ***இனி இலஞ்சியும் -*** *மகிழம்பூவும்;* ***போலும் -*** *ஒப்பாகுமோ (இவற்றைத் தவிர);* ***வேறு உவமை -*** *வேறுபட்ட உவமானப் பொருள்கள்;* ***யாண்டு -*** *எங்கே உள்ளது.*

*மிக்க உந்திநீர்ச்சுழி (உவமான 77) புனற்சுழி அலைத்துப் பொருந்திய கொப்பூழ் (பெருங் 2-15-68) என்றும், நீர்ப்பெயர்ச் சுழியின் நிறைந்த கொப்பூழ் (பொருநராற்று - 37) என்றும் பழம் பெரு நூல்கள் உந்தியை நீர்ச்சுழி என்று பேசின. இராமனைத் திருமாலாகவே அனுமன் பேசுகின்றான். ஆதலின் 'பூவொடு நிலம் சுழித் தெழுமணி உந்தி' என்றான். சுழித்தெழுதல் - மகிழ்ச்சியின் மிகுதியை உணர்த்தும். சேக்கிழார் அறாத செந்தீ வலம் சுழிவுற்று... ஒளிர என்று பேசியது கருதுக. (பெரிய திருநீல நக்க 31) இலஞ்சி - மகிழம்பூ - குருகை இடம் கொண்டான் இலஞ்சி பெற்றோன் (மாறனலங் 359) போலும் - என்பதை எடுத்தல் ஓசையால் ஐயப்பொருள் தோன்றப் படித்து உண்மை உணர்க. அரோ - அசை.* ***(45)***

***5273. 'பொரு அரு மரகதப் பொலன் கொள் மால் வரை***
***வெருவுற விரிந்துஉயர் விலங்கல் ஆகத்தைப்***
***பிரிவு அறநோற்றனள் என்னின், பின்னை, அத்***
***திருவினின் திருஉளார் யாவர் ? தெய்வமே !***

**தெய்வமே !** - *பிராட்டியே;* **பொருவு அரு** - *ஒப்பற்ற;* **பொலன் கொள்** - *அழகைக் கொண்ட;* **மரகதமால் வரை** - *மரகத மலையானது;* **வெருவற** - *அஞ்சும்படி;* **விரிந்து உயர்** - *பரந்து உயர்ந்துள்ள;* **விலங்கல் ஆகத்தை** - *மலைபோன்ற திருமார்பை;* **பிரிவு அற** - *பிரிதல் இல்லாமல் (அங்கே வாழ);* **நோற்றனள் என்னில்** - *திருமகள் தவம் செய்தாள் என்றால்;* **அத்திருவினில்** - *அந்தத் திருமகளைவிட;* **பின்னை யாவர் திருவுளார்** - *பிறகு எவர் பேறு பெற்றவர்.*

*பின்னை,விலங்கல் ஆகத்தைப் பிரிவு அற நோற்றனள் என்னின் திருவினும் யாவர் திருவுளார் எனமுடிக்க. பின்னை என்றற்கு பிறகு என்றே பொருள் கூறப்பெற்றது. பின்னை - திருமகள். பின்னை மணாளனை பேரிற் கிடந்தாளை (பெரியாழ்வார் 2-5-1) இது கிருஷ்ணாவதாரத்துக்குப் பிற்பட்ட வழக்கு - இராமாவதாரத்தில் அனுமன் கூற்றில் பொருந்தாது. பிராட்டியைத் தெய்வம் என்றான்.சீதை என்பதோர்தெய்வம். என்பர் திருமங்கை மன்னர் (பெரிய திருவடி 10-2- 5)* ***(46)***

***5274. 'நீடுறு கீழ்த் திசை நின்ற யானையின்***
***கோடு உறுகரம்என, சிறிது கூறலாம்,***
***தோடு உறு மலர்எனச் சுரும்பு சுற்று அறாத்***
***தாள் தொடு தடக்கை; வேறு உவமை சாலுமே ?***

**தோடு உறு** - *இதழ்கள்பொருந்திய;* **மலர்என** - *தாமரைப் பூ என்று கருதி;* **சுரும்பு சுற்று அறா** - *வண்டுகள் மொய்ப்பது நீங்காத;* **தாள்தொடு தடக்கை** - *முழந்தாளைத் தீண்டும் கரங்கள்;* **கீழ் திசை நின்ற** - *கிழக்குத் திசையில் இருக்கும்;* **யானையின்** - *ஐராவதம் என்னும்யானையின்;* **கோடு உறு** - *தந்தங்களின்நடுவில் இருப்பதும்;* **நீடு உறு** - *நீண்டிருப்பதும் ஆன;* **கரம் என** - *துதிக்கைஎன்று;* **சிறிது கூறலாம்** - *ஒருபுடை பேசலாம்;* **வேறு உவமை** - *பிறஉவமைகள்;* **சாலுமே** - *போதுமானதாயிருக்குமோ.* *யானையின் கரமேஒரு புடை ஒப்புமை எனின் மற்றவை முற்று உவமையாகுமோ கீழ்த்திசை - கீட்டிசை - ழகரம் டகரம் ஆயிற்று. பழைய வழக்கு. திகடரு சடைமுடி (சம்பந்தர் 344 - 10) வீரசோழிய வழக்கன்று. சாலுமே - ஏகாரம் ஐயப்பொருள்தந்தது. ஒருபுடை ஒப்புமை என்பர். அது இங்கு சிறிது என்று பேசப்பெற்றது. கிழக்குத் திசை*

*யானை - ஐராவதம். முழங்கால் அளவு கை நீண்டிருத்தல் உத்தம இலக்கணம். தாள் தோய் தடக்கைத் ததை மாண் வழுதி (புறம் 59) இதனை வடநூல் ஆஜாநு பாஹீ என்று பேசும். கோடுறு கரம் என்பதற்கு, வளைந்த கரம் என்றும் வரைகள் பொருந்திய கரம் என்றும் கூறலாம். கோள்துறு எனப்பிரித்து வலிமை மிக்க கரம் என்று உரை கூறியவரும் உளர். வரைகள் பெற்றிருத்தல், வளைந்திருத்தல் கொம்புகள் இடையே இருத்தல் உவமானக் குறைபாடு, ஆதலின் சிறிது கூறலாம் என்றான்.* ***(47)***

***5275. 'பச்சிலைத் தாமரை பகல் கண்டால் எனக்***
***கைச் செறிமுகிழ் உகிர், கனகன் என்பவன்***
***வச்சிரயாக்கையை வகிர்த்த வன் தொழில்***
***நிச்சயம்; அன்றுஎனின், ஐயம் நீக்குமே.***

***பச்சிலைத்தாமரை -** பசிய இலைகளுடன் கூடிய தாமரை மலரை; **பகல் கண்டால் என -** சூரியனைப் பார்த்தாற் போல (மலர்ந்துள்ள); **கை -** (பெருமானின்) கைகள்; **கனகன் என்பவன் -**இரணியன் என்றுசிறப்பிக்கப்படுபவன்; **வச்சிர யாக்கையை -** வச்சிரம் போன்ற உடலை; **வகிர்ந்த -** பிளந்தன; **வன்தொழில் -** அந்தக் கொடுந்தொழில்; **நிச்சயம் -** உறுதியாக நிகழ்ந்தது; **அன்று எனின் -** அச்செயல் உண்மையல்ல என்றால்; **ஐயம் -** அந்த ஐயப்பாட்டை; **கைச்செறி -** கையின்கண் செறிந்துள்ள; **முகிழ் உகிர் -** அரும்பு போன்ற நகம்; **நீக்கும் -** போக்கும்.*

*அமைதியானநிலையில் உள்ள பெருமானை நோக்குபவர்களுக்கு 'இவனா மார்பைப் பிளந்தான்' என்று ஐயம் தோன்றும் அந்த ஐயத்தை விரல் நகம் போக்கும் என்க. சாந்தவடிவமான திருமாலை நோக்கும் போது ஆழ்வாருக்கே இவன் வயிரமார்பைப் பிளப்பானா என்னும் ஐயம் தோன்றிற்று. அவர், இவையா பிலவாய் திறந்து எரிகான்ற, இவையா எரிவட்டக் கண்கள், என்று ஐயுற்றார். (நான்முகம் 21) ஐயத்தைக் 'கூருகிர் நீக்கும்' என்று குறித்தனர் கம்பநாடர். பாசுர விதை கற்பனைக்கு இடம் தந்தது. விரல் கூர்மையும் செந்நிறமும் பெற்றுள்ளது. ஆதலால் ஐயம் வேண்டாஎன்பது தற்குறிப் பேற்றம். நரசிம்மமே இராமன் என்பது குறிப்பு.* ***(48)***

***5276. 'திரண்டில;ஒளி இல; திருவின் சேர்வு இல;***
***முரண் தரு மேருவில் முரிய மூரி நாண்***
***புரண்டில; புகழ் இல; பொருப்பு என்று ஒன்று***
***போன்று***
***இரண்டு இல;புயங்களுக்கு உவமம் ஏற்குமோ ?****

*(தோள் மலைகள்போன்றது எனின்)*

***பொருப்பு -** மலைகள்; **திரண்டில -** திரட்சியைப் பெறவில்லை; **ஒளி இல -** ஒளியைப் பெறவில்லை; **திருவின் சேர்வு இல -** திருமகளின் சார்பு இல்லை; **முரண்தரு -** வலிமைமிக்க; **மேருவில் முரிய -** மேருவாகிய வில் இற்றுப் போக; **மூரி நாண் புரண்டில -** வலியநாண் புரளப் பெறவில்லை; **புகழ்இல -** புகழைப் பெறவில்லை; **ஒன்று போன்று என்று -** ஒன்று ஒன்றைப் போல; **இரண்டில -** இரண்டு கிடையாது; (ஆதலின் மலைகள்) **புயங்களுக்கு -** இராமபிரானின் தோள்களுக்கு; **உவமை -** ஒப்புமை; **ஏற்குமோ -** பொருந்துமோ ?*

பொருப்பு, இல்,புயங்களுக்கு உவமை ஏற்குமோ' என்று முடிக்க. பொருப்பு - எழுவாய். ***(49)***

***277. ' "கடற் படு பணிலமும், கன்னிப் பூகமும்,***
***மிடற்றினுக்குஉவமை" என்று உரைக்கும்***
***வெள்ளியோர்க்கு***
***உடன்பட ஒண்ணுமோ- உரகப் பள்ளியான்***
***இடத்து உறைசங்கம் ஒன்று இருக்க, எங்களால் ?***

***உரகப்பள்ளியான் -*** *பாம்புப் படுக்கையில்உள்ள திருமாலின்;* ***இடத் துஉறை -*** *இடக்கரத்தில் இருக்கும்;* ***சங்கம் ஒன்று இருக்க -*** *பாஞ்சசன்யம்ஏற்புடையதாக இருக்க; (அதை விட்டுவிட்டு)* ***கடல்படு பணிலமும் -*** *கடலில்தோன்றிய சங்கும்;* ***கன்னிப் பூகமும் -*** *இளமையான கமுகமரமும்;* ***மிடற்றினுக்கு உவமை என்று -*** *கழுத்துக்கு உவமை என்று;* ***உரைக்கும்வெள்ளியோர்க்கு -*** *கூறும் அறிவற்றவர்களுக்கு;* ***எங்களால் -*** *அறிவுடையஎங்களால்;* ***உடன்பட ஒண்ணுமோ -*** *உடன்பட்டுப் பேச முடியுமா.*

*பணிலம் - சங்கு. பூகம்- பாக்குமரம். வெள்ளியோர் - அறிவற்றவர். உரகப்பள்ளி - பாம்புப் படுக்கை. உரகமெல் அணையான் கையில் உறைசங்கம் (பெரியாழ்வார் 4-4-4) இராமபிரான் மிடற்றுக்குத் திருமால் ஏந்திய சங்கமே உவமை. பிற உவமையாகா.*
***(50)***

***5278. 'அண்ணல்தன் திரு முகம் கமலம் ஆம் எனின்,***
***கண்ணினுக்கு உவமைவேறு யாது காட்டுகேன் ?***
***தண் மதி ஆம் எனஉரைக்கத் தக்கதோ,***
***வெண் மதிபொலிந்தது மெலிந்து தேயுமால் ?***

***அண்ணல்தன்திருமுகம் -*** *இராமபிரானின்திருமுகமானது;* ***கமலம் ஆம் எனின் -*** *தாமரையை ஒக்கும் என்றால்;* ***கண்ணினுக்கு -*** *அப்பெருமானின் கண்களுக்கு;* ***உவமை -*** *ஒப்புமையாக;* ***வேறுயாது காட்டுகேன் -*** *வேறு எதை எடுத்துக் கூறுவேன் (அன்றி);* ***வெண்மதி -*** *வானத்தில் உள்ள சந்திரன்;* ***பொலிந்தது -*** *பொலிவுடன் இருந்தது (எனினும் அது);* ***மெலிந்து தேயும் -*** *ஒளி குன்றி அழியும் (ஆதலினால்); (திருமுகம்)* ***தண்மதி ஆம் என -*** *குளிர்ந்த சந்திரன் போலும் என்று;* ***உரைக்கத் தக்கதோ -*** *கூறுதல் தகுதியுடையதா.*

*உரைத்தல்என்னும் தொழிற்பெயர் உரைக்க என்னும் எச்சம் போல் உள்ளது. பேசல் கூடாது என்பது பேசக்கூடாது என்று வருதலை நோக்கி அறிக. தொழிற் பெயர் எச்சம்போல் துலங்கலும் உளவே. (உரைச்சூத்திரம்) தண்மதி, சுட்டளவாக நின்றது. இனியர் புகழான்என்னும் பெயர்சொல்லுவான் குறிப்பால் அவன் என்னும் சுட்டுப்பெயர் மாத்திரை ஆயிற்று. என்றார். (சிந்தா - 6 உரை) அவர் கிளவியாக்கத்தில் 37 ஆம் சூத்திர விதிப்பாகக் கருதுவர். ஆல் - அசை.* ***(51)***

**அறுசீர் விருத்தம்**

***5279. ' "ஆரமும் அகிலும் நீவி அகன்ற தோள் அமலன்***
***செவ்வாய்***

***நாரம் உண்டுஅலர்ந்த, செங் கேழ் நளினம்” என்று***
***உரைக்க நாணும்;***
***ஈரம் உண்டு,அமுதம் ஊறும் இன் உரை***
***இயம்பாதேனும்,***
***மூரல் வெண்முறுவல் பூவாப் பவளமோ,***
***மொழியற்பாற்றே ?***

***ஆரமும் அகிலும்நீவி -*** *சந்தனக்குழம்பும் அகிற் குழம்பும் பூசப்பெற்று;* ***அகன்ற தோள் அமலன் -*** *விரிந்த தோள்களைப் பெற்ற இராமபிரானின்;* ***செவ்வாய் -*** *சிவந்த வாயானது (தனக்கு நிகராக);* ***நாரம் உண்டு -*** *நீரை உட்கொண்டு;* ***அலர்ந்த -*** *மலர்ந்துள்ள;* ***செங்கேழ் நளினம் என்று உரைக்க -*** *சிவந்த நிறமுடைய தாமரை போலும் என்று கூறினால்;* ***நாணும் -*** *வெட்கம் அடையும்; (அங்ஙனம் இருக்க)* ***ஈரம் உண்டு -*** *ஈரத்தன்மை பெற்று;* ***அமுதம் ஊறும் -*** *அமுதம் பெருகி;* ***இன் உரை இயம்பாதேனும் -*** *இனிய மொழிகள் பேசாவிடினும்;* ***வெண்மூரல் -*** *வெள்ளிய பற்களால்;* ***முறுவல் பூவா -*** *புன்னகை மலராத;* ***பவளம் -*** *பவளமானது;* ***மொழியற் பாற்றோ -*** *உவமையாகக் கூறத்தக்கதோ ?*

*சிரிக்கத்தெரிந்த தாமரையே ஒவ்வாதபோது சிரிக்கத் தெரியாத பவளம் ஒவ்வாதென்க. ‘சிரித்த பங்கயம்’ என்று முன்பு பேசப்பெற்றது நினைக்க. நாணுதல் ‘தாமரை’ என்றும் கூறலாம். ஆரம் - சந்தனம். இங்கே குழம்பைக் குறிக்கிறது. அகிற்கும் அதுவே. நாரம் - தண்ணீர். நார .. பொய்கை (சூடாமணி 25) பவளமோ, ஓகாரம் அசை. பாற்றோ, ஓகாரம் வினாப் பொருள் தந்தது. பவளம் மொழியற் பாற்றோ என முடிக்க. ஈரம் - அன்பு. ‘இன்சொலால் ஈரம் அளைஇ’ என்று தமிழ்மறை பேசும் (திருக்குறள் 91) மூரல் - பல். முறுவல் - புன்னகை. பூவா - மலராத. ‘புதியதோர் முறுவல் பூத்தாள்’ (கம்ப. 2736) என்று பேசப் பெற்றது.* ***(52)அறுசீர் விருத்தம்(வேறு)***

***5280. ‘முத்தம்கொல்லோ ? முழு நிலவின்***
***முறியின் திறனோ ? முறை அமுதச்***
***சொத்தின்துள்ளி வெள்ளி இனம்***
***தொடுத்தகொல்லோ ? துறை அறத்தின்***
***வித்து முளைத்தஅங்குரம்கொல் ?***
***வேறேசிலகொல் ? மெய்ம் முகிழ்த்த***
***தொத்தின்தொகைகொல் ? யாது என்று***
***பல்லுக்குஉவமை சொல்லுகேன் ?***

***பல்லுக்கு உவமை -*** *இராமபிரானுடைய பற்களுக்கு உவமைகள்;* ***முத்தங் கொல்லோ -*** *முத்துக்களோ;* ***முழுநிலவின் -*** *முழுமதியினுடைய;* ***முறியின் திறனோ*** *- துண்டுகளின் வகைகளோ;* ***அமுதச் சொத்தின் -*** *அமுதமாகிய செல்வத்தின்;* ***துள்ளி -*** *துளியும்;* ***வெள்ளி இனம் -*** *வெள்ளியின் கூட்டமும்;* ***முறை -*** *முறையாக;* ***தொடுத்த கொல் -*** *தொடுக்கப் பெற்றனவோ;* ***துறை அறத்தின் -*** *பல்வேறு வகைப்பட்ட அறத்தினுடைய;* ***வித்து -*** *விதையிலிருந்து;* ***முளைத்த அங்குரங்கொல் -*** *தோன்றிய முளைகளோ;* ***மெய்முகிழ்த்த -*** *சத்தியத்திலிருந்து தோன்றிய;* ***தொத்தின் தொகைகொல் -*** *பூங்கொத்தின் கூட்டமோ;* ***வேறே சிலகொல் -*** *இவற்றில் வேறுபட்ட சிலபொருள்களோ;* ***யாது என்று -*** *(இவற்றுள்) எது என்று;* ***சொல்லுகேன் -*** *கூறுவேன்.*

*இராமபிரான்பற்களுக்கு உவமைகள் முத்து முதலானவற்றுள் யாது என்று கூறுவேன். முறி - துண்டு. 'நிலவின் வெண்முறி' (கம்ப. 4892) அறம் முப்பத்திரண்டு, பெருமான் பற்களும் முப்பத்திரண்டு ஒப்பிட்டுக் காண்க. மெய் - உண்மை. அறத்தின் வித்து என்றது அகிம்சையை. எல்லா அறங்களும் அகிம்சையடிப்படையில் தோன்றியன. அறத்துக்கு மூலம் அகிம்சை என்க. இப்பாடலில், அகிம்சையும் சத்தியமும் பேசப்பெற்றன. கொல்லோ - ஓ அசை. சொத்து - இது முதலில் பொன்னை உணர்த்திப் பின் செல்வத்தை உணர்த்திற்று. சொத்துற்று அமைந்த சுதை இல் நெடுஞ்சுவர் (பெருங்கதை 1- 34-231) தொத்து - கொத்து துறையறம் - பல்வகைப் பிரிவுடைய அறம். அங்குரம் - முளை.* ***(53)***

***5281. 'எள்ளா நிலத்து இந்திரநீலத்து***
**எழுந்தகொழுந்தும் மரகதத்தின்**
**விள்ளா முழுமா நிழற் பிழம்பும்**
**வேண்டவேண்டும் மேனியதோ ?**
**தள்ளா ஓதிகோபத்தைக்**
**கௌவ வந்துசார்ந்ததுவும்**
**கொள்ளா,வள்ளல் திரு மூக்கிற்கு;**
**உவமைபின்னும் குணிப்பு ஆமோ ?**

*(பெருமான் மூக்கைப்போன்று)*

**எள்ளாநிலத்து -** *இகழ்ச்சியில்லாத பூமியில் தோன்றிய;* **இந்திர நீலத்து** *- இந்திர நீலக்கல்லில்;* **எழுந்த கொழுந்தும் -** *தோன்றிய முனையும்;* **மரகதத்தின் -** *மரகதமணியின்;* **விள்ளா -** *பிளவுபடாத;* **முழுமா நிழல் பிழம்பும் -** *முழுமையான பெரிய ஒளிப்பிழம்பும்;* **வேண்ட -** *(அன்பர்கள்) விரும்ப (அன்பர்களை);* **வேண்டும் -** *விரும்புகின்ற;* **மேனியதோ -** *அழகை உடையதோ ?* **கோபத்தை கௌவ வந்து -** *இந்திர கோபத்தைப் பற்றவந்து;* **சார்ந்த -** *பற்றிய;* **தள்ளா ஓதி அதுவும் -** *நீங்காத பச்சோந்தியும்;* **உவமை கொள்ளா -** *ஒப்பாதல் பொருந்தாத;* **வள்ளல் திருமூக்கிற்கு -** *பெருமானின் மூக்கிற்கு;* **பின்னும் -** *பிறபொருளும்;* **குணிப் புஆமோ -** *ஒப்புமை கூறுதல் ஏற்குமோ ? கொழுந்தும்பிழம்பும் மேனியதோ - ஒருமை பன்மை மயக்கம். இந்திர நீலம் - பெருமான் திருமேனி. கொழுந்து மூக்கு. மரகதம் - பெருமான் திருமேனி. பிழம்பு - மூக்கு என்க. இந்திர கோபம் - அதரம். பச்சோந்தி மூக்கு. மூக்கு, கொழுந்தும் பிழம்பும் உவமையாகப் பிறர் கூற அதை விரும்பும் மேனியுடையதோ என்றும் கூறலாம். உரிய பொருள் காணல் அறிஞர் கடன். மூக்கிற்கு, இந்திர கோபத்தைக் கவ்விய ஓந்தியே ஒப்பாகாத போது பிறவற்றைக் கூறுதல் ஒவ்வா என்க. கோபம் - தம்பலப்பூச்சி (பட்டுப்பூச்சி), மூதாய் என்பது சங்க வழக்கு, ஓதி - பச்சோந்தி. மேனி - அழகு.* ***(54)***

***5282. 'பனிக்க, சுரந்து, கரன் முதலோர்***
**கவந்தப்படையும், பல் பேயும்**
**தனிக் கைச்சிலையும், வானவரும்,**
**முனிவர்குழுவும், தனி அறனும்,**
**"இனிக் கட்டழிந்தது அரக்கர் குலம்"**
**என்னும்சுருதி ஈர் - இரண்டும்,**

குனிக்க,குனித்த புருவத்துக்கு
உவமம்,நீயே, கோடியால்.

**பனிக்க சுரத்து** - நடுக்கமடையும்படி காட்டில் வாழும்; **கரன்முதலோர்** - கரன் முதலான அரக்கர்களின்; **கவந்தப் படையும்** - தலையற்ற உடல்களின் கூட்டமும்; **பல்பேயும்** - பலவிதமான பேய்களும்; **தனி கைச்சிலையும்** - இராமபிரானின் கைவில்லும்; **வானவரும்** - தேவர்களும்; **முனிவர் குழுவும்** - முனிவர்களின் தொகுதியும்; **தனி அறனும்** - ஒப்பற்ற தருமமும்; **அரக்கர் குலம்** - அரக்கர்களின் வம்சம்; **இனி** - இப்போது; **கட்டு அழிந்தது** - அடியோடு ஒழிந்தது; **என்னும்** - என்று கூறுகின்ற; **சுருதி ஈர் இரண்டும்** - நான்கு வேதங்களும்; **குனிக்க** - கூத்தாடும் வண்ணம்; **குனித்த புருவத்துக்கு** - வளைந்த புருவங்களுக்கு; **உவமம்** - உவமானமாகத் தக்க பொருள்களை; **நீயே கோடி** - நீயே ஆராய்ந்து கொள்க.

பனி - நடுக்கம்கல் - மலை. முல்லையும் குறிஞ்சியும் திரிந்த நிலமே பாலை ஆதலின் வளம் அழிந்த மலை 'கல்' என்று குறிப்பிடப்பெற்றது. கவந்தம் - தலையற்ற உடல். கவந்தம் எங்கணும் ஆடவும் (சிந்தாமணி 2310) தனி - ஒப்பின்மை. 'தனிச்சிலை தரித்த மேரு' (கம்ப. 2939.) கட்டழிதல் - அடியோடழிதல். இலங்கை கட்டழித்தவன் (திருச்சந்த 54) தொல் இலங்கை கட்டழித்த சேவகன் (சிலம்பு ஆய்ச்சியர் 35) குனித்த புருவமும் கொவ்வைச் செவ்வாயும் (தேவாரம்) இங்கே நினைவுக்கு வருகிறது. இத்தனை பேரும் ஆட வளைந்த பெருமான் புருவம் கண்ட நீரே அதற்கு உவமை சொல்லும் என்றான் அனுமன் என்பது பழைய உரை (அடை - பதி) கவந்தம் ஆடுதலை அட்டை ஆடல் என்பர். **(55)**

*5283.* 'வரு நாள் தோன்றும் தனி மறுவும்,
வளர்வும் தேய்வும், வாள் அரவம்
ஒரு நாள் கவ்வும் உறு கோளும்,
இறப்பும், பிறப்பும் ஒழிவுற்றால்,
இரு-நால் பகலின் இலங்கு மதி,
அலங்கல் இருளின் எழில் நிழற் கீழ்ப்
பெரு நாள் நிற்பின், அவன் நெற்றிப்
பெற்றித்து ஆகப் பெறும் மன்னோ !

**இரு நால் பகலின்**- எட்டாவது நாளில்; **இலங்கும் மதி** - விளங்கும் மதியானது; **வருநாள் தோன்றும்** - வளர்ந்து வரும்நாட்களில்வெளிப்படையாகத் தெரியும்; **தனி மறுவும்** - தனியாகவுள்ள களங்கமும்; **வளர்வும் தேய்வும்** - வளர்தலும் தேய்தலும்; **வாள் அரவம்** - கொடிய பாம்பால்; **ஒருநாள் கவ்வும்** - ஒரு நாள் கவ்வப்படும்; **உறுகோளும்** - மிக்க துன்பமும்; **இறப்பும் பிறப்பும்** - அழிதலும் தோன்றுதலும்; **ஒழிவுற்றால்** - நீங்கப் பெற்றால்; **அலங்கல் இருளின்** - அசைகின்ற இருளின்; **எழில் நிழற் கீழ்** - அழகிய நிழலுக்குக் கீழே; **பெருநாள் நிற்பின்** - நீண்ட நாட்கள் நின்றால் (அது); **அவன்** - இராமபிரானுடைய; **நெற்றிப் பெற்றித்து ஆக பெறும்** - நெற்றியின் தன்மை உடையதாகக் கருதப்பெறும்.

மதி,ஒழிவுற்றால், நிற்பின், பெற்றித்து, ஆகப் பெறும் என்று கூட்டுக. அசையும் இருள் என்றது பெருமானின் நெற்றியின்பால் அசையும் அளகத்தை. அளகம் - முன்

*நெற்றி மயிர். இருள் உவம ஆகுபெயராய் இருள் போன்ற தலை உரோமத் தொகுதியை உணர்த்திற்று. இருண்ட குழற்கற்றையின் கீழ் விளங்கும் பெருமான் நெற்றிக்கு இருளின் கீழ் ஒளிரும் பிறை ஒன்று இருக்குமாயின் ஒப்பாகும் என்றவாறு (அண்ணாமலை பதிப்பு)* ***(56)***

***5284. 'நீண்டு, குழன்று, நெய்த்து, இருண்டு,***
***நெறிந்து,செறிந்து, நெடு நீலம்***
***பூண்டு, புரிந்து,சரிந்து, கடை***
***சுருண்டு,புகையும் நறும் பூவும்***
***வேண்டும் அல்லஎன, தெய்வ***
***வெறியேகமழும் நறுங் குஞ்சி,***
***ஈண்டு சடை ஆயினதுஎன்றால்,***
***மழை என்றுஉரைத்தல் இழிவு அன்றோ ?***

***நீண்டு குழன்று -*** *நீளமாகியும் குழைந்தும்;* **நெய்த்து இருண்டு -** *பளபளத்தும் கருத்தும்;* **நெறிந்து செறிந்து -** *நெளிந்தும் அடர்ந்தும்;* **நெடுநீலம் பூண்டு -** *நீலநிறத்தைப் பெற்றும்;* **புரிந்து சரிந்து -** *அசைந்தும் தாழ்ந்தும்;* ***கடை சுருண்டு -*** *இறுதிப் பகுதி சுருண்டும்;* **புகையும் நறும் பூவும் -** *வாசனைப் புகையும் மண மலரும்;* **வேண்டும் அல்ல என -** *வேண்டுவன இல்லை என்று;* **தெய்வ வெறியே கமழும் -** *தெய்வ மணம் கமழ்கின்ற;* **நறுங்குஞ்சி -** *நல்ல குழல்;* **ஈண்டு -** *இந்தக் கானகத்தில்;* ***சடையாயினது என்றால் -*** *சடையாகிவிட்டது என்பதால்; (அதன் எளிமை கருதி)* **மழைஎன்று உரைத்தல் -** *அதனைமேகம் என்று கூறுவது;* **இழிவு அன்றோ -** *தாழ்வு அல்லவா.*

*நறுங்குஞ்சிசடையாயினது என்றால் மழை என்று கூறுவது இழிவு எனச் சேர்க்க. இராமபிரான் நறுங்குஞ்சி கருநீலம் என்பதை உணர்த்த 'இருண்டு நெடுநீலம் பூண்டு' என்று கூறப் பெற்றது. 'பட்டுக் கருநீலம்' என்று கவிச்சக்கரவர்த்தி பாரதி பாடுவார் (கண்ணம்மா - காதலி) குலசேகரர் 'நறுங்குஞ்சி புன்சடையா' என்று பாசுரம் இட்டார் (தசரதன் புலம்பல்) அதற்கு விளக்கம் இப்பாடல். 'அரிவை கூந்தலின் நறியவும் உளவோ' என்று குறுந்தொகை பேசும். (குறுந் 2) அதை ஒட்டி மகளிர் குழல் போலவே ஆடவர் குழலுக்கும் நறுமணம் உண்டு என உணர்க. ஈண்டு என்றது கானகத்தை. ஈண்டு - இவ்விடம். அன்றி ஈண்டு என்பதைச் சடைக்கு அடைமொழியாக்கி, அடர்ந்த சடை என்றும் கூறலாம்.* ***(57)***

***5285. 'புல்லல்ஏற்ற திருமகளும்,***
***பூவும்,பொருந்தப் புவி ஏழும்***
***எல்லை ஏற்றநெடுஞ் செல்வம்***
***எதிர்ந்தஞான்றும், அஃது இன்றி***
***அல்லல் ஏற்றகானகத்தும்,***
***அழியாநடையை, இழிவான***
***மல்லல் ஏற்றின்உளது என்றால்,***
***மத்த யானைவருந்தாதோ ?'***

***புல்லல் ஏற்றதிருமகளும் -*** *தழுவுதலை மேற்கொண்ட திருமடந்தையும்;* ***பூவும் -*** *நிலமடந்தையும்;* ***பொருந்த -*** *தன்பக்கல் தங்க (அதனால்);* ***புவி ஏழின் -*** *ஏழு உலகங்களின்;* ***எல்லை ஏற்ற -*** *எல்லையை ஏற்றுக் கொண்ட;* ***நெடும் செல்வம் -*** *நீட்சி மிக்க செல்வமானது;* ***எதிர்ந்த ஞான்றும் -*** *எதிர்ப்பட்ட காலத்திலும்;* ***அஃது இன்றி -*** *அச்செல்வம் இல்லாமல்;* ***அல்லல் ஏற்ற -*** *துன்பம் மிக்குயர்ந்த;* ***கானகத்தும் -*** *காட்டின் கண்ணேயும்;* ***அழியா நடையை -*** *தளர்ச்சியடையாத நடையை;* ***இழிவான மல்லல் -*** *தாழ்வுற்ற வளத்தைப் பெற்ற;* ***ஏற்றின் உளது -*** *காளையின்பால் உள்ளது;* ***என்றால் -*** *என்று கூறினால்;* ***மத்த யானை -*** *மதம் மிக்க யானையானது;* ***வருந்தாதோ -*** *வருத்தம் அடையாதோ.*

*காளையின்பால் இராமபிரான் நடை உள்ளது என்று கூறின் யானை வருந்தும் என்று கூறிப் புதிய அணிக்கு வழிவகுத்த கவிச்சக்கரவர்த்தி புலமையை வழிபடுக. கானகத்தும் - என்பதில் உள்ளஉம் - அசை.'காமக்கடல் மன்னும் உண்டோ' (குறள் 1164) அழகர் மன்னும் உம்மும் அசை நிலை என்றார்.காலத்தும் என்னும் பாடம் கானத்தும் என்று பாடபேதம்ஆயிற்று போலும். நடையை என்பதில் உள்ள ஐ அசை - உருபு அன்று.நடைஉளது, என்றால் புகழானை.......... விளக்கினான் (சிந்தா 2605)* ***(58)***

***5286. இன்னமொழிய, அம் மொழி கேட்டு,***
***எரியின்இட்ட மெழுகு என்ன,***
***தன்னை அறியாதுஅயர்வாளை,***
***தரையின்வணங்கி, 'நாயகனார்***
***சொன்ன குறி உண்டு; அடையாளச்***
***சொல்லும் உளவால், அவை, தோகை***
***அன்ன நடையாய்,கேட்க ! என,***
***அறிவன்அறைவான் ஆயினான்;***

*(அனுமன்) (பெருமான்அழகை)*

***இன்ன மொழிய-*** *இப்படி எடுத்துக்கூற;* ***அம்மொழி கேட்டு -*** *அச்சொற்களைக் கேட்டு;* ***எரியின் இட்ட -*** *நெருப்பில் இடப்பட்ட;* ***மெழுகு என்ன -*** *மெழுகைப் போல;* ***தன்னை அறியாது அயர்வாளை -*** *தன்னையே அறிந்து கொள்ளாமல் வருந்தும் பிராட்டியை;* ***அறிவன் -*** *அறிவுமிக்க அனுமன்;* ***தரையின் வணங்கி -*** *பூமியில் விழுந்து வணங்கி;* ***தோகை அன்ன நடையாய் -*** *மயில் போலும் நடையை உடைய அம்மையே;* ***நாயகனார் சொன்ன குறி உண்டு -*** *இராமபிரான் என்பால் வழங்கிய பொன் அடையாளம் உண்டு;* ***அடையாளச் சொல்லும் உள -*** *அடையாளச் சொற்களும் உள்ளன;* ***அவை கேட்க என -*** *அவற்றைக் கேட்டு அறிக என்று;* ***அறைவான் ஆயினான் -*** *சொல்லத் தொடங்கினான்.*

*அறிவன் -அனுமன். தோகை - மயில். மகளிர் நடைக்கு மயிலின் நடை ஒப்பு. மணி வரைச் சாரல் மஞ்ஞைபோல அணிபெற இயலி (பெருங்கதை 3-13- 50-57) தோகை அன்னநடை என்று விரித்து மயிலையும் அன்னத்தையும் ஒத்த நடை என்றும் கூறலாம். நாயகன் என்னும் பெயர் முன் ஆர் வந்தது. அஃது இயற்பெயர் முன்னர் வந்த ஆரைக்கிளவியாகும் (சொல் 272) நச்சர் உரை அறிந்து அமைக. அவர் பெரும்பான்மை இயற்பெயர் கூறவே சிறுபான்மை உயர்திணைப் பெயர் முன்னரும் வருதல் ஒன்றென*

*முடித்தலால் கொள்க என்பர். 'குறிகளும் அடையாளமும்' என்பர் அப்பர். அஃது இங்கு கவிச்சக்கரவர்த்திக்கு கைகொடுத்தது. மெய்ப்பொருள் ஆய்க. அனுமன் தெரிந்துரைத்தஅடையாளம் என்பர்பெரியாழ்வார் (பெரியாழ்வார் 3-10-10) சொன்ன குறி என்பதற்குத் தங்கம் உணர்த்தும் அடையாளம் என்று பொருள் கொள்க. சொன்னம் - பொன். பொன் இங்கு திருவாழியை உணர்த்திற்று. 'ஒரு கையிலே அன்னம் ஒரு கையிலே சொன்னம், வருகையிலே சம்மான வார்த்தை' (பெருந்தொகை 1366) சொன்ன குறி என்பதற்குச் சொல்லிய குறிப்பு என்றே பலர் உரை கண்டனர்.*
***(59)***

*அனுமன் கூறியஅடையாளவுரைகள்*

**சந்தக் கலிவிருத்தம்**

***5287. ' "நடத்தல் அரிது ஆகும் நெறி; நாள்கள் சில; தாயர்க்கு***
***அடுத்த பணிசெய்து இவண் இருத்தி" என, அச் சொற்கு,***
***உடுத்ததுகிலோடும், உயிர் உக்க உடலோடும்,***
***எடுத்தமுனிவோடும், அயல் நின்றதும் இசைப்பாய்.***

*(சீதையே)*

**நெறி -** *காட்டுவழியில்;* **நடத்தல் அரிது ஆகும் -** *நடப்பது உனக்கு இயலாதது ஆகும்; (ஆதலால்)* **நாள்கள் சில -** *யான் கானகத்தில் வாழும் நாள்கள் சிலவே (அதுவரை);* **தாயர்க்கு -** *என்னுடைய தாய்மார்கட்கு;* **அடுத்த பணி செய்து -** *ஏற்ற பணிவிடைகளைச் செய்து கொண்டு;* **இவண் இருத்தி என -** *அயோத்தியில் இரு என்று யான் கூற; (உடனே)* **அச்சொற்கு -** *அச்சொல்லைக் கேட்ட அளவில்;* **உடுத்த துகிலோடும் -** *புனைந்த மரவுரியுடனும்;* **உயிர் உக்க உடலோடும் -** *உயிர் கலங்கிய உடலுடனும்;* **எடுத்த முனிவோடும் -** *மிக்க கோபத்துடனும்;* **அயல் நின்றதும் -** *(பயணத்துக்கு ஆயத்தமாய்) என்பக்கத்தில் நின்றதையும்;* **இசைப்பாய் -** *(அனுமானே நீ) பிராட்டியிடம் கூறுக.*

*இராமபிரானின்மொழியை அப்படியே அனுமன் பிராட்டியின் பால் சமர்ப்பிக்கின்றான். நாடவிட்ட படலத்தில் பெருமான் அனுமன்பால் கூறியதை ஒப்பிடுக. (கம்ப. 4516 - 4517) பெருமான் கூறியதை அனுமன் சிறுசிறு மாற்றங்களுடன் கூறிய திறம் பாராட்டற்பாலது. உடுத்த துகிலோடு பிராட்டி வந்தது விரைவையும் ஆவேசத்தையும் காட்டுகிறது. 'அனைய வேலை அகமனை எய்தினள்... சீரம் துணிந்து புனைந்தனள்... வள்ளல் பின் வந்து அயல் நின்றனள். பனையின் நீள்கரம் பற்றிய கையினாள் என்று முன்பு பேசப் பெற்றது(கம்ப. 1829) 'உயிர்உமிழா நின்றாள்' என்றும் (கம்ப. 1825) 'ஊன் இலா உயிரின் வெந்து' என்றும் (கம்ப. 4517) பேசப்பட்டன. இங்கு அவற்றை எல்லாம் அடக்கி, 'உயிர் உக்க உடலோடும்' என்று பேசப்படுகிறது. இவ் விருத்தம் விளங்காய் - விளங்காய் - விளங்காய் - தேமா என்னும் 4 சீர்களை முறையே பெற்று வரும். இப்பாடல் நேரசையில் தொடங்கின 14 எழுத்தையும் நிரையசையில் தொடங்கின் 15 எழுத்தையும் பெற்று வரும். இப்பாடல் 292 முறை காட்சி தருகின்றது. இதனை கம்பன் அடிப்பொடி அவர்கள் 'அளவடி நான்குடைச் சந்தக் கலிவிருத்தம்' என்பர். (மணிமலர் 76)* ***(60)***

*5288. ' "நீண்டமுடி வேந்தன் அருள் ஏந்தி, நிறை செல்வம்*
*பூண்டு, அதனைநீங்கி, நெறி போதலுறு நாளின்,*
*ஆண்ட நகர்ஆரையொடு வாயில் அகலாமுன்,*
*யாண்டையது கான்?" என, இசைத்ததும் இசைப்பாய்.*

**நீண்டமுடிவேந்தன் -** நீண்ட முடிதரித்ததசரதச் சக்கரவர்த்தியின்; **அருள் ஏந்தி -** கட்டளையை ஏற்று; **நிறை செல்வம் பூண்டு -** அரசச் செல்வத்தை ஏற்றுக் கொண்டு; **அதனை நீங்கி -** அரசாட்சியை விட்டுவிலகி; **நெறி போதலுறும் நாளின் -** வழியிலே போகும் நாளிலே; **ஆண்ட நகர் -** முன்னோர்கள் ஆட்சி புரிந்த அயோத்தியில்; **ஆரையொடு வாயில் அகலா முன் -** மதிலுடன் கூடிய வாயில் கடப்பதற்கு முன்; **கான் யாண்டையது என -** காடு எங்கே உள்ளது என்று; **இசைத்ததும் -** பிராட்டி வினவியதையும்; **இசைப்பாய் -** (அனுமானே) கூறுவாயாக.

முடியை, நீள்முடி,என்றும் நெடுமுடி என்றும் கூறுவது கவிச் சக்கரவர்த்தியின் இயல்பு. மதில் மணிக்கடை கடந்திடுமுன் .... வெங்கானம் யாதோ ? எனச் சொல்லினாள்... சொல்லுவாய் என்று நாட விட்ட படலம் (கம்ப. 4518) கூறும். இது சிலம்பிலிருந்து கவிச்சக்கரவர்த்தி யறிந்தது. பத்தினித் தெய்வம் 'மதுரை மூதூர் யாது என வினவ, (சிலம்பு நாடு காண் 41) இதுவே புகழேந்தி நளனின் மக்கள் மொழியாகப் பேசியது நன்று - குழந்தைகள் 'வழியானது எல்லாம் கடந்தோமோ' என்று வினவும். ஆரை - மதில். வண்கிடங்கு சூழும் ஆரை வைசயந்த நகரிலே, என்பர் நிரம்ப அழகிய தேசிகர் (சேது புராணம் சீதை.5.) ***(61)***

*5289. ' "எள் அரிய தேர் தரு சுமந்திரன் ! இசைப்பாய்,*
*வள்ளல் மொழிவாசகம்; மனத் துயர் மறந்தாள்;*

*கிள்ளையொடுபூவைகள் வளர்த்தல் கிள" என்னும்,*
*பிள்ளை உரையின்திறம் உணர்த்துதி, பெயர்த்தும்.*

**எள் அரியதேர்தரு சுமந்திரன் -** இகழ்ச்சியில்லாததேரோட்டும் சுமந்திரனானவன்; (பிராட்டியை நோக்கி) **நீ வள்ளல் மொழி -** இராமபிரான் மொழி வழியில்; **வாசகம் இசைப்பாய் என -** வார்த்தை கூறுக என்று கூற; **மனத்துயர் மறந்தாள் -** மனத் துன்பம் மறந்த பிராட்டி; **கிள்ளையொடு பூவைகள் -** கிளிகளையும் நாகணவாய்ப் பறவைகளையும்; **வளர்த்தல் -** வளர்ப்பதை; **கிள என்னும் -** (என் சகோதரிகள் பால்) கூறுக என்னும்; **பிள்ளை உரையின் திறம் -** குழந்தையியல்புள்ள மொழியின் தன்மையை; **பெயர்த்தும் -** மீளவும்; **உணர்த்துதி -** (அனுமானே) கூறுக.

சுமந்திரன்,மொழி, வாசகம் எனத்துயர் மறந்தாள் வளர்த்தல் கிள என்னும் பிள்ளை மொழியின் திறம் உணர்த்துதி என்று சேர்க்கவும் வள்ளல் மொழி - வள்ளல் பேசிய வழியில்; பொன் நிறப் பூவையும் கிளியும் போற்றுக என்று உன்னுமென் தங்கையர்க்கு உணர்த்துவாய்' என்று முன்பு பேசப்பெற்றது (கம்ப. 1878)
***(62)***

*அனுமன்திருவாழியைக் காட்டலும் பிராட்டியின்நிலையும்*

***5290. ' "மீட்டும் உரை வேண்டுவன இல்லை" என,***
***"மெய்ப் பேர்***
***தீட்டியது; தீட்டஅரிய செய்கையது; செவ்வே,***
***நீட்டு இது" என,நேர்ந்தனன்' எனா, நெடிய***
***கையால்,***
***காட்டினன் ஓர்ஆழி; அது வாள் நுதலி கண்டாள்.***

***மீட்டும் உரைவேண்டுவன இல்லை என*** *- திரும்பவும் யான் கூற வேண்டியவை இல்லை என்று;* ***மெய்ப்பேர் தீட்டியது*** *- உண்மைப் பேர் பொறிக்கப்பட்டதும்;* ***தீட்டரிய செய்கையது*** *- எழுத முடியாத வேலைப்பாடு பெற்றதும்; (ஆன)* ***இது*** *- இந்தத் திருவாழி;* ***செவ்வே நீட்டு என*** *- செவ்வையாய் அமைந்த திருமுகம் என்று கூறி; (இராமபிரான்)* ***நேர்ந்தனன்*** *- என்பால் வழங்கினான்;* ***எனா*** *- என்று கூறி (அனுமன்);* ***நெடிய கையால்*** *- நீண்ட கைகளில்;* ***ஓர் ஆழி*** *- ஒப்பற்ற மோதிரத்தை;* ***காட்டினன்*** *- காண்பித்தான்;* ***அது*** *- அந்த மோதிரத்தை;* ***வாள் நுதலி*** *- ஒளிமிக்க நெற்றியை உடைய பிராட்டி;* ***கண்டாள்*** *- பார்த்தாள்.*

*நீட்டு -திருமுகம் (கடிதம்) சித்திர சேனன் நீட்டு அவிழா (உபதேச காண்டம்; சிவத்துரோகம் 174) அமரர் கம்பனடிப்பொடி, 'நீட்டு' என்பதற்குக் குறிப்பு மொழி அடங்கிய ஓலை என்று பொருள் கூறிக் கல்வெட்டை ஆதாரம் காட்டுவர். அவர், நீட்டோலை வாசியா நின்றான்... மரம்' என்னும் பாடலை மேற் கோள் நினைவு கூர்வர்.* ***(63)***

***5291. இறந்தவர்பிறந்த பயன் எய்தினர்கொல் என்கோ ?***
***மறந்தவர்அறிந்து உணர்வு வந்தனர்கொல் என்கோ ?***
***துறந்த உயிர்வந்து இடை தொடர்ந்ததுகொல்***
***என்கோ ?***
***திறம் தெரிவதுஎன்னைகொல், இந் நல் நுதலி***
***செய்கை ?***

***இந் நல் நுதலிசெய்கை*** *- அழகிய நெற்றியை உடையஇந்தப் பிராட்டியின் செய்கைக்கு; (உவமையாக)* ***இறந்தவர்*** *- நெறி கடந்து வாழ்ந்தவர்கள்;* ***பிறந்த பயன்*** *- பிறத்தலால் உண்டாகும் பயனை;* ***எய்தினர் கொல் என்கோ*** *- பெற்ற செய்கை என்று கூறுவேனோ;* ***மறந்தவர்*** *- தம்மையே மறந்தவர்கள்;* ***அறிந்து*** *- தம்மையும் தலைவனையும் அறிந்து;* ***உணர்வு வந்தனர் கொல் என்கோ*** *- பேருணர்வு பெற்ற செய்கை என்று கூறுவேனோ ?* ***துறந்த உயிர்*** *- உடலைவிட்டு நீங்கிய உயிர்;* ***இடைவந்து*** *- தக்க சமயத்தில் வந்து;* ***தொடர்ந்தது கொல் என்கோ*** *- ஒன்றுபட்டது என்று கூறுவேனோ ?* ***திறம்*** *- பிராட்டியின் தன்மையை;* ***தெரிவது என்னை*** *- அறிவது எப்படி.*

*எய்தினர்,வந்தனர், என்னும் முற்றுக்கள் பெயரெச்சப் பொருள் தந்தது. இன்றேல் இரண்டு எழுவாயைச் சந்திக்க நேரும். இருவகை முற்று ஈரெச்சம் ஆகலும் (இலக்கணக் கொத்து 82) எய்திய செய்கை, வந்த செய்கை என அமையும். திருவாழியைக் கண்ட பிராட்டியின் செயல் 6 பாடல்கள் பேசும். மறந்தவர் - தம்மை மறந்தவர்கள். தம்மை மறந்தவர்கள், தம்மையும் தலைவனையும் அறிந்து பெறுவதே*

*உணர்வு. பிறந்த பயன், என்பது பிறத்தலால் பெறவேண்டிய பயன் (தொல், சொல் 236) கொல், அனைத்தும் அசை.* ***(64)***

***5292. இழந்த மணிபுற்று அரவு எதிர்ந்தது எனல் ஆனாள்;***
***பழந் தனம்இழந்தன படைத்தவரை ஒத்தாள்;***
***குழந்தையைஉயிர்த்த மலடிக்கு உவமை கொண்டாள்;***
***உழந்து விழிபெற்றது ஓர் உயிர்ப் பொறையும்***
***ஒத்தாள்.***

*(திருவாழியைக் கண்டபிராட்டி)*

***இழந்த மணி** - தவறவிட்டமாணிக்கத்தை; **எதிர்ந்தது புற்று அரவு எனல் ஆனாள்** - தன் எதிரில் கண்ட புற்றில் உள்ள பாம்பு என்று கூறும்படி இருந்தாள்; **இழந்தன பழந்தனம்** - இழந்துவிட்ட பழைய செல்வத்தை; **படைத்தவரை ஒத்தாள்** - (மறுபடியும்) பெற்ற வறியவரை ஒத்திருந்தாள்; **குழந்தையை உயிர்த்த** - குழந்தையைப் பெற்றெடுத்த; **மலடிக்கு உவமை கொண்டாள்** - மலடிக்கு உவமானம் ஆயினாள்; **உழந்து** - பலநாட்கள் துன்பத்தில் வருந்தி; **விழிபெற்றது** - கண்களைப் பெற்ற; **ஓர் உயிர்ப் பொறையும்** - ஒப்பற்ற உடம்பையும்; **ஒத்தாள்** - ஒத்திருந்தாள்.*

*அம்மைக்குமோதிரம் கிடைத்தது, பாம்பு, தவறவிட்ட மணியைப் பெற்றது போலவும், வறுமையாளன் இழந்த செல்வத்தை மீளப் பெற்றதைப் போலவும், மலடி குழந்தையைப் பெற்றது போலவும், குருடன் விழி பெற்றது போலவும் இருந்தது. பிராட்டியைப் பாம்பு என்று கூறலாமா ? அமுதமான அம்மை தீயர் செய்கையால் நஞ்சு ஆனாள். நஞ்சுதான் அரக்கர் குடிக்கு என்று நங்கையை அவன் தம்பியே சொன்னான் என்று பெரிய திருமொழி பேசும் (பெரிய 10-2-4) வால்மீகம், சீதை மகா சர்ப்பம் போன்றவள். அவள் கவலை கொண்டு முகத்தை வைத்திருக்கும் ஐந்து விரல்களே அதன் ஐந்து தலைகள் என்று பேசும். (கம்ப. 7351) கவிச் சக்கரவர்த்தி, 'திட்டியின் விடமன கற்பின் செல்வி' என்று கும்பகர்ணன் வாயிலாகப் பேசுவான். இங்கு மணியிழந்த நாகம் மீண்டும் மணிபெறும் தன்மைக்கே ஒப்பீடு என்பதை அறிந்தால் சீதை நாகமா என்ற வினாவுக்கே இடம் இல்லை என்பதையும் அறிக.*
***(65)***

***5293. வாங்கினள்; முலைக் குவையில் வைத்தனள்;***
***சிரத்தால்***
***தாங்கினள்;மலர்க் கண்மிசை ஒற்றினள்; தடந்***
***தோள்***
***வீங்கினள்;மெலிந்தனள்; குளிர்ந்தனள்; வெதுப்போடு***
***ஏங்கினள்;உயிர்த்தனள், இது இன்னது எனல்***
***ஆமே ?***

*(பிராட்டிமோதிரத்தை)*

***வாங்கினள்** - எடுத்துக்கொண்டாள் (அதை); **முலைக் குவையில் வைத்தனள்** - தனங்களின் மேலே வைத்துக் கொண்டாள்; **சிரத்தால் தாங்கினள்** - தலையிலே*

*வைத்துக் கொண்டாள்;* ***மலர்க்கண் மிசை ஒற்றினள் -*** *மலர் போன்ற கண்களில் ஒற்றிக் கொண்டாள்;* ***தடந்தோள் வீங்கினள் -*** *பெரியதோள் பூரித்தாள்;* ***மெலிந்தனள் -*** *இளைத்தாள்;* ***குளிர்ந்தனள் -*** *குளிர்ச்சியடைந்தாள்;* ***வெதுப்போடு ஏங்கினள் -*** *வெப்பத்துடன் ஏக்கமுற்றாள்;* ***உயிர்த்தனள் -*** *பெரு மூச்சு விட்டாள்;* ***இது*** *(பிராட்டியடைந்த) இந்த மெய்ப்பாட்டை;* ***இன்னது எனல் ஆமோ -*** *இன்ன மெய்ப்பாடு என்று கூற முடியுமா.*

*எண்வகைமெய்ப்பாடுகளுள், பிராட்டியின் மெய்ப்பாடு இன்னது என்று கூறவியலுமா. இவள் நிலை இதுதான் என்று வரையறுத்துக் கூறல் இயலாது.* ***(66)***

***5294. மோக்கும்; முலை வைத்து உற முயங்கும்; ஒளிர் நல் நீர்***
***நீக்கி, நிறைகண் இணை ததும்ப, நெடு நீளம்***
***நோக்கும்;நுவலக் கருதும், ஒன்றும் நுவல்கில்லாள்;***
***மேக்கு நிமிர்விம்மலள்; விழுங்கலுறுகின்றாள்.***

*(பிராட்டிமோதிரத்தை)*

***மோக்கும் -*** *மோந்துபார்ப்பாள் (அதை);* ***முலை வைத்து -*** *தனங்களிலே வைத்து;* ***உற முயங்கும் -*** *நன்றாகத் தழுவிக் கொள்வாள்;* ***ஒளிர் நல்நீர் -*** *ஒளிர்கின்ற ஆனந்தக் கண்ணீர்;* ***நிறை கண் இணை ததும்ப-*** *அழகு நிறைந்த இரண்டு கண்களில் ததும்ப;* ***நீக்கி - அதைத் துடைத்துக்கொண்டு;*** ***நெடு நீளம் நோக்கும் -*** *நீண்ட பறவைக் கூட்டைப் பார்ப்பாள்;* ***நுவலக் கருதும் -*** *(பறவைக் கூட்டால் வந்த நினைவை) கூறநினைப்பாள்;* ***ஒன்றும் நுவல்கில்லாள் -*** *ஒன்றும் கூற முடியாமல்;* ***மேக்கு -*** *மிகுதியாக;* ***நிமிர் விம்மிலள் -*** *கிளர்ச்சி பெற்ற அழுகை உடையவளாய்;* ***விழுங்கல்உறுகின்றாள் -*** *அதை அடக்க முயல்கின்றாள். நீளம் - பறவைக்கூடு. பறவைக் கூட்டை இராமபிரான் நோக்கியது ! நிந்தையில் சகுந்தங்கள் நீளம் நோக்கின. அந்தியை நோக்கினான், அறிவை நோக்கினான்' (கம்ப. 2086) என்று பேசப்பெற்றது அஃது இப்போது பிராட்டிக்கு நினைவு வந்தது போலும். 'நெடுநீளம்நோக்கும்' என்பதற்குநெடுநேரம் மோதிரத்தைப் பார்ப்பாள் என்றும் உரை கொள்ளலாம். மாலைக் காலத்தில் பறவைகள் தம் கூட்டை அடை தலை நோக்கும் போது உணர்வு முகிழ்க்கும். பெருமான் என மகிழ்வதும், அல்ல என்று வருந்துவதும், ஆம் என்று ஊடுவதும், அல்ல என்று வாய் மூடுவதும் மோதிரத்தை விழுங்குவோம் என்பதும் பொருள். என்பது பழைய வுரை (அடை - பதி).* ***(67)***

***5295. நீண்டவிழி நேரிழைதன் மின்னின் நிறம் எல்லாம்***
***பூண்டது, ஒளிர்பொன் அனைய பொம்மல் நிறம்; மெய்யே !***
***ஆண்தகைதன்மோதிரம் அடுத்த பொருள் எல்லாம்***
***தீண்டு அளவில்,வேதிகை செய் தெய்வ மணிகொல்லோ ?***

***நீண்ட விழிநேரிழைதன் -*** *நீண்ட கண்களையும்அழகிய ஆபரணங்களையும் உடைய பிராட்டியின்;* ***மின்னின் நிறம் எல்லாம் -*** *மின்னல் போலப் பசலை படர்ந்த மேனி முற்றும்;* ***ஒளிர் -*** *விளங்குகின்ற;* ***பொன் அனைய -*** *பொன்னை ஒத்த;* ***பொம்மல் நிறம் பூண்டது -*** *பொலிவுடைய நிறத்தைப் பெற்றது; (இந்த மாற்றம்)* ***மெய்யே -*** *உண்மையே (ஆதலால்);* ***ஆண் தகைதன் -*** *ஆடவருள் தலைசிறந்த இராமபிரானின்;* ***மோதிரம் -*** *மோதிரம் ஆனது;* ***அடுத்த பொருள் எல்லாம் -*** *தன்னைச் சார்ந்த எல்லாப் பொருள்களையும்;* ***தீண்டு அளவில் -*** *தொட்ட மாத்திரத் தில்;* ***வேதிகை செய் -*** *பொன்னாக மாற்றுகின்ற;* ***தெய்வமணி கொல் -*** *தெய்வத்தன்மை பெற்ற ரச குளிகையோ.      வேதிகை செய்தல்- ஒரு பொருளை வேறு பொருளாக மாற்றுதல். பரிசவேதி செம்பைப் பொன்னாக்கும் என்பது சித்தரின் கொள்கை. இரச குளிகையினால் களிம்பு அற்றுப் பொன்னாய்ச் செம்பொனுடன் சேரும். (சிவ.சித்தி 11.2.9.) மின் நிறம் பொன்நிறம் ஆயிற்று. மோதிரம் பரிசவேதியோ என்று கவிச்சக்கரவர்த்தி வியக்கின்றார்.* ***(68)***

***5296. இருந்து பசியால் இடர் உழந்தவர்கள் எய்தும்***
***அருந்தும் அமுது ஆகியது; அறத்தவரை அண்மும்***
***விருந்தும் எனல்ஆகியது; வீயும் உயிர் மீளும்***
***மருந்தும் எனல்ஆகியது; வாழி மணி ஆழி !***

***மணி ஆழி -*** *மணிகள்பதித்த அந்த மோதிரம்;* ***பசியால் -*** *பசியினால்;* ***இருந்து -*** *(பிறிதோரிடம் செல்லாமல்) வீட்டிலேஇருந்து;* ***இடர்உழந்தவர்கள் -*** *துன்பத்தால் வருந்தியவர்கள்;* ***எய்தும் -*** *அடைந்த;* ***அருந்தும் அமுது ஆகியது -*** *உண்ணும் உணவாக ஆயிற்று;* ***அறத்தவரை -*** *இல்லறத்தில் இருப்பவரை;* ***அண்மும் -*** *சென்று சேர்ந்த;* ***விருந்தும் எனல் ஆகியது -*** *விருந்தாளி என்று கூறும் படியாகவும் ஆயிற்று;* ***வீயும் உயிர் -*** *இறக்கப் போகும் உயிர்;* ***மீளும் -*** *திரும்புதற்குக் காரணமாயிருக்கும்;* ***மருந்தும் எனல் ஆகியது -*** *மருந்து என்று கூறும்படியாகவும் ஆயிற்று;* ***வாழி -*** *அந்த திருவாழி பல்லாண்டு வாழ்க.*

*விருந்தும்மருந்தும் என்பதில் உள்ள உம்மைகளை எனலும் ஆகியது என்று இரண்டிடத்தும் சேர்க்க. விருந்து எனலும் ஆகியது மருந்து எனலும் ஆகியது என அமையும். விருந்தினர் முகம் காணும் நல்ல இல்லறத்தார் மகிழ்வர். விருந்தினர் முகம் கண்டு அன்ன விழா என்று முன்பு பேசப் பெற்றது (நாட்டு - 15) விழாவைக் காணும் போது உண்டாம் மகிழ்ச்சி விருந்தால் உண்டாம் என்பது குறிப்பு. விருந்து கண்டு ஒளிக்கும் வாழ்க்கை திருந்தா வாழ்க்கை என்று இகழப்படும்.* ***(69)***

*சீதை அனுமனைவாழ்த்துதல்.*

***5297. இத்தகையள் ஆகி, உயிர் ஏமுற விளங்கும்,***
***முத்த நகையாள்,விழியின் ஆலி முலை முன்றில்***
***தத்தி உக, மென்குதலை தள்ள, 'உயிர் தந்தாய் !***
***உத்தம !' எனா,இனைய வாசகம் உரைத்தாள்;***

*(திருவாழிபெற்றமையால்)*

*__உயிர் ஏமுற -__ உயிரினம்மகிழ்ச்சி பெருக (அதனாலே); __விளங்கும் -__ பொலிவுறுகின்ற; __முத்த நகையாள் -__ முத்தை ஒத்த பற்களை உடைய பிராட் டி; __இத்தகையள் ஆகி -__ இப்படிப்பட்ட மெய்ப்பாடு உடையவளாய்; __விழியின்ஆலி -__ கண்களில் வழியும் நீர்த்துளிகள்; __முலை முன்றில் -__ தனங்களின்மேற்பரப்பில்; __தத்தி உக -__ பட்டுத் தெறித்துச் சிதறவும்; __மென் குதலை தள்ள-__ மெல்லிய மழலைச் சொற்கள் தடுமாறவும்; (பூரித்து) __உத்தம ! -__ மேலானவனே (நீ); __உயிர் தந்தாய் -__ என் உயிரை வழங்கினாய்; __எனா -__ என்று (புகழ்ந்து); __இனைய வாசகம் -__ இந்த மொழிகளை; __உரைத்தாள் -__ கூறினாள்.*
*அகத்தின்மகிழ்ச்சி பிராட்டியின் பற்களில் விளங்கிற்று. முலை முன்றில் - மார்பின் மேற்பரப்பு. ஏந்து முலை முற்றம் (அகம் 51) ஆலி - நீர்த்துளி. இங்கு கண்ணீரைக் குறிக்கிறது. தன்னை வருத்தியும் பிறருக்கு உதவுபவன் உத்தமன் (திருப்பாவை - ஓங்கி உலகளந்த - உரை) வாசகம் பொருள் பொதிந்த சொல்.* ***(70)***

***அறுசீர்விருத்தம்***

***5298. 'மும்மை ஆம் உலகம் தந்த முதல்வற்கும் முதல்வன்***
***தூது ஆய்,***
***செம்மையால்உயிர் தந்தாய்க்குச் செயல் என்னால்***
***எளியது உண்டே ?***
***அம்மை ஆய்,அப்பன் ஆய அத்தனே ! அருளின்***
***வாழ்வே !***
***இம்மையேமறுமைதானும் நல்கினை, இசையோடு'***
***என்றாள்.***

*__மும்மை உலகம்தந்த -__ மூன்று உலகங்களையும் படைத்த; __முதல்வற்கும் -__ முன்னோன் ஆகிய பிரம்ம தேவனுக்கும்; __முதல்வன் தூதாய் -__ தந்தையாகிய இராமபிரானின் தூதுவனாய் வந்து; __செம்மையால் -__ நிறைவு பெற்ற பண்பினாலே; __உயிர் தந்தாய்க்கு -__ (எனக்கு) உயிரை வழங்கிய உனக்கு; __என்னால் -__ (சிறையிலிருக்கும்) என்னாலே; __செயல் -__ உனக்குச் செய்வதற்கு; __எளியது (ம்) உண்டே -__ எளிமையான உதவியும் உள்ளதா ? __அம்மையாய் -__ தாயாகவும்; __அப்பன் ஆய -__ தந்தையாகவும் உள்ள; __அத்தனே -__ என் தெய்வமே; __அருளின் வாழ்வே -__ அருளுக்கு வாழ்வைத் தருபவனே (நீ); __இம்மையே -__ இப் பிறப்பிலேயே; __மறுமை தானும் -__ மறுமை வாழ்வையும்; __இசையோடு நல்கினை -__ புகழுடன் வழங்கினாய்; __என்றாள் -__ என்று பிராட்டி கூறினாள்.*

*மும்மை ஆம்உலகம் - என்பதில் உள்ள ஆம் அசை. பணியுமாம் என்றும், அணியுமாம் என்றும் குறட்பகுதிக்குக் குறிப்புரை வழங்கிய அழகர், 'ஆம்' என்பன இரண்டும் 'அசை' என்றார். மும்மை உலகு என்று அமைக்க. மும்மை என்பது மூன்று தன்மையைக் குறிக்காமல் மூன்று என்னும் எண்ணைக் குறிக்கிறது. முப்பத்து மும்மைத் தேவர் சென்று ஏத்தும் தில்லை (திருக்கோவை 337) மறுமை தானும் என்பதில் உள்ள தான் அசை. மறுமையும் என்று அமைக்க. உயிரையும் இம்மையில் மறுமைப் பயனையும் வழங்கிய உன் உதவிக்கு மிகப் பெரிய கைம்மாறு செய்ய வேண்டும். ஆனால் என்பால் எளிய உதவி கூட இல்லையே,என்று பிராட்டி மனம்கரைகின்றாள். தினைத் துணை நன்றிக்குப் பனைத்துணை நன்றி செய்க என்கிறது வேதம். பனைத் துணை நன்றி செய்த உனக்கு என்ன செய்யவுள்ளது, என்று பிராட்டி மனம் கரைகின்றாள். உன் உதவிக்கு மற்றும் ஓர் உதவி உண்டு என்று கருதின் அது*

*மகாபாதகம். ஆதலின் எளியது உண்டோ என்று கூறி மனம் கரைகின்றாள். இராமபிரான் திருமாலின் அம்சம் ஆதலின் அவன் திருமாலாகவே பேசப்படுவான்.* ***(71)***

***5299. 'பாழிய பணைத் தோள் வீர ! துணை இலேன் பரிவு தீர்த்த***
***வாழிய வள்ளலே ! யான் மறு இலா மனத்தேன் என்னின்,***
***ஊழி ஓர் பகலாய்ஓதும் யாண்டு எலாம், உலகம் ஏழும்***
***ஏழும் வீவுற்றஞான்றும், இன்று என இருத்தி' என்றாள்.***

***பாழிய பணைத்தோள் வீர*** *- பருத்த மூங்கிலைப்போன்ற தோளையுடைய வீரனே !* ***துணையிலேன்*** *- ஒரு துணையும் இல்லாத என்னுடைய;* ***பரிவு தீர்த்த*** *- துன்பத்தைப் போக்கிய;* ***வள்ளலே*** *- கொடையாளனே;* ***வாழிய*** *- நீ வாழ்க;* ***யான்*** *- நான்;* ***மறுஇலா மனத்தேன் என்னின்*** *- களங்கம் இல்லாத மனத்தை உடையேன் என்பது உண்மையானால்;* ***ஊழி*** *- ஒரு யுகத்தை;* ***ஓர் பகலாய் ஓதும்*** *- ஒரு பகலாகப் பேசப்படுகின்ற;* ***யாண்டு எலாம்*** *- பதினான்கு உலகங்களும்;* ***வீவுற்ற ஞான்றும்*** *- அழியும் பெரும் பிரளய காலத்தும்;* ***இன்று என இருத்தி*** *- இன்று போல் இருப்பாயாக;* ***என்றாள்*** *- என்று சொன்னாள்.*

*அனுமன், புலன்அடக்கம் கருதி வீர என்னும், உதவியை நோக்கி வள்ளல் என்றும் பேசப் பெற்றான். பிரம்மசாரிகட்கு உரித்து. ஊழி பகலாயிருப்பது பிரம்ம தேவனுக்கே. ஆதலின் அனுமன் பிரம்ம தேவனாவான் என்பது குறிப்பு. அவனும் பெரும்பிரளயத்தில் பரம் பொருளுடன் லயம் ஆவான். அப்படி லயமாகாது அனுமன் சிரஞ்சீவியாக இருக்க வேண்டும் என்று கருதி 'உலகம் வீவுற்ற ஞான்றும் இன்றென இருத்தி' என்று பிராட்டி பேசினாள். இவ்விரு பாசுரங்களும் பிராட்டி தெய்வ ஆவேசத்துடன் பேசியவை. உணர்ச்சி வயப்பட்ட போது பிராட்டி மானுட வேடம் கலைந்து தெய்வ ஆவேசம் பெற்றாள். வாலி செய்தி கேட்ட போது இராமன் பவளவாய் துடித்ததைக் கவிச்சக்கரவர்த்தி, 'வையம் நுங்கிய வாய் இதழ் துடித்தது' (கம்ப. 3853.) என்பான்.* ***(72)***

*இராமலக்குவரைப்பற்றி வினவிய சீதைக்கு அனுமன்விடையிறுத்தல்.*

***5300. மீண்டு உரைவிளம்பலுற்றாள், 'விழுமிய குணத்தோய் ! வீரன்***
***யாண்டையான்,இளவலோடும் ? எவ் வழி எய்திற்று உன்னை ?***
***ஆண்தகை, அடியேன்தன்மை யார் சொல, அறிந்தது ?' என்றாள்;***
***தூண் திரள் தடந்தோளானும், உற்றது சொல்லலுற்றான்:***

*(பிராட்டி)*

***மீண்டு உரைவிளம்பலுற்றாள் -*** *மறுபடியும் பேசத்தொடங்கி; (அனுமனை நோக்கி)* ***விழுமிய குணத்தோய் -*** *சிறந்த குணங்களைப் பெற்ற அனுமனே;* ***வீரன் -*** *இராமபிரான்;* ***இளவலோடும் யாண்டையான் -*** *இளைய பெருமாளுடன் எங்கே உள்ளான் (இராமபிரான்);* ***உன்னை எவ்வழி எய்திற்று -*** *உன்னை எவ்விடத்தில் சந்தித்தது;* ***ஆண் தகை -*** *இராமபிரான்;* ***அடியேன் தன்மை -*** *என்னுடைய நிலையை;* ***யார் சொல அறிந்தது -*** *எவர் கூற அறிந்தது;* ***என்றாள் -*** *என்று வினவினாள் (அதுகேட்ட);* ***திரள் தூண் -*** *திரண்ட தூண் போன்ற;* ***தடந்தோளான் -*** *அகன்ற தோளை உடைய அனுமனும்;* ***உற்றது சொல்லல் உற்றான் -*** *நிகழ்ந்ததைக் கூறத் தொடங்கினான்.*

*காதல் மகளிர்தம்மை 'அடிச்சி' என்று கூறிக் கொள்வதைப் பிரபந்தத்தில் காண்கிறோம். தாமரைக் கையை.... அடிச்சியேம் தலை மிசை அணி' என்று சடகோபநாயகி பேசினாள் (திருவாய் 10.3.5) அதை அறிந்த பிராட்டி தன்னை 'அடியேன்' என்றாள்.* ***(73)***

***5301. 'உழைக் குலத் தீய மாய உருவு கொண்டு, உறுதல் செய்தான்,***
***மழைக் கருநிறத்து மாய அரக்கன், மாரீசன் என்பான்;***
***இழைத் தட மார்பத்து அண்ணல் எய்ய, போய், வையம் சேர்வான்***
***அழைத்தது அவ்ஓசை; உன்னை மயக்கியது அரக்கன் சொல்லால்.***

***அரக்கன்சொல்லால் -*** *இராவணன் கட்டளைப்படி;* ***மழைக் கருநிறத்து -*** *மேகம் போலும் கரிய நிறத்தையுடைய;* ***மாய அரக்கன் -*** *மாயையில் வல்ல அரக்கனாகிய;* ***மாரீசன் என்பான் -*** *மாரீசன் என்பவன்;* ***உழைக்குலம் -*** *மான் இனத்தைச் சேர்ந்த;* ***தீய -*** *தீமையே வடிவமான;* ***மாய உருவு கொண்டு -*** *மாய மானாக வடிவம் எடுத்து;* ***உறுதல் செய்தான் -*** *காட்டின் கண்ணே வந்தான்;* ***இழை தட மார்பத்து அண்ணல் -*** *அணிகள் அணிந்த மார்பை உடைய இராமபிரான்;* ***எய்ய -*** *அம்பை ஏவுதலாலே;* ***போய் -*** *உயிர் நீங்கப் பெற்று;* ***வையம் சேர்வான் -*** *பூமியில் விழும் நிலையின் கண்;* ***அழைத்தது அவ் ஓசை -*** *கூப்பிட்ட அக் கொடிய கூக்குரல்;* ***உன்னை மயக்கியது -*** *உன்னை மயக்கம் செய்தது.*

*இதுமுதல் 382பாடல்வரை அனுமன் கூற்று. இராமபிரான் ஆபரணம் இன்றி இருக்கும் போது இழைத்தட மார்பத் தண்ணல் என்று கூறலாமா.... என்பர். இத்தகைய இடங்களில் நச்சர் பெயராய் நின்றது என்று குறிப்பிடுவர். இழைத் தட மார்பத் தண்ணல் என்பதற்குப் பொருள் இராமன் என்பதே. அழகர் அடியளந்தான் என்பது வாளா பெயராய் நின்றது என்றார் (திருக்குறள் 610) இது, உபசார வழக்கு என்று அடை - பதிப்பு கூறும். வால்மீகம், மாயமான் இளைய பெருமாள் பெயரையும் பிராட்டியின் பெயரையும் கூறி விழுந்ததாகப் பேசும். கவிச்சக்கரவர்த்தி 'அட்ட திக்கினும் அப்புறத்தும் புக விட்டழைத்து ஒரு குன்றென வீழ்ந்தனன்' என்று கூறுவார் (கம்ப. 3313.) எய்யப் போய் வெய்ய சொல்லால் என்னும் பாடமும், அழைத்த பொய்க்*

*குரலின் ஓசை மயக்கிய துன்னை அம்ம' என்னும் பாடமும் நன்று. இப்பாட பேதங்கள் சில சுவடிகளில் தான் உள்ளன.* ***(74)***

***5302. ' "இக் குரல் இளவல் கேளாது ஒழிக" என,***
***இறைவன் இட்டான்***
***மெய்க் குரல்சாபம்; பின்னை, விளைந்தது விதியின்***
***வெம்மை;***
***"பொய்க் குரல்இன்று, பொல்லாப் பொருள் பின்பு***
***பயக்கும்" என்பான்,***
***கைக் குரல் வரிவில்லானும், இளையவன் வரவு***
***கண்டான்.***

***இறைவன் -*** *இராமபிரான்;* ***இளவல் இக்குரல் -*** *தம்பியாகிய இலக்குவன் இக் குரல் ஒலியை;* ***கேளாது ஒழிக என -*** *கேட்காமற் போகட்டும் என்று கருதி;* ***சாப மெய் குரல் -*** *தன் வில்லின் மெய்யான ஒலியை;* ***இட்டான் -*** *உண்டாக்கினான்;* ***பின்னை (உம்) -*** *அங்கனம் உண்டாக்கிய பின்னும்;* ***விதியின் வெம்மை -*** *விதியினுடைய விருப்பம்;* ***விளைந்தது -*** *நிறைவேறிற்று;* ***இன்று -*** *இன்றைய தினம் தோன்றிய (அரக்கனின்);* ***பொய்க்குரல் -*** *பொய்யான (மானின்) குரலால்;* ***பின்பு -*** *பின்னர்;* ***பொல்லாப் பொருள் -*** *தீய செயலானது;* ***பயக்கும் என்பான் -*** *நிகழப் போகிறது என்று கருதிய;* ***கைக்குரல் வரி வில்லானும் -*** *கையில் பொருந்திய வில்லேந்திய இராமபிரான்;* ***இளையவன் வரவு -*** *இலக்குவன் வருதலை;* ***கண்டான் -*** *பார்த்தான்.*

*மாயமான் குரல்கேளாமல் போகட்டும் என்று இராமபிரான் வில் ஒலியை எழுப்பியது முன்பு பேசப்படவில்லை. இங்ஙனம் முன்பு பேசாததைப் பின்பு கூறுவது கவிச்சக்கரவர்த்தியின் இயல்பு. வெம்மை - விருப்பம். 'வெம்மை வேண்டல்' என்று தொல்காப்பியம் பேசும். (தொல் உரி 334) வெப்பம் என்றும் கூறலாம். பொய்க்குரல் இன்று - பொய்க்குரல் போல் இல்லை என்றும் கூறப் பெற்றது. பொல்லாப் பொருள் - தீய செயல். ஒரு பொருள் சொல்லுவதுடையேன் (கலி 8)* ***(75)***

***5303. 'கண்டபின், இளைய வீரன் முகத்தினால் கருத்தை***
***ஓர்ந்த***
***புண்டரிகக்கணானும், உற்றது புகலக் கேட்டான்;***
***வண்டு உறை சாலைவந்தான், நின் திரு வடிவு***
***காணான்,***
***உண்டு உயிர்,இருந்தான்; இன்னல் உழப்பதற்கு***
***ஏது ஒன்றோ ?***

***கண்டபின் -*** *பார்த்தபிறகு;* ***இளைய வீரன் முகத்தினால் -*** *இலக்குவனின் முகக்குறிப்பால்;* ***கருத்தை ஓர்ந்த -*** *அவன் மனக் கருத்தை அறிந்த;* ***புண்டரீகக் கணானும் -*** *தாமரை மலர் போன்ற கண்களை உடைய இராமபிரானும் (இலக்குவன்);* ***உற்றது புகல -*** *நிகழ்ந்ததை எடுத்துக்கூற;* ***கேட்டான் -*** *கேட்டு அறிந்து;* ***வண்டு உறை சாலை வந்தான் -*** *வண்டுகள் மொய்த்துள்ள பர்ணசாலையை அடைந்து;* ***நின் திரு வடிவு***

***காணான் -*** *உன்னுடைய அழகிய வடிவத்தைக் காணாமல்;* ***உயிர் உண்டு -*** *பெருமூச்சையே உணவாகக் கொண்டு;* ***இருந்தான் -*** *உயிருடன் இருந்தனன் (அவன்);* ***இன்னல் உழப்பதற்கு -*** *துன்பத்தை அனுபவிப்பதற்கு;* ***ஏது ஒன்றோ -*** *காரணம் இது ஒன்று தானா ?*

*வண் துறை சாலை, என்று பிரித்து வளமான நீர்த்துறையை அடுத்த சாலை என்றும் பொருள் கூறலாம். உண்டு உயிர் இருந்தான் என்பதற்கு உயிருள்ளது என்னும் நிலையில் மட்டும் இருந்தவன் ஆனான் என்று கூறப்பெற்றது. புண்டரீகம். இச்சொல் வெண்டாமரை என்னும் பொருளில் வழங்குவது பெரும்பான்மை. ஆயினும் செந்தாமரை என்னும் பொருளில் இங்கே எடுத்தாளப்பட்டுள்ளது. புண்டரீகாட்சன் என்பது விஷ்ணு சஹஸ்ர நாமத்தில் 112வது திருநாமம் (தக்க-பரணி 22 குறிப்புரை 262 பக்கம்)* ***(76)***

***5304. 'தேண்டி நேர் கண்டேன்; வாழி ! தீது இலன் எம்***
***கோன்; ஆகம்***
***பூண்ட மெய்உயிரே நீ ! அப் பொய் உயிர் போயே***
***நின்ற***
***ஆண்தகைநெஞ்சில்நின்றும் அகன்றிலை; அழிவு***
***உண்டாமோ ?***
***ஈண்டு நீஇருந்தாய்; ஆண்டு, அங்கு, எவ் உயிர்***
***விடும் இராமன் ?***

*அம்மையே !*

**தேண்டி நேர்கண்டேன் -** *தேடி வந்து உன்னைஎதிரே காணப் பெற்றேன்;* **வாழி -** *வாழ்வாயாக;* **எம்கோன் -** *எம் தலைவனான இராமபிரான்;* **தீது இலன் -** *தீமை இலன்;* **நீ ஆகம் பூண்ட -** *நீ இராமபிரான் மேனியில் அணிந்துள்ள;* **மெய் உயிரே -** *உண்மையான உயிரே ஆவாய்;* **அப் பொய் உயிர் -** *அந்தப் பொய்யான உயிர்;* **போயே நின்ற -** *போன பிறகும் நிலைத்துள்ள;* **ஆண்டகை -** *ஆடவருள் தலைசிறந்த இராமபிரானின்;* **நெஞ்சில் நின்றும் -** *இதயத்தில் இருந்தும்;* **அகன்றிலை -** *நீங்கினாய் இல்லை;* **அழிவு உண்டாமோ -** *அவனுக்கு அழிவு உண்டாகுமா;* **ஈண்டு நீ இருந்தாய் -** *((உயிரான நீ) இங்கே இருந்துள்ளாய்;* **இராமன் -** *இராமபிரான்;* **ஆண்டு -** *அங்கே;* **எவ் உயிர் விடும் -** *எந்த உயிரை விடுவான். பிராட்டியேஇறைவனுக்கு உண்மையான உயிர் என்பது குறிப்பு. தலைவியைத் தலைவனின் உயிர் என்று இலக்கியம் பேசும். காணா மரபிற்று உயிர் என மொழிவோர்... பொய் மொழிந்தனரே. யாம் காண்கும் எம் அரும்பெறல் உயிரே... மழைக்கண் மாதர் பணைப் பெருந்தோட்டே' (தொல் - களவியல் 10 - மேற்கோள்)* ***(77)***

***5305. 'அந் நிலைஆய அண்ணல், ஆண்டு நின்று,***
***அன்னை ! நின்னைத்***
***துன் இருங் கானும்யாறும் மலைகளும் தொடர்ந்து***
***நாடி,***
***இன் உயிர்இன்றி ஏகும் இயந்திரப் படிவம் ஒப்பான்,***

***தன் உயிர்புகழ்க்கு விற்ற சடாயுவை வந்து சார்ந்தான்.***

***அன்னை*** *- தாயே;* ***அந்நிலை ஆய அண்ணல்*** *- அப்படிப்பட்ட நிலையை அடைந்த இராமபிரான்;* ***ஆண்டு நின்று*** *- அந்தப் பர்ணசாலையிலிருந்து;* ***நின்னை*** *- உன்னை;* ***துன் அருங்கானும்*** *- நெருங்கிய பெரிய காடுகளையும்;* ***யாறும் மலைகளும்*** *- ஆறுகளையும் மலைகளையும்;* ***தொடர்ந்து நாடி*** *- நெருங்கித் தேடிப் பார்த்து; (அங்கெல்லாம் உன்னைக் காணாமையால்)* ***இன் உயிர் இன்றி*** *- இனிய உயிர் இல்லாமல்;* ***ஏகும்*** *- செல்கின்ற;* ***இயந்திரப்படிவம் ஒப்பான்*** *- எந்திரப் பாவையை ஒத்தவனாய்;* ***தன் உயிர்*** *- தன்னுடைய உயிரை;* ***புகழ்க்கு விற்ற சடாயுவை*** *- புகழின் பொருட்டாக வழங்கிய சடாயுவை;* ***வந்து சார்ந்தான்*** *- வந்து அணுகினான்.*

*இயந்திரத்துக்குஉயிர் இல்லை. பெருமானும் அப்படியிருந்தான். 'புகழ் எனில் உயிரும் கொடுக்குவர்' என்று சங்க நூல் பேசும். அதை அடி ஒற்றி உயிர் புகழ்க்கு விற்ற சடாயு என்று புகழப் பெற்றது. இராமபிரான் சடாயுவின் தியாகத்தைத் தெய்வ மரணம் என்று பேசுவான். (கம்ப. 6477.) சுக்கிரீவன், 'காட்டிலே கழுகின் வேந்தன் செய்தன காட்ட மாட்டேன்'' (கம்ப. 6933) என்று பேசி வருந்துவான். சம்பந்தப் பெருமான் சடாயுவைப் பத்துப் பாசுரங்களாலும், போற்றுவார். (புள்ளிருக்கு வேளூர்ப் பதிகம்) வந்து சார்ந்தான் என்பதில் உள்ள வந்து அசை என்றும் கொள்ளலாம்.* ***(78)***

***5306. 'வந்து, அவன் மேனி நோக்கி, வான் உயர் துயரின் வைகி,***
***"எந்தை ! நீஉற்ற தன்மை இயம்பு" என, இலங்கை வேந்தன்,***
***சுந்தரி ! நின்னைச் செய்த வஞ்சனை சொல்லச் சொல்ல,***
***வெந்தன உலகம்என்ன, நிமிர்ந்தது சீற்ற வெந் தீ.***

***சுந்தரி*** *- குண அழகுபெற்றவளே;* ***வந்து*** *- சடாயுவின் பக்கத்தே வந்து(இராமபிரான்);* ***அவன் மேனி நோக்கி*** *- சடாயுவின் (போர்க்காயம் பெற்ற)திருமேனியைப் பார்த்து;* ***வான் உயர் துயரின் வைகி*** *- மிகப் பெரிய துன்பத்தில் ஆழ்ந்து;* ***எந்தை*** *- என்னுடைய தந்தையே;* ***நீ உற்ற தன்மை*** *- நீ துன்பமடைந்த காரணத்தை;* ***இயம்பு என*** *- கூறுக என்று சொல்ல (சடாயு);* ***இலங்கை வேந்தன்*** *- இலங்கை அரசனான இராவணன்;* ***நின்னைச் செய்த*** *- உனக்குச் செய்த;* ***வஞ்சனை சொல்ல சொல்ல*** *- வஞ்சகத்தை ஒவ்வொன்றாகஎடுத்துக் கூறுந்தொறும் கூறுந் தொறும்;* ***சீற்ற வெந் தீ*** *- இராமபிரானின்கோபமாகிய கொடிய நெருப்பு;* ***உலகம் வெந்தன என்ன*** *- உலகம் வெந்துபோயின என்று கூறும்படி;* ***நிமிர்ந்தது*** *- படிப்படியாக வளர்ந்தது.*

*நின்னைச் செய்த- நினக்குச் செய்த - உருபு மயக்கம். சொல்லச் சொல்ல, சீற்றவெந்தீ நிமிர்ந்தது என முடிக்க. சொல்லும் தோறும் சொல்லும் தோறும் சீற்றத் தீ படிப்படியாக வளர்ந்தது. சொல்லச் சொல்ல பொருளொடு புணர்ந்த அடுக்கு.*
***(79)***

*5307. ‘சீறி, “இவ் உலகம் மூன்றும் தீந்து உக, சின வாய்*
*அம்பால்*
*நூறுவென்” என்று,கை வில் நோக்கியகாலை,*
*நோக்கி,*
*“ஊறு ஒருசிறியோன் செய்ய, முனிதியோ உலகை ?*
*உள்ளம்*
*ஆறுதி” என்று,தாதை ஆற்றலின் சீற்றம் ஆறி.*

***சீறி*** - *சீற்றம் கொண்டு;* ***இ*** - *இந்த;* ***உலகம் மூன்றும்*** - *மூன்று உலகமும்;* ***தீந்து உக*** - *எரிந்து சாம்பலாய்ச் சிதற;* ***சினவாய் அம்பால்*** - *கோபத்தையும் தப்பாமையும் உடைய அம்பினாலே;* ***நுறுவென் என்று*** - *அழிப்பேன் என்று கூறி; (தன்னுடைய)* ***கைவில் நோக்கிய காலை*** - *கையில் உள்ள வில்லைப் பார்த்தபோது;* ***தாதை*** - *தந்தையாகிய சடாயு;* ***நோக்கி*** - *ஐயனைப் பார்த்து;* ***ஒரு சிறியோன் ஊறு செய்ய*** - *ஒரு அற்பன் தீமையைச் செய்ய; (அதற்காக) (ஒன்றும் அறியாத)* ***உலகை முனிதியோ*** - *உலகைச் சீறினாயோ ? (இது தகாது.ஆகையால்)* ***உள்ளம்ஆறுதி*** - *மனத்தில் அமைதி பெறுக;* ***என்று ஆற்றலின்*** - *என்று கூறி தணிக்கச் செய்ததால்;* ***சீற்றம் ஆறி*** - *கோபம் தணிந்து.*

*இதுவும் அடுத்தபாடலும் குளகம். தாதை என்றது சடாயுவை. ஒருவன் துன்புறும் போது அதற்காகத் துடிக்காத உலகம் அழிய வேண்டும் என்று அண்ணல் கருதினான். அவன் சடாயுவை நோக்கி ‘நீ இக்கோள் உறக் குலுங்கல் செல்லா உலகங்கள்.... அழியத்தக்கன’ என்பான். அதற்கு சடாயு, கூறியதை அறிக. (கம்ப. 3526) உரியவர் பால் சீற்றம் கொள். மற்றவரைப் பழிப்பது பகைப்பது முறையல்ல என்றார்.* ***(80)***

*5308. ‘ “எவ் வழி ஏகியுற்றான் ? யாண்டையான் ?*
*உறையுள் யாது ?*
*செவ்வியோய், கூறுக !” என்ன, செப்புவான் உற்ற*
*செவ்வி,*
*வெவ்விய விதியின் கொட்பால், வீடினன் கழுகின்*
*வேந்தன்;*
*எவ்விய வரி விற் செங் கை இருவரும், இடரின்*
*வீழ்ந்தார்.*

*(இராமபிரான்)*

***செவ்வியோய்*** - *செம்மைப்பண்புடையவளே !* ***அன்னான்*** - *அநத் இராவணன்;* ***எவ்விழி ஏகி உற்றான்*** - *எந்த வழியில் போனான்;* ***யாண்டையான்*** - *அவன் தற்போது எங்கே உள்ளான்;* ***உறையுள் யாது*** - *அவன் தங்கும் இடம் எது;* ***கூறுக என்ன*** - *கூறுவாயாக என்று கூற;* ***கழுகின் வேந்தன்*** - *கழுகுக்குல அரசனான சடாயு;* ***செப்புவான் உற்ற செவ்வி*** - *அதற்கு மறுமொழி கூறத் தொடங்கும் போது;* ***வெவ்விய*** - *கொடுமையான;* ***விதியின் கொட்பால்*** - *விதியின் சுழற்சியினாலே;* ***வீடினன்*** - *(சடாயு) இறந்தான் (அதுகண்டு);* ***எவ்விய*** - *அம்புகளை ஏவும்;* ***வரிவில் செங்கை*** - *கட்டமைந்த வில் ஏந்திய சிவந்த கையினை உடைய;* ***இருவரும்*** - *இராமனும் இலக்குவனும்;* ***இடரின் வீழ்ந்தார்*** - *துன்பத்தில் அழுந்தினர்.*

*பிறன் பொருட்டுஉயிர் நீத்த பண்பு நோக்கிச் செவ்வியோய் ! என்று சடாயு புகழப் பெற்றான். சம்பந்தப் பெருமான் விடைத்து வரும் இலங்கைக் கோன் மலங்கச் சென்று இராமற் காய்ப் புடைத்தவனைப்பொருது அழித்தான்என்பர். இப் பதிகம், கவிச்சக்கரவர்த்திக்கு மிகமிக உதவியமை அறிக. சம்பந்தர் 'விடைத்துவரும் இராவணன்' என்றார். கவிச்சக்கரவர்த்தி 'வெங்கண் எரியப் புருவம் மீதுற விடைத்தான்' (கம்ப. 3255) என்பர். மாரீசனை விடைத்து வந்த இராவணன் என்று திருமுறைக்குப் பொருள் கூற வேண்டும். சேக்கிழாருக்கு அடுத்த படி திருமுறை வல்லாளன் கம்பனே. இங்ஙனம் பலவுள. கம்பனுக்கு இராவணனின் முக்கோடி வாழ்நாளையும் வழங்கியது திருமுறைகளே. கடன் என்றது இறுதிச் சடங்கை. சேக்கிழார் பெருமான், நாவரசர் தாய் தந்தையர்க்குச் செய்த கடனை; மனம் தேற்றத் துயர் ஒழிந்து பெருவானம் அடைந்தாற்குச் செய்கடன்கள் பெருக்கினார் என்பர். இராமபிரான் தாதையாகிய சடாயுவுக்குச் செய்த இறுதிச் சடங்கு முன்பு பேசப் பெற்றது. 'கார் அகில் ஈட்டத் தோடும் சந்தனம் குவித்து... தருப்பையும் பூவும் சிந்தினர் என்றும், ஏந்தினன் இருகை நன்றாய் ஏந்தினன் ஈமம் தன்மேல், சாந்தொடு மலரும் நீரும் சொரிந்தனர் தலையின் சாரல் காந்து எரி காய மூட்டிக் கடன் முறை கடவா வண்ணம் நேர்ந்தனன்'' என்றும் (கம்ப. 3536-37) என்று பெருமான் செய்த இறுதிக் கடன் கல்நெஞ்சும் உருகக் காட்டப் பெற்றது. தென்புலத்தார் கடன் புதல்வரால் நிறைவு செய்யப் பெறும்; புதல்வர் இன்றி இறந்த சடாயுவுக்கு இறைவனே புதல்வனாக வந்து இறுதிக்கடன் செய்தனன். இதனால் தியாகிகட்கு இறைவனே இறுதிக் கடனும் புரிவான் என்று அறிக.* ***(81)***

***5309. 'அயர்ந்தவர், அரிதின் தேறி, ஆண் தொழில் தாதைக்கு, ஆண்டு,***
***செயத் தகுகடன்மை யாவும், தேவரும் மருளச் செய்தார்;***
***"கயத் தொழில்அரக்கன்தன்னை நாடி, நாம் காண்டும்" என்னா,***
***புயல் தொடுகுடுமிக் குன்றும், கானமும், கடிது போனார்.***

***அயர்ந்தவர் -*** *மனம்சோர்ந்த இராமலக்குவர்கள்;* ***அரிதின் தேறி -*** *சிரமப்பட்டுத் தெளிந்து (அவர்கள்);* ***ஆண் தொழில் தாதைக்கு -*** *ஆண் மைத்தொழில் புரிந்த தந்தைக்கு;* ***ஆண்டு செயத் தகு கடன்கள் யாவும் -*** *அவ்விடத்துச் செய்ய வேண்டிய கடமைகள் யாவற்றையும்;* ***தேவரும் மருள -*** *தேவர்களும் வியந்து மருட்சியடைய;* ***செய்தார் -*** *செய்து நிறைவேற்றினர்(பிறகு) (இராமலக்குவர்கள்);* ***கயத் தொழில் அரக்கன் தன்னை -*** *கயமைத்தொழிலில் வல்லஇராவணனை;* ***நாடி நாம் காண்கும் என்னா -*** *நாம் தேடிக் கண்டு பிடிப்போம் என்று கருதி;* ***புயல் தொடும் -*** *மேகமண்டலத்தை அளாவிய;* ***குடுமிக் குன்றும் -*** *சிகரத்தை உடைய மலைகளையும்;* ***கானமும் -*** *காடுகளையும் (கடந்து);* ***கடிது -*** *விரைந்து;* ***போனார் -*** *சென்றனர்.*

*கயமைத் தொழில்என்பது கயத் தொழில் என்று வந்தது; தம்மை நியமிப்பார் இன்றி மனம் விரும்பியபடி செய்பவன் கயவன்.* ***(82)***

***5310. 'அவ் வழி,நின்னைக் காணாது, அயர்த்தவர் அரிதின் தேறி,***
***செவ் வழிநயனம், செல்லும் நெடு வழி சேறு செய்ய,***
***வெவ் அழல் உற்றமெல்லென் மெழுகு என அழியும் மெய்யன்,***
***இவ் வழி இனையபன்னி, அறிவு அழிந்து, இரங்கலுற்றான்.***

***அவ்வழி*** *- அந்தஇடங்களில்;* ***நின்னைக் காணாது -*** *உன்னைக் காணாமையால்;* ***அயர்த்தவர் -*** *கலங்கிய இராமலக்குவர்;* ***அரிதில் தேறி -*** *ஒருவாறு தெளிவு பெற்று;* ***செவ் அழி நயனம் -*** *(அழுததால்) செவ்விகுன்றிய கண்கள்;* ***செல்லும் நெடுவழி -*** *அவர்கள் செல்லும் வழியை;* ***சேறு செய்ய -*** *(கண்ணீரால்) சேற்றை உண்டு பண்ணவும்;* ***வெவ் அழல் உற்ற -*** *(இராமன்) கொடிய நெருப்பை அடைந்த;* ***மெல்லென் மெழுகு என அழியும் -*** *மெல்லிய மெழுகுபோல் இளைக்க நின்ற;* ***மெய்யன் -*** *உடம்புடையனாய்;* ***இவ்வழி -*** *இந்த நிலையில்;* ***இனைய பன்னி -*** *இந்த வார்த்தைகளைக் கூறி;* ***அறிவு அழிந்து -*** *அறிவு கெட்டு;* ***இரங்கல் உற்றான் -*** *மனம் கரைந்தான்.*

*காணாதுஅயர்ந்தவர் இருவராதலின் பன்மையாகவும், பிரிவுத் துயரால் பெரிது இரங்கிப் புலம்பியவன் இராமன் ஒருவனே ஆதலால் மெய்யன், உற்றான் என்று ஒருமையாகவும் கூறினர். செவ்வழி என்பதற்கு, சிவந்த காந்தி வழிகிற, என்றும் (மகாவித்துவான் வி, கோவிந்தப் பிள்ளை) செம்மை மிகுந்த என்றும் (வை,மு,கோ) செம்மை நிறம் மிகுந்த (அண்ணா - பதிப்பு) நன்றாக என்றும் (அடை - பதிப்பு) உரைகள் கூறப் பெற்றன.* ***(83)கலிநிலைத் துறை***

***5311. 'கன்மத்தைஞாலத்தவர் யார் உளரே கடப்பார் ?***
***பொன் மொய்த்ததோளான், மயல் கொண்டு புலன்கள் வேறாய்,***
***நல் மத்தைநாகத்து அயல் சூடிய நம்பனேபோல்,***
***உன்மத்தன்ஆனான், தனை ஒன்றும் உணர்ந்திலாதான்.***

***பொன் மொய்த்ததோளான் -*** *திருமகள் தங்கியதோள்களை உடைய இராமபிரான்;* ***ஒன்றும் -*** *சிறிதும்;* ***தனை உணர்ந்திலாதான் -*** *தன்னை அறிந்து கொள்ளாமல்;* ***மயல் கொண்டு -*** *பிராட்டியின் பால் காதல் மிகுந்து;* ***புலன்கள் வேறு ஆய் -*** *ஐம்புலன்களும் நிலைதிரிந்து (உமையைப் பிரிந்த);* ***நல்மத்தம் -*** *நல்ல ஊமத்தம் பூவையும்;* ***நாகத்து அயல் -*** *பாம்பின் அருகில்;* ***சூடிய -*** *அணிந்த;* ***நம்பனே போல் -*** *சிவபிரானைப் போல;* ***உன்மத்தன்ஆனான் -*** *பித்தம் பிடித்தவன் ஆனான்;(ஆகையால்)* ***ஞாலத்தவர் -*** *உலகில்உள்ளவர்களுள்;* ***கன்மத்தை -*** *வினையின் நுகர்ச்சியை;* ***கடப்பார் -*** *வெற்றிகொண்டவர்;* ***யார் உளர் -*** *எவர் உள்ளனர். கடப்பார் -வெற்றி கொள்பவர். கடப்பார் எவரோ கருவினையை என்பர் புகழேந்தியார். மொய்த்தல் - தங்குதல் (இருத்தல்) மொய்த்தல் என்பது கொடுத்தலும் இருத்தலும் (அகராதி நிகண்டு. மொம் முதல் 5) சிவபிரானைப் பித்தன் என்று பேசுவது மரபு.* ***(84)***

*5312.* ***' "போது ஆயினபோது, உன தண் புனல் ஆடல்***
***பொய்யோ ?***
***சீதா, பவளக்கொடி அன்னவள்-தேடி, என்கண்***
***நீ தா;தருகிற்றிலையேல், நெருப்பு ஆதி !" என்னா,***
***கோதாவரியைச்சினம் கொண்டனன், கொண்டல்***
***ஒப்பான்.***

**கொண்டல்ஒப்பான் -** *மேகம் போன்றஇராமபிரான்;* **கோதாவரியை -** *கோதாவரியைப் பார்த்து (நதியே);* **போது ஆயின போது -** *சூரியன் உதிக்கும் சமயத்தில்;* **பவளக்கொடி அன்னவள் சீதை -** *பவளக்கொடி போலும் சீதை;* **உன தண்புனல் -** *உன்னுடைய குளிர்ந்த நீரில்;* **ஆடல் பொய்யோ -** *நீராடியது பொய்யா;* **அன்னவள் தேடி -** *அவளைத் தேடிக் கொண்டு வந்து;* **என்கண் நீ தா -***என்னிடம்கொடுப்பாயாக;* **தருகிற்றிலையேல் -** *தாராமல் போவாய் என்றால் (நீ);* **நெருப்பு ஆதி என்னா -** *நெருப்பு மயமாகி விடுவாய் என்று கூறி;* **சினம் கொண்டான் -** *சீற்றம் கொண்டான்.*

*போது - சூரியன்.போதும் வைகிற்றுப் போம் இடம் வேறு இலை என்பர் சேக்கிழார் (இளையான்குடி) போதும் சென்றது குடபால் (வனம்புகு 19)*
***(85)***

*5313.* ***' "குன்றே ! கடிது ஓடினை, கோமளக் கொம்பர்***
***அன்ன***
***என் தேவியைக்காட்டுதி; காட்டலைஎன்னின், இவ்***
***அம்பு***
***ஒன்றே அமையும்,உனுடைக் குலம் உள்ள எல்லாம்***
***இன்றே பிளவா,எரியா, கரி ஆக்க" என்றான்.***

**குன்றே -** *மலையே நீ;* **கடிது ஓடினை -** *வேகமாக ஓடிப் போய் (தேடி);* **கோமளக் கொம்பர் அன்ன -** *அழகிய பூங்கொம்பு போலும்;* **என் தேவியைக் காட்டுதி -** *என்னுடைய தேவியைக் காண்பி;* **காட்டலை என்னின் -** *அவ்வாறு காட்டவில்லை என்றால்;* **உன் உடைக்குலம் -** *உன்னுடைய மலைக் கூட்டங் களையும்;* **உள்ள எல்லாம் -** *அம்மலையில் உள்ள அனைத்தையும்;* **இன்றே -** *இன்றைய தினமே;* **பிளவா -** *பிளந்து;* **எரியா -** *எரித்து;* **கரி ஆக்க -** *கரியாகச் செய்ய;* **இவ் அம்பு ஒன்றே -** *இந்த ஓர் அம்பு;* **அமையும் -** *போதியதாகும்.* **என்றான் -** *என்று கூறினான்.*

*கோமளம் - இளமைஅழகு. கோமளக் கொழுந்து என்றும் (திருவாசகம்) கோமள ஆன்கன்று (திருவாய்மொழி) என்றும் கூறப் பெற்றன. இஃதொரு ராம நாடகம்.*
***(86)***

*5314.* ***' "பொன் மான் உருவால் சில மாயை புணர்க்க***
***அன்றோ,***
***என் மான்அகல்வுற்றனள் இப்பொழுது என்கண் ?"***
***என்னா,***
***நன் மான்களைநோக்கி, "நும் நாமமும் மாய்ப்பென்***

***இன்றே,***
***வில் மாண்கொலை வாளியின்" என்று, வெகுண்டு***
***நின்றான்.***

***பொன்மான்உருவால் -*** *(அரக்கன்) பொன் போலும் மான் வடிவத்தால்;* ***சில மாயை புணர்க்க அன்றோ -*** *சில மாயைகளைச் செய்த்தனால் அல்லவா;* ***என்கண் -*** *என்னிடத்திலிருந்து;* ***என்மான் -*** *என்னுடைய மான் போன்ற சீதை;* ***இப்பொழுது -*** *இந்தச் சமயத்தில்;* ***அகல்வுற்றனள் -*** *பிரிந்து சென்றனள்;* ***என்னா -*** *என்று கூறி;* ***நன் மான்களை நோக்கி -*** *பிறர்க்குத் தீங்கு செய்யாத மான்களைப் பார்த்து;* ***இன்றே -*** *இன்றைய தினமே;* ***வில் மாண் கொலை வாளியின் -*** *வில்லிலே மாட்சிமைப் பட்ட கொலைத் தொழில் செய்யும் அம்பாலே;* ***நும் நாமமும் -*** *உங்களுடைய பெயரையும்;* ***மாய்ப்பேன் -*** *அழிப்பேன்;* ***என்று வெகுண்டு நின்றான் -*** *என்று கூறிச் சீறி நின்றான்.*

*புணர்த்த -செய்ய. தூமமென் குழலியர் புணர்த்த சூழ்ச்சியால் (திருவவதாரம் 47) 'வில் மாண்' என்று பாடம் கொள்வாரும் உளர். வில்மாண் - வில்லுக்குச் சுவாமியான இராமன் என்பது பழைய உரை.* ***(87)***

*5315.* ***'வேறுற்ற மனத்தவன், இன்ன விளம்பி நோவ,***
***ஆறுற்ற நெஞ்சின்தனது ஆர் உயிர் ஆய தம்பி***
***கூறுற்ற சொல்என்று உள கோது அறு நல்***
***மருந்தால்***
***தேறுற்று, உயிர்பெற்று, இயல்பும் சில தேறலுற்றான்.***

***வேறு உற்றமனத்தவன் -*** *வேறுபட்ட மனத்தை உடையஇராமபிரான்;* ***இன்ன -*** *இப்படிப்பட்டவற்றை;* ***விளம்பி நோவ -*** *சொல்லி வருத்தம் அடைய(அப்போது);* ***ஆறு உற்ற -*** *ஆறுதலைப் பெற்ற;* ***நெஞ்சின் -*** *மனத்தைஉடைய;* ***தனது ஆர் உயிர் ஆய -*** *தனது அரிய உயிர் போன்ற;* ***தம்பி -*** *தன்னுடைய தம்பியான இலக்குவன்;* ***கூறுற்ற -*** *எடுத்துக்கூறிய;* ***சொல் என்றுஉள -*** *சொற்கள் என்று உள்ள;* ***கோதறு -*** *குற்றம் அற்ற;* ***நல் மருந்தால் -*** *நல்ல மருந்தினால்;* ***தேறுற்று -*** *தெளிவு பெற்று;* ***உயிர்பெற்று -*** *வலிமைபெற்று;* ***சில இயல்வும் -*** *சில உபாயங்களையும்;* ***தேறல் உற்றான் -*** *ஆராயத் தொடங்கினான். உயிர்பெற்று -வலிமைபெற்று. உயிர் படைத்து.. ஓடல் உற்றது வடவைத்தீ (வருணனை 56) கம்பன் கழகம், உயிர் - வலிமை என்று விளக்கிற்று இயல்வு - உபாயம். வேள்வியும் நல் அறமும் இயல்பு (முதல் - அந் - 12) இவ்வுரையும் மேற்கோளும் வழங்கியது அண்ணாமலைகழகப்பதிப்பு. உபாயம்என்றது பிராட்டியைத் தேடுவதற்கு மேற்கொள்ள வேண்டிய நெறியை. ஆர் உயிராய தம்பி என்ற தொடரையும், 'தம்பியர் அல்லது தனக்கு வேறு உயிர் இம்பரின் இலது என எண்ணி ஏய்ந்தவன்' (கம்ப. 3969) என்னும் அடிகளையும் ஒப்பிடுக.* ***(88)***

*5316.* ***'வந்தான்இளையானொடு, வான் உயர் தேரின்***
***வைகும்***
***நந்தாவிளக்கின் வரும் எம் குல நாதன் வாழும்***
***சந்து ஆர் தடங்குன்றினில்; தன் உயிர்க்***
***காதலோனும்***
***செந் தாமரைக்கண்ணனும், நட்டனர் தேவர் உய்ய.***

*(இராமபிரான்)*

*__வான் உயர் -__ விண்ணில் உயர்ந்துள்ள; __தேரின் வைகும் -__ தேரிலே வீற்றிருக்கும்; __நந்தா விளக்கின் வரும் -__ குறைவுபடாத சூரியன் பால் உதித் த; __எம்குல நாதன் வாழும் -__ எமது குலத்தவனான சுக்கிரீவன் தங்கிய; __சந்துஆர் -__ சந்தன மரங்கள் செறிந்த; __தடங்குன்றினில் -__ பெரிய இருசிய மூகமலையில்; __இளையானொடு வந்தான் -__ இளைய பெருமாளுடன் வந்தான்; (அங்கு) __செந்தாமரைக் கண்ணனும் -__ தாமரை போன்ற கண்களை உடைய இராமபிரானும்; __தன் உயிர்க்காதலோனும் -__ தன்னுடைய உயிர் மேல் அன்புள்ள சுக்கிரீவனும்; __தேவர் உய்ய -__ தேவர்கள் வாழ்வு பெற; __நட்டனர் -__ நட்புப் பூண்டனர்.*

*நந்தா விளக்கு -சூரியன். வருதல் - தோன்றுதல் (பிறத்தல்) தசரதன் மதலையாய் வருதும் (திரு அவதாரம்) சந்து - சந்தனம். அந்துவன் பாடிய சந்து செழு நெடுவரை (அகம் 59) தாமரைக்கண்ணன் - திருமால் (இராமபிரான்) தன்உயிர்க்காதலோன் - சுக்கிரீவன் - தன்னுடைய உயிர்மேல் ஆசை வைத்தவன்வாலிக்குப் பயந்து உயிரைக் காப்பாற்றிக் கொள்ள ரிசியமுகபர்வதம் வந்தவன்என்ற வரலாறு காண்க. __(89)__*

### *5317. ‘உண்டாயதும், உற்றதும், முற்றும் உணர்த்தி, உள்ளம்*
### *புண்தான் எனநோய் உற விம்முறுகின்ற போழ்தின்,*
### *எண்தான் உழந்துஇட்ட நும் ஏந்து இழை, யாங்கள் காட்ட,*
### *கண்டான், உயர்போதமும் வேதமும் காண்கிலாதான்.*

*__உயர் வேதமும் -__ உயர்ந்தவேதங்களும்; __போதமும் -__ (அவற்றால் உளதாம்) பேரறிவும்; __காண்கிலாதான் -__ காணவியலாத பரம்பொருளாகிய இராமபிரான்; __உண்டாயதும் -__ தனக்கு நேர்ந்த அவலத்தையும்; __உற்றதும் -__ அங்கு வந்ததையும்; __முற்றும் உணர்த்தி -__ அறிவித்து; __உள்ளம் -__ இதயமானது; __புண்தான் என நோய்உற -__ புண்ணால் ஆக்கப் பெற்றது என்று கூறும்படி துன்பமுற; __விம்முறுகின்ற போழ்தின் -__ நிலைகுலைந்த சமயத்தில்; __யாங்கள் -__ நாங்கள்; __நும் -__ உங்களுடைய; __எண்தான் உழந்திட்ட -__ நீங்கள் மனம் வருந்தி கிட்கிந்தையில் இட்ட; __ஏந்திழை காட்ட -__ ஆபரணங்களைக் காண்பிக்க (அதனை ஐயன்); __கண்டான் -__ பார்த்தான்.*

*விம்முறுதல் -நிலைகுலைதல். நின் ஏந்திழை என்னும் பாடம் சிறக்கும் போலும். இதுவரை பிராட்டி ஒருமையில் பேசப்பட்டாள் - இங்கு மாத்திரம் பன்மையா ? எண் - எண்ணம் - உள்ளம். இங்குள்ள தான் அசை எண் உழந்திட்ட என அமையும். போதம் - சிந்தை. வேதம் - மொழி. சிந்தையும் மொழியும் பரம் பொருளை உணர்த்தா என்பதைக் கவிச் சக்கரவர்த்தி குறிப்பால் பேசுகிறார். இப் பணி பொன்தான் என்ற இடத்தில் பணி பொன் னால்ஆக்கப் பெற்றது என அறிகிறோம். அது போல் உள்ளம் புண்தான் என்றஇடத்தும் உள்ளம் புண்ணால் ஆக்கப் பெற்றது என்று அறிக. உள்ளம்கொண்டு ஓர் உருச் செய்தாங்கு.... ஆக்கை அமைத்தனர் என்னும் வாசகஅமைப்பை நோக்கித் தெளிக. எண்தான் உழந்திட்ட - தேவரீர் திருவுள்ளத்திலே எண்ணித் திருப்பரிவட்டத்திலே பொதிந்து எறிந்த ஆபரணம் என்பது பழைய உரை (அடை - பதி) __(90)__*

### *5318. ‘தணிகின்ற நம் சொல் தொடர் தன்மையது அன்று தன்மை;*

***துணி கொண்டுஇலங்கும் சுடர் வேலவன், தூய***
***நின்கண்***
***அணி கண்டுழியே,அமுதம் தெளித்தாலும் ஆறாப்***
***பிணி கொண்டது;பண்டு அது உண்டு ஆயினும்,***
***பேர்ப்பதுஅன்றால்.***

***துணிகொண்டு -*** *பகைவரைத்துணித்தலை மேற்கொண்டு;* ***இலங்கும் -*** *விளங்கும்;* ***சுடர்வேலவன் -*** *வேலேந்திய இராமபிரான்;* ***தூய -*** *தூய்மையான;* ***நின்கண் -*** *உன்னுடைய கண்போலும்;* ***அணி கண்டுழி -*** *ஆபரணத்தைப் பார்த்த போது;* ***அமுதம் தெளித்தாலும் -*** *அமிர்தத்தையே தெளித்த போதிலும்;* ***ஆறாப் பிணி -*** *தணியாத நோய்;* ***கொண்டது -*** *பற்றிக் கொண்டது;* ***அது -*** *அந்தப் பிணியானது;* ***பண்டு உண்டு-*** *முன்பே உள்ளது;* ***ஆயினும் -*** *எங்கனம் ஆராய்ந்து;* ***பேர்ப்பது அன்று -*** *போக்கத்தக்கது அன்று;* ***தன்மை -*** *அப்பிணியின் தன்மை;* ***தணிகின்ற நம் சொல் -*** *தாழ்ந்த நம் சொல்லால்;* ***தொடர் தன்மையது அன்று -*** *பின்பற்றிச் சொல்லும் தன்மையுடையது அன்று.*

*பிரிவாற்றாமையால் இதயத்தில் உள்ள அவலத்தைப் பிணி கொண்டது; அப்பிணி அமுதத்தைத் தெளித்தாலும் மாறாதது. அது பேர்ப்பது அன்று என்க.*
***(91)***

***5319. 'அயர்வு உற்று, அரிதின் தெளிந்து, அம் மலைக்கு***
***அப் புறத்து ஓர்***
***உயர் பொன்கிரி உற்று உளன், வாலி என்று ஓங்கல்***
***ஒப்பான்,***
***துயர்வு உற்று அவ்இராவணன் வாலிடைப் பண்டு***
***தூங்க,***
***மயர்வு உற்றபொருப்பொடு, மால் கடல் தாவி***
***வந்தான்.***

***அயர்வு உற்று -*** *சோர்ந்து;* ***அரிதின் தெளிந்து -*** *மிகவும் சிரமப்பட்டுத் தெளிந்து (இவை இராமன் நிலை);* ***அம்மலைக்கு -*** *அந்த இருசியமுக மலைக்கு;* ***அப்புறத்து ஓர் -*** *அந்தப் பக்கத்தில் உள்ள ஒரு;* ***உயர் -*** *உயர்ந்த;* ***பொன்கிரி உற்றுளன் -*** *அழகிய மலையில் இருப்பவனும்;* ***வாலி என்று ஓங்கல் ஒப்பான் -*** *வாலி என்னும் பெயருடன் மலையை ஒத்திருப்பவனும்;* ***துயர்வு உற்று -*** *துன்பம் அடைந்து;* ***அவ் இராவணன் -*** *அந்த இராவணன்;* ***வாலிடை -*** *தன் வாலின்கண்ணே;* ***பண்டு தூங்க -*** *முன்பு தொங்கும்படி (பிணித்து);* ***மயர்வுற்ற -*** *மயக்கம் அடைந்த;* ***பொருப்பொடு -*** *மலைகளையும்;* ***மால் கடல் -*** *பெரிய கடல்களையும்;* ***தாவி வந்தான் -*** *தாவி வந்தவனும்.* ***(92)***

***5320. 'ஆயானை, ஓர் அம்பினில் ஆர் உயிர் வாங்கி,***
***அன்பின்***
***தூயான்வயின்,அவ் அரசு ஈந்தவன், "சுற்று சேனை***
***மேயான் வருவான்"என விட்டனன்; மேவுகாறும்***
***ஏயான்,இருந்தான், இடைத் திங்கள் இரண்டு***

இரண்டும்.

***ஆயானை*** *- ஆகிய வாலியை;* ***ஓர் அம்பினில்*** *- ஒரு அம்பினாலே;* ***ஆர் உயிர் வாங்கி*** *- அரிய உயிரைக் கவர்ந்து;* ***அன்பின் துயான்வயின்*** *- அன்பினாலே தூய சுக்கிரீவனிடத்து;* ***அ அரசு ஈந்தவன்*** *- அந்த அரசைக் கொடுத்த இராமபிரான்; (சுக்கிரீவனை)* ***சுற்றும் சேனை மேயான்*** *- சுற்றுகின்ற சேனையுடன் கூடியவனாய்;* ***வருவான் என விட்டான்*** *- வரும்படியாக என்று அனுப்பிவிட்டு;* ***மேவுகாறும்*** *- அவன் வரும் வரையிலும்;* ***ஏயான்*** *- அவனை ஏவிய இராமன்;* ***திங்கள் இரண்டும் இரண்டும்*** *- நான்கு மாதங்களும்;* ***இடை*** *- அந்த இருசிய முகமலையில்;* ***இருந்தான்*** *- தங்கியிருந்தான்.*

*இராமபிரான்ஆறுமாதம் பொறுத்திருந்ததாக ஒரு தனிப்பாடல் பேசுவதைஉலகம் அறியும். இராமன் 'இறையாறு திங்கள் இருந்தான் வாலிக்கிளையான்வரை' (பெருந் தொகை 1004) மழைக்காலத்தில் படையெடுப்புநிகழ்த்தக்கூடாது. சாதுர்மாசம் என்று பேசப்படும் விரதத்தை மேற்கொள்ளவேண்டும். சாதுர் மாசம் - நான்கு மாதம். சமணர்களும் பௌத்தர்களும் கூடஇவ்விரதத்தை அனுஷ்டித்ததாக வரலாறு பேசும். 'பெருமான் சுக்கிரீவன்பால்,திங்கள் நான்கில் விரசுக' என்று கேட்டுக் கொண்டதாகப் பேசப் பெற்றது(கம்ப. 4138) அம்மலை என்பது பலர் அறிசுட்டு. முன்பு ஒன்றைக் கூறாமலேஇச்சுட்டு அமையும்.* ***(93)***

***5321. 'பின் கூடியசேனை பெருந் திசை பின்ன ஆக,***
***வில் கூடு நுதல்திரு ! நின்னிடை மேவ ஏவி,***
***தெற்கு ஊடுருவக்கடிது ஏவினன் என்னை' என்ன,***
***முன் கூடினகூறினன், காலம் ஓர் மூன்றும்***
***வல்லான்.***

***வில்கூடும்*** *- வில்லைஒத்த;* ***நுதல் திரு*** *- நெற்றியை உடைய திருமகளே;* ***பின் கூடிய சேனை*** *- காலம் தாமதித்து வந்த சேனையை;* ***பெருந்திசை பின்ன ஆக*** *- பெரிய திசைகள் பின் ஆகும்படி;* ***நின் இடை மேவ ஏவி*** *- நீ இருக்கும் இடத்தை அடையக் கட்டளையிட்டு விட்டு;* ***தெற்கு ஊடுருவ*** *- தென் திசையைத் துருவிச் செல்ல;* ***என்னை*** *- அடியேனை;* ***கடிது ஏவினன்*** *- வேகமாக ஏவினன்;* ***என்ன*** *- என்று;* ***முன் கூடின*** *- முன்பு நிகழ்ந்தவற்றை;* ***காலம் ஓர் மூன்றும் வல்லான்*** *- முக்காலமும் அறியவல்ல அனுமன்;* ***கூறினன்*** *- சொன்னான்.* *வில் கூடு -இதில் உள்ள கூடு உவம வாசகம்.*
***(94)*** *இராமபிரான்வருத்தம் எண்ணிய சீதையின் நிலை*

**கலிவிருத்தம்**

***5322. அன்பினன்இவ் உரை உணர்த்த, ஆரியன்***
***வன் பொறைநெஞ்சினன் வருத்தம் உன்னுவாள்,***
***என்பு உறஉருகினள்; இரங்கி ஏங்கினள்;***
***துன்பமும்உவகையும் சுமந்த உள்ளத்தாள்.***

***அன்பினன்*** *- அன்புவடிவாய அனுமன்;* ***இவ் உரை உணர்த்த*** *- இந்த மொழிகளைக் கூற (அதனால்);* ***துன்பமும்*** *- (பெருமான் உற்ற அவலத்தால்) கவலையையும்;* ***உவகையும்*** *- (பெருமான் தன்பால் கொண்ட காதலை அறிந்தமையால்) மகிழ்ச்சியையும்;* ***சுமந்த*** *- தாங்கிய;* ***உள்ளத்தாள்*** *- இதயத்தை உடைய பிராட்டி;*

***வன்பொறை*** - வலிமை மிக்க பொறுமை உடைய; ***நெஞ்சினன் ஆரியன்*** - இதயத்தை உடைய இராமபிரானின்; ***வருத்தம்உன்னுவாள்*** - துன்பத்தை எண்ணி; ***என்பு உற உருகினள்*** - அத்துன்பம்எலும்பையும் தாக்க அதனால் கரைந்து; ***ஏங்கினள்*** - ஏக்கம் அடைந்தாள்.

*உவகையும்துன்பமும் பிராட்டிபால் இருந்தது என்றான். இது கலவை மெய்ப்பாடு. இத்தகைய மெய்ப்பாட்டை உணர்த்துவதால் கவிச் சக்கரவர்த்தி உளவியலை வளப்படுத்துகிறார். என்புற உருகுதல், அனுபூதியின் முடிநிலை. கூம்பலங் கைத்தலத்து அன்பர் என்பூடுருகக் குவிக்கும் பாம்பலங்காரன் என்று கோவை பேசும். 'என்பு எனக்கு உருகுகின்றது' என்பான் அனுமன். ஆரியன் - மேலானவன். இராவணனும் இந்த அடைமொழி பெறுவான். குற்றாலத்தை ஆரிய நாடு என்று திரிகூடராசப்பர் பேசுவர். வன்பொறை நெஞ்சினன் - என்றது வன் பொறை நெஞ்சினன் ஆகி நம்மைக் கவனியான் என்று இருந்தோமே என்றது பழையவுரை (அடை - பதிப்பு) இவ்விருத்தம் விளம் - விளம் - மா - கூவிளம் என்னும் நான்கு சீர்களைப் பெற்று வரும். இத்தகு பாடல்கள் இந்நூலில் 2177 முறை கவிச்சக்கரவர்த்தியால் கையாளப்பட்டுள்ளன. (மணிமலர் 77)* ***(95)***

*கடல்கடந்தவாற்றைச் சீதை வினவலும் அனுமன் விடையும்*

***5323. நையுறுசிந்தையள், நயன வாரியின்***
***தொய்யல் வெஞ்சுழியிடைச் சுழிக்கும் மேனியள்,***
***'ஐய ! நீஅளப்ப அரும் அளக்கர் நீந்தினை***
***எய்தியது எப்பரிசு ? இயம்புவாய் !' என்றாள்.***

***நைஉறு சிந்தையள்***- நைதல்பொருந்திய உள்ளத்தை உடைய பிராட்டி; ***நயன வாரியின் தொய்யல்*** - கண்ணீர்ப் பெருக்கின்; ***வெம் சுழியிடை*** - கொடிய சுழிகளுக்கு இடையே; ***சுழிக்கும் மேனியள்*** - சுழலும் மேனியை உடையவளாய்; (அனுமனை நோக்கி) ***ஐய !*** - என் தந்தையே; ***நீ அளப்பரும் அளக்கர்*** - நீ அளவிட முடியாத கடலை; ***நீந்தனை எய்தியது*** - கடந்து வந்தது; ***எப்பரிசு*** - எந்த விதத்தால்; ***இயம்புவாய் என்றாள்*** - கூறுவாயாக என்று வினவினள்.

*தொய்யல் -நீர்ப்பெருக்கு (அண்ணாமலை - பதி) உயர்வு நவிற்சியால் பிராட்டி கண்ணீர்ப் பெருக்கில் உண்டான சுழிகளில் தத்தளித்தாள். 'கலங்கு தெண் திரையிற்றாய கண்ணின் நீர்க்கடலில் கண்டேன்', (கம்ப. 6041) என்று அனுமன் பெருமான்பால் பேசுவான். கடற்சுழி பட்டவர் போல் பிராட்டி தத்தளித்தாள் என்க.* ***(96)***

***5324. 'சுருங்கு இடை ! உன் ஒரு துணைவன் தூய தாள்***
***ஒருங்குடைஉணர்வினோர், ஓய்வு இல் மாயையின்***
***பெருங் கடல்கடந்தனர் பெயரும் பெற்றிபோல்,***
***கருங் கடல்கடந்தனென், காலினால்' என்றான்.***

***சுருங்கிடை*** - சுருங்கியஇடையை உடைய தாயே; ***உன் ஒரு துணைவன்*** - உன் ஒப்பற்ற நாயகனின்; ***தூய தாள்*** - தூய திருவடியில்; ***ஒருங்கு அடை*** - ஒன்றுபட்டு

*அடைந்த;* ***உணர்வினோர் -*** *பேரறிவு பெற்ற ஞானிகள்;* ***ஓய்வு இல் -*** *ஓய்ந்து போதல் இல்லாத;* ***மாயையின் பெருங்கடல் -*** *மாயையாகிய பெருங்கடலை;* ***கடந்தனர் -*** *தாண்டி;* ***பெயரும் பெற்றி போல் -*** *நீங்கும் தன்மையைப் போல (அடியேன்);* ***காலினால் -*** *கால்களால்;* ***கருங்கடல் -*** *கரிய கடலைக்;* ***கடந்தனென் -*** *கடந்து வந்தேன்;* ***என்றான் -*** *என்று கூறினான்.*

*கால் - பிராணசக்தி என்று கூறுவாரும் உளர்.* ***(97)***

## *5325. 'இத் துணைச் சிறியது ஓர் ஏண் இல் யாக்கையை; தத்தினை கடல்;அது, தவத்தின் ஆயதோ ? சித்தியின்இயன்றதோ ? செப்புவாய்' என்றாள்- முத்தினும்,நிலவினும், முறுவல் முற்றினாள்.*

***முத்தினும் -*** *முத்துக்களை விடவும்;* ***நிலவினும் -*** *நிலவை விடவும் (அழகிய);* ***முறுவல் -*** *புன்னகையால்;* ***முற்றினாள் -*** *சிறப்புற்ற பிராட்டி (அனுமனை நோக்கி);* ***இத்துணைச் சிறியது -*** *இவ்வளவு சிறியதான;* ***ஓர் -*** *ஒரு;* ***ஏணில் யாக்கையை -*** *வலிமையற்ற உடலை உடைய நீ;* ***கடல் தத்தினை -*** *கடலைக் கடந்து வந்துள்ளாய்;* ***அது -*** *அச்செயல்;* ***தவத்தின் ஆயதோ -*** *தவத்தினால் உண்டானதா ?* ***சித்தியின் இயன்றதோ -*** *சித்திகளால் நிகழ்ந்ததா?* ***என்றாள் -*** *என்று வினவினாள்.*

*முத்துக்களைவிடவும், நிலவை விடவும், புன்னகை சிறப்புற்றுள்ளது. பிராட்டி, அனுமனைத் தவசீலனா சித்தனா என்று வினவினள். தவமும் சித்தியும் பெற்றால் அன்றி அருஞ்செயல் செய்ய ஒண்ணாது என்பது குறிப்பு. தவம் நிலையானது. சித்தி தற்காலிகம். வேறுபாடு அறிக. சித்துக்கள் வல்லாரைத் தவத்தர் என்று கருதி நம்பியவர் பலர். பிராட்டி அனுமனை உரைத்துப் பார்க்கிறாள். சித்தியா, தவமா என்று பிராட்டி வினவினள். ஐயன், யான் தவத்தனும் அல்லன்; சித்தனும் அல்லன். அண்ணலின் அருளைச் சுமந்தவன் என்று கூறுவான். 'அருள் அது ஆம் என மீண்டனன். (கம்ப. 5335) என்று திருவடி கூறப்பெறுவதை, ஆய்க. இது நீண்ட உருவத்தைச் சுருக்குமாறு பிராட்டி கூறிய உத்தரவை அனுவதித்ததைக் கூறியதாகச் கொள்வதே கவிதைப் போக்கிற்கு ஏற்றது. சித்தியினும் சிறந்தது தவம். தவத்தினும் சிறந்தது அருள் ஆழ்வார்களும் நாயன்மார்களும் சித்தர் அல்லர் தவத்தர் அல்லர். அருளாளர் என்பதை அறிக.* ***(98)***

## *5326. சுட்டினன்,நின்றனன் - தொழுத கையினன்; விட்டு உயர்தோளினன்; விசும்பின் மேக்கு உயர் எட்ட அரு நெடுமுகடு எய்தி, நீளுமேல் முட்டும் என்று,உருவொடு வளைந்த மூர்த்தியான்.*

***தொழுத கையினன்-*** *கூப்பியகைகளை உடைய அனுமன்;* ***விட்டு -*** *இயல்பான நிலை நீங்கி;* ***உயர் தோளினன் -*** *உயர்ந்த தோள்களை உடையவனாய்;* ***விசும்பின் மேக்கு -*** *ஆகாயத்துக்கு மேலே;* ***உயர் -*** *உயர்ந்துள்ள;* ***எட்டரு நெடுமுகடு -*** *அணுக முடியாத நீண்ட அண்ட முகடானது;* ***எய்த -*** *தன் பக்கல் வர;* ***நீளுமேல் -*** *தன் மேனி உயருமானால்;* ***முட்டும் -*** *அம் முகடு இடிக்கும்;* ***என்று -*** *என்று கருதி;* ***உருவொடு வளைந்த -*** *திருமேனியுடன் குனிந்த;* ***மூர்த்தியான் -*** *தலையை உடையவனாய்;* ***சுட்டினன் நின்றனன் -*** *தன் வடிவத்தைப் பிராட்டிக்குச் சுட்டிக்காட்டி நின்றான்.*

*தொழுத கையினன்,சுட்டினன் நின்றனன் என்ற முடிக்க. முகடு முட்டும் என்று தலை குனிந்து நின்றனன் என்க. மூர்த்தம் என்பது தலை. மூர்த்தத்தை உடையவன் மூர்த்தி. முசலம்... மூர்த்தமேற் படுதலும்....துஞ்சினன்..... என்னும் சேதுபுராணம் (இலக்கும...21) (உருவொடு வளைந்த) மூர்த்தி - என்பதற்கு வடிவம் உடையவன் என்று பொருள் கூறப் பெற்றது. உரு என்றாலும் வடிவம் என்றுதானே; உருவொடு வளைந்த மூர்த்தி என்பதில் உருவத்தையும் வடிவத்தையும் வேறுபடுத்த வேண்டாமா - ஏற்பின் கொள்ளலாம். வானம் முட்டும் என்று அனுமன் தலையை வளைத்து நிற்பதுதானே இயற்கை. இவ்வுரையை வழங்கியவர் மகாவித்துவான் திரிசிரபுரம் வி. கோவிந்தப் பிள்ளை அவர் நாமம் வாழ்க. (பக்கம் 192) கம்பன் அகராதியும் இவ்வுரையை ஆதரிக்கிறது.* ***(99)***

***5327. 'செவ் வழிப் பெருமை என்று உரைக்கும் செம்மைதான்***
***வெவ் வழிப்பூதம் ஓர் ஐந்தின் மேலதோ ?***
***அவ் வழித்துஅன்று எனின், அனுமன் பாலதோ ?***
***எவ் வழித்துஆகும் ?' என்று எண்ணும் ஈட்டதே.***

*(அனுமன் பேருரு)*

***செவ்வழி** - செவ்விதாகிய வழியில் (அமையும்); **பெருமை என்று** - சிறப்புக்கள் உள்ளது என்று; **உரைக்கும் செம்மை** - பேசப்படும் உயர்வு; **வெவ்வழி** - இறைவன் காட்டும் வழியில் இயங்கும்; **ஓர்** - ஒப்பற்ற; **பூதம் ஐந்தின் மேலதோ** - ஐந்து பூதங்களைச் சார்ந்துள்ளதா; **அவ்வழித்து அன் றுஎனின்** - அப் பூதங்கள் பால் அவ் உயர்வு இருப்பது அன்று என்றால்; **அனுமன் பாலதோ** - அனுமனைச் சார்ந்துள்ளதா (அஃது); **எவ்வழித்துஆகும்** - எவ்விடத்தில் உளதாகும்; **என்று எண்ணும்** - என்று ஆராயும்; **ஈட்டது** - வலிமை உடையது. பேர் உரு ஈட்டதுஎன்க. வெவ்வழி, வெம்வழி, விரும்பும் வழி இறைவன் காட்டலின் வெவ்வழி என்க. பூதங்கள் இறைவன் வழியில் இயங்கும். அனுமனும் இறைவன் வழி இயங்குவான். உயர்வு அனுமனுக்கா பூதங்கட்கா. 'நிலனும், விசும்பும், வளியும் தீயும் நீரும் என்றாங்கு ஐம்பெரும் பூதத்து இயற்கை போல பொறுத்தலும் சூழ்ச்சியத கலமும் வலியும் தெறலும் அளியும் உடைய' சேரலாதனைப் பற்றிப் புறம் பேசும். (புறம் 2). பொறுத்தல் முதலாய பண்புகள் மிக்கிருத்தலின் அனுமன் பூதங்களினும் பேராற்றல் படைத்தவன் என்பது குறிப்பு. 'பூதங் கண்ணிய வலியெலாம் ஒரு தனி பொறுத்தான்' (கம்ப. 6189) என்றுஇரண்யனும் பூதம்நான்குடைய ஆற்றலான் என்று வாலியும் புகழப்படுவர்.* ***(100)***

***5328. ஒத்து உயர்கனக வான் கிரியின் ஓங்கிய***
***மெய்த் துறுமரம்தொறும் மின்மினிக் குலம்***
***மொய்த்துஉளவாம் என, முன்னும் பின்னரும்,***
***தொத்தின்தாரகை, மயிரின் சுற்று எலாம்.***

***உயர் கனகவான்கிரியின்** - சிறந்த பொன்மயமானமகாமேருமலையில்; **ஒத்து** - ஒன்றுக்கொன்று சமமாகி; **ஓங்கிய** - வளர்வதற்காக; **துறுமெய்** - நெருங்கிய வடிவத்தை உடைய; **மரந்தொறும்** - மரங்கள் தோறும்; **மின்மினிக்குலம்** - மின்மினிக் கூட்டம்;*

***மொய்த்து உளவாம் என* -** *நெருங்கியிருப்பதைப் போல;* ***தாரகை* -** *நட்சத்திரங்கள்;* ***மயிரின் சுற்றுஎலாம்* -** *(விசுவ ரூபம் எடுத்த) அனுமனின் மேனியில்;* ***முன்னும் பின்னரும்*-** *உள்ள மயிர்களின் சுற்றிடங்களில் எல்லாம் முன்னாலும் பின்னாலும்;* ***தொத்தின்* -** *தொத்திக் கொண்டிருந்தன.*

*மின்மினிக்குலம்என தாரகை தொத்தின என்று முடிக்க அண்ணல் மேனி மேரு. மயிர். மரம். நட்சத்திரம் மின்மினி என்க தொறும் பன்மைப் பொருள் உணர்த்தி வந்தது. இடைச் சொல் 'நவில் தொறும் நூல் நயம்' (குறள். 783) என்பது தமிழ்மறை. மெய் - வடிவம். 'மானவன் மெய் இறை மறக்கலாமையின்' (கம்க. 3636)* ***(101)***

***5329. கண்தலம்அறிவொடு கடந்த காட்சிய,***
***விண்தலம் இருபுடை விளங்கும் மெய்ம்மைய,***
***குண்டலம்இரண்டும், அக் கோளின் மாச் சுடர்***
***மண்டலம்இரண்டொடும், மாறு கொண்டவே.***

***அறிவொடு* -** *மக்களின்அறிவையும்;* ***கண்தலம்* -** *கண்களையும்;* ***கடந்த காட்சிய* -** *கடந்துள்ள காட்சியை உடையனவும்;* ***விண்தலம்* -** *ஆகாயத்தின்;* ***இருபுடை* -** *இரண்டு பக்கங்களிலும்;* ***விளங்கும் மெய்ம்மைய* -** *பிரகாசிக்கும் இயல்பை உடையனவும்; (ஆன)* ***குண்டலம் இரண்டும்* -** *அனுமனின் இரண்டு குண்டலங்களும்;* ***அக்கோளின்* -** *அந்த நவக்கிரங்களுக்குள்ளே;* ***மாச்சுடர்* -** *மிக்க ஒளியுடன் கூடிய;* ***மண்டலம் இரண்டொடும்* -** *இரண்டு சூரிய சந்திர மண்டலங்களுடன்;* ***மாறு கொண்டவே* -** *மாறுபாடு கொண்டுள்ளன. குண்டலம்வருணிக்கப்படுவதன் மூலமாக அனுமனின் பேருரு பேசப்படுகிறது. பொலன் கொள் சோதி குண்டல் வதனம் என்று அனுமப் படலம் பேசும் (32) அனுமன் குண்டலம் இராமன் மட்டும் அறிவான். மற்றவர் அறியார், என்று கூறும் வழக்கு உண்டு. அனுமனின் குண்டலத்தை வில்லி, எம்பிரான் தனக்கு ஒழிய மற்று யாவர்க்கும் தெரியா... குண்டலம் என்பர். கோள் என்றது நவக்கிரகங்களை மண்டலம் இரண்டு என்றது அக்கோள்களிற் சிறந்த சூரிய சந்திரர்களை.* ***(102)***

***5330. 'ஏண் இலதுஒரு குரங்கு ஈது' என்று எண்ணலா***
***ஆணியை, அனுமனை,அமைய நோக்குவான்,***
***'சேண் உயர்பெருமை ஓர் திறத்தது அன்று' எனா,***
***நாண் உறும்-உலகுஎலாம் அளந்த நாயகன்.***

***உலகு எலாம்அளந்த நாயகன்* -** *எல்லா உலகங்களையும்அளந்த திருமால்;* ***ஈது* -** *இது;* ***ஏண் இலது* -** *வலிமை இல்லாதது;* ***ஒரு குரங்கு* -** *ஒருஅற்பக் குரங்கு;* ***என்று எண்ணலா* -** *என்று கருத முடியாத;* ***ஆணியை அனுமனை* -** *அஞ்சுரு வாணி போலும் அனுமனை;* ***அமைய நோக்குவான்* -** *நன்றாகப் பார்த்து;* ***சேண் உயர் பெருமை* -** *ஆகாயத்தை அளாவிய இவர் சிறப்பு;* ***ஓர் திறத்தது அன்று* -** *ஒரு வகையானது அன்று;* ***எனா* -** *என்று கூறி;* ***நாண் உறும்* -** *வெட்கம் அடைவான்.*

*உலகு அளந்ததிருமால், அனுமனை நன்கு பார்த்து, இவன் சிறப்பு ஒருவகையானது அன்று என்று கூறி நாணம் அடைவான். ஆணி என்பதற்கு 'அஞ்சுருவாணி' என்று கூறவேண்டும். தேரின் நடுவில் எல்லாவற்றுக்கும் நடுநாயகமாக ஒரு நீண்ட கோல்*

*இருக்கும். அது ஆணி என்று பேசப்படும். 'தடையற்ற தேரில் அஞ்சுருவாணி போலவே தள்ளில் அசையாது நிற்கும்' என்பர் தாயுமானவர் (மௌனகுரு 9) 'ஆணியாய பழி' என்னும் (கம்ப. 3561) அயோமுகிப் பாடலுக்கு அமைந்த பழைய உரை காண்க. அது ஆணி - அஞ்சுருவாணி என்று வரைந்தது. உலகு எலாம் அளந்த நாயகன் - சூரியன் என்று பொருள் கூறுவது நேரிது. திருமால் அனுமன் பேருருக் கண்டு நாணான். மகிழ்வான். அவன் தன் தூதனைக் கண்டு சிறப்பியாமல் நாணுவானோ...* ***(103)***

***5331. எண் திசைமருங்கினும், உலகம் யாவினும்,***
***தண்டல் இல்உயிர் எலாம் தன்னை நோக்கின;***
***அண்டம்என்றதின் உறை அமரர் யாரையும்***
***கண்டனன்,தானும், தன் கமலக் கண்களால்.***

***எண்திசைமருங்கினும் -*** *எட்டுத் திசைகளின்எல்லையிலும்;* ***உலகம் யாவினும் -*** *எல்லா உலகங்களிலும்;* ***தண்டல் இல் -*** *இடம் விட்டுப் பெயராத;* ***உயிர் எலாம் -*** *உயிர்க்கூட்டங்கள் முழுவதும்;* ***தன்னை நோக்கின -*** *அனுமனைப் பார்த்தன;* ***தானும் -*** *அந்த அனுமனும்;* ***தன் -*** *தன்னுடைய;* ***கமலக் கண்களால் -*** *தாமரை போலும் கண்களால்;* ***அண்டம் என்றதின்உறை -*** *மேலுலகம் என்று கூறப்படுவதில் வாழும்;* ***அமரர் யாரையும் -*** *எல்லாத் தேவர்களையும்;* ***கண்டனன் -*** *நேரே பார்த்தான். அனுமன் எல்லாஇடங்களிலும் வியாபித்து இருந்தமையால் உயிர்கள் அவனைக் கண்டன. உயர்ந்து இருந்தமையால் அவன் தேவரைக் கண்டான். இதனால் பெருக்கமும் உயரமும் பேசப்பட்டது. மருங்கு - எல்லை. 'மருங்கு அறிவாரா மலை' (கலி 48) இனியர் உரை காண்க.* ***(104)***

***5332. எழுந்துஉயர் நெடுந்தகை இரண்டு பாதமும்***
***அழுந்துறஅழுத்தலின், இலங்கை ஆழ் கடல்***
***விழுந்தது;நிலமிசை விரிந்த வெண் திரை***
***தழைந்தன;புரண்டன மீனம்தாம் எலாம்.***

***எழுந்து -*** *நிமிர்ந்து;* ***உயர் -*** *உயர்கின்ற;* ***நெடுந்தகை -*** *பெருந்தகையான அனுமனின்;* ***இரண்டு பாதமும் -*** *இரண்டு திருவடிகளும்;* ***அழுந்து உற -*** *ஆழத்தில் புக;* ***அழுத்தலின் -*** *அழுத்திய காரணத்தால்;* ***இலங்கை -*** *இலங்கையானது;* ***ஆழ் கடல் -*** *ஆழமான கடலில்;* ***விழுந்தது -*** *மூழ்கியது;* ***விரிந்த வெண்திரை -*** *பரந்த வெண்மையான கடல் அலைகள்;* ***நிலமிசை -*** *பூமியின் கண்;* ***தழைந்தன -*** *பெருகின;* ***மீனம் எலாம் -*** *எல்லா மீன்களும்;* ***புரண்டன -*** *(அங்கங்கே) துள்ளின.*

*அனுமனின்திருவடிகள் அழுத்திய காரணத்தால் இலங்கை கடலில் மூழ்கியது. கடல் அலைகள் பூமியில் பெருகின. மீன்கள் துள்ளின. இது கற்பனை, நிகழ்ச்சியன்று. நெடுந்தகை என்பதற்குச் சாமுண்டி தேவ நாயகர் அளத்தற்கரிய தன்மை உடையாய் என்று விளக்கம் செய்தார்' அரவணையாய் என்னும் நெடுந்தகை நின்னையே யாம்' (புறப்பொருள் 191)* ***(105)*** *பேருரு அடக்கப்பிராட்டி வேண்டுதல்.*

***5333. வஞ்சிஅம்மருங்குல் அம் மறு இல் கற்பினாள்,***
***கஞ்சமும் புரைவனகழலும் கண்டிலாள்;***

**‘துஞ்சினர்அரக்கர்’ என்று உவக்கும் சூழ்ச்சியாள்,**
**‘அஞ்சினென் இவ்உரு; அடக்குவாய்’ என்றாள்.**

**வஞ்சி அம்மருங்குல் -** *வஞ்சிக் கொடி போலும்இடையை உடைய;* **அ -** *அந்த;* **மறு இல் கற்பினாள் -** *குற்றமற்ற கற்பை உடைய பிராட்டி;* **கஞ்சம் புரைவன -** *தாமரை மலரை ஒத்தனவான;* **கழலும் -** *(அனுமனின்) திருவடிகளையும்;* **கண்டிலள் -** *கண்டாள் இல்லை (அவள்);* **அரக்கர் -** *அரக்கர்கள்;* **துஞ்சினர் -** *(இவனால்) இறந்தவராவார்;* **என்று உவக்கும் -** *என்று மகிழ்ச்சியடையும்;* **சூழ்ச்சியாள் -** *எண்ணத்தை உடையவளாய்; (அனுமனை நோக்கி)* **இவ் உரு -** *இந்த உருவத்தைக் கண்டு;* **அஞ்சினென் -** *அடக்கிக் கொள்க;* **என்றாள் -** *என்று கேட்டுக் கொண்டாள்.*

*அனுமனின்பேருருவின் மாட்சியை விளக்கக், கழலும் கண்டிலள் என்றான் கவிச்சக்கரவர்த்தி. கஞ்சமும் என்பதில் உள்ள ‘உம்’ அசை. கஞ்சம் புரைவன என்க. களிறு சென்று களன் அகற்றவும் (புறம் 26)* ***(106)***

**5334. ‘முழுவதும் இவ் உருக் காண முற்றிய**
**குழு இலது உலகு;இனி, குறுகுவாய்’ என்றாள்,-**
**எழுவினும் எழில்இலங்கு இராமன் தோள்களைத்**
**தழுவினளாம் என,தளிர்க்கும் சிந்தையாள்.**

**எழுவினும் எழில்இலங்கு -** *கணைய மரத்தினும் அழகு விளங்கும்;* **இராமன் தோள்களை -** *இராமபிரானின் தோள்களை;* **தழுவினள் ஆம் என -** *அணைத்தவள் ஆவாள் என்று கூறும்படி;* **தளிர்க்கும் -** *பூரிக்கின்ற;* **சிந்தை -** *மனம் உடைய பிராட்டி (அனுமனை நோக்கி);* **இவ் உரு முழுவதும் காண -** *இந்த வடிவம் முழுவதையும் பார்ப்பதற்கு;* **உலகு முற்றிய -** *உலகம் முதிர்ச்சி பெற்ற;* **குழு இலது -** *கூட்டம் உடையதாக இல்லை (ஆகையால்);* **இனி -** *இப்போது;* **குறுகுவாய் -** *ஒடுங்குவாயாக;* **என்றாள் -** *என்று கூறினாள்.தளிர்க்கும்மேனியாள் உலகில் குழு இலது குறுகுவாய் என்றாள் என முடிக்க. முற்றிய - முதிர்ந்த - ஈண்டு முதிர்ச்சி என்றது அறிவின் முதிர்ச்சியை. அனுமன் பேருரு தனக்குச் சிறைவீடு கிடைக்கும் என்னும் நம்பிக்கை உண்டு பண்ணுதலின் பிராட்டி பூரித்தாள். எழில் - எழுச்சி. இனி - இப்போது. இனி நினைந்து இரக்கம் ஆகின்று (புறம்) முற்றிய குழு என்பதற்கு வலிமை மிகுந்த சாமார்த்தியம் என்று பொருள் கூறுவாரும் உளர்.* ***(107)***

**5335. ஆண்தகைஅனுமனும், ‘அருளது ஆம்’ எனா,**
**மீண்டனன்,விசும்பு எனும் பதத்தை மீச் செல்வான்,**
**காண்டலுக்குஉரியது ஓர் உருவு காட்டினான்;**
**தூண்டல் இல்விளக்கு அனாள் இனைய**
**சொல்லினாள்.**

**விசும்பு எனும் -** *ஆகாயம்என்று கூறப்படும்;* **பதத்தை மீச் செல்வான் -** *இடத்தையும் கடந்து மேலே செல்பவனான;* **ஆண்டகை அனுமனும் -** *ஆண்மை மிக்க அனுமனும்; (தான் கொண்ட பேர்உரு)* **அருளதாம் எனா -** *தங்கள் திருவுள்ளத் தருளின்படி என்று கூறி;* **மீண்டனன் -** *திரும்பி ஒடுங்கி;* **காண்டலுக்கு உரியது -** *காண்பதற்கு எளிதான;* **ஓர் உருவு காட்டினான் -** *ஒரு வடிவத்தைக் காண்பித்தான் (அப்போது);* **தூண்டல் இல் -**

*தூண்டுதல் இல்லாத;* ***விளக்கு அனாள் -*** *விளக்கை ஒத்த பிராட்டி;* ***இனைய சொல்லினாள் -*** *இந்த வார்த்தைகளைக் கூறினாள்.*

*பிராட்டி அடங்குகஎன்று கூறிய ஆணையை அருள் என்றான்.* ***(108)***

**அறுசீர்விருத்தம்**

***5336. இடந்தாய் உலகை மலையோடும், எடுத்தாய் விசும்பை***
***இவை சுமக்கும்***
***படம் தாழ் அரவைஒரு கரத்தால் பறித்தாய்,***
***எனினும், பயன் இன்றால்;***
***நடந்தாய் இடையேஎன்றாலும், நாண் ஆம் நினக்கு;***
***நளிர் கடலைக்***
***கடந்தாய்என்றல் என் ஆகும் ?-காற்றாம் அன்ன***
***கடுமையாய் !***

***காற்று ஆம்அன்ன -*** *காற்றைப் போலும்;* ***கடுமையாய் -*** *வேகமுள்ள அனுமனே; (நீ)* ***மலையோடும் -*** *மலைகளுடனே;* ***உலகை -*** *உலகத்தை;* ***இடந்தாய் -*** *பெயர்த்து எடுத்தாய்;* ***விசும்பை -*** *ஆகாயத்தை;* ***எடுத்தாய் -*** *தூக்கினாய்;* ***இவை சுமக்கும் -*** *மலை முதலாய இவற்றைத் தாங்கும்;* ***படம் தாழ் அரவை -*** *படங்கள் வளைந்திருக்கும் ஆதிசேடனை;* ***ஒரு கரத்தால் பறித்தாய் -*** *ஒரு கரத்தால் களைந்தெடுத்தாய்;* ***எனினும் -*** *என்றாலும்;* ***பயன் இன்று -*** *(அவை உன் ஆற்றலுக்குத் தக்க பயன் இல்லை;* ***இடையே -*** *கடலின் நடுவில்;* ***நடந்தாய் என்றாலும் -*** *நடந்து வந்தாய் என்று பேசப்பட்டாலும்; (அது)* ***நினக்கு நாணாம் -*** *உனக்கு நாணத்தை உண்டாக்கும்; (அங்ஙனம் இருக்க)* ***நளிர் கடலை -*** *பெரிய கடலை (நீ);* ***கடந்தாய் என்றல் -*** *தாண்டினாய் என்றாலும்;* ***என்னாகும் -*** *அது உனக்கு எச்சிறப்பை உண்டாக்கும்.*

*இடத்தல் -பெயர்த்தெடுத்தல். எடுத்தல் - சுமத்தல். இடந்தது பூமி எடுத்தது குன்றம் (முதல் அந்தாதி 39) படம் தாழ் - படம் வளைந்த - தாழ்குரல் ஏனல் (புறப்பொருள் பெருந்திணை 16) காற்றாம் - ஆம் சாரியை. (வி.கோ) கடுமையாய் - வேகம் உடையவனே. உன் சிறப்பு முற்றும் வெளிப்படுத்தற்கு உலகு இடத்தல் முதலானவை போதா. அனுமன் ஆற்றலுக்கு உலகை இடத்தல் முதலானவை சிறுசெயல். அவை பயனற்ற செயல். சிறந்த வீரம் அநியாயத்தை அழிக்கும் போதே பயனுடையதாகின்றது என்பது குறிப்பு. இவ்விருத்தம் மா-மா-காய்- மா-மா-காய் என்னும் 6 சீர்களை முறையே பெற்று வரும். இவ்விருத்தம் கம்பனால் 110 முறை கையாளப்பட்டுள்ளது.*
***(109)***

***5337. 'ஆழி நெடுங் கை ஆண்தகைதன் அருளும், புகழும்,***
***அழிவு இன்றி,***
***ஊழி பலவும்நிலைநிறுத்தற்கு, ஒருவன் நீயே உளை***
***ஆனாய்;-***
***பாழி நெடுந்தோள் வீரா !-நின் பெருமைக்கு ஏற்ப,***
***பகை இலங்கை***

***ஏழு கடற்கும் அப்புறத்தது ஆகாதிருந்தது இழிவு அன்றோ ?***

***பாழிநெடுந்தோள் -*** *பருத்து நீண்டதோள்களை உடைய;* ***வீரா !-*** *அனுமேன நீ;* ***ஆழி நெடுங்கை -*** *சக்கரம் ஏந்தும் கரத்தைப் பெற்ற;* ***ஆண் தகை தன் -*** *ஆடவருள் சிறந்த இராமபிரானின்;* ***அருளும் -*** *அருளும்;* ***புகழும் -*** *புகழும்;* ***அழிவு இன்றி -*** *அழிவுஅடையாமல்;* ***ஊழிபலவும் -*** *பல யுகங்களும்;* ***நிலை நிறுத்தற்கு -*** *நிலைத்துநிற்பதற்கு;* ***ஒருவன் நீயே -*** *ஒப்பற்ற நீயே;* ***உளை ஆனாய் -*** *(தகுதி)உள்ளவன் ஆனாய்;* ***நின் பெருமைக்கு ஏற்ப -*** *உன்னுடைய விசுவரூபத்துக்குப் பொருத்தமாக;* ***பகை இலங்கை -*** *உலகத்தின் பகையான இலங்கையானது;* ***ஏழு கடற்கும் -*** *ஏழு சமுத்திரங்களுக்கும்;* ***அப் புறத்தது -*** *அப்பால் இருப்பதாக;* ***ஆகாதது -*** *அமையாமல்;* ***இருந்தது -*** *(ஒரு கடலின் நடுவில்) இருப்பது;* ***இழிவு அன்றோ -*** *(உன் சிறப்புக்கு) தாழ்வு அல்லவா.*

*அனுமனின்வீரத்துக்கு 'உரைகல்' ஒரு கடல் கடந்ததன்று. அவன் ஏழு கடலைக் கடந்தால்தான் அவன் வீரம் சரியாக உணரப்படும் என்பது குறிப்பு.*
***(110)***

***5338. 'அறிவும் ஈதே, உரு ஈதே, ஆற்றல் ஈதே, ஐம் புலத்தின்***
***செறிவும் ஈதே,செயல் ஈதே, தேற்றம் ஈதே, தேற்றத்தின்***
***நெறியும் ஈதே,நினைவு ஈதே, நீதி ஈதே, நினக்கு என்றால்,***
***வெறியர்அன்றோ, குணங்களான் விரிஞ்சன் முதலாம் மேலானோர் ?***

*(அனுமனே)*

***நினக்கு -*** *உனக்கு;* ***அறிவும் ஈதே -*** *ஞானமும் இதுவேயாகும்;* ***உரு ஈதே -*** *அழகும் இதுவேயாம்;* ***ஆற்றல் ஈதே -*** *வலிமையும் இதுவேயாம்;* ***ஐம்புலத்தின் செறிவும் ஈதே -*** *ஐம்புலன்களின் அடக்கமும் இதுவேயாகும்;* ***செயல் ஈதே -*** *செய்கையும் இதுவேயாகும்;* ***தேற்றம் ஈதே -*** *தெளிவும் இதுவேயாகும்;* ***தேற்றத்தின் நெறியும் ஈதே -*** *தெளிவு மேற்கொள்ளும் வழியும் இதுவேயாகும்;* ***நினைவு ஈதே -*** *எண்ணமும் இதுவேயாகும்;* ***நீதி ஈதே -*** *நீதியும் இதுவேயாகும்;* ***என்றால் -*** *என்று அமையுமானால்;* ***விரிஞ்சன் முதலாம் மேலானோர் -*** *பிரமன் முதலான தேவர்கள்;* ***குணங்களால் -*** *பண்புகளால்;* ***வெறியர் அன்றோ -*** *வெறுமையானவர்கள் அல்லவா.*

*ஈதே, ஈதே என்றுதிரும்பத் திரும்பப் பேசப்பட்டது, அனுமன் பேருரு. அவன் பேருருவுக்கும் அறிவு முதலானவற்றுக்கும் வேறுபாடில்லை. பண்பும் பண்பியும் ஒன்றாயிற்று. அனுமன் கொண்டவடிவம் பெரியது.அதுபோல் அவனுடைய அறிவு முதலான குணங்களும் பெரியன. பிரமன் முதலானவர்களுக்கு இங்ஙனம் அமையாமையின் அவர்கள் சூனியம் (வெறியர்) ஆயினர். 'ஆற்றலும் நிறைவும் கல்வி அமைதியும் அறிவும் வேற்றுமை இவனோடு இல்லை (கம்ப. 3767) என்று பிரான்*

*முன்பு பேசுகிறான்; பிரான் பேசியதையே பிராட்டி விளக்கமாகப் பேசினாள். இருவர் உள்ளமும் ஒன்றென்பர். இருவரும் ஒன்றென அறிதல் நன்று. சக்தியும் சிவமும் ஒன்றுதானே. விளக்கம் வேண்டா.* ***(111)***

***5339. ‘மின் நேர் எயிற்று வல் அரக்கர் வீக்கம் நோக்கி,***
***வீரற்குப்***
***பின்னேபிறந்தான் அல்லது ஓர் துணை இலாத***
***பிழை நோக்கி,***
***உன்னாநின்றேஉடைகின்றேன், ஒழிந்தேன் ஐயம்;***
***உயிர் உயிர்த்தேன்;***
***என்னே ? நிருதர்என் ஆவர், நீயே எம் கோன்***
***துணை என்றால்?***

*(அனுமன்)*

***மின்நேர்எயிற்று** - மின்னைப் போலும் பற்களையுடைய; **வல் அரக்கர்** - வலிமை மிக்க அரக்கர்களின்; **வீக்கம் நோக்கி** - பெருக்கத்தைப் பார்த்து; **வீரற்கு** - இராமபிரானுக்கு; **பின்னே பிறந்தான் அல்லது** - பி ன்னேதோன்றிய இலக்குவனே அல்லாமல்; **ஓர் துணையிலாத** - வேறு ஒரு உதவியாளன் இல்லாத; (பெருமானுக்கு யாதாகுமோ என்று) **உன்னா நின்றேன்** - ஆலோசனை செய்து; **உடைகின்றேன்** - மனம் உடைந்து போன யான்; **ஐயம் ஒழிந்தேன்** - ஐயப்பாடு நீங்கினவள் ஆனேன்; **உயிர் உயிர்த்தேன்** - உயிர் தழைக்கப் பெற்றேன்; **நீயே** - சிறப்பின் வடிவமான நீயே; **எம் கோன்துணை என்றால்** - எம் பெருமானின் உதவியாளனாக அமைந்தாய் என்றால்; **நிருதர் என்னாவர்** - அரக்கர்கள் என்ன பாடுபடுவார்கள்; **என்னே** - என்னஆச்சரியம். கான் உறைவாழ்க்கை கலந்த இராமன். தலைமகற் பிரிந்த தனிமையன். தனாது சுற்றமும் சேண்மையதுவே. முற்றியது. வெண்கோட்டுக் குன்றம் எடுத்த மீளி வன் தோள் ஆண்டகை ஊரே; அன்றே சொல் முறை மறந்தனம் வாழி வில்லும் உண்டு அவற்கு அந்நாள் ஆங்கே. என்னும் சங்கராமாயணம் இங்கே நினைவுக்கு வருகிறது (புறத்திரட்டு 1332) ‘தருமத்தின் தனிமை தீர்ப்பான்’ (கம்ப. 3781)என்று முன்பு அனுமன்புகழப் பெற்றான். (அனுமப் படலம் 29) இங்கு நீயே எம்கோன் துணையானால் என்று பிராட்டி பேசினாள். தருமமே இராமன் என அறிக. அறத்தின் மூர்த்தி இராமன் என்று கம்பர் உணர்ந்தனர். மயங்கலும் மயங்கும் என்று சிலம்பு பேசும் (22-154) உயிர் உயிர்த்தேன் என்பதும் அது போன்றது. உயிர்த்தேன் என்பதே பொருள். அறிஞர்கள் சிந்திக்க வேண்டும்.* ***(112)***

***5340. ‘மாண்டேன்எனினும் பழுது அன்றே; இன்றே, மாயச்***
***சிறைநின்றும்***
***மீண்டேன்;என்னை ஒறுத்தாரைக் குலங்களோடும்***
***வேர் அறுத்தேன்,***
***பூண்டேன் எம்கோன் பொலங் கழலும்; புகழே***
***அன்றி, புன் பழியும்***
***தீண்டேன்’என்று, மனம் மகிழ்ந்தாள், திருவின்***
***முகத்துத் திரு ஆனாள்.***

***திருவின்முகத்துத் திரு அன்னாள் -*** *திருமகளின் முகத்தில் உள்ள செல்வம் போலும் பிராட்டி (அனுமனை நோக்கி);* ***இன்றே -*** *இன்றைய தினமே;* ***மாயச்சிறை நின்றும் -*** *மாயை போன்ற சிறையிலிருந்து;* ***மீண்டேன் -*** *திரும்பியவள் போன்றுள்ளேன்;* ***என்னை ஒறுத்தாரை -*** *என்னைத் துன்புறுத்திய அரக்கர்களை;* ***குலங்களோடு -*** *அவர்களுடைய சுற்றங்களுடன்;* ***வேர் அறுத்தேன் -*** *அடியோடு தொலைத்து விட்டவள் ஆவேன்;* ***எம் கோன் -*** *எம்பிரானாகிய இராமபிரானின்;* ***பொலங்கழலும் -*** *வீரக் கழல் அணிந்த திருவடியை;* ***பூண்டேன் -*** *தலையில் சுமந்தவள் ஆனேன்;* ***புகழே அன்றி -*** *புகழையே அல்லாமல்;* ***புன் பழியும் -*** *அற்பப் பழிச் சொல்லையும்;* ***தீண்டேன் -*** *தீண்டமாட்டேன் (ஆகையால்) (இனி);* ***மாண்டேன் எனினும் -*** *இறந்துபட்டாலும்;* ***பழுது அன்று -*** *(என் ஆன்மாவுக்குக்) குறைவு இல்லை;* ***என்று -*** *என்று கூறி;* ***மகிழ்வுற்றாள் -*** *மகிழ்ச்சியடைந்தாள்.*

*மாயச்சிறை -மாயைபோலும் சிறை. திருவின் முகத்துத் திரு - என்ற தொடர் திருமங்கையாழ்வாரின் பாசுரத்தை அடிப்படையாகக் கொண்டது. திருவுக்கும் திருவாகிய செல்வா (7.7.1) என்பது பெரிய திருமொழி. திருமாலின் சாரம் திருமகள்; திருமகளின் சாரம் சிறையிருந்த செல்வி என்க. திருமகள் அருளுடையவள். பிராட்டி அருளே வடிவமானவள். என்பது குறிப்பு. அருளது சக்தி என்று சித்தி பேசும். சக்தி - சாரம்.* ***(113)***

***341. அண்ணற் பெரியோன், அடிவணங்கி, அறிய***
***உரைப்பான், 'அருந்ததியே !***
***வண்ணக்கடலினிடைக் கிடந்த மணலின் பலரால்,***
***வானரத்தின்***
***எண்ணற்கு அரியபடைத் தலைவர், இராமற்கு***
***அடியார்; யான் அவர்தம்***
***பண்ணைக்கு ஒருவன்எனப் போந்தேன்; ஏவல்***
***கூவல் பணி செய்வேன்.***

*(பிராட்டியின் மொழிகேட்டு)*

***அண்ணல்பெரியோன் -*** *சிறப்புமிக்க அனுமன்;* ***அடிவணங்கி -*** *பிராட்டியின் திருவடிகளிலே வணங்கி;* ***அறிய -*** *வானரப் படையின் பெருமைகள் அறியும்படி;* ***உரைப்பான் -*** *கூறலானான்;* ***அருந்ததியே -*** *அருந்ததி போலும் அம்மையே;* ***எண்ணற்கு அரிய -*** *அளவிட முடியாத;* ***வானரத்தின் படைத்தலைவர் -*** *வானரப் படையின் தலைவர்கள்;* ***இராமற்கு அடியார் -*** *இராமபிரானின் தொண்டர்கள் ஆவார்கள்; (அப்படைத்தலைவர்கள்)* ***வண்ணக் கடலின் இடை -*** *அழகிய கடலின் கண்ணே;* ***கிடந்த மணலின் பலர் -*** *கிடக்கின்ற மணலினும் பலராவார்;* ***யான் -*** *நான்;* ***அவர்தம் பண்ணைக்கு -*** *அவர்களுடைய கூட்டத்துக்கு;* ***ஒருவன் என -*** *ஒருவேலைக்காரன் என்று கூறிக் கொண்டு;* ***போந்தேன் -*** *இங்கு வந்தேன்; (யான்)* ***ஏவல் கூவல் பணி செய்வேன் -*** *ஏவும் பணியையும் கூவும் பணியையும் செய்வேன்.*

*யான் சுயமாகச்சிந்தித்துப் பணி செய்பவன் அல்லேன். பிறர் ஏவிய பணியைச் செய்பவன் என்று அனுமன் தன் பணிவு தோன்றக் கூறினான். தன்னைக் தாழ்த்துவதன் மூலம் வானரவீரர்களின் சிறப்புப் பேசுவதால் பிராட்டிக்குத் தன்னம்பிக்கை வளர்ந்தது. கடல் கடந்து அரக்கர்களை வெல்லும் வலிமை எவர்க்குண்டு என்ற*

*பிராட்டியின் தளர்ச்சிபோக அனுமன் கொடுத்த மருந்து, இப்பாடல். சஞ்சீவி மருந்தே இந்தப் பாடலாக வடிவம் கொண்டது. ஏவற் கூவற்பணி செய்வேன்' என்று பாடம் கொண்டு, ஒருவன் ஏவ, அவன் ஒருவனை ஏவ அவன் செய்வது ஒத்தவன் நான் என்று பழைய உரை உள்ளது (அடை - பதிப்பு)* ***(114)***

***5342. 'வெள்ளம் எழுபது உளது அன்றோ வீரன் சேனை ? இவ் வேலைப்***
***பள்ளம், ஒரு கை நீர் அள்ளிக் குடிக்க, சாலும் பான்மையதோ ?***
***கள்ள அரக்கர் கடி இலங்கை காணாது ஒழிந்ததால் அன்றோ,***
***உள்ள துணையும்உளது ஆவது ? அறிந்தபின்னும் உளது ஆமோ ?***

***வீரன் சேனை -*** *இராமபிரானின் சேனை;* ***எழுபது வெள்ளம் உளது அன்றோ -*** *எழுபது வெள்ளம் ஆக இருக்கிறதல்லவா;* ***பள்ளம் -*** *ஆழமான;* ***இ வேலை -*** *இந்தக் கடலானது (அச்சேனை);* ***ஒரு கை நீர் -*** *ஒரு கையளவான தண்ணீரை;* ***அள்ளிக் குடிக்க -*** *அள்ளிப் பருக;* ***சாலும் பான்மையதோ -*** *போதுமான இயல்பை உடையதா;* ***கள்ள அரக்கர் -*** *வஞ்சகம் உடைய அரக்கர்களின்;* ***கடி இலங்கை -*** *காவலுடன் கூடிய இலங்கையானது (உள்ள இடம்);* ***காணாது -*** *இராமபிரானால் அறியப்படாமல்;* ***ஒழிந்ததால் அன்றோ -*** *விலகியிருந்ததால் அல்லவா;* ***உள்ளதுணையும் -*** *காணாமை உள்ள அளவும்;* ***உளது ஆவது -*** *இருப்பதாய் இருக்கிறது;* ***அறிந்த -*** *அறியப்பட்டால்;* ***பின்னும் -*** *மறுபடியும்;* ***உளதாமோ -*** *அழியாமல் இருக்குமா.*

*சேனையைக்குறிக்கும் பேரெண் வெள்ளம். எட்டு மாகடல் கொண்டது வெள்ளம் என்று கையேடு குறிக்கிறது. வானர சேனை எழுபது வெள்ளம். 'ஏற்ற வெள்ளம் எழுபதின் இற்ற' என்றும் 'வெள்ளம் ஓர் ஏழுபத்து' என்றும் (கம்ப. 4448, 6974) குரக்குச் சேனை குடித்தாலே கடல் வற்றும் என்க. இதுவும் என்பதில் உள்ள 'உம்' அசை. (குறள் 1164 உரை) இந்தக் கடலைக் கண்டு அஞ்ச வேண்டா என்பது குறிப்பு.*
***(115)***

***5343. 'வாலி இளவல், அவன் மைந்தன், மயிந்தன், துமிந்தன், வயக் குமுதன்,***
***நீலன், இடபன்,குமுதாக்கன், பனசன், சரபன், நெடுஞ் சாம்பன்,***
***காலன் அனையதுன்மருடன், காம்பன், கவயன், கவயாக்கன்,***
***ஞாலம் அறியும்நளன், சங்கன், விந்தன், துவிந்தன், மதன் என்பான்;***

***வாலி இளவல் -*** *வாலியின்தம்பியாகிய சுக்கிரீவன்;* ***அவன் மைந்தன் -*** *அவனுடைய புதல்வனாகிய அங்கதன்;* ***மயிந்தன் துமிந்தன் - ; வயக்குமுதன் -*** *வெற்றியை உடைய குமுதன்;* ***நீலன்*** *- ;* ***இடபன் - ;குமுதாக்கன் - ; பனசன் - ; சரபன் - ; நெடுஞ்சாம்பன் -***

*நீண்ட ஆயுளையுடைய சாம்பன்;* ***காலன் அனைய*** *- யமனைப் போலும்;* ***துன்மருடன் - ; காம்பன் - ; கவயன் - ; கவயாக்கன் - ; ஞாலம் அறியும் நளன்*** *- உலகத்தாரால் அறியப்பட்ட நளன்;* ***சங்கன் - ; விந்தன் -; துமிந்தன் - ; மதன் என்பான்*** *- மதன் என்று கூறப்படுபவன். வாலியின் தம்பியாகிய சுக்கிரீவன்... மதன் இப்பாடலும் அடுத்த பாடலும் ஒரு தொடர். மயிந்தன் துமிந்தன் இரட்டையர். குமுதன் ஆம்பல் மலர் போலும் நிறமுடையவன். இடபன் - காளை போல்பவன். குமுதாக்கன் - ஆம்பல் போலும் கண்களைப் பெற்றவன். சரபன் - சரபப் பறவை போன்றவன். நீண்ட ஆயுள் பெற்றவன் ஆகையால் நெடுஞ்சாம்பன் என்று பேசப்பட்டான். துன் மருடன் - பொறுக்கவொண்ணாச் சீற்றத்தான் கவயன் - காட்டுப் பசுப் போல்பவன். கவயாட்சன் - காட்டுப் பசுவின் கண் பெற்றவன். சங்கன் - சங்கு போலும்நிறமுடையவன்.*
***(116)***

***5344. 'தம்பன்,தூமத் தனிப் பெயரோன், ததியின் வதனன், சதவலி என்று***
***இம்பர் உலகோடுஎவ் உலகும் எடுக்கும் மிடுக்கர், இராமன் கை***
***அம்பின் உதவும்படைத் தலைவர்; அவரை நோக்கின், இவ் அரக்கர்,***
***வம்பின்முலையாய் ! உறை இடவும் போதார்; கணக்கு வரம்பு உண்டோ ?***

***வம்பின்முலையாய்*** *- கச்சணிந்த தனங்களைஉடைய அம்மையே;* ***தம்பன் - ; தூமத் தனிப் பெயரோன்*** *- தூமன் என்ற ஒப்பற்ற பெயரை உடையவன்;* ***ததியின் வதனன்*** *- ததிமுகன்;* ***சதவலி - ; என்று*** *- என்று;* ***இம்பர் உலகோடு*** *- இந்த உலகத்தையும்;* ***எவ்வுலகும்*** *- எந்த உலகத் தையும்;* ***எடுக்கும் மிடுக்கர்*** *- சுமக்கின்ற ஆற்றலுடையவர்; (அவர்கள்)* ***இராமன்*** *- இராமபிரானின்;* ***கை அம்பின்*** *- கையிலுள்ள அம்பைப் போல;* ***உதவும்*** *- (ஏவியதைச் செய்ய) உதவுகின்ற;* ***படைத்தலைவர்*** *- சேனைத்தலைவர்கள்;* ***கணக்கு வரம்பு உண்டோ*** *- அவர்களின் எண்ணிக்கைக்கு எல்லை உள்ளதா?* ***அவரை நோக்கின்*** *- அப்படைத் தலைவர்களைப் பார்க்கும்போது;* ***இவ்அரக்கர்*** *- இந்த அரக்கர்கள்;* ***உறையிடவும் போதார்*** *- உறையாகவைப்பதற்கும் போதமாட்டார்கள். தம்பன்முதலானவர்கள் இராமபிரான் கை அம்பு போல உதவும் படைத் தலைவர்கள். இந்த அரக்கர்கள் அந்த படை வீரர்களுக்கு உறையாக வைப்பதற்கும் போதமாட்டார்கள்.*

*உருக்காட்டுப்படலம் மிகைப்பாடல்கள் 117-1 என்ற எண்ணுள்ள பாடல் இங்கு அடுத்து இருப்பின் பொருள் தொடர்பு - அடுத்த படலத் தொடர்பு இரண்டுக்கும் பொருந்தும். அப்பாடலின் திரண்ட கருத்து:- சிரஞ்சீவியாகிய அனுமன் மேலும் கூறுவான் இராமன் பால் சென்று வணங்கி உனது துன்பத்தைச் சிறிதளவு உணர்த்தும் வரைதான் அரக்கர் கூட்டம் உளதாகும். உணர்த்த உணர்ந்த அளவிலேயே இவ்வரக்கர் கூட்டமும் இலங்கைமாநகரும் குரங்கின் கைப் பூமாலையாகப் பிய்த்து எறியப் பட்டுவிடும் என்று சொல்லி வணங்கினான். பின்னரும் ஒரு வார்த்தை சொல்வதற்கு மனத்தில் சிந்தித்தான்.* ***(117)***

## சூடாமணிப்படலம்

*அனுமன்பிராட்டியின் நிலையைத் தெரிந்த கொண்ட பிறகு எப்படியாவது பிராட்டியைச் சிறையிலிருந்து விடுவிக்க எண்ணுகிறான். அவன் 'தாயே ! தாங்கள் என் தோளில் அமர்ந்து கொள்ளுங்கள். தங்களை யான் இராமன் பால் சேர்ப்பிப்பேன்' என்று விண்ணப்பித்தான்.*

*அதுகேட்டபிராட்டி அது பொருத்தமற்ற செயல் என்று விளக்கி உடன்படாது மறுக்கிறாள். பிராட்டியின் வார்த்தைகளைக் கேட்டு உணர்ந்த அனுமன் தன் கருத்தை விலக்கிக் கொண்டு, 'இராமபிரானுக்கு யான் கூற வேண்டிய செய்தி யாது ? கூறுக' என்று கேட்கிறான்.*

*அனுமன் மொழிகேட்ட பிராட்டி 'நான் இன்னும் ஒரு மாதம் உயிரோடு இருப்பேன்' என்று நாயகன் பால் கூறுக' என்று கூறி அவல நிலையில் பலபடியாகப் பேசினாள். பின்னர் அனுமன் தெளிவிக்க அறிய பிராட்டி 'அண்ணல் பால் நினைவுறுத்துக' என்று அடையாள மொழிகளைக் கூறினாள்.*

*பிறகு தன்ஆடையில் முடித்து வைத்திருந்த சூடாமணியை அனுமனிடம் வழங்குகிறாள். சூடாமணியைப் பெற்ற அனுமன் பிராட்டியை மும்முறை வணங்கித் திரும்பிச் சென்றான்.*

*இப்படலம்சம்சார மண்டலத்தில் உழலும் ஆன்மாவைக் குரவர்பிரான் தேற்றி, நல்லுரை பகர்ந்து, பக்தியை வளர்த்து நம்பிக்கை ஊட்டுவதைக் குறிக்கிறது.*

*இராமகாதையிலேயே இப்படலம் தெய்வத்தன்மையோடு கூடியது என்று பகர்வர். இப்படலம் நாள், கோள்களால் வரும் இடையூறுகளைப் போக்கும் மந்திரசக்தி வாய்ந்தது.*

*அனுமன் விண்ணப்பம்* ***சந்தக் கலிவிருத்தம்***

***5345. 'உண்டு துணைஎன்ன எளிதோ உலகின் ? அம்மா !***
***புண்டரிகைபோலும் இவள் இன்னல் புரிகின்றாள்;***
***அண்ட முதல்நாயகனது ஆவி அனையாளைக்***
***கொண்டு அகல்வதேகருமம்' என்று***
***உணர்வுகொண்டான்.***

*(அனுமன்)*

**புண்டரிகைபோலும் இவள் -** *இலக்குமியைப் போன்றுள்ள சீதை;* **இன்னல் புரிகின்றாள் -** *தற்கொலை செய்துகொள்கிறாள்;* **உலகின் -** *இந்த உலகின் கண்ணே;* **துணை உண்டு -** *உனக்குப் பாதுகாப்பாக உள்ளேன்; (அஞ்சாதே)* **என்ன -** *என்று கூறுதல்;* **எளிதோ -** *சுலபமான செயலோ (ஆகையால்);* **அண்ட முதல் -** *உலகங்கட்கு மூலகாரணமாயுள்ள;* **நாயகனது -** *தலைவனான இராமபிரானின்;* **ஆவி அனையாளை -**

*உயிர் போன்ற பிராட்டியை;* **கொண்டு அகல்வதே -** *சுமந்து கொண்டு நீங்குவதே;* **கருமம் என்று -** *செய்யத் தக்கதுஎன்று;* **உணர்வு கொண்டான் -** *எண்ணத்தை மேற்கொண்டான். அனுமன் -தோன்றா எழுவாய். அனுமன் உணர்வு கொண்டான் இராவணன் அரசில் பிராட்டிக்குத் துணையாக உள்ளேன் என்று கூறுபவர் அரியர். கொடுங்கோலுக்கு அஞ்சி ஒதுங்குவதே மாந்தர் இயல்பு. ஆதலின் துணை அற்ற பிராட்டியைக் காப்பது தன்கடன் என்று அனுமன் கருதினான். முதல் அடிக்கு இவள் துன்பத்துக்கு உவமை உண்டோ என்று அனுமன் கருதியதாகப் பேசப்பட்ட திறம் ஆராயத்தக்கது. இன்னல் புரிதல் - தற்கொலை செய்து கொள்ளுதல். அனுமன் பெருமான்பால் 'ஆயிருர் துறப்பதாக உன்னினாள்' (கம்ப. 6045) என்று கூறியதை நினைவு கூர்தல் நன்று அண்டம் முதல் - என்பதில் உள்ள முதல் காரணம். ஆபரணங்கட்குப் பொன்முதல். அதுபோல் உலகங்கட்கு முதல் இராமபிரான். ஆதிபகவன் முதற்றே உலகு என்னும் குறளின் சாரம் இங்கே உள்ளது. இன்னல் காரணம் அதனால் விளைந்தது தற்கொலை. தற்கொலையை இன்னல் என்றான். இரண்டுக்கும் உள்ள நீங்காத தொடர்பு கருதி. இவ்விருத்தம் விளங்காய் - விளங்காய் - விளங்காய் - தேமா என்னும் சீர்களைப் பெற்றுவரும். அமரர் கம்பன் அடிப்பொடி அவர்கள் இவ்விருத்தத்தை 'அளவடி நான்குடை அளவியற்சந்தக் கலிவிருத்தம்' என்பர். நேர் அசையில் தொடங்கின் 14 எழுத்தும், நிரையசையில் தொடங்கின் 15 எழுத்தும் பெற்றுவரும். இத்தகு பாக்கள் இந்நூலில் 292 உள்ளன.*
***(1)***

### *5346. 'கேட்டி, அடியேன் உரை; முனிந்தருளல்; கேள், ஆய் !*
### *வீட்டியிடும்மேல் அவனை; வேறல் வினை அன்றால்;*
### *ஈட்டி இனி என்பல; இராமன் எதிர், நின்னைக்*
### *காட்டி, அடிதாழ்வென்; இது காண்டி இது காலம்;*

**அடியேன் உரை -** *அடியேனின்மொழியை;* **கேட்டி -** *கேட்பாயாக (அம்மொழியை);* **முனிந்தருளல் -** *வெறுத்துஒதுக்காதே;* **கேளாய்- ; வீட்டியிடுமேல் -** *உன்னைக் கொன்று விடுவானேயானால் ; (பிறகு)* **அவனை -** *அந்த இராவணனை;* **வேறல் -** *வெல்வது;* **வினை அன்று -** *செய்யத்தக்கது அன்று;* **இனி -** *இப்போது;* **பல -** *பலவிதமான மொழிகளை;* **ஈட்டி என் -** *தொகுப்பதால் என்ன பயன்;* **இராமன் எதிர் -** *இராமபிரானுக்கு முன்னே;* **நின்னை -** *உன்னை;* **காட்டி -** *காண்பித்து;* **அடி தாழ்வென் -** *உங்கள் இருவரின் திருவடிகளையும் வணங்குவேன்;* **இதுகாண்டி -** *இதைப்பார்;* **காலம் இது -** *அதற்கு ஏற்ற காலம் இதுவே.*

*இது முதல் 9கவிதைகள் அனுமன் விண்ணப்பம். பிராட்டியை மீட்பதில் உறுதி கொண்டு அனுமன் பேசுகின்றான். இராவணன், உன்னைக் கொன்று விட்டால் பிறகு அவனை வெல்வதால் பயனில்லை என்று திருவடி வருந்தப் பேசியதில் அன்புமிக்குள்ளது. அதனால் ஆராய்ச்சித் திறம் குன்றியது. இதனைச் சேக்கிழார், 'காதலால்.... உற்ற வருத்தம்' என்பர் (குங்குலியர் 26) ஒருவர்பால் ஒன்று சொல்ல விரும்புவார் தாம் சொல்வதை அவர்கள் ஏற்றுக் கொள்வார்களோ என்ற ஐயம் உண்டாகிற போது மீண்டும் கேளாய் என மொழிதல் வழக்கமே - அனுமனும் முதலில் கேட்டி என்றவன் முனிந்தருளல் என்று கூறி மீண்டும் கேளாய் என்றது அறிக. வேறல் வினை அன்று என்பதற்கு இராவணனை வெல்வது என் செயல் அன்று என்று அனுமன் கூறியதாக விவரித்தலும் ஒன்று. காலம் என்றது சந்தர்ப்பத்தை. கருத்துற நோக்கிப் போந்த காலமும் நன்று (கம்ப. 6468)* ***(2)***

***5347. 'பொன் திணி பொலங்கொடி ! என் மென் மயிர் பொருந்தித்***
***துன்றிய புயத்து இனிது இருக்க; துயர் விட்டாய்,***
***இன் துயில்விளைக்க; ஓர் இமைப்பின், இறை வைகும்***
***குன்றிடை, உனைக்கொடு குதிப்பென்; இடை கொள்ளேன்.***

***திணிபொன் -*** *செறிந்தஅழகையுடைய;* ***பொலங்கொடி -*** *தங்கக் கொடிபோலும் அம்மையே (நீ);* ***மென்மயிர் -*** *மென்மையான மயிர்;* ***பொருந்தித்துன்றிய -*** *அமைந்து நெருங்கிய;* ***என் புயத்து -*** *என் புயத்தின் கண்ணே;* ***இனிது இருக்க -*** *அமைதியாக இருக்க (அதனால்);* ***துயர் விட்டாய் -*** *துன்பத்தை விட்டவளாவாய் (அப்போது);* ***இன்துயில் விளைக்க -*** *(உனக்கு) இனிய உறக்கம் உண்டாக;* ***உனைக் கொடு -*** *உன்னைச் சுமந்து கொண்டு;* ***இறைவைகும் -*** *இராமபிரான் தங்கியுள்ள;* ***குன்றிடைஓர் இமைப்பின்குதிப்பென் -*** *மலையில் ஓர்இமைக்கும் நேரத்தில் குதிப்பேன்;* ***இடை கொள்ளேன் -*** *நடுவில் தாமதம் செய்யேன்.*

*பொன் என்பதற்குப் பசப்பு என்றும் கூறலாம் (சிந்தாமணி 1530) இடை கொள்ளேன் என்பதற்குத் தளர்ச்சியடையேன் என்றும் பொருள் கூறலாம். இமைப்பு - கண்ணிமைக்கும் நேரம். இமைப்பின் எய்திட்டு (சிந்தா 1680) இராமபிரான் தங்கிய மலை பிரஸ்ரவனம். (3)*

***5348. 'அறிந்து,இடை, அரக்கர் தொடர்வார்கள் உளராமேல்***
***முறிந்து உதிரநூறி, என் மனச் சினம் முடிப்பேன்;***
***நெறிந்த குழல் ! நின் நிலைமை கண்டும், நெடியோன்பால்,***
***வெறுங் கைபெயரேன் - ஒருவராலும் விளியாதேன்.***

***நெறிந்த குழல் !-*** *சுருண்டகூந்தலையுடைய அம்மையே !;* ***அறிந்து -*** *(யான் உன்னைச் சுமந்து போவதை) தெரிந்து;* ***இடை தொடர்வார்கள் அரக்கர் -*** *இடையிலே என்னைத் தொடரும் அரக்கர்கள்;* ***உளராமேல் -*** *இருப்பார்களேயானால்;* ***முறிந்து உதிர நூறி -*** *அரக்கர்கள் சிதைந்து உதிரும்படி அழித்து;* ***என் மனச் சினம் -*** *என் உள்ளத்தில் உள்ள சீற்றத்தை;* ***முடிப்பேன் -*** *தணித்துக் கொள்வேன்;* ***ஒருவராலும் விளியாதேன் -*** *ஒருவராலும் சாகாவரம் பெற்ற நான்;* ***நின் நிலைமை கண்டும் -*** *உன்னுடைய துன்ப நிலையைப் பார்த்தும்; (அதற்குப் பரிகாரம் தேடாமல்)* ***நெடியோன் பால் -*** *இராமபிரான் பக்கல்;* ***வெறுங்கை பெயரேன் -*** *வெறுங்கையுடன் போகமாட்டேன்.*

*உளராமேல்என்றதனால் அரக்கர் பின்பற்றி வாரார் என்று அனுமன் கருதினான். சினம் அரக்கர்களின் கொடுஞ்செயலால் வந்தது. ஒருவராலும் விளியா வரம் பெற்றது நன்மையைச் செய்யவும் தீமையை அழிக்கவுமே என்று அனுமன் தன் மனக் கருத்தை உணர்த்தினான். நெறிந்த குழல் - சுருண்ட கூந்தல். நெறிந்த கருங்குழல் மடவாய் (பெரியாழ்வார் 3. 10. 1) நின் நிலைமை என்றது, பிராட்டி பிறருடைய உதவியின்றித்*

*தவிக்கும் நிலைமை. இதனை 'உண்டு துணை என்ன எளிதோ' (கம்ப. 5345) என்று முன்பே பேசப் பெற்றது.* ***(4)***

***5349. ' "இலங்கையொடும் ஏகுதிகொல்" என்னினும்,***
***இடந்து, என்***
***வலம்கொள் ஒருகைத்தலையில் வைத்து, எதிர்***
***தடுப்பான்***
***விலங்கினரைநூறி, வரி வெஞ் சிலையினோர்தம்***
***பொலங் கொள்கழல் தாழ்குவென்; இது, அன்னை !***
***பொருள் அன்றால்.***

***அன்னை !*** *- தாயே(நீ);* ***இலங்கையொடும் ஏகுதி*** *- இலங்கையுடன் என்னைக் கொண்டு செல்;* ***என்னினும்*** *- என்று கட்டளையிட்டாலும்;* ***இடந்து*** *- (இலங்கையை) பெயர்த்து (அதனை);* ***என்*** *- என்னுடைய;* ***வலம்கொள்*** *- வலிமை கொண்ட;* ***ஒரு கைத் தலையில்*** *- ஒரு கையின் கண்ணே;* ***வைத்து*** *- வைத்துக் கொண்டு;* ***எதிர்*** *- என் முன்னே;* ***தடுப்பான்*** *- தடுக்கும் பொருட்டு;* ***விலங்கினரை*** *- குறுக்கிடுபவரை;* ***நூறி*** *- அழித்து (பிறகு);* ***வரி*** *- கட்டமைந்த;* ***வெம்சிலையினோர்தம்*** *- கொடிய வில்லேந்திய இராமலக்குவர்களின்;* ***பொலங்கொள் கழல்*** *- அழகிய வீரக்கழல் அமைந்த திருவடியை;* ***தாழ்குவென்*** *- வணங்குவேன்;* ***இது*** *- இச் செயல் (எனக்கு);* ***பொருள் அன்று*** *- பெருஞ்செயல் அன்று. (எளிய செயல்).*

*இச்செயல் எனக்குஅருஞ்செயல் அன்று. எளிய செயல், என்னும் ஆழ்ந்த கருத்தை உட்கொண்ட 'பொருள் அன்று' என்னும் தொடர் ஆழமானது. மணிவாசகர் 'பொருளா, என்னை புகுந்தாண்ட பொன்னே ! என்பர் (திருவாசகம் 383)' நிற்கு இது பொருள் என உணர்கிலேன்' என்று இராமனைக் கவுசிகன் பாராட்டுவான் (கம்ப. 449)* ***(5)***

***5350. 'அருந்ததி! உரைத்தி-அழகற்கு அருகு சென்று,***
***"உன்***
***மருந்து அனையதேவி, நெடு வஞ்சர் சிறை***
***வைப்பில்,***
***பெருந்துயரினோடும், ஒரு வீடு பெறுகில்லாள்,***
***இருந்தனள்" எனப்பகரின், என் அடிமை என் ஆம் ?***

***அருந்ததி*** *- அருந்ததியே (யான்);* ***அழகற்கு அருகு சென்று*** *- இராமபிரான் பக்கலிலே போய்;* ***உன்*** *- உன்னுடைய;* ***மருந்து அனைய தேவி*** *- அமுதம் போலும் தேவியானவள்;* ***நெடு வஞ்சர்*** *- மிக்க வஞ்சகக் குணமுடையவர்களின்;* ***சிறை வைப்பில்*** *- சிறையிடத்தில்;* ***பெருந்துயரினோடும்*** *- பெரிய துன்பத்துடன்;* ***ஒரு*** *- ஒப்பற்ற;* ***வீடு பெறுகில்லாள்*** *- விடுதலை பெறாதவளாய்;* ***இருந்தனள்*** *- இருந்தாள்;* ***எனப் பகரின்*** *- என்று கூறினால்;* ***என்அடிமை*** *- என்னுடைய தொண்டு;* ***என் ஆம்*** *- என்ன பயனுடையதாகும்.*

*செயலாகவெளிப்படாத தொண்டு பயனில்லை என்பது குறிப்பு. அருந்ததி போல்வாளை அருந்ததி என்றது ஆகுபெயர். இராமன் என்னும் சொல் அழகன் என்று தமிழ் வடிவம் பெறுகின்றது. வீடு விடுதலை. 'வீடு பெறல் யாது என*

*விலங்கிழைவினவ' (பெருங்கதை) 5-3-107)* நெடுவஞ்சகர் - பெரிய வஞ்சகர். நெடு என்பது பெரிது என்னும் பொருள் தரும். *'நெடுவஞ்சமும், பாவமும் பொய்யும் வல்லநாம்' (கம்ப. 7356)* நெடு என்பதைச் சிறைக்கு அடைமொழியாக்கி நீண்ட சிறை என்று உரை கூறினாரும் உளர். என் அடிமை என்னாம் என்ற இடத்து 'அடிமை சால அழகுடைத்தே' என்னும் திருவாசகம் நினைக்க. ***(6)***

***5351. 'புண் தொடர்வு அகற்றிய புயத்தினொடு புக்கேன்,***
***விண்டவர்வலத்தையும் விரித்து உரைசெய்கேனோ ?***
***"கொண்டுவருகிற்றிலென்; உயிர்க்கு உறுதி***
***கொண்டேன்;***
***கண்டுவருகிற்றிலென்" எனக் கழறுகேனோ ?***

*(அம்மையே)*

***உயிர்க்கு உறுதிகொண்டேன் -*** *உயிருக்குப்பாதுகாப்பைத் தேடிக் கொண்டயான்;* ***புண் தொடர்வு -*** *போரால் உண்டாம் விழுப்புண்களின் சம்பந்தத்தை;* ***அகற்றிய புயத்தி னொடு -*** *விலக்கிக் கொண்ட தோள்களுடன்;* ***புக்கேன் -*** *இராமபிரான் சந்நிதானத்தை அடைந்து;* ***விண்டவர் வலத்தை -*** *பகைவர்களின் பலத்தை;* ***விரித்து உரை செய்கேனோ -*** *விவரித்துப் பேசுவேனோ ? (அல்லது) (யான்);* ***கண்டு வருகிற்றிலென் -*** *பிராட்டியைக் கண்டு வரும் ஆற்றல் பெற்றேன் இல்லை; (அதனால்) (பிராட்டியை)* ***கொண்டு வருகிற்றிலென் -*** *கொண்டு வரும் பாக்கியம் பெற்றேன் இல்லை;* ***என கழறுகேனோ -*** *என்று பொய் கூறுவேனா.*

*வலத்தையும்என்பதில் உள்ள 'உம்' அசை. மடத்தகை அவளொடும் வதுவை நாட்டி (சிந்தா 1173) இங்கு இனியர் 'உம்மை அசை' என்று வரைந்தார். அரக்கர்கள் வன்மை உடையவர்கள். அதனால் பிராட்டியைக் கண்டிலேன்; அதனால் வெறுங்கையுடன் வந்தேன் என்று பொய் மொழி கூறட்டுமா என்று அனுமன் வருந்திக் கூறினான். உறுதி - பாதுகாப்பு. மன்னுயிர்க்கு உறுதி செய்வான் மலரடி சுமந்து வாழ்தி (கம்ப. 4090)* ***(7)***

***5352. ' "இருக்கும் மதிழ் சூழ் கடி இலங்கையை***
***இமைப்பின்***
***உருக்கி எரியால், இகல் அரக்கனையும் ஒன்றா***
***முருக்கி, நிருதக்குலம் முடித்து, வினை முற்றிப்***
***பொருக்க அகல்க"என்னினும், அது இன்று***
***புரிகின்றேன்.***

*(அனுமனே நீ)*

***மதில் சூழ் -*** *மதில்களால் சூழப்பட்டு;* ***கடி -*** *காவலுடன்;* ***இருக்கும் இலங்கையை -*** *இருக்கின்ற இலங்கை மாநகரை;* ***இமைப்பின் எரியால் உருக்கி -*** *இமைப்பதற்குள் நெருப்பினாலே உருக்கி விட்டு (பின்);* ***இகல் -*** *மாறுபாடு கொண்ட;* ***அரக்கனையும் -*** *இராவணனையும்;* ***ஒன்றா -*** *ஒருசேர;* ***முருக்கி -*** *அழித்து;* ***நிருதக் குலம் முடித்து -*** *அரக்கர் கூட்டத்தை ஒழித்து;* ***வினைமுற்றி -*** *செயலை நிறைவு செய்துவிட்டு;* ***பொருக்க -***

*விரைவாக;* ***அகல்க என்னினும் -*** *இலங்கையைவிட்டு நீங்குக என்று கட்டளை இட்டாலும்;* ***அது -*** *அச்செயலை;* ***இன்று புரிகின்றேன் -*** *இப்பொழுது செய்வேன்.*

*இலங்கைபொன்னால் அமைந்தது ஆதலின் அதனை 'உருக்குக' என்று கட்டளை இட்டால் நிறைவேற்றுவேன் என்றான். 'ஆடகத்தாரைகள் உருகி வேலையின் ஊடு புக்குற்றன' என்று மேலே பேசப்படும் (கம்ப. 5953.) பொருக்க - விரைவாக. பொருக்க நும்வினை போயதும் (தேவாரம் - நாவரசர் 144-11) முடித்து - அழித்து. 'வேந்தர் குலமும்... குழலும் முடியாது இராள்' என்பர் வில்லியார் (கிருட்டினன் தூது 48)* ***(8)***

### *5353. 'இந்துநுதல்! நின்னொடு இவண் எய்தி, இகல் வீரன்,*
### *சிந்தை உறு வெந்துயர் தவிர்ந்து, தெளிவோடும்,*
### *அந்தம் இல்அரக்கர் குலம் அற்று அவிய நூறி,*
### *நந்தல் இல்புவிக்கண் இடர், பின் களைதல் நன்றால்.*

***இந்து நுதல் ! -*** *சந்திரனைஒத்த நெற்றியை உடைய அம்மையே;* ***இகல் வீரன் -*** *பேராற்றல் பெற்ற இராமபிரான்; (நின்னைப் பெற்றமையால்)* ***சிந்தை உறு -*** *மனத்திலே மிக்குள்ள;* ***வெம்துயர் தவிர்ந்து -*** *பெருந்துன்பம் நீங்கப் பெற்று;* ***தெளிவோடும் -*** *அறிவுத் தெளிவுடனே;* ***நின்னொடு -*** *உன்னுடன்;* ***இவண் எய்தி -*** *இந்த இலங்கையை அடைந்து. பின் - பிறகு;* ***அந்தம் இல் -*** *முடிவற்ற;* ***அரக்கர்குலம் -*** *இராக்கதர் கூட்டம்;* ***அற்று அவிய நூறி -*** *சிதைந்து அழியக் கொன்று;* ***நந்தல் இல் -*** *அழிவற்ற;* ***புவிக்கண் இடர் -*** *பூமியின்கண்ணே துன்பத்தை;* ***களைதல் நன்று -*** *களைந்தெடுப்பது சிறப்பானதாகும்.*

*பிராட்டி தான்சிறைமீட்சி பெற்றால் இராவணனை அழிப்பது நிகழாதே என்று கருதுவதாக முடிவுகட்டி, அனுமன், நீயும் இராமபிரானிடம் திரும்பி வந்து இராவணனை அழிக்கலாம் என்று கூறினான். இவண் ஏகி என்பதற்கு இந்த இலங்கையிலே பெருமானும் தேவரீரும் திரும்பி எழுந்தருளி என்பது பழைய வுரை (அடை-பதி) செயலற்ற சிவம் சத்தியுடன் சேரின் எத்தொழிலும் வல்லது என்று சௌந்தரிய லகரி பேசும். (சௌந்தரிய7) அவண் எய்தி..... தெளிவோடும் என்னும் பாடத்திற்கு யான் உன்னுடன் இராமபிரான் இருக்குமிடத்தை அடைய, அதனால் அவன் தெளிவு பெற்று, எனப் பொருள் கொள்ள வேண்டும். எய்தி என்னும் செய்து என்னும் வாய்ப்பாட்டுச் சொல் செய என்னும் வாய்பாட்டுப் பொருளில் வந்ததாகக் கொள்ள வேண்டும்.* ***(9)***

### *5354. 'வேறு இனிவிளம்ப உளதன்று; விதியால், இப்*
### *பேறு பெற,என்கண் அருள் தந்தருளு; பின் போய்*
### *ஆறு துயர்; அம்சொல் இள வஞ்சி ! அடியேன் தோள்*
### *ஏறு, கடிது,'என்று, தொழுது இன் அடி பணிந்தான்.*

***அம் சொல்இளவஞ்சி ! -*** *அழகிய சொற்களைப்பேசும் இளங்கொடி போல்வாய் !* ***இனி -*** *இப்போது;* ***விளம்ப -*** *கூறுவதற்கு;* ***வேறு உளது அன்று -*** *வேறுமொழிகள் இல்லை;* ***இப்பேறு -*** *இந்தப் பாக்கியத்தை;* ***விதியால் பெற -*** *முறைப்படி அடியேன்*

*பெறுவதற்கு;* ***என்கண் -*** *அடியேன்பால்;* ***அருள் தந்தருளு -*** *திருவருளை வழங்கியருள்;* ***பின் -*** *அதற்குப்பின்;* ***போய் -*** *இராமபிரான் பக்கலில் போய்;* ***துயர் ஆறு -*** *துன்பத்தைத் தணிப்பாயாக. (அதன் பொருட்டு);* ***அடியேன் தோள் கடிது ஏறு -*** *அடியேனுடைய தோளில் விரைந்து ஆரோகணிப்பாயாக;* ***என்று தொழுது -*** *என்று கூறிப் பணிந்து;* ***இன் அடி -*** *நன்மைதரும் திருவடிகளை;* ***பணிந்தான் -*** *வணங்கினான்.*

*இன்அடி - நன்மைதரும் திருவடி. 'இனிய சிந்தை இராமன்' (கம்ப. 3061) 'சிந்திப்பவர்க்கு ..... செந்தேன் முந்திப் பொழிவன... அடித்தலம்' என்று அப்பர் பேசுவர். அதை ஒட்டி இனியதிருவடி என்றும் பொருள் கொள்ளலாம். விதி - முறை.*
***(10)****அனுமன் வேண்டுகோளைசீதை மறுத்து உரைத்தல்*

**கலிவிருத்தம்**

***5355. ஏய நல்மொழி எய்த விளம்பிய***
***தாயை முன்னியகன்று அனையான்தனக்கு,***
***'ஆய தன்மைஅரியது அன்றால்' என,***
***தூய மென்சொல்இனையன சொல்லினாள்;***

***நன்மொழி -*** *நன்மைதரும் சொற்களை;* ***ஏய -*** *பொருத்தமாகவும்;* ***எய்த -*** *நன்றாகவும்;* ***விளம்பிய -*** *கூறிய;* ***தாயின் முன்னிய -*** *தாயைஎதிரேகண்ட;* ***கன்று அனையான் தனக்கு -*** *இளங்கன்று போலும் அனுமனுக்கு;(பிராட்டியானவள்)* ***ஆயதன்மை -*** *நீ கூறிய அச்செயல்;* ***அரியது அன்று -*** *உன்னால் செய்ய முடியாதது அன்று;* ***என -*** *என்றுகூறிவிட்டு;* ***இனையன -*** *இப்படிப்பட்ட;* ***தூயமென்சொல் -*** *தூய்மையான மென்மையான சொற்களை;* ***சொல்லினாள் -*** *கூறினாள்.*

*கன்று அனையான்தனக்குச் சொல்லினாள் என்று முடிக்க. ஆய தன்மை - அச்செயல். 'மான யானை..... என்ன தன்மை பண்ணுமே' (கம்ப. 9385) பிராட்டி பசுவைப் போல இருந்தாள். அனுமன் அதன் கன்று போல் இருந்தான் என்க. இராமபிரான் சிற்றன்னைபால் கொண்ட பாசம் 'அந்தி வந்து அடைந்த தாயைக் கண்ட ஆன் கன்று '(கம்ப. 1598) என்னும் தொடரால் பேசப் பெற்றது. இவ்விருத்தம் மா - விளம் - விளம் - விளம் என்னும் சீர்களைப் பெற்று வரும். இதனைக் கம்பன் அடிப் பொடி அவர்கள் 'கட்டளைக் கலிப்பா' என்றே குறிப்பார். நேர் - 11; நிரை - 12; (மணிமலர் 76).* ***(11)***

***5356. 'அரியது அன்று; நின் ஆற்றலுக்கு ஏற்றதே;***
***தெரிய எண்ணினை;செய்வதும் செய்தியே;***
***உரியது அன்று எனஓர்கின்றது உண்டு, அது, என்***
***பெரிய பேதைமைச்சில் மதிப் பெண்மையால்.***

*(அனுமனே !) (நீகூறியது)*

***அரியது அன்று-*** *உன்னால் செய்ய முடியாததல்ல (அஃது);* ***நின் ஆற்றலுக்கு ஏற்றதே -*** *உன்னுடைய வலிமைக்கும் பொருத்தமானதே;* ***தெரிய எண்ணினை -*** *விளக்கமாக ஆராய்ந்தாய்; (அச் செயலை)* ***செய்வதும் செய்தியே -*** *செய்வாய்; (ஆனால்)* ***பெரிய பேதைமை -*** *மிக்க அறியாமையும்;* ***சின்மதி -*** *குறைந்த அறிவும்பெற்ற;* ***பெண்மையால் -***

*பெண்மைத் தன்மையால்;* ***அது -*** *அச்செயல்;* ***உரியது அன்று என -*** *ஏற்ற செயல் அன்று என்று;* ***ஓர்கின்றது -*** *அறியும் பண்பு;* ***உண்டு -*** *என்பால் உள்ளது.*

*அனுமன் ஆற்றலுக்குஏற்ற அனைத்தும் செய்வான். ஆனால் பெண்மை இடையே தடை விதிக்கிறது. பெரிய பேதைமை, சின்மதி என்பவை பிராட்டியின் அடக்கத்தால் வந்த மொழிகள். பிறரின் அறியாமையைத் தன் அறியாமையாகக் கூறிக் குறிப்பிக்கும் பாங்கு எதிர்மறைத் தொனியைச் சார்ந்தது. அவன் பெரியவன் என்ற தொடர் திரும்பத் திரும்பப் பேசப்பட்டு அது வேறு பொருள் பயந்தது, என்பதைச் சீசர் நாடகத்திற் காண்க. செய்வதும் செய்தி - என்பது செய்தலைச் செய்வாய் என்னும் பொருள் தந்தது. 'உண்ணலும் உண்ணேன்; வாழலும் வாழேன்' கலித்தொகை பேசும். (பாலை 22) மயிலைநாதர், இவற்றை ஒருபொருட்பன்மொழி என்பர். இனியர் காரிய வாசகம் என்பர் (தொல் 113) செய்தலும் செய்தியே என்பதற்கு இ.கோ.பிள்ளை அவர்கள் செய்தாலும் செய்வாய் - என்று விரித்தார். இன்று படித்தாலும் படித்தேன். இதுபோல் படித்தாலும் படித்தேன். இதுபோல் படித்ததில்லை என்பன போன்ற உலக வழக்கு இங்கே தோன்றுகிறது.* ***(12)***

***5357. 'வேலையின்னிடையே வந்து, வெய்யவர்,***
***கோலி, நின்னொடும் வெஞ் சரம் கோத்தபோது,***
***ஆலம்அன்னவர்க்கு அல்லை, எற்கு அல்லையால்;***
***சாலவும் தடுமாறும்; தனிமையோய் !***

*(அனுமனே !) (நீஎன்னைச் சுமந்து போகும் போது)*

***வெய்யவர் -*** *கொடிய அரக்கர்கள்;* ***வேலையின் இடையே வந்து -*** *கடலுக்கு நடுவே வந்து;* ***கோலி -*** *உன்னை வளைத்துக் கொண்டு;* ***நின்னொடும் -*** *உன்னுடன்;* ***வெம்சரம் கோத்தபோது -*** *கொடிய அம்புகளை வில்லில் தொடுத்துப் போர் புரியும்போது;* ***ஆலம் அன்னவர்க்கு அல்லை -*** *விடம் போன்றவர்களுடன் போர் புரிவதற்கும் ஏற்றவனாகாய்;* ***எற்கு அல்லை -*** *என்னைப் பாதுகாப்பதற்கும் உரியவனாகாய்;* ***சாலவும் -*** *மிகவும்;* ***தடுமாறும் -*** *(எதைச் செய்வது எதைத்தவிர்ப்பது என்று) சஞ்சலம் அடையும்;* ***தனிமையோய் -*** *தனிமை உடையவனாவாய்.*

*அரக்கருடன்போர் செய்தால் என்னைப் பாதுகாக்க இயலாது. என்னைப் பாதுகாத்தால் அரக்கர்களால் பேரிடர் உண்டாகும். ஆகையால் உன் எண்ணம் முறையன்று என்று பிராட்டி பேசினாள். 'அத்தலைக்குஅல்லேன்... இத்தலைக்கு அல்லேன்' (கம்ப. 8213) என்று வீடணன் புலம்பியது நினைவுக்கு வரும். கோலி - வளைத்து அல் - அசை.* ***(13)***

***5358. 'அன்றியும், பிறிது உள்ளது ஒன்று; ஆரியன்***
***வென்றி வெஞ்சிலை மாசுணும்; வேறு இனி***
***நன்றி என் ? பதம் வஞ்சித்த நாய்களின்***
***நின்ற வஞ்சனை,நீயும் நினைத்தியோ ?***

*(உன் செயல் ஏற்றதுஅன்று அன்பதற்கு)*

***அன்றியும்* - *இது அல்லாமலும்; **பிறிது ஒன்று உளது** - வேறு ஒரு காரணம் இருக்கிறது (உன் செயலால்); **ஆரியன்** - இராமபிரானின்; **வென்றி வெஞ்சிலை** - வெற்றிமிக்க கோதண்டம்; **மாசுணும்** - களங்கம் அடையும்; **இனி வேறு** - (உளது) மேல்வேறு; **நன்றி என்** - நன்மை என்ன ?; **பதம்** - சோற்றை; **வஞ்சித்த** - ஏமாற்றி உண்ணும்; **நாய்களின்** - நாய்களைப் போல என்னை வஞ்சித்துக் கவர்ந்த அரக்கரிடத்து; **நின்ற வஞ்சனை** - நிலைத்த வஞ்சகத்தை; **நீயும் நினைத்தியோ** - நீயும் கருதுகின்றாயா.*

*வஞ்சம் என்றதுபிறரை ஏமாற்றிச் செய்யும் செயலை நான், உன் செயலுக்கு உடன்பட்டால் அஃது இராமபிரான் வில்லுக்குக் களங்கம் உண்டாகும். வில்லுக்கே அன்றி உனக்கும் மாசு உண்டாகும். வஞ்சகத்தை வஞ்சகத்தால் வெல்வது உன் போன்ற சான்றோர்கட்கு அழகு அன்று, என்று பேசுகின்றாள். சிலை தனக்கு உரிய செயல் செய்யாமையால் அது மாசு அடையும். அனுமன் தனக்கு உரியதல்லாதவற்றைச் செய்வதால் மாசு அடைவான் என்க.* ***(14)***

***5359. 'கொண்டபோரின் எம் கொற்றவன் வில் தொழில்***
***அண்டர் ஏவரும்நோக்க, என் ஆக்கையைக்***
***கண்ட வாள்அரக்கன் விழி, காகங்கள்***
***உண்டபோதுஅன்றி, யான் உளென் ஆவெனோ ?***

**எம் கொற்றவன்**- *எம்முடைய தலைவனாகிய இராமபிரான்;* **வில் தொழில் கொண்ட போரின்** - *வில்லின் தொழிலை மேற்கொண்ட போர்க்களத்தில்;* **அண்டர் ஏவரும் நோக்க** - *எல்லாத் தேவர்களும் பார்க்கும்படியாக;* ***என் ஆக்கையைக் கண்ட*** - *என் உடலை முறையற்றுப் பார்த்த;* **வாள் அரக்கன் விழி** - *கொடிய அரக்கனின் கண்களை;* ***காகங்கள் உண்டபோது அன்றி*** - *காகங்கள் உண்டபோதே அல்லாமல்;* ***யான் உளென் ஆவெனோ*** - *யான் உயிருடன் உள்ளவள் ஆவேனா.*

*போர்க்களத்தில் வீழ்ந்த இராவணனின் விழியைக் காகம் உண்ண வேண்டும். அப்போதுதான் யான் உயிருடையவள் ஆவேன் என்று பேசிய பிராட்டியின் சீற்றம் அநீதிக்கும் முறைகேட்டுக்கும் வழங்கும் எச்சரிக்கை. வில்தொழில் கொண்ட போர் என்று மாற்றுக. 'விற்பணி கொண்டு அருஞ்சிறையில் மீட்ட நாள்' (கம்ப. 5247). என்று முன்பே பேசினாள். போர் என்றது போர்க்களத்தை. இராவணனின் விழிகளைக் காகம் உண்பதைத் தேவர்கள் காணவேண்டும் என்று பேசினாள். தோற்ற தேவர்கள் கொடுங்கோலால் பட்ட துன்பம் நீங்கி மகிழவேண்டும் என்பது குறிப்பு. இராமபிரானின் வில்தொழிலைத் தேவர்கள் காண என்று உரை கூறப் பெற்றது. என்னைப் பார்த்த உன்கண்கள் இன்னும் ஏன் தெறித்து விழாமல் இருக்கிறது. என்று சீதை பேசுவதை வான்மீகி குறிப்பார். 'அரக்கர் - கண்மணி காகமும் கவர்ந்தது' என்றும் 'பழிப்பில் மேனியை நோக்கிய கண்களை.... காக்கைகள் கவர்ந்து கொண்டு உண்ண' என்றும் (கம்ப. 2962, 5404) பேசப்படும்.* ***(15)***

***5360. 'வெற்றி நாணுடை வில்லியர் வில் தொழில்***
***முற்ற, நாண் இல்அரக்கியர், மூக்கொடும்***
***அற்ற நாணினர்ஆயின போது அன்றி,***
***பெற்ற நாணமும்பெற்றியது ஆகுமோ ?***

***வெற்றி நாணுடைவில்லியர் -*** *வெற்றியையும் நாணையும்பெற்ற வில்லேந்திய இராமலக்குவர்களின்;* ***வில்தொழில் முற்ற -*** *வில்லாற்புரியும் போர்த்தொழில் முதிர்ச்சியடைய (அதனால்);* ***நாண் இல் அரக்கியர் -*** *நாணமற்ற அரக்கிகள்;* ***மூக்கொடும் -*** *மூக்குடனே;* ***அற்ற -*** *அறுபட்ட;* ***நாணினர் ஆயின போதன்றி -*** *மங்கல நாணை உடையவரான போதே அல்லாமல்;* ***பெற்ற நாணமும் -*** *யான் பெற்ற நாணமும்;* ***பெற்றியது ஆகுமோ -*** *சிறப்புடையதாகுமோ;*

*பகைவர்களின்மனைவிமார்களின் மூக்கை அறுத்தல் சிறப்புப் போலும் ! விளங்கு முடி கவித்த வீரசலாமேகன், போர்க்களத்து அஞ்சித் தன் கார்க்களிறிழிந்து, கவ்வையுற்றோடக் காதலியொடும் தன் தவ்வையைப் பிடித்துத் தாயை மூக்கரிய' என்று இராசகேசரி வர்மனின் மெய்க்கீர்த்தியும் 'நாகலை என்னும் தோகையஞ்சாயலை முகத்தொடு மூக்கு வேறாக்கி' என்று வீரராசேந்திர தேவனின் மெய்க்கீர்த்தியும் பேசும். பிராட்டி, சிறையில் பட்ட அவமானங்கள் இங்ஙனம் பேசச் செய்தன.* ***(16)***

### *5361. 'பொன் பிறங்கல் இலங்கை, பொருந்தலர்*
### *என்பு மால் வரைஆகிலதேஎனின்,*
### *இற் பிறப்பும்,ஒழுக்கும், இழுக்கம் இல்*
### *கற்பும், யான்பிறர்க்கு எங்ஙனம் காட்டுகேன் ?*

***பொற்பிறங்கல்இலங்கை -*** *பொன்மலையில் அமைந்தஇலங்கை மாநகரம்;* ***பொருந்தலர் -*** *அறத்துடன் பொருந்தாத அரக்கர்களின்;* ***என்பு மால்வரை ஆகிலதே எனின் -*** *பெரிய எலும்பு மலையாக ஆகாமற் போனால்;* ***யான் -*** *நான்;* ***இற்பிறப்பும் -*** *என்னுடைய சிறந்த குடிப்பிறப்பையும்;* ***ஒழுக்கும் -*** *ஒழுக்கத்தையும்;* ***இழுக்கம் இல் கற்பும் -*** *சிதைவு இல்லாத கற்பையும்;* ***பிறர்க்கு -*** *உலக மக்களுக்கு;* ***எங்ஙனம் காட்டுகேன் -*** *எப்படித் தெளிவுபடுத்தி அறிவிப்பேன்.*

*மேருமலையிலிருந்துவாயு தேவனால் வீசி எறியப்பட்ட திரிகூட மலையில் இலங்கை அமையப் பெற்றது. ஆதலின் பொற்பிறங்கல் இலங்கை என்று பேசப்பட்டது. மேருமலையைப் பொன்மலை என்பது மரபு. 'கற்புடைத் தேவியை விடாது காத்தியேல் எற்புடைக் குன்றமாம் இலங்கை' என்று வீடணன் கூறியதாக மயிந்தன் பேசினான் இ.கோ. பிள்ளை அவர்கள் பொற் பிறங்கல் இலங்கை என்பதற்கு பொன் மலையான இலங்கை என்று உரை வகுத்தார். 'இலங்கை வெற்பு' என்று பேசப்படுகிறது. (கம்ப. 6035) அவர், பொன்மலை எலும்புமலையாக வேணும் என்றபடி என்று எழுதினார்.* ***(17)***

### *5362. 'அல்லல்மாக்கள் இலங்கையது ஆகுமோ ?*
### *எல்லை நீத்தஉலகங்கள் யாவும், என்*
### *சொல்லினால்சுடுவேன்; அது, தூயவன்*
### *வில்லின் ஆற்றற்கு மாசு என்று, வீசினேன்.*

***அல்லல் -*** *(எலும்புமலையாகப் போகும்) துன்பம்;* ***மாக்கள் -*** *விலங்கு போன்றவர்கள் வாழும்;* ***இலங்கையது ஆகுமோ -*** *இலங்கையளவுடன் நின்று விடுமா;* ***எல்லை நீத்த -*** *(அறத்தின்) வரம்பைக் கடந்து போகும்;* ***உலகங்கள் யாவும் -*** *எல்லாவுலகங்களையும்;*

**என் சொல்லினால் -** என்னுடைய சொல்லினாலேயே; **சுடுவேன் -** சுட்டெரித்து விடுவேன்; **அது -** அவ்வாறு செய்வது; **தூயவன் -** தூயவனாகிய இராமபிரானின்; **வில்லின் ஆற்றற்கு -** வில்லினுடைய வலிமைக்கு; **மாசு என்று -** களங்கம் உண்டாக்கும் என்று (அதை); **வீசினேன் -** ஒதுக்கித் தள்ளினேன். இ.கோ.பிள்ளைஅவர்கள் பெண்ணால் வெற்றி பெறுவது ஆண் பிள்ளைக்குப் புகழன்று என்று கருத்துரை வரைந்தார் சிந்தாமணி (1752) இக் கருத்தைப் பேசும். அல்லல், இலங்கையது ஆகுமோ என்று சேர்க்க. அல்லல் இலங்கைக்கு அடைமொழியாகப் பேசிய உரையே அதிகம். அல்லல் எழுவாயாகக் கொள்ளும் உரை என் தந்தையார் கூறியவுரை. இ.கோ.பிள்ளை அவர்கள், அல்லல் என்பதை மாக்கட்கு அடைமொழி ஆக்கினும், தெரிந்தோ தெரியாமலோ இலங்கை அளவில் முடிவு பெறுமோ அல்லவா என்று எழுதினார். ***(18)***

## *5363.* ‘வேறும் உண்டு உரை; கேள் அது; மெய்ம்மையோய் !
ஏறு சேவகன் மேனிஅல்லால், இடை
ஆறும் ஐம்பொறிநின்னையும், “ஆண்” எனக்
கூறும்; இவ் உருத்தீண்டுதல் கூடுமோ ?

**மெய்ம்மையோய்-** உண்மையின் வடிவமானவளே; **உரை வேறும் உண்டு -** (இவை தவிர) சொல்லும் சொல் வேறு ஒன்றும் உள்ளது; **அது கேள் -** அதைக் கேட்பாயாக; **ஏறு சேவகன் -** வளரும் வீரத்தைப் பெற்ற இராமபிரானின்; **மேனி அல்லால் -** திருமேனியை அல்லாமல்; **இடை -** (உன்னுடைய விரதங்களால்) தோற்றுப்போய்; **ஆறும் -** அவிந்துபோன; **ஐம்பொறி நின்னையும் -** ஐம் பொறிகளைப் பெற்ற உன்னையும்; (இந்த உலகம்) **ஆண் எனக் கூறும் -** ஆண் என்று பேசும்; (ஆதலின்) **இவ் உரு -** இந்த மேனியை; **தீண்டுதல் கூடுமோ -** தொடுவது தகுமா.

அனுமனே நீபிரம்மசரிய விரதத்தால் ஐந்து பொறிகளையும் அடக்கியுள்ளாய். அதனால், நீ, ஆண்பால் பெண்பால் என்னும் பகுப்பைக் கடந்தவனாவாய். ஆனால் உலகம் உன்னை ஆண் என்று கூறுகிறது. ஆதலின் உன் மேனியைத் தீண்டுவது தகாது. குறிக்கோளே அன்றி, அதை அடையும் நெறியும் தூய்மையாக இருத்தல் வேண்டும். என்று கூறும் காந்தியடிகளே அம்மையைப் பூரணமாக அறிவர். பிராட்டி, தன் மொழியால் அனுமன் மனம் வருந்துவானோ என்று தயங்கி தயங்கிப் பேசுவதைக் கவிதை நடையிற் காணலாம். ***(19)***

## *5364.* ‘தீண்டினான்எனின், இத்தனை சேண் பகல்
ஈண்டுமோ உயிர்மெய்யின் ? “இமைப்பின்முன்
மாண்டுதீர்வென்” என்றே, நிலம் வன் கையால்
கீண்டு கொண்டு,எழுந்து ஏகினன், கீழ்மையான்.

**கீழ்மையான்-** இழிந்த பண்புடைய இராவணன்; **தீண்டினான் எனின் -** என்னைத் தொட்டிருப்பானேயானால்; **இத்தனை சேண் பகல் -** இவ்வளவு நீண்ட நாட்கள்; **உயிர் -** இராவணனின் உயிரானது; **மெய்யின் ஈண்டுமோ -** அவன் உடலில் தங்கியிருக்குமா ?; (இராவணன்) **இமைப்பின் முன் -** கண் இமைக்கும் நேரத்தில்; **மாண்டு தீர்வென் என்றே -** அழிந்து ஒழிவேன் என்று கருதியே; **வன்மையால் -** பேராற்றலால்; **நிலம் -** யான்

*இருந்த பூமியை;* ***கீண்டு கொண்டு -*** *பெயர்த்து எடுத்துக் கொண்டு;* ***ஏகினன் -*** *இலங்கைக்குச் சென்றான்.*

*இராவணன்என்னைத் தொட்டிருந்தால் என் உடம்பில் உயிர் இருக்குமா; நான் இறந்து படுவேன் என்று கருதித்தான் என்னை நிலத்துடன் பெயர்த்து வந்தான் என்றும் பொருள் கொள்ள இடம் உண்டு. இராவணன் தனக்கு அழிவு வாராதிருத்தலையே எண்ணினான் என்பதை அடுத்தபாடல் உறுதி செய்கிறது. அனுமன், என் தோளில் ஆரோகணித்தலை வெறுத்தாய். ஆனால் இராவணன் உன்னை எப்படிக் கொணர்ந்தான் என்று கேட்டால் என்ன செய்வதென்று கருதி இங்ஙனம் பேசினாள் என்று கூறும் மரபு உண்டு.* ***(20)***

***5365. ' "மேவு சிந்தை இல் மாதரை மெய் தொடின்,***
***தேவு வன் தலைசிந்துக நீ" என,***
***பூவில் வந்தபுராதனனே புகல்***
***சாவம் உண்டு;எனது ஆர் உயிர் தந்ததால்.***

***மேவு சிந்தை இல்-*** *உன்பால் பொருந்தும் மனம் இல்லாத;* ***மாதரை -*** *பெண்களை;* ***மெய்தொடின் -*** *உடலைத் தொட்டால்;* ***தேவு வன்தலை -*** *தெய்வத்தன்மை பெற்ற வலிய தலைகள்;* ***சிந்துக -*** *சிதறப்படுவனவாகுக;* ***தீது என -*** *(அது) பாவம் என்று;* ***பூவின் வந்த -*** *தாமரைப் பூவிலே தோன்றிய;* ***புராதனனே புகல் -*** *பழையோனான பிரமனால் கூறப்பட்ட;* ***சாவம் உண்டு -*** *சாபம் இராவணனுக்கு உள்ளது; (அச்சாபம்)* ***எனது ஆருயிர் -*** *எனது அரிய உயிரை;* ***தந்தது -*** *பாதுகாத்தது.*

*மாதரை -என்பதில் உள்ள 'ஐ'யை அசையாக்கி 'மாதர்மெய்' என்று சேர்த்துப் பொருள் கொள்ளலாம். அப்போது மாதருடைய என்று பொருள் தரும். சிந்தாமணியில் 2605 ஆம் பாடலில் புகழானை நாண மொழிகள் பல கூறி உள்ள தொடரில் உள்ள 'ஐ'யை அசையாக்கினார் இனியர். (புகழான் நாண மொழிகள் கூறி என்பது பொருள்) தீது - பாவம் உள்ளத்தால் உள்ளலும் தீதே (திருக்குறள் 282) தேவுதலை - என்பதற்குஇ.கோ.பிள்ளைதெய்வத் தன்மையால் மீண்டும் முளைப்பதான தலை என்று உரை கூறினார். தெய்வத்தைப் பணியும் தலை என்றும் பொருள் கூறலாம். தெய்வத்தைப் பணியினும் சாபம் பலிக்கும் என்பதாம்.* ***(21)***

***5366. 'அன்ன சாவம் உளது என, ஆண்மையான்,***
***மின்னும்மௌலியன், மெய்ம்மையன், வீடணன்***
***கன்னி,என்வயின் வைத்த கருணையாள்,***
***சொன்னது உண்டு,துணுக்கம் அகற்றுவான்.***

***ஆண்மையான் -*** *ஆண்மைஉடையவனும்;* ***மின்னும் மௌலியன் -*** *ஒளிவீசும் முடியைத் தரித்தவனும்;* ***மெய்ம்மையன் -*** *உண்மையானவனும் (ஆன);* ***வீடணன் கன்னி -*** *வீடணனின் மகளான திரிசடையானவள்;* ***என் வயின் வைத்த கருணையாள் -*** *என்னிடத்தில் கொண்ட இரக்கத்தாள்;* ***துணுக்கம் அகற்றுவான் -*** *என்னுடைய நடுக்கம் நீங்குவதற்காக;* ***அன்ன சாபம் உளது என -*** *அந்தச் சாபம் உள்ளது என்று;* ***சொன்னது உண்டு -*** *கூறியது என் உள்ளத்தில் தங்கியுள்ளது.*

*திரிசடை கூறியகனவை அறிந்ததால், பிராட்டி வீடணன் இலங்கை அரசு பெறுவான் என்று உணர்ந்து மௌலியன் என்று கூறினாள். திரிசடையின் பண்பு. வீடணனின் மகளாக இருப்பதால் அமைந்தது என்று தெளிந்து அவளை ஆண்மையான், மெய்ம்மையான் என்று புகழ்ந்தாள். வித்தும் முளையும் வேறன்று என்று குமரகுருபர் பேசுவார். இராவணனின் கொடுங்கோலை எதிர்த்த காரணத்தால் அவனே மிகமிக மதிக்கத் தக்கவன். திரிசடை இந்த ரகசியத்தைக் கூறியதற்குக் காரணம் அபலையின் துன்பம் நீங்கவேண்டும் என்னும் கருணையே. உண்டு என்பதைத் துணை வினையாக்கிச் சொன்னதுண்டு என்று, ஒரே தொடராக்கினும் அமையும்.* ***(22)***

***5367. 'ஆயது உண்மையின், நானும்-அது அன்று எனின்,***
***மாய்வென்மன்ற;-அறம் வழுவாது என்றும்,***
***நாயகன் வலிஎண்ணியும், நானுடைத்***
***தூய்மைகாட்டவும், இத்துணை தூங்கினேன்.***

***ஆயது உண்மையின்-*** *இந்தச்சாபம் இருத்தலினால்;* ***நானும் -*** *பிறருடைய உதவியைப் பெறாத யானும்;* ***அறம் வழுவாது என்றும் -*** *தருமம் என்னைக் காப்பதில் பின்னடையாது என்று நினைத்தும்;* ***நாயகன் வலி எண்ணியும் -*** *இராமபிரானின் ஆற்றலை நினைத்தும்;* ***நான் உடைத் தூய் மைகாட்டவும் -*** *என்னுடையதூய்மையை உலகத்துக்குஉணர்த்தவும்;* ***இத்துணை -*** *இத்தனை நாட்கள்;* ***தூங்கினேன் -*** *(இறவாமல்) தாமதித்தேன்;* ***அது அன்றெனில் -*** *அச்சாபம் உண்மை அல்லாமற் போனால்;* ***மன்ற மாய்வென் -*** *நிச்சயமாக இறந்திருப்பேன்.*

*ஆயதுஉண்மையினானும் என்று பிரித்து பொருள் சொன்னார் சிலர் நானும் என்பதில் உள்ள 'உம்' மும் அசையானால் வாக்கியம் பிழை நேராது. உம் அசையாக வருதலை சிந்தாமணி 1173 ஆம் பாடல் உணர்த்தும். சாபம் உண்மையாக இருப்பினும் பொய்மையாக இருப்பினும் யான் மாய்வென். ஆனால் இராமபிரானின் வலிமை எண்ணி, என்னுடைய தூய்மையைக் காட்ட இறவாமல் காலதாமதம் செய்தேன் என்ற பொருள் கொள்ள வேண்டும். தருமத்தை நான் காப்பாற்ற வேண்டா, பிராட்டி பேசியதாகப் பொருள் கொள்ள வேண்டும். என்னுடை என்று வரவேண்டியது நானுடை என்ற வந்தது. 'நானுடைத் தவத்தால்' என்று திருமங்கையாழ்வாரும், நானுடை எம்பெருமான் என்று சுந்தரரும் பாடினர்.* ***(23)***

***5368. 'ஆண்டுநின்றும், அரக்கன் அகழ்ந்து கொண்டு,***
***ஈண்டுவைத்தது, இளவல் இயற்றிய***
***நீண்ட சாலையொடுநிலைநின்றது;***
***காண்டி, ஐய ! நின் மெய் உணர் கண்களால்.***

***ஆண்டு நின்று -*** *அந்தப்பஞ்சவடியிலிருந்து;* ***அரக்கன் -*** *இராவணனால்;* ***அகழ்ந்து கொண்டு -*** *பெயர்த்துக் கொண்டு வந்து;* ***ஈண்டு வைத்தது -*** *இந்த இலங்கையில் வைக்கப்பெற்ற பூமியானது;* ***இளவல் இயற்றிய -*** *இளைய பெருமானால் அமைக்கப்பெற்ற;* ***நீண்ட சாலையொடு -*** *பெரிய பர்ணசாலையுடன்;* ***நிலை நின்றது -*** *நிலையாக இருப்பதை;* ***ஐய -*** *தந்தையே;* ***நின் -*** *உன்னுடைய;* ***மெய் உணர் கண்களால் -*** *சத்தியத்தைத் தரிசிக்கும் விழிகளாலே;* ***காண்டி -*** *பார்ப்பாயாக.*

*அரக்கன், இளவல்இயற்றிய சாலையொடு அகழ்ந்து கொண்டு ஈண்டு வைத்தது. (அது) நிலை நின்றது. காண்டி என்றும் கூட்டிப் பொருள் கூறலாம். 'தம்பியால் சமைக்கப்பட்ட இனிய பூஞ்சாலை (கம்ப. 2738) சூர்ப்பணகைப் படலம் பேசும். இங்கு அதனை பிராட்டி மறவாமல் பேசினாள். இலக்குவன் அமைத்த சாலையைச் சித்திரகூடத்தில் கண்டோம். அது 'தம்பி கோலிய சாலை' என்று பேசிற்று. அங்கு (கம்ப. 2089 - 2092) நான்கு பாடல்கள் அதை விவரிக்கும்.* ***(24)***

***5369. 'தீர்விலேன், இது ஒரு பகலும்; சிலை***
***வீரன் மேனியைமானும் இவ் வீங்கு நீர்***
***நார நாள்மலர்ப்பொய்கையை நண்ணுவேன்,***
***சோரும் ஆர்உயிர் காக்கும் துணிவினால்.***

***சோரும் -*** *தளர்ச்சியடையும்;* ***ஆர் உயிர் -*** *அருமையான உயிரை;* ***காக்கும் துணிவினால் -*** *பாதுகாக்க வேண்டும் என்னும் உறுதிப் பாட்டால்;* ***சிலைவீரன் மேனியை மானும் -*** *கோதண்டபாணியை ஒத்திருப்பதும்;* ***வீங்கு நீர் -*** *பூரிக்கும் இயல்பைப் பெற்றிருப்பதும்;* ***நாரம் நாண்மலர் -*** *தண்ணீரையும் மலரையும் கொண்டிருப்பதும்; (ஆகிய)* ***இப்பொய்கையை -*** *இந்தத் தடாகத்தை;* ***நண்ணுவேன் -*** *அடைவேன்;* ***ஒரு பகலும் -*** *ஒரு நாளும்;* ***இது தீர்விலேன் -*** *இச் செயலிலிருந்து விலகேன்.*

*பொய்கையைப்பார்ப்பதால் உயிர்களிக்கும் என்பது குறிப்பு. மாயக் கூத்தா.... தாமரை நீள் வாசத்தடம்போல் வருவானே ஒரு நாள் காண வாராயோ என்னும் திருவாய்மொழி (8.6.1) இங்கு நினைவுக்கு வருகிறது. நாரம் - தண்ணீர். இறைவனைப் பொய்கையாகக் கூறுவது தமிழ் மரபு. பைங்குவளைக் கார்மலரைப் பார்த்துத் தெளிக. (திருவெம்பாவை) தசரதன் பெற்ற மரகத மணித் தடத்தினையே (10.9.8) என்னும் திருவாய்மொழி அதை உறுதிப் படுத்தும். தீர்விலேன் என்பதற்குப் பர்ண சாலையினின்றும் நீங்கேன் என்று கூறப் பெற்றவுரை நன்றேல் கொள்க.*
***(25)***

***5370. 'ஆதலான், அது காரியம் அன்று; ஐய !***
***வேதநாயகன்பால், இனி, மீண்டனை***
***போதல்காரியம்' என்றனள் பூவை; அக்***
***கோது இலானும்,இனையன கூறினான்;***

***ஐய -*** *ஐயனே;* ***ஆதலால்-*** *ஆகையாலே;* ***அது -*** *(என்னைச் சுமந்து போக எண்ணிய) செயல்;* ***காரியம் அன்று -*** *செய்யத் தக்கது அன்று;* ***இனி -*** *இப்போது;* ***வேத நாயகன் பால் -*** *வேதத்தின் தலைவனான இராமபிரான் பக்கலில்;* ***மீண்டனை போதல் -*** *திரும்பிச் செல்வது;* ***காரியம் என்றனள் -*** *செய்யத் தக்கது என்று கூறினாள்;* ***பூவை -*** *பிராட்டி;* ***அக்கோது இலானும் -*** *குற்றம் இல்லாத அந்த அனுமன்;* ***இனையன கூறினான் -*** *இந்த வார்த்தையைக் கூறினான்.* ***காரியம் -*** *செய்யத்தக்கது. மீண்டனை போதல் மீண்டு போதல். மீண்டனை என்னும் முற்று எச்சப் பொருளில் வந்தது. 12 பாடல் முதல் 26 பாடல் வரை பிராட்டி அனுமன் தன்னைச் சுமந்து செல்வது ஏற்றதன்று என்பதைக் காரணகாரியத்துடன் விளக்கினாள். இவை பிராட்டியை அனுமன் நன்கு உணர்வதற்கு ஏதுவாயிற்று. இப் பாடல்கள் அனுமன் உள்ளத்திருந்த கோது நீக்கின. நல்லனவற்றை*

*நிறைவேற்றத் தீயவற்றைச் செய்யலாம் என்ற பெருங்கோது என்க.*
***(26)***

*இராமனிடம் யாது கூறவேண்டும் என்று அனுமன் கேட்டல்*

***5371. ‘நன்று ! நன்று ! இவ் உலகுடை நாயகன்***
***தன் துணைப்பெருந்தேவி தவத் தொழில்’***
***என்று சிந்தைகளித்து, உவந்து, ஏத்தினான்-***
***நின்ற சங்கைஇடரொடு நீங்கினான்.***

*(அனுமன்)*

***நின்ற -** உள்ளத்தேநிலைத்திருந்த; **இடரொடு சங்கை -** துன்பத்துடன்கூடிய ஐயப்பாடு; **நீங்கினான் -** நீங்கப்பெற்று; **உலகுடை நாயகன்தன் -** உலக நாதனாகிய இராமபிரானுடைய; **துணை -** வாழ்க்கைத் துணைவியான; **பெருந்தேவி -** பெரிய பிராட்டியின்; **தவத் தொழில் -** தவத்தால் விளைந்தஒழுக்கம்; **நன்று நன்று -** பெரியது பெரியது; **என்று -** என்று நினைத்து(அனுமன்); **களித்து உவந்து -** செருக்குடன் கூடிய மகிழ்ச்சியடைந்து; **ஏத்தினான் -** புகழ்ந்தான். நீங்கினான்என்னும் முற்று எச்சப் பொருளில் வந்தது. பிறர் அதனை வினையாலணையும் பெயராக்கினர். தவத் தொழில் என்பதில் உள்ள தொழில் ஒழுக்கம் என்னும் பொருள் தந்தது. தொழில் பெருமை என்னும் பொருள் தருவதாக அகராதி நிகண்டு பேசும். தொழிலே தொல்லையும் பெருமையும் காட்டும் (தொம்முதல் 18) சான்றோரை எண்ணும் போது எண்ணுபவர் இதயத்தே செருக்கும் மகிழ்சசியும் உண்டாவது இயற்கை. களித்து உவந்து என்பதற்குச் செருக்குடன் கூடிய மகிழ்ச்சி என்று கம்பராமாயண அகராதி விளக்கம் தந்தது. (களிப்பு- பார் சங்கை - ஐயம். இரண்டாம் கவிச்சக்கரவர்த்தி. சங்கையில்லாதன சங்கையாம் (கண்ணண் பாட்டு) என்று பாடினான். இராவணனால் பிராட்டிக்கு இடையூறு நேருமோ என்னும் ஐயத்தால் உண்டான துன்பம் இடரொடு சங்கை என்ற தொடரால் விளக்கப் பெற்றது. பெருந்தேவன் மனைவியாதலின் பிராட்டி பெருந்தேவி ஆனாள். காஞ்சி நகர்த் தாயாரின்பெயர் பெருந்தேவி என்பது. கொங்குவேள் உடன்முடி கவித்தகடன் அறி கற்பின் இயற்பெருந்தேவி (பெருங்கதை 2.4.23.24) என்பர். தேவியே உன் தவத் தொழில் சிறந்தது என்று பிராட்டியை முன்னிலையாக்கித் துதித்தான் என்று உரை கண்டனர் உளர். அவர் தேவி என்பதை அண்மை விளியாக்கினர். மேற்பாட்டில் கூறினான் என்றமையால் இங்ஙனம் பொருள் கொள்ள நேர்ந்தது போலும்.*
***(27)***

***5372. ‘இருளும் ஞாலம் இராவணனால்; இது***
***தெருளும், நீஇனிச் சில் பகல் தங்குறின்;***
***மருளும் மன்னவற்கு, யான் சொலும் வாசகம்***
***அருளுவாய்’ என்று,அடியின் இறைஞ்சினான்.***

*(அம்மையே)*

***இராவணனால் -** இராவணனாலே; **இருளும் -** இருண்டு கிடக்கின்ற; **இது ஞாலம் -** இந்த உலகம் (உன்னால்); **தெருளும் -** தெளிவு பெறும்; **சில்பகல் -** சில முகூர்த்த நேரம்;*

***தங்குறின் -*** *யான் தாமதம் செய்தால்;* ***மருளும் -*** *(அதனால்) (யாதாயிற்றோ என்று) மருட்சியடையும்;* ***மன்னற்கு -*** *இராமபிரானுக்கு;* ***யான் சொலும் வாசகம் -*** *யான் கூறவேண்டிய பொன் (பொருள்) பொதிந்த மொழியை;* ***இனி -*** *இப்போது;* ***அருளுவாய் -*** *வழங்குவாயாக;* ***என்று -*** *என்று கூறி (அனுமன்);* ***அடியின் இறைஞ்சினான் -*** *(பிராட்டியின்) திருவடிகளில் வீழ்ந்து வணங்கினான்.*

*இராவணனால்இருண்ட ஞாலம் உன்னால் தெளிவு பெறும். சில்பகல் தங்குதல் பிராட்டிக்கு ஏற்றிக் கூறினர் சிலர். அனுமன், யான் காலதாமதம் செய்தால் பெருமான் மயங்கும் ஆதலின் விரைவில் செல்ல வேண்டும் என்று பிராட்டியிடம் கூறுகின்றான். தங்குதல் என்ற சொல்லுக்கு காலதாமதம் செய்தல் என்று பொருள். தரவு இடை தங்கல் ஓவிலன் (பொருநர் 173) தரல் இடத்துத் தாழ்த்தல் இலன் என்றுமாம், என்னும் சார்புரையை நோக்குக.* ***(28)***

*அனுமனிடம் சீதைகூறியவை*

***5373. 'இன்னும்,ஈண்டு, ஒரு திங்கள் இருப்பல் யான்;***
***நின்னைநோக்கிப் பகர்ந்தது, நீதியோய் !***
***பின்னை ஆவிபிடிக்ககிலேன்; அந்த***
***மன்னன் ஆணை;இதனை மனக் கொள் நீ.***

***நீதியோய் -*** *நீதியின் வடிவான அனுமனே;* ***யான் -*** *நான்;* ***இன்னும் -*** *மேலும்;* ***ஈண்டு -*** *இந்த இலங்கையில்;* ***ஒரு திங்கள் இருப்பல் -*** *ஒரு மாதம் பெருமான் வருகைக்காக உயிருடன் இருப்பேன்;* ***பின்னை -*** *அதற்குப் பின்பு (அவர் வரவில்லை எனின்);* ***ஆவி பிடிக்ககிலேன் -*** *என் உயிரை நிறுத்தி வைக்கும் ஆற்றல் உள்ளேன் அல்லேன்;* ***அந்த மன்னன் ஆணை -*** *அந்த அரசன் ஆணை;* ***நின்னை நோக்கிப் பகர்ந்தது -*** *உன் இயல்பைப் பார்த் துக்கூறப் பெற்றது;* ***நீ -*** *(அறிஞனாகிய) நீ;* ***இதனை -*** *இந்த மொழியை;* ***மனத்துக்கொள் -*** *மனத்தில் அமைத்துக் கொள்க. நீ நீதிமான்இராவணன்பால் 'யாக்கை பேணி - நாண் இலாது இருந்தேன் அல்லேன்..... புண்ணிய மூர்த்தி தன்னைக் காணலாம் இன்னும் என்னும் காதலால் இருந்தேன்' என்றும், 'நின் தலைகள் சிந்தி வென்று நின்றருளும் கோலம் காணிய கிடந்த வேட்கை.... அழியும் ஆவி தீர்க்கும்' (கம்ப. 7653,7654) என்றும் பேசியதை இங்கே நினைக்கவும். ஒரு செயலின், உறுதிப்பாட்டையும், உண்மையையும் வெளிப் படுத்த ஆணையிடுவது மரபு. அந்த ஆணை இறைவன் பெயராலும் மந்திரத்தின் பெயராலும் நிகழும். தீண்டு வீராயின் எம்மைத் திருநீலகண்டம்.... என்றும் ஆணை கேட்ட பெரியவர் என்றும் சேக்கிழார் குறிப்பர்.* ***(29)***

***5374. ' "ஆரம் தாழ் திரு மார்பற்கு அமைந்தது ஓர்***
***தாரம்தான்அலளேனும், தயா எனும்***
***ஈரம்தான் அகத்துஇல்லை என்றாலும், தன்***
***வீரம் காத்தலைவேண்டு" என்று வேண்டுவாய்.***

***ஆரம் தாழ்திருமார்பற்கு -*** *மாலை தங்கும்மார்புடைய இராம பிரானுக்கு;* ***அமைந்தது ஓர் -*** *ஏற்புடைத்தான;* ***தாரம் அலனேனும் -*** *மனைவியாக இல்லாவிடினும் (அதனால்);* ***அகத்து -*** *இராமபிரானின் உள்ளத்தில்;* ***தயா எனும் ஈரம் இல்லை என்றாலும் -*** *கருணை இல்லாமற் போனாலும்;* ***தன் -*** *தனக்கே உரித்தான;* ***வீரம் காத்தலை -*** *வீரத்தைப்*

*பாதுகாக்கும் பண்பை;* ***வேண்டு -*** *நீ விரும்புவாயாக;* ***என்று வேண்டுவாய் -*** *என்று விண்ணப்பம் செய்வாயாக.*

*ஆரம்தாழ் - மாலைதங்கிய. தாரம்தான் அலள் என்பதிலுள்ள தான் அசை ஈரம் - அன்பு. ஈரம் ஆவதும் இற்பிறப்பாவதும் (வாலி வதை) ஈரம் நீங்கிய சிற்றவை (நட்புக் கோள்) ஈரம் அளைஇ (குறள்) பிறர் துன்பம் நோக்கிக் கொள்ளும் பண்பு ஈரம். யான் தகாதவளாய் இருத்தலின் பெருமான் உள்ளத்தில் இருந்த ஈரம் உலர்ந்து போயிற்று.ஆனால் வீரம் கூடவாவற்றிப் போக வேண்டும் ஈரம் உலர்ந்தது போல் வீரம் உலராமல் காத்துக் கொள்ள வேண்டும் என்று பேசும் பிராட்டி மொழியில் வெறுப்பும் வெகுளியும் புலப்படுகிறது. பிராட்டி உலகப் பெண்கள் போலவே பேசுகிறாள். திருமார்பற்கு என்பதில் உள்ள நான்காம் உருபை ஏழன் உருபாக மாற்றி, திருமார்பின்பால் என்றும் பொருள் கூறலாம். இந்த ஏழன் உருபு வேண்டு என்னும் ஏவலில் நிறைவு பெறும். மார்பற்கு அமைந்தது ஓர் என்னும் சொற்பிணைப்பு அங்ஙனம் உரைகூறுவதை வன்மையாகக் கண்டிக்கிறது.* ***(30)***

***5375. 'ஏத்தும் வென்றி இளையவற்கு, ஈது ஒரு***
***வார்த்தை கூறுதி;"மன் அருளால் எனைக்***
***காத்து இருந்ததனக்கே கடன், இடை***
***கோத்த வெஞ்சிறை வீடு" என்று கூறுவாய***

***ஏத்தும் -*** *யாவராலும்புகழப்படும்;* ***வென்றி -*** *வெற்றியை உடைய;* ***இளையவற்கு -*** *இலக்குவனுக்கு;* ***ஈது ஒரு வார்த்தை -*** *இந்த ஒரு மொழியை;* ***கூறுதி -*** *சொல்லுக;* ***மன் அருளால் -*** *இராமபிரானுடைய கட்டளையால்;* ***எனை -*** *என்னை;* ***காத்திருந்ததனக்கே -*** *பாதுகாத்திருந்த இளையவற்கு;* ***கடன் -*** *(இப்போதும் காப்பது) கடமை உள்ளது (ஆதலால்);* ***இடை கோத்த -*** *நடுவில் என்னைப் பிணித்த;* ***வெஞ்சிறை -*** *கொடிய சிறையிலிருந்து;* ***வீடு -*** *விடுவிக்க;* ***என்று கூறுவாய் -*** *என்று கூறுவாயாக.*

*பிராட்டிசிந்தித்துச் சிந்தித்துப் பேசுகின்றாள். ஆதலால் பேச்சு இடை இடையே தடுமாறி வருகிறது. இலக்குவனை எண்ணும்போது அவன்பால்தான் கூறிய கடுஞ்சொற்கள் நினைவு வந்தது போலும். இளையவற்கு ஒரு வார்த்தை சொல்... இராமபிரான் கட்டளையால் பாதுகாத்தவற்குத் தான் கடமை உண்டு... இடையிலே என்னைப் பிணித்த சிறையிலிருந்து விடுவிப்பது என்று கூறுக என்ற தொடர் அமைப்பு அதனைக் காட்டும்* ***(31)***

***5376. ' "திங்கள் ஒன்றின் என் செய் தவம் தீர்ந்ததால்;***
***இங்குவந்திலனேஎனின், யாணர் நீர்க்***
***கங்கையாற்றங்கரை, அடியேற்கும், தன்***
***செங் கையால்கடன் செய்க" என்று செப்புவாய்.***

***திங்கள்ஒன்றில் -*** *ஒருமாத காலஎல்லையில்;* ***என் -*** *என்னுடைய;* ***செய்தவம் -*** *செம்மையான தவம்;* ***தீர்ந்ததால் -*** *நிறைவேறுகிற படியால்; (அதற்குள்) (இராமபிரான்)* ***இங்குவந்திலனே எனில் -*** *இங்கவாராமற் போவானேயானால்;* ***யாணர் நீர் -*** *அழகிய நீர்ப் பெருக்கை உடைய;* ***கங்கையாற்றங்கரை -*** *கங்கை நதியின் கரையில்;* ***அடியேற்கும்***

*- அடியேனுக்கும்;* ***தன் -*** *தன்னுடைய;* ***செங்கையால் -*** *சிவந்த கரங்களால்;* ***கடன் செய்க என்று -*** *இறுதிச் சடங்கைச் செய்க என்று;* ***செப்புவாய் -*** *சொல்வாயாக.*

*ஒரு மாதஎல்லையில் தவம் நிறைவு பெறுகிறது. அதற்குள் வந்தால் என்னைப் பார்க்கலாம். இல்லையேல் இறந்து படுவேன். அச்சடங்கு செய்ய இங்கு வரவேண்டா. அதை அங்கே அருகில் உள்ள கங்கைக் கரையில் செய்க என்று கூறுக என்று கூறுவதால் பிராட்டியின் மனநிலை புலப்படுகிறது. செய்தவம் - செம்மையான தவம். 'செய்திருவினைஉற' (கம்ப. 2624) செய்யும் தவம் என்று கூறினும் அமையும்.*
***(32)***

## *5377. ' "சிறக்கும் மாமியர் மூவர்க்கும், சீதை ஆண்டு*
## *இறக்கின்றாள்தொழுதாள்" எனும் இன்ன சொல்,*
## *அறத்தின்நாயகன்பால்; அருள் இன்மையால்*
## *மறக்கும்ஆயினும்,நீ மறவேல், ஐயா !*

***ஐயா -*** *தந்தையே;* ***சிறக்கும் -*** *உயர்வடைகின்ற;* ***மாமியர் மூவர்க்கும் -*** *மூன்று மாமிகட்கும்;* ***ஆண்டு -*** *அந்த இலங்கையில்;* ***இறக்கின்றாள் சீதை -*** *இறக்கப் போகும் சீதை;* ***தொழுதாள் -*** *கைகூப்பி வணங்கினாள்;* ***எனும் -*** *என்கின்ற;* ***இன்ன சொல் -*** *இந்த வார்த்தை;* ***அறத்தின் நாயகன்பால் -*** *அறத்தின் தலைவனான இராமபிரான்பால்;* ***அருள் இன்மையால் -*** *கருணையில்லாத காரணத்தால்;* ***மறக்கும் ஆயினும் -*** *(அவர்கள் பால் கூற) மறந்து போயினும்;* ***நீ மறவேல் -*** *நீ மறந்து விடாதே.*

*அறத்தின்நாயகன் எதிர்மறைத் தொனி. அறம் இல்லாதவன் என்பது பொருள். இறக்கும் ஒருத்தி கூறிய மொழியை மறப்பவன் அறம் இல்லாதவன் என்று கூறவேண்டுமோ. அவர்பால் அறம் உண்டு. அருள் இல்லை என்று இராமனை விமர்சனம் செய்கின்றாள். இராமபிரான் தண்டகவனத்து முனிவர்கள்பால் கூறிய மொழியை இங்கே எண்ணும் பிராட்டி இங்ஙனம் பேச நேர்ந்தது.*
***(33)***

## *5378. 'வந்து எனைக் கரம் பற்றிய வைகல்வாய்,*
## *"இந்த, இப்பிறவிக்கு இரு மாதரைச்*
## *சிந்தையாலும்தொடேன்" என்ற, செவ் வரம்*
## *தந்த வார்த்தைதிருச் செவி சாற்றுவாய்.*

*(இராமபிரான்)*

***வந்து -*** *மிதிலையை அடைந்து;* ***எனை -*** *என்னை;* ***கரம் பற்றிய -*** *திருமணம் செய்து கொண்ட;* ***வைகல்வாய் -*** *உடன் உறை காலத்தில்;* ***இப்பிறவிக்கு -*** *இந்த அவதாரத்தில்;* ***இருமாதரை -*** *இரண்டாவது பெண்ணை;* ***சிந்தையாலும் -*** *மனத்தால் கூட;* ***தொடேன் -*** *தீண்டமாட்டேன்;* ***இந்த(ா) -*** *(இவ்வுறுதியைப்) பெற்றுக் கொள்;* ***என்ற -*** *என்கின்ற;* ***செவ்வரம் -*** *செம்மையான வரத்தை;* ***தந்த -*** *வழங்கிய;* ***வார்த்தை -*** *செய்தியை;* ***திருச் செவி சாற்றுவாய் -*** *இராமபிரான் செவியில் மொழிக.*

*இந்த இப்பிறவிஎன்பது போல் அமைந்த தொடர் கந்தபுராணத்தில் உள்ளது. இந்தா இஃது ஓர் இளங்குழவி என்றெடுத்து - ஈந்தனள் (வள்ளியம்மை 35) இரு மாதர் - என்பதற்கு. பூமி, நீளை என்று சமத்காரமாகக் கூறும் மரபும் உண்டு. 'தொடேன் என்று' என்னும் பாடம் சிறப்புடைத்து. இந்த இப்பிறவி என்னும் தொடருக்கு இந்த மானிடப் பிறவியில் என்று உரை கூறுவர். இரண்டு சுட்டு உறுதிப் பொருள் தந்தன என்பர். அவர்கள் இந்தவிப் பெயர் (இரணியன் 26) என்னும் பாடலை மேற்கோள் காட்டுவர் (அடை - பதி) அப் பதிப்பு, இரணிய வதைப் படலத்தில் 'எந்தை இப்பெயர்' என்னும் பாடத்தைக் கொண்டது அதிசயம்.* ***(34)***

***5379. ' "ஈண்டு நான் இருந்து, இன் உயிர் மாயினும்,***
***மீண்டு வந்துபிறந்து, தன் மேனியைத்***
***தீண்டலாவது ஓர்தீவினை தீர் வரம்***
***வேண்டினாள்,தொழுது" என்று விளம்புவாய்.***

***ஈண்டு -** இந்தஇலங்கையில்; **நான் இருந்து -** (மீட்சி பெறாமல்) நான் துன்பத்துடன் இருந்து; **இன் உயர் மாயினும் -** இனிய உயிர் இறந்தாலும்; **மீண்டு வந்து பிறந்து -** மறுபடியும் உலகிற்கு வந்து பிறந்து; **தன் மேனியை -** இராமபிரானுடைய திருமேனியை; **தீண்டல் ஆவது -** தழுவுதலாகிய; **ஓர் -** ஒப்பற்ற; **தீவினை தீர்வரம் -** தீமையிலிருந்து நீங்கும் வரத்தை; **தொழுது வேண்டினாள் -** கைகூப்பி வேண்டிக் கொண்டாள்; **என்று விளம்புவாய் -** என்று கூறுவாயாக. நின்மேனிஎன்னும் பாடம் இருந்தது போலும். வேண்டினேன் தொழுது என்று அமைக்கலாம் போலும். இராமபிரானின் மேனியைத் தழுவுவது தீவினை தீர்வரம் என்று பிராட்டி கருதினாள். தீவினை என்றது பெருமானைப் பிரிந்திருத்தலை.* ***(35)***

***5380. 'அரசு வீற்றிருந்து ஆளவும், ஆய் மணிப்***
***புரசை யானையின்வீதியில் போகவும்,***
***விரசு கோலங்கள்காண விதி இலேன்;***
***உரை செய்துஎன்னை ? என் ஊழ்வினை***
***உன்னுவேன்.***

***அரசுவீற்றிருந்து-** (இராமபிரானுடன்) சிம்மாசனத்தில் ஒக்க இருந்து; **ஆளவும் -** ஆட்சி புரியவும்; **ஆய்மணி -** அசையும் மணியையும்; **புரசை -** கழுத்திடு கயிற்றையும் (பெற்ற); **யானையின் -** யானையின் மேலே; **வீதியில் போகவும் -** வீதியில் உலாச் செல்லவும்; **விரசு கோலங்கள் -** (பெருமானின்) பொருந்திய பிற அலங்காரங்களை; **காண(வும்) -** பார்ப்பதற்கும்; **விதியிலேன் -** பாக்கியமில்லாத யான்; **உரை செய்து என்னை -** (பலபடியாக) பேசுவதால் என்ன பயன்; **என் ஊழ்வினை உன்னுவேன் -** என்னுடைய பழவினையை நினைந்து துன்பம் அடைவேன்.*

*ஆய்தல் -அசைதல். ஆய்மதி (திருச்சிற் - 125 உரை - அடை - பதி) புரசை - யானையின் கழுத்தில் கட்டப்படும் கயிறு. ஆளவும், போகவும், காணவும் விதியிலேன் என்று கூட்டுக. காணவும் என்பது காண என வந்துள்ளது. உம்மைத் தொகை ஆளவும் போகவும் விதியிலேன் என்று பொருள் கூறப்பெற்றது. ஏற்பின் ஏற்க. விதி - பாக்கியம். 'விதியில் சாக்கியர்' என்னும் பகுதிக்குப் பாக்கியமில்லாத பௌத்தர் என்று விளக்கம் கூறப் பெற்றது. அரசு என்றது அரசு கட்டிலை 'அரசு வீற்றிருக்க வீட்டீர்' (கம்ப. 4326)*

*பழந்தமிழ் மன்னர் அரசியுடன் வீற்றிருத்தலை மெய்க்கீர்த்திகள் கூறும். 'வீரசிம்மாசனத்து திரிபுவனமுடையாளொடும் வீற்றிருந்தருளிய' (முதற் குலோத்துங்கன் மெய்க்கீர்த்தி)* ***(36)***

***5381. 'தன்னை நோக்கி உலகம் தளர்தற்கும்,***
***அன்னைநோய்க்கும், பரதன் அங்கு ஆற்றுறும்***
***இன்னல்நோய்க்கும், அங்கு ஏகுவது அன்றியே,***
***என்னை நோக்கி,இங்கு, எங்ஙனம் எய்துமோ ?***

*(இராமபிரான்)*

***தன்னைநோக்கி -*** *தன்னையே எண்ணி;* ***உலகம் -*** *உலக மக்கள்;* ***தளர்தற்கும் -*** *தளர்ச்சியடைவதைப் போக்குவதற்கும்;* ***அன்னை நோய்க்கும் -*** *தாயின் துன்பத்தைப் போக்குவதற்கும்;* ***அங்கு -*** *அயோத்தியில்;* ***பரதன் ஆற்றுறும் -*** *பரதன் சுமக்கின்ற;* ***இன்னல் நோய்க்கும் -*** *துன்பமாகிய நோயைப் போக்குவதற்கும்;* ***அங்கு ஏகுவது அன்றி -*** *அயோத்திக்குச் செல்வதேயல்லாமல்;* ***என்னை நோக்கி -*** *(தகுதியற்ற) என்னை மனத்தில் நினைத்து;* ***எங்ஙனம் -*** *எப்படி;* ***இங்கு எய்தும் -*** *இந்த இலங்கைக்கு வருவார்.*

*தளர்தற்கும்நோய்க்கும் என்பது தளர்ச்சியைப் போக்குதற்கும் நோதற்கும் என்று உரை கொள்க. பிணிக்கு மருந்து, மறத்திற்கும் அஃதே துணை. துன்பத்திற்கு யாரே துணை என்னும் குறட் பகுதிகளை நோக்குக. இராமபிரான், உலகத் துன்பத்தையும், தாயின் நோயையும், சகோதரன் நோயையும் போக்க நினைப்பது முறை. தன் ஒருத்தியின் துன்பம் போக்க அவன் கருதாதிருப்பது குற்றம் அன்று, என்று பிராட்டி பேசினாள். எய்துமே என்பதில் உள்ள ஏகாரம் எதிர்மறைப் பொருளில் வந்தது. பதினான்கு வருடம் முடிந்தாலன்றி இராமபிரான் அயோத்தி செல்லான் என்பதைப் பிராட்டி மறந்தது துன்பத்தின் மிகையால் அல்லது வெறுப்பால் என்க. ஆற்று+உறும்- ஆற்றுறும் உறு என்பது துணைவினை. ஆற்றும் என்க.* ***(37)***

**கலிவிருத்தம் (வேறு)**

***5382. 'எந்தை,யாய், முதலிய கிளைஞர் யார்க்கும், என்***
***வந்தனைவிளம்புதி; கவியின் மன்னனை,***
***"சுந்தரத்தோளனைத் தொடர்ந்து, காத்துப் போய்,***
***அந்தம் இல்திரு நகர்க்கு அரசன் ஆக்கு" என்பாய்.***

*(அனுமனே நீ)*

***எந்தை, யாய்,முதலிய -*** *என்னுடைய தந்தை தாய் முதலான;* ***கிளைஞர் யார்க்கும் -*** *எல்லாச் சுற்றத்தார்க்கும்;* ***என் -*** *என்னுடைய;* ***வந்தனை விளம்புதி -*** *வணக்கத்தைக் கூறுக (பிறகு);* ***கவியின் வேந்தனை -*** *குரங்குகளின் தலைவனான சுக்கிரீவன்பால்;* ***சுந்தரத் தோளனை -*** *அழகிய தோள்களைப் பெற்ற இராமபிரானை;* ***தொடர்ந்து -*** *பின்பற்றிச் சென்று;* ***அந்தம் இல் -*** *முடிவில்லாத;* ***திருநகர்க்கு -*** *அழகிய அயோத்திக்கு;* ***அரசன்ஆக்கு -*** *மன்னவனாகச் செய்வாயாக;* ***என்பாய் -*** *என்று கூறுவாயாக. சுந்தரத்*

*தோளன்- திருமால். இங்கு இராமன் மேல் சாற்றிப் பேசப் பெற்றது, திருமாலே இராமனாதலால் - மதுரக் கொழுஞ்சாறு கொண்ட சுந்தரத் தோளுடையான் என்பது கோதையின் காதல் மொழி (நாச் 5.9.1) கவியின் மன்னனை என்பதில் உள்ள இரண்டனுருபை ஏழன் உருபாக மாற்றுக, மன்னன்பால் என்க.*
***(38)***

*அனுமன் சீதையைத்தேற்றல்*

***5383. இத் திறம்அனையவள் இயம்ப, 'இன்னமும்,***
***தத்துறல்ஒழிந்திலை, தையல் நீ !' எனா,***
***எத்திறத்துஏதுவும் இயைந்த இன் உரை,***
***ஒத்தன, தெரிவுறஉணர்த்தினான் அரோ;***

***அனையவள் -*** *அங்ஙனம்நொந்த பிராட்டி;* ***இத்திறம் -*** *இப்படி (கலங்கி);* ***இயம்ப -*** *பலபடியாகப் பேச; (அனுமன்) பிராட்டியை நோக்கி)* ***தையல் -*** *அம்மையே;* ***நீ -*** *நீ;* ***இன்னமும் -*** *இன்னும்கூட;* ***தத்துறல் ஒழித்திலை -*** *கலங்குதலை விட்டாயில்லை;* ***எனா -*** *என்று முன்னுரை பேசி;* ***எத்திறத்தும் -*** *காரணங்களும் (காரியங்களும்);* ***இயைந்த -*** *அமைந்துள்ளனவும்;* ***ஒத்தன -*** *அறிவு ஒவ்வக் கூடியனவும் ஆன;* ***இன்உரை -*** *இனிய மொழியை;* ***தெரிவுற -*** *மனம் தெளிவு அடையும்படி;* ***உணர்த்தினான் -*** *உணரும்படி கூறினான்;*

*இன்உரைஉணர்த்தினான். எத்திறத்து ஏதுவும் இயைந்த, ஒத்தன, இன்உரை, என்று கூட்டுக. எத்திறத்தும் என்பது எத்திறத்து என்று வந்துள்ளது. உம்மைத் தொகை - அரோ - அசை. இவ்விருத்தம் விளம் - விளம் - மா - கூவிளம் என்னும் சீர்களைப் பெற்றுவரும். இந்நூலில் 2177 முறை இவ்விருத்தம் காட்சிதருகிறது.* ***(39)***

**வஞ்சிவிருத்தம்**

***5384. 'வீவாய், நீ இவண்; மெய் அஃதே ?***
***ஒய்வான், இன்உயிர், உய்வானாம் !***
***போய், வான் அந் நகர் புக்கு அன்றோ***
***வேய்வான்மௌலியும் ? மெய் அன்றோ ?***

*(பிராட்டியே)*

***நீ இவண்வீவாய் -*** *நீ இங்கே இறந்து விடுவாய்;* ***அஃது மெய்யே -*** *அது உண்மையே; (நீ இறந்தபின்)* ***ஓய்வான் -*** *(பிரிவாற்றாமையால்)தளர்ந்துள்ள இராமபிரான்;* ***இன் உயிர் உய்வானாம் -*** *இனிய உயிர் தப்பி வாழ்வானாம்;* ***போய் -*** *காட்டை விட்டுச் சென்று;* ***வான் அந்நகர் புக்குஅன்றோ -*** *சிறந்த அயோத்தி நகர் புகுந்த பிறகல்லவா;* ***மௌலியும் வேய்வான் -*** *முடிசூட்டிக் கொள்வான்;* ***மெய்யன்றே -*** *இவை யாவும் நிகழக் கூடிய உண்மை யல்லவா.*

*இப்பாடலில்கூறப்பட்ட உடன்பாடு யாவும் எதிர்மறைப் பொருளில் வந்தவை. எடுத்தல் ஓசையால் கூறி இதனுள் உள்ள எதிர்மறைப் பொருளை அறிக. இப்பாடலின்*

*நடை எதிர்மறைப் பொருள் தருவதற்கேற்ப அமைந்துள்ளது. இராமபிரான், பதினான்கு வருடம் முடியுமுன் எந்த நகரிலும் புகேன் என்று விரதம் எடுத்துக் கொண்டது பேசப் பெற்றது. போவான் என்ற பாடமே சிறந்தது. இவ்விருத்தம் மா - விளம் - காய் என்னும் சீர்களைப் பெற்று வரும். இத்தகைய பாடல்கள் இந்நூலில் 14 உள்ளன. எட்டு ஒன்பது அளவியற் சந்தம் என்று கம்பன் அடிப்பொடி அவர்கள் குறிக்கின்றார்.* ***(40)***

***5385. 'கைத்து ஓடும் சிறை, கற்போயை***
***வைத்தோன் இன்உயிர் வாழ்வானாம் !***
***பொய்த்தோர்வில்லிகள் போவாராம் !***
***இத்தோடு ஒப்பதுயாது உண்டே ?***

***கற்போயை -*** *கற்புவடிவமான உன்னை;* ***கைத்து ஓடும் சிறை -*** *(கண்டவர்கள்) வெறுத்து ஓடும் சிறையில்;* ***வைத்தோன் -*** *சிறைவைத்த இராவணன்;* ***இன்னுயிர் வாழ்வானாம் -*** *இனிய உயிருடன் வாழ்ந்திருப்பானாம்;* ***ஓர் வில்லிகள் -*** *ஒப்பற்ற வில்லேந்திய இராமலக்குவர்கள்;* ***பொய்த்து -*** *கடமையிலிருந்து தவறி;* ***போவாராம் -*** *திரும்பிப் போய் விடுவார்களாம்;* ***இத்தோடு ஒப்பது -*** *இதனை ஒக்கும் நிகழ்ச்சி;* ***யாது உண்டு -*** *யாது உள்ளது;*

*சிறையின்கொடுமையால் எவரும் அதைக் கண்டால் வெறுத்து ஓடுவர். கற்பு, ஓயை எனப்பிரித்து கற்பின் நெறியில் உள்ள அன்னை என்று பொருள் கொண்டு, என்னினிச் செய்வது எம் மோய் என்னும் பாடல் (கம்ப. 6034) மேற்கோள் காட்டப்பட்டது. அங்கு 'மோய்' என்பதே சொல். ஒய் அன்று 'உன் மோயினி வருத்தமும்' என்றே குலசேகரர் பேசுவார் (பெருமாள் 99) பொய்த்தல் - தவறுதல், விண்நின்று பொய்ப்பின் - (குறள் 17) (அடை பதிப்பு) இராமபிரான், அரக்கர்களை அழித்து, அறத்தை நிலைநாட்டுவேன் என்று தண்டக வன முனிவர் பால் கூறியதைத் தவறிப் போகான் என்பது குறிப்பு. கைத்து ஓடும் சிறைஎன்பதற்குசிறைப்பட்டார் உயிர் வாழ்க்கையை வெறுத்த உடலை விட்டும் ஓடுதற்குக் காரணமான சிறை. என்று நயவுரை கூறுவாரும் உளர். கைத்து ஓடும்சிறை - உன் கற்புக்குப் பயந்துதானே வெறுத்து ஓடும் சிறை என்பது பழைய உரை. (அடை - பதி) இத்தோடு என்பதில் உள்ள ஓடு உருபு 'ஐ' உருபாகக் கொள்ளப் பெற்றது. செயப்படு பொருளாதலின் ஒத்தல் இரண்டன் உருபல்லவா ?*
***(41)***

***5386. 'நல்லோய் ! நின்னை நலிந்தோரைக்***
***கொல்லோம், எம் உயிர் கொண்டு அங்கே***
***எல்லோமும் செல,எம் கோனும்***
***வில்லோடும் செலவேண்டாவோ ?***

***நல்லோய் -*** *நற்பண்புஅமைந்த தாயே;* ***நின்னை நலிந்தோரை -*** *உன்னை வருத்திய அரக்கர்களை;* ***கொல்லோம் -*** *கொல்லாமல்;* ***எம் உயிர் கொண்டு -*** *எங்கள் உயிரைச் சுமந்து கொண்டு;* ***அங்கே -*** *அயோத்திக்கு;* ***எல்லோமும் செல -*** *யாங்கள் யாவரும் போக; (எம்மைப் போல)* ***எம்கோனும் -*** *எம் தலைவனான இராமபிரானும் (அயோத்திக்கு);* ***வில்லோடும் -*** *வில்லுடனே;* ***செலவேண்டாவோ -*** *போக வேண்டாமா.*

*யாங்கள் உயிருடன் செல்கிறோம். அதுபோல் இராமபிரான் வில்லோடு போக வேண்டாமோ. எங்கள் உயிரிருக்கும் வரையிலும், இராமபிரான் வில்லிருக்கும் வரையிலும் யாங்கள் போராடிச் சிறை மீட்போம் என்பது கருத்து. இராமபிரான் வில்லைப் போல யாங்களும் இராவணனின் கொடுமையை அழிப்போம் என்பது குறிப்பு. கொல்வோம் என்னும் முற்று எச்சப்பொருள் தந்தது. கொல்லாது என்பது பொருள் ! இராமபிரான் அயோத்தி சென்று முடிசூட்டிக் கொள்வான் என்று கருதிய பிராட்டிக்குக் கூறப் பெற்ற அசதி மொழி.* ***(42)***

***5387. 'நீந்தாஇன்னலில் நீந்தாமே,***
***தேய்ந்து ஆறாதபெருஞ் செல்வம்***
***ஈந்தானுக்கு உனைஈயாதே***
***ஓய்ந்தால்,எம்மின் உயர்ந்தார் யார் ?***

***நீந்தா -*** *நீந்திக்கடக்க மாட்டாத;* ***இன்னலில் -*** *(வாலியால் உண்டான) துன்பத்திலே;* ***நீந்தாமே -*** *வருந்தாதபடி;* ***தேய்ந்து ஆறாத -*** *குறைந்து இல்லமாற் போகாத;* ***பெரும் செல்வம் ஈந்தானுக்கு -*** *பெரிய செல்வத்தை எங்கட்கு வழங்கியஇராமபிரானுக்கு;* ***உனை ஈயாதே -*** *உன்னைச் சிறைமீட்டு வழங்காமல்;* ***ஓய்ந்தால் -*** *செயலற்றுக் கிடந்தால்;* ***எம்மின் -*** *எம்மைவிட;* ***உயர்ந்தார் யார்-*** *சிறந்தவர் யாவரோ. நீந்துதல்,துன்பத்தில் கிடத்தல். நீந்தல் கடத்தல் என்னும் பொருளைத் தந்தது வசைவெள்ளம் நீந்தாய் நீந்தாய் நின் மகனோடும் என்று தசரதன் கைகேயிடம் பேசுவான். அறாத என்பது ஆறாத என்று வந்தது. உயர்ந்தார் யார் என்பது இழிந்தவர் என்னும் பொருள் தந்தது. பிறர்க்கு அடிமையின்றி வாழ்வதைப் பெருஞ்செல்வம் என்று அனுமன் குறித்தான். வாலியால் அடிமைப்பட்டவர்கள் இராமபிரானால் சுதந்திரம் பெற்றனர். சுக்கிரீவன் அஞ்சிக் குகையில் ஒளிந்து வாழ்ந்ததே அடிமை வாழ்வைக் குறிக்கிறது.* ***(43)***

***5388. ' "நன்றுஆம் நல்வினை நல்லோரைத்***
***தின்றார்தம்குடர் பேய் தின்னக்***
***கொன்றால் அல்லது, கொள்ளேன் நாடு"***
***என்றானுக்கு, இவைஏலாவோ ?***

***நன்று ஆய் -*** *சிறந்ததைஆராய்கின்ற;* ***நல்வினை -*** *சிறந்த தொழில்களையுடைய;* ***நல்லோரை -*** *முனிவர்களை;* ***தின்றார் தம் -*** *தின்ற அரக்கர்களின்;* ***குடர் -*** *குடலை;* ***பேய்தின்ன -*** *பேய்கள் தின்னும்படியாக;* ***கொன்றால் அல்லது -*** *அரக்கர்களைக் கொன்றால் அல்லாமல்;* ***நாடு கொள்ளேன் -*** *கோசல நாட்டைப் பெறமாட்டேன்;* ***என்றானுக்கு -*** *என்று முனிவர் பக்கல் கூறிய இராமபிரானுக்கு;* ***இவை -*** *அரக்கரை அழித்தலும் சிறை மீட்டலும்;* ***ஏலாவோ -*** *செய்ய முடியாத செயலா ?*

*நன்று என்பதுபெரிது என்னும் பொருள்தரும். அஃது இங்கே பிரமத்தைக் குறிக்கிறது. இயமம் முதலானவை ஆரம்ப சாதகர்கட்கே. இம் முனிவர்கள் யோகநிலை தாண்டி தவநிலைக்கு வந்தவராதலின் நன்று என்பதற்கு இயமம் முதலானவை என்று கூறும் உரை ஏலா. கொள்ளுதல், நாட்டு ஆட்சியைப் பெறுதல். இராமபிரான் சூர்ப்பனகை பால் அரக்கர் குலம் தொலைத்து... நகர் புகுவேம்' என்று கூறினான். இராமபிரான் தண்டக முனிவர் பால் கூறிய சபதத்தை அகத்தியப்*

*படலத்தில் காண்க. (கம்ப. 2647-52) ஏலுதல் - செய்தல். அதன் எதிர் மறை வடிவம் ஏலாவோ என்று வந்துள்ளது. இயலும் என்பதன் திரிபே ஏலும் என்பது.*
***(44)***

## *5389. 'மாட்டாதார் சிறை வைத்தோயை,*
## *"மீட்டாம்"என்கிலம் மீள்வாமேல்,*
## *நாட்டார்,நல்லவர், நல் நூலும்*
## *கேட்டார், இவ்உரை கேட்பாரோ ?*

*(நாங்கள்)*

***மாட்டாதார் -*** *வலிமைஅற்ற அரக்கர்களால்;* ***சிறைவைத் தோயை -*** *சிறையில் வைக்கப்பட்ட உன்னை;* ***மீட்டாம் என்கிலம் -*** *மீட்டுவிட்டுடோம் என்று கூறாமல்;* ***மீள்வாமேல் -*** *யாங்கள் திரும்பிச் சென்றால்;* ***இவ் உரை -*** *திரும்பச் சென்றோம் என்ற இந்த மொழியை;* ***நாட்டார் -*** *நாட்டுப் பொதுமக்களும்;* ***நல்லவர் -*** *தூய மனம் பெற்றவர்களும்;* ***நன்னூல் கேட்டார் -*** *நல்ல சாத்திரங்களைப் படித் தவர்களும்;* ***கேட்பாரோ -*** *ஏற்றுக் கொள்வாரோ.*

*நாங்கள் உண்மையாகத்திரும்பினாலும் உலகம் ஏற்காது. அங்ஙனம் இருக்க நீ நம்பிக்கை இழந்து பேசலாமா என்பது கருத்து. கேட்டல் - ஏற்றுக் கொள்ளுதல் (திருக்குறள் 643) (அண்ணாமலை பதிப்பு) வஞ்சகம் செய்து தேவியைக் கவர்தலின் மாட்டாதார் என்று கூறப் பெற்றது. நன்னூலும் என்பதில் உம் அசை. நாட்டார் - பொதுமக்கள். நன்னூல் கேட்டார் - அறிஞர்கள் நல்லவர் - ஞானிகள். சிறைவைத்தோய் என்னும் செய்வினை செயப்பாட்டுப் பொருளில் வந்தது. படு என்பது மறைந்து வந்துள்ளது. இதனை 'படுதொகை' என்று சிலர் கூறுவதாக இலக்கணக் கொத்து இயம்பும் (இல. கொ. 79) கேட்டால் என்னை கிளர்ப்பாரோ என்னும் பாடம் (25 ஆம் பிரதி) உண்டு.* ***(45)***

## *5390. ' "பூண்டாள் கற்புடையாள் பொய்யாள்,*
## *தீண்டா வஞ்சகர்தீண்டாமுன்,*
## *மாண்டாள்"என்று, மனம் தேறி*
## *மீண்டால்,வீரம் விளங்காதோ ?*

*(யாங்கள்)*

***கற்புடையாள்-*** *கற்புடையவளும்;* ***பொய்யாள் -*** *பொய்யில்லாதவளும் ஆகிய பிராட்டி;* ***தீண்டா -*** *நெருங்கத்தகாத;* ***வஞ்சகர் -*** *வஞ்சக வடிவான அரக்கர்கள்;* ***தீண்டாமுன் -*** *தொடுவதற்கு முன்பு;* ***மாண்டாள் -*** *இறந்துபட்டாள் (அதனால்);* ***பூண்டாள் -*** *புகழை அணிந்து கொண்டாள்;* ***என்று -*** *என்று கருதி;* ***மீண்டால் -*** *திரும்பிச் சென்றால்;* ***வீரம் -*** *எங்களுடைய வீரமானது;* ***விளங்காதோ -*** *விளக்கம் அடையாதா.*

*சீதை இறந்துபட்டாள். இனிப் பகைவருடன் போராடுவதால் பயனில்லை என்று திரும்பினால் எங்கள் வீரம் விளக்கம் அடையாதா என்று அனுமன் கூறுவது அசதியாடலின் உச்சம். கொல்லாது திரும்பின் அகிம்சா வீரர்கள் என்று இராமன்*

*முதலானவர்களை உலகம் கொண்டாடும் என்று கூறுவதன் மூலம் எது அகிம்சை, எது அகிம்சையல்ல என்பது விளக்கப்படுகிறது. பூண்டாள் - புகழை ஆபரணமாக அணிந்தாள்; மாண்டாள், அதனால் புகழ் பூண்டாள் என்க.* ***(46)***

***5391. 'கெட்டேன்! நீ உயிர் கேதத்தால்***
***விட்டாய்என்றிடின், வெவ் அம்பால்,***
***ஒட்டாரோடு, உலகுஓர் ஏழும்***
***சுட்டாலும்,தொலையா அன்றோ ?***

***கேதத்தால் -*** *பிரிவாகிய துக்கத்தாலே;* ***நீ உயிர் விட்டாய் என்றிடில் -*** *நீ உயிரை விட்டாய் என்றால்;* ***கெட்டேன் -*** *யான் அழிந்தேன் (பிறகு);* ***வெவ்அம்பால் -*** *கொடிய அம்பினாலே;* ***ஒட்டாரோடு -*** *பகைவர்களாகிய அரக்கர்களுடன்;* ***ஓர் ஏழு உலகும் -*** *ஒப்பற்ற ஏழு உலகங்களையும்;* ***சுட்டாலும் -*** *சுட்டு எரித்தாலும்;* ***தொலையாது அன்றோ - பழி நீங்காதல்லவா;***

*கேதம் -துக்கம். 'கேதம் கெடுத்து என்னை ஆண்டருளும்' (திருவாசகம் 595) ஒட்டார் - பகைவர் கெட்டேன் - இரக்கத்தையும் அச்சத்தையும் உணர்த்தும் சொல். இன்று, தொலைந்தேன், செத்தேன் என்று பேசப்படுவது போன்றது.*
***(47)***

***5392. 'முன்னே, கொல்வான் மூஉலகும்,***
***பொன்னேபொங்கிய போர் வில்லான்,***
***என்னே ! நின்நிலை ஈது என்றால்,***
***பின்னே, செம்மைபிடிப்பானோ ?***

***பொன்னே -*** *திருமகளே!;* ***முன்னே -*** *(அரக்கரின் இயல்பு தெரிந்த) அன்று;* ***மூஉலகும் -*** *மூன்று உலகங்களையும்;* ***கொல்வான் -*** *அழிக்கும் பொருட்டு;* ***பொங்கிய -*** *சினந்து எழுந்த;* ***போர்வில்லான் -*** *போரில்வல்ல வில்லேந்திய இராமபிரான்;* ***நின்நிலை -*** *உன்னுடைய நிலைமை;* ***ஈது என் றால்-*** *இப்படிப்பட்டது என்றுஅறிந்தால்;* ***பின்னே -*** *மறுபடியும்;* ***செம்மை -*** *சாந்தப் பண்பை;* ***பிடிப்பானோ -*** *மேற்கொள்வானோ;* ***என்னே -*** *இது என்னே !*

*அரக்கர்களின்கொடுமையைக் கேட்டபோது சீறினான். இப்போது அவர் கொடுமையை அறிந்து விட்டான். இனி அவன் அமைதியாக இரான் என்பது குறிப்பு. முனிவர்கட்குத் தீங்கு செய்ததற்காகவே அரக்கர்களைக் கொல்ல நினைத்துள்ளவன், தன் மாட்டு தீங்கு செய்த அவர்களை விட்டிடுவானோ என்பது வை.மு.கோ வின் விளக்கம். இராமபிரான் மூன்று உலகங்களையும் அழிக்க எண்ணியதை 'எண்திசை இறுதியான உலகங்கள் இவற்றை..... களையுமாறு இன்று காண்டி' என்னும் பாடலால் அறிக (கம்ப. 3519)* ***(48)***

***5393. 'கோள் ஆனார் உயிர் கோளோடும்,***
***மூளா வெஞ்சினம், முற்று ஆகா;***
***மீளாவேல், அயல்வேறு உண்டோ ?***
***மாளாதோ புவிவானோடும் ?***

***மூளா*** - காரணம் இல்லாமல்கிளர்ந்து எழாத; ***வெம்சினம்*** - (இராமபிரானின்) கொடுங்கோபம்; ***கோள் ஆனார் உயிர்*** - கோள் போலும் அரக்கர்களின் உயிரை; ***கோளோடும்*** - பறித்தெடுப்பதுடனே; ***முற்று ஆகா*** - நிறைவு பெறாது; ***மீளாவேல்*** - அவர் சீற்றம் திரும்பி இராமபிரான் பால் ஒடுங்காவிடின்; ***புவி*** - மண்ணுலகம்; ***வானோரும்*** - விண்ணுலகுடன்; ***மாளாதோ*** - அழியாதோ; ***அயல்*** - பக்கத்தில்; ***வேறு உண்டோ*** - வேறு பொருள் அழியாமல் இருக்குமா ?.

*கொள்ளுதல் -பற்றுதல் (பறித்தல்) கொள், கோள் ஆயிற்று, கோளானோர் - என்பதற்குக் கொலை செய்பவர் என்றும் தீயோர் என்றும் பொருள் கூறலாம். கோள் எங்ஙனம் உலகத் தீமையை விளைவிக்குமோ அதுபோல் அரக்கர்கள் தீமையை விளைவிப்பார்கள். கோள் என்றது தூமகேது முதலியவற்றை. தீக்கோள் எனினும் அமையும். 'கோள் ஆகி வந்தவா கொற்ற முடி' (கம்ப. 1707) என்று முன்பு பேசப் பெற்றது.* ***(49)***

***5394. 'தாழித்தண் கடல்தம்மோடும்,***
***ஏழுக்கு ஏழ் உலகுஎல்லாம், அன்று,***
***ஆழிக் கையவன்அம்பு, அம்மா !***
***ஊழித் தீ எனஉண்ணாவோ ?***

***அம்மா !*** - தாயே (இராமன்); ***அன்று*** - உன் செய்தி கேட்கும் அன்று; ***ஆழிக்கை அவன் அம்பு*** - சக்கரம் ஏந்திய இராமபிரானின் அம்புகள்; ***தாழி*** - தாழி போன்ற; ***தண்*** - குளிர்ந்த; ***கடல் தம்மோடும்*** - கடல்கள் ஏழுடனே; ***ஏழுக்கு*** - கீழே உள்ள ஏழ் உலகுக்குச் சரியாக; ***ஏழ்*** - மேலே உள்ள ஏழான; ***உலகு எல்லாம்*** - எல்லா உலகங்களையும்; ***ஊழித் தீ என*** - ஊழிக் காலத்தில் தோன்றும் காலாக்கினிபோல்; ***உண்ணாவோ*** - உண்டு முடிக்காதோ.

*தாழி - பானை.'தாழி தரையாகத் தண் தயிர் நீராக' என முன்பு பேசப் பெற்றது. (கம்ப. 2615) தாழி என்பதற்கு ஆழ்ந்த என்னும் பொருள் கூறுவதும், தாழ் இத்தண் கடல் என்னும் பொருள் கூறுவதும் மிகை. பானை தீண்டப்படாப் பொருளோ அறியேன் நிலத்தை நாலுக்கு நாலு, எட்டுக்கு மூன்று என்பர். அங்கு உபயோகப்படுத்தப்படும் நான்கன் உருபைக் கருதுக. நான்கன் உருபை மூன்றன் உருபாக்கி ஏழொடு ஏழ் என்று கூறுவாரும் உளர். 'முடிவினில் தீக்கும் எரியின் மும்மடி கொடியன சுடுசரம் எய்தான்' (கம்ப. 6606) என்று பின்பு பேசப்படும். இங்கு கூறப்பெற்ற உரை திரிசிரபுரம் மகாவித்துவான் வி. கோவிந்தப் பிள்ளை அவர்கள் கருத்துத் தோன்ற எழுதிய உரை. ஆழி - சக்கரமே. கவிச்சக்கரவர்த்தி இராமபிரானைத் திருமால் என்றே பேசுவார். ஆதலின் இங்கு வேற்றுரை பேசுவது ஔசித்திய விரோதம். அம்மா... ஆச்சரியப் பொருளில் வழங்குவதாகவும் கொள்ளலாம்.* ***(50)***

***5395. ' "படுத்தான், வானவர் பற்றாரை;***
***தடுத்தான்,தீவினை; தக்கோரை***
***எடுத்தான்;நல்வினை, எந் நாளும்***
***கொடுத்தான்"என்று, இசை கொள்ளாயோ ?***

*(இராமபிரான்)*

***வானவர்பற்றாரை -*** *தேவர்களின் பகைவரை (அரக்கரை);* ***படுத்தான் -*** *அழித்தான்;* ***தீவினைதடுத்தான் -*** *உலகப் பாவச் செயலை அடக்கினான்;* ***தக்கோரை எடுத்தான் -*** *தகுதி வாய்ந்தவர்களை உயர்த்தினான்; (மக்களுக்கு)* ***நல்வினை -*** *நல்ல செயல்களை;* ***எந்நாளும் -*** *எக்காலத்திலும்;* ***கொடுத்தான் -*** *வழங்கினான்;* ***என்று இசை -*** *என்று உலகம் கூறும் புகழை (நீ);* ***கொள்ளாயோ -*** *இசையாயோ.*

*வானவர்பற்றாரைப் படுத்தான் என்பதால் கொடியோரை ஒறுத்தல் கூறப்பெற்றது. தக்காரை எடுத்தான் என்பதால் தக்கார்க்குத் தலையளி செய்தமை கூறியது. தீவினை தடுத்தான் என்பதால் மறம்களைந்தமை கூறியது என்றுஅண்ணாமலை... கழகம் வரைந்த உரை, அழகர், இனியர், உரையை ஒக்கும். பரம் பொருளே, இராமபிரானாகத் தோன்றியுள்ளான் என்பதும் அவன் தோற்றத்தால் நிறைவேறத் தகும் செயல்களும், அவற்றை நிறைவேற்றியமையால் அவர்க்கு உளதாம் புகழும் கூறி, அப் புகழ் தானும் கற்புடையளாகிய உன்னால் நிலை பெற வேண்டுவதன்றோ என்றவாறு, என்று அண்ணாமலை.... கழகம் பேசும் உரை நம்பிள்ளை வரைந்ததோ என்று தோன்றும்படி உள்ளது. படுத்தாள், தடுத்தாள், எடுத்தாள், கொடுத்தாள் என்னும் பாடம் சிறக்கும் போலும். இப்பாடல், தாயே, நீ உறுதியுடன் இருந்து இப்புகழைப் பெற மாட்டாயோ என்று பொருள் தரும். இங்கு சொன்ன பொருளுக்கே கொள்ளாயோ என்னும் பாடம் சிறக்கும்* ***(51)***

***5396. 'சில் நாள் நீ இடர் தீராதாய்***
***இன்னா வைகலின்,எல்லோரும்***
***நல் நாள்காணுதல் நன்று அன்றோ-***
***உன்னால் நல்அறம் உண்டானால் ?***

***நீ -*** *(கருணை வடிவான)நீ;* ***சில்நாள் -*** *சிலநாட்கள்;* ***இடர் தீராதாய் -*** *துன்பம் விலகாமல் (சிறையில்);* ***இன்னா வைகலின் -*** *வருத்தத்துடன் தங்குவதால்;* ***நல்நாள் காணுதல் -*** *நல்ல நாளைக் காண்பதானது;* ***நன்று அன்றோ -*** *சிறந்ததல்லவா (அன்றியும்);* ***உன்னால் -*** *சிறையிருக்கும் உன்னாலே;* ***நல் அறம் -*** *சிறந்த அறங்கள்;* ***உண்டானால் -*** *உயிர்தரித்து வாழுமானால்.*

*பிராட்டி, உலகம்வாழத் தவம் செய்தாள். அதனால் உலகு விடுதலை பெற்றது. தேவதேவனுடைய பட்டத்துத் தேவியான தன்னுடைய பெருமையும், சிறையிருத்தலின் தண்மையும் பாராதே, தேவ மாதர்களுடைய சிறையை விடுவித்தற்காகத்தான் சிறையிருந்தது பேரருளின் வசப்பட்டவளாய் அன்றோ. குழவி கிணற்றில் விழுந்தால் ஒக்கக் குதித்து எடுக்கும்தாயைப் போல, இவ்வுயிர்கள் விழுந்த பிறவிப் பெருங்கடலில் தானும் ஒக்கவந்து பிறந்து, இவர்கள் பட்டதைத் தானும் பற்றுகையாலே, ஒரு காரணம்பற்றி வாராத தாயாகிற சம்பந்தத்தால் வந்த அன்புக் குணத்திற்கும், இது ஒரு விளக்கமாகும், என்னும் சான்றோர் உரையை இங்கே நினைக்கவும் (ஸ்ரீ வசன பூஷனம் 1.5.உரை) இராமாவதாரத் தத்துவம், பிராட்டி, சிறையிருத்தல் மூலமாகவே நிலையுற்றதென்க. என்று அடை பதிப்பு விவரிக்கும்.*
***(52)***

***5397. ‘புளிக்கும் கண்டகர் புண்ணீருள்***
***குளிக்கும் பேய்குடையும்தோறும்,***
***ஒளிக்கும் தேவர் உவந்து, உள்ளம்***
***களிக்கும் நல்வினை காணாயோ ?***

***புளிக்கும் -** (யாவரும்) வெறுப்படைகின்ற; **கண்டகர் -** முள்போலும் அரக்கர்களின்; **புண்ணீருள் -** இரத்த வெள்ளத்தில்; **குளிக்கும் பேய் -** நீராடும் பேய்கள் (அதனுள்); **குடையும் தோறும் -** முழுகும் போதெல்லாம்; **ஒளிக்கும் தேவர் -** (இக்காட்சியை) மறைவாயுள்ள தேவர்கள்; **உள்ளம் உவந்து -** மனம் மகிழ்ந்து; **களிக்கும் -** செருக்கடைகின்ற; **நல்வினை -** நற்செயலை; **காணாயோ -** தோற்றுவிக்கமாட்டாயா.*

*புளிக்கும் -வெறுப்பைத் தரும். ஆர்ந்தோர் வாயில் தேனும் புளிக்கும் (குறுந் - 354) அடை - பதிப்பு. காண்டல் - உண்டாக்குதல். முனைவன் கண்டது முதல் நூல் ஆகும். (தொல் - பொருள். 649) அடை - பதிப்பு. குடைதல் - நீரில் மூழ்குதல். ‘குள்ளக் குளிரக் குடைந்து நீராடாதே’...என்று திருப்பாவை பேசும். குளித்தல் - நீராடுதல்.* ***(53)***

**கலி விருத்தம்**

***5398. ‘ஊழியின் இறுதியின் உரும் எறிந்தென,***
***கேழ் கிளர் சுடுகணை கிழித்த புண் பொழி***
***தாழ் இருங்குருதியால், தரங்க வேலைகள்***
***ஏழும் ஒன்றாகநின்று, இரைப்பக் காண்டியால்.***

***ஊழியின்இறுதியின் -** யுகங்களின் முடிவுக்காலத்திலே; **உரும் எறிந்தென -** இடிகள் தாக்கினாற் போல; **கேழ்கிளர் -** ஒளி விளங்கும்; **சுடுகணை -** வருத்துகின்ற அம்புகளால்; **கிழித்த -** கிழிக்கப் பெற்ற (அரக்கர்களின் உடலில் உள்ள); **புண்பொழி -** புண்கள் சொரிகின்ற; **தாழ் இரும் -** மேலே இருந்து கீழே விழும் பெரிய; **குருதியால் -** இரத்த அருவிகளால்; **தரங்க வேலைகள் ஏழும் -** அலைகளுடன் கூடிய ஏழு கடல்களும்; **நின்று இரைப்ப -** இடைவிடாமல் ஒலிப்பதைக்; **காண்டி -** காண்பாயாக.*

*யுகாந்தகாலத்தில் இடிகள் மலைகளில் தாக்கும். அதுபோல இராமபிரானின் அம்பு மலைபோன்ற அரக்கர்களைத் தாங்கும். அவருடம்பு குருதி சொரியும். தாழ்தல் - மேலிருந்து விழுதல். பொங்கு அருவிதாழும் புனல் வரை (நாலடி - 231) தாழ் என்பதற்கு ஆழம் என்று உரை கூறப் பெற்றது. சொற் பொருத்தம் நன்று. மற்றவை ஆய்க. இவ் விருத்தம் விளம்-விளம்-மா- கூவிளம் என்னும் சீர்களை முறையே பெற்று வரும். இத்தகு பாடல்கள் இந்நூலில் 2177 உள்ளன.* ***(54)***

***5399. ‘சூல் இரும் பெரு வயிறு அலைத்துச் சோர்வுறும்***
***ஆலிஅம்கண்ணியர் அறுத்து நீத்தன,***
***வாலியும் கடப்பஅரு வனப்ப, வான் உயர்***
***தாலி அம் பெருமலை தயங்கக் காண்டியால்.***

*(அம்மையே)*

***சோர்வுறும் -*** *சிந்துகின்ற;* ***ஆலி கண்ணியர் -*** *நீர்த்துளிகளுடன் கூடிய கண்களை உடைய அரக்கிமார்கள்;* ***சூல் -*** *கருக் கொண்டாற் போன்ற;* ***இரும் பெருவயிறு அலைத்து -*** *மிகப் பெரிய வயிற்றில் அடித்துக் கொண்டு;* ***அறுத்து நீத்தன -*** *அறுத்து ஒதுக்கியனவும்;* ***வாலியும் கடப்ப அரு -*** *வாலியாலும் தாண்ட முடியாத;* ***வனப்ப -*** *தோற்றத்தை உடையனவும் (ஆகிய);* ***வான் உயர் -*** *வானம் அளாவிய;* ***தாலி பெரு மலை -*** *தாலியாகிய மலை;* ***தயங்கக் காண்டி -*** *விளங்குவதைப் பார்ப்பாயாக.*

*சூல் - கரு. இயல்பாக உள்ள பெருவயிறு சூல் கொண்டாற்போல் இருக்கும். ஆலி - நீர்த்துளி. அறுத்து நீத்தனவும், வாலியாலும் கடக்கவியலாத தோற்றத்தை உடையனவும் ஆகிய தாலிமலை. சூல் - முட்டை போன்று உருண்டு பருத்திருக்கும்வயிறு. மழைச் சூல் உடும்பு பெரும்பாண் 132) ஆலியம் கண்ணினர், தாலியம் பெருமலை என்பனவற்றில் உள்ள 'அம்' சாரியை. காண்டியால் - இதில் உள்ள ஆல் அசை. இதனால் அரக்கர்கள் அழிவர். உறுதி. உனக்கும், உலகுக்கும் நல்ல காலம் வரும் என்பது குறிக்கப்பெறுகிறது.* ***(55)***

***5400. 'விண்ணின்நீளிய நெடுங் கழுதும், வெஞ் சிறை***
***எண்ணின் நீளியபெரும் பறவை ஈட்டமும்,***
***புண்ணின் நீர்ப்புணரியில் படிந்து, பூவையர்***
***கண்ணின் நீர்ஆற்றினில் குளிப்பக் காண்டியால்.***

***விண்ணின் -*** *ஆகாயத்தைப் போல;* ***நீளிய -*** *நீண்ட;* ***நெடுங் கழுதும் -*** *பெரிய பேய்களும்;* ***வெஞ்சிறை -*** *கொடிய சிறகைப் பெற்ற;* ***எண்ணின் நீளிய -*** *எண்ணத் தொடங்கில் முடிவற்றிருக்கின்ற;* ***பெரும் பறவை ஈட் டமும்-*** *பெரிய பறவைக் கூட்டமும்;* ***புண்ணின் -*** *அரக்கர்களின் புண்ணிலிருந்துவரும்;* ***நீர்ப்புணரியில் -*** *இரத்தக் கடலில்;* ***படிந்து -*** *நீராடிவிட்டு (பிறகு);* ***பூவையர் -*** *மகளிரின்;* ***கண்ணின் -*** *கண்களில் வடியும்;* ***நீர் ஆற்றினில் -*** *கண்ணீராகிய ஆற்றிலே;* ***குளிப்பக் காண்டி -*** *நீராடுதலைப் பார்ப்பாயாக. நெடும் கழுது -பெரும் பேய். கடலில் குளிப்பவர்கள், உப்பு நீங்க நன்னீரில் நீராடுவது மரபு. பட்டினப்பாலை 'தீது நீங்கக் கடலாடியும் மாசு போகப் புனல் படிந்தும்' என்று பேசிற்று. (99.10) அங்கு இனியர் 'மாசு' என்பதற்கு உப்பு என்று பொருள் கூறினார். உப்பு நீங்க நன்னீரில் குளிப்பதைப் போல, பேய்களும் பறவைகளும் குருதிக் கறை நீங்க நன்னீரில் குளித்தன என்க. ஆல் - அசை.*
***(56)***

***5401. 'கரம் பயில் முரசுஇனம் கறங்க, கை தொடர்***
***நரம்பு இயல்இமிழ் இசை நவில, நாடகம்***
***அரம்பையர் ஆடியஅரங்கின், ஆண் தொழில்***
***குரங்குகள் முறைமுறை குனிப்பக் காண்டியால்.***

***கரம் பயில் -*** *கைகளால்முழக்கப்படும்;* ***முரசு இனம் கறங்க -*** *முரசும் அதன் இனமான வாத்தியங்களும் ஒலிக்க;* ***கை தொடர் -*** *கைகளால் இயக்கப்பெறும்;* ***நரம்பு இயல் -*** *(வீணை யாழ் முதலானவற்றில் உள்ள) நரம்புகள்இயன்ற;* ***இமிழ் இசை நவில -*** *ஒலிக்கும் இசையை ஒலிக்கவும்;* ***அரம்பையர்-*** *தேவ மகளிர்;* ***நாடகம் ஆடிய அரங்கில் -*** *நடனம் ஆடிய மேடைகளில்;* ***ஆண் தொழில் குரங்குகள் -*** *ஆண்மைத் தொழில் புரிந்த*

*குரங்குகள்; **முறைமுறை** - வரிசை வரிசையாக; **குனிப்ப** - கூத்தாடுதலை; **காண்டி** - காண்பாயாக.*

*நவிலுதல் -ஒலித்தல். இளம் நவில் அன்னம் (பம்பை வாவி8) குனித்தல் என்னும் தொழிற் பெயர் குனிப்ப என்று பெயரெச்ச வடிவில் உள்ளது. குனிப்ப என்பதற்குக் குனித்தலைச் செய்ய என்பதே பொருள். 'திருமறு மார்ப நீ அருள வேண்டும்' என்று பரிபாடல் பேசும் (பரிபாடல் 1-36) அருள வேண்டும் அதிகை வீரட்டனீரே என்று அப்பர் பேசுவார் (தேவா 26-4) அருளல் வேண்டும் என்பது அருள என உருக்கொண்டது. இதுவரை, அரக்கர்கள் மகிழ அரம்பையர் நாடகம் ஆடினர். இனி அரக்கர்கள் வருந்தக் குரங்குகள் நாடகம் ஆடும். என்றதனால் அரக்கர்களின் அழிவு உறுதி செய்யப்பெறுகிறது.* ***(57)***

***5402. 'புரை உறுபுன் தொழில் அரக்கர் புண் பொழி***
***திரை உறு குருதியாறு ஈர்ப்பச் செல்வன,***
***வரை உறு பிணப்பெரும் பிறக்கம் மண்டின,***
***கரை உறு நெடுங்கடல் தூர்ப்பக் காண்டியால்.***

***புரை உறு** - குற்றம்பொருந்திய; **புண் தொழில் அரக்கர்** - அற்பத் தொழிலை உடைய அரக்கர்களின்; **புண் பொழி** - புண்கள்கொட்டுகின்ற; **திரை உறு** - அலைகள் பொருந்திய; **குருதியாறு ஈர்ப்ப** - இரத்த நதிகள் இழுப்பதால்; **செல்வன** - செல்பவையான; **வரை உறு** - மலை போன்ற; **பிணப் பெரும் பிறக்கம்** - பிணங்களின் பெரிய குவியல்; **மண்டின** - நெருங்கின வாய்; **கரைஉறு** - கரைகளைப் பெற்றுள்ள; **நெடுங்கடல்** - பெரிய கடலை; **தூர்ப்ப** - தூர்த்தலை; **காண்டி** - காண்பாயாக.*

*ஆல் - அசை. புரை- குற்றம். தூர்த்தல் - பள்ளத்தை மேடாக்குதல். இதனால் கொடுங்கோலரின் கதி, உயர்பு நவிற்சியால் பேசப் பட்டது. இராம காதையின் அடிப்படையே பொல்லாரின் வீழ்ச்சியே.* ***(58)***

***5403. 'வினையுடைஅரக்கர் ஆம் இருந்தை வெந்து உக,***
***சனகி என்று ஒருதழல் நடுவண் தங்கலான்,***
***அனகன் கை அம்புஎனும் அளவு இல் ஊதையால்,***
***கனகம் நீடுஇலங்கை நின்று உருகக் காண்டியால்.***

***வினையுடை** - தீத்தொழில்களை உரிமையாகப் பெற்ற; **அரக்கர் ஆம் இருந்தை** - அரக்கர்களாகிய கரியானது; **வெந்து உக** - எரிந்து சாம்பலாய்ச்சிதறும்படி; **சனகி என்று**- சீதை என்று சிறப்பிக்கப்படும்; **ஒரு தழல்** - ஒப்பற்ற நெருப்பு; **நடுவண் தங்கலால்** - (அதன் நடுவில்) இருத்தலினாலே; **அனகன் கை அம்பு எனும்** - இராமபிரானின் கைகள் ஏவும் அம்பு என்னும்; **அளவில் ஊதையால்** - அளவற்ற பெருங்காற்றால்; **நீடு** - பெரிய; **கனகஇலங்கை** - பொன் மயமான இலங்கை மாநகர்; **நின்று உருக** - நிலைத்துஉருகுவதை; **காண்டி** - காண்பாயாக. வினை என்றதுதீவினையே. அரக்கர்கள் கரி, சீதை, நெருப்பு, இராமபிரானின் அம்பு காற்று, இலங்கை பொன், கரியின் நடுவில் உள்ள நெருப்பு. காற்றால் மூண்டு எரியப் பொன் உருகும். கருநிறம் உடைமையால் அரக்கரைக் கரியாகவும், சிவந்த ஒளியாலும் தூய்மையாலும் தனது நிலையால் கொடியவரை எரித்தழிக்கும் தன்மையாலும் சீதையைத் தழலாகவும்*

*விரைந்து வரும் தன்மையாலும் பிராட்டியின் கற்பாகிய தழலுக்கு மேன்மை விளைவித்தலாலும் அம்பைக் காற்றாகவும் பொன்மயமான இலங்கையைப் பொன்னாகவும் உருவகப்படுத்தினார் (வை.மு.கோ. விளக்கம்)* ***(59)***

***5404. 'தாக்கு இகல் இராவணன் தலையில் தாவின,***
***பாக்கியம் அனையநின் பழிப்பு இல் மேனியை***
***நோக்கிய கண்களை, நுதி கொள் மூக்கினால்,***
***காக்கைகள்கவர்ந்து கொண்டு, உண்ணக்***
***காண்டியால்.***

*(பிராட்டியே)*

***காக்கைகள் -*** *காகங்கள்;* ***தாக்கு இகல் -*** *பகைவர்கள் மோதும் போரிலே (விழுந்த);* ***இராவணன் தலையில் -*** *இராவணனுடைய தலைகளில்;* ***தாவின -*** *தாவியமர்ந்து கொண்டு;* ***பாக்கியம் அனையன -*** *நல்வினைப் பயன் போலும்;* ***நின் -*** *உன்னுடைய;* ***பழிப்பு இல் மேனியை -*** *பழிப்பற்ற திருமேனியை;* ***நோக்கிய கண்களை -*** *பார்த்த கண்களை;* ***நுதி கொள் மூக்கினால் -*** *கூர்மை கொண்ட அலகுகளால்;* ***கவர்ந்து கொண்டு -*** *கொத்தி எடுத்துக் கொண்டு;* ***உண்ண -*** *உண்ணுதலை;* ***காண்டி -*** *பார்ப்பாயாக.*

*தாக்கு இகல் -என்பதை இராவணனுக்கு அடைமொழி ஆக்கினும் அமையும். காக்கைகள், கண்களை உண்ணக் காணுதி. பாக்கியம் - நல்வினைப் பயன். பிராட்டி, 'கண்ட வாளரக்கன் விழி காகங்கள் உண்ட போதன்றி யான் உளென் ஆவெனோ (கம்ப. 5359) என்று கூறியதைக் கருத்திற் கொண்டு திருவடி பேசிய நுட்பம் அறிக. உலகின் துன்பம் கண்டு, மகிழ்ந்த கொடுங்கோலனின் கண்களை உண்டு காகம் மகிழும் காலம் வரப் போகிறது. இது தீயவர்களுக்கு விடுத்த எச்சரிக்கை. நல்லவர்கள், தீயவர் வீழ்ச்சியில் மகிழ்வர். பிறர் துயர்ப்படுவர். உலகியல் கண்டு தெளிக. கொடுங்கோல் அழிவில் மகிழாதவர்கள் யாவரே எனினும் அவர் தீயவரே. அனுமன் நல்லோன் ஆதலின் கொடியவர் வீழ்ச்சியை விவரித்து மகிழ்ந்தான்.* ***(60)***

***5405. 'மேல் உறஇராவணற்கு அழிந்து வெள்கிய***
***நீல் உறு திசைக்கரி திரிந்து நிற்பன***
***ஆல் உற அனையவன்தலையை வவ்வி, வில்***
***கால் உறு கணைதடிந்து, இடுவ காண்டியால்.***

***மேல் -*** *முற்காலத்தில்;* ***இராவணற்கு -*** *இராவணனுக்கு;* ***உற அழிந்து -*** *நன்றாகத் தோற்று;* ***வெள்கிய -*** *நாணமுற்றனவும்;* ***திரிந்து நிற்பன -*** *நிலைகுலைந்து நிற்பனவும் (ஆகிய);* ***நீல் உறு திசைக்கரி -*** *நீலநிறமுடைய திக்கு யானைகள்;* ***ஆல்உற -*** *மகிழ்ச்சியடையும்படி;* ***வில்கால்உறுகணை -*** *இராமபிரானுடைய வில்லிலிருந்து காலாக உறுகின்ற அம்புகள்;* ***அனையவன் தலையை -*** *அந்த இராவணனின் தலைகளை;* ***தடிந்து வவ்லி -*** *களைந்து கைப்பற்றி;* ***இடுவ -*** *போடுவதை;* ***காண்டி -*** *பார்ப்பாயாக.*

*ஆல் - அசை.தோற்ற யானைகளின் பாதத்தில் வென்ற இராவணனின் தலை விழும் என்றதுசெருக்கின் முடிவு இப்படித்தான் அமையும் என்று குறிப்பித்தவாறு.*

*திசையானைகளுள் வெண்மை முதலிய பிறநிறம் உடையனவும் உளவேனும் பெரும்பான்மை பற்றி நீல் உறுதிசைக் கரி என்றார் (அண்ணாமலை - பதி) இடுவ, தொழிற்பெயர்த்திரிபு. இடுதல் என்பதே பொருள். பிறவாறு கூறி இடர்ப்பட வேண்டா. தொழிற் பெயர் எச்சமாய் தோன்றல் மரபே (உரைச்சூத்திரம்)*
***(61)***

***5406. 'நீர்த்துஎழு கணை மழை வழங்க, நீல வான்***
**வேர்த்தது என்றுஇடை இடை வீசும் தூசுபோல்,**
**போர்த்து எழுபொலங் கொடி இலங்கை, பூழியோடு**
**ஆர்த்து எழு கழுதுஇரைத்து ஆடக் காண்டியால்.**

***நீர்த்துஎழும் கணை*** *- தன்மை உடையதாய் எழும் அம்புகளாகிய;* ***மழை வழங்க*** *- மழையைப் பொழிய (அதை);* ***நீலவான்*** *- நீலநிறமுடைய ஆகாயத்துக்கு;* **வேர்த்தது என்று** *- வியர்வை உண்டாயிற்று என்று;* **இடை இடை** *- இடை இடையே;* ***வீசும் தூசு*** **போல்** *- வீசுகின்ற ஆடையைப் போல;* **போர்த்து எழு** *- நெருங்கி எழுந்துள்ள;* **பொலங்கொடி இலங்கை** *- அழகிய கொடியைப் பெற்ற இலங்கையில்;* **பூழியோடு** *- புழுதியுடனே;* ***ஆர்த்து எழு கழுது*** *- ஆரவாரித்து எழுகின்ற பேய்களை;* ***இரைத்து*** *- கொக்கரித்து;* **ஆட** *- ஆடுவதை;* **காண்டி** *- பார்ப்பாயாக.*

*ஆல் - அசை. பூழி- புழுதி. தூசு - ஆடை. மேக மண்டலம் வரை உள்ள கொடி என்க. கொடியாடிய இலங்கையில் பேயாடும் நிலை வரப் போகிறது. என்றதால் இலங்கையின் அழிவு பேசப்படுகிறது என்க.* ***(62)***

***5407. 'நீல் நிறஅரக்கர்தம் குருதி நீத்தம் நீர்***
**வேலை மிக்கு,ஆற்றொடு மீள, வேலை சூழ்**
**ஞாலம் முற்றுறுகடையுகத்து நச்சு அறாக்**
**காலனும்,வெறுத்து, உயிர் காலக் காண்டியால்.**

***நீல்நிறம்*** *- நீலநிறத்தைப் பெற்ற;* ***அரக்கர் தம்*** *- அரக்கர்களின்;* ***குருதி நீத்தம்*** *- இரத்த வெள்ளம்;* ***நீர் வேலை மிக்கு****- நீரை உடைய கடலினும்மிகுந்து (அதனால்) அது;* ***ஆற்றொடு மீள*** *- ஆற்றுடன் திரும்ப (அதுபோல);* **வேலை சூழ்** *- கடலால் சூழப்பெற்ற;* **ஞாலம் முற்றுறு** *- உலகம் முடிவடையும்;* ***கடையுகத்து*** *- யுகத்தின் முடிவிலே (அனைத்தையும் உண்டு);* ***நச்சு அறாக் காலனும்*** *- கொலைவிடத்தன்மை நீங்காத யமனும்;* **வெறுத்து** *- (அரக்கரை உண்டு) தெவிட்டிப் போய்;* ***உயிர்கால*** *- உண்ட உயிர்களைக் கக்குதலைக்;* ***காண்டி*** *- காண்பாயாக.*

*கடலில் இரத்தவெள்ளம் அதிகரித்தது. அது ஆற்றுவழியாகத் திரும்பிற்று. அதுபோல் காலன் தெவிட்டியதால் உயிர்களைக் கக்கினான் என்க. கடல் ஆற்றின் வழியே இரத்தத்தை வெளியே தள்ளிற்று; யமன் வாய் வழியே உயிரைக் கக்கினான். உயிர்கால - பெருமூச்சுவிட. அதிகம் உண்டமையால் எமன் பெருமூச்சு விட்டான் என்பாரும் உளர். காலன் - யமனின் ஏவல் செய்வோன் என்பாரும் உளர். காலன் கூற்றத்திற்கு ஏவல் செய்பவனும் ஆம் என்று இனியர் வரைந்தார். (சீவக 1477) ஞான வாசிட்டம், காலன் எவற்றிற்கும் அடங்காதவன் என்று பேசும். நச்சு - விடம்.*
***(63)***

***5408. 'அணங்கு இள மகளிரொடு அரக்கர் ஆடுறும்
மணம் கிளர்கற்பகச் சோலை வாவிவாய்,
பிணங்குறு வால்முறை பிடித்து, மாலைய
கணம் கொடுகுரக்குஇனம் குளிப்பக் காண்டியால்.***

**இளம் -** *இளம்பருவமுடைய;* **அணங்கு மகளிரொடு -** *தெய்வ மகளிர் போலும் பெண்களுடன்;* **அரக்கர் ஆடுறும் -** *அரக்கர்கள் நீராடும்;* **மணம் கிளர் -** *வாசனை மிகுந்த;* **கற்பகச் சோலை -** *கற்பகம் அமைக்கப் பெற்ற;* **வாவிவாய் -** *பொய்கையின் கண்ணே;* **குரங்கு இனம் -** *குரங்குக் கூட்டம்;* **பிணங்குறு வால் -** *மாறுபட்டு வளைந்துள்ள வாலை;* **முறைபிடித்து -** *வரிசையாகப் பற்றிக்கொண்டு;* **மாலைய -** *வரிசைகளை உடையதாய்;* **கணங்கொடு -** *கூட்டத்தைச் சேர்த்துக் கொண்டு;* **குளிப்ப -** *நீராடுதலை;* **காண்டி -** *காண்பாயாக.*

*ஆல் - அசை.அரக்கர்கள் நீராடிய பொய்கையில் குரங்குகள் நீராடும் என்க. அரக்கர் ஆடுறும் கற்பகச் சோலை - வாவி. இதுவே தழாத் தொடர். ஆடுறும் என்னும் எச்சம் சோலையைத் தழுவாமல் வாவியைத் தழுவிற்று. குடர் முறை முறை பிடித்து - கழுதினம் ஆடக் காண்டி என்று பாடம் கொண்டு, அரக்கர்களின் குடலைப் பிடித்தபடிபேய்கள் நீராடுவதைப்பார் என்று உரை கூறப் பெற்றது. பேய்கள் போர்க்களத்தில் ஆடுவதாகப் பேசப்படுவதே பெருவழக்கு.* ***(64)***

***5409. 'செப்புறல் என் பல ? தெய்வ வாளிகள்,
இப் புறத்துஅரக்கரை முருக்கி ஏகின,
முப் புறத்து உலகையும் முடிக்க மூட்டலால்,
அப் புறத்துஅரக்கரும் அவியக் காண்டியால்.***

**பல செப்புறல் -** *பலவற்றைக் கூறுவதால்;* **என் -** *என்ன பயன் விளையும்;* **தெய்வ வாளிகள் -** *(இராமபிரானின்) கடவுள் தன்மை பெற்ற அம்புகள்;* **இப்புறத்து -** *இந்த உலகில் உள்ள;* **அரக்கரை முருக்கி -** *அரக்கர்களை அழித்து;* **ஏகின -** *அப்பாலும் போய்;* **புறத்து -** *வெளியில் உள்ள;* **முவ்வுலகையும் -** *மூன்று உலகங்களையும்;* **முடிக்க -** *தாக்குவதாலே;* **அப்புறத்து அரக்கரும் -** *அந்தப் பக்கத்தில் உள்ள அரக்கர்களும்;* **அவிய -** *அழிவதை;* **காண்டி -** *பார்ப்பாயாக.*

*இராமபிரானின்அம்புகள் இந்த உலக அரக்கர்களைக் கொன்று அப்பாலும் போய் முட்டுவதால் அப்பக்கத்தில் உள்ள அரக்கர்களும் அழிவதைப் பார்ப்பாயாக. தெய்வ வாளி - என்பதற்கு விதிபோலும் அம்பு என்றும் பொருள் கூறலாம். தெய்வ வாளி ஆகையால் தீயவர் உள்ள இடத்தை அறிந்து அவர்களைத் தண்டித்தன. முட்டல் - தாக்குதல். ஏகின என்னும் முற்று வினை எச்சப் பொருளில் வந்தது. ஆல் - அசை.*
***(65)***

***5410. 'ஈண்டு, ஒரு திங்கள், இவ் இடரின் வைகுதல்
வேண்டுவது அன்று;யான், விரைவின் வீரனைக்
காண்டலே குறை;பினும் காலம் வேண்டுமோ ?
ஆண்தகை இனிஒருபொழுதும் ஆற்றுமோ ?***

*(தாயே)*

***நீ -*** *நீ;* ***ஈண்டு -*** *இந்த இலங்கையில்;* ***ஒரு திங்கள் -*** *ஒரு மாதம்;* ***இடரின் -*** *துன்பத்திலே;* ***வைகுதல் வேண்டுவது அன்று -*** *தங்கியிருக்க வேண்டாம்;* ***யான் -*** *நான்;* ***விரைவின் -*** *வேகமாக;* ***வீரனைக் காண்டலே -*** *இராமபிரானைப் பார்ப்பதுதான்;* ***குறை -*** *எஞ்சியுள்ள செயல்;* ***பி(ன்)னும் -*** *கண்ட பிறகும்;* ***காலம் வேண்டுமோ -*** *இங்கு வர நல்லகாலம் பார்ப்பானோ?;* ***ஆண்டகை -*** *ஆடவருள்சிறந்த பெருமான்;* ***இனி -*** *இனிமேல்;* ***ஒரு பொழுதும் -*** *ஒரு கண நேரமும்;* ***ஆற்றுமோ -*** *பொறுத்திருப்பானோ (பொறான்);*

*கேட்காததே குறை. கேட்டால் யாவும் வழங்குவான் என்று நாட்டுப்புறத்தில் பேசப்படுவதைக் கேள்விப்படாதவர் யாவர். அங்குள்ள குறை இங்கு நினைக்கவும். குறை - எஞ்சியிருப்பது. காலம் வேண்டுதல் - நல்ல காலத்தை அவாவிச் சும்மா இருத்தல். வள்ளுவர் காலம் கருதி இருத்தல் என்பர். இராமன், பிராட்டி நிலை கேள்வியுற்றதும் விரைந்து வருவான்; காலம் பாரான் என்று அனுமன் குறித்தனன். காலத் தாழ்ச்சியை மக்கள் 'மேஷ ரிஷபம்' பார்த்தல் என்பர் ஆண்டகை - ஆடவருள் தகுதி வாய்ந்தவன். வடநூலார் புருஷோத்தமன் என்பர். நம்பி என்பதும் அது.* ***(66)***

***5411. ' "ஆவி உண்டு" என்னும் ஈது உண்டு; உன் ஆர்
உயிர்ச்
சேவகன் திருஉருத் தீண்ட, தீய்ந்திலாப்
பூ இலை; தளிர்இலை; பொரிந்து வெந்திலாக்
கா இலை; கொடிஇலை; -நெடிய கான் எலாம்.***

*(இராமபிரானுக்கு)*

***ஆவி உண்டு -*** *உயிர்உள்ளது;* ***என்னும் -*** *என்று கூறப்படும்;* ***ஈது உண்டு -*** *இந்த வார்த்தைதான் உள்ளது;* ***நெடிய கான் எலாம் -*** *பெரிய காடு முழுவதிலும்;* ***உன் -*** *உன்னுடைய;* ***ஆருயிர்ச் சேவகன் -*** *அரிய உயிர் போலும் இராமபிரானின்;* ***திருவுறு தீண்ட -*** *திருமேனியைத் தொடுவதனால்;* ***தீய்ந்திலா -*** *கரிந்து போகாத;* ***பூ இலை -*** *பூக்கள் கிடையாது;* ***தளிர் இலை -*** *இலைகள் கிடையாது;* ***பொரிந்து -*** *(புறணிகள்) வெடிப்புற்று;* ***வெந்திலா -*** *வெந்து போகாத;* ***கா இலை -*** *சோலைகள் கிடையாது;* ***கொடிஇலை -*** *கொடிகள் கிடையாது. ஆன்ம நாயகன்என்பது ஆருயிர்ச் சேவகன் என்று பேசப்பட்டது. பொரிதல், மரப்பகுதியில் புறணி வெடித்து நிலைமாறுதல். மரங்களின் அடிப்பகுதி. சில்லு சில்லாய் வெடித்திருப்பதை எங்கும் காணலாம். மரங்கள் இயல்பாகப் பொரிந்திருப்பது அதன் வளர்ச்சியைக் காட்டும். அது 'பெரியாரை' என்று பேசப்படும். இங்கு வெப்பத்தால் உண்டான பொரிதல் பேசப்படுகிறது. பிரிவாற்றாமையால் உண்டாம் வெப்பம் பேசப் பெற்றது. இராமபிரானின் மேனி வெப்பத்தால் அவன் குளித்த குளங்கள் வற்றின என்று வான்மீகம் பேசும். ஆவி உண்டு இல்லை என்று இருக்கும் ஆண் தொழில் என்னும் பாடம் (25) நன்று.* ***(67)***

***5412. 'சோகம்வந்து உறுவது, தெளிவு தோய்ந்து
அன்றோ?***

***மேகம் வந்துஇடித்து உரும்ஏறு வீழ்கினும்,***
***ஆகமும் புயங்களும்அழுந்த, ஐந் தலை***
***நாகம் வந்துஅடர்ப்பினும், உணர்வு நாறுமோ ?***

*(இராமபிரானுக்கு)*

***சோகம் வந்துஉறுவது -*** *உள்ளம் சோர்வு அடைவது;* ***தெளிவு தோய்ந்து அன்றோ -*** *அது தெளிவை அடைந்தால் அல்லவா;* ***மேகம் -*** *மேகமானது;* ***வந்து -*** *அணுகி;* ***இடித்து -*** *இடியிடித்து;* ***உரும் ஏறு -*** *பேரிடியை;* ***வீழ்க்கினும் -*** *வீழச் செய்தாலும்;* ***ஆகமும் புயங்களும் -*** *உடம்பும் தோள்களும்;* ***அழுந்த -*** *வாட்டம் அடைய;* ***ஐந்தலை நாகம் -*** *ஐந்து தலையைப் பெற்ற நாகம்;* ***வந்து -*** *அணுகி;* ***அடர்ப்பினும் -*** *தாக்கினாலும்;* ***உணர்வு நாறுமோ -*** *(பெருமானுக்கு) உணர்ச்சி உண்டாகுமா.*

*பெருமான், தன்நினைவற்றுக்கிடப்பதால் சோகம் வருத்தாது என்க. இடிக்கும் நஞ்சுக்கும் எட்டாத நிலையில் பெருமான் உள்ளான். பெருமான் ஒரு நாளாகிலும் தெளிந்திருந்தால் அல்லவா சோகத்தை அறியப் போகிறான் என்பது பழைய உரை (அடை - பதி) மேகம் வந்து உரும் ஏறு வீழினும் என்னும் பாடத்திற்கு மேகத்திலிருந்து வெளிப்பட்டு இடி வீழ்ந்தாலும் என்று பொருள் கொள்ள வேண்டும். உரும் ஏறு எழுவாய். வீழ்க்கினும் என்னும் பாடத்திற்கு மேகம் எழுவாய். நாறுதல் - தோன்றுதல். அறங்கள் நாறும் மேனியார் (வாலிவதை.3)* ***(68)***

***5413. 'மத்து உறுதயிர் என வந்து சென்று, இடை***
***தத்துறும்உயிரொடு புலன்கள் தள்ளுறும்***
***பித்து, நின்பிரிவினில் பிறந்த வேதனை,***
***எத்தனை உள ?அவை எண்ணும் ஈட்டவோ ?***

***மத்து உறுதயிர்என -*** *மத்தால் கடையப்படும்தயிர்போல;* ***வந்து -*** *உடலுக்குள் வந்தும்;* ***சென்று -*** *வெளியே சென்றும்;* ***இடை -*** *(ஆசைக்கும் கவலைக்கும்) நடுவில்;* ***தத்துறும் -*** *தடுமாற்றம் அடையும்;* ***உயிரொடு -*** *உயிருடனே;* ***புலன்கள் தள்ளுறும் -*** *ஐந்து புலன்களையும் வீழ்த்துகின்ற;* ***பித்து -*** *பித்தநிலையும்;* ***நின் பிரிவினில் பிறந்த -*** *நின் பிரிவாலேதோன் றிய;* ***வேதனை -*** *வேதனையும்;* ***எத்தனை உள -*** *எவ்வளவு இருக்கின்றன;* ***அவைஎண்ணும் ஈட்டவோ -*** *அவ்வேதனைகள் அளவிடக்கூடிய தன்மையுடையனவோ.*

*பித்து -பற்றின் மிகுதியால் உண்டாகும் உன்மத்த நிலை. கடையும் போது தயிர்படும் கலக்கத்தைக் கவிஞர்கள் பலபடியாகப் பேசுவர். மதிக்க அலைப்புண்ட வெண் தயிர் போல மறுகுறும் என் மதிக் கவலை என்பர் பிள்ளைப் பெருமாள். உயிரையும், புலன்களையும் வீழ்த்துகின்ற பித்து என்றதால் பெருமானின் காதல் வரம்பு புலனாகிறது. ஈடு - தன்மை. எண்ணுதல் - அளவிடுதல்.* ***(69)***

***5414. ' "இந் நிலை உடையவன் தரிக்கும்" என்றியேல்,***
***மெய்ந் நிலைஉணர்ந்துழி விடை தந்தீதியேல்,***
***பொய்ந் நிலைகாண்டியால்; புகன்ற யாவும், உன்***
***கைந் நிலைநெல்லியங்கனியின் காட்டுகேன்.***

*(அம்மையே)*

**மெய்ந்நிலை-** *(என்னுடைய சொல்லின்) உண்மைத் தன்மையை;* **உணர்ந்துழி** *(உம்) - உணர்ந்த இடத்தும்;* **இந்நிலை உடையவன் -** *இந்த நிலைமையில் இருக்கும் இராமபிரான்;* **தரிக்கும் என்றியேல் -** *பொறுத்திருப்பான் என்பாயானால்;* **விடை தந்து -** *(அடியேனுக்கு) விடை கொடுத்து;* **ஈதியேல் -** *அடையாளப் பொருளைத் தருவாயே ஆனால்;* **புகன்ற யாவும் -** *என்னால் கூறப்பட்டவை யாவற்றையும்;* **கைநிலை -** *கையின்கண்ணே உள்ள;* **நெல்லிகனியில் -** *நெல்லிக் கனியைப் போல;* **காட்டுகேன் -** *நிரூபித்துக் காண்பிப்பேன் (அப்போது);* **பொய்நிலை -** *தரிக்கும் என்றது பொய்யான தன்மையை;* **காண்டி -** *பார்ப்பாய்.*

*உணர்ந்துழியும்என்பதில் உள்ள உம்மை தொகையாக உள்ளது. விடைதந்து அடையாளப் பொருள் வழங்க வேண்டும் என்பது அனுமன் வேண்டுகோள்.*
***(70)***

***5415. 'தீர்த்தனும், கவிக் குலத்து இறையும், தேவி ! நின்***
***வார்த்தை கேட்டுஉவப்பதன் முன்னர், மாக் கடல்***
***தூர்த்தன,இலங்கையைச் சூழ்ந்து, மாக் குரங்கு***
***ஆர்த்தது கேட்டு,உவந்து இருத்தி, அன்னை ! நீ.***

**தேவி -** *தெய்வத்தன்மையுடையவளே;* **அன்னை -** *தாயே !;* **நீ -** *நீ;* **தீர்த்தனும் -** *தூய்மையுடைய இராமபிரானும்;* **கவிக்குலத்துஇறையும் -** *குரங்குகளின்தலைவனான சுக்கிரீவனும்;* **நின் வார்த்தை கேட்டு -** *உன்னுடைய சொற்களைக் கேட்டு;* **உவப்பதன் முன்னர் -** *மகிழ்ச்சியடைவதற்கு முன்பே;* **மாக்குரங்கு -** *பெரிய குரங்குக் கூட்டம்;* **மாக்கடல் தூர்த்தன -** *கரிய கடலை மேடு பண்ணி (அதன் வழியே வந்து);* **இலங்கையைச் சூழ்ந்து -** *இலங்கையை முற்றுகை இட்டு;* **ஆர்த்தது -** *ஆரவாரிப்பதை;* **கேட்டு -** *செவியில் ஏற்று;* **உவந்து இருத்தி -** *மகிழ்ச்சியுடன் இருப்பாயாக.*

*இராமன் உன்மொழி கேட்டு மகிழ்வதன் முன் நீ, குரங்குகளின் ஆரவாரம் கேட்டு மகிழ்க. தீர்த்தன் - திருமால். இங்கு அச் சொல் இராமபிரானைக் குறிக்கிறது. தீர்த்தன் என்று அறிந்ததோ (திருவவதாரம் 114) இறை - அரசன். மன்னவன் மக்கட்கு இறை (திருக்குறள்) ஆர்த்தது - தொழிற் பெயர் மாக்கடல் கருங்கடல். பெருங்கடல் என்றும் கொள்ளலாம். ஆழ்கடல் என்பதே பலபிரதிகளில் காண்கின்றது. இப்பாடலை விரைவு நவிற்சியணி என்று கூறி அலங்கார சாத்திரத்தை விரிவுபடுத்தலாம்.* ***(71)***

***5416. 'எண்ணஅரும் பெரும் படை, நாளை, இந் நகர்***
***நண்ணிய பொழுது,அதன் நடுவண், நங்கை ! நீ,***
***விண் உறுகலுழன்மேல் விளங்கும் விண்டுவின்,***
***கண்ணனை என்நெடும் வெரிநில் காண்டியால்.***

**நங்கை -** *அம்மையே !* **எண்ண அரும் பெரும் படை -** *கணக்கிட முடியாத பெருஞ்சேனை;* **நாளை -** *நாளைய தினத்தில்;* **இந்நகர் நண்ணிய பொழுது -** *இந்த நகரை யடைந்த போது;* **அதன் நடுவண் -** *அந்தச் சேனையின் நடுவில்;* **விண் உறு கலுழன் மேல் -** *விண்ணிலே பறக்கும் கருடன் மேலே;* **விளங்கும் -** *பொலிவு பெறுகின்ற;* **விண்டுவின்**

*- திருமாலைப் போல; **கண்ணனை -** இராம பிரானை; **என் -** என்னுடைய; **நெடும் வெரிநில் -** பெரிய தோள்களில்; **நீ காண்டி -** நீ பார்ப்பாயாக.*

*எண்ணுதல் -கணக்கிடுதல். கருதுதல் என்றும் கூறலாம். கலுழன் - கருடன். கண்ணன் - திருமால். இங்கே இராமபிரானைக் குறிக்கிறது. கவிச்சக்கரவர்த்தி பல இடங்களில் இராமபிரானைக் கண்ணன் என்று குறிப்பார். 'கண்ணனைக் கண்ணில் நோக்கி கனிந்தனன்' (கம்ப. 1965) கண்ணன் - என்பது பாகதச் சொல் என்பர் பேராசிரியர்.(கருங்கண்ணனை -கோவையார்) இதை வடமொழித் திரிபு என்று கூறுவது பிழை. காண்டி - ஆல் ஆல் -அசை.* ***(72)***

***5417. 'அங்கதன்தோள்மிசை, இளவல், அம் மலை***
***பொங்குவெங்கதிர் எனப் பொலிய, போர்ப் படை***
***இங்கு வந்துஇறுக்கும்; நீ இடரும் ஐயமும்***
***சங்கையும்நீங்குதி; தனிமை நீங்குவாய்.***

***இளவல் -** இளைய பெருமாள்; **அங்கதன் தோள்மிசை -** அங்கதன் தோளின் மேலே; **அம்மலை -** அந்த உதயமலையில்; **பொங்கும் -** கிளர்ந்து எழுகின்ற; **வெங்கதிர் எனப் பொலிய -** வெம்மையான சூரியனைப் போல விளங்கித்தோன்ற; **போர்ப்படை -** போர் செய்யும் வானரப்படை; **இங்கு வந்து -** இந்த இலங்கைக்குள் வந்து; **இறுக்கும் -** தங்கும்; **நீ -** நீ; **இடரும் -** துன்பத்திலிருந்தும்; **சங்கையும் -** அச்சத்திலிருந்தும்; **நீங்குதி -** நீங்குவாயாக.(இனிமேல்); **தனிமை நீங்குவாய் -** தனித்திருப்பதிலிருந்தும் நீங்குவாய்.*

*இளைய பெருமான்செந்நிறம் உடையவன். ஆகையால், அவன் பொங்கு வெங்கதிர் என்று கூறப் பெற்றான். சங்கை என்னும் சொல் அச்சப் பொருள் தந்தது. சென்னை அகராதி உடன்படும். 'நிருதர் என்னும் சங்கையும் இல்லாவண்ணம் என்று நாகபாசப் படலம் கூறும். (கம்ப. 8052)* ***(73)***

***5418. 'குரா வரும் குழலி ! நீ குறித்த நாளினே,***
***விராவு அரு நெடுஞ்சிறை மீட்கிலான்எனின்,***
***பரா வரும்பழியொடும் பாவம் பற்றுதற்கு,***
***இராவணன் அவன்;இவன் இராமன்' என்றனன்.***

***குராவரும் குழலி -** குரவ மலர்அணிந்த கூந்தலுடைய அம்மையே !; **நீ குறித்த நாளில் -** நீ குறிப்பிட்டுக் கூறிய நாட்களுக்குள்; **விராவு அரு -** எவரும் அணுக முடியாத; **நெடுஞ்சிறை -** பெரிய சிறையிலிருந்து; **மீட்கிலான் எனில் -** (இராமபிரான்) உன்னை மீட்காமல் போனால்; **பரா வரும் -** பரவி வருகின்ற; **பழியொடு பாவம் -** பழியும் பாவமும்; **பற்றுதற்கு -** பிடிப்பதற்கு; **அவன் -** அந்த இராமபிரான்; **இராவணன் -** இராவணன் ஆவான்; **இவன் -** இந்த இராவணன்; **இராமன் -** இராமன் ஆவான்; **என்றனன் -** என்று (அனுமன்) கூறினான். குரா - குரவம்(ஒருவகை மரம்) உன்னை மீட்காவிடில் இராவணனைச் சார வேண்டிய பாவம் இராமனைப் பற்றும் என்றனன். மேலே. 39 ஆம் பாடலின் (தோன்றா எழுவாயாக இருந்த) அனுமன் என்றனன் என்னும் பயனிலை கொண்டது.* ***(74)***

*சீதை கூறியஅடையாளச் சொற்கள்*

**கலித்துறை**

***5419. ஆக இம்மொழி ஆசு இல கேட்டு, அறிவுற்றாள்;***
***ஓகை கொண்டுகளிக்கும் மனத்தள், உயர்ந்தாள்;***
***'போகை நன்றுஇவன்' என்பது, புந்தியின்***
***வைத்தாள்;***
***தோகையும், சிலவாசகம் இன்னன சொன்னாள்;***

***ஆக*** - *இவ்வாறாக;* ***ஆசுஇல*** - *குற்றம் இல்லாத;* ***இம்மொழி கேட்டு*** - *(அனுமன் கூறிய) இந்த மொழியைக் கேட்டு;* ***தோகையும்*** - *சீதா பிராட்டியும்;* ***அறிவுற்றாள்*** - *அறிவில் தெளிவுபெற்று (அதனால்);* ***ஓகை கொண்டு*** - *அன்புற்று;* ***தளிக்கும் மனத்தள்*** - *மகிழ்ச்சி பெற்ற உள்ளமுடையவளாய்;* ***உயர்ந்தாள்*** - *சிறப்புப் பெற்று;* ***இவன்*** - *இந்த அனுமன்;* ***போகை நன்று*** - *(இராமபிரான்பால்) செல்வது சிறந்தது;* ***என்பது*** - *என்னும் எண்ணத்தை;* ***புந்தியில் வைத்தாள்*** - *அறிவில் நிலை நிறுத்தி;* ***இன்னன*** - *இப்படிப்பட்ட;* ***சிலவாசகம்*** - *சில மொழிகளை;* ***சொன்னாள்*** - *கூறினாள்.*

*உவகை என்பது ஓகைஎன்று மருவிற்று. உவகை - அன்பு. அச்சமும் உவகையும் .... நிமித்தமும் என்னும் புறத்திணைப் பகுதிக்கு (36) நச்சர் வழங்கிய உரை காண்க. அவர் உவகை - அன்பு என்று வரைந்தார். தோகையும் என்பதில் உள்ள 'உம்' அசை. இக்கலித்துறை மா - விளம் - விளம் - விளம் - மா என்னும் சீர்களைப் பெற்று வரும். இத்தகு பாடல்கள் இந்நூலில் 1223 உள்ளன.* ***(75)***

***5420. 'சேறி, ஐய! விரைந்தனை; தீயவை எல்லாம்***
***வேறி; யான் இனிஒன்றும் விளம்பலென்; மேலோய் !***
***கூறுகின்றன, முன்குறி உற்றன, கோமாற்கு***
***ஏறும்' என்று,இவை சொல்லினள் இன்சொல்***
***இசைப்பாள்;***

***இன்சொல்இசைப்பாள்*** - *இனிய சொற்களைப் பேசும் பிராட்டி; (அனுமனை நோக்கி)* ***ஐய !*** - *தந்தையே;* ***மேலோய்*** - *மேலானவனே !;* ***விரைந்தனை சேறி*** - *விரைந்து செல்வாயாக;* ***தீயவை எல்லாம்*** - *எல்லாவிதமான தீமைகளையும்;* ***வேறி*** - *வெல்வாயாக;* ***யான்*** - *நான்,* ***இனி***- *இப்போது;* ***ஒன்றும் விளம்பலென்*** - *ஒன்றையும் கூற மாட்டேன்;* ***கூறுகின்றன*** - *இப்போது என்னாற் கூறப்படுபவை;* ***முன் உற்றன குறி*** - *முன்பு நிகழ்ந்த அடையாளங்கள் (இ ஃது);* ***கோமாற்கு ஏறும்*** - *இராமபிரான் மனத்திற் பதியும்;* ***என்று*** - *என்று;* ***இவை சொல்லினள்*** - *இவற்றைக் கூறினாள்.*

*வெல்தி என்பதுவேறி என்றும் செல்தி என்பது சேறி என்றும் வந்தன. ஏறும் - மனத்தில் பதியும். குறி - அடையாளம். இசைப்பாள் என்பது பிராட்டியைக் குறிக்கிறது.* ***(76)***

***5421. 'நாகம்ஒன்றிய நல் வரையின்தலை, மேல்நாள்,***
***ஆகம் வந்து,எனை, அள் உகிர் வாளின் அளைந்த***

***காகம் ஒன்றைமுனிந்து, அயல் கல் எழு புல்லால்,***
***வேக வெம் படைவிட்டது, மெல்ல விரிப்பாய்.***

***மேல்நாள்*** *- முன்பு ஒருநாள்;* ***நாகம் ஒன்றிய*** *- வானம் அளாவிய;* ***நல்வரையின் தலை*** *- நல்ல சித்திரகூட மலையில்;* ***வந்து*** *- ஓர் பக்கத்தில் வந்து;* ***எனை*** *- என்னுடைய;* ***ஆகம்*** *- உடலை;* ***அள் உகிர் வாளின்*** *- கூரிய நகமாகிய வாளினால்;* ***அளைந்த*** *- கிளறிய;* ***காகம் ஒன்றை*** *- ஒரு காகத்தை;* ***முனிந்து*** *- கோபித்து;* ***கல் அயல்*** *- கல்லின் பக்கத்தில்;* ***எழு புல்லால்*** *- முளைத்த புல்லாலே;* ***வேக வெம்படை*** *- வேகமான கொடிய பிரம்மாத்திரத்தை;* ***விட்டது*** *- ஏவிய செய்தியை;* ***மெல்ல விரிப்பாய்*** *- மெதுவாகக் கூறுவாயாக.*

*காக்கையின்கொடுஞ்செயலை இராமபிரான் அடையாளமாகக் கூறியதைப் பெரியாழ்வார் பேசினார். அது பிராட்டி கூறியதாக அமைக்கப்பெற்றது.*

***சித்திரகூடத்து இருப்பச் சிறுகாக்கைமுலைதீண்ட***
***அத்திரமேகொண்டெறிய அனைத்துலகும் திரிந்தோடி***
***வித்தகனேஇராமாவோ நின்அபயம் என்றழைப்ப***
***அத்திரமேஅதன்கண்ணை அறுத்ததுமோர் அடையாளம்.***

*என்று பெரியாழ்வார்திருமொழி பேசும் (3.10.6) காட்சிப்படலத்தில் (கம்ப. 5096) இந்த நிகழ்ச்சியைப் பிராட்டி நினைந்ததாகப் பேசப்படுகிறது. (77)*

***5422. ' "என் ஓர் இன் உயிர் மென் கிளிக்கு யார் பெயர் ஈகேன் ?***
***மன்ன !"என்றலும், "மாசு அறு கேகயன் மாது, என்***
***அன்னைதன் பெயர்ஆக" என அன்பினொடு, அந் நாள்,***
***சொன்ன மெய்ம்மொழி சொல்லுதி-மெய்ம்மை தொடர்ந்தோய் !***

***மெய்ம்மைதொடர்ந்தோய்*** *- உண்மை நெறியில்இயங்கும் அனுமனே;* ***என்*** *- என்னுடைய;* ***ஓர் இன் உயிர்*** *- ஒப்பற்ற இனிய உயிர் போன்ற;* ***மென்கிளிக்கு*** *- மென்மையான கிளிப்பிள்ளைக்கு;* ***யார் பெயர் ஈகேன்*** *- எவருடைய பெயரை இடுவேன்;* ***மன்ன*** *- அரசே!;* ***என்றலும்*** *- என்று யான்கூறியதும் (சீதையே);* ***மாசு அறு*** *- குற்றம் அற்ற;* ***என் அன்னை*** *- என்னுடைய தாயாகிய;* ***கேகயன் மாது*** *- கேகய வேந்தன் புதல்வியாகிய கைகேயியின்;* ***பெயர் ஆக*** *- பெயர் அமைக;* ***என*** *- என்று;* ***அன்பினொடு*** *- அன்பினுடன்;* ***அந்நாள்*** *- அக்காலத்தில் (இராமபிரான்);* ***சொன்ன மெய்மொழி*** *- கூறிய மெய்ம்மையான வார்த்தையை;* ***சொல்லுதி*** *- சொல்வாயாக;*

*அனுமன் உண்மைபேசுபவன் என்று பிராட்டி கூறியது திருவடியின் சீலத்தை உணர்ந்தமையால் என்க. இராமபிரான் சிற்றன்னை பால் கொண்ட பேரன்பை நினைவு கூர்ந்தாள். ஈகேன் - வழங்குவேன். பெயரிடுதலை ஈதல் என்பது மரபு போலும். 'இராமன் எனப் பெயர் ஈந்தனன்' என்று (கம்ப. 296) பாலகாண்டம் பேசும். பேரறியாத பெரும் பொருளுக்குப் பெயர் வைத்தல் தொண்டரின் உரிமை. (78)*

***5423. என்றுஉரைத்து, 'இனிது இத்தனை பேர்
அடையாளம்;
ஒன்று உணர்த்துவதுஇல்' என எண்ணி
உணர்ந்தாள்,
தன் திருத்துகிலில் பொதிவுற்றது, தானே
வென்றது அச்சுடர், மேலொடு கீழ் உற மெய்யால்,***

***என்று உரைத்து -*** *என்று கூறி(பிறகு பிராட்டி);* ***இத்தனை பேர் அடையாளம் -*** *இவ்வளவு பெரிய அடையாளம்;* ***இனிது -*** *இனிமையானது (இனி);* ***உணர்த்துவது -*** *கூறக்கூடிய செய்தி;* ***ஒன்று இல் -*** *வேறு ஒன்று இல்லை;* ***என -*** *என்று;* ***எண்ணி -*** *கருதி;* ***தன் -*** *தன்னுடைய;* ***திருத்துகிலில் -*** *அழகிய சேலையில்;* ***பொதிவுற்றது -*** *முடிந்து வைக்கப்பெற்றதும்;* ***மேலொடு கீழ் -*** *விண்ணுலகத்திலும் மண்ணுலகத்திலும்;* ***உற -*** *நன்றாக;* ***மெய்யால் -*** *தன்னுடைய மேனியால்;* ***தானே -*** *தான் ஒன்றியாகவே;* ***அச்சுடர் வென்றது -*** *அந்தச் சூரியனை வென்றதுமாகிய சூடாமணியை;* ***உணர்ந்தாள் -*** *(அனுமன் பால் வழங்க வேண்டும் என்று) அறிந்தாள்.*

*வாயால் கூறவேண்டிய அடையாளம் போதும். இனி கண்ணால் காண வேண்டிய அடையாளம் வழங்க எண்ணிய பிராட்டி சூடாமணியை அனுமன் பால் வழங்கக் கருதினாள். அனுமன்பால் சூடாமணி வழங்க வேண்டும் என்று அறிந்தாள். உணர்தல் - அறிதல்.* *(79)*

***5424. வாங்கினாள், தன் மலர்க்கையில்; மன்னனை
முன்னா,
ஏங்கினாள்; அவ்அனுமனும், 'என்கொல் இது ?'
என்னா,
வீங்கினான்;வியந்தான்; உலகு ஏழும் விழுங்கித்
தூங்கு கார் இருள்முற்றும் இரிந்தது சுற்றும்.***

*(பிராட்டி)(சூடாமணியை)*

***தன் -*** *தன்னுடைய;* ***மலர்க்கையில் -*** *மலர் போன்ற கைகளில்;* ***வாங்கினாள் -*** *எடுத்தாள்;* ***மன்னனை முன்னா -*** *இராமபிரானை எண்ணி;* ***ஏங்கினாள் -*** *ஏக்கமுற்றாள்;* ***அனுமனும் -*** *(அது கண்ட) திருவடியும்;* ***இது -*** *பிராட்டியின் கையில் உள்ள இப்பொருள்;* ***என்கொல் என்னா -*** *யாதோ என்று;* ***வீங்கினான் -*** *உடல் பூரித்தான்;* ***வியந்தான் -*** *ஆச்சரியப்பட்டான் (அப்போது) (மணியின் ஒளியால்);* ***உலகு ஏழும் விழுங்கி -*** *ஏழு உலகங்களையும் உட் கொண்டு;* ***தூங்கு -*** *உறங்குகின்ற;* ***கார் இருள் முற்றும் -*** *கரியஇருள் முழுவதும்;* ***சுற்றும் -*** *சுற்றுப் புறங்களில்;* ***இரிந்தது -*** *ஓடிப்போயிற்று.*

*மன்னன் என்றதுஇராமபிரானை, இந்தச் சூடாமணி என்னால் மிகவும் போற்றிப் பாதுகாத்து வைக்கப்பட்டிருந்தது. துக்கம் உண்டாகும் போது இதைக் கண்டு உன்னைக் கண்டவள் போல மிகவும் களிக்கின்றேன்' என்று பிராட்டி பேசியதாக வான்மீகம்*

*பேசும். அதைக் கருத்திற் கொண்ட கவிச்சக்கரவர்த்தி 'மன்னனை முன்னா ஏங்கினாள்' என்றார். மன்னன் என்றது 'சனகன்' என்றும், தசரதன் என்றும் கூறலாம் என்பர். சனகன் சூடாமணி வழங்கியவன்; தசரதன் அந்த மணியைப் போற்றியவன் என்பர். இருள் உறங்குவதாகக் கூறும் மரபு உண்டு போலும். 'நெடுந்தூங்கிருள்' (கம்ப. 9087) தூங்கிருள் வெய்யோற்கு ஒதுங்கிப் புக்கிருந்தான் அன்ன பொழில் (நளவெண்பா. சுயம் 22) தூங்கு இருள், தொங்கும் இருள் என்று உரை கூறப் பெற்றது. தூங்கிருள் - செறிந்த இருள் என்று புறப்பாட்டுரை கூறும். துயில் மடிந்தன்ன தூங்கிருள் - (புறம் 126) இருள் தூங்கு இறுவரை (கலி - குறிஞ்சி7) இருள் தூங்கு சோலை. (கலி- குறிஞ்சி 14) இனியர் 'செறிந்த' என்று உரை வகுத்தார்.* ***(80)***

***5425. 'மஞ்சு அலங்கு ஒளியோனும், இம் மா நகர் வந்தான்,***
***அஞ்சலன்' என,வெங் கண் அரக்கர் அயிர்த்தார்;***
***சஞ்சலம் புரிசக்கரவாகமுடன், தாழ்***
***கஞ்சமும்,மலர்வுற்றன; காந்தின காந்தம்.***

***மஞ்சு -*** *மேகத்திடையே;* ***அலங்கு -*** *அசைந்து செல்லும்;* ***ஒளியோனும்-*** *சூரியனும்;* ***இம் மாநகர் -*** *இந்த இலங்கைக்கு;* ***வந்தான் -*** *வந்துவிட்டானோ (இனி சூரியன்);* ***அஞ்சலன் -*** *பயப்படமாட்டான்;* ***என -*** *என்றுகூறி;* ***வெங்கண் அரக்கர் -*** *கொடிய கண்களைப் பெற்ற அரக்கர்கள்;* ***அயிர்த்தார் -*** *ஐயுற்றனர் (அவ்வொளியால்);* ***சஞ்சலம்புரி -*** *மனச்சஞ்சலம் பெற்ற;* ***சக்கர வாகமுடன் -*** *சக்கரவாகப் பறவையுடன்;* ***தாழ் -*** *கூம்பித் தாழ்வுற்ற;* ***கஞ்சமும் -*** *தாமரைகளும்;* ***மலர்வுற்றன -*** *மலர்ச்சி பெற்றன;* ***காந்தம் -*** *சூரிய காந்தக் கற்கள்;* ***காந்தின -*** *ஒளியை வெளிப்படுத்தின.*

*மஞ்சு - மேகம்.மஞ்சு நிகர் குந்தளமின்னே (காவடிச்சிந்து) இராவணனுக்கு அஞ்சிய சூரியன் இலங்கைக்கு வந்து விட்டான் பகைவர்கள் வருவர் என்பது குறிப்பு. சக்கரவாகம், பகலில் பெடையுடன் கூடி மகிழும். சூடாமணி ஒளி பகல்போல ஒளி வீசியது. அதனால் சக்கர வாகம் மலர்ந்தன. இனி, பிராட்டி பெருமானை அடைவாள் என்பது குறிப்பு. சஞ்சலம் - கலக்கம்.* ***(81)***

***426. கூந்தல்மென் மழை கொள் முகில்மேல் எழு***
***கோளின்***
***வேந்தன் அன்னது,மெல்லியல்தன் திரு மேனி***
***சேந்தது, அந்தம்இல் சேவகன் சேவடி என்னக்***
***காந்துகின்றது,காட்டினள்; மாருதி கண்டான்.***

***கூந்தல் -*** *கூந்தலாகிய;* ***மென்மழைகொள் -*** *மெல்லிய மழையைக் கொண்டுள்ள;* ***முகில்மேல் -*** *மேகத்தின் உச்சியில்;* ***எழு -*** *தோன்றுகின்ற;* ***கோளின் வேந்தன் அன்னது -*** *(கோள்களின் அரசனாகிய) சூரியனைப் போன்றிருப்பதும்;* ***மெல்லியல்தன் -*** *மெல்லியலாகிய பிராட்டியின்;* ***திருமேனி -*** *அழகிய ஒளி வீசும் மேனிபோல;* ***சேந்தது -*** *செந்நிறம் பெற்றதும்;* ***அந்தம் இல் -*** *முடிவேயில்லாத;* ***சேவகன் -*** *இராமபிரானின்;* ***சேவடி என்ன -*** *திருவடி போல;* ***காந்துகினற்து -*** *ஒளி வீசுவதுமான சூடாமணியை;* ***காட்டினாள்; மாருதி கண்டான் -*** *காட்டினாள்;* ***அனுமன் பார்த்தான்***

*கூந்தலைமழையாகவும் அளகத்தை மேகமாகவும் கூறுவது கவிச் சக்கரவர்த்தியின் இயல்பு. மஞ்சு ஒக்கும் அளக ஓதி; மழை ஒக்கும் வடித்த கூந்தல்' என்று சூர்ப்பணகை*

*பேசுவாள். ஆதலின் கூந்தலாகிய மழை கொண்ட முகில் என்று பேசப்பெற்றது. கூந்தலாகிய முகில், மென் முகில், மழை முகில் என்று கூட்டிப் பொருள் கூறுவாரும் உளர். மழை கொள் மென்கூந்தல் முகில் என்று கூட்டிப் பொருள் செய்தவரும் உளர். மென்கூந்தல் மழை கொள் முகில்மேல் என்று பிரித்து அளகபாரம் என்கின்ற குளிர்ச்சி கொண்ட கருமேகத்தின் மேல் என்று உரை கூறியவரும் உளர். பிராட்டி செந்நிறம்... ஆதலின் மெல்லியல்மேனி சேந்தது என்று கூறப் பெற்றது. இங்கே உவம உருபு மறைந்துள்ளது. பிராட்டியின் நிறத்திற்கு மாவின் இலை நிறமும் பொன்நிறமும், மணி நிறமும் உவமையாகப் பேசப்பெற்றுள. இவை யாவும் செந்நிறமே. ஈது உணராது குறை கூறிய புலவர்களும் உளர்.* ***(82)***

***5427. ‘சூடையின்மணி கண் மணி ஒப்பது, தொல் நாள்***
***ஆடையின்கண்இருந்தது, பேர் அடையாளம்;***
***நாடி வந்து எனதுஇன் உயிர் நல்கினை, நல்லோய் !***
***கோடி’ என்றுகொடுத்தனள், மெய்ப் புகழ்***
***கொண்டாள்.***

**மெய்ப்புகழ்கொண்டாள் -** *உண்மையான புகழைப்பெற்ற பிராட்டி; (அனுமனை நோக்கி)* **நாடிவந்து -** *விருப்பத்துடன் வந்து;* **எனது இன்உயிர் நல்கினை -** *என்னுடைய இனிய உயிரைவழங்கினாய்;* **நல்லோய் -** *சிறந்தவனே (இஃது);* **சூடையின்மணி -** *சூடாமணியாகும்;* **கண்மணி ஒப்பது -** *என்னுடைய கண்ணின் மணி போன் றது;* **தொல் நாள் -** *நீண்ட நாட்களாக;* **ஆடையின் கண் இருந்தது -** *என்னுடைய ஆடையில் பொதிந்து வைக்கப் பெற்றது;* **பேரடையாளம் -** *பெரிய அடையாளமாகும்;* **கோடி -** *(இதனை) கொள்வாயாக;* **என்று -** *என்று கூறி (சூடாமணியை;* **கொடுத்தனள் -** *(அனுமனிடம்) வழங்கினாள்.*

*சூடாமணி என்பதுநடுவே ரத்தினம் பதிந்த வில்லை என்று திரிசிரபுரம் மாகவித்துவான் வி. கோவிந்தப் பிள்ளை வரைந்தார். சூடா என்னும் வடசொல் சூடை என்று வந்தது. உறுசுடர்ச் சூடைக் காசுக்கு அரசினை’ என்று பின்பு பேசப் பெறும் (கம்ப. 5473)* ***(83)***

*சூடாமணி பெற்றஅனுமன் செல்லுதல்.*

***5428. தொழுதுவாங்கினன்; சுற்றிய தூசினன், முற்றப்***
***பழுது உறாவகைபந்தனை செய்தனன்; வந்தித்து,***
***அழுது, மும்மை வலம் கொடு இறைஞ்சினன்;***
***அன்போடு,***
***எழுது பாவையும்,ஏத்தினள்; ஏகினன் இப்பால்.***

*(அனுமன் சூடாமணியை)*

**தொழுதுவாங்கினன் -** *கை கூப்பிப் பெற்று;* **சுற்றிய தூசினன் -** *உடுத்திருந்த ஆடையிலே;* **முற்ற -** *நன்றாக;* **பழுது உறா வகை -** *தவறிப் போகாதபடி;* **பந்தனை செய்தனன் -** *முடித்து வைத்துக் கொண்டு (அனுமன்);* **வந்தித்து -** *(பிராட்டியை) வணங்கி;* **அழுது -** *அழுது;* **மும்மை வலங்கொடு -** *மூன்று முறை வலஞ் செய்து;*

***இறைஞ்சினன் -*** *(பிராட்டியின் திருவடியில்) பணிந்தான்; (அது கண்ட பிராட்டி)* ***அன்போடு -*** *அன்புடன்;* ***எழுது பாவையும் -*** *எழுதப் பெற்ற பாவை போன்ற பிராட்டியும்;* ***ஏத்தினள் -*** *வாழ்த்தினள்; (அனுமன்)* ***இப்பால் ஏகினன் -*** *இப்புறம் சென்றனன்.*

*சூடாமணி தவறிப்போகாதபடி ஆடையில் முடிந்து வைத்துக் கொண்டான். வந்தித்தல் - வணங்குதல். திருமால் திருவடியே வந்தித்து என் நெஞ்சமே வாழ்த்து (மூன்றாம் திருவந்தாதி 95) இப்பால் ஏகினள் என்று மாற்றுக. இனி மாற்றாது ஏகினன் என்பதை முற்றாக்கிவிட்டு இப்பால் என்பதற்கு இதற்குப் பிறகு என்று எச்சம் ஆக்குவர். அவர்கள் 'சோலை எய்தி இருந்தனன் இராமன். இப்பால்' (கம்ப. 7238) என்னும் சூர்ப்பணகைப் படலத்தை மேற்கோள் காட்டுவர்.* ***(84)***

## பொழில் இறுத்தபடலம்

*பிராட்டியிடம்சூடாமணியுடன் விடைபெற்றுக் கொண்ட அனுமன், மேற்கொண்டு செய்த செயல்களைக் கூறுவது இந்தப் பகுதி.*

*இதனுள், விடைபெற்ற அனுமன் மனநிலை அவன் அசோகவனத்தை அழித்தல், பிராட்டியிருந்த மரம் மட்டும் அழியாது திகழ்தல், வனத்தை அழித்து நின்ற அனுமன் நிலை, அனுமனைக் கண்டு அஞ்சிய அரக்கியர் பிராட்டியை வினாவுதல், பிராட்டியின் பதில், காவலர் இராவணனிடம் சென்று செய்தி கூறுதல், அனுமன் ஆரவாரம் செய்தல் முதலிய செய்திகள் அடங்கியுள்ளன.*

*அனுமன் மன நிலை*

**கலிவிருத்தம்**

***5429. நெறிக்கொடு வடக்கு உறும் நினைப்பினில்***
***நிமிர்ந்தான்,***
***பொறிக் குல மலர்ப் பொழிலிடைக் கடிது போவான்,***
***'சிறித்தொழில் முடித்து அகல்தல் தீது' எனல்,***
***தெரிந்தான்;***
***மறித்தும் ஓர்செயற்கு உரிய காரியம் மதித்தான்.***

**நெறிக் கொடு** - *(அனுமன்இனித் தான் செல்ல வேண்டிய) வழியைக் கருதி;* **வடக்கு உறும்** - *வடக்கு முகமாகச் செல்லும்;* **நினைப்பினில்** - *நினைப்போடு;* **நிமிர்ந்தான்** - *அதற்கு ஏற்பப் பெரியவடிவத்தை எடுத்துக் கொண்டு;* **பொறிக்குல மலர்ப்பொழில் இடை** - *வண்டுக்கூட்டங்கள் மொய்க்கும் மலர்கள் நிறைந்த அசோகவனத்திடையே;* **கடிது போவான்** - *விரைந்து செல்பவனாகிய அனுமன்;* **சிறு தொழில் முடித்து அகல்தல்** - *(பிராட்டியைக் கண்ட இந்த) சிறு செயலை மட்டும் முடித்துக் கொண்டு போவது;* **தீது எனல் தெரிந்தான்** - *(தன் ஆற்றலுக்குக்) குறைவு என்று உணர்ந்து;* **மறித்தும் செயற்கு உரிய ஓர் காரியம் மதித்தான்** - *மீண்டும் தான் செய்வதற்குப் பொருப்பான ஒரு செயலைச் செய்ய எண்ணினான்.*
*பிராட்டியைக்கண்டு பேசிப் போவதாகிய செயல், தனது ஆண்மைக்குக் குறைவு என்பதும், வேறு ஒரு பெருஞ் செயலைச் செய்ய வேண்டும் என்பதும் அனுமனது கருத்து. பொறி - புள்ளி. வண்டைக் குறித்தது; ஆகுபெயர். பொறி - வண்டு; பொறி கலந்து பொழில். (தேவாரம்) 'வண்டுக் கூட்டம் எழ' என்பது வைகறைப் பொழுதை உணர்த்துகின்றது. சிறுத்தொழில் வலித்தல் விகாரம். சிறுக்குட்டன். சிறுத் தொண்டன் என்பன போன்றது.* ***(1)***

***5430. 'ஈனம் உறுபற்றலரை எற்றி, எயில் மூதூர்***
***மீனநிலையத்தின் உக வீசி, விழி மானை***
***மானவன் மலர்க்கழலில் வைத்தும்இலென் என்றால்,***
***ஆன பொழுது, எப்பரிசின், நான் அடியன்***
***ஆவேன் ?***

***ஈனம் உறும்பற்றலரை ஏற்றி -*** *இழிவான செயல்கள்பொருந்திய பகைவர்களாகிய அரக்கர்களைத் தாக்கி அழித்து;* ***எயில் மூதூர் -*** *மதில்கள் சூழ்ந்த இந்த இலங்கை நகரை;* ***மீனநிலையத்தின் உகவீசி -*** *மீன்களுக்கு இருப்பிடமான கடலில் சிதறி விழும்படி வீசி எறிந்து;* ***விழி மானை -*** *கண் பார்வையால் மானை ஒத்த பிராட்டியை;* ***மானவன் மலர்க் கழலில் வைத்தும் இலென் என்றால் -*** *இராமபிரானுடைய தாமரை மலர் போன்ற திருவடிகளில் (காணிக்கை போல) வைத்து வணங்கவில்லை என்றால்;* ***ஆனபொழுது -*** *அந்நிலையில் நான் உள்ள போதும்;* ***எப்பரிசின் நான் அடியன் ஆவேன் -*** *எவ்விதத்தில் நான் இராமபிரானுக்கு உண்மை அடியவனாக ஆவேன்?*

*தலைவனதுவிருப்பத்தை நிறைவேற்றுவதே உண்மை அடியவனின் கடமை. இராமபிரானுடைய பகைவர்களை ஒழித்தலை, அடியவனாகிய அனுமன், தனது கடமையாகக் கருதினான். மான்விழி என்பது விழிமான் எனமாறியது; இலக்கணப் போலி - புறநகர், வாயில் என்பன போல. மீனநிலையம் - கடல். புதிய சொல்லாட்சி.* ***(2)***

## *5431. 'வஞ்சனைஅரக்கனை நெருக்கி, நெடு வாலால்*
## *அஞ்சினுடன் அஞ்சுதலை தோள் உற அசைத்தே,*
## *வெஞ் சிறையில்வைத்தும்இலென்; வென்றும்இலென்; என்றால்,*
## *தஞ்சம்ஒருவர்க்கு ஒருவர் என்றல் தகும் அன்றோ ?*

***வஞ்சனை அரக்கனை-*** *கபடத்தன்மை பொருந்திய அரக்கனாகிய இராவணனை;* ***நெடு வாலால் -*** *எனது நெடிய வாலினால்;* ***அஞ்சினுடன் அஞ்சு தலை தோள் உற -*** *பத்துத் தலைகளும் இருபது தோள்களும் ஒன்று சேரும் படி;* ***நெருக்கி அடைத்து -*** *நெருக்கிக் கட்டி;* ***வெம் சிறையில்வைத்தும் இலென் -*** *கொடிய சிறைக்காவலில் வைத்தேனும் அல்லேன்;* ***வென்றும் இலென் -*** *போரில் அவனை வென்றேனும் அல்லேன்;* ***என்றால் -*** *என்று சொல்லுவமானால்;* ***ஒருவர்க்கு ஒருவர் தஞ்சம் என்றல் -*** *ஒருவருக்கு ஒருவர் பற்றுக்கோடு என்ற உறுதிமொழி கூறல்;* ***தகும் அன்றோ-*** *தகுதி உடையதாகுமல்லவோ (தகுதி உடையதாகாது என்றபடி). தஞ்சம்ஒருவர்க்கு ஒருவர் என்றது. இராமபிரானும் சுக்கிரீவனும் உற்ற துணையாக நட்புக் கொண்டதைக் குறிப்பது. தன் அரசனான சுக்கிரீவனுக்கு உள்ள பொறுப்பை அனுமன் தன்மேல் ஏற்றிக் கொண்டதாகும். அசைத்தல் - கட்டுதல்.* ***(3)***

## *5432. 'கண்டநிருதக் கடல் கலக்கினென், வலத்தின்*
## *திண் திறல்அரக்கனும் இருக்க ஓர் திறத்தின்*
## *மண்டவுதரத்தவள்மலர்க் குழல் பிடித்து,*
## *கொண்டு சிறைவைத்திடுதலில் குறையும் உண்டோ ?*

***வலத்தால் -*** *என்வலிமையினால்;* ***கண்டநிருதக்கடல் -*** *கண்ணுக்குத் தெரிகின்ற அரக்கர் கூட்டத்தை;* ***கலக்கினென் -*** *கலங்கச் செய்தவனாய்;* ***திண்திறல் அரக்கனும் இருக்க -*** *மிக்க வலிமை உடைய அரக்கனாகிய இராவணனும் பார்த்துக் கொண்டிருக்க;* ***ஓர் திறத்தின் -*** *ஒப்பற்ற எனது ஆற்றலினால்;* ***மண்ட உதரத்தவள் மலர்க்குழல் பிடித்து -***

*(அவனது பட்டத்து அரசியான) மண்டோதரியின் மலரணிந்த கூந்தலைப் பற்றி;* **சிறைகொண்டு வைத்திடுதலில் -** *சிறையாகக் கொண்டு வைப்பதில்;* **கு றையும்உண்டோ -** *குறைவு உள்ளதோ ? (இல்லை என்றபடி)*

*இராவணனைச்சிறைவைத்தலை விட அவன் மனைவியைச் சிறையில் அடைத்தலே நிறைவானதாக இருக்கும் எனக் கருதுகின்றான்,அனுமன், மிகுதியையும்பெருமையையும் குறிக்க. அரக்கர் கூட்டம் கடல் எனப்பட்டது. அரக்கர் கூட்டத்தைக் கடல் என்றதற்கு ஏற்பக் கலக்கி என்ற சொல் பொருத்தமாக வந்தது. மண்டோதரி மந்த உதரத்தவள். சுருங்கிப் படிந்த வயிற்றினள் என்று பொருள்.* ***(4)***

***5433. 'மீட்டும் இனி, எண்ணும் வினை வேறும் உளது அன்றால்;***
***ஓட்டி இவ்அரக்கரை உலைத்து, உரிமை எல்லாம்***
***காட்டும் இதுவேகருமம்; அன்னவர் கடும் போர்***
***மூட்டும் வகையாவதுகொல் ?' என்று முயல்கின்றான்.***

**இவ் அரக்கரைஉலைத்து ஒட்டி -** *இந்த அரக்கர்களை எல்லாம் வருத்தி ஓடச் செய்து;* **உரிமை எல்லாம் -** *நான், இராமபிரானுக்கு அடியனாகும் உரிமைத் தன்மை எல்லாம்;* **காட்டும் இதுவே கருமம் -** *வெளிப்படையாகக் காட்டுகின்ற இதுவே நான் செய்யத் தக்க செயல்;* **இனி, மீட்டும் எண்ணும் வினை -** *இனிமேல், மறுபடியும் ஆலோசிக்க வேண்டிய காரியம்;* **வேறும் உளது அன்று -** *வேறு ஒன்றும் இல்லை;* **அன்னவர் -** *அந்த அரக்கரை;* **கடும் போர் மூட்டும் வகை -** *கொடிய போரில்மூளச் செய்யும் விதம்;* **யாவது கொல் என்று முயல்கின்றான் -** *எதுவாகும் என்று நினைத்து (அதற்குரிய உபாயத்தை) ஆலோசிப்பவனாயினான் அனுமன்.*

*அரக்கரைப்போர் மூட்டி அழிப்பதே தான் செய்யத்தக்க செயல் என்றும், அதுவே அடியவனாகக் காட்டுதற்குரியதென்றும் அனுமன் எண்ணுகின்றான். ஆல். கொல்; அசை.* ***(5)***

***5434. 'இப் பொழிலினைக் கடிது இறுக்குவென்; இறுத்தால்,***
***அப் பெரிய பூசல்செவி சார்தலும், அரக்கர்***
***வெப்புறுசினத்தர் எதிர் மேல்வருவர்; வந்தால்,***
***துப்பு உறமுருக்கி, உயிர் உண்பல், இது சூதால்.***

**இப்பொழிலினைக்கடிது இறுக்குவென் -** *இந்தச் சோலையை விரைவில் முறித்து அழிப்பேன்;* **இறுத்தால் -** *அவ்வாறு யான் அழித்தால்;* **அப்பெரிய பூசல் செவி சார்தலும் -** *அந்தப் பெரிய ஆரவாரம் தமது காதில்பட்டவுடன்;* **அரக்கர் வெப்பு உறு சினத்தர் -** *அரக்கர்கள் கொடுமைமிக்ககோபத்தினராகி;* **எதிர் மேல் வருவர் -** *என்மேல் எதிர்த்துப் போர் புரியவருவார்கள்;* **வந்தால் -***அவ்வாறு வந்தால்;* **துப்பு உற முருக்கி உயிர் உண்பல் -** *எனது வலிமையைக் கொண்டு அவர்களை அழித்து, உயிர்களை வாங்குவேன்;* **இது சூது -** *இதுவே யான் செய்யத்தக்க உபாயம்.*

*அரக்கரைப்போருக்கு அழைக்கும் உபாயத்தை உறுதிப் படுத்திக் கொண்டான் அனுமன். சூது - உபாயம். 'சூது என்று கனவும் சூதும் செய்யாதே ! திருவாய்மொழி (2.10.10) துப்பு - வலிமை; 'துப்புடையாரை' - பெரியாழ்வார் திருமொழி (423)*
***(6)***

***5435. 'வந்தவர்கள் வந்தவர்கள் மீள்கிலர் மடிந்தால்,***
**வெந் திறல்அரக்கனும், விலக்க அரு வலத்தால்**
***முந்தும்; எனின்,அன்னவன் முடித் தலை முசித்து,***
**என்**
**சிந்தை உறு வெந்துயர் தவிர்த்து, இனிது**
***செல்வேன்.'***

***வந்தவர்கள்வந்தவர்கள் -** என்னை எதிர்த்துப்போர் செய்ய வந்தவர்கள் எல்லாரும்; **மீள்கிலர் மடிந்தால் -** திரும்பிச் செல்லாதவர்களாய் இறந்தால்; **வெம்திறல் அரக்கனும் -** கொடிய வலியனான இராவணனும்; **விலக்க அருவத்தால் -** விலக்க முடியாத வலிமையோடு; **முந்தும் -** என் மீது போருக்கு வருவான்; **எனில் -** அவ்வாறு வந்தானானால்; **அன்னவன் முடித்தலை முசித்து -** இந்த இராவணனது, மகுடம் அணிந்த தலைகளை அழித்துக் கொன்று; **என் சிந்தை உறு வெம்துயர் தவிர்த்து -** என் மனத்தில் உள்ள கொடிய துயரைப் போக்கி; **இனிது செல்வேன் -** மகிழ்வோடு திரும்பிப் போவேன்.*

*முடிகள் அரசாங்கத்துக்கு உரியன. அவற்றை வீழ்த்துவதே அரக்கனைக் கொள்வதற்குச் சமம் இங்கே முடியோடு கூடிய தலையை நசுக்கிக் கொல்லுதலை 'முடித்தலை முசித்து' என்றார். சிந்தையுறு வெந்துயர் என்றது இதுவரையில் பிராட்டிக்குக் கேடு சூழ்ந்த அரக்கன் உயிரோடு இருக்கிறானே என்ற உணர்வைச் சுட்டியது.* *(7)*

*அனுமன் அசோகவனத்தை அழித்தல்*

***5436. என்றுநினையா, இரவி சந்திரன் இயங்கும்***
**குன்றம் இருதோள் அனைய தன் உருவு**
**கொண்டான்;**
**அன்று, உலகுஎயிற்றிடை கொள் ஏனம் எனல்**
***ஆனான்;***
**துன்று கடிகாவினை, அடிக்கொடு துகைத்தான்.**

***என்று நினையா -** என்றுமனத்தில் எண்ணி; **இரவி சந்திரன் இயங்கும் -** சூரியனும் சந்திரனும் சுற்றி வலம் வருகின்ற; **குன்றம் அனைய இரு தோள் -** மேருமலையை ஒத்த இரண்டு தோள்களை உடைய; **தன் உருவு கொண்டான் -** தனது பெரிய வடிவை எடுத்துக் கொண்டு; **அன்று உலகு எயிற்றிடை கொள் ஏனம் எனல் ஆனான் -** முற்காலத்தில் பூமியைத்தன் பற்களின் இடையே கொண்ட வராக மூர்த்திக்கு ஒப்பவனாக விளங்கி; **துன்றுகடி காவினை -** மரங்கள் அடர்ந்த காவல்மிகுந்த அசோகவனத்தை; **அடிக்கொடு துகைத்தான் -** தனது கால்களால் தாக்கி மிதித்து அழித்தான்.*

*பிரளயத்திலிருந்து பூமிப் பிராட்டியை மீட்பதற்கு எழுந்த மகாவராக மூர்த்தி, அவள் அம்சமான பிராட்டியைத் துயர்க் கடலினின்றும் மீட்க எடுத்த அனுமனது பேருருவுக்கு உவமையாதல் பொருத்தம். இரண்டு மேரு மலைகள் இல்லை. இரு மேருவை ஒத்த தோள்கள் என்றது இல்பொருளுவமை.* ***(8)***

*சோலை அழிந்தவிதம்*

**கலிவிருத்தம்**

***(வேறு வகை)***

***5437. முடிந்தன;பிளந்தன; முரிந்தன; நெரிந்த;***
***மடிந்தன;பொடிந்தன; மறிந்தன; முறிந்த;***
***இடிந்தன;தகர்ந்தன; எரிந்தன; கரிந்த;***
***ஒடிந்தன;ஒசிந்தன; உதிர்ந்தன; பிதிர்ந்த.***

***முடிந்தன** - (அனுமனதுகால்களால் துகைக்கப்பட்ட மரங்களில் சில) அழிந்து போயின; **பிளந்தன** - பிளவுபட்டன; **முரிந்தன** - வளைந்து விட்டன; **நெரிந்த** - ஒன்றோடு ஒன்று தாக்கி நொறுங்கி அழிந்தன; **மடிந்தன** - தலைசாய்ந்தன; **பொடிந்தன** - பொடியாய்ப் போய் விட்டன; **மறிந்தன** - கீழ் மேலாகக் கவிழ்ந்தன; **முறிந்த** - துண்டுகளாகப் போய் விட்டன; **இடிந்தன** - இடிபட்டுப் போயின; **தகர்ந்தன** - சிதள் சிதளாய்த் தெறித்துப்போயின; **எரிந்தன**- நெருப்புப் பற்றி எரிந்து விட்டன; **கரிந்த** - கருகிப் போயின; **ஒடிந்தன** - ஒடிபட்டன; **ஒசிந்தன** - துவண்டு சாய்ந்தன; **உதிர்ந்தன** - வலியற்று உதிர்வன ஆயின; **பிதிர்ந்த** - சின்னபின்னப்பட்டன.*

*மரங்களின்அழிவு, பல வினைச் சொற்களால் தெரிவிக்கப்பட்டுள்ளது.* ***(9)***

***5438. வேரொடுமறிந்த சில; வெந்த சில; விண்ணில்***
***காரொடு செறிந்தசில; காலினொடு வேலைத்***
***தூரொடு பறிந்தசில; தும்பியொடு வானோர்***
***ஊரொடு மலைந்தசில; உக்க, சில நெக்க;***

***சில வேரொடுமறிந்த** - சில மரங்கள் வேரொடுகீழே விழுந்தன; **சிலவெந்த** - சில மரங்கள் வெந்து போயின; **சில விண்ணில் காரொடு செறிந்த**- சில மரங்கள் ஆகாயத்தில் உள்ள மேகத்தோடு நெருங்கின; **சில காலினொடு வேலை தூரொடு மறிந்த** - சில மரங்கள் காற்றினால் கடலில் உள்ள சேற்றோடு குப்புற்று வீழ்ந்து அழிந்தன; **சில தும்பியொடு வானோர் ஊரொடு** - சில, வண்டுகளோடு தேவ நகரங்களில் சென்று; **மலைந்த** - மோதின; **சில நெக்க உக்க** - சில பிளந்து சிதறிச் சிந்தின.*

*அசோக வனத்துமரங்கள், இடம் பெயர்ந்து சென்றமையைத் தெரிவிக்கின்றது இக்கவிதை.* ***(10)***

***5439. சோனை முதல் மற்றவை சுழற்றிய திசைப் போர்***
***ஆனை நுகரக்குளகும் ஆன; அடி பற்றா***
***மேல் நிமிரவிட்டன, விசும்பின் வழி மீப் போய்,***
***வானவர்கள்நந்தன வனத்தையும் மடித்த.***

***சுழற்றிய -*** *அனுமனால்சுழற்றி எறியப்பட்ட;* ***சோனை முதல் மற்றவை-*** *மேகத்தைத் தம்மிடம் கொண்ட மற்றும் சில மரங்கள்;* ***திசைப் போர்ஆனை நுகரக் குளகும் ஆன -*** *எட்டுத்திக்குகளையும் காக்கும் போரில்சிறந்த யானைகள் உண்ணும் தழை உணவு ஆயின;* ***அடி பற்றாமேல் நிமிரவிட்டன -*** *அடியைப் பற்றி வானத்தில் செல்லும் படி வீசி எறியப்பட்ட சிலமரங்கள்;* ***விசும்பின் வழி மீப் போய் -*** *ஆகாய வழியாக மேலே சென்று;* ***வானவர்கள் நந்தனவனத்தையும் மடித்த -*** *தேவர்களது அழகிய பூஞ்சோலையையும் அழித்தன. சோனை - மேகம்; நந்தன வனம் - (இங்கே) கற்பகப் பூஞ்சோலை.* ***(11)***

***5440. அலைந்தனகடல் திரை; அரக்கர் அகல் மாடம்***
***குலைந்து உகஇடிந்தன; குலக் கிரிகளோடு***
***மலைந்து பொடிஉற்றன; மயங்கி நெடு வானத்து***
***உலைந்து விழும்மீனினொடு வெண் மலர் உதிர்ந்த.***

***கடல் திரைஅலைந்தன -*** *(அனுமன் எறிந்தமரங்களினால்) கடலின் அலைகள் அலைவனவாயின;* ***அரக்கர் அகல் மாடம் -*** *அரக்கருக்குரிய பெரிய மாளிகைகள்;* ***குலைந்து உக இழந்தன -*** *நிலை கெட்டுச் சிதறிச் சிந்தும்படி இடிந்து போயின;* ***குலக் கிரிகளோடு மலைந்து பொடி உற்றடை -*** *(அனுமன் எறிந்த சில மரங்கள்) ஏழுகுலப் பருவதங்களோடு மோதிப் பொடியாய்ச் சிந்தின;* ***வெண் மலர் -*** *மரங்களில் உள்ள வெள்ளிய பூக்கள்;* ***நெடுவானத்து உலைந்து விழும் மீனினொடு -*** *பெரிய ஆகாயத்தினின்றும் நிலை கலங்கிக் கீழே விழக்கூடிய நட்சத்திரங்களோடு;* ***மயங்கி உதிர்ந்த -*** *கலந்து கீழே சிந்தின.*

*அனுமனால் வீசிஎறியப்பட்ட மரங்கள் ஆகாயத்தில் தாக்கின. தாக்கப்பட்ட நட்சத்திரங்களோடு, மரங்களிலிருந்த வெண்ணிறப் பூக்கள் வேற்றுமை தெரியாமல் மயங்கிக் கீழே உதிர்ந்தன. விண்மீனுக்கு வெள்ளை மலர் ஒப்பு.*
***(12)***

***5441. முடக்கு நெடுவேரொடு முகந்து உலகம் முற்றும்***
***கடக்கும்வகைவீசின, களித்த திசை யானை,***
***மடப் பிடியினுக்குஉதவ மையின் நிமிர் கை வைத்து***
***இடுக்கியனஒத்தன, எயிற்றின் இடை ஞால்வ.***

***உலகம் முற்றும்கடக்கும் வகை -*** *உலகம் முழுவதும் கடந்து செல்லும்படி;* ***முடக்கும் நெடு வேரொடு முகந்து வீசின -*** *வளைந்துள்ள நீண்ட வேருடனே பிடுங்கி அனுமனால் வீசி எறியப்பட்ட சில மரங்கள்;* ***களித்த திசையானை எயிற்றின் இடை ஞால்வ -*** *மத மேற் கொண்ட திக்கு யானைகளின் தந்தங்களின் நடுவில் தொங்குவனவாகி;* ***மடப் பிடியினுக்கு உதவ -*** *இளமையுள்ள பெண் யானைகளுக்குக் கொடுக்க;* ***மையின் நிமிர் கைவைத்து இடுக்கியன ஒத்த -*** *மேகத்தைப் போல மேலே நிமிர்ந்து எழுந்த தன்*

*துதிக்கையில் வைத்து இடுக்கிக் கொண்டுள்ளனவற்றைப் போலத் தோன்றின. அனுமனால்வீசப்பட்ட மரங்கள் சில, யானையின் தந்தங்களில் தங்கின. அவை, அந்த யானை பிடிக்குக் கொடுக்க, கையினால் இடுக்கி எடுத்து வைத்தது போன்றிருந்தன. யானையின் எயிற்றிடை ஞால்வ; ஞால்வ, ஒத்தன.* ***(13)***

***5442. விஞ்சை உலகத்தினும், இயக்கர் மலைமேலும்,***
***துஞ்சுதல் இல்வானவர் துறக்க நகரத்தும்,***
***பஞ்சி அடிவஞ்சியர்கள் மொய்த்தனர், பறித்தார்,***
***நஞ்சம்அனையானுடைய சோலையின் நறும்பூ,***

***நஞ்சம்அனையானுடைய சோலையின் நறும் பூ -*** *விடம் போன்ற கொடிய இராவணனது அசோகவனத்து நறுமணம் மிக்க மலர்களை;* ***விஞ்சை உலகத்தினும் இயக்கர் மலை மேலும் -*** *வித்தியாதரர் உலகத்திலும் யட்சர்கள் வாழும் மலைகளின் மீதும்;* ***துஞ்சுதல் இல் வானவர் துறக்க நகரத்தும் -*** *இறத்தல் என்பது இல்லாத தேவர்கள் வாழ்கின்ற சுவர்க்க நகரத்திலும்;* ***பஞ்சி அடி வஞ்சியர்கள் -*** *(வாழ்பவர்களான) செம்பஞ்சுக் குழம்பு ஊட்டிய பாதங்களை உடைய மகளிர்;* ***மொய்த்தனர் பறித்தார் -*** *கூட்டமாய் நெருங்கி வந்து பறித்துக் கொண்டார்கள்.*

*இராவணனதுபூந்தோட்டத்து மலர்களை விஞ்சை மகளிர் முதலியோர் பறித்துக் கொள்ளும் வகையில், அனுமன் எப்புறத்தும் மரங்களை வீசி எறிந்தனன் என்பது இதன் கருத்து.* ***(14)***

***5443. பொன் திணி மணிப் பரு மரன், திசைகள் போவ,***
***மின் திரிவஒத்தன; வெயில் கதிரும் ஒத்த;***
***ஒன்றினொடும்ஒன்று இடை புடைத்து உதிர, ஊழின்***
***தன் திரள்ஒழுக்கி, விழு தாரகையும் ஒத்த.***

***திசைகள் போவ -*** *நான்குதிசைகளிலும் செல்லும்;* ***பொன் திணி மரன்-*** *பொன்னால் பதிக்கப்பெற்ற மரங்கள்;* ***மின் திரிவ ஒத்தன -*** *மின்னல்கள்திரிவனவற்றை ஒத்தன;* ***மணிப் பருமரன் -*** *இரத்தினங்களால் பதிக்கப் பெற்றமரங்கள்;* ***வெயில் கதிரும் ஒத்த -*** *சூரியனுடைய ஒளியையும் ஒத்திருந்தன;* ***ஒன்றினொடும் ஒன்று இடை புடைத்து உதிர -*** *(அவ்வாறு வீசி எறியப்பட்டமரங்கள்) இடையே ஒன்றோடு ஒன்று தாக்கப்பட்டுத் தகர்ந்து தூளாகிக் கீழேஉதிரும்படி;* ***ஊழின் -*** *கற்பமுடிவில்;* ***தன் திரள் ஒழுக்கின் விழும்தாரகையும் ஒத்த -*** *கூட்டமாக விழும் நட்சத்திரங்கள் போலவும் விளங்கின. பொன் மரங்களும்இரத்தின மரங்களும் அச் சோலையில் கண்காட்சியாக வைக்கப்பட்டிருந்தன போலும்.* ***(15)***

***5444. புள்ளினொடு வண்டும், மிஞிறும், கடிகொள் பூவும்,***
***கள்ளும்,முகையும், தளிர்களோடு இனிய காயும்,***
***வெள்ள நெடுவேலையிடை, மீன்இனம் விழுங்கித்***
***துள்ளின; மரன்பட, நெரிந்தன துடித்த.***

***புள்ளினொடுவண்டும் மிஞிறும் -*** *(எறியப்பட்டமரங்களில் உள்ள) பறவைகளையும் வண்டுகளையும் மிஞிறுகளையும்;* ***கடி கொள் பூவும் -*** *நறுமணம் உள்ள மலர்களையும்;*

***முகையும் கள்ளும் -*** *அரும்புகளையும் தேனையும்;* ***தளிர்களோடு இனிய காயும் -*** *துளிர்களையும் இன் சுவையுள்ள காய்களையும்;* ***வெள்ள நெடு வேலையிடை -*** *நீர்ப்பெருக்கை உடைய பெரிய கடலிலே;* ***மீன் இனம் விழுங்கித் துள்ளின -*** *உள்ள மீன் கூட்டங்கள் உட்கொண்டு (மனக்களிப்பால்) துள்ளிக் குதித்தன;* ***மரன்பட நெரிந்தன துடித்த -*** *(பிறகு) வீழ்ந்த மரங்கள் தம் மேற்பட்டுத்தாக்குவதால் நசுங்கினவாகித் துடிக்கலாயின.*

*கடலில் விழுந்தபறவை முதலியவற்றை உண்டு மகிழ்ந்த மீன்கள். பிறகு மரங்களின் தாக்குதலால் நெரிந்து துடித்தன. இன்பமும் துன்பமும் கலந்தது வாழ்க்கை. இத்தத்துவம் குறிப்பாக உணர்த்தப்படுகின்றது. தேன்; மிஞிறு - தேனீ. (புறம் 12)* ***(16)***

***5445. தூவியமலர்த்தொகை சுமந்து, திசைதோறும்***
***பூவின் மணம்நாறுவ, புலால் கமழ்கிலாத,***
***தேவியர்களோடும்உயர் தேவர் இனிது ஆடும்***
***ஆவி எனல் ஆய,திரை ஆர்கலிகள் அம்மா !***

***தூவிய மலர்த்தொகை சுமந்து -*** *சிதறின மலர்களின்கூட்டங்களைத் தாங்கி;* ***திசை தோறும் பூவின் மணம் நாறுவ -*** *எங்கும் மலர்களின் மணமேவீசுவன; (அதனால்);* ***புலால் கமழ்கிலாத -*** *புலால் நாற்றம் வீசாமல் அடங்கியுள்ளனவான;* ***திரை ஆர்கலிகள் -*** *அலைகளை உடைய கடல்கள்;* ***உயர் தேவர் தேவியர்களோடு இனிது ஆடும் -*** *உயர்ந்த தேவர்கள் தம் மனைவிமார்களுடன் மகிழ்வோடு நீராடுகின் ற;* ***ஆவி எனல் ஆய -*** *(தாமரைப் பூக்களோடுகூடிய) பொய்கை என்று சொல்லத் தக்கனவாயின. ஆர்கலிகள்(கடல்கள்) தேவருலகில் உள்ள பூம் பொய்கை போல் விளங்கின. கடல்களில் விழுந்த மலர்த்தொகையின் மிகுதி உணர்த்தப்பெறுகின்றது. ஆவி - பொய்கை. அம்மா; வியப்பு இடைச்சொல்.* ***(17)***

***5446. இடந்த மணிவேதியும், இறுத்த கடி காவும்,***
***தொடர்ந்தனதுரந்தன படிந்து, நெறி தூர,***
***கடந்து செலவுஎன்பது கடந்தது, இரு காலால்***
***நடந்து செலல்ஆகும் எனல் ஆகியது, நல் நீர்.***

***இடந்த மணிவேதியும் -*** *(அனுமன்)பெயர்த்தெறிந்த இரத்தினமயமானமேடைகளும்;* ***இறுத்த கடிகாவும் -*** *ஒடித்த காவலுள்ள சோலையின்மரங்களும்;* ***தொடர்ந்தன தரந்தன -*** *தொடர்ந்து வேகமாகச் சென்று;* ***படிந்து,நெறிதூர -*** *கடலிலே ஒழுங்காக விழுந்து, அதனை வழிபோலத் தூர்த்துவிட்டதனால்;* ***நல்நீர் -*** *மணம் கொண்ட கடலானது;* ***கடந்து செலவு கடந்தது-*** *தாண்டிச் செல்ல வேண்டியது என்ற தன்மையைக் கடந்ததாகி;* ***நடந்துசெலல் ஆகும் எனல் ஆகியது -*** *நடந்து செல்லக் கூடியது என்றுசொல்லத்தக்கதாயிற்று.*

*அனுமன் இலங்கைவரும் போது, கடல் கடப்பதற்குரியதாக இருந்தது. திரும்பும் போது அது, நடப்பதற்குரியதாயிற்று.* ***(18)***

***5447. வேனில்விளையாடு சுடரோனின் ஒளி விம்மும்***
***வானினிடை வீசியஅரும் பணை மரத்தால்,***
***தானவர்கள்மாளிகை தகர்ந்து பொடி ஆய-***
***வான இடியால்ஒடியும் மால் வரைகள் மான.***

*__வேனில் விளையாடுசுடரோனின் -__ கோடைக்காலத்தில் முழு உற்சாகத்தோடு காய்கின்ற சூரியனைப் போல; __ஒளி விம்மும் வானின் இடை -__ ஒளி மிகுகின்ற ஆகாயத்தில்; __வீசிய இரும்பணை மரத்தால் -__ (அனுமன்) வீசி எறிந்த மிகப் பெரிய மரங்களால்; __தானவர்கள் மாளிகை -__ அரக்கரது மாளிகைகள்; __வான இடியால் ஒடியும் மால் வரைகள் மான -__ ஆகாயத்திலிருந்து விழும் இடியினால் உடைந்த பெரிய மலைகளைப் போல்; __தகர்ந்து பொடியான -__ இடிந்து பொடிபட்டன.*

*மரங்களால்தாக்குண்டு விழுந்த அரக்கர் மாளிகைகளுக்கு, இடிகளால் தாக்குண்டு அழியும் மலை ஒப்பு. உவமை அணி. __(19)__*

***5448. எண் இல்தரு கோடிகள் எறிந்தன செறிந்தே,***
***தண்ணென்மழைபோல் இடை தழைந்தது; சலத்தால்,***
***அண்ணல் அனுமான்,'அடல் இராவணனது, அந்***
***நாள்,***
***விண்ணினும் ஓர்சோலை உளது ஆம்' என,***
***விதித்தான்.***

*__அந் நாள்எறிந்தன -__ அந்த காலத்தில்,(தான்) பிடுங்கி எறிந்தனவான; __எண் இல் தரு கோடிகள் செறிந்து -__ அளவிறந்த மரங்களின் கூட்டங்கள்நெருங்கி; __தண்ணென் மழை போல் -__ குளிர்ந்த மேகம் போல; __இடைதழைந்தது -__ விண்ணிடத்தில் தழைந்து தோன்றியது; (அதனால்) __அண்ணல்அனுமான் -__ பெருமை பொருந்திய அனுமான்; __சலத்தால் -__ கோபத்தால்; __அடல் இராவணனது -__ வலிமை மிக்க இராவணனுடைய; __ஓர் சோலை -__ அசோகவனச் சோலை; __விண்ணினும் உளது ஆம் என விதித்தான் -__ வானத்தும் உள்ளது என்று சொல்லும் படிச் செய்தான்.*

*கோடி - கூட்டம்:'சீவகோடிகள்' என்பது போல. இராவணனுக்கு வானத்திலும் ஒரு சோலை இருக்கிறது என எண்ணும்படியாக அசோகவனத்து மரங்களை அனுமன் விண்ணிலே சிதறி எறிந்தான் என்பது கருத்து. __(20)__*

***5449. தேன் உறைதுளிப்ப, நிறை புள் பல சிலம்ப,***
***பூ நிறை மணித்தரு விசும்பிடை போவ,***
***மீன் முறைநெருக்க, ஒளி வாளொடு வில் வீச,***
***வானிடை நடாயநெடு மானம் எனல் ஆன.***

*__தேன் உறைதுளிப்ப -__ தேன் துளிகள்சிந்தவும்; __நிறை புள்பல சிலம்ப -__ அங்கு நிறைந்து வாழ்ந்து வந்த பறவைகள் ஒலிக்கவும்; __பூ நிறை மணித் தரு -__ மலர்கள் நிறைந்த இரத்தினமயமான மரங்கள்; __விசும்பின் இடை போவ -__ ஆகாயத்தினிடத்தே போவனவாய்; __மீன் முறை நெருக்க -__ (அவ் விண்ணில் உள்ள) நட்சத்திரங்கள் முறையே நெருக்கவும்; __ஒளி வாளொடு வில் வீச -__ ஒளியானது வாளொடு போட்டியிட்டு ஒளி*

*வீசவும்;* ***வானிடை நடாய நெடு மானம் எனல் ஆய -*** *ஆகாயத்தில் செல்லும் பெரிய விமானம் என்று சொல்லத்தக்கனவாயின. அனுமன் வீசிஎறிந்த மரங்களில் உள்ள பூக்களும், அவற்றில் உள்ள மணிகளும் வீசும் ஒளி வாள் போல, விளங்கின. மானம் - விமானம்; முதற் குறை.* ***(21)***

***5450. சாகம் நெடுமாப் பணை தழைத்தன; தனிப் போர்***
***நாகம் அனையான்எறிய, மேல் நிமிர்வ-நாளும்***
***மாக நெடு வானிடைஇழிந்து, புனல் வாரும்***
***மேகம் எனல்ஆய-நெடு மா கடலின் வீழ்வ.***

***தனிப் போர்நாகம் அனையான் எறிய -*** *ஒப்பற்ற போரில்சிறந்த யானை போன்ற வலிமை பெற்ற அனுமன் வீசி எறிந்ததனால்;* ***நெடு மாப் பணை சாகம் தழைத்தன -*** *நீண்ட பெரிய கிளைகளும் இலைகளும் தழைத்தனவும்;* ***மேல் நிமிர்வ -*** *மேலே எழுந்து விளங்குவனவும்;* ***நெடு மாகடலின் வீழ்வ -*** *பிறகு நெடிய பெரிய கடலில் வீழ்வனவுமாகிய மரங்கள்;* ***நாளும் -*** *எல்லாக் காலத்தும்;* ***நெடு மாக வான் இடை கிழிந்து -*** *மிகப் பெரிய ஆகாயத்திலிருந்து கீழே இறங்கி;* ***புனல் வாரும் மேகம் எனல் ஆய -*** *கடல் நீரை முகப்பனவான மேகம் என்று சொல்லத்தக்கன வாயின.*

*மாகம் - வானம்;மாக வான் - ஒரு பொருட் பன்மொழி.* ***(22)***

**கலிவிருத்தம்**

***(வேறு வகை)***

***5451. ஊனம்உற்றிட, மண்ணின் உதித்தவர்,***
***ஞானம் முற்றுபுநண்ணினர் வீடு என,***
***தான கற்பகத்தண்டலை விண்தலம்***
***போன, புக்கன,முன் உறை பொன்னகர்.***

***ஊனம் உற்றிட -*** *குற்றம்நேர்ந்திட்டதனால்;* ***மண்ணில் உதித்தவர் -*** *இந்த மண்ணுலகத்தில் பிறந்த தேவர்கள்;* ***ஞானம் முற்றுபு -*** *பிறகு ஞானம் முழுமையாக நிரம்பியவுடன்;* ***வீடு நண்ணினர் என -*** *துறக்கத்தை அடைந்தவர்களைப் போல;* ***தான கற்பகத் தண்டலை -*** *கொடைக்குணம் பெற்ற கற்பக மரங்கள் அடர்ந்த அந்த அசோகவனச் சோலை;* ***விண்தலம் போன -*** *அனுமனால் வீசி எறியப்பட்டு வான் வழியாகச் சென்று;* ***முன்உறை பொன் நகர்புக்கன -*** *முன்னே தங்கியிருந்த சுவர்க்க லோகம் போய்ச் சேர்ந்தன போல் தோற்றம் அளித்தன.*

*அசோகவனத்துக்கற்பக மரங்கள், துறக்கத்திலிருந்து இராவணனால் இலங்கைக்குக் கொண்டு வரப்பட்டவைகள். அவைகள் அனுமனால் வீசி எறியப்பெற்று, முன் இருந்த இடத்தை அடைந்து விட்டன. விண்ணுலகத் தேவர் குற்றம் செய்து மண்ணுலகில் பிறந்து, ஞானம் முற்றி மீண்டும் விண்ணுலகம் அடைந்ததுபோல அனுமன் எறிந்த அசோக வனத்து மரங்கள் ஆகாயத்தை அடைந்தனவாம். கவந்தன், விராதன், வீடுமன் முதலியோர் சாபக் கேட்டால் தம் தேவபதம் நீங்கியார் மண்ணுலகில் பிறந்து ஞானம்*

*முற்றிய பின் தம் முன்னைய உயர் நிலையைப் பெற்ற புராணச் செய்தி இங்கு நினைக்கத்தகும். **(23)***

***5452. மணி கொள்குட்டிமம் மட்டித்து, மண்டபம்***
***துணி படுத்து,அயல் வாவிகள் தூர்த்து, ஒளிர்***
***திணி சுவர்த்தலம் சிந்தி, செயற்கு அரும்***
***பணி படுத்து,உயர் குன்றம் படுத்துஅரோ;***

***மணிகொள்குட்டிமம் மட்டித்து -*** *இரத்தினங்கள்பதிக்கப் பெற்ற திண்ணைகளைத் தகர்த்து;* ***மண்டபம் துணிபடுத்து -*** *மண்டபங்களைத் துண் டுதுண்டுகளாக உடைத்து;* ***அயல் வாவிகள் தூர்த்து -*** *பக்கத்தில் உள்ளதடாகங்களைத் தூர்த்து;* ***ஒளிர் திணி சுவர்த்தலம் சிந்தி -*** *ஒளி விளங்குகின்ற வலிய சுவர்களின் இடங்களை இடித்துத்தள்ளி;* ***செயற்கு அரும் பணி படுத்து -*** *செய்வதற்கு அரிய வேலைப்பாடு அமைந்த பொருள்களை எல்லாம் அழித்து;* ***உயர் குன்றம் படுத்து -*** *உயர்ந்த குன்றுகளையும் அழித்து.*

*இதுவும் அடுத்தசெய்யுளும் குளகம். குட்டிமம் - கல்லால் அமைந்த மேடை; குன்றம் - செய்குன்று; சோலையில் செயற்கை அழகில் அமைந்த கட்டிடங்கள் முதலியன அழிக்கப்பட்டன என்பதாம்.* ***(24)***

***5453. வேங்கைசெற்று, மராமரம் வேர் பறித்து,***
***ஓங்கு கற்பகம்பூவொடு ஒடித்து உராய்,***
***பாங்கர்சண்பகப் பத்தி பறித்து, அயல்***
***மாங்கனிப் பணைமட்டித்து மாற்றியே;***

***வேங்கை செற்று -*** *வேங்கைமரங்களை அழித்து;* ***மரா மரம் வேர்பறித்து -*** *ஆச்சாமரங்களை வேரோடு பிடுங்கி எறிந்து;* ***ஓங்கு கற்பகம் பூவொடு ஒடித்து -*** *உயர்ந்த கற்பக மரங்களை மலர்களுடன் முறித்து;* ***பாங்கர் உராய் சண்பகம் பத்தி பறித்து -*** *பக்கங்களில் உராய்ந்து கொண்டிருந்த சண்பக மரங்களின் வரிசைகளைப் பறித்து எறிந்து;* ***அயல் மாங்கனிப் பணை மட்டித்து மாற்றி -*** *பக்கத்தில் உள்ள மாம்பழங்கள் நிறைந்த கிளைகளை முறித்து நிலை மாறச் செய்து.*

*கற்பக மரங்கள்தெய்வத்தன்மை வாய்ந்தன. அதனால் அவைகள் அழியவில்லை; நிலை மாறின.* ***(25)***

***5454. சந்தனங்கள் தகர்ந்தன-தாள் பட,***
***இந்தனங்களின்வெந்து எரி சிந்திட,***
***முந்து அனங்கவசந்தன் முகம் கெட,***
***நந்தனங்கள்கலங்கி நடுங்கவே.***

***அனங்கன் முந்துவசந்தன் முகம்கெட -*** *மன்மதனுக்கு முன்னே வரும் அவன் நண்பனான வசந்தனுடைய முகம் பொலிவு இழக்கவும்;* ***நந்தனங்கள் கலங்கி நடுங்க -*** *வானில் உள்ள பூஞ்சோலைகள் போல குலைந்து நடுக்க முறவும்;* ***தாள் பட தகர்ந்தன சந்தனங்கள் -*** *அனுமனின் கால்பட்டதால் தகர்த்து எறியப் பட்ட சந்தன மரங்கள்;* ***இந் தனங்களின் வெந்து எரி சிந்திட -*** *விறகுகளைப் போல எரிந்து நெருப்பைக்கக்கவும்.*

*நந்தனம் -தேவர் உலகத்தில் உள்ள பூஞ்சோலை; அசோகவனத்துச் சந்தன மரங்களின் நெருப்பு நந்தனங்களில் இருந்த வசந்தன் முகத்துப் பொலிவை அழித்தது. வசந்தன் - வசந்த காலத்துக்குரிய தேவன்; மன்மதனின் தோழன் என்பது புராண வழக்கு. அனங்க வசந்தன் எனக் கொண்டு அனங்கனாகிய வசந்தன் என இருபெயரொட்டாக்கி மன்மதனையே குறித்ததாகவும் கொள்ளலாம்.*
***(26)***

***5455. காமரம்களி வண்டு கலங்கிட,***
***மா மரங்கள்மடிந்தன, மண்ணொடு;***
***தாம், அரங்கஅரங்கு தகர்ந்து உக,***
***பூ மரங்கள்எரிந்து பொரிந்தவே.***

***காமரம் களிவண்டு கலங்கிட** - காமரம் என்னும்பண்ணைப் பாடும் களிப்புள்ள வண்டுகள் கலக்கம் அடைய; **மா மரங்கள் மண்ணொடு மடிந்தன** - பெரிய மரங்கள் தரையோடு மடிந்து கீழே விழுந்தன; **அரங்குதாம்** - நாடக சாலைகள்; **அரங்க(த்)தகர்ந்து உரி** - அழியுமாறு முறிந்து கீழே விழ; **பூமரங்கள் எரிந்து பொரிந்த** - மலர்களை உடைய பலமரங்கள் எரிந்து பொரிந்து சாம்பலாய்ப் போயின.*

*அரங்கல் -அழிதல்; அரங்கு - மேடை.* ***(27)***

***5456. குழையும்,கொம்பும், கொடியும், குயிற்குலம்***
***விழையும் தண்தளிர்ச் சூழலும், மென் மலர்ப்***
***புழையும், வாசப்பொதும்பும், பொலன் கொள் தேன்***
***மழையும்,வண்டும், மயிலும், மடிந்தவே.***

***குழையும்கொம்பும்** - வளையும் தன்மையுள்ளசிறு கிளைகளும்; **கொடியும்** - மலர்க்கொடிகளும்; **குயில் குலம் விழையும் தண் தளிர்ச் சூழலும்** - குயில்களின் கூட்டம் விரும்பக் கூடிய குளிர்ந்த தளிர்கள் அடர்ந்த இடங்களும்; **மென் மலர்ப் புழையும்** - மென்மையான மலர்களைக் கொண்ட நுழைவாயிலும்; **வாசப் பொதும்பும்** - மணமிக்க புதர்களும்; **பொலன் கொள்தேன் மழையும்** - பொன்னிறம் கொண்ட தேன் மழையும்; **வண்டும், மயிலும் மடிந்த** - வண்டுகளும், மயில்களும் அழிந்து போயின.*

*மென் மலர்ப்புழையும் - மெல்லிய பூவின் துளையும் என்பது ஒரு பழைய உரை.*
***(28)***

***5457. பவள மாக்கொடி வீசின, பல் மழை***
***துவளும் மின் என,சுற்றிட; சூழ் வரை,***
***திவளும் பொன்பணை மா மரம் சேர்ந்தன,***
***கவள யானையின்ஓடையின் காந்தவே.***

***வீசின பவளமாக்கொடி** - அனுமனால் வீசி எறியப்பட்ட பவளம் போன்று சிவந்த கொடிகள்; **பல் மழை துவளும் மின் என** - பல மேகங்களில் துவண்டு தோன்றும் மின்னல்கள் போல; **சூழ் வரை சுற்றிட** - இலங்கையைச் சூழ்ந்திருந்த மலைகளில் சுற்றிக் கொள்ள; **சேர்ந்தன திவளும் பொன் பணை மாமரம்** - எறியப்பட்டு மலைகளைச் சேர்ந்தனவான, விளங்குகின்ற பொன் மயமான கிளைகளை உடைய பெரிய மரங்கள்;*

***கவள யானையின் ஓடையின்காந்த -*** *பெரிய உருண்டைகளாகத்தன் உணவை உண்ணும் யானையின் முக படாம் போல ஒளி வீசி விளங்க.*

*மலைகளைச்சுற்றிக் கொடிகள் மேகங்களில் தோன்றும் மின்னலைப் போன்றன. சுற்றி அமைந்த மரங்கள் யானையின் முக படாம் போன்றன. ஓடை - யானையின் முகத்தில் அழகுக்காக மூடப்படும் முகபடாம்.* ***(29)***

***5458. பறவைஆர்த்து எழும் ஓசையும், பல் மரம்***
***இற எடுத்த இடிக்குரல் ஓசையும்,***
***அறவன் ஆர்த்துஎழும் ஓசையும், அண்டத்தின்***
***புற நிலத்தையும்கைம்மிகப் போயதே.***

***பறவை ஆர்த்துஎழும் ஓசையும் -*** *(அந்த வேளையில்)பறவைகள் பெருங்கூச்சலிட்டு எழுகின்ற ஓசையும்;* ***பல் மரம் இற எடுத்த இடிக் குரல் ஓசையும் -*** *பலமரங்கள் ஒடிபட அதனால் உண்டான இடியின் ஒலி போன்ற ஓசையும்;* ***அறவன் ஆர்த்து எழும் ஓசையும் -*** *அறத்தின் உருவினனான அனுமன் ஆரவாரித்தலால் உண்டான ஓசையும்;* ***அண்டத்தின் புற நிலத்தினும் கை மிகப் போயது -*** *இவ்வுலக உருண்டையின் வெளி நிலத்தினைக் கடந்து போயிற்று.*

*அறவன் - அனுமன்(அறத்தின் வடிவினன்)* ***(30)***

***5459. பாடலம்படர் கோங்கொடும், பண் இசைப்***
***பாடல் அம் பனிவண்டொடும், பல் திரைப்***
***பாடு அலம்பு உயர்வேலையில் பாய்ந்தன,-***
***பாடு அலம் பெற,புள்இனம், பார்ப்பொடே.***

***பார்ப்பொடு புள்இனம் -*** *தமது குஞ்சுகளுடனே மரங்களில் இனிது தங்கியிருந்த பறவைகளின் கூட்டம்;* ***பாடு அலம் பெற -*** *துன்பத்தை மிகுதியாக அடைய;* ***படர் கோங்கொடும் -*** *உயர்ந்து வளர்ந்துள்ள கோங்கு மரங்களும்;* ***பாடலம் -*** *பாதிரிமரங்களும்;* ***பண் இடைப் பாடல் அம் பணி வண்டொடும் -*** *சிறப்பித்துக் கூறப்பெறுகின்ற இசைப்பாடலைக் கொண்ட அழகிய குளிர்ந்த வண்டுகளோடும்;* ***பல் திசை பாடு அலம்பு உயர் வேலையில் பாய்ந்தன -*** *பல அலைகள் கரைகளை வந்து தழுவி அலம்பும் கடலிலே போய் விழுந்தன. இது யமக அணியாய்அமைந்தது.*
***(31)***

***5460. வண்டுஅலம்பு நல் ஆற்றின் மராமரம்,***
***வண்டல் அம்புனல் ஆற்றில் மடிந்தன;***
***விண்டு அலம்புகம் நீங்கிய வெண் புனல்,***
***விண்தலம் புகநீள் மரம், வீழ்ந்தவே.***

***வண்டு அலம்பு நல்ஆற்றின் மராமரம் -*** *வண்டுகள் ஒலிக்கும்படியான, அழகிய சாலையிலிருந்த ஆச்சா மரங்கள்;* ***வண்டல் அம்புனல் ஆற்றின் மடிந்தன -*** *வண்டலைக் கொண்ட அழகிய நீர் நிறைந்த ஆற்றில் போய் விழுந்து அழுந்தின;* ***விண் தலம் புக நீள் மரம் -*** *வான் அளவு உயர்ந்து வளர்ந்த வேறு சில மரங்கள்;* ***விண்டு அலம்பு கம் நீங்கிய***

***வெண்புனல் வீழ்ந்த -*** *திருமாலின் திருவடிகளைப் பிரம தேவன் கழுவியதனால் தோன்றி வானத்தினின்றும் பூமியை நோக்கி இறங்கி வந்த வெள்ளிய நீரை உடைய ஆகாச கங்கையாற்றிலே வீழ்ந்தன.*

*விண்டு - விஷ்ணு;(திருமால்) கம் - ஆகாயம்; இதுவும் யமக அணி. வெண் புனல் - கங்கை; அதனால், 'ஆறு' என்பது காவிரியைக் குறிக்கிறது என்பாரும் உளர். இதுமுதல் (5460 - 5463) முடிய முன் இரண்டடிகளின் முதல் இரு சீர்கள் ஒருவகையாகவும் பின் இரண்டடிகளின் முதல் இரு சீர்கள் வேறுவகையாகவும் மடக்கி வந்து, யமக அணி பொருந்தப் பெற்றிருப்பது காண்க.* ***(32)***

***5461. தாமரைத்தடம் பொய்கை, செஞ் சந்தனம்-***
***தாம் அரைத்தனஒத்த; துகைத்தலின்,***
***காமரம் களிவண்டொடும், கள்ளொடும்,***
***காமர் அக்கடல், பூக் கடல் கண்டவே.***

***உகைத்தலின் -*** *அனுமன்பலவகை மரங்களை வீசி எறிந்ததனால்;* ***தாமரை தடம் பொய்கை -*** *தாமரை மலர்கள் நிறைந்த பெரிய தடாகம்;* ***செம்சந்தனம் தாம் அரைத்தன ஒத்தது -*** *சிவந்த சந்தனக்கட்டையை அரைத்துக்கரைக்கப்பட்டன போல் தோன்றிற்று;* ***காமரம் -*** *(அன்றியும்) சோலையின்மரங்கள்;* ***காமர் அம் கடல் -*** *தாம் வீழப் பெற்ற அழகிய அந்த உவர்க்கடலை;* ***காமரம் களி வண்டொடும் கள்ளொடும் -*** *காமரம் என்னும் பண்பாடிக் களிக்கும் வண்டுகளோடும் தேனோடும் கூடி;* ***பூக் கடல் கண்ட -*** *மலர்களால் இயன்ற கடலாகச் செய்தன. அனுமன் வீசிஎறிந்த மரங்களால் தாமரைத்தடாகம் சந்தனக் குழம்பாயிற்று; உவர்க்கடல் மலர்க்கடலாயிற்று. கா - சோலை; காமரம் - ஒரு வகைப் பண்.* ***(33)***

***5462. சிந்துவாரம் திசைதொறும் சென்றன,***
***சிந்து வார் அம்புரை திரை சேர்ந்தன;***
***தந்து, ஆரம்,புதவொடு தாள் அற,***
***தம் துவாரம்துகள் பட, சாய்ந்தவே.***

***சிந்து வாரம்திசை தொறும் சென்றன -*** *(அனுமன் வீசிஎறிந்ததனால்) கரு நொச்சிமரங்கள் நான்கு திக்குகளிலும் சென்றனவாய்;* ***சிந்து வார்அம்புரை -*** *கடலின் நீண்ட அழகிய உயர்ந்த;* ***திரை சேர்ந்தன -*** *அலைகளில் சேர்ந்தன;* ***ஆரம் -*** *(அன்றியும்) சந்தன மரங்கள்;* ***தம் துவாரம் புதவொடு தாள் அற தந்து -*** *தமது வாயில்களின் கதவும் தாழ்ப்பாள்களும் முறிந்து போம்படி (மாளிகைகள் மேல்) வீசி எறியப்பட்டு;* ***துகள் படச் சாய்ந்தன -*** *(அவைகள்) தூளாகும்படிச் சாய்ந்து விழுந்தன.*

*சிந்து வாரம் -கரு நொச்சி; சிந்து - கடல்; ஆரம் - சந்தன மரம்; புதவு - கழிவு; தந்து - எறியப்பட்டு.* ***(34)***

***5463. நந்தவானத்து நாள் மலர் நாறின,***
***நந்த, வானத்துநாள் மலர் நாறின;***
***சிந்து அவ்வானம் திரிந்து உக, செம் மணி***
***சிந்த, வால்நந்து இரிந்த, திரைக் கடல்.***

***நந்த வானத்துநாறின நாள்மலர் -*** *அசோகவனம் என்னும் பூஞ்சோலையில் மணம் வீசிய அன்று அலர்ந்த மலர்கள்;* ***வானத்து நந்த மலர் நாள் நாறின -*** *ஆகாயத்தில் மிகுதியாக விளங்குகின்ற நட்சத்திரங்கள் போல விளங்கின;* ***சிந்து திரிந்து அவ் வானம் உக -*** *புளிய மரங்கள் (ஆகாயத்தில்) சுழன்று, (சகர புத்திரர்களால் தோண்டப்பட்ட) அந்தக் கடலிலே விழ;* ***வால் நந்து -*** *வெண்மையான சங்குப் பூச்சிகள்;* ***திரை கடல் -*** *அலைகளை உடைய கடலில்;* ***செம்மணி சிந்த இரிந்த -*** *(தமது கர்ப்பத்தில் உள்ள) அழகிய முத்துக்கள் சிந்தும் படி நிலை கெட்டு ஓடின.*

*நந்த வானம் எனஇடையில் எழுத்து நீண்டது. காண்டா வனம். ஆச்சிராமம் என்பன போல. நாறுதல் - மணத்தல் -(1) விளங்குதல் (2) சிந்து - புளியமரம்; வானம் - பறித்த குழி.* ***(35)***

## *5464. புல்லும் பொன் பணைப் பல் மணிப் பொன் மரம்,*
## *'கொல்லும் இப்பொழுதே' எனும் கொள்கையால்,*
## *எல்லில் இட்டுவிளக்கிய இந்திரன்*
## *வில்லும் ஒத்தன,விண் உற வீசின.*

***விண் உற வீசின-*** *(அனுமனால்) ஆகாயத்தில் சேருமாறு வீசி எறியப்பட்டனவும்;* ***பொன் பணை புல்லும் -*** *பொற் கிளைகள் பொருந்தப் பெற்றனவும்;* ***பல் மணி பொன் மரம் -*** *பல வகை இரத்தினங்களால் இயன்று அழகு பொருந்தியனவுமாகிய மரங்கள்;* ***இப்பொழுதே கொல்லும் எனும் கொள்கையால் -*** *இந்த அனுமன் இப்பொழுதே இலங்கையை அழித்து விடுவான் என்ற குறிப்பால்;* ***எல்லில் இட்டு விளக்கிய -*** *இரவு நேரத்தில் (உத்பாதமாக) உண்டாக்கி விளங்கச் செய்த;* ***இந்திரன் வில்லும் ஒத்தன -*** *வானவில்லைப் போன்றன ஆயின.*

*இரவில் வானவில்தோன்றுவது. அழிவின் அறிகுறி. அனுமன் வீசி எறிந்த மரங்கள் இந்திர வில் போன்று ஒளி விட்டு விளங்கின. எல் - இரவு. இந்திரவில் - வானவில்.* ***(36)***

## *5465. ஆனைத்தானமும், ஆடல் அரங்கமும்,*
## *பானத் தானமும்,பாய் பரிப் பந்தியும்,*
## *ஏனைத் தார் அணிதேரொடும் இற்றன-*
## *கானத்து ஆர் தருஅண்ணல் கடாவவே.*

***அண்ணல் -*** *பெரியோனான அனுமன்;* ***கானத்து ஆர் தரு கடாவ -*** *அசோகவனத்தில் நிறைந்துள்ள மரங்களை (வேரோடு பிடுங்கி) வீசி எறிய;* ***ஆனை தானமும் ஆடல் அரங்கமும் -*** *(அதனால்) யானைகளைக் கட்டியுள்ள இடங்களும் நடன சாலைகளும்;* ***பானத் தானமும் -*** *மதுபானம் செய்யும் இடங்களும்;* ***பாய் பரிப் பந்தியும் -*** *பாய்ந்து ஓடும் இயல்பினவான குதிரைகள் கட்டும் இடங்களும்;* ***ஏனை தார் அணி தேரொடும் இற்றன -*** *மற்றைய, சிறு மணிகள் கட்டப்பெற்ற தேரோடும் முறிந்து ஒழிந்தன. அரங்கம் -நடனசாலை.* ***(37)***

## *5466. மயக்கு இல்பொன் குல வல்லிகள், வாரி நேர்*
## *இயக்குறத்திசைதோறும் எறிந்தன,*

***வெயில்கதிர்க் கற்றை அற்று உற வீழ்ந்தன,***
***புயல் கடல்தலைபுக்கன போல்வன.***

***வாரி நேர்இயக்கு உற -*** *கடலுக்கு நேராகச்சென்று விழும்படி;* ***திசைதொறும் எறிந்தன -*** *எல்லாத்திக்குகளிலும் எறியப்பட்டனவாகிய;* ***மயக்கு இல்பொன் குல வல்லிகள் -*** *ஒளி மழுங்குதல் இல்லாத பொன் மயமானகூட்டமாக உள்ள கொடிகள்;* ***வெயில் கதிர்க் கற்றை அற்று உற வீழ்ந்தன -*** *சூரிய கிரணங்களின் தொகுதி அறுபட்டு (பூமியில்) பொருந்தி வீழ்ந்தனவாகி;* ***புயல் கடல் தலை பூக்கன போல்வன -*** *மேகங்கள் படிகின்ற கடலினிடத்துப்புகுந்தனவற்றை ஒப்பனவாயின.*

*அனுமன் வீசிஎறிந்ததால் கடலில் விழுந்த பொற்கொடிகளின் தொகுதி, அறுபட்டு, கடலில் புக்க சூரிய கிரணக் கற்றை போல விளங்கின. தன்மைத் தற்குறிப்பேற்ற அணி.* ***(38)***

***5467. பெரிய மாமரமும், பெருங் குன்றமும்,***
***விரிய வீசலின்,மின் நெடும் பொன் மதில்***
***நெரிய, மாடம்நெருப்பு எழ, நீறு எழ,***
***இரியல்போன,இலங்கையும் எங்கணும்.***

***பெரிய மா மரமும்-*** *மிகப்பெரிய மரங்களையும்;* ***பெரும் குன்றமும் -*** *பெரிய மலைகளையும்;* ***விரிய வீசலின் -*** *பிளவுபடும்படி (அனுமன்) வீசி எறிந்ததனால்;* ***மின் நெடும் பொன் மதில் நெரிய -*** *பேரொளி கொண்ட நீண்ட பொன் மதில்கள் நெரிந்து தூளாகவும்;* ***மாடம் நெருப்பு எழ நீறு எழ -*** *மாளிகைகள் நெருப்புத் தோன்றிச் சாம்பலாகப் போகவும்;* ***இலங்கையும் எங்கணும் இரியல் போன -*** *இலங்கை அரக்கர் கூட்டங்கள் நிலை கெட்டு எல்லா இடங்களிலும் ஓடின.*

*இலங்கைஆகுபெயரால் இலங்கையில் வாழ்ந்த அரக்கர் கூட்டங்களைக் குறித்தது.* ***(39)***

*சந்திரன் மறைதல்*

***அறுசீர்ஆசிரிய விருத்தம்***

***5468. ' "தொண்டை அம் கனி வாய்ச் சீதை துயக்கினால்***
***என்னைச் சுட்டாய்;***
***விண்ட வானவர்கண் முன்னே விரி பொழில்***
***இறுத்து வீசக்***
***கண்டனைநின்றாய்" என்று, காணுமேல், அரக்கன்***
***காய்தல்***
***உண்டு' எனவெருவினான்போல், ஒளித்தனன்,***
***உடுவின் கோமான்.***

***தொண்டை அம்கனி வாய்ச் சீதை துயக்கினால் -*** *கொவ்வைக் கனிபோன்ற அழகிய வாயையுடைய சீதையிடம் கொண்ட தொடர்பால் (நிமித்தமாக);* ***என்னைச் சுட்டாய் -*** *என்னை நெருப்பு போல் சுட்டு வருத்தினாய்;* ***விண்ட வானவர் கண் முன்னே -***

*என்னிடத்துப் பகைமை கொண்ட தேவர்களின் கண்ணுக்கு எதிரில்;* ***விரி பொழில் இறுத்து வீசக் கண்டனை நின்றாய் -*** *பரந்த சோலையை (ஒரு குரங்கு) முறித்து அழிக்கவும் வேடிக்கை பார்த்துக் கொண்டிருந்தாய்;* ***என்று -*** *என்று நினைத்து;* ***அரக்கன் காணு மேல் காய்தல் உண்டு என -*** *அரக்கனாகிய இராவணன் காண்பானேல் தன்னை வருத்துதல் செய்யக்கூடும் என்று கருதி;* ***வெரு வினான் போல் -*** *அஞ்சினவனைப் போல;* ***உடுவின் கோமான் ஒளித் தனன்-*** *நட்சத்திரங்களுக்குத் தலைவனான சந்திரன் மறைந்தான். சந்திரன்இராவணனுக்கு அஞ்சி மறைந்ததாகக் கூறியது ஏதுத் தற்குறிப்பேற்ற அணி. நட்சத்திரங்களுக்கு நாயகன் என்று திங்களைக் குறிப்பது புராணக் கற்பனை. காதல் வேதனையுறும்போது சந்திரன் சுடுவான் என்பது கவிமரபு. துயக்கு - தொடர்பு; (சம்பந்தம்) திருமகள் அம்சமான சீதைக்கும் சந்திரனுக்கும் அமுதத்துடன் தோன்றியதனால் உடன் பிறப்புச் சம்பந்தம்.* ***(40)***

*அனுமன் செயலால்உலகெங்கும் ஒளி வீசல்*

***5469. காசு அறுமணியும், பொன்னும், காந்தமும், கஞல்வது ஆய***
***மாசு அறு மரங்கள்ஆகக் குயிற்றிய மதனச் சோலை,***
***ஆசைகள்தோறும்,ஐயன் கைகளால் அள்ளி அள்ளி***
***வீசிய,விளக்கலாலே, விளங்கின உலகம் எல்லாம்.***

***காசு அறு மணியும்பொன்னும் -*** *குற்றம் இல்லாதஇரத்தினங்களும் தங்கமும்;* ***காந்தமும் கஞல்வது ஆய -*** *சூரிய காந்தம், சந்திர காந்தம் என்னும் கற்களும் (ஆகிய இவற்றால்)விளங்குவதான;* ***மாசுஅறு மரங்கள் ஆகக் -*** *குற்றமற்ற மரங்களாக;* ***குயிற்றிய -*** *இழைத்து அமைத்த;* ***மதனச் சோலை -*** *மன்மதனுக்கு இருப்பிடமான அசோகவனச் சோலை மரங்கள்;* ***ஆசைகள் தோறும் ஐயன் கைகளால் அள்ளி அள்ளி வீசிய விளக்கலாலே -*** *எல்லாத் திக்குகளிலும் அனுமன் தன் இருகைகளாலும் வாரி வாரி வீசப்பட்டன வாய் ஒரு பெரிய ஒளியைச் செய்தமையால்;* ***உலகம் எல்லாம் விளங்கின -*** *உலகம் முழுவதும் அந்த இருளில் நன்கு விளங்கின.*

*சந்திரன்மறைந்த பிறகு, ஏற்பட்ட இருள், வீசப்பட்ட மணி ஒளி மிக்க மரங்களின் ஒளியால் அகன்றது. உலகு ஒளியுடன் விளங்கியது. ஆசை - திசை; காம உணர்வு தோன்றுதற்கு ஏற்ப இராவணனால் அமைக்கப்பட்டது ஆதலின் மதனச் சோலையாயிற்று.* ***(41)***

*விலங்கு மற்றும்பறவைகளின் நிலை*

***5470. கதறினவெருவி, உள்ளம் கலங்கின, விலங்கு; கண்கள்***
***குதறின பறவை,வேலை குளித்தன; குளித்திலாத***
***பதறின; பதைத்த;வானில் பறந்தன; பறந்து பார் வீழ்ந்து***
***உதறின, சிறையை;மீள ஒடுக்கின உலந்து போன.***

**விலங்கு வெருவிக்கதறின -** அசோகவனத்திலிருந்த மிருக இனங்கள் அச்சத்தால் வீறிட்டுக் கத்தின; **உள்ளம் கலங்கின -** மனக்கலக்கம் அடைந்தன; **கண்கள் குதறின -** கண்கள் புண்ணாகிப் பொங்கின; **பறவை வேலை குளித்தன -** அங்கிருந்த பறவை இனங்கள் கடலில் வீழ்ந்து ஆழ்ந்தன; **குளித் திலாத பதறின -** அவ்வாறு வீழாத பறவைகள்; **பதைத்த வானில் பறந்தன -** மிகவும் துடித்து, பதறினவாய்; **பறந்து பார் வீழ்ந்து சிறையை உதறின -** சிறிது தூரம் பறந்து (மேலே பறக்கமுடியாமல்) பூமியில் விழுந்து சிறகுகளை உதறிக் கொண்டன; **நீள ஒடுக்கின உலந்து போன -** ஒடுக்கிக் கொண்டனவாய் அழிந்து போயின.

அனுமன்அசோகவனத்தை அழித்ததால் அங்கிருந்த மிருகங்களும் பறவைகளும் அச்சத்தால் அடைந்த செயல்கள் கூறப்பெற்றன. பறவைகள் சிறகுகளை உதறுவது இறக்குமுன் நிகழ்ந்த சாவுக்கு அறிகுறியாகும். இப்பாடற் செய்திகளை அனுமன் மயேந்திர மலையில்காலை ஊன்றிஎழுந்தபோது நிகழ்ந்த செய்திகளோடு (4758 - 4762; குறிப்பாக 4759) ஒப்பிடுக. **(42)**

*5471.* **தோட்டொடும் துதைந்த தெய்வ மரம்தொறும்**
**தொடுத்த புள் தம்**
**கூட்டொடும்துறக்கம் புக்க, குன்று எனக் குவவுத்**
**திண் தோள்**
**சேட்டு அகன்பரிதி மார்பன் சீறியும்**
**தீண்டல்தன்னால்;**
**மீட்டு, அவன்கருணைசெய்தால், பெறும் பதம்**
**விளம்பலாமோ ?**

**குன்று எனக்குவவுத் திண்தோள் -** மலை போன்று திரண்ட தோள்களை உடைய; **சேடு அகல் பிரிதி மார்பன் -** அழகினால் பரந்து சூரியன் போன்ற மார்பை உடைய அனுமன்; **சீறியும் தீண்டல் தன்னால் -** கோபித்த போதும் தன் கைகளால் தொட்ட சிறப்பினால்; **தெய்வ மரம் தொறும் -** அங்கிருந்த தெய்வத் தன்மை வாய்ந்த மரங்களில் எல்லாம்; **தோட்டொடும் துதைந்த தம் கூட்டொடும் -** இலைகளோடு நெருங்கியனவாய்த் தொகுத்து அமைக்கப் பெற்ற தமது கூடுகளுடன்; **புள் துறக்கம் புக்க -** பறவைகள் சுவர்க்கம் போய்ச் சேர்ந்தன; **மீட்டு அவன் கருணை செய்தால் -** இவ்வாறன்றி, அந்த அனுமன் அருள் புரிந்தால்; **பெறும் பதம் விளம்பல் ஆமோ ? -** அடையக் கூடிய நற்பதவியை நம்மால் சொல்ல முடியுமா ? (முடியாது) மிகப் பெரும் பதவி கிடைக்கும்.

அனுமன்சினத்தால் தீண்டியே, பறவைகளுக்கு சுவர்க்கம் கிடைத்தது. அருள் செய்தால் எவ்வளவு உயர்ந்த பதவி கிடைக்கும் ? என்பது கருத்து. சேடு - அழகு; இளமையும் ஆம். **(43)**

*சீதை தங்கி இருந்தமரம் மட்டும் அழியாது இருத்தல்*

*5472.* **பொய்ம் முறை அரக்கர் காக்கும் புள் உறை புது**
**மென் சோலை,**
**விம்முறும்உள்ளத்து அன்னம் இருக்கும் அவ்**

**விருக்கம்ஒன்றும்,**
**மும் முறை உலகம்எல்லாம் முற்றுற முடிவது ஆன**
**அம் முறை, ஐயன்வைகும் ஆல் என, நின்றது**
**அம்மா !**

**பொய்ம் முறைஅரக்கர் காக்கும் -** பொய்யையே தமக்குநெறியாகக் கொண்ட அரக்கர்கள் காத்து வரும்; **புள் உறை புது மென் சோலை -** பறவைகள் வசிக்கும் படியான புதிய கண்ணுக்கினிய அந்த அசோகவனச் சோலையில்; **விம்முறும் உள்ளத்து அன்னம் -** துக்கத்தால் மனம் விம்முறும் அன்னம் போன்ற பிராட்டி; **இருக்கும் அவ் விருக்கம் ஒன்றும் -** தங்கியிருந்த அந்த மரம் ஒன்று மட்டும்; **மும்முறை உலகம் எல்லாம் -** மூன்று வகைப்பட்ட உலகம் முழுவதும்; **முற்று உற முடிவதான அம்முறை -** அழியும் படி முடிவு பெறுகின்ற அந்த ஊழிக் காலத்தில்; **ஐயன் வைகும் ஆல் என நின்றது -** திருமால் தங்குகின்ற ஆலமரம் போல ஊறுபடாமல் நிற்பதாயிற்று.

மற்றை மரங்கள்எல்லாம் அழிய, பிராட்டி தங்கியிருந்த மரம் மாத்திரம் அழியாமலிருப்பதற்கு - எல்லாம் அழியும் பிரளய காலத்தில் திருமால் பள்ளி கொள்ளும் ஆலமரம் மாத்திரம் நிற்பது உவமை ஆயிற்று. ஊழிக் காலத்தில் எஞ்சியிருக்கும் ஓர் ஆலமரத்தின் ஓர் இலையில் குழந்தை வடிவில் திருமால் பள்ளிகொண்ட கோலத்தில் இருப்பான் என்பது புராணச் செய்தி. இச்செய்தி முன்னரும் (3683 வந்தது; பின்னும் (5884) வரும். பெருமாள் திருமொழியிலும் (8;7) காண்க. அன்றே: தேற்றப் பொருளுடையது (தெளிவுபடுத்துவது.) **(44)**

*சூரியன் தோற்றம்*

***5473.* உறு சுடர்ச்சூடைக் காசுக்கு அரசினை உயிர்**
**ஒப்பானுக்கு**
**அறிகுறியாகவிட்டாள்; ஆதலான், வறியள் அந்தோ !**
**செறி குழல்சீதைக்கு அன்று, ஓர் சிகாமணி**
**தெரிந்து வாங்கி,**
**எறி கடல் ஈவதுஎன்ன, எழுந்தனன், இரவி**
**என்பான்.**

**உறு சுடர்ச் சூடைகாசுக்கு அரசினை -** ஒளி பொருந்தியசூடாமணி என்னும் அரச இரத்தினத்தை; **உயிர் ஒப்பானுக்கு அறிகுறியாக விட்டாள் -** தன் உயிர் போன்ற நாயகனான இராமபிரானுக்கு, அடையாளப் பொருளாகக் கொடுத்தனுப்பி விட்டாள்; **ஆதலான் -** ஆகையினால்; **அந்தோ வறியள் -** ஐயோ, இப்போது ஒரு அணியும் இல்லாது வறியவளாக இருக்கின்றாள் (என்று); **அன்று -** அப்பொழுது; **செறி குழல் சீதைக்கு -** அடர்ந்தகூந்தலை உடைய சீதாதேவிக்கு; **ஓர் சிகாமணி தெரிந்து வாங்கி -** தலையில் அணிதற்கு உரிய மற்றொரு சூடாமணியை ஆராய்ந்து எடுத்து; **எறிகடல் ஈவது என்ன எழுந்தனன் இரவி என்பான் -** அலை எறியும் கடல் கொண்டு வந்து கொடுப்பது போல சூரியன் தோன்றினான்.

குடைக்காசுக்கரசு,சிகாமணி என்பன ஒரே பொருளன. இது தன்மைத் தற்குறிப்பேற்ற அணி. சூரிய குலத்து அரசன் ஒருவனுக்கு வருணனால் பரிசாகக்

*கொடுக்கப்பட்டது என்றும் அதனைத் தயரதன் மருமகள் சீதைக்கு வழங்கினான் என்றும் கூறுவர். மாமனார் அளித்த சிறப்புடையது ஆதலின், பிற அணிகளை எறிந்ததுபோல் இதனை எறியாமல் பாதுகாத்தாள்..* ***(45)***

*அசோகவனத்தைஅழித்து நின்ற அனுமன் நிலை*

***5474. தாழ் இரும்பொழில்கள் எல்லாம் துடைத்து, ஒரு தமியன் நின்றான்,***
***ஏழினொடு ஏழுநாடும் அளந்தவன் எனலும் ஆனான்;***
***ஆழியின் நடுவண்நின்ற அரு வரைக்கு அரசும் ஒத்தான்;***
***ஊழியின் இறுதிக்காலத்து உருத்திரமூர்த்தி ஒத்தான்.***

***தாழ் இரும்பொழில்கள் எல்லாம் துடைத்து** - தழைத்த பெரும் சோலை முழுவதையும் அழித்து; **ஒரு தமியன் நின்றான்** - தன்னந்தனியனாய் நின்ற அனுமன்; **எழினோடு ஏழு நாடும் அளந்தவன் எனலும் ஆனான்** - பதினான்கு உலகங்களையும் (தனது இரண்டு திருவடிகளாலும்) அளந்து கொண்ட திருவிக்கிரம மூர்த்தி என்று சொல்லத்தக்கவனாகவும் இருந்தான்; **ஆழியின் நடுவண் நின்ற அருவரைக்கு அரசும் ஒத்தான்** - (அதுவன்றிப்) பாற்கடலின் நடுவே (மத்தாக) நின்ற அரிய சிறந்த மலையாகிய மந்தர மலையைப் போலவும் இருந்தான்; (மேலும்); **ஊழியின் இறுதிக் காலத்து உருத்திர மூர்த்தி ஒத்தான்** - கற்பாந்த காலத்தில் உலகத்தை எல்லாம் அழித்திட்டு நிற்கும் உருத்திர மூர்த்தியைப் போலவும் இருந்தான்.*

*பெரிய வடிவாலும்அரக்கக் கடலைக் கடையவுள்ளமையாலும் முற்றும் அழித்தமையாலும் திருவிக்கிரமாவதாரம், மந்தரமலை, ஆகியவை உவமையாயின.* ***(46)***

*அரக்கியர்வினாவும் பிராட்டி விடையும்*

***5475. இன்னனநிகழும் வேலை, அரக்கியர் எழுந்து பொங்கி,***
***பொன்மலை என்னநின்ற புனிதனைப் புகன்று நோக்கி,***
***'அன்னை ! ஈது என்னை மேனி ? யார்கொல் ?' என்று, அச்சம் உற்றார்,***
***நன்னுதல்தன்னைநோக்கி, 'அறிதியோ நங்கை ?' என்றார்.***

***இன்னன நிகழும்வேலை** - இவ்வாறு அசோகவனம் அழிந்து கொண்டிருந்த போது; **அரக்கியர் எழுந்து பொங்கி** - (அங்கு உறங்கிக் கிடந்த) அரக்கிமார்கள் விழித்தெழுந்து மனம் கொதித்து; **பொன் மலை என்ன நின்ற புனிதனை புகன்று நோக்கி** - பொன்மயமான மேரு மலை போல் நின்ற தூயவனான அனுமனை விருப்பத்தோடு உற்றுப் பார்த்து; **அன்னை ஈது என்ன மேனி** - அம்மா ! இங்குத் தோன்றுவது என்ன*

*வடிவம் ? **யார் கொல் என்று அச்சம் உற்றார் -** இவர் யாரோ என்று பயம்கொண்டவராகி; **நன்னுதல் தன்னை நோக்கி -** அழகிய நெற்றியை உடையபிராட்டியைப் பார்த்து; **நங்கை அறிதியோ என்றார் -** 'பெண்ணே ! (இவனைஇன்னான் என்று) அறிவாயோ' என்று வினாவினார்கள். அனுமன் திருமேனிபொன் நிறமாதலாலும், மலை போன்ற பெருமை உடைமையாலும், மேருமலை உவமையாயிற்று. இதற்கு முன்பு கடுஞ்சொற்களையே கூறிய அரக்கியர், இப்போது 'அன்னை' என்று இன்சொல் இட்டு அழைத்தது அச்சத்தாலும், வியப்பாலும், உண்மை அறியும் நோக்கினாலும் ஆகும். அனுமன் தோற்றம் அச்சமும் வியப்பும் ஊட்டியது; எனினும் உண்மைநிலை அறியவேண்டுமே என்னும் அடிமனத் தூண்டலால் விரும்பி நோக்கினர். 'புகற்சி விருப்பாகும்' என்பது தொல்காப்பியம். **(47)***

***5476. 'தீயவர் தீய செய்தல் தீயவர் தெரியின் அல்லால்,***
***தூயவர் துணிதல்உண்டே, நும்முடைச் சூழல்***
***எல்லாம் ?***
***ஆய மான் எய்த,அம் மான், இளையவன், "அரக்கர்***
***செய்த***
***மாயம்" என்றுஉரைக்கவேயும், மெய்என மையல்***
***கொண்டேன்,'***

***தீயவர் தீயசெய்தல் -** கொடியோர் செய்யும் தீய செயல்களை; **தீயவர்தெரியின் அல்லால் -** அவர் போன்ற கொடியரே தெரிந்து கொள்வரே தவிர; **தூயவர் துணிதல் உண்டே -** (என்னைப் போன்ற) நல்லவர்கள் அறிவர்என்று நிச்சயிக்க முடியுமா ? (முடியாது); **எல்லாம் நும்முடைச் சூழல் -** இவை எல்லாம் அரக்கர்களாகிய உங்களுடைய சூழ்ச்சியாகும்; **ஆய மான்எய்த -** (ஏனென்றால்) முன்பு காட்டில் மான் உருவில் வந்த மாரீசன் என்பக்கத்தில் வர; **அம்மான் அரக்கர் செய்த மாயம் என்று இளையவன்உரைக்க வேயும் -** அந்த மான், அரக்கர் செய்த மாயச் செயலால் வந்ததுஎன்று இலக்குவன் எடுத்துச் சொல்லிய போதும்; **மெய் என மையல்கொண்டேன் -** (அதனை) மெய்யான மான் என்றே (அறிவு மயக்கத்தால்)எண்ணி, அதன்மீது விருப்பம் கொண்டேன். 'மையல்கொண்டேன்' - என்றது அதனால் யான் இங்கு வந்து இத்துயரடையக் காரணமாயிற்று என்பதைக் குறிப்பிட்டபடி பிராட்டி தான் அறியாதவளாகவே உரைக்கின்றாள். சூழல் - சூழ்ச்சி, 'தொன்மை மயக்கிய தோற்றிய சூழல்கள் சிந்தித்தே' (திருவாய் மொழி 7.5.4) என மயக்கத்தின் இயல்பை நம்மாழ்வார் விளக்கியது காண்க. **(48)***

*அனுமன் ஓமமண்டபத்தைச் சிதைத்தல்*

***5477. என்றனள்;அரக்கிமார்கள் வயிறு அலைத்து,***
***இரியல்போகி,***
***குன்றமும்,உலகும், வானும், கடல்களும், குலைய***
***ஓட,***
***நின்றது ஓர்சயித்தம் கண்டான்; 'நீக்குவல் இதனை'***

***என்னா,***
***தன் தடக் கைகள்நீட்டிப் பற்றினன், தாதை ஒப்பான்.***

***என்றனள் -*** *என்று,பிராட்டி அரக்கியர்களுக்கு மறுமொழி கூறினாள்;* ***அரக்கிமார்கள் வயிறு அலைத்து இரியல் போகி -*** *அக்காவல் அரக்கியர் வயிற்றில் அடித்துக் கொண்டு நிலை தடுமாறிச் சென்று;* ***குன்றமும், உலகும், வானும் கடல்களும் குலையஓட -*** *மலைகளும் இந்தப்பூவுலகும் வானமும் கடல்களும் தடுமாறும்படி ஓடியபோது;* ***தன் தாதை ஒப்பான் -*** *தன் தந்தையாகிய வாயு தேவனை ஒத்த வலிமையுடைய அனுமன்;* ***நின்றது ஓர் சயித்தம் கண்டான் -*** *அங்கு நிலை பெற்று விளங்கிய ஒரு ஓம மண்டபத்தைப் பார்த்து;* ***'இதனை நீக்குவல்' என்னா -*** *இதை இவ்விடத்தை விட்டுப் பெயர்த் தெறிவேன்' என்று;* ***தன் தட கைகள் -*** *தனது பெரிய கைகளை;* ***நீட்டி பற்றினன் -*** *நீட்டி அதனைப் பற்றிக் கொண்டான்.*

*சயித்தம் -சைத்தியம் என்னும் வடமொழியின் தமிழ்வடிவம் ஓமம் வேள்வி முதலியன புரியும் மண்டபம். 'வானோங்கு சிமயத்து வாலொளி சயித்தம்' (மணி மேகலை 28:131)* ***(49)***

*அந்த மண்டபத்தின்பெருமை*

***5478. கண் கொளஅரிது; மீது கார் கொள அரிது; திண்***
***கால்***
***எண் கொள அரிது; இராவும் இருள் கொள அரிது;***
***மாக***
***விண் கொளநிவந்த மேரு வெள்குற, வெதும்பி***
***உள்ளம்***
***புண்கொள, உயர்ந்தது; இப் பார் பொறை கொள***
***அரிது போலாம்.***

***கண் கொள அரிது-*** *(அச்சயித்தம்) எவரும் தம் கண் பார்வை கொண்டு அதன் முழு உருவத்தையும் காண இயலாதது;* ***கார் மீது கொள அரிது -*** *மேகங்களும் எட்டி, அதன் மேற்கொள்ள முடியாத அளவு உயரமானது;* ***திண்கால் எண் கொள அரிது -*** *வலிய காற்றும் பற்றுவதற்கு எண்ணவும் அரியது;* ***இராவும் இருள் கொள அரிது -*** *இராப் பொழுதும் இருளினால் கொள்ள முடியாது;* ***மாக விண்கொள நிவந்த மேரு -*** *பெரிய ஆகாயத்தைத் தனது இடமாகக் கொள்ளும்படி மேலோங்கி எழுந்த மேருமலை கூட;* ***வெதும்பி வெள்கு உற உள்ளம் புண் கொள உயர்ந்தது -*** *வெட்கி, மனம் நொந்து புண் அடையும் படி உயர்ந்து விளங்கியது;* ***இப் பார் பொறைகொள அரிது -*** *இந்தப் பூமியும் அதன் பெருஞ் சுமையைத் தாங்குவது என்பது முடியாத செயல். கார் கொள அரிது- மேக மண்டலத்துக்கும் மேலாக உள்ளது. கால் கொள அரிது - வாயு மண்டலத்துக்கும் மேலானது. இருளாலும் மறைக்க முடியாதது என்பதை இருள்கொள அரிது என்ற தொடர் விளக்கிற்று. போல், ஆம் - அசைகள்.* ***(50)***

***5479. பொங்கு ஒளி நெடு நாள் ஈட்டி, புதிய பால்***
***பொழிவது ஒக்கும்***
***திங்களைநக்குகின்ற இருள் எலாம் வாரித் தின்ன,***

*அம் கைபத்து-இரட்டியான்தன் ஆணையால்,*
*அழகு மாணப்*
*பங்கயத்துஒருவன்தானே, பசும் பொனால் படைத்தது*
*அம்மா !*

***நெடு நாள் -*** *பலநாட்கள் (பதினைந்து நாட்கள்);* ***பொங்கு ஒளி ஈட்டி-*** *மேன்மேலும் விஞ்சி வருகின்ற ஒளியை, சம்பாதித்து;* ***புதிய பால் பொழிவது ஒக்கும் திங்களை -*** *புதிய பாலைச் சொரிவது போன்ற (நிலாவை வீசுகின்ற) சந்திரனையும்;* ***நக்குகின்ற இருள் எலாம் வாரித்தின்ன -*** *தீண்டுவதான (களங்கம் எனப்படுகின்ற) இருட்டு முழுவதையும் அள்ளித்தின்னும் பொருட்டு (போக்கும்படி);* ***அம்கை பத்து இரட்டியான் தன் ஆணையால் -*** *அழகிய இருபது கைகளை உடைய இராவணனது கட்டளையினால்;* ***பங்கயத்து ஒருவன் தானே -*** *தாமரை மலர் மீது விளங்கு ம்பிரம்ம தேவனே;* ***அழகு மான -*** *அழகு பொருந்தும்படி;* ***பசும் பொனால்படைத்தது அம்மா ! -*** *இந்தச் சயித்தம் செய்தது போலும் !   திங்கள் பால்பொழிவது - சந்திரன் நிலா வீசுவது; பால் உவமை ஆகுபெயர். பொங்கு ஒளி நெடு நாள் ஈட்டிய திங்கள் - பூர்ண சந்திரன்; முழு நிலவின் களங்கமாகிய இருளைப் போக்குவது மண்டபத்தின் பேரொளி..* ***(51)***

***5480.*** ***தூண் எலாம்சுடரும் காசு; சுற்று எலாம் முத்தம்;***
**சொன்னம்**
**பேணல் ஆம்மணியின் பத்தி, பிடர் எல்லாம்;**
**ஒளிகள் விம்ம**
**சேண் எலாம்விரியும் கற்றைச் சேயொளிச்**
**செல்வற்கேயும்**
**பூணலாம்;எம்மனோரால் புகழலாம் பொதுமைத்து**
**அன்றே.**
*503*

***தூண் எலாம்சுடரும் காசு -*** *(அந்தச்சயித்தத்தில் உள்ள) தூண்கள் யாவும் ஒளி விடும் மணிகளால் ஆனவை;* ***சுற்று எலாம் முத்தம் சொன்னம் -*** *அதன் சுற்றுப்பக்கமெல்லாம் (பிரகாரம்) முத்துக்களாலும் பொன்னாலும் இயன்றவை;* ***பிடர் எலாம், பேணல் ஆம் மணியின் பத்தி -*** *அதன் பின் பக்கமெல்லாம் விரும்பத்தக்க இரத்தினங்களின் வரிசையால் இயன்றவை;* ***ஒளிகள் விம்ம -*** *ஒளிகள் மிகுதலால்;* ***சேண் எலாம் விரியும் கற்றை சேயொளிச் செல்வதற்கு ஏயும் -*** *ஆகாயம் முழுவதும் பரவுகின்ற தொகுதியான சிவந்த ஒளியையே செல்வமாகக் கொண்ட சூரியனுக்கும் கூட;* ***பூணல் ஆம் -*** *ஆபரணமாக அணிவதற்கு உரியதாம் (ஆதலின்);* ***எம் மனோரால் புகழல் ஆம் பொதுமைத்து அன்று -*** *எம்மைப் போன்றவர்களால், புகழ்ந்து சொல்வதற்குரிய பொதுவான காரியம் அன்று.*

*சொன்னம் -சொர்ணம்; தங்கம்.* ***(52)***

*அனுமன்சயித்தத்தைப் பெயர்த்து இலங்கைமேல் வீசுதல்*

***5481.*** **'வெள்ளியங்கிரியை, பண்டு, வெந் தொழில் அரக்கன்,**
**வேரோடு**

***அள்ளினன்'என்னக் கேட்டான்; அத் தொழிற்கு***
***இழிவு தோன்ற,***
***புள்ளி மா மேரு என்னும் பொன்மலை எடுப்பான்***
***போல,***
***வள் உகிர்த்தடக் கைதன்னால் மண்நின்றும்***
***வாங்கி, அண்ணல்,***

***அண்ணல்*** - *பெரியோனான அனுமன்;* ***வெம் தொழில் அரக்கன்*** - *கொடிய தொழிலை மேற் கொண்ட அரக்கனாகிய இராவணன்;* ***பண்டு, வெள்ளி அம் கிரியை வேரோடு அள்ளினன் என்ன கேட்டான்*** - *முற்காலத்தில், வெள்ளி மலையாகிய அழகிய கைலாசத்தை வேரோடு பறித் தெடுத்தான் என்று, (உலகோர் சொல்லக்) கேட்டவனாய்;* ***அத் தொழிற்கு இழிவு தோன்ற*** - *அந்தச் செயலுக்குக் குறைவு உண்டாகுமாறு;* ***புள்ளி மாமேரு என்னும் பொன் மலை எடுப்பான் போல*** - *பல நிறம் கொண்ட பெரிய மேரு எனப்படும் பொன் மலையை எடுப்பவன் போல;* ***வள் உகிர் தடக்கை தன்னால்*** - *கூர்மையான நகங்களை உடைய தனதுபெரிய கைகளால்;* ***மண் நின்றும் வாங்கி*** - *தரையிலிருந்தும் (அந்தச் சயித்தத்தை - மண்டபத்தை) எளிதாகப் பெயர்த்தெடுத்து,*

*இதுவும் அடுத்தகவியும் குளகமாகும்.* ***(53)***

***5482. விட்டனன்,இலங்கைதன்மேல்; விண் உற விரிந்த***
***மாடம்;***
***பட்டன, பொடிகள்ஆன; பகுத்தன பாங்கு நின்ற;***
***சுட்டன பொறிகள்வீழத் துளங்கினர், அரக்கர்தாமும்;***
***கெட்டனர்வீரர், அம்மா !-பிழைப்பரோ கேடு***
***சூழ்ந்தார் ?***

***இலங்கை தன்மேல் விட்டனன்*** - *பேர்த்தெடுத்த அம்மண்டபத்தை) இலங்கை நகர் மீது வீசி எறிந்தான்; (அதனால்)* ***விண் உற விரிந்த மாடம்*** - *வானத்தை அளாவும்படி பரவியிருந்த மாளிகைகள்;* ***பட்டன பொடிகள் ஆன*** - *மோதப் பட்டனவாய்ப் பொடிகளாக உதிர்ந்தன;* ***பாங்கு நின்ற பகுத்தன*** - *பக்கத்தில் நின்ற கட்டிடங்களும் பிளவுபட்டன;* ***பொறிகள் வீழச் சுட்டன*** - *நெருப்புப் பொறிகள் விழுவதனால், பொருள்களையெல்லாம் சுட்டெரித்தன;* ***வீரர் அரக்கர் தாமும் துளங்கினர் கெட்டனர்*** - *எதற்கும் கலங்காத அரக்கரில் உண்மையான வீரர்களும் அழிந்தொழிந்தார்கள்;* ***கேடு சூழ்ந்தார் பிழைப்பரோ ?*** - *பிறர்க்குக் கேடு செய்தவர்கள் அந்தத் தீவினைப் பயனை அனுபவியாது தப்புவார்களோ ? (தப்ப மாட்டார்கள்).*

*'கேடு சூழ்ந்தார்பிழைப்பரோ' என்ற பொதுப் பொருளைக் கொண்டு. 'அரக்கர் கெட்டனர்' என்ற சிறப்புப் பொருள் விளக்கப்பட்டது. வேற்றுப் பொருள் வைப்பணி. அம்மா என்ற இடைச்சொல் இரக்கத்தைச் சுட்டியது.* ***(54)***

*பருவத் தேவர்இராவணனிடம் சென்று கூறுதல்*

***5483. நீர் இடுதுகிலர்; அச்ச நெருப்பு இடு நெஞ்சர்;***
***நெக்குப்***

***பீரிடும் உருவர்;தெற்றிப் பிணங்கிடு தாளர்; பேழ்***
***வாய்,***
***ஊர் இடு பூசல் ஆரஉளைத்தனர்; ஓடி உற்றார்;-***
***பார் இடு பழுவச்சோலை பாரிக்கும் பருவத் தேவர்.***

**பார் இடுபழுவச் சோலை பாலிக்கும் பருவத் தேவர் -** பூமியின் ஒரு பகுதியாகிய இலங்கையில் அடர்த்தியாக வளர்ந்துள்ள பெருஞ்சோலையைப் பாதுகாக்குகின்ற ஆறு பருவங்கட்கும் உரிய தேவர்கள்; **அச்சம் நெருப்பு இடு நெஞ்சர் -** பயமாகிய நெருப்பு மூளப்பெற்ற மனமுடையவர்களாகவும்; **நீர் இடு துகிலர் -** (அதனால்) சிறுநீரைவிட்டுக் கொண்ட ஆடையை உடையவர்களாகவும்; **நெக்குப் பீர் இடும் உருவர் -** உடல் நெகிழ்ந்து இரத்தம் பெருக்கெடுத்து ஓடும் உருவம் உடையவர்களாகவும்; **தெற்றிப் பிணங்கிடுதாளர் -** நடக்க முடியாமல் ஒன்றோடு ஒன்று பின்னிக் கொண்ட கால்களை உடையவர்களாகவும்; **பேழ் வாய் ஊர் இடு பூசல் ஆர உளைத்தனர் -** தமது திறந்த வாய்களாகிய ஊரினர் செய்கின்ற ஆரவாரம் நிறையும்படி ஊளையிட்டவர்களுமாகி; **ஓடி உற்றார் -** ஓடி இராவணனிடம் போய்ச் சேர்ந்தனர்.

பருவத் தேவர்,துகிலர், நெஞ்சர், உருவர் தாளராய் ஓடியுற்றார். இது, இவர்கள் கொண்ட அச்சத்தையும் மெய்ப்பாடுகளையும் காட்டுகின்றது. இராவணது ஆணைக்கு அடங்கி, சோலையைக் காத்து வந்தனர் இவர்கள். இப்போது அனுமனது செயல்களைக் கண்டு அஞ்சி இராவணனிடம் ஓடுகின்றனர். பழுவம் - அடர்த்தி; பழுவச் சோலை - ஒருபொருட் பன்மொழி எனினும் அமையும்.
***(55)***

***5484.  அரி படுசீற்றத்தான்தன் அருகு சென்று, அடியின்***
***வீழ்ந்தார்;***
***'கரி படு திசையின் நீண்ட காவலாய் ! காவல்***
***ஆற்றோம் !***
***கிரி படு குவவுத் திண் தோள் குரங்கு இடை***
***கிழித்து வீச,***
***எரி படுதுகிலின், நொய்தின் இற்றது கடி கா'***
***என்றார்.***

**அரி படுசீற்றத்தான் தன் அருகு சென்று அடியில் வீழ்ந்தார் -** சிங்கத்தினிடம் உண்டாகும் கோபத்தை உடைய இராவணன் பக்கம் சென்று அவன் பாதங்களில் விழுந்த பருவத் தேவர், (அவனை நோக்கி); **கரிபடு திசையின் நீண்ட காவலாய் -** திக்கயங்கள் வாழ்கின்ற திக்குகளின் எல்லை வரையிலும் நீண்டு பரந்த ஆட்சியை உடையோய்!; **காவல் ஆற்றோம் -** (இப்போது) சோலையைப் பாதுகாக்கும் ஆற்றல் இழந்தோம்; **கிரிபடுகுவவுத்திண் தோள்குரங்கு -** மலைபடுத்துப் போகும்படியான திரண்ட வலிய தோள்களை உடைய ஒரு குரங்கு; **இடை கிழித்து வீச -** சோலையினிடையில் புகுந்து மரங்களை ஒடித்து வீசுதலினால்; **கடிகா எரிபடு துகிலின் நொய்தின் இற்றது -** காவல் மிக்க அச்சோலை நெருப்புப்பட்ட ஆடை போல, விரைவில் அழிந்தது; **என்றார் -** என்று கூறினர்.

'கிழித்து வீச'என்ற தொடர், மரங்களை ஒடித்தலும், மண்டபம் முதலிய கட்டிடங்களை இடித்தலும் அனுமனுக்கு எளிய செயல் என்பதைப் புலப்படுத்துகிறது.

*'நெருப்பில்பட்ட துகில்' - விரைவில் அழிவதற்கு உவமை. கடிகா - காவல் சோலை.*
***(56)***

***5485. 'சொல்லிடஎளியது அன்றால்; சோலையை, காலின், கையின்,***
***புல்லொடு துகளும்இன்றி, பொடிபட நூறி, பொன்னால்***
***வில் இடுவேரம்தன்னை வேரொடு வாங்கி வீச,***
***சில் இடம்ஒழிய, தெய்வ இலங்கையும் சிதைந்தது' என்றார்.***

***சொல்லிட எளியதுஅன்று -*** *(அப்பருவத் தேவர்கள் மீண்டும் இராவணனிடம் அந்தக் குரங்கு செய்த அழிவும் ஆற்றலும் எங்களால்) சொல்லுவதற்கு எளியன அல்ல;* ***சோலையை -*** *அந்த அசோகவனத்தை;* ***காலின் கையின் புல்லொடு துகளும் இன்றிப் பொடிபட நூறி -*** *தன் கால்களாலும் கைகளாலும் புற்களும் அவற்றில் ஒட்டிக் கொண்டிருக்கும் தூசியும் இல்லாதபடி பொடியாகும்படி அழித்து;* ***பொன்னால் வில்லிடு வேரந்தன்னை வேரொடும் வாங்கி வீச -*** *பொன்னால் ஒளி வீசும் (வேள்வி மண்டபமான) சயித்தத்தை அடியோடு எளிதில் பிடுங்கி வீசி எறிய;* ***சில் இடம் ஒழிய -*** *ஒரு சிறு இடமே நீங்கலாக;* ***தெய்வ இலங்கையும் சிதைந்தது என்றார் -*** *தெய்வத் தன்மையுடைய இலங்கை நகரமும் (பெரும் பாலும்) அழிந்துவிட்டது என்று கூறினர்.*

*சில் இடம்,பிராட்டி இருந்த சிறு இடத்தைக் குறித்தது. இலங்கை, தெய்வக் கம்மியனான விசுவ கன்மாவால் அமைக்கப்பட்டதாகலின் தெய்வ இலங்கை எனப் பட்டது. வேரம் - சயித்தம்* ***(57)*** *இராவணன் இகழ்தலும்காவலர் அனுமனைப் புகழ்தலும்*

***5486. 'ஆடகத் தருவின் சோலை பொடி படுத்து, அரக்கர் காக்கும்***
***தேட அரு வேரம்வாங்கி, இலங்கையும், சிதைத்தது அம்மா !***
***கோடரம் ஒன்றே! நன்று இது ! இராக்கதர் கொற்றம் ! சொற்றல்***
***மூடரும்மொழியார்' என்ன மன்னனும் முறுவல் செய்தான்.***

***கோடரம் ஒன்றே-*** *(இவ்வாறு சொல்லக் கேட்ட இராவணன்) குரங்கு ஒன்றே;* ***ஆடகத் தருவின் சோலை -*** *பொன்மயமான மரங்களை உடைய சோலையை;* ***பொடிபடுத்து -*** *தூளாகும் படி அழித்து;* ***அரக்கர் காக்கும் தேட அரும் வேரம் வாங்கி -*** *அரக்கர்கள் காவல் புரியும் எங்கும் தேடிக் காண்பதற்கு அரிய சயித்தத்தைப் பறித்து;* ***இலங்கையும் சிதைத்தது -*** *இலங்கையையும் அழித்து விட்டது;* ***இராக்கதர் கொற்றம் நன்று -*** *அரக்கர்களுடைய வீரம் நன்றாக இருக்கின்றது;* ***இது சொற்றல் மூடரும் மொழியார் என்ன -*** *இவ்வாறான பேச்சை அறிவீனரும் சொல்லமாட்டார்கள் என்று;*

***மன்னனும் முறுவல் செய்தான்*** - *அரக்கர்க்கு அரசனான இராவணனும் புன் சிரிப்புக் கொண்டான்.*

*மன்னன் முறுவல்செய்தது; எள்ளற் குறிப்பு. பருவத் தேவர்களின் பேச்சை நம்பவில்லை இராவணன் என்பதை அவன் முறுவல் காட்டுகின்றது. கோடரம் - குரங்கு.* ***(58)***

***5487. தேவர்கள்,பின்னும், 'மன்ன ! அதன் உருச் சுமக்கும் திண்மைப்***
***பூவலயத்தைஅன்றோ புகழ்வது ! புலவர் போற்றும்***
***மூவரின் ஒருவன்என்று புகல்கினும், முடிவு இலாத***
***ஏவம், அக்குரங்கை, ஐய ! காணுதி இன்னே'***
***என்றார்.***

***தேவர்கள்*** - *(இராவணன் இகழ்ந்ததைக் கண்ட) பருவத் தேவர்கள்;* ***பின்னும்*** - *மேலும், இராவணனை நோக்கி;* ***மன்ன !*** - *அரசனே!;* ***அதன் உருச் சுமக்கும்*** - *அந்தக் குரங்கின் உடலைத் தாங்கவல்ல;* ***திண்மை*** - *வலிமை உடைய;* ***பூவலயத்தை அன்றோபுகழ்வது*** - *பூமியை அல்லவாபுகழ வேண்டியது!;* ***அகுரங்கை*** - *அந்தக் குரங்கை;* ***புலவர் போற்றும்*** - *தேவர்கள் வாழ்த்துகின்ற;* ***மூவரின் ஒருவன்*** - *மும்மூர்த்திகளில் ஒருவனே;* ***என்று புகல்கினும்*** - *என்று சொல்வதும்;* ***முடிவுஇலாத ஏவம்*** - *முடிவிலாத குற்றமாகும்;* ***ஐய*** - *ஐயனே!;* ***இன்னே காணுதி*** - *இப்போதே காண்பாய்;* ***என்றார்*** - *என்று சொன்னார்கள். அக் குரங்கின்வடிவைச் சுமக்கும் திண்மை உடைய பூமி புகழ்வதற்குரியது. தேவர்கள் வாழ்த்தும் மும்மூர்த்திகளுள் ஒருவன் அனுமன் என்று கூறினும் குற்றம். புலவர் - தேவர் ஏவம் - குற்றம்.* ***(59)***

*அனுமன் ஆரவாரம்*

***5488. மண்தலம்கிழிந்த வாயில் மறி கடல் மோழை மண்ட,***
***எண் திசை சுமந்தமாவும், தேவரும் இரியல்போக,***
***தொண்டை வாய்அரக்கிமார்கள் சூல் வயிறு உடைந்து சோர,***
***'அண்டமும்பிளந்து விண்டது ஆம்'என, அனுமன் ஆர்த்தான்.***

***அனுமன்*** - *அசோகவனத்தில் நின்ற அனுமன்;* ***மண் தலம் கிழிந்த வாயில்*** - *பூமி பிளந்த வழியில்;* ***மறிகடல் மோழை*** - *அலைகள் மடங்கி வீசும் கடலின் நீர் கீழாறாகப் (பாய்ந்து);* ***மண்ட*** - *நெருங்கவும்;* ***எண் திசை சுமந்த மாவும்*** - *எட்டுத் திக்குகளிலும் நின்று பூமியைச் சுமக்கின்ற யானைகளும்;* ***தேவர்களும் இரியல் போக*** - *திக்குப் பாலகர்களும் அஞ்சி ஓடவும்;* ***தொண்டை வாய் அரக்கிமார்கள்*** - *கொவ்வைக் கனி போன்ற சிவந்த அதரங்களை உடைய அரக்கியர்கள்;* ***வயிறு சூல் உடைந்து சோர*** - *வயிற்றில் உள்ள கருச்சிதைந்து தளரவும்;* ***அண்டமும் பிளந்து விண்டது ஆம் என*** - *இந்த உலக உருண்டையே வெடித்து பிளவு பட்டது என்று கூறும்படியும்;* ***ஆர்த்தான்*** - *ஆரவாரம் செய்தான்.*

*அனுமன் இவ்வாறுஆர்ப்பாட்டம் செய்வதற்கு அரக்கர்களைப் போருக்கு இழுப்பதே நோக்கமாகும். படலத்தின் தொடக்கத்தில் இந்த நோக்கம் (5434) சுட்டப்பட்டுள்ளது. மோழை - கீழாறு; குமிழியும் ஆம். 'அண்டம் மோழை எழ' (திருவாய் 7-4-1) சூல் வயிறு - கருவுற்றவயிறு; பெருத்த வயிறும் ஆம்.*
***(60)***

## கிங்கரர்வதைப் படலம்

*அனுமன், கிங்கரர்என்னும் அரக்க வீரர்களைக் கொன்ற செய்தியைக் கூறுவது, இந்தப் பகுதி. கிங்கரர் - ஏவலாளர். இராவணனால் அனுமன் மேல் ஏவப்பட்டவர்.*

*அனுமன் பிடித்துவருமாறு கிங்கரரை இராவணன் ஏவுதல்*

***5489. அரு வரைமுழையில் முட்டும் அசனியின் இடிப்பும், ஆழி***
***வெருவரு முழக்கும்,ஈசன் வில் இறும் ஒலியும், என்ன,***
***குரு மணி மகுடகோடி முடித் தலை குலுங்கும் வண்ணம்,***
***இருபதுசெவியினூடும் நுழைந்தது, அவ் எழுந்த ஓசை.***

***அருவரை முழையின்முட்டும் அசனியின் இடிப்பும் -*** *பெரிய மலையின் குகையிலே போய்த் தாக்கும் இடியின் முழக்கமும்;* ***ஆழி வெருவரு முழக்கும் -*** *(பிரளயகாலத்தில்) அச்சம் உண்டாகுமாறு தோன்றுகின்ற கடலின் ஒலியும்;* ***ஈசன் வில் இறும் ஒலியும் என்ன -*** *சிவனது வில்லை (இராமபிரான்)ஒடித்த போது ஏற்பட்ட ஒலியும், என்று சொல்லும்படி;* ***குரு மணி மகுடகோடி முடித்தலை குலுங்கும் வண்ணம் -*** *ஒளி பொருந்திய இரத்தினங்கள்பதிக்கப்பெற்ற கிரீடங்களை வரிசையாக அணிந்த மயிர் முடியை உடையபத்துத் தலைகளும் அசையும்படி;* ***எழுந்த அவ் ஓசை -*** *எங்கும் பரந்தெழுந்த அந்தப் பேரோசை;* ***இருபது செவியினூடும் நுழைந்தது -*** *இராவணன் இருபது காதுகளின் வழியே உட் புகுந்து சென்றது.*

*அனுமன்ஆர்ப்பின் பெருமை இங்குக் கூறப் பெற்றது. அனுமனது பேரொலிக்கு, இடியின் முழக்கம், இராமபிரான் ஒடித்த சிவதனுசின் ஒலி, ஊழிக்காலத்துப் பொங்கும் கடலின் பேரொலி, உவமைகளாயின.* ***(1)***

***5490. புல்லிய முறுவல் தோன்ற, பொறாமையும் சிறிது பொங்க,***
***எல்லை இல்ஆற்றல் மாக்கள் எண் இறந்தாரை ஏவி,***
***'வல்லையின்அகலா வண்ணம், வானையும் வழியை மாற்றி,***
***கொல்லலிர்குரங்கை, நொய்தின் பற்றுதிர், கொணர்திர்' என்றான்.***

***புல்லிய முறுவர்தோன்ற பொறாமையும் சிறிது பொங்க -*** *(இராவணன்) அற்பமான சிறுநகை உண்டாகவும், பொறாமையும் சிறிது மேற் கிளம்பவும்;* ***எல்லை இல் ஆற்றல் மாக்கள் எண் இறந்தாரை ஏவி -*** *அளவற்ற வலிமை பெற்ற ஏவலர்கள் எண்ணிறந்தவர்களை ஏவி அனுப்பி;* ***வானையும் வழியை -*** *ஆகாய வழியையும்;* ***மாற்றி***

- *தடுத்து;* ***குரங்கை -*** *அந்தக் குரங்கை;* ***அகலா வண்ணம் வல்லையில் கொல்லலிர் நொய்தின் பற்றுதிர் கொணர்திர் -*** *தப்பி அப்புறம் செல்லாதபடி, கொல்லாமல் விரைவில்,எளிதாக, பிடித்துக் கொண்டு வாருங்கள்;* ***என்றான் -*** *என்று கூறினான்.*

*இராவணன்பொறாமைக்குக் காரணம், அவனது அந்தப்புரக் கடிகா குரங்கால் அழிக்கப்பட்டது , நொய்து - எளிது; மெதுவாக.* ***(2)***

*கிங்கரர் போருக்குவிரைதல்*

***5491. சூலம்,வாள், முசலம், கூர் வேல், தோமரம், தண்டு, பிண்டி-***
***பாலமே முதலாஉள்ள படைக்கலம் பரித்த கையர்;***
***ஆலமே அனையமெய்யர்; அகலிடம் அழிவு செய்யும்***
***காலம்மேல்எழுந்த மூரிக் கடல் என, கடிது செல்வார்.***

***சூலம்....படைக்கலம் பரித்தகையர் -*** *சூலாயுதம், முதலிய பலவகையான போர்க் கருவிகளைத் தாங்கிய கையர்களாகவும்;* ***ஆலமே அனைய மெய்யர் -*** *விஷத்தை ஒத்த கறுத்த உடலை உடையவராகவும் உள்ள அரக்கர்கள்;* ***அகலிடம் அழிவு செய்யும் காலம் -*** *பூமிப்பரப்பு முழுவதையும் அழித்து விடுதலை உடைய பிரளய காலத்தில்;* ***மேல் எழுந்த மூரிக் கடல் என -*** *பொங்கிக் கிளம்பிய வலிய கடல் போல;* ***கடிது செல்வார் -*** *விரைந்து போவாராயினர். அரக்கவீரர்கள், கையில் ஏந்திய ஆயுதங்களின் பெயர்கள் வரிசைப் படுத்தப்பட்டுள்ளன. பரித்தல் - தாங்குதல்; 'பரித்த காவினர்' (கம்ப. 768)* ***(3)***

***5492. 'நானிலம்அதனில் உண்டு போர்' என நவிலின், அச் சொல்,***
***தேனினும்களிப்புச் செய்யும் சிந்தையர், தெரித்தும் என்னின்,***
***கானினும்பெரியர்; ஓசை கடலினும் பெரியர்; கீர்த்தி***
***வானினும்பெரியர்; மேனி மலையினும் பெரியர் மாதோ !***

***நானிலம் அதனில்போர் உண்டு என நவிலின் -*** *இந்நிலவுகில் போர்நிகழும் என்று சொன்ன அளவில்;* ***அச்சொல், தேனினும் களிப்பு செய்யும்சிந்தையர் -*** *அந்த வார்த்தை, தேனைவிட மிக்க சுவையை உண்டாக்கும்மனத்தினர்;* ***தெரித்தும் என்னின் -*** *(அன்னவர் தன்மையை) அறிவிப்போம்என்றால்;* ***கானினும் பெரியர் -*** *(நெருக்கம் பரப்பு முதலியவற்றால்) காட்டைவிடப் பெரியவர்;* ***மேனி மலையினும் பெரியர் -*** *உடல் தோற்றத்தில்மலையை விடப் பெரியவர்கள்.*

*அவ்வரக்கரின்பரப்பு முதலியவற்றிற்கு காடு முதலிய உலகப் பெரும் பொருளே உவமையாகா என்றால், வேறு உவமைப் பொருள்களை எங்கே தேடுவது என்க. பெரியர் என்ற சொல் பல முறை வந்தது சொற்பொருட் பின்வருநிலையணி. மாது - ஓ - அசைநிலைகள்* ***(4)***

*5493.* ***திருகுறும்சினத்து, தேவர், தானவர், என்னும்***
***தெவ்வர்***
***இரு குறும்புஎறிந்து நின்ற இசையினார் வசை***
***என்று எண்ணி,***
***'பொரு குறும்புஏன்று, வென்று புணர்வது, பூ உண்***
***வாழ்க்கை***
***ஒரு குறுங் குரங்கு!' என்று எண்ணி, நெடிது நாண்***
***உழக்கும் நெஞ்சர்;***

**திரு குறும்சினத்து** - *முரண் கொண்டகோபத்தை உடைய;* **தேவர், தானவர் என்னும் தெவ்வர்** - *தேவர்கள் அசுரர்கள் என்றுசொல்லப்படுகின்றபகைவர்களுடைய;* **இரு குறும்பு எறிந்து நின்ற இசையினார்** - *பெரிய அரண்களை அழித்து, விளங்கும் நிலை பெற்ற புகழையுடையவர்களுக்கு;* **பொரு குறும்பு ஏன்று** - *பொருகின்ற போரினை மேற்கொண்டு;* **பூஉண் வாழ்க்கை ஒரு குறுங் குரங்கு** - *மலர் (காய்கனி கிழங்கு) முதலியவற்றை உண்டு வாழ்கின்ற ஒரு சின்னக் குரங்கு;* **வென்றி புணர்வது வசை என்று எண்ணி** - *வெற்றி அடைவது இது ஒரு பெரும் பழிப்பு ஆகும் என்று நினைத்து;* **நெடிது நாண் உழக்கும் நெஞ்சர்** - *பெரிதும் வெட்கத்தால் வருந்தும் மனத்தினராயினர்.*

*நாண் உழக்கும்நெஞ்சர்; தேவர் தானவர்களை வென்ற தாம், பூவை உண்ணும் ஒரு குரங்கோடு போர் செய்ய நிகழ்ந்ததை நினைத்து வருந்தும் மனத்தினர்.*
***(5)***

*5494.* ***கட்டியவாளர்; இட்ட கவசத்தர்; கழலர்; திக்கைத்***
***தட்டிய தோளர்;மேகம் தடவிய கையர்; வானை***
***எட்டிய முடியர்;தாளால் இடறிய பொருப்பர்; ஈட்டிக்***
***கொட்டிய பேரிஎன்ன, மழை என, குமுறும்***
***சொல்லார்;***

**கட்டிய வாளர்** - *இடையில்கட்டிய வாளாயுதத்தை உடையவர்கள்;* **இட்ட கவசத்தர் கழலர்** - *பூண்ட கவசத்தையும் வீரக் கழல்களையும் உடையவர்கள்;* **திக்கைத் தட்டிய தோளர்** - *திக்குகளின் எல்லையை முட்டிய தோள்களை உடையவர்கள்;* **மேகம் தடவிய கையர்** - *மேகங்களைத் தடவும்படி நீண்ட கைகளை உடையவர்கள்;* **வானை எட்டிய முடியர்** - *வான மண்டலத்தை எட்டித் தொட்ட தலையை உடையவர்கள்;* **தாளால் இடறிய பொருப்பர்** - *தம் கால்களால் இடறியெறியும் மலைகளை உடையவர்கள். (மலைகளைக் காலால் இடறித் தள்ளுபவர்);* **ஈட்டி கொட்டிய பேரி என்ன மழை என குமுறும் சொல்லார்** - *ஒருங்கே சேர்த்து முழக்கப்பட்ட பேரிகை போலவும், மேகத்தின் இடி போலவும் முழங்குகின்ற சொற்களை உடையவர்கள்.* ***(6)***

*5495.* ***வானவர்எறிந்த தெய்வ அடு படை வடுக்கள்,***
***மற்றைத்***
***தானவர் துரந்தஏதித் தழும்பொடு தயங்கும் தோளர்;***
***யானையும்பிடியும் வாரி இடும் பில வாயர்; ஈன்ற***

***கூனல் வெண்பிறையின் தோன்றும் எயிற்றினர்;***
***கொதிக்கும் கண்ணர்;***

***வானவர் எறிந்ததெய்வ அடுபடை வடுக்கள் -*** *தேவர்கள் தம் மீது வீசி எறிந்த தெய்வத்தன்மை உள்ள, கொல்ல வல்ல ஆயுதங்களால் உண்டான தழும்புகள்;* ***மற்றை தானவர் துரந்த ஏதி தழும் பொடு தயங்கு ம்தோளர் -*** *தேவரின் வேறான அசுரர்கள் போரில் தூண்டிய ஆயுதங்களால்உண்டான தழும்புகளோடு விளங்குகின்ற தோள்களை உடையவர்கள்;* ***யானையும் பிடியும் வாரி இடும் பில வாயர் -*** *ஆண் யானையையும்பெண்யானையையும் வாரி உண்ணுகின்ற குகை போன்ற வாயினைஉடையவர்கள்;* ***ஈன்ற கூனல் வெண் பிறையின் தோன்றும் எயிற்றினர் -*** *புதிதாகத் தோன்றிய வளைந்த வெண்மையான பிறைச் சந்திரன் போன்றுகாணப்படுகின்ற பற்களை உடையவர்கள்;* ***கொதிக்கும் கண்ணர் -*** *கோபத்தால் பொங்கும் கண்களை உடையவர்கள்.*

*ஏதி - ஆயுதம்;எயிறு - பல்.* ***(7)***

***5496. சக்கரம்,உலக்கை, தண்டு, தாரை, வாள், பரிகம், சங்கு,***
***முற்கரம் முசுண்டி,பிண்டிபாலம், வேல், சூலம், முட்கோல்,***
***பொன் கரக்குலிசம், பாசம், புகர் மழு, எழு பொன் குந்தம்,***
***வில், கருங் கணை, விட்டேறு, கழுக்கடை, எழுக்கள் மின்ன;***

***சக்கரம் உலக்கை -*** *சக்கராயுதங்களும்உலக்கைகளும்;* ***தாரை வாள் -*** *கூர் நுனியை உடையவாளாயுதங்களும்;* ***பரிகம், சங்கு -*** *இருப்பு வளைதடிகளும் சங்கங்களும்;* ***முற்கரம், முசுண்டி -*** *சம்மட்டிகளும் முசுண்டி என்னும் ஆயுதங்களும்;* ***பிண்டி பாலம் -*** *எறியீட்டிகளும்;* ***வேல், சூலம், முள்கோல் -*** *வேல்களும், சூலங்களும் முட்கோல்களும்;* ***பொன் கரம் குலிசம் -*** *அழகிய ஒளி வீசுகின்ற வச்சிராயுதங்களும்;* ***பாசம், புகர்மழு -*** *கயிற்றின் வடிவான ஆயுதங்களும், ஒளியுள்ள மழுக்களும்;* ***எழு பொன் குந்தம் -*** *மேலெழுந்து தோன்றுகின்ற அழகிய ஈட்டிகளும்;* ***வில், கருங்கணை -*** *வில்லும் பெரிய அம்புகளும்;* ***விட்டேறு -*** *வீசிஎறிதற்குரிய விட்டேறுஎன்னும் ஆயுதங்களும்;* ***கழுக் கடை எழுக்கள் -*** *கூர் நுனியை உடைய இரும்புத் தடிகளும்;* ***மின்ன -*** *ஒளிவிட.*

*முடுகுகின்றார்என்று அடுத்த கவியோடு தொடரும்,* ***(8)***

***5497. பொன் நின்று கனுலும் தெய்வப் பூணினர்; பொருப்புத் தோளர்;***
***மின் நின்றபடையும், கண்ணும், வெயில் விரிக்கின்ற மெய்யர்;***
***'என் ?' என்றார்க்கு, 'என் ? என் ?' என்றார் எய்தியது அறிந்திலாதார்;***

***முன் நின்றார்முதுகு தீய, பின் நின்றார்***
***முடுகுகின்றார்.***

***பொன்நின்றுகளுலும்*** - *அழகு நிலை பெற்று விளங்கும்;* ***தெய்வப் பூணினர்*** - *தெய்வத்தன்மையுள்ள அணிகளை உடையவர்;* ***பொருப்புத் தோளர்*** - *மலை போன்ற தோள்களை உடையவர்;* ***மின் நின்ற படையும் கண்ணும், வெயில் விரிக்கின்ற மெய்யர்*** - *ஒளி பொருந்திய ஆயுதங்களையும் கண்களையும் வெயில் போல ஒளி பரப்பப் பெற்ற உடல்களையும் உடையவர்;* ***என் என்றார்க்கு*** - *(அவர்கள்) ஏன் போவது தடைப்படுகின்றது என்று தம் முன் நின்றவர்களைக் கேட்டவர்க்கு;* ***எய்தியது அறிந்திலாதார்*** - *அவர்கள் போகமுடியாமல் நெருக்கத்தால் தடையுற்றதை அறியாதவர்களாகி;* ***முன் நின்றார் முதுகு தீய*** - *தம் முன்னே நின்றவர்களுடைய முதுகுகள், அவர்களது மூச்சுக் காற்றால் தீப்பட்டன போல சூடுகொள்ள;* ***என் என் என்றார் முடுகின்றார்*** - *என்ன என்ன என்று விரைந்து வினவுபவராய் விரைபவரானார்கள்.*

*என் என்என்றார்; அடுக்கு விரைவுப் பொருளது.* ***(9)***

***5498. வெய்துறுபடையின் மின்னர்; வில்லினர்; வீசு காலர்;***
***மையுறு விசும்பின்தோன்றும் மேனியர்; மடிக்கும்***
***வாயர்;***
***கை பரந்து உலகுபொங்கிக் கடையுகம்***
***முடியும்காலை,***
***பெய்ய என்றுஎழுந்த மாரிக்கு உவமை சால்***
***பெருமை பெற்றார்.***

***மடிக்கும் வாயர்*** - *(கோபத்தால்) மடிக்கின்ற உதட்டை உடையவர்களாகிய அந்த அரக்கர்கள்;* ***வெய்து உறு படையின் மின்னர்*** - *கொடுமை மிகுந்த ஆயுதங்களான மின்னலை உடையவர்களாய்;* ***வில்லினர், வீசு காலர்*** - *விற்களை உடையவர்களாய், வீசுகின்ற மூச்சுக் காற்றை உடையவர்களாய்;* ***மை உறு விசும்பின் தோன்றும் மேனியர்*** - *மேகம் பொருந்திய வானம் போன்ற கரிய உடம்பை உடையவர்களாய்;* ***கைபரந்து, உலகு பொங்கி கடையுகம் முடியும் காலை*** - *பக்கங்களில் பரவி, உலகின் மீது (கடல்கள்) பெருக்கெடுத்து யுகங்கள் முடியும் காலத்தில்;* ***பெய்ய என்று எழுந்த மாரிக்கு*** - *பெரு மழைபெய்வதற்கு மேற்கிளம்பிய மேகத்துக்கு;* ***உவமை சால் பெருமை பெற்றார்*** - *உவமையாதற்கு ஏற்ற பெருமையைப் பெற்றவர்களாய் விளங்கினர்.*

*அந்த அரக்கவீரர் பிரளய காலத்தில் வானத்துத் தோன்றும் மேகக் கூட்டத்தை ஒத்தனர் என்பதாம்.* ***(10)***

***5499. 'பனி உறுசெயலை சிந்தி, வேரமும் பறித்தது,***
***அம்மா !***
***தனி ஒரு குரங்குபோலாம் ! நன்று நம் தருக்கு !'***
***என்கின்றார் !***
***'இனி ஒரு பழிமற்று உண்டோ இதனின் ?' என்று***

***இரைத்துப் பொங்கி,***
***முனிவுறு மனத்தின்தாவி, முந்துற முடுகுகின்றார்.***

***பனிஉறு செயலைசிந்தி*** *- குளிர்ச்சி பொருந்தியஅசோகவனச் சோலையை அழித்து;* ***வேரமும் பறித்தது*** *- அங்கிருந்த சயித்த மண்டபத்தையும் அடியோடு பெயர்த்து அழித்தது;* ***தனி ஒரு குரங்கு போலாம்*** *- தனியாய் வந்த ஒரு குரங்கு என்றால்;* ***நன்று நம்தருக்கு என்கின்றார்*** *- நம் வலிமை நன்றாயிருந்தது என்று சொல்கின்றவர்களாய்;* ***இதனின் மற்று ஒரு பழி இனி உண்டோ*** *- இதைவிட வேறொரு அவமானம்அரக்கர் குலத்துக்கு இன்னும் உள்ளதோ?;* ***என்று இரைத்து*** *- என்றுஆரவாரம் செய்து;* ***பொங்கி*** *- கொதித்து;* ***முனிவுறு மனத்தின் தாவி முந்துறமுடுகு கின்றார்*** *- கோபம் கொண்ட மனத்தோடு முற்பட விரைந்து செல்பவரானார்கள்.*

*வேரமும்; உம்மை,உயர்வு சிறப்பு. குரங்கு போலாம் என்பது இழிவுப் பொருளில் ஒப்பில் போலியாக வந்தது.* ***(11)***

***5500. எற்றுறு முரசும், வில், நாண் ஏறவிட்டு எடுத்த***
***ஆர்ப்பும்,***
***சுற்றுறு கழலும்,சங்கும், தெழி தெழித்து உரப்பும்***
***சொல்லும்,***
***உற்று உடன்றுஒன்றாய், ஓங்கி ஒலித்து எழுந்து,***
***ஊழிப் பேர்வில்***
***நல் திரைக்கடல்களோடு மழைகளை, நா அடக்க.***

***எற்று உறு முரசும்*** *- தாக்கிஅடிக்கப்படுகின்ற முரசத்தின் ஓசையும்;* ***வில் நாண் ஏறவிட்டு எடுத்த ஆர்ப்பும்*** *- வில்லிலே நாணை ஏற்றிப் பூட்டி (அதனைத் தட்டி) எழுப்பிய ஒலியும்;* ***சுற்றுறு கழலும்*** *- காலில் சுற்றிக் கட்டிய வீரக்கழல்களின் ஒலியும்;* ***சங்கும்*** *- சங்குகளை முழக்கும் ஒலியும்;* ***தெழி தெழித்து உரப்பும் சொல்லும்*** *- இரைச்சலிட்டு அதட்டுகின்ற சொல் முழக்கமும்;* ***உடன்று ஒன்றாய் உற்று ஓங்கி எழுந்து*** *- (ஆகிய ஒலிகளெல்லாம்) மாறுபட்டு பின்பு ஒன்றாகச் சேர்ந்து மிகப் பேரொலியாகக் கிளம்பி;* ***ஊழிப் பேர்வில்*** *- யுகங்கள் முடிந்து மாறுங்காலத்தில்;* ***நல்திரை கடல்களோடு மழைகளை நா அடக்க*** *- பெரிய அலைகளோடு எழும் கடல்களின் கொந்தளிப்போடு, அப்போது உண்டாகும் மழைகளின் ஒலியையும் அடக்கும்படி (மிகுந்து விளங்க).*

*முரசு, கழல்,சங்கு, நாண் என்பவை. தானி ஆகு பெயராய் நின்று, அவற்றினின்று எழுந்த ஒலிகளைக் குறிப்பன.* ***(12)***

***5501. 'தெரு இடம்இல்' என்று எண்ணி, வானிடைச்***
***செல்கின்றாரும்,***
***புருவமும் சிலையும்கோட்டி, புகை உயிர்த்து***
***உயிர்க்கின்றாரும்,***
***ஒருவரின் ஒருவர்முந்தி, முறை மறுத்து***
***உருக்கின்றாரும்,***

***‘விரிவு இலதுஇலங்கை’ என்று, வழி பெறார்***
***விளிக்கின்றாரும்.***

***தெரு இடம் இல்என்று எண்ணி*** - *தெருவில் நடப்பதற்குப் போதுமான இடம் இல்லை என்று கருதி;* ***வானிடைச் செல்கின்றாரும்*** - *ஆகாய வழியாகச் செல்கின்றவர்களும்;* ***புருவமும்சிலையும் கோட்டி*** - *தம்புருவங்களையும் விற்களையும் வளைத்து;* ***புகை உயிர்த்து உயிர்க்கின்றாரும்*** - *(கோபத்தீயால்) புகையை வெளிப்படுத்தி பெருமூச்சு விடுகின்றவர்களும்;* ***ஒருவரின் ஒருவர் முந்தி முறை மறுத்து உருக்கின்றாரும்*** - *ஒருவரை ஒருவர் முன்னிட்டு, முறை தவறியதனால் (தவறியவர் மீது) கோபம் கொள்கின்றவர்களும்;* ***இலங்கை விரிவு இலது என்று*** - *இலங்கைநகர், வீரர்கள் செல்வதற்கு ஏற்ற பரப்பு உடையதன்று என்ற காரணத்தால்;* ***வழிபெறார் விழிக்கின்றாரும்*** - *தாம் செல்லும் வழியைப் பெறாதவர்களாய், இன்னது செய்வது என்று அறியாமல் மருண்டு விழித்துக் கொண்டிருக்கின்றவர்களும்.*

*புருவம்கோட்டுதல், சினத்தில் தோன்றும் மெய்ப்பாடு. சிலம் - அரங்கேற்று காதை. வெகுண்டோன் அவிநயம்.* ***(13)***

***5502. வாள் உறைவிதிர்க்கின்றாரும், வாயினை***
***மடிக்கின்றாரும்,***
***தோள் உறத்தட்டிக் கல்லைத் துகள்படத்***
***துகைக்கின்றாரும்,***
***தாள் பெயர்த்துஇடம் பெறாது தருக்கினர்***
***நெருக்குவாரும்,***
***கோள் வளை எயிறுதின்று தீ எனக்***
***கொதிக்கின்றாரும்,***

***வாள் உறைவிதிர்க் கின்றாரும்*** - *வாளை உறையினின்றும்எடுத்து அசைக்கின்றவர்களும்;* ***வாயினை மடிக்கின்றாரும்*** - *(கோபத்தால்) தம் வாயிதழ்களை மடிக்கின்றவர்களும்;* ***தோள் உற தட்டி*** - *(தம் வீரத்தைக்காட்ட, கைகளால்) தோள்களை நன்றாகத் தட்டிக் கொண்டு;* ***கல்லை துகள் படத் துகைக்கின்றாரும்*** - *(வழியிற் பட்ட) பெருங்கற்களையும் தூளாகப் போகும்படி நொறுக்குகின்றவர்களும்;* ***தாள் பெயர்த்து இடம் பெறாது தருக்கினர் நெருக்குவாரும்*** - *தம் கால்களை (நடக்க) பெயர்த்து மேலே அடி வைப்பதற்கு இடம் கிடைக்காமல் செருக்குகின்றவர்களும்;* ***கோள் வளை எயிறு*** - *வலிய வளைவான தம் பற்களைக்;* ***தின்று தீ எனக்*** - *கடித்து நெருப்பை போலக்;* ***கொதிக்கின் றாரும்***- *கொதித்து எழுகின்றவர்களும் (ஆயினர்).* ***(14)***
***அறுசீர்ஆசிரிய விருத்தம்***
***(வேறுவகை)***

***5503. அனைவரும், மலை என நின்றார்; அளவு அறு***
***படைகள் பயின்றார்;***
***அனைவரும், அமரின் உயர்ந்தார்; அகலிடம் நெளிய***
***நடந்தார்;***
***அனைவரும், வரனின் அமைந்தார்; அசனியின்***

***அணிகள் அணிந்தார்;***
***அனைவரும், அமரரைவென்றார்; அசுரரை உயிரை***
***அயின்றார்***

***அனைவரும் மலைஎனநின்றார் -*** *கிங்கர வீரர்யாவரும், மலையைப் போல சலியாது நிற்பவர்கள்;* ***அளவு அறுபடைகள் பயின்றார் -*** *மிகப் பல படைக்கலப் பயிற்சி பெற்றவர்கள்;* ***அனைவரும் அமரின் உயர்ந்தார் -*** *யாவரும் போர் செய்வதில் சிறந்தவர்கள்;* ***அனைவரும் வரனின் அமைந்தார் -*** *யாவரும் வர பலம் பொருந்தப் பெற்றவர்கள்;* ***அசனியின் அணிகள் அணிந்தார் -*** *வச்சிராயுதம் போல் ஒளி வீசும் ஆபரணங்களை அணிந்தவர்கள்;* ***அனைவரும் அமரரை வென்றார் -*** *யாவரும் தேவர்களைப் போரில் வென்றவர்கள்;* ***அசுரரை உயிரை அயின்றார் -*** *அசுரர்களது உயிரைக் கொன்று தின்றவர்கள் (இத்தகையவர்கள்);* ***அகலிடம் நெளிய நடந்தார் -*** *(பாரமிகுதியால்) பூமி நெளியும்படி, (அனுமான் உள்ள இடம் நோக்கி) நடந்தார்கள்.*

*அரக்க வீரர்ஒவ்வொருவரும், மலை என நிற்றல் முதலியன பெற்றவராகையால், அனைவரும் என்பது பன்முறை கூறப்பட்டது. இந்தக் கிங்கர வீரர் தேவர்களையும் மற்ற அசுரர்களையும் வென்ற செய்தி 5493, 5495 ஆம் பாடல்களில் குறிக்கப்பட்டது. அசனி - வச்சிராயுதம். 'அசனி வச்சிரப்படையாகும் மே' - பிங்கலந்தை.* ***(15)***

***5504. குறுகினகவசரும், மின்போல் குரை கழல் உரகரும், வன் போர்***
***முறுகினபொழுதின், உடைந்தார் முதுகிட, முறுவல் பயின்றார்;***
***இறுகின நிதிகிழவன் பேர் இசை கெட, அளகை எறிந்தார்;***
***தெறுகுநர்இன்மையின், வன் தோள், தினவுற உலகு திரிந்தார்.***

***குறுகினகவசரும் -*** *உடலுடன் நெருங்கி ஒட்டிய கவசங்கள் கொண்ட நிவாதகவசர் என்னும் அசுரரும்;* ***மின்போல் குரை கழல் உரகரும் -*** *மின்னல் போல ஒளி வீசுவனவும் ஒலிக்கின்றவையுமான வீரக் கழல்கள் அணிந்த நாகர்களும்!;* ***வன்போர் முறுகின பொழுதில் -*** *(இந்தக் கிங்கரர்களை எதிர்த்து) வலிய போர் முற்றியபோது;* ***உடைந்தார் முதுகிட -*** *தோற்றவர்களாய்ப் புறமுதுகிட்டு ஓடியதால்;* ***முறுவல் பயின்றார் -*** *(அவர்களின் வீரமின்மையை எள்ளிப்) புன்முறுவல் கொண்டனர் இந்தக் கிங்கரர்;* ***இறுகின நிதி(க்) கிழவன் -*** *செறிந்த செல்வங்களுக்கு உரியவனாகிய குபேரனின்;* ***இசை கெட -*** *புகழ் அழியும்படி;* ***அளகை எறிந்தார் -*** *அளகாபுரியைத் தாக்கி (இக் கிங்கரர்) அழித்தனர்;* ***தெறுகுனர் இன்மையின் -*** *தங்களை எதிர்த்துப் போர் செய்வோர் வேறு எவரும் இல்லாமையால்;* ***வன்தோள் தினவு உற -*** *வலிமையான தோள்கள் தினவு எடுக்கும்படி;* ***உலகு திரிந்தார் -*** *(எதிர்த்துப் போர் செய்வார் கிடைப்பரோ எனத் தேடி) உலகெங்கும் திரிந்தனர்.*

*கிங்கரரின்போர் ஆற்றலையும் ஆர்வத்தையும் பாடல் புலப்படுத்துகிறது. குறுகின கவசர் என்பார் நிவாதகவசர் எனப்படும் ஓர் அசுர இனத்தவராவர். இராவணன் மேற்கொண்ட திக்குவிசயத்தில் அவனை எதிர்த்துப் போரிட்டனர்; ஆற்றலில் இருவரும் சமநிலையராயிருத்தல் கண்டு நான்முகன் இரு சாராரையும்*

*சமாதானப்படுத்தினன் என்பர் வால்மீகி. முதல் நூற் செய்தியை ஒதுக்கி நிவாதகவசரை இலங்கை அரக்கர் வென்றதாகவே கம்பர் குறிக்கிறார். 'குறுகின கவசரும்.... உரகரும்..... முதுகிட என்ற கம்பர் வாக்கைக் கருதுக. போர் செய்யும் வாய்ப்புக் கிடைக்காதபோது வீரர்களின் தோள் தினவெடுக்கும் என்பது மரபுவழிச் செய்தி. கம்பர் முன்னரும் (179, 1280, 2937) குறித்துள்ளார். 'தெறுகுநர்' என இருக்க வேண்டும்; எதுகை நலம் நாடித் 'தெறுகுனர்' என நின்றது. நிதிக் கிழவன்' ஓசை நோக்கி 'நிதிகிழவன்' என நின்றது.* ***(16)***

***5505. 'வரைகளை இடறுமின்' என்றால், 'மறிகடல்***
***பருகுமின்' என்றால்,***
***'இரவியை விழவிடும்' என்றால், 'எழு மழை***
***பிழியுமின்' என்றால்,***
***'அரவினது அரசனை,ஒன்றோ, தரையினோடு***
***அரையுமின்' என்றால்,***
***'தரையினை எடும்,எடும்' என்றால், ஒருவர் அது***
***அமைதல் சமைந்தார்.***

***வரைகளைஇடறுமின் என்றால் -*** *மலைகளை இடறித் தள்ளுங்கள் என்றாலும்;* ***மறிகடல் பருகுமின் என்றால் -*** *அலை புரளுகின்ற கடல் நீரைக் குடித்து விடுங்கள் என்றாலும்;* ***இரவியை விழ விடும் என்றால் -*** *சூரியனைக் கீழே விழும்படி தள்ளிவிடுங்கள் என்றாலும்;* ***எழு மழை பிழியுமின் என்றால் -*** *வானத்தில் செல்லுகின்ற மேகத்தைப் பிழிந்து விடுங்கள் என்றாலும்;* ***அரவினது அரசனை தரையினொடு அரையுமின் என்றால் -*** *பாம்பரசனாகிய ஆதி சேடனை, தரையோடு சேர்த்து அரைத்து விடுங்கள் என்றாலும்;* ***தரையினை எடும் எடும் என்றால் -*** *இந்தப் பூமியைப் பெயர்த் துஎடுத்து விடுங்கள் என்றாலும்;* ***ஒருவர் அது அமைதல் சமைந்தார் ஒன்றோ-*** *ஒருவரே, அத் தொழிலைச் செய்து முடிக்கத்தக்கவராவர். (இவர்கள்வல்லமை) இவ்வளவு மாத்திரமேயோ ? இவர்களது வல்லமை இத்தோடுஅடங்காது என்றபடி.*

*இயற்கையின்இயல்புகளை மாற்றுவதற்கு. அரக்க வீரர்களுள் ஒருவரே போதும். என்பது கருத்து.* ***(17)***

***5506. தூளியின் நிமிர் படலம் போய் இமையவர் விழி துற,***
***வெம் போர்***
***மீளியின் இனம்என, வன் தாள் விரை புலி நிரை***
***என, விண் தோய்***
***ஆளியின் அணிஎன, அன்றேல், அலை கடல்***
***விடம் என, அஞ்சார்,***
***வாளியின்விசைகொடு திண் கார் வரை வருவன***
***என, வந்தார்.***

***தூளியின் நிமிர்படலம் போய் -*** *(வீரர்கள்செல்வதால்) எழுந்த புழுதியின் தொகுதி மேலே சென்று;* ***இமையவர் விழி துற -*** *தேவர்களின் கண்களைத் தூர்த்துவிட;* ***வெம் போர் மீளியின் இனம் என -*** *கொடிய போர் செய்யவல்ல பேய்களின் கூட்டம் என்னும் படியாகவும்;* ***வன் தாள் விரை புலி நிரை என -*** *வலிய கால்களால் விரைந்து செல்லும்*

*புலிக் கூட்டங்கள் என்னும்படியாகவும்;* ***விண்தோய், ஆளியின் அணி என*** *- வானத்தில் பாய்ந்து செல்லும் சிங்கங்களின் கூட்டம் என்னும்படியாகவும்;* ***அன்றேல், அலை கடல் விடம் என*** *- அல்லாவிடில், கடலினின்றும் தோன்றிய ஆலகாலநஞ்சு என்னும்படியாகவும்;* ***அஞ்சா, வாளியின் விசை கொடு திண்கார்வரை வருவன வந்தார்*** *- பயப்படாமல், அம்பின் வேகத்தோடு வலிய மேகங்கள் மலையை நோக்கி வருவன போல, (அனுமனை நோக்கி) வந்தார்கள்.*

*இமையவர் விழிதுற வந்தார் என இயையும். படலம் - தொகுதி.* ***(18)***

***5507. பொறி தரவிழி, உயிர் ஒன்றோ ? புகை உக,***
***அயில் ஒளி மின்போல்***
***தெறி தர, உரும்அதிர்கின்றார்; திசைதொறும்***
***விசைகொடு சென்றார்***
***எறிதரு கடையுகவன் கால் இடறிட, உடுவின்***
***இனம் போய்***
***மறிதர, மழைஅகல் விண்போல் வடிவு அழி***
***பொழிலை, வளைந்தார்.***

***உயிர் ஒன்றோ*** *- (அவ்வீரர்களின்) பெரு மூச்சுக் காற்று மாத்திரமோ ?;* ***விழி பொறிதா*** *- கண்களினின்று நெருப்புப் பொறி பரக்கவும்;* ***புகை உக*** *- புகையை வெளியே கக்கவும்;* ***அயில் ஒளி மின் போல் செறிதர*** *- வேலாயுதங்களின் ஒளி மின்னலைப் போல் நெருங்கவும்;* ***உரும் அதிர்கின்றார்*** *- இடி போல் முழங்குகின்றவர் களாய்;* ***திசை தொறும் விசைகொடு சென்றார்*** *- எட்டுத் திக்குகளிலும் விரைந்து சென்றவர்களாய்;* ***கடை யுகம் எறிதருவன்கால் இடறிட*** *- கொடிய பெருங்காற்று எற்றி வீசுதலால்;* ***உடுவின் இனம் போய் மறிதர*** *- நட்சத்திரக் கூட்டங்கள் நீங்கி விழுந்து விடவும்;* ***மழை அகல் விண் போல்*** *- மேகம் இல்லாத ஆகாயம் போல;* ***வடிவு அழி பொழிலை*** *- தன்னுருவம் அழிந்த அசோகவனத்தை;* ***வளைந்தார்*** *- சூழ்ந்து கொண்டார்.*

*பொறிதர, புகைஉக, தெறிதர, அதிர்கின்றார். சென்றார் வளைந்தார் எனச் சொல் முடிவு கொள்க. உடுவினம், மலர்களுக்கும், மழை நீங்கிய விண், உருவழிந்த அசோக வனத்துக்கும் உவமை. முன் இரண்டடிகள் கிங்கரர் சென்றமையையும், பின் இரண்டடிகள் பொழிலின் நிலைமையையும் கூறும்.* ***(19)*** *அரக்க வீரர்களின்வருகை கண்டு அனுமன் மகிழ்தல்.*

***5508. வயிர்ஒலி, வளை ஒலி, வன் கார் மழை ஒலி முரசு***
***ஒலி, மண்பால்***
***உயிர் உலைவுறநிமிரும் போர் உறும் ஒலி, செவியின்***
***உணர்ந்தான்;***
***வெயில் விரிகதிரவனும் போய் வெருவிட,***
***வெளியிடை, விண் தோய்***
***கயிலையின்மலைஎன நின்றான்; அனையவர் வரு***
***தொழில் கண்டான்.***

***வெயில் விரிகதிரவனும் போய் வெரு விட -*** *வெயிலை வீசுகின்ற சூரியனும் அஞ்சி விலகிப் போய்விட;* ***விண் தோய் கயிலையின் மலை என -*** *ஆகாயத்தை எட்டிய கயிலை மலை போல;* ***வெளியிடை நின்றான் -*** *திறந்த வெளியிடத்தில் நின்றவனாகிய அனுமன்;* ***வயிர் ஒலி வளை ஒலி -*** *ஊது கொம்பின் ஓசையும் சங்கின் ஓசையும்;* ***வல் கார் மழை ஒலி -*** *வலிய கார் காலத்து மேக ஒலி போன்ற;* ***முரசு ஒலி -*** *முரசங்களின் முழக்கமும்;* ***மண்பால் உயிர் -*** *பூமியில் உள்ள பிராணிகள்;* ***உலை வுற -*** *நடுக்கம் அடைய;* ***நிமிரும் போர் உறும் ஒலி -*** *ஓங்கும் போர் வருவதைக் குறிக்கும் ஒலியும்;* ***செவியின் உணர்ந்தான் -*** *காதினால் கேட்டு உணர்ந்தவனாகி;* ***அனையவர் வரு தொழில் கண்டான் -*** *அந்த அரக்கர் வருவதைக் கண்ணால் நேரிலும் கண்டான்.*

*வெயில் விரி கதிரவன்வெருவியது; அனுமன் சிறு குழந்தையாக இருந்த போது, தன்னைப் பற்ற வந்ததை எண்ணி மீண்டும் வருவானோ என்ற நினைவு.*
***(20)***

***5509. 'இத இயல்இது' என, முந்தே இயைவுற இனிது***
***தெரிந்தான்;***
***பத இயல் அறிவுபயந்தால், அதின் நல பயன் உளது***
***உண்டோ ?***
***சிதவு இயல் கடிபொழில் ஒன்றே சிதறிய செயல்***
***தரு திண் போர்***
***உதவு இயல்இனிதின் உவந்தான்,-எவரின்***
***அதிகம் உயர்ந்தான்.***

***எவரினும் அதிகம்உயர்ந்தான் -*** *யாவரினும் மிகவும்சிறந்த அனுமன்;* ***முந்தே -*** *முதலில்;* ***இது இதம் இயல் -*** *தான், இந்த அசோகவனத்தைஅழித்தது நல்ல செயல் என்று;* ***இயைவுற இனிது தெரிந்தான் -*** *பொருத்தமாக நன்கு அறிந்து கொண்டான்;* ***பதம் இயல் அறிவு பயந்தால் -*** *பக்குவமுடைய அறிவு தோன்றினால்;* ***அதின் நல பயன் உளது உண்டோ -*** *அதைக் காட்டிலும் நல்லதான பயன் தரத்தக்கது வேறு உண்டோ ?(இல்லையென்றபடி);* ***கடிபொழில் சிதைவு இயல் ஒன்றே -*** *காவலுள்ளஅசோக வனத்தை அழித்ததான செய்கை ஒன்று மட்டுமே;* ***சிதறிய செயல்தரு திண்போர் உதவு இயல் -*** *(அரக்கர்) தோற்றோடுகின்ற செயலைஉண்டாக்கக் கூடிய வலிய போரை உதவி நின்ற தன்மைகண்டு;* ***இனிதின்உவந்தான் -*** *பெரிதும் மகிழ் வெய்தினான்.*

*முதலடியில் கூறப்பெற்ற செய்திக்கு இரண்டாம் அடி காரணமாய் அமைந்துள்ளது. வேற்றுப் பொருள் வைப்பணி.* ***(21)***

*அரக்கர், படைகளை ஏவ அனுமன் ஒரு மரத்தால்எதிர்த்தல்*

***5510. 'இவன் ! இவன் ! இவன் !' என நின்றார்; 'இது !'***
***என, முதலி எதிர்ந்தார்;-***
***பவனனின் முடுகிநடந்தார், பகல் இரவு உற***
***மிடைகின்றார்-***
***புவனியும், மலையும், விசும்பும், பொரு அரு நகரும்,***

உடன் போர்த்
துவனியில் அதிர,விடம்போல் சுடர் விடு படைகள்
துரந்தார்.

**பவனனின் முடுகிநடந்தார்** - காற்றை விட விரைவாகநடந்து வந்த அரக்கர்கள்; **பகல் இரவு உறமிடை கின்றார்** - பகற்காலத்திலேயே இரவு போல இருளாகும் படி நெருங்கி; **இவன் இவன் இவன் என நின்றார்** - இவன்தான் இவன்தான் இவன் என்று குறிப்பித்துக் காட்டுபவர்களாய்; **இது என முதலி எதிர்ந்தார்** - இதுவே அந்தக் குரங்கு என்று சொல்லி, முற்பட்டு எதிர்ப்பவர்களாகி; **புவனியும் மலையும் விசும்பும் பொருவரு நகரும்** - பூமியும் மலையும், ஆகாயமும், ஒப்பில்லாத இலங்கை நகரமும்; **உடன் போர்த் துவனியில் அதிர** - ஒரு சேரப் போர் முழக்கத்தினால் நடுங்கும் படியாக; **விடம் போல் சுடர் விடு படைகள் துரந்தார்** -ஆலகாலம் போல்கொடுமையை உடைய ஒளி விடுகின்ற ஆயுதங்களை (அனுமன் மேல்) வீசினார்கள்.

முடுகி நடந்தார்,துரந்தார் என முடிந்தது. இவன் இவன் இவன் என்ற அடுக்கு, விரைவுப் பொருளையும் வெகுளிப் பொருளையும் தருவது. *(22)*

5511. மழைகளும்,மாறி கடலும், போய் மதம் அற முரசம்
அறைந்தார்;
முழைகளின்இதழ்கள் திறந்தார்; முது புகை கதுவ
முனிந்தார்;
பிழை இல படஅரவின் தோள் பிடர் உற, அடி
இடுகின்றார்;
கழை தொடர்வனம் எரியுண்டாலென, எறி
படைஞர் கலந்தார்.

**எறி படைஞர்** - ஆயுதங்களைவீசத் தொடங்கிய அந்த அரக்கவீரர்கள்; **மழைகளும், மறிகடலும் போய் மதம் அற முரசம் அறைந்தார்** - (இடிக்கின்ற) மேகங்களும் (ஒலிக்கின்ற) அலைகள் மடங்குகின்ற கடல்களும் ஒதுங்கி, செருக்கு அற்றுவிடும்படியாக போர் முரசங்களை அடித்து முழக்கினவர்களாய்; **முழைகளின் இதழ்கள் திறந்தார்** - குகைகள் போல வாயிதழ்களைத் திறந்தவர்களாய்; **முது புகைகதுவ முனிந்தார்** - மிக்க புகை, கம்மிக் கொள்ளும்படி பெருஞ்சினம் கொண்டவர்களாய்; **பிழை இல பட அரவின் தோள் பிடர் உற அடி இடுகின்றார்** - குற்ற மற்ற படங்களை உடைய ஆதிசேடனின் தோளும் பிடரும் அழுந்தும்படி நடப்பவர்களாய்; **கழை தொடர் வனம், எரி உண் டால்என கலந்தார்** - மூங்கில்கள் அடர்ந்த காட்டினை நெருப்புப் பற்றுவது போல,(நாலாபக்கமும் வளைத்துக் கொண்டு) ஒருங்கு திரண்டார்கள். அரவுக்குப் பிழை இன்மையாவது, உலகின் கீழிருந்து அப்பாரத்தைச் சுமத்தலில் பின்வாங்காதிருத்தலாகும். *(23)*

5512. அறவனும்அதனை அறிந்தான்; அருகினில் அழகின்
அமைந்தார்
இற இனின் உதவுநெடுந் தார் உயர் மரம் ஒரு கை
இயைந்தான்;

***உற வரு துணைஎன அன்றோ, உதவிய அதனை***
***உவந்தான்;***
***நிறை கடல்கடையும் நெடுந் தாள் மலை என,***
***நடுவண் நிமிர்ந்தான்.***

***அறவனும் -*** *அறவடிவினனான அந்த அனுமனும்;* ***அதனை அறிந்தான் -*** *அரக்கர்கள் நெருங்கி வந்து படைகள் வீசுவதை அறிந்து;* ***அருகினில் அழகின் அமைந்தார் -*** *தனது பக்கத்தில் சிறப்பாக வந்து பொருந்திய அரக்கர்கள்;* ***இற, இனின் உதவு நெடுந்தார் உயர் மரம் ஒரு கை இயைந்தான் -*** *இறப்பதற்கு, இனிமையாக உதவக் கூடிய நீண்ட ஒழுங்கான மேன்மையுற்ற மரம் ஒன்றைத் தனது கையில் எடுத்தான்;* ***உற வரு துணை என அன்றோ -*** *மனத்திற்கு ஏற்ப உதவி செய்ய வருகின்ற ஒரு துணைவனைப் போல அல்லவா இது உள்ளது என்று;* ***உதவிய அதனை உவந்தான் -*** *தக்க சமயத்தில் உதவுமாறு கிடைத்த அம்மரத்தை விரும்பிக் கொண்டவனாய்;* ***நிறை கடல் கடையும் நெடுந்தாள் மலை என நடுவண் நிமிர்ந்தான் -*** *பால் நிறைந்த கடலைக் கடைதற்குரிய பெரிய அடியை உடையமந்தர மலையைப் போல அரக்கர் நடுவில் ஓங்கி எழுந்தான். அரக்கர் கடலைக்கலக்கப் போவதால் மந்தர மலை அனுமனுக்கு உவமை ஆயிற்று.* ***(24)***

***5513. பரு வரைபுரைவன வன் தோள், பனிமலை அருவி***
***நெடுங் கால்***
***சொரிவன பல என,மண் தோய் துறை பொரு***
***குருதி சொரிந்தார்;***
***ஒருவரை ஒருவர்தொடர்ந்தார்; உயர் தலை உடைய***
***உருண்டார்-***
***அரு வரை நெரியவிழும் பேர் அசனியும் அசைய***
***அறைந்தான்.***

***அரு வரை நெரியவிழும் பேர் அசனியும் அசைய அறைந்தான் -*** *(அனுமன்)பெரிய மலைகள் நெரிந்து தூளாகுமாறு, விழுகின்ற பெரிய இடிகளும், அவ்வோசையில் குலைந்து போக, அம் மரத்தைக் கொண்டு அரக்கர்களை ஓங்கி அடித்தான்; (அதனால்)* ***பனிமலை அருவி நெடும் கால் பல சொரிவன என -*** *குளிர்ந்த மலைகள் அருவியாக நீண்ட வாய்க்கால் பலவற்றைச் சொரிவனபோல;* ***பருவரைபுரைவன வன் தோள் -*** *பெரிய மலை போல்வனவாகிய வலிய தோள்களினால்;* ***மண்தோய் துறை பொரு குருதி சொரிந்தார் -*** *மண்ணிலே விழும் படியாக ஆறு போல இரத்தத்தைக் கொட்டியவர்களாய்;* ***ஒருவரை ஒருவர் தொடர்ந்தார் -*** *ஒருத்தரை ஒருத்தர் பற்றிக் கொண்டு;* ***உயர்தலை உடைய உருண்டார் -*** *உயர்ந்த தமது தலைகள் உடைபட்டுப் போக உருண்டோடி அழிந்தனர்.*

*அரக்கர்தோள்களுக்குப் பெரிய மலைகளும், அவர்கள் தோள்களிலிருந்து சொரிந்த இரத்த வெள்ளங்களுக்கு மலைகளிலிருந்து வரும் அருவி நீர்க்கால்களும் உவமைகளாயின.* ***(25)***

***5514. பறை புரைவிழிகள் பறிந்தார்; படியிடை நெடிது***
***படிந்தார்;***

***பிறை புரை எயிறும் இழந்தார்; பிடரொடு தலைகள்***
***பிளந்தார்;***
***குறை உயிர் சிதறநெரிந்தார்; குடரொடு குருதி***
***குழைந்தார்;-***
***முறை முறை படைகள்எறிந்தார்-முடை உடல் மறிய***
***முறிந்தார்.***

***முறை முறை படைகள்எறிந்தார் -*** *(அவ்வரக்கர்கள்)வரிசை வரிசையாக நின்று (அனுமன் மேல்) ஆயுதங்களை வீசினர்;* ***பறை புரை விழிகள் பறிந்தார் -*** *(அனுமன் மரங்கொண்டுதாக்கியதனால்) அவர்களில் சிலர் தோற்பறை போன்று அகன்ற கண்கள் பறிக்கப்பட்டவராயினர்;* ***படியிடை நெடிது படிந்தார் -*** *சிலர், தரையின் மீது நீள விழுவாராயினர்;* ***பிறை புரை எயிறும் இழந்தார் -*** *பிறைச்சந்திரன் போன்று வளைந்த தமது பற்களை இழந்தவராயினர் சிலர்;* ***பிடரொடு தலைகள் பிளந்தார் -*** *சிலர், பின் கழுத்தும் தலைகளும் பிளக்கப்பட்டவராயினர்;* ***குறை உயிர் சிதற நெரிந்தார் -*** *சிலர், தமது குற்றுயிரும் சிதறிப் போகும்படி மிதிபட்டு அழிந்தார்;* ***குடரொடு குருதி குழைந்தார் -*** *சிலர் தமது குடலோடு இரத்தத்தையும் வெளியே சொரிந்து அழிந்தனர்;* ***முடை உடல் மறிய முறிந்தார் -*** *சிலர் முடை நாற்றமுள்ள தமது உடம்புகள் அழியும்படி முறியப் பெற்றார்கள்.*

*வட்டமாயும்பெரியவையாயும் இருத்தலால் தோற்பறை அரக்கர் கண்களுக்கு உவமை.* ***(26)***

***515. புடையொடு விடு கனலின் காய் பொறியிடை,***
***மயிர்கள் புகைந்தார்;***
***தொடையொடு முதுகுதுணிந்தார்; சுழிபடு குருதி***
***சொரிந்தார்;***
***படை இடை ஒடிய,நெடுந் தோள் பறி தர, வயிறு***
***திறந்தார்;***
***இடை இடை,மலையின் விழுந்தார்-இகல் பொர***
***முடுகி எழுந்தார்.***

***இகல் பொர முடுகிஎழுந்தார் -*** *போர் செய்வதற்குவிரைந்து எழுந்த சில அரக்கர்கள்;* ***புடையொடு விடு கனலின் காய் பொறியிடை -*** *அனுமன் அடிக்கின்ற அடியுடனே வெளிப்படுகின்ற நெருப்பினுடைய எரிக்கின்ற தீப்பொறிகளிலே;* ***மயிர்கள் புகைந்தார் -*** *தம் மயிர்கள் புகையப் பெற்றனர்;* ***தொடையொடு முதுகு துணிந்தார் -*** *சிலர், தம் தொடைகளோடு முதுகும் துண்டிக்கப் பெற்றார்;* ***சுழிபடு குருதி சொரிந்தார் -*** *சுழிகள் உண்டாக இரத் தவெள்ளங்களைக் கக்கினார்கள்;* ***படை இடை ஒடிய நெடும் தோள் பறிதர -*** *தம் கையில் கொண்ட ஆயுதங்கள் நடுவே ஒடிந்து போக நீண்ட தோள்கள்உடலிலிருந்து வேறாகிப் போக;* ***வயிறு திறந்தார் -*** *தம் வயிறும் பிளக்கப்பட்டவர்களானார்கள் சிலர்;* ***இடை இடை மலையின் விழுந்தார் -*** *பயந்து ஓடியவர்கள், போர்க் களத்தின் இடையே பல இடங்களில் மலை போல விழுந்தார்கள்.* ***(27)***

***5516. புதைபட இருளின் மிடைந்தார், பொடியிடை நெடிது புரண்டார்;***
***விதைபடும்உயிரர் விழுந்தார்; விளியொடு விழியும் இழந்தார்;***
***கதையொடு முதிரமலைந்தார், கணை பொழி சிலையர் கலந்தார்,***
***உதைபட உரனும்நெரிந்தார்; உதறொடு குருதி உமிழ்ந்தார்.***

***கதையொடு முதிரமலைந்தார்*** - *தண்டாயுதங்களுடன்நன்றாகப் போர்செய்தவர்களும்;* ***கணைபொழி சிலையர் கலந்தார்*** - *அம்புகளைச் சொரிகின்ற விற்களை உடையவர்களும்கூடியவர்களாய்;* ***உதைபட*** - *அனுமனால் உதைபட்டு;* ***உரனும் நெரிந்தார்*** - *தம்மார்பும் நெரியப்பட்டு;* ***உதறொடு குருதி*** - *நடுக்கத்தோடு இரத்தத்தையும்;* ***உமிழ்ந்தார்*** - *வெளியே கக்கினர்;* ***இருளின் மிடைந்தார்*** - *இருளைப் போன்று (கறுத்த வடிவத்துடன்) அங்குக் கூடி நெருங்கிய சில வீரர்கள்;* ***பொடி இடை புதை பட நெடிது புரண்டார்*** - *கீழே கிடந்த புழுதியின் இடையே புதைந்து போக நெடுந் தூரம் புரண்டனர்;* ***விதைபடும் உயிரர் விழுந்தார்*** - *விதைகள் போலச் சிதறிய உயிர்களை உடையவர்களாய் வெற்றுடலாய் விழுந்திட்டார்கள்;* ***விளியொடு விழியும் இழந்தார்*** - *சிலர், வீர ஒலியும் கண்களும் இழந்தவர்களாயினர்.* ***(28)***

***5517. அயல்,அயல், மலையொடு அறைந்தான்; அடு பகை அளகை அடைந்தார்;***
***வியல் இடம்மறைய விரிந்தார்; மிசை உலகு அடைய மிடைந்தார்;***
***புயல் தொடுகடலின் விழுந்தார்; புடை புடை சிதைவொடு சென்றார்,***
***உயர்வுறவிசையின் எறிந்தான்; உடலொடும் உலகு துறந்தார்.***

***அயல் அயல்மலையொடு அறைந்தான்*** - *(அனுமன் அவ்வரக்கர்களை) பக்கங்களில் உள்ள மலைகளில் ஓங்கி அடித்தான்;* ***அடு பகை அளகை அடைந்தார்*** - *(அதனால் சிலர்) கொல்லவல்ல பகைமை உடைய அளகா பட்டணத்தை அடைந்தார்கள்;* ***வியல் இடம் மறைய விரிந்தார்*** - *(வேறு சிலர்) ஆகாயம் மறைந்து போகும்படி பரவினார்கள்;* ***மிசை உலகு அடைய மிடைந்தார்*** - *(இன்னும் சிலர்) மேலுலகம் முழுவதும் செறிந்து காணப்பட்டனர்;* ***புடை புடை சிதைவொடு சென்றார்*** - *சிலர், நாற் புறங்களிலும் உடல் சிதைய ஓடினார்கள்;* ***உயர்வுற விடையின் எறிந்தான்*** - *மற்றும் சிலரை மேலே போகுமாறு வேகமாக வீசினான்;* ***உடலொடும் உலகு துறந்தார்*** - *(அதனால் அவர்கள்) உடம்புகளுடன் இந்த உலகத்தை நீத்து விண்ணுலகு எய்தினார்கள்.* ***(29)***

***கலிநிலைத் துறை***

***5518. பற்றித்தாளொடு தோள் பறித்து எறிந்தனன்; பாரின்,***
***இற்ற வெஞ் சிறைவெற்புஇனம் ஆம் எனக்***

கிடந்தார்;
கொற்றவாலிடைக் கொடுந் தொழில் அரக்கரை
அடங்கச்
சுற்றி வீசலின்,பம்பரம் ஆம் எனச் சுழன்றார்.

**பற்றித் தாளொடுதோள் பறித்து எறிந்தான் -** (அனுமன் சில அரக்கர்களை) பிடித்து, அவர்களது கால்களையும் தோள்களையும் பிய்த்து வீசினான்; **வெம்சிறை இற்ற வெற்பு இனம் ஆம் என பாரின் கிடந்தார் -** (கால்களும் தோள்களும் அற்ற அரக்கர்கள்) கொடிய இறகுகள் அறுபட்ட மலைக்கூட்டங்கள் போல பூமியில் விழுந்து கிடந்தனர்; **கொற்ற வாலிடை அடங்க -** வெற்றி பொருந்திய தனது வாலிலே அடக்கியிருக்கச் செய்து; **கொடும் தொழில் அரக்கரை சுற்றி வீசலின் -** கொடிய செயல்களை உடையசில அரக்கர்களைச் சுழற்றிய வீசியதனால்; **பம்பரம் ஆம் என சுழன்றார் -** பம்பரம் போலச் சுழன்றார்கள்.

அனுமன் வால்,கயிறாகவும், அரக்கர்கள் பம்பரங்களாகவும், அனுமன் பம்பரம் விடுவோனாகவும், இங்கு உவமிக்கப் பெற்றுள்ளன. *(30)*

*5519.* **வாள்கள் இற்றன; இற்றன வரி சிலை; வயிரத்**
**தோள்கள்இற்றன; இற்றன சுடர் மழுச் சூலம்;**
**நாள்கள் இற்றன;இற்றன நகை எயிற்று ஈட்டம்;**
**தாள்கள் இற்றன;இற்றன படையுடைத் தடக் கை.**

**வாள்கள் இற்றன-** (அனுமன்தாக்கியதனால்) அரக்கர் சிலரது வாள்கள் ஒடிந்து போயின; **வரி சிலை இற்றன -** கட்டமைந்த விற்கள் முறிந்து போயின; **வயிரத் தோள்கள் இற்றன -** சிலரது வயீரம் போன்ற தோள்கள் அற்றுப் போயின; **சுடர் மழுச்சூலம் இற்றன -** ஒளியுள்ள மழுக்களும் சூலங்களும் முறிந்து போயின; **தாள்கள் இற்றன -** சிலரது கால்கள் ஒடிந்தன; **நாள்கள் இற்றன நகை எயிற்று ஈட்டம் இற்றன -** நட்சத்திரங்கள் விழுவதைப் போல. ஒளி விளங்கும் பற்களின் தொகுதிகள் அற்றுவீழ்ந்தன; **படை உடைத்தடக்கை இற்றன -** அவர்களின் ஆயுதங்களை உடைய கைகள் அற்று வீழ்ந்தன.

நகை எயிறுகளுக்குநட்சத்திரங்கள் உவமை. இச்செய்யுள் சில சுவடியில் இல்லை. வருணனை மயமாகத் தொடர்ந்து மிகப் பல பாடல்கள் பாடுவது அருமையான திறனைக் காட்டுவதாகும். பாடுவதுமுடியுமேனும் அவற்றைப்படிப்பவர் அலுக்காமல் படிக்க வேண்டுமே ! அவ்வாறு அலுப்புத் தோன்றாவண்ணம் சந்தங்களை மாற்றி மாற்றிக் கொடுப்பதன் மூலம் சாதிக்கிறார் கவிச் சக்கரவர்த்தி. ஒரே யாப்பு வகையிலும் சொல்லாட்சி மாற்றியும் நடையை மாற்றியும் வருணனைப் பாடல்களால் ஏற்படக் கூடிய அலுப்பைக் கம்பர் தவிர்த்து விடுகிறார். முந்திய (5518) செய்யுளும் இச் செய்யுளும் ஐஞ்சீர் கொண்ட கலித்துறைகளே; ஆயினும் இச்செய்யுளின் சொல்லமைப்பையும் நடையையும் கருதிப் பார்த்து ஏனைய கலித்துறைகளோடு ஒப்பிட்டுக் காண்க. *(31)*

*5520.* **தெறித்தவன் தலை; தெறித்தன செறி சுடர்க்**
**கவசம்;**

***தெறித்த பைங்கழல்; தெறித்தன சிலம்பொடு***
***பொலந் தார்;***
***தெறித்த பல்மணி; தெறித்தன பெரும் பொறித்***
***திறங்கள்;***
***தெறித்தகுண்டலம்; தெறித்தன கண் மணி சிதறி.***

***வன்தலை தெறித்த-*** *சிலருடைய வலியதலைகள் அப்பால் சிதறி விழுந்தன;* ***செறி சுடர்க் கவசம் தெறித்தன -*** *நிறைந்த ஒளியுள்ள கவசங்கள் சிதறின;* ***பைங்கழல் தெறித்த -*** *பசும் பொன்னாலாகிய வீரக்கழல்கள் சிதறி விழுந்தன;* ***பொலந்தார் சிலம் பொடு தெறித்தன -*** *பொன்னரி மாலைகள் ஓசையோடு விழுந்தன;* ***பல்மணி தெறித்த -*** *(ஆபரணங்களில் அழுத்தியிருந் த)இரத்தினங்கள் பலவும் சிதறி விழுந்தன;* ***பெரும் பொறித் திறங்கள்தெறித்தன -*** *அவர்கள் அணிந்திருந்த பெரிய வீரபட்டம் முதலிய விருதுகள்சிதறி விழுந்தன;* ***குண்டலம் தெறித்த -*** *அவர்களது குண்டலங்கள் சிதறின;* ***கண்மணி சிதறி தெறித்தன -*** *கண்ணின் கருமணிகள் சிதறுண்டு வீழ்ந்தன.*

*சிலம்பு - ஓசை;பொறி - வீரபட்டம், விருது என்பன, 'வேந்தன் பெயரால் பொறியும் பெற்றான்.' (சீவக சிந்தாமணி - 1792)* ***(32)***

***5521. உக்க பற்குவை; உக்கன, துவக்கு எலும்பு***
***உதிர்வுற்று;***
***உக்க முற்கரம்;உக்கன, முசுண்டிகள் உடைவுற்று;***
***உக்க சக்கரம்;உக்கன, உடல் திறந்து உயிர்கள்;***
***உக்க கப்பணம்;உக்கன, உயர் மணி மகுடம்.***

***பல்குவை உக்க -*** *அரக்கர்களது பற்களின் குவியல்கள் சிந்தின;* ***துவக்கு எலும்பு உதிர்வுற்று உக்கன -*** *தோல்களும் எலும்புகளும் சிதறி அழிந்தன;* ***முற்கரம் உக்க -*** *சம்மட்டி என்ற ஆயுதங்கள் சிதறி விழுந்தன;* ***முசுண்டிகள் உடைவுற்று உக்கன -*** *முசுண்டி என்னும் ஆயுதங்களும் ஒடிந்து சிதறின;* ***சக்கரம் உக்க -*** *சக்கரம் என்னும் ஆயுதங்கள் சிதறின;* ***உடல் திறந்து உயிர்கள் உக்கன -*** *உடல்கள் பிளக்கப்பட்டு உயிர்கள் சிந்திப் போயின;* ***கப்பணம் உக்க -*** *அரிகண்டம் என்னும் ஆயுதங்கள் சிதறிப் போயின;* ***உயர் மணி மகுடம் உக்கன -*** *சிறந்த இரத்தின கிரீடங்கள் சிதறிப் போயின.*

*துவக்கு - தோல்;இறுதல் - அற்று நீங்குதல்; தெறித்தல் - சிதறி நீங்குதல்; உகுதல் - சிந்தி நீங்குதல்.* ***(33)***

***5522. தாள்களால்பலர், தடக் கைகளால் பலர், தாக்கும்***
***தோள்களால்பலர், சுடர் விழியால் பலர், தொடரும்***
***கோள்களால் பலர், குத்துகளால் பலர், தம் தம்***
***வாள்களால் பலர், மரங்களினால் பலர்,-மடிந்தார்.***

***தாள்களால் பலர்-*** *அனுமனதுகால்களினால் பலரும்;* ***தடக்கைகளால் பலர் -*** *பெரிய கைகளால் பலரும்;* ***தாக்கும் தோள்களால் பலர் -*** *மோதும்தோள்களால் பலரும்;* ***சுடர் விழியால் பலரும் -*** *ஒளி வீசும் விழிகளில்உண்டாகும் நெருப்பினால் பலரும்;* ***தொடரும் கோள்களால் பலர் -*** *பற்றிப்பிடித்தலால் பலரும்;* ***குத்துகளால் பலர் -*** *கைகளால் குத்துதலினால் பலரும்;* ***தம் தம் வாள்களால் பலரும் -*** *அவரவர்களது*

*வாள்களாலேயே பலரும்;* ***மரங்களினால் பலர் -*** *மரங்களைக் கொண்டு எறிவதால் பலரும்;* ***மடிந்தார் -*** *இறந்தார்கள்.*

*கோள - பற்றிக்கொள்ளுதல். 'தொடரும் கோள்' - மேன் மேல் மிகுகின்ற வலிமை - என்றும் பொருள்* ***(34)***

***5523. ஈர்க்க,பட்டனர் சிலர்; சிலர் இடிப்புண்டு பட்டார்;***
***பேர்க்க,பட்டனர் சிலர்; சிலர் பிடியுண்டு பட்டார்;***
***ஆர்க்க,பட்டனர் சிலர்; சிலர் அடியுண்டு பட்டார்;***
***பார்க்க, பட்டனர் சிலர்; சிலர் பயமுண்டு பட்டார்.***

***சிலர், ஈர்க்கபட்டனர் -*** *சில அரக்கர்கள்,அனுமன் அவர்களைப் பிடித்து இழுத்தலால் இறந்தார்கள்;* ***சிலர் இடி உண்டுபட்டனர் -*** *மற்றும் சிலர்,இடிக்கப்பட்டு இறந்தனர்;* ***சிலர் வேர்க்க பட்டனர்-*** *சிலர், அவ்விடம் விட்டுப் பெயர்த்து எறியப்பட்டு இறந்தனர்;* ***சிலர் பிடிஉண்டு பட்டார் -*** *வேறு சிலர் அனுமனால் பிடிக்கப்பட்டு இறந்தனர்;* ***சிலர்ஆர்க்க பட்டனர் -*** *இன்னும் சிலர் கட்டப்பட்டு இறந்தனர்;* ***சிலர் அடிஉண்டு பட்டார் -*** *மற்றுஞ் சிலர், அனுமனால் அடிக்கப்பட்டு இறந்தனர்;* ***சிலர் பார்க்க பட்டனர் -*** *வேறு சிலர், அனுமன் கோபித்துப் பார்த்ததாலேஇறந்தனர்;* ***சிலர் பயமுண்டு பட்டனர் -*** *வேறு சிலர் பயந்து இறந்தனர்.* *ஆர்த்தல் -கட்டுதல்; 'ஆர்த்த கணவன் அகன்றான்' (சிலப் - 9; 37)* ***(35)***

***5524. ஓடிக்கொன்றனன் சிலவரை; உடல் உடல்தோறும்***
***கூடிக் கொன்றனன்சிலவரை; கொடி நெடு மரத்தால்***
***சாடிக்கொன்றனன் சிலவரை; பிணம்தொறும் தடவித்***
***தேடிக்கொன்றனன் சிலவரை-கறங்கு எனத்***
***திரிவான்.***

***கறங்கு எனத்திரிவான் -*** *காற்றாடி போன்றுதிரிபவனான அனுமன்;* ***சிலவரை உடல் உடல் தோறும் ஓடிக் கொன்றனன் -*** *சில அரக்கர்களை, ஒவ்வொருவர் இருக்கும் இடத்திலும் ஓடிப் போய், கொன்றான்;* ***சிலவரை கூடி கொன்றனன் -*** *சிலரை, நெருங்கிக் கொன்றான்;* ***சிலவரை கொடி நெடுமரத்தால் சாடிக் கொன்றனன் -*** *சிலரை, கொடிகள் படர்ந்த பெரிய மரத்தினால் அடித்துக் கொன்றான்;* ***பிணந் தொறும் தடவி சிலரைத் தேடித் கொன்றனன் -*** *பிணக்குவியல்களிடையே பதுங்கிக் கிடந்த சிலரை தேடிக் கண்டுபிடித்துக் கொன்றான்.* ***(36)***

***5525. முட்டினார்பட, முட்டினான்; முறை முறை முடுகிக்***
***கிட்டினார் பட,கிட்டினான்; கிரி என நெருங்கிக்***
***கட்டினார் பட,கட்டினான்; கைகளால் மெய்யில்***
***தட்டினார் பட,தட்டினான்-மலை எனத் தகுவான்.***

***மலை எனத்தகுவான் -*** *மலை எனச்சொல்லத்தக்கவனாய (பேருருவம் பெற்ற) அனுமன்;* ***முட்டினார் பட முட்டினான் -*** *தன்னை முட்டின அரக்கர் இறக்கும்படி (தான் அவரை) முட்டினான்;* ***முறை முறை முடுகி கிட்டினார் பட கிட்டினான் -*** *வரிசை வரிசையாகத் தன்னை நெருங்கின அரக்கர்கள் அழியுமாறுதானும்*

*அவர்களைநெருக்கினான்;* ***கிரி என நெருங்கி கட்டினார் பட கட்டினான் -*** *மலை போன்றவர்களாய் நெருங்கி வந்து (தமது கைகளால் தன்னைக்) கட்டியவர்கள் இறக்குமாறு, தான் அவர்களை இறுகக் கட்டினான்;* ***கைகளால் மெய்யில் தட்டினார் பட தட்டினான் -*** *தம் கைகளால் (தனது) உடம்பில் தட்டினவர்கள் இறக்கும்படி (தான் அவர்களைத்) தட்டினான்.*

*தன்னைக் கொல்லவந்தவர்களை அவர்கள் செய்த வண்ணமே தானும் செய்து அவர்களைக் கொன்றான் அனுமன்.* ***(37)***

***5526. உறக்கினும்கொல்லும்; உணரினும் கொல்லும்; மால்***
***விசும்பில்***
***பறக்கினும்கொல்லும்; படரினும் கொல்லும்; மின்***
***படைக் கை,***
***நிறக் கருங்கழல், அரக்கர்கள் நெறிதொறும்***
***பொறிகள்***
***பிறக்க நின்றுஎறி படைகளைத் தடக் கையால்***
***பியையும்.***

***உறக்கினும்கொல்லும் -*** *அரக்கர் சோர்வுற்றநிலையிலும் அனுமன் அவர்களைக் கொல்வான்;* ***உணரினும் கொல்லும் -*** *நல்லுணர்வு பெற்ற நிலையிலும் அரக்கர்களைக் கொல்வான்;* ***மால் விசும்பில் பறக்கினும் கொல்லும் -*** *பெரிய ஆகாயத்தில் அரக்கர்கள் பறந்தாலும் அவர்களைக் கொல்லுவான்;* ***படரினும் கொல்லும் -*** *தரையில் நடந்து சென்றாலும் அவர்களைக் கொல்வான்;* ***மின் படைக்கை நிறக் கருங் கழல் அரக்கர் -*** *மின்னலை உண்டாக்கும் படை உடைய கையைப் பெற்ற நிறமுடைய வலிய வீரக்கழல் அணிந்த அரக்கர்கள்;* ***நெறிதொறும் -*** *வழிகளில் எல்லாம்;* ***பொறிகள் பிறக்க -*** *தீப் பொறிகள் தோன்ற;* ***நின்று எறிபடைகளை -*** *நின் றுவீசி எறியும் ஆயுதங்களை;* ***தடக்கையால் பியையும் -*** *அனுமன் தனது பெரிய கைகளால் பிசைந்து நொறுக்குவான்.*

*பிறங்க -தோன்ற; எதுகை நோக்கி வலிந்தது; 'பிறக்க' என ஆயிற்று. 'விளங்க' என்றும் பொருள் கொள்ளலாம். பியைதல் - பிசைதல்.* ***(38)***

***5527. சேறும்வண்டலும் மூளையும் நிணமுமாய்த் திணிய,***
***நீறு சேர் நெடுந்தெரு எலாம் நீத்தமாய் நிரம்ப,***
***ஆறு போல் வரும்குருதி, அவ் அனுமனால்***
***அலைப்புண்டு,***
***ஈறு இல்வாய்தொறும் உமிழ்வதே ஒத்தது, அவ்***
***இலங்கை.***

***மூளையும் நிணமும்-*** *அவ்வரக்கர்களுடைய மூளையும் கொழுப்புக்களும்;* ***சேறும் வண்டலும் ஆய்த்திணிய -*** *சேறும் வண்டலும் போன்று நெருங்கவும்;* ***நீறு சேர் நெடும் -*** *புழுதிகள் சேர்ந்த நீண்ட;* ***தெரு எலாம் -*** *அந்த இலங்கையின் தெருக்கள் முழுதும்;* ***நீத்த மாய் நிரம்ப -*** *வெள்ளமாகி நிறையவும்;* ***ஆறு போல் வரும் குருதி -*** *ஒரு நதியைப் போல பெருகி வருகின்ற இரத்தம்;* ***அ அனுமனால் அலைப்புண்டு -*** *அந்த அனுமனால் அங்கும் இங்கும் அலையும் படிதள்ளப் பட்டு;* ***அ இலங்கை -*** *அந்த இலங்கை நகர்;* ***ஈறு***

***இல் வாய் தொறும் உமிழ்வது ஒத்தது -*** *முடிவில்லாத பல வாய்களின் வழியே கக்குவதுபோல் விளங்கியது.*

*இலங்கையில்உள்ள தெருக்கள் நீளமாக இருத்தலால், ஈறில் வாய் தொறும் எனக்கூறப் பட்டது.* ***(39)***

*அனுமன் பெரும்போர் விளைத்தல்*

***5528. கருது காலினும், கையினும், வாலினும் கட்டி,***
***சுருதியே அன்னமாருதி மரத்திடைத் துரப்பான்;***
***நிருதர்,எந்திரத்து இடு கரும்பு ஆம் என நெரிவார்;***
***குருதி சாறு எனப்பாய்வது, குரை கடல் கூனில்.***

***சுருதியே அன்னமாருதி -*** *வேதத்தையே ஒத்த (நிலை பெறுதலும் தவறாமையும் உடைய) அனுமன்;* ***கருது காலினும் கையினும் வாலினும் கட்டி -*** *எண்ணத்தக்க காலினாலும் கைகளினாலும் வாலினாலும் சில அரக்கர்களைச் சேர்த்துக் கட்டி;* ***மரத்திடைத்துரப்பான் நிருதர் -*** *மரத்தின் நடுவில் மோதுவதால் (அப்போது) அந்த அரக்கர்கள்;* ***எந்திரத்து இடு கரும்பு ஆம் என நெரிவார் -*** *ஆலையிலிட்டு ஆட்டுகின்ற கரும்பு போன்று உடல் நொறுங்கிப் போனார்கள்;* ***குருதி -*** *(அவ்வுடலிலிருந்து பெருகுகின்ற) இரத்தம்;* ***சாறு என குரைகடல் கூனில் பாய்வது -*** *கருப்பஞ்சாறு போல ஒலிக்கின்ற கடலாகிய ஒரு மிடாவில் போய் பாய்கின்றதாகும். கூன் - வாய்அகன்று உட்குழிந்த மண் பாத்திரம். இது மிடா எனப்படும். ஆலையில், கருப்பஞ்சாறு விழுவதற்குவைக்கப் பட்டிருப்பது. 'கருப் பேந்திரத்து ஒழுகு சாறகன் கூனை' (கம்ப. 4641). கரும்பு, அரக்கர்களுக்கும், கரும்பு ஆலை மரங்களின் நெருக்கத்துக்கும், கரும்புச் சாறு, உடல்களின் இரத்தத்துக்கும், பெரும் பாத்திரம் கடலுக்கும் உவமைகளாக வந்தன.* ***(40)***

***5529. எடுத்துஅரக்கரை எறிதலும், அவர் உடல் எற்ற,***
***கொடித் திண்மாளிகை இடிந்தன; மண்டபம்***
***குலைந்த;***
***தடக் கையானைகள் மறிந்தன; கோபுரம் தகர்ந்த;***
***பிடிக் குலங்களும்புரவியும் அவிந்தன, பெரிய.***

***அரக்கரை எடுத்து-*** *அனுமன்அந்த அரக்கர்களைத் தூக்கி;* ***எறிதலும்-*** *வீசிய அளவில்;* ***அவர் உடல் எற்ற -*** *அவர்களது உடல் போய்த்தாக்கியதனால்;* ***கொடித்திண் -*** *கொடிகள் கட்டிய வலிய;* ***மாளிகை இடிந்தன-*** *உயர்ந்த வீடுகள் நொறுங்கிப் போயின;* ***மண்டபம் குலைந்த -*** *மண்டபம்உருக்குலைந்து அழிந்து போயின;* ***தடக்கை யானைகள் மறிந்தன -*** *பெரியதுதிக்கைகளை உடைய ஆண் யானைகள் இறந்தன;* ***பெரிய பிடிக்குலங்களும்புரவியும் அவிந்த -*** *பெரிய பெண் யானைகளின் கூட்டங்களும் பெரியகுதிரைக் கூட்டங்களும் அழிந்தன. பெரிய, குலம்என்பன, பிடிக்கும் புரவிக்கும் அடை மொழிகள்.* ***(41)***

***5530. தம் தம்மாடங்கள் தம் உடலால் சிலர் தகர்த்தார்;***
***தம் தம்மாதரைத் தம் கழலால் சிலர் சமைத்தார்;***

***தம் தம்மாக்களைத் தம் படையால் சிலர் தடிந்தார்;-***
***எற்றி மாருதிதடக் கைகளால் விசைத்து எறிய.***

***மாருதி தடகைகளால் எற்றி விசைத்து எறிய -*** *அனுமன் தனது பெரிய கைகளினால், அடித்துக் கட்டித்தூக்கி வீசுதலினால்;* ***சிலர் தம்தம் மாடங்கள் தம் உடலால் தகர்த்தார் -*** *சில அரக்கர்கள் தங்கள் தங்கள் வீடுகளை தமது உடம்புகளினால் உடைத்தார்கள்;* ***சிலர், தம் தம் மாதரைத் தம் கழலால் சமைத்தார் -*** *சில அரக்கர்கள் தங்கள் தங்கள் மனைவி மார்களைத் தமது கால்களால் அழித்தார்கள்;* ***சில, தம்தம் மாக்களைத் தம் படையால் தடித்தார் -****சில அரக்கர்கள்தங்கள் தங்களது குழந்தைகளைத் தமது ஆயுதங்களினால் கொன்றார்கள். அந்தஅரக்கர்களின் அழிவு, அவர்களது வீடு, மனைவி, மக்கள் அழிவதற்கு உடன் காரணமாயிற்று என்பதாம்.* ***(42)***

***5531. ஆடல் மாக்களிறு அனையவன், அரக்கியர்க்கு***
***அருளி,***
***'வீடு நோக்கியேசெல்க' என்று, சிலவரை விட்டான்;***
***கூடினார்க்கு அவர்உயிர் எனச் சிலவரைக்***
***கொடுத்தான்;***
***ஊடினார்க்கு அவர்மனைதொறும் சிலவரை***
***உய்த்தான்.***

***ஆடல் மா களிறுஅனையவன் -*** *பகைவரைக் கொல்லும் வலிமைபொருந்திய பெரிய ஆண் யானை போன்ற அனுமன்;* ***அரக்கியர்க்கு அருளி -*** *அரக்கியர் சிலர் படுகின்ற துன்பத்தைக் கண்டு அவர்கள் மேல் கருணை கொண்டு;* ***சிலரை வீடு நோக்கியே செல்க என்று விட்டான் -*** *சிலஅரக்கரை 'உங்கள் வீடு நோக்கிச் செல்லுங்கள்' என்று கொல்லாது விட்டான்;* ***சிலவரை, கூடினார்க்கு அவர் உயிர் என கொடுத்தான் -*** *சில அரக்கரை,அப்போதுதான் சேர்ந்தவராகிய இளம் பெண்களுக்கு உயிர் போன்றுஇருப்பவர் என்று, கொல்லாது விடுத்தான்;* ***ஊடினார்க்கு -*** *ஊடல் கொண்டமகளிர்களுக்கு, இரங்கி;* ***அவர் மனை தொறும் சிலவரை உய்த்தான் -*** *அவர் வீடு தோறும் அவர்களது கணவர் போய்ச் சேருமாறு அவர்களைஅனுப்பி விட்டான். இதனால்,அனுமனுக்கு வீரத்தோடு ஈரமும் (இரக்கம்) இருந்தது என்பது புலப் படுகின்றது.* ***(43)***

***5532. தரு எலாம்உடல்; தெற்றி எலாம் உடல்; சதுக்கத்து***
***உரு எலாம் உடல்;உவரி எலாம் உடல்; உள்ளூர்க்***
***கரு எலாம் உடல்;காயம் எலாம் உடல்; அரக்கர்***
***தெரு எலாம்உடல்; தேயம் எலாம் உடல்-சிதறி.***

***சிதறி, தருஎலாம் உடல் -*** *(அனுமன் வீசிஎறிந்ததனால்) நாற்புறத்திலும் சிதறுண்டு மரங்களில் எல்லாம் அரக்கர்களது உடல்கள்;* ***தெற்றி எலாம் உடல் -*** *தெருத்திண்ணைகளில் எல்லாம் உடல்கள்;* ***சதுக்கத்து உருஎலாம் உடல் -*** *நாற்சந்தி கூடும்இடங்களின் வடிவம்எல்லாம் உடல்கள்;* ***உவரி எலாம் உடல் -*** *கடல்கள் எங்கும் உடல்கள்;* ***உள் ஊர் கருஎலாம் உடல் -*** *இலங்கை நகரின் நடு இடம் எல்லாம் உடல்கள்;* ***காயம் எலாம் உடல் -*** *ஆகாயம் முழுவதும் உடல்கள்;* ***அரக்கர் தெரு எலாம் உடல் -***

*அரக்கர்கள் வாழும் தெருக்களில் எல்லாம் உடல்கள்;* ***தேயம் எலாம் உடல் -*** *இலங்கைப் பிரதேசம் முழுவதும் உடல்களாக நிரம்பிக் கிடந்தன.*

*சதுக்கம் -நாற்சந்தி. தெற்றி - திண்ணை. அரக்கர்களது உயிர் கழிந்த வெற்றுடம்பு, எங்கும் கிடந்தமை இங்கு கூறப்படுகின்றது.* ***(44)***

***5533. ஊன் எலாம்உயிர் கவர்வுறும் காலன் ஓய்ந்து***
***உலந்தான்;-***
***தான்,எலாரையும், மாருதி சாடுகை தவிரான்;-***
***மீன் எலாம்உயிர்; மேகம் எலாம் உயிர்; மேல் மேல்***
***வான் எலாம்உயிர்; மற்றும் எலாம் உயிர்-சுற்றி.***

***மாருதி தான்எலாரையும் சாடுகை தவிரான் -*** *அனுமன் தான் ஒருத்தனாகவே, எதிர்ப்பட்ட அரக்கர் யாவரையும் கொல்லுதலினின்றும் நீங்கானல்லன்; (அதனால்)* ***ஊன் எலாம் உயிர் கவர்வுறும் காலன் ஓய்ந்து உலந்தான் -*** *உடம்புகளிலிருந்து உயிர்களைக் கவர்ந்து செல்ல வேண்டிய எமன் (மாள்பவர் பலராகி விட்டதால், தனது தொழிலைச் செய்ய இயலாதவனாய்) தளர்ந்து வலிமை கெட்டான்;* ***சுற்றி -*** *(எடுத்துக் கொண்டு போவார் எவரும் இன்மையின் அவ்வரக்கர் உயிர்) எங்கும் சுழன்று;* ***மீன் எலாம் உயிர் -*** *நட்சத்திர மண்டலம் முழுவதும் உயிராகவும்;* ***மேகம் எலாம் உயிர் -*** *மேகமண்டலங்களில் எல்லாம் உயிராகவும்;* ***மேல் மேல் வான் எலாம் உயிர் -*** *மற்றும் உள்ள இடைவெளிகளில் எல்லாம் உயிராகவும் நிரம்பிக் கிடந்தன.*

*முன் கவிதையில்உடல்கள், இக் கவிதையில் உயிர்கள் சிதறியமை கூறப்பட்டன.* ***(45)***

*அரக்கர்கள்நடுவில் அனுமன் காட்சி*

***5534. ஆக இச்செரு விளைவுறும் அமைதியின், அரக்கர்***
***மோகம் உற்றனர்ஆம் என, முறை முறை முனிந்தார்;***
***மாகம் முற்றவும்,மாதிரம் முற்றவும், வளைந்தார்,***
***மேகம்ஒத்தனர்-மாருதி வெய்யவன் ஒத்தான்.***

***ஆக இச்செருவிளைவுறும் அமைதியில் -*** *இவ்வாறு, இப்போர் நடக்கும் சமயத்தில்;* ***அரக்கர் மோகம் உற்றனர் ஆம் என -*** *சில அரக்கர்கள் அறிவு மயக்கம் கொண்டவர்கள் போல;* ***முறை முறை முனிந்தார் -*** *மேன் மேலும் கோபம் கொண்டவர்களாகி;* ***மாகம் முற்றவும் -*** *வானிடம் முழுவதும்;* ***மாதிரம் முற்றவும் வளைந்தார் -*** *திக்குகள் முழுவதும் சூழ்ந்து கொண்டவராய்;* ***மேகம் ஒத்தனர் -*** *கரிய மேகம் போல விளங்கினர்;* ***மாருதி வெய்யவன் ஒத்தான் -*** *அனுமன் சூரியனைப் போன்று விளங்கினான்.*

*பலபடியாகச்சிதறுண்டு போன அரக்கர்கள், இச்சமயத்தில் சினம் கொண்டு சூழ்வது அவர்களது அறிவின்மையின் செயல். இதை 'மோகம் உற்றனர்' என்ற தொடர்காட்டுகிறது. மாகம் - வான்; மாதிரம் - திக்கு. (திசை)* ***(46)***

***5535. அடல்அரக்கரும், ஆர்த்தலின், அலைத்தலின் அயரப்***
***புடை பெருத்து உயர் பெருமையின், கருமையின்***
***பொலிவின்***
***மிடல் அயில்படை மீன் என விலங்கலின், கலங்கும்***
***கடல்நிகர்த்தனர்-மாருதி மந்தரம் கடுத்தான்.***

***அடல் அரக்கரும்-*** *வலிமைமிக்க அந்த அரக்கர்களும்;* ***ஆர்த்தலின், அலைத்தலின் -*** *இரைதலாலும்; (அனுமனால் இங்கும் அங்கும்) அலைக்கப்படுவதாலும்;* ***அயர புடை பெருத்து உயர் பெருமையின் -*** *(கண்டவர்) சோரும்படி பக்கங்கள் பருத்து உயர்ந்து தோன்றுகின்ற பெருந்தோற்றத்தாலும்;* ***கருமையின் பொலிவின் -*** *கருநிறத்தாலும், மிகுதியாய் (நிறைந்து) காணப்படுவதாலும்;* ***மிடல் அயில்படை மீன் என விலங்கலின் -*** *அவர்கள் கொண்டுள்ள வலிய வேல்படைகள் மீன்கள் போன்று விளங்குவதனாலும்;* ***கலங்கும் கடல் நிகர்த்தனர் -*** *(கடையும் போது) கொந்தளிக்கும் கடலுக்கு ஒப்பாக விளங்கினர்;* ***மாருதி மந்தரம் கடுத்தான் -*** *அனுமன், (கடலைக்கலக்கும்) மந்தரமலையை ஒத்தான்.*

*ஆர்த்தல்,அலைதல், பெருந் தோற்றம், கருமை, மீன் விலங்குதல் அரக்கர்க்கும் கடலுக்கும் பொருந்தும் பொதுத்தன்மைகள்.* ***(47)***

***5536. கரதலத்தினும் காலினும் வாலினும் கதுவ,***
***நிரை மணித் தலைநெரிந்து உக, சாய்ந்து உயிர்***
***நீப்பார்,***
***சுரர் நடுக்குற அமுது கொண்டு எழுந்த நாள்,***
***தொடரும்***
***உரகர் ஒத்தனர்- அனுமனும் கலுழனே ஒத்தான்.***

***கரதலத்தினும்,காலினும் வாலினும் கதுவ -*** *அனுமன் தனது கைகளாலும், கால்களாலும், வாலினாலும் பற்றுதலினால்;* ***நிரைமணித்தலை நெரிந்து உக சாய்ந்து உயிர் நீப்பார் -*** *வரிசையாகக் கரிய நிறமுள்ள தமது தலைகள் நசுங்கிச் சிதறுதலினால் மண்மீது விழுந்து உயிர்விடுகின்ற கிங்கரர்கள்;* ***சுரர் நடுக்குற அமுது கொண்டு எழுந்த நாள் -*** *தேவர்கள் அஞ்சும்படி, அமுத கலசத்தை எடுத்துக் கொண்டு மேலே கிளம்பும் பொழுது;* ***தொடரும் உரகர் ஒத்தனர் -*** *(காவலிருந்து கவர வொட்டாது தடுக்கத்) தொடர்ந்த பாம்புகளை ஒத்தனர்;* ***அனுமனும் கலுழனே ஒத்தான் -*** *அனுமனும், (அமுதத்தோடு எழுந்த) கருடனை ஒத்திருந்தான்.* ***(48)***

***5537. மானம்உற்ற தம் பகையினால், முனிவுற்று வளைந்த***
***மீனுடைக் கடல்உலகினின், உள எலாம் மிடைந்த***
***ஊன் அறக்கொன்று துகைக்கவும், ஒழிவு இலா***
***நிருதர்***
***ஆனைஒத்தனர்-ஆள் அரி ஒத்தனன் அனுமன்.***

***மானம் உற்ற தம்பகையினால் முனிவுற்று வளைந்த -*** *செருக்குக் கொண்ட தமது பகைமைக் குணத்தினாலே, கோபம் கொண்டு (அனுமனைச்) சூழ்ந்து கொண்டவரும்;*

***மீன் உடைக்கடல் உலகினின் உள எலாம் மிடைந்து -*** *மீன்களை உடைய கடலினால் சூழப்பட்ட இலங்கையிலே உள்ள இடம் முழுவதும் நெருங்கியிருப்பவரும்;* ***ஊன் அற கொன்று துகைக்கவும் ஒழிவு இலா நிருதர் -*** *(கண்ணில் கண்டவர்) உடம்புகளை எல்லாம் அழித் தொழிக்கவும் அழிந்திடாமல் பெருகித் தோன்றுபவருமான அரக்கர்கள்;* ***ஆனை ஒத்தனர் -*** *யானைகளைப் போன்றவரானார்கள்;* ***அனுமன் ஆள் அரி ஒத்தான் -*** *அனுமன் (மிருகங்களை) ஆளும் தன்மை உள்ள சிங்கத்தை ஒத்தவனானான்.*

*அரக்கர்களுக்குயானைத் திரளும், அனுமனுக்கு, சிங்கமும் உவமைகளாக வந்தன.* ***(49)*** *அனுமன் விழுப்புண் படலும் வானவர்கள் மலர் மழை பொழிதலும்*

***5538. எய்த,எற்றின, எறிந்தன, ஈர்த்தன, இகலின்***
***பொய்த,குத்தின, பொதுத்தன, துளைத்தன,***
***போழ்ந்த,***
***கொய்த, சுற்றன,பற்றின, குடைந்தன, பொலிந்த***
***ஐயன் மல் பெரும்புயத்தன, புண் அளப்பு அரிதால்.***

***இகலில் -*** *போரில்;* ***எய்த எற்றின -*** *(அவ்வரக்கர்கள்) அம்பு கொண்டு வீசியவைகளாலும், தாக்கியவைகளாலும்;* ***எறிந்தன ஈர்த்தன -*** *வீசி எறிந்தவைகளாலும் இழுத்தவைகளாலும்;* ***பொய்த -*** *சொரிந்தவைகளாலும்;* ***குத்தின பொதுத்தன -*** *குத்தியவைகளாலும் உள் அழுத்தியவைகளாலும்;* ***துளைத்தன போழ்ந்த -*** *துளைத்தனவற்றாலும் பிளந்தனவற்றாலும்;* ***கொய்த சுற்றின -*** *பறித்தனவாலும் சுற்றினவாலும்;* ***பற்றின குடைந்தன -*** *பிடித்தனவாலும் குடைந்தனவாலும்;* ***பொலிந்த -*** *விளங்கிய;* ***ஐயன் மல் பெரும் புயத்தன புண் அளப்பு அரிய -*** *சிறப்புக்குரிய அனுமனது வலிமையில் சிறந்து விளங்கும் பெரிய தோள்களில் உண்டான விழுப்புண்கள் அளவிடமுடியாதனவாய் மிகுந்திருந்தன.*

*வினை முற்றுகளைஅடுக்கிச் சந்த நயம் விளைதல் காண்க. வருணனையில் சலிப்பு ஏற்படாமைக்கு இதுவும் ஓர் உத்தி.* ***(50)***

***5539. கார்க் கருந் தடங் கடல்களும், மழை முகில்***
***கணனும்,***
***வேர்க்க, வெஞ்செரு விளைத்து எழும் வெள்***
***எயிற்று அரக்கர்***
***போர்க் குழாம்படி பூசலின், ஐயனைப் புகழ்வுற்று***
***ஆர்க்கும்விண்ணவர் அமலையே, உயர்ந்தது, அன்று***
***அமரில்.***

***கார் கரும் தடங்கடல்களும் -*** *மிகக் கரிய பெரியகடல்களும்;* ***மழைமுகில் கணனும் -*** *மழையைத் தருகின்ற மேகக் கூட்டங்களும்;* ***வேர்க்க -*** *மனம் புழுங்கும்படி (பின்னடையும் படி);* ***வெம் செரு விளைத்து எழும் -*** *கொடும் போரை உண்டாக்கி மேற் கொண்டு பற்களை உடைய அரக்கர்களின்போர்க்கூட்டங்களில்;* ***படி பூசலின் -*** *தோன்றுகின்ற ஒலியை விட;* ***விண்ணவர் -*** *தேவர்கள்;* ***ஐயனைப் புகழ் வுற்று -*** *பெரியோனான அனுமனைக் கொண்டாடி;* ***ஆர்க்கும் அமலையே -*** *(மகிழ்ச்சியால்)*

*ஆரவாரிக்கின்ற 'ஒலியே;* ***அன்று அமரில் உயர்ந்தது -*** *அன்றைய போரில் அதிகமாயிருந்தது.*

*அனுமனதுபோர்த்திறனையும் வீரத்தையும் தேவர்கள் கண்டு புகழ்ந்தனர். அந்த மகிழ்ச்சியில் எழுந்த ஒலி, அரக்கர்களின் போர் ஒலியை விஞ்சி நின்றது என்க.* ***(51)***

***5540. மேவும் வெஞ் சினத்து அரக்கர்கள், முறை முறை, விசையால்***
***ஏவும் பல் படை,எத்தனை கோடிகள் எனினும்,***
***தூவும் தேவரும், மகளிரும், முனிவரும் சொரிந்த***
***பூவும், புண்களும்,தெரிந்தில, மாருதி புயத்தில்.***

***மேவும் வெம்சினத்து அரக்கர்கள் -*** *போருக்கு வந்த கொடிய கோபம் கொண்ட அரக்கர்கள்;* ***முறை முறை விசையால் ஏவும் பல்படை -*** *பல தடவை விசையுடன் தூண்டிய பல்வகை ஆயுதங்கள்;* ***எத்தனை கோடிகள் எனினும் -*** *மிகப் பலகோடிகளானாலும்;* ***புண்களும் -*** *அவற்றால் உண்டாகின்ற புண்களும்;* ***தூவும் தேவரும் -*** *இன்பத்தையே அனுபவிக்கின்ற தேவர்களும்;* ***மகளிரும் முனிவரும் சொரிந்த பூவும் -*** *அவரது மனைவிமார்களும் தேவ ரிஷிகளும் ஆகாயத்திலிருந்து பொழிந்த மலர்களும்;* ***மாருதி புயத்தில் தெரிந்தில -*** *அனுமனது தோளில் வேற்றுமை தெரியாதபடி ஒரு சேர விளங்கின.*

*காண்பவர்களுக்குப் புண்களின் வடுக்களும் மலர்களும் வேற்றுமை தெரிந்தில. அனுமனுக்கு அமரர்கள் தூவிய பூக்களைப் போலவே, அரக்கர்கள் விட்ட படைகளால் ஏற்பட்ட புண்ணும் ஊறு செய்தில என்பதாம்.* ***(52)***

***5541. பெயர்க்கும் சாரிகை கறங்கு எனத் திசைதொறும் பெயர்வின்,***
***உயர்க்கும்விண்மிசை ஓங்கலின், மண்ணின் வந்து உறலின்;***
***அயர்த்துவீழ்ந்தனர், அழிந்தனர், அரக்கராய் உள்ளார்;***
***வெயர்த்திலன்மிசை; உயிர்த்திலன்-நல் அற வீரன்.***

***நல் அறவீரன் -*** *சிறந்த தரும வீரனான அனுமன்;* ***பெயர்க்கும் சாரிகை -*** *இடம் விட்டு விரைந்து செல்வதற்குரிய சாரிகைத் தொழிலில்;* ***கறங்கு என திசை தொறும் பெயர் வின் -*** *காற்றாடி போல எட்டுத் திக்குகளிலும் பெயர்ந்து செல்வதாலும்;* ***உயர்க்கும் விண்மிசை ஓங்கலின் -*** *ஓங்கிய ஆகாயத்தின் மீது உயரச் செல்வதாலும் ;* ***மண்ணின் வந்து உறலின் -*** *தரையில் வந்து பொருந்துவதாலும்;* ***அரக்கராய் உள்ளார் அயர்த்து வீழ்ந்தனர் அழிந்தனர் -*** *இராக்கதர்கள் சோர்ந்து வீழ்ந்து அழிந்தார்கள்;* ***மிசை வெயர்த்திலன் உயிர்த்திலன் -*** *(ஆனால் அந்த அனுமனோ) தன்னுடம்பில், வேர்த்தல் தானும் கொண்டிலன்; பெருமூச்சு விடுதல் செய்தானும் அல்லன்.*

*சாரிகை - வட்டமாய் ஓடித் திரிதல். அனுமன் அரக்கர்களை அழிப்பதற்குச் சிறிதும் சிரமப்படவில்லை என்பது கருத்து.* ***(53)***

***5542. எஞ்சல்இல் கணக்கு அறிந்திலம்; இராவணன் ஏவ,***
***நஞ்சம்உண்டவராம் என அனுமன்மேல் நடந்தார்;***
***துஞ்சினார் அல்லது யாவரும் மறத்தொடும்***
***தொலைவுற்று,***
***எஞ்சினார்இல்லை; அரக்கரின் வீரர் மற்று யாரே ?***

***இராவணன் ஏவ -*** *இராவணன்கட்டளை இட்டு அனுப்ப;* ***நஞ்சம் உண்டவராம் என அனுமன் மேல் நடந்தார் -*** *விடத்தை அருந்தியவர்கள் போன்று அனுமன் மீது போருக்குச் சென்ற அந்த அரக்கர்களின்;* ***எஞ்சல் இல் கணக்கு அறிந்திலம் -*** *குறைவு படாத கணக்கு இவ்வளவு என்று யாம் அறிந்தோம் இல்லை;* ***யாவரும் துஞ்சினார் அல்லது -*** *(ஆனால்) எல்லா அரக்கரும் (எதிர்த்துப் போர் செய்து) இறந்தார்களே அல்லாமல்;* ***மறத் தொடும்தொலைவுற்று எஞ்சினார் இல்லை -*** *வீரத்தில் குறைந்து தோற்றமையால்எஞ்சியவர்கள் எவரும் இல்லை;* ***அரக்கரில் வீரர் மற்றுயாரே ? -*** *(ஆதலால்) அந்த அரக்கர்களைப் போலச் சிறந்த போர் வீரர்கள் வேறு யாரேஉளர் ? (ஒருவரும் இல்லை). அனுமன் மீதுபோருக்குச் சென்ற அரக்கர்களின் வீரத்தைக் கவிஞர் பாராட்டுவதாக அமைந்தது இக்கவிதை.* ***(54)***

*கிங்கரர்மடிந்ததைக் காவலர் இராவணனுக்குத் தெரிவித்தல்*

***5543. வந்தகிங்கரர் 'ஏ' எனும் மாத்திரை மடிந்தார்;***
***நந்தவானத்துநாயகர் ஓடினர், நடுங்கி,***
***பிந்து காலினர்,கையினர், பெரும் பயம் பிடரின்***
***உந்த, ஆயிரம்பிணக் குவைமேல் விழுந்து***
***உளைவார்.***

***வந்த கிங்கரர்-*** *அனுமனுடன் போரிட வந்த கிங்கரர்களான அரக்கர்கள்;* ***'ஏ' எனும் மாத்திரை மடிந்தார் -*** *இரண்டு மாத்திரைக்கால அளவில் இறந்தார்கள்;* ***நந்தவானத்து நாயகர் ஓடினர் -*** *(உடனே) நந்தவனத்துப் பாதுகாவலர் விரைந்து செல்பவராய்;* ***நடுங்கி, பிந்து காலினர் கையினர் -*** *நடுங்கிப் பின் வாங்குகின்ற கால் கை உடையவர்களாய்;* ***பெரும் பயம் பிடரின் உந்த -*** *மிக்க அச்சம் கழுத்தைப் பிடித்துத்தள்ள;* ***ஆயிரம் பிணக்குவை மேல் விழுந்து -*** *ஆயிரக்கணக்கான பிணக்குவியலின் மேல் விழுந்து;* ***உளைவார் -*** *வருந்துவார்.* ***(55)***

***5544. விரைவின்உற்றனர்; விம்மலுற்று யாது ஒன்றும்***
***விளம்பார்;***
***கரதலத்தினால்,பட்டதும், கட்டுரைக்கின்றார்;***
***தரையில்நிற்கிலர்; திசைதொறும் நோக்கினர்;***
***சலிப்பார்;***
***அரசன், மற்றவர்அலக்கணே உரைத்திட, அறிந்தான்.***

***விரைவின்உற்றனர் -*** *இராவணன் முன்னேவிரைவாகப் போய்ச் சேர்ந்த அவர்கள்;* ***விம்மல் உற்று -*** *ஏங்கிய வண்ணமாய்;* ***யாது ஒன்றும் விளம் பார் -*** *யாதொன்றையும் (வாயினால்) சொல்ல மாட்டாமல்;* ***பட்டதும் -*** *அங்கு நேர்ந்த எல்லாவற்றையும்;* ***கரதலத்தினால் கட்டுரைக் கின்றார் -*** *தங்கள் கைகளின் சைகைகளால் குறிப்பித்துக் காட்டி;* ***தரையில் நிற்கிலர் -*** *தரையில் நிற்க மாட்டாமல்;* ***திசை தொறும் நோக்கினர் சலிப்பார் -*** *நான்கு திக்குகளையும் பார்த்து நடுங்கினார்கள்;* ***அரசன் அவர் அலக்கணே உரைத்திட அறிந்தான் -*** *அரக்கர் அரசனான இராவணன், அவர்கள் படுகின்ற வருத்தமே (அங்கு நேர்ந்த படுதோல்வியைத்) தெரிவிக்க உணர்ந்தான்.*

*கரதலத்தினால்கட்டுரைக் கின்றார் என்றது. அங்கு நடந்த அக்கிங்கரர் அழிவைச் சொல்ல அச்சத்தால் நாவெழாததைக் காட்டுகின்றது. சொல்லாடாமல் மெய்ப்பாடுகளாலேயே செய்தி உணர்த்தும் சாதனையைச் செய்யுளிலும் செய்துகாட்டுகிறார், கவிச்சக்கரவர்த்தி.* ***(56)***

***5545. 'இறந்து நீங்கினரோ ? இன்று, என் ஆணையை***
***இகழ்ந்து***
***துறந்துநீங்கினரோ ? அன்றி, வெஞ் சமர்***
***தொலைந்தார்***
***மறந்துநீங்கினரோ ? என்கொல் வந்தது ?' என்று***
***உரைத்தான்-***
***நிறம் செருக்குற,வாய்தொறும் நெருப்பு***
***உமிழ்கின்றான்.***

***நிறம் செருக்குஉற வாய் தொறும் நெருப்பு உமிழ்கின்றான் -*** *மார்பைஅகந்தையால் நிமிர்த்த வண்ணம் பத்து வாய்களிலும் சினத்தீயைக் கக்குபவனான இராவணன்;* ***இன்று இறந்து நீங்கினரோ ? -*** *(செய்தி சொல்ல வந்த காவலர்களைப் பார்த்து) இன்று, எனது ஏவலை மேற்கொண்ட கிங்கரர்கள் போரில் தமது உயிரைப் பலிகொடுத்து ஒழிந்தார்களோ ?;* ***என் ஆணையை இகழ்ந்து துறந்து நீங்கினரோ ? -*** *(அல்லது) நான் இட்ட கட்டளையைக் கடந்தவராய் போர் செய்வதை விட்டுச் சென்றார்களோ;* ***அன்றி -*** *அதுவல்லாமல்;* ***வெம்சமர் தொலைந்தார் -*** *கொடிய போரில் தோல்வி உற்றவராய்;* ***மறந்து நீங்கினரோ ? -*** *(அவமானம் தாங்காமல்) என்னையும் மறந்து போய் விட்டார்களோ ?;* ***என் கொல் வந்தது என்று உரைத்தான் -*** *நீங்கள் வந்த காரணம் என்ன ? என்று கேட்டான்.* ***(57)***

**கலி விருத்தம்**

***5546. 'சலம் தலைக்கொண்டனர் ஆய தன்மையார்***
***அலந்திலர்;செருக்களத்து அஞ்சினார் அலர்;***
***புலம் தெரிபொய்க் கரி புகலும் புன்கணார்***
***குலங்களின்,அவிந்தனர், குரங்கினால்' என்றார்.***

***சலம் தலைக்கொண்டனர் ஆய தன்மை யார் அலந்திலர் -*** *(அதற்கு,வந்த காவலர்கள்) சினம் மிக்குக் கொண்டவர்களாகிய அந்தக்கிங்கரர்கள் வருந்தி ஓடினார் அல்லர்;* ***செருக்களத்து அஞ்சினார் அல்லர் -*** *போர்க்களத்தில் பயந்து ஓடினார்களும் அல்லர்;*

***புலம் தெரி பொய்க்கரி புகலும் புன்கணார் குலங்களின் -*** *அறிவுக்குப் பொய் என்று தெரிந்தும் பொய்ச்சாட்சி சொல்லும் இழிந்த அற்பர்களுடைய குலங்கள் போல;* ***குரங்கினால்அவிந்தனர் என்றார் -*** *அந்தக்குரங்கினால் போரில் அழிந்து ஒழிந்தனர் என்று கூறினார்.*

*'புலம் தெரிபொய்க் கரி புகலும் புன் கணார் குலங்கள் ஒழிதல்' - உவமை. ஒழுக்கத்தை வற்புறுத்துவது.* ***(58)***

*இராவணன் மீட்டும்வினாவுதல்*

***5547. ஏவலின்எய்தினர் இருந்த எண் திசைத்***
***தேவரைநோக்கினான், நாணும் சிந்தையான்;***
***'யாவது என்றுஅறிந்திலிர் போலுமால் ?' என்றான்-***
***மூவகை உலகையும்விழுங்க மூள்கின்றான்.***

***மூவகை உலகையும்விழுங்க மூள்கின்றான் -*** *மேல் கீழ் நடு என்ற மூன்று உலகங்களையும் விழுங்குவான் போன்று சினத்தால் மிக்க இராவணன்;* ***ஏவலின் எய்தினர் இருந்த எண் திசைத் தேவரை நோக்கினான் -*** *தன் கட்டளையால் வந்தவர்களாய் அருகே நின்று கொண்டிருந்த எட்டுத் திக்குப் பாலர்களைப் பார்த்து;* ***நாணும் சிந்தையான் -*** *மிகவும் வெட்கம் கொண்ட மனமுடையவனாகி;* ***யாவது என்று அறிந்திலிர் போலும் என்றான் -*** *(பருவத்தேவர்களைப் பார்த்து) என்ன நடந்தது என்றே தெரிந்து கொள்ளவில்லை போலும் என்று அதட்டிக் கூறினான்.* ***(59)***

***5548. மீட்டுஅவர் உரைத்திலர்; பயத்தின் விம்முவார்;***
***தோட்டு அலர் இனமலர்த் தொங்கல் மோலியான்,***
***'வீட்டியது அரக்கரை என்னும் வெவ் உரை,***
***கேட்டதோ ?கண்டதோ ? கிளத்துவீர்' என்றான்.***

***அவர் மீட்டுஉரைத்திலர் -*** *அந்த வனத்து நாயகர்,மறுமொழி கூறாதவர்களாய்;* ***பயத்தின் விம்முவார் -*** *அச்சத்தினால் நடுங்குபவரானார்கள்;* ***தோடு அலர் இனம் மலர் தொங்கல் மோலியான் -*** *இதழ்களோடு விரிந்த பலவகை மலர்களால் தொடுத்த மாலையணிந்த முடிகளை உடைய இராவணன்;* ***அரக்கரை வீட்டியது என்னும் வெவ் உரை -*** *(அந்தக் குரங்கு) அரக்க வீரரைக் கொன்று விட்டது என்ற கொடிய வார்த்தை;* ***கேட்டதோ ? கண்டதோ ? கிளத்துவீர் என்றான் -*** *நீங்கள் கேட்டுச் சொன்னதா ? அன்றி, பார்த்துச் சொன்னதா ? சொல்லுங்கள் என்று மீட்டும் கேட்டான்.*
***(60)*** *காவலர், 'கண்களால் கண்டனம்' என்றல்.*

***5549. 'கண்டனம்,ஒருபுடை நின்று, கண்களால்;***
***தெண் திரைக்கடல் என வளைந்த சேனையை,***
***மண்டலம்திரிந்து, ஒரு மரத்தினால், உயிர்***
***உண்டது, அக்குரங்கு; இனம் ஒழிவது அன்று'***
***என்றார்.***

**ஒரு புடை நின்றுகண்களால் கண்டனம் -** *நாங்கள் ஒருபக்கத்தில் மறைந்து நின்று எங்கள் கண்களால் நேரில் பார்த்தோம்;* **தெண் திரை கடல் என வளைந்த சேனையை-** *தெளிந்த அலைகளை உடைய கடல் போலப் பரந்து சூழ்ந்திருந்த அரக்கர் சேனையை;* **அகுரங்கு -** *அந்தக் குரங்கானது;* **மண்டலம் திரிந்து -** *எப்புறத்தும் வளைந்து சுழன்று சுழன்று சஞ்சரித்ததாகி;* **ஒரு மரத்தினால் உயிர் உண்டது -** *ஒரு மரத்தினாலே தாக்கி, அரக்கர் களின்உயிரை வாங்கி விட்டது;* **இனம் ஒழிவது அன்று என்றார் -** *அது,அவ்விடத்தை விட்டு இன்னும் நீங்கிப் போகவில்லை என்று கூறினார்கள். 'கண்டனன்கற்பினுக்கு அணியைக் கண்களால்' (6031) என்ற இடத்தும் இங்கும் வந்த சொல்நடை ஒன்றே; ஆயினும் சூழ்நிலையால் இங்கே அவலம், அங்கே களிப்பு. இரு வகையான உணர்வுகளின் அழுத்தத்தை ஒரே நடையால் உணர்த்திடும் திறனை மனங்கொள்க.* ***(61)***

## *சம்புமாலிவதைப்படலம்*

*அனுமனைப் பற்றிக்கொணருமாறு இராவணன் சம்புமாலி என்பவனுக்கு ஆணையிட்டான். ஆணையை ஏற்றுச் சென்று போரிட்ட சம்புமாலியின் வதையைப் பற்றிக் கூறுவது இந்தப் படலம்.*

*இராவணன் ஆணை*

**அறுசீர் ஆசிரியவிருத்தம்**

***5550. கூம்பினகையன், நின்ற குன்று எனக் குவவுத் திண் தோள்,***
***பாம்பு இவர்தறுகண், சம்புமாலி என்பவனைப் பாரா,***
***'வாம் பரித்தானையோடு வளைத்து, அதன் மறனை மாற்றி,***
***தாம்பினின்பற்றி, தந்து, என் மனச் சினம் தணித்தி' என்றான்.***

***கூம்பினகையன் -*** *குவித்துவணங்கிய கைகளை உடையவனாய்;* ***நின்றகுன்று என குவவு திண்தோள் -*** *தனக்கு அருகில் நின்ற மலைபோல் திரண்ட வலிய தோள்களையும்;* ***பாம்பு இவர் தறுகண் சம்புமாலி என்பவனைப் பாரா -*** *பாம்பை ஒத்த அஞ்சாமையையும் கொண்ட சம்புமாலி என்னும் அரக்கனைப் பார்த்து;* ***வாம் பரித் தானையோடு வளைத்து -*** *தாவிச் செல்லும் குதிரைப் படைகளோடு சென்று அந்தக் குரங்கை வளைத்து;* ***அதன் மறனை மாற்றி -*** *அதன் வலிமையை அடக்கி;* ***தாம்பினின் பற்றி தந்து -*** *கயிற்றினால் கட்டி என்னிடம் கொண்டு வந்து விட்டு;* ***என் மனம் சினம் -*** *என் மனத்தில் உள்ள கோபத்தை;* ***தணித்தி என்றான் -*** *ஆற் றுவாய்என்று இராவணன் கூறினான்.* ***(1)***

*சம்புமாலிபோருக்குப் புறப்படுதல்*

***5551. ஆயவன்வணங்கி, 'ஐய ! அளப்பரும் அரக்கர் முன்னர்,***
***"நீஇது முடித்தி"என்று நேர்ந்தனை; நினைவின் எண்ணி***
***ஏயினை;என்னப்பெற்றால், என்னின் யார் உயர்ந்தார் ?' என்னா,***
***போயினன்,இலங்கை வேந்தன் போர்ச் சினம் போவது ஒப்பான்.***

***ஆயவன் வணங்கி -*** *அந்தச்சம்புமாலி என்பவன் இராவணனை வணங்கி;* ***ஐய ! -*** *தலைவனே;* ***அளப்பு அரும் அரக்கர் முன்னர் -*** *அளவிடுதற்கு அரிய அரக்கர் கூட்டத்திடையே;* ***நினைவின் எண்ணி -*** *மனத்தில் ஆலோசித்துப் பார்த்து;* ***நேர்ந்தனை -***

*நான் சொல்லுவதற்கு இசைந்து;* ***நீ இது முடித்தி என்று ஏயினை -*** *(அவர்களை ஏவாமல் என்னை நோக்கி) நீ இக்காரியத்தைச் செய்து முடிப்பாயாக என்று ஆணையிட்டாய்;* ***என்னப் பெற்றால் -*** *என்னும் பெருமையை யான் அடையப் பெற்றேன் என்றால்;* ***என்னின் உயர்ந்தார் -*** *என்னைவிட உயர்ந்தவர்;* ***யார் என்னா -*** *வேறு யார் உளர் என்று சொல்லி;* ***இலங்கை வேந்தன் போர்ச்சினம் போவது ஒப்பான் போயினன் -*** *இலங்கை அரசனான இராவணனது, போரில்மூண்டு எழும் கோபமே, ஒரு உருவெடுத்துப் போவது போன்று சென்றான்.*

*'மாருதி அல்லனாகில் நீயெனும் மாற்றம் பெற்றேன்; ஆர் இனி என்னோடு ஒப்பார் என்பதோர் இன்பம் உற்றான்' (6986) என்னும் பகுதி இங்கு ஒப்பு நோக்கத்தக்கது. விரைவுக்கு இராவணன் கொள்ளும் போர்ச்சினம் உவமை; புதுமை சான்ற கற்பனை.* ***(2)***

*சம்புமாலியுடன்சென்ற படைகள்*

***5552. தன்னுடைத்தானையோடும், தயமுகன், 'தருக'***
***என்று ஏய***
***மன்னுடைச்சேனையோடும், தாதை வந்து ஈந்த***
***வாளின்***
***மின்னுடைப்பரவையோடும், வேறுளோர் சிறப்பின்***
***விட்ட***
***பின்னுடைஅனிகத்தோடும், பெயர்ந்தனன், -***
***பெரும் போர் பெற்றான்.***

***பெரும்போர்பெற்றான் -*** *பெரிய போர் செய்யும்பேறுபெற்ற சம்புமாலி;* ***தன்னுடைத் -*** *தனக்கு உரியதான;* ***தானையோடும் -*** *சேனையுடனும்;* ***தயமுகன் -*** *பத்து முகங்களை உடையஇராவணன்;* ***தருகஎன்று ஏய -*** *'அழைத்து வருக' என்று ஏவப்பட்ட;* ***மன்னுடைச் சேனையோடும் -*** *மன்னனுக்கே உரிய சேனைகளுடனும்;* ***தாதை வந்து ஈந்த -*** *தன் தகப்பன் பிரகஸ்தன் கொண்டு வந்து கொடுத்த;* ***வாளின் முன்னுடைப் பரவையோடும் -*** *வாளினால் விளக்கம் பெற்ற சேனைக் கடலுடனும்;* ***வேறு உளோர் -*** *மற்றும் உள்ளவர்களான நண்பர்கள்;* ***சிறப்பின் விட்ட -*** *மிகுதியாக அனுப்பிய;* ***பின்னுடை அனிகத்தோடும் -*** *பின்னே காவலாக வந்த சேனைகளுடனும்;* ***பெயர்ந்தனன் -*** *சென்றான்.*

*பிரகத்தன்,இராவணனுடைய தலைமை அமைச்சன். இவன் மைந்தன் சம்புமாலி.* ***(3)***

***5553. உரும் ஒத்தமுழக்கின், செங் கண், வெள் எயிற்று***
***ஓடை நெற்றிப்***
***பருமித்தகிரியின் தோன்றும், வேழமும் - பதுமத்து,***
***அண்ணல்***
***நிருமித்த எழிலிமுற்றிற்று என்னலாம் நிலைய, நேமி,***

***சொரி முத்தமாலை சூழும், துகிற்கொடி, தடந்***
***தேர்-சுற்ற;***

***உரும் ஒத்தமுழக்கின் -*** *இடி போன்றபிளிறலையும்;* ***செங்கண், வெள்எயிறு -*** *சிவந்த கண்களையும் வெண்மையான தந்தங்களையும்;* ***ஓடை நெற்றி -*** *முகபடாம் அணிந்த நெற்றியையும் உடைய;* ***கிரியின் தோன்றும் -*** *மலைபோலத் தோன்றுகின்ற;* ***பருமித்த வேழமும் -*** *பெருமிதம் கொண்ட யானைகளும்;* ***பதுமத்து அண்ணல் நிருமித்த -*** *தாமரை மலரில் வாழ்கின்ற பிரம்மதேவன் படைத்த;* ***எழிலி முற்றிற்று என்னல் ஆம் நிலைய -*** *மேகங்கள் ஒருங்கே முடிவாக வந்துள்ளன என்று சொல்லத்தக்க நிலைமையையும்;* ***நேமி -*** *சக்கரங்களையும்;* ***சொரி முத்த மாலை சூழும் துகில் கொடி -*** *சொரிகின்ற முத்துமாலைகள் சூழப் பெற்ற வெண்ணிறத் துகில் கொடிகளையும் உடைய;* ***தடம் தேர் சுற்ற -*** *பெரிய தேர்களும் தன்னைச் சூழ்ந்து வரவும்.*

*'குழுவ' என அடுத்தகவியோடு தொடரும் குளகச் செய்யுள். இது முதல் ஆறு கவிகள் ஒரு தொடர்.*

*முழக்கினையும்,செய்கண்ணையும், வெள்ளெயிற்றினையும், நெற்றியினையும் உடைய வேழம். நிலைய தேர், நேமித் தேர், கொடித் தேர், தடந்தேர் எனத் தனித்தனி கூட்ட வேண்டும்.* ***(4)***

***554. காற்றினை மருங்கில் கட்டி, கால் வகுத்து, உயிரும்***
***கூட்டி,***
***கூற்றினைஏற்றியன்ன குலப் பரி குழுவ; குன்றின்***
***தூற்றினின்எழுப்பி, ஆண்டு, தொகுத்தென, சுழல்***
***பைங் கண்ண***
***வேற்று இனப்புலிஏறு என்ன வியந்து எழும் பதாதி***
***ஈட்டம்.***

***மருங்கில்காற்றினைக் கட்டி -*** *பக்கங்களில் உள்ளகாற்றைப் பிடித்துத் தொகுத்து;* ***கால் வகுத்து -*** *அதற்கு நான்கு கால்களையும் உண்டாக்கி;* ***உயிரும் கூட்டி -*** *உயிரினையும் அதில் சேர்த்து;* ***கூற்றினை ஏற்றி அன்ன -*** *எமனை மேலே ஏற்றியது போன்றுள்ள (வீரரைத் தம்மீது கொண்டுள்ள);* ***குலப்பரி குழுவ -*** *நல்லசாதிக் குதிரைகள் கூட்டமாகத் தொடரவும்;* ***வியந்துஎழும் பதாதி ஈட்டம் -*** *மன மகிழ்ச்சியோடு (போருக்குப்) புறப்படுகின்றகாலாட்களின் கூட்டம்;* ***குன்றின் தூற்றினின் எழுப்பி -*** *மலைப்புதர்களிலிருந்து எழுப்பி;* ***ஆண்டு தொகுத்தென -*** *அந்தப் போர்க்களத்தில் ஒன்றுசேர்த்தனவும்;* ***சுழல் பைங்கண்ண -*** *சுழலுகின்ற பசுமையான கண்களை உடையனவுமான;* ***வேறு இனப்புலி ஏறு என்ன -*** *வெவ்வேறு வகையான ஆண் புலிகள் போலத் தோன்றவும்.*

*'வயங்க' எனஅடுத்தக் கவியோடு தொடரும். சம்புமாலியுடன் சென்ற குதிரைப்படை, காலாட்படைகளின் ஆற்றல் உணர்த்தப் பெற்றது.*

*கூற்றினைப்படைத்து, சுற்றியுள்ள காற்றை நான்கு கால்களாக அந்தக் கூற்றுக்கு வகுத்து, உயிரூட்டப்பட்டன போல விளங்கினவான குதிரைகள். இந்தக் குதிரைகள்*

*பகைவர்க்குக் கூற்றாக அமைந்து உயிர் பறிக்கும் என்பது கற்பனை.*
***(5)***

***5555. தோமரம்,உலக்கை, கூர் வாள், சுடர் மழு, குலிசம், தோட்டி,***
***தாம் அரம்தின்ற கூர் வேல், தழல் ஒளி வட்டம், சாபம்,***
***காமர் தண்டுஎழுக்கள், காந்தும் கப்பணம், கால பாசம்,***
***மா மரம்,வலயம், வெங் கோல் முதலிய வயங்க மாதோ;***

***தோமரம்உலக்கை கூர்வாள் -*** *பெரிய தண்டாயுதம், உலக்கை, கூர்மையான வாளாயுதம்;* ***சுடர்மழு, குலிசம் -*** *ஒளி வீசுகின்ற எரியிரும்புப் படை, வச்சிராயுதம்;* ***தோட்டி -*** *அங்குசம்;* ***அரம் தின்ற கூர்வேல் -*** *அரத்தினால் அராவிக் கூராக்கப்பட்ட வேலாயுதங்கள்;* ***தழல் ஒளி வட்டம் -*** *நெருப்பின் சுவாலையை உடைய சக்கரம்;* ***சாபம் -*** *வில்;* ***காமர்தண்டு -*** *அழகிய தண்டாயுதம்;* ***எழுக்கள் -*** *இரும்புத் தண்டுகள்;* ***காந்தும் கப்பணம் -*** *ஒளி விடுகின்ற இரும்பு நெருஞ்சி முட்படைகள்;* ***காலபாசம் -*** *யமனுக்கு உரிய கயிற்றின் வடிவான ஆயுதங்கள்;* ***மாமரம், வலயம் -*** *பெரிய மரங்கள், வளையங்கள்;* ***வெம்கோல் -*** *கொடிய அம்புகள்;* ***முதலிய வயங்க -*** *முதலிய ஆயுதங்கள் விளங்கவும்.*

*திசைதொறும்செறிவ செல்ல என அடுத்த கவியோடு தொடரும். தாம், மாது, ஓ அடைகள்.* ***(6)***

***5556. எத்தியஅயில், வேல், குந்தம், எழு, கழு முதல ஏந்தி,***
***குத்தியதிளைப்ப; மீதில் குழுவின மழை மாக் கொண்டல்***
***பொத்து உகு பொருஇல் நல் நீர் சொரிவன போவ போல,***
***சித்திரப்பதாகை ஈட்டம் திசைதொறும் செறிவ செல்ல;***

***எத்திய அயில்வேல் குந்தம் -*** *தாக்கி எறியப்பட்டகூர்மையான வேல்கள் எறியீட்டிகள்;* ***எழு, கழு முதல ஏந்தி -*** *இரும்புத்தடிகள் கழுக்கள் முதலிய ஆயுதங்களைத் தரித்து;* ***குத்திய திளைப்ப -*** *குத்தித் திளைப்பதால்;* ***மீதில் குழுவின மழை -*** *மேலே கூடியிருந்த மழையை;* ***மாக்கொண்டல் -*** *பொழியக்கூடிய பெரும் இருண்ட மேகங்கள்;* ***பொத்து உகு பொரு இல் நல் நீர் சொரிவன போவபோல -*** *குத்தப்பட்டுச் சிந்தும் ஒப்பில்லாத நல்ல நீரைச் சொரிவனவாய்ச் செல்வன போல;* ***சித்திரப் பதாகை ஈட்டம் -*** *அழகுள்ள கொடிகளின் கூட்டம்;* ***திசைதொறும் செறிவ செல்ல -*** *எல்லாத் திக்குகளிலும் நெருங்கப் பெற்றனவாய்ச் செல்லவும்.*

*'பல்லியம்துவைப்ப' என அடுத்தகவியோடு தொடரும். 'எற்றிய' என்பது படைகள் ஏந்திச் சென்ற மிகுதியான கொடிகள் அசைந்து செல்லும் காட்சி உயர்வு நவிற்சியாகப்*

*புனையப்பட்டுள்ளது. வீரர்களின் படைக்கலங்கள் குத்திக் குடைந்ததால் மேகங்கள் சொரிந்த நீர்ப்பொழிவுபோல அந்தக்கொடிகள் விளங்கினவாம். படைக்கலங்களின் மிகுதியும் நீட்டமும் குறிக்கப்பட்டன. மேகங்கள் சொரிவனபோல் கொடிகள் சொரிந்தன என்பதும் மிகுதி குறித்த கற்பனையே.* *(7)*

***5557. பல்லியம்துவைப்ப, நல் மாப் பணிலங்கள் முரல,***
***பொன் தேர்ச்***
***சில்லிகள் இடிப்ப, வாசி சிரித்திட, செறி பொன்***
***தாரும்***
***வில்லும் நின்றுஇசைப்ப, யானை முழக்கம் விட்டு***
***ஆர்ப்ப, விண்தோய்***
***ஒல் ஒலி வானில்தேவர் உரை தெரிவு ஒழிக்க***
***மன்னோ;***

***பல் இயம்துவைப்ப** - பலவகை வாத்தியங்கள்ஒலிக்கவும்; **நல்மாப் பணிலங்கள் முரல** - அழகிய பெரிய சங்குகள் முழங்கவும்; **பொன் தேர்ச்சில்லிகள் இடிப்ப** - பொன் மயமான தேரின் சக்கரங்கள் (வேகமாக உருள்வதால்) ஒலியை உண்டாக்கவும்; **வாசி சிரித்திட** - குதிரைகள் சிரிப்பன போலக் கனைக்கவும்; **செறி பொன்தாரும் வில்லும் நின்று இசைப்ப** - அடர்ந்த பொன்னால் அமைந்த கிண்கிணி மாலைகளும் வில்லும் நிலையாக நின்று ஒலிக்கவும்; **யானை முழக்கம் விட்டு ஆர்ப்ப** - யானைகள் பெருமுழக்கத்தை உண்டாக்கிப் பிளிறவும்; **விண் தோய் ஒல் ஒலி** - (இவ்வாறு தோன்றி) ஆகாயத்தில் சென்ற ஒல் என்னும் ஒலிகள்; **வானில் தேவர் உரை தெரிவு ஒழிக்க** - வானில் உள்ள தேவர்கள் பேசும் வார்த்தைகளைத் தெரிந்து கொள்ள முடியாதபடி நீக்கி விடவும்.*

*'அன்னவன் சேனைசெல்ல' என அடுத்த கவியைத் தொடரும். ஒல் என்றது ஒலிக்குறிப்பு மன், ஓ. ஈற்றசைகள்* ***(8)***

***5558. மின் நகுகிரிகள் யாவும் மேருவின் விளங்கித்***
***தோன்ற,***
***தொல் நகர்பிறவும் எல்லாம் பொலிந்தன, துறக்கம்***
***என்ன-***
***அன்னவன் சேனைசெல்ல, ஆர்கலி இலங்கை ஆய***
***பொன் நகர்தகர்ந்து, பொங்கி ஆர்த்து எழு தூளி***
***போர்ப்ப.***

***அன்னவன்சேனை செல்ல** - அந்தச் சம்புமாலியினது படைகள் செல்வதால்; **ஆர்கலி இலங்கை** - கடலால் சூழப்பட்ட இலங்கை; **ஆய பொன் நகர்** - என்ற பொன்னால் அமைந்த நகரமானது; **தகர்ந்து, பொங்கி,** - உடை பட்டு, மிகவும் நிறைந்து; **ஆர்த்து எழு தூளி போர்ப்ப** - கிளம்புகின்ற புழுதி, (தம் மீது) படிதலால்; **மின் நகு கிரிகள் யாவும்** - ஒளி விளங்குகின்ற சாதாரண மலைகளெல்லாம்; **மேருவின் விளங்கி தோன்ற** - பொன்மயமான மேரு மலை போலப் பேரொளி கொண்டு விளங்க; **தொல் நகர், பிறவும் எல்லாம்** - பழைய அந்த இலங்கை நகரும் மற்றைய நகரங்களும்; **துறக்கம் என்னப் பொலிந்தன** - பொன்னுலகமான சுவர்க்கலோகம் போல விளங்கின.*

*நகுதல் -விளங்குதல். உரும் ஒத்த' என்ற பாடல் முதல் இதுவரை வந்த வினையெச்சங்கள் இச்செய்யுளில் வரும் 'பொலிந்தன' என்ற வினைமுற்றைக் கொண்டு முடிந்தன.* ***(9)***

***5559. ஆயிரம்ஐந்தொடு ஐந்து ஆம், ஆழி அம் தடந் தேர்; அத் தேர்க்கு***
***ஏயின இரட்டியானை; யானையின் இரட்டி பாய் மா;***
***போயின பதாதி,சொன்ன புரவியின் இரட்டி போலாம்-***
***தீயவன் தடந்தேர் சுற்றித் தெற்றெனச் சென்ற சேனை.***

***தீயவன் தடந்தேர் சுற்றித் தெற்று எனச் சென்ற சேனை -*** *கொடியவனான சம்புமாலியினது பெரிய தேரைச் சூழ்ந்து விரைவாகச் சென்ற அரக்கர் படையில்;* ***ஆழி அம் தடம் தேர் -*** *சக்கரங்களை உடைய அழகிய பெரிய தேர்கள்;* ***ஐந்தொடு ஐந்து ஆயிரம் ஆம் -*** *பத்தாயிரமாகும்;* ***ஏயின யானை -*** *அங்குப் பொருந்திய யானைகளின் அளவு;* ***அத்தேர்க்கு இரட்டி -*** *அத் தேர்த் தொகைக்கு இரட்டிப் புள்ளதாகும்; (இருபதினாயிரம்)* ***பாய் மா -*** *பாயும் குதிரைகள்;* ***யானையின் இரட்டி -*** *யானைத் தொகையினும் இரு மடங்காகும்; (நாற்பதினாயிரம்)* ***போயின பதாதி -*** *சென்ற காலாட் படை;* ***சொன்ன புரவியின் இரட்டி -*** *கீழே கூறப்பட்ட குதிரைத் தொகையினும் இரு மடங்காகும் (எண்பதினாயிரம்). போல், ஆம் -அசைகள். இது சேனையின் தொகுதி கூறியது. நால்வகைப் படைகளையும் இப்பாடலில் தொகுத்துச் சொல்லிய கவிஞர், இனி அவற்றைத் தனித்தனியே விவரிப்பார்.* ***(10)***

*தேர்ப் படையினர்*

***5560. வில் மறைக் கிழவர்; நானா விஞ்சையர்; வரத்தின் மிக்கார்;***
***வன் மறக்கண்ணர்; ஆற்றல் வரம்பு இலா வயிரத் தோளார்;***
***தொல் மறக்குலத்தர்; தூணி தூக்கிய புறத்தர்; மார்பின்***
***கல் மறைத்துஒளிரும் செம் பொன் கவசத்தர்-கடுந் தேர் ஆட்கள்.***

***கடுந்தேர்ஆட்கள் -*** *விரைந்து செல்லும்தேர் வீரர்கள்;* ***வில் மறைக் கிழவர் -*** *தனுர் வேதத்துக்கு உரியவர்கள்;* ***நானா விஞ்சையர் -*** *பல விதமான மாய வித்தையில் வல்லவர்கள்;* ***வரத்தின் மிக்கார் -*** *பெற்றவரங்களால் சிறந்தவர்கள்;* ***வன் மற கண்ணர் -*** *வலிய வீரத்தைக் காட்டும் கண்களை உடையவர்கள்;* ***வரம்பு இலா ஆற்றல் வயிரத் தோளார் -*** *எல்லையற்ற வலிமை வாய்ந்த உறுதியான தோள்களை உடையவர்கள்;* ***தொல் மறக் குலத்தார் -*** *பழமையான வீரக் குடியில் பிறந்தவர்கள்;* ***தூணி தூக்கிய புறத்தர் -*** *அம்பறாத் தூணிகட்டிய முதுகை உடையவர்கள்;* ***மார்பின்கல் மறைத்து***

**ஒளிரும் -** *மார்பாகிய மலையை மறைத்து விளங்குகின்ற;* **செம் பொன் கவசத்தர் -** *சிவந்த பொன்னாலான கவசங்களைப் பூண்டவர்கள்.*

*கிழமை - உரிமை.இது தேர் வீரர் திறம் கூறியது.* ***(11)***

*யானைப் படையினர்*

***5561. பொரு திசையானை ஊரும் புனிதனைப் பொருவும் பொற்பர்;***
***கரிபடைத்தொழிலும், மற்றை அங்குசத் தொழிலும், தொக்கார்;***
***நிருதியின்பிறந்த வீரர்; நெருப்பு இடை பரப்பும் கண்ணர்;***
***பரிதியின்பொலியும் மெய்யர்-படு மதக் களிற்றின் பாகர்.***

**மதம்படுகளிற்றின் பாகர் -** *மதநீர் தோன்றுகின்றஆண் யானைகளைச் செலுத்தும் போர் வீரர்கள்;* **பொரு திசை யானை ஊரும் புனிதனைப் பொருவும் பொற்பர் -** *போர் செய்யும் தன்மையுள்ள (கிழக்குத்) திக்கின் யானையாகிய ஐராவதத்தைச் செலுத்துகின்ற பரிசுத்தனான இந்திரனை ஒத்த அழகுடையவர்கள்;* **சுரி படைத் தொழிலும் மற்றை அங்குசத் தொழிலும் தொக்கார் -** *வாட்படைத் தொழிலிலும் மற்றும் அங்குசம் கொண் டுயானையைச் செலுத்திப் போர் செய்யும் தொழிலிலும் சேர்ந்து தேர்ந்தவர்கள்;* **நிருதியின் பிறந்த வீரர் -** *நிருதி என்னும் தென் மேற்கு திசையின் காவல்தெய்வமாகிய பெண்ணின் வழியில் பிறந்தவர்கள்;* **நெருப்பு இடை பொழியும்கண்ணர் -** *நெருப்பை இடை இடையே பொழியும் கண்களை உடையவர்கள்;* **பரிதியின் பொலியும் மெய்யர் -** *சூரியனைப் போன்று ஒளிவிட்டு விளங்கும்உடலை உடையவர்கள்.*

*நிருதி என்றபெண், தென் மேற்குத் திசைக்குக் காவல் தெய்வம். அவள் வழியில் தோன்றினமையால் நிருதர் எனப்பட்டனர். அரக்கர்களில் இவர்கள் ஒரு வகையினர். இது, யானை வீரர் திறம் கூறியது.* ***(12)***

*குதிரைப் படையினர்*

***5562. ஏர் கெழுதிசையும், சாரி பதினெட்டும், இயல்பின் எண்ணிப்***
***போர் கெழு படையும் கற்ற வித்தகப் புலவர், போரில்,***
***தேர் கெழுமறவர், யானைச் சேவகர், சிரத்தில் செல்லும்***
***தார் கெழு புரவிஎன்னும் தம் மனம் தாவப் போனார்.***

***ஏர் கெழுதிசையும் -*** *(செல்லுதற்கு உரிய) அழகிய திசைகளையும்;* ***சாரி பதினெட்டும் -*** *பதினெட்டு வகைப்பட்ட சாரிகளையும்;* ***இயல்பின் எண்ணி -*** *முறைப்படி சிந்தித்துப்பார்த்து;* ***போர்கெழு படையும் கற்ற -*** *போருக்குப் பொருந்திய படைகளின் தன்மையையும் கற்றறிந்த;* ***வித்தகப் புலவர் -*** *போர்க்கலைத் திறமை மிக்க அறிஞர்களாகிய (குதிரை) வீரர்கள்;* ***போரில் -*** *போர்க்களத்தில்;* ***தேர் கெழு மறவர் -*** *தேர்ப்படை வீரர்கள்;* ***யானைச் சேவகர் -*** *யானைப் படை வீரர் கள்ஆகியோர்;* ***திறத்தில் செல்லும் -*** *பக்கமாகச் செல்லுகின்ற;* ***தார் கெழு புரவிஎன்னும் -*** *கிண்கிணி மாலைகள் அணிந்த குதிரைகள் என்னும்;* ***தம் மனம்தாவப் போனார் -*** *தங்கள் மனம் முந்தித் தாவுமாறு சென்றனர். கற்ற வித்தகப்புலவர்... தம் மனம் தாவப் போனார் என்று சொற்களை இணைத்துப் பொருள் கொள்க. வீரப் போருக்குப் பொலிவு தருவன ஆகலின் (ஏர்) அழகு பொருந்திய திசைகள் என்றார். போர்க் குதிரைகள் சுழன்று வரும் இயக்கத்தைச் 'சாரி' என்பர் போரியலார்; அவை பதினெட்டு என்ப. போர்க்களத்தில் பிற வகைப் படைகளின் பாங்கர் இயங்குவனவாகலின் குதிரைப் படையைத் 'திறத்தில் செல்லும்' என்றார். பொதுவாக மனப் புரவி என்பர்; இங்கே புரவி என்னும் மனம் என எதிர்நிலை உருவகமாக வந்தது.* ***(13)***

***5563. அந் நெடுந்தானை சுற்ற, அமரரை அச்சம் சுற்ற,***
***பொன் நெடுந்தேரில் போனான்-பொருப்பிடை***
***நெருப்பின் பொங்கி,***
***தன் நெடுங்கண்கள் காந்த, தாழ் பெருங் கவசம்***
***மார்பில்***
***மின்னிட, வெயிலும் வீச,-வில் இடும் எயிற்று வீரன்.***

***வில் இடும்எயிற்று வீரன் -*** *ஒளி வீசுகின்றகோரைப் பற்களை உடைய வீரனான சம்புமாலி;* ***அந் நெடுந்தானை சுற்ற -*** *அவ்வாறான பெரிய சேனைகள் தன்னைச் சூழ்ந்து வரவும்;* ***அமரரை அச்சம் சுற்ற -*** *தேவர்களைப் பயம் சூழ்ந்து கொள்ளவும்;* ***தன் நெடுங் கண்கள் காந்த -*** *தன் பெரிய கண்கள் கோபத்தால் ஒளி வீசவும்;* ***மார்பில் தாழ் பெரும் கவசம்மின்னிட வெயிலும் வீச -*** *மார்பில் தங்கிய பெரிய கவசம் ஒளிவிட்டுமின்னலிடம் தோன்றும் ஒளிபோன்று பிரகாசிக்கவும்;* ***பொருப்பிடை நெருப்பின் பொங்கி -*** *மலையிடையே உள்ள நெருப்பு போல சினங்கொண் டு;* ***பொன் நெடும் தேரில் போனான் -*** *பொன் மயமான பெரிய தேரில் ஏறிச்சென்றான்.*

*சம்புமாலியால்அனுமனுக்கு ஆபத்து வருமோ என்ற ஐயத்தால், அமரரை அச்சம் சுற்றியது. பொருப்பினிடையிலுள்ள நெருப்பு, தேரின்நடுவில் சினம் கொண்டுதங்கியிருந்த சம்புமாலிக்கு உவமை ஆயிற்று. 'வீரன், தானை சுற்றத் தேரில் போனான்' என இயையும்.* ***(14)***

*தோரண வாயில்மேல் ஏறி அனுமன் ஆர்த்தல்*

***5564. நந்தனவனத்துள் நின்ற நாயகன் தூதன்தானும்,***
***'வந்திலர் அரக்கர்' என்னும் மனத்தினன், வழியை***
***நோக்கி,***
***சந்திரன் முதல வான மீன் எலாம் தழுவ நின்ற***

***இந்திர தனுவின் தோன்றும் தோரணம் இவர்ந்து,***
***நின்றான்.***

***நந்தன வனத்துள்நின்ற நாயகன் தூதன் தானும் -*** *(அந்தச் சமயத்தில்) அசோக வனம் என்ற சிங்காரத் தோட்டத்துள் தனித்து நின்ற இராமபிரான் தூதனான அனுமனும்;* ***அரக்கர் வந்திலர் என்னும் மனத் தினன்-*** *மேலும் அரக்கர்கள் தன்னுடன் போரிட வரவில்லையே என்ற எண்ணுடையவனாகி;* ***வழியை நோக்கி -*** *அவர்கள் வரும் வழியை எதிர் நோக்கிக் கொண்டு;* ***சந்திரன் முதல -*** *சந்திரன் முதலவாகிய கிரகங்களும்;* ***வான மீன் எலாம் தழுவ நின்ற -*** *ஆகாயத்தில் உள்ள நட்சத்திரங்கள் எல்லாமும் சூழ்ந்திருக்க விளங்கிய;* ***இந்திர தனுவில் தோன்றும் -*** *இந்திர வில் என்னும் வானவில்லைப் போன்று தோன்றிய;* ***தோரணம் இவர்ந்து நின்றான் -*** *அங்கிருந்த தோரண வாயில் மீது ஏறி நின்றான்.*

*இத் தோரண வாயில்,இராவணன், இந்திரனைப் போரில் புறங்கண்டபோது, அவனது அமராவதியில் இருந்ததைக் கவர்ந்து, அசோகவனத்தின் வாயிலாகக் கொண்டு வந்து வைத்ததாகும்.* ***(15)***

***5565. கேழ் இருமணியும் பொன்னும், விசும்பு இருள்***
***கிழித்து நீங்க,***
***ஊழ் இருங்கதிர்களோடும் தோரணத்து உம்பர்***
***மேலான்,***
***சூழ் இருங்கதிர்கள் எல்லாம் தோற்றிடச் சுடரும்***
***சோதி,***
***ஆழியின் நடுவண்தோன்றும் அருக்கனே அனையன்***
***ஆனான்.***

***கேழ் இருமணியும் பொன்னும் -*** *நல்ல நிறமுள்ள பெரிய இரத்தினங்களும், பொன்னும்;* ***விசும்பு இருள் கிழித்து நீங்க -*** *வானில் உள்ள இருளைப் பிளந்து நீங்கிட;* ***ஊழ் இருங்கதிர்களோடும் -*** *முறை முறையே தோன்றுகின்ற (இரத்தினம், பொன்) மிக்க கிரணங்களோடும் கூடிய;* ***தோரணத்து உம்பர் மேலான் -*** *அத்தோரண வாயிலின் மேல் ஏறி நின்ற அனுமன்;* ***சூழ் இருங்கதிர்கள் எல்லாம் தோற்றிட -*** *தன்னைச் சூழ்ந்த பெருங் கிரணங்கள் யாவும் தோன்றி விளங்க;* ***ஆழியின் நடுவண் தோன்றும் -*** *கடலின் நடுவில் விளங்குகின்ற;* ***சுடரும் சோதி அருக்கனே அனையன் ஆனான் -*** *விளங்குகின்ற பேரொளியை உடைய சூரியனை ஒத்தவன் ஆனான்.*

*தோரணத்துஉம்பர் மேலான் (அனுமன்) அருக்கன் (சூரியன்) அனையன் ஆனான். தோரணத்துக்குக் கடலும், மேலிடத்திருந்த அனுமனுக்குச் சூரியனும் உவமையாயின. தோரணம் - தோரண வாயில். அனுமனுக்குக் கதிரவனை முன்னும் (4768) உவமையாக்கினார்.* ***(16)***

***5566. செல்லொடுமேகம் சிந்த, திரைக் கடல் சிலைப்புத்***
***தீர,***
***கல் அளைக்கிடந்த நாகம் உயிரொடு விடமும் கால,***
***கொல் இயல்அரக்கர் நெஞ்சில் குடி புக அச்சம்,***

***வீரன்***
***வில் என இடிக்க,விண்ணோர் நடுக்குற, வீரன்***
***ஆர்த்தான்.***

***மேகம் செல்லொடுசிந்த*** - மேகங்கள் இடியுடன் சிதறி விழவும்; ***திரைக் கடல் சிலைப்பு தீர*** - அலைகளை உடைய கடல் தன் பேரொலி அடங்கிப் போகவும்; ***கல் அளைக் கிடந்த நாகம்*** - மலைப் பொந்துகளில் தங்கிக் கிடந்த பாம்புகள்; ***உயிரொடு விடமும் கால*** - தமது உயிரோடு நஞ்சையும் ஒன்று சேர்ந்து உமிழவும்; ***கொல் இயல் அரக்கர் நெஞ்சில் அச்சம் குடிபுக*** - பிறரைக் கொல்லும் தன்மையுள்ள அரக்கர்களது மனத்தில் பயம் வந்து புகுந்து நிலையாக நிற்கவும்; ***விண்ணோர் நடுக்கு உற*** - தேவர்கள் நடுக்கம் அடையவும்; ***வீரன் வில் என இடிக்க*** - ரகுவீரனான இராமபிரானது வில்லின் நாணொலி போல முழங்க; ***வீரன் ஆர்த்தான்*** - சிறந்த வீரனான அனுமன் கர்ச்சனை செய்தான்.

*செல் - இடி; 'வான் முழக்குச் செல்' (பரிபாடல் 13.44)* ***(17)***

***567. நின்றனதிசைக்கண் வேழம் நெடுங் களிச் செருக்கு***
***நீங்க,***
***தென் திசைநமனும் உள்ளம் துணுக்கென, சிந்தி***
***வானில்***
***பொன்றல் இல்மீன்கள் எல்லாம் பூ என உதிர,***
***பூவும்***
***குன்றமும்பிளக்க, வேலை துளக்குற, கொட்டினான்***
***தோள்.***

***திசைக்கண்நின்றன வேழம்*** - எட்டுத் திசைகளிலும்நின்றவையான திக்கு யானைகள்; ***நெடும் களிச் செருக்கு நீங்க*** - (தமது) மதக் களிப்பு நீங்கவும்; ***தென் திசை நமனும்*** - தெற்குத் திக்குப் பாலகனாகிய யமனும்; ***துணுக்கு என உள்ளம் சிந்த*** - திடுக்கிட்டு மனம் சிதறவும்; ***வானில் பொன்றல் இல் மீன்கள் எல்லாம் பூ என உதிர*** - ஆகாயத்தில் அழிவு பெறாத நட்சத்திரங்கள் யாவும் மலர்களைப் போலக் கீழே உதிர்ந்து விழவும்; ***பூவும் குன்றமும் பிளக்க*** - பூமியும் (அதன் மேலுள்ள) மலைகளும் பிளந்து போகவும்; ***வேலை துளக்குற தோள் கொட்டினான்*** - (அனுமன் தனது) தோளைத் தட்டினான்.

*பூ - பூமி; மீன்- நட்சத்திரங்கள்.* ***(18)***

*அனுமனை அணுக முடியாதஅரக்கர் தவிப்பு*

***5568. அவ் வழி,அரக்கர் எல்லாம், அலை நெடுங் கடலின்***
***ஆர்த்தார்;***
***செவ் வழிச்சேறல் ஆற்றார், பிணப் பெருங் குன்றம்***
***தெற்றி,***
***வெவ் வழி குருதிவெள்ளம் புடை மிடைந்து உயர்ந்து***

*வீங்க,*
*'எவ் வழிச்சேறும்' என்றார்; தமர் உடம்பு இடறி*
*வீழ்வார்.*

***அவ்வழி*** *- அப்போது;* ***அரக்கர் எல்லாம் -*** *போருக்குச் சென்ற அரக்கர்கள் யாவரும்;* ***அலை நெடும் கடலின் ஆர்த்தார் -*** *அலைகளை உடைய பெரிய கடல் போல ஆரவாரித்து;* ***பிணப் பெருங்குன்றம் தெற்றி -*** *பெரிய பிணமலைகள் கிடந்து போகவொட்டாது தடுத்தலாலும்;* ***வெவ் வழி குருதி வெள்ளம் புடைமிடைந்து உயர்ந்துவீங்க -*** *வெம்மையுடனே பெருகுகின்ற இரத்தப் பெருக்கு (போகும் இடங்களில் எல்லாம்) நெருங்கி மிக்குப் பெருகுவதாலும்;* ***தமர்உடம்பு இடறி வீழ்வார் -*** *தமது சுற்றத்தவர்களுடைய பிணங்களின் மேல்இடறி வீழ்கின்றவராய்;* ***செவ் வழி சேறல் ஆற்றார் -*** *(அனுமன் உள்ளஇடத்துக்கு) நேரான வழியில் செல்ல முடியாதவர்களாய்;* ***எவ்வழிச் சேறும்என்றார் -*** *எந்த வழியாகப் போய்ச் சேருவோம் என்று செல்லும் வழிதெரியாது திகைத்து நின்றார்கள். செவ்வழி - நேர் வழி; தெற்றுதல் -தடுத்தல்.* ***(19)***

*சம்புமாலி அணிவகுத்து வருதலும் அனுமன் போருக்குஅமைந்து நிற்றலும்*

***5569. ஆண்டுநின்று, அரக்கன், வெவ்வேறு அணி வகுத்து,***
***அனிகம்தன்னை,***
***மூண்டு இருபுடையும், முன்னும், முறை முறை முடுக***
***ஏவி,***
***தூண்டினன், தானும்திண் தேர்; தோரணத்து***
***இருந்த தோன்றல்,***
***வேண்டியதுஎதிர்ந்தான் என்ன, வீங்கினன், விசயத்***
***திண் தோள்.***

***அரக்கன் ஆண்டுநின்று -*** *சம்புமாலி அங்கிருந்து;* ***அனிகம் தன் னை-*** *தனது சேனையை;* ***வெவ்வேறு அணி வகுத்து -*** *வெவ்வேறு அணியாகப்பிரித்து;* ***இரு புடையும் முன்னும் முறை மூண்டு முடுக ஏவி -*** *அனுமனதுஇரண்டு பக்கங்களிலும் எதிரிலும் முறைமுறையாக மூண்டு விரையும் படிஆணையிட்டு;* ***தானும் திண் தேர் தூண்டினன் -*** *தானும் தனது வலிய தேரைச் செலுத்திக் கொண்டு சென்றான்;* ***தோரணத்து இருந்த தோன்றல் -*** *(அப்போது) தோரணத்தின் மீது அமர்ந்திருந்த அனுமன்;* ***வேண்டியது எதிர்ந்தான் என்ன -*** *தான் விரும்பியது தன்முன் எதிர்ப்பட்டது என்று;* ***விசயத் திண்தோள் வீங்கினன் -*** *தனது வெற்றி தரும் வலிய தோள்கள் பூரிக்கப்பெற்றான்.*

*சம்புமாலிசேனையை அணி வகுத்துக் கொண்டு தேரில் வருவதைப் பார்த்து, 'நாம் நினைத்தது வந்தது' என்று அனுமன்மகிழ்ந்தான்.அரக்கர் போருக்கு வரவில்லையே என்று எதிர்பார்த்து இருந்ததை 5564 ஆம் செய்யுளில் கூறினார். விசயம் - வெற்றி.* ***(20)***

***5570. ஐயனும்,அமைந்து நின்றான், ஆழியான் அளவின்***
***நாமம்***

***நெய் சுடர்விளக்கின் தோன்றும் நெற்றியே***
***நெற்றியாக,***
***மொய் மயிர்ச்சேனை பொங்க, முரண் அயில் உகிர்***
***வாள் மொய்த்த***
***கைகளே கைகள்ஆக, கடைக் கூழை திரு வால்***
***ஆக.***

***ஐயனும் -*** *தலைவனாகியஅனுமனும்;* ***ஆழியான் -*** *சக்கராயுதம் கொண்ட திருமாலின்;* ***அளவின் நாமம் -*** *பெருமையை உடைய திருநாமம்;* ***நெய்சுடர் விளக்கின் தோன்றும் -*** *நெய் ஊற்றி எரிகின்ற விளக்கின் சுடர் போலத் தோன்றுகின்ற;* ***நெற்றியே நெற்றியாக -*** *தன் நெற்றியே முன்னணிச் சேனையாகவும்;* ***மொய்ம் மயிர்ச் சேனை பொங்க -*** *உடம்பில் நெருங்கி வளர்ந்துள்ள உரோமங்களே படை வீரர்களாக முனைப்புடன் விளங்கவும்;* ***முரண் அயில் உகிர்வாள் மொய்த்த கைகளே -*** *வலிமையும் கூர்மையும் பொருந்திய நகங்களாகிய வாள்கள் செறிந்த கைகளே;* ***கைகளாக -*** *இரு பக்கங்களிலும் பொருந்தி வருகின்ற சேனைகளாகவும்;* ***திருவால் -*** *தெய்வத்தன்மை பொருந்திய வாலே;* ***கடைக் கூழையாக -*** *அணிவகுப்பின் பின்னணிச் சேனையாகவும்;* ***அமைந்து நின்றான் -*** *தான் ஒருவனே அணிவகுத்துள்ள ஒரு முழுச் சேனையாக அமைந்து போர்க்களத்திலே உறுதியாக நின்றான்.*

*சம்புமாலிதிரட்டிக் கொண்டு வந்த பல்வகைச் சேனைக்கு எதிராகத் தான் ஒருவனே ஒரு முழுச் சேனையாக அனுமன் அமைந்தான் என்பது கருத்து. சக்கரப் படை கொண்ட திருமாலாகிய இராமபிரானின் சார்பினன் ஆகையால் இவன் ஒருவனே போதும் என்று கம்பர் கருதுகிறார். யோகப் பயிற்சியும் பிரமசரிய ஒழுக்கமும் கொண்டோரின் நெற்றியில் ஒளி காணமுடியும். 'நெற்றி' இரு பொருளில் வந்தது; உடலுறுப்பாகிய நெற்றி சேனை அணி வகுப்பில் முன்னணியில் நிற்கும் சேனை; இதனைத் தார் என்ப. புறப்பொருள் இலக்கணங்கள். நெற்றியில் அரக்கர் பதி செல்ல (6750) என்ற இடத்தில் 'நெற்றி' இப் பொருளில் வந்தது காண்க. கை; பக்கம்; கைகள்; இரு பக்கத்துஅணிவகுத்த சேனைகள்.(கை என்பதற்கே சேனை என்னும் பொருள் உண்டு லெக்சிகன்). கூழை; அணிவகுப்பில் கடைசியிலுள்ள படை மயிர்ச் சேனை உகிர்வாள்; உருவகங்கள் திருவால்; அழகிய வால் என்றும் கொள்ளலாம்.* ***(21)***

*அரக்கர் படை விடஅனுமன் கடும் போர் செய்தல்*

***5571. வயிர்கள்வால் வளைகள் விம்ம, வரி சிலை***
***சிலைப்ப, மாயப்***
***பயிர்கள்ஆர்ப்பு எடுப்ப, மூரிப் பல்லியம் குமுற,***
***பற்றி-***
***செயிர் கொள்வாள் அரக்கர், சீற்றம் செருக்கினர்,-***
***படைகள் சிந்தி,***
***வெயில்கள்போல்ஒளிகள் வீச, வீரன்மேல் கடிது***
***விட்டார்.***

***செயிர்கொள்வாள் அரக்கர் -*** *பகைமை கொண்டவாளேந்திய அரக்கர்கள்;* ***சீற்றம் செருக்கினர் -*** *சினத்தால் பெருமிதம் கொண்டவர்களாய்;* ***வயிர்கள் வால் வளைகள்***

***விம்ம* -** *கொம்புகளும் வெண்மையான சங்குகளும் முழங்கவும்;* ***வரிசிலை சிலைப்ப* -** *கட்டமைந்த விற்கள் நாணொலியை உண்டாக்கவும்;* ***மாயப் பயிர்கள் ஆர்ப்பு எடுப்ப* -** *மாயவினைகளை விளைவிக்கும் பயிர்கள் போன்ற அரக்கர்கள் (மகிழ்ச்சி கொண்டு) ஆரவாரம் செய்யவும்;* ***மூரிப் பல் இயம் குமுற* -** *பெரிய பல வாத்தியங்கள் முழங்கவும்;* ***படைகள் பற்றி* -** *ஆயுதங்களைத் தமது கைகளினால் எடுத்து;* ***வெயில்கள் போல் ஒளிகள் வீச* -** *வெயில்களைப் போலப் பல ஒளிகள் வீசும்படி;* ***வீரன் மேல் கடிது சிந்தி விட்டார்* -** *அனுமன் மீது விரைவாக நாற்புறமும் சிதறும்படி விட்டார்கள்.*

*அரக்கர்செருக்கினராய், விம்ம, சிலைப்ப, ஆர்ப்பெடுப்ப, குமுற, படைகள் ஒளி வீச வீரன் மேல் விட்டனர்.* ***(22)***

**கலிவிருத்தம்**

***5572. கருங் கடல்அரக்கர்தம் படைக்கலம் கரத்தால்***
***பெருங் கடல்உறப் புடைத்து, இறுத்து, உக,***
***பிசைந்தான்;***
***விரிந்தனபொறிக் குலம்; நெருப்பு என வெகுண்டு,***
***ஆண்டு***
***இருந்தவன்,கிடந்தது ஓர் எழுத் தெரிந்து எடுத்தான்.***

***ஆண்டு இருந்தவன்*-** *அந்தத்தோரணத்தின் மீது இருந்த அனுமன்;* ***கரத்தால்* -** *(தனது) கைகளாலே;* ***கருங்கழல் அரக்கர் தம் படைக்கலம்* -** *பெரிய வீரக் கழலணிந்த அந்த அரக்க வீரர்கள் எறிந்த ஆயுதங்களை;* ***பெருங்கடல் உற புடைத்து இறுத்து* -** *பெரிய கடலில் போய் விழும் படி அடித்தும், முறித்தும்;* ***உகபிசைந்தான்* -** *சிதறிப் போகும்படி பயன்படாத வகையில் அழித்தெறிந்தான்;* ***பொறிக் குலம் விரிந்தன* -** *(அச்செய்கையால்) வண்டுகளின் கூட்டம் எங்கும் பரவலாயின;* ***நெருப்பு என வெகுண்டு* -** *(அப்போது அவன்) பற்றி எரிகின்ற தீயைப் போலப் பெருங்கோபம் கொண்டு;* ***கிடந்தது ஓர் எழு தெரிந்து எடுத்தான்* -** *அங்குக் கிடந்த ஒரு இரும்புத் தடியைத் தேர்ந்து எடுத்துக்கொண்டான்.*

*அனுமன்போர்க்களத்தில் செய்த வீரச் செயல் கூறப்பட்டது. பொறி - வண்டு; ஆகுபெயர். 'பொறிக்குலம் எழ' (5429) என முன்னும் வந்தது.* ***(23)***

***5573. இருந்தனன்,எழுந்தனன், இழிந்தனன், உயர்ந்தான்,***
***திரிந்தனன்,புரிந்தனன், என நனி தெரியார்;***
***விரிந்தவர்,குவிந்தவர், விலங்கினர், கலந்தார்,***
***பொருந்தினர்,நெருங்கினர், களம் படப் புடைத்தான்.***

***இருந்தனன்எழுந்தனன் இழிந்தனன் உயர்ந்தான்* -** *தோரணத்தில் மீது அமர்ந்திருந்த அனுமன், எழுந்து, கீழ் இறங்கி, நிமிர்ந்தவனாகி;* ***என நனி தெரியார்* -** *என்று நன்றாகத் தெரிந்து கொள்ளாதவராய்;* ***விரிந்தவர்* -** *பரவி நின்றவர்களும்;* ***குவிந்தவர்* -** *ஒருங்கு சேர்ந்திருந்தவர்களும்;* ***விலங்கினர் கலந்தார்* -** *விலகிச் சென்றவர்களும், ஒன்று படக் கலந்து கொண்டவர்களும்;* ***பொருந்தினர் நெருங்கினர்* -** *போர்க்களத்தில்*

*பொருந்தியிருந்தவர்களும், நெருங்கி நின்றவர்களும்;* ***களம்படப் புடைத்தான் -*** *போர்க்களத்தில் அழிந்து போக, அந்த எழுவால் ஒரு சேர அடித்துக் கொன்றான்.*

*அனுமன் எப்படிச்செயல்படுகிறான் என்பதைக்கூட அரக்கரால் அறிய முடியவில்லை; அவ்வளவு வேகமாக அவன் செயல்பட்டான்.என்ன நடக்கிறதுஎன்பதை அரக்கர் சேனை அறியுமுன்னே அனுமன் அவர்களை அழித்தான். இருந்தவன் (அனுமன்) எழுந்து, இழிந்து, உயர்ந்து, திரிந்து போர் செய்தான்; அவன் செயலை அறியாத அரக்க வீரர்களை எழுவால் அடித்துக் கொன்றான். இருந்தனன். வினையாலணையும் பெயர். எழுந்தனன் இழிந்தனன் உயர்ந்தான் திரிந்தனன் - முற்றெச்சங்கள்.* ***(24)***

## *5574. எறிந்தன,எய்தன, இடி உரும் என மேல்*
## *செறிந்தனபடைக்கலம், இடக் கையின் சிதைத்தான்,*
## *முறிந்தன தெறும்கரி; முடிந்தன தடந் தேர்;*
## *மறிந்தன பரிநிரை-வலக் கையின் மலைந்தான்.**

***எறிந்தன, எய்தன-*** *அரக்கர்களால் வீசி எறியப்பட்டனவும், எய்யப்பட்டனவுமாகிய;* ***இடி உரும் என மேல் செறிந்தன படைக்கலம் -*** *பேரிடி போலத் தன் மேல் நெருங்கி செறிந்தனவான ஆயுதங்களை எல்லாம்;* ***இடக் கையின் சிதைத்தான் -*** *(தனது) இடக்கையால் அழித்துத்தள்ளி;* ***வலக் கையின் மலைந்தான் -*** *தன் வலக்கையால் போர் செய்யலானான்;* ***தெறும் கரி முறிந்தன -*** *(அதனால்) எதிர்த்து அழிக்கும் வலிமையுள்ளயானைகள் முறிபட்டு இறந்தன;* ***தடம் தேர் முடிந்தன -*** *பெரிய தேர்கள் சிதைந்து போயின;* ***பரிநிரை மறிந்தன -*** *குதிரைகளின் கூட்டம் கீழே விழுந்து இறந்தன.*

*அனுமன் தன் இருகைகளாலும் விரைந்து போர் செய்த திறம் கூறப்பட்டது. சிதைத்தான்; முற்றெச்சம்.* ***(25)***

## *5575. இழந்தனநெடுங் கொடி; இழந்தன இருங் கோடு;*
## *இழந்தன நெடுங்கரம்; இழந்தன வியன் தாள்;*
## *இழந்தன முழங்குஒலி; இழந்தன மதம் பாடு;*
## *இழந்தன பெருங்கதம்-இருங் கவுள் யானை.*

***இருங்கவுள் யானை-*** *(அனுமனால் அடிக்கப்பட்ட) மதம் பெருகும் கன்னத்தை உடைய யானைகள்;* ***நெடுங் கொடி இழந்தன -*** *(தம் மேல் பிடிக்கப்பட்ட) பெரிய கொடிகளை இழந்தன;* ***இருங்கோடு இழந்தன -*** *பெரிய தந்தங்களை இழந்தன;* ***நெடும் கரம் இழந்தன -*** *பெரிய துதிக்கைகளை இழந்தன;* ***வியன்தாள்இழந்தன -*** *பெரிய கால்களை இழந்தன;* ***முழங்கு ஒலி இழந்தன -*** *வீறிடுகின்ற ஒலியை இழந்தன;* ***மதம் பாடு இழந்தன -*** *மதம் ஒழுகுதலைஇழந்தன;* ***பெருங் கதம் இழந்தன -*** *பெரிய கோபத்தை இழந்தன. அனுமனால் யானைப்படைகள் அழிந்தமை கூறப்பட்டது. யானையின் மீது கொடி எடுத்தல் மரபு. கோபத்தைக் காட்ட முடியாதபடி யானைகள் இறந்தன என்பதை பெருங்கதம் இழந்தன என்று குறித்தார். உயிர் இருந்தால்தானே உணர்ச்சியைக் காட்ட முடியும் ?* ***(26)***

*5576.* ***நெரிந்தனதடஞ் சுவர்; நெரிந்தன பெரும் பார்;***
***நெரிந்தன நுகம்புடை; நெரிந்தன அதன் கால்;***
***நெரிந்தனகொடிஞ்சிகள்; நெரிந்தன வியன் தார்;***
***நெரிந்தன கடும்பரி; நெரிந்தன நெடுந் தேர்.***

***தடம் சுவர்நெரிந்தன*** *- (வீரர்கள் ஏறிவந்ததேர்களினுடைய) சுற்றுப் புறங்கள் நொறுங்கிப் போயின;* ***பெரும்பார் நெரிந்தன*** *- பெரிய அச்சுக் கட்டைகள் நொறுங்கிப் போயின;* ***நுகம் புடை நெரிந்தன*** *- நுகத்தடிகள் பக்கங்களிலே நொறுங்கிப் போயின;* ***அதன்கால் நெரிந்தன*** *- அத்தேர்களின் சக்கரங்கள் நொறுங்கிப் போயின;* ***கொடிஞ்சிகள் நெரிந்தன*** *- மேல் தட் டுகள்நொறுங்கிப் போயின;* ***வியன்தார் நெரிந்தன*** *- சிறந்த மாலைகள் நொறுங்கிப்போயின;* ***கடும்பரி நெரிந்தன*** *- அவற்றில் பூட்டப்பட்டுள்ள வேகமானகுதிரைகள் அழிந்து போயின;* ***நெடும் தேர் நெரிந்தன*** *- (முடிவாகப்) பெரியதேர்களே நொறுங்கிப் போயின. தேர்ப்படையின்அழிவு கூறப்பட்டது. தேரின் பல உறுப்புக்கள் கூறப்பட்டுள்ளன. நுகம் - (குதிரைகளைப் பூட்டுவதற்குரிய) குறுக்குக் கட்டை. கொடிஞ்சி; தாமரை வடிவமாகப் பண்ணித் தேரின் முன்னே நடப்படுவதோர் உறுப்பு. கால் - சக்கரம்; பார் - தேரின் அடிப்பாகத்தில் உள்ள நெடுஞ் சட்டம்.* ***(27)***

*5577.* ***ஒடிந்தன;உருண்டன; உலந்தன; புலந்த;***
***இடிந்தன;எரிந்தன; நெரிந்தன; எழுந்த;***
***மடிந்தன;மறிந்தன; முறிந்தன; மலைபோல்,***
***படிந்தன;முடிந்தன; கிடந்தன-பரி மா.***

***பரிமா*** *- வீரர்கள்ஏறிவந்த குதிரைப் படைகள்;* ***ஒடிந்தன உருண்டன உலந்தன*** *- சில உடலுறுப்புக்கள் ஒடியப்பட்டுக் கீழே விழுந்து உருண்டு இறந்தன;* ***புலந்த*** *- துன்பப்பட்டன;* ***இடிந்தன எரிந்தன நெரிந்தன*** *- சில இடிந்து எரிந்து நொறுங்கித் தூளாகப் போயின;* ***எழுந்த*** *- மேலே கிளம்பின;* ***மடிந்தன மறிந்தன முறிந்தன*** *- சில குதிரைகள் எழும் போது, அவற்றின் கால்கள் மடிப்புண்டும்,முன்பின்னாகத்திருப்பப் பட்டும் முறிந்து போயின;* ***மலை போல் படிந்தன முடிந்தன கிடந்தன*** *- (இவ்வாறு பல குதிரைகள் இந்திரனால் இறகு முறிக்கப்பட்ட) மலைபோல (தம்முடையகதி) முடியப் பெற்று கீழே விழுந்து கிடந்தன.*

*குதிரைப்படைகளின் அழிவு கூறப்பட்டது. தார் - கிண்கிணிமாலை.* ***(28)***

*5578.* ***வெருண்டனர், வியந்தனர், விழுந்தனர், எழுந்தார்;***
***மருண்டனர்,மயங்கினர், மறிந்தனர், இறந்தார்;***
***உருண்டனர்,உலைந்தனர், உழைத்தனர், பிழைத்தார்;***
***சுருண்டனர்,புரண்டனர், தொலைந்தனர்;-***
***மலைந்தார்.***

***மலைந்தார்*** *- அனுமனோடுபோர் செய்த அரக்கர்களில் (சிலர்);* ***வெருண்டனர் வியந்தனர் விழுந்தனர்*** *- அனுமனது திறத்தைக் கண்டு அச்சம் கொண்டு வியந்தவண்ணம் கீழே விழுந்தனர்;* ***எழுந்தார்*** *- விழுந்தவர்களில் சிலர் எழுந்தார்;* ***மருண்டனர் மயங்கினர் மறிந்தனர் இறந்தார்*** *- மருண்டும் மயங்கியும் குப்புற விழுந்து*

*இறந்தனர்;* ***பிழைத்தார் உருண்டனர் உலைந்தனர் உழைத்தனர் -*** *(அவ்வாறு இறவாமல்) உயிர் பிழைத்தவர்களில் சிலர் உருண்டு, வருந்தி உடல் துவண்டு;* ***சுருண்டனர் புரண்டனர், தொலைந்தனர் -*** *தமது உறுப்புக்கள் சுருளப் பெற்று, பூமியில் புரண்டு வலிகெட்டு ஓடிவிட்டனர்.*

*இது,காலட்படையின் அழிவு கூறியது.* ***(29)***

## *5579. கரிகொடுகரிகளைக் களப் படப் புடைத்தான்;*
## *பரிகொடுபரிகளைத் தலத்திடைப் படுத்தான்;*
## *வரி சிலை வயவரைவயவரின் மடித்தான்;*
## *நிரை மணித்தேர்களைத் தேர்களின் நெரித்தான்.*

***கரி கொடுகரிகளை களப்படப் புடைத்தான் -*** *(அனுமன்) யானைகளைக் கொண்டே, யானைகளைப் போர்க்களத்தில் இறந்து விழும்படி அடித்துக் கொன்றான்;* ***பரி கொடு பரிகளைத் தலத்திடைப் படுத்தான் -*** *குதிரைகளைக் கொண்டே குதிரைகளைத் தரையில் வீழ்த்தி அழித்தான்;* ***வரி சிலை வயவரை வயவரின் மடித்தான் -*** *கட்டமைந்த வில்லை உடைய வீரர்களை அவ்வீரரில் சிலரை எடுத்து விட்டெறிந்து அழித்தான்;* ***நிரை மணித் தேர்களைதேர்களின்நெரித்தான் -*** *வரிசையாக மணிகள்கட்டிய தேர்களை (அவ்வாறான) தேர்களைக் கொண்டே அழித்துக் குவித்தான்.*

*இது, நால்வகைச்சேனைகளையும் அவ்வச் சேனைகளையே தன் போர்க் கருவியாகக் கொண்டு அனுமன் அழித்ததைக் கூறுவது. வெவ்வேறு வினைமுற்றுகள் கொண்டு, அழித்தலாகிய ஒரு முடிபைக் காட்டிய நயம் உணரத்தக்கது. மேலும், செயலின் கொடுமையை வினைமுற்றுகளின் வல்லோசை குறிப்பாகப் புலப்படுத்தியதும் காணத்தக்கது.* ***(30)***

## *5580. மூளையும்உதிரமும் முழங்கு இருங் குழம்பு ஆய்*
## *மீள் இருங்குழைபட, கரி விழுந்து அழுந்த,*
## *தாளொடும் தலைஉக, தட நெடுங் கிரிபோல்*
## *தோளொடும்நிருதரை, வாளொடும்-துகைத்தான்.*

***மூளையும் உதிரமும்-*** *(அரக்கர்களது) மூளைகளும் இரத்தமும்;* ***முழங்கு இரும் குழம்பு ஆய் -*** *கொதிக்கின்ற பெரிய குழம்பு போலாகி;* ***மீள் இரும் குழை பட -*** *(கண்டவர் அஞ்சி) மீள்கின்ற மிக்க குழை சேறாய் விட;* ***கரி விழுந்து அழுந்த -*** *அச்சேற்றில் யானைகள் விழுந்து அழுந்தி இறந்து போக;* ***தாளொடும் தலை உக -*** *கால்களும் தலைகளும் சிந்திவிழ;* ***தட நெடும் கிரி போல் நிருதரை -*** *பெரிய நீண்ட மலைகளைப் போன்ற அரக்கர்களை;* ***தோளொடும் வாளொடும் துகைத்தான் -*** *தோள்களோடும், (அவர் கையில் கொண்ட) வாளுடனும் (அனுமன் தனது கால்களால்) துகைத்து அழித்தான்.* ***(31)***

## *5581. மல்லொடுமலை மலைத் தோளரை, வளை வாய்ப்*
## *பல்லொடும்,நெடுங் கரப் பகட்டொடும், பருந் தாள்*
## *வில்லொடும், அயிலொடும், விறலொடும், விளிக்கும்*

***சொல்லொடும், உயிரொடும் நிலத்தொடும்,-***
***துகைத்தான்.***

***மல்லொடு மலை -*** *மல்யுத்தத்தில போர் செய்யும்;* ***மலைத் தோளரை -*** *மலை போன்ற தோள்களை உடைய வீரர்களை;* ***வாய் வளை பல்லொடும் -*** *அவர்களுடைய வாயில் உள்ள வளைந்த பற்களோடும்;* ***நெடும் பகடு கரமொடும் -*** *நீண்ட வலிய கைகளோடும்;* ***பரும் தாள் வில்லொடும் அயிலொடும் -*** *(அவர்கள் கைகளில் கொண்ட) பருத்த அடியை உடைய வில்லுகளோடும்,வேல்களோடும்;* ***விறலொடும் -*** *வீரத்தோடும்;* ***விளிக்கும் சொல்லொடும் -*** *கூவுகின்ற சொற்களோடும்;* ***உயிரொடும் -*** *அவர்கள் உயிர்களோடும்;* ***நிலத் தொடும் துகைத்தான் -*** *பூமியோடு பூமியாய் அழுந்த மிதித்து அழித்தான்.*

*பகடு - வலிமை;'பகட்டு மார்பின்' (புற, நா, 88,4)* ***(32)***

***5582. புகை நெடும்பொறி புகும் திசைதொறும்***
***பொலிந்தான்;***
***சிகை நெடுஞ்சுடர் விடும் தேர்தொறும் சென்றான்;***
***தகை நெடுங்கரிதோறும், பரிதொறும், சரித்தான்;***
***நகை நெடும்படைதொறும், தலைதொறும், நடந்தான்.***

***புகை நெடும்பொறி புகும் திசை தொறும் பொலிந்தான் -*** *புகையோடுகூடிய நீண்ட நெருப்புப் பொறி (சினத்தீ) செல்லும் இடங்களில் எல்லாம் சென்று விளங்குபவனாகிய அனுமன்;* ***சிகை நெடும் சுடர் விடும் தேர்தொறும் சென்றான் -*** *சிகரங்களினின்று நீண்ட ஒளி விடும் தேர்கள் இருக்குமிடம் எல்லாம் சென்றான்;* ***தகை நெடும் கரிதொறும் பரிதொறும், சரித்தான் -*** *சிறப்பமைந்த பெரிய யானைகள் குதிரைகள் இருக்கும் இடங்களில் எல்லாம் சஞ்சரித்தான்;* ***நகை நெடும் படை தொறும் -*** *(தன்னைப் பார்த்து அற்பக்குரங்கு என்று) ஏளனம் செய்து சிரித்த போர்ப் படைகள் தோறும்;* ***தலை தொறும் நடந்தான் -*** *அப்படையில் உள்ள வீரர்கள் தலை தோறும் நடந்து சென்று அவர்களை அழித்தான்.*

*பொலிந்தான்;வினையாலணையும் பெயர். (பொலிந்தவன்)* ***(33)***

***5583. வென்றிவெம் புரவியின் வெரிநினும், விரவார்***
***மன்றல் அம்தார் அணி மார்பினும், மணித் தேர்***
***ஒன்றின்நின்றுஒன்றினும், உயர் மத மழை தாழ்***
***குன்றினும்,-கடையுகத்து உரும் எனக் குதித்தான்.***

***வென்றிவெம்புரவியின் வெரிநினும் -*** *வெற்றியைத் தரத்தக்கவலிய குதிரைகளின் முதுகிலும்;* ***விரவார் மன்றல் அம் தார் அணி மார்பினும் -*** *பகைவர்களான அரக்க வீரர்களது நறுமணம் உள்ள மாலைகள் அணிந்த மார்புகளிடத்தும்;* ***மணித்தேர் ஒன்றின் நின்று ஒன்றினும் -*** *மணிகள் கட்டப்பெற்ற தேர்கள் ஒன்றிலிருந்து மற்றொன்றிலும்;* ***உயர் மத மழை தாழ் குன்றினும் -*** *உயர்ந்தோங்கியமதமாகிய மழைபொழிகின்ற மலை போன்ற யானைகளிடத்திலும்;* ***கடை யுகத்து -*** *யுக முடிவின் காலத்தில்;* ***உரும் எனக் குதித்தான் -*** *தோன்றும் இடியே போல, (அனுமன்) குதித்து அழித்தான்.*

*முன் கவியில்,சொல்லப்பட்டது, இங்கு விரித்துரைக்கப்படுகின்றது. மதமழைதாழ் குன்று - என்ற குறிப்பால் யானை என்பது உணர்த்தப்பட்டது.*
***(34)***

***5584. பிரிவு அரும் ஒரு பெருங் கோல் என, பெயரா***
***இருவினைதுடைத்தவர் அறிவு என, எவர்க்கும்***
***வரு முலை விலைக்குஎன மதித்தனர் வழங்கும்***
***தெரிவையர் மனம்என, கறங்கு என,-திரிந்தான்.***

***பிரிவு அரும் ஒருபெருங் கோல் என -*** *(அப்போது அனுமன்) நீங்காது நிலையாக நடைபெறும் ஒப்பற்ற செங்கோல் போலவும்;* ***பெயரா இரு வினை துடைத்தவர் அறிவு என -*** *நீங்காத புண்ணியம் பாவம் என்ற இரு வினைகளை அழித்த பெரியோரது ஞானம் போலவும்;* ***எவர்க்கும் -*** *(இன்னார் இனியார் என்று பாராமல்) யாவர்க்கும்;* ***வரு முலை விலைக்கு என மதித்தனர் -*** *தம் வளர்ந்து வரும் முலைகளை அவர்கள் கொடுக்கும் விலைப் பொருளுக்கே என்று தீர்மானித்தவர்களாய்;* ***வழங்கும் தெரிவையர் மனம் என -*** *பொருளுக்குத் தக்கபடி அளித்து வரும் விலைமகளிர் மனத்தைப் போலவும்;* ***கறங்கு என -*** *காற்றாடியைப் போலவும்;* ***திரிந்தான் -*** *(அரக்கரைக் கொல்லுமாறு) திரிந்து கொண்டிருந்தான்.*

*பிரிவு அரும்பெருங் கோல் என அரசனுடைய செங்கோல் உறங்காது உலகெங்கும் சென்று ஆணை செலுத்தும். 'உறங்கு மாயினும் மன்னவன் தன்னொளி கறங்கு தெண்டிரை வையகம் காக்குமால்' - (சீவக சிந்தாமணி 248) என்று ஆட்சித் தத்துவம் காலம் இடம் ஆகியவற்றில் இடையீடு இன்றி நிலவுவதைத் திருத்தக்க தேவர் குறித்தமை காண்க. பொன்விலை மகளிர் மனம் எனக் கீழ்போய் (106) என முன்னரும் விலைமகளிர் மனத்தின் கீழ்மை குறிக்கப்பட்டது. தாடகை வதைப் படலத்தில் 'முத்தியில் போவது புரிபவர் மனமும் பொன் விலைப் பாவையர் மனமும் போல் (353) என்ற வரிகளில் ஞானியர், பரத்தையர் இருவர் நிலையும் இப்பாடலிற்போலவே ஒருங்கு இணைத்துக் காட்டப்பட்டன.* ***(35)***

***585. அண்ணல்-அவ் அரியினுக்கு அடியவர் அவன் சீர்***
***நண்ணுவர் எனும்பொருள் நவை அறத் தெரிப்பான்,***
***மண்ணினும்,விசும்பினும், மருங்கினும், வலித்தார்***
***கண்ணினும்,மனத்தினும்,-தனித் தனி கலந்தான்.***

***அண்ணல் -*** *பெரியோனாகிய அனுமன்;* ***அவ் அரியினுக்கு அடியவர் -*** *அந்தத் திருமாலுக்கு அடியவர்கள்;* ***அவன் சீர் நண்ணுவர் எனும் பொருள் -*** *அவனுக்குரிய சிறப்புக்களை அடைவர் என்று கூறப்படும் சாத்திரப் பொருளை;* ***நவை அறத் தெரிப்பான் -*** *குற்றமில்லாமல் (செவ்வனே) தெரிவிப்பவனாய்;* ***மண்ணினும் விசும்பினும் மருங்கிலும் -*** *பூமியிலும் வானத்திலும் பக்கங்களில் உள்ள திக்குகளிலும்;* ***வலித்தார் -*** *வலிமை கொண்டு போரிட்ட அரக்கர்களுடைய;* ***கண்ணினும் மனத்தினும் -*** *கண்ணுக்கு எதிரிலும் மனத்திலும்;* ***தனித்தனி கலந்தான் -*** *ஒவ்வொருவரிடமாகவும் கலந்து விளங்கினான்.* ***(36)***

***5586. கொடித்தடந் தேரொடும் குரகதக் குழுவை***
***அடித்து, ஒரு தடக்கையின் நிலத்திடை அரைத்தான்;***

***இடித்து நின்றுஅதிர் கதத்து, எயிற்று வன்***
***பொருப்பை,***
***பிடித்து, ஒருதடக் கையின், உயிர் உகப் பிழிந்தான்.***

***குரகதக் குழுவை*** - *குதிரைக்கூட்டங்களை;* ***கொடித் தடம் தேரொடும்*** - *கொடி கட்டிய பெரிய தேர்களோடும்;* ***ஒரு தடக் கையின் அடித்து*** - *ஒரு பெரிய கையால் அடித்து;* ***நிலத்திடை அரைத்தான்*** - *தரையிலே தேய்த்தான்;* ***கதத்து இடித்து நின்று அதிர்*** - *சினத்தினால் கர்ச்சித்து நின்று பேரொலி செய்கின்ற;* ***எயிற்றுவன் பொருப்பை*** - *தந்தங்களை உடைய வலியமலை போன்ற யானைகளை;* ***ஒரு தடக்கையின் பிடித்து*** - *மற்றொரு பெரிய கையினால் பிடித்து;* ***உயிர் உகப் பிழிந்தான்*** - *அவற்றின் உயிர் சிந்தப் பிழிந்து கொன்றான்.*

*பொருப்பு; யானை. உவமை ஆகுபெயர். எயிற்று வன் பொருப்பு எனத் தந்தங்களை உடைய மலை என யானையை உருவகித்தார்.* ***(37)***

***5587. கறுத்து எழுநிறத்தினர், எயிற்றினர், கயிற்றார்,***
***செறுத்து எரிவிழிப்பவர், சிகைக் கழு வலத்தார்,***
***மறுத்து எழுமறலிகள் இவர் என அதிர்ந்தார்,***
***ஒறுத்து,உருத்திரன் என, தனித் தனி உதைத்தான்.***

***கறுத்து எழுமனத்தினர்*** - *கோபித்து எழுகின்றமனத்தை உடையவர்களும்;* ***எயிற்றினர்*** - *கோரப் பற்களை உடையவர்களும்;* ***கயிற்றார்*** - *பாசம் என்னும் ஆயுதத்தைக் கொண்டவர்களும்;* ***செறுத்து எரி விழிப்பவர்*** - *பகைத்து நெருப்புப் போல விழிப்பவர்களும்;* ***சிகைக் கழு வலத்தார்*** - *கூரிய கழு என்னும் படை வலிமை உடையவர்களும்;* ***இவர் மறுத்து எழு மறலிகள் என அதிர்ந்தார்*** - *இவர்கள் பகைமை பாராட்டிக் கிளம்புகின்ற யமன்களே என்னும்படி பெரு முழக்கம் செய்பவர்களுமான அரக்க வீரரை;* ***ஒறுத்து*** - *கடிந்து;* ***உருத்திரன் என*** - *உருத்திர மூர்த்தியைப் போல;* ***தனித் தனி உதைத்தான்*** - *அனுமனும் ஒவ்வொருவராக உதைத்துக் கொன்றான்.*

*மார்க்கண்டேயர்பொருட்டு, சிவபிரான் யமனைத் தன் திருவடியால் உதைத்து அழித்ததைக் குறிக்கொண்டு, அனுமன், உருத்திரன் எனப்பட்டான். கயிறு - பாசப் படை; சிகைக்கழு - நுனி கூரிய கழுப்படை.* ***(38)***

***5588. சக்கரம்,தோமரம், உலக்கை, தண்டு, அயில், வாள்,***
***மிக்கன தேர்,பரி, குடை, கொடி, விரவி***
***உக்கன; குருதிஅம்பெருந் திரை உருட்டிப்***
***புக்கன கடலிடை,நெடுங் கரப் பூட்கை.***

***உக்கன குருதி அம்பெரும் திரை உருட்டி*** - *அரக்கர்கள் சிந்திய இரத்த வெள்ளத்துப் பெரும் அலைகளால் உருட்டப்பட்டதால் (அவற்றின் இடையே);* ***சக்கரம், தோமரம்*** - *சக்கரங்களும் பெரிய தண்டாயுதங்களும்;* ***உலக்கை, தண்டு, அயில்வாள்*** - *உலக்கைகளும் கதைகளும் வேல்களும் வாள்களும்;* ***மிக்கன*** - *மிகுந்தனவாகி;* ***தேர், பரி, குடை, கொடி விரவி*** - *தேர்களும், குதிரைகளும், குடைகளும் கொடிகளும்*

*ஒன்றாகக் கலந்து;* ***நெடும் கரப் பூட்கை -*** *நீண்ட துதிக்கைகளை உடைய யானைகள்;* ***கடல் இடை புக்கன -*** *கடலின் இடையே போய்ப் புகுந்தன.*

*பூட்கை - பூண் + கை; யானை.* ***(39)***

***5589. எட்டின விசும்பினை;- எழுப் பட எழுந்த-***
***முட்டின மலைகளை;முயங்கின திசையை;***
***ஒட்டின ஒன்றைஒன்று; ஊடு அடித்து உதைந்து***
***தட்டுமுட்டு ஆடின,தலையொடு-தலைகள்.***

***எழுபட எழுந்ததலைகள் -*** *(அனுமன் வீசிய) எழுஎன்னும் ஆயுதம் பட்டதனால் (உடலை விட்டு வேறாகி) எழுந்தனவான அரக்கர்களின் தலைகள்;* ***விசும்பினை எட்டின -*** *ஆகாயத்தை அளாவினவும்;* ***மலைகளை முட்டின -*** *மலைகளின் மீது மோதியனவும்;* ***திசையை முயங்கின -*** *திக்குகளைத் தழுவியனவும்;* ***ஒன்றை ஒன்று ஒட்டின -*** *ஒன்றோடு ஒன்று சேர்ந்தனவுமாகி;* ***ஊடு அடித்து உதைந்து -*** *போர்க்களத்தில் அடிபட்டுத் தள்ளப்பட்டு;* ***தலையொடு தட்டு முட்டு ஆடின -*** *(முன்னமே போர்க்களத்தில்) விழுந்து கிடந்த) தலைகளோடு தட்டு முட்டுப் பொருள் போல அங்கும் இங்கும் சிதறிக் கிடந்தன.* ***(40)***

*சம்புமாலிசினத்தோடு போருக்கு விரைதல்*

**அறுசீர்ஆசிரிய விருத்தம்**

***5590. கானே காவல் வேழக் கணங்கள் கத வாள் அரி***
***கொன்ற***
***வானே எய்த,தனியே நின்ற மத மால் வரை***
***ஒப்பான்,***
***தேனே புரை கண்கனலே சொரிய, சீற்றம்***
***செருக்கினான்,***
***தானேஆனான்-சம்புமாலி, காலன் தன்மையான்.***

***காலன்தன்மையான் சம்பு மாலி -*** *யமன் போன்ற கொடிய தன்மையனாகிய சம்புமாலி;* ***கத(ம்)வாள் அரி கொன்ற -*** *கோபம் உள்ள ஒளி தங்கிய சிங்கத்தினால் கொல்லப்பட்டனவாய்;* ***கானே காவல் வேழம் கணங்கள் வானே எய்த -*** *காட்டையே தங்கட்கு உரிய வாழிடமாகக் கொண்ட யானைக் கூட்டங்கள் விண்ணுலகம் சேர (இறக்க);* ***தனியே நின்ற மதமால் -*** *தனிப்பட்டு நின்ற;* ***வரை ஒப்பான் -*** *மத மயக்கம் கொண்ட யானையை ஒத்து;* ***தானே ஆனான் -*** *(தன்னோடு வந்தவரெல்லாம் இறக்க) தான் ஒருவனே எஞ்சி நின்றவனாய்;* ***தேனே புரை கண் கனலே சொரிய-*** *தேனை ஒத்துச்சிவந்த கண்கள் நெருப்புப் பொறியை வெளிப்படுத்த;* ***சீற்றம் செருக்கினான் -*** *கோபம் மிக்கவனானான்.* ***(41)***

***5591. காற்றின் கடிய கலினப் புரவி நிருதர் களத்து***
***உக்கார்;***
***ஆற்றுக் குருதிநிணத்தோடு அடுத்த அள்ளல்***

**பெருங் கொள்ளைச்**
**சேற்றில்செல்லாத் தேரின் ஆழி ஆழும்; நிலை**
**தேரா,**
**வீற்றுச்செல்லும் வெளியோ இல்லை; அளியன்**
**விரைகின்றான்.**

***காற்றின் கடியகலினப் புரவி நிருதர்*** - காற்றினும் விரைந்து செல்வனவான, கடிவாளம் பூட்டிய குதிரை வீரர்களான அரக்கர்கள்; ***களத்து உக்கார்*** - போர்க்களத்தில் மாண்டார்கள்; ***குருதி ஆற்று நிணத்தோடு அடுத்த*** - இரத்த ஆற்றில் கொழுப்புகளோடு சேர்ந்த; ***அள்ளல் பெருங் கொள்ளைச் சேற்றில்*** - நெருங்கிய மிகப் பெரிய சேற்றில்; ***செல்லாத் தேரின் ஆழி*** - ஆழும் போக முடியாத, தேரினது சக்கரங்கள் அமிழ்ந்து போகும்; ***நிலை தேரா*** - அப்படிப் புதைகின்ற தன்மையை உணர்ந்தும்; ***வீற்றுச் செல்லும்*** - (அவ்விடத்தைவிட்டு) தனிமையோடு செல்லக் கூடிய; ***வெளியோ இல்லை*** - வெற்றிடமோ இல்லை (இவ்வாறு இருக்கவும்); ***விரைகின்றான்*** - போருக்கு அந்தச் சம்புமாலி விரைந்து செல்பவனானான்; ***அளியன்*** - இவன் மிகவும் இரங்கத்தக்கவன். ***(42)***

*அனுமன்சம்புமாலியிடத்து இரக்கமுற்றுமொழிதல்*

***5592. 'ஏதி ஒன்றால்; தேரும் அஃதால்; எளியோர் உயிர்***
***கோடல்***
***நீதி அன்றால்;உடன் வந்தாரைக் காக்கும் நிலை***
***இல்லாய் !***
***சாதி; அன்றேல்,பிறிது என் செய்தி ? அவர் பின்***
***தனி நின்றாய் !***
***போதி'என்றான்-பூத்த மரம்போல் புண்ணால்***
***பொலிகின்றான்.***

***பூத்த மரம்போல் புண்ணால் பொலிகின்றான்*** - பூத்து விளங்குகின்றமரத்தைப் போல, உடல் முழுவதும் புண்களால் நிறையப் பெற்று விளங்குபவனான அனுமன் (சம்பு மாலியை நோக்கி); ***ஏதி ஒன்றால்*** - உன்னிடம் உள்ள ஆயுதமும் ஒன்றே; ***தேரும் அஃதே*** - தேரும் உனக்கு ஒன்றுதான் உள்ளது; ***உடன் வந்தோரைக் காக்கும் நிலை இல்லை*** - உன்னோடு கூடப் போருக்குத் துணையாக வந்தவர்களைக் காப்பாற்றும் வலிமையில்லாத நீ; ***அவர் பின்தனி நின்றாய்*** - அவர் இறந்த பிறகு தனிப்பட்டு நின்று விட்டாய்; ***சாதி*** - (நீ என்னோடு இப்போது போர் செய்யவந்தால்) இறப்பாய் இது நிச்சயம்; ***அன்றேல், பிறிது என் செய்தி ?*** - இல்லை என்றால் வேறு என்ன செய்யப் போகின்றாய் ? ***எளியோர் உயிர் கோடல் நீதி அன்றால்*** - எளியோர் உயிரைக் கொள்ளுதல் நீதி நெறிக்கு ஏற்றதன்று; ***போதி என்றான்*** - (ஆதலால் இப்போது உன்னை விடுகின்றேன்) நீ திரும்பிச் செல்வாய் என்று (இரக்கம்) தோன்றக் கூறினான்.

*உடம்பெல்லாம்புண்பட்ட நிலையிலும், அனுமன், தனித்து நிற்கும் சம்பு மாலிபால் கொண்ட இரக்கத்தை இப்பாடல் விளக்குகிறது. மேனி முழுதும் புண்மயமாய்த் தோற்றமளித்த வீர ஆஞ்சநேயனை வருணிப்பது இப்பாடல். வீரர்க்கு விழுப்புண்களே*

*சிறப்பு; ஆதலின் பொலிவுக்கே உரிய பூக்களைப் புண்களுக்கு உவமையாக்கினார், கவிச் சக்கரவர்த்தி. பூத்துக் குலுங்கும் மரம் போலப் புண்ணாற் பொலிந்தான் அனுமன். தனித்து இராவணனுக்கு அருள்செய்த பெருமாளுக்கு (7271) இளைத்தவனல்லன் பாகவதன்; இராமபிரானைப் போலவேபகைவனுக்கு அனுமன் அருள் காட்டியதைச் சுட்டுவது இப் பாசுரம். ஏதி - ஆயுதம்.* ***(43)***

***5593. 'நன்றி, நன்று, உன் கருணை !' என்னா, நெருப்பு***
***நக நக்கான்;***
***'பொன்றுவாரின்ஒருவன் என்றாய் போலும் எனை'***
***என்னா,***
***வன் திண்சிலையின் வயிரக் காலால், வடித் திண்***
***சுடர் வாளி,***
***ஒன்று, பத்து,நூறு, நூறாயிரமும், உதைப்பித்தான்.***

***உன் கருணை நன்றுநன்று என்னா -*** *(சம்புமாலி அனுமனைநோக்கி) நீ என் மீது காட்டும் இரக்கம் மிகவும் நன்றாக இருக்கிறதுஎன்று சொல்லி;* ***நெருப்பு நக நக்கான் -*** *நெருப்புப் பெருகி வரச் சிரித்து;* ***எனைப் பொன்று வாரின் ஒருவன் என்றாய் போலும் என்னா -*** *என் னைப்போரில் இறப்பவருள் ஒருவன் என்று எளிதாக நினைத்தாய் போலும் என்றுகூறி;* ***வன் திண் சிலையின் வயிரக் காலால் -*** *மிக வலிய தன் வில்லின்வயிரம் போன்று உறுதியான தண்டினால்;* ***வடிதிண் சுடர் வாளி -*** *கூர்மைவாய்ந்த வலிய ஒளி வீசும் அம்புகளை;* ***ஒன்று பத்து, நூறு நூறாயிரமும் -*** *ஒன்றும், பத்தும், நூறும் நூறாயிரமும் என்ற கணக்குப் படி;* ***உதைப்பித்தான் -*** *(அனுமன் மீது) செலுத்தினான். நன்று நன்று;அடுக்கு இகழ்ச்சிப் பொருளது. நகுதல் - பெருகுதல் என்னும் கருத்தில் வந்தது. வன் திண்: ஒரு பொருட் பன்மொழி உதைத்தல் - வலிந்து செலுத்துதல்.* ***(44)***

***5594. 'செய்தி,செய்தி, சிலை கைக் கொண்டால், வெறுங்,***
***கை திரிவோரை,***
***நொய்தின்வெல்வது அரிதோ ?' என்னா, முறுவல்***
***உக நக்கான்;***
***ஐயன், அங்கும்இங்கும் காலால் அழியும் மழை***
***என்ன,***
***எய்த எய்த பகழிஎல்லாம், எழுவால் அகல்வித்தான்.***

***ஐயன் -*** *சிறந்தோனானஅனுமன்;* ***சிலை கைக் கொண்டால் -*** *நீ வில்லைக் கையில் கொண்டால்;* ***வெறும் கை திரி வோரை -*** *ஆயுதம் இன்றி வெறும் கைகளோடு திரிகின்றவர்களை;* ***நொய்தின் வெல்வது அரிதோ என்னா -*** *எளிதில் வெல்வது அரிய செயலாகுமா ? என்று சொல்லி;* ***முறுவல் உக நக்கான் -*** *பற்கள் வெளியில் தோன்றுமாறு சிரித்து;* ***எய்த எய்த பகழி எல்லாம் -*** *சம்பு மாலி மேன் மேலும் தூண்டிய அம்புகள் அனைத்தையும்;* ***காலால் அழியும் மழை என்ன -*** *காற்றினால் சிதறி அழியும் மழைத்தாரைகள் போல;* ***எழுவால் -*** *தன் கையில் கொண்ட எழு என்னும் ஆயுதத்தால்;* ***அங்கும் இங்கும் -*** *எல்லாப் புறங்களிலும்;* ***அகல் வித்தான் -*** *நழுவிச் சிதறிப் போகுமாறு நீக்குவித்தான்.*

செய்தி செய்தி;அடுக்கு இகழ்ச்சிப் பொருளது. எய்த. எய்த; அடுக்கு விரைவுப் பொருளது. **(45)**

*அனுமன் கை எழுவைச்சம்புமாலி அறுத்து வீழ்த்தல்*

**5595. முற்ற முனிந்தான் நிருதன்; முனியா, முன்னும் பின்னும் சென்று**
**உற்ற பகழிஉறாது, முறியா உதிர்கின்றதை உன்னா,**
**சுற்றும் நெடுந்தேர்ஓட்டித் தொடர்ந்தான்; தொடரும் துறை காணான்;**
**வெற்றி எழுவைமழுவாய் அம்பால் அறுத்து வீழ்த்தினான்.**

**நிருதன் முற்றமுனிந்தான் -** சம்புமாலி என்ற அந்தஅரக்கன் மிகவும்கோபித்தான்; **முனியா -** அவ்வாறு கோபித்து; **முன்னும் பின்னும் சென்றுஉற்ற பகழி -** முன்னாகவும் பின்னாகவும் பொருந்தச் சென்று போயடைந்தஅம்புகள்; **உறாது -** அனுமன் மேல்தாக்காமல்; **முறியா உதிர் கின்றதைஉன்னா -** முறிந்து கீழே சிந்தி விழுகின்றதை நினைத்து; **சுற்றும் நெடுந்தேர் ஓட்டித் தொடர்ந்தான் -** (அனுமனைச்) சுற்றிலும் (தனது) பெரிய தேரைச்செலுத்தி நெருங்கப் பார்த்து; **தொடரும் துறை காணான் -** (அவனை)நெருங்கிச் செல்லும் வழியைப் பெறாமல்; **வெற்றி எழுவை -** இதுவரைவெற்றியைத் தந்த எழு என்னும் படையை; **மழுவாய் அம்பால் அறுத்துவீழ்த்தினான் -** மழுப் போன்ற நுனியை உடைய அம்பினால் அறுத்துத்தள்ளினான். **(46)**

*சம்பு மாலியைஅனுமன் கொல்லுதல்*

**5596. சலித்தான்ஐயன்; கையால், எய்யும் சரத்தை உகச் சாடி,**
**ஒலித் தார்அமரர் கண்டார் ஆர்ப்ப, தேரினுள் புக்கு,**
**கலித்தான்சிலையைக் கையால் வாங்கி, கழுத்தினிடை இட்டு**
**வலித்தான், பகுவாய் மடித்து மலைபோல் தலை மண்ணிடை வீழ.**

**ஐயன் சலித்தான்-** அனுமன்(தன் கையிலிருந்த எழு அறுத்து வீழ்த்தப்பட்டதனால்) சிறிது சலிப்படைந்து; **கையால் எய்யும் சரத்தை உகச் சாடி -** (உடனே) சம்புமாலி தன்மீது எய்கின்ற அம்புகளை எல்லாம் தன் கைகளாலேயே உதிர்ந்து போம்படிமோதித்தள்ளி; **ஒலித்தார் அமரர் கண்டார் ஆர்ப்ப -** தழைத்தலை உடைய மாலையை அணிந்த தேவர்கள் கண்டு ஆரவாரம் செய்ய; **தேரினுள் புக்கு -** சம்பு மாலியின் தேரினுள்ளே பாய்ந்து புகுந்து; **கலித்தான் சிலையை -** வீரவொலி செய்து கொண்டிருந்த அவனது வில்லை; **கையால் வாங்கி பகுவாய் மடித்து -** தன் கையால் எளிதில் பற்றி தன் திறந்த வாயை மடித்துக் கொண்டு; **மலைபோல் தலை -** மலை போன்ற அவன் தலை; **மண் இடை வீழ -** தரையில் விழுமாறு; **கழுத்திடை இட்டு வலித்தான் -** அவனது கழுத்திலே மாட்டி இழுத்தான்.

*ஒலித்தல் -தழைத்தல்; 'ஒலி கொண்டு' - ஒலி - தழைத்தல்; 'ஒலி தெங்கு' (பதிற் - 13) போல. (47)*

## *5597.* குதித்து,தேரும், கோல் கொள் ஆளும், பரியும், குழம்பு ஆக
## மிதித்து,பெயர்த்தும், நெடுந் தோரணத்தை வீரன் மேற்கொண்டான்;
## கதித் துப்புஅழிந்து கழிந்தார் பெருமை கண்டு, களத்து அஞ்சி,
## உதித்துப்புலர்ந்த தோல்போல் உருவத்து அமரர் ஓடினார்.

***வீரன் குதித்து -*** *அனுமன்தேரினின்றும் கீழே குதித்து;* ***தேரும் கோல்கொள் ஆளும் -*** *சம்பு மாலியின் தேரும், அதனை ஓட்டும் கோலைக் கொண்டு செலுத்தும் தேர்ப்பாகனும்;* ***பரியும், குழம்பு ஆகமிதித்து -*** *தேரில் பூட்டிய குதிரைகளும் குழம்பு போல இளகி ஓடத் தன் கால்களால் மிதித்து அழித்துவிட்டு;* ***பெயர்த்தும் -*** *மீண்டும்;* ***நெடுந்தோரணத்தை மேற்கொண்டான் -*** *தான் முன்னிருந்த நெடிய தோரண வாயிலின் மீது ஏறிக் கொண்டான்;* ***உதித்துப் புலர்ந்த தோல் போல் உருவத்து அமரர் -*** *பருத்துக் காய்ந்து போன தோல் போன்ற உருவத்தை உடைய பருவத் தேவர்கள்;* ***கதித்துப்பு அழிந்து கழிந்தார் -*** *விரைவுள்ள (தமது) வலிமை யழிந்து இறந்து போன;* ***பெருமை கண்டு -*** *அரக்கரது பெருந் தொகையைப் பார்த்து;* ***அஞ்சி -*** *(இச் செய்தியை இராவணனிடம் சொல்ல வேண்டுமே என்று) பயந்து;* ***களத்து ஓடினார் -*** *போர்க்களத்தினின்றும் இராவணன் அரண்மனையை நோக்கி விரைந்து ஓடினார். வீரன் குதித்து,தேர், ஆள், பரி குழம்பாக மதித்து பெயர்த்தும் நெடுந் தோரணத்தை மேற் கொண்டான். ஏற்கனவே இறந்தவர்களின் பெருந் தொகை கண்டு, அஞ்சி காவல் அமரர் இராவணனிடம் சொல்வதற்கு ஓடினார்கள். காற்றை உட்கொண்டு பருத்தும், பின் சிறுத்தும் மாறும் துருத்தித் தோல், காவலில் குறையற்ற போது பருத்தும், குறையுற்றபோது தளர்ந்தும் போகின்ற காவல் தேவர்களுக்கு உவமை ஆயிற்று.* ***(48)***

## *5598.* பரிந்துபுலம்பும் மகளிர் காண, கணவர் பிணம் பற்றி,
## விரிந்த குருதிப்பேராறு ஈர்த்து மனைகள்தொறும் வீச,
## இரிந்ததுஇலங்கை; எழுந்தது அழுகை; 'இன்று, இங்கு, இவனாலே
## சரிந்தது,அரக்கர் வலி' என்று எண்ணி, அறமும் தளிர்த்ததால்.

***விரிந்த குருதிபேர் ஆறு -*** *பரந்த இரத்தவெள்ளமாகிய பெரிய ஆறு;* ***பிரிந்து புலம்பும் மகளிர் காண -*** *தம் கணவர் இறந்தமையால் இரங்கிப் புலம்பும் பெண்கள் காணுமாறு;* ***கணவர் பிணம் பற்றி ஈர்த்து மனைகள் தொறும் வீச -*** *அவரவர் கணவர்களுடைய பிணங்களைப் பிடித்து இழுத்து வந்து அவரவர் வீடுகள் தோறும் கொண்டு வந்து வீச;* ***இலங்கை இரிந்தது -*** *(அதைக் கண்ட) இலங்கை நகரம் நிலை குலைந்து அலைந்தது;*

***அழுகை எழுந்தது*** - *அழுகைக் குரல் எங்கும் மேலோங்கியது;* ***இன்று இங்கு இவனாலே*** - *இன்றைய தினம், இந்த இலங்கையில் இந்தக் குரங்கினால்;* ***அரக்கர் வலி சரிந்தது என்று எண்ணி*** - *அரக்கர்களுடைய வலிமை அழிந்தது என்று நினைத்து;* ***அறமும் தளிர்த்தது*** - *அறக்கடவுளும் மனம் களித்தது.* ***(49)***

*காவல் தேவர்இராவணனிடம் செய்தி கூறுதல்*

***5599. புக்கார் அமரர், பொலந் தார் அரக்கன் பொரு இல்***
***பெருங் கோயில்***
***விக்காநின்றார்; விளம்பல் ஆற்றார்; வெருவி***
***விம்முவார்;***
***நக்கான் அரக்கன்; 'நடுங்கல்' என்றான்; 'ஐய ! நமர்***
***எல்லாம்***
***உக்கார்;சம்புமாலி உலந்தான்; ஒன்றே குரங்கு'***
***என்றார்.***

***அமரர்*** - *செய்தி சொல்லவேண்டிய பருவத் தேவர்கள்;* ***பொலம் தார் அரக்கன் பொரு இல் பெருங் கோயில் புக்கார்*** - *பொன்னாலான மாலைஅணிந்த அரக்கனான இராவணனுடைய ஒப்பற்ற பெரிய அரண்மனையில்புகுந்து;* ***விளம் பல் ஆற்றார்*** - *செய்தி சொல்வதற்கு வாயெழாமல்;* ***விக்காநின்றார்*** - *விக்கி விக்கி நின்று;* ***வெருவி விம்முவார்*** - *அஞ்சி நடுங்குவாரானார்கள்;* ***அரக்கன்*** - *அது கண்ட இராவணன்;* ***நக்கான்*** - *சிரித்து;* ***நடுங்கல் என்றான்*** - *நடுங்காதீர் என்று கூறினான்;* ***ஐய !*** - *(பின்புஅவர் இராவணனை நோக்கி) ஐயனே !;* ***நமர் எல்லாம் உக்கார்*** - *நம்மவரான அரக்கர் அனைவரும் இறந்தனர்;* ***சம்பு மாலி உலந்தான்*** - *சம்புமாலியும் இறந்து போனான்;* ***ஒன்றே குரங்கு என்றார்*** - *(இவ்வளவுக்கும்அங்கு எதிர்த்துப் போர் புரிவது) ஒரே குரங்குதான் என்று கூறினார்கள்;*

*உலந்தான் -இறந்தான்.* ***(50)***

*அனுமனைப் பிடிக்கஇராவணனே எழுந்தபோது படைத்தலைவர்பேசுதல்*

***5600. என்னும்அளவின், எரிந்து வீங்கி எழுந்த***
***வெகுளியான்,***
***உன்ன, உன்ன,உதிரக் குமிழி விழியூடு***
***உமிழ்கின்றான்,***
***'சொன்னகுரங்கை, யானே பிடிப்பென், கடிது***
***தொடர்ந்து' என்றான்,***
***அன்னது உணர்ந்தசேனைத் தலைவர் ஐவர்***
***அறிவித்தார்.***

***என்னும் அளவின்*** - *என்றுஅவர்கள் கூறிய அளவில்;* ***எரிந்து வீங்கிஎழுந்த வெகுளியான்*** - *பற்றி யெரிந்து மிகுதியாகக் கிளம்பின சினத்தைஉடைய இராவணன்;* ***உன்ன உன்ன*** - *(அவ்வாறு சம்பு மாலி முதலியஅரக்கர்கள் இறந்த செய்தியை)*

*நினைக்கும் தோறும்;* **விழியூடு உதிரக் குமிழிஉமிழ்கின்றான் -** *விழிகளின்வழியே இரத்தக்குமிழிகளைக் கக்கிக்கொண்டு;* **சொன்ன குரங்கை -** *நீர் சொன்ன அந்தக் குரங்கை;* **யானே கடிது -** *நானே விரைந்து சென்று;* **தொடர்ந்து பிடிப்பேன் எனறான் -** *பிடித்து வருவேன் என்று கூறினான்;* **அன்னது உணர்ந்த சேனைத் தலைவர் ஐவர் அறிவித்தார் -** *அதை உணர்ந்த படைத் தலைவர்களான ஐவர் (இராவணனிடம் பின்வருமாறு) தெரிவிக்கலானார்கள்.*

*அறிவித்ததுஅடுத்த படலத்தில் கூறப்படும். சேனைத்தலைவர் ஐவர்;- விரூபாட்சன், யூபாட்சன்,துர்த்தரன்,பிரகசன்,பாசகர்ணன் என வான்மீகம் பெயர் குறிப்பிடுகிறது.*
***(51)***

## பஞ்ச சேனாபதிகள் வதைப் படலம்

*இராவணனின் ஐந்துபடைத் தலைவர்களையும் அனுமன் அழித்ததைக் கூறுவது இந்தப் படலம். சேனைத்தலைவர் ஐவர் வேண்டுகோளும் இராவணன் இசைவும்*

**கலித்துறை**

***5601. சிலந்திஉண்பது ஓர் குரங்கின்மேல் சேறியேல், திறலோய் !***
***கலந்த போரில்நின் கண்புலக் கடுங் கனல் கதுவ,***
***உலந்த மால் வரைஅருவி ஆறு ஒழுக்கு அற்ற ஒக்கப்***
***புலர்ந்த மாமதம் பூக்கும் அன்றே, திசைப் பூட்கை ?***

***திறலோய் -*** *(சேனைத் தலைவர் இராவணனை நோக்கி) வலிமை வாய்ந்தவனே! (நீ);* ***சிலந்தி உண்பது ஓர் குரங்கின் மேல் சேறியேல் -*** *சிலந்திப் பூச்சியைப் பிடித்துத் தின்னும் ஒரு குரங்கின் மேல் போர் செய்யப் போவாயானால்;* ***திசைப் பூட்கை -*** *எட்டுத் திக்கு யானைகள்;* ***கலந்த போரில்-*** *நீ எதிர்த்துப் புரிந்த போரில்;* ***நின் கண் புலன் -*** *உனது கண்களிலிருந்து;* ***கடும் கனல் கதுவ -*** *கொடிய நெருப்புப் பொறி பறக்க;* ***உலந்த மால் வரை-*** *கோடை வெயிலால் காய்ந்து போன பெரிய மலையில்;* ***அருவி ஆறுஒழுக்கு அற்று ஒக்க -*** *அருவிகள் தம் வழியே செல்லும் ஓட்டம் அற்றுப்போனது போல;* ***புலர்ந்த மாமதம் -*** *(உன்னால் அடிபட்டு வலிமைகுறைந்தமையால்) அற்றுப் போன மிக்க மதநீர்;* ***பூக்கும் அன்றே -*** *மீண்டும்தோன்றப் பெறும் அல்லவா ?*

*அருவி ஆறுவற்றிப் போன மலைக்கு மதம் அடங்கிய திக்கு யானைகள் உவமை. ஒரு குரங்கை எதிர்த்து இராவணன் போருக்குச் சென்றால், அது அவனது ஆற்றலின் குறைவைத் தெரிவிக்கும். முன் தோற்ற அந்த யானைகள், இப்போது அவனை இழிவாகக் கருதிமகிழ்ச்சியினால்,மதச் செருக்குக் கொள்ளும், என்று சேனைத் தலைவர் கூறினார்கள்.* ***(1)***

***5602. 'இலங்கு வெஞ் சினத்து அம் சிறை எறுழ் வலிக் கலுழன்***
***உலங்கின்மேல்உருத்தென்ன, நீ குரங்கின்மேல் உருக்கின்***
***அலங்கல் மாலைநின் புயம் நினைந்து, அல்லும் நன் பகலும்***
***குலுங்கும் வன்துயர் நீங்குமால், வெள்ளியங் குன்றம்.***

***இலங்கு வெம்சினத்து*** - விளங்குகின்ற கொடியகோபத்தையும்; ***அம் சிறை*** - அழகிய சிறகுகளையும்; ***எறும் வலிக் கலுழன்*** - மிக்க வலிமையையும் உடைய கருடன்; ***உலங்கின் மேல் உருத்தென்ன*** - ஒரு கொசுகின் மேல் கோபித்துப் போர் செய்வது போல; ***நீ குரங்கின் மேல் உருக்கின்*** - நீ அற்பக் குரங்கின் மீது போர்ீபுரியச் சென்றால்; ***அலங்கல் மாலை நின் புயம் நினைந்து*** - அசைந்தாடும் வெற்றி மாலை அணிந்த நினது தோள் வலிமையை நினைந்து; ***வெள்ளி அம் குன்றம்*** - கயிலை மலை; ***அல்லும் நன் பகலும் குலுங்கும் வன் துயர் நீங்கும்*** - இரவிலும் நல்ல பகலிலும் அச்சத்தால் நடுங்கும் கொடுந்துன்பம் நீங்கப் பெறும்.

*'உன்னால் முன்புபெயர்த்தெடுக்கப்பட்டு எளிமைப் பட்ட கயிலை மலை, நீ, இப்போது அற்பமான ஒரு குரங்கினிடம் போருக்குச் சென்றால், உன்னிடத்துக் கொண்டிருந்த அச்சம் நீங்கும் அல்லவா ! அதனால் எங்களைப் போருக்கு அனுப்புக' என்றனர் சேனாபதிகள். எறும் வலி; ஒரு பொருட் பன் மொழி. உலங்கு - கொசுகு. உரு, உட்குதல், அஞ்சுதல்; உருக்குதல் - எதிராளி அஞ்சும்படி தாக்குதல்.*
***(2)***

***5603. 'உறுவது என்கொலோ ? உரன் அழிவு என்பது ஒன்று***
***உடையார்***
***பெறுவது யாதுஒன்றும் காண்கிலர், கேட்கிலர்***
***பெயர்ந்தார்;***
***சிறுமை ஈது ஒப்பதுயாது ? நீ குரங்கின்மேல்***
***செல்லின்,***
***முறுவல் பூக்கும்அன்றே, நின்ற மூவர்க்கும்***
***முகங்கள் ?***

***உறுவது என்கொலோ***- நீகுரங்கை எதிர்த்துப் போர்செய்யப் புகுவதால் உனக்கு வரக்கூடிய நலம் என்ன இருக்கிறது ?; ***உரன் அழிவு என்பது ஒன்று உடையார்*** - வலிமை அழிவதென்னும் நிலை உடையவர்கள்; ***பெறுவது யாது ஒன்றும் காண்கிலர் கேட்கிலர், பெயர்ந்தார்*** - விளைவு என்ன என்பதைக் காணாதவரையும் அது பற்றி எவரேனும் சொன்னால் கேளாதவரையும் போனவர்களே ஆவர் என்பர்; ***சிறுமை ஈது ஒப்பது யாது*** - வீரத்தன்மைக்கு இது போன்ற இழிவு வேறொன்று என்ன இருக்கிறது; ***நீ குரங்கின்மேல் செல்லின்*** - நீ ஒரு குரங்கை எதிர்த்துப் போர் செய்யப் போவாயாயின்; ***நின்ற மூவர்க்கும்*** - உன்னை எதிர்ப்பதை விடுத்து ஒதுங்கியுள்ள மும்மூர்த்திகளுக்கும்; ***முகங்கள் முறுவல் பூக்கும் அன்றே*** - முகத்தில் புன்சிரிப்புத் தோன்றுமன்றோ ?

*தகுதியால்இழிந்தோரிடம் போர் செய்யப் புகுவது வீரத்துக்கு இழிவு. ஆகவே, கயிலை மலையையே பெயர்த்தவன் ஒரு குரங்கை எதிர்க்கப் புகுவது உரன் அழிவே என்று பஞ்சசேனாபதியர் குறித்தனர். உரனுக்கு அழிவு தேட முற்பட்ோ்டார் தாமும் தெளியார், பிறர் சொல்லும் கேளார் என்ற உலகியல் உண்மையை எடுத்துரைத்தார். இத்தனையையும் மீறிப் போனால் மும்மூர்த்திகளின் முகத்தில் ஏளனச் சிரிப்புத் தோன்றும் என்பது பஞ்ச சேனாபதியர் கருத்து.* ***(3)***

***5604. 'அன்றியும், உனக்கு ஆள் இன்மை தோன்றுமால்,***
***அரச !***
***வென்றி இல்லவர்மெல்லியோர்தமைச் செல விட்டாய்;***

***நன்றி இன்றுஒன்று காண்டியேல், எமைச் செல***
***நயத்தி'***
***என்று, கைதொழுதுஇறைஞ்சினர்; அரக்கனும்***
***இசைந்தான்.***

***அரச ! -*** *அரசனே !;* ***அன்றியும் -*** *இவை அல்லாமலும்;* ***உனக்கு ஆள் இன்மை தோன்றும் -*** *உனக்கு ஏவற்பணி செய்யும் வீரர்கள் இல்லாமை விளங்கும்;* ***வென்றி இல்லவர் மெல்லியோர் தமைச் செலவிட்டாய் -*** *(முன்பெல்லாம்) வெற்றி பெறத் தகாதவர்களையும், வலிமையிற் குறைந்தவர்களையும் (அனுமன் மேல் போருக்குச்) செல்லும்படி ஏவினாய்;* ***இன்று ஒன்று நன்றி காண்டியேல் -*** *இன்று ஒரு நற்செயலை நீ காணவிரும்புவாயானால்;* ***எமைச் செல நயத்தி என்று -*** *எங்களைப் போருக்குச் செலுத்த விரும்புவாய் என்று சொல்லி;* ***கை தொழுது இறைஞ்சினர் -*** *(சேனாபதிகள்)கைகளால் கும்பிட்டு வணங்கினர்;* ***அரக்கனும் இசைந்தான் -*** *இராவணனும் அதற்கு உடன்பட்டான்.*

*தமக்கு முன்அனுமனோடு போர் செய்யச் சென்றோர் வலிமை குறைந்தவர்கள் என்றும் தாங்களே அனுமனை எதிர்த்த பொழுது வெல்ல வல்லவர்கள் என்றும் பஞ்சசேனாபதிகள் கூறுகின்றனர்.* ***(4)***

*பஞ்சசேனாபதிகளின் கட்டளைப்படி படைகள் திரளுதல்*

***5605. உலகம்மூன்றிற்கும் முதன்மை பெற்றோர் என***
***உயர்ந்தார்,***
***திலகம் மண் உறவணங்கினர்; கோயிலின் தீர்ந்தார்;***
***'அலகு இல் தேர்,பரி, கரியொடு ஆள் மிடைந்த***
***போர் அரக்கர்,***
***தொலைவு இலாதனகதுமென வருக' எனச்***
***சொன்னார்.***

***மூன்று உலகிற்கும்முதன்மை பெற்றோர் என உயர்ந்தார் -*** *மூன்றுஉலகங்களுக்கும் தலைமை பெற்றவர் போன்று உயர்ந்தவரான பஞ்ச சேனாபதிகள்;* ***திலகம் மண் உற வணங்கினர் -*** *தமது நெற்றித்திலகம் தரையில் படும்படி இராவணனை நோக்கிக் கீழே விழுந்து வணங்கினார்கள்;* ***கோயிலின் தீர்ந்தார் -*** *(பிறகு) அரண்மனையை விட்டு வெளி வந்து;* ***தொலைவு இலாதன -*** *எளிதில் அழிவில்லாதனவாகிய;* ***அலகு இல் தேர், பரி கரியொடு -*** *அளவற்ற தேர்களும் குதிரைகளும், யானைகளும் (என்ற இச் சேனையோடு);* ***மிடைந்த போர் அரக்கர் -*** *நெருக்கமாக உள்ள போர் செய்யவல்ல அரக்கவீரர்கள்;* ***கதும் என வருக எனச் சொன்னார் -*** *விரைவாக வரக்கடவர் என்று கட்டளையிட்டார்கள்.* ***(5)***

***5606. ஆனைமேல்முரசு அறைந்தனர் வள்ளுவர்***
***அமைந்தார்;***
***பேன வேலையின்புடை பரந்தது, பெருஞ் சேனை;***
***சோனை மா மழைமுகில் எனப் போர்ப் பணை***

**துவைத்த;**
**மீன வான் இடுவில் எனப் படைக்கலம் மிடைந்த.**

**வள்ளுவர்அமைந்தார் -** பறையறைவோராக இருந்தவர்; **ஆனைமேல் முரசு அறைந்தனர் -** யானையின் மீது ஏறிப் போர் முரசை முழக்கினர்; **பெரும் சேனை பேன வேலையில் -** பெரிய அரக்கர் படைகள் நுரையை உடைய கடலைப் போல; **புடை பரந்தது -** எல்லாப் பக்கங்களிலும் பரவலாயிற்று; **சோனை மா மழை முகில் என -** விடாது பெரு மழை பொழிகின்ற மேகம் போல; **போர்ப் பணை துவைத்த -** போர் முரசங்கள் ஒலித்தன; **மீன வான் இடு வில் என -** நட்சத்திரங்கள் விளங்கும் ஆகாயத்தில் தோன்றும் வானவில்லைப் போல; **படைக்கலம் மிடைந்த -** போர்ப் படைக் கருவிகள் நெருங்கி விளங்கின.

போர் முரசு ஒலிக்கு. மழை பொழியும் மேகமும், படைக்கலங்களுக்கு வான வில்லும் உவமைகள். பேனம் - நுரை பணை - முரசு. *(6)*

**5607. தானை மாக்கொடி, மழை பொதுத்து உயர் நெடுந்**
**தாள,**
**மானம் மாற்ற அருமாருதி முனிய, நாள் உலந்து**
**போன மாற்றலர்புகழ் எனக் கால் பொரப் புரண்ட;**
**வானயாற்று வெண்திரை என வரம்பு இல பரந்த.**

**மழை பொதுத்துஉயர் நெடும் தாள -** மேகத்தைக் குத் துமாறுமேலேஉயர்ந்து செல்லும் நீண்ட கால்களை உடையனவும்; **வான யாற்று வெண்திரை என வரம்பு இல பரந்த -** ஆகாய கங்கை யாற்றின் வெண்மை நிறமுள்ள அலை போலப் பலவாக உள்ளனவுமான; **தானை மாக்கொடி -** அரக்கர் சேனையில் விளங்கிய பெரிய வெண்ணிறக் கொடிகள்; **மாற்ற அரு மானம் மாருதி முனிய -** மாற்ற முடியாத பெருமை உடைய அனுமன் கோபித்திட; **நாள் உலந்து போன மாற்றலர் புகழ் என -** (அதனால்) ஆயுட்காலம் அழிந்து, வீரசுவர்க்கம் சென்ற பகைவர்களது புகழைப் போல; **கால் பொரப் புரண்ட -** காற்று மோதுதலால் அசைந்தாடின.

கால் -காற்று. *(7)*

**5608. விரவு பொற் கழல் விசித்தனர், வெரிந் உற்று**
**விளங்கச்**
**சரம் ஒடுக்கினபுட்டிலும் சாத்தினர், சமையக்**
**கருவி புக்கனர், அரக்கர்; மாப் பல்லணம் கலினப்**
**புரவி இட்ட;தேர் பூட்டின; பருமித்த பூட்கை.**

**அரக்கர் -** அந்தஇராக்கத வீரர்கள்; **விரவு பொற் கழல் விசித்தனர் -** (வீரத்துக்கு அடையாளமாகப்) பொருந்திய பொன்னால் செய்த வீரக் கழல்களைக் காலில் கட்டி; **சரம் ஒடுக்கின புட்டிலும் வெரிந் உற்று விளங்கச் சாத்தினர் -** அம்புகளை உள்ளே கொண்ட அம்பறாத தூணியையும்முதுகிற் பொருந்தி விளங்க அணிந்து கொண்டு; **சமையக் கருவி புக்கனர் -** நன்றாக அமையும் படிக் கவசத்தையும் பூண்டனர்; **பரவி மாப்பல்லணம்கவின இட்ட -** குதிரைகள், சிறந்த சேணங்கள் அழகாக விளங்கஅணியப்பட்டன; **தேர் பூட்டின -** தேர்கள் சித்தம் செய்யப் பட்டன;

***பூட்கைபருமித்த* -** *யானைகள் அலங்கரிக்கப்பட்டவை ஆயின.*
*நால்வகைச்சேனைகளும் போர்க்குக் கோலம் செய்து விட்டமை இங்குக் கூறப் பட்டது. கருவி - கவசம்; 'இளைஞரும் கருவி வீசினார்; (சீவக - 2214 உரை) பருமித்தல் - அலங்கரித்தல்; 'பல்கதிர் ஆரமும் பூணும் பருமித்து' (சீவக 2113)*
***(8)***

***5609. ஆறு செய்தனஆனையின் மதங்கள்; அவ் ஆற்றைச்***
***சேறு செய்தனதேர்களின் சில்லி; அச் சேற்றை***
***நீறு செய்தனபுரவியின் குரம்; மற்று அந் நீற்றை***
***வீறு செய்தன,அப் பரிக் கலின மா விலாழி.***

***ஆனையின்மதங்கள் ஆறு செய்தன* -** *(போருக்குச் சென்ற) யானைகளின் மதப் பெருக்குகள் (சென்ற இடங்களில்) ஆறுகளை உண்டாக்கின;* ***அவ் ஆற்றை* -** *அந்த மதநீர் ஆற்றை;* ***தேர்களின் சில்லி சேறு செய்தன* -** *தேர்களின் சக்கரங்கள் (ஓடிச்) சேறாகக் குழப்பி விட்டன;* ***அச் சேற்றை* -** *அவ்வாறு உண்டாகிய சேற்றை;* ***புரவியின் குரம் நீறு செய்தன* -** *குதிரைகளின் குளம்புகள் மிதித்துப் புழுதியாகச் செய்தன;* ***அந் நீற்றை* -** *அந்தப் புழுதியை;* ***அப் பரிக் கலின மா விலாழி* -** *அந்தக் குதிரைகளின் கடிவாளம் பூண்ட வாயிலிருந்து வழிகின்ற நுரைகள்;* ***வீறு செய்தன* -** *வேறு வேறாய்ப் பிளவுபடச் செய்தன.*

*வாய்நுரை - உயர்வு நவிற்சி; இவ்வருணனை பாக்களில் மிகுதி.* ***(9)***

***610. வழங்குதேர்களின் இடிப்பொடு வாசியின் ஆர்ப்பும்,***
***முழங்கு வெங்களிற்று அதிர்ச்சியும், மொய் கழல்***
***ஒலியும்,***
***தழங்குபல்லியத்து அமலையும், கடையுகத்து, ஆழி***
***முழங்கும்ஓதையின், மும் மடங்கு எழுந்தது முடுகி.***

***வழங்குதேர்களின் இடிப்பொடு* -** *விரைந்து செல்கின்றதேர்களின் ஒலியும்;* ***வாசியின் ஆர்ப்பும் -*** *குதிரைகளின் கனைப்பு ஒலியும்;* ***முழங்கு வெம் களிற்று அதிர்ச்சியும் -*** *பிளிறுகின்ற கொடிய யானைகளின் பேரொலியும்;* ***மொய் கழல் ஒலியும் -*** *(வீரர்கள் காலில்) கட்டிய வீரக்கழல்களின் ஒலியும்;* ***தழங்கு பல்லியத்து அமலையும் -*** *ஒலிக்கும் பலவாத்தியங்களின் பேரொலியும் (கூடி);* ***கடை யுகத்து ஆழி முழங்கும் ஓதையின் -*** *யுக முடிவுக் காலத்தில் கடல்கள் கொந்தளித்து ஒலிக்கின்ற ஓசையை விட;* ***மும் மடங்கு முடுகி எழுந்தது -*** *மூன்று மடங்கு அதிகமாக விரைந்து மேற்கிளம்பியது.*

*ஒலி, தழங்கல்,அமலை, ஓதை என்பன ஒரு பொருள் குறிக்கும் பல சொற்கள். 'ஆறுபாய் அரவம்', என்ற நாட்டுப் படலப் பாடலில் (கம்ப.34) ஒலி குறித்துப் பல சொற்கள் ஒரு பொருள் குறித்து வந்தன; ஒப்பிட்டுச் சுவைக்கத் தக்கன.*
***(10)***

***5611. ஆழித்தேர்த் தொகை ஐம்பதினாயிரம்; அஃதே***
***சூழிப்பூட்கைக்குத் தொகை; அவற்று இரட்டியின்***
***தொகைய,***
***ஊழிக் காற்றுஅன்ன புரவி; மற்று அவற்றினுக்கு***

***இரட்டி,***
***பாழித் தோள்நெடும் படைக்கலப் பதாதியின் பகுதி.***

***ஆழித் தேர்த்தொகை ஐம்பதினாயிரம் -*** *சக்கரங்களைக் கொண்ட தேர்களின் கணக்கு ஐம்பதினாயிரம் என்னும் அளவினதாம்;* ***சூழிப் பூட்கைக்குத் தொகை அஃதே -*** *முகபடாம் அணிந்த யானைகளின் தொகையும் மேலே கூறிய தேர்களின் அளவேயாகும்;* ***ஊழிக் காற்று அன்ன புரவி -*** *யுகாந்த காலத்தில் தோன்றுகின்ற பெருங்காற்றுப் போல வேகமாகச் செல்கின்ற குதிரைகள்;* ***அவற்று இரட்டியின் தொகைய -*** *அந்தத் தேர்ப்படை, யானைப் படைகளைவிட இருமடங்கு தொகை உடையன;* ***பாழித் தோள் நெடும் படைக்கலப் பதாதியின் பகுதி -*** *பெரியதோள்களையும், சிறந்தஆயுதங்களையும் உடைய காலாட்படைப் பிரிவுகளின் கணக்கு;* ***அவற்றினுக்கு இரட்டி -*** *அந்தக் குதிரைப் படைகளுக்கு இரு மடங்காகும் (இரண்டு லட்சம்)*

*பஞ்சசேனாபதியர் கொணர்ந்த நால்வகைப் படையின் எண்ணிக்கை கூறியது. சூழி - யானைகளின் முகத்தில் அணியும் முகபடாம். பூட்கை - யானை. பாழிதோள் - பெரியதோள்.* ***(11)***

***5612. கூய்த்தரும்தொறும், தரும்தொறும், தானை வெங் குழுவின்***
***நீத்தம், வந்துவந்து, இயங்கிடும் இடன் இன்றி நெருங்க,***
***காய்த்து அமைந்தவெங் கதிர்ப் படை, ஒன்று ஒன்று கதுவி,***
***தேய்த்துஎழுந்தன, பொறிக் குலம், மழைக் குலம் தீய.***

***கூய்த்தரும்தொறும் தரும்தொறும் -*** *படைத்தலைவர்கள் கூவி அழைக்கும் போதெல்லாம்;* ***வெம் தானைக் குழுவின் நீத்தம் -*** *கொடிய அச்சேனைக் கூட்டத்தின் பெருக்கம்;* ***வந்து வந்து -*** *மேன்மேலும் வந்து;* ***இயங்கிடும் இடன் இன்றி நெருங்க -*** *அவை சஞ்சரிப்பதற்குப் போதிய இடம் இல்லாமல் நெருங்கி நிற்க;* ***காய்த்து அமைந்த வெம் கதிர்ப்படை -*** *உலைக் களத்தில் காய்ச்சிக் கூராக வடித்த கொடிய ஒளியுள்ள ஆயுதங்கள்;* ***ஒன்று ஒன்று கதுவி தேய்த்து -*** *ஒன்றோடொன்று பற்றி உராய்ந்து, தேய்த்தலினால்; (அவற்றில் உண்டான);* ***பொறிக் குலம் மழைக்குலம் தீய எழுந்தன -*** *நெருப்புப் பொறிகளின் கூட்டம், மேகக்கூட்டங்களைச் சுட்டெரிக்க மேற்கிளம்பிச் சென்றன.*

*இது சேனாவீரர்களின் பெருக்கத்தையும், வீரர்கள் ஏந்திச் சென்ற போர்ப்படைக் கருவிகளின் மிகுதியையும் குறிப்பிடுகின்றது.* ***(12)***

***5613. பண் மணிக்குல யானையின் புடைதொறும் பரந்த***
***ஒண் மணிக் குலம்மழையிடை உரும் என ஒலிப்ப,***
***கண் மணிக் குலம்கனல் எனக் காந்துவ; கதுப்பின்***
***தண் மணிக் குலம்மழை எழும் கதிர் எனத்***

**தழைப்ப.***

**பண் மணிக்குல யானையின் -** அழகு செய்யப்பட்ட உயர்ந்த இலக்கணங்கள் அமைந்த யானைகளின்; **புடை தொறும் பரந்த ஒண் மணிக்குலம் -** இருபக்கங்களிலும் பரவியுள்ள அழகிய மணிகளின் கூட்டம்; **மழையிடை உரும் என ஒலிப்ப -** மேகங்களில் தோன்றும் இடியோசை போன்று பேரொலி செய்ய; **கண்மணிக்குலம் கனல் எனக் காந்துவ -** கண்ணின் மணியாகிய விழிக்கூட்டம் கனலே போல ஒளி வீசின; **கதுப்பின் தண் மணிக்குலம் -** கன்னங்களில் அணியப் பெற்ற குளிர்ந்த மணியாகிய முத்துக்களின் கூட்டம்; **மழை எழும் கதிர் என தழைப்ப -** மேகத்தினின்று வெளிப்படும் சந்திரனே போன்று நிறைந்து விளங்கின.

குலம் என்னும்சொல் முதலில் உயர்வு என்னும் பொருளிலும் பின்னே கூட்டம் என்ற பொருளிலும் வந்தது. மணி என்னும் சொல் முதலில் உயர்வு என்னும் பொருளில் வந்தது. (மணியான பிள்ளை என்னும் உலக வழக்கை எண்ணுக.) பின்னே இரத்தினம், முத்து என்ற பொருள்களில் வந்தது. **(13)**

*அரக்க வீரரைச்சுற்றத்தார் தடுத்து இரங்குதல்*

**5614. தொக்கதுஆம் படை, சுரி குழல் மடந்தையர், தொடிக் கை**
**மக்கள், தாயர்,மற்று யாவரும் தடுத்தனர், மறுகி**
**'ஒக்கஏகுதும், குரங்கினுக்கு உயிர் தர; ஒருவர்**
**புக்கு மீண்டிலர்'என்று, அழுது இரங்கினர், புலம்பி.**

**தொக்கது ஆம்படை -** அவ்வாறு திரண்டதான படைவீரர்களை; **சுரி குழல் மடந் தையர் -** சுருண்ட கூந்தலை உடைய பெண்களும்; **தொடிக்கை மக்கள் -** வளையலை அணிந்த கைகளை உடைய மக்களும்; **தாயர், மற்று யாவரும் -** அவரது அன்னைமார்களும், மற்றைய சுற்றத்தினரும்; **மறுகி, தடுத்தனர் -** மனங்கலங்கி, (போர் செய்யச் செல்வதை முதலில்) தடுத்துச் சொல்லி; **புக்கு ஒருவர் மீண்டிலர் -** (தம் சொல்லைக் கேட்காமல் செல்லும் வீரர்களை நோக்கி) 'இது வரை அந்தக் குரங்கோடு போருக்குச் சென்றவர் ஒருவரும் திரும்பினாரில்லை; **குரங்கினுக்கு உயிர்தர -** அந்தக் குரங்குக்கு உயிரைத் தர வேண்டுமானால்; **ஒக்க ஏகுதும் -** நாம் எல்லோரும் ஒருமிக்கச் செல்வோம் ! **என்று -** எனச் சொல்லி; **அழுது புலம்பி இரங்கினர் -** கோவென்று கதறி அழுது வருந்தினார்கள்; ஒத்த நிலையில்பழகும் மனைவி, தாம் காப்பாற்ற வேண்டிய மக்கள், தம்மைக் காப்பாற்றிய முதிர்ந்த தாயர் முதலிய சுற்றத்தார் இரங்கித் தடுக்கும் நிலையும், 'நாம் அனைவரும் ஒரு சேர இறப்போம்' என்னும் ஒற்றுமை மிகுந்த பற்றுதலும் உருக்கமாகக் கூறப்பட்டுள்ளன. படை வீரர்களைத் தடை செய்தது அபசகுனமாகும் எனவும் அதுவே, அவர்களது மரணத்தை முன் கூட்டித் தெரிவிக்கின்றது எனவும் கருத்துரைப்பார் உளர். **(14)**

ஐவரும் தம்படையோடுசெல்லல்

**5615. கை பரந்துஎழு சேனைஅும் கடலிடைக் கலந்தார்;**
**செய்கைதாம்வரும் தேரிடைக் கதிர் எனச் செல்வார்-**

***மெய் கலந்த மாநிகர்வரும் உவமையை வென்றார்,***
***ஐவரும், பெரும் பூதம் ஓர் ஐந்தும் ஒத்து அமைந்தார்.***

***ஐவரும் பெரும்பூதம் ஓர் ஐந்தும் ஒத்து அமைந்தார் -*** *அந்த ஐந்து சேனைத்தலைவர்களும், ஐந்து பூதங்களும் ஒன்று சேர்ந்தன போல விளங்கியவர்களாய்;* ***கை பரந்து எழு சேனை அம் கடலிடைக் கலந்தார் -*** *பக்கங்களில் பரவிக் கிளம்பிய சேனைகளாகிய அழகிய கடலின் நடுவில் போய்ச் சேர்ந்து கொண்டனர்;* ***தாம் -*** *அவர்கள்;* ***செய்கை வரும் தேரிடைக் கதிர் என -*** *அற்புதமான வேலைப்பாடமைந்த தேர்மீது வருகின்ற சூரியனைப் போல;* ***செல்வார் -*** *விரைந்து செல்வாராயினர்;* ***மெய் கலந்த மா நிகர்வரும் உவமையை வென்றார் -*** *இரு வகை உடல் பெற்ற நரசிம்மத்தை ஒப்பாகச் சொல்லுகின்ற உவமைத் தன்மையை வென்று விளங்கினர்.*

*உலகஇயக்கத்துக்குப் பஞ்ச பூதங்களும் ஒன்று சேர்தல் போலப் போர்த்தொழில் நிகழ்த்துவதற்கு இந்த ஐந்து சேனைத் தலைவர்களும் ஒன்று சேர்ந்தனர் என்பது கருத்து. பின்னே ஒரு பாடலில் (5664) பஞ்ச சேனாபதியர்க்கு வஞ்சனை சான்ற ஐம்புலன்கள் உவமையாக வருவதை ஒப்பிட்டு உணர்க. அடுத்த பாடலில் இவர்க்கு பஞ்சேந்திரியங்கள் உவமையாக வருவதையும் காண்க. சினக் கொடுமையால் நரசிங்கத்தை வென்றனர் என்பது கருத்துப் போலும். மெய் கலித்தல் - வடிவிலே இரு வகை உடல்கள் சேர்தல். மா - இங்கே (நர)சிங்கம்.* ***(15)***

***5616. முந்து இயம்பல கறங்கிட, முறை முறை பொறிகள்***
***சிந்தி, அம்புஉறு கொடுஞ் சிலை உரும் எனத்***
***தெறிப்பார்;***
***வந்து இயம்புறுமுனிவர்க்கும், அமரர்க்கும், வலியார்;***
***இந்தியம் பகைஆயவை ஐந்தும் ஒத்து, இயைந்தார்.***

***முந்து இயம் பலகறங்கிட -*** *தங்கள் சேனைக்கு முன்பாக பல போர் வாத்தியங்கள் ஒலிக்கும்படியாக;* ***முறைமுறை பொறிகள் சிந்தி -*** *அடுத்தடுத்துநெருப்புப் பொறிகளைச் சிதறவிட்டு;* ***அம்பு உறு கொடுஞ்சிலை -*** *அம்புகள்பொருந்திய வளைந்த விற்களை;* ***உரும் எனத் தெறிப்பார் -*** *இடி போல் ஒலிஎழும்படியாக வில் நாணைத் தெறிப்பார்கள்;* ***வந்து இயம்புறு முனிவர்க்கும்அமரர்க்கும் வலியார் -*** *உரியவர்களிடம் வந்து போர்க் கலை கற்பிக்கும் முனிவர்களுக்கும் தேவர்களுக்கும் மேற்பட்ட வலிமை உடையவர்கள் அச்சேனாபதியர்;* ***பகையாயவை இந்தியம் ஐந்தும் ஒத்து இயைந்தார் -*** *ஆன்மாக்களுக்குப் பகையாகிய இந்திரியங்கள் ஐந்தும் ஒன்றாக சேர்ந்துவிட்டதுபோல இணைந்தவர்கள், அப் படைத் தலைவர். அம்பு சேர்ந்தவில் நாணைத் தெறிப்பதால் எழும் ஓசை இடியோசை போல் இருந்தது; மேலும், நாண் விறைப்பாக இருப்பதால் தெறிக்கும் போதெல்லாம் நெருப்புப் பொறிகள் பறந்தன. போர்க் கலைகளை அரச குலத்தவர் முதலியோர்க்குக் கற்பிப்பவர் வசிட்டர் போன்ற முனிவர்கள்; கற்பிக்கும் கலையில் அவர்களும் வல்லவர்களாக இருந்தனர் என்பது புராண, இதிகாச வரலாறுகள் தெரிவிக்கும் உண்மையாகும். பஞ்ச சேனாபதியர் அத்தகைய முனிவர்களைக் காட்டிலும் தேவர்களைக் காட்டிலும் வலிமை கொண்டவராகத் தோற்றம் அளித்தனர். ஆன்ம முன்னேற்றத்துக்கு எதிரணி வகுத்துக் கொடுக்கும்*

*ஐம்பொறிகளை உவமையாக்கிய நயம் சிந்திக்கத் தக்கது.*
***(16)***

***5617. வாசவன்வயக் குலிசமும், வருணன் வன் கயிறும்,***
***ஏசு இல்தென்திசைக்கிழவன்தன் எரி முனை***
***எழுவும்,***
***ஈசன் வன் தனிச்சூலமும், என்று இவை ஒன்றும்***
***ஊசி போழ்வதுஓர் வடுச் செயா, நெடும் புயம்***
***உடையார்.***

***வாசவன் வயகுலிசமும் -*** *இந்திரனுடைய வெற்றிதரும் வச்சிராயுதமும்;* ***வருணன் வன் கயிறும் -*** *வருணனுடைய வலிய பாசாயுதமும்;* ***ஏசு இல் தென் திசைக் கிழவன் தன் எரிமுனைஎழுவும் -*** *குற்றமற்ற தெற்குத்திக்குக்குரிய எமனது நெருப்பை முனையில் கொண்ட தண்டாயுதமும்;* ***ஈசன் வன் தனிச் சூலமும் -*** *சிவபெருமானது வலிய ஒப்பற்ற சூலாயுதமும்;* ***என்று இவை ஒன்றும் -*** *என்று பெருமையாய்ச் சொல்லக் கூடிய இவை ஒன்றும்;* ***ஊசி போழ்வது ஓர் வடுச் செயா -*** *ஊசி ஊடுருவிச் செல்லக் கூடிய (மிகச் சிறிய) ஒரு வடுவையேனும் செய்ய மாட்டாத;* ***நெடும் புயம் உடையார் -*** *பெரிய தோள்களை உடையவர் (படைத் தலைவர்)* ***(17)***

***5618. சூர்தடிந்தவன் மயிலிடைப் பறித்த வன் தோகை,***
***பார் பயந்தவன்அன்னத்தின் இறகிடைப் பறித்த***
***மூரி வெஞ் சிறகு,இடை இட்டுத் தொடுத்தன***
***முறுக்கி,***
***வீர சூடிகைநெற்றியின் அயல் இட்டு விசித்தார்.***

***சூர் தடிந்தவன் -*** *சூரபதுமனைக் கொன்ற முருகக் கடவுளின்;* ***மயில் இடைப் பறித்த வன் தோகை -*** *வாகனமாகிய மயிலின் வாலினிடத்திருந்து பிய்த்த வலிய இறகுகளையும்;* ***பார்பயந்தவன் அன்னத்தின் இறகிடைப் பறித்த -*** *பூமியைப் படைத்த நான்முகனின் வாகனமான அன்னப் பறவையினது இறகிலிருந்து எடுத்த;* ***மூரி வெம் சிறகு -*** *வலிய அழகிய சிறகுகளையும்;* ***இடை இட்டு முறுக்கி தொடுத்தன -*** *நடு நடுவே வைத்து முறுக்கித் தொடுத்தனவான;* ***வீர சூடிகை -*** *வீரத்துக்கு அறிகுறியான சுட்டியை;* ***நெற்றியின் அயல் இட்டு விசித்தார் -*** *நெற்றியினிடத்திலே வைத்துக் கட்டிக்கொண்டிருப்பவர்கள்.*

*வீர சூடிகை - வீரர்கள்அணியும் நெற்றிச் சுட்டி.* ***(18)***

***5619. பொன் திணிந்த தோள் இராவணன் மார்பொடும்***
***பொருத***
***அன்று இழந்தகோடு அரிந்து இடும் அழகு உறு***
***குழையர்;***
***நின்ற வன் திசைநெடுங் களி யானையின் நெற்றி***
***மின் திணிந்தஅன ஓடையின் வீர பட்டத்தர்.***

***பொன் திணிந்ததோள் இராவணன் -*** *பொன்னாபரணங்கள்நிறைந்த தோள்களை உடைய இராவணனது;* ***மார் பொடும்பொருத அன்று இழந்தகோடு -*** *மார்பினோடும் போர் புரிந்த அந்தக் காலத்தில் (திசை யானைகள்) இழந்தவையான கொம்புகளை;* ***அரிந்து இடும் உறும் குழையர் -*** *அறுத்து அவற்றைக் கொண்டு செய்த அழகு பொருந்திய காதணியை உடையவர்கள்;* ***திசை நின்றவல் நெடும் களி யானையின் -*** *(அன்றியும்) எட்டுத் திக்குகளிலும் தோற்றுநின்ற வலிய பெரிய செருக்குற்ற யானைகளின்;* ***நெற்றி மின் திணிந்த அன ஓடையின் -*** *நெற்றிகளில் அணிந்த மின்னல்கள் நெருங்கி நின்றாற் போன்ற (மிக்க ஒளியை உடைய) முகபடாத்தினால் இயன்ற;* ***வீர பட்டத்தர் -*** *வீரபட்டத்தை அணிந்தவர்.*

*பஞ்சசேனாபதிகளின் வீரச் சிறப்பை விளக்குவது. குழை - காதணி; யானையின் தந்தங்களால் காதணி செய்வது வீரம். 'நாக மருப்பின் இயன்றதோடும்' (சீவக - 2440) திசை யானையின் நெற்றிப் பட்டத்தால் ஆன வீரபட்டம் நெற்றியில் அணிவதும் வீரர் மரபு.* ***(19)***

**கலி விருத்தம்**

***5620. நிதிநெடுங் கிழவனை நெருக்கி, நீள் நகர்ப்***
***பதியொடும்பெருந் திருப் பறித்த பண்டை நாள்,***
***'விதி' என,அன்னவன் வெந்நிட்டு ஓடவே,***
***பொதியொடும்வாரிய பொலன் கொள் பூணினார்.***

***நெடு நிதிக்கிழவனை -*** *(பஞ்ச சேனாபதிகள்)பெருஞ் செல்வத்துக்குரியவனான குபேரனை;* ***நெருக்கி -*** *போரில் தாக்கி;* ***நீள் நகர் பதியொடும் -*** *நீண்ட நகரமாகிய அளகா புரியொடும்;* ***பெருந் திருப் பறித்த பண்டை நாள் -*** *அவன் பெருஞ் செல்வத்தையும் கவர்ந்து கொண்ட முற்காலத்தில்;* ***அன்னவன் -*** *அந்தக் குபேரன் !* ***விதி என வெந்நிட்டு ஓடவே -*** *'நம்; பண்டை வினை' என்று சொல்லி புறமுதுகிட்டு ஓடியவுடன்;* ***பொதியோடும் வாரிய -*** *சுமைகளாக வாரிக் கொண்ட;* ***பொலன் கொள் பூணினார் -*** *பொன்னால் செய்யப்பட்ட அணிகலன்களை உடையவர்கள்.* ***(20)***

***5621. இந்திரன்இசை இழந்து ஏகுவான், இகல்***
***தந்தி முன்கடாவினன் முடுக, தாம் அதன்***
***மந்தர வால் அடிபிடித்து, 'வல்லையேல்***
***உந்துதி, இனி'என, வலிந்த ஊற்றத்தார்.***

***இசை இழந்துஏகுவான் இந்திரன் -*** *(இராவணனோடு போர் புரிந்ததால்) தன் புகழ் அழிந்து தோற்றுத் திரும்பிப் போன தேவேந்திரன்;* ***இல்தந்தி முன் கடாவினன் முடுக -*** *வலிமை பொருந்திய (தன் ஐராவதம் என்னும்) யானையை முன்னே (வேகமாகச்) செலுத்திக் கொண்டு செல்ல;* ***தாம் -*** *அவர்கள்;* ***அதன் மந்தர வால் அடிபிடித்து -*** *அந்த யானையினது அழகான வாலின் அடியைப் பிடித்துக் கொண்டு;* ***வல்லையேல் இனி உந்துதி என -*** *நீ வலிமையுள்ளவனானால் இனிமேல் உனது யானையை மேற் செலுத்துவாய்' என்று;* ***வலிந்த ஊற்றத்தார் -*** *பிடித்து இழுத்துத் (தடை செய்த) வலிமை உடையவர்கள்.*

*மந்தரம் - அழகு;'மென்மை' என்னும் பொருளும் உண்டு.* ***(21)***

***5622. ‘பால் நிறுத்து அந்தணன் பணியன் ஆகி, நின்***
***கோல் நினைத்திலன்’ என, உலகம் கூறலும்,***
***நீல் நிறத்துஇராவணன் முனிவு நீக்குவான்,***
***காலனை,காலினில், கையில், கட்டினார்.***

***அந்தணன் பணியன்ஆகி*** - *முதல் அந்தணனாகிய பிரம்ம தேவனது கட்டளையின் படி நடப்பவனாய்;* ***பால் நிறுத்து*** - *(உயிர்களின்) விதியைச் சீர் தூக்கிப் பார்த்து;* ***நின் கோல் நினைத்திலன்*** - *(இலங்கையில் உள்ளவர்க்கும் அவரவர் விதியின்படி ஆயுட் காலத்தை நடப்பிப்பவனாய்) இலங்கை உனது கோலுக்கு உட்பட்டது என்பதை நினைத்தானில்லை;* ***என உலகம் கூறலும் நீல் நிறத்து இராவணன் முனிவு நீக்குவான்*** - *என்று உலகம் சொல்லுதலும் (அது கேட்ட) கருநிறத்து இராவணனது கோபத்தைப் போக்கும் பொருட்டு;* ***காலனைக் காலினில் கையில் கட்டினார்*** - *யமனையும்கால்களிலும் கைகளிலும் கட்டிச் சிறையிலே வைத்தவர்கள் (இவர்கள்).*

*காலன் இராவணனதுமேலாண்மையை மதிக்காமல், பிரமன் கட்டளைக்குப் பணிந்தவனாய், ஊழ்வினைப் படியே தன் பணியைச் செய்தவன் அதனால், அந்த யமனுடைய கைகால்களைப் பஞ்சசேனாபதியர் கட்டினார்கள் என்பது கருத்து. பால் - ஊழ்.* ***(22)***

***5623. மலைகளைநகும் தட மார்பர்; மால் கடல்***
***அலைகளை நகும்நெடுந் தோளர்; அந்தகன்***
***கொலைகளைநகும் நெடுங் கொலையர்; கொல்லன்***
***ஊது***
***உலைகளை நகும்அனல் உமிழும் கண்ணினார்.***

***மலைகளை நகும் தடமார்பர்*** - *(அவர்கள்) மலைகளைஏளனம் செய்யும் பரந்த மார்பை உடையவர்கள்;* ***மால்கடல் அலைகளை நகும் நெடும் தோளர்*** - *பெரிய கடலின் அலைகளைப் பழிக்கும் நீண்ட தோள்களை உடையவர்கள்;* ***அந்தகன் கொலைகளை நகும் நெடும் கொலையர்*** - *யமனுடைய கொலைத் தொழிலைப் பழிக்கும் பெரும் கொலைத் தொழிலை உடையவர்கள்;* ***கொல்லன் ஊது உலைகளை நகும் அனல் உமிழும் கண்ணினார்*** - *கொல்லன் (துருத்தி கொண்டு) ஊதும் உலைக்களங்களைப் பார்த்து இகழ்ந்து (சிவப்பன போல) நெருப்பை கக்குகின்ற கண்களை உடையவர்கள்.*

*இந்த அரக்கவீரர்களுடைய மார்பு முதலியவை மலை முதலியவற்றினும் விஞ்சியவை என்பது கூறப்பட்டது. விதிப்படி ஆயுள் முடிந்தோரை மட்டுமே கூற்றுவன் கொல்வான்; இராவணனின் படைத்தலைவர்கள் எவரையும் கொல்வர். ஆகையால், யமனுடைய கொலைத் தொழிலைப் பழிப்பவர் (ஏளனப் படுத்துவோர்) ஆனார், பஞ்ச சேனாபதியர். தாடகை பற்றி இராமனிடம் விசுவாமித்திரர் கூறியபோது, விதி முடிந்தது என்ற ஒரே தருமத்தை நோக்குவான் ‘கூற்றுவன்; மூக்கில் ஓர் அயல் மணம் முகர்ந்தால் எதிர்ப்படும் எதனையும் கொன்று தீர்ப்பாள் இவள். இவளைப் போல் உயிரினம் தின்னும் ஒரு கூற்றும் (கம்ப. 380) உண்டோ என்று சொல்லிய கருத்து நினையத்தக்கது.* ***(23)***

***5624. தோல்கிளர் திசைதொறும் உலகைச் சுற்றிய***
***சால் கிளர்முழங்கு எரி தழங்கி ஏறினும்,***
***கால் கிளர்ந்துஓங்கினும், காலம் கையுற***
***மால் கடல்கிளரினும், சரிக்கும் வன்மையார்.***

***காலம் கை உற -*** *யுக முடிவுநெருங்கிடும் போது;* ***சால் கிளர் முழங்கு எரி -*** *மிகுந்து கிளர்ந்து முழக்கம் செய்யும் ஊழிக் காலத்தீ;* ***உலகைச் சுற்றிய -*** *உலகம் முழுவதையும் (எரிக்கும்படி) சூழ்ந்து கொள்ளும் பொருட்டு;* ***தோல் கிளர் திசை தொறும் -*** *யானைகள் விளங்கும் எட்டுத் திக்குகளிலும்;* ***தழங்கி ஏறினும் -*** *பேரொலியோடு மேற்கிளம்பினும்;* ***கால் கிளர்ந்து ஓங்கினும் -*** *ஊழிக் காற்று மேற்கிளம்பி வீசினாலும்;* ***மால் கடல் கிளரினும் -****பெருங்கடல்கள் ஒன்றுசேர்ந்து பொங்கி எழுந்தாலும்;* ***சரிக்கும் வன்மை யார் -*** *(அவற்றை யெல்லாம் சிறிதும் பொருட்படுத்தாமல்) இயங்குகின்ற ஆற்றல் உடையவர்கள். (இவர்கள்).*

*'தோல் - யானை, சரித்தல் - இயங்குதல்.* ***(24)***

*அரக்கர் படையைஅனுமன் காணுதல்*

***5625. இவ் வகைஅனைவரும் எழுந்த தானையர்,***
***மொய் கிளர்தோரணம் அதனை முற்றினார்;***
***கையொடு கை உறஅணியும் கட்டினார்;***
***ஐயனும்,அவர்நிலை, அமைய நோக்கினான்.***

***இவ்வகை அனைவரும்-*** *இவ்வாறாக அந்தப் படைத் தலைவர் ஐவரும்;* ***எழுந்த தானையர் -*** *மேல் நோக்கி எழுந்த சேனையை உடையவராய்;* ***மொய்கிளர் தோரணம் அதனை முற்றினார் -*** *வலிமையால் விளங்கும் தோரண வாயிலைச் சூழ்ந்து கொண்டு;* ***கையொடு கை உற -*** *ஒரு பக்கத்தோடு மற்றொரு பக்கமும் பொருந்த;* ***அணியும் கட்டினார் -*** *சேனைகளை அணிவகுத்து அமைத்தனர்;* ***ஐயனும் அவர் நிலை அமைய நோக்கினான் -*** *அனுமனும் அவர்களது போர் நிலையை நன்றாகப் பார்த்தான்.*
***(25)***

***5626. அரக்கரதுஆற்றலும், அளவு இல் சேனையின்***
***தருக்கும், அம்மாருதி தனிமைத் தன்மையும்,***
***பொருக்கெனநோக்கிய புரந்தராதியர்,***
***இரக்கமும்,அவலமும், துளக்கும், எய்தினார்.***

***அரக்கரதுஆற்றலும் -*** *(அனுமனைச் சூழ்ந்துகொண்ட) பஞ்ச சேனாபதிகளின் வலிமையையும்;* ***அளவு இல் சேனையின் தருக்கும் -*** *அளவற்ற அந்தச் சேனையின் பெருமிதத்தையும்;* ***அம்மாருதி தனிமைத் தன்மையும் -*** *அந்த அனுமன் தனியாய் நிற்கும் நிலைமையையும்;* ***பொருக்கென நோக்கிய புரந்தராதியர் -*** *திடீரென்று பார்த்த இந்திரன் முதலிய தேவர்கள்;* ***இரக்கமும், அவலமும் துளக்கும் எய்தினார் -*** *(அனுமனிடத்துக்) கருணையும், துன்பமும் நடுக்கமும் (ஒருங்கே) அடைந்தனர். இந்திரன் முதலியதேவர்கள், பஞ்ச சேனாபதிகளின் ஆற்றலை நன்கு அறிந்தவர்கள்.*

*அதனால், சேனைகளின் நடுவில் தனித்து நிற்கும் அனுமனது நிலைக்கு, இரக்கமும் அவலமும் அடைந்தனர்.* ***(26)***

***5627. 'இற்றனர்அரக்கர் இப் பகலுளே' எனா,***
***கற்று உணர்மாருதி களிக்கும் சிந்தையான்,***
***முற்றுறச் சுலாவியமுடிவு இல் தானையைச்***
***சுற்றுற நோக்கி,தன் தோளை நோக்கினான்.***

***கற்று உணர்மாருதி** - (பல நூல்களையும்) கற்றுத் தேர்ந்த அனுமான்; **அரக்கர் இப் பகலுளே இற்றனர் எனா, களிக்கும் சிந்தையான்** - இந்த அரக்கர்கள், இன்று ஒரு பகல் பொழுதுக்குள்ளே அழிவது உறுதி என்று எண்ணி மகிழ்கின்ற மனத்தினனாய்; **முற்று உறச் சுலாவிய முடிவு இல் தானையை** - (தன்னை) முழுவதும் சூழ்ந்து கொண்ட எல்லையற்ற அரக்கர்படைகளை; **சுற்று உற நோக்கி** - நான்கு பக்கத்திலும் நன்றாகப் பார்த்து; **தன் தோளை நோக்கினான்** - தனது தோள்களையும் பார்த்தான்.*
***(27)***

*அனுமனைக் கண்டஅரக்க வீரரின் ஐயப்பாடு*

***5628. 'புன் தலைக் குரங்கு இது போலுமால் அமர்***
***வென்றது !விண்ணவர் புகழை வேரொடும்***
***தின்ற வல்அரக்கரைத் திருகித் தின்றதால் !'***
***என்றனர்,அயிர்த்தனர், நிருதர் எண்ணிலார்.***

***எண் இலார்நிருதர்** - (அங்கிருந்த)கணக்கில்லாத அரக்கர்கள்; **புன் தலைக் குரங்கு இது போலும்** - இழிவான தலையை உடைய குரங்கு இது தானோ; **அமர் வென்றது** - பெரிய போரில் வெற்றி கொண்டது; **விண்ணவர் புகழை வேரொடும் தின்ற வல் அரக்கரை** - தேவர் புகழை அடியோடு ஒழித்த வலிய அரக்கர்களை; **திருகித் தின்றது** - முறுக்கித் தின்றது ?; **என்றனர் அயிர்த்தனர்** - என்று ஐயம் கொண்டனர்.*

*போலும் என்றஒப்பில் போலியும் ஆல் என்ற அசையும் சேர்ந்து நின்று, நம்ப முடியாமையை உணர்த்தின.* ***(28)***

*அனுமன் பெரியவடிவம் கொள்ளலும், அரக்கர் சினந்து படை வழங்கலும்*

***5629. ஆயிடை,அனுமனும், அமரர்கோன் நகர்***
***வாயில்நின்றுஅவ் வழிக் கொணர்ந்து வைத்த மாச்***
***சேயொளித்தோரணத்து உம்பர், சேண் நெடு***
***மீ உயர்விசும்பையும் கடக்க வீங்கினான்.***

***ஆ இடை** - அப்பொழுது; **அமரர் கோன் நகர் வாயில் நின்று** - தேவர்தலைவனான இந்திரனது தலை நகராகிய அமராவதிப் பட்டணத்தின் வாசலிலிருந்து; **அவ்வழிக் கொணர்ந்து வைத்த** - அவ்விடத்து (அசோகவனம்) கொண்டு வந்து வைக்கப்பட்ட; **மா சேய் ஒளித் தோரணத்து உம்பர்** - மிக்க செந்நிறத்தை உடைய தோரணத்தின் மேலே; **சேண் நெடு மீ உயர் விசும்பையும்** - மிக நெடுந் தூரமாக மேலே உயர்ந்த*

*ஆகாயத்தையும்;* ***கடக்க வீங்கினான் -*** *கடந்து செல்லுமாறு உருவத்தைப் பெரிதாக்கினான்;* ***(29)***

## *5630. வீங்கியவீரனை வியந்து நோக்கிய*
## *தீங்கு இயல்அரக்கரும், திருகினார் சினம்,*
## *வாங்கியசிலையினர், வழங்கினார் படை;*
## *ஏங்கியசங்குஇனம்; இடித்த பேரியே !*

***வீங்கிய வீரனை-*** *(அவ்வாறு) பெரு வடிவு கொண்ட வீரனான அனுமனை;* ***வியந்து நோக்கிய -*** *வியப்புடன் பார்த்த;* ***தீங்கு இயல் அரக்கரும் -*** *(பிறர்க்குத்) தீமை செய்தலையே தமக்கு இயல்பாகக் கொண்ட அரக்கர்களும்;* ***சினம் திருகினார் -*** *கோபம் மிகுந்து;* ***வாங்கிய சிலையினர் -*** *வில்லை வளைத்து;* ***படை வழங்கினார் -*** *(அனுமன் மீது) அம்புகளைச் செலுத்தினார்கள்;* ***சங்கு இனம் ஏங்கிய -*** *(அப்போது) சங்குகளின் கூட்டம் ஒலி செய்தன;* ***பேரி இடித்த -*** *முரசங்கள் பேரொலி செய்தன.*

*வீரர்கட்குஉற்சாகம் மிகுதற் பொருட்டு, சங்கம் முதலியன முழக்குதல் மரபு.* ***(30)***

## *5631. எறிந்தனர், எய்தனர், எண் இறந்தன*
## *பொறிந்து எழுபடைக்கலம், அரக்கர் போக்கினார்;*
## *செறிந்தனமயிர்ப்புறம்; தினவு தீர்வுறச்*
## *சொறிந்தனர் எனஇருந்து, ஐயன் தூங்கினான்.*

***அரக்கர் -*** *அந்த அரக்கப் படை வீரர்கள்;* ***பொறிந்து எழு எண் இறந்தன படைக்கலம் -*** *அனற் பொறிகளை விட்டுக் கொண்டு மேற் கிளம்பும் கணக்கற்ற ஆயுதங்களை;* ***எறிந்தனர் எய்தினர் போக்கினார் -*** *எறிந்தும் எய்தும் அனுமன் மீது செலுத்தினர்;* ***மயிர்ப் புறம் செறிந்தன -*** *(அவை அனுமன் மீதுள்ள) அடர்ந்த மயிர்களின் மீது நெருங்கியனவாய்;* ***தினவு தீர்வுறச் சொறிந்தன என -*** *அனுமனுக்கு உண்டான உடல் தினவைப் போக்கச் சொறிந்தன போல இருக்க;* ***இருந்து -*** *இனிதிருந்து;* ***ஐயன் தூங்கினான் -*** *அனுமான் கண்ணுறங்குபவன் போல (ஆனந்தத்தினால்) கண்மூடிக் கொண்டிருந்தான்.* ***(31)***

*அனுமன் செய்தபோர்*

## *5632. உற்று,உடன்று, அரக்கரும், உருத்து உடற்றினர்;*
## *செற்றுறநெருக்கினர்; 'செருக்கும் சிந்தையர்*
## *மற்றையர் வரும்பரிசு, இவரை, வல் விரைந்து*
## *எற்றுவென்' என,எழு, அனுமன் ஏந்தினான்.*

***அரக்கரும் -*** *அந்தஅரக்கவீரர்களும்;* ***செருக்கும் சிந்தையர் உற்று -*** *அகந்தை கொண்ட மனத்தினராய் அனுமனை நெருங்கி;* ***உடன்று, உருத்து உடற்றினர் -*** *சினத்தால் மாறுபட்டு, கருஞ்சினம் மூண்டு விரைந்து படைக்கலங்களைப், பரபரப்புடன் விட்டனர்;* ***செற்று உற நெருக்கினர் -*** *இறந்து பட அனுமனைப் பல வழியாலும் தாக்கினர்;* ***அனுமன் -*** *(அப்போது) அனுமான்;* ***மற்றையர் வரும் பரிசு -*** *'மற்றுமுள்ள*

*அரக்கரும் போர் செய்ய வரும் விதமாக;* ***இவரை வல் விரைந்து எற்றுவென்' என -*** *இந்த அரக்கர்களை அழிப்பேன்' என்று எண்ணி;* ***எழு ஏந்தினான் -*** *இரும்புத் தூணைக் கையில் எடுத்துக் கொண்டான்.*

*அரக்கர்களின்போர்ச் செயலும், அனுமனது வீரச் செயலும் கூறப்பட்டது.*
***(32)***

## *5633. ஊக்கியபடைகளும், உருத்த வீரரும்,*
## *தாக்கியபரிகளும், தடுத்த தேர்களும்,*
## *மேக்கு உயர்கொடியுடை மேக மாலைபோல்*
## *நூக்கியகரிகளும், புரள நூக்கினான்.*

***ஊக்கியபடைகளும் -*** *அரக்கர்கள் தன்மீது செலுத்திய ஆயுதங்களும்;* ***உருத்த வீரரும் -*** *கோபித்து வந்த வீரர்களும்;* ***தாக்கிய பரிகளும் -*** *வந்து மோதிய குதிரைகளும்;* ***தடுத்த தேர்களும் -*** *தன்னைத் தடுத்து நின்ற தேர்களும்;* ***மேக்கு உயர் கொடி உடை -*** *மேலே உயர்ந்த கொடிகளைக் கொண்ட;* ***மேக மாலை போல் நூக்கிய கரிகளும் -*** *மேகங்களின் வரிசை போன்றனவுமான (தன்மீது) செலுத்தப்பட்ட யானைகளும்;* ***புரள நூக்கினான் -*** *(மண் மீது விழுந்து) புரண்டழியும் படி (அனுமன் எழுவைக் கொண்டு) கொன்றான்.*

*அனுமன், தன்கையில் ஏந்திய எழுவைக்கொண்டு (இரும்புத் தூண்) எதிரிகளின் ஆயுதம் முதலியவற்றை அழித்தது பற்றிக் கூறப்பட்டது.* ***(33)***

## *5634. வார் மதக்கரிகளின் கோடு வாங்கி, மாத்*
## *தேர் படப்புடைக்கும்; அத் தேரின் சில்லியால்,*
## *வீரரை உருட்டும்;அவ் வீரர் வாளினால்,*
## *தாருடைப்புரவியைத் துணியத் தாக்குமால்.*

***வார் மதக்கரிகளின் -*** *நீண்ட மத யானைகளின்;* ***கோடு வாங்கி -*** *கொம்புகளை முறித்தெடுத்து;* ***மாத்தேர் படப்புடைக்கும் -*** *பெரிய தேர்கள் அழிய அடிப்பான்;* ***அத்தேரின் சில்லியால் வீரரை உருட்டும் -*** *அழிந்த தேர்களின் சக்கரங்களைக் கொண்டு, போர் வீரர்களை உருண்டு விழச் செய்வான்;* ***அவ்வீரர் வாளினால் -*** *உருண்டு வீழ்ந்த அரக்கவீரரது கைவாள்களைக் கொண்டு;* ***தார் உடைப் புரவியை துணியத்தாக்கும் -*** *கிண்கிணி மாலை பூண்ட குதிரைகளைத் துணிபட்டு விழும்படி வெட்டுவான்.*

*அனுமன், தான்அழித்த பொருள்களையே ஆயுதங்களாகக் கொண்டு அப்படைகளைக் கொன்றான் என்பதாம். அனுமன் இதேபோலப் போர் செய்தை 5579 ஆம் பாடலிலும், அடுத்த 5635ஆம் பாடலிலும் காணலாம்.*
***(34)***

## *5635. இரண்டுதேர் இரண்டு கைத்தலத்தும் ஏந்தி, வேறு*
## *இரண்டு மால்யானை பட்டு உருள, எற்றுமால்;*
## *இரண்டு மால்யானை கை இரண்டின் ஏந்தி, வேறு*
## *இரண்டு பாலினும்வரும் பரியை எற்றுமால்.*

***இரண்டு தேர்இரண்டு கைத் தலத்தும் ஏந்தி -*** *இரண்டு தேர்களைத் தன்னிரு கைகளில் எடுத்து;* ***வேறு இரண்டு மால் யானைபட்டு உருளஎற்றும் -*** *(எதிர்வந்தது) வேறே*

*இரண்டு பெரிய யானைகள் அழிந்து உருளுமாறு தாக்கினான்;* ***கை இரண்டின் இரண்டு மால் யானை ஏந்தி*** *- தன் இரு கைகளிலும் வேறு இரண்டு பெரியயானைகளை எடுத்து;* ***இரண்டு பாலினும் வேறு வரும் பரியை எற்றும் -*** *இரு பக்கங்களிலும் வேறு வந்த குதிரைகளை மோதி அடித்தான்.*

*தன்னை எதிர்க்கவந்த தேர்கள் முதலியவற்றைக் கொண்டே, பகைவரின் யானைகள் முதலியவற்றை அழித்து ஒழித்தான் அனுமன் என்பதாம்.* ***(35)***

***5636. மா இரு நெடுவரை வாங்கி, மண்ணில் இட்டு,***
***ஆயிரம் தேர் படிஅரைக்குமால்; அழித்து,***
***ஆயிரம் களிற்றைஓர் மரத்தினால் அடித்து,***
***'ஏ' எனும்மாத்திரத்து எற்றி முற்றுமால்.***

***மா இரு நெடுவரைவாங்கி -*** *(மேலும் அனுமன்)பக்கத்தே உள்ள மிகப் பெரிய மலையை எடுத்து; (அதனைக் கொண்டு)* ***ஆயிரம் தேர் பட மண்ணில் இட்டு அழித்து அரைக்கும் -*** *ஆயிரந் தேர்கள் அழியும்படி, அவைகளைத் தரையில் வைத்து அரைப்பான்;* ***ஏ எனும் மாத்திரத்து -*** *இரண்டு மாத்திரைப் பொழுதிற்குள்;* ***ஓர் மரத்தினால் -*** *ஒரு மரத்தைக் கொண்டு;* ***ஆயிரம் களிற்றை அடித்து எற்றி முற்றும் -*** *ஆயிர யானைகளைஅடித்து (அவற்றை) மாயச் செய்வான். 'ஏ' யெனும் அளவுஇரண்டு, மாத்திரை நேரம்; கண் இமைக்கும் நேரம் ஒரு மாத்திரை. 'ஏ' நெடிலெழுத்து; ஆகையால் இரண்டு மாத்திரை* ***(36)***

***5637. உதைக்கும்வெங் கரிகளை; உழக்கும் தேர்களை;***
***மிதிக்கும் வன்புரவியை; தேய்க்கும் வீரரை;***
***மதிக்கும் வல்எழுவினால்; அரைக்கும் மண்ணிடை;***
***குதிக்கும் வன்தலையிடை; கடிக்கும்; குத்துமால்.***

***உதைக்கும் வெம்கரிகளை -*** *(பகைவர் தன் மீது)செலுத்துகின்ற கொடிய யானைகளைக் காலில் உதைப்பான்;* ***தேர்களை உழக்கும் -*** *தேர்களைக் கலக்குவான்;* ***வன் புரவியைமிதிக்கும் -*** *வலிய குதிரைகளைக்காலால் மிதிப்பான்;* ***வீரரைத் தேய்க்கும்*** *- வீரர்களைத் தரையோடு சேர்த்துத் தேய்த்து விடுவான்;* ***வல் எழுவினால் மண்ணிடை மதிக்கும் -*** *(தான் கையில் கொண்ட) வலிய எழுவால் தரையிட்டுக் குழம்பாக்குவான்;* ***வன் தலை இடைக் குதிக்கும் -*** *(மேலும்) அவ்வரக்கரின் தலையிடத்தே குதிப்பான்;* ***கடிக்கும், குத்தும் -*** *அவர்களைக் கடிப்பான் குத்துவான்.*

*எழு - ஒருவகைப்போர்க் கருவி. மதிற்கதவில் குறுக்கே இடப்படும் கணையமரம் எனவும் கூறுவர். மதித்தல் - கடைவது போலக் குழப்புதல்.* ***(37)***

***5638. விசையின்மான் தேர்களும், களிறும் விட்டு, அகல்***
***திசையும்ஆகாயமும் செறிய, சிந்துமால்;***
***குசை கொள் பாய் பரியொடும், கொற்ற வேலொடும்,***
***பிசையுமால்அரக்கரை, பெருங் கரங்களால்.***

**விசையின் -** (மேலும்அவ்வனுமன்) வேகமாக; **மான் தேர்களும் களிறும் விட்டு -** குதிரைகள் பூட்டப்பட்ட தேர்களையும் யானைகளையும் விட்டெறிந்து; **அகல் திசையும் ஆகாயமும் செறியச் சிந்தும் -** அகன்ற திக்குகளும் ஆகாசமும் போய் நிறையும் படி சிதறிவிழச் செய்வான்; **குசை கொள் பாய் பரியொடும் -** கடிவாளத்தைக் கொண்ட பாய்ந்து செல்லும் தன்மையுள்ள குதிரைகளுடனும்; **கொற்ற வேயொடும் -** (கையிற் பிடித்த) வெற்றி பொருந்திய வேலாயுதத்துடனும்; **அரக்கரை -** அந்த அரக்க வீரர்களை; **பெரும் கரங்களால் -** (தனது) பெரிய கைகளினால்; **பிசையும் -** பிசைந்து கொல்வான்.

*மான் - குதிரை. குசை - கடிவாளம்.* ***(38)***

***5639. தீ உறுபொறியுடைச் செங் கண் வெங் கைமா,***
***மீ உற, தடக்கையால் வீரன் வீசுதோறு,***
***ஆய் பெருங்கொடியன, கடலின் ஆழ்வன,***
***பாயுடை நெடுங்கலம் படுவ போன்றவே.***

**உறு தீப் பொறிஉடை -** மிக்க நெருப்புப் பொறிகளை உடைய; **செங்கண் வெங்கை மா -** சிவந்த கண்களைக் கொண்ட கொடிய யானைகளை; **வீரன் தடக் கையால் மீ உற வீசு தோறு -** அனுமன் தனது பெரிய கைகளைக் கொண்டு ஆகாயத்தின் மீதுவீசி எறியுந் தோறும்; **ஆய் பெருங் கொடியன -** சிறந்த பெரிய கொடிகளை உடையவாகி; **கடலின் ஆழ்வன -** கடலில் வீழ்பவை; **பாய் உடை நெடும் கலம் படுவ போன்ற -** பாய் மரங்களை உடைய நெடிய மரக்கலங்கள் (கடலில்) மூழ்குவனவற்றை ஒத்திருந்தன.

*கொடியோடு யானை கடலில் ஆழ்வது, பாய் மரத்தோடு மரக்கலம் கடலில் மூழ்குவதை ஒத்திருந்தது. 'பண்ணார் களிறே போல் பாயோங்குயர் நாவாய்' (சீவக சிந்தாமணி 2793) எனப் பாய்மரக் கப்பல்கள் கொடி தாங்கிய களிறுபோல் தோற்றம் அளிப்பதாகத் திருத்தக்க தேவரும் பாடினார்.* ***(39)***

***5640. தாரொடும்,உருளொடும், தடக் கையால் தனி***
***வீரன் விட்டுஎறிந்தன, கடலின் வீழ்வன,***
***வாரியின் எழும்சுடர்க் கடவுள் வானவன்***
***தேரினைநிகர்த்தன, புரவித் தேர்களே.***

**தனி வீரன் -** ஒப்பற்றவீரனான அனுமன்; **தடக்கையால் விட்டு எறிந்தன -** வலிய தன்கைகளால் வீசி எறியப்பட்டவனவாகி; **கடலின் வீழ்வன -** கடலில் சென்று வீழ்வனவாகிய; **தாரொடும் உருளொடும் -** கிண்கிணியோடும் சக்கரத்தோடும் கூடியனவாய்க்; **புரவித் தேர்கள் -** குதிரைகள் பூட்டப்பட்ட தேர்கள்; **வாரியின் எழும் -** கடலில் தோன்றுகின்ற; **சுடர்க்கடவுள் வானவன் தேரினை நிகர்த்தன -** ஆயிரம் கதிர்களோடு கூடிய கடவுளாகிய சூரியனுடைய தேர்போல் காணப்பட்டன.

*கடலில் விழுந்ததேர்கள், கடலினின்று தோன்றும் சூரியனது தேரை ஒத்தன.* ***(40)***

***5641. மீ உறவிண்ணிடை முட்டி வீழ்வன,***
***ஆய் பெருந்திரைக் கடல் அழுவத்து ஆழ்வன,***

***ஒய்வில புரவி,வாய் உதிரம் கால்வன,***
***வாயிடை எரியுடைவடவை போன்றவே.***

***மீ விண் இடை உற-*** *மேலேயேஉள்ள வானிடத்துப் பொருந்த, '(அனுமன் வீசி எறிந்ததனால்);* ***முட்டி வீழ்வனவாய் -*** *சென்று முட்டுண்டு கீழே விழுகின்றனவாய்;* ***பெருந்திரைக் கடல் அழுவத்து ஆழ்வன -*** *பெரிய அலைகளை உடைய கடற் பரப்பில் அமிழ்வனவும்;* ***ஓய்வில புரவி -*** *எண்ணிறந்த குதிரைகள்;* ***வாய் உதிரம் கால்வன -*** *வாய்களினின்றும் இரத்த நீரைச்சொரிகின்றவை;* ***வாயிடை எரி உடை -*** *வாயிடத்து நெருப்பை உடைய;* ***வடவை போன்ற -*** *வடவாமுகாக்கினி போன்று விளங்கின.*

*வடவை என்பதுகடலில் உள்ள நீர் கொந்தளித்து எழாதபடி அந் நீரைச்சுவறச் செய்யும் தீயைத் தன்முகத்தில் கொண்டுள்ளதாய்க் கடவுளால் அமைக்கப்பெற்ற ஒரு பெண் குதிரை என்று நூல்கள் கூறும். இங்குக் குதிரைகள், வடவைக் குதிரைக்கும், அவற்றின் வாயிலிருந்து வெளிப்படும் இரத்தம் அவ் வடவைக்குதிரை வாயிலிருந்து தோன்றும் நெருப்புக்கும் உவமை ஆயின.* ***(41)***

***5642. வரிந்து உறவல்லிதின் சுற்றி, வாலினால்***
***விரிந்து உறவீசலின், கடலின் வீழ்குநர்***
***திரிந்தனர்-செறி கயிற்று அரவினால் திரி***
***அருந் திறல்மந்தரம் அனையர் ஆயினார்.***

***வாலினால்வல்லிதின் உறச் சுற்ற வரிந்து -*** *அனுமன் தனது வாலினால் அழுத்தமாகச் சுற்றிக்கட்டி;* ***விரிந்து உற வீசலின் -*** *வெகு தூரம் செல்லும்படி வீசியெறிதலினால்;* ***கடலின் வீழ்குநர் திரிந்தனர் -*** *கடலில் போய் விழுந்து சுழல்கின்ற அரக்கவீரர்கள்;* ***செறி கயிற்று அரவினால் திரி -*** *நெருங்கிய வாசுகி என்னும் (பாம்பு) கயிற்றினால் கடையப்பட்டுச் சுழன்ற;* ***அருந் திறல் மந்தரம் அனையர் ஆயினார் -*** *அரிய வலிமை பெற்ற மந் தரமலையை ஒத்தவராயினர். அரக்கர்களாகியகாலாட்படை அழிந்தமை கூறப்பட்டது. அரக்கர்கள் மந்தர மலைக்கும் அனுமன்வால் வாசுகி என்னும் பாம்புக்கும் உவமை.* ***(42)***

***5643. வீரன் வன்தடக் கையால் எடுத்து வீசிய***
***வார் மதக்கரியினின், தேரின், வாசியின்,***
***மூரி வெங் கடல்புகக் கடிதின் முந்தின,***
***ஊரின் வெங்குருதி ஆறு ஈர்ப்ப ஓடின.***

***ஊரின் வெம்குருதி ஆறு -*** *விரைந்து செல்கின்றவெப்பமுள்ள இரத்தப் பெருக்குகள்;* ***வீரன்வன் தடக்கையால் -*** *அனுமன் தனது பெரிய கைகளால்;* ***எடுத்து வீசிய -*** *எடுத்து வீசி எறிந்த;* ***வார் மத கரியினின் -*** *ஒழுகுகின்ற மத நீரை உடைய யானைகளினும்;* ***தேரின் -*** *தேர்களினும்;* ***வாசியின் -*** *குதிரைகளினும்;* ***மூரி வெம்கடல்புக கடிதின் முந்தின -*** *வலிய கொடிய கடலில் புக விரைந்தனவாய்;* ***ஈர்ப்ப ஓடின -*** *இழுக்கப்பட்டு ஓடின.*

*'ஊரின்' என்பதுவிரைவின் என்ற பொருளில் வந்துள்ளது அருகிய வழக்கு.*
***(43)***

***5644. பிறைக்கடை எயிற்றின, பிலத்தின் வாயின,***
***கறைப் புனல்பொறிகளோடு உமிழும் கண்ணன,***
***உறைத் தபுபடையின, உதிர்ந்த யாக்கைகள்,***
***மறைத்தன, மகரதோரணத்தை, வான் உற.***

***பிறைக்கடைஎயிற்றின -*** *பிறையின் நுனி போன்றுவளைந்த பற்களை உடையவனவும்;* ***பிலத்தின் வாயின -*** *குகைகளைப் போன்ற வாய் உடையனவும்;* ***கறைப் புனல் பொறிகளோடு உமிழும் கண்ணன -*** *கறைபடிந்த இரத்தமாகிய நீரை, நெருப்புப் பொறிகளோடு உமிழ்கின்ற கண்கள் கொண்டனவும்;* ***உறைதபு படையன -*** *உறைகளினின்று நீக்கி எடுத்த ஆயுதங்கள் பொத்துக் கொள்ளப் பெற்றனவுமான;* ***உதிர்ந்த யாக்கைகள் -*** *உயிரொழிந்து கீழே விழுந்துள்ள பிணக் குவியல்கள்;* ***வான் உற -*** *ஆகாயத்தை அளாவ;* ***மகர தோரணத்தை மறைத்தன -*** *(அனுமன் இருந்த) மகரத்தின் வடிவத்தை அந்தத் தோரண வாயிலை மூடிவிட்டன.*

*அனுமனால் இறந்தஅரக்கர்களின் மிகுதி கூறப்பட்டது. பிணங்கள், மிகுதியாகத் திரண்டிருந்ததனால் தோரண வாயில் மறைந்தது என்க.* ***(44)***

***5645. குன்று உள; மரம் உள; குலம் கொள் பேர் எழு***
***ஒன்று அல, பலஉள; உயிர் உண்பான் உள;***
***அன்றினர் பலர்உளர்; ஐயன் கை உள;***
***பொன்றுவதுஅல்லது, புறத்துப் போவரோ ?***

***குன்று உள -*** *(அனுமன்எடுத்துத் தாக்குவதற்கு) மலைகள் உள்ளன;* ***மரம் உள -*** *மரங்களும் உள்ளன;* ***குலம் கொள் பேர் எழு, ஒன்று அல பல உள -*** *சிறப்புப் பொருந்திய பெரிய எழுக்களும் (என்ற இவை) பலவாக உள்ளன;* ***உயிர் உண்பான் உள -*** *இப்படைகள் உண்பதற்கு உயிர்களும் உள்ளன;* ***அன்றினர் பலர் உளர் -*** *சினந்து போர் செய்யுமாறு அரக்க வீரர் பலரும் உள்ளனர்;* ***ஐயன் கையினில் பொன்றுவது அல்லது -*** *(அப்பகைவர்கள்)அனுமன் கையால் இறந்துபடுவது அல்லாமல்;* ***புறத்துப் போவரோ -*** *வெளியே தப்பிப் போவார்களோ ? (மாட்டார் என்றபடி)*

*அந்த அரக்கர்வீரர் இறந்தொழிவதற்கு வேண்டியன யாவும் நிரம்பியிருத்தலால் அவர்கள் யாவரும் இறந்தொழிவது அன்றி அவர்களுக்கு வேறு வழி இல்லை என்று கூறப்பட்டது. அன்றினர் - பகைவர்* ***(45)***

*படைகள் முழுமையாகஅழிதல்*

***5646. முழு முதல்,கண்ணுதல், முருகன் தாதை, கைம்***
***மழு எனப்பொலிந்து ஒளிர் வயிர வான் தனி***
***எழுவினின்,பொலங் கழல் அரக்கர் ஈண்டிய***
***குழுவினை, களம்படக் கொன்று நீக்கினான்.***

***முழு முதல்கண்ணுதல் முருகன் தாதை -*** *மும் மூர்த்திகளில் சேர்ந்தவனாகிய, கண்ணை நெற்றியிலே கொண்ட, முருகக் கடவுளின் தந்தையாகிய சிவபிரானது;* ***கை மழு என -*** *கையில் ஏந்திய மழுவாயுதம் போல;* ***பொலிந்து ஒளிர் -*** *மிக்கு*

*விளங்குகின்ற;* ***வயிர வான் தனி எழு வினின் -*** *உறுதியான் சிறந்த ஒப்பற்ற இரும்புத் தூணினால்;* ***பொலன் கழல் அரக்கர் ஈண்டிய குழு வினை -*** *அழகிய வீரக்கழல் அணிந்த அரக்கருடைய நெருங்கிய கூட்டத்தை;* ***களம் படக் கொன்று நீக்கினான் -*** *போர்க் களத்தில் இறந்த விழுமாறு கொன்று தொலைத்தான்.* ***(46)***

*தானை அழிந்தபின்சேனைத்தலைவர் ஐவரும் அனுமனுடன்பொருது வீழ்தல்*

***5647. உலந்தது தானை; உவந்தனர் உம்பர்;***
***அலந்தலை உற்றது,அவ் ஆழி இலங்கை;***
***கலந்தது, அழும்குரலின் கடல் ஓதை;***
***வலம் தருதோளவர் ஐவரும் வந்தார்.***

***தானை உலந்தது -*** *சேனைமுழுவதும் அழிந்துவிட்டது;* ***உம்பர் உவந்தனர் -*** *(அதுகண்டு) தேவர்கள் மகிழ்வுற்றனர்;* ***அவ் ஆழி இலங்கை அலம் தலை உற்றது -*** *கடல் சூழ்ந்த அந்த இலங்கை நகரம் குழப்பம் அடைந்தது;* ***அழும் குரலின் கடல் ஓதை கலந்தது -*** *இலங்கையிலுள்ளாரது அழு குரலாகிய கடலோசை எங்கும்பரவிற்று;* ***வலம் தருதோளவர் ஐவரும் வந்தார் -*** *(அப்போது) வலியைத் தரும் தோள்களை உடைய பஞ்ச சேனாபதிகளும் போர் புரிய எதிர்த்து வந்தனர்.*

*சேனைகளின்அழிவுக்குப் பிறகு, படைத்தலைவர் ஐவரும் அனுமனை எதிர்க்க வந்தனர் என்றவாறு.* ***(47)***

***5648. ஈர்த்து எழுசெம்புனல் எக்கர் இழுக்க,***
***தேர்த் துணை ஆழிஅழுந்தினர், சென்றார்;***
***ஆர்த்தனர்;ஆயிரம் ஆயிரம் அம்பால்***
***தூர்த்தனர்;அஞ்சனை தோன்றலும் நின்றான்.***

***ஈர்த்து எழுசெம்புனல் எக்கர் -*** *(பிணக்குவியல்களை)இழுத்துக் கொண்டு செல்கின்ற இரத்த வெள்ளத்தினிடையே உள்ள மணல் திட்டுகள்;* ***இழுக்க -*** *உள்ளே இழுப்பதனால்;* ***தேர்த்துணை ஆழி அழுந்தினர் சென்றார் -*** *தம் தேர்களின் சக்கரங்களும் புதையவும் அரிதின் சென்ற பஞ்ச சேனாபதிகள்;* ***ஆயிரம் ஆயிரம் அம்பால் தூர்த்தனர் -*** *ஆயிரக்கணக்கான அம்புகளால் (அனுமன் உடலை) மூடி மறைத்தனர்;* ***அஞ்சனை தோன்றலும் நின்றான் -*** *அஞ்சனா தேவியின் மகனாகிய அனுமனும் அம்புமாரியுள் அஞ்சாது நின்றான்.* ***(48)***

***5649. எய்த கடுங்கணை யாவையும், எய்தா***
***நொய்துஅகலும்படி, கைகளின் நூறா,***
***பொய்து அகடுஒன்று பொருந்தி, நெடுந் தேர்***
***செய்த கடும்பொறி ஒன்று, சிதைத்தான்.***

***எய்த கடும்கணையாவையும் எய்தா -*** *(அந்தப் பஞ்சசேனாபதிகள்) எய்த கொடிய அம்புகள் எல்லாம் தன்னை வந்து அடையாமல்;* ***நொய்து அகலும்படி கைகளின் நூறா -*** *எளிதில் ஒழிந்து போம்படி (தன்) கைகளினால் தூளாக்கிவிட்டு;* ***நெடுந்தேர் -*** *(பிறகு, பஞ்ச சேனாபதிகளுள் ஒருவனது) பெரிய தேரிலே;* ***பொய்து -*** *துளைக்கப்பட்டு;* ***அகடு***

***ஒன்று பொருந்தி செய்து*** - *நடுவில் நாட்டப்பட்டதாகிப் பொருந்தி செய்திருந்த;* ***கடும் பொறி ஒன்று சிதைத்தான்*** - *விரைந்து செல்வதற்குரிய இயந்திரம் ஒன்றை அழித்தான். அந்தப் பஞ்சசேனாபதிகளை அழிக்கக் கருதிய அனுமன், அவர்களுள் ஒருவனது தேரின் விசையந்திரத்தைச் சிதைத்தான் என்பதாம்.* ***(49)***

***5650. உற்று உறுதேர் சிதையாமுன் உயர்ந்தான்,***
***முற்றின வீரனை,வானில் முனிந்தான்;***
***பொன் திரள்நீள் எழு ஒன்று பொறுத்தான்,***
***எற்றினன்; அஃதுஅவன் வில்லினில் ஏற்றான்.***

***உற்று உறு தேர்சிதையா முன்*** - *(பொறி) பொருந்தியஅத்தேர் அழிவதற்கு முன்னமே;* ***உயர்ந்தான்*** - *அவரக்கன் அத்தேரினின்றும் உயர்ந்து எழுந்தான்;* ***முற்றின வீரனை*** - *அவன் அங்கும் தன்னை மேலெழாதபடி முற்றிக் கொண்ட வீரனாகிய அனுமனை;* ***வானில் முனிந்தான்*** - *ஆகாயத்திலிருந்தபடியே எதிர்த்தான்;* ***பொன்திரள் நீள் மழு ஒன்று பொறுத்தான்*** - *(அவனை) அனுமன், கரும் பொன்னால் திரட்டப்பட்ட நீண்ட மழு ஒன்றை தாங்கியவனாய்;* ***எற்றினன்*** - *தாக்கியடித்தான்;* ***அஃது*** - *அந்த இரும்புத் தூணை;* ***அவன் வில்லினின் ஏற்றான்*** - *அந்த அரக்கன் தனது வில்லினால் தன் மேல் விழாதபடி தாங்கித் தடுத்தான்.* ***(50)***

***5651. முறிந்ததுமூரி வில்; அம் முறியேகொடு***
***எறிந்த அரக்கன், ஓர் வெற்பை எடுத்தான்;***
***அறிந்தமனத்தவன், அவ் எழுவே கொடு***
***எறிந்த அரக்கனைஇன் உயிர் உண்டான்.***

***மூரிவில்முறிந்தது*** - *(அந்த அரக்கனுடைய)வலிய வில் முறிந்து போயிற்று;* ***அம் முறியே கொடு*** - *அந்த வில்லின் முறிந்த துண்டையே கையில் கொண்டு;* ***எறிந்த அரக்கன்*** - *அனுமன் மீது வீசி எறிந்த அந்த அரக்கன்;* ***ஓர் வெற்பை எடுத்தான்*** - *மீண்டும் ஒரு மலையை அனுமன் மீது எறியத் தூக்கினான்;* ***அறிந்த மனத்தவன்*** - *அரக்கனின் கருத்தை அறிந்த மனத்தவனாகிய அந்த அனுமன்;* ***அவ் எழுவே கொடு*** - *(தனது கையில் கொண்டிருந்த) அந்த இரும்புத் தூணைக் கொண்டே;* ***எறிந்த அரக்கனை*** - *தன்மீது வில் முறிகொண்டு எறிந்த அரக்கனுடைய;* ***இன் உயிர் உண்டான்*** - *இனிய உயிரை அழித்தான். அரக்கன் மலையையெடுப்பது அறிந்து அதற்கு முன்னே அனுமன் அவனை இரும்புத் தூணால் அடித்துக் கொன்றான் என்க. அரக்கனே யாயினும் அவனுக்கு அவன் உயிர் இனியதுதானே; ஆகையால் அரக்கனது உயிரை 'இன்னுயிர்' என்றார்.* ***(51)***

***5652. ஒழிந்தவர்நால்வரும், ஊழி உருத்த***
***கொழுந்துறு தீ எனவெய்துறு கொட்பர்,***
***பொழிந்தனர்,வாளி; புகைந்தன கண்கள்;***
***விழுந்தன சோரி,அவ் வீரன் மணித் தோள்.***

***ஒழிந்தவர்நால்வரும்*** - *மற்றை நான்கு சேனைத்தலைவர்களும்;* ***ஊழிஉருத்த*** - *ஊழிக்காலத்தில் சினந்து வெளிக் கிளம்பின;* ***கொழுந்துறு தீ என*** - *சுடர்க் கொழுந்துகள் பொருந்திய பெரும் தீயைப் போல;* ***வெய்துறு கொட்பர்*** - *வெப்பம் மிக்க*

*சுழற்சியினராய்;* ***வாளி பொழிந்தனர் -*** *அம்புகளை (அனுமன் மீது) சொரிந்தனர்;* ***கண்கள் புகைந்தன -*** *அவ்வரக்கருடைய கண்கள் (கோபத்தினால்) புகைகளைக் கக்கின;* ***அவ் வீரன் மணித் தோள் சோரி விழுந்தன -*** *அந்த வீரனான அனுமனது தோளிலிருந்து இரத்தம் ஒழுகியது.*

*'உறு தீ' இதனைக்கொண்டு, மிகுந்த தீ எனவும் பொருள் கொள்ளலாம். கொட்பு - சுழற்சி; கொட்டர் - சுழலுதலை உடையவர்கள்; உடற்சுழற்சி உள்ளச் சுழற்சி இரண்டனையும் குறிக்கும்.* ***(52)***

***5653. ஆயிடைவீரனும், உள்ளம் அழன்றான்;***
***மாய அரக்கர்வலத்தை உணர்ந்தான்;***
***மீ எரி உய்ப்பதுஓர் கல் செலவிட்டான்;***
***தீயவர் அச்சிலையைப் பொடிசெய்தார்.***

***ஆயிடை -*** *அப்பொழுது;* ***வீரனும் உள்ளம் அழன்றான் -*** *வீரனான அனுமனும் மனம் கொதித்தவனாகி;* ***மாய அரக்கர் வலத்தை உணர்ந்தான் -*** *வஞ்சனையை உடைய அரக்கரது வலிமையை அறிந்து;* ***மீ எரி உய்ப்பது ஓர் கல் செலவிட்டான் -*** *மேலே நெருப்பை உமிழ்வதான ஒரு கற்பாறையை எடுத்து (அவர்கள் மீது) தாக்குமாறு வீசி எறிந்தான்;* ***தீயவர் -*** *தீயவர்களாகிய அந்த அரக்கர் நால்வரும்;* ***அச்சிலையை பொடிசெய்தார் -*** *அந்த கற்பாறையை,(தங்கள் ஆயுதங்களால்) பொடியாக உதிரச் செய்தார்கள்.*

*எறியப்பட்டமலையின் வேகத்தால் அதிலிருந்து நெருப்புப் பொறி உண்டாயிற்று.* ***(53)***

***5654. தொடுத்த,தொடுத்த, சரங்கள் துரந்த;***
***அடுத்து, அகன்மார்பின் அழுந்தி, அகன்ற;***
***மிடல்தொழிலான், விடு தேறொடு நொய்தின்***
***எடுத்து,ஒருவன்தனை, விண்ணில் எறிந்தான்.***

***தொடுத்ததொடுத்த -*** *மேன் மேலும்அந்நால்வர் பூட்டி விட்ட;* ***சரங்கள் துரந்த -*** *அம்புகள் அங்கு நின்றும் வெளிப்பட்டனவாய்;* ***அகல் மார்பின் அடுத்து அழுத்தி அகன்ற -*** *(அனுமனது) அகன்ற மார்பில் பொருந்தித் தைத்து அப்பாற் சென்றன;* ***மிடல் தொழிலான் -*** *(அப்போது) வலிய போர்த்தொழிலை உடைய அனுமன்;* ***ஒருவன் தனை -*** *(அந்நால்வருள்) ஒருவனை;* ***விடு தேரொடு நொய்தின் எடுத்து -*** *(அவன்) செலுத்திவந்த தேரோடு எளிதாகத் தூக்கி;* ***விண்ணில் எறிந்தான் -*** *ஆகாயத்தில் வீசினான்.*

*நால்வரின்ஒருவனைத் தேரோடு ஆகாயத்தில் அனுமன் வீசினன் என்பதாம்.* ***(54)***

***5655. ஏய்ந்து எழுதேர் இமிழ் விண்ணினை எல்லாம்***
***நீந்தியது; ஓடி நிமிர்ந்தது; வேகம்***
***ஓய்ந்தது; வீழ்வதன்முன், உயர் பாரில்***
***பாய்ந்தவன்மேல், உடன் மாருதி பாய்ந்தான்.***

***ஏய்ந்து எழு தேர்-*** *(அனுமனால்) எடுத்து எறியப்பட்டு மேல் எழுந்த தேர்;* ***இமிழ் விண்ணினை எல்லாம் -*** *ஒலிக் குணம் உடைய ஆகாய வெளி எங்கும்;* ***ஓடி நீந்தியது -*** *விரைந்து கடந்ததாகி;* ***நிமிர்ந்தது வேகம் -*** *வேகத்தால் மிகுந்தது;* ***ஓய்ந்தது -*** *பின்னர் வேகம் குறைந்து போய்;* ***வீழ்வதன் முன் -*** *கீழே விழுவதற்கு முன்னமே;* ***உயர் பாரில் பாய்ந்தவன் மேல் -*** *சிறந்த பூமியில் பாய்ந்து குதித்த அவ்வரக்கர் தலைவன் மீது;* ***உடன் மாருதி பாய்ந்தான் -*** *உடனே அனுமன் பாய்ந்தான். எறியப்பட்டவேகத்திற்குத் தக்க வேகத்தில் தேர் பறந்தது என்பதை 'ஏய்ந்து எழு தேர்' எனக் குறித்தார்.*
***(55)***

***5656. மதித்தகளிற்றினில் வாள் அரிஏறு***
***கதித்ததுபாய்வதுபோல், கதி கொண்டு***
***குதித்தனன்;மால் வரை மேனி குழம்ப***
***மிதித்தனன்-வெஞ் சின வீரருள் வீரன்.***

***வெம் சினவீரருள் வீரன் -*** *கொடிய சினம் மிக்கவீரர்களுள் பெரு வீரனாகிய அனுமன்;* ***மதித்த களிற்றினில் -*** *தருக்குற்ற யானையின் மீது;* ***வாள் அரி ஏறு கதித்தது பாய்வதுபோல -*** *ஒளிதங்கிய ஆண்சிங்கம் கோபம் கொண்டு பாய்வது போல;* ***கதி கொண்டு குதித்தான் -*** *விரைவாக அவன்மீது குதித்து;* ***மால் வரை மேனி குழம்ப மிதித்தான் -*** *பெரிய மலை போன்ற (அந்த அரக்கனுடைய) உடம்பு சிதைந்து இரத்தம் குழம்பும்படி கால்களால் மிதித்துக் கொன்றான்.*

*பஞ்சசேனாபதிகளுள் இரண்டாமவன் கொல்லப்பட்டான்.* ***(56)***

***5657. மூண்டசினத்தவர் மூவர் முனிந்தார்;***
***தூண்டிய தேரர்,சரங்கள் துரந்தார்;***
***வேண்டிய வெஞ்சமம் வேறு விளைப்பார்,***
***'யாண்டு இனிஏகுதி ?' என்று, எதிர் சென்றார்.***

***மூவர் மூண்டசினத்தவர் முனிந்தார் -*** *மீதியிருந்த மூவர்மிகுந்த கோபம் உள்ளவர்களாய் (அனுமனிடம்) வெறுப்புற்ற வராகி;* ***தூண்டிய தேரர் -*** *தமது தேர்களைச் செலுத்தியவர்களாய்;* ***சரங்கள் துரந்தார் -*** *(அனுமம் மீது) அம்புகளைத் தொடுத்தனர்;* ***வேண்டிய வெஞ்சமம் வேறு விளைப்பார் -*** *(அவர்கள் மேலும்) தாம் விரும்பிய கொடிய போரை வேறு விதங்களிலும் செய்யத் தொடங்கியவராய்;* ***யாண்டு இனி ஏகுதி ? -*** *இனி நீ எங்குத் தப்பிப் போவாய் ?;* ***என்ற எதிர் சென்றார் -*** *என்று சொல்லிக் கொண்டே அனுமன் முன் எதிர்த்துச் சென்றார்கள்.* ***(57)***

***5658. திரண்டுஉயர் தோள் இணை அஞ்சனை சிங்கம்,***
***அரண் தரு விண்உறைவார்களும் அஞ்ச,***
***முரண் தரு தேர்அவை ஆண்டு ஒருமூன்றில்***
***இரண்டை இரண்டுகையின்கொடு எழுந்தான்.***

***திரண்டு உயர்தோள் இணை அஞ்சனை சிங்கம் -*** *பருத்து உயர்ந்தஇரண்டு தோள்களை உடைய ஆஞ்சனேயன்;* ***அரண் தரு விண் உறைவார்களும் அஞ்ச -*** *காவலை உடைய தேவலோகத்தில் வாழ்பவரான தேவர்களும் அஞ்சும்படி;* ***முரண் தருதேர் அவை ஒரு மூன்றில் -*** *தன்னோடு மாறுபட்ட மூன்று தேர்களுக்குள்ளே;* ***ஆண்டு -***

*அப்போது;* ***இரண்டை இரண்டு கையின் கொடு எழுந்தான் -*** *தன் இரண்டு கைகளிலே இரண்டு தேர்களை எடுத்துக் கொண்டு மேலே கிளம்பினான்.* ***(58)***

***5659. தூங்கினபாய் பரி; சூதர் உலைந்தார்;***
***வீங்கினதோளவர் விண்ணின் விசைத்தார்;***
***ஆங்கு, அது கண்டு,அவர் போய் அகலாமுன்,***
***ஓங்கிய மாருதி,ஒல்லையின் உற்றான்.***

***பாய் பரிதூங்கின -*** *(அனுமன் தேர்களைப்பற்றி மேலே எழும் போதுபூட்டியிருந்த) பாய்ந்தோடும் குதிரைகள் அந்தரத்தில் தொங்கின;* ***சூதர் உலைந்தார் -*** *தேரோட்டுவோர் அழிந்தார்;* ***வீங்கின தோளவர் விண்ணில் விசைத்தார் -*** *(அத்தேர்களிலிருந்த) பருத்த தோள்களை உடைய அவ்விரு தலைவர்களும் (அத்தேரினின்று) வான் வழியே விரைந்தனர்;* ***ஆங்கு அது கண்டு -*** *அப்போது அவர்கள் வானத்தில் செல்வதைக் கண்டு;* ***அவர் போய் அகலாமுன் -*** *அவர்கள் நீங்கித் தப்புவதற்கு முன்னம்;* ***ஓங்கிய மாருதி -*** *பெரு வடிவு படைத்த அனுமன்;* ***ஒல்லையின் உற்றான் -*** *விரைவில் (அவர்களைச் சென்று) கிட்டினான்.*

*தூங்குதல் -தொங்குதல்; ஒல்லை - விரைவு.* ***(59)***

***5660. கால் நிமிர் வெஞ் சிலை கையின் இறுத்தான்;***
***ஆனவர் தூணியும்,வாளும், அறுத்தான்;***
***ஏனைய வெம் படைஇல்லவர், எஞ்சார்,***
***வானிடை நின்று,உயர் மல்லின் மலைந்தார்.***

***கால் நிமிர்வெஞ்சிலை கையின் இறுத்தான் -*** *இருமுனைகளோடு ஓங்கிய கொடிய வில்லை (அனுமன்) தனது இரு கைகளால் ஒடித்து;* ***ஆனவர் தூணியும் வாளும் அறுத்தான் -*** *அவர்களுடைய அம்புப் புட்டில்களையும் வாள்களையும் சின்ன பின்னப்படுத்தினான்;* ***ஏனைய வெம்படை இல்லவர் -*** *வேறு,போருக்குரிய ஆயுதம்இல்லாதவரான அரக்கர் இருவரும்;* ***எஞ்சார் -*** *பின் வாங்காதவர்களாய்;* ***வானிடை நின்று -*** *ஆகாயத்திலிருந்து கொண்டே;* ***உயர்மல்லின் மலைந்தார் -*** *சிறந்த மற் போரினால் (அனுமானோடு) பொருதார்கள்.*

*கால் -வில்லின் நுனிகளைக் குறிக்கும். 'ஒரு தனு இரு கால் வளைய' என்ற திருவெழுகூற்றிருக்கையில் 'கால்' வில் நுனியைக் குறித்தது காண்க. (திருஞானசம்பந்தர் முதல் திருமுறை).* ***(60)***

***5661. வெள்ளை எயிற்றர், கறுத்து உயர் மெய்யர்,***
***பிள்ள விரித்தபிலப் பெரு வாயர்,***
***கொள்ள உருத்து அடர் கோள் அரவு ஒத்தார்;***
***ஒள் இகல்வீரன், அருக்கனை ஒத்தான்.***

***வெள்ளைஎயிற்றர் -*** *வெண்மையான பற்களைஉடையவர்களும்;* ***கறுத்து உயர் மெய்யர் -*** *கரு நிறத்தோடு உயர்ந்த உடலை உடையவர்களும்;* ***பிள்ள விரித்த பிலப்பெருவாயர் -*** *பிளக்கும்படியாக விரிந்து விளங்கிய பெரிய குகை போன்ற*

*வாய்களை உடையவர்களுமான அவ்வரக்கர் இருவரும்;* ***கொள்ள உருத்து அடர் கோள் அரவு ஒத்தார் -*** *உட்கொள்ளும்படி கோபித்து நெருங்கி வருகின்ற வலிய இராகு கேது என்னும் பாம்புகளை ஒத்தனர்;* ***ஒள் இகல் வீரன் -*** *சிறந்த பராக்கிரமத்தை உடைய வீரனாகிய அனுமன்;* ***அருக்கனை ஒத்தான் -*** *சூரியனைப் போல விளங்கினான்.*

*முதலில் இராகுகேதுக்களால் சூரியன் விழுங்கப்பட்டது போல் காணப்பட்டாலும், பிறகு, உட்கொள்ளப் படாமல் ஒளியோடு விளங்குவது போல, முதலில் அரக்கரால் அனுமன் தாக்கப்பட்டாலும், உடனே அவர்களை வென்று விளங்குவான் என்பது கருத்து. அடுத்த பாடல் காண்க 'வெள்ளை எயிற்றர் கறுத்து உயர் மெய்யர் - முரண்தொடை.* ***(61)***

***5662. தாம்பு எனவாலின் வரிந்து, உயர் தாளோடு***
***ஏம்பல் இலார்இரு தோள்கள் இறுத்தான்;***
***பாம்பு எனநீங்கினர், பட்டனர் வீழ்ந்தார்-***
***ஆம்பல்நெடும் பகைபோல் அவன் நின்றான்.***

***ஏம்பல் இலார் -*** *சிறிதும்சலியாது போர் செய்த அவ்வரக்கர் இருவருடைய;* ***உயர் தாளோடு இரு தோள்கள் -*** *நீண்டகால்களையும் இரண்டுதோள்களையும்;* ***வாலின் -*** *தனது வாலினால்;* ***தாம்பு என வரிந்து -*** *தாம்புக் கயிற்றால் கட்டுவது போலக்கட்டி;* ***இறுத்தான் -*** *(அனுமன்) ஒடித்தான்;* ***பாம்பு என நீங்கினர் -*** *இராகு கேதுக்கள் என்னும் பாம்புகள் போல் நீங்கியவர்களாய்;* ***பட்டனர் வீழ்ந்தார் -*** *இறந்து கீழே வீழ்ந்தனர்;* ***அவன் -*** *அந்த அனுமன்;* ***ஆம்பல் நெடும் பகை போல் நின்றான் -*** *அல்லிக்கு நெடும் பகைவனான சூரியன் போன்று ஒரு வித இடையூறும் இல்லாமல் நின்றான்.*

*முன்பாட்டில்அரக்கர் இருவரைப் பாம்பாகவும் அனுமனை அருக்கனாகவும் (சூரியனாகவும்) செய்த கற்பனையின் வளர்ச்சி இப்பாடலில் காணப்படுகிறது. அரக்கர் தலைவர் இருவரும் பாம்புகளாகவும் அனுமன் கதிரவனாகவும் கூறப்பட்டனர். சூரியனைக் கண்ட ஆம்பல் மலர் கூம்பிச் சோரும் ஆதலால் சூரியனை ஆம்பலுக்குப் பகைவன் என்பது கவிமரபு. ஞாயிறு கண்ட ஆம்பல் அழியும் 'ஓம்பு திங்களும் வந்து சுடர்கண்ட, ஆம்பலாய் மலர்க் காடொத்தழிந்ததே' (சீவக -2336)* ***(62)***

***5663. நின்றனன்ஏனையன்; நின்றது கண்டான்;***
***குன்றிடை வாவுறுகோள் அரி போல,***
***மின் திரி வன்தலைமீது குதித்தான்;***
***பொன்றி, அவன்,புவி, தேரொடு புக்கான்.***

***ஏனையன்நின்றனன் -*** *ஐவருள் மீதியாய்இருந்த ஒருவன் எதிர்த்து நின்றான்;* ***நின்றது, கண்டான் -*** *அவ்வாறு தன்னை எதிர்த்து நின்றதைக் கண்டவனாகிய அனுமன்;* ***குன்று இடை வாவுறு கோள் அரி போல -*** *குன்றினிடத்துத்தாவும் வலிய சிங்கம் போல;* ***மின் திரி வன் தலை மீது குதித்தான் -*** *ஒளி வீசுகின்ற (அரக்கனது) வலிய தலையின் மேல் குதித்தான்;* ***அவன் பொன்றி தேரொடும் புவி புக்கான் -*** *அந்த அரக்கன் இறந்து தன் தேரோடு பூமியில் அழுந்தினான்.* ***(63)***

**அறுசீர் ஆசிரியவிருத்தம்**

***5664. வஞ்சமும்களவும் வெஃகி, வழி அலா வழிமேல் ஓடி,***
***நஞ்சினும்கொடியர் ஆகி, நவை செயற்கு உரிய நீரார்,***
***வெஞ் சின அரக்கர் ஐவர்; ஒருவனே!- வெல்லப்பட்டார்***
***அஞ்சு எனும்புலன்கள் ஒத்தார்; அவனும், நல் அறிவை ஒத்தான்.***

***வஞ்சமும் களவும்வெஃகி*** - *வஞ்சகத் தன்மையும் களவுத் தொழிலையும் விரும்பி;* ***வழி அலா வழி மேல் ஓடி*** - *நநல்வழி அல்லாத தீய வழியில் ஓடித் திரிந்து;* ***நஞ்சினும் கொடியர் ஆகி*** - *விடத்தை விடக் கொடிய தன்மை உடையவர்களாகி;* ***நவை செயற்கு உரிய நீரார்*** - *பிறர்க்குத் தீமை செய்வதையே தமக்குக் குணமாகக் கொண்டவர்களாய்;* ***வெல்லப்பட்டார்*** - *அனுமனால் வெல்லப்பட்டவரான;* ***வெஞ்சின அரக்கர் ஐவர்*** - *கடுங்கோபம் கொண்ட அரக்கராகிய பஞ்ச சேனாபதிகள்;* ***அஞ்சு எனும் புலன்கள் ஒத்தார்*** - *ஐந்து புலன்களுக்கு ஒப்பராயினர்;* ***ஒருவனே அவனும்*** - *தனி வீரனாய் (ஐவரை வென்ற) அனுமனும்;* ***நல் அறிவை ஒத்தான்*** - *(புலன்களை வென்று) சிறக்கும் நல்ல ஞானத்தை ஒத்தவனானான்.*

*பஞ்சசேனாபதிகளுக்குத் தீய வழியில் செல்லும் ஐம்புலன்களும், அவர்களை வென்ற அனுமனுக்குப் புலன்களை வென்ற ஞானமும் உவமைகளாக வந்தன. இது ஒரு தத்துவ உணர்ச்சி அமைந்த உவமை. முன்னே (5615) ஒரு பாடலில் பஞ்ச சேனாபதியரை ஐம்பெரும் பூதங்களைநிகர் த்தவர் என்று குறிந்துள்ளார்.* ***(64)***

***5665. நெய் தலைஉற்ற வேற் கை நிருதர், அச் செருவில் நேர்ந்தார்,***
***உய்தலை உற்றுமீண்டார் ஒருவரும் இல்லை; உள்ளார்,***
***கை தலைப் பூசல்பொங்கக் கடுகினர்; காலன் உட்கும்***
***ஐவரும் உலந்ததன்மை, அனைவரும் அமையக் கண்டார்.***

***அச் செருவில்நேர்ந்தார்*** - *அப்போரில் போர்செய்ய அனுமனை எதிர்த்து வந்தவர்களான;* ***நெய்தலை உற்ற வேற்கை நிருதர்*** - *நெய்யை முனையில் பூசப்பெற்ற வேல் ஏந்திய கைகளை உடையவராய அரக்கர்கள்;* ***உய்தலை உற்று மீண்டார் ஒருவரும்இல்லை*** - *தப்பிப் பிழைத்துத்திரும்பினோர் ஒருவரும் இல்லை;* ***உள்ளார் அனைவரும்*** - *அங்குப் போரிடாமல் மறைத்து பிழைத்திருந்த அரக்கர் அனைவரும்;* ***காலன் உட்கும் ஐவரும் உலந்த தன்மை*** - *யமனும் அஞ்சும் பஞ்ச சேனாபதிகள் அழிந்து போனதை;* ***அமையக் கண்டார்*** - *நேரில் கண்டறிந்து;* ***கைதலைப்*** - *போர்க்களத்தினின்று;* ***பூசல் பொங்க*** - *பேராரவாரம் மிகும்படி;* ***கடுகினர்*** - *(இராவணனிடம்) விரைந்து ஓடினார்கள்.*

போரிடாமல்மறைந்து பிழைத்திருந்த அரக்கர் (உள்ளார் அனைவரும்) பஞ்ச சேனாபதிகள் இறந்ததை நேரில் கண்டார்கள். செய்தி சொல்ல இராவணனிடம் விரைந்தனர் என்க. கை - சேனைப் பகுதி. தலை - இடம். கைதலை - போர்க்களம். ***(65)***

*சேனாதிபதி ஐவர்அழிவினை இராவணனுக்கு அறிவித்தல்*

***5666. 'இறுக்குறும், இன்னே நம்மை, குரங்கு' என இரங்கி ஏங்கி,***
***மறுக்குறுகின்றநெஞ்சின் மாதரை வைது நோக்கி,***
***உறுக்குறும்சொல்லான், ஊழித் தீ என உலகம் ஏழும்***
***சுறுக்கொளநோக்குவான்தன் செவித் தொளை தீய, சொன்னார்.***

***குரங்கு நம்மைஇன்னே இறுக்குறும் என*** - *(குரங்கினால் விளையும் அழிவுகளைக் கேள்வியுற்று) 'அந்தக் குரங்கு நம்மை இப்பொழுதே கொன்றுவிடும்' என்று;* ***ஏங்கி இரங்கி*** - *ஏக்கமுற்று வருந்தி;* ***மறுக்கு உறுகின்ற நெஞ்சின் மாதரை*** - *கலக்கமுறும் மனத்தோடு நடுங்கிக் கொண்டு, தன் அருகில் நிற்கின்ற மகளிரை;* ***வைது நோக்கி*** - *(இராவணன்) நிந்தித்துப் பார்த்துக் கொண்டு;* ***உறுக்கு உறுசொல்லான்*** - *அதட்டும் கடுஞ் சொற்களால்;* ***ஊழித் தீ என உலகம் ஏழும் சுறு கொள*** - *கற்பாந்த காலத்துத் தோன்றும் பெருந்தீ என உலகங்கள் ஏழும் தீய்ந்து போம்படி;* ***நோக்குவான் தன்*** - *பார்த்துக் கொண்டிருப்பவனாகிய இராவணனுடைய;* ***செவித் தொளை*** - *இருபது காதுகளின் துவாரங்களும்;* ***தீயச் சொன்னார்*** - *தீய்ந்து போம்படி (கர்ண கடூரமாக பஞ்ச சேனாபதிகள் இறந்த செய்தியைக்)கூறலானார்கள்.* ***(66)***

***5667. 'தானையும் உலந்தது; ஐவர் தலைவரும் சமைந்தார்; தாக்கப்***
***போன பின் மீன்வேம் யாமே; அதுவும் போர் புரிகிலாமை;***
***வானையும்வென்றுளோரை வல்லையின் மடிய நூறி,***
***ஏனையர் இன்மை,சோம்பி இருந்தது, அக் குரங்கும்' என்றார்.***

***தானையும் உலந்தது***- *சேனையும் அழிந்தது;* ***ஐவர் தலைவரும் சமைந்தார்*** - *தலைவர்களான ஐந்து சேனாபதிகளும் இறந்தனர்;* ***தாக்கப் போனபின்*** - *போர் செய்யப் போன பிறகு;* ***யாமே மீள்வேம்*** - *யாங்கள் தாம்மீண்டவர் ஆவோம்;* ***அதுவும் போர் புரிகிலாமை*** - *அவ்வாறு மீண்டதும்நாங்கள் போரிட முடியாமல் இருந்ததால்தான்;* ***அக்குரங்கும்*** - *அந்தக்குரங்கும்;* ***வானையும் வென்றுளோரை வல்லையில் மடிய நூறி*** - *வானுலகத்தையும் வெற்றிகொண்டவர்களாகிய பஞ்ச சேனாபதிகளை விரைவில் கொன்றழித்து;* ***ஏனையர் இன்மை*** - *மற்றும் போர் செய்வோர் இன்மையால்;* ***சோம்பி இருந்தது என்றார்*** - *செய்தொழில் இல்லாமல் சோம்பல் மேற்கொண்டிருந்தது என்று கூறினார்கள்.*

*பஞ்சசேனாபதிகள் இறந்ததை இராவணனிடம் தெரிவித்தவர்கள், போரிடமுடியாமல் பதுங்கியிருந்த அரக்கர்கள் என்றுதெரிகின்றது. 'போர் புரிகிலாமை'என்ற தொடரில் 'கில்' என்பது ஆற்றலை உணர்த்தும் இடைச் சொல்லாகும்.ஆகையால் உயிர் தப்பியவர்கள் போர் புரிய இயலாதவர் என்பது தெரிகிறது.* ***(67)***

## அக்ககுமாரன்
## வதைப்படலம்

இராவணனது இளைய மகனானஅக்கன் என்பவன், அனுமனோடு போர் செய்து மடிந்ததைப் பற்றிக் கூறுவது இந்தப் படலம்.

*அக்ககுமாரன்அனுமனுடன் போருக்கு எழ இராவணனிடம் விடைபெறுதல்*

***5668. கேட்டலும்,வெகுளி வெந் தீக் கிளர்ந்து எழும்***
***உயிர்ப்பனாகி,***
***தோட்டு அலர்தெரியல் மாலை வண்டொடும்***
***சுறுக்கொண்டு எற,***
***ஊட்டு அரக்குஉண்ட போலும் நயனத்தான்***
***ஒருப்பட்டானை,***
***தாள்-துணைதொழுது, மைந்தன் தடுத்து,***
***'இடைதருதி' என்றான்.***

**ஊட்டு அரக்குஉண்ட போலும் நயனத்தான்** - *பூசப்பட்ட அரக்குப்படியப்பெற்றது போன்ற செந்நிறமாய் விளங்கும் கண்களை உடைய இராவணன்;* **கேட்டலும் -** *(பஞ்ச சேனாபதிகளும் சேனைகளும் இறந்தனர் எனக்) கேட்டவுடன்;* **வெகுளி வெந்தீக்கிளர்ந்து எழும் உயிர்ப்பனாகி -** *கோபக் கொடுந்தீ,பொங்கி வருகின்ற பெருமூச்சை உடையவனாகி;* **தோட்டு அலர் தெரியல்மாலை -** *இதழ்கள் மலரப் பெற்றதும் தேர்ந்து தொடுக்கப்பட்டதுமானஅவனுடைய மாலை;* **சுறுக் கொண்டு ஏற -** *பொசுங்கி நாற்றம் பரந்து வீச;* **ஒருப் பட்டானை -** *போருக்கு ஆயத்தமாய் நின்ற இராவணனை;* **மைந்தன் -** *அவன் மகனாகிய அக்ககுமாரன்;* **தாள் துணை தொழுது -** *அவனது இரண்டுபாதங்களிலும் வணங்கி;* **தடுத்து -** *அவனைப் போருக்குச் செல்லாமல் தடுத்து;* **'இடை தருதி' என்றான் -** *(யான் சென்று போர் புரியுமாறு எனக்கு)'வாய்ப்புத் தருக' என்று கேட்டுக் கொண்டான். நயனத்தான்,கேட்டலும், வெகுளி கிளர்ந்து உயிர்ப்பனாகி, மாலை சுறுக்கொண்டு ஏற ஒருப்பட்டான்; மைந்தன், தாள் தொழுது, தடுத்து, வாய்ப்புத் தருக என்றான் என்பது முடிவு. ஒருப்படுதல் - இயைந்திருத்தல்; ஊட்டுதல் - செந்நிறச் சாயம்பூசுதல். அக்கன் - அக்ஷன் என்பதன் தமிழ்த்திரிபு. அழிவில்லாதவன் என்று பொருள். இவன், மண்டோதரி மகன்; இந்திரசித்தனுடைய தம்பி.* ***(1)***

***5669. 'முக்கணான்ஊர்தி அன்றேல், மூன்று உலகு***
***அடியின் தாயோன்***
***ஒக்க ஊர் பறவைஅன்றேல், அவன் துயில் உரகம்***
***அன்றேல்,***
***திக்கயம்அல்லதேல், புன் குரங்கின்மேல் சேறி***
***போலாம் !***
***இக் கடன்அடியேற்கு ஈதி; இருத்தி ஈண்டு***
***இனிதின்; எந்தாய் !***

***எந்தாய்*** *- என்தந்தையே !;* ***முக்கணான் ஊர்தி அன்றேல்*** *- (நம்மோடு பொருவது) மூன்று கண்களை உடைய சிவபிரானது வாகனமாகிய இடபம் அன்றாயின்;* ***மூன்று உலகு அடியில் தாயோன்*** *- மூவுலகங்களையும் தன் ஈரடிகளால் தாவியளந் தவனாகிய திருமால்;* ***ஒக்க ஊர் பறவை அன்றேல்*** *- சிறப்பமைய ஊர்ந்து செல்லும் பறவையாகிய கருடன் அன்றாயின;* ***அவன் துயில் உரகம் அன்றேல்*** *- அத்திருமால் பள்ளி கொள்ளும் பாம்பாகிய ஆதிசேடன் அன்றாயின்;* ***திக்கயம் அல்லதேல்*** *- திக்குகளில் இருக்கும் யானைகளில் ஒன்றும் அன்றாயின்;* ***புன்குரங்கின் மேல் சேறி போலாம்*** *- அற்பக்குரங்கின் மீது போருக்குச் செல்கின்றாய் போலும் ! (நீ பொரச் செல்வது சிறிதும் தகுதியன்று);* ***இக்கடன் அடியேற்கு ஈதி*** *- இந்தக் கடமையை எனக்குத் தந்து;* ***ஈண்டு இனிதின் இருத்தி*** *- இங்கு நீ (கவலையின்றி) இனிதாக இருப்பாயாக.*

*இதுவும் அடுத்தபாடலும் குளகமாய், 'ஏவுதி என்னை என்றான்' என்பதோடு வினை முடிவு பெறும். 'நீ விலங்குகளோடு எதிர்த்துப் போர் புரிவது உனக்கு இழுக்கு; சிவபிரானின் இடபம், திருமாலின் கருடன், ஆதிசேடன், திக்கயம் இவற்றோடு போர் செய்தாலும் ஒருவாறு நேராகும். அற்பக் குரங்கோடு போர் செய்யச் செல்வது, உன் பெருமைக்கும் வலிமைக்கும் குறைவு' என்று கூறினான்.* ***(2)***

***670. ' "அண்டர்கோன்தன்னைப் பற்றித் தருக" எனா,***
***அடியேன் நிற்க,***
***கொண்டனைஎன்முன் தன்னைப் பணி என,***
***நெஞ்சம் கோடல்***
***உண்டு; அது தீரும்அன்றே ? உரன் இலாக் குரங்கு***
***ஒன்றேனும்,***
***எண் திசை வென்றநீயே, ஏவுதி என்னை' என்றான்.***

***அடியேன் நிற்க*** *- அடியவனானநான், (உனது ஆணையை ஏற்றுச் செய்ய சித்தமாக) இருக்கவும், (என்னை ஏவாமல்);* ***என்முன் தன்னை*** *- என் தமையனான மேகநாதனை;* ***அண்டர் கோன் தன்னைப் பற்றி தருக எனா*** *- தேவர் தலைவனான இந்திரனைப் பிடித்து வருவாய் என்று சொல்லி;* ***பணி கொண்டனை என*** *- அவனை அத்தொழிலைச் செய்யக் கொண்டாய் என்று;* ***நெஞ்சம் கோடல் உண்டு*** *- மனத்தில் கொண்ட குறை ஒன்று உள்ளது;* ***உரன் இலாக் குரங்கு ஒன்றேனும்*** *- (இப்போது நான் வெல்லப் போவது) வலியற்ற ஒரு குரங்கையாவது பற்றித் தருக என்றால்;* ***அது தீரும் அன்றே*** *- (அதனைப் பிடித்துத் தந்தால்) அக்குறை ஒருவாறு நீங்கும் அல்லவா?;* ***எண்திசை வென்றநீயே*** *- எட்டுத்திக்குகளையும் வென்ற நீயே;* ***என்னை ஏவுதி என்றான்*** *- என்னை அத்தொழிலுக்கு ஏவுவாயாக என்று கேட்டுக் கொண்டான்.*

*இந்திரனைப்பிடித்துத்தரும் வாய்ப்பைத் தமையன் இந்திர சித்துவுக்குத் தந்த போதே அதற்குத் தன்னை ஏவவில்லையே என்ற வருத்தம் தனக்கு உண்டென்றும் இந்த வெறும் குரங்கையாவது பற்றித்தருமாறு ஏவினால் ஒருவாறு அந்த மனக்குறை தீரும் என்றும் அக்ககுமாரன் வேண்டுகிறான்.* ***(3)***

***5671. 'கொய் தளிர் கோதும் வாழ்க்கைக் கோடரத்து***
***உருவு கொண்டு,***
***கைதவம் கண்ணி,ஈண்டு ஓர் சிறு பழி இழைக்கும்***
***கற்பான்,***

***எய்தினன்,இமையா முக்கண் ஈசனே என்ற போதும்,***
***நொய்தினின்வென்று, பற்றி தருகுவென், நொடியில்***
***நுன்பால்.***

***இமையா முக்கண்ஈசனே -*** *இமைத்தல் இல்லாத மூன்று கண்களை உடைய சிவபிரானே;* ***ஈண்டு -*** *இந்த இலங்கையில்;* ***ஓர்சிறு பழி இழைக்கும்கற்பால் -*** *ஒரு சிறியஅவமதிப்பைச் செய்ய வேண்டும் என்ற நினைவினால்;* ***கைதவம் கண்ணி -*** *வஞ்சனையைக் கருத்தில் எண்ணி;* ***கொய் தளிர் கோதும் வாழ்க்கை -*** *கொய்யும் தளிர்களை மெதுவாகக் கடித்துத் தின்னும் எளிய வாழ்வை உடைய;* ***கோடரத்து உருவு கொண்டு எய்தினான் -*** *அற்பக்குரங்கினது வடிவத்தைக் கொண்டு வந்துள்ளான்;* ***என்ற போதும் -*** *என்றாலும்;* ***நொய் தினின் வென்று -*** *(அவனை) எளிதில் வென்று;* ***நொடியின் பற்றி, நுன் பால் தருகு வென் -*** *வெகு விரைவில் பிடித்து உன்னிடம் கொணர்ந்து விட்டுவிடுவேன்.* ***(4)***

***5672. 'துண்டத்தூண் அதனில் தோன்றும் கோளரி, சுடர்***
***வெண் கோட்டு***
***மண் தொத்தநிமிர்ந்த பன்றி ஆயினும், மலைதல்***
***ஆற்றா;***
***அண்டத்தைக்கடந்து போகி அப் புறத்து அகலின்***
***என்பால்***
***தண்டத்தை இடுதிஅன்றே, நின்வயின்***
***தந்திலேனேல் !'***

***துண்டத் தூண்அதனில் தோன்றும் கோள் அரி -*** *துண்டமாகிய ஒரு கம்பத்திலிருந்து தோன்றிய பற்றுதல்வல்ல நரசிங்கமானாலும்;* ***சுடர்வெண் கோட்டு மண்தொத்த நிமிர்ந்த பன்றி ஆயினும் -*** *ஒளியை உடைய வெள்ளிய பல்லில், இந்தப் பூமி ஒரு துகள் போலத் தொத்திக் கொண்டிருக்க, ஓங்கி வளர்ந்த வராகமே ஆனாலும், (அவையும்);* ***மலைதல் ஆற்றா -*** *என்னுடன் பொருதற்குத் தரமுடையன அல்ல;* ***அண்டத்தைக் கடந்து போகி அப்புறத்து ஆகலின் -*** *(அந்தக்குரங்கு) அண்ட கோளத் தைத்தாண்டி, அப்பாற் சென்று, புற அண்டத்தில் அகன்று சென்றாலும்;* ***நின்வயின் தந்திலேனேல் -*** *(யான் அதைப் பிடித்துக் கொண்டு வந்து)உன்னிடத்துத் தராது விட்டேன் என்றால்;* ***தண்டத்தை இடுதி -*** *அதற்குரியதண்டனையை எனக்கு விதிப்பாய். கோள் அரி; கொள்ளுதல் வல்ல சிங்கம்; கொண்ட இலக்கைத் தப்பாமல் பற்றுதல் என்பது கோள் என்ற சொல்லின் குறிப்பு. முதனிலை நீண்ட தொழிற் பெயர். அன்று, ஏ; அசைகள். நரசிங்கமும், வராகமுமே கூட என்னுடன் பொரமுடியாதவை. இந்தக் குரங்கு எம்மாத்திரம்என்பது கருத்து. குரங்குஎங்குச் சென்றாலும் பிடித்து வருவேன்; இல்லையேல் தண்டனை பெறுவேன்' என்பது இவன் உறுதிமொழி.* ***(5)***

*அக்ககுமாரன்போருக்குப் போதல்*

***5673. என, இவைஇயம்பி, 'ஈதி விடை' என, இறைஞ்சி***
***நின்ற***
***வனை கழல்வயிரத் திண் தோள் மைந்தனை***

மகிழ்ந்து நோக்கி,
'துனை பரித்தேர்மேல் ஏறிச் சேறி' என்று, இனைய
சொன்னான்;
புனை மலர்த்தாரினானும், போர் அணி அணிந்து
போனான்.

**என இவை இயம்பி-** என்றுஇச்சொற்களைக் கூறி; **'விடை ஈதி' என-** அனுமதி எனக்கு அளிப்பாயாக என்று; **இறைஞ்சி நின்ற -** வணங்கித் தன்முன் நிற்கின்ற; **வனைகழல் வயிரத் திண்தோள் மைந்தனை -** கட்டிய வீரக்கழல்களையும் மிக வலிய தோள்களையும் உடைய அக்ககுமாரனை; **மகிழ்ந்துநோக்கி -** (இராவணன்) மகிழ்ச்சியோடு பார்த்து; **துனை பரித் தேர் மேல்ஏறிச் சேறி என்று -** 'விரைந்து செல்லும் குதிரைகள் பூட்டிய தேர் மீது ஏறிநீ போவாயாக' என்று; **இனைய சொன்னான் -** இவ்வாறாகச் சொன்னான்; **புனை மலர்த் தாரினானும் -** அழகிய மலர்களால் தொடுக்கப்பட்ட மாலையைஅணிந்துள்ள அக்ககுமாரனும்; **போர் அணி அணிந்து -** போர்க் கோலம்பூண்டு; **போனான் -** சென்றான். எப்படியிருந்தாலும் குரங்கைப் பிடித்து வருவேன் என்று தன் மகன் உறுதி கூறியதனால், இராவணன், அவனை மகிழ்ந்து நோக்கி, போர்க்களம் செல்ல விடை கொடுத்தான். துனை - விரைவு; 'கழிவும் துனைவும் விரைவின் பொருள' (தொல். சொல். 315) (6)

5674. ஏறினன்என்ப மன்னோ, இந்திரன் இகலின் இட்ட,
நூறொடு நூறு பூண்டநொறில் வயப் புரவி நோன்
தேர்;
கூறினர் அரக்கர்ஆசி; குமுறின முரசக் கொண்மூ;
ஊறின உரவுத்தானை, ஊழி பேர் கடலை ஒப்ப.

**இந்திரன்இகலின் இட்ட -** இந்திரன் போரில்தோற்றுக் கைவிட்டுப் போன; **நொறில் வய -** விரைவுள்ளனவும் வெற்றி தரக் கூடியனவுமான; **நூறொடு நூறு புரவி -** இரு நூறு குதிரைகள்; **பூண்ட நோன் தேர் ஏறினன்-** பூட்டப் பெற்ற வலிய தேரின் மீது ஏறினான்; **அரக்கர் ஆசி கூறினர் -** அரக்கர்கள் (அவனுக்கு) வாழ்த்துக் கூறினார்கள்; **முரசக் கொண்மூ குமுறின-** முரசங்களாகிய மேகங்கள் முழங்கின; **ஊழி போர் கடலை ஒப்ப -** யுகமுடிவுக் காலத்தில் நிலை பெயர்ந்து (பொங்கி) வரும் கடலைப் போல; **உரவுத்தானை ஊறின -** வலிய சேனைகள் மேன்மேலும் அதிகமாகத் தொடர்ந்தன.

நொறில் -விரைவு; நோன் - வலிமை; கொண்மூ - மேகம். (7)

5675. பொரு கடல்மகரம் எண்ணில், எண்ணலாம் பூட்கை;
பொங்கித்
திரிவன மீன்கள்எண்ணில் எண்ணலாம் செம்
பொன் திண்தேர்;
உரு உறு மணலைஎண்ணில், எண்ணலாம் உரவுத்
தானை;
வரு திரை மரபின்எண்ணில், எண்ணலாம் வாவும்
வாசி.

***பொருகடல் மகரம்எண்ணில்*** - *அலைகள் மோதும்கடலில் உள்ள சுறாமீன்களை எண்ணக் கூடுமானால்;* ***பூட்கை எண்ணலாம்*** - *(அக்ககுமாரனுடன் போருக்குச் சென்ற) யானைகளை எண்ணிக் கணக்கிடலாம்;* ***பொங்கித் திரிவன மீன்கள் எண்ணில்*** - *(அந்தக் கடலில்) செருக்கித் திரிவனவாகிய மீன்களை எண்ணமுடியுமானால்;* ***செம்பொன்திண் தேர் எண்ணலாம்*** - *செம்பொன்னாலான தேர்களை எண்ண முடியும்;* ***உருஉறு மணலை எண்ணில்*** - *அக்கடலில் தனித்தனியாகப் பிரித்து வைத்த மணலை எண்ணக் கூடுமானால்;* ***உரவுத் தானை எண்ணலாம்*** - *வலிமை பொருந்திய காலாள் சேனையை எண்ண முடியும்;* ***மரபின் வரு திரை எண்ணில்*** - *முறைமுறையாக வருகிற அலைகளை எண்ணக் கூடுமானால்;* ***வாவும் வாசி எண்ணலாம்*** - *தாவிச் செல்லும் குதிரைகளை எண்ண முடியும். அக்ககுமாரனுடன்சென்ற நால்வகைப் படையின் மிகுதி தெரிவிக்கப்பட்டது.* ***(8)***

***5676. ஆறு-இரண்டு அடுத்த எண்ணின் ஆயிரம் குமரர், ஆவி***
***வேறு இலாத்தோழர், வென்றி அரக்கர்தம் வேந்தர் மைந்தர்,***
***ஏறிய தேரர்,சூழ்ந்தார்-இறுதியின் யாவும் உண்பான்***
***சீறிய காலத்தீயின் செறி சுடர்ச் சிகைகள் அன்னார்.***

***இறுதியின் யாவும்உண்பான்*** - *யுகமுடிவுக் காலத்தில்உலகப் பொருள்கள் அனைத்தையும் அழிக்கும் பொருட்டு;* ***சீறிய காலத் தீயின்*** - *பொங்கி எழுந்த ஊழித் தீயின்;* ***செறி சுடர் சிகைகள் அன்னார்*** - *நெருங் கியஒளியை உடைய நெருப்புச் சுடர்க் கொழுந்துகள் போன்றவர்களும்;* ***ஆவிவேறு இலாத தோழர்*** - *(அக்ககுமாரன் அன்றி) தமக்கு வேறு உயிர் இல்லாதநண்பர்களும்;* ***வென்றி அரக்கர்தம் வேந்தர் மைந்தர்*** - *வெற்றியை உடைய அரக்கர் குல அரசர்களின் புதல்வர்களுமாகிய;* ***ஆறு இரண்டுஅடுத்த எண்ணின் ஆயிரம் குமரர்*** - *பன்னீராயிரம் குமாரர்கள்;* ***ஏறியதோர் சூழ்ந்தார்*** - *தேர்களில் ஏறினவர்களாய் அக்ககுமாரனைச் சூழ்ந்துகொண்டார்கள்.* ***(9)***

***5677. மந்திரக்கிழவர் மைந்தர், மதி நெறி அமைச்சர் மக்கள்,***
***தந்திரத்தலைவர் ஈன்ற தனயர்கள், பிறரும், தாதைக்கு***
***அந்தரத்து அரம்பைமாரில் தோன்றினர் ஆதி ஆனோர்,***
***எந்திரத்தேரர், சூழ்ந்தார்-ஈர்-இரண்டு இலக்கம் வீரர்.***

***மந்திரக்கிழவர் மைந்தர்*** - *மந்திராலோசனைக்குரியோருடைய குமாரர்கள்;* ***மதி நெறி அமைச்சர் மக்கள்*** - *புத்தியில் மிக்க மந் திரிகளுடையமைந்தர்கள்;* ***தந்திரத் தலைவர் ஈன்ற தனயர்கள்*** - *சேனைத்தலைவர்கள்பெற்ற புதல்வர்கள்;* ***தாதைக்கு அந்தரத்து அரம்பை மாரில், தோன்றினர்ஆதி ஆனோர் பிறரும்*** - *தந்தையாகிய இராவணனுக்குத் தேவலோகத்துத்தெய்வமகளிரிடம், பிறந்த புத்திரர் முதலிய பிறரும் ஆகிய;* ***ஈர்***

***இரண்டுஇலக்கம் வீரர்*** - நான்கு லட்சம் வீரர்கள்; ***எந்திரத் தேரர்சூழ்ந்தார்*** - எந்திரமுள்ளதேரின் மீது ஏறியவர்களாய், அக்க குமாரனைச் சூழ்ந்து கொண்டு போருக்குச் சென்றனர்.

*அக்ககுமாரனுடன்சென்ற நான்கு லட்சம் வீரர்களின் வகை கூறப்பட்டது. மந்திரக் கிழவர் முதல்வராகக் கூறியவர் நால்வராதலால், ஒவ்வொருவகையினரின் குமாரரும் ஒவ்வொரு லட்சம் வீரர் என்க. அந்தரம் - மேலுலகம், விண்ணுலகம்.*
***(10)***

***5678. தோமரம்,உலக்கை, சூலம், சுடர் மழு, குலிசம், தோட்டி,***
***ஏ மரு வரி வில்,வேல், கோல், ஈட்டி, வாள், எழு, விட்டேறு,***
***மா மரம், வீசுபாசம், எழு முளை, வயிரத் தண்டு,***
***காமரு கணையம்,குந்தம், கப்பணம், கால நேமி***

***தோமரம்*** - *தண்டாயுதம்;* ***உலக்கை, சூலம்*** - *உலக்கைகள், திரி சூலங்கள்;* ***சுடர் மழு, குலிசம்*** - *ஒளிவீசும் கோடாலிகள், வச்சிராயுதங்கள்;* ***தோட்டி*** - *அங்குசங்கள்;* ***ஏமரு வரி வில்*** - *அம்பு பொருந்திய கட்டமைந்த விற்கள்;* ***வேல் கோல்*** - *வேலாயுதங்கள் அம்புகள்;* ***ஈட்டி, வாள்*** - *எறியீட்டிகள், வாள்கள்;* ***எழு, விட்டேறு*** - *இரும்புத்தடிகள், எறிகோல்கள்;* ***மாமரம்*** - *பெரிய மரங்கள்;* ***வீசு பாசம்*** - *வீசுதற்குரிய கயிறுகள்;* ***எழு முளைவயிரத் தண்டு*** - *பகைவர் மேல் எழுகிற வயிரத்தாலான தண்டாயுதங்கள்;* ***காமரு கணையம் குந்தம்*** - *அழகு பொருந்தியவளைதடிகள் குத்துக் கோல்கள்;* ***கப்பணம்*** - *யானை நெருஞ்சி முட்கள்;* ***காலநேமி*** - *தவறாமல் கொல்லவல்ல சக்கராயுதங்கள்.....*

*அடுத்த பாடலுடன்முடியும். அரக்க வீரர்கள் கொண்டு சென்ற போர்க்கருவிகளின் வகைகள் கூறப்பட்டன.* ***(11)***

***5679. என்று, இவைமுதல ஆய எறிதரு படைகள் ஈண்டி,***
***மின் திரண்டனையஆகி, வெயிலொடு நிலவு வீச,***
***துன்று இருந் தூளிபொங்கித் துறுதலால், இறுதிசெல்லாப்***
***பொன் திணிஉலகம் எல்லாம், பூதலம் ஆய மாதோ !***

***என்று இவை முதலஆய*** - *என்று சொல்லப்படுகின்ற இவை முதலாக உள்ள;* ***எறிதரு படைகள் ஈண்டி*** - *தாக்குதற்குரிய ஆயுதங்கள் நெருங்கியதனால்;* ***மின் திரண்ட அனைய ஆகி*** -*மின்னல்கள் ஒரு சேரத்திரண்டாற் போன்று;* ***வெயிலொடு நிலவு வீச*** - *வெயிலையும் நிலாவையும் வெளிப்படுத்திக் கொண்டிருக்க;* ***துன்று இரும் தூளி பொங்கிதுறுதலால்*** - *நெருங்கியமிக்க தூளிகள் மேலெழுந்து (வானத்தில்) நெருங்கியதனால்;* ***இறுதி செல்லா*** - *முடிவுக் காலம் இது என்று கணிக்க முடியாத;* ***பொன் திணி உலகம் எல்லாம்*** - *பொன் திணித்து அமைக்கப்பெற்ற சுவர்க்க உலகம் யாவும்;* ***பூதலம் ஆய*** - *நில உலகம் போன்று விளங்கின.* ***(12)***

*5680.  காகமும்,கழுகும், பேயும், காலனும், கணக்கு இல்*
*காலம்*
*சேகு உறவினையின் செய்த தீமையும், தொடர்ந்து*
*செல்ல;*
*பாகு இயல்கிளவிச் செவ் வாய்ப் படை விழிப்*
*பணைத்த வேய்த் தோள்*
*தோகையர்மனமும், தொக்க தும்பியும், தொடர்ந்து*
*சுற்ற;*

***காகமும்,கழுகும்,பேயும் காலனும்** - காகங்களும், கழுகுகளும் பேய்களும் யமனும்; **கணக்கு இல் காலம் சேகு உற வினையின் செய்த தீமையும்** - பலகாலம் திண்மை உண்டாக (அவ்வரக்கர்கள் தமது) செயலால் செய்த பாவமும்; **தொடர்ந்து செல்ல** - அக்ககுமாரனது படையுடன் பின் தொடர்ந்து செல்ல; **பாகு இயல் கிளவிச் செவ்வாய்** - பாகின் இனிமை வாய்ந்த சொற்களையும் சிவந்த வாயையும்; **படை விழிப் பணைத்த வேய்த் தோள்** - வேலாயுதம் போன்ற கண்களையும், பருத்த மூங்கில்கள் போன்ற தோள்களையும் உடைய; **தோகையர் மனமும்** - மயில் போன்ற சாயலையுடைய அரக்கிமார்களது மனமும்; **தொக்க தும்பியும் தொடர்ந்து சுற்ற** - தொகுதியான வண்டுக் கூட்டங்களும் அவர்களைத் தொடர்ந்து சுற்றிச் செல்லவும்.*

*'மாற்றங்கள்ஒழிப்ப' என்று அடுத்த கவியோடு தொடரும். அக்ககுமாரன் பேரெழுச்சி கூறப்பட்டது. போரி அக்க குமாரனுக்கு உதவி செய்வோர், பயன்படும் கருவிகள் ஆகிய விவரங்கள் கூறப்பட்டன. போரில் நிகழவிருக்கும் அழிவுகளை எதிர்நோக்குவனவும், போர்க்குச் செல்வோரை நினைந்து இரங்கும் பரிவுக்கு உரியோரும் பற்றியது இக்கவி.* ***(13)***

*681.   உழைக் குலநோக்கினார்கள், உலந்தவர்க்கு உரிய*
*மாதர்,*
*அழைந்து அழுகுரலின், வேலை அமலையின்,*
*அரவச் சேனை*
*தழைத்து எழும்ஒலியின், நானாப் பல் இயம்*
*துவைக்கும் தா இல்*
*மழைக் குரல்இடியின், சொன்ன மாற்றங்கள் ஒழிப்ப*
*மன்னோ;*

***உலந்தவர்க்குஉரிய மாதர்** - (முன்னே நிகழ்ந்தபோரில்) இறந்த அரக்கர்களுக்கு உரிய மனைவியர்களாகிய; **உழைக்குலம் நோக்கினார்கள்** - மான் கூட்டம் போன்ற (மருண்ட) பார்வையை உடைய அரக்கியர்கள்; **அழைத்து அழுகுரலின்** - தமது கணவர்களை நினைத்து அழைத்து அழுகின்ற குரலினாலும்; **வேலை அமலையின்** - கடலின் ஒலியினாலும்; **அரவச் சேனை தழைத்து எழும் ஒலியின்** - ஆரவாரம் செய்கின்ற சேனைகள் திரண்டு செல்வதால் நிகழ்ந்த ஒலியினாலும்; **நானா பல் இயல் துவைக்கும்** - பலவகையான வாத்தியங்கள் ஒலிக்கின்ற; **தா இல் மழைக்குரல் இடியின்** - குற்றம் இல்லாத மேகத்தின் தொனியாகிய இடிபோன்ற பேரொலியாலும்; **சொன்ன மாற்றங்கள் ஒழிப்ப** - ஒருவர்க்கு ஒருவர் பேசிய வார்த்தைகள் பிறர்க்குக் கேட்காமல் அடங்கிவிடவும்....*

*'விழுங்க' எனஅடுத்த கவியோடு தொடரும் படை செல்லுங்கால் எழுந்த பேரொலி வருணிக்கப்பட்டது.* ***(14)***

***5682. வெயில் கரமணிகள் வீசும் விரி கதிர் விழுங்க,***
***வெய்ய***
***அயில் கரமணிகள் காலும் அவிர் ஒளி பருக,***
***அஃகா***
***எயிற்று இளம்பிறைகள் ஈன்ற இலங்கு ஒளி ஒதுங்க,***
***யாணர்,***
***உயிர்க்குஉலவுஇரவும் அன்று, பகல் அன்று என்று***
***உணர்வு தோன்ற;***

***வெயில் கரமணிகள் -*** *வெயிலைப் போன்று ஒளிவிளங்குகின்ற (ஆபரணங்களில் உள்ள) இரத்தினங்கள்;* ***வீசும்விரிகதிர் விழுங்க -*** *உலகம்முழுவதும் பரவி விரிந்த சூரியனது ஒளியை அடக்கவும்;* ***வெய்ய அயில்கரம் -*** *கொடிய வேலாயுதங்களினால் தோன்றுகின்ற ஒளி;* ***மணிகள் காலும் அவிர் ஒளி பருக -*** *(ஆபரணங்களில் இழைத்த) இரத்தினங்கள் வெளியிட்டு விளங்குகின்ற ஒளியை அடக்கவும்;* ***அஃகா எயிறு இளம்பிறை ஈன்ற இலங்கு ஒளி ஒதுங்க -*** *குறைவுபடாத அரக்கர்களுடைய பற்களாகிய இளம் பிறைகள் உண்டாக்கிய விளங்கும் ஒளியில் ஒதுங்கி மறையவும்;* ***யாணர் உயிர்க்கு -*** *(இவ்வாறு இருத்தலால்) (பிறப்புத் தோறும்) புதிது, புதிதாகப் பிறக்கும் உயிர்க் கூட்டத்திற்கு;* ***உலவு இரவும் அன்று -*** *(இது உலகத்தில்) தோன்றுகின்ற இராக்காலமும் அல்ல;* ***பகல் அன்று என்று -*** *(அவ்வாறே உலகத்துத்தோன்றும்) பகலும் அல்ல என்று;* ***உணர்வு தோன்ற -*** *ஒருணர்ச்சி உண்டாகவும்...*

*'இடத்துத்துள்ள'என்று அடுத்த கவியோடு தொடரும். கரம் - ஒளி. யாணர் - புதுமை. பிறப்புத் தோறும் புதுமை கொள்வதால் 'யாணர் உயிர்' என்றார்.*
***(15)***

***5683. ஓங்கு இருந்தடந் தேர் பூண்ட உளை வயப் புரவி***
***ஒல்கித்***
***தூங்கின வீழ,தோளும் கண்களும் இடத்துத் துள்ள,***
***வீங்கின மேகம்எங்கும் குருதி நீர்த் துள்ளி வீழ்ப்ப,***
***ஏங்கின காகம்ஆர்ப்ப, இருள் இல் விண் இடிப்ப***
***மாதோ;***

***ஓங்குஇருந்தடந்தேர் பூண்ட -*** *உயர்ந்த மிகப்பெரியதேர்களில் கட்டப்பெற்ற;* ***உளை வயப் புரவி -*** *பிடரிமயிரை உடைய குதிரைகள்;* ***ஒல் கித்தூங்கின வீழ -*** *சோர்ந்து தூங்கி விழவும்;* ***தோளும் கண்களும் இடத்துத்துள்ள -*** *இராக்கதரது தோள்களும் கண்களும் இடப்பக்கத்துத் துடிக்கவும்;* ***வீங்கின மேகம் -*** *மிக்குள்ள மேகங்கள்;* ***எங்கும் குருதி நீர்த் துள்ளிவீழ்ப்ப -*** *எவ்விடத்தும் இரத்தத் துளியைச் சொரியவும்;* ***ஏங்கின காகம்ஆர்ப்ப -*** *ஏங்கியிருந்த காகங்கள் (மகிழ்ச்சி கொண்டு) ஆரவாரிக்கவும்;* ***இருள் இல் விண் இடிப்ப -*** *இருள் அடையாத (நிர்மலமாயிருந்த) ஆகாயம்இடி முழங்குவது போல ஒலி உண்டாக்கவும். மாது, ஓ: அசைநிலைகள். 'காற்றின் சேய் வரவு கண்டான்' என அடுத்த கவியோடு முடியும். பகற்காலத்தே மேக மூட்டம் நேரிடின்*

ஒளி குறையும், இங்கே இருள் இல் விண் என்றது மேக மூட்டத்தால் இருள் சூழாத ஆகாயத்தைச் சுட்டிற்று. பகற் காலத்தில்மேகம் இல்லாமல், திடீரென்று மேகம் கூடி இடி முழங்கிவெள்ளிடி என்பர். இது தீய சகுனம். இங்கு, குறிக்கப் பெற்ற அனைத்தும்அக்ககுமாரனுக்கும் அவன் படைக்கும் இனி உண்டாகும் கேட்டை உணர்த்தும்உற்பாதங்கள் (தீய குறிகள்) ஆகும். ***(16)***

***5684. வெள்ள வெஞ் சேனை சூழ, விண் உளோர் வெருவி விம்ம,***
***உள்ளம் நொந்துஅனுங்கி, வெய்ய கூற்றமும் உறுவது உன்ன,***
***துள்ளிய சுழல் கண் பேய்கள் தோள் புடைத்து ஆர்ப்ப தோன்றும்***
***கள் அவிழ்அலங்கலானைக் காற்றின் சேய் வரவு கண்டான்.***

**வெள்ள வெஞ்சேனைசூழ -** வெள்ளம் என்னும் கணக்கான கொடிய சேனைகள் தன்னைச் சூழ்ந்து வரவும்; **விண் உளோர் வெருவி விம்ம -** தேவர்கள் அஞ்சிக் கலக்கம் அடையவும்; **உள்ளம் நொந்து அனுங்கி, வெய்ய கூற்றமும் உறுவது உன்ன -** மனம் வருந்தியிருந்த கொடிய யமனும் எது என்ன ஆகுமோ என அழுங்கி நிற்கவும்; **துள்ளிய சுழல் கண் பேய்கள் -** மகிழ்ச்சியால் துள்ளியனவும் சுழல்கின்ற கண்களை உடையனவுமாகிய பேய்கள்; **தோள் புடைத்து ஆர்ப்ப -** தம் தோள்களைக் கொட்டி ஆரவாரம்செய்யவும்; **காற்றின் சேய் -** வாயுவின் மகனாகிய அனுமன்; **தோன்றும் கள்அவிழ் அலங்கலானை -** விளக்கமாகத் தெரியும் தேன் சொரியும் மாலைஅணிந்த அக்ககுமாரனின்; **வரவு கண்டான் -** வருகையைப் பார்த்தான்.

அனுமன் பார்த்தபோது, அக்ககுமாரனது வருகை எப்படி அமைந்திருந்தது என்பதைத் தெரிவிக்கின்றது இப்பாடல். அலங்கலானைப் பார்த்தான்; வரவு பார்த்தான் எனத் தனித்தனி கூட்டிப் பொருள் கொள்க. வெள்ளம் - ஒருபேரெண். பேய் ஆர்ப்ப என்பதால் அரக்கர் அழிவு குறித்ததாயிற்று.
*(17) அக்ககுமாரனைக்கண்டு அனுமன் ஐயுறுதல்*

***5685. 'இந்திரசித்தோ ? மற்று அவ் இராவணனேயோ ?' என்னா,***
***சிந்தையின்உவகை கொண்டு முனிவுற்ற குரக்குச் சீயம்,***
***'வந்தனன்;முடிந்தது அன்றோ மனக் கருத்து ?' என்ன வாழ்த்தி,***
***சுந்தரத் தோளைநோக்கி, இராமனைத் தொழுது சொன்னான்;***

**முனிவு உற்றகுரக்குச் சீயம் -** (அக்ககுமாரன்வரவுகண்டு) பெருங் கோபம் கொண்டுள்ள குரங்குகளுள் சிங்கம் போன்ற அனுமன்; **இந்திர சித்தோ ? -** (இப்போது போருக்கு வரும் இவன்) இந்திரசித்தோ ?; **மற்று அவ் இராவணனேயோ வந்தனன்**

**என்னா** - அல்லது (நான் எதிர்பார்த்திருக்கும்) இராவணன் தானோ? போருக்கு வந்துள்ளான் என்று; **சிந்தையின் உவகை கொண்டு** - மனத்தில் மகிழ்ச்சி மேற்கொண்டு; **மனக் கருத்து முடிந்தது அன்றோ** - எனது எண்ணம் நிறைவேறிவிட்டதன்றோ; **என்ன** - என்று சொல்லி; **சுந்தரத் தோளை நோக்கி, வாழ்த்தி** - தனது அழகிய தோள்களைப் பார்த்து (அவற்றுக்கு) வாழ்த்துக் கூறி; **இராமனைத் தொழுது** - இராமபிரானை மனத்தால் நினைத்து வணங்கி விட்டு; **சொன் னான்**- சொல்லிக் கொண்டான். இராமனைத்தொழுதல் அடிமைச் சிறப்பு. சினம், உவகை இரண்டு உணர்ச்சிகளும் கொண்ட முரண் ஓவியம்பற்றி எண்ணிப் பார்க்க. *(18)*

*5686.* **'எண்ணியஇருவர்தம்முள் ஒருவனால்; யான் முன்**
**செய்த**
**புண்ணியம்உளதால்; எம் கோன் தவத்தொடும்**
**பொருந்தினானே;**
**நண்ணினன் நானும்நின்றேன்; காலனும், நணுகி**
**நின்றான்;**
**கண்ணிய கருமம்இன்றே முடிக்குவென், கடிதின்'**
**என்றான்.**

**எண்ணிய** - (நான்இப்போது போருக்கு வருபவராக) நினைத்த; **இருவர்தம்முள் ஒருவனேல்** - இந்திரசித்து, இராவணன் என்ற இருவர்களுள்ஒருவனாக இருந்தால்; **யான் முன் செய்த புண்ணியம் உளது** - யான்முற்பிறப்பில் செய்த புண்ணியப்பயன் எனக்கு உள்ளது; **எம் கோன் தவத்தொடும் பொருந்தினானே** - எங்கள் தலைவனான சுக்கிரீவனும் செய்த தவப்பயன் பொருந்தப் பெற்றவனானான்; **நானும் நண்ணினன் நின்றேன்** - (பல அரக்கர்களைக் கொன்றிட்ட) நானும் (இவனைக் கொல்வதற்கு) சித்தனாக நிற்கின்றேன்; **காலனும் நணுகி நின்றான்** - (இவன் உயிரைக் கொண்டு போவதற்கு) யமனும் நெருங்கி நிற்கின்றான்; **கண்ணியகருமம் இன்றே கடிதின் முடிக்குவென்** - யான் கருதிய காரியத்தை இன்றைக்கே விரைவில் முடித்து விடுவேன்; **என்றான்** - என்று (அனுமன்) தனக்குள் சொல்லிக் கொண்டான்.
*(19)*

*5687.* **'பழி இலதுஉரு என்றாலும், பல் தலை அரக்கன்**
**அல்லன்;**
**விழிகள்ஆயிரமும் கொண்ட வேந்தை வென்றானும்**
**அல்லன்;**
**மொழியின், மற்று அவர்க்கு மேலான்; முரண்**
**தொழில் முருகன் அல்லன்;**
**அழிவு இல் ஒண்குமரன் யாரோ, அஞ்சனக் குன்றம்**
**அன்னான் ?'**

**அஞ்சனக் குன்றம்அன்னான்** - மைந் நீலமலை போலவிளங்குகின் றஇவன்; **உருபழி இலது என்றாலும்** - இவனுடைய வடிவம் குற்றம் அற்றதுஎன்றாலும்; **பல் தலை அரக்கன் அல்லன்** - பத்துத் தலைகளை உடையஅரக்கனாகிய இராவணன் அல்லன்; **விழிகள் ஆயிரமும் கொண்ட வேந்தைவென்றானும் அல்லன்** - ஆயிரம் கண்களைக் கொண்ட தேவேந்திரனைவென்ற இந்திரசித்தும் அல்லன்; **மொழியின்** - ஆராய்ந்து

*கூறுமிடத்து;* ***மற்றுஅவர்க்கு மேலான் -*** *மற்றைய அவர்களுக்கும் (இராவணன் மேகநாதன்)மேம்பட்டவனாகத் தோன்றுகின்றான்;* ***முரண் தொழில் முருகன் அல்லன் -*** *போர்த் தொழிலிற் சிறந்த முருகக் கடவுளும் அல்லன்;* ***அழிவு இல் குமரன்யாரோ ? -*** *கேடு என்பதே இல்லாத பராக்கிரமமுடைய இக் குமரன் யாரோ?.*

*அனுமன் முன்பேஇராவணனையும் இந்திரசித்தையும் பார்த்தவன் [ஊர்தேடு படலம் (4974. 5040 - 5052 காண்க] ஆதலால்வந்திருப்பவன்அவர்களில் ஒருவனல்லன் எனத் தெளிந்தான். போர்த்தொழில் வல்லமையும் வெல்லும் திறனும் உடைய சேவகப் பெருமாளாகிய முருகனை வீரர்க்கு உவமை சொல்வது மரபு; 'கடம்பு அமர் நெடுவேள் அன்ன மீளி உடம்பிடித் தடக்கை ஓடா வம்பலர்' (பெரும்பாண் 75-76) எனவும், வென்றி நெடுவேள் (குறுந். 111) எனவும் வந்தன. அறநெறியில் செல்லாத அரக்கர் சார்பினனாக முருகன் வாரான் என்பதால் வருபவன் முருகன் அல்லன் எனத் தெளிந்தான். விழிகள் ஆயிரம் கொண்ட இந்திரனை வென்றவன் மேகநாதன்; இவ்வெற்றியால் இந்திரஜித் எனப் பெயர் பெற்றான். இராவணனுக்கும் இந்திரசித்துக்கும் மேலான பெருவீரம் படைத்தவன் அக்ககுமாரன் எனப் பார்த்த அளவில் கணிக்கிறான் அனுமன்.* ***(20)***

*அக்ககுமாரன்,அனுமனை இழித்துப்பேசிய போதுதேர்ப்பாகன், 'தகாது' எனல்*

***5688. என்றவன்,உவந்து, விண் தோய் இந்திர சாபம்***
***என்ன***
***நின்றதோரணத்தின் உம்பர் இருந்த ஓர் நீதியானை,***
***வன் தொழில்அரக்கன் நோக்கி, வாள் எயிறு***
***இலங்க நக்கான்;***
***'கொன்றதுஇக்குரங்கு போலாம், அரக்கர்தம்***
***குழாத்தை !' என்றான்.***

**என்றவன் -** *என்றுஐயுற்றவனாகி;* **உவந்து -** *மகிழ்வுற்று;* **விண் தோய் இந்திர சாபம் என்ன நின்ற தோரணத்தின் உம்பர் -** *வானத்தில் பொருந்திய இந்திர வில்லைப் போல பல நிறத்துடன் விளங்குவதான தோரண வாயிலின் மீது;* **இருந்த ஓர் நீதி யானை -** *தங்கியிருந்த ஒப்பற்ற நெறியுடையவனான அனுமனை;* **வன் தொழில் அரக்கன்நோக்கி -** *கொடுந்தொழிலையுடையஅக்ககுமாரன்பார்த்து;* **அரக்கர் குழாத்தைக் கொன்றது இக் குரங்கு போலாம் என்றான்-** *அரக்கர் கூட்டத்தை எல்லாம் கொன்றது இந்தச் சிறு குரங்குதானா என்றுகூறி;* **வாள் எயிறு இலங்க நக்கான் -** *ஒளி தங்கிய தன் பற்கள் தோன்றுமாறுஏளனமாகச் சிரித்தான்.*

*அனுமனின் உவப்புக்குக்காரணம் நல்ல போருக்கு வாய்ப்பு வரவிருப்பது குறித்து. அனுமன், அரக்கனை எண்ணியது முதல் பாட்டில். இங்கு, அரக்கன் அனுமனை எண்ணியது கூறப்பட்டது. இரண்டு எண்ணங்களின் வேறுபாடு நோக்கத்தக்கது.*
***(21)***

***689. அன்னதாம்அச் சொல் கேட்ட சாரதி, 'ஐய !***
***கேண்மோ !***
***இன்னதாம்என்னல் ஆமோ உலகியல் ? இகழல்***
***அம்மா;***

***மன்னனோடுஎதிர்ந்த வாலி குரங்கு என்றால்,***
***மற்றும் உண்டோ ?***
***சொன்னதுதுணிவில் கொண்டு சேறி' என்று,***
***உணரச் சொன்னான்.***

***அன்னது ஆம்அச்சொல் கேட்ட சாரதி*** - *அத்தன்மைத்தான இழித்துக் கூறிய சொல்லைக் கேட்ட, தேர்ப்பாகன்;* ***ஐய ! கேண்மோ*** - *(அக்ககுமாரனைப் பார்த்து) 'ஐயனே ! நான் சொல்வதைக் கேட்பாயாக;* ***உலகு இயல் இன்னது ஆம் என்னல் ஆமோ*** - *உலகில் நடைபெறும் செயல்கள் இத்தன்மையானவை என்று துணிந்து கூறமுடியுமா ? (கூற முடியாது);* ***இகழல்*** - *குரங்குதானே என்று இகழ வேண்டாம்;* ***மன்னனோடு எதிர்ந்த வாலி*** - *நம் அரசனாகிய இராவணனோடு முன்வந்து எதிர்த்து நின்று வென்ற வாலி என்பவன்;* ***குரங்கு என்றால் மற்றும் உண்டோ ?*** - *ஒரு குரங்கே யாகும் என்றால் மேலும் சொல்வதற்கு இடம் உண்டோ ?* ***சொன்னது, துணிவில் கொண்டு சேறி'*** - *யான் சொன்னதை உறுதியாக மனத்தில் கொண்டு (இதனிடத்தில் வெற்றிபெற வேண்டுமே என்ற எண்ணத்துடன்) செல்வாயாக';* ***என்று உணரச் சொன்னான்*** - *என்று அக்ககுமாரன் அறிந்து கொள்ளுமாறு கூறினான்.*

*இராவணன்வாலியின் வாலில் சிறைப்பட்டதை குறிப்பாகக் கூறியதும் குரங்கு ஏளனத்துக்கு உரியதல்ல என்று உணர்த்தியதும் சாரதியின் அறிவுச் சிறப்பைக் காட்டுகின்றது.* ***(22)***

*அக்ககுமாரன்வஞ்சினம்*

***5690. விடம்திரண்டனைய மெய்யான், அவ் உரை விளம்பக்***
***கேளா,***
***'இடம் புகுந்துஇனைய செய்த இதனொடு சீற்றம்***
***எஞ்சேன்;***
***தொடர்ந்து சென்று உலகம் மூன்றும் துருவினென்,***
***ஒழிவுறாமல்***
***கடந்து, பின்குரங்கு என்று ஓதும் கருவையும்***
***களைவென்' என்றான்.***

***அவ்உரைவிளம்பக் கேளா*** - *சாரதி சொன்ன அந்தவார்த்தையைக் கேட்டு;* ***விடம் திரண்டு அனைய மெய்யான்*** - *விடமே ஒரு அரக்க வடிவு கொண்டாற் போன்றுள்ள (கறுத்துள்ள) அக்ககுமாரன்;* ***இடம் புகுந்து இனைய செய்த*** - *(அவனை நோக்கி) நமது இருப்பிடம் வந்து இவ்வளவு கொடுந் தொழில்களைச் செய்த;* ***இதனொடும் சீற்றம் எஞ்சேன்*** - *இந்தக் குரங்கை அழிப்பதனோடு, எனது கோபத்தை விடமாட்டேன்;* ***தொடர்ந்து சென்று*** - *மேலும் தொடர்ந்து போய்;* ***உலகம் மூன்றும் துருவினென்*** - *மூன்று உலகங்களிலும் குரங்குகள் எங்கே எங்கேயிருக்கிறது என்று தேடியவனாய்;* ***ஒழிவுறாமல் கடந்து பின்*** - *சிறிதிடமும் விடாமல் முற்றும் எல்லா இடங்களையும் கடந்து சென்ற பிறகு;* ***குரங்கு என்று ஓதும்கருவையும்*** - *இனிமேல் குரங்கு என்று சொல்லக் கூடிய கருப்பத்தில் கருத்தன்மையாக உள்ள கர்ப்பத்தையும்கூட;* ***களைவென் என்றான்*** - *அழித்தொழிப்பேன் என்று சபதம் கூறினான்.*

சாரதியின்சொல்லைக் கேட்ட அக்ககுமாரன், குரங்கின் இனத்தையே பூண்டோடு ஒழிப்பதாகச் சபதம் செய்தான். விடம் திரண்டனைய என்னும் உவமை நிறத்தாலும், தொழிலாலும் கொள்ளப்படும். கரனுக்கு உதவியாளராக இருந்த வீரர்களை 'ஆலகாலம் திரண்டன்ன ஆக்கையர்' (2885) என முன்னர்க் கூறியது நினையத் தக்கது.
***(23)***

*அரக்கர் படையோடுஅனுமன் பொருதல்*

***5691. ஆர்த்துஎழுந்து அரக்கர் சேனை, அஞ்சனைக்கு***
***உரிய குன்றைப்***
***போர்த்தது;பொழிந்தது, அம்மா ! பொரு படைப்***
***பருவ மாரி;***
***வேர்த்தனர்திசை காப்பாளர்; சலித்தன விண்ணும்***
***மண்ணும்;***
***தார்த் தனிவீரன், தானும் தனிமையும், அவர்மேல்***
***சார்ந்தான்.***

**அரக்கர் சேனை -** அரக்கர்படைகள்; **ஆர்த்து எழுந்து -** ஆரவாரத்துடனே கிளம்பி; **அஞ்சனைக்கு உரிய குன்றை -** அஞ்சனையின் மகனாகிய குன்று போன்ற அனுமனை; **போர்த்தது -** சூழ்ந்து கொண்டு; **பொருபடைப்பருவ மாரி பொழிந்தது -** போர் செய்கின்ற ஆயுதங்களாகிய பருவகாலத்து மழையைச் சொரிந்தது; **திசை காப்பாளர் -** (அது கண்ட) எட்டுத்திக்குகளையும் காக்கின்ற தேவர்கள்; **வேர்த்தனர் -** (அச்சத்தால்) உடல் வெயர்த்துத் தவித்தனர்; **விண்ணும் மண்ணும் சலித்தன -** வானுலகும் நில உலகும் (பொருகினற் வேகத்தால்) அதிரலாயின; **தார்த்தனி வீரன் -** மாலையணிந்த ஒப்பற்ற வீரனான அனுமன்; **தனிமையும் தானும் -** தனிமையே தனக்குத் துணையாக; **அவர்மேல் சார்ந்தான் -** எதிர்ந்து வந்த அவ்வரக்கர் மீது போரிடச் சென்றான்.

அனுமனைக் குன்றுஎன்றதற்கேற்ப, அதன்மீது பருவ மழை பொழிந்தது எனப்பட்டது. அனுமன், ஒரு துணையும் இன்றிப் போருக்குச் சென்றான் என்பதைத் 'தானும் தனிமையும்' என்ற தொடர் காட்டுகின்றது. அனுமனை முற்றிலுமாக மறைத்துச் சூழ்ந்திருந்து பெருங்கூட்டத்தினராகிய அரக்கர்கள் மழை பொழிவதுபோல் ஆயுதங்களை அனுமன்மீது செலுத்துகிறார்கள்; இந்தக் கொடுமை கண்டு திக்குப் பாலகர் அஞ்சி வேர்த்தனர்; மண்ணும் விண்ணும் நிலை குலைந்தன ஆனால், தன்னந்தனியாகிய அனுமன் அஞ்சவில்லை, சலித்துத் தளரவில்லை. இந்த வியப்பினைக் கவிஞர் 'அம்மா' என்ற வியப்பிடைச் சொல்லால் சுட்டினார்.
***(24)***

***5692. எறிந்தனநிருதர் வெய்தின் எய்தன படைகள் யாவும்***
***முறிந்தன; வீரன்மேனி முட்டின மூரி யானை***
***மறிந்தன;மடிந்த, தேரும், வாவும் மாக் குழுவும்,***
***ஆவி***
***நெறிந்தன வரம்புஇல் யாக்கை, இலங்கை தன்***
***நிலையின் பேர.***

***நிருதர்வெய்தின் எறிந்தன எய்தன படைகள் யாவும் -*** *அரக்கர்கள்சினத்தோடு வீசி எறிந்தவைகளும் தூண்டியவைகளுமான ஆயுதங்கள்எல்லாம்;* ***முறிந்தன -*** *(உட்செல்ல முடியாமல்) ஒடிந்து போயின;* ***வீரன்மேனி முட்டின மூரியானை மறிந்தன -*** *அனுமன் உடம்பை மோதிய வலிமை பொருந்திய யானைகள் இறந்து போயின;* ***தேரும் வாவும் மா குழுவும் மடிந்த -*** *தேர்களும், தாவிச் செல்லும் குதிரைக் கூட்டமும் அழிந்தன;* ***இலங்கை தன் நிலையின்பேர -*** *இலங்கை நகர் தன் இயல்பில் மாறுபட;* ***வரம்பு இல் யாக்கை ஆவி நெறிந்தன -*** *எல்லையில்லாத அரக்கர்களின் உடல்கள் நொறுங்க உயிர் நீங்கின.*

*அரக்கர்படைக்கலம் அனுமன் மேல் பட்டு முறிந்து விழ, அனுமன் தாக்குதலால், இலங்கையின் நிலை கெடுமாறு படைகள் அழிந்தன என்பது கருத்து.*
***(25)***

***5693. காய் எரி,முளி புல் கானில் கலந்தென, காற்றின் செம்மல்,***
***'ஏ' எனும்அளவில் கொல்லும் நிருதர்க்கு ஓர் எல்லை இல்லை;***
***போயவர் உயிரும்போகித் தென் புலம் படர்தல் பொய்யாது;***
***ஆயிர கோடி தூதர்உளர்கொலோ நமனுக்கு அம்மா ?***

***காற்றின்செம்மல் காய் எரி -*** *வாயுகுமாரனான அனுமன்பற்றி எரியும்தன்மையுள்ள நெருப்பானது;* ***முளிபுல் கானில் கலந்தென -*** *உலந்த புற்களின்தொகுதியில் சேர்ந்தாற்போல;* ***'ஏ' எனும் அளவில் -*** *வெகு விரைவில்;* ***கொல்லும் நிருதர்க்கு ஓர் எல்லை இல்லை -*** *கொல்லுகின்ற அரக்கர்களுக்கு ஒரு அளவு இல்லை;* ***போயவர் உயிரும் -*** *போருக்குச் சென்ற அவ் அரக்கர்களின் உயிர்களும்;* ***தென்புலம் போகி படர்தல் பொய்யாது -*** *தென் திசையாகிய யமனுலகு போய்ச் சேருதல் தவறாது;* ***நமனுக்கு -*** *(இவ்வாறு இறந்த உயிர்களை எல்லாம் கொண்டு போவதற்கு) யமனுக்கு;* ***ஆயிரம் கோடி தூதர் உளரோ ? -*** *ஆயிரம் கோடி தூதர்கள் உள்ளார்களோ?*

*'காய் எரி',அனுமனுக்கும், 'முளிபுல் கான்' அரக்கர்களுக்கும் உவமையாக வந்தன. அம்மா; வியப்பை உணர்ந்தும் இடைச்சொல் கொல் - ஐயம். ஓ - வினா.*
***(26)***

***5694. வரஉற்றார், வாராநின்றார், வந்தவர், வரம்பு இல் வெம்போர்***
***பொர உற்றபொழுது, வீரன் மும் மடங்கு ஆற்றல் பொங்க***

***எரியின் போய், கதிரோன் ஊழி இறுதியின் என்னல் ஆனான்;***

***உரவுத் தோள்அரக்கர் எல்லாம், என்புஇலா***
***உயிர்கள் ஒத்தார்.***

***வர உற்றார்*** - *போர்க்களத்துக்கு வருதலைப் பொருந்தியோரும்;* ***வாரா நின்றார்*** - *வந்து கொண்டிருந்தோரும்;* ***வந்தவர்*** - *முன்னரே வந்து சேர்ந்தோரும் ஆகிய அரக்க வீரர்கள் யாவரும்;* ***வெம்போர் பொர உற்ற பொழுது*** - *கொடிய போர் செய்ய முனைந்த போது;* ***வீரன்*** - *வீரனாகிய அனுமன்;* ***மும்மடங்கு ஆற்றல் பொங்க*** - *இயல்பாகவுள்ள ஆற்றல் மூன்று மடங்காகப் பெருக;* ***எரியின் போய்*** - *(ஊழித்) தீப் போல எதிரிகளை நோக்கிச் சென்று;* ***ஊழிக் கதிரோன் என்னல் ஆனான்*** - *ஊழிக் காலத்து எல்லாவற்றையும் எரித்தொழிக்கும் சூரியன் போன்றவனாக ஆனான்;* ***உரவுத் தோள் அரக்கர் எல்லாம்*** - *வலிமை மிக்க தோள் கொண்ட அரக்கர்களெல்லாம்;* ***என்பு இலா உயிர்கள் ஒத்தார்*** - *எலும்பில்லாத உயிர்களாகிய புழுக்களைப் போன்றவரானார்.*

*அரக்கர் சேனைமுடிவே இல்லாத அணிவகுப்புடன் பெருகிவந்ததை வர உற்றார், வாரா நின்றார், வந்தவர் என வருணித்தார், கவிச்சக்கரவர்த்தி. முன்பே களம் வந்தவர், வந்துகொண்டிருப்பவர், வருவதற்குத் தயாராகி முனைந்திருப்போர் ஆகிய மூன்று வகையினை முறையே வந்தவர், வாரா நின்றார், வர உற்றார் என்ற சொற்களால் மதித்துணர்க. அத்துணைப் படைகளையும் எரித்தொழிக்கும் ஆற்றலோடு சினத் தீ மும்மடங்கு பொங்கிடத் தாக்குகிறான் அனுமன். ஊழிக் காலத்துச் சூரியன் முன் பிழைப்பது ஏதுமில்லை என்பது உவமையின் குறிப்பு; ஊழிக் கதிரவன்முன் எஞ்சுவன ஏதுமில்லை; மும்மடங்கு ஆற்றலோடு தாக்கும் அனுமன்முன் தப்பித்துப் போகும் அரக்கரும் இல்லை. கதிரவன்முன் தாமே வலிய நெளிந்து சென்றும் புழுக்களைப் போல அனுமன் முன் அத்துணை அரக்கரும் அழியப் போகிறார்கள் என்பதை உய்த்துணர வைக்கும் உவமை நயம் பாராட்டத்தக்கது. 'என்பு இலதனை வெயில் போலக் காயுமே அன்பு இலதனை அறம்' (77) என்ற குறள் கம்பர் நினைவிலே எழுந்ததன் விளைவு இச் செய்யுள். அக்குறட்பாவின் உரையில், பரிமேலழகர், 'வெறுப்பின்றி எங்குமொரு தன்மைத்தாகிய வெயிலின் முன் என்பில்லது தன் இயல்பாற் சென்று கெடுமாறுபோல, அத்தன்மைத்தாகிய அறத்தின்முன் 'அன்பில்லது' தன் இயல்பாற் சென்று கெடும் என்பதாம்' என்று விளக்கிய உவமைத் திறம் காணத் தக்கது. அறத்தின் தனிமை தீர்ப்பானாகிய அனுமன் இருக்கும் இடத்துக்கு அன்பின் நீங்கினாராகியஅரக்கர்கள் தாமேவந்து அழிவைத் தேடுகின்றனர் என்பது கவிச் சக்கரவர்த்தியின் குறிப்பு. ஒற்றுமை நயம் விரிக்கிற் பெருகும்.* ***(27)***

### ***எழுசீர் ஆசிரியவிருத்தம்***

***5695. பிள்ளப்பட்டன நுதல் ஓடைக் கரி,***
***பிறழ்பொன் தேர், பரி, பிழையாமல்,***
***அள்ளப்பட்டு அழிகுருதிப் பொரு புனல்***
***ஆறாக, படிசேறு ஆக,***
***'வள்ளப்பட்டனமகரக் கடல் என***
***மதில்சுற்றிய பதி மறலிக்கு ஓர்***
***கொள்ளைப்பட்டனஉயிர்' என்னும்படி***
***கொன்றான்-ஐம் புலன் வென்றானே !***

***ஐம்புலன்வென்றான்*** - *ஐந்து புலன்களையும்வென்ற அனுமன்;* ***வள்ளப்பட்டன மகரக்கடல் மதிள் எனச் சுற்றிய பதி*** - *மகர மீன்கள் நிறைந்துள்ள வளம் பெற்ற கடல், அரணாகும்படி சூழ்ந்திருக்கும் இலங்கை நகரத்தில் உள்ள;* ***உயிர்*** - *பிராணிகள் யாவும்;* ***மறலிக்கு ஓர் கொள்ளைப் பட்டன என்னும்படி*** - *யமனுக்குப் பெருங் கொள்ளையில் அகப்பட்டுள்ளன என்று (கண்டவர்) கூறுமாறு;* ***நுதல் ஓடைக் கரி*** - *நெற்றிப்பட்டம் அணிந்த யானைகளும்;* ***பிறழ் பொன் தேர், பரி*** - *குப்புற்று விழுந்த அழகிய தேர்களும் குதிரைகளும்;* ***பிள்ளப்பட்டன*** - *சிதைக்கப்பட்டன;* ***அள்ளப்பட்டு அழிகுருதி பொரு புனல் ஆறு ஆக*** - *(வருகின்ற பிராணிகள் எல்லாம்) வாரி எடுக்கப்பட்டு அழிந்த (அரக்கர்களுடைய) மோதும் இரத்த வெள்ளமாகிய நீர், ஆறாய ஓடவும்;* ***படி சேறு ஆக*** - *அதனால் பூமி சேறாக ஆகவும்;* ***பிழையாமல் கொன்றான்*** - *எவரும் தப்பிப் போகாமல் கொன்று அழித்தான்.*

*சிதைக்கப்பட்டபடையின் குருதி, ஆறாகவும், உடல் முதலியன ஆற்றினடியில் படியும் சேறாகவும் காணப்பட்டன. 'நெறிநின்று பொறிகள் ஐந்தும் வென்றவன்' (5253) என அனுமனைப் பிராட்டி கணித்ததை உருக்காட்டு படலத்தில் கம்பர் குறித்திருப்பது நினைவு கூரத்தக்கது. வள் - வளம்;* ***(28)***

***5696. 'தேரே பட்டன' என்றார் சிலர்; சிலர்,***
***'தெறு கண்செம் முக வயிரத் தோள்***
***பேரே பட்டன'என்றார்; சிலர் சிலர்,***
***'பரியே பட்டன பெரிது' என்றார்.***
***'காரே பட்டனநுதல் ஓடைக் கட***
***கரியேபட்டன கடிது' என்றார்;***
***நேரே பட்டவர்பட, மாடே, தனி,***
***நில்லாஉயிரொடு நின்றாரே.***

***நேரே பட்டவர்பட*** - *போரில் அனுமனுக்கு எதிரே தோன்றிய அரக்கவீரர்கள் அழிந்து போக;* ***மாடே*** - *(ஒதுக்கமான) பக்கங்களில்;* ***நில்லா உயிரொடு தனி நின்றார் சிலர்*** - *(அப்போரைப் பார்த்த அளவில் அச்சத்தால் தம்முடலில்) நில்லாது தத்தளிக்கும் நிலையில் உள்ள உயிரோடு தனியே நின்று கொண்டிருந்தவர்களில் சிலர்;* ***தேரே பட்டன என்றார்*** - *தேர்களே அழிந்து போயின என்று கூறினார்கள்;* ***சிலர்*** - *மற்றும் சிலர்;* ***தெறுகண் செம்முக வயிரத் தோள் பேரே பட்டன என்றார்*** - *கோபிக்கும் கண்களையும் சிவந்த முகங்களையும் உறுதியான தோள்களையும் உடைய காலாட் படைகளே இறந்தது என்று சொன்னார்கள்;* ***சிலர்*** - *மற்றும் சிலர்;* ***பரியே பெரிது பட்டன என்றார்*** - *குதிரைகளே பெரிதும் அழிந்து போயின என்றார்கள்;* ***சிலர்*** - *வேறு சிலர்;* ***காரேபட்டன நுதல் ஓடை கரியே*** - *மேகம் போன்றனவான நெற்றிப் பட்டத்தை உடைய யானைகளே;* ***கடிது பட்டன என்றார்*** - *விரைவாய் அழிந்தன என்றனர்.*

*சிலர்தேர்களையும், சிலர் வீரர்களையும், சிலர் குதிரைகளையும், சிலர் யானைகளையும் தனித்தனி பார்த்து நின்று அவ்வவற்றின் அழிவின் மிகுதியால் பிற ஒன்றையும் பார்க்கும் திறமின்றித்தாம் கண்டவற்றையே கூறினர் என்பதாயிற்று. 'தோள் கண்டார் தோளே கண்டார்' (கம்ப. 181) என்ற செய்யுளை நினைப்பூட்டுவது.* ***(29)***

*5697.* ***ஆழிப்பொரு படை நிருதப் பெரு வலி***
***அடலோர்,ஆய்மகள் அடு பேழ் வாய்த்***
***தாழிப் படுதயிர் ஒத்தார்; மாருதி,***
***தனி மத்துஎன்பது ஓர் தகை ஆனான்;***
***ஏழ் இப் புவனமும்மிடை வாழ் உயிர்களும்,***
***எறி வேல்இளையவர் இனம் ஆக,***
***ஊழிப் பெயர்வதுஓர் புனல் ஒத்தார்; அனல்***
***ஒத்தான்; மாருதம் ஒத்தானே.***

***ஆழிப் பொருபடைநிருதப் பெருவலி அடலோர்*** *- கடல் போன்று கொந்தளித்துத் தாக்கும் சேனையில் உள்ள அரக்கர்களாகிய பெரிய வலிமை வாய்ந்த வீரர்கள்;* ***ஆய் மகள், அடு*** *- ஆயர் குல மகள், பாலைக் காய்ச்சித் தோய்த்து வைத்த;* ***பேழ் வாய்த்தாழி படுதயிர் ஒத்தார்*** *- அகன்றவாயை உடைய மிடாவில் கடையப்படும் தயிர் போலக் குழைந்து வருந்தினர்;* ***மாருதி*** *- அனுமனோ;* ***தனி மத்து என்பது ஓர் தகை ஆனான்*** *- ஒப்பற்ற மத்தென்று சொல்லத்தகுந்த தன்மையைப் பொருந்தினான்;* ***எறிவேல் இளையவர்*** *- எறிந்து தாக்கும் வேலை உடைய அரக்கரான இளவீரர்கள்;* ***இவ் ஏழ்புவனமும்*** *- இந்த ஏழு உலகங்களிலும்;* ***மிடை வாழ் உயிர்களும்*** *- நெருங்கிவாழ்கின்ற உயிர்கள் அனைத்தும்;* ***இனம் ஆக*** *- ஒன்றாகக் கூடின போன்றிருக்க;* ***ஊழிப் பெயர்வது ஓர் புனல் ஒத்தார்*** *- (அவர்கள்) யுக முடிவுக் காலத்தில் பொங்கி வரும் ஒரு பிரளய வெள்ளத்தை ஒத்து விளங்கினர்;* ***மாருதம் ஒத்தான்*** *- (உடல் வலிமையில்) வாயு பகவானை ஒத்தவனான அனுமன்;* ***அனல் ஒத்தான்*** *- (அந்த ஊழி வெள்ளத்தைப் பருகி அழிக்கும் வடவாமுகாக்கினி என்னும்) ஊழித் தீயை ஒத்தான்.*

*முதல் இரண்டுஅடிகளில் போர்க்களம் தயிர்த் தாழியாகவும், அக்களத்தில் அகப்பட்ட அரக்க வீரர்கள், தாழியில் உள்ள தயிராகவும், அனுமன் அத்தயிரைக் கடையும் மத்தாகவும் உருவகப்படுத்தியதாகும். பின் இரண்டு அடிகளில் அரக்கர்கள் ஊழிப் பிரளயமாகவும், அனுமன் அதனை நீக்கும் அனலாகவும் உருவகப்படுத்தப்பட்டனர்.* ***(30)***

*அனுமனுக்கும்அக்ககுமாரனுக்கும் நிகழும் போர்*

*5698.* ***கொன்றான் உடன் வரு குழுவை; சிலர் பலர்***
***குறைகின்றார், உடல் குலைகின்றார்;***
***பின்றா நின்றனர்; உதிரப் பெரு நிதி***
***பெருகாநின்றன; அருகு ஆரும்***
***நின்றார்நின்றிலர்; தனி நின்றான், ஒரு***
***நேமித்தேரொடும், அவன் நேரே***
***சென்றான்; வன்திறல் அயில் வாய் அம்புகள்***
***தெரிகின்றான்; விழி எரிகின்றான்.***

***உடன் வரு குழுவை*** *- (தன்மேல் போருக்கு) திரண்டு வருகின்ற அரக்கர் திரளை;* ***கொன்றான்*** *- (அனுமன்) கொன்றான்;* ***சிலர் குறைகின்றார்*** *- சிலஅரக்க வீரர்கள் இறந்தொழிந்தார்கள்;* ***பலர் உடல் குலைகின்றார்*** *- மற்றும் பல அரக்கர்கள் உடல் நடுக்குற்றனராய்;* ***பின்றா நின்றனர்*** *- பின்னிட்டுச் சென்றவராயினர்;* ***உதிரப் பெருநிதி***

***பெருகாநின்றன -*** *இரத்த பேராறுகள் பெருகத் தலைப்பட்டன;* ***அருகு நின்றார்ஆரும் நின்றிலர் -*** *(அவ்வக்ககுமாரனுக்கு) அருகில் நின்றவர்கள் எவரும்அங்கே நிற்க மாட்டாமல் அப்புறம் சென்று விட்டனர்;* ***தனி நின்றான் -*** *(துணையின்றி) தனித்து நின்ற அக்ககுமாரனும்;* ***ஒரு நேமித் தேரொடும் -*** *ஒப்பற்ற சக்கரங்களை உடைய தேரோடும்;* ***அவன் நேரே சென்றான் -*** *அந்த அனுமனுக்கு எதிரே சென்றவனாகி;* ***விழி எரி கின்றான் -*** *(கோபத்தால்) கண்கள் நெருப்பு எரிவது போல் விளங்க;* ***வன் திறல் அயில்வாய் அம்புகள் தெரிகின்றான் -*** *மிக்க திறமை வாய்ந்த கூரிய முனைகளைஉடைய அம்புகளை அனுமன் மீது தேர்ந்து விடுகின்றவனானான். **(31)***

***5699. உற்றான்இந்திரசித்துக்கு இளையவன்;***
***ஒரு நாளேபலர் உயிர் உண்ணக்***
***கற்றானும் முகம்எதிர் வைத்தான்; அது***
***கண்டார்விண்ணவர்; கசிவுற்றார்;***
***'எற்றாம் மாருதி நிலை ?' என்பார்; இனி***
***'இமையாவிழியினை இவை ஒன்றோ***
***பெற்றாம்;நல்லது பெற்றாம்' என்றனர்;***
***பிறியாது எதிர் எதிர் செறிகின்றார்.***

***இந்திரசித்துக்கு இளையவன் உற்றான் -*** *இந்திரசித்தனுக்குத் தம்பியாகிய அந்த அக்ககுமாரனும் (அனுமனுக்கு) எதிரே வந்தடைந்தான்;* ***ஒரு நாளே பலர் உயிர் உண்ணக் கற்றானும் -*** *ஒரு நாளிலேயே பல லட்சக்கணக்கான வீரர் உயிர்களை அழிக்கப் பழகியவனான அனுமனும்;* ***முகம் எதிர் வைத்தான் -*** *அவனுக்கு எதிர்முகமாய் நின்றான்;* ***அது கண்டார் விண்ணவர் -*** *அந்நிலையைக் கண்ட தேவர்கள்;* ***கசிவு உற்றார் -*** *மனம் இரங்கியவர்களாய்;* ***மாருதி நிலை எற்றாம் -*** *(இனி) அனுமனுடைய நிலை யாது ஆகுமோ;* ***என்பார் -*** *என்று மனத்தில் துணுக்குக் கொண்டு கூறுபவர்களாய்;* ***இனி -*** *இப்பொழுது;* ***இமையா விழியினை இவை ஒன்றோ பெற்றாம் -*** *இமையாக்கண்களை உடைமையாகிற இந்த ஒரு சிறப்பைப் பெற்றிருக்கின்ற நாங்கள்;* ***நல்லது பெற்றாம் -*** *(இவ்விருவரும் பொருகின்ற போர் விநோதத்தைக் காணுமாறு) நன்மையைப் பெற்றவரானோம்;* ***என்றனர் -*** *என்று கூறுபவர்களாய்;* ***பிறியாது எதிர் எதிர் செறிகின்றார் -*** *(ஒருவரை விட்டு ஒருவர்) பிரியாமல் (அப்போரைக் காணும் பொருட்டு வானத்தில்) எதிர் எதிராகப் போய் நின்றார்கள்.*

*போரை இடையீடின்றிக் காணுதற்குக் கண் இமையாமல் இருத்தல் வாய்ப்பு ஆயிற்று ஆதலின் மகிழ்ச்சி விளைந்தது.* ***(32)***

***5700. எய்தான்,வாளிகள், எரி வாய் உமிழ்வன,***
***ஈர்-ஏழ்;எதிர் அவை பார் சேரப்***
***பெய்தான், மணிஎழு ஒன்றால்; அன்று, அது,***
***பொடியாய் உதிர்வுற, வடி வாளி,***
***வெய்தாயின, பலவிட்டான்; வீரனும்,***
***வேறு ஓர்படை இலன், மாறா வெங்***
***கைதானே பொருபடை ஆக, தொடர்***
***கால் ஆர்தேர்அதன் மேல் ஆனான்.***

***எரிவாய்உமிழ்வன -*** *நெருப்பைத்தம்மிடமிருந்து கக்குவனவான;* ***ஈர் ஏழ் வாளிகள் எதிர் எய்தான் -*** *பதினான்கு அம்புகளை (அக்ககுமாரன்) எதிரே (அனுமன் மீது) செலுத்தினான்;* ***அவை பார் சேர -*** *அவ்வம்புகள் தரையிலே விழும்படி;* ***மணி எழு ஒன்றால் -*** *தன்கையில் கொண்ட) அழகிய இரும்புத்தண்டு ஒன்றினால்;* ***பெய்தான் -*** *(அனுமன் அவற்றைப்) பயனற்றனவாக வீழ்த்தினான்;* ***அன்று,அது பொடியாய் உதிர்வு உற -*** *அப்பொழுது, அந்த இரும்புத்தண்டு பொடியாக உதிர்ந்து போகும்படி;* ***வெய்து ஆயின வடிவாளி பல விட்டான் -*** *மேலும் கொடுமையான கூரியபல அம்புகளை (அக்ககுமாரன்) (அனுமன் மீது) பிரயோகித்தான்;* ***வீரனும் -*** *வீரனான அனுமனும்;* ***வேறு ஓர் படை இலன் -*** *வேறு ஒரு ஆயுதம் தன்னிடம் இல்லாதவனாகி;* ***மாறா -*** *(அவ்வம்புகளுக்கு) எதிராக;* ***வெங்கைதானே பொரு படை ஆக -*** *வலிய தன்கைகளையே போர் செய்யும் படைகளாகக் கொண்டு;* ***தொடர்கால் ஆர்தேர் அதன் மேல் ஆனான் -*** *தன் முன்னே தொடர்ந்து வரும் சக்கரங்கள் பொருந்திய (அக்ககுமாரனது) தேரின் மீது ஏறினான்.*

*கால் - சக்கரம்.* ***(33)***

***701. தேரில்சென்று, எதிர் கோல் கொள்வான் உயிர்***
***தின்றான்;அப் பொரு செறி திண் தேர்,***
***பாரில் சென்றது;பரி பட்டன; அவன்***
***வரி வில்சிந்திய பகழிக் கோல்,***
***மார்பில்சென்றன சில; பொன் தோளிடை***
***மறைவுற்றனசில; அறவோனும்,***
***நேரில் சென்று,அவன் வயிரக் குனி சிலை***
***பற்றிக்கொண்டு, எதிர் உற நின்றான்.***

***தேரில் சென்று -*** *(பாய்ந்தஅனுமன்) தேரிலே நின்று;* ***எதிர் கோல் கொள்வான் உயிர் தின்றான் -*** *எதிரேயுள்ள உளவுகோலைக் கையில் கொண்டுள்ள சாரதியின் உயிரை அழித்தான்;* ***அப் பொரு செறிதிண் தேர் பாரில் சென்றது -*** *(பின்னும் அனுமன் தனது கையால் நொறுக்கியதால்) அந்த ஒப்பற்ற கெட்டியான வலிய தேர், (சின்னா பின்னப்பட்டு) தரையில் விழுந்து விட்டது;* ***பரிபட்டன -*** *குதிரைகள் இறந்தன;* ***அவன் வரிவில் சிந்திய பகழிக்கோல் சில -*** *அந்த அக்ககுமாரன், தன் கட்டுகள் அமைந்த வில்லினால்பொழிந்த அம்புகளில் சில;* ***மார்பில் சென்றன -*** *அனுமன் மார்பில்பாய்ந்தன;* ***சில பொன் தோளிடை மறைவுற்றன -*** *மற்றும் சில அம்புகள்அனுமனது பொன்போன்ற தோளின் மேல் பாய்ந்து மறைவுற்றன;* ***அறவோனும் -*** *அறவோனாகிய அனுமனும்;* ***நேரில் சென்று -*** *நேராகப் போய் நின்று;* ***அவன் வயிரக் குனி சிலை பற்றிக்கொண்டு -*** *அக்ககுமாரனது வலிய வளைந்த வில்லைப் பிடுங்கிக் கொண்டு;* ***எதிர் உற நின்றான் -*** *அவன் எதிரிலே நின்றான்.*

*பகழிக் கோல் -அம்பு. அறவன் என முன்னரும் (5512) அனுமன் குறிக்கப்பட்டான்.* ***(34)***

***5702. ஒரு கையால்அவன் வயிரத் திண் சிலை***
***உற்றுப்பற்றலும், உரவோனும்,***
***இரு கையால் இவன்வலியாமுன்னம், அது***
***இற்றுஓடியது; இவர் பொன் தோளின்,***

***சுரிகையால் அவன்உருவிக் குத்தலும்,***
***அதனை,சொல் கொடு வரு தூதன்,***
***பொரு கையால்இடை பிதிர்வித்தான், முறி***
***பொறி ஓடும்படி பறியாவே.***

**ஒரு கையால் அவன்வயிரத் திண் சிலை உற்றுப் பற்றலும் -** *(அவ்வாறுஅனுமன் தனது) ஒரு கையினால், அக்ககுமாரனது உறுதியான வலிய வில்லை நெருங்கிப் பிடுங்கிக் கொண்டதும்;* **உரவோனும் -** *வலியவனான அக்ககுமாரனும்;* **இருகையால் வலியா முன்னம் -** *தனது இரண்டு கைகளாலும். அந்த வில்லைப் பிடித்து இழுக்கும் முன்னம்;* **அது இற்று ஓடியது -** *அவ்வில் முறிந்து போய் விட்டது (பிறகு);* **அவன் -** *அந்த அக்ககுமாரன்;* **இவர் பொன் தோளின் தன் கரிகையால் உருவி குத்தலும் -** *தன் உடை வாளினால், உயர்ந்த அழகிய (அனுமனது) தோளின் மேல் குத்தியதும்;* **அதனை -** *அந்த உடை வாளை;* **சொல்கொடு வரு தூதன் -** *(இராமபிரானது) சொல்லைச் சீதாபிராட்டியினிடம் சொல்லுமாறு கொண்டு வந்த தூதனாகிய அனுமன்;* **பொருகையால் பறியா -** *தனது போர் புரியும் கையினால் பறித்து;* **முதிர் பொறி ஓடும்படி இடை பிதிர்வித்தான் -** *மிக்க நெருப்புப் பொறி எங்கும் பறந்து செல்லும்படி (தன் மேல் படுவதற்கு முன்) நடுவழியிலேயே பொடியாக உதிரும்படிச் செய்தான்.* ***(35)***

*அனுமனோடு மற்போர்செய்து அக்ககுமாரன் மடிதல்*

***5703. வாளாலே பொரல் உற்றான், இற்று அது***
***மண்சேராமுனம், வயிரத் திண்***
***தோளாலே பொரமுடுகிப் புக்கு, இடை***
***தழுவிக்கோடலும், உடல் முற்றும்,***
***நீள் ஆர் அயில்என மயிர் தைத்திட, மணி***
***நெடு வால்அவன் உடல் நிமிர்வுற்று***
***மீளாவகை, புடைசுற்றிக்கொண்டது;***
***பற்றிக்கொண்டன் மேலானான்.***

**வாளாலே பொரல்உற்றான் -** *வாள் கொண்டு போர்புரியத் தொடங்கிய அக்ககுமாரன்;* **அது இற்று மண் சேரா முனம் -** *அந்த வாள் ஒடிந்து தரையில் விழுவதற்கு முன்னம்;* **வயிரத்திண் தோளாலே பொர முடுகி -** *மிக்க வலிய தனது தோளினாலேயே போர் புரிய வேகமாக வந்து;* **இடை புக்கு தழுவிக் கோடலும் -** *அவ்விடம் புகுந்து அனுமனைத் தழுவிக் கொள்ள முயன்றபோது;* **உடல் முற்றும் -** *அக்ககுமாரனது உடல் முழுவதும்;* **நீள் ஆர் அயில் என மயிர் தைத்திட -** *நீட்சி பொருந்திய வேலாயுதம் போல (அனுமனது) உரோமங்கள் குத்தி உட்புக;* **மணி நெடு வால் -***அனுமனுடைய அழகியநீண்டவால்;* **அவன் உடல் நிமிர் உற்று மீளாவகை -** *அந்த அக்ககுமாரனுடைய உடல் மேற்கிளம்பி மீளாதபடி;* **புடை சுற்றிக் கொண்டது -** *உடலின் எப்புறங்களிலும் சுற்றிப் பிணித்துக் கொண்டது;* **பற் றிக்கொண்டனன் -** *இவ்வாறு பற்றிக் கொண்ட அனுமன்;* **மேல் ஆனான் -** *(அவ்வரக்கனைக் கீழே தள்ளி அவன்) மேலே எழுந்து உட்கார்ந்துகொண்டான்.* ***(36)***

***5704. பற்றிக்கொண்டவன், வடி வாள் என ஒளிர்,***
***பல் இற்றுஉக, நிமிர் படர் கையால்***
***எற்றி,கொண்டலின் இடைநின்று உமிழ் சுடர்***
***இன மின்இனம் விழுவன என்ன,***
***முற்றிக்குண்டலம் முதல் ஆம் மணி உக,***
***முழை நால்அரவு இவர் குடர் நால,***
***கொற்றத் திண்சுவல், வயிரக் கைகொடு***
***குத்தி,புடை ஒரு குதிகொண்டான்.***

***பற்றிக்கொண்டவன் -*** *(தன் வாலினாலேஅக்ககுமாரனைப்) பற்றிக் கொண்டவனான அனுமன்;* ***வடிவாள் என ஒளிர் பல் இற்று உக -*** *கூரிய வாள் போன்று விளங்குகின்ற பற்கள் உதிரும்படி;* ***நிமிர் படர்கையால் எற்றி -*** *ஓங்கிய தன் அகன்ற கையினால் (கன்னத்தில்) அறைந்து;* ***கொண்டலின் இடை நின்று உமிழ் சுடர் இனமின் இனம் விழுவன என்ன -*** *மேகத்திடமிருந்து வருகின்ற ஒளி தங்கிய மின்னலின் கூட்டங்கள் கீழே விழுகின்றன போல;* ***குண்டலம் முதலாம் மணி இற்று உக -*** *குண்டலம் முதலிய ஆபரணங்களில் உள்ள இரத்தினங்கள் அழிந்து சிந்த;* ***அரவு நால் முழை இவர் குடர் நால -*** *பாம்பு குகையிடத்து தொங்கல் போல அவனுடைய குடல்கள் வெளியேதொங்க;* ***கொற்றத்திண் சுவல் -*** *வெற்றியைத் தரும் வலிய மேடு போல் உயர்ந்த;* ***வயிரக் கை கொடும் குத்தி -*** *உறுதியானதனது கையைக் கொண்டு அவனைக் குத்தி;* ***ஒரு புடை குதி கொண்டான் -*** *ஒரு புறத்தே குதித்தான். வயிறு குகைபோன்றது; சரிந்த குடல்கள் குகைவாயிலில் தொங்கும் கொடிகள் போன்றன.* ***(37)***

***5705. நீத்து ஆய்ஓடின உதிரப் பெரு நதி***
***நீராக,சிலை பாராக,***
***போய்த்தாழ் செறி தசை அரி சிந்தினபடி***
***பொங்க,பொரும் உயிர் போகமுன்,***
***மீத் தாம்நிமிர் சுடர் வயிரக் கைகொடு***
***பிடியா,விண்ணொடு மண் காண,***
***தேய்த்தான்-ஊழியின் உலகு ஏழ் தேயினும்,***
***ஒரு தன்புகழ் இறை தேயாதான்.***

***நீத்து ஆய் ஓடினஉதிரப் பெரு நதி நீராக -*** *(அப்போது) வெள்ளமாகப் பெருகிய இரத்தப்பெரு நதியே (அரைக்கும் போது விடும்) நீராகவும்;* ***பார் சிலை ஆக -*** *பொருகளமே (பூமியே) அரைக்கும் அம்மிக்கல்லாகவும்;* ***போய்த் தாழ் செறி தசை -*** *அத்தரையில் போய் விழுந்த (அக்ககுமாரனது) நெருங்கிய தசையே;* ***அரி சிந்தின படி பொங்க -*** *ஊறல் அரிசிகள் சிந்திக் கிடப்பனபோல மிகுந்து விளங்கவும்;* ***பொரும் உயிர் போகாமுன் -*** *(அரக்கனது உடற்பகுதியைக் குழவியாகக் கொண்டு) போர் செய்கின்ற அரக்கன் உயிர் போகாமுன்னம்;* ***மீத்தாம் நிமிர் -*** *மேலாக எழுந்து ஓங்கிய;* ***சுடர் வயிரக்கை கொடு பிடியா -*** *ஒளிதங்கிய உறுதியான தன் இருகைகளைக் கொண்டு (குழவியின் இருபுறத்து) பிடித்து;* ***விண்ணொடு மண்ணும் காண -*** *மேலுலகத்தாரும் நில உலகத்தாரும் காணும்படி;* ***ஊழியின் -*** *யுக முடிவில்;* ***உலகு ஏழ்தேயினும் -*** *ஏழு உலகங்களும் அழிந்தாலும்;* ***ஒரு தன் புகழ் இறை தேயாதான் -*** *ஒப்பற்ற தன் புகழில்*

*சிறிதும் குறையாது விளங்கும் அனுமன்;* **தேய்த்தான் -** *அரைத்து உருவில்லாமல் சேறாக்கினான்.*

*தேயாதான்,தேய்த்தான் என்பது முரண் தொடர் அழகு. அரி சிந்தினபடி; அரைக்கும் போது, அதிர்ச்சியால் அம்மியில் உள்ள அரிசிகள் சிந்துவன, போல, அரக்கன் உடலிலிருந்து தசைத்துண்டுகள் சிந்திப் புறங்களில் விழுந்து கிடந்தன என்பதாம்.*
***(30)***

*எஞ்சிய படைகள்அஞ்சி ஓடி மறைதல்*

***5706. புண் தாழ்குருதியின் வெள்ளத்து, உயிர் கொடு***
***புக்கார் சிலர்; சிலர் பொதி பேயின்***
***பண்டாரத்திடைஇட்டார் தம் உடல்;***
***பட்டார்சிலர்; சிலர் பயம் உந்த,***
***திண்டாடித் திசைஅறியா மறுகினர்;***
***செற்றார்சிலர்; சிலர் செலவு அற்றார்;***
***கண்டார் கண்டது ஓர் திசையே விசைகொடு***
***கால்விட்டார்; படை கைவிட்டார்.***

**சிலர் புண்தாழ்குருதியின் வெள்ளத்து உயிர் கொடு புக்கார் -** *(உயிர்எஞ்சிய அரக்கரில்) சிலர், புண்களிலிருந்து பெருகுகின்ற இரத்த வெள்ளத்தினுள் உயிரோடு புகுந்து ஒளிந்து கொண்டனர்;* **சிலர் பேயின் பொதிபண்டாரத்திடைத் தம் உடல் இட்டார் -** *மற்றும் சிலர், பேய்களால் சேர்த்துவைக்கப்பட்ட பிணங்கள் நிறைந்த குவியலினிடத்து (போய்ப்புகுந்து) தமது உடலை இட்டு மறைத்துக் கொண்டனர்;* **சிலர், பயம் உந்த பட்டார் -** *வேறு சில அரக்கர்க்ள அச்சம் முன் பிடித்துத்தள்ள இறந்து ஒழிந்தனர்;* **சிலர், திண்டாடித் திசை அறியாமறுகினர், செற்றார் -** *மற்றும் சிலர், அலைக்கல்பட்டுத் திக்குத் தெரியாமல் கலங்கினவராய் வலியொடுங்கினார்கள்;* **சிலர் செலவு அற்றார் -** *வேறு சிலர், எங்கும் செல்லும் வலிமை அற்றவர்களானார்கள்;* **சிலர் படைகைவிட்டார் -** *வேறு சிலர் தம் கையிலிருந்த ஆயுதங்களை நழுவவிட்டவர்களாய்;* **கண்டார் கண்டது ஓர் திசையே -** *அவரவர் எதிரே கண்ட கண்ட திசை நோக்கியே;* **விசை கொடு கால் விட்டார் -** *வேகமாக ஓட்டம் பிடித்தனர்.*

*புறம் கொடுத்துஓடியவர்களின் செயலுள் சில கூறப்பட்டன. கைவிட்டார் கால் விட்டார் என்பன மரபுச் சொற்கள்.* ***(39)***

***5707. மீன் ஆய்,வேலையை உற்றார் சிலர்; சிலர்***
***பசு ஆய்வழிதொறும் மேய்வுற்றார்;***
***ஊன் ஆர்பறவையின் வடிவு ஆனார் சிலர்;***
***சிலர்நான்மறையவர் உரு ஆனார்;***
***மான் ஆர் கண்இள மடவார் ஆயினர்***
***முன்னே, தம் குழல் வகிர்வுற்றார்***
***ஆனார் சிலர்;சிலர், 'ஐயா ! நின் சரண்'***
***என்றார்;நின்றவர் 'அரி' என்றார்.***

***சிலர் மீன் ஆய்வேலையை உற்றார் -*** *சில அரக்கர்கள் மீன் உருவம் கொண்டு கடலில் சேர்ந்தனர்;* ***சிலர், பசு ஆய் வழிதொறும் மேய்வுற்றார் -*** *சிலர் பசுவின் வடிவில் மாறி வழிகளில் எல்லாம் மேய்வாராயினர்;* ***சிலர் ஊன் ஆர் பறவையின் வடிவு ஆனார் -*** *சில அரக்கர்கள், மாமிசத்தைத்தின்னும் (கழுகு, காகம் முதலிய) பறவைகளின் வடிவை உடையவரானார்கள்;* ***சிலர் நான் மறையவர்உரு ஆனார் -*** *வேறு சிலஅரக்கர்கள் நான்கு வேதங்களை ஓதும் அந்தணர் உருவை எடுத்துக் கொண்டனர்;* ***சிலர் -*** *மற்றும் சில அரக்கர்கள்;* ***மான் ஆர் கண் இள மடவார் ஆயினர் -*** *மான்போன்ற கண்களை உடைய இளமகளிர் உருவைப் பெற்றவராய்;* ***தம் குழல் முன்னே வகிர்வு உற்றார் ஆனார் -*** *தம்கூந்தலை முன்புறம் வகிடு எடுத்துக் கொண்டவர் ஆயினர்;* ***சிலர், 'ஐயா, நின்சரண் என்றனர் -*** *வேறுசிலர், 'ஐயனே ! யாம் உன் அடைக்கலம் என்றார்கள்;* ***நின்றவர் அரி என்றார் -*** *மற்றுமுள்ளோர் அரி என்ற திருமால் திருநாமத்தைக் கூறினர்.*

*அனுமனுக்குஅஞ்சித் தம் உயிரைக் காப்பாற்றிக் கொள்ளும் முயற்சியில் அரக்கர்கள் செய்த மாயச் செயல்கள் கூறப்பட்டன. அரி - குரங்கு என்றும் பொருள் - குரங்கு என்றது அச்சத்தில் கூறியதாம் - அது திருமால் நாமமாகக் கருதப்பட்டு உயிர் பெற்றார்.* ***(40)***

***5708. தம்தாரமும், உறு கிளையும், தமை எதிர்***
***தழுவும்தொறும், 'நும தமர் அல்லேம்;***
***வந்தேம்,வானவர்' என்று, ஏகினர் சிலர்;***
***சிலர்,'மானுயர்' என, வாய் விட்டார்;***
***மந்தாரம் கிளர்பொழில்வாய் வண்டுகள்***
***ஆனால்சிலர்; சிலர் மருள்கொண்டார்;***
***இந்து ஆர்எயிறுகள் இறுவித்தார் சிலர்;***
***எரிபோல்குஞ்சியை இருள்வித்தார்.***

***சிலர்,தம்தாரமும், உறு கிளையும் தமை எதிர் தழுவும் தொறும் -*** *சிலஅரக்கர்கள் தமது மனைவிகளும் நெருங்கிய உறவினர்களும் தம்மைக் (கண்ட மகிழ்ச்சியால்) எதிர் வந்து தழுவிக் கொண்ட போதெல்லாம்;* ***நுமதமர் அல்லோம் -*** *யாங்கள் உமது சுற்றத்தினர் அல்லோம்;* ***வானவர் வந்தோம் -*** *நாங்கள் தேவர்கள், இப்போரைக் காண இங்கே வந்தோம்;* ***என்று ஏகினர் -*** *என்று சொல்லிவிட்டு அப்பால் சென்றனர்;* ***சிலர், மானுயர் என வாய் விட்டார் -*** *வேறு சிலர், நாங்கள் மானிடர் (அரக்கர் அல்லர்) என்று பெருங்கூக்குரலிட்டனர்;* ***சிலர் -*** *வேறு சிலர்;* ***மந்தாரம் கிளர் பொழில் வாய்வண்டுகள் ஆனார் -*** *மந்தார மரங்கள் விளங்கும் அந்தச் சோலையினிடத்துவண்டுகளின் வடிவினை எடுத்துக் கொண்டார்;* ***சிலர் மருள் கொண்டார் -*** *இன்னும் சிலர், செய்வது இன்னதென்று அறியாமல் மயங்கி நின்றனர்;* ***சிலர்இந்து ஆர்எயிறுகள் இறுவித்தார்-*** *வேறுசில அரக்கர்கள் பிறைச்சந்திரன் போன்று வளைந்த தம் பற்களை ஒடித்துக் கொண்டனர்;* ***எரிபோல் குஞ்சியை இருள் வித்தார் -*** *நெருப்புச் சுடர் போன்று சிவந்த தமது தலைமயிரை இருள் போலக் கறுப்பாக்கிக் கொண்டனர்.*

*அனுமனுக்கு அஞ்சியஅரக்கர்கள் தம்மை மாற்றிக் கொண்ட சில செயல்களும் சில சொற்களும் கூறப்பட்டன. கோரைப் பற்கள் தங்களை அரக்கர் என அடையாளம் காட்டிவிடுமே என அஞ்சி அவற்றை ஒடித்துக் கொண்டனராம். அவ்வாறே செந்நிற முடியைக் கருநிறமாக்கி அரக்கத் தோற்றத்தை மாற்றிக் கொண்டனர் என்கிறார்*

*தோல்வியால் வீரத்துக்கு இழுக்கு தேடிக்கொண்டதோடு உயிர்மீது ஆசை வைத்து, எப்படியாவது தப்பவேண்டுமே என்று பல்வேறு பொய்க் கோலமும் பொய்ம் மொழிகளும் கொண்டு கோழைகளாயினர் என்பதாம். மகளிர் முடியைக் கூந்தல் என்றும் ஆடவர் முடியைக் குஞ்சி என்றும் சொல்லுதல் மரபு.* ***(41)***

*அரக்கிமாரின் அவலநிலை*

**கலிவிருத்தம்**

***5709. குண்டலக்குழை முகக் குங்குமக் கொங்கையார்,***
***வண்டு அலைத்து எழுகுழல் கற்றை கால் வருடவே,***
***விண்டு, அலத்தக விரைக் குமுத வாய் விரிதலால்,***
***அண்டம் உற்றுளது,அவ் ஊர் அழுத பேர்***
***அமலையே !***

***குண்டலக் குழைமுகம் -*** *குண்டலம் என்னும் காதணி அணிந்த செவியை உடைய முகத்தையும்;* ***குங்குமக் கொங்கையார் -*** *குங்குமக் குழம்பு பூசப் பெற்ற மார்பகங்களையும் உடைய அரக்கமகளிர்கள்;* ***வண்டு அலைத்து எழுகுழல் கற்றை -*** *வண்டுகளை அலையச் செய்து மேல் எழும்பப் பெற்ற தமது கூந்தல் தொகுதி;* ***கால் வருட -*** *(அவிழ்ந்து) கால்களிலே விழுந்து புரண்டு கொண்டிருக்க;* ***அலத்தக விரைக் குமுத வாய் விண்டு விரிதலால் -*** *செம்பஞ்சு ஊட்டப் பெற்றதும், வாசனை உடையதும், குமுதமலர் போன்றதுமான வாய்கள் திறந்து விரிவடைதலால்;* ***அவ் ஊர் அழுத பேர் அமலை -*** *அந்த இலங்கை நகரத்தார் அழுத பெரும் ஓசை;* ***அண்டம் உற்றுளது -*** *மேலுலகம் வரை எட்டிற்று. அரக்கிமார்கள்தமது கூந்தல் காலில் விழும்படி, விரித்துக் கொண்டு வாய்திறந்து பேரொலி எழுப்பி அழுதனர் என்பதாம். அலத்தகம் - செம்பஞ்சு; வாய்க்கும் செம் பஞ்சு பூசப் பெறுவது உண்டு 'அம்மலாடியும் கையும் மணி கிளர் பவழவாயும்.... அலத்தகம் எழுதி விட்டாள்' (சீவக. 2446) குண்டலக் குழை - குண்டலமாகிய குழை என இருபெயரொட்டாயிற்று.* ***(42)***

***5710. கதிர்எழுந்தனைய செந் திரு முகக் கணவன்மார்***
***எதிர் எழுந்து,அடி விழுந்து, அழுது சோர் இள***
***நலார்***
***அதி நலம் கோதைசேர் ஓதியோடு, அன்று, அவ்***
***ஊர்***
***உதிரமும்தெரிகிலாது, இடை பரந்து ஒழுகியே !***

***கதிர் எழுந்துஅனைய செம்திருமுகக் கணவன்மார் -*** *சூரியன் உதித்தது போன்ற சிவந்த அழகிய முகங்களை உடைய (இறந்த) தமது கணவன்மார்;* ***எதிர் எழுந்து அடி விழுந்து -*** *முன்னே எழுந்து போய் கால்களில் விழுந்து;* ***அழுது சோர் இள நலார் -*** *அழுது சோர்கின்ற இளம் பெண்களுடைய;* ***அதிநலம் கோதை சேர் ஒதியோடு -*** *மிக்க அழகுள்ள மாலையை அணிந்த கூந்தலுடனே;* ***அன்று அவ்ஊர் உதிரமும் -*** *அப்பொழுது அந்த ஊரில், பெருகுகின்ற இரத்தமும்;* ***பரந்து ஒழுகி -*** *பரவிப் பெருகி;* ***இடை தெரிகிலாது -*** *வேற்றுமை அறிய முடியாதபடி ஆயிற்று.*

*இளநலார் ஓதியும்(கூந்தலும்) இரத்தமும் செந்நிறமாக இருத்தலால் வேற்றுமை தெரியாததாயிற்று. இடை - வேற்றுமை. கோதை - மாலை. ஓதி - மகளிர் முடி.*
***(43)***

***5711. தா இல்வெஞ் செரு நிலத்திடை, உலந்தவர்தம்மேல்,***
***ஓவியம் புரைநலார் விழுதொறும், சிலர் உயிர்த்து,***
***ஏவு கண்களும்இமைத்திலர்களாம்; இது எலாம்***
***ஆவி ஒன்று, உடல்இரண்டு, ஆயதாலேகொலாம் ?***

***தா இல் வெம்செரு நிலத்திடை -*** *குற்றம் அற்ற கொடிய போர்க்களத்திலே;* ***உலந்தவர் தம் மேல் -*** *இறந்து கிடந்த அரக்க வீரர் மீது;* ***ஓவியம் புரை நலார் சிலர் விழுதொறும் -*** *சித்திரப்பது மை போன்ற அரக்கமகளிர் சிலர் விழும் போதெல்லாம்;* ***உயிர்த்து -*** *பெரு மூச்சுவிட்டு;* ***ஏவுகண்களும் இமைத்திலர்கள் ஆம் -*** *அம்பு போன்ற தம் கண்களும் இமையாதவர்களாய் மூடியிருந்தவர் களாம்;* ***இது எலாம்-*** *இச்செயல்கள் எல்லாம்;* ***ஆவி ஒன்று உடல் இரண்டு ஆயதாலே கொலாம் -*** *அக் கணவன்மாருக்கும் அம்மகளிர்க்கும் உயிர் ஒன்றும் உடல் இரண்டுமாய் ஆனதாலே போலும்.*

*வீரர்களுக்கும்அவர் மனைவியர்க்கும் உயிர் ஒன்றும் உடல் இரண்டுமாதலின் அவர்கள் மேல் விழுந்த மகளிர் உயிர் நீத்தனர் என்பதாம். இந்த நிலையை மூதானந்தம் எனப்புறப்பொருள் இலக்கணம் (பு.வெ. 262) குறிப்பிடும்; கணவன் மாரைப் பிரிதல் ஆற்றாத மகளிர் உடனுயிர் நீத்த செயல் அரக்கியர் பாலும் இருந்தது என்பதால் இலங்கையிலும் சீர்மை இருந்ததை உணரலாம். இராவணன் இறந்த போது உடனுயிர் நீத்த மண்டோதரி செயலும் இங்கு நினைவு கூறத்தக்கது. சிலப்பதிகாரப் பாண்டிமாதேவி, கந்த புராணத்துப் பதுமகோமளை ஆகியோரும் கணவன் மாண்டபோது உடனுயிர் நீத்தவர்கள் என்பதும் நினைவு கூறத்தக்கது.*
***(44)***

***5712. ஓடினார்,உயிர்கள் நாடு உடல்கள்போல்; உறுதியால்***
***வீடினார்;வீடினார் மிடை உடல் குவைகள்வாய்,***
***நாடினார், மடநலார்; நவை இலா நண்பரைக்***
***கூடினார்; ஊடினார்உம்பர் வாழ் கொம்பு அனார்.***

***மட நலார் -*** *பேதைமைத்தன்மை உடைய அரக்கமகளிர்;* ***உயிர்கள் நாடு உடல்கள் போல ஓடினார் -*** *தமது உயிர்களைத் தேடிச் செல்லும் உடல்கள் போல (தமது கணவரைத் தேடிக்கொண்டு) ஓடினார்கள்;* ***உறுதியால் வீடினார் -*** *அவ்வாறு ஓடியவர்கள் தம் கற்பின் திண்மையால் உயிரை விட்டு மாண்டனர்;* ***வீடினார் மிடை உடல் குவைகள் வாய் -*** *இறந்து கிடந்த அரக்க வீரரின் பிணக் குவியல்களிடையே;* ***நாடினார் -*** *தம் கணவன்மார் உடலைத் தேடினர்;* ***நவை இலா நண்பரைக் கூடினார் -*** *குற்றம் அற்றதம் கணவன்மாரைச் சேரப் பெற்றார்கள்;* ***உம்பர் வாழ் கொம்பு அனார் ஊடினார் -*** *(வீர சுவர்க்கம் சேர்ந்த அக்கணவன்மார்களைத் தழுவிய) தேவலோகத்து வாழ்கின்ற பூங்கொடி போன்ற அமர மகளிர் பிணங்கினார்கள்.*

*நண்பர் என்றசொல் இங்கே கணவரைக் குறித்தது. மடந்தையோடு எம்மிடை நட்பு என்ற குறளை நினைக. 'தரைமகள்தன் கொழுநன்தன் உடலந் தன்னைத் தாங்காமல்*

*தன்னுடலால் தாங்கி விண்ணாட்டு அரமகளிர் அவ்வுயிரைப் புணரா முன்னம் ஆவிஒக்கவிடுவாளைக் காண்மின்காண்மின் (கலி - பரணி - 483) என்ற பாடல் ஒப்பிட்டுச் சிந்திக்கத்தக்கது.* ***(45)***

***5713. தீட்டுவாள் அனைய கண் தெரிவை, ஓர் திரு***
***அனாள்,***
***ஆட்டில்நின்றுஅயர்வது ஓர் அறு தலைக்***
***குறையினைக்***
***கூட்டி, 'நின்ஆர் உயிர்த் துணைவன், எம் கோனை,***
***நீ,***
***காட்டுவாயாதி'என்று, அழுது கை கூப்பினாள்.***

**தீட்டுவாள் அனையகண் -** *தீட்டப் பெற்ற வாள் போன்ற கண்களை உடைய;* **திரு அனாள் ஓர் தெரிவை -** *இலக்குமி போன்ற ஒரு அரக்கி;* **ஆட்டில் நின்று அயர்வது ஓர் அறு தலைக் குறையினைக் கூட்டி -** *கூத்தாடும் தொழிலில் இருந்து சோர்வதான தலையற்றதோர் உடலை (கவந்தத்தை) தலையோடு சேர்த்து,; (அதனை நோக்கி)* **'நின் ஆர் உயிர்த் துணைவன் -** *'உனது ஒப்பற்ற உயிர்த் துணைவனாகிய;* **எம் கோவினை -** *எமது தலைவனை;* **நீ காட்டுவாய் ஆதி' என்று -** *நீ எனக்குக் காட்டுவாயாக' என்று சொல்லி;* **அழுது கை கூப்பினாள் -** *அழுதவளாய்த்தனது கைகளைக்குவித்து வணங்கினாள்.*

*வீரம் மிடைந்தஅவல ஓவியமாகக் கணவனைத் தேடும் அரக்கி சித்தரிக்கப்பட்டுள்ளது அருமை.* ***(46)***

***5714. ஏந்தினாள்தலையை, ஓர் எழுத அருங் கொம்பு***
***அனாள்;***
***காந்தன் நின்றுஆடுவான் உயர் கவந்தத்தினை,***
***'வேந்த ! நீஅலசினாய்; விடுதியால் நடம்' எனா,***
***பூந் தளிர்க்கைகளான், மெய் உறப் புல்லினாள்.***

**ஓர் எழுத அரும்கொம்பு அனாள் -** *சித்திரத்தில் எழுதமுடியாத மிக்க அழகுள்ள பூங்கொம்பு போன்ற ஒரு அரக்கர்மகள்;* **தலையை ஏந்தினாள் -** *(இறந்த கணவனது) தலையைக் கையில் ஏந்திக் கொண்டு;* **நின்று ஆடுவான் காந்தன் உயர் கவந்தத் தினை -** *நின்று கூத்தாடுகின்ற தன் கணவனது உயர்ந்த உடல் குறையினைப் பார்த்து; '* **வேந்த ! நீ அலசினாய் -** *கணவனே ! நீ வெகு நேரம் ஆடியதால் இளைத்து விட்டாய்;* **நடம்விடுதியால் -** *கூத்தாடுதலைவிடுவாய்;* **எனா -** *என்று சொல்லி;* **பூந்தளிர் கைகளால் -** *மலரையும் தளிரையும் போன்ற தனது கைகளால்;* **மெய் உறப் புல்லினாள் -** *(அரக்கனுடைய) உடலை இறுகத் தழுவிக் கொண்டாள்.*

*முன் செய்யுளின்கற்பனை மேலும் விரிந்து பேரவல வீரத்தைப் புலப்படுத்திற்று.* ***(47)***

*இராவணனிடம்மண்டோதரி முதலியோர் அழுது புலம்புதல்*
**கலிவிருத்தம்** ***(வேறுவகை)***

***5715. கயல்மகிழ் கண் இணை கலுழி கான்று உக,***
***புயல் மகிழ் புரிகுழல் பொடி அளாவுற,***
***அயன் மகன் மகன்மகன் அடியின் வீழ்ந்தனள்,***
***மயன் மகள்;வயிறு அலைத்து அலறி மாழ்கினாள்.***

***மயன் மகள் -*** *அசுரசிற்பியாகிய மயனது மகளான மண்டோதரி;* ***கயல் மகிழ் கண் இணை -*** *கயல் மீன் போன்று மதர்த்திருக்கும் கண்கள் இரண்டும்;* ***கலுழி கான்று உக -*** *நீர் பெருகச் சிந்தவும்;* ***புயல் மகிழ்புரி குழல் பொடி அளாவுற -*** *காள மேகத்தை ஒத்த முறுக்கிவிட்ட கூந்தல் மண்ணின் புழுதியிலே புரளவும்;* ***அயன் மகன் மகன் மகன் -*** *பிரமதேவன் குமாரனான புலத்திய முனிவரின் மகனாகிய விச்ரவஸ் என்பவனது மகனாகிய இராவணனது;* ***அடியில் வீழ்ந்தனள் -*** *பாதங்களில் விழுந்து;* ***வயிறு அலைத்து -*** *வயிற்றில் அடித்துக் கொண்டு;* ***மாழ்கினாள் -*** *கதறிப் புலம்பினாள்.*

*மண்டோதரி, தன்குமாரன் அட்சன் (அக்ககுமாரன்) இறக்கக்காரணமாயிருந்த இராவணனது கால்களில் விழுந்து அழுது புலம்பினாள். மகளிர், பெரும் துக்கம் வந்த போது, வயிற்றில் அடித்துக் கொள்ளும் இயல்பினராவர்.* ***(48)***

***5716. தா அருந்திரு நகர்த் தையலார் முதல்***
***ஏவரும், இடைவிழுந்து இரங்கி ஏங்கினார்;***
***காவலன்கால்மிசை விழுந்து, காவல் மாத்***
***தேவரும் அழுதனர்,களிக்கும் சிந்தையார்.***

***தா அரும் திருநகர்த் தையலார் முதல் ஏவரும் -*** *குற்றமற்ற அழகியஇலங்கை நகரத்தில் உள்ள மகளிர் முதலிய எல்லோரும்;* ***இடைவிழுந்துஇரங்கி ஏங்கினார் -*** *இராவணனது பாதத்தில் விழுந்து, இரக்கம் கொண்டுஅழுதார்கள்;* ***காவல் மாத் தேவரும் -*** *இலங்கையைப் பாதுகாக்கின்றஉயர்ந்த காவல் தேவர்களும்;* ***களிக்கும் சிந்தையார் -*** *(இராவணனுக்குஉண்டான கேட்டிற்கு) உள்ளூற மகிழ்கின்றவர்களாய்;* ***காவலன் கால் மிசைவிழுந்து அழுதனர் -*** *இராவணன் கால்களின் மேல் விழுந்து (வெளித்தோற்றத்தில்) அழுவாராயினர்.* ***(49)***

## *பாசப் படலம்*

*இந்திரசித்து,அனுமனைப் பாசத்தால் கட்டிய செய்தியைக் கூறுவது இந்தப் படலம். பாசம் என்பது பெரும் பாம்பு வடிவு கொண்டு அனுமனைக் கட்டுகின்ற பிரமாத்திரத்தைக் குறிக்கும்.*

*இந்திரசித்துபோருக்கு எழுதல்*

***5717. அவ் வழி,அவ் உரை கேட்ட ஆண்தகை,***
***வெவ் விழி எரிஉக, வெகுளி வீங்கினான்-***
***எவ் வழி உலகமும்குலைய, இந்திரத்***
***தெவ் அழிதரஉயர் விசயச் சீர்த்தியான்.***

***அவ்வழி** - அப்போது; **அவ்உரை கேட்ட ஆண்தகை** - அக்ககுமாரன் இறந்தான் என்ற வார்த்தையைக் கேட்ட ஆண்மைக்குணம் உடையவனும்; **இந்திரன் தெவ் அழி தர உயர் விசயம் சீர்த்தியான்** - இந்திரனாகிய பகைவன் வலி அழியுமாறு உயர்ந்த வெற்றியைக் கொண்ட பெரும் புகழ் உடையவனுமாகிய மேகநாதன்; **வெவ்விழி எரிஉக** - (தனது) கொடிய கண்களினின்று நெருப்புச் சிந்தவும்; **எவ்வழி உலகமும் குலைய** - எந்த உலகமும் நடுங்கி வருந்தவும்; **வெகுளி வீங்கினான்** - கோபம் மிக்கவனானான்.*

*மேகநாதன்இந்திரசித்து எனப்பெயர் பெற்ற வரலாறு 'இந்திரத்தெவ் அழிதர உயர் விசயச் சீர்த்தியான்' என்ற தொடரால் தெரிவிக்கப்பட்டுள்ளது. தெவ் - பகை; வீங்குதல் - மிகுதல் (வீங்கினான்).* ***(1)***

***5718. அரம் சுடர்வேல் தனது அனுசன் இற்ற சொல்***
***உரம் சுட, எரிஉயிர்த்து, ஒருவன் ஓங்கினான்-***
***புரம் சுட வரிசிலைப் பொருப்பு வாங்கிய***
***பரஞ்சுடர்ஒருவனைப் பொருவும் பான்மையான்.***

***ஒருவன்** - ஒப்பற்றவனானஇந்திரசித்து; **அரம் சுடர் வேல்** - அரத்தினால் அராவி ஒளி வீசப்பெற்ற வேலாயுதத்தை உடைய; **தனது அனுசன்** - தனது தம்பியாகிய அக்கன்; **இற்றசொல் உரம்சுட** - இறந்தான் என்ற வார்த்தை தனது மனத்தை எரித்தலால்; **எரி உயிர் த்து-** நெருப்புச் சுடர் போலப் பெருமூச்சு விட்டுக் கொண்டு; **புரம் சுட வரிசிலைப் பொருப்பு வாங்கிய** - முப்புரத்தை எரிப்பதற்கு கட்டமைந்த வில்லாகமேரு மலையை வளைத்த; **பரம் சுடர் ஒருவனை** - மேலான சோதி வடிவினனான சிவபிரானை; **பொருவும் பான்மையான்** - ஒக்கின்ற தன்மை உடையவனாய்; **ஓங்கினான்** - போருக்கு எழுந்தான்.*

*அனுசன் -தம்பி.* ***(2)***

***5719. ஏறினன்,விசும்பினுக்கு எல்லை காட்டுவ***
***ஆறு-இருநூறு பேய்பூண்ட ஆழித்தேர்;***

***கூறின கூறினசொற்கள் கோத்தலால்,***
***பீறின நெடுந்திசை; பிளந்தது அண்டமே.***

***விசும்பினுக்குஎல்லை காட்டுவ -*** *வானத்தினது மேல்எல்லையை (இவ்வளவு என்று தனது உயர்ச்சியினால்) தெரிவிப்பனவான;* ***ஆறு - இருநூறு பேய் பூண்ட -*** *ஆயிரத்து இருநூறு பேய்கள் பூட்டப் பெற்றுள்ளதான;* ***ஆழித்தேர் ஏறினன் -*** *வலிய சக்கரங்களை உடைய தேரில் (மேகநாதன்) ஏறினான்;* ***கூறின கூறின சொற்கள் -*** *(அங்ஙனம் ஏறிய அவன்) மிகுதியாகச் சொன்ன வீர வார்த்தைகள்;* ***கோத்தலால் நெடுந்திசை பீறின -*** *ஒன்றோடு ஒன்று தொடுத்து வந்தமையால், (அவ்வதிர்ச்சியால்) நெடிய திசைகள் எல்லாம் பிளவுபட்டன;* ***அண்டம் பிளந்தது -*** *அண்ட கோளமும் பிளவுப்பட்டது.*

*இந்திரசித்து,போருக்குச் சென்ற வேகமும் வீரமும் கூறப்பட்டது. விசும்பினுக்கு எல்லைகாட்டுவ - ஆகாயத்தின் மேல் எல்லை வரை உயர்ந்து விளங்கியது என்பது கருத்து.* *(3)*

***அறுசீர் ஆசிரியவிருத்தம்***

***5720. ஆர்த்தன,கழலும் தாரும் பேரியும், அசனி அஞ்ச;***
***வேர்த்து, உயிர்குலைய, மேனி வெதும்பினன்,***
***அமரர் வேந்தன்;***
***'சீர்த்ததுபோரும்' என்னா, தேவர்க்கும் தேவர் ஆய***
***மூர்த்திகள்தாமும், தம்தம் யோகத்தின் முயற்சி***
***விட்டார்.*** ***கழலும் தாரும்பேரியும் -*** *இந்திரசித்துஅணிந்திருந்த வீரக் கழல்களும் மாலைகளும் (அவனுடன் சென்ற) முரசங்களும்;* ***அசனி அஞ்ச ஆர்த்தன -*** *இடியும் அஞ்சிப் பின்னிடும்படி மிகுதியாக ஒலித்தன. (அம்முழக்கம் கேட்டு);* ***அமரர் வேந்தன் உயிர்குலைய மேனி வேர்த்து வெதும்பினன் -*** *தேவர் தலைவனான இந்திரன் உயிர் நடுங்க உடல் வியர்த்து அச்சத்தால் வெதும்பி வருந்தினான்;* ***தேவர்க்கும் தேவர் ஆய மூர்த்திகள் தாமும் -*** *எல்லாத் தேவர்க்கும் தலைமைத் தேவர்களான மும்மூர்த்திகளும்;* ***போரும் சீர்த்தது என்னா -*** *போர் உச்சநிலை அடைந் ததுஎன்று;* ***தம்தம் யோகத்தின் முயற்சி விட்டார் -*** *அவரவர் செய்தொழிலின்(படைத்தல், காத்தல், அழித்தல்) முயற்சியைக் கைவிட்டார்கள்.* *மேகநாதன்போருக்குப் புறப்பட்டதைக் கண்ட, இந்திரன், மும்மூர்த்திகள் முதலாயோர் நிலை கூறப்பட்டது.*
*(4)*

***5721. தம்பியைஉன்னும்தோறும், தாரை நீர் ததும்பும்***
***கண்ணான்,***
***வம்பு இயல்சிலையை நோக்கி, வாய் மடித்து உருத்து***
***நக்கான்;***
***'கொம்பு இயல்மாய வாழ்க்கைக் குரங்கினால்,***
***குரங்கா ஆற்றல்***
***எம்பியோதேய்த்தான் ? எந்தை புகழ் அன்றோ***
***தேய்ந்தது ?' என்றான்.***

***தம்பியைஉன்னும்தோறும் தாரை நீர்ததும்பும் கண்ணான் -*** *தனதுதம்பி அக்கன் இறந்ததை நினைக்கும் பொழுதெல்லாம், தாரையாக நீர் ஒழுகும்கண்களை உடைய மேகநாதன்;* **வம்பு இயல் சிலையை நோக்கி -** *கட்டமைந்த தனது வில்லைப் பார்த்து;* **வாய் மடித்து உருத்து நக்கான் -** *தன் வாயிதழை மடித்துக் கொண்டு, கோபத்துடன் சிரித்தான்;* **கொம்பு இயல் மாய வாழ்க்கைக் குரங்கினால் -** *மரக் கொம்புகளிலே உலாவுகின்ற நிலையில்லாத வாழ்வை உடைய இந்த ஒரு குரங்கினால்;* **குரங்கா ஆற்றல் எம்பியோ தேய்ந்தான் -** *வளையாத வலிமை வாய்ந்த எனது தம்பியோ அழிந்தான்?(இல்லை);* **எந்தை புகழ் அன்றோ தேய்ந்தது -** *எனது தந்தையாகிய இராவணனுடைய புகழ் அல்லவா மெலிவுற்று அழிந்தது என்று கூறி வருந்தினான்.*

*போருக்குச்செல்லும் மேநாதனின் எண்ணத்தைப் புலப்படுத்தியது. குரங்கா - வளையாது.* ***(5)*** *இந்திரசித்தைச் சூழ்ந்த படைகளின் பெருக்கம்*

***5722. வேல்திரண்டனவும், வில்லு மிடைந்தவும், வெற்பு***
***என்றாலும்***
***கூறு இரண்டுஆக்கும் வாள் கைக் குழுவையும்***
***குணிக்கல் ஆற்றேம்;***
***சேறு இரண்டு அருகுசெய்யும் செறி மதச் சிறு***
***கண் யானை,***
***ஆறு-இரண்டுஅஞ்சுநூற்றின் இரட்டி; தேர்த்***
***தொகையும் அஃதே.***

**வெற்பு என்றாலும்-** *மலைஎதிர்த்துள்ளது என்றாலும்;* **கூறு இரண்டு ஆக்கும் -** *அதனை இரு கூறாகப் பளிக்கக்கூடிய;* **வேல் திரண்டனவும் -** *வேல் வீரர்கள் படைதிரண்டு வந்தவையும்;* **வில்லுமிடைந்தவும் -** *வில்லாளிகளாக நெருங்கி வந்தவையும்;* **வாள்கை குழுவையும் -** *வாள் ஏந்திய கையை உடைய படைகளின் கூட்டத்தையும்;* **குணிக்கல் ஆற்றேம் -** *இவ்வளவு என்று கண்க்கிட்டுக் கூறும் வலிமை உடையோம் அல்லேம்;* **இரண்டு அருகு சேறு செய்யும் செறிமதம் -** *இருபுறத்திலும் நிலத்தைச் சேறாக்கும் மதநீர்ப் பெருக்கையும்;* **சிறுகண் யானை -** *சிறிய கண்களையும் உடைய யானைகளின் தொகை;* **ஆறு இரண்டு அஞ்சு நூற்றின் இரட்டி -** *ஆறாயிரத்தின் இருமடங்கான பன்னீராயிரம்;* **தேர்த் தொகையும் அஃதே -** *தேர்ப் படைகளின் தொகையும் அவ்வளவே (பன்னீராயிரம்)*

*கவிக்கூற்றுவேல், வில், வாள் ஏந்திய வீரர்கள் கணக்கிட முடியாதவர்கள். யானை, தேர்ப்படைகள் ஒவ்வொன்றும் பன்னீராயிரம் ஆகும்.*
***(6)***

*இராவணன் மாளிகைசென்று இந்திரசித்து பேசுதல்*

***5723. ஆய மாத்தானைதான் வந்து அண்மியது; அண்ம,***
***ஆண்மைத்***
***தீய வாள்நிருதர் வேந்தர் சேர்ந்தவர் சேர, தேரின்***
***'ஏ' எனும்அளவில் வந்தான்; இராவணன் இருந்த,***
***யாணர்***

***வாயில் தோய்கோயில் புக்கான்;-அருவி சோர்***
***வயிரக் கண்ணான்.*** ***ஆய -*** *அவ்வாறே(பன்னீராயிரம் என்னும் தொகையினதாய்);* ***மாதானைதான் வந்து அண்மியது அண்ம -*** *குதிரைப்படை தானும் வந்து அங்குக் கூடியது. அவ்வாறு அப்படைகள் பலவும் வந்து கூடவும்;* ***ஆண்மை தீயவாள் நிருதர் வேந்தர் -*** *வீரம் நிறைந்த கொடிய வாள் ஏந்திய அரக்கர் அரசர்கள்;* ***சேர்ந்தவர் சேர -*** *திரண்டு தன் அருகில் வந்து சேரவும்;* ***அருவி சோர் வயிரக்கண்ணான் -*** *அருவிபோல நீர் ஒழுகுகின்ற பகைமை கொண்ட கண்களை உடைய இந்திரசித்து;* ***'ஏ' எனும் அளவில் -*** *விரைவிலே;* ***தேரில் வந்தான் -*** *தேரில் ஏறி வந்து;* ***இராவணன் இருந்த -*** *இராவணன் வசித்திருந்த;* ***யாணர் வாயில் தோய் கோயில் புக்கான் -*** *அழகிய வாயில் பொருந்திய அரண்மனையினுள் புகுந்தான்.*

*முன் பாடலில்வேற்படை முதலிய ஐந்தினைக் கூறி, இதனுள் குதிரைப்படை தனித்துக் கூறப்பட்டது. அனைத்துப் படைகளும் தன்னை வந்து நெருங்கியதும், இந்திரசித்து, இராவணனின் அரண்மனைக்குச் சென்றான். யாணர் - அழகு; தோய் - பொருந்திய.* *(7)*

***5724. தாள் இணைவீழ்ந்தான், தம்பிக்கு இரங்குவான்;***
***தறுகணானும்***
***தோள் இணைபற்றி ஏந்தித் தழுவினன், அழுது***
***சோர்ந்தான்;***
***வாள் இணை நெடுங்கண் மாதர் வயிறு அலைத்து***
***அலறி மாழ்க,***
***மீளிபோல்மொய்ம்பினானும் விலக்கினன்;***
***விளம்பலுற்றான்;***

***தாள் இணைவீழ்ந்தான் -*** *(அரண்மனை புகுந்தஇந்திரசித்து) இராவணனது இரு பாதங்களில் விழுந்து;* ***தம்பிக்கு இரங்குவான் -*** *தம்பி அக்ககுமாரன் இறந்தமைக்குத் துயர் கொண்டு புலம்புவானான்;* ***தறுகணானும் -*** *அஞ்சாமை உடைய இராவணனும்;* ***தோள் இணை பற்றி ஏந்தி -*** *இந்திரசித்துவின் இரண்டு தோள்களையும் பிடித்து எடுத்து;* ***தழுவினன் அழுது சோர்ந்தான் -*** *அவனைக் கட்டி அணைத்துக் கொண்டு தானும் அழுது வருந்திச் சோர்வுற்றான்;* ***இணைவாள் நெடுங்கண் மாதர் -*** *இருவாள்கள் போன்ற நெடுங்கண்களை உடைய அரக்கர் குல மகளிர்கள்;* ***வயிறு அலைத்து அலறி மாழ்க -*** *வயிற்றில் அடித்துக்கொண்டு கதறிமயங்கிச் சோர;* ***மீளிபோல் மொய்ம்பினானும் -*** *சிங்கம் போன்ற வலிமை உடைய இந்திரசித்தும்;* ***விலக்கினன் விளம்பலுற்றான் -*** *அவர்களை விலக்கி, தந்தையை நோக்கிப் பேசத் தொடங்கினான்.* *(8)*

***5725. 'ஒன்று நீஉறுதி ஓராய்; உற்றிருந்து உளையகிற்றி;***
***வன் திறல்குரங்கின் ஆற்றல் மரபுளி உணர்ந்தும்,***
***அன்னோ !***
***"சென்று நீர்பொருதிர்" என்று, திறத் திறம்***
***செலுத்தி, தேயக்***
***கொன்றனை நீயேஅன்றோ, அரக்கர்தம் குழுவை***
***எல்லாம் ?***

***நீ உறுதி ஒன்றும்ஓராய்*** - *நீ, நன்மை தரத்தக்கதான ஒன்றையும் ஆலோசிக்கின்றாயல்லை;* ***உற்றிருந்து உளையகிற்றி*** - *நடந்ததை அநுபவித்து வாளா இருந்து வருந்துகின்றாய்;* ***வன்திறல் குரங்கின் ஆற்றல் மரபுளி உணர்ந்தும்*** - *கொடிய வலிமை உடைய குரங்கினது வலியின் தன்மையை முறைப்படி உணர்ந்திருந்தும்;* ***நீர் சென்று பொருதிர் என்று*** - *நீங்கள் போய்அக்குரங்குடன் போர் செய்யுங்கள் என்று;* ***திறம் திறம் செலுத்தி*** - *வரிசைவரிசையாக அனுப்பி;* ***அரக்கர்தம் குழுவை எல்லாம்*** - *அரக்கர் கூட்டத்தைஎல்லாம்;* ***நீயே அன்றோ தேயக் கொன்றனை*** - *நீ அல்லவா குறைந்தொழியும்படி கொன்று விட்டாய்.*

*'அன்னோ' என்பதுகழிவிரக்கத்தைக் காட்டுவது. மரபுளி உணர்தல். அனுமன் கடல் கடந்து வந்து அசோகவனத்தை அழித்தது முதலாக நடந்த செயல்களை அறிதல்.* ***(9)***

***5726. 'கிங்கரர், சம்புமாலி, கேடு இலா ஐவர் என்று இப்***
***பைங் கழல்அரக்கரோடும் உடன் சென்ற பகுதிச்***
***சேனை,***
***இங்கு ஒருபேரும்மீண்டார் இல்லையேல், குரங்கு***
***அது, எந்தாய் !***
***சங்கரன், அயன்,மால் என்பார்தாம் எனும் தகையது***
***ஆமே !***

***எந்தாய்*** - *எனதுதந்தையே !;* ***கிங்கரர், சம்புமாலி*** - *கிங்கரர் என் னும்போர் வீரர்களும், சம்புமாலி என்பவனும்;* ***கேடு இலா ஐவர்*** - *அழிவில்லாத பஞ்சசேனாபதிகளும்;* ***என்று இப்பைங்கழல் அரக்கரோடும்*** - *என்று சொல்லப்படுகின்ற இந்தப் பசுமையான வீரக்கழல் அணிந்த அரக்க வீரர்களுடன்;* ***உடன்சென்ற பகுதிச்சேனை*** - *கூடிச் சென்ற சேனையின் பாகங்களில்;* ***இங்கு ஒரு பேரும் மீண்டார் இல்லையேல்*** - *ஒருவரேனும் இங்குத் திரும்பி வந்தார் இல்லை என்றால்;* ***குரங்கு அது ஆமே !*** - *அது குரங்கு என்று சொல்லத்தக்கதா ?;* ***சங்கரன், அயன், மால் என்பார் தாம்*** - *சிவபிரான், பிரமன், திருமால் என்று சொல்லப்படுகின்ற மும்மூர்த்திகள் தாம்;* ***எனும் தகையது*** - *என்று கருதத்தகுவதாகும்.*

*போருக்குச்சென்றவர் ஒருவரும் மீளவில்லை என்றால் எதிர்த்துப் போர் செய்வது குரங்கா ? அன்று; மும்மூர்த்திகளின் சொரூபம் என்று கருத வேண்டும் என்பது கருத்து.* ***(10)***

***5727. 'திக்கயவலியும், மேல்நாள் திரிபுரம் தீயச் செற்ற***
***முக்கணன்கைலையோடும் உலகு ஒரு மூன்றும்***
***வென்றாய்;***
***"அக்கனைக்கொன்று நின்ற குரங்கினை, ஆற்றல்***
***காண்டி;***
***புக்கு இனிவென்றும்" என்றால், புலம்பு அன்றி,***
***புலமைத்து ஆமோ ?***

***திக்கய வலியும்-*** *எட்டுத்திக்கு யானைகளின் வலிமையையும்;* ***மேல்நாள் திரிபுரம் தீயச் செற்ற முக்கணான் கயிலையோடும் -*** *முன்னொரு காலத்தில் முப்புரத்தையும் எரியும்படி அழித்திட்ட சிவபிரானது கைலை மலையையும்;* ***உலகு ஒரு மூன்றும் வென்றாய் -*** *மூன்று உலகங்களையும் வென்றவனாகிய நீ (இப்போது);* ***அக்கனைக் கொன்று நின்ற குரங்கினை -*** *அக்ககுமாரனைக் கொன்று (தான் உயிரோடு) நின்ற இந்தக் குரங்கை;* ***ஆற்றல் காண்டி -*** *அதன் ஆற்றல் காண்பிக்குமாறு பார்த்துக் கொண்டிருக்கிறாய் (விளையாடவிட்டு வேடிக்கை பார்க்கிறாய்);* ***இனிப்புக்கு வென்றும் என்றால் -*** *இவ்வளவு அழிவுக்குப் பின் நாம் போர்க்களம் சென்று அதனை வெல்வோம் என்று சொன்னால்;* ***புலம்பு அன்றி -*** *அது வீண்பிதற்றலே அல்லாமல்;* ***புலமைத்து ஆமோ ? -*** *அறிவுடைய செயலாகுமோ (ஆகாது என்றபடி). ஆடவிட்டு நாடகம்பார்ப்பது போல செய்து விட்டாய். இனி அக்குரங்கை நாம் வென்றாலும் நமக்குப் புகழ் இல்லை என்பது கருத்து.* ***(11)***

*இராவணனிடம்விடை பெற்று, இந்திரசித்து போர்க்குச் செல்லுதல்*

***5728. ஆயினும்,ஐய ! நொய்தின், ஆண் தொழில் குரங்கை, யானே,***
***“ஏ” எனும்அளவில் பற்றித் தருகுவென்; இடர் என்று ஒன்றும்***
***நீ இனிஉழக்கற்பாலை அல்லை; நீடு இருத்தி’ என்னா,***
***போயினன்-அமரர்கோவைப் புகழொடு கொண்டு போந்தான்.***

***ஆயினும் -*** *ஆனாலும்;* ***ஐய ! -*** *ஐயனே!;* ***ஆண் தொழில் குரங்கை -*** *வீரச் செயலில் சிறந்த இந்தக் குரங்கை;* ***‘ஏ’ எனும் அளவில் -*** *மிகச் சுருங்கிய காலத்தில்;* ***யானே நொய்தின் பற்றி தருகுவென் -*** *நானே எளிதில்பிடித்துக் கொடுப்பேன்;* ***இனி, நீ இடர் என்று ஒன்றும் உழக்கற்பாலைஅல்லை -*** *இனிமேல் நீ துன்பம் ஒரு சிறிதையும் கொண்டு வருந்தவேண்டியதில்லை;* ***நீடு இருத்தி என்னா -*** *நீண்டகாலம் வாழ்ந்திருப்பாய்என்று சொல்லிவிட்டு;* ***அமரர் கோவைப் புகழொடு கொண்டு போந்தான் -*** *தேவர்க்கரசனான இந்திரனை, அவன் அடைந்திருந்த புகழ்களோடுசிறைப்பற்றிக் கொண்டு போனவனான மேகநாதன்;* ***போயினன் -*** *அனுமனைநோக்கிப் போர்க்களம் சென்றான்.*

*மிக்க அன்பினால், மைந்தன் (மேகநாதன்) தன் தந்தைக்கு வாழ்த்துக் கூறிவிட்டு, போர்க்களம் சென்றான் என்பது கருத்து.* ***(12)***

***5729. பத்தியில்தேர்கள் செல்ல, பவளக் கால் குடைகள் சுற்ற,***
***முத்தினின்சிவிகைதன்னை முகில் எனத் தேர்கள் சுற்ற,***
***மத்த வெங்கரிகள் எல்லாம் மழை என இருண்டு தோன்ற,***

***தத்தியபரிகள்தன்னின் சாமரை பதைப்ப,-***
***வந்தான்.**** ***பத்தியில்தேர்கள் செல்ல -*** *வரிசையாக தேர்கள்செல்லவும்;* ***பவளக்கால் குடைகள் சுற்ற -*** *பவளத்தால் ஆகிய கால்களை உடைய குடைகள்சூழ வரவும்;* ***முத்தினின் சிவிகை தன்னை -*** *முத்தாற் செய்யப் பெற்றபல்லக்குகளை;* ***முகில் எனத் தேர்கள் சுற்ற -*** *மேகம் போலக் கரிய மரத்தால் செய்யப்பெற்ற தேர்கள் சுற்றி வரவும்;* ***மத்த வெங் கரிகள் எல்லாம் -*** *மதம் உடைய கொடிய யானைகள் எல்லாம்;* ***மழை என இருண்டு தோன்ற -*** *மழை மேகம் போலக் கரிதாய்க் காட்சி அளிக்கவும்;* ***தத்திய பரிகள் தன்னின் -*** *தவழ்ந்து துள்ளும் குதிரைகளைப் போல;* ***சாமரை பதைப்ப -*** *வெண் கவரிகள் துடிக்க வந்தான்.*
***(13)***

***5730. சங்குகள்முழங்க, பேரி சகடைகள் இடியின் வீழ,***
***வெங் குரல்திமிலையோடு கடுவையின் மரங்கள்***
***வீங்க,***
***தொங்கலின்குழாமும் தூளி வெள்ளமும் விசும்பைத்***
***தூர்க்க,***
***திங்களின்குடைகள் பூப்ப, திசைக் களிறு இரிய,-***
***வந்தான்.****

***சங்குகள் முழங்க-*** *சங்குகள் ஒலிக்கவும்,* ***பேரி சகடைகள் இடியின் வீழ -*** *பெருமுரசு, டமாரம் ஆகிய வாத்தியங்கள் இடிபோல முழக்கமிடவும்;* ***வெங்குரல் திமிலையோடு கடுவையின் மரங்கள் வீங்க -*** *கொடிய ஒலியை உடைய திமிலை, கடுவை என்னும் வாத்திய ஒலிகளால் மரங்கள் அதிரவும்;* ***தொங்கலின் குழாமும் -*** *மாலைக் கூட்டமும்;* ***தூளி வெள்ளமும் -*** *புழுதித்திரளும்;* ***விசும்பைத் தூர்க்க -*** *ஆகாயத்தை இல்லாதபடி அடைக்கவும்;* ***திங்களின் குடைகள் பூப்ப -*** *சந்திரனைப் போல இடை இடையே குடைகள்பொலிவுறத் தோன்றவும்;* ***திசைக் களிறு இரிய -*** *திக்கு யானைகள் நடுங்கவும்;* ***வந்தான் -*** *வந்தான்.* ***(14)***

***5731. தீயினில்செவ்வே வைத்து, சின்னங்கள் வேறு வேறு***
***வாயினில் ஊதுவீரர் வழியிடம் பெறாது செல்ல,***
***தாயவள் சொல்மாறாது தவம் புரிந்து அறத்தின்***
***நின்ற***
***நாயகன் தூதன்தானும், நோக்கினன்; நகையும்***
***கொண்டான்.****

***தீயினில் -*** *நெருப்பைப்போல;* ***செவ்வே வைத்து -*** *நன்றாகப் பொருத்தி வைத்து;* ***வேறு வேறு சின்னங்கள் -*** *வெவ்வேறான ஊது கொம்புகளை;* ***வாயினில் ஊதுவீரர் -*** *வாயில் வைத்து ஊதுகின்ற வீரர்கள்;* ***வழியிடம் பெறாது செல்ல -*** *செல்லுதற்கு வழி கிடைக்காமல் அரிதின் செல்ல (இக்காட்சியை);* ***தாயவள் சொல் மறாது தவம் புரிந்து அறத்தின் நின்ற நாயகன் தூதன் தானும் -*** *தன் தாயான கைகேயி சொன்ன சொல்லை மறுக்காமல் தவம் செய்து துறவறத்தில் நின்ற இராமபிரானது தூதனாகிய அனுமானும்;* ***நோக்கினன் -*** *கண்ணாலும் கருத்தாலும் பார்த்தான்;* ***நகையும் கொண்டான் -*** *(போர் மிகக் கிடைக்க இருக்கிறது என்பதனால்) சிரிப்பும் கொண்டான்.*

*சின்னம் - ஊதுகொம்புகள். திருச்சின்னம் என்று கூறுவது வழக்கு. இவற்றின் ஒலி கேட்போர் காதில் தீப்போலப் பாய்கிறது எனலும் ஒன்று. "தாழ் இரும் சடைகள் தாங்கித் தாங்க அரும் தவம் மேற்கொண்டு" (கம்ப. 1601) என்பது தாய் கூறிய வார்த்தை ஆதலின் அதனை மேற்கொண்டு தவம் புரிந்து அறத்தின் நின்ற நாயகன் இராமன் ஆனான். போர் பெற்றால் வீரர் மகிழ்வர். இந்திர சித்துவின் போர் ஆரவாரப் புறப்பாடு கண்ட அனுமனுக்கு அது மகிழ்ச்சியை உண்டாக்கி நகையைத் தோற்றுவித்தது. தான் - உரையசை.* ***(15)***

***5732. செம்பொனின் தேரின் பாங்கர்ச் செங்குடைத் தொங்கற் காடும்,***
***உம்பரின்கொம்பர் ஒத்த, ஒரு பிடி நுசுப்பின், செவ் வாய்,***
***வம்பு அவிழ்குழலினார்கள் சாமரை பதைத்து வீச,***
***கொம்பொடும்கோடு தாரை குடர் பறித்து ஊத வந்தான்.****

***செம்பொனின்தேரின் பாங்கர்ச்*** *- செம்பொன்னால் ஆகியதேரின் பக்கத்தில்;* ***செங்குடைத் தொங்கற்காடும்*** *- சிவந்த குடைமாலைகளின் கூட்டமும் (அதனைச் சார்ந்து);* ***உம்பரின் கொம்பர் ஒத்த*** *- தேவர் உலகத்துக் கற்பகக் கொம்பினை ஒத்த;* ***ஒரு பிடி நுசுப்பின்*** *- ஒப்பற்ற கைப்பிடி அளவே உள்ள இடையையும்;* ***செவ்வாய்*** *- சிவந்த வாயையும்;* ***வம்பு அவிழ் குழலினார்கள்*** *- மணம் விரியும் (மலரணிந்த) கூந்தலையும் உடைய மகளிர்;* ***சாமரை பதைத்து வீச*** *- கவரிகளைக் கொண்டு துடிக்கும்படி வீச;* ***கொம்பு, கோடு, தாரை*** *- கொம்பு முதலிய வாத்திய விசேடங்கள்;* ***குடர் பறித்து ஊத*** *- கேட்போர் குடலைப் பறித்தாற் போல் பேரொலியவாய் ஊதப்பெற;* ***வந்தான்*** *- (இந்திரசித்து) வந்தான்.*

*செம்பொன்தேர்,செங்குடை மாலைக்காடு, மகளிர் வீசும் வெண்சாமரை என்று மாறுபட்ட வண்ணக் கலவையின் நடுவே வருவதாகப் புனைந்துரைத்தார். ஊதுவோர் காற்றை வயிற்றிலிருந்து மேல் கொண்டு வந்து ஊதலின் 'குடர் பறித்து' என்பதை அவர்க்கே ஆக்கினும் தவறில்லை. பிடி நுசுப்பின் - கைப்பிடி அளவான இடை இங்கே 'பிடி' என்பது யானை எனக்கூறின் அது நுசுப்பைப் பெரிதாக்கி விடும் ஆதலின் 'கொம்பர் ஒத்த' என்ற முன் உவமைக்கு ஏலாதாம். பிடி யானயாயின வழி நடைக்கே உவமையாம் ஆதலின். எண் ஒடு ஒருவழி நின்றது.* ***(16)***

***5733. தொங்கலின் காடு நூறாயிரம் என்பர்; தோகைப் பிச்சம்,***
***பங்கம் இல்பணிபலம் பத்துப் பத்து நூறு ஆகும் என்பர்;***
***செங் குடைவெண்மை, நீலம், பச்சையோடு இனைய எல்லாம்***
***பொங்கு ஒளிமன்னு கோடி புரந்தராதித்தர் சுற்ற.****

***தொங்கலின் காடுநூறாயிரம் என்பர்*** *- மாலைகளின் கூட்டம் இலக்கத்திற்கு மேற்பட்டது என்று கூறுவர்;* ***தோகைப் பிச்சம்*** *- மயில் தோகையால் ஆகிய*

*ஆலவட்டமும்;* ***பங்கம் இல் பணிலம் -*** *குறை இல்லாத சங்குகளும்;* ***பத்து பத்து நூறு ஆகும் என்பர் -*** *பத்தாயிரம் என்று கூறுவர்;* ***செங்குடை வெண்மை நீலம் பச்சையோடு இனைய எல்லாம் -*** *செங்குடை, வெண்குடை, நீலக்குடை, பச்சைக்குடை என்று இப்படிச் சொல்லப்பட்ட எல்லாம்;* ***பொங்கு ஒளி மன்னு -*** *மிகுந்த (பலநிற) ஒளி நிலைபெற்ற;* ***கோடி புரந்தர ஆதித்தர் சுற்ற -*** *கோடிக்கணக்கான இந்திரர்களும் சூரியர்களும் போல சுற்றிவர வந்தான்.*

*தோகைப்பிச்சம் - மயில் தோகையால் ஆகிய (வெயில் மறைப்பு) ஆலவட்டம் எனப்பெறும். இப்போது 'Sun shade' என்பது ஆகும். பத்தாயிரம் என்னாது பத்துப் பத்து நூறு என்று பெருக்கியது ஒவ்வொன்றும் பத்தாயிரம் எனற்கு என்க. பல் நிறக்குடைகள் தாங்கிக் கோடிக்கணக்கான இந்திரரும் சூரியரும் சுற்றி வருகின்றனர் எனலும் ஆம்.* ***(17)***

***734. தீ எழுபொன்னின் சின்னம் மேவி வீழ் அரக்கர் சேர***
***வாய்களில் ஊத,மண்ணும் வானமும் மறுகிச் சோர்ந்த;***
***'ஆயது முடிவுகாலம்; கிளர்ந்தனர் அரக்கர்' என்று***
***வாய்களின் பேசிவானோர் மண்டினர், மலைதல் நோக்கி.****

***வீழ் அரக்கர் -*** *போரைவிரும்பிய அரக்கர்கள்;* ***தீ எழு பொன்னின் சின்னம் -*** *நெருப்பிலிருந்து காய்ச்சி எழுப்பிய பொன்னால் ஆகிய ஊது கொம்புகளை;* ***மேவி -*** *விரும்பி;* ***சேர வாய்களில் ஊத -*** *ஒன்றாகப் பலரும் வாய்களில் வைத்து ஊத (அவ் ஒலி கேட்டு);* ***மண்ணும் வானமும் மறுகிச் சோர்ந்த -*** *மண்ணுலக மக்களும், விண்ணுலகத்தவரும் கலக்கமுற்றுச் சோர்ந்தனர்;* ***வானோர் -*** *தேவர்கள்;* ***அரக்கர் கிளர்ந்தனர் -*** *அரக்கர் கிளர்ச்சி பெற்றுவிட்டார்கள்;* ***முடிவுகாலம் ஆயது -*** *உலக அழிவுக்காலம் நெருங்கியது;* ***என்று வாய்களின் பேசி -*** *என்று தம் வாய்களினால் பேசிக்கொண்டு;* ***மலைதல் நோக்கி மண்டினர் -*** *போரிடுதலைப் பார்க்க விரும்பி நெருங்கினார்கள்.*

*தீ எழு பொன் - 'சுடச் சுடரும் பொன்' என்பதை (குறள் 267) நினைப்பூட்டும். பேசி என்றாலே அமையவும் 'வாய்களின்' என்றது அரக்கரால் துன்புறும் தேவர் அரக்கர்களைப் பற்றியே எப்போதும் பேசும் வாயை உடையவர் என்று அவ்வாயின் இழிவினைச் சிறப்பித்ததாம்.* ***(18)***

***5735. அரம்தெறும் அயிலின் காடும், அழல் உமிழ் குந்தக் காடும்,***
***சரம் தருசிலையின் காடும், தானவர் கடலும், இன்ன***
***நிரந்தரம் சங்குதாரை நில மகள் முதுகை ஆற்றாள்;***
***'புரந்தரசித்துவந்தான்' என்றன, பொன்னின் சின்னம்.****

***அரம் தெறும்அயிலின் காடும்*** - *அரத்தால் தீட்டிக்கூர்மை செய்யப்பெற்ற வேற்படைத் தொகுதியும்;* ***அழல் உமிழ் குந்தக்காடும்*** - *நெருப்பைக் கக்குகின்ற குந்தப் (ஈட்டி) படையின் மிகுதியும்;* ***கரம் தரு சிலையின் காடும்*** - *அம்புகளை எய்கின்ற விற்படைப்பெருக்கமும்;* ***தானவர் கடலும்*** - *(இவற்றை எறிந்து, வீசி, எய்கின்ற) அரக்கர் திரளும்;* ***இன்ன*** - *மற்றும் இது போன்றனவும்;* ***நிரந்தரம்*** - *எப்பொழுதும் ஓயாது ஒலிக்கும்;* ***சங்கு தாரை*** - *சங்கு, தாரை போன்ற வாத்தியங்களும் சேர்தலினால்;* ***நிலமகள் முதுகை ஆற்றாள்*** - *பூதேவி பாரம் சுமக்கத் தன் முதுகு ஆற்றாதவள் ஆனாள் (இவ்வாறு பூதேவி வருந்தும்படி);* ***புரந்தர சித்து*** - *இந்திரசித்து;* ***வந்தான்*** - *போர்க்கு வந்தான்;* ***என்றன பொன்னின் சின்னம்*** - *என்று பொற்சின்னங்கள் இயம்பின.*

*'முதுகை ஆற்றாள்' என்பதுவரை படைப்பெருக்கு கண்ட கலியின் கூற்றாக ஆகி இறுதி அடிமட்டும் சின்னம் கூறுவதாக ஆக்கலும் ஒன்று. புரந்தரன் - இந்திரன்; இந்திரசித்து புரந்தர சித்து எனப்பட்டான்.* ***(19)***

***5736. புலித்தோலின் பலகை எல்லாம் பொரு கடல் புரவி என்னக்***
***கலித்து ஓடி,உம்பரோடும் ஓடின, காலன் அஞ்ச;***
***ஒலித்து ஆழிஉவாவுற்றென்ன உம்பர் தோரணத்தை முட்ட,***
***வலித்தார் திண்சிலைகள் எல்லாம்; மண்டின சரத்தின் மாரி.****

***புலித்தோலின்பலகை எல்லாம்*** - *புலித்தோலால் ஆகியநீண்ட கேடயங்கள் எல்லாம்;* ***பொருகடல் புரவி என்ன*** - *போரிடும் குதிரைக்கடல் என்று சொல்லும்படி;* ***கலித்து ஓடி*** - *செருக்கி மேற்சென்று;* ***காலன் அஞ்ச*** - *யமனும் பயப்படும்படி;* ***உம்பரோடும் ஓடின*** - *தேவர்கள் மேலே சென்றன;* ***திண் சிலைகள் எல்லாம் வலித்தார்*** - *வலிய விற்களை எல்லாம் பூட்டினார்கள்;* ***சரத்தின் மாரி*** - *அதிலிருந்து புறப்பட்ட அம்பு மழை;* ***உவா ஆழி ஒலித்துற்றென்ன*** - *பௌர்ணமி நாளிலே கடல் பொங்கிக் கிளர்ந்து மேல் எழும்பியது போல;* ***உம்பர் தோரணத்தை முட்ட மண்டின*** - *தேவருலகத்தில் கட்டிய தோரண வாயிலை முட்டும்படி நெருங்கின.*

*தோலாற்செய்யப்பட்டது கேடயம் - கிடுகுபடை என்பர். பகைவர் வீசும் படைகள் தன்மேல் வீழாதபடித் தடுப்பதற்கு அமைத்திருப்பது ஆகும். அது புலித்தோலாற் செய்யப் பெறல் உண்டு போலும். படை அல்லாத கேடயமே யமனும் அஞ்சும்படி மேற்சென்றது என்று வியந்ததாம்.* ***(20)***

***737. தடுவையின் மரங்களோடு சகடைகள் திமிலை தாக்க,***
***உடுஇனம் ஆனதுஎல்லாம் உதிர்ந்தன, பூ இது என்ன;***
***அடு புலி அனையவீரர் அமரினில் ஆர்ப்பும், ஆனை***
***நெடு மணிமுழக்கும்ஓதை மண்ணகம் நிறைந்தது அன்றே.****

***தடுவையின்மரங்கள், சகடைகள், திமிலை தாக்க*** - *தடுவை மரம், சகடைப்பறை, திமிலைப்பறை ஆகிய வாத்தியங்கள் அடிக்கப்பெற அதனால்;* ***பூ இது என்ன*** -

*மரங்களிலிருந்து பூ உதிர்தல் போல;* ***உடு இனம் ஆனது எல்லாம் உதிர்ந்தன*** *- நட்சத்திரங்கள் எல்லாம் கீழே விழுந்து விட்டன;* ***அடுபுலி அனைய வீரர் அமரினில் ஆர்ப்பும் -*** *கொல்லும் புலியை ஒத்த வீரர்கள் போரிடத்து ஆர்ப்பரித்ததனால் உண்டாகியதும்;* ***ஆனை நெடுமணி முழக்கம் -*** *யானைக் கழுத்தில் கட்டிவிடப்படும் நீண்ட மணி முழக்கினால் ஆகியதும் ஆகிய;* ***ஓதை மண்ணகம் நிறைந்தது -*** *ஒலிகள் மண்ணிடத்தே நிறைந்தது.*

*தடுவைமரம் என்பதுஒருவகை வாத்திய விசேடம் - ஒலி அதிர்ச்சியால் விண்மீன் உதிர்ந்தன. ஆர்ப்பும், முழக்கும் ஆகிய ஓதை என்க. அன்று, ஏ அசைகள்.*
***(21)***

**கலிவிருத்தம்**

***5738. எண்பதினாயிர கோடி இருஞ் சிலை***
***புண் பயில் வெஞ்சரம் பூட்டினர், ஒன்றோ ?***
***விண் புகுதோரணம் மெல்ல மறைந்த;***
***மண் புகழ்சீர்த்தியன் மாருதி வாழ்ந்தான்.****

***எண்பதினாயிரகோடி இருஞ்சிலை -*** *எண்பதாயிரகோடிக்கணக்கான விற்களை;* ***புண்பயில் வெஞ்சரம் பூட்டினர் -*** *புண்ணிற் பழகிய கொடிய அம்புகளைப் பூட்டியவர்களாய் விடத் தொடங்கினர்;* ***ஒன்றோ -*** *அம்மட்டோ;* ***விண்புகு தோரணம் மெல்ல மறைந்த -*** *வானைத் தீண்டும் தோரணமானது மெல்ல மறைந்து போயிற்று;* ***மண்புகழ் சீர்த்தியன் மாருதி வாழ்ந்தான் -*** *உலகு ஏத்தும் புகழாளனாகிய அனுமன் பெரும் போரால் வாழ்ந்தான் ஆயினன்.*

*தோரணவாயில்அனுமன் இருப்பிடம் ஆதலின் அதனை மறைத்த படைப் பெருக்கம், மாறாதிருக்கும் பெருந்தீனியாய் அமைவது என்பதால் 'மாருதிவாழ்ந்தான்' என்றார் போலும். ஒன்றோ - வியப்புச்சொல்.* ***(22)***

***5739. பாறு எழுவாட் படை பத்திரு வெள்ளம்;***
***ஆறு இரு கோடியின்வேலின் அமைந்தார்;***
***கூறிடு வெள்ளம்மிடைந்தது குந்தம்;-***
***வீறுடைமாருதிமேல் வரு சேனை.****

***வீறு உடை மாருதிமேல் வரு சேனை -*** *வீர பராக்கிரமம்உடைய அனுமன் மேல் வருகின்ற சேனையின் அளவு;* ***பாறு எழு வாட்படை பத்து இரு வெள்ளம் -*** *போரிட எழுந்த வாள் படைகள் இருபது வெள்ளமாம்;* ***வேலின் அமைந்தார் -*** *வேலாற் போர் செய்யும் படைஞர்;* ***ஆறிரு கோடி -*** *பன்னிரண்டு கோடியர் ஆகும்;* ***குந்தம் மிடைந்தது -*** *குந்தப் படையால் போரிடுபவர்;* ***கூறிடு வெள்ளம் -*** *சொல்லப்படும் வெள்ளம் என்னும் அளவினை உடையவராவர்.*

*'வெள்ளம்' என்பது தமிழில் பேரெண்ணைக் குறிக்கும் சொல்.* ***(23)***

***5740. பந்து எனஆடிய பாய் பரி எல்லாம்;***
***சிந்தையின்முந்தின தேர்கள் செறிந்த;***
***அந்தியின்மேனிய ஆனைகள் எல்லாம்***
***வந்தன, மண்ணைஅடித் துகள் மாய்ப்ப.****

***பந்து என ஆடியபாய் பரி எல்லாம் -*** *பந்து போலத் துள்ளிக் குதித்தாடும் பாய்கின்ற குதிரைகளும்;* ***செறிந்த சிந்தையின் முந்தின தேர்கள்-*** *நெருங்கினவாகிய மனத்தினும் வேகமாகச் செல்லும் தேர்களும்;* ***அந்தியின்மேனிய ஆனைகள் எல்லாம் -*** *மாலைக்காலம் போல இருண்ட கரியமேனியுடைய யானைகளும்;* ***அடித்துகள் மண்ணை மாய்ப்ப வந்தன -*** *தம் பாதத்தூசி நிலவுலகத்தை மறைத்து இல்லாமல் செய்யும்படி வந்தன.* ***(24)***

***5741. சங்கொடுதாரைகள், சச்சரி, சின்னம்,***
***எங்கும்இயம்பின; பேரி இடித்த;***
***வெங் குரலின்பறை விண்ணில் நிறைந்த;***
***பொங்கி அரக்கர் பொருக்கென வந்தார்.****

***சங்கு, தாரை,சச்சரி, சின்னம் எங்கும் இயம்பின -*** *வாத்தியங்கள் எங்கும் ஒலித்தன;* ***பேரி இடித்த -*** *பெருமுரசு இடியொலி எழுப்பியது;* ***பறையின் வெங்குரல் விண்ணில் நிறைந்த -*** *பறைகளின் கொடிய சப்தம் ஆகாயத்தில் நிரம்பியது;* ***அரக்கர் பொங்கி பொருக்கென வந்தார் -*** *அரக்கர்கள் சீறி விரைவாக வந்தார்கள்.*

*சச்சரி என்பதுபெருந்தாளம் ஆம் - 'சங்கொடு' எண்ணொடு பிரித்துப் பொருள் தொறும் கூட்டுக.* ***(25)***

***5742. பார்த்தனபார்த்தன பாய் பரி எங்கும்;***
***தேர்த் திரள்தேர்த் திரளே திசை எங்கும்;***
***கார்த் திரள்மேனியின் இன் கயம் எங்கும்;***
***ஆர்த்தனர்மண்டும் அரக்கர்கள் எங்கும்.****

***எங்கும் பாய்பரிபார்த்தன பார்த்தன -*** *எல்லா இடங்களிலும் குதிரைகள் பார்க்கப் பெற்றனவாய் நிறைந்துள்ளன;* ***திசை எங்கும் தேர்த்திரள் தேர்த்திரள் -*** *எல்லாத் திக்குகளிலும் தேர்க் கூட்டங்களே நிறைந்துள;* ***எங்கும் கார்த்திரள் மேனியின் இன்கயம் -*** *எல்லா இடங்களிலும் மேகம் போன்ற கரிய உடம்புடைய இனிய யானைக்கூட்டங்களே;* ***எங்கும் ஆர்த்தனர் மண்டும் அரக்கர்கள் -*** *எவ்விடங்களிலும் ஆரவாரித்தவர்களாய் நெருங்கும் அரக்கர்களே.*

*நால்வகைச்சேனைகளின் பெருமை கூறப்பெற்றது. 'பார்க்கும் இடம் எங்கும்' என்பதைப் 'பார்த்தன' என்னும் அடுக்கு குறித்தது. அடுக்குகள் மிகுதி பற்றி வந்தன. கயம் - யானை, 'ஏ' காரம் தேற்றம்.* ***(26)***

***5743. நுகம் படுதேர்அவை நூற்று இரு கோடி;***
***யுகம் பிறிதுஒன்று வந்து உற்றது என்ன,***

*அகம் படு காவில்அரக்கர்கள், இன்னம்*
*அகம்படிவீரர்கள் ஐ-இரு வெள்ளம்.**

***நுகம் படு தேர்அவை நூற்று இரு கோடி*** - நுகத்திற் குதிரைகள் பூட்டப்பெற்ற தேர்கள் நூற்றிருகோடி ஆகும்; ***அகம்படு காஇல் அரக்கர்கள்*** - உட்படும் பாதுகாவல் இல்லாத அரக்கர்கள்; ***யுகம் பிறிது ஒன்று வந்து உற்றது என்ன*** - வேறோர் யுகம் வந்து சேர்ந்தது போன்ற அளவினர்; ***இன்னம்*** - இதன்மேல்; ***அகம்படி வீரர்கள்*** - உரிமைத் தொழில்செய்யும் வீரர்கள்; ***ஐ இரு வெள்ளம்*** - பத்து வெள்ளம் ஆகும்.

*'கா இல்அரக்கர்' என்றது இவ்வரக்கர் சீறினால் மற்றவர்க்குக் காப்பு இல்லை என்றபடியாம். அகம்படி வீரர் - போர் செய்வோர்க்கு வேண்டும் உதவிகளைச் செய்யும் வீரர் என்பதாம் - இவர்களே பத்து வெள்ளமாயின் போர் புரிவோர் புதுயுகம் வந்தது போன்ற கணக்கினர் என்றது பொருத்தமே.* ***(27)***

*5744. வெள்ளம் ஓர் நூறுடை விற் படை என்பார்;*
*துள்ளிய வாட்படை சொல்லிட ஒண்ணா,*
*பொள்ளல் தரும் கரப் பூட்கையும் அஃதே;-*
*கள்ள அரக்கனைச்சுற்றினர் காப்பார்.**

***கள்ள அரக்கனைச்சுற்றினர் காப்பார்*** - வஞ்சம் நிரம்பிய இந்திரசித்துவைச் சுற்றிப் பாதுகாப்பவர்; ***விற்படை ஓர் நூறுடை வெள்ளம் என்பார்*** - வில்லேந்திய படைஓர் ஒரு நூறு வெள்ளம் எனும் கணக்கினர் ஆவர்; ***துள்ளிய வாட்படை சொல்லிட ஒண்ணா*** - துள்ளிப் பாயும் வாள் ஏந்திய படைஞர் கணக்கிட முடியாதவராம்; ***பொள்ளல் தரும் கரப் பூட்கையும் அஃது*** - துவாரம் உடைய துதிக்கையை உடைய யானைப் படையும் அதுபோலவே சொல்ல இயலாத அளவினவாகும்.

*முகத்திற்பூட்டியது போன்ற கையை உடைமையால் யானைக்குப் பூட்கை என்பது பெயர். 'ஏ' காரம் அசை.* ***(28)***

*5745. ஆய பெரும்படை செல்வது கண்டு*
*மாயம் மிகும்திறல் வானர வீரன்,*
*நாயகனைத் திசைநோக்கி வணங்கி,*
*மேயது ஓர்இன்பம் விளங்கிட நின்றான்.**

***ஆய பெரும்படைசெல்வது கண்டு*** - அத்தகைய இந்திரசித்துவின் பெரியபடை செல்வதைப் பார்த்து; ***மாயம் மிகும் திறல் வானர வீரன்*** - பகைவர்க்கு மயக்கம் உண்டாக்கத்தக்க மிகுந்த வலி படைத்த குரங்கு வீரன் ஆய அனுமன்; ***நாயகரைத் திசை நோக்கி வணங்கி*** - இராமபிரானை (அவன் உள்ள) வடதிசை நோக்கி வணங்கி; ***மேயது ஓர் இன்பம் விளங்கிட நின்றான்*** - தன்னிடத்தில் உண்டாகிய மகிழ்ச்சி முகத்தில் விளங்கித் தோன்ற நின்றான். வஞ்சனைப்போர்செய்தல் அரக்கர் இயல்பு; அனுமனுக்கு இயல்பன்று ஆதலின், அனுமனின் வீரப் போர் கண்டு அரக்கர்க்கு மாயம் போல் உள்ளது என்று நினைக்குமாறு செய்யும் திறல் என உரைக்கப் பெற்றது. அனுமனின் இராம பக்தி இங்கே தோன்றுகிறது. தன் ஆற்றலினும் இராமபத்தியே தனக்கு வெற்றி தருவது என்பதை உணர்ந்தவன் அனுமன். ***(29)***

***5746. ஆழியின்ஆய அரக்கர் பெரும் படை***
***ஏழ் உலகும் இடம்இல் என ஈண்டிச்***
***சூழும் எழுந்தனர்தோன்றினர்தம்மைக்***
***கோழியின் ஒக்குவ கூவிடுகின்றான்.****

*(அனுமன்)*

***ஏழ் உலகும்இடம்இல் என*** *- ஏழ் உலகங்களும் இனிஇவர் இயங்கற்கு இடம் இல்லை என்று சொல்லும்படி;* ***ஆழியின் ஆய அரக்கர் பெரும்படை*** *- கடல்போலப் பெருகிய அரக்கர் சேனையாக;* ***ஈண்டிச் சூழும் எழுந்தனர் தோன்றினர் தம்மை*** *- நெருங்கிச் சூழ்ந்து புறப்பட்டுத் தோன்றியவர்களை;* ***கோழியின் ஒக்குவ*** *- கோழி கூப்பிடுவது போல;* ***கூவிடுகின்றான்*** *- அழைக்கின்றான்.*

*அனுமன் அரக்கர்சேனையைப் போருக்கு அழைப்பது கோழி கூவுதல் போல் உள்ளது என்பதாம்.* ***(30)***

***5747. மாருதி கூவமகிழ்ந்தனன் ஆகி,***
***கூரிய புந்தியின்கோவன் குறிக்கொடு,***
***கார் அன மேனிஅரக்கர்கள் காணா,***
***வாரிகளூடு மடுத்தனவாளி.****

***மகிழ்ந்தனன்ஆகி மாருதி கூவ*** *- மகிழ்ச்சி அடைந்துஅனுமன் அழைக்க;* ***கூரிய புந்தியின் கோவன் குறிக்கொடு*** *- நுண்ணுணர்வின் தலைவனாய அனுமனது குறிப்பைக் கொண்டு;* ***கார்என மேனி அரக்கர்கள் காணா*** *- கருமை நிறம் பெற்ற உடம்புடைய அரக்கர்கள் கண்டு (விட்ட);* ***வாளி*** *- அம்புகள்;* ***வாரிகள் ஊடு மடுத்தன*** *- கடலின் கண் போய் விழுந்தன.*

*சீறி எழுந்தஅரக்கர்தம் அம்புகள் கணக்கிலவாதலின் கடலில் வீழ்ந்தன. கோவன் - அரசன் நுண்ணறிவில் திறன் வாய்ந்தவன் என்பது அனுமனைக் குறித்தது. 'நன்குணர் மாருதி' (கம்ப. 4402) என்றதும் நோக்குக.* ***(31)***

***5748. தூளி மிடைந்து, உருத் தோன்றல் ஆகி,***
***யாளி அனானைஅறிந்திலன் ஆகி,***
***சூழுறநோக்கினன், சோதனை பெற்றான்;***
***கோள் அமைந்துஅன்னவை கூறுதலுற்றான்.****

***தூளி மிடைந்து*** *- புழுதிமேலே நெருங்கி;* ***உரு தோன்றல ஆகி*** *- வடிவு பார்க்க முடியாமல்;* ***யாளி அன்னானை*** *- சிங்கம் போன்ற இந்திர சித்துவை;* ***அறிந்திலன் ஆகி*** *- கண்டறியாதவனாகி;* ***சோதனை பெற்றான்*** *- சோதித்து அறிதல் பெற்றானாய்ச்;* ***சூழ் உற நோக்கினன்*** *- சுற்றிலும் நன்றாகப் பார்த்தான்;* ***கோள் அமைந்து*** *- தன் எண்ணம் நிரம்பப் பெற்று;* ***அன்னவை*** *- அத்தன்மைகளை;* ***கூறுதல் உற்றான்*** *- சொல்லத் தொடங்கினான்.*

*படைப்பெருக்கத்தால் தூசி மிகுந்தது. இந்திரசித்துவை மறைத்தது. அதனால் அனுமன் காணாதவனாய்ச் சோதனையால் அறிந்தான் என்பதாகும்.*
***(32)***

***5749. இந்திரன்முன்பும் இடும் திரள் சோதிச்***
***சந்திர வெண்குடை தான் எதிர் கண்டான்;***
***அந்தம் இல்கேள்வியன் ஆனைகள் காணா,***
***சிந்தை உவந்து,சிரித்து உடன் நின்றான்.****

***அந்தம் இல்கேள்வியன்*** *- முடிவற்ற கேள்விஞானத்தில் நிரம்பப் பெற்றவன் ஆகிய அனுமன்;* ***ஆனைகள் காணா -*** *இந்திர சித்துவைக் காத்துச் சுற்றிலும் நிற்கும் ஆனைத்திரளைக் கண்டு;* ***இந்திரன் முன்பும் இடும் திரள் சோதிச் சந்திர வெண்குடை தான் எதிர்கண்டான்*** *- இந்திரனுக்கு முன்னால் இடப்படும் சந்திரமயமான வெண்குடையையும் எதிர்கண்டு;* ***சிந்தை உவந்து -*** *இந்திரசித்து இங்கேதான் உள்ளான் என்று மனம் மகிழ்ந்து;* ***சிரித் துஉடன் நின்றான் -*** *சிரித்து கூட நின்றான். இந்திரன் முன்புஇடும் சந்திர வெண்குடை அவனை வென்றமையால் இந்திரசித்துவுக்கு உரியதாயிற்று. சுற்றிலும் கரிய ஆனைத் திரளின் இடையில் சந்திர வெண்குடை கண்டு இந்திர சித்துவைக் கண்டு கொண்டான் அனுமன் என்க.* ***(33)***

***750. சிந்தை உவந்தவன் ஆகி அரக்கன்***
***முந்தி எழுந்துமுனிந்தமை நோக்கி,***
***'வெந் திறலாய்! விரைவின் வருக !' என்றான்;***
***'இந்திரசித்துஇவன்' என்பது இசைத்தான்.****

***சிந்தைஉவந்தவன் ஆகி -*** *(அனுமன்) மனமகிழ்ச்சிஅடைந்து;* ***அரக்கன் முந்தி எழுந்து முனிந்தமை நோக்கி -*** *இந்திர சித்து முற்படச் சீறிப் புறப்பட்டதைப் பார்த்து;* ***'வெந்திறலாய்-*** *கொடிய வலிமை உடைய இந்திரசித்தே !;* ***விரைவின் வருக' -*** *சடுதியில் போர்க்கு வருக;* ***என்றான் -*** *என்று அழைத்தான்;* ***இவன் இந்திரசித்து என்பது இசைத்தான் -*** *இவன் இந்திரசித்து என்பதனை (ஒருவன்) எடுத்துக் கூறினான்.*

*முன்பாட்டுடன்இப்பாட்டு அந்தாதித் தொடைபோல் அமைந்தது காண்க.*
***(34)***

***5751. என்று அவன்மாற்றம் இயம்புதல் கேட்டு,***
***குன்றம் எனும் புயவானர வீரன்,***
***'நன்று இது !நன்று இது ! என்ன நயந்தான்;***
***சென்று அணைவுற்றதுஅரக்கன சேனை;****

***என்று அவன்மாற்றம் இயம்புதல் கேட்டு -*** *ஒருவன் 'இவன் இந்திரசித்து' என்று சொல்லியதைக் கேட்டு;* ***குன்றம் எனும் புய வானர வீரன் -*** *மலை போன்ற தோள் உடைய அனுமன்;* ***'நன்று இது ! நன்று இது ! என்ன நயந்தான் -*** *நல்லது நல்லது என்றுரைத்துப்போரை விரும்பினான் (இந்நிலையில்);* ***அரக்கனசேனை -*** *இந்திர சித்துவின் சேனை;* ***சென்று அணைவுற்றது -*** *(அனுமன்இருந்த தோரண வாயிலைச்) சென்று சேர்ந்தது. அவன் என்பது 'இவன் இந்திர சித்து' என்று கூறிய அரக்கனைச் சுட்டியதாகக் கொள்ளப் பொருள் நேரிதாகும்.* ***(35)***

***5752. ஊழி எழுந்துஉலகத்தை ஒடுக்க,***
***ஆழ் இயல் தானைஅரக்கர் அடங்க,***
***ஏழ் உலகும் இடம்இல்லை எனும்படி***
***ஆழி கிளர்ந்தனஎன்ன அழைத்தான்.****

***ஆழ் இயல் தானைஅரக்கர் அடங்க*** - *ஆழும் இயல்பினை உடைய சேனையாகிய அரக்கர் முழுவதும்;* ***ஏழ் உலகும் இடம் இல்லை எனும்படி*** - *ஏழ்உலகங்களும் இடம் இல்லை என்று சொல்லும்படி;* ***ஊழி எழுந்து உலகத்தை ஒடுக்க*** - *ஊழிக் காலத்தே புறப்பட்டு உலகத்தை இல்லையாம்படிச் செய்ய;* ***ஆழி கிளர்ந்தன என்ன*** - *கடல் பொங்கிப் புறப்பட்டது போல மேலே கிளம்ப;* ***அழைத்தான்*** - *(அச் சேனைகளைப் போர்க்கு அறைகூவி அனுமன்) அழைத்தான்.*

*'ஆழும் இயல்பினைஉடைய' என்றது ஒருவரே தாம் நின்ற நிலத்தை ஆழச் செய்யும் இயல்பினை உடையர் அரக்கர் என்பது பற்றி.* ***(36)***

***5753. 'சந்திரன்அருக்கனொடு தாரகைஇனங்கள்***
***சிந்திட எழுந்து,திசை ஈண்ட, எதிர் செவ்வே***
***வந்த இவ்அரக்கர் குழு வன்மை இது என்றால்,***
***இந்திரனை அன்றிஉலகு ஏழும் வெலும்' என்றான்.****

***சந்திரன்அருக்கனொடு தாரகை இனங்கள் சிந்திட*** - *சூரிய சந்திரர்களும் நட்சத்திரக் கூட்டங்களும் கீழே பூப்போலச் சிதறும்படி;* ***எழுந்து*** - *புறப்பட்டு;* ***திசை ஈண்ட*** - *திசைகளிலே (சேனை) நெருங்க;* ***செவ்வே*** - *செம்மையாக;* ***எதிர் வந்த இவ் அரக்கர் குழு வன்மை இது என்றால்*** - *எதிரே போரிட வந்த இந்த அரக்கர் கூட்டத்தின் பெருவலி இதுவாக இருக்குமானால் (இச்சேனை);* ***'இந்திரனை அன்றி உலகு ஏழும் வெலும்' என்றான்*** - *இந்திரனை மட்டும் அல்லாமல் ஏழ் உலகங்களையுமே வெல்லும் என்று அனுமன் கூறினான்.*

*'அன்னவை கூறுதல்உற்றான்' (கம்ப. 5748) என்பதில் அனுமன் கூறியதாகக் குறிப்பிட்டது இதுபோலும். சேனைப் பெருமை கண்ட அனுமன் இவன் இந்திர சித்துவே அல்ல ஏழ் உலக சித்து என்றான் என்பது இப்பாடற் பொருள்.*

*5729 முதல் 5753வரை உள்ள 25 பாடல்கள், கவிச்சக்கரவர்த்தியின் பாடல்களின் பக்கம் வந்து நிற்கவும் தகுதியற்றவை; கூறியது கூறல், மாறுகொளக் கூறல், மயங்கவைத்தல் என்பது முதலாகிய குறைகள் நிரம்ப உள்ளவை; பொருள் பொருத்தமுற அமையாதவை; பொருட்சிறப்பும் அற்றவை; ஆயினும், கம்பன் கழக மூலப் பதிப்பை இப்பதிப்புக்கு அடிப்படையாகக் கொண்டமையால் உரை எழுதப் பெற்று இப்பதிப்பில் சேர்க்கப் பெற்றன என்பதைக் கற்போர் உணர்க.*
***(37)*** *படையின் பரப்பு*

**அறுசீர் ஆசிரியவிருத்தம்**

***5754. உடைந்தவல்இருள் நோற்று, பல் உருக் கொடு, அக்***
***கதிர்க் குழாங்கள்***

***மிடைந்தனமிலைச்சியாங்கு, மெய் அணி பலவும் மின்ன,***
***குடைந்து வெம்பகைவர் ஊன் தோய் கொற்றப் போர் வாள் வில் வீச,***
***அடைந்த, கார்அரக்கர் தானை, அகலிடம் இடம் இன்று என்ன.***

***கார் அரக்கர்தானை -*** *கருநிறமுள்ள அரக்கர்கள் கூடிய சேனை;* ***உடைந்தவல் இருள் -*** *முன்பு சூரியனுக்குத் தோற்ற வலிய இருட்டு;* ***நோற்று -*** *(சூரியனை வெல்லும் பொருட்டு) தவம் செய்து;* ***பல் உருகொடு -*** *(அத் தவத்தின் பயனாக) கரிய பல உருவங்களைக் கொண்டு;* ***அக்கதிர் குழாங்கள் -*** *அச்சூரியனது கிரணங்களின் கூட்டங்களை (தான் வென்று கவர்ந்து);* ***மிடைந்தன -*** *நெருக்கமுள்ளனவாக;* ***மிலைச்சி ஆங்கு -*** *(தான் வென்றமைக்கு அடையாளமாக) அணிந்து கொண்டது போல;* ***மெய் அணி பலவும் மின்ன -*** *(இருள் மயமான தம்) உடம்பில் பூண்ட ஆபரணங்கள் மின்னவும்;* ***வெம் பகைவர் ஊன் குடைந்து -*** *கொடிய பகைவருடைய உடலில் முழுகி;* ***தோய் கொற்ற போர் வாள் -*** *அந்த ஊன் படிந்தனவும், வெற்றியைத்தரும் போரைச் செய்ய வல்லனவுமான வாளாயுதங்கள்;* ***வில்வீச -*** *ஒளியை வீசவும்;* ***அகலிடம் இடம் இன்று -*** *நில உலகம் இடம் போதாது;* ***என்ன -*** *என்று சொல்லும்படி;* ***அடைந்த -*** *(இந்திர சித்தை) அடைந்து வந்து கூடிற்று.*

*கரிய அரக்கர்ஒள்ளிய அணிகளைப் பூண்டிருந்தது, சூரியனுக்குத் தோற்ற வலிய இருள், தவம் செய்து பல வடிவம் கொண்டு சூரியனை வென்று அவனது கதிர்க்கற்றைகளைத் தன் மேனியில் அணிந்து கொண்டது போன்றிருந்தது. இத்தகைய அரக்கர் சேனை, மிகுதியாக இந்திர சித்தை வந்து கூடிற்று என்பதாம்.*
*(38)*

***5755. ஆழிஅம்தேரும், மாவும், அரக்கரும், உருக்கும் செங் கண்***
***சூழி வெங் கோபமாவும், துவன்றிய நிருதர் சேனை, ஊழி வெங்கடலின் சுற்ற, ஒரு தனி நடுவண் நின்ற***
***பாழி மா மேரு ஒத்தான்-வீரத்தின் பன்மை தீர்ப்பான்.***

***ஆழி அம் தேரும்-*** *சக்கரங்களோடு கூடிய அழகிய தேரும்;* ***மாவும், அரக்கரும் -*** *குதிரைகளும், காலாட்படையினராகிய அரக்கர்களும்;* ***உருக்கும் செங்கண் -*** *கோபித்து நோக்குகின்ற;* ***சூழி வெங்கோபமாவும் -*** *சிவந்த கண்களை உடையனவும் முகபடாத்தை அணிந்தனவும் கொடிய சினத்தை உடையனவுமான யானைகளும்;* ***துவன்றிய நிருதர் சேனை -*** *கூடி நிறைந்த அரக்கர் படை;* ***ஊழிவெங்கடலின் சுற்ற -*** *யுகமுடிவின் காலத்தில் பொங்கி எழும் கடலைப் போன்று தன்னைச் சூழ்ந்து வர;* ***வீரத்தின் பன்மை தீர்ப்பான் -*** *வீரத்தின் சிறப்பு பலரால் பங்கிட்டுக் கொள்ளப் பெறாது, தன் ஒருவனுக்கே உரிமையாகப் பெற்ற மேகநாதன்;* ***தனி நடுவண் நின்ற -*** *ஒன்றேயாகத் தனித்து அவ் வெள்ளத்தின் இடையே விளங்கி நின்ற;* ***ஒரு பாழிமா மேரு -*** *ஒப்பற்ற பருத்த மகா மேரு என்னும் மலையை;* ***ஒத்தான் -*** *ஒத்து விளங்கினான்.*

*அரக்கர்நால்வகைப் படையும் கடலாகவும், கடல் நடுவே நின்ற மேருமலை இந்திரசித்தாகவும் கூறப்பட்டது. வீரத்தின் பன்மை தீர்ப்பான் என்பது பிறரது வீரத்தை வென்றொழிப்பவன் என்று பொருள்படும்.* ***(39)***

***5756. சென்றனன்என்ப மன்னோ; திசைகளோடு உலகம் எல்லாம்***
***வென்றவன் இவன்என்றாலும், வீரத்தே நின்ற வீரன்,***
***அன்று அது கண்டஆழி அனுமனை, 'அமரின் ஆற்றல்***
***நன்று' என உவகைகொண்டான்; யாவரும் நடுக்கம் உற்றார்.***

***சென்றனன் இவன்-*** *இவ்வாறாகப் போருக்குச் சென்ற இந்த மேகநாதன்;* ***திசைகளோடு உலகம் எல்லாம் வென்றவன் என்றாலும் -*** *எட்டுத் திக்குகளோடு மூவுலகங்களையும் வென்று புகழ் பெற்றவனாயினும்;* ***வீரத்தே நின்ற வீரன் -*** *வீரத் தன்மையிலே நிலை பெற்ற மகாவீரன் (ஆதலால்);* ***அன்று அது கண்ட -*** *அந்நாளில் போர்க்களச் சிதைவாகிய வீரச் செயலைப் புரிந்த;* ***ஆழி அனுமனை -*** *கடல் போன்ற காம்பீரியத் தோற்றத்துஅனுமனைக் குறித்து;* ***அமரின் ஆற்றல் -*** *(இவனது) போர் வல்லமை;* ***நன்று என -*** *நன்றாயுள்ளது என்று பாராட்டி;* ***உவகை கொண்டான் -*** *மகிழ்ச்சி கொண்டான்;* ***யாவரும் நடுக்கம் உற்றார் -*** *அது கண்டோர் அனைவரும் (என்ன விளையுமோ) என்று அச்சம் அடைந்தார்கள்.*

*வீரச் செயலின்அருமை பெருமைகளை அறிந்து பாராட்டுவது உயர்ந்த வீரர்க்கு இயல்பு. மேகநாதன் வீரத்தே நின்ற வீரன் ஆதலால், அனுமனைப் பாராட்டி, அமரின் ஆற்றல் நன்று என உவகை கொண்டான் என்க. என்ப; மன்; ஒ - அசை நிலைகள்.*
***(40)***

*போர்க்களத்தைநோக்கிய இந்திரசித்தின் மனநிலை*

***5757. இலை குலாம்பூணினானும், 'இரும் பிணக் குருதி ஈர்த்து,***
***அலகு இல் வெம்படைகள் தெற்றி, அளவிடற்கு அரிய ஆகி,***
***மலைகளும்,கடலும், யாறும், கானமும் பெற்று, மற்று ஓர்***
***உலகமே ஒத்தது,அம்மா ! போர்ப் பெருங் களம்' என்று உன்னா,***

***இலைகுலாம்பூணினானும் -*** *இலை வடிவமாகச் செய்தஅணிகளை அணிந்த இந்திர சித்தும்;* ***பெரும் போர்க்களம் -*** *அந்தப் பெரும் போர்க்களமானது;* ***இரும்பிணம் -*** *போரில் இறந்த அரக்கர்களது பெரும் பிணங்களின்;* ***குருதி ஈர்த்து -*** *இரத்த வெள்ளத்தில்;* ***அலகு இல் வெம்படைகள் -*** *அளவில்லாத கொடிய ஆயுதங்கள்;* ***தெற்றி -*** *அலைக்கப் பெறுதலால்;* ***அளவு இடற்கு அரியஆகி -*** *அளவிட்டுக் கூற*

*முடியாதனவாகி;* ***மலைகளும் கடலும் -*** *மலைகளையும், கடல்களையும்;* ***யாறும் கானமும் -*** *ஆறுகளையும், காடுகளையும்;* ***பெற்று -*** *தன்னிடம் அமையப் பெற்று;* ***மற்றும் ஓர் உலகமே -*** *வேறு ஓர் உலகமே போல;* ***ஒத்தது என்று உன்னா -*** *பரந் துகிடந்தது என்று கருதி.     அம்மா, வியப்பைஉணர்த்தும் இடைச்சொல். 'விம்மல் கொண்டான்' என்று அடுத்த கவியின் தொடரோடு முடியும். பிணங்கள் மலைகளாகவும், இரத்தம் கடலாகவும் ஆறாகவும், ஆயுதங்கள் காடாகவும் தோற்றம் அளித்தன. அதுகண்டு மற்றும் ஓர் உலகமே என்று வியந்தான் மேகநாதன் என்க.*    ***(41)***

***5758.  வெப்புஅடைகில்லா நெஞ்சில், சிறியது ஓர் விம்மல் கொண்டான்;***
***'அப்பு அடை வேலைஅன்ன பெருமையார், ஆற்றலோடும்***
***ஒப்புஅடைகில்லார், எல்லாம் உலந்தனர்; குரங்கும் ஒன்றே !***
***எப் படை கொண்டுவெல்வது, இராமன் வந்து எதிர்க்கின் ?' என்றான்.***

***வெப்புஅடைகில்லா நெஞ்சில் -*** *(இதுவரை வருத்தத்தால்)தவிப்பு அடையாத தனது உள்ளத்தில்;* ***சிறியது ஓர் விம்மல் கொண்டான் -*** *ஒரு சிறுஏக்க உணர்ச்சி கொண்டான் (மற்றும்);* ***அப்பு அடை வேலை -*** *நீர் நிறைந்தகடல் போன்ற;* ***அன்ன பெருமையோர் -*** *(அளக்க ஒண்ணாப்) பெருமைஉடையவர்களும்;* ***ஆற்றலோடும் ஒப்பு அடைகில்லார் -*** *தம் வல்லமையுடன்ஒப்புமை அடையப் பெறாதவர்களுமான;* ***எல்லாம் உலர்ந்தனர் -*** *அரக்கவீரர்கள் யாவரும் (இப்போரில்) அழிந்தனர்;* ***குரங்கும் ஒன்றே ! -*** *(இவ்வளவு வீரர்களையும் கொன்ற) குரங்கும் ஒன்றேதான் உள்ளது;* ***இராமன்வந்து எதிர்க்கின் -*** *(இனி மற்ற வானரங்களுடன்) இராமன் வந்து நம்மைஎதிர்த்துப் போர் புரிந்தால்;* ***எப்படை கொண்டு வெல்வது ? என்றான் -*** *எந்தப் படைகளைக் கொண்டு எதிர்த்து வெற்றி கொள்வது ? என்றும் சிந்தைகொண்டான்.     போரில் வல்லபலரையும் கொன்ற அனுமனைக் கண்டு வியந்த மேகநாதன் இது போன்ற வானர வீரர்களுடன் இராமன் வந்து போர் செய்தால் வெல்வது எப்படி என்று சிந்தனை செய்தான்.*
***(42)***

***5759.  கண்அனார், உயிரே ஒப்பார், கைப் படைக்கலத்தின் காப்பார்,***
***எண்ணல் ஆம்தகைமை இல்லார், இறந்து இடைக் கிடந்தார்தம்மை***
***மண்ணுளே நோக்கிநின்று, வாய் மடித்து, உருத்து, மாயாப்***
***புண்ணுளே கோல் இட்டன்ன மானத்தால், புழுங்குகின்றான்.***

***கண்அனார் -*** *கண்போன்று அருமையானவரும்;* ***உயிரே ஒப்பார் -*** *தன் உயிர் போன்றவரும்;* ***கைபடைக்கலத்தின் காப்பார் -****தாம் தாம்கைதேர்ந்துள்ள ஆயுதங்களைக் கொண்டு, தம்மவர்களைக் காப்பவரும்;* ***எண்ணல்ஆம் -*** *நினைத்தற்கும் இயலாத;* ***தகைமை இல்லார் -*** *பெருமையுடையவருமாகி;* ***இறந்து -*** *அனுமனால் உயிர்நீத்து;*

***இடை கிடந்தார் தம்மை -*** *அவ்விடத்திலே விழுந்து கிடந்த அரக்க வீரர்களை;* ***மண்ணுளே நோக்கி நின்று -*** *போர்க்களத்திலே பார்த்து நின்று;* ***வாய் மடித்து உருத்து -*** *உதட்டை மடித்துக் கடித்துக் கொண்டு கோபித்து;* ***மாயாபுண்ணுளே கோல் இட்டு அன்ன -*** *ஆறாத புண்ணிலே கோலைக் கொண்டு குத்தினாற் போல;* ***மானத்தால் புழுங்குகின்றான் -*** *அவமானத்தால் (இந்திரசித்து) (உடலும் உள்ளமும்) கொதிக்கின்றவனானான்.*

*பல சிறப்பிற்குஉரிய வீரர்கள் போர்க்களத்தில் இறந்து கிடந்ததைப் பார்த்தபோது, இந்திரசித்தன் மனம் மிகவும் வருந்தியது. அவ்வருத்தம் புண்ணில் கோல் நுழைந்தால் போன்று ஆயிற்று என்பதாம்.* ***(43)***

***5760. 'கானிடைஅத்தைக்கு உற்ற குற்றமும், கரனார் பாடும்,***
***யானுடை எம்பிவீந்த இடுக்கணும், பிறவும் எல்லாம்,***
***மானிடர்இருவராலும், வானரம் ஒன்றினாலும்,***
***ஆனிடத்து உள;என் வீரம் அழகிற்றே அம்ம !'***
***என்றான்.***

***கானிடைஅத்தைக்கு உற்ற குற்றமும் -*** *தண்டக வனத்திடத்துஎன் அத்தையாகிய சூர்ப்பணகைக்கு நேர்ந்த மூக்கு முதலியன அறுப்புண்ட குறைபாடும்;* ***கரனார் பாடும் -*** *கரன் இறந்ததும்;* ***யானுடை எம்பி வீந்த இடுக்கணும் -*** *என்னுடைய தம்பி அக்க குமாரன் அழிந்த துன்பமும்;* ***பிறவும் எல்லாம் -*** *மற்றைய (அசோகவனம் அழிந்தமை முதலியனவுமான) யாவும்;* ***மானிடர் இருவராலும் -*** *இரண்டு மனிதர்களாலும்;* ***வானாம் ஒன்றினாலும் -*** *ஒரு குரங்கினாலும்;* ***ஆனிடத்து -*** *உண்டாயின என்றால்;* ***என் உளவீரம் -*** *என்னிடத்து உள்ள வீரம்;* ***அழகிற்றே -*** *அழகுடையதே !;* ***அம்ம ! என் றான்-*** *என்ன ஆச்சரியம் என்று (இந்திரசித்து) கூறினான். 'இவ்வளவு துன்பமும், இருமானிடர்களாலும், ஒரு குரங்கினாலும் நேர்ந்தது என்றால், என் வீரம் அழகிற்றே' என்று இகழ்ச்சிக் குறிப்புடன் பேசினான் இந்திரசித்து. ஆனிடத்து -உண்டாயின என்றால். ஆயின இடத்து என்பது ஆனிடத்து எனத் தொக்கது.* ***(44)***

*தம்பியின் உடலைக்கண்டு சோகமும் கோபமும் கொள்ளுதல்*

***5761. நீப்புண்டஉயிர ஆகி, நெருப்புண்ட நிறத்தில் தோன்றி,***
***ஈர்ப்புண்டற்குஅரிய ஆய பிணக் குவடு இடறச் செல்வான்;***
***தேய்ப்புண்டதம்பி யாக்கை, சிவப்புண்ட கண்கள் தீயில்***
***காய்ப்புண்டசெம்பின் தோன்ற, கறுப்புண்ட மனத்தன், கண்டான்,***

***நீப்பு உண்டஉயிர ஆகி -*** *நீங்குதல் அடைந்தஉயிரை உடையவாய்;* ***நெருப்பு உண்ட நிறத்தில் தோன்றி -*** *நெருப்பை ஒத்த நிறமுடையனவாய்க் காணப்பட்டு;* ***ஈர்ப்பு உண்டற்கு அரிய ஆய -*** *இழுக்கப்படுதற்குக் கூடாதனவான;* ***பிணம் குவடு இடற***

***செல்வான்*** *- பிணங்களாகிய மலைகள் தட்டித் தடுக்க போர்க்கள வழியே செல்பவனான இந்திரசித்து;* ***தேய்ப்பு உண்ட*** *- (அனுமனால்) தேய்க்கப்பட்ட;* ***தம்பியாக்கை*** *- தன் தம்பி அக்க குமாரனுடைய உயிர் நீத்த உடலை;* ***சிவப்புண்ட கண்கள் தீயில் காய்ப் புண்டசெம்பிற் தோன்ற*** *- (சினத்தினால்) செந்நிறம் கொண்ட தன் கண்கள்நெருப்பில் காய்ச்சப்பட்ட செம்புபோல் விளங்க;* ***கறுப்புண்ட மனத்தன்கண்டான்*** *- கோபம் கொண்ட மனத்தினனாகப் பார்த்தான். இந்திரசித்து,உயிர்நீத்துக் கிடந்த தன் தம்பியின் உடலைப் பார்த்து, தேய்த்தவன் ஆகிய அனுமன் மேல் கோபம் கொண்டான் என்பது கருத்து.* ***(45)***

***5762. தாருகன்குருதி அன்ன குருதியில், தனி மாச் சீயம்***
***கூர் உகிர்கிளைத்த கொற்றக் கனகன் மெய்க்***
***குழம்பின் தோன்ற,***
***தேர் உக,கையின் வீரச் சிலை உக, வயிரச் செங்***
***கண்***
***நீர் உக, குருதிசிந்த, நெருப்பு உக உயிர்த்து***
***நின்றான்.***

***தாருகன் குருதிஅன்ன குருதியில்*** *- தாருகாசுரனுடைய இரத்தப் பெருக்குப் போன்ற இரத்தப் பெருக்கில்;* ***தனிமாசீயம் கூர் உகிர் கிளைத்த*** *- ஒப்பற்ற நரசிங்கமூர்த்தி, தனது கூரிய நகங்களால் கிளறிப் பிளந்த;* ***கொற்றகனகன் மெய்குழம்பின் தோன்ற*** *- வெற்றியை உடைய இரணியனது உடல் குழம்பாகக் கலக்கப்பட்டுக் கிடந்ததுபோல் உருத் தெரியாமல் (தன் தம்பியின் உடல்) கிடந்து விளங்க (அதனைக் கண்டு);* ***தேர் உக*** *- தான் ஏறி வந்த தேரும் நிலை குலைய;* ***கையின் வீர சிலை உக*** *- தன் கையில் பிடித்திருந்த வீரத் தன்மையிற் சிறந்த வில்லும் நழுவ;* ***வயிரம் செங்கண் நீர் உக குருதி சிந்த*** *- பகைமையைக் காட்டும் தனது சிவந்த கண்கள் நீரையும் இரத்தத்தையும் சிந்த;* ***நெருப்பு உக உயிர்த்து நின்றான்*** *- நெருப்பையும் கக்க (இந்திரசித்து) பெருமூச்சு விட்டுக் கொண்டு நின்றான்.*

*அக்க குமாரன்உடல் விழுந்து கிடந்த இடத்தின் இரத்தப் பெருக்குக்கு, தாருகன் இரத்தமும், அது உருத்தெரியாமல் சிதைந்து கிடந்ததற்கு, இரணியன் உடலும் உவமைகள். அவ்வுடலைக் கண்ட இந்திரசித்து உயிர்த்து நின்றான் என்பதாம்.*

*தாருகன்: ஓர்அசுரன்: காளிதேவியால் அழிக்கப்பட்டவன்; 'தாருகன் பேருரம் கிழித்த பெண்ணும் அல்லள்' (சிலப். 20: 39-40)* ***(46)***

***5763. 'வெவ் இலைஅயில் வேல் உந்தை வெம்மையைக்***
***கருதி நோக்கி,***
***வவ்வுதல் கூற்றும்ஆற்றான்; மாறு மாறு உலகின்***
***வாழ்வார்,***
***அவ் உலகத்துஉளாரும், அஞ்சுவர் ஒளிக்க; ஐயா !***
***எவ் உலகத்தைஉற்றாய், எம்மை நீத்து, எளிதின் ?***
***எந்தாய் !'***

***எந்தாய்*** *- எனது ஐயனே!;* ***வெவ்இலை அயில் வேல் உந்தை*** *- கொடியதும் இலை போன்ற முனையுடையதும் கூர்மை உடையதும் ஆன வேலாயுதத்தை ஏந்திய உனது*

*தந்தையின் (இராவணனது);* **வெம்மையை கருதி நோக்கி -** *கோபத்தை ஆலோசித்துப் பார்த்து;* **கூற்றும் வவ்வுதல் ஆற் றான்-** *யமனும் (உனது உயிரைக்) கவரவல்லனல்லன்;* **மாறுமாறு உலகின்வாழ்வார் -** *மற்றும் வெவ்வேறு உலகங்களில் வாழ்பவரான;* **அவ் உலகத்துஉளாரும் ஒளிக்க அஞ்சுவர் -** *அந்தந்த உலகத்தில் உள்ளவர்களும் ஃஉன்னை மறைத்து வைக்கபயப்படுவார்கள்;* **எம்மை எளிதின் நீத்து -** *எம்மை எளிதாக விட்டு;* **எவ் உலகத்தை உற்றாய் -** *நீ வேறு எந்த உலகத்தைப் போய் அடைந்தாய் ? (என்று சொல்லி இந்திர சித்து புலம்பினான்).*

*இராவணனுக்குஅஞ்சி, யமனும் அக்கனது உயிரைப் பறிக்க மாட்டான். மற்றைய உலகினரும் அவ்வாறே அச்சத்தால், அக்கனை மறைக்க மாட்டார்கள். அப்படியிருக்க, நீ எந்த உலகத்தில் மறைந்தாய் என்று தனது தம்பியை நினைத்து வருந்தி இந்திர சித்து புலம்பினான் என்பது கருத்து.* ***(47)***

***5764. ஆற்றலன்ஆகி, அன்பால் அறிவு அழிந்து அயரும் வேலை,***
***சீற்றம் என்றுஒன்றுதானே மேல் நிமிர் செலவிற்று ஆகி,***
***தோற்றிய துன்பநோயை உள்ளுறத் துரந்தது அம்மா !-***
***ஏற்றம் சால்ஆணிக்கு ஆணி எதிர் செலக் கடாயது என்ன.***

**ஆற்றலன் ஆகி -** *உடன்பிறப்பை இழந்ததனாலான துக்கத்தைப் பொறுக்க மாட்டாதவனாய் (இந்திரசித்து);* **அறிவு அழிந்து -** *அறிவு மயங்கி;* **அன்பால் அயரும் வேலை -** *தம்பிபால் தான் கொண்ட அன்பினால், தளர்ச்சியுற்று வருந்தும்போது;* **சீற்றம் என்ற ஒன்றுதானே -** *கோபம் என்ற ஒரு குணமே;* **மேல் நிமிர் -** *மேன்மேல் பொங்கி எழும்;* **செலவிற்று ஆகி -** *தன்மை உடையதாய்;* **ஏற்றம் சால் ஆணிக்கு -** *நன்றாய் உள் நுழைந்த ஓர்ஆணிக்கு;* **எதிர் செல ஆணி கடாயது என்ன -** *அது பின்வாங்கிச் செல்லமற்றோர் ஆணியைத் தாக்கி அடித்தது போல;* **தோற்றிய துன்ப நோயை -** *மனத்தினுள் தோன்றிய துன்பம் என்ற நோயை;* **உள் உறதுரந்தது -** *உள்ளேஅடங்கும்படி செலுத்தி அடக்கி விட்டது;* **அம்மா !-** *ஆச்சரியம். இதனால்,இந்திரசித்து கொண்டிருந்த துயரத்தை அவனது கோபம் எதிர்கொண்டு தாக்கி ஆழியச் செய்தது என்பதாம். இது, ஓரிடத்தில் ஆணியின் மேல் ஆணியை அடித்தால், பிந்தி அடிக்கும் ஆணி முந்தி அடிக்கப்பட்டுள்ள ஆணியை உள்ளே செலுத்தி விடுதல் போன்றது. இதனுள், சோகத்தை வீரம் மாற்றியது கூறப்பட்டது. ஒரு சுவையை, மற்றொரு சுவை மாற்றும் இயல்பு தெரிவிக்கப்பட்டது.*
***(48)*** *இந்திரசித்தைநோக்கிய அனுமன் சிந்தனை*

**கலிவிருத்தம்**

***5765. ஈண்டு இவைநிகழ்வுழி, இரவி தேர் எனத்***
***தூண்டுறுதேரின்மேல் தோன்றும் தோன்றலை,***
***மூண்டு முப்புரம்சுட முடுகும் ஈசனின்,***
***ஆண் தகை வனைகழல் அனுமன், நோக்கினான்.***

***ஈண்டு இவைநிகழ்வுழி*** - *இவ்விடத்தில் இச்செயல்கள் நடக்கும்போது;* ***இரவி தேர் என*** - *சூரியனும் அவனுடைய தேரும் போல;* ***தூண்டு உறும் தேரின் மேல் தோன்றும் தோன்றலை மூண்டு*** - *செலுத்தப்பட்ட தேரின் மீது விளங்கும் இராவணன் புதல்வனான இந்திரசித்தை சீற்றம் மேற்கொண்டு;* ***முப்புரம் சுட முடுகும் ஈசனின்*** - *திரிபுரங்களை எரித்தற்கு விரைந்து செல்லும் சிவபெருமானைப் போன்ற;* ***ஆண்தகை வனைகழல் அனுமன் நோக்கினான்*** - *ஆண்மைக் குணம் மிக்க பூண்ட வீரக்கழலை உடைய அனுமன் பார்த்தான்.*

*இரவி, தேர்உம்மைத்தொகை. அனுமனுக்குச் சிவபிரான் உவமை. அவன் சிவபிரான் அம்சமாக அவதரித்தவன் என்பதைக் குறிக்க வந்தது.* ***(49)***

**கலிநிலைத் துறை**

***5766. 'வென்றேன், இதன் முன், சில வீரரை என்னும்***
***மெய்ம்மை***
***அன்றே முடுகிக்கடிது எய்த அழைத்தது அம்மா !***
***ஒன்றே, இனிவெல்லுதல் தோற்றல்; அடுப்பது***
***உள்ளது***
***இன்றே சமையும்;இவன் இந்திரசித்து !' என்பான்.***

***இதன்முன் சிலவீரரை வென்றேன் என்னும் மெய்ம்மை அன்றே*** - *யான்,இதற்கு முன் சில அரக்க வீரரை போரில் வென்றேன் என்னும் உண்மை அல்லவா;* ***முடுகி கடிது எய்த அழைத்தது அம்மா*** - *மிக்க விரைவாக வருமாறு (இவனை) இங்குக் கூப்பிட்டது;* ***இனி வெல்லுதல் தோற்றல் ஒன்றே அடுப்பது உள்ளது*** - *யான், இனி வெற்றி பெறுவது அல்லது தோற்பது என்பவற்றுள் ஒன்றே அடையக்கூடியதாகும்;* ***இன்றே சமையும்*** - *(அவ்விரண்டில் ஒன்று) இன்றைக்கே அமையும்;* ***இவன் இந்திரசித்து என்பான்*** - *இவன் இந்திரசித்து என்பவனே ஆவான்.*

*இந்திரசித்தின்வீரத்தைப் பற்றிக் கேள்வியுற்றதனாலும், பிராட்டியை இலங்கையில் தேடியபோது இவனை மாளிகையில் கண்டதனாலும், வருபவன் இந்திரசித்தே என்று அனுமன் தெளிந்தான்.* ***(50)***

***5767. 'கட்டு ஏறு,நறுங் கமழ் கண்ணி, இக் காளை என்***
***கைப்***
***பட்டால், அதுவேஅவ் இராவணன் பாடும் ஆகும்;***
***"கெட்டேம்" எனஎண்ணி, அக் கேடு அருங்***
***கற்பினாளை***
***விட்டு ஏகும்; அதுஅன்றி, அரக்கரும் வெம்மை***
***தீர்வார்.***

***நறுங் கமழ்கண்ணி*** - *மிக்க மணம் வீசுகின்ற மாலையை அணிந்த;* ***இக்கட்டேறு காளை*** - *இந்த வீர வெறிகொண்ட காளை போல்வான்;* ***என் கைப்பட்டால்*** - *என் கையால் இறந்தால்;* ***அதுவே அவ் இராவணன் பாடும் ஆகும்*** - *அச்செயலே அந்த இராவணன் அழிவாகவும் முடியும்;* ***'கெட்டேம்' என எண்ணி*** - *(ஆகவே இராவணன்)*

*இனி நாம் தவறாமல் அழிவோம் என்று நினைத்து;* ***அக்கேடு அருங் கற்பினாளை விட்டு ஏகும் -*** *அந்தக் கெடுதல் இல்லாத கற்பினளான சீதா பிராட்டியை (இராமபிரானிடம்) கொண்டு வந்து விட்டுச் செல்வான்;* ***அது அன்றி -*** *அதுவும் அல்லாமல்;* ***அரக்கரும் வெம்மை தீர்வார் -*** *அரக்கர்களும் தமது செருக்கு அடங்கிக் கொடுமை ஒழிவார்கள்.*

*இந்திரசித்துஅழிந்தால் இராவணன் அழிவான். இராவணன் வலிமைக்கு இந்திரசித்தே மூலமாவான் என்பது அனுமன் கருத்து.* ***(51)***

***5768. 'ஒன்றோ இதனால் வரும் ஊதியம் ?***
***ஒண்மையானைக்***
***கொன்றேன்எனின், இந்திரனும் துயர்க் கோளும்***
***நீங்கும்;***
***இன்றே, கடிகெட்டது, அரக்கர் இலங்கை; யானே***
***வென்றேன், அவ்இராவணன்தன்னையும், வேரொடு'***
***என்றான்.***

***ஒண்மையானை -*** *ஒளியுற்றஇந்த இந்திரசித்தை;* ***கொன்றேன் எனின் -*** *நான் கொன்றேன் என்றால்;* ***இதனால் வரும் ஊதியம் ஒன்றோ -*** *இந்தச் செயலால் விளையக்கூடிய நன்மை ஒன்று தானோ ! ;* ***இந்திரனும் துயர் கோளும் நீங்கும் அரக்கர் இலங்கை இன்றே கடி கெட்டது -*** *இந்திரனும் துயர் கொண்டிருத்தலை நீங்கும் அரக்கர்களுடைய இலங்கை நகரம் இன்றே காவல் ஒழிந்ததாம்;* ***அவ் இராவணன் தன்னையும் வேரொடு யானே வென்றேன் -*** *அந்த இராவணனையும் வேரோடு நானேவென்றவனாவேன்;* ***என்றான் -*** *என்று (அனுமன்) எண்ணினான்.*

*இந்திரசித்தின்அழிவினால் ஏற்படும் நன்மைகளை அனுமன் எண்ணினான் என்பதாம். ஒண்மை - ஒளி; ஒளி - தான் உளனாய காலத்து மிக்குத் தோன்றுதலுடைமை.* ***(52)***

*அரக்கர் படையுடன்அனுமன் பொருதல்*

***5769. அக் காலை,அரக்கரும், யானையும், தேரும், மாவும்,***
***முக் கால் உலகம்ஒரு மூன்றையும் வென்று முற்றிப்***
***புக்கானின் முன்புக்கு, உயர் பூசல் பெருக்கும்***
***வேலை,***
***மிக்கானும்,வெகுண்டு ஓர் மராமரம் கொண்டு***
***மிக்கான்.***

***அக்காலை -*** *இவ்வாறுஅனுமான் எண்ணிக் கொண்டு நின்றபொழுது;* ***உலகம் ஒரு மூன்றையும் முக்கால் வென்று -*** *மூன்று உலகங்களையும் (ஒருமுறைக்கு) மூன்று முறையாக வென்று;* ***முற்றி புக்கானின் முன்புக்கு -*** *எதிரில்லாமல் முடித்து இலங்கையில் வெற்றி வீரனாய்ப் புகுந்த இந்திரசித்துக்கு முன்னே வந்து;* ***அரக்கரும், யானையும் தேரும், மாவும் -*** *அரக்கர்களாகிய காலாட்படையும், யானை, தேர், குதிரை ஆகிய படைகளும்;* ***உயர் பூசல் பெருக்கும் வேலை -*** *மிக்க ஆரவாரத்தைப் பெரிதும்*

*உண்டாக்கிய வேளையில்; **மிக்கானும் -** பெரியோனான அனுமனும்; **வெகுண்டு ஓர் மராமரம் கொண்டு -** சினம் கொண்டு, ஒரு ஆச்சாமரத்தைப்பிடுங்கி எடுத்துக் கொண்டு; **மிக்கான் -** (போர் செய்ய) பேருருக் கொண்டவனானான்.*

*இந்திரசித்துபோர்க்களம் புகுதற்கு முன்பு, நால்வகைப் படைகளும் வந்து ஆரவாரம் செய்தன. அதனைக் கண்டு அனுமனும் வெகுண்டு போருக்குத் தயாரானான் என்க.* ***(53)***

***5770. உதையுண்டனயானை; உருண்டன யானை; ஒன்றோ ?***
***மிதியுண்டனயானை; விழுந்தன யானை; மேல் மேல்,***
***புதையுண்டன யானை;புரண்டன யானை; போரால்***
***வதையுண்டன யானை;மறிந்தன யானை, மண்மேல்.***

***யானை உதை உண்டன-** (அரக்கர் சேனையில்) சில யானைகள் அனுமனால் உதைக்கப் பெற்றன; **யானை உருண்டன -** சில யானைகள் உருளப் பெற்றன; **ஒன்றோ யானை மிதி உண்டன -** இது மாத்திரமோ ? சிலயானைகள் அனுமனால் மிதிக்கப்பட்டுப் போயின; **யானை விழுந்தன -** சிலயானைகள் கீழே விழுந்தன; **யானை மேல் மேல் புதை உண்டன -** சில யானைகள் ஒன்றன் மேல் ஒன்றாகப் புதைந்து போயின; **யானை புரண்டன -** சில யானைகள் முன் பின்னாகவும் கீழ் மேலாகவும் நிலை மாறின; **யானை போரால் வதையுண்டன -** சில யானைகள் போரில் வதைக்கப்பட்டன; **யானை மண்மேல் மறிந்தன -** மற்றும் சில யானைகள் அந்தப் போர்க்களத்தில் மல்லாந்து வீழ்ந்தன.*

*அனுமனால்யானைப்படை அழிந்தமை கூறப்பட்டது.* ***(54)***

***5771. முடிந்ததேர்க் குலம்; முறிந்தன தேர்க் குலம்; முரண் இற்று***
***இடிந்த தேர்க்குலம்; இற்றன தேர்க் குலம்; அச்சு இற்று***
***ஒடிந்த தேர்க்குலம்; உக்கன தேர்க் குலம்; நெக்குப்***
***படிந்த தேர்க்குலம்; பறிந்தன தேர்க் குலம், படியில்.***

***தேர்க்குலம்முடிந்த -** சில தேர்க்கூட்டங்கள் முழுவதும் அழிந்தன; **தேர்க்குலம் முறிந்தன -** சில தேர்க் கூட்டங்கள் சிற்சில பகுதிகள் முறிபட்டன; **தேர்க்குலம் முரண் இற்று இடிந்த -** சில தேர்க்கூட்டங்கள் வலிமை அழிந்து இடிபட்டன; **தேர்க்குலம் இற்றன -** சில தேர்க்கூட்டங்கள் மூட்டுக்கள் அற்று விழுந்தன;**தேர்க்குலம் அச்சுஇற்று ஒடிந்த -** சில தேர்க்கூட்டங்கள்அச்சு முறிந்து ஒடியப் பெற்றன; **தேர்க்குலம் உக்கன -** சில தேர்க் கூட்டங்கள் பொடியாய் உதிர்ந்தன; **தேர்க்குலம் நெக்கு படிந்த -** சில தேர்க்கூட்டங்கள் சிதைந்து கீழே விழுந்தன; **தேர்க்குலம் படியில் பறிந்தன -** சில தேர்க்கூட்டங்கள் தரையில் சாய்ந்தன.*

*இந்திரசித்தின்தேர்ப்படைகள் பலவாறு அழிந்தமை கூறப்பட்டது.* ***(55)***

*5772.* ***சிரன்நெரிந்தவும், கண் மணி சிதைந்தவும், செறி தாள்***
***தரன்நெரிந்தவும், முதுகு இறச் சாய்ந்தவும், தார் பூண்***
***உரன்நெரிந்தவும், உதிரங்கள் உமிழ்ந்தவும், ஒளிர் பொற்***
***குரன்நெரிந்தவும், கொடுங் கழுத்து ஒடிந்தவும்- குதிரை.***

***குதிரை சிரம்நெரிந்தவும் -*** *(அனுமனால்அழிக்கப்பட்டு) குதிரைகள் தலை நொறுங்கிப் போயவையும்;* ***கண்மணி சிதைந்தவும் -*** *கண்களின் கருவிழிகள் சிதையப் பெற்றவையும்;* ***செறிதாள்தரன் நெரிந்தவும் -*** *வலிமை மிக்க கால்களின் தொகுதி நொறுங்கப் பெற்றவையும்;* ***முதுகு இற சாய்ந்தவும் -*** *முதுகு ஒடியக் கீழே சாய்ந்தவையும்;* ***தார் பூண் உரன் நெரிந்தவும் -*** *கிண்கிணி மாலை அணிந்த மார்பு நொறுங்கப் பெற்றவையும்;* ***உதிரங்கள் உமிழ்ந்தவும் -*** *இரத்தப் பெருக்குகளைக் கக்கியவையும்;* ***ஒளிர் பொான் குரன்நெரிந்தவும் -*** *பிரகாசமான பொற் சதங்கையை அணிந்த கால் குளம்புகள்நொறுங்கப் பெற்றவையும்;* ***கொடும் கழுத்து ஒடிந்தவும் -*** *வளைந்தகழுத்துக்கள் ஒடிந்தவையும் (ஆயின). குதிரைப் படைஅழிந்தமை கூறப்பட்டது.* ***(56)***

*5773.* ***பிடியுண்டார்களும், பிளத்தலுண்டார்களும், பெருந் தோள்***
***ஒடியுண்டார்களும்,தலை உடைந்தார்களும், உருவக்***
***கடியுண்டார்களும்,கழுத்து இழந்தார்களும், கரத்தால்***
***அடியுண்டார்களும்,அச்சமுண்டார்களும்-அரக்கர்.***

***அரக்கர் -*** *காலாட்படையினரான அரக்க வீரர்கள்;* ***பிடிஉண்டார்களும் -*** *அனுமனால் பிடிக்கப்பட்டவர்களும்;* ***பிளத்தல உண்டார்களும் -*** *உடல் பிளக்கப்பட்டவர்களும்;* ***பெரும்தோள் -*** *பெரிய தோள்கள்;* ***ஒடி உண்டார்களும் -*** *ஒடிபட்டவர்களும்;* ***தலை உடைந்தார்களும் -*** *தலைகள் உடையப் பெற்றவர்களும்;* ***உருவ கடி உண்டார்களும் -*** *(உடல் முழுவதும்) நன்றாகக் கடிக்கப் பெற்றவர்களும்;* ***கழுத்து இழந்தார்களும் -*** *கழுத்தை இழந்தவர்களும்;* ***கரத்தால் அடி உண்டார்களும் -*** *கைகளால் அடிக்கப் பெற்றவர்களும்;* ***அச்சம் உண்டார்களும் -*** *பயம் கொண்டவர்களும் (ஆனார்கள்).*

*காலாட்படை அழிவுகூறப்பட்டது.* ***(57)***

*5774.* ***வட்ட வெஞ்சிலை ஓட்டிய வாளியும், வயவர்***
***'விட்ட விட்டவெம் படைகளும், வீரன்மேல் வீழ்ந்த,***
***சுட்ட வல் இரும்புஅடைகலைச் சுடுகலாததுபோல்,***
***பட்ட பட்டனதிசையொடும் பொறியொடும் பரந்த.***

***வயவர்* -** *அரக்க வீரர்கள்;* ***வட்டம் வெம்சிலை* -** *நன்கு வளைக்கப்பட்ட கொடிய விற்களினின்றும் செலுத்திய அம்புகளும்;* ***விட்ட விட்ட வெம்படைகளும்* -** *மற்றும் மிகுதியாகப் பிரயோகித்த கொடிய ஆயுதங்களும்;* ***வீரன்மேல்* -** *மகா வீரனான அனுமன் மேல்;* ***வீழ்ந்த* -** *விழுந்தவைகளாய்;* ***சுட்ட வல் இரும்பு அடைகலை சுடுகலாதது போல்* -** *நெருப்பில் காய்ந்த வலிய இரும்பு, பட்டடைக் கல்லைச் சுடாதது போல;* ***பட்ட பட்டன திசையொடும் பொறியொடும் பரந்த* -** *அனுமன் மேல் பட்டவை அனைத்தும் (ஓர் இடையூறும் செய்யாது) நான்கு திசைகளிலும், நெருப்புப் பொறிகளைச் சிந்தினவாய்ப் பரவிச் சென்றன.*

*காய்ச்சினஇரும்பு, அடைகல்லை ஊறுசெய்ய மாட்டாது, தானே பொறிவிட்டுச் சிதைவுறுவதுபோல, அனுமன் மேல் விழுந்த ஆயுதங்கள், அவனை ஊறு செய்யாது சிதைந்தன என்று கூறியவாறு.* ***(58)***

*இந்திரசித்தும்அனுமனும் பலவகையாகப் பொருதல்*

***5775. சிகை எழும்சுடர் வாளிகள், இந்திரசித்து,***
***மிகை எழும்சினத்து அனுமன்மேல் விட்டன, வெந்து,***
***புகை எழுந்தன,எரிந்தன, கரிந்தன போத,-***
***நகை எழுந்தன,அழிந்தன, வான் உளோர் நாட்டம்.***

***மிகை எழும்சினத்து அனுமன் மேல்* -** *பொங்கி எழும் கோபத்தை உடைய அனுமன்மீது;* ***இந்திர சித்து விட்டன* -** *இந்திர சித்து (தூரத்திலிருந்துதொடுத்து) விட்டவையாகிய;* ***சிகை எழும் சுடர் வாளிகள்* -** *கொழுந்துவிட்டுஎரியும் அம்புகள்;* ***வெந்து புகை எழுந்தன* -** *வெந்து புகை கிளம்பப்பெற்றவையும்;* ***எரிந்தன கரிந்தன* -** *எரியப்பட்டொழிந்தவையும், தீய்ந்துபோனவையுமாய்;* ***போத* -** *(அவன் உடலைச் சிறிதும்) ஊறுபடுத்தாதொழிய;* ***நகை எழுந்தன* -** *(அது கண்ட இந்திரசித்துக்குக் கோபத்தால்) சிரிப்புஉண்டாயின;* ***வான் உளோர் நாட்டம் அழிந்தன* -** *(இனி என்னாகுமோ என்று அஞ்சி மனம் கலங்கியதனால்) தேவர்களுடைய கண்களும் கலக்கம்அடைந்தன.*

*அனுமனதுசினத்தீச்சுடர், இந்திரசித்து வீசிய அம்புகளைச் சுட்டுப் பயனற்றவை ஆக்கின என்பது கருத்து.* ***(59)***

***5776.. தேரும், யானையும், புரவியும், அரக்கரும், சிந்திப்***
***பாரின் வீழ்தலும், தான் ஒரு தனி நின்ற பணைத்***
***தோள்***
***வீரர் வீரனும்,முறுவலும் வெகுளியும் வீங்க,***
***'வாரும், வாரும்' என்று அழைக்கின்ற அனுமன்மேல்***
***வந்தான்.***

***தேரும்,யானையும், புரவியும், அரக்கரும் சிந்தி பாரின் வீழ்தலும்* -** *தேர்களும், யானைகளும், குதிரைகளும், அரக்கப் போர் வீரர்களும் சிதறி, தரையில் அடிபட்டு விழுந்தவுடன்;* ***தான் ஒரு தனி நின்ற* -** *தான் ஒருவன் மாத்திரமே தன்னந்தனியாய் எஞ்சி நின்ற;* ***பணை தோள் வீரர் வீரனும்* -** *பருத்த தோள்களை உடைய மகாவீரனாகிய இந்திரசித்தும்;* ***முறுவலும் வெகுளியும் வீங்க* -** *புன் சிரிப்பும் கோபமும் அதிகரிக்க;*

***வாரும் வாரும் என்று அழைக்கின்ற அனுமன் மேல் வந்தான் -*** *வாருங்கள் வாருங்கள் என்று மேன்மேலும் உற்சாகத்தோடு கூப்பிடுகின்ற அனுமன்மீது எதிர்த்துப் போரிட வந்தான்.*

*வாரும் வாரும் என்பது இகழ்ச்சிக் குறிப்பு. இகழ்ச்சியுடன் அழைதத் அனுமனுடன் போர் செய்ய வந்தான் இந்திரசித்து.* ***(60)***

***5777.***

***புரந்தரன்தலை பொதிர் எறிந்திட, புயல் வானில்***
***பரந்த பல்உரும்ஏற்றுஇனம் வெறித்து உயிர் பதைப்ப,***

***நிரந்தரம் புவி முழுவதும் சுமந்த நீடு உரகன்***
***சிரம் துளங்கிட,அரக்கன் வெஞ் சிலையைநாண்***
***தெறித்தான்.***

***புரந்தரன் தலைபொதிர் எறிந்திட -*** *இந்திரன் தலைநடுக்கம் மேலிடவும்;* ***வானில் பரந்த புயல் பல் உரும் ஏற்று இனம் -*** *ஆகாயத்தில் பரந்து விளங்கிய மேகங்களில் உள்ள பல பெரிய இடிகளின் கூட்டம்;* ***வெறித்து உயிர் பதைப்ப -*** *அச்சத்தால் மயக்கம் கொண்டு உயிர் நடுங்கவும்;* ***நிரந்தரம் புவி முழுவதும் சுமந்த நீடு உரகன் -*** *எப்போதும் உலகம் முழுவதையும் தாங்கிக் கொண்டுள்ள நீண்ட பாம்பாகிய ஆதிசேடன்;* ***சிரம் துளங்கிட -*** *தன் ஆயிரம் தலைகளும் அச்சத்தால் நடுங்கவும்;* ***அரக்கன் வெஞ்சிலையை நாண் தெறித்தான் -*** *அரக்கனாகிய இந்திரசித்து, தன் வில்லின் கொடிய நாணைக் கை விரலால் தெறித்து ஒலி எழுப்பினான்.*

*இந்திரசித்துதனது வில்லின் நாணைத் தெறித்த போது, அச்சத்தால் நடுங்கிய பிறரது நடுக்கம் கூறப்பட்டது. பொதிர் - நடுக்கம்.* ***(61)***

***5778. ஆண்டநாயகன் தூதனும், அயனுடை அண்டம்***
***கீண்டதாம் என,கிரி உக, நெடு நிலம் கிழிய,***
***நீண்ட மாதிரம்வெடிபட, அவன் நெடுஞ் சிலையில்***
***பூண்ட நாண் இற,தன் நெடுந் தோள் புடைத்து***
***ஆர்த்தான்.***

***ஆண்ட நாயகன் -*** *(எல்லாஉயிர்களையும்) அடிமை கொண்டருளும் (திருமாலின் அவதாரமாகிய) இராமபிரானின்* ***தூதனும் -*** *தூதனான அனுமனும்;* ***அயனுடை அண்டம் கீண்டதாம் என -*** *(அவ்வொலிக்கு எதிராக) பிரம்மாண்டமே பிளந்தது என்று சொல்லும்படியாகவும்;* ***கிரி உக -*** *மலைகள் பொடியாய்ச் சிந்தும்படியாகவும்;* ***நெடும் நிலம் கிழிய -*** *நீண்ட பூமி பிளக்கும் படியும்;* ***நீண்ட மாதிரம் வெடிபட -*** *நெடிய திசைகள் பிளவுபடவும்;* ***அவன் நெடுஞ்சிலையில் பூண்ட நாண்இற -*** *இந்திர சித்தினது நீண்ட வில்லில் பூட்டிய நாண் அற்றுப் போகவும்;* ***தன் நெடுந்தோள் புடைத்து ஆர்த்தான் -*** *தனது நெடிய தோள்களைக் கொட்டிக் கர்ச்சனை செய்தான். இந்திரசித்து,முன் எழுப்பிய ஒலிக்குக் கருவியாயிருந்த நாணும் அறும்படி இருந்தது, அனுமன் தோள் புடைத்து ஆர்த்த ஒலி என்பது கருத்து.* ***(62)***

***5779. ‘நல்லை ! நல்லை ! இஞ் ஞாலத்துள், நின் ஒக்க நல்லார்***
***இல்லை ! இல்லையால் ! எறுழ் வலிக்கு யாரொடும் இகல***
***வல்லை ! வல்லை! இன்று ஆகும், நீ படைத்துள வாழ்நாட்கு***
***எல்லை ! எல்லை!’ என்று, இந்திரசித்துவும் இசைத்தான்.***

**நல்லை நல்லை** - *நீமிகவும் சாமர்த்தியம் உள்ளவன்;* **இஞ் ஞாலத்துள் நின் ஒக்க நல்லார் இல்லை இல்லை** - *இந்த உலகத்தில் உனக்குச் சமமான சமர்த்தர்கள் யாரும் இல்லை;* **எறுழ்வலிக்கு** - *மிக்க வலிமைத் திறத்தில்;* **யாரொடும் இகல வல்லை வல்லை** - *நீ எல்லோருடனும்மாறுபடுதற்கு மிகவும் வல்லவன்;* **நீ படைத்துள வாழ் நாட்கு எல்லைஎல்லை இன்று ஆகும்** - *நீ அடைந்துள்ள உன் வாழ் நாளுக்கு இன்றேமுடிவு எல்லையாக அமையும்;* **என்று** - *என்று சொல்லி;* **இந்திர சித்துவும்இசைத்தான்** - *இந்திரசித்தும் (இகழ்ந்து தன் வீரம் தோன்றப் பெருமிதத்தோடு)கூறினான். பிறரோடு வைத்துநோக்குமிடத்து நீ ஒப்புயர்வற்ற வீரன் என விளங்குவையாயினும், நான் உன்னை இன்றைக்குக் கொன்று விடுவேன் என்று, அனுமனை நோக்கி இந்திரசித்து வீரவாதம் கூறினான் என்க.* ***(63)***

***5780. ‘நாளுக்குஎல்லையும், நிருதராய் உலகத்தை நலியும்***
***கோளுக்குஎல்லையும், கொடுந் தொழிற்கு எல்லையும், கொடியீர் !***
***வாளுக்குஎல்லையும் வந்தன; வகை கொண்டு வந்தேன்***
***தோளுக்கு எல்லைஒன்று இல்லை’ என்று அனுமனும் சொன்னான்.***

**கொடியீர் !** - *கொடியஅரக்கர்களே !;* **நாளுக்கு எல்லையும்** - *உங்கள் வாழ்நாளுக்கு ஒரு முடிவும்;* **நிருதராய் உலகத்தை நலியும் கோளுக்கு எல்லையும்** - *அரக்கர்களாய் உலகத்தை வருத்தும் உங்கள் கொள்கைக்கு ஒரு முடிவும்;* **கொடும் தொழிற்கு எல்லையும்** - *உங்கள் கொடிய செய்கைகளாகிய பாவத்திற்கு ஒரு முடிவும்;* **வாளுக்கு எல்லையும் வந்தன** - *உங்கள் வாள் முதலிய படைக்கலங்களுக்கு ஒரு முடிவும் இப்போது வந்துவிட்டன;* **வகை கொண்டு வந்தேன்** - *அதற்குரிய உபாயங்கொண்டு இங்கேயான் வந்துள்ளேன்;* **தோளுக்கு எல்லை ஒன்று இல்லை** - *(ஆனால்) என் தோளாற்றலுக்கு முடிவு சிறிதும் உண்டாகாது;* **என்று, அனுமனும் சொன்னான்** - *இவ்வாறு அனுமனும் இந்திரசித்துக்கு மறுமொழி கூறினான்.*
***(64)***

***5781. ‘இச் சிரத்தையைத் தொலைப்பென்’ என்று, இந்திரன் பகைஞன்,***
***பச்சிரத்தம்வந்து ஒழுகிட, வானவர் பதைப்ப,***

***வச்சிரத்தினும்வலியன, வயிர வான் கணைகள்,***
***அச் சிரத்தினும்மார்பினும் அழுத்தலும்-அனுமன்.***

***இந்திரன்பகைஞன்*** *- (அது கேட்டு)இந்திரசித்து;* ***'இ சிரத்தையை தொலைப்பென்'என்று*** *- (இந்தக் குரங்கின்) இந்த நம்பிக்கையை அழித்துவிடுவேன்' என்று கருதி;* ***அச்சிரத்தினும் மார்பினும்*** *- அந்த அனுமனுடைய தலையிலும் மார்பிலும்;* ***பச்சு இரத்தம் வந்து ஒழுகிட*** *- புதிய இரத்தம் வந்து ஒழுகும்படியும்;* ***வானவர் பதைப்ப*** *- (அது கண்டு) தேவர்கள் துடிக்கும்படியாகவும்;* ***வச்சிரத்தினும் வலியன வயிரவான் கணைகள்*** *- வச்சிராயுதத்தைக் காட்டிலும் வலிமை உடையனவான கூர்மையான பெரிய அம்புகளை;* ***அழுத்தலும்*** *- அழுந்த எய்த போது;* ***அனுமன் - ,***

*நெடுஞ்சினங் கொண்டுநிமிர்ந்தான் என அடுத்த கவியோடு முடியும்.*
***(65)***

***5782. குறிதுவான் என்று குறைந்திலன், நெடுஞ்சினம்***
***கொண்டான்,***
***மறியும் வெண்திரை மா கடல் உலகு எலாம்***
***வழங்கி,***
***சிறிய தாய்சொன்ன திருமொழி சென்னியில் சூடி,***
***நெறியில் நின்றதன் நாயகன் புகழ் என,***
***நிமிர்ந்தான்.***

***கொடும்சினம் கொண்டான்*** *- (கணைகள் அழுந்தப் பெற்ற அனுமன்) கொடிய கோபம் கொண்டு;* ***வான் குறிது என்று குறைந்திலன்*** *- ஆகாயம் உயர்வு போதாது என்று தன் வடிவு குறுகாதவனாய் (வான்முகட்டி)னும் மேலாக வளர்ந்து);* ***சிறிய தாய் சொன்ன திருமொழி சென்னியில் சூடி*** *- தன் சிறியதாயான கைகேயி சொன்ன கட்டளை மொழிகளைத் தன் தலையால் ஏற்று;* ***மறியும் வெண் திரை மாகடல் உலகு எலாம் வழங்கி*** *- மடங்குகின் றவெண்மையான அலைகளை உடைய பெரிய கடலினால் சூழப்பட்ட உலகம்முழுவதையும் (தன் தம்பியாகிய பரதனுக்கு) அளித்து;* ***நெறியில் நின்ற தன்நாயகன் புகழ் என*** *- அறநெறியில் தங்கி நின்ற தனது தலைவனானஇராமபிரான் புகழேபோல;* ***நிமிர்ந்தான்*** *- பேருரு எடுத்துக் கொண்டுநின்றான்.*

*இராமபிரான்புகழ் அனுமனின் நெடுமைக்கு உவமை கூறப்பட்டது.* ***(66)***

***5783. பாகம்அல்லது கண்டிலன்; அனுமனைப் பார்த்தான்;***
***மாக வன் திசைபத்தொடும் வரம்பு இலா உலகிற்கு***
***ஏக நாதனை எறுழ்வலித் தோள் பிணிந்து ஈர்த்த***
***மேக நாதனும்,மயங்கினனாம் என வியந்தான்.***

***மாகவன் திசை*** *- பெரியவானம் முதலான;* ***பத்தொடும்*** *- வலிய திசைகள் பத்துடன்;* ***வரம்பு இலா உலகிற்கு ஏகநாதனை*** *- அளவற்ற உலகங்களுக்கு எல்லாம் தனித்தலைவனான இந்திரனை;* ***எறுழ் வலித் தோள் பிணிந்து ஈர்த்த மேகநாதனும்*** *- மிக்க வலிமையை உடைய தோள்களைக் கட்டி இழுத்த இந்திரசித்தும்;* ***அனுமனைப்***

***பார்த்தான் பாகம் அல்லது கண்டிலன் -*** *அனுமனைப் பார்த்து, அவனது உருவில் ஒரு சிறு பகுதியே அல்லாமல் முழு உருவும் காணாதவனாகி;* ***மயங்கினன் ஆம் என வியந்தான் -*** *திகைப்புண்டவன் போல ஆச்சரியமுற்றான்.* ***(67)***

***5784. நீண்டவீரனும், நெடுந் தடங் கைகளை நீட்டி,***
***ஈண்டு வெஞ் சரம்எய்தன எய்திடாவண்ணம்,***
***மீண்டு போய்விழ வீசி, ஆங்கு அவன் மிடல்***
***தடந் தேர்***
***பூண்ட பேயொடு,சாரதி தரைப்பட, புடைத்தான்.***

***நீண்டவீரனும் -*** *அவ்வாறு பேருருக் கொண்ட வீரனான அனுமனும்;* ***நெடும் தடம் கைகளை நீட்டி -*** *நீண்ட பெரிய தனது கைகளை எதிரிலே நீளச் செலுத்தி;* ***எய்தன ஈண்டு வெம்சரம் எய்திடா வண்ணம் -*** *(இந்திரசித்தால்) எய்யப் பட்டு விரைந்து வருகின்ற கொடிய அம்புகள் தன்னுடம்பில் படாதபடி;* ***மீண்டு போய் விழ வீசி -*** *திரும்பி, அவன் மேல் போய் விழுமாறு வீசி எறிந்து விட்டு;* ***அங்கு அவன் மிடல் தடம் தேர் பூண் பேயொடு -*** *அங்கே, அவனது வலிமையுள்ள பெரிய தேரில் கட்டிய பேய்களையும்;* ***சாரதி தரைபட புடைத்தான் -*** *தேர்ப்பாகனையும் கீழே விழுந்து இறக்குமாறு அடித்தான்.* ***(68)***

***5785. ஊழிக்காற்று அன்ன ஒரு பரித் தேர் அவண் உதவ,***
***பாழித்தோளவன், அத் தடந் தேர்மிசைப் பாய்ந்தான்;***
***ஆழிப் பல் படைஅனையன, அளப்ப அருஞ்***
***சரத்தால்,***
***வாழிப் போர் வலி மாருதி மேனியை மறைத்தான்.***

***அவண் -*** *அந்நிலையில்;* ***ஊழிக் காற்று அன்ன ஒரு பரி தேர் உதவ -*** *ஊழிக்காலத்தில் வீசும் பெருங்காற்றுப் போல (வேகமாகச் செல்லும்) குதிரைகள் பூட்டிய ஒரு தேரை (வேறு ஒரு சாரதி) கொண்டு வந்து தர;* ***பாழி தோளவன் -*** *பருத்த தோள்களை உடைய அந்த இந்திரசித்து;* ***அத்தடம் தேர் மிசை பாய்ந்தான் -*** *அந்தத் தேரின் மீது பாய்ந்து ஏறி;* ***பல் ஆழி படை அனையன அளப்ப அரும் சரத்தால் -*** *பல சக்கராயுதம் போன்ற அளவிட்டுச் சொல்ல முடியாத அம்புகளால்;* ***வாழி போர் வலி மாருதி மேனியை மறைத்தான் -*** *நீடுழி வாழ்பவனும், போர் வலிமையிற் சிறந்தவனுமான அனுமனது திரு மேனியை மூடி மறைத்துவிட்டான்.*

*அனுமனது உடம்புமறையும் படி மிகுதியாக அம்புகளை இந்திரசித்து எய்தான் என்பதாம். பாழி - பெருமையும் ஆம்; ஆழி - சக்கராயுதம்; கடலும் ஆம்.*
***(69)***

***5786. உற்றவாளிகள் உரத்து அடங்கின உக உதறா,***
***கொற்ற மாருதி, மற்றவன் தேர்மிசைக் குதித்து,***
***பற்றி வன்கையால், பறித்து எழுந்து, உலகு எலாம்***
***பலகால்***
***முற்றி வென்றபோர் மூரி வெஞ் சிலையினை,***
***முறித்தான்.***

***கொற்றமாருதி -*** *வெற்றியை உடைய அனுமன்;* ***உற்ற உரத்து அடங்கின வாளிகள் -***

*வந்து பட்டவையாய் மார்பில் பதிந்தவைகளான (இந்திரசித்தின்) அம்புகள் அனைத்தும்;* ***உக உதறா -*** *கீழே சிந்தும்படி உதறித் தள்ளிவிட்டு;* ***அவன் தேர் மிசை குதித்து -*** *இந்திரசித்துவின் தேரின்மேல் எழும்பிப் பாய்ந்து;* ***உலகு எலாம் பல கால் முற்றி வென்ற போர்மூரி வெம் சிலையினை -*** *உலகும் யாவையும் பல முறை முழுவதும் வென்றதான போரில் சிறந்த அவனது வலிய வில்லினை;* ***வன் கையால் பற்றி -*** *தனது வலிய கையினால் பிடித்து;* ***பறித்து எழுந்து முறித்தான் -*** *பிடுங்கிக் கொண்டு வெளியே வந்து ஒடித்தெறித்துவிட்டான்.*

*அனுமன் ஆற்றல்கூறப்பட்டது.* ***(70)***

## *5787.* முறிந்தவில்லின் வல் ஓசை போய் முடிவதன்முன்னர்,
மறிந்து போரிடைவழிக் கொள்வான், வயிர வாட்
படையால்
செறிந்த வான்பெரு மலைகளைச் சிறகு அறச்
செயிரா
எறிந்தஇந்திரன் இட்ட, வான் சிலையினை
எடுத்தான்.

***முறிந்தவில்லின் வல் ஓசை போய் முடிவதன் முன்னர் -*** *ஒடிபட்டஅந்த வில்லின் வலிய ஓசை அடங்குவதற்கு முன்னே, (இந்திரசித்து);* ***போரிடை மறிந்து வழிக் கொள்வான் -*** *போரை மீண்டும் தொடர வேண்டி;* ***வயிர வாள் படையால் -*** *வச்சிராயுதம் என்னும் வாளால்;* ***செறிந்த வான் பெரு மலைகளை -*** *அடர்ந்த மிகப்பெரிய மலைகளை;* ***சிறகு அற செயிரா எறிந்த இந்திரன் -*** *இறகுகள் அற்றுப் போகும் படி சினங் கொண்டு துணித்தவனான தேவேந்திரன்;* ***இட்ட வான்சிலையினை எடுத்தான் -*** *திறையாகக் கொடுத்த பெரிய வில்லைக் கையில் எடுத்துக் கொண்டான்.*

*அந்த வில்ஒடிந்தவுடனே வேறு ஒரு வில்லை எடுத்துக் கொண்டான் இந்திரசித்து. அது, இந்திரன் தனது தோல்விக்குப் பிறகு, திறையாக இந்திரசித்துக்குக் கொடுத்தது.* ***(71)***

## *5788.* நூறு நூறுபோர் வாளி, ஓர் தொடை கொடு,
நொய்தின்,
மாறு இல் வெஞ்சினத்து இராவணன் மகன் சிலை
வளைத்தான்; ஊறு, தன் நெடு மேனியில், பல பட, ஒல்கி,
ஏறு சேவகன்தூதனும், சிறிது போது இருந்தான்.

***மாறு இல் வெம்சினத்து இராவணன் மகன் -*** *எதிர் இல்லாத கொடியகோபத்தை உடைய இராவணனது மகனான இந்திரசித்து;* ***போர்வாளி நூறுநூறு ஓர் தொடை கொடு -*** *போரிற் சிறந்த நூறு நூறு அம்புகளை ஒரு தொடுப்பிலே கொண்டு;* ***நொய்தின் சிலை வளைத்தான் -*** *விரைவில், அவ்வில்லை வளைத்து எய்தான்;* ***ஏறு சேவகன் தூதனும் -*** *சிறந்த வீரனாகிய இராமபிரானுடைய தூதனான அனுமனும்;* ***தன் நெடு மேனியில் ஊறு பலபட -*** *(அந்த அம்புகளால்) தனது பெரிய உடம்பில் பல புண்கள் உண்டாக;* ***சிறிது போது ஒல்கி இருந்தான் -*** *சிறிது நேரம் தளர்ச்சியுற்றிருந்தான்.*

*ஏறு சேவகன்; 'ஏறுசேவகனார்' - (திருவாய்மொழி 6.1.9) பகைவர் திரளிலும் ஏறிய (மதிக்கப் பெற்ற) வீரம் உள்ளவர் - என்பது முன்னோர் உரை.*
*(72)*

***5789. ஆர்த்தவானவர் ஆகுலம் கொளீஇ, அறிவு***
***அழிந்தார்;***
***பார்த்த மாருதி,தாரு ஒன்று அங்கையில் பற்றி,***
***தூர்த்த வாளிகள்துணிபட முறை முறை சுற்றி,***
***போர்த்த பொன்நெடு மணி முடித் தலையிடைப்***
***புடைத்தான்.***

***ஆர்த்த வானவர்-*** *முன்புமகிழ்ச்சியால் ஆரவாரம் செய்த தேவர்கள்;* ***ஆகுலம் கொளீஇ அறிவு அழிந்தார் -*** *(அனுமான் தளர்ச்சி உற்றது கண்டு)துன்பம் கொண்டு அறிவு கலங்கினார்கள்;* ***பார்த்த மாருதி தாரு ஒன்றுஅம்கையில் பற்றி -*** *அதுகண்ட அனுமன், (உடனே தளர்ச்சி நீங்கி) ஒருமரத்தைத் தனது அழகிய கையிலே எடுத்துக் கொண்டு;* ***தூர்த்த வாளிகள்முறை முறை துணிபட -*** *(இந்திரசித்து) எய்து நிரப்புகின்ற அம்புகள் எல்லாம்வரிசை வரிசையாகத் துண்டு பட்டொழியும்படி;* ***சுற்றி -*** *அந்த மரத்தைச் சுற்றிவீசி;* ***பொன்மணி நெடுமுடி போர்த்த தலையிடை -*** *பொன்னாலும்மணியாலும் செய்து நீண்டதாய் விளங்கிய கிரீடம் கவித்துள்ள இந்திரசித்தின்தலையிடத்து;* ***புடைத்தான் -*** *(அம்மரத்தாலே) ஓங்கி அடித்தான்.*
*(73)*

***790. பார மா மரம் முடியுடைத் தலையிடைப் படலும்,***
***தாரையின் நெடுங்கற்றைகள் சொரிவன தயங்க,***
***ஆர மால் வரைஅருவியின் அழி கொழுங் குருதி***
***சோர நின்றுஉடல் துளங்கினன்-அமரரைத்***
***தொலைத்தான்.***

***அமரரைத்தொலைத்தான் -*** *தேவர்களை வென்றவனானஇந்திரசித்து;* ***முடியுடைத் தலையிடை -*** *கிரீடம் அணிந்த தனது தலையின் மேல்;* ***பார மாமரம் படலும் -*** *வலியதும் பெரியதுமான அந்த மராமரம் பட்ட அளவிலே;* ***நெடும் கற்றைகள் தாரையின் சொரிவன தயங்க -*** *(கீரிடத்தில் உள்ள மாணிக்கங்களின்) நீண்ட ஒளித் தொகுதிகள் ஒழுங்காக மேற் சொரிவனவற்றைப் போன்று விளங்கும்படி;* ***மால் வரை அருவியின் -*** *பெரிய மலையிலிருந்து வருகின்ற நீர் அருவிபோல;* ***அழி கொழுங்குருதி ஆர சோர -*** *வழிகின்ற கொழுமையான இரத்தம் மிகுதியாகப் பெருக;* ***நின்று, உடல் துளங்கினான் -*** *(ஏங்கித் தளர்ச்சியுற்று) நின்று, உடம்பு நடுங்கினான். (74)*

***5791. நின்று,போதம் வந்துறுதலும், நிறை பிறை எயிற்றைத்***
***தின்று, தேவரும்முனிவரும் அவுணரும் திகைப்ப,***
***குன்றுபோல் நெடுமாருதி ஆகமும் குலுங்க,***
***ஒன்று போல்வன,ஆயிரம் பகழி கோத்து உய்த்தான்.***

***நின்று -*** *(இந்திரசித்து)சிறிது போது அயர்ச்சியுற்று நின்று;* ***போதம் வந்து உறுதலும் -*** *பிறகு அறிவு வந்து கூடின அளவில்;* ***நிறை பிறை எயிற்றை தின்று -*** *தன் வாயில்*

*நிறைந்துள்ளனவும் பிறைச்சந்திரன் போன்றனவுமான பற்களைக் கோபத்தினால் கடித்து;* ***தேவரும், முனிவரும் அவுணரும் திகைப்ப -*** *தேவர்களும் இருடிகளும் அசுரர்களும் யாதாகுமோ என்று ஏக்கமுற;* ***குன்று போல் நெடு மாருதி ஆகமும் குலுங்க -*** *மலை போன்ற உயர்ந்த வடிவமுள்ள அனுமனது உடலும் நடுங்க;* ***ஒன்று போல் வன -*** *ஒரே தன்மையான (வேறுபாடு இல்லாத);* ***ஆயிரம் பகழி கோத்து உய்த்தான் -*** *ஆயிரம் அம்புகளை, வில்லில் பூட்டி அனுமன் மீது செலுத்தினான்.* ***(75)***

***5792. உய்த்தவெஞ் சரம் உரத்தினும் கரத்தினும் ஒளிப்ப,***
***கைத்தசிந்தையன் மாருதி, நனி தவக் கனன்றான்; வித்தகன் சிலை விடு கணை விசையினும் கடுகி,***
***அத் தடம் பெருந்தேரொடும் எடுத்து, எறிந்து,***
***ஆர்த்தான்.***

***உய்த்த வெம்சரம் -*** *அவ்வாறு இந்திரசித்து செலுத்திய கொடிய அம்புகள்;* ***உரத்தினும் கரத்தினும் ஒளிப்ப -*** *தனது மார்பிலும் கைகளிலும் அழுந்த;* ***மாருதி -*** *அனுமன்;* ***கைத்த சிந்தையன் நனிதவகனன்றான் -*** *வெறுத்த மனத்தினனாய், மிகவும் கோபம் மேற் கொண்டவனாய்;* ***வித்தகன் சிலை விடுகணை விசையினும் கடுகி -*** *ஞானவடிவனான இராமபிரான் வில்லில் தூண்டும் அம்பின் வேகத்தினும் அதிக வேகமாகச் சென்று;* ***அத்தடம் தேரொடும் எடுத்து -*** *அந்த மிகப் பெரிய தேருடனே (இந்திரசித்தைத்) தூக்கி;* ***எறிந்து ஆர்த்தான் -*** *மேலே வீசி எறிந்து ஆரவாரஞ் செய்தான்.*

*அனுமன்,இந்திரசித்தைத் தேரோடு எடுத்து எறியச் செல்லும் வேகத்துக்கு, இராமபிரானது அம்பின் வேகம் உவமை கூறப்பட்டது. வித்தகன் - மேலோன். (இராமபிரான்)* ***(76)***

***5793. கண்ணின்மீச் சென்ற இமை இடை கலப்பதன்***
***முன்னம்,***
***எண்ணின் மீச்சென்ற எறுழ் வலித் திறலுடை***
***இகலோன்,***
***புண்ணின் மீச்சென்று பொழி புனல் பசும் புலால்***
***பொடிப்ப,***
***விண்ணின் மீச்சென்று, தேரொடும் பார்மிசை***
***வீழ்ந்தான்.***

***எண்ணின் மீசென்ற எறுழ்வலி திறலுடை இகலோன் -*** *எண்ணத்தைக் கடந்து சென்ற (வரம்பு கடந்த) மிக்க வலிமையுடைய பகைவனான இந்திரசித்து;* ***தேரொடும் விண்ணின் மீ சென்று -*** *(அனுமன் எடுத்தெறிந்த விசையினால்) தேரோடும் வானத்தின்மேல் எல்லையில் போய்;* ***புண்ணின் மீ சென்று பொழி புனல் பசும் புலால் பொடிப்ப -*** *புண்களின் மேலே பெருகி வழிகின்ற இரத்தம் புதிய புலால் நாற்றத்தோடு வெளிப்பட;* ***கண்ணின் மீ சென்ற இமை இடை கலப்பதன் முன்னம் -*** *கண்களின் மேல்உள்ளஇமை கீழிமையிலே வந்துகூடுவதன் முன்னம்;* ***பார்மிசை வீழ்ந்தான் -*** *தரையில் வந்து வீழ்ந்திட்டான்.*

இந்திரசித்து,அனுமனால் வீசி எறியப் பட்டு, தேரோடு, கீழே வந்து விழும் வேகத்துக்கு, கண் இமை பொருந்தும் வேகம் உவமையாக்கப்பட்டது.
*(77)*

**5794. விழுந்துபார் அடையாமுனம், மின் எனும் எயிற்றான்,**
**எழுந்து, மாவிசும்பு எய்தினன்; இடை, அவன் படையில்,**
**செழுந் திண் மாமணித் தேர்க் குலம் யாவையும் சிதைய**
**உழுந்துபேர்வதன்முன், நெடு மாருதி உதைத்தான்.**

***மின் எனும்எயிற்றான்*** - *மின்னலைப் போல ஒளிவீசும் பற்களை உடைய இந்திரசித்து;* ***விழுந்து பார் அடையா முனம்*** - *விழுந்து தரையை அடைவதன் முன்னமே;* ***எழுந்து மா விசும்பு எய்தினன்*** - *எழுந்து, பெரிய ஆகாயத்தை அடைந்தான்;* ***இடை*** - *அதற்கு இடையே;* ***நெடு மாருதி*** - *நீண்ட உருவுடைய அனுமான்;* ***உழுந்து பேர்வதன் முன்*** - *ஒரு உளுந்து உருளும் அளவினுள்ளே (விரைவாக);* ***அவன் படையில் செழுந்திண் மாமணி தேர்க்குலம் யாவையும்*** - *இந்திரசித்துவின் சேனையில் உள்ள பெரிய வலிய இரத்தினங்கள் பதித்த தேர்க்கூட்டம் எல்லாம்;* ***சிதைய உதைத்தான்*** - *அழியும்படி உதைத்தான்.*

*இந்திரசித்துதேரோடு நிலத்தில் விழுந்தவுடன், சிறிதும் தாமதிக்காது எழுந்து மேற் சென்றான் என்பதும், அவ்வாறு, அவன் மேற்செல்லும் கால அளவிற்குள் (உளுந்து உருளும் நேரத்துக்குள்) அவனுடைய மற்றைய தேர்க்குலத்தை அனுமன் உதைத்துச் சிதைத்தான் என்பதும் அதிவிரைவில் நிகழ்ந்த செயல்கள் ஆகும்.* *(78)*

*இந்திரசித்து அயன்படையை விடுத்தல்*

**5795. ஏறு தேர்இலன்; எதிர் நிற்கும் உரன் இலன்; எரியின்,**
**சீறு வெஞ் சினம்திருகினன், அந்தரம் திரிவான்,**
**வேறு செய்வது ஓர்வினை பிறிது இன்மையின், விரிஞ்சன்**
**மாறு இலாப்பெரும் படைக்கலம் தொடுப்பதே மதித்தான்.**

***ஏறு தேர் இலன்*** - *(தான்மீண்டும்) ஏறிப் போர்புரிய வேறு தேர் இல்லாதவனாய்;* ***எதிர் நிற்கும் உரன் இலன்*** - *(அனுமன்) எதிரே நின்று போர் செய்யும் வலிமை அற்றவனாய்;* ***எரியின் சீறு வெம் சினம் திருகினன்*** - *தீப் போலச் சீறுகின்ற கொடிய சினத்தால் மாறுபட்டவனாகி;* ***அந்தரம் திரிவான்*** - *வானில் சஞ்சரிக்கும் இந்திரசித்து;* ***வேறு செய்வது ஓர் வினை பிறிது இன்மையின்*** - *செய்வதற்குரியதோர் செயல் வேறு இல்லாமையால்;* ***விரிஞ்சன் மாறு இலாப் பெரும் படைக்கலம்*** - *பிரம்மதேவனுடைய நிகர் இல்லாத பெரிய ஆயுதமாகிய பிரம்மாத்திரத்தை;* ***தொடுப்பதே மதித்தான்*** - *தூண்டுவதாகிய கடுஞ் செயலையே செய்யத் துணிவு கொண்டான்.*

*இந்திரசித்து,பிரம்மாத்திரத்தைத் தொடுக்கத் துணிவதன் காரணம் கூறப்பட்டது. விரிஞ்சன் - பிரம்மன்.* ***(79)***

***5796. பூவும், பூநிற அயினியும், தீபமும், புகையும்,***
***தா இல்பாவனையால் கொடுத்து, அருச்சனை***
***சமைத்தான்;***
***தேவு யாவையும்,உலகமும், திருத்திய தெயவக்***
***கோவில் நான்முகன் படைக்கலம் தடக் கையில்***
***கொண்டான்.***

***தா இல்பாவனையால் -*** *தவறுதல் இல்லாத தியானவகையினால்;* ***பூவும், பூநிற அயினியும் தீபமும், புகையும் கொடுத்து -*** *மலர்களையும் பூநிறம் உள்ள வெண்சோறாகிய நைவேத்தியத்தையும் தீபத்தையும் தூபத்தையும் சமர்ப்பித்து;* ***அருச்சனை சமைத்தான் -*** *பிரம்மாத்திரத்துக்கு அருச்சனை செய்து;* ***தேவு யாவையும் உலகமும் திருத்திய -*** *தெய்வங்கள் எல்லாவற்றையும், உலகங்களையும் ஒழுங்காகப் படைத்த;* ***தெய்வக் கோவில் நான்முகன் படைக்கலம் -*** *தெய்வத் தன்மையுள்ள (திருமாலின் திருநாபிக்கமலமாகிய) சிறந்த இடத்தில் தோன்றி வசிக்கின்ற பிரம்மதேவனுடைய ஆயுதமான பிரம்மாத்திரத்தை;* ***தடம் கையில் கொண்டான் -*** *தனது பெரிய கையில் எடுத்துக் கொண்டான்.*

*இந்திரசித்து, பிரம்மாத்திரத்துக்குப் பூசை செய்தது பாவனையால் (தியானத்தால்) என்பது கூறப்பட்டது. போர்க்களம் ஆகையால், பூசைக்கு வெளிப் பொருள்கள் இல்லை என்பது கருத்து.* ***(80)***

***797. கொண்டு, கொற்ற வெஞ் சிலை நெடு நாணொடு***
***கூட்டி,***
***சண்ட வேகத்தமாருதி தோளொடு சாத்தி,***
***மண் துளங்கிட,மாதிரம் துளங்கிட, மதி தோய்***
***விண்துளங்கிட, மேரு துளங்கிட, விட்டான்.***

***கொண்டு -*** *அவ்வாறுபிரம்மாத்திரத்தைக் கையில் கொண்டு;* ***கொற்றவெம் சிலை நெடு நாணொடு கூட்டி -*** *அதை, தனது வலிய கொடிய வில்லின் நீண்ட நாணோடு சேர்த்து;* ***சண்ட வேகத்த மாருதி தோளொடு சாத்தி -*** *கொடிய வேகமுடைய அனுமனது தோள்களை இலக்காகக் குறிவைத்து;* ***மண் துளங்கிட -*** *பூமி நடுங்க;* ***மாதிரம் துளங்கிட -*** *திசைகள் நடுங்க;* ***மதிதோய் விண் துளங்கிட -*** *சந்திரன் தங்கிய வானம் நடுங்கிட;* ***மேருவும் துளங்கிட -*** *மேரு மலையும் நடுக்கம் கொள்ள;* ***விட்டான் -*** *அதனைத் தூண்டி விட்டான்.*

*இந்திரசித்துதெய்வத்தன்மையுள்ள பிரம்மாத்திரத்தை, அனுமனுடைய தோள்களைக் கட்டுமாறு மந்திரம் கூறி விட்டனன் என்க. மேருவும்; உம்மை உயர்வு சிறப்பினது. பிரம்மாத்திரத்தின் வலிமை இச்செய்யுளில் தெரிவிக்கப்பட்டது.* ***(81)***

*அயன் படைக்குஅடங்கிய அனுமனிடம் இந்திரசித்து வருதல்*

***5798. தணிப்பஅரும் பெரும் படைக்கலம், தழல் உமிழ் தறுகண்***
***பணிக்குலங்களுக்கு அரசினது உருவினைப் பற்றி,***
***துணிக்க உற்று,உயர், கலுழனும் துணுக்குற, சுற்றிப்***
***பிணித்தது, அப்பெரு மாருதி தோள்களைப் பிறங்க.***

***தணிப்பு அரும் -*** *எவராலும் அடக்குதற்கு அரியதான;* ***பெரும் படைக்கலம் -*** *பெரிய அந்த அத்திரமானது;* ***தழல் உமிழ் தறுகண் -*** *கனல் வீசும் கொடுமை வாய்ந்த;* ***பணி குலங்களுக்கு அரசினது உருவினை பற்றி -*** *பாம்புக் கூட்டங்களுக்கு அரசனுடைய வடிவத்தை ஏற்றுக் கொண்டு;* ***துணிக்க உற்று உயர் கலுழனும் -*** *அதனைத் துண்டிக்க வந்த உயர எழும் கருடனும்;* ***துணுக்குற -*** *அஞ்சும்படி;* ***அப் பெரு மாருதி தோள்களை பிறங்க சுற்றி பிணித்தது -*** *அந்தப் பெரிய அனுமன் தோள்களை நன்றாகச் சுற்றிக் கொண்டு கட்டிவிட்டது. பாம்புகளை எளிதில் அழிக்கும் தன்மையதான கருடனும் அஞ்சும்படி, பெரும் பாம்பின் வடிவத்துடன் சென்ற பிரமாத்திரம் அனுமன் தோள்களைப் பிணித்தது என்க.* ***(82)***

***5799. திண்ணென்யாக்கையைத் திசைமுகன் படை சென்று திருக,***
***அண்ணல் மாருதி,அன்று, தன் பின் சென்ற அறத்தின்***
***கண்ணின்நீரொடும், கனக தோரணத்தொடும், கடைநாள்,***
***தண்ணென் மா மதிகோளொடும் சாய்ந்தென, சாய்ந்தான்.***

***திசை முகன் படை-*** *பிரம்மதேவன் ஆயுதம்;* ***திண் என் யாக்கையை சென்று, திருக -*** *வலிமை வாய்ந்த அனுமனது உடலைப் போய்ச் சுற்றிக் கட்ட, (வருத்த);* ***அண்ணல் மாருதி -*** *பெருமையை உடைய அனுமன்;* ***கடை நாள் -*** *யுக முடிவுக் காலத்தில்;* ***தண் என் மாமதி கோளொடும் சாய்ந்தென -*** *குளிர்ச்சியான பெரிய பூர்ண நிலவு (நாடு என்ற)பாம்புடனே வானத்தினின்றும் கீழே விழுந்தால் போல;* ***அன்று தன் பின்சென்ற அறத்தின் கண்ணின் நீரொடும் -*** *(அவன் இலங்கையில் புகுந்த)அன்று, தன்பின்னே வந்த தரும தேவதையின் கண்ணீரொடும்;* ***கனக தோரணத்தொடும் சாய்ந்தான் -*** *பொன் மயமான தோரண வாயிலோடும் படிந்து சாய்ந்து விழுந்தான்.*

*அசோக வனத்துவெளிவாயிலில் நின்று அரக்கர்களுடன் போர் செய்த அனுமன் பிரம்மாத்திரத்தால் கட்டுண்டு அவ்விடத்திலேயே சாய்ந்தான். இதனைக் கனக தோரணத் தொடும் சாய்ந்தான் என்பதால் உணரலாம். மதி, அனுமனுக்கும், தோரணம், கோளுக்கும் ஒப்பு.* ***(83)***

***5800. சாய்ந்தமாருதி, சதுமுகன் படை எனும் தன்மை***
***ஆய்ந்து, 'மற்றுஇதன் ஆணையை அவமதித்து அகறல்***
***ஏய்ந்தது அன்று' என எண்ணினன், கண் முகிழ்த்து***

இருந்தான்;
'ஓய்ந்தது ஆம்இவன் வலி' என, அரக்கன்
வந்துற்றான்.

**சாய்ந்த மாருதி-** *கீழேவிழுந்த அனுமன்;* **சதுமுகன் படை எனும் தன்மை ஆய்ந்து -** *(தன் மேற் செலுத்தியது) பிரம்மாத்திரம் என்னும் உண்மையை உணர்ந்தறிந்து;* **இதன் ஆணையை அவமதித்து அகறல் ஏய்ந்தது அன்று என எண்ணினன் -** *இதன் கட்டளையை இகழ்ந்து இதனைவிட்டு நீங்குதல் தக்கதன்று எனக் கருதியவனாய்;* **கண் முகிழ்த்து இருந்தான் -** *கண்ணை மூடிக் கொண்டு அதற்குக் கட்டுப்பட்டவன் போல் இருந்தான்;* **அரக்கன் 'இவன் வலி ஓய்ந்தது ஆம்' என -** *அரக்கனாகிய இந்திரசித்து, இவனுடையவலிமை ஒழிந்துவிட்டது என்று எண்ணி;* **வந்துற்றான் -** *அனுமன் அருகில் வந்தடைந்தான்.*

*வர பலத்தால்பிரம்மாத்திரத்தையும் கடக்கும் ஆற்றல் உள்ளவனாயினும், அனுமன் பிரம்ம தேவனைப் பெருமைப் படுத்த வேண்டும் என்ற பெருந்தகையினால், அதற்குக் கட்டுப்பட்டிருந்தான் என்க.* ***(84)***

*அரக்கர் அனுமனைச்சூழ்ந்து ஆரவாரித்தல்*

***5801.*** **உற்றகாலையின், உயிர்கொடு திசைதொறும் ஒதுங்கி**
**அற்றம்நோக்கினர் நிற்கின்ற வாள் எயிற்று**
**அரக்கர்-**
**சுற்றும் வந்து,உடல் சுற்றிய தொளை எயிற்று**
**அரவைப்**
**பற்றிஈர்த்தனர்; ஆர்த்தனர்; தெழித்தனர்-பலரால்.**

**உற்ற காலையின்-** *(இவ்வாறு இந்திரசித்து அனுமன் அருகில் வந்து) சேர்ந்தபோது;* **உயிர் கொடு -** *முன் அனுமனுடன் போர் செய்ய அஞ்சித்தம் உயிரைக் காப்பாற்றிக் கொண்டு;* **திசைதொறும் ஒதுங்கி -** *நான்கு திசைகளிலும் ஓடி மறைந்து;* **அற்றம் நோக்கினர் -** *(அனுமனுக்குச்) சோர்வு நேரும் சமயத்தை எதிர் பார்த்து;* **நிற்கின்ற வாள் எயிற்று அரக்கர்பலர் -** *நின்ற, ஒளி தங்கிய பற்களையுடைய அரக்கர்களில் பலர்;* **சுற்றும் வந்து -** *அனுமனை நாற்புறங்களிலும் சூழ்ந்து வந்து;* **உடல் சுற்றிய தொளை எயிற்று அரவை -** *அனுமன் உடம்பைச் சுற்றிக் கொண்டிருந்த, துவாரமுள்ள விஷப்பற்களை உடைய அரவ வடிவான அந்தப் பிரம்மாத்திரத்தை;* **பற்றி ஈர்த்தனர் தெழித்தனர் -** *பிடித்து இழுத்து ஆர்த்தனர் பெருமுழக்கமிட்டு அனுமனை அதட்டினார்கள்.*
***(85)*** *அயன் படையில்கட்டுண்ட அனுமன் தோற்றம்*

***5802.*** **'குரக்குநல் வலம் குறைந்தது' என்று, ஆவலம்**
**கொட்டி**
**இரைக்கும் மாநகர் எறி கடல் ஒத்தது; எம்**
**மருங்கும்**
**திரைக்கும்மாசுணம் வாசுகி ஒத்தது; தேவர்,**
**அரக்கர்ஒத்தனர்; மந்தரம் ஒத்தனன், அனுமன்.**

***குரக்கு நல் வலம்***- குரங்கினுடைய நல்ல வலிமை; ***குலைந்தது என்று***- நிலை கெட்டது என்று எண்ணிக் களித்து; ***ஆவலம் கொட்டி இரைக்கும்மாநகர் -*** வாய்விட்டு உரக்கக்கத்தி, முழக்கமிடும் அந்தப் பெரிய இலங்கைநகரம்; ***எறிகடல் ஒத்தது -*** அலைமோதும் கடலை ஒத்திருந்தது; ***எம்மருங்கும் திரைக்கும் மாசுணம் வாசுகி ஒத்தது -*** எப்புறமும் அனுமன்உடலைச் சுற்றிப் பிணித்த பிரம்மாத்திரமாகிய பாம்பு வாசுகி என்னும் பாம்பைஒத்து விளங்கியது; ***அரக்கர் தேவர் ஒத்தனர் -*** அரக்கர்கள், முன் கடல்கடைந்த தேவர்களை ஒத்து விளங்கினர்; ***அனுமன் மந்தரம் ஒத்தனன் -*** (நாக பாசத்தால் சுற்றப் பட்ட) அனுமன், (வாசுகியால் சுற்றப்பட்ட) மந்தரமலையைப் போன்று விளங்கினான். ***(86)***

***5803. கறுத்தமாசுணம், கனக மா மேனியைக் கட்ட,***
***அறத்துக்கு ஆங்குஒரு தனித் துணை என நின்ற***
***அனுமன்,***
***மறத்து, மாருதம்பொருத நாள், வாள் அரா அரசு***
***புறத்துச் சுற்றியமேரு மால் வரையையும் போன்றான்.***

***கறுத்த மாசுணம் -*** கோபம்கொண்ட அந்தப் பிரம்மாத்திரமாகிய பாம்பு; ***கனகமா மேனியை கட்ட -*** பொன்னிறமான அனுமன் திருமேனியை வலிதில் இறுக்கிப் பிணிக்க; ***அறத்துக்கு ஆங்கு ஒரு தனி துணை என நின்ற அனுமன் -*** தரும தேவதைக்கு, அந்த இலங்கையில் தான் ஒருவனே துணைவனாக இருந்த அனுமன்; ***மறத்து மாருதம் பொருத நாள் வாள் அர அரசு -*** வலிமையோடு காற்று வீசியடித்த காலத்து, ஒளி தங்கிய அரவுக்கரசனான ஆதிசேடன்; ***புறத்து சுற்றிய -*** தன் வெளிப் புறமெல்லாம் நன்றாகச் சுற்றிக் கொண்டதாய் இருந்த;***மேருமால் வரையையும்போன்றான் -*** மேரு மலையையும் ஒத்து விளங்கினான்.

*பெரு வடிவமுள்ளஅனுமனைச் சூழ்ந்து இறுக்கிய பாம்புக்கு, மேருமலையை வளைத்து இறுக்கிய ஆதி சேடன் உவமையாக்கப்பட்டது. அனுமனுக்கு மேரு மலை உவமை.* ***(87)***

*இலங்கையர்மகிழ்ச்சி*

***5804. வந்துஇரைத்தனர், மைந்தரும், மகளிரும்,***
***மழைபோல்,***
***அந்தரத்தினும்,விசும்பினும், திசைதொறும் ஆர்ப்பார்;***
***முந்தி உற்றபேர் உவகைக்கு ஓர் கரை இலை;***
***மொழியின்,***
***இந்திரன்பிணிப்புண்ட நாள் ஒத்தது, அவ் இலங்கை.***

***மைந்தரும்மகளிரும் -*** (அரக்கர்களில்) ஆடவர்களும் பெண்பாலாரும்; ***வந்து இரைத்தனர் -*** வந்து ஒலி செய்தவராய்; ***மழை போல் -*** மேகத்தின்பேரிடி போல; ***அந்தரத்தினும், விசும்பினும், திசை தொறும் ஆர்ப்பார் -*** வெற்றிடங்களிலும், ஆகாயத்திலும், நான்கு திசைகளிலும், பெருமுழக்கமிடுவாராயினார்; ***முந்தி உற்ற பேர் உவகைக்கு -*** யாவற்றினும்முன்னதாக அவர்கள் அடைந்த மகிழ்ச்சிக்கு; ***ஓர் கரை இலை -*** ஒருஎல்லை இல்லை; ***மொழியின் -*** (அம் மகிழ்ச்சிக்கு ஒரு உவமை) கூறுமிடத்து; ***அ***

***இலங்கை இந்திரன் பிணிப்புண்ட நாள் ஒத்தது -*** *அந்த இலங்கை நகர்,(முன்பு) தேவேந்திரன் மேகநாதனால் கட்டப்பட்ட நாளில் களிப்படைந்ததைஒத்திருந்தது.*

*மேகநாதன்,தேவேந்திரனைப் பிடித்துக் கட்டிக் கொண்டு வந்த போது, இலங்கை நகரத்தினர் எப்படி மகிழ்ந்தனரோ, அப்படி அனுமனைக் கட்டிக் கொண்டு வந்த இப்போதும் மகிழ்ந்தனர் என்பதாம்.* ***(88)***

## *பிணி வீட்டுபடலம்*

*பிரம்மாத்திரத்தால் கட்டுண்ட அனுமன், சிறிது பொழுது தாழ்ந்து, அக்கட்டினின்றும் தன்னை விடுவித்துக் கொண்டதைப் பற்றிக் கூறுவது இந்தப் படலம்.*

*கட்டுப்பட்டஅனுமனைக் கண்ட அரக்கர் நிலை*

**கலி விருத்தம்**

***5805. 'எய்யுமின்; ஈருமின்; எறிமின்; போழுமின்;***
***கொய்யுமின்குடரினை; கூறு கூறுகள்***
***செய்யுமின்;மண்ணிடைத் தேய்மின்; தின்னுமின்;***
***உய்யுமேல்,இல்லை நம் உயிர்' என்று ஓடுவார்.***

***எய்யுமின் -*** *(இந்தக்கொடிய குரங்கை) அம்பு கொண்டு எய்யுங்கள்;* ***ஈருமின் -*** *வாள் கொண்டு வெட்டுங்கள்;* ***எறிமின் -*** *ஈட்டியால்குத்துங்கள்;* ***போழுமின் -*** *கோடாலியால் பிளவுங்கள்;* ***குடரினை கொய்யுமின் -*** *இதன் குடலைப் பறித்திடுங்கள்;* ***கூறு கூறு செய்யுமின் -*** *இதனைத்துண்டு துண்டுகளாக செய்யுங்கள்;* ***மண்ணிடைத் தேய்மின் -*** *தரையில் தேய்த்து அழியுங்கள்;* ***தின்னுமின் -*** *இதன் உடல் தசையைத் தின்னுங்கள்;* ***உய்யுமேல் நம் உயிர் இல்லை -*** *இது பிழைத்துப் போகுமானால், நமது உயிர் இல்லாததாகும்;* ***என்று ஓடுவார் -*** *என்று சொல்லிக் கொண்டு, (அனுமன் இருக்கும் இடத்துக்கு பல அரக்கர்கள்) ஓடி வந்தார்கள்.*

*இது பிழைத்தால்நம்மைக் கொன்று விடும் என்பது பிணிப்புண்ட அனுமனைக் கண்ட அரக்கர்கள் கருத்து. அரக்கர்கள் தம் கோப எண்ணத்தை வெளிப்படுத்தியது.* ***(1)***

***5806. மைத் தடங்கண்ணியர், மைந்தர், யாவரும்,***
***பைத் தலை அரவுஎனக் கனன்று, 'பைதலை***
***இத்தனைபொழுதுகொண்டு இருப்பதோ ?' எனா,***
***மொய்த்தனர்;கொலை செய முயல்கின்றார், சிலர்.***

***மை தடம்கண்ணியர் -*** *மையிட்ட பெரியகண்களை உடையவர்களானமகளிரும்;* ***மைந்தர் -*** *ஆடவரும்;* ***யாவரும் -*** *ஆகிய எல்லோரும்;* ***பைத்தலை அரவு என கனன்று -*** *படத்தோடு கூடிய தலையை உடையபாம்பு போலக் கோபம் கொண்டு;* ***பைதலை -*** *இந்தக் குரங்குப் பயலை;* ***இத்தனை பொழுது கொண்டு இருப்பதோ எனா -*** *இவ்வளவு நேரம்உயிருடன் வைத்துக் கொண்டு நாம் வாளா இருப்பதோ என்று கூறி;* ***மொய்த்தனர் -*** *அனுமனைச் சூழ்ந்து மொய்த்துக் கொண்டனர்;* ***சிலர் கொலை செய முயல்கின்றார் -*** *சில அரக்கர்கள், அனுமனைக் கொலை செய்ய முயற்சி செய்வாராயினர்.*

*கண்ணியர்மைந்தர் யாவரும் மொய்த்தனர்; சிலர் கொலை செய்ய முயன்றனர் என்பதாம்.* ***(2)***

***5807. ‘நச்சு அடைபடைகளால் நலியும் ஈட்டதோ,***
***வச்சிர உடல்? மறி கடலின்வாய் மடுத்து,***
***உச்சியின்அழுத்துமின், உருத்து; அது அன்றுஎனின்,***
***கிச்சிடை இடும்’எனக் கிளக்கின்றார் சிலர்.***

***சிலர் -*** *வேறுசிலர்;* ***வச்சிர உடல் -*** *இந்தக் குரங்கின் வயிரம் போன்ற உடல்;* ***நச்சு அடை படைகளால் நலியும் ஈட்டதோ? -*** *விஷம் தடவிய ஆயுதங்களைக் கொண்டு வருத்தி அழிக்கப்படத் தக்கதோ?;* ***மறி கடலின் வாய் மடுத்து உச்சியின் உருத்து அழுத்துமின் -*** *(அன்று என்றபடி) மடங்கிவிழும் கடலினிடம் தள்ளி (வெளிக்கிளம்பாதபடி) இதனைத் தலை உச்சியில்நன்றாக அழுத்துங்கள்;* ***அது அன்று எனின் -*** *அவ்வாறு செய்ய முடியவில்லை என்றால்;* ***கிச்சிடை இடும் -*** *நெருப்பிடை இட்டுக் கொல்லுங்கள்;* ***என கிளக்கின்றார் -*** *என்று சொல்வாராயினர்.*

*கிச்சு -நெருப்பு; கன்னடச்சொல்.* ***(3)***

***5808. ‘எந்தையை,எம்பியை, எம் முனோர்களைத்***
***தந்தனை போக’என, தடுக்கின்றார் பலர்;***
***‘அந்தரத்துஅமரர்தம் ஆணையால், இவன்***
***வந்தது’ என்று,உயிர்கொள மறுகினார் பலர்.***

***பலர் -*** *வேறு பலர்;* ***எந்தையை எம்பியை -*** *‘எமது தந்தையையும், எமது தம்பியையும்;* ***எம்முன்னோர்களை -*** *எமது தமையன்மார்களையும்;* ***தந்தனை போகு எனா -*** *மீளக் கொணர்ந்து கொடுத்துஅப்புறம் செல்’ என்று சொல்லி (அனுமனை);* ***தடுக்கின்றார் -*** *மறித்துக் கொள்பவரானார்கள்;* ***பலர் -*** *வேறு பலர்;* ***இவன் அந்தரத்து அமரர்தம் ஆணையால் வந்தது என்று -*** *இவன், வானில் உள்ள தேவர்களின் கட்டளையினால் இங்கு வந்ததாகும் என்று மாறாக எண்ணி;* ***உயிர் கொள மறுகினார் -*** *அந்த அனுமன் உயிரைப் பற்றிப் பறிக் கமுடியாது வருந்தினார்கள்.*

*தேவர்கள்அரக்கர்களுக்குப் பகைவர்களாதலால், அவர்களது ஆணையின் படி அனுமன் இலங்கைக்கு வந்திருக்கலாம் என்பது பல அரக்கர்களது எண்ணம். மறுகுதல் - மனம் குழம்புதல்; இவனை எங்ஙனம் கொல்வது என்று மனம் கலங்கினர் பலர்.*
***(4)***

***5809. ‘ஓங்கல்அம் பெரு வலி உயிரின் அன்பரை***
***நீங்கலம்;இன்றொடு நீங்கினாம்; இனி***
***ஏங்கலம்; இவன்சிரத்து இருந்து அலால் திரு***
***வாங்கலம்’ என்றுஅழும் மாதரார் பலர்.***

***ஓங்கல் அம்பெருவலி உயிரின் அன்பரை -*** *‘மலை போன்ற மிக்க வலிமையும் அழகும் உடைய எமது உயிர் அனைய கணவன்மார்களை;* ***நீங்கலம் -*** *இதுவரை நாங்கள் பிரிந்திலோம்;* ***இன்றொடு நீங்கினாம் -*** *(இவனால்) இன்றொடு நீங்கினவர்களானோம்;* ***இனி ஏங்கலம் -*** *இனி யாம் ஏக்கமுற்று வருந்தமாட்டோம்;* ***இவன் சிரத்து இருந்து அலால் திருவாங்கலம் -*** *இவன் தலையையே பீடமாகக் கொண்டு உட்கார்ந்து இருத்தலால், எங்கள் திருமாங்கல்யத்தை வாங்கி அகற்ற*

*மாட்டோம்'; **என்று அழும் மாதரார் பலர்** - என்று சொல்லி அழும் அரக்க மகளிர் பலராவர்.*

*'தாலி வாங்கும்துக்கச் சடங்கை, குரங்கினைக் கொன்று, அதன் தலையின் மேல் தான் நடத்துவோம்' என்று அரக்க மகளிர் வீராவேசத்துடன் கூறினர் என்க.*
***(5)***

***5810. கொண்டனர்எதிர் செலும் கொற்ற மா நகர்,***
***அண்டம் உற்றது,நெடிது ஆர்க்கும் ஆர்ப்புஅது-***
***கண்டம் உற்றுளஅருங் கணவர்க்கு ஏங்கிய***
***குண்டலமுகத்தியர்க்கு உவகை கூரவே.***

***கொண்டனர்** - அனுமனைப்பற்றி இழுத்துக் கொண்டு செல்பவர்களுக்கு; **எதிர் செலும் கொற்ற மாநகர்** - எதிரேவேடிக்கை பார்க்கவருகின்ற வெற்றியை உடைய இலங்கை நகரில் உள்ள அரக்கர்கள்; **நெடிது ஆர்க்கும் ஆர்ப்பு அது** - பெரிதாய் முழக்கும் ஆரவார ஒலி; **கண்டம் உற்று உள** - (அனுமனால் போரில்) கழுத்து அறுபட்டு அழிவடைந்துள்ள; **அரும் கணவர்க்கு ஏங்கிய குண்டல முகத்தியர்க்கு** - தமது அரிய கணவர்களுக்காக ஏக்கமுற்று வருந்திய, குண்டலம் விளங்கும் முகத்தை உடைய அரக்கமகளிர்க்கு; **உவகை கூர** - மகிழ்ச்சி மேலோங்கிவர,; **அண்டம் உற்றது** - உலகம் முழுதும் பரவிற்று.*

*தம்கணவன்மார்களைக் கொன்ற அனுமனைக் கட்டி இழுத்து வரும் செய்தியைக் கண்ட அரக்கர்களது பேரொலியைக் கேட்டதனால், கணவர்களை இழந்த மகளிர்கள் மகிழ்ந்தனர் என்க.* ***(6)***

*இலங்கையின் அழிவுபாடுகளைக் கண்டவாறு அனுமன் செல்லுதல்*

***5811. வடியுடைக்கனல் படை வயவர், மால் கரி,***
***கொடியுடைத்தேர், பரி கொண்டு வீசலின்,***
***இடி படச்சிதைந்த மால் வரையின், இல் எலாம்***
***பொடிபடக்கிடந்தன கண்டு, போயினான்.***

***வடி உடை கனல்படை வயவர்** - கூர்மை பொருந்தியநெருப்பைப் போன்ற கொடிய ஆயுதங்களைக் கொண்ட போர் வீரர்களையும்; **மால்கரி கொடி உடை தேர் பரி கொண்டு வீசலின்** - பெரிய யானை, கொடிகட்டிய தேர், குதிரை ஆகியவற்றை (தான்) கையில் எடுத்து வீசி எறிந்ததனால்; **இடிபட சிதைந்த மால் வரையின்** - இடி விழுதலால் சிதைவுபட்ட பெரிய மலைகள் போல; **பொடி பட கிடந்தன இல் எலாம்** - பொடிப் பொடியாக நொறுங்கிக் கிடந்தனவான இலங்கை நகரத்து வீடுகளை எல்லாம்; **கண்டு** - (மகிழ்ச்சியோடு) பார்த்துக் கொண்டே; **போயினான்** - (அனுமன் அந்நகரத்து வீதிகளின் வழியாய்ச்) சென்றான்.*

*அனுமன் இலங்கைநகரத்து மாளிகைகளின் இடிபாடுகளைப் பார்த்துக் கொண்டு, மகிழ்ச்சியை வெளிக்காட்டாது வீதி வழியே சென்றான் என்பது கருத்து.*
***(7)***

***5812. முயிறுஅலைத்து எழு முது மரத்தின், மொய்ம்பு தோள்***
***கயிறுஅலைப்புண்டது கண்டும், காண்கிலாது,***
***எயிறு அலைத்து எழும் இதழ் அரக்கர் ஏழையர்***
***வயிறு அலைத்துஇரியலின், மயங்கினார் பலர்.***

***முயிறு அலைத்து எழுமுது மரத்தின்** - எறும்பினங்களால் சூழப்பெற்று வளர்ந்த ஒரு பழைய மரத்தைப் போல; **மொய்ம்பு தோள்** - அனுமனது வலிய தோள்களை; **கயிறு அலைப் புண்டது கண்டும்** - நாகபாசம் கட்டி வருத்தியிருப்பதைப் பார்த்தும்; **காண்கிலாது** - (பயத்தினால்) பார்க்காமல்; **ஏழையர் வயிறு அலைத்து இரியலின்** - பேதையர்களான அரக்கிமார்கள் (குரங்கு இங்கும் வந்துவிட்டதோ என்று அஞ்சி) வயிற்றைப் பிசைந்து கொண்டு ஓடுதலின்; **எயிறு அலைத்து எழும் இதழ் அரக்கர் பலர்**- கோரைப் பற்கள் அச்சத்தால் நடுங்கி மேற்கிளம்பும் உதட்டை உடைய அரக்கர் பலர்; **மயங்கினார்** - (இக்குரங்கு என்ன தீமை செய்யத் தொடங்கியதோ என்று) திகைப்புற்றார்கள்.*

*முயிறு - ஒருவகைச்செவ்வெறும்பு. இது நாகபாசத்துக்கும் முதுமரம், அனுமன் தோளுக்கும் உவமைகள்.* ***(8)***

***5813. ஆர்ப்பு உறஅஞ்சினர்; அடங்கினார் பலர்;***
***போர்ப்புறச்செயலினைப் புகல்கின்றார் பலர்;***
***பார்ப்புற,பார்ப்புற, பயத்தினால் பதைத்து,***
***ஊர்ப் புறத்துஇரியலுற்று ஓடுவார், பலர்.***

***பலர், ஆர்ப்புஉற அஞ்சினர் அடங்கினார்** - பல அரக்கர்கள், நகரில் ஆரவாரம் உண்டாக, (அதனைக் கேட்டு) பயந்தவர்களாய் அடங்கியிருந்தனர்; **பலர் போர் புறச் செயலினை புகல்கின்றார்** - வேறு பலஅரக்கர்கள், (அனுமான்) போரில் செய்த வீரச் செயல்களை எடுத்துக் கூறுவாராயினார்; **பலர் பார்ப்புற பார்ப்புற** - மற்றும் பல அரக்கர்கள், அனுமனைப் பார்க்கும் போதெல்லாம்; **பயத்தினால் பதைத்து ஊர்ப் புறத்து இரியலுற்று ஓடுவார்** - அச்சத்தால் நடுங்கி, ஊருக்கு வெளியே சிதறி ஓடுபவரானார்கள்.*

*அனுமனைக் கண்டஅரக்கர் பலரின் செயல்கள் கூறப்பட்டன.* ***(9)***

***5814. 'காந்துறுகதழ் எயிற்று அரவின் கட்டு, ஒரு***
***பூந் துணர்சேர்த்தெனப் பொலியும், வாள் முகம்;***
***தேர்ந்து, உறுபொருள் பெற எண்ணி, செய்யுமின்;***
***வேந்து உறல்பழுது' என விளம்புவார், சிலர்.***

***காந்து உறு, கதழ்எயிற்று** - எரிக்கும்தன்மையுள்ளதும் கொடுமையுள்ளதுமான நச்சுப்பற்களை உடைய; **அரவின் கட்டு** - பாம்பினாலாகிய இந்தப் பிணிப்பு; **ஒரு பூந்துணர் சேர்த்து என** - ஒரு பூ மாலை கொண்டு கட்டினது போல; **வாள் முகம்***

***பொலியும்*** *- ஒளியுள்ள (இக்குரங்கினது) முகம் விளங்குகின்றது;* ***தேர்ந்து*** *- (ஆதலால்) விரைவுபடாது ஆலோசித்து;* ***உறுபொருள் பெற எண்ணி*** *- நல்ல பயனைப் பெறுமாறு சிந்தித்து;* ***செய்யுமின்*** *- (அதற்கு அப்பாற் செய்ய வேண்டிய காரியத்தைச்) செய்யுங்கள்;* ***வேந்து உறல் பழுது*** *- இந் நிலையில் இக்குரங்கு) அரசனிடம் போய்ச் சேர்தல் பயனுடையதன்று;* ***என, விளம்புவார் சிலர்*** *- என்று சில அரக்கர்கள் சொல்வார்கள்.*

*பிரம்மாத்திரப்பிணிப்பு, அனுமனுக்குப் பூமாலை பூண்டது போன்றுதான் இருந்தது; வருத்தமில்லை என்பது கருத்து.* ***(10)***

***5815. 'ஒளி வரும் நாகத்துக்கு ஒல்கி அன்று, தன்***
***எளிவரவு; இன்றுஇதன் எண்ணம் வேறு' எனா,***
***'களி வருசிந்தையால் காண்டி ! நங்களைச்***
***சுளிகிலையாம்'எனத் தொழுகின்றார், சிலர்.***

***இன்று*** *- இப்பொழுது;* ***தன் எளி வரவு*** *- இக்குரங்கு கொண்டுள்ள எளிமைத் தன்மை;* ***ஒளிவரும் நாகத்துக்கு ஒல்கி அன்று*** *- ஒளி பொருந்தியநாக பாசத்துக்குத் தளர்ச்சியுற்றதனால் அன்று;* ***இதன் எண்ணம் வேறு எனா-*** *இக்குரங்கு கொண்டுள்ள எண்ணம் வேறாயிருக்கும் என்று கருதி,(அனுமனை நோக்கி);* ***களி வரு சிந்தையால் காண்டி*** *- மகிழ்ச்சி பொருந்தியமனத்தோடு எங்களைப் பார்ப்பாய்;* ***நங்களை சுளி கிலை என*** *- எங்களைக்கோபிக்காதே என்று சொல்லி;* ***சிலர் தொழுகின்றார்*** *- சில அரக்கர்கள்அனுமனைத் தொழுது வணங்குவாராயினர்.* ***(11)***

***5816. பைங் கழல்அனுமனைப் பிணித்த பாந்தளை,***
***கிங்கரர்,ஒருபுடைக் கிளர்ந்து பற்றினார்-***
***ஐம்பதினாயிரர்,அளவு இல் ஆற்றலர்,***
***மொய்ம்பினின் எறுழ் வலிக் கருளன் மும்மையார்.***

***அளவு இல்ஆற்றலர்*** *- அளவற்ற வலிமை உடையவர்களும்;* ***மொய்ம்பினின் எறுழ் வலிகருளன் மும்மையார்*** *- தம் தம் பராக்கிரமத்தில் மிக்கவர்களுமான;* ***கிங்கரர் ஐம்பதினாயிரம் ஒரு புடைகிளர்ந்து*** *- ஐம்பதினாயிரம் ஏவலர்கள் ஒரு பக்கத்தில் வந்து கூடி நின்று;* ***பைங்கழல் அனுமனைப் பிணித்த பாந்தளைப் பற்றினார்*** *- பசுமையான வீரக்கழலை உடைய அனுமனைக் கட்டியுள்ள நாக பாசத்தைப் பிடித்து இழுத்துக் கொண்டு செல்வாராயினர்.*

*ஒரு புடை என்றதனால், மறுபக்கத்திலும் ஐம்பதினாயிரர் பற்றியிருக்க வேண்டும் என்று உணரலாம்.* ***(12)***

***5817. 'திண்திறல் அரக்கர்தம் செருக்குச் சிந்துவான்,***
***தண்டல் இல் தன்உருக் கரந்த தன்மையான்,***
***மண்டு அமர்தொடங்கினன், வானரத்து உருக்***
***கொண்டனன்,அந்தக்கொல்?' என்றார் பலர்.***

*அந்தகன் - (முன்புஇராவணனுக்குத் தோற்று ஓடிய) எமன்;* ***திண் திறல்அரக்கர் தம் செருக்கு சிந்துவான்*** *- மிக்க வலிமை உடைய அரக்கர்களதுகருவத்தை அழிக்கும்*

*பொருட்டு; **தண்டல் இல் தன் உரு கரந்ததன்மையான் -** அழிதல் இல்லாத தனது வடிவத்தை மறைத்துக் கொண்டவனாய்; **வானரத்து உரு கொண்டனன் -** குரங்கு வடிவத்தை எடுத்துக் கொண்டு; **மண்டு அமர் தொடங்கினன் கொல் -** மிக்க போரைத் தொடங்கிச் செய்தனனோ ?; **என்றார் பலர் -** என்று கூறினார் பல அரக்கர்கள்.*

*அனுமன் யாவன்என்பதைப் பற்றி அரக்கர் தமக்குள் ஆராய்ந்தமையைத் தெரிவித்தவாறு.* ***(13)***

***5818. அரமியத்தலம்தொறும், அம் பொன் மாளிகைத்***
***தரம் உறுநிலைதொறும், சாளரம்தொறும்,***
***முரசு எறிகடைதொறும், இரைத்து மொய்த்தனர்-***
***நிரை வளைமகளிரும், நிருத மைந்தரும்.***

*__நிரைவளைமகளிரும் -__ வரிசையான பலவளையல்களை அணிந்த அரக்க மகளிரும்; **அரமியம் தலம் தொறும் -** மாளிகையின்மேல் உள்ள நிலா முற்றங்களிலும்; **அம் பொன் மாளிகை தரம் உறு நிலை தொறும் -** அழகிய பொன்மயமான வீடுகளின் மேல் நிலைகளிலும்; **சாளரம் தொறும் -** பலகணிகளிலும்; **முரசு எறிகடை தொறும் -** பேரிகைகள் முழக்கும்இடங்களிலும்; **இரைத்து மொய்த்தனர் -** முழக்கமிட்டுக் கொண்டு கூடி நெருங்கியிருந்தனர்.*

*வீதியில் இடம்இல்லாமையைத் தெரிவிக்கின்றது.* ***(14)***

***5819. 'கயிலையின் ஒரு தனிக் கணிச்சி வானவன்,***
***மயில் இயல்சீதைதன் கற்பின் மாட்சியால்,***
***எயிலுடைத் திருநகர் சிதைப்ப எய்தினன்,***
***அயில் எயிற்றுஒரு குரங்கு ஆய்' என்பார், பலர்.***

*__கயிலையின்ஒருதனி கணிச்சிவானவன் -__ கயிலைமலை மீது உள்ள ஒப்பற்ற மழு என்னும் ஆயுதத்தை ஏந்திய சிவபிரானாகிய தேவன்; **மயில் இயல் சீதைதன் கற்பின் மாட்சியால் -** மயில் போன்ற சாயலை உடைய சீதையின் பெருமையால்; **அயில் எயிற்று ஒரு குரங்கு ஆய் -** கூரிய பற்களை உடைய ஒரு குரங்கின் வடிவமாய்; **எயில் உடை திருநகர் சிதைப்ப எய்தினன் -** மதில்களை உடைய இந்த அழகிய இலங்கை நகரை அழிக்கவந்து அடைந்துள்ளான்; **என்பார் பலர் -** என்று பல அரக்கர்கள் கூறுவாராயினர்.* ***(15)***

***5820. அரம்பையர், விஞ்சை நாட்டு அளக வல்லியர்,***
***நரம்பினும் இனியசொல் நாக நாடியர்,***
***கரும்பு இயல்சித்தியர், இயக்கர் கன்னியர்,***
***வரம்பு அறுசும்மையர், தலைமயங்கினார்.***

*__அரம்பையர் -__ தேவமகளிர்; **விஞ்சை நாட்டு அளகவல்லியர் -** வித்தியாதர நாட்டுக் கூந்தலை உடைய கொடி போன்ற பெண்கள்; **நரம்பினும் இனிய சொல் நாக நாடியர் -** யாழ் நரம்பின் இசையை விட இனிய சொற்களை உடைய நாகலோகத்துக் கன்னியர்; **கரும்பு இயல் சித்தியர் -** (தம்மை நுகர்வார்க்கு) கரும்பு போன்ற சுவையை நல்கும் சித்த*

*கணப்பெண்கள்;* ***இயக்கர் கன்னியர் -*** *யட்சகுலமகளிர்;* ***வரம்பு அறு சும்மையர் -*** *அளவற்ற இரைச்சலுடையவர்களாய்;* ***தலை மயங்கினார் -*** *எல்லா இடங்களிலும் வந்து கூடினார்கள்.*

*இவர்கள்,இராவணனால் அபகரிக்கப்பெற்று இலங்கையில் கொண்டு வந்து வைத்திருந்த அவனுடைய காதல் மகளிர்கள். சும்மை - ஒலி. 'இழுமென் சும்மை' - (பொருந. 65)* ***5821. 'நீரிடைக்கண் துயில் நெடிய நேமியும்,***
***தாருடைத் தனிமலர் உலகின் தாதையும்,***
***ஓர் உடல்கொண்டு, தம் உருவம் மாற்றினர்,***
***பாரிடைப்புகுந்தனர் பகைத்து' என்பார் பலர்.****

***நீரிடை கண்துயில் நெடிய நேமியும் -*** *திருப்பாற்கடலில்பள்ளி கொண்டுள்ள பெரிய சக்கராயுதத்தை உடைய திருமாலும்;* ***தார் உடை தனிமலர் உலகின் தாதையும் -*** *தாமரை மலர் மாலை அணிந்து உலகத்தைப் படைத்தவனான பிரம்மதேவனும்;* ***பகைத்து -*** *அரக்கர்களோடு பகைமை கொண்டு;* ***ஓர் உடல் கொண்டு உருவம் மாற்றினர் -*** *சேர்ந்து ஓர் உடலைத்தாங்கி, தமது வடிவை மாற்றிக் கொண்டவர்களாய்;* ***பாரிடை புகுந்தனர் -*** *நிலவுலகத்தில் வந்து பிரவேசித்துள்ளார்.* ***என்பார் பலர் -*** *என்று கருதினர் பல அரக்கர்கள்.*

*பிரம்மாவும்திருமாலும் தாமான தனித்தனி நிலையில் அரக்கர்களை அழிக்கும் வலிமையற்றவர்களாய், ஒன்று ஆகிக் குரங்கின் வடிவில் வந்தனர் எனக்கருதினர் பலர்.* ***(17)***

***5822. அரக்கரும்அரக்கியர் குழாமும் அல்லவர்***
***கரக்கிலர், நெடுமழைக் கண்ணின் நீர்; அது,***
***விரைக் குழல்சீதைதன் மெலிவு நோக்கியோ ?***
***இரக்கமோ ?அறத்தினது எளிமை எண்ணியோ ?***

***அரக்கரும்அரக்கியர் குழாமும் அல்லவர் -*** *அரக்க ஆடவர் மகளிர்களுடைய கூட்டம் அல்லாதவர்களான தேவர் முதலிய அரம்பையர்கள்;* ***நெடு மழை கண்ணின் நீர் கரக்கிலர் -*** *நெடிய மழை போலும், (பெருகிய தம்) கண்ணீரை மறைக்காதவர் களாயினர்;* ***அது -*** *அவ்வாறு கண்ணீர் பெருகிய செயல்;* ***விரை குழல் சீதை தன் மெலிவு நோக்கியோ ? -*** *நறுமணமுள்ள கூந்தலை உடைய சீதா பிராட்டியின் துன்பத்தைக் கருதியோ ?;* ***இரக்கமோ ? -*** *அனுமனுக்கு உண்டான துன்பத்தால் ஏற்பட்ட இரக்கத்தாலோ ?;* ***அறத்தினது எளிமை எண்ணியோ ? -*** *தருமத்தினது, எளிமையைக் கருதியதனாலோ (நேர்ந்தது).*

*அரக்கர்யாவரும், அச்சம், வெறுப்பு சினம் ஆகியவை கொண்டிருக்க, தேவர் முதலியோர் இரக்கமும் துன்பமும் கொண்டிருந்தனர் என்று கூறப்பட்டது.* ***(18)*** *கட்டுப்பட்டுச்செல்லும் அனுமன் கருத்து*

***5823. ஆண்தொழில் அனுமனும், அவரொடு ஏகினான்;***
***மீண்டிலன்;வேறலும் விரும்பலுற்றிலன்;***

***'ஈண்டு இதுவேதொடர்ந்து இலங்கை வேந்தனைக்***
***காண்டலே நலன்'எனக் கருத்தின் எண்ணினான்.***

***ஆண் தொழில்அனுமனும் -*** *ஆண்மைத் தொழிலின்மிக்க அனுமனும்;* ***மீண்டிலன் -*** *திரும்பிச் செல்லாதனாயும்;* ***வேறலும் விரும்பல் உற்றிலன் -*** *அவர்களை வெல்லுதலையும் விரும்பாதவரையும்;* ***ஈண்டு இதுவே தொடர்ந்து -*** *இங்கு இப்படியே தொடர்ந்து சென்று;* ***இலங்கை வேந்தனைக் காண்டலே நலன் -*** *இலங்கை அரசனான இராவணனைப் பார்ப்பதே நல்லதாகும்;* ***என கருத்தில் எண்ணினன் -*** *என்று மனத்தில் நினைத்தவனுமாகி;* ***அவரொடு ஏகினான் -*** *அவ்வரக்கர்களுடனே தானும் கூடச் சென்றான்.*

*'தொடர்ந்துபோய்' என்னும் பாடம் ஓசைச் சிதைவு நோக்கி விடப்பட்டது.*
***(19)***

***5824. 'எந்தையது அருளினும், இராமன் சேவடி***
***சிந்தை செய்நலத்தினும், சீதை, வானவர்,***
***தந்து உளவரத்தினும், தறுகண் பாசமும்***
***சிந்துவென்;அயர்வுறு சிந்தை சீரிதால்;***

***எந்தையதுஅருளினும் -*** *என் தந்தையான வாயுதேவனது கருணையினாலும்;* ***இராமன் சேவடி சிந்தை செய் நலத்தினும் -*** *இராமபிரான்சிவந்த திருவடிகளை யான் தியானம் செய்யும் புண்ணியத்தாலும்;* ***சீதை,வானவர் தந்துள வரத்தினாலும் -*** *சீதா பிராட்டியும் தேவர்களும் கொடுத்துள்ள வரங்களினாலும்;* ***தறுகண் பாசமும் சிந்துவென் -*** *கொடிய இந்தப் பிரம்மாத்திரத்தையும் அற்றி சிதறிவிடச் செய்யவல்லேன் யான்;* ***அயர்வுறு சிந்தை சீரிது -*** *(ஆயினும்) இதனால் நான் களைப்புற்றமனத்தோடு இருப்பதே சிறப்புடைத்தாகும்.*

*'அயர்வுறு சிந்தைசீரிது' என்ற தன் காரணம் அடுத்த நான்கு கவிகளில் விளங்கும். அதற்காகத்தான், அனுமன், அரக்கர்கள் தன்னைக் கட்டி ஈர்த்துச் செல்ல அடங்கியிருந்தான், என்பதாம். ஆல் - அசை.* ***(20)***

***5825. 'வளை எயிற்று அரக்கனை உற்று, மந்திரத்து***
***அளவுறு முதியரும்அறிய ஆணையால்***
***விளைவினைவிளம்பினால், மிதிலை நாடியை,***
***இளகினன்,என்வயின் ஈதல் ஏயுமால்;***

***வளை எயிற்றுஅரக்கனை உற்று -*** *வளைந்த பற்களை உடைய அரக்கனாகிய இராவணனை அடைந்து;* ***மந்திரத்து அளவுறு முதியரும் அறிய -*** *ஆலோசனைச் சபைக்கு உரியராக அளந்து குறிப்பிடப்பட்ட முதியோர்களும் அறியும்படி;* ***ஆணையால் விளைவினை விளம்பினால் -*** *இராமபிரான் கட்டளைப் படி, மேல் நிகழக்கூடிய செயல்களை நான் எடுத்துக் கூறினால்;* ***இளகினன் -*** *(இராவணன்) மனவுறுதி குலைந்து நெகிழ்ந்து;* ***மிதிலை நாடியை என் வயின் ஈதல் ஏயும் -*** *மிதிலை நாட்டவளான சீதையை என்னிடம் கொடுத்து விடக்கூடும்.*

*சிந்தைச்சீர்மையால் விளையக் கூடிய முதற் பயன் இது. சீதையைச் சிறை வீடு செய்தல். ஆல் - ஈற்றசை.* ***(21)***

***5826. 'அல்லதூஉம், அவனுடைத் துணைவர் ஆயினார்க்கு***
***எல்லையும்தெரிவுறும்; எண்ணும் தேறலாம்;***
***வல்லவன்நிலைமையும் மனமும் தேறலாம்;-***
***சொல் உக, முகம்எனும் தூது சொல்லவே;***

***அல்ல தூஉம் -*** *அதுஅல்லாமலும்;* ***அவனுடை துணைவர் ஆயினார்க்கு -*** *அந்த இராவணனுடைய துணைவர்களாய் உள்ளவரின்;* ***எல்லையும் தெரிவுறும் -*** *அளவும் தெரிவதாகும்;* ***எண்ணும் தேறலாம் -*** *அவர்களது உட்கருத்தையும் தெரிந்து கொள்ளலாம்;* ***முகம் எனும் தூது சொல்லவே -*** *ஒரு அரசனுக்கு முகம் என்று சொல்லத்தக்க தூதனாக வந்த நான் (இராமபிரான் சொல்லிய செய்தியை இராவணனிடம்) சொன்னவுடன்;* ***சொல் உக -*** *(அவன் வாயினின்று) வார்த்தைகள் சிந்துவனபோல் வெளிப்பட;* ***வல்லவன் நிலைமையும் மனமும் தேறலாம் -*** *(அதனால்) வலிமை உடைய இராவணனது நிலைமையையும் மனப்போக்கையும் தெரிந்து கொள்ளலாம்.*

*சிந்தைச்சீர்மையால் எதிர்பார்க்கப்படும் இரண்டாவது பயன் ! துணைவர் அளவும், இராவணனது நிலையும் மனமும் அறிதல் என்பதாகும்.* ***(22)***

***5827. 'வாலிதன்இறுதியும், மரத்துக்கு உற்றதும்,***
***கூல வெஞ்சேனையின் குணிப்பு இலாமையும்,***
***மேலவன் காதலன்வலியும், மெய்ம்மையான்,***
***நீல் நிறத்துஇராவணன் நெஞ்சில் நிற்குமால்.***

***வாலிதன்இறுதியும் -*** *வாலியின் அழிவும்;* ***மரத்துக்கு உற்றதும் -*** *மராமரத்துக்கு நேர்ந்த அபாயமும்;* ***வெம்கூல சேனையின் குணிப்பு இலாமையும் -*** *கொடிய குரங்குப் படையின் அளவற்ற தன்மையும்;* ***மேலவன் காதலன் வலியும் -*** *சூரிய குமாரனான சுக்கிரீவனுடைய வலிமையும்;* ***நீல் நிறத்து இராவணன் நெஞ்சில் -*** *(நான் சென்று சொல்வதால்) நீல நிறத்தை உடைய இராவணனது மனத்தில்;* ***மெய்ம்மையால் நிற்கும் -*** *உள்ளபடி பதியும்.*

*சிந்தைச்சீர்மையின் மூன்றாவது பயன்; இராவணன் மனத்தில், வாலியின் மரணம் முதலியன பதிதல் ஆகும்.* ***(23)***

***5828. 'ஆதலான், அரக்கனை எய்தி, ஆற்றலும்***
***நீதியும் மனக்கொள நிறுவி, நின்றவும்***
***பாதியின்மேல்செல நூறி, பைப்பையப்***
***போதலே கருமம்'என்று, அனுமன் போயினான்.***

***ஆதலால் -*** *'ஆகையால்;* ***அரக்கனை எய்தி -*** *அரக்கனாகிய இராவணனைச் சந்தித்து;* ***ஆற்றலும் நீதியும் மனம் கொள நிறுவி -*** *இராமபிரானுடைய வலிமையையும், நெறி முறையையும் அவன் உள்ளத்தில் பதியும்படிச் செய்து;* ***நின்றவும் -*** *(அதன் பின்பும்*

*இசையாது போனால்) (இதுவரை என்னால் கொல்லப்பட்டவை போக) மீதியாக உள்ள அரக்கர் சேனைகளில்;* ***பாதியின் மேல் செல நூறி -*** *பாதிக்கு மேலாக அழித்துவிட்டு;* ***பைபைய போதலே கருமம் -*** *(அவசரப் படாமல்) மெதுவாகப் போவதே நான் செய்யத்தக்க காரியமாகும்;* ***என்று -*** *என்று எண்ணி;* ***அனுமன் போயினான் -*** *அனுமன் அடங்கி, அந்த அரக்கருடன் சென்றான்.*

*நிறுவுதல், நூறுதல், போதல் இவைகளைத் தனது கடமையாகக் கொண்டான் அனுமன். ஒன்றன் பின் ஒன்றாக இவைகளைச் செய்வது என்ற முடிவுடன், அடக்கமாக அனுமன் அரக்கருடன் சென்றான் என்க. நூறுதல் - அழித்தல்.*

*(24) இந்திரசித்துஅனுமனை இராவணன் மாளிகைக்குக் கொண்டு செல்லுதல்*

***5829. கடவுளர்க்கு அரசனைக் கடந்த தோன்றலும்,***
***புடை வரும் பெரும் படைப் புணரி போர்த்து எழ,***
***விடைபிணிப்புண்டது போலும் வீரனை,***
***குடை கெழு மன்னன்இல், கொண்டு போயினான்.***

***கடவுளர்க்குஅரசனை -*** *(இவ்வாறாக) தேவர்களுக்கு தலைவனான இந்திரனை;* ***கடந்த தோன்றலும் -*** *வென்ற வீரனான இந்திரசித்தும்;* ***புடைவரும் பெரும் படை புணரி -*** *பக்கங்களில் சூழ்ந்து வருகின்ற பெரிய சேனையாகிய கடல்;* ***போர்த்து எழ -*** *கவிந்து வர;* ***விடை பிணிப்புண்டது போலும் வீரனை -*** *ஒரு காளை கட்டுண்டது போல விளங்கும் அனுமனை;* ***குடைகெழு மன்னன் இல் -*** *கொற்றக் குடையோடு விளங்கும் அரசனாகிய இராவணனது அரண்மனைக்கு;* ***கொண்டு போயினான் -*** *கொண்டு சென்றான்.*

*விடை,ஆண்மைக்கும் பெருமிதத்துக்கும் உறைவிடமானது.* ***(25)***

*தூதுவர் நற்செய்திசொல்ல இராவணன் பரிசளித்தல்*

***5830. தூதுவர்ஓடினர்; தொழுது, தொல்லை நாள்***
***மாதிரம்கடந்தவற் குறுகி, 'மன்ன ! நின்***
***காதலன் மரைமலர்க் கடவுள் வாளியால்,***
***ஏதில் வானரம்பிணிப்புண்டதாம்' என்றார்.***

***தூதுவர் ஓடினர் -*** *இந்திரசித்தால் அனுப்பப்பெற்ற தூதர்கள் ஓடிச்சென்று;* ***தொல்லை நாள் -*** *பண்டு;* ***மாதிரம் கடந்தவன் -*** *திசைகளை எல்லாம் வென்றவனாகிய இராவணனை;* ***குறுகி -*** *அணுகி;* ***தொழுது -*** *வணங்கி;* ***மன்ன*** *- 'அரசனே !;* ***நின் காதலன் -*** *உனது மகனான இந்திரசித்து;* ***மரைமலர் கடவுள் வாளியால் -*** *தாமரைமலர் மீது விளங்கும் பிரம்மதேவனது படையாகிய அத்திரத்தால், (பிரம்மாத்திரம்);* ***ஏதில் வானரம் பிணிப்புண்டது என்றார் -*** *பகைமை கொண்ட குரங்கு கட்டுப்பட்டுள்ளது என்று சொன்னார்கள்.*

*தூதுவரின் செயலும்சொல்லும் கூறப்பட்டது.* ***(26)***

***5831. கேட்டலும்-கிளர் சுடர் கெட்ட வான் என***
***ஈட்டு இருள்விழுங்கிய மார்பின், யானையின்***
***கோட்டு எதிர்பொருத பேர் ஆரம் கொண்டு, எதிர்***
***நீட்டினன்-உவகையின் நிமிர்ந்த நெஞ்சினான்.***

***கேட்டலும் -*** *அதனைக்கேட்டவுடன்;* ***உவகையின் நிமிர்ந்த நெஞ்சினான் -*** *மகிழ்ச்சியால் ஓங்கிய மனமுடைய இராவணன்;* ***கிளரீ சுடர் கெட்ட வான் என -*** *விளங்குகின்ற (இரவில்) சந்திரன் ஒழியப் பெற்ற ஆகாயம் போல;* ***ஈட்டு இருள் விழுங்கிய -*** *செறிதலுள்ள இருளினால் விழுங்கப்பட்ட (மிகக்கறுத்த);* ***மார்பின் -*** *தன் மார்பினிடத்து;* ***யானையின் கோடு எதிர் பொரு -*** *(முன்) திக்கஜங்களின் தந்தங்களோடு புரண்டு மோதிக் கொண்டிருந்த;* ***பேர் ஆரம் கொண்டு எதிர் நீட்டினான் -*** *பெரிய முத்துமாலையைக் கழற்றிக் கொண்டு (நற்செய்தி சொன்ன தூதர்க்கு) வெகுமதியாகக் கொடுத்தான்.*

*தூதுவர் கூறியநற்செய்தி இராவணனை எவ்வளவு மகிழ்வித்துள்ளது என்பதை, அவன் தூதுவர்க்குக் கொடுத்த முத்து மாலைப் பரிசு தெரிவிக்கின்றது.*
***(27)***

*குரங்கைக்கொல்லாது கொணர, இராவணன் பணித்தல்.*

***5832. எல்லை இல்உவகையால் இவர்ந்த தோளினன்,***
***புல்லுற மலர்ந்தகண் குமுதப் பூவினன்,***
***'ஒல்லையின் ஓடி,நீர் உரைத்து, என் ஆணையால்,***
***"கொல்லலை தருக"எனக் கூறுவீர்' என்றான்.***

***எல்லை இல்உவகையால் -*** *அளவற்றமகிழ்ச்சியினால்;* ***இவர்ந்த தோளினன் -*** *பூரித்த தோள்களை உடையவனும்;* ***புல்லுற மலர்ந்தகண் குமுதப் பூவினன் -*** *தழுவுமாறு நன்று மலர்ந்த கண்களாகிய செவ்வாம்பல் மலர்களை உடையவனுமாகிய இராவணன்;* ***நீர் ஒல்லையின் ஓடி -*** *நீங்கள் விரைவாக ஓடிச் சென்று;* ***என் ஆணையால் உரைத்து -*** *எனது கட்டளையாகச் சொல்லி;* ***'கொல்லலை தருக' என கூறுவீர் என்றான் -*** *'அந்தக் குரங்கைக் கொல்லாது உயிருடன் கொண்டு இங்குத்தருக' என்று இந்திரசித்துவிடம் சொல்லுவீர் என்று கூறினான்,* ***(28)***

***5833. அவ் உரை,தூதரும், ஆணையால், வரும்***
***தெவ் உரைநீக்கினான் அறியச் செப்பினார்;***
***இவ் உரைநிகழ்வுழி, இருந்த சீதையாம்***
***வெவ் உரைநீங்கினாள் நிலை விளம்புவாம்;***

***தூதரும் -*** *தூதுவர்களும்;* ***அவ் உரை -*** *அந்தச் சொல்லை;* ***ஆணையால் -*** *இராவணனது கட்டளைப்படி;* ***வரும் -*** *தம் எதிரே அனுமனைப் பற்றிக் கொண்டு வரும்;* ***தெவ் உரை நீக்கினான் அறிய செப்பினார் -*** *பகைவர் என்ற சொல்லையே நீக்கிய இந்திரசித்து தெரிந்து கொள்ளும்படிக் கூறினார்கள்;* ***இவ் உரை நிகழ்வுழி -*** *இந்த வார்த்தை எங்கும் பரவிய போது;* ***இருந்த சீதையாம் -*** *அசோகவனத்தில் காவலில் இருந்த சீதையாகிய;* ***வெவ் உரை நீங்கினாள் நிலை விளம்புவாம் -*** *கொடியபழிச் சொல்லின் நீங்கியவளது நிலையைக் கூறுவோம். இது கவிக்கூற்று.தெவ் உரை நீக்கினான்; பகைவர்களே*

*இல்லாதபடி செய்தவன் என்பது கருத்து, வெவ் உரை நீங்குதலாவது பழி நாணித் தகை சான்ற சொற்காத்தலாகும்.* ***(29)***

*அனுமனுக்கு உற்றதைத்திரிசடை சொல்ல, சீதை புலம்புதல்*

***5834. 'இறுத்தனன்கடி பொழில், எண்ணிலோர் பட***
***ஒறுத்தனன்' என்றுகொண்டு உவக்கின்றாள், உயிர்***
***வெறுத்தனள்சோர்வுற, வீரற்கு உற்றதை,***
***கறுத்தல் இல்சிந்தையாள் கவன்று கூறினாள்.***

***கடிபொழில்இறுத்தனன் -*** *மணம் மிக்கஅசோகவனத்தை ஒடித்தழித்தான்;* ***எண் இலோர் பட ஒறுத்தனன் -*** *அளவிறந்த அரக்கர்கள் அழியுமாறு கொன்றிட்டான்;* ***என்று கொண்டு -*** *என்றுஅவ்வப்போது சொல்லக் கேட்டுணர்ந்து;* ***உவக்கின்றாள் -*** *மகிழ்கின்றவளான சீதாபிராட்டிக்கு;* ***கறுத்தல் இல்சிந்தையாள் -*** *களங்கமில்லாத மனத்தை உடையவளான திரிசடை என்பவள்;* ***வீரற்கு உற்றதை -*** *மகாவீரனான அனுமனுக்கு ஏற்பட்ட துன்ப நிலையை;* ***உயிர் வெறுத்தனள் சோர்வுற -*** *தன் உயிரை வைத்துக் கொண்டு வாழ்வதில்வெறுப்புற்றவளாய், தளர்ச்சி அடையும்படி;* ***கவன்று கூறினாள் -*** *மனக்கவலையுடன் சொன்னாள்.*   *அனுமன் செய்தஆற்றல் மிக்க செயல்களையும், அவனுக்கு நேர்ந்த துன்ப நிலைமையையும் திரிசடை. சீதைக்கு அவ்வப் போது கூறுகின்றாள் என்று உணரலாம்.* ***(30)***

***கலிவிருத்தம்(வேறு)***

***5835. ஓவியம்புகையுண்டதுபோல், ஒளிர்***
***பூவின்மெல்லியல் மேனி பொடி உற,***
***பாவி வேடன்கைப் பார்ப்பு உற, பேதுறும்***
***தூவி அன்னம்அன்னாள், இவை சொல்லினாள்;***

***மேனி பொடி உற -*** *உடம்புபுழுதி படிந்திருக்க (அதனால்);* ***ஓவியம் புகை உண்டது போல் ஒளிர் -*** *சித்திரம், புகை மூடி ஒளி குறைந்தது போல விளங்குகின்ற;* ***பூவின் மெல் இயல் -*** *மலர் போன்ற மென்மைத் தன்மையளான சீதாபிராட்டி;* ***பாவி வேடன் கை பார்ப்பு உற -*** *பாவியாகிய ஒரு வேடன் கையில், தன் குஞ்சு அகப்பட்டுக் கொள்ள (அதனால்);* ***பேதுறும் தூவி அன்னம் அன்னாள் -*** *வருத்தம் அடைகிற மென்மையான இறகுகளை உடைய அன்னப்பறவையைப் போன்றவளாய்;* ***இவை சொல்லினாள் -*** *(அனுமனைக்குறித்து) இவ்வார்த்தைகளைச் சொல்லிப் புலம்பினாள்.*

*தாய்க்குத்தன்குழந்தையிடம் உள்ள அவ்வளவு அன்பு, உலகத்தாயான சீதாபிராட்டிக்கு அனுமனிடம் உள்ளது என்பதை இந்த உவமையால் உணரலாம். இந்திரசித்துக்கு, பாவி வேடனும், அனுமனுக்கு, வேடன் கையகப்பட்ட அன்னக் குஞ்சும், சீதைக்கு, அன்னப்பறவையும் உவமைகள் ஆகும். சொல்லியவார்த்தைகள், அடுத்த நான்கு கவிதைகளில் வருவது.* ***(31)***

***5836. 'உற்றுஉண்டாய விசும்பை உருவினாய்,***
***முற்றுண்டாய்;கலை யாவையும் முற்றுறக்***

***கற்றுண்டாய்; ஒருகள்ள அரக்கனால்***
***பற்றுண்டாய்;இதுவோ அறப் பான்மையே ?***

***உற்று உண்டாயவிசும்பை** - மிகப் பரந்துள்ளதானஆகாயத்தை; **உருவினாய் முற்றுண்டாய்** - ஊடுருவிச் சென்று அளவளாவி நிறைந்து; **கலையாவையும் முற்றுற கற்றுண்டாய்** - சகல கலைகளையும் முழுவதும் பொருந்த (சூரிய பகவானிடம்) கற்றுத் தேர்ந்தாய் (அப்படிப்பட்ட நீ); **ஒரு கள்ள அரக்கனால்** - ஒரு வஞ்சனை உடையஇராக்கதனால்; **பற்றுண்டாய்** - சிறைப்படுத்தப் பெற்றாய்; **அறப்பான்மை இதுவோ** - அறத்தின் இயல்பு இதுதானோ ?*

*'சகல கலைகளையும்கற்ற நீ, ஒரு கள்ள அரக்கனால் கட்டுண்டாயே' என்று அனுமனைப் பாராட்டி வருந்தினாள் பிராட்டி. ஆற்றலும் அறிவும் பெற்றவர்கள் நன்மை அடைதல்தான் அறத்தின் பான்மை. இங்கு, அதற்கு நேர் மாறான பயன் ஏற்பட்டுள்ளதால் அறத்தின் பான்மையோ ! என்று சீதா பிராட்டி ஐயமுற்றாள் என்க.*
***(32)***

***5837. 'கடர் கடந்து புகுந்தனை; கண்டகர்***
***உடர் கடந்தும்நின் ஊழி கடந்திலை;***
***அடர் கடந்ததிரள் புயத்து ஐய ! நீ***
***இடர்கள்தந்தனை, வந்து இடர் மேலுமே ?***

***நீ கடர் கடந்துபுகுந்தனை** - நீ, கடலைக் கடந்துஇங்கு வந்தாய்; **கண்டகர் உடர் கடந்தும்** - முள் போன்று கொடியவர்களான பல அரக்கர்களுடைய உடம்பின் வலிமையை அழித்து வெற்றி கொண்டு நின்றும்; **நின் ஊழி கடந்திலை** - உனது வாழ்நாள் ஒழியப் பெற்றிலை (இவ்வாறு); **அடர் கடந்த திரள் புயத்து ஐய !** - பகைவர் வலிமையை வென்ற பருத்த தோள்களை உடைய ஐயனே ! (நீ அரக்கர்கள் கையில் சிக்கியதனால்); **வந்து இடர் மேலும் இடர்கள் தந்தனை** - (கிட்கிந்தையினின்று) இங்கு வந்து எனக்குத் துன்பத்தின் மேலும் துன்பங்களை உண்டாக்கியவனானாய்.*

*இராமபிரானைப்பிரிந்ததனாலான துன்பத்தின் மேலும், இராம தூதன் பகைவர் கையில் கட்டுண்டதனாலான துன்பம் சேர்ந்து மேன்மேலும் வருத்துதலால் 'வந்து இடர்கள் மேலும் இடர் தந்தனை என்று பிராட்டி கூறி வருந்தினாள்.*
***(33)***

***5838. 'ஆழி காட்டி, என் ஆர் உயிர் காட்டினாய்க்கு,***
***"ஊழிகாட்டுவென்" என்று உரைத்தேன்; அது***
***வாழி காட்டும்என்று உண்டு; உன் வரைப் புயப்***
***பாழி காட்டி,அரும் பழி காட்டினாய்.***

***ஆழிகாட்டி** - இராமபிரானது கணையாழியை யான் காணுமாறு கொண்டுவந்து கொடுத்து; **என் ஆருயிர்காட்டினாய்க்கு** - (போக்கநினைத்த) என் அரிய உயிரை அழியாது நிற்கச் செய்த உனக்கு; **ஊழி காட்டுவென் என்று உரைத்தேன்** - (அதற்கு ஈடாக) கற்ப கோடி காலம் உன் வாழ்நாள் நீடிக்கும் என்று உனக்கு உறுதிமொழியான ஆசி கூறினேன்; **அது வாழி காட்டும் என்று உண்டு** - அது பொய்க்காது உன் வாழ்நாளை*

*நீட்டிக்கும் என்பது உறுதியாக உள்ளது; (அவ்வாறாக);* ***உன் வரை புயம் பாழி காட்டி -*** *உனது மலை போன்ற தோள்களின் வலிமையை போரில் தோன்றச் செய்து, (முடிவில்);* ***அரும்பழி காட்டினாய் -*** *நீக்குதற்கு அரிய ஒரு பழியை உண்டாக்கிக் கொண்டாய். (இதற்கு நான் என்ன செய்வேன்).*

*திருவாழியேபிராட்டியின் உயிரை நிலைக்கச் செய்ததால், 'ஆழிகாட்டி என் ஆருயிர் காட்டினாய்' என்றாள். 'அரும்பழி' என்பது இராமதூதன் பகைவர் கையில் அகப்பட்டதாகும். 'என் வாழ்த்துப் படி நீடூழி வாழ்வை'யாயினும் அரக்கர் கையில் அகப்பட்டதனால், வாழ்த்து பழுதுபட்டதோ என்று நினைத்து வருந்தினாள்* ***(34)***

***5839. 'கண்டு போயினை, நீள் நெறி காட்டிட,***
***"மண்டு போரில் அரக்கனை மாய்த்து, எனைக்***
***கொண்டு மன்னவன்போம்" எனும் கொள்கையைத்***
***தண்டினாய்-எனக்குஆர் உயிர் தந்த நீ !'***

***எனக்கு ஆருயிர் -*** *எனக்குஅரிய உயிரை;* ***தந்த நீ -*** *அளித்த நீ;* ***கண்டு போயினை -*** *(இராமபிரான் ஆணைப்படி) என்னைக் கண்டு சென்றாய் (அதற்கு மேல்);* ***நீள்நெறிகாட்டிட -*** *நீண்ட வழியைக் காட்டிக் கொண்டு நீ முன் வர;* ***மன்னவன் -*** *தலைவனான இராமபிரான் (இங்குவந்து);* ***மண்டு போரில் -*** *அடர்ந்த கடும் போரினிடத்து;* ***அரக்கனை மாய்த்து -*** *இராவணனைக் கொன்று;* ***எனைக் கொண்டு போம் -*** *என்னைச் சிறை மீட்டுக் கொண்டு போவான்;* ***எனும் கொள்கையை -*** *என்று நான் நம்பிக் கொண்டிருந்த கோட்பாட்டை;* ***தண்டினாய் -*** *தவிர்த்து நடந்தாய் (நீக்கிவிட்டாய்).*

*வளர்த்தவனேஅழித்தாற் போல, ஆருயிர் தந்த நீயே, 'இராமபிரான் என்னை மீட்பான்' என்ற என் நம்பிக்கையை அழித்து விட்டாய் என்றபடி. தண்டுதல் - தவிர்ந்து செல்லுதல். 'கற்றல் வேண்டுவோன் வழிபாடு தண்டான்' (முதுமொழிக்காஞ்சி - தண்டாப்பத்து -3) தண்டாய் - திருப்பிவாங்கிக் கொண்டாய் என்பது பழைய உரை.* ***(35)***

***5840. ஏயபன்னினள் இன்னன; தன் உயிர்***
***தேய, கன்றுபிடியுறத் தீங்கு உறு***
***தாயைப் போல,தளர்ந்து மயர்ந்தனள்-***
***தீயைச் சுட்டதுஓர் கற்பு எனும் தீயினாள்.***

***தீயை சுட்டது ஓர்கற்பு எனும் தீயினாள் -*** *நெருப்பையும் சுட்டு அவிக்கும் ஒரு கற்பு என்னும் பெரிய தீமை உடைய சீதாபிராட்டி;* ***இன்னன் ஏய பன்னினள் -*** *இத்தன்மையான வார்த்தைகளைத் தகுதியாகச் சொன்னவளாய்;* ***தன் உயிர் தேய கன்று பிடி உற தீங்கு உறும் தாயைப் போல -*** *தனது ஆன்மவலி குன்றும்படி தன்கன்று (புலி முதலிய கொடிய மிருகத்தினிடம்) பிடிபட வருந்தும் தாய்ப்பசுவைப் போன்று;* ***தளர்ந்து மயர்ந்தனள் -*** *சோர்வுற்று மயக்கம் அடைந்தாள்.*

*'தீயைச் சுட்டதுஓர் கற்பு' - சுட்டது என்பது காலம் கருதாது தன்மை கருதியதாகும். இது யுத்தகாண்ட இறுதியில் சீதாபிராட்டியின் கற்புச் சோதனையில்*

*நிரூபிக்கப்படுவதாகும். 'கற்பெனும் தீயினாள்' என்று முடிவது, அத்தீயே, பின்பு அனுமன் வாலில் இட்ட தீயாக மாறி, இலங்கையைச் சுடுவதற்குக் காரணமாவதைக் குறிப்பித்தவாறு. 'மடவார் துயர் வீணாகாது' என்பதற்கு இது ஒரு சான்று.*
***(36)***

*இந்திரசித்து,அனுமனை அரண்மனையுள் கொண்டு சேர்தல்*

***5841. பெருந் தகைப் பெரியோனைப் பிணித்த போர்***
***முருந்தன், மற்றைஉலகு ஒரு மூன்றையும்***
***அருந் தவப்பயனால் அரசு ஆள்கின்றான்***
***இருந்த, அப்பெருங் கோயில் சென்று எய்தினான்.***

**பெருந் தகைப்பெரியோனை -** *பெருமைக் குணத்திலும்அறிவிலும் பெரியோனான அனுமனை;* **பிணித்த போர் முருந்தன் -** *கட்டிய, போரில் வல்லவனான இந்திரசித்து;* **மற்றை உலகு ஒரு மூன்றையும் -** *இலங்கையோடல்லாது மற்ற (சுவர்க்கம் பூமி பாதலம்) மூன்று உலகங்களையும்;* **அரும் தவப்பயனால் -** *தான் முன் செய்த அரிய தவப் பயனால்;* **அரசு ஆள்கின்றான் இருந்த -** *அரசனாயிருந்து ஆள்கின்ற இராவணன் தங்கியிருந்த;* **அ பெருங் கோயில் -** *அந்தப் பெரிய அரண்மனையில்;* **சென்று எய்தினான் -** *சென்று அடைந்தான். இராவணன்தங்கியிருந்த அரண்மனைக்கு, இந்திரசித்து, அனுமனைக் கட்டிய நிலையில் கொண்டு சென்றான் என்பதாம். முகுந்தன் - சமர்த்தன்; திறமை வாய்ந்தவன். முருந்து - பறவைகளின் வலிய அடிக் குருத்து. பறவையின் அடிக்குருத்து போன்று, இராவணனுக்கு உதவுபவன் இந்திரசித்து என்பது கருத்து.* ***(37)***

**கலிநிலைத்துறை**

***5842. தலங்கள்மூன்றிற்கும் பிறிது ஒரு மதி தழைத்தென்ன***
***அலங்கல்வெண்குடைத் தண் நிழல் அவிர் ஒளி பரப்ப,***
***வலம் கொள்தோளினான் மண்நின்று வான் உற எடுத்த,***
***பொம் கொள் மா மணி வெள்ளியங்குன்று எனப் பொலிய,***

**அலங்கல்வெண்குடை -** *முத்து முதலியமணிச்சரங்கள் அசையப் பெற்ற வெண் கொற்றக் குடையானது;* **தலங்கள் மூன்றிற்கும் பிறிது ஒரு மதி** *மூவுலகங்களுக்கும் ஒளி வீசும் படி, வேறு ஒரு சந்திரன்சிறந்து விளங்குவது போல;* **தண் நிழல் அவிர் ஒளி பரப்ப -** *குளிர்ச்சியானநிழலையும் விளங்குகின்ற ஒளியையும் பரவச் செய்யவும்;* **வலம் கொள்தோளினால் -** *தன் வலிமை கொண்ட தோள்களால்;* **மண் நின்று வான் உறஎடுத்த -** *தரையிலிருந்து ஆகாயத்தை அளாவுமாறு மேலே தூக்கிய;* **பொலம்கொள் மாமணி வெள்ளியம் குன்று என பொலிய -** *அழகு கொண்டபெரிய சிறந்த கயிலையங் கிரியாகிய வெள்ளி மலைபோல, விளங்கவும்.*

*'இருந்த' என(55வது பாடல்) முடியும். குடைக்கு மதியும், வெள்ளியங்கிரியும் உவமைகளாகக் கூறப்பட்டன.* ***(38)***

***5843. புள் உயர்த்தவன் திகிரியும், புரந்தரன் அயிலும்,***
***தள் இல்முக்கணான் கணிச்சியும், தாக்கிய தழும்பும்,***
***கள் உயிர்க்கும்மென் குழலியர் முகிழ் விரல் கதிர் வாள்***
***வள் உகிர்ப்பெருங் குறிகளும், புயங்களில் வயங்க,***

***புள் உயர்த்தவன்திகிரியும் -*** *கருடப் பறவை விளங்க உயர்த்தப்பெற்றகொடியை உடைய திருமாலினது சக்கராயுதமும்;* ***புரந்தன் அயிலும் -*** *இந்திரனது வச்சிராயுதமும்;* ***தள் இல் முக்கணான் கணிச்சியும்-*** *விலக்கமுடியாத, முக்கண்ணனாகிய சிவபிரானது சூலாயுதமும்;* ***தாக்கிய தழும்பும் -*** *தம் மீது பட்டு உண்டாக்கிய வடுக்களும்;* ***கள் உயிர்க்கும் மென் குழலியர் -*** *தேனைச் சொரியும் மிருதுவான கூந் தலைஉடைய தன் காதல் மகளிர்;* ***முகிழ் விரல் -*** *அரும்பு போல் குவிந்தவிரல்களில் உள்ள;* ***கதிர்வாள் வள் உகிர் -*** *சுடரோடு கூடிய வாள் போன்றகூரிய நக நுனிகளால் உண்டாகிய;* ***பெரும் குறிகளும் புயங்களில் வயங்க -*** *பெரிய அடையாளங்களும் பெரிய தோள்களில் விளங்கவும். இராவணனதுவீரத்துக்கும் காதலுக்கும் அடையாளமாக விளங்குகின்றன அவன் தோள்களில் காணப்படும் வடுக்கள் என்பது கருத்து.* ***(39)***

***5844. துன்று செம்மயிர்ச் சுடர் நெடுங் கற்றைகள் சுற்றி,***
***நின்று திக்குற,நிரல்படக் கதிர்க் குழாம் நிமிர,***
***ஒன்றுசீற்றத்தின் உயிர்ப்பு எனும் பெரும் புகை உயிர்ப்ப,***
***தென் திசைக்கும்ஓர் வடவனல் திருத்தியது என்ன,***

***துன்று செம்மயிர் சுடர் நெடுங்கற்றைகள் சுற்றி நின்று திக்குற -*** *அடர்ந்தசிவந்த மயிர்களின் ஒளியுள்ள நீண்ட தொகுதிகள் சுற்றிலும் பரந்து நின்று எல்லாத்திசைகளிலும் அளாவ;* ***நிரல்பட கதிர் குழாம் நிமிர -*** *(அவற்றினின்று) வரிசை வரிசையாக (சிவந்த) ஒளிப் பிழம்புகள் (அவனது கரிய உடலின் மேல்) உயர்த்தெழுந்து விளங்குவதாலும்;* ***ஒன்று சீற்றத்தின் உயிர்ப்புஎனும் பெரும் புகை உயிர்ப்ப -*** *பொருந்திய கோபத்தால் எழுந்த பெருமூச்சாகிய பெரிய புகை வெளிப்படுவதாலும்;* ***தென் திசைக்கும் ஓர் வடிஅனல் திருத்தியது என்ன -*** *தெற்குத் திசைக்கும், ஒரு வடவைத் தீயை, அமைக்கப்பட்டதென்று சொல்லும்படியாகவும்.*

*இராவணனதுசெம்மயிர்க்கற்றைகளும், அவன் விடும் கோபப் பெருமூச்சும், தென் திசைக்கும் ஒரு வட அனல் (வடவாமுகாக்கனி) அமைந்தவை போன்றிருந்தன என்பதாம்.* ***(40)***

***5845.***

***மரகதக்கொழுங் கதிரொடு மாணிக்க நெடு வாள்***
***நரக தேயத்துள்நடுக்குறா இருளையும் நக்க,***

***சிரம்அனைத்தையும் திசைதொறும் திசைதொறும்***
***செலுத்தி,***
***உரகர்கோன்இனிது அரசு வீற்றிருந்தனன் ஒப்ப,***

***மரகதம் தொழும்கதிரொடு மாணிக்க நெடுவாள் -*** *(தன்முடிகளிலுள்ள) மரகதங்களின் செழுமையான ஒளிகளுடனே மாணிக்கங்களின் நீண்ட ஒளியும்;* ***நரக தேயத்துள் நடுக்குறா இருளையும் நக்க -*** *நரகலோகத்தினுள்ளே (எச்சுடர்க்கும்) அஞ்சாது நிறைந்திருக்கின்ற இருளையும் தாவி விழுங்க;* ***சிரம் அனைத்தையும் திசைதொறும் திசை தொறும் செலுத்தி -*** *தன்பத்துத் தலையையும், எல்லாத்திசைகளிலும் செல்லுமாறு பரப்பிக் கொண்டு;* ***உரகர் கோன் இனிது அரசு வீற்றிருந்தனன் ஒப்ப -*** *பாம்புகளுக்கு அரசனான ஆதிசேடன் மகிழ்ச்சியோடு அரசு கட்டிலில் வீற்றிருந்தது போல் விளங்கவும்.*

*இராவணன்ஆதிசேடனுக்கு ஒப்பாக வீற்றிருந்தான் என்க. இராவணன் பத்துத்தலைகளை உடையவனாதலால், ஆயிரம் தலைகளை உடைய ஆதிசேடனுக் கு உவமையாக்கப் பெற்றான். நரகலோகம் எப்போதும் இருளால் மூடப்பட்டிருக்கும் என்பதை, அடங்காமை ஆரிருள் உய்த்துவிடும்' 121. (பரி - உரை-) என்ற குறளாலும் உணரலாம்.* ***(41)***

***5846. குவித்தபல் மணிக் குப்பைகள் கலையொடும்***
***கொழிப்ப,***
***சவிச் சுடர்க்கலன் அணிந்த பொன் தோளொடு***
***தயங்க,***
***புவித் தடம்படர் மேருவைப் பொன் முடி என்னக்***
***கவித்து, மால்இருங் கருங்கடல் இருந்தது கடுப்ப,***

***குவித்த பல் மணிகுப்பைகள் -*** *தொகுத்துப் பதிக்கப்பெற்ற பலவகையான இரத்தினங்களின் தொகுதிகள்;* ***கலையொடும் கொழிப்ப சவி சுடர்கலன் -*** *மேலாடையுடன் புரண்டு விளங்கவும், ஒளியின் சுடரை வீசும் ஆபரணங்கள்;* ***அணிந்த -*** *(தம்மை) அணிந்துள்ள;* ***பொன்தோளொடு -*** *அழகிய தோள்களோடு;* ***தயங்க -*** *(அமைந்து) விளங்கவும், (அதனால்);* ***மால் இரும் கரும் கடல் -*** *மிகப் பெரிய கரிய கடலானது;* ***புவி தடம் படர் மேருவை பொன் முடி என்ன கவித்து இருந்தது கடுப்ப -*** *பூமியினிடத்துப் படர்ந்து விளங்கும், மேருமலையை பொன்முடியாகக் கவித்துக் கொண்டு வீற்றிருந்தது போல் விளங்கவும்.*

*மால்இருங்கருங்கடல், மேருவை முடியாகக் கவித்துக் கொண்டு வீற்றிருந்தது போல, இராவணன் வீற்றிருந்தான் என்பதாம். இராவணனுக்குக்கருங்கடலும், அவன் தோற்றத்துக்கு மேருமலையும் உவமைகளாயின.* ***(42)***

***5847. சிந்துராகத்தின் செறி துகில் கச்சொடு செறிய,***
***பந்தி வெண்முத்தின் அணிகலன் முழு நிலாப் பரப்ப,***
***இந்து வெண்குடைநீழலில், தாரகைஇனம் பூண்டு,***
***அந்தி வான்உடுத்து, அல்லு வீற்றிருந்ததாம் என்ன,***

***சிந்துராகத்தின் செறி துகில் கச்சொடு செறிய -*** *சிவப்பு நிறம் செறிந்த ஆடை அரைக்கச் சுடனே கூடி விளங்க;* ***பந்தி வெண்முத்தின் அணிகலன் முழு நிலா பரப்ப -*** *வரிசையாகக் கோக்கப் பெற்ற முத்துக்களால் ஆகிய மாலை முதலிய ஆபரணங்கள் பூர்ண சந்திரனது நிலவைப் போன்ற ஒளியைப் பரவச் செய்ய, (அதனால்);* ***அல்லு அந்தி வான் உடுத்து தாரகை இனம் பூண்டு இந்து வெண்குடை நீழலில் வீற்றிருந்தது ஆம் என்ன -*** *இருளானது செவ்வானத்தை ஆடையாக உடுத்திக் கொண்டு, நட்சத்திரத்தின் கூட்டங்களை ஆபரணமாகத் தரித்து, சந்திரனாகிய வெண் கொற்றக் குடையின் நிழலிலே, கொலு வீற்றிருந்தது என்று சொல்லும்படியும்.*

*இராவணனதுதோற்றம், இருளானது, செவ்வானத்தை ஆடையாக உடுத்தும், நட்சத்திரக் கூட்டங்களை ஆபரணமாகத் தரித்துக் கொண்டும், சந்திரனாகிய வெண்குடை நிழலில் ஓலக்கம் இருந்த காட்சி போன்று இருந்தது என்பதாம்.*
***(43)***

***5848. வண்மைக்கும், திரு மறைகட்கும், வானினும் பெரிய***
***திண்மைக்கும்,தனி உறையுளாம் முழு முகம், திசையில்***
***கண்வைக்கும்தொறும், களிற்றொடு மாதிரம் காக்கும்***
***எண்மர்க்கும்மற்றை இருவர்க்கும் பெரும் பயம் இயற்ற.***

***வண்மைக்கும் -*** *(குபேரசம்பத்தை வென்று பெற்றுள்ள) வளப்பத்துக்கும்;* ***திருமறைகட்கும் -*** *சிறந்த வேதங்கட்கும்;* ***வானினும் பெரியதிண்மைக்கும் -*** *ஆகாயத்தினும் பெரிய வலிமைக்கும்;* ***தனி உறையுளான் -*** *ஒப்பற்ற இருப்பிடமாய் உள்ள இராவணன்;* ***முழுமுகம் திசையில்கண்வைக்கும் தொறும் -*** *தனதுபெரிய முகங்கள்பத்தையும் ஒரு மிக்க வைத்து, எல்லாத்திக்குகளிலும் நோக்கும் போதெல்லாம்;* ***களிற்றொடு மாதிரம் காக்கும் எண்மர்க்கும் -*** *யானைகளோடு அந்த அந்தத் திக்குகளைக் காக்கும் எண் திசைக்காவலர்கட்கும்;* ***மற்றை இருவர்க்கும் -*** *மற்றவையான மேலும் கீழும் இருந்து பாதுகாக்கின்ற (துருவன் ஆதிசேடன் என்னும்) இருவர்க்கும்;* ***பெரும் பயம் எய்த -*** *மிக்க அச்சம் தோன்றவும்.*

*இராவணன்பார்வைக்கு, எட்டுத்திக்குப் பாலகர்களும் ? வானைப் பாதுகாக்கும் துருவனும், நிலத்தைப் பாதுகாக்கும் ஆதிசேடனும் பயந்து கிடந்தனர் என்பது கருத்து.*
***(44)***

***5849. ஏகநாயகன்தேவியை எதிர்ந்ததன் பின்னை,***
***நாகர் வாழ்இடம் முதல் என, நான்முகன் வைகும்***
***மாக மால்விசும்பு ஈறு என, நடுவண வரைப்பில்***
***தோகைமாதர்கள், மைந்தரின் தோன்றினர், சுற்ற,***

***ஏக நாயகன்தேவியை எதிர்ந்ததன் பின்னை -*** *(எல்லா உயிர்கட்கும்)தனித்தலைவனான இராமபிரானுடைய தேவியாகிய பிராட்டியைச் சந்தித்துநோக்கிய பிறகு;* ***நாகர் வாழ் இடம் முதல் என நான்முகன் வைகும்மாகமால்***

***விசும்பு ஈறு என நடுவண வரைப்பில் -*** *நாகர்கள் வாழும்இடமான பாதாளலோகம் முதலாக, பிரம்மதேவன் வாழ்கின்ற பெரிய வானில்உள்ள ஆகாயமான சத்தியலோகம் ஈறாக, இடையில் உள்ள ஏனைய உலகங்கள் அனைத்திலும் உள்ள;* ***தோகை மாதர்கள் -*** *மயில் போன்ற சாயலை உடைய மகளிர்கள்;* ***மைந்தரின் சுற்ற தோன்றினர் -*** *(இராவணன் பார்வைக்கு) ஆடவர்கள் என்னுமாறு அவனைச் சூழ்ந்து விளங்கவும்.*

*பிராட்டியைப்பார்த்த பிறகு இராவணன் கண்களுக்கு, பிற எந்த உலகத்து அழகிய மகளிர்களும், காம எண்ணம் உண்டாக்கும் தன்மையற்ற ஆடவர்களாகவே தோற்றினர் என்பது கருத்து.* ***(45)***

***5850. வானரங்களும், வானவர் இருவரும், மனிதர்***
***ஆன புன்தொழிலோர் என இகழ்கின்ற அவரும்,***
***ஏனை நின்றவர்இருடியர் சிலர், ஒழிந்து யாரும்,***
***தூ நவின்ற வேல்அரக்கர்தம் குழுவொடு சுற்ற,***

***வானரங்களும்-*** *குரங்குகளும்;* ***வானவர் இருவரும் -*** *திருமால், சிவபிரான் ஆகிய இருதேவர்களும்;* ***மனிதர் ஆன புன் தொழிலோர் என இகழ்கின்ற அவரும் -*** *மனிதர் என்னும் அற்பத் தொழில்களை உடையவர்கள் என்று (இராவணனால்) இகழப்படுகின்றவர்களும்;* ***ஏனைய நின்றவர் இருடியர் சிலர் ஒழிந்து -*** *மற்றும் விலகி நின்றவர்களான சில முனிவர்களும் நீங்கலாக;* ***யாவரும் தூ நவின்ற வேல் அரக்கர் தம் குழுவொடு சுற்ற -*** *மற்றை எல்லோரும், மாமிசம் படிந்த வேலாயுதங்களை உடைய அரக்கர்களின் கூட்டத்தோடு ஒப்பச் சூழ்ந்து நிற்கவும்.*

*அரக்கர் போலவேமற்றைய தேவ கணத்தினரும், இராவணனுக்குக் குற்றேவலர்களாய் அவனைச் சூழ்ந்து நின்றனர் என்பது கருத்து. தூ - மாமிசம்; நவின்ற - நாற்றத்தால் தெரிவிக்க என்ற கருத்தில் வந்துள்ளது.* ***(46)***

***5851. நரம்புகண்ணகத்துள் உறை நறை, நிறை பாண்டில்***
***நிரம்புசில்லரிப் பாணியும், குறடும், நின்று இசைப்ப,***
***அரம்பைமங்கையர் அமிழ்து உகுத்தாலன்ன பாடல்***
***வரம்பு இல்இன்னிசை, செவிதொறும் செவிதொறும்***
***வழங்க.****

***நரம்பு கண்அகத்து உள் உறை நறை -*** *நரம்புக் கருவியாகிய வீணைமுதலிய இசைக்கருவிகளினிடத்து உள்ளே தங்கியுள்ள இசையாகிய தேனும்;* ***நிறை பாண்டில் -*** *இலக்கணம் நிறைந்த கஞ்சக் கருவியும்;* ***நிரம்பு சில்லரிபாணியும் -*** *நிரம்பிய சில்லரி என்னும் வாத்தியத்தாளமும்;* ***குறடும் -*** *குறடுஎன்னும் தாளக் கருவியும்;* ***நின்று இசைப்ப -*** *இடையறாது நிலை நின்று ஒலிக்கவும்;* ***அரம்பை மங்கையர் அமிழ்து உகுத்தால் அன்ன பாடல் -*** *தேவமகளிர் அமிழ்தத்தைச் சிந்தினால் போன்ற வாய்ப்பாட்டினது;* ***வரம்பு இல் இன்னிசை -*** *அளவிறந்த இனிமையை உடைய இசையை;* ***செவி தொறும் செவி தொறும் வழங்க -*** *தனது இருபது காதுகளிலும் வந்து சொரியவும்.*

*நறை, பாண்டில்,பாணி, குறடு என்பவை நின்று இசைப்ப, அரம்பை மங்கையர் பாடல் இசை செவி தொறும் செவி தொறும் வயங்க என்க. பாணி - கை; அதனால் வரையறுத்து இடப்படுகிற தாளத்துக்கு இலக்கணை. பாடல் இன்னிசை - வாய்ப்பாட்டின் இனிய கீதம்; நறை - இசைத்தேன்.* ***(47)***

***5852. கூடு பாணியின் இசையொடும், முழவொடும் கூட,***
***தோடு சீறுஅடிவிழி மனம் கையொடு தொடரும்***
***ஆடல்நோக்குறின், அருந் தவ முனிவர்க்கும்***
***அமைந்த***
***வீடு மீட்குறும்மேனகைமேல், நகை விளங்க.+***

***பாணியின் கூடு -*** *தாளத்தோடு கூடிய;* ***இசையொடும் -*** *பாட்டுடனும்;* ***முழவொடும் -*** *மத்தள ஒலியுடனும்;* ***கூட -*** *மாறுபடாது ஒத்துவருமாறு;* ***தோடு சீறு அடி -*** *பூவிதழினும் மேம்பட்ட சிறிய பாதச் சதிவரிசை;* ***விழி மனம் கையொடு தொடரும் -*** *விழிப்பார்வை, அதிலேயே ஒன்றிய மனம், கையினால் காட்டும் அபிநயக் குறிகள் ஆகியவை ஒன்றாக அமைந்த;* ***ஆடல் நோக்குறின் அரும் தவமுனிவர்க்கும் -*** *நாட்டியத்தைப் பார்த்தால், அருமையான தவத்தைச் செய்கின்ற முனிவர்களும்;* ***அமைந்த வீடு மீட்குறும் -*** *(தமக்கு) உளதாகும் முத்தியின்பத்தைக் கைவிட்டு (தன்மேல்) மனம் திரும்பும் படிச் செய்கின்ற;* ***மேனகை மேல் -*** *மேனகை என்னும் தேவமாதின் மேல்;* ***நகைவிளங்க -*** *மகிழ்ச்சியால் சிரிப்புத் தோன்றவும்.*

*அருந்தவமுனிவரையும் தன் பால் இழுக்கும் வண்ணம் நாட்டியம் ஆடும் மேனகையைத் தன் அருகில் கண்டு மகிழ்ச்சியுடன் இருந்தான் இராவணன் என்பது கருத்து.* ***(48)***

***5853. ஊடினார்முகத்து உறு நறை ஒரு முகம் உண்ண,***
***கூடினார் முகக்களி நறை ஒரு முகம் குடிப்ப,***
***பாடினார் முகத்துஆர் அமுது ஒரு முகம் பருக,***
***ஆடினார் முகத்துஅணி அமுது ஒரு முகம் அருந்த,***

***ஊடினார் முகத்துஉறுநறை -*** *தன்னுடன் ஊடலால் பிணக்கம் கொண்ட மாதர்களின் முகங்களினிடத்துத் தோன்றுகின்ற இன்பச்சுவையாகிய தேனை;* ***ஒரு முகம் உண்ண -*** *(தனது பத்து முகங்களில்) ஒரு முகம் நுகரவும்;* ***கூடினார் முகம் -*** *கூடினமகளிரது முகத்திலே;* ***களி நறை -*** *தோன்றுகின்ற களிப்பாகிய மதுவை;* ***ஒரு முகம் குடிப்ப -*** *(அவனுடைய) மற்றொரு முகம் பருகவும்;* ***பாடினார் முகத்து ஆர் அமுது -*** *இசை பாடினமகளிரது முகத்தில் தோன்றுகின்ற காதல் குறிப்பாகிய அருமையான அமுதத்தை;* ***ஒரு முகம் பருக -*** *ஒரு முகமானது அருந்தவும்;* ***ஆடினார் முகத்து அணி அமுது -*** *தன்முன் விருப்போடு ஆடியமகளிர் முகத்தில் தோன்றும் அழகாகிய அமிர்தத்தை;* ***ஒரு முகம் அருந்த -*** *மற்றொரு முகமானது உண்ணவும்.*

*ஊடுதல், கூடுதல்,பாடுதல், ஆடுதல் செய்யவும் மகளிர்களது காதற்குறிப்பை, அவர்கள் முகத்தில் கண்டு அனுபவித்து நின்றான் இராவணன் என்பது கருத்து.*
***(49)***

***5854. தேவரோடுஇருந்து அரசியல் ஒரு முகம் செலுத்த,***
***மூவரோடு மாமந்திரம் ஒரு முகம் முயல,***
***பாவகாரிதன்பாவகம் ஒரு முகம் பயில,***
***பூவை சானகிஉருவெளி ஒரு முகம் பொருந்த,***

***ஒரு முகம்தேவரோடு இருந்து அரசியல் செலுத்த -*** *ஒரு முகம் (தன் கீழ்க்குடிகளாகிய) தேவர்களுடன் கலந்து அரசாட்சி ஆணைகளைச் செலுத்தவும்;* ***ஒரு முகம் மூவரோடு மாமந்திரம் முயல -*** *மற்றொரு முகம், மந்திரி, சேனாபதி, அரசியல்தலைவர் என்ற மூவருடன் மாட்சியுற்ற மந்திராலோசனைகளில் முயன்றிருக்கவும்;* ***ஒருமுகம் பாவகாரிதன் பாவகம் பயில -*** *மற்றொரு முகம், தீவினை செய்பவனான அவனுடைய நினைவுகளைச் சிந்தனை செய்யவும்;* ***ஒரு முகம் பூவை சானகி உருவெளி பொருந்த -*** *மற்றொரு முகம், கிளி போன்றவளான பிராட்டியின் உருவெளித் தோற்றத்தில் பொருந்தி நிற்கவும்.*

*இராவணனதுமுகங்களின் செயல்பாடுகள் கூறப்பட்டன. பாவகாரி - தீவினை; 'பாவ காரிகளைப் படைத்தவன்' (பெரியாழ் 5 திருமொழி - 4.1)* ***(50)***

***5855. 'காந்தள்மெல் விரல் சனகிதன் கற்பு எனும் கடலை***
***நீந்தி ஏறுவதுஎங்ஙன் ?' என்று ஒரு முகம் நினைய,***
***சாந்து அளாவியகொங்கை நன் மகளிர்***
***தற்சூழ்ந்தார்***
***ஏந்தும் ஆடியின்ஒரு முகம் எழிலினை நோக்க,***

***ஒரு முகம் -*** *இராவணனுடைய மற்றொரு முகம்* ***; காந்தள் மெல்விரல் சனகிதன் கற்பு எனும் கடலை -*** *செங்காந்தள் மலர் போன்ற மென்மையான விரல்களை உடைய சீதையின் கற்பு என்ற கடலை;* ***நீந்தி ஏறுவது எங்ஙன் என்று நினைய -*** *நீந்திக்கரை ஏறுவது எவ்வாறு என்று நினைத்து ஏக்கமுறவும்;* ***ஒரு முகம் -****மற்றொருமுகம்;* ***சாந்து அளாவிய கொங்கை நன் மகளிர் -*** *சந்தனம் பூசிய கொங்கைகளை உடைய அழகிய மாதர்கள் பலர்;* ***தன் சூழ்ந்தார் ஏந்தும் ஆழியின் -*** *தன்னைச் சூழ்ந்து கொண்டு கையில் தாங்கிக் காட்டுகின்ற கண்ணாடியில்;* ***எழிலினை நோக்க -*** *தனது அழகினைப் பார்க்கவும்.*

*'கற்பெனும் கடலைநீந்தி ஏறுவது' என்றது உருவகம். சீதையை அபகரித்து வருவதற்குக் கருங்கடலைக் கடந்தது எளிதாயிற்று; ஆனால், சீதையின் கற்புக் கடலைக் கடப்பது அரிது என்பது உணர்த்தப்பட்டது. இராவணன், பிராட்டியின் மேனியைக் கொணர்ந்து வரலாம்; ஆனால் அவளது ஆன்ம குணங்களை வசப்படுத்த முடியாது என்பது குறிப்பு. பிராட்டியை வசப்படுத்தற்கேற்ற அழகு, தனக்கு இருக்கிறதா என்று ஒருமுகம், மகளிர் ஏந்திய கண்ணாடியில் பார்த்துக் கொண்டிருந்தது என்க.* ***(51)***

***5856. பொதும்பர்வைகு தேன் புக்கு அருந்துதற்கு அகம்***
***புலரும்***
***மதம் பெய் வண்டுஎனச் சனகிமேல் மனம் செல,***
***மறுகி***
***வெதும்புவார், அகம் வெந்து அழிவார், நகில் விழி நீர்***

***ததும்புவார்,விழித் தாரை வேல், தோள்தொறும்***
***தாக்க.+***

***பொதும்பர்வைகுதேன் -*** *மரச் செறிவினிடத்துஉள்ள தேனை;* ***புக்கு அருந்துதற்கு -*** *அங்குப் புகுந்து குடிப்பதற்கு;* ***அகம்புலரும் -*** *(முடியாமல்) மனம் வாடுகிற;* ***மதம் பெய் வண்டு என -*** *களிப்பு மிக்கதொரு வண்டு போல;* ***சனகி மேல் மனம் செல -*** *பிராட்டியினிடத்துத் தன் மனம் போக, (அதனை உணர்ந்து);* ***மறுகி வெதும்புவார் -*** *துன்பமுற்று மனம் வாடுபவர்களும்;* ***அகம் வெந்து அழிவார் -*** *மனம் புழுங்கி மிகவும் வருந்துபவர்களும்;* ***விழி நீர் நகில் ததும்பு வார் -*** *(தமது) கண்களினின்று நீர்ததும்பித் தம் கொங்கைகளிடத்து வழியப் பெற்றவர்களுமான இராவண னுடையகாதல் மகளிரது;* ***விழி தாரை வேல் -*** *கண்களின் வரிசையாகிய வேல்கள்;* ***தோள் தொறும் தாக்க -*** *தனது இருபது தோள்களிலும் வலிந்து பாயவும்.      மரச் செறிவில்உள்ள தேனை வண்டு அருந்தமுடியாது. அது போன்று அசோகவனத்துப் பிராட்டியை இராவணன் அணுகமுடியாது என்பது கருத்து. இராவணன் மனம் சீதைபால்; அதனால், அவனது காதல் மகளிர்களது கண் பார்வை அவன் தோள்களில் மட்டும் நின்றது என்க.*
***(52)***

***5857.  மாறுஅளாவிய, மகரந்த நறவு உண்டு மகளிர்***
***வீறு அளாவியமுகிழ் முலை மெழுகிய சாந்தின்***
***சேறு அளாவிய சிறுநறுஞ் சீகரத் தென்றல்,***
***ஊறு அளாவிய கடுஎன, உடலிடை நுழைய,+***

***மகரந்த நறவுஉண்டு -*** *(மலர்களில் உள்ள) மகரந்தப் பொடிகளுடன் கலந்த தேனைப்பருகி;* ***மகளிர் வீறு அளாவிய -*** *மகளிர்களுடைய செருக்குற்று விளங்கும்;* ***முகிழ் முலை மெழுகிய சாந்தின் -*** *அரும்பு போன்ற கொங்கைகளில் பூசப்பெற்ற சந்தனத்தின்;* ***சேறு அளாவிய சிறு நறும் சீகரம் தென்றல் -*** *சேற்றிலே கூடிக்கலந்த இளமையும் மணமும் குளிர்ச்சியும் உடைய தென்றல் காற்று;* ***மாறு அளாவிய -*** *(இராவணனுக்குத்தான்) எதிர் செய்யுமாறு பகைமை கொண்டு;* ***ஊறு அளாவிய கடு என -*** *துன்பம் கலந்த விடம் போல;* ***உடலிடை நுழைய -*** *அவனது உடம்பிலே நுழைந்து வருத்தவும்;*

*சிறு, நறும்,சீகரம் தென்றல், நறவு உண்டு, சாந்தின் சேறு அளாவி, இராவணனின் உடம்பில் விடம் போல நுழைந்து வருத்தியது என்க. இராவணனது ஆணைக்கு அஞ்சி முன்பு இலங்கை நகருள் புகமுடியாதிருந்த காற்று (கறங்கு கால்புகா) இப்போது, சிறு வடிவில் (தென்றல்) பக்க பலத்துடன் புகுந்து அவன் உடலையே பகைமை உணர் வுடன் வாட்டியது, என்ற நயம் உணரத்தக்கது.*                                  ***(53)***

***5858.  திங்கள்வாள் நுதல் மடந்தையர் சேயரி கிடந்த***
***அம் கயத் தடந்தாமரைக்கு அலரியோன் ஆகி,***
***வெங் கண்வானவர் தானவர் என்று இவர் விரியாப்***
***பொங்கு கைகள்ஆம் தாமரைக்கு இந்துவே***
***போன்று,***

***திங்கள் வாள்நுதல் மடந்தையர்*** - *பிறைச்சந்திரன்போன்ற ஒளி பொருந்திய நெற்றியை உடைய மகளிரது;* ***சேய் அரி கிடந்த*** - *சிவந்த இரேகைகள் பரவிக் கிடந்த;* ***அம் கயம் தடம் தாமரைக்கு*** - *அழகிய தடாகத்தில் உள்ள பெரிய தாமரை மலர் போன்றமுகங்களுக்கு;* ***அலரியோன் ஆகி*** - *சூரியனைப் போல மகிழ்ச்சியை உண்டாக்கியும்;* ***வெம் கண் வானவர் தானவர் என்று இவர்*** - *பகைவரான தேவர்கள் அசுரர்கள் என்று சொல்லும் இவர்களுடைய;* ***விரியா பொங்கு கைகள் ஆம்தாமரைக்கு*** - *விரிந்து மலராத விளங்கும் கைகளாகிய தாமரை மலர்களுக்கு;* ***இந்துவே போன்று*** - *சந்திரனே போல விளங்கவும்.*

*இராவணன், தன்காதல் மகளிர் முகங்களாகிய தாமரை மலர்களுக்குச் சூரியன் போன்றும், தன் பகைவர்களான வானவர் தானவர்களுடைய கைகளாகிய தாமரைகளுக்குச் சந்திரன் போன்றும் விளங்கினான் என்பதாம். இராவணன் தோற்றம் காதல் மகளிர் முகங்களை மலர வைத்தது. பகைவராகிய தேவர் அசுரர்களைக் குவியவைத்தது. முகமும் தாமரை; கைகளும் தாமரை. ஒரே சமயத்தில் ஒன்று மலரவும் ஒன்று குவியவும் செய்ததால், இராவணன் சூரியனாகவும் சந்திரனாகவும் விளங்கினான் என்ற நயம் உணர்ந்து இன்புறத்தக்கது.* ***(54)***

*இராவணனைக்கண்ணுற்ற மாருதியின் மனநிலை*

***5859. இருந்த எண்திசைக் கிழவனை, மாருதி எதிர்ந்தான்;***
***கருந் திண்நாகத்தை நோக்கிய கலுழனின்***
***கனன்றான்;***
***'திருந்துதோளிடை வீக்கிய பாசத்தைச் சிந்தி,***
***உருந்து நஞ்சுபோல்பவன்வயின் பாய்வென்' என்று***
***உடன்றான்.***

***இருந்த எண்திசைக் கிழவனை*** - *இவ்வாறு வீற்றிருந்தஎட்டுத் திக்குகளுக்கும் தலைவனான இராவணனை;* ***மாருதி எதிர்ந்தான்*** - *அனுமன் தன் எதிரே கண்டான்;* ***கருந்திண் நாகத்தை நோக்கிய கலுழனின்*** - *(கண்டதும்) கரிய வலிய பாம்பைக் கண்ட கருடன் போல;* ***கனன்றான் 'திருந்து தோளிடை வீக்கிய பாசத்தைச் சிந்தி*** - *மனம் கொதித்தவனாய், 'சிறந்து விளங்கும் என்னுடைய தோள்களில் கட்டியிருக்கிற பிரமாத்திரத்தைச் சிதறடித்து;* ***உருந்து நஞ்சு போல்பவன் வயின் பாய்வென் என்று உடன்றான்*** - *கோபித்து, விடம் போன்றவனான இந்த இராவணன் மேல் இப்போது பாய்கின்றேன்' என்று உக்கிரங் கொண்டான்.*

*இராவணனைக்கண்டதும், அனுமன் எண்ணிய எண்ணம் கூறப்பட்டது. உருத்து - உருந்து; எதுகை நோக்கி மெலிந்தது. இராவணனுக்குக் கருநாகமும், அனுமனுக்குக் கருடனும் உவமைகள்.* ***(55)***

***5860. 'உறங்குகின்றபோது உயிருண்டல் குற்றம்' என்று***
***ஒழிந்தேன்;***
***பிறங்கு பொன்மணி ஆசனத்து இருக்கவும்***
***பெற்றேன்;***
***திறங்கள் என்பல சிந்திப்பது ? இவன் தலை சிதறி,***

*அறம் கொள்கொம்பினை மீட்டு, உடன் அகல்வென்'*
*என்று அமைந்தான்.*

***உறங்குகின்றபோது உயிர் உண்டல் குற்றம் என்று ஒழிந்தேன் -*** *தூங்கும்போது ஒருவன் உயிரைப் போக்குதல் பழிக்கு இடமாகும், என்று எண்ணி, (முன்பு இவனைக் கொல்லாது) விட்டிட்டேன்;* ***பிறங்கு பொன் மணி ஆசனத்து இருக்கவும் பெற்றேன் -*** *(இப்போது இவன்) விளங்கும் பொன்னாலும் மணியாலும் ஆன சிம்மாசனத்தில் வீற்றிருக்கவும் காணப்பெற்றேன்;* ***பல திறங்கள் சிந்திப்பது என் ? -*** *(இனி) பலவகையாக ஆலோசிப்பதற்கு என்ன இருக்கிறது ?* ***இவன் தலை சிதறி -*** *(இப்பொழுதே) இவன் தலைகளைச் சிதறி விழச் செய்து;* ***அறம் கொள் கொம்பினை மீட்டு -*** *அறத்திற்கு ஒரு பற்றுக்கோடு போல விளங்கும் பூங்கொம்பு போன்றவளான பிராட்டியை சிறையினின்று மீட்டுக் கொண்டு;* ***உடன் அகல்வென் என்று அமைந்தான் -*** *விரைவில் மீண்டு செல்வேன்' என்று அனுமன் உறுதி செய்து கொண்டான்.*

*அனுமனின் உறுதிகூறப்பட்டது. கொம்பு; உவமை ஆகுபெயர்.* ***(56)***

***5861. 'தேவர், தானவர், முதலினர், சேவகன் தேவி***
***காவல் கண்டுஇவண் இருந்தவர், கண்புலன் கதுவ,***
***பாவகாரிதன்முடித் தலை பறித்திலென்என்றால்,***
***ஏவது யான்இனிமேல் செயும் ஆள்வினை ?'***
***என்றான்.***

***சேவகன் தேவிகாவல் கண்டு -*** *சிறந்த வீரனானஇராமபிரானுடைய தேவியாகிய சீதா பிராட்டி சிறைக்காவலில் வைக்கப் பெற்றிருக்கக் கண்டும், (மீட்பதற்கு ஆற்றல் இன்றி);* ***இவண் இருந்தவர் -*** *இங்கு வாளாபார்த்துக் கொண்டிருந்தவர்களான;* ***தேவர் தானவர் முதலினர் -*** *தேவர்கள், அசுரர்கள்முதலினோருடைய;* ***கண்புலன் கதுவ -*** *கண்களுக்கு நன்றாகத் தெரியுமாறு;* ***பாவகாரிதன் முடித்தலையான் பறித்திலென் என்றால் -*** *பாவியின் முடிகள் அணிந்த பத்துத் தலைகளையும் நான் இப்போதே பறித்து எறியேன் என்றால்;* ***இனிமேல் செய்யும் ஆள்வினை ஏவது ? -*** *இனிமேல் செய்யும் அடிமைத் தொழில் யாது உள்ளது ? (எதுவும் இல்லை என்றபடி);* ***என்றான் -*** *என்று வினவிக் கொண்டான்.*

*'பிராட்டியைவஞ்சனையால் கவர்ந்து வந்து சிறைவைத்த பாவகாரியின் (இராவணனின்) தலைகளைப் பறித்து எறிவதனினும் மேலாக மெய்யடியான் செய்யத்தக்க உறு தொழிலும் உளதோ ?' என்று அனுமன் தனக்குள் வினவிக் கொண்டான் என்பதாம்.* ***(57)***

***5862. ' "மாடு இருந்த மற்று இவன் புணர் மங்கையர்***
***மயங்கி***
***ஊடு இரிந்திட,முடித் தலை திசைதொறும் உருட்டி,***
***ஆடல்கொண்டுநின்று ஆர்க்கின்றது; அது கொடிது***
***அம்மா !***
***தேடி வந்தது, ஓர்குரங்கு" எனும் வாசகம்***
***சிறிதோ ?+***

***தேடி வந்தது ஓர்குரங்கு*** - *சீதையைத் தேடிக்கொண்டு வந்ததாகிய ஒரு குரங்கு;* ***மாடு இருந்த இவன் புணர் மங்கையர்*** - *இவ்விராவணன் அருகில் இருப்பவர்களும், இவன் சேரத்தக்கவர்களுமான மகளிர்கள்;* ***மயங்கி ஊடு*** - *திகைத்து உள்ளே ஓடிப்போம்படி;* ***முடித்தலை திசை தொறும் உருட்டி*** - *கிரீடம் அணிந்த இவனது தலைகளைப் பலதிக்குகளிலும் உருளச் செய்து;* ***ஆடல் கொண்டு நின்று*** - *வெற்றி கொண்டு (தான் சிறிதும் அழிவுறாது) நிலை பெற்று நின்று;* ***ஆர்க்கின்றது*** - *ஆரவாரஞ் செய்கின்றது;* ***அது அம்மா கொடிது*** - *அந்தக் குரங்கு அந்தோ ! மிகவும் கொடியது';* ***எனும் வாசகம்*** - *என்று எல்லோரும் சொல்லும் புகழ் வார்த்தையைப் பெறுதல்;* ***சிறிதோ ?*** - *சிறியதாகுமோ ? (அன்று மிகப் பெரிது என்றபடி).*

*'நான் நினைக்கிறபடி செய்து முடிப்பேனானால், என்னை உலகத்தார் புகழ்வர். அதுவே எனக்குப் பெருமை தருவதாகும்' எனக் கருதினான் அனுமன் என்பதாகும்.* ***(58)***

***5863. 'நீண்டவாள் எயிற்று அரக்கனைக் கண்களின் நேரே***
***காண்டல் வேண்டி,இவ் உயிர் சுமந்து, எதிர் சில***
***கழறி,***
***மீண்ட போதுஉண்டு வசைப்பொருள்; வென்றிலேன்***
***எனினும்,***
***மாண்டபோதினும், புகழ் அன்றி மற்றும் ஒன்று***
***உண்டோ ?'+***

***நீண்ட வாள்எயிறு அரக்கனை*** - *நீண்ட வாளாயுதம்போன்று கூரிய பற்களை உடைய இராவணனை;* ***கண்களின் நேரே காண்டல் வேண்டி*** - *நான் கண்களினால் நேராகப் பார்க்கவிரும்பி;* ***இவ்உயிர் சுமந்து*** - *இந்த என் உயிரை உடம்பில் வைத்துக் கொண்டிருந்து,* ***எதிர்சில கழறி*** - *(இவனைக் கண்டபின்) இவன் எதிரிலே சில வார்த்தைகளைச் சொல்லி;* ***மீண்ட போது*** - *திரும்பிச் சென்ற போதும்;* ***வசை பொருள் உண்டு*** - *எனக்குப் பழியாகிய நிந்தனையே ஏற்படும்;* ***வென்றிலேன் எனினும்*** - *(அவ்வாறன்றி இவனை எதிர்த்துப் போர் செய்தால்) இங்கு இவனை வெல்லாவிட்டாலும்;* ***மாண்ட போதினும்*** - *(இவன் கையால்) இறந்தாலும்;* ***புகழ் அன்றி மற்றும் ஒன்று உண்டோ ?*** - *யான் அடைவது புகழே அல்லாமல், வேறு ஒன்று நிகழுமோ ? (புகழே உண்டாகும்; இகழ்ச்சி உண்டாகாது என்றபடி)*

*'அரக்கனைக்காண்டல் வேண்டி, உயிர் சுமந்து, சில கழறி, மீண்ட போது வசைப் பொருள்தான் உண்டு; அவ்வாறில்லாமல், இவனை எதிர்த்துப் போர் புரிந்தால், வென்றாலும் மாண்டாலும் எனக்கு வருவது புகழே ! இகழ்ச்சியில்லை' என்று அனுமன் கருதினான் என்க.* ***(59)***

***5864. என்று,தோளிடை இறுக்கிய பாசம் இற்று ஏக,***
***குன்றின்மேல் எழுகோள் அரிஏறு என, குதியின்***
***சென்று கூடுவல்என்பது சிந்தனை செய்யா-***
***நின்று,'காரியம் அன்று' என, நீதியின் நினைந்தான்.***

***என்று*** - *என்று இவ்வாறுஎண்ணி;* ***தோள் இடை இறுக்கிய பாசம் இற்று ஏக*** - *தன் தோள்களில் கட்டியிருக்கிற நாகபாசம் அறுந்து ஒழியும்படி;* ***குன்றின் மேல் எழு கோள்***

***அரி ஏறு என -*** *மலையின் மேல் தாவஎழும்பும் வலிய ஆண்சிங்கம் போல;* ***குதியில் சென்று கூடுவல் என்பது சிந்தனை செய்யாநின்று -*** *ஒரு பாய்ச்சலில் சென்று அவனிடம் சேர்வேன் என்று எண்ணி, பிறகுஆலோசித்து நின்று;* ***'காரியம் அன்று' என நீதியின் நினைந்தான் -*** *'இது நான் செய்யத்தக்க நல்ல காரியம் அன்று' என்று அனுமன் நீதியை ஒட்டிக் கருதுவானாயினான்.*

*வலிய பெரியஇராவணனுக்கு, அவன் மேல் பாய எண்ணும் அனுமனுக்கு, அரி ஏறும் உவமைகளாக வந்தன. தான் செய்த ஆலோசனைகள் தன் ஆற்றலுக்கு ஏற்றவையாயினும், இராம தூதனாகச் செயல் படுவதற்கு அது பொருத்தம் அன்று என கண நேரத்தில் அனுமன் மாறி எண்ணத் தொட்கினான் என்க.* ***(60)***

**கலி விருத்தம்**

***5865. 'கொல்லலாம் வலத்தனும் அல்லன்; கொற்றமும்***
***வெல்லலாம்தரத்தனும் அல்லன்; மேலை நாள்***
***அல் எலாம்திரண்டன நிறத்தன் ஆற்றலை***
***வெல்லலாம்இராமனால்; பிறரும் வெல்வரோ ?***

**கொல்லல் ஆம்வலத்தனும் அல்லன் -** *(இவன்) யாராலும்எளிதில் கொல்லக் கூடிய வலிமை உடையவனும் அல்லன்;* **கொற்றமும் -** *இவனது படைப் பெருக்கை நோக்குமிடத்து;* **வெல்லல் ஆம் தரத்தனும் அல்லன் -** *எவராலும் வெல்லத்தக்க நிலைமை உடையவனும் அல்லன்;* **மேலை நாள் -** *பழங்காலமுதல்;* **அல் எலாம் திரண்டான நிறத்தன் ஆற்றலை -** *இருள் முழுதும் ஒருங்குகூடினாற் போன்ற கருநிறம் உடையவனான இராவணனது (வளர்ந்து வந்துள்ள) வலிமையை;* **இராமனால் வெல்லல் ஆம் -** *இராமபிரான் ஒருவனால்தான் வெல்லுதல் கூடும்;* **பிறரும் வெல்வரோ ? -** *வேறுயாரேனும் இவனை வெல்வார்களோ ? (மாட்டார் என்றபடி).*

*இராவணன்,இராமபிரானால் அன்றி, வேறுயாராலும் கொல்லப் படவோ, வெல்லப்படவோ முடியாதவன் என அனுமன் உணர்ந்தான் என்பது கருத்து. கொற்றம் - படைப் பெருக்கு. 'நீ ஒருவன் மேல் கொற்றம் வைப்பின்' (சீவக. 201)*
***(61)***

***5866. 'என்னையும்வெலற்கு அரிது இவனுக்கு; ஈண்டு இவன்-***
***தன்னையும்வெலற்கு அரிது எனக்கு; தாக்கினால்,***
***அன்னவேகாலங்கள் கழியும்; ஆதலான்,***
***துன்ன அருஞ்செருத் தொழில் தொடங்கல் தூயதோ ?***

**என்னையும்இவனுக்கு வெலற்கு அரிது -** *என்னை வெல்லுதலும் இந்த இராவணனுக்கு அரியதாகும் (முடியாது);* **ஈண்டு -** *இவன் முன்னிலையில்;* **இவன் தன்னையும் வெலற்கு எனக்கு அரிது -** *இவ்வளவு துணைவலிமை உடைய இவனை வெல்லுதலும் எனக்கும் அரியதாகும் (முடியாது) (ஆகவே);* **தாக்கினால் -** *இவனை எதிர்த்துப் போர் தொடங்கினால்;* **காலங்கள் அன்னவே கழியும் -** *பலகாலங்கள்*

*அத்தாக்குதலாகவே கழிந்து விடும்;* ***ஆதலால் -*** *ஆகையால்;* ***துன்ன அரும் செரு தொழில் துடங்கல் தூயதோ? -*** *பிறர் நெருங்குதற்கு அரிய போர்த்தொழிலைத் தொடங்குவது நல்லதோ ?(அன்று என்றபடி). போர்த்தொழில்தொடங்குதல் தூயது அன்று என்ற முடிவுக்கு வந்தான் அனுமன்.* ***(62)***

***5867. ' "ஏழ் உயர் உலகங்கள் யாவும் இன்புற,***
***பாழி வன்புயங்களோடு அரக்கன் பல் தலை,***
***பூழியில்புரட்டல் என் பூணிப்பு ஆம்" என,***
***ஊழியான்விளம்பிய உரையும் ஒன்று உண்டால்.***

***ஏழ் உயர்உலகங்கள் யாவும் இன்புற -*** *பூமி முதல் மேலே உயர்ந்துள்ள ஏழு உலக மக்களும் இன்பம் அடையும் படி;* ***அரக்கன் பாழிவன் புயங்களோடு பல்தலை பூழியில் புரட்டல் -*** *இராவணனுடைய பெரிய வலிய தோள்களையும், பலவான பத்துத் தலைகளையும் புழுதியில் புரளும்படி வெட்டித்தள்ளுதல்;* ***என் பூணிப்பு ஆம் -*** *நான் மேற்கொண்ட விரதமாகும்;* ***என -*** *என்று;* ***ஊழியான் விளம்பிய உரையும் ஒன்று உண்டு -*** *இராமபிரான் சொல்லியுள்ள சபத உரையும் ஒன்று உள்ளது.*

*ஏழ் உயர் உலகம்- பூலோகம். புவர் லோகம், சுவர் லோகம், மக லோகம், சன லோகம், தவலோகம், சத்திய லோகம். பூணிப்பு - விரதம்; ஊழியான் - காலத்திற்குத் தலைவன்.* ***(63)***

***5868.. ' "இங்கு ஒரு திங்களே இருப்பல் யான்" என,***
***அம் கண்நாயகன்தனது ஆணை கூறிய***
***மங்கையும் இன்உயிர் துறத்தல் வாய்மையால்-***
***பொங்கு வெஞ்செருவிடைப் பொழுது போக்கினால்.***

***பொங்கு வெம்செருவிடை பொழுது போக்கினால் -*** *மிகக் கொடிய போரிலே நான் தலையிட்டுக் காலத்தை இங்குக்கழித்துக்கொண்டிருந்தால்;* ***இங்கு ஒரு திங்களே யான் இருப்பல் -*** *'இந்த இலங்கையில் இன்னும் ஒரு மாத கால அளவே நான் உயிர் வைத்துக் கொண்டிருப்பேன் என்று;* ***அம் கண் நாயகன் தனது ஆணை கூறிய -*** *அழகிய திருக்கண்களை உடைய தனது கணவனான இராமபிரான் மீது ஆணை வைத்துச் சொன்ன;* ***மங்கையும் மன் உயிர்துறத்தல் வாய்மை ஆல் -*** *சீதா பிராட்டியும், (தன்னை மீட்க இராமபிரான் வராமை கண்டு) தன்னிடம் பொருந்திய உயிரைத் துறந்து விடுதல் உறுதியாகும்.*

*'தன் நாயகன்மேல் ஆணையிட்டுக் கூறியதால், பிராட்டி மன உயிர் துறத்தல் வாய்மையால், என்று அனுமன் நினைத்தான் என்க,* ***(64)***

***5869. 'ஆதலான், அமர்த்தொழில் அழகிற்று அன்று; அருந்***
***தூதன் ஆம்தன்மையே தூய்து' என்று, உன்னினான்;***
***வேத நாயகன்தனித் துணைவன், வென்றி சால்***
***ஏதில் வாள்அரக்கனது இருக்கை எய்தினான்.***

***ஆதலான் -*** *மேற்கூறிய காரணங்களால்;* ***அமர் தொழில் அழகிற்று அன்று -*** *(இப்போது) போர் செய்தல் அழகுடையதன்று;* ***அருந்தூதனாம் தன்மையே தூய்து -*** *சிறப்புடைய தூதன் என்ற நிலையை மேற்கொள்ளுதலே நன்மை தரத்தக்கது;* ***என்று உன்னினான் -*** *என்று எண்ணியவனாகி;* ***வேதம் நாயகன் தனி துணைவன் -*** *வேதங்களுக்குத் தலைவனான இராம பிரானுக்கு ஒப்பற்ற உதவி செய்பவனாகிய அனுமான்;* ***வென்றிசால் -*** *வெற்றிமிக்க;* ***ஏதில் வாள் அரக்கனது இருக்கை எய்தினான் -*** *பகைவனான வாள் ஏந்திய இராவணனுடைய கொலு வீற்றிருக்கும் இடத்தை நெருங்கினான்.*

*மேல் நிகழவேண்டியவற்றை எண்ணி, தானே தன்னை இராவணன்பால் இராமன் அனுப்பி தூதன் எனக் காட்டிக் கொள்வதே தூயது எனத் துணிந்தான் அனுமன் என்க.* ***(65)***

*இந்திரசித்துஅனுமனைப் பற்றி இராவணனிடம் கூறுதல்*

***5870. தீட்டியவாள் எனத் தெறு கண் தேவியர்***
***ஈட்டிய குழுவிடைஇருந்த வேந்தற்குக்***
***காட்டினன்,அனுமனை-கடலின் ஆர் அமுது***
***ஊட்டிய உம்பரைஉலைய ஓட்டினான்.***

***கடலின் ஆர் அமுதுஊட்டிய உம்பரை -*** *பாற்கடலினின்றும்தோன்றிய அரிய அமுதத்தினை உண்டு சாவா வரம் பெற்ற தேவர்களையும்;* ***உலைய ஓட்டினான் -*** *வருந்துமாறு (போரில்) புறங்காட்டி ஓடச் செய்து வென்றவனான இந்திரசித்து;* ***தீட்டிய வாள் என தெறு கண் தேவியர் -*** *கூர்மையாகத் தீட்டப் பெற்ற வாளாயுதம் போல ஆடவரது நெஞ்சுறுதியை அழிக்க வல்ல கண்களை உடைய உரிமைமகளிர்;* ***ஈட்டிய குழு இடை -*** *ஒன்று சேர்ந்திருந்த கூட்டத்தின் நடுவில்;* ***இருந்த வேந்தற்கு -*** *வீற்றிருந்த அரசனாகிய இராவணனுக்கு;* ***அனுமனைக் காட்டினான் -*** *அனுமனைக் காண்பித்தான். (அறிமுகப்படுத்தினான்)*

*தூது வந்து நகரைஅழிவு செய்தவனை அரசாங்க முறையில் வைத்து ஆராயும் கருத்தினனாய் இராவணன் தன் தேவியர்களுடன் சிங்காசனத்தில் வீற்றிருந்தான். அப்போது, இந்திரசித்து, குற்றவாளியைக் கொண்டு போய் நிறுத்தியது போல, அனுமனை இராவணனுக்குக் காண்பித்தான் என்க. ஈட்டிய, ஊட்டிய என்பன இங்கு தன் வினைப் பொருளில் வந்தன.* ***(66)***

***5871. புவனம் எத்தனை அவை அனைத்தும் போர் கடந்-***
***தவனை உற்று,'அரி உருவான ஆண்தகை,***
***சிவன் எனச்செங்கணான் எனச் செய் சேவகன்,***
***இவன்' எனக் கூறிநின்று, இரு கை கூப்பினான்.+***

***புவனம் எத்தனைஅவை -*** *உலகங்கள் எத்தனை உண்டோ அவை;* ***அனைத்தும் போர் கடந்தவனை உற்று -*** *எல்லாவற்றையும் போரில் வென்றவனாகிய இராவணனை (இந்திரசித்து) அடைந்து;* ***அரி உருவான ஆண்தகை இவன் -*** *குரங்குவடிவில் உள்ள ஆண்மைக்குணமுடையவனான இவன்;* ***சிவன் என செங்கணான் என -*** *சிவபிரான்*

*போலவும் திருமால் போலவும்;* ***செய்சேவகன் -*** *போர் செய்த சிறந்த வீரன்;* ***என கூறி -*** *என்று எடுத்துச் சொல்லி;* ***நின்று -*** *எதிரே நின்று;* ***இருகை கூப்பினான் -*** *இரண்டு கைகளையும் குவித்து வணங்கினான்.*

*இந்திரசித்துஅனுமனை இராவணனுக்கு அறிமுகப்படுத்திய முறை கூறப்பட்டது.* ***(67)***

*இராவணன் அனுமனைச்சினந்து 'நீ யார்' என வினவுதல்*

***5872.*** **நோக்கியகண்களால் நொறில் கனல்-பொறி**
**தூக்கிய அனுமன்மெய்ம் மயிர் சுறுக்கொள,**
**தாக்கியஉயிர்ப்பொடும் தவழ்ந்த வெம் புகை**
**வீக்கினன்,அவ்வுடல் விசித்த பாம்பினே.**

***நோக்கியகண்களால் -*** *(சினத்தோடு) பார்த்த(இராவணனது) கண்களினின்றும் உண்டான;* ***நொறில் கனல் பொறி -*** *விரைந்து சென்ற நெருப்புப் பொறிகள்;* ***தூக்கிய அனுமன் மெய்மயிர் -*** *(இந்திரசித்தால்) சிறப்பாகப் பேசப் பெற்ற அனுமனது உடலில் உள்ள உரோமங்கள்;* ***சுறு கொள -*** *சுறு சுறு என்று எரிந்து கருகும்படி;* ***தாக்கிய -*** *அனுமனை மோதிய;* ***உயிர்ப் பொடும் தவழ்ந்த வெம்புகை -*** *இராவணனது பெருமூச்சுக்களோடு தழுவிச் சென்ற வெவ்விய அனல் புகைகள்;* ***அவன் உடல் விசித்த பாம்பின் வீக்கின -*** *அந்த அனுமன் உடம்பைப் பிணித்திருந்த நாகபாசத்தைப் போலக் கட்டின.*

*இராவணனதுபெருஞ்சினக்குறிப்பின் கடுமையும் வேகமும் கூறப்பட்டது என்க. நொறில் - வேகம்; வீக்குதல் - கட்டுதல்.* ***(68)***

***5873.*** **அன்ன ஓர்வெகுளியன், அமரர் ஆதியர்**
**துன்னிய துன்னலர்துணுக்கம் சுற்றுற,**
**'என் இவண் வரவு? நீ யாரை ?' என்று, அவன்**
**தன்மையைவினாயினான்-கூற்றின் தன்மையான்.**

***கூற்றின்தன்மையான் -*** *யமன் போன்ற கொடுந்தன்மை உடையவனான இராவணன்;* ***அன்ன ஓர் வெகுளியன் -*** *அத்தன்மைத்தான ஒரு பெருங்கோபம் உடையவனாய்;* ***அமரர் ஆதியர் துன்னிய துன்னலர் -*** *தேவர்கள் முதலாக உள்ள தன்னைச் சூழ்ந்திருந்த பகைவர்களை;* ***துணுக்கம் சுற்றுற -*** *அச்சம் சூழும்படி, (அனுமனை நோக்கி);* ***என் இவண் வரவு ? நீ யாரை ? என்று -*** *நீ இங்கு வந்த காரணம் என்ன ? நீ யார் ? என்று;* ***அவன் தன்மையை வினாயினான் -*** *அந்த அனுமனுடைய நிலைமையை வினவலானான்.*

*இராவணன் அனுமனைநோக்கி 'என் இவண் வரவு ? நீ யாரை ?' என்று கேட்கத் தொடங்கும் வார்த்தை, அவனைச் சூழ்ந்திருந்த தேவர்களாகிய பகைவர்களுக்கு அச்சத்தை உண்டாக்கும் வண்ணம் இருந்தது என்க. துன்னலர் - பகைவர்.*
***(69)***

***5874. 'நேமியோ ? குலிசியோ ? நெடுங் கணிச்சியோ ?***
***தாமரைக்கிழவனோ ? தறுகண் பல் தலைப் பூமி தாங்கு ஒருவனோ ?-***
***பொருது முற்றுவான்,***
***நாமமும் உருவமும்கரந்து நண்ணினாய் !***

***நேமியோ ? -*** *(அவன்அனுமனை நோக்கி) சக்கராயுதம் தாங்கிய திருமாலோ ?;* ***குலிசியோ ? -*** *வச்சிராயுத பாணியான இந்திரனோ ?;* ***நெடும் கணிச்சியோ ? -*** *நீண்ட சூலாயுதத்தை உடைய சிவபெருமானோ?;* ***தாமரைக் கிழவனோ ? -*** *தாமரை மலரில் தோன்றிய பிரம்ம தேவனோ ?;* ***தறுகண் பல்தலை -*** *அஞ்சாமையும் பல்தலைகளையும் உடைய;* ***பூமிதாங்கு ஒருவனோ ? -*** *பூமியைத் தாங்கிக் கொண்டிருக்கும் ஒருவனாகிய ஆதிசேடனோ ?;* ***பொருது முற்றுவான் -*** *போர்செய்து இந்த இலங்கையை அழிக்கும் பொருட்டு;* ***நாமமும் உருவமும் கரந்து நண்ணினாய் -*** *(மேற்கூறிய ஒருவனாய்) பெயரையும் இயற்கை வடிவத்தையும், மறைத்துக் கொண்டு இங்கு வந்து சேர்ந்தாய்.*

*திருமால்முதலியவருள் எவனொருவன் தன் பெயரையும் உருவத்தையும் மறைத்துக் கொண்டு இந்த வடிவமாக வந்து போர் செய்யலாயினன் என்று உட்கொண்டு இராவணன் இவ்வாறு கேட்டான் என்க.* ***(70)***

***5875. 'நின்றுஇசைத்து உயிர் கவர் நீலக் காலனோ ?***
***குன்று இசைத்துஅயில் உற எறிந்த கொற்றனோ ?***
***தென் திசைக்கிழவனோ ? திசை நின்று ஆட்சியர்***
***என்றுஇசைக்கின்றவர் யாருள், யாவன் நீ ?***

***நின்று இசைத்து -*** *நிலைநின்று தனது பாசத்தால் கட்டி;* ***உயிர்கவர் நீலக்காலனோ ? -*** *பிராணிகளின் உயிரைப் பற்றிக் கொள்ளும் கருநிறமுள்ள காலனோ ?;* ***குன்று இசைத்து அயில் உற எறிந்த கொற்றனோ ? -*** *கிரௌஞ்சகிரி என்னும் மலையில் பட்டு, தனது வேலாயுதம் உட்புகும்படி அதனைத் தாக்கிய வெற்றியை உடைய முருகக் கடவுளோ ?;* ***தென் திசை கிழவனோ ? -*** *தெற்குத் திசைக்கு உரியவனாகிய யமதர்மராசனோ?;* ***திசை நின்று ஆட்சியர் -*** *மற்றத்திக்குகளில் நின்று ஆளுதலை உடையவர்;* ***என்று இசைக்கின்றவர் யாருள் நீயாவன் ? -*** *என்று சொல்லப்படுகின்றவர் அனைவருள்ளும் நீ யார் ?*

*காலன், தென்திசைக் கிழவன் என்று வேறாகக் கூறியது, காலன் என்பவன் யமனது ஆணையைச் செலுத்தும் ஒரு சேவகனே ஆவன் என்பதை விளக்க வந்தது காலன் - யமகிங்கரர்களின் தலைவன்.* ***(71)***

***876. 'அந்தணர்வேள்வியின் ஆக்கி, ஆணையின்***
***வந்துற விடுத்ததுஓர் வய வெம் பூதமோ ?***
***முந்து ஒருமலருளோன், "இலங்கை முற்றுறச்***
***சிந்து" எனத்திருத்திய தெறு கண் தெய்வமோ ?***

***அந்தணர்வேள்வியின் ஆக்கி -*** *முனிவர்கள்யாகத்திலிருந்து தோற்றுவித்து;* ***ஆணையின் வந்து உறவிடுத்தது -*** *கட்டளைப்படி இங்கு வந்து அடையும் வண்ணம் அனுப்பிய;* ***ஓர் வயவெம் பூதமோ ? -*** *ஒரு வலிமை மிக்க கொடிய பூதந்தானோ ?;* ***முந்து ஒரு மலருளோன் -*** *எவற்றுக்கும் முன்னதாக (பழமையான) ஒரு தாமரை மலரின்*

*இருப்பவனான பிரமன்;* ***இலங்கை முற்றுற சிந்து என திருத்திய தெறுகண் தெய்வமோ ? -*** *இலங்கை முழுவதையும் அழித்து விடு என்று ஏவி, புதிதாகப் படைத்தனுப்பிய பகைத்து எரிக்கும் கண்களை உடைய ஒரு தேவன்தானோ ?*

*முனிவர்கள்என்பவர் தண்ட காரணியத்துள் வசிப்பவர். வேள்வி - அபிசார யாகம். முந்து ஒரு மலர் என்பது திருமாலின் திருநாபிக்கமலம்.* ***(72)***

## *5877. 'யாரை நீ? என்னை, இங்கு எய்து காரணம்? ஆர் உனைவிடுத்தவர் அறிய, ஆணையால் சோர்விலைசொல்லுதி' என்னச் சொல்லினான்- வேரொடும்அமரர்தம் புகழ் விழுங்கினான்.*

***அமரர் தம் புகழ்வேரொடும் விழுங்கினான் -*** *தேவர் புகழை அடியோடு உண்டவனான இராவணன்;* ***நீ யாரை -*** *நீ யார்?;* ***இங்கு எய்து காரணம் -*** *இங்கு வந்த காரியம்;* ***என்னை -*** *யாது?;* ***உனைவிடுத்தவர் ஆர் ? -*** *உன்னை அனுப்பியவர் யாவர் ?;* ***அறிய -*** *நான் தெரிந்து கொள்ளுமாறு;* ***ஆணையால் -*** *என் கட்டளையின் படி;* ***சோர்வு இலை சொல்லுதி என்ன சொல்லினான் -*** *தவறில்லாமல் உள்ளபடி சொல்லுவாய் என்று (அனுமனை நோக்கிக்) கூறினான்.*

*விழுங்கினான் என்பது அழித்தான் என்ற பொருளில் வந்த மரபு வழுவமைதி. சோர்விலை; 'பாசம் பிணிப்பால் உண்டான தளர்ச்சியின்றி' என்றும் பொருள் கூறலாம்.* ***(73)***

*அனுமன் விடை*

## *5878. 'சொல்லிய அனைவரும் அல்லென்; சொன்ன அப் புல்லிய வலியினோர் ஏவல் பூண்டிலேன்; அல்லி அம்கமலமே அனைய செங் கண் ஓர் வில்லிதன் தூதன்யான்; இலங்கை மேயினேன்.*

*(யான்)* ***சொல்லியஅனைவரும் -*** *நீ சொன்னயாரும்;* ***அல்லென் -*** *அல்லன்;* ***சொன்ன -*** *உன்னால் சொல்லப்பட்டவர்களான;* ***அப்புல்லிய வலியினோர் ஏவல் பூண்டிலேன் -*** *அந்த அற்ப வலிமையுள்ளவர்களுடைய கட்டளையை ஏற்று வந்தேனும் அல்லேன்;* ***அல்லி அம் கமலமே அனைய செங்கண் -*** *அகவிதழ்கள் நிறைந்த அழகிய செந்தாமரை மலர் போன்ற கண்களை உடைய;* ***ஓர் வில்லிதன் தூதன் -*** *ஒப்பற்ற ஒரு வில் வீரனது தூதனாக;* ***யான் இலங்கை மேயினேன் -*** *நான் இலங்காபுரிக்கு வந்தேன்.*

*'மும்மூர்த்திகள்முதலியோரது ஆணைகளையும் ஏற்காத யான், இராமதூதனாய் இங்கு வந்தேன்' என்று தனது திறத்தையும் இராம பக்தியையும் வெளியிட்டான் அனுமன். மும் மூர்த்திகளுக்கும் மேம்பட்ட பரம் பொருளே, இராமபிரானாக அவதாரம் செய்துள்ளது என்பது அனுமனது துணிவு.* ***(74)***

## *5879. 'அனையவன் யார் ? என, அறிதியாதியேல், முனைவரும்,அமரரும், மூவர் தேவரும்,*

***எனையவர்எனையவர் யாவர், யாவையும்,***
***நினைவு அரும் இருவினை முடிக்க, நின்றுளோன்;***

***அனையவன் யார்என* -** *அந்த வில் வீரன் யாவன் என்று;* ***அறிதி ஆதியேல் -*** *(விவரம்) அறிய வேண்டுவாயானால்;* ***முனைவரும் -*** *முனிவர்களும்;* ***அமரரும் -*** *தேவர்களும்;* ***மூவர் தேவரும் -*** *கடவுளர்களாகிய மும்மூர்த்திகளும்;* ***எனையவர் எனையவர் யாவர் -*** *இனவகை யாலும் மேம்பாட்டாலும் எத்தனை பேர்கள் உண்டோ அவர்களும்;* ***யாவையும் -*** *அவர்கள் ஒழிந்த அஃறிணைப் பொருள்களாயுள்ளவைகளும்;* ***நினைவு அரும் இருவினை முடிக்க நின்றுளோன் -*** *நினைத்தற்கும் அரியதான பெரியகாரியத்தை நிறைவேற்றுவதற்கு, அவதரித்து நிலை பெற்றுள்ளவன்.*

*இரு வினை என்றதுஇராவண வதத்தை.* ***(75)அறுசீர் ஆசிரியவிருத்தம்***

***5880. 'ஈட்டிய வலியும், மேல்நாள் இயற்றிய தவமும்,***
***யாணர்க்***
***கூட்டிய படையும்,தேவர் கொடுத்த நல் வரமும்,***
***கொட்பும்,***
***தீட்டிய பிறவும்,எய்தித் திருத்திய வாழ்வும் எல்லாம்,***
***நீட்டிய பகழிஒன்றால், முதலொடு நீக்க நின்றான்;***

***ஈட்டிய வலியும் -*** *நீங்கள்தேடிச் சேர்த்துக் கொண்ட வலிமைகளையும்;* ***மேல் நாள் இயற்றிய தவமும் -*** *(முன் நாளில்) நீங்கள் செய்து வைத்துள்ள தவத்தின் வலிமையையும்;* ***யாணர் கூட்டிய -*** *புதிது புதிதாக நீங்கள் சேர்த்து வைத்துள்ள அரிய படைகளையும்;* ***தேவர் கொடுத்த நல்வரமும் -*** *தேவர்கள் உங்களுக்கு அளித்துள்ள நல்ல வரங்களையும்;* ***கொட்பும் -*** *(மற்றும் நீங்கள் கொண்டுள்ள சிறப்புக்களையும்;* ***தீட்டிய பிறவும் -*** *(வெற்றித் தூண்களில்) நீங்கள் எழுதிவைத்துள்ள கீர்த்தி முதலிய பிறவற்றையும்;* ***எய்தித் திருத்திய வாழ்வும் -*** *நீங்கள் அடைந்து, பின்பு சீர்திருத்திக் கொண்ட அரச வாழ்வையும்;* ***மற்றும் -*** *உங்கள் தொடர்புடைய அனைத்தையும்;* ***நீட்டிய பகழி ஒன்றால் முதலொடு நீக்க நின்றான் -*** *நீண்ட தன் அம்பு ஒன்றினால் அடியோடு அழிக்கச் சங்கற்பித்து நின்றவன் (அவன்)*

*உங்கள் மாயவாழ்வெல்லாம் எங்கள் கோமானால் மாயும் என்றான் அனுமன். வலி, தவம், படை, வரம், கொட்பு, முதலியனவாக திருத்தமுறப் பெற்ற வாழ்வு அனைத்தையும் பகழி ஒன்றால் நீக்க நின்றவன் (அவன்) என்க.*
***(76)***

***5881. 'தேவரும் பிறரும் அல்லன்; திசைக் களிறு அல்லன்;***
***திக்கின்***
***காவலர் அல்லன்;ஈசன் கைலைஅம்கிரியும் அல்லன்;***
***மூவரும் அல்லன்;மற்றை முனிவரும் அல்லன்;***
***எல்லைப்***
***பூவலயத்தை ஆண்டபுரவலன் புதல்வன் போலாம்;***

**தேவரும்பிறரும் அல்லன் -** *(அந்தவில் வீரன்) தேவர்களும் மற்றை அசுரர்கள் முதலியோரும் அல்லன்;* **திசைக்களிறு அல்லன் -** *திக்கயங்களில் ஒன்றும் அல்லன்;* **திக்கின் காவலர் அல்லன் -** *திக்பாலகர்களில்ஒருவனும் அல்லன்;* **ஈசன் கைலை அம் கிரியும் அல்லன் -** *சிவபிரானுடைய கைலை என்னும் அழகிய மலையும் அல்லன்;* **மூவரும் அல்லன் -** *மும்மூர்த்திகளும் அல்லன்;* **மற்றை முனிவரும் அல்லன் -** *மற்றைய முனிவர்களும் அல்லன்;* **எல்லை பூவலயத்தை ஆண்ட -** *பூமியின் எல்லை எவ்வளவு உண்டோ அவ்வளவையும் அரசாட்சி செய்த;* **புரவலன் புதல்வன் போலாம் -** *ஒரு பேரரசனுடைய குமாரனேதான் அவன்.*

*அந்தவில்வீரன், உன்னால் வெல்லப்பட்ட தேவர் முதலியோர் அல்லன்; வெல்லப்படாத ஒரு சக்கரவர்த்தியின் புதல்வன் என்றவாது, இராவணனிடம் தோற்றவர்களும், தோற்றவைகளும், அவனை வெல்வதற்கு பழி வாங்குவதற்கு வேற்றுருவம் கொண்டு வந்தவன் அல்லன் இந்தவில் வீரன் என்பது கருத்து.*
***(77)***

***5882. 'போதமும்,பொருந்து கேள்விப் புரை அறு பயனும், பொய் தீர்***
***மா தவம்சார்ந்த தீரா வரங்களும், மற்றும், முற்றும்,***
***யாது அவன்நினைத்தான், அன்ன பயத்தன; ஏது வேண்டின்,***
***வேதமும் அறனும்சொல்லும்; மெய் அறமூர்த்தி, வில்லோன்;***

**போதமும் -** *மெய்ஞ்ஞானமும்;* **பொருந்து கேள்வி -** *அந்த ஞானத்தோடு பொருந்தியனவாய்க் கேட்கப்பட்ட நூற்பொருளின்;* **புரை அறு பயனும் -** *குற்றமற்ற நற்பயன்களும்;* **பொய் தீர் மாதவம் சார்ந்த -** *பொய்ம்மையில்லாத பெரிய தவத்தைச் செய்து பெறுகின்ற;* **தீரா வரங்களும் மற்றும் முற்றும் -** *நீங்காத வரங்களும் மற்றும் எல்லாம்;* **அவன் யாது நினைந்தான் அன்னபயத்தன -** *அவன் என்ன நினைத்தானோ அவ்வாறு பயனளிக்கக் கூடியனவாய் அமைவன ஆயின;* **வில்லோன் -** *யான் கூறிய அந்த வில்வீரன்;* **வேதமும் அறமும் சொல்லும் மெய் அறமூர்த்தி -** *வேதமும் அறக்கடவுளும் புகழ்ந்து சொல்லும் உண்மைத் தருமசொரூபியான பரம் பொருளே ஆவான்.*

*போதம் முதலியயாவும், பரம்பொருளாகிய கடவுளின் ஆணைப்படி நடப்பன என்பதும், அப் பரம் பொருளே இவ்வில்லோன் என்பதும், இவன் நினைத்தமாத்திரத்தில், இராவணன் பெற்றுள்ள சிறப்புக்கள் அனைத்தும் அழியும் என்பதும் இதனால்இராவணனுக்குஉணர்த்தப்பட்டன என்க. கேள்விப்புரை அறுபயன்கள்;- நற்குண நற்செய்கைகள்.* ***(78)***

***5883. 'காரணம்கேட்டிஆயின், கடை இலா மறையின்கண்ணும்,***
***ஆரணம்காட்டமாட்டா அறிவினுக்கு அறிவும், அன்னோன்;***
***போர் அணங்குஇடங்கர் கவ்வ, பொது நின்று,***

***“முதலே” என்ற***
***வாரணம் காக்கவந்தான்; அமரரைக் காக்க வந்தான்;***

**காரணம் கேட்டிஆயின் -** *அந்த முழுமுதற் பொருள் ஒரு அரசனுக்குமகனாகத் தோன்றுவதற்குக் காரணம் என்ன வென்று கேட்பாயானால்;* **கடைஇலா மறையின் கண் ஆரணமும் -** *முடிவில்லாத (அனந்தமான) வேதங்களிடத்துள்ள உபநிடதங்களும்;* **காட்டமாட்டா -** *இவன் இத்தன்மையன்என்று முழுவதும் அறிவிக்க முடியாதவனும்;* **அறிவுக்கு அறிவும் அன்னோன்-** *எல்லாப் பொருள் தன்மைகளையும் அறிகின்ற அறிவானவனும் ஆகியபரம்பொருள்;* **போர் அணங்கு இடங்கர் கவ்வ -** *(அன்று) போரிட்டுஎதிர்த்துத் துன்பத்தைத் தரும் முதலை கவ்விக்கொள்ள, (அதனால் வருந்தி);* **பொதுநின்று முதலே என்ற -** *(இன்ன கடவுள் என்று பெயர் குறிப்பிடாமல்) பொதுப் பட ஆதிமூலமே என்று கூவி அழைத்து நின்ற;* **வாரணம் காக்கவந்தான் -** *யானையை (கஜேந்திரனை) பாதுகாப்பதற்கு ஓடி வந்தான்;* **அமரரைக் காக்க வந்தான் -** *(இன்று) தேவர்களைப் பாதுகாப்பதற்குஅவதரித்துள்ளான். கடை இலாமறையின் ஆரணமும் காட்ட மாட்டாதவனும், அறிவினுக்கு அறிவும் அன்னோனு மாகிய பரம் பொருளே, அன்று, வாரணம் காக்க வந்தான், இன்று (இப்பொழுது) அமரரைக்காக்க வந்தான் என்று இராவணனுக்கு அனுமான் உணர்த்தினான் என்க. ஆரணம் - வேதத்தின் ஞானகாண்டமாகிய உபநிடதம். காட்டுதல் - அறிவித்தல்.* ***(79)***

***5884. ‘மூலமும் நடுவும் ஈறும் இல்லது ஓர் மும்மைத்து ஆய***
***காலமும்,கணக்கும், நீத்த காரணன்-கை வில்***
***ஏந்தி, சூலமும்திகிரி சங்கும் கரகமும் துறந்து,***
***தொல்லை***
***ஆலமும் மலரும்வெள்ளிப்பொருப்பும் விட்டு,-***
***அயோத்தி வந்தான்;***

**மூலமும் நடுவும்ஈறும் இல்லது -** *முதலும் நடுவும் முடிவும் இல்லாததுஎன ;* **ஓர் மும்மைத்து ஆய காலமும் -** *இறப்பு, நிகழ்வு, எதிர்வு எனஇலக்கண முறையால் வகுத்துக் கூறப்படும் மூன்று காலங்களையும்;* **கணக்கும்-** *இவ்வளவினது என்று கணித நூலால் கூறப்படும் எண்ணிக்கையையும்;* **நீத்தகாரணன் -** *கடந்து நின்ற (எல்லாப் பொருள்களுக்கும்) காரணனாய அந்தமுழுமுதல் பொருள்தான்;* **சூலமும் திகிரி சங்கும் கரகமும் துறந்து -** *சூலத்தையும், சக்கரம் சங்கு ஆகியவற்றையும், கமண்டலத்தையும் (தன்கையில்கொள்ளாது) விட்டு;* **கை வில் ஏந்தி -** *கையில் வில்லை ஏந்திக் கொண்டு;* **தொல்லை ஆலமும் மலரும் வெள்ளிப் பொருப்பும் விட்டு -** *பழமையாகத்தனக்கு உரிய இடங்களாகிற ஆலிலையையும் தாமரை மலரையும் கைலாயமலையையும் இடமாகக் கொள்ளாது விட்டு,;* **அயோத்தி வந்தான் -** *அயோத்தி மாநகரில் இராமபிரானாக அவதரித்தான். காலம்நித்தியமானது என்பதை உணர்த்துகின்றது ‘மூலமும் நடுவும் ஈறும் இல்லது‘ என்ற தொடர். கணக்கு- கணித நூலார் கூறும் எண்ணிக்கை அளவு. மும்மைத்தாயகாலம் - இலக்கண நூலார் கூறும் இறப்பு நிகழ்வு எதிர்வு என்றகால அளவு. இவை எல்லாவற்றையும் கடந்து நிற்பவன் கடவுள். அவனே காரணன் ஆவான்.* ***(80)***

***5885. ‘அறம் தலைநிறுத்தி, வேதம் அருள் சுரந்து அறைந்த***
***நீதித்***

***திறம் தெரிந்து,உலகம் பூணச் செந் நெறி செலுத்தி,***
***தீயோர்***
***இறந்து உக நூறி,தக்கோர் இடர் துடைத்து, ஏக,***
***ஈண்டுப்***
***பிறந்தனன்-தன்பொன்-பாதம் ஏத்துவார் பிறப்பு***
***அறுப்பான்.***

***தன் பொன்பாதம் ஏத்துவார் பிறப்பு அறுப்பான் -*** *தனது அழகிய திருவடிகளைத் துதிப்பவர்களான அடியார்களது பிறவி நோயைப் போக்கியருளுபவனான பரம்பொருள்;* ***அறம் தலை நிறுத்தி -*** *அறத்தை நிலை நிற்கச் செய்து;* ***வேதம் அருள் சுரந்து -****வேதங்கள் அருளோடு;* ***அறைந்த நீதி திறம் -*** *ஓதிய நீதியின் வழிகளை;* ***உலகம் தெரிந்து பூண -*** *உலகத்தார் அறிந்து மேற்கொண்டொழுகும்படி;* ***செம் நெறி செலுத்தி -*** *அவர்களைச் செம்மையான வழியிலே செலுத்தி;* ***தீயோர் இறந்து -*** *கொடியவர்கள் இறந்து;* ***உக நூறி -*** *ஒழியும் படி அழித்து;* ***தக்கோர் இடர் துடைத்து -*** *நன்மக்களுக்கு உள்ள துன்பங்களைப் போக்கி;* ***ஏக -*** *பிறகு தன்னுடைச் சோதிக்குப் போவதாகச் சங்கற்பித்து;* ***ஈண்டு பிறந்தனன் -*** *பூமியில் (அயோத்தியில்) திருவவதாரம் செய்துள்ளான்.*

*உலகத்தில்அறத்தை நிலை நிறுத்துதல், வேதம் கூறும் நீதிகளை உலக மக்கள் பின்பற்றி நடக்குமாறு அவர்களை நல்வழிப்படுத்துதல், அல்லோர்களை அழித்தல், நல்லோர்களைக் காத்தல் ஆகிய அவதாரத்தின் பயன்கள் கூறப்பட்டன. 'பரித்ராணாய ஸாதூநாம் விநாசாய துஷ்கிருதாம், தர்மஸம்ஸ்தாபனார்த்தாய ஸ்ம்பவாமி யுகே யுகே' - என்ற கீதாவாக்கியத்தை அடியொற்றியது இந்தக் கவிதை என்று கூறுவர் அறிஞர்கள். திறம் - வழி.* ***(81)***

***5886. 'அன்னவற்குஅடிமை செய்வேன்; நாமமும் அனுமன்***
***என்பேன்;***
***நன்னுதல்தன்னைத்தேடி நாற் பெருந் திசையும்***
***போந்த***
***மன்னரில்,தென்பால் வந்த தானைக்கு மன்னன்,***
***வாலி-***
***தன் மகன்,அவன்தன் தூதன் வந்தனென்,***
***தனியேன்' என்றான்.***

***அன்னவற்கு அடிமைசெய்வேன் -*** *சக்கரவர்த்தித்திருமகனாக அவதரித்த அந்த இராமபிரானுக்கு அடிமைத் தொழில் செய்பவன்யான்;* ***நாமமும் அனுமன் என்பேன் -*** *பெயரும் அனுமன் என்று சொல்லப்படுவேன்;* ***நல் நுதல் தன்னைத் தேடி -*** *நல்ல நெற்றியை உடைய சீதாபிராட்டியைத் தேடிக் கொண்டு;* ***நால் பெரும் திசையும் போந்த மன்னரில் -*** *நான்கு பெருந் திசைகளிலும் சென்ற தலைவர்களுள்;* ***தென் பால்வந்த தானைக்கு மன்னன் வாலி தன் மகன் -*** *தென் திசையில் வந்த சேனைக்குத் தலைவன் வாலியின் மகனாகிய அங்கதன்;* ***அவன் தன் தூதன் தனியேன் வந்தனென் என்றான் -*** *அவனது தூதனாய் நான் ஒருவன் இங்கு வந்தேன் என்று அனுமன் கூறினான். 'அன்னவற்கு அடிமைசெய்வேன்; நாமும் அனுமன் என்பேன்; வாலி தன் மகன் தூதன்*

*வந்தனன்' என்று சொற் சுருக்கமாகக் கூறுதல் மூலம், அனுமன், தன்னையும், தான் வந்த காரியத்தையும் தெரிவித்துக் கொண்டு விட்டான்.* ***(82)***

*இராவணன், வாலியின் நலன் உசாவலும் அனுமன் விடையும்*

***5887. என்றலும், இலங்கை வேந்தன், எயிற்றினம் எழிலி நாப்பண்***
***மின் திரிந்தென்ன நக்கு, 'வாலி சேய் விடுத்த தூத !***
***வன் திறல் ஆயவாலி வலியன்கொல் ? அரசின் வாழ்க்கை***
***நன்றுகொல் ?' என்னலோடும், நாயகன் தூதன் நக்கான்.***

***என்றலும் இலங்கைவேந்தன் -*** *என்று அனுமான்கூறியவுடன், இராவணன்;* ***எயிறு இனம் -*** *தனது பல்வரிசைகள்;* ***எழிலி நாப்பண் மின் திரிந்து என்ன நக்கு -*** *மேகங்களினிடையே மின்னல் உலாவினாற் போலச் சிரித்து, (அனுமனை நோக்கி);* ***வாலி சேய் விடுத்த தூத -*** *வாலிமகன் அனுப்ப வந்த தூதனே !;* ***வன் திறல் ஆயவாலி வலியன் கொல் -*** *மிக்க வலிமை உடையவனான வாலி நலமும் வலிமையும் உடையவனாய் வாழ்கின்றானா ?;* ***அரசின் வாழ்க்கை நன்று கொல் என்னலோடும் -*** *அவனுடைய அரசாட்சி நன்கு நடைபெற்று வருகின்றதா ? என்று கேட்டவுடன்;* ***நாயகன் தூதன் நக்கான் -*** *அனைத்துக்கும் தலைவனான இராமபிரானது தூதனாகிய அனுமான் சிரித்தான்.*

*என்றலும், இலங்கை வேந்தன் நக்கு, வாலி சேய் விடுத்த தூத ! வாலி வலியன் கொல் ? நன்று கொல் ? என்னலலோடும் தூதன் நக்கான் என்க. இராவணனும் நக்கான்; அனுமனும் நக்கான். இரண்டு சிரிப்புக்கும் வேறுபாடு உண்டு. ஒன்று கோபஉணர்வால் வெளிப்பட்டது. மற்றொன்று ஏளனத்தால் வந்தது.* ***(83)***

***5888. 'அஞ்சலை, அரக்க ! பார் விட்டு அந்தரம் அடைந்தான் அன்றே,***
***வெஞ் சின வாலி; மீளான்; வாலும் போய் விளிந்தது அன்றே;***
***அஞ்சன மேனியான்தன் அடு கணை ஒன்றால் மாழ்கித்***
***துஞ்சினன்; எங்கள் வேந்தன், சூரியன் தோன்றல்' என்றான்.***

***அரக்க ! அஞ்சலை-*** *இராவணனே ! பயப்படாதே;* ***வெம்சின வாலி பார்விட்டு அந்தரம் அடைந்தான் மீளான் -*** *கொடிய கோபத்தினனாய வாலியானவன் பூமியை விட்டு விண்ணுலகம் சேர்ந்தான் இனித்திரும்பி வரமாட்டான்;* ***அன்றே வாலும் போய் விளிந்தது -*** *அன்றைக்கே அவனுடைய வாலும் போய் அழிந்துவிட்டது;* ***அஞ்சன மேனியான் தன் அடு கணை ஒன்றால் -*** *மை போன்ற கருநிறம் உடைய இராமபிரானது பகையை அழிக்கவல்ல அம்பு ஒன்றினால்;* ***மாழ்கி துஞ்சினன் -*** *வருந்தி இறந்தான்;*

***எங்கள் வேந்தன் சூரியன் தோன்றல் என்றான் -*** *(இப்போது) எங்களுக்கு அரசன் சூரியகுமாரனான சுக்கிரீவன் என்று கூறினான். (அனுமன்);* ***அன்று, ஏ -*** *அசைநிலைகள்.*

*வாலியின் மரணத்தைக் கூறுதலின் மூலம், இராமபிரானது வில்லாற்றலையும் இராவணனுக்கு உணர்த்தி விட்டான் அனுமன் இதில், எள்ளல் சுவையும் நகைச்சுவையும் அமைந்துள்ளன.* ***(84)***

*இராவணன், மேலும்சில வினாக்கள் தொடுக்க, அனுமன் நிகழ்ந்தமைவிவரித்தல்*

***5889. 'என்னுடைஈட்டினால், அவ் வாலியை எறுழ் வாய்***
***அம்பால்***
***இன் உயிர்உண்டது ? இப்போது யாண்டையான்***
***இராமன் என்பான் ?***
***அன்னவன்தேவிதன்னை அங்கதன் நாடலுற்ற***
***தன்மையைஉரைசெய்க' என்ன, சமீரணன் தனயன்***
***சொல்வான்;***

***இராமன் என்பான்-*** *(அதுகேட்ட இராவணன்) இராமன் என்பவன்;* ***என்னுடை ஈட்டினால் -*** *எந்த வகையால் பெற்ற வலிமை கொண்டு;* ***அவ்வாலியை -*** *அந்த வாலியை;* ***எறுழ்வாய் அம்பால் இன் உயிர் உண்டது -*** *வலிய நுனியை உடைய அம்பால் அவன் இனிய உயிரை அழித்தது ?;* ***இப்போது யாண்டை யான் -*** *அந்த இராமன் இப்போது எங்கே இருக்கிறான் ?;* ***அன்னவன் தேவி தன்னை அங்கதன் நாடல்உற்றதன்மையை -*** *அவனுடைய மனைவியாகியசீதையை (அவனால் கொல்லப்பட்ட வாலியின் மகனான) அங்கதன் தேடத் தொடங்கிய நிலைமையை (வகையை);* ***உரை செய்க என்ன -*** *சொல்வாயாக' என்று இராவணன் கேட்க;* ***சமீரணன் தனயன் சொல்வான் -*** *வாயுகுமாரனான அனுமான் அதற்குப் பின்வருமாறு மொழி கூறினான்.*

*இராவணன் கேட்டகேள்விகள் இரண்டு. ஒன்று வாலியைக் கொன்ற இராமபிரானைப் பற்றியது; மற்றொன்று, கொல்லப்பட்ட வாலியின் மகனாயிருந்தும் அங்கதன், இராமனது மனைவியைத் தேட வந்த நிலைமை பற்றியது. ஈடு - வலிமை. 'ஒருகரியீடழித்து' (தேவாரம்) எறுழ் - வலிமை உணர்த்தும் உரிச்சொல். சமீரணன் - நன்றாகச் சஞ்சரிப்பவன் என்னும் பொருளது வாயு தேவன்.* ***(85)***

***5890. 'தேவியை நாடி வந்த செங்கணாற்கு, எங்கள்***
***கோமான்,***
***ஆவி ஒன்று ஆகநட்டான்; "அருந் துயர் துடைத்தி"***
***என்ன,***
***ஓவியர்க்கு எழுதஒண்ணா உருவத்தன்,***
***உருமையோடும்***
***கோ இயல்செல்வம் முன்னே கொடுத்து,***
***வாலியையும் கொன்றான்.***

***தேவியை நாடிவந்த செங்கணாற்கு*** - *தனது தேவியாகியசீதையைத் தேடித் கொண்டு வந்த, சிவந்த கண்களை உடைய இராமபிரானுக்கு;* ***எங்கள் கோமான்*** - *எங்கள் தலைவனான சுக்கிரீவன்;* ***ஆவி ஒன்று ஆக நட்டான்*** - *இருவர்க்கும் ஓர் உயிர் போல நட்புக்கொண்டவனாகி;* ***அரும் துயர் துடைத்தி என்ன*** - *(எனக்கு வாலியால் ஏற்பட்டுள்ள) போக்குதற்கு அரிய துன்பத்தைப் போக்கியருளுக என்று வேண்டிக்கொள்ள;* ***ஓவியர்க்கு எழுத ஒண்ணா உருவத்தன்*** - *சித்திரம் தீட்டுதலில் வல்லவர்க்கும் எழுத முடியாத வடிவழகு உடைய இராமபிரான்;* ***உருமை யோடும் கோஇயல் செல்வம் முன்னே கொடுத்து*** - *சுக்கிரீவன் மனைவியாகிய, ருமையையும், வானர அரசினுக்கு உரிய செல்வத்தையும் முன்னதாக அவனுக்கு அளிப்பதாக வாக்குறுதி கொடுத்து;* ***வாலியையும் கொன்றான்*** - *பிறகு வாலியையும் அழித்து விட்டான். கவரப்பட்டமனைவியை உரியவனுக்கே தந்த வள்ளல், தன் மனைவியைப் பிறன் கவரப் பார்த்திருப்பானோ? உறுதியாக மீட்பான் என்ற உண்மையை இராவணனுக்குக் குறிப்பாக உணர்த்துகின்றான் அனுமான்.* ***(86)***

***5891. 'ஆயவன் தன்னொடு, ஆண்டு, திங்கள் ஓர்***
***நான்கும் வைகி,***
***மேய வெஞ் சேனைசூழ வீற்று இனிது இருந்த***
***வீரன்,***
***"போயினிர் நாடும்" என்ன, போந்தனம், புகுந்தது***
***ஈது' என்று,***
***ஏயவன் தூதன்சொன்னான். இராவணன்***
***இதனைச் சொல்வான்:***

***ஆயவன் தன்னொடுஆண்டு திங்கள் ஓர் நான்கும் வைகி*** - *அந்தச்சுக்கிரீவனுடனே அந்த ருசிய முகமலையில் மழைக்காலமாகிய நான்கு மாதங்கள் தங்கியிருந்து;* ***மேய வெம் சேனை சூழ இனிது வீற்றிருந்த*** - *வந்து கூடிய விரும்பத் தக்க வானர சேனைகள் தன்னைச் சுற்றிலும் நிற்க அவற்றின் நடுவில் இனிமையாக வீற்றிருந்த;* ***வீரன்*** - *மகாவீரனான இராமபிரான்;* ***இனி போய் நாடும் என்ன*** - *நீங்கள் இனி சென்று சீதையைத் தேடுங்கள் என்று கட்டளையிட;* ***போந்தனம்*** - *நாங்கள் தேடி வந்தோம்;* ***புகுந்தது ஈது என்று*** - *நடந்த காரியம் இது என்று;* ***ஏயவன் தூதன் சொன்னான்*** - *இராமபிரானால் ஏவப்பட்ட தூதுவனாகிய அனுமன் சொன்னான்;* ***இராவணன் இதனை சொன்னான்*** - *அதனைக் கேட்ட இராவணன் இந்த வார்த்தையைச் சொல்லலானான்.*

*இராமபிரான் தூதுஅனுப்பிய வரலாறு சுருக்கிக் கூறப்பட்டது.* ***(87)***

*சுக்கிரீவன்முதலியோரை இராவணன் இகழ்ந்து பேசுதல்*

***5892. 'உம் குலத்தலைவன், தன்னோடு ஒப்பு இலா***
***உயர்ச்சியோனை***
***வெங் கொலைஅம்பின் கொன்றார்க்கு***
***ஆள்-தொழில் மேற்கொண்டீரேல், எங்குஉலப்புறும் நும் சீர்த்தி?***
***நும்மொடும்***
***இயைந்தது என்றால்,***

***மங்குலின்பொலிந்த ஞாலம் மாதுமை உடைத்து***
***மாதோ !***

***உம் குலத்தலைவன் தன்னோடு ஒப்பு இலா உயர்ச்சி யோனை*** - *உங்கள்வானரக் குலத்தலைவனாக இருத்தலோடு ஒப்பற்ற மேன்மை உடையவனுமான வாலியை;* ***வெம் கொலை அம்பின் கொன்றாற்கு*** - *கொடிய கொலை செய்யும் அம்பினால் கொன்ற இராமனுக்கு;* ***ஆள் தொழில் மேற் கொண்டீரேல்*** - *அடிமையாதல் தொழிலையும் ஏற்றுக் கொண்டீர்களானால்;* ***எங்கு உலப்புறும் நும் சீர்த்தி*** - *உங்கள் புகழ் எங்கே சென்று முடிவதோ?;* ***நும்மொடும் இயைந்தது என்றால்*** - *அப்புகழ் உங்களோடு இயைவதே என்று உலகம் கூறுமானால்;* ***மங்குலின் பொலீந்த ஞாலம் மாதுமை உடைத்து*** - *மேகத்தினால் வளம்பெற்று விளங்குகின்ற இந்தஉலகம் பெண் தம்மை உடையதேயாம். தன் அரசனைக்கொன்றவனுக்கு ஆட்பட்டிருத்தல் இழிவுடையோர் செயல் என்பதை எதிர் மறைப் பொருளில் வஞ்சப்புகழ்ச்சியாக இராவணன் நிந்தித்தான் என்க. மாதுமை - மாதரின் தன்மை; பெண்தன்மை.* ***(88)***

***5893. 'தம்முனைக்கொல்வித்து, அன்னாற் கொன்றவற்கு***
***அன்பு சான்ற***
***உம் இனத்தலைவன் ஏவ, யாது எமக்கு***
***உரைக்கலுற்றது ?***
***எம் முனைத் தூதுவந்தாய் ! இகல் புரி தன்மை***
***என்னை ?***
***நும்மினைக்கொல்லாம்; நெஞ்சம் அஞ்சலை;***
***நுவல்தி' என்றான்.***

***தம்முனைக்கொல்வித்து*** - *'தனது தமையனை(இராமனைக் கொண்டு) கொல்லச்செய்து;* ***அன்னான் கொன்றவற்கு அன்பு சான்ற*** - *அந்தத் தமையனைக் கொன்ற இராமனிடம் அன்பு மேற்கொண்ட;* ***உம் இன தலைவன் ஏவ*** - *உங்கள் கூட்டத்துக்குத் தலைவனான சுக்கிரீவன் அனுப்ப;* ***எமக்கு உரைக்கல் உற்றது யாது ?*** - *நீ எனக்குச் சொல்ல வந்தது என்ன ? (மேலும்);* ***எம் முனை தூது வந்தாய் இகல் புரி தன்மை என்னை*** - *எமது முன்னிலையில்தூதனாக வந்த நீ,போர் செய்த காரணம் யாது ?* ***நும்மினைக் கொல்லாம்*** - *தூதுவனாய் வந்த உன்னைக் கொல்லமாட்டோம்;* ***நெஞ்சம் அஞ்சலை நுவல்தி என்றான்*** - *மனம் பயப்படாமல் உண்மையைத் தெளிவாகக் கூறுவாய்' என்று அனுமனை நோக்கி இராவணன் கூறினான்.*

*'தூதனாக வந்தநீ, என்னிடத்தில் நேரில் வந்து தூது மொழி கூறாமல், போர் செய்த காரணம் என்ன ?' என்பது இராவணனது கேள்வி.* ***(89)***

*அனுமன் இராவணனைநோக்கி உரைத்தல்*

**கலிவிருத்தம்**

***5894. துணர்த்ததாரவன் சொல்லிய சொற்களைப்***
***புணர்த்துநோக்கி, 'பொது நின்ற நீதியை***

***உணர்த்தினால்,அது உறும்' என, உன்ன அருங்
குணத்தினானும்,இனையன கூறினான்:***

***உன்ன அருங்குணத்தினானும் -*** *(இத்தன்மையன் என்று) நினைத்தற்கும் அருமையான நற்குணங்களை உடைய அனுமனும்;* ***துணர்த்த தாரவன் -*** *பூங்கொத்துக்களால் ஆகிய மாலையை அணிந்த இராவணன்;* ***சொல்லிய சொற்களை -*** *இவ்வாறு கூறிய வார்த்தைகளை;* ***புணர்த்து நோக்கி -*** *தொகுத்து ஆலோசித்துப் பார்த்து;* ***பொது நின்ற நீதியை -*** *'எல்லோர்க்கும் பொதுவாக உள்ள நீதி மொழிகளை;* ***உணர்த்தினால் -*** *இப்போது எடுத்துக் கூறினால்,* ***அது உறும் என -*** *அது தக்கதாகும்' என்று எண்ணி,* ***இனையன கூறினான் -*** *இந்த வார்த்தைகளைச் சொல்லலானான்.*

*இனிவரும் பதினாறுகவிதைகள், அனுமன் கூறிய நீதிகளைத் தெரிவிப்பன.*
***(90)***

***5895. 'தூது வந்தது, சூரியன் கான்முளை
ஏது ஒன்றிய நீதிஇயைந்தன;
சாது என்றுஉணர்கிற்றியேல், தக்கன,
கோது இறந்தன,நின் வயின் கூறுவாம்;***

***சூரியன் கான்முளைதூது வந்தது -*** *யான், இங்கு,சூரியகுமாரனான சுக்கிரீவனது தூதாக வந்தது ஆகும்; (நான் சொல்லுவன)* ***எது ஒன்றிய -*** *தக்ககாரணங்கள் பொருந்தியவையும்;* ***நீதி இயைந்தன -*** *நீதியோடுகூடியவையும்;* ***தக்கன -*** *உன் நன்மைக்கு ஏற்றவையும்;* ***கோது இறந்தன -*** *குற்றமற்றவையும் ஆகும்;* ***சாது என்று உணர் கிற்றியேல் -*** *அவை நல்லனவே என்று நீ உணர்வாயானால்;* ***நின்வயின் கூறுவாம் -*** *உன்னிடத்தில் சொல்வேன்.*

*கான்முளை (கால்- முளை) பரம்பரையில் தோன்றினவன்; புத்திரன்.*
***(91)***

***5896. ' "வறிது வீழ்த்தனை வாழ்க்கையை; மன் அறம்
சிறிதும்நோக்கலை; தீமை திருத்தினாய்;
இறுதி உற்றுளது;ஆயினும், இன்னும் ஓர்
உறுதி கேட்டி;உயிர் நெடிது ஓம்புவாய் !***

***வாழ்க்கையைவறிது வீழ்த்தனை -*** *உனது செல்வவாழ்வைவீணே கெடுத்துக் கொண்டாய்;* ***மன் அறம் சிறிதும் நோக்கலை -*** *அழியாது நிற்கும் அற நெறியை சிறிதும் நோக்கினாயல்லை;* ***தீமை திருத்தினாய் -*** *பாவச் செயல்களை வளர்த்துவிட்டனை;* ***இறுதி உற்றுளது ஆயினும் -*** *உனக்கு அழிவு நெருங்கி உள்ளது; ஆனாலும்;* ***இன்னும் -*** *இந்த நிலையிலும்;* ***ஓர் உறுதி கேட்டி -*** *யான் கூறும் நன்மைதரத்தக்கதைக் கேட்பாயாக;* ***உயிர் நெடிது ஓம்புவாய் -*** *(கேட்டு அதன்படி நடப்பாயானால்) உயிரை நெடுங்காலம் பாதுகாத்துக் கொள்வாய்.* ***(92)***

***5897. ' " போய் இற்றீர், நும் புலன் வென்று போற்றிய
வாயில் தீர்வுஅரிதாகிய மா தவம்-***

***காயின் தீர்வுஅருங் கேடு அருங் கற்பினாள்,***
***தீயின் தூயவளைத்துயர் செய்ததால்.***

***காயின் தீர்வுஅரும் -*** *தான் கோபித்தால் தடுக்க முடியாததும்;* ***கேடு அரும் கற்பினாள் -*** *அழியாததுமான பதிவிரதா தருமத்தை உடையவளும்;* ***தீயின் தூயவளை -*** *நெருப்பினும் தூய்மை உடையவளுமான பிராட்டியை;* ***துயர் செய்ததால் -*** *நீர் துன்பப்படுத்தியதால்;* ***நும்புலன் வென்ற போற்றிய -*** *உமது ஐந்து புலன்களையும் வென்று அடக்கிக் காத்து வந்ததும்;* ***வாயில் தீர்வு அரிதாகிய மாதவம் போய் இற்றீர் -*** *வாயில் சொல்லி அடங்காத பெருமை உடையதுமாகிய பெரிய தவத்தின் பயனை உங்களை விட்டு நீங்கி ஒழியப் பெற்றீர்கள்.  கற்பு, தீர்வுஅரியது; கேடு அரியது, மாதவம் போற்றியது; அரிதாகியது. கற்புடைத் தூயவளுக்குத் துன்பம் இழைத்ததால், தவத்தின் பயன் போயிற்று என்றவாறு.* ***(93)***

***5898. ' "இன்றுவீந்தது; நாளை, சிறிது இறை***
***நின்று வீந்தது;அலால், நிறை நிற்குமோ ?***
***ஒன்று வீந்தது,நல் உணர் உம்பரை***
***வென்று வீங்கியவீக்கம், மிகுத்ததால்.***

***நல் உணர்உம்பரை -*** *நல்ல அறிவுடைய தேவரை;* ***வென்று வீங்கிய வீக்கம் மிகுத்ததால் -*** *வெற்றி கொண்டு, அதனால் எழுந்த பூரிப்பு (செருக்கு) எல்லை மீறியதால்;* ***ஒன்று வீந்தது -*** *ஒப்பற்றதாகிய வாழ்வின் பெருமை (உங்களை விட்டு முன்னரே) நீங்கிவிட்டது;* ***இறை இன்று வீந்தது -*** *எஞ்சியுள்ள உங்கள் பெருமை இன்றைய நாளிலேயே (பெரும் பான்மையும்) அழிந்து போய்விட்டது;* ***சிறிது -*** *மற்றை எஞ்சியுள்ள சிறுபான்மையும்;* ***நின்று நாளை -*** *இன்றைக்கு நின்று நாளை;* ***வீழ்வது அலால் -*** *அழிவதேயாகுமல்லாமல்;* ***நிறை நிற்குமோ ? -*** *அழிவின்றி நிலைத்து நிற்குமோ ? (நில்லாது என்றபடி);*

*'இன்று இறந்தனநாளை இறந்தன' என்று, இராவணன் பிராட்டியைப் பார்த்துக் கூறியதை நினைவூட்டுகின்றது முதல் அடி. வீக்கம் - செல்வம்' என்பது பழைய உரை.* ***(94)***

***5899. ' "தீமை நன்மையைத் தீர்த்தல் ஒல்லாது" எனும்***
***வாய்மை நீக்கினை; மா தவத்தால் வந்த***
***தூய்மை,தூயவள்தன்வயின் தோன்றிய***
***நோய்மையால்துடைக்கின்றனை; நோக்கலாய் !***

***தீமை நன்மையைதீர்த்தல் ஒல்லாது -*** *'பாவமானது நல்ல அறங்களைஅழிக்கும் வன்மை உடையது அன்று';* ***எனும் வாய்மை நீக்கினை -*** *என்றுசொல்லப்படுகின்ற ஆன்றோர் மொழியையும் மனம் கொள்ளாது அகற்றிவிட்டாய்;* ***நோக்கலாய் -*** *ஒன்றும் சிந்திக்காதவனாய்;* ***மாதவத்தால் வந்த தூய்மை -*** *பெரிய தவத்தைச் செய்ததனால் உனக்கு வந்த தூய்மைநிலையை;* ***தூயவள் தன் வயின் தோன்றிய -*** *கற்பின் தூய்மை உடைய சீதா பிராட்டியின் திறத்து உண்டான;* ***நோய்மையால் துடைக்கின்றனை -*** *காம நோயினால் அழித்துக் கொள்கின்றாய்.  'அறம் வெல்லும்பாவம் தோற்கும்'*

*என்பதை அடி ஒற்றியது, 'தீமை நன்மையைத் தீர்த்தல் ஒல்லாது' என்ற தொடர்.*
***(95)***

***5900. ' "திறம்திறம்பிய காமச் செருக்கினால்***
***மறந்து, தம்தம்மதியின் மயங்கினார்,***
***இறந்து இறந்து,இழிந்து ஏறுவதே அலால்,***
***அறம்திறம்பினர், ஆர் உளர் ஆயினார் ?***

***திறம் திறம்பியகாமச் செருக்கினால் -*** *முறைமை தவறிய காமக் களிப்பால் (சிற்றின்ப அகந்தையால்);* ***மறந்து தம்தம் மதியின் மயங்கினார் -*** *நல்வழிகளை மறந்துவிட்டு, தங்கள் தங்கள் அறிவிலே மயக்கம் கொண்டவர்கள்;* ***இறந்து இறந்து இழிந்து ஏறுவதே அலால் -*** *செத்துச் செத்தும் இழிந்தும் ஏறியும் இவ்வாறு மாறி மாறி வருவது அன்றி;* ***அறம் திறம்பினர் ஆர் உளர் ஆயினார் -*** *(அவ்வாறு) அறவழியை மீறி (மாறி) நடந்தவர் யார் நன்னிலையில் நிற்பவராக இருந்தார்கள் ? (ஒருவரும் இல்லை என்றபடி).*

*திறம் திறம்பியகாமச் செருக்கு - தம் மனைவியிடத்து இன்பம் நுகர்தலாகிய முறைமை நீங்கி, பிறன் மனை நயக்கும் காமக் களிப்பு.* ***(96)***

***5901. ' "நாமத்துஆழ் கடல் ஞாலத்து அவிந்தவர்,***
***ஈமத்தால்மறைந்தார், இள மாதர்பால்***
***காமத்தால்இறந்தார், களி வண்டு உறை***
***தாமத் தாரினர்,எண்ணினும் சால்வரோ ?***

***நாமத்து ஆழ்கடல்ஞாலத்து -*** *அச்சம் தரத்தக்கஆழ்ந்த கடல் சூழ்ந்த இந்த நில உலகில்;* ***இள மாதர் பால் காமத்தால் இறந்தார் -*** *இளமகளிரிடம் கொண்ட மோகத்தால் வரம்பு கடந்து நடந்தவரான;* ***களி வண்டு உறை தாமம் தாரினர் -*** *(தேனைப்பருகியதால்) களிப்புக் கொண்ட வண்டுகள் மொய்க்கும் மலர் மாலை அணிந்த ஆடவர்கள்;* ***அவிந்தவர் ஈமத்தால் மறைந்தார் எண்ணினும் சால்வரோ -*** *புகழ் முதலிய யாவும் அவிந்தவராய், சுடுகாட்டு நெருப்பால் அழிந்து போனவர்கள் எண்ணிக்கையில் அடங்குவார்களோ ? (எண்ணற்றவராவர் என்றபடி). இஞ்ஞாலத்தில்,காமத்தால், இறந்தவர், அவிந்தவராகி, ஈமத்தால் மறைந்தவர் எண்ணற்றவர் என்றபடி. களி வண்டுறை தாமத்தாரினர்; அரசர்களைக் குறித்தது.* ***(97)***

***5902. ' "பொருளும், காமமும், என்று இவை போக்கி, வேறு***
***இருள் உண்டாம்என எண்ணலர்; ஈதலும்,***
***அருளும், காதலின்தீர்தலும், அல்லது, ஓர்***
***தெருள் உண்டாம்என எண்ணலர்-சீரியோர்.***

***சீரியோர் -*** *அறவொழுக்கங்களில் சிறந்த மேலோர்;* ***பொருளும் காமமும் என்று இவை போக்கி -*** *செல்வத்தில் ஆசையும், சிற்றின்பமான காமத்தில் ஆசையும் ஆகிய இவற்றைத் தவிர்த்து;* ***வேறு இருள் உண்டு ஆம் என எண்ணலர் -*** *வேறே இருள் ஒன்று (உலகத்தில்) உள்ளது என்று நினையார்;* ***ஈதலும், அருளும் -*** *வறியோர்க்குக் கொடுத்தலும், யாரிடத்தும் கருணை காட்டலும்;* ***காதலின் தீர்தலும் அல்லது -*** *அப்பொருளினிடத்தும் சிற்றின்பத்தினிடத்தும் பற்று விட்டு நீங்குதலும் ஆகிய*

*இவையே அல்லாமல்;* ***ஓர் தெருள் உண்டு ஆம் என எண்ணலர் -*** *வேறு ஒரு நல்லறிவு உள்ளது என்று நினையார்.*

*பொருளும் காமமும்இருள்; ஈதலும், அருளும், காதலின் தீர்தலும் தெளிவு தருவன.* ***(98)***

## 5903. ' "இச்சைத் தன்மையினில் பிறர் இல்லினை
## நச்சி, நாளும்நகை உற, நாண் இலன்,
## பச்சை மேனிபுலர்ந்து, பழி படூஉம்
## கொச்சை ஆண்மையும், சீர்மையில் கூடுமோ ?

***இச்சைத்தன்மையினில் -*** *ஆசையின் இயல்பினால்;* ***பிறர் இல்லினை நச்சி நாளும் நகை உற -*** *அயலார் மனைவியை விரும்பி (அதனால்) எந்நாளும் பிறர் தன்னை இகழ்ந்து சிரிக்க;* ***நாண் இலன் பச்சை மேனி புலர்ந்து -*** *வெட்கமற்றவனாய் பசுமையான உடம்பு (காமதாபத்தால்) உலரப் பெற்று;* ***பழிபடு உம் கொச்சை ஆண்மையும் -*** *பழிப்பை அடைகின்ற இழிவான இவ்வகை ஆண் தன்மையும்;* ***சீர்மையின் கூடுமோ ? -*** *சிறந்த குணங்களில் ஒன்றாகச் சேருமா ? (சேராது என்றபடி).*

*பிறன் மனைநயத்தலின் இழிவு கூறப்பட்டது. 'எளிதென இல்லிறப்பான் எய்தும் எஞ்ஞான்றும் விளியாது நிற்கும் பழி' என்ற குறளின் (145) கருத்தை அடியொற்றியது.* ***(99)***

## 5904. ' "ஓதநீர் உலகு ஆண்டவர், உன் துணைப்
## போத நீதியர்,ஆர் உளர் போயினார் ?
## வேத நீதி விதிவழி மேல்வரும்
## காதல் நீ,அறத்து எல்லை கடத்தியோ ?

***ஓதம் நீர் உலகுஆண்டவர் போயினார் -*** *அலைகளோடு கூடிய நீரை உடைய கடலால் சூழப்பட்ட இந்த உலகத்தை அரசாட்சி செய்து, பின் இறந்த அரசர்களுள்;* ***உன் துணை போதம் நீதியர், ஆர் உளர் -*** *உன் அளவு அறிவும் நீதியும் பெற்றவர் யார் இருக்கின்றார் ?;* ***வேதம் நீதி விதி வழி மேல் வரும் காதல் நீ -*** *வேதங்களில் கூறப்பட்ட நியாயமான முறைமைவழியிலே முன்னேறிச் செல்வதில் விருப்பம் கொண்ட நீ;* ***அறத்து எல்லைகடத்தியோ ?*** *தருமத்தின் வரையறையைக் கடந்து ஒழுகக்கடவையோ ?(அல்லை என்றபடி); இராவணன்படித்துக் கெட்டவன் என்றும் நீதி தெரிந்து கெட்டவன் என்றும் உணர்த்தப்பட்டது. போதம் - அறிவு.* ***(100)***

## 5905. ' "வெறுப்பு உண்டாய ஒருத்தியை வேண்டினால்,
## மறுப்புஉண்டாயபின், வாழ்கின்ற வாழ்வினின்,
## உறுப்பு உண்டாய்நடு ஓங்கிய நாசியை
## அறுப்புண்டால்,அது அழகு எனல் ஆகுமே.

***வெறுப்பு உண்டாயஒருத்தியை -*** *தன்னைக்காதலிப்பவனிடம் வெறுப்புக் கொண்ட ஒரு பெண்ணை;* ***வேண்டினால் -*** *விரும்பினால்;* ***மறுப்பு உண்டாய பின் வாழ்கின்ற வாழ்வினின் -*** *அவளால் மறுக்கப்படுதல் உண்டான பின்பும், (உடனே இறந்து போகாமல்) வெட்கம் கெட்டு உயிரோடு வாழ்கின்ற வாழ்வைவிட;* ***உறுப்பு உண்டாய் -***

*காண்பதற்கு அழகான அவயமாய்;* ***நடு ஓங்கிய நாசியை அறுப்பு உண்டால் -*** *முகத்தின் நடுவிலே உயர்ந்திருக்கின்ற (எடுப்பான) மூக்கை ஒருவரால் அறுக்கப்படுவதை அடைந்தால்;* ***அது அழகு எனல் ஆகுமே -*** *அந்த மூக்கு அற்ற முகம் அழகுடைத்து என்று சொல்லலாம் அல்லவா ?;*

*மறுப்புண்டவாழ்வை விட நாசி அறுப்புண்ட (வாழ்க்கை) முகம் அழகானது என்று அனுமன் கூறினான்.* ***(101)***

***906. ' "பாரை ஞூறுவ பற் பல பொற் புயம்,***
***ஈர்-ஐஞ்ஞூறு தலைஉள; என்னினும்,-***
***ஊரை ஞூறும் கடுங்கனல் உட்பொதி***
***சீரை ஞூறு,அவை-சேமம் செலுத்துமோ ?***

***பாரை ஞூறுவ பற்பலபொன் புயம் -*** *உலகங்களை அழிக்கவல்ல மிகப்பல அழகிய கைகளும்;* ***ஈர் ஐஞ்ஞூறு தலை உள என்னினும் -*** *ஆயிரம் தலைகள் உனக்கு உள்ளன என்றாலும்;* ***அவை சேமம் செலுத்துமோ -*** *அவை, உன்னைப் பாதுகாக்க வல்லனவோ ? (வல்லனஅல்ல);* ***அவை -*** *(ஆனால்) அவைதாம்;* ***ஊரை ஞூறும் கடும் கனல் உள் பொதிஞூறு சீரை -*** *ஊர் முழுவதையும் அழிப்பதாய் வளர்ந்த கொடிய நெருப்பின் உள்ளே அகப்பட்ட நூறு சீலைகளே போலும்.*

*ஆயிரம் தலைகளும்பல கைகளும் உண்டானாலும் அவை உன்னைப் பாதுகாக்கமாட்டா; அவை யாவும், நெருப்பில் பட்ட சீலைப் பொதி போல இராமபிரானது அம்பினால் எளிதில்அழிந்து விடும் என்பதாம்.* ***(102)***

***5907. ' "புரம் பிழைப்பு அருந் தீப் புகப் பொங்கியோன்,***
***நரம்பு இழைத்தனபாடலின் நல்கிய***
***வரம்பிழைக்கும்; மறை பிழையாதவன்***
***சரம் பிழைக்கும்என்று எண்ணுதல் சாலுமோ ?***

***புரம் பிழைப்புஅரும் தீபுக பொங்கி யோன் -*** *திரிபுரங்களும் தப்புதற்கு அரிய நெருப்பு மண்டி அழிக்குமாறு, கோபித்த சிவபெருமான்;* ***நரம்பு இழைத்தன பாடலின் -*** *உன்கை நரம்புகளைக் கொண்டு நீ பாடிய பாடல்களுக்காக;* ***நல்கிய வரம் பிழைக்கும் -*** *மனம் உவந்து கொடுத்தருளிய வரமானது தவறினாலும் தவறும்;* ***மறை பிழையாதவன் -*** *வேத நெறி தவறாதவனான இராமபிரானுடைய;* ***சரம் பிழைக்கும் என்று எண்ணுதல் சாலுமோ ? -*** *அம்பு தவறிப் போகும் என்று நினைத்தல் பொருந்துமோ ? (பொருந்தாது என்றபடி);*

*சிவபெருமான் இராவணனுக்குத் தந்த வரம் தவறினாலும் தவறலாம்; ஆனால் இராமபிரானுடைய அம்பு தன் குறியினின்றும் தவறாது என்பதாம்.*
***(103)***

***5908. ' "ஈறு இல் நாண் உக, எஞ்சல் இல் நல் திரு***
***நூறி, நொய்தினைஆகி, நுழைதியோ ?-***
***வேறும், இன்னும்நகை ஆம் வினைத் தொழில்***
***தேறினார் பலர்காமிக்கும் செவ்வியோய் !***

***இன்னும் நகை ஆம்*** - *(மற்றும்) பிறர் சிரித்தற்கு;* ***வினைத் தொழில்*** - *இடமான பல தொழில்களை;* ***தேறினார் பலர்*** - *செய்தலில் தேறியவர்;* ***காமிக்கும் செவ்வியோய்*** - *பலராலும் விரும்பப்படும் சமயத்தை உடையவனே !;* ***ஈறு இல் நாண் உக*** - *அழிவின்றிக் காக்கத்தக்க நாணம் கெடும்படி;* ***எஞ்சல் இல் நல் திரு நூறி*** - *குறைவற்ற (உனது) அரச செல்வத்தையும் அழித்துக் கொண்டு;* ***நொய்தினை ஆகி வேறும் நுழைதியோ*** - *சிறுமைக்குணம் உள்ளவனாய் (நீதி வழிக்கு) வேறுபட்ட இடுக்கு வழியான தீய நெறியில் செல்வையோ ?*

*தீயதொழிலில்தேறியவர்க்கு, காட்சிக்கு எளியவன் இராவணன் என்பதும், அவன் பிறன்மனை விழைதலாகிய தீய இடுக்கு வழியில் செல்லும் சிறுமைக் குணத்தினன் என்பதும் உணர்த்தப்பட்டது.* ***(104)***

## *5909. ' "பிறந்துளார், பிறவாத பெரும் பதம்*
## *சிறந்துளார்,மற்றும் தேவர்க்கும் தேவர் ஆய்*
## *இறந்துளார்,பிறர் யாரும், இராமனை*
## *மறந்துளார் உளர்ஆகிலர்; வாய்மையால்.*

***பிறந்துளார்*** - *உலகில்நற்பிறவியில் பிறந்துள்ளவர்களும்;* ***பிறவாத பெரும் பதம் சிறந்துளார்*** - *பிறப்பற்ற வீட்டினைப் பெற்றுச் சிறந்தவர்களும்;* ***மற்றும் தேவர்க்கும் தேவராய் இறந்துளார்*** - *மற்றும் தேவாதி தேவர்களாகிமேம்பட்டவர்களும், ஆகிய;* ***பிறர் யாரும்*** - *(உன்னை ஒழிந்த) மற்றையோர்அனைவரும்;* ***இராமனை மறந்துளார் உளர் ஆகிலர்*** - *இராமபிரானைமறந்துள்ளவர்களாய் உள்ளவரே இல்லை;* ***வாய்மை*** - *இது சத்தியம்*

*இராவணனுக்குஇராமபிரானின் பெருமை உணர்த்தப்பட்டது. பெரும் பதம் - பரம பதம்; இறத்தல் - கடத்தல்; இறந்துளார் - கடவுளர் என்றபடி.*
***(105)***

## *5910. ' "ஆதலால், தன் அரும் பெறல் செல்வமும்,*
## *ஓது பல்கிளையும், உயிரும் பெற,*
## *சீதையைத்தருக" என்று எனச் செப்பினான்,*
## *சோதியான்மகன், நிற்கு' எனச் சொல்லினான்.*

***ஆதலால்*** - *ஆகையால்;* ***தன் அரும் பெறல் செல்வமும்*** - *தனது, பிறர் பெறுதற்கு அரிய செல்வத்தையும்;* ***ஓது பல் கிளையும் உயிரும் பெற*** - *சொல்லப்படுகின்ற பலவகைச் சுற்றத்தவரையும், உனது உயிரையும் இறவாதிருக்கப் பெறுமாறு;* ***சீதையைத் தருக என்று என*** - *சீதையை இராமபிரானிடம் கொண்டு வந்து தருவாய் என்று கூறும்படி;* ***சோதியான் மகன் நிற்கு செப்பினான்*** - *ஒளிவடிவினான சூரியன் மகன் சுக்கிரீவன் உனக்குச் சொல்லி அனுப்பினான்;* ***என சொல்லினான்*** - *என்று (அனுமன் இராவணனை நோக்கிக்) கூறினான்.*

*சீதையைத்தராவிடில் உனது செல்வம் முதலிய அனைத்தும் தொலையும் என்று அனுமன் இராவணனுக்கு உணர்த்தினான். இராவணனது வினாவுக்கு விடை கூறுதல் மூலம், அனுமன், அறமொழிகளையும் உபதேசங்களையும் பலவாறாக எடுத்துக்*

*கூறியுள்ளான். இது, வகுத்துக் கூறல், கூறியது கூறல், ஓலை கொடுத்து நிற்றல் என்ற மூவகைத்தூதர் நிலையில், அனுமன் முதல் நிலையாகிய உத்தமத் தூதனாக விளங்குகின்றான் என்பதைக் காட்டுகின்றது.* ***(106)***

*இராவணன் நகைத்துதூதனாகிய நீ அரக்கரைக்கொன்றது ஏன்? என்றல்*

***5911. என்றலும்,'இவை சொல்லியது, எற்கு, ஒரு***
***குன்றின் வாழும்குரங்குகொலாம் ! இது***
***நன்று ! நன்று !என மா நகை செய்தனன்-***
***வென்றி என்றுஒன்றுதான் அன்றி வேறு இலான்.***

***என்றலும் -*** *என்றுஅனுமன் கூறியவுடன்;* ***வென்றி என்று ஒன்று தான் அன்றி வேறு இலான் -*** *வெற்றி என்று சொல்லப்படும் ஒன்றுதானே அல்லாமல், அதற்குமாறான தோல்வியை (இது நாள் வரை) அறியாதவனான இராவணன்;* ***இவை எற்கு சொல்லியது -*** *இச்செய்திகளை எனக்குச் சொன்னது;* ***குன்றின் வாழும் குரங்கு கொல் ஆம் -*** *மலையில் திரிந்து வாழும் ஒரு அற்பக் குரங்கு போலும் !;* ***இது நன்று நன்று என மாநகை செய்தனன் -*** *இது நன்றாய் இருக்கிறது என்று சொல்லி பெருஞ்சிரிப்புச் சிரித்தான்.*

*நன்று நன்று;அடுக்கு இகழ்ச்சிக்குறிப்பு.* ***(107)***

***5912. 'குரக்கு வார்த்தையும், மானிடர் கொற்றமும்,***
***இருக்க; நிற்க;நீ, என்கொல், அடா ! இரும்***
***புரத்தினுள் தரும்தூது புகுந்தபின்***
***அரக்கரைக்கொன்றது ? அஃது உரையாய் !'***
***என்றான்.***

***குரக்குவார்த்தையும் -*** *குரங்காகியசுக்கிரீவன் கூறிய செய்தியும்;* ***மானிடர் கொற்றமும் -*** *மனிதர்களான இராம இலக்குவர்களது வெற்றியும்;* ***இருக்க -*** *ஒரு புறம் இருக்கட்டும்;* ***நிற்க -*** *அவற்றை நீ சொல்வது நிற்கட்டும்;* ***இரும்புரத்தினுள் -*** *மாநகரமான இலங்கையுள்;* ***தரும் தூது பகுந்த பின் -*** *என்னிடம் பிறர் அனுப்பிய தூதுவனாக நீ வந்து புகுந்த பிறகு;* ***நீ அரக்கரைக் கொன்றது -*** *நீ அரக்கர்களைக் கொன்றது;* ***என் கொல் அஃது உரையாய் -*** *என்ன காரணத்தினால் ? அந்தக்காரணத்தைச் சொல்வாய்;* ***என்றான் -*** *என்று (அனுமனை நோக்கி) வினாவினான்.*

*அடா: ஏளனஅழைப்பு.* ***(108)***

*அனுமன் அளித்தவிடை*

***5913. 'காட்டுவார் இன்மையால், கடி காவினை***
***வாட்டினேன்;என்னைக் கொல்ல வந்தார்களை***
***வீட்டினேன்;பின்னும் மென்மையினால் உன்தன்-***
***மாட்டு வந்தது,காணும் மதியினால்.***

***காட்டு வார்இன்மையால் -*** *உன்னை எனக்குக்காட்டுபவர் எவரும் இங்கு இல்லாமையால்;* ***கடிகாவினை வாட்டினேன் -*** *உன் காவல் சோலையை அழித்தேன்;* ***என்னைக் கொல்ல வந்தார்களை வீட்டினேன் -*** *(என் கருத்தை அறியாமல்) என்னைக் கொல்ல வந்த அரக்கர்களை அழித்தேன்;* ***பின்னும் -*** *அதன் பின்பும்;* ***மென்மையினால் உன் தன் மாட்டு வந்தது -*** *எளிமைப் பாட்டோடு உன்னிடத்து நான் வந்தது;* ***காணும் மதியினால் -*** *உன்னைக் கண்டு செய்தி கூற வேண்டும் என்ற எண்ணத்தால் (ஆகும்).*

*'மென்மையினால்உன் தன் மாட்டு வந்தது' - என்பது, 'என்னைக் கட்டும் திறம் நாக பாசத்துக்கு இல்லை' என்ற அனுமனது கருத்தைக் குறிப்பிக்கின்றது. கடிகா - நறுமணம் உள்ள சோலை என்றும் பொருள் கொள்ளலாம்.*

***(109) இராவணன் அனுமனைக்கொல்மின் என வீடணன் தடுத்தல்***

***5914. என்னும்மாத்திரத்து, ஈண்டு எரி நீண்டு உக,***
***மின்னும் வாள்எயிற்றன், சினம் வீங்கினான்;***
***'கொல்மின்' என்றனன்; கொல்லியர் சேர்தலும்,***
***'நில்மின்' என்றனன், வீடணன் நீதியான்.***

***என்னும்மாத்திரத்து -*** *(இவ்வாறு அனுமன்அஞ்சாமலும் அலட்சியமாகவும்) சொன்ன அளவில்;* ***ஈண்டு எரி நீண்டு உக -*** *நிறைந்த நெருப்பு நெடுந்தூரம் போய்ச்சிந்த;* ***மின்னும் வாள் எயிற்றன் -*** *ஒளி விடும் வாள் போலும் கோரப் பற்களை உடைய இராவணன்;* ***சினம் வீங்கினான் கொல்மின் என்றனன் -*** *சீற்றம் மிக்கவனாய் இந்தக் குரங்கைக் கொல்லுங்கள் என்று கட்டளையிட்டான்;* ***கொல்லியர் சேர்தலும் -*** *கொலையாளிகள் அனுமனை அடைதலும்;* ***நீதியான் வீடணன் நில்மின் என்றனன் -*** *நீதி நெறியில் நடப்பவனான வீடணன் 'நில்லுங்கள்' என்று சொல்லிக் கொலையாளியைத் தடுத்தான்.*

*அனுமனதுஅஞ்சாமையும் அலட்சியப் பேச்சும், இராவணனது சீற்றப் பெருக்கத்துக்குக் காரணமாயிற்று எனலாம்.* ***(110)***

***5915. ஆண்டு,எழுந்து நின்று, அண்ணல் அரக்கனை,***
***நீண்ட கையன்வணங்கினன்; 'நீதியாய்,***
***மூண்ட கோபம்முறையது அன்றாம்' என,***
***வேண்டும்மெய்உரை பைய விளம்பினான்.***

***ஆண்டு எழுந்துநின்று -*** *(வீடணன்) அப்பொழுது அச்சபையில் எழுந்து நின்று கொண்டு;* ***அண்ணல் அரக்கனை -*** *பெருமை தங்கிய அரக்கனான இராவணனை;* ***நீண்ட கையன் வணங்கினன் -*** *நீண்ட தன் கைகளைக் கூப்பி வணங்கியவனாய்;* ***மூண்ட கோபம் முறையது அன்று என -*** *'நீதி நெறி வழுவாதவனே ! இப்பொழுது மிகுதியாகக் கொண்ட கோபம் நீதி முறைமை உடையதன்று என்று;* ***வேண்டும் மெய் உரை -*** *யாவரும் விரும்பத்தக்க உண்மை வார்த்தைகளை;* ***பைய விளம்பினான் -*** *(அவன் கோபம் அடங்கும்படி) அமைதியாகக் கூறினான்.*

*இதில், 'மூண்டகோபம் முறையது அன்று' என்று வீடணனால் தொகுத்துச் சுட்டப்பட்டது, அடுத்த ஐந்து கவிதைகளில் வகுத்துக் காட்டப்படுகின்றது.*
***(111) அறுசீர் ஆசிரியவிருத்தம்***

***5916. 'அந்தணன்,உலகம் மூன்றும் ஆதியின் அறத்தின்
ஆற்றல்
தந்தவன்,அன்புக்கு ஆன்ற தவ நெறி உணர்ந்து,
தக்கோய் !
இந்திரன் கருமம்ஆற்றும் இறைவன் நீ; "இயம்புதூது
வந்தனென்" என்றபின்னும், கோறியோ, மறைகள்
வல்லோய் ?***

***தக்கோய் ! -*** *(அறிவு ஆற்றல்களில்) தகுதி உடையவனே !;* ***மறைகள் வல்லோய் ! -*** *வேதங்களில் வல்லவனே !* ***ஆதியின் உலகம் மூன்றும் அறத்தின் தந்தவன் அந்தணன் அன்புக்கு ஆன்ற தவநெறி உணர்ந்து -*** *ஆதி காலத்தில் மூவகை உலகங்களையும் தருமத்தின் பலங் கொண்டு படைத்தவனான பிரமனது அன்புக்கு அமைந்த தவவழியை அறிந்து, (செய்து முடித்து வரம் பெற்று);* ***இந்திரன் கருமம் ஆற்றும் இறைவன் நீ -*** *தேவேந்திரனது திரிலோக ஆட்சியைக் கைப்பற்றி ஆளவல்ல பேரரசன் நீ (அப்படியிருந்தும்);* ***இயம்பு தூது வந்தனென் என்ற பின்னும் கோறியோ -*** *'ஒருவன் கூறியதைச் சொல்லும் தூதனாக இங்கு வந்தேன்' என்று சொன்ன பிறகும் (அவனைக்) கொல்லுகின்றாயோ ?*

*இராவணனதுபெருமையை எடுத்துக் காட்டி, 'தூதுவனைக் கொல்வது தக்கதன்று' என்று வீடணன் கூறினான் என்க.* ***(112)***

***5917. 'பூதலப் பரப்பின், அண்டப் பொகுட்டினுள், புறத்துள்,
பொய் தீர்
வேதம் உற்றுஇயங்கு வைப்பின், வேறு வேறு
இடத்து வேந்தர்,
மாதரைக் கொலைசெய்தார்கள் உளர் என வரினும்,
வந்த
தூதரைக்கொன்றுளார்கள் யாவரே, தொல்லை
நல்லோர் ?***

***பூதலப் பரப்பின்-*** *இப்பூமிப் பரப்பிடத்தும்;* ***அண்டப் பொகுட்டினுள்-*** *அண்ட கோளத்தின் உள்ளிடத்தும்,;* ***புறத்துள் -*** *உள்ளிடத்தும், அதன்புறமாகிய பகிரண்டத்திடத்தும்;* ***பொய் தீர் வேதம் உற்று இயங்கு வைப்பின்-*** *பொய்ம்மையில்லாத(சத்தியமான) வேதநெறிபொருந்தி வழங்கிவரும் உலகங்களில்;* ***வேறு வேறு இடத்து வேந்தர் -*** *வெவ்வேறு இடங்களில் உள்ள அரசர்களில்;* ***மாதரைக் கொலை செய்தார்கள் உளர் எனவரினும் -*** *மகளிரைக் கொலை செய்தவர்கள் உள்ளார் என்று சொல்லப்படுமானாலும்;* ***தொல்லை நல்லோர் -*** *பழமையான நீதிமான்கள்;* ***வந்த தூதரைக் கொன்று உளார்கள் யாவர் -*** *தம்மிடத்தில் பிறர் அனுப்ப வந்த தூதரைக் கொன்றுள்ளவர் யாரே உள்ளார் ? (ஒருவரும் இல்லை என்பதாம்);*

*பாவங்களுள் பெண்கொலை கொடிது; அதனினும் கொடிது தூதுவனைக் கொல்லுதல் என்பதாம்.* ***(113)***

***5918. ‘பகைப் புலன் நணுகி, உயத்தார் பகர்ந்தது பகர்ந்து, பற்றார்***
***மிகைப் புலன்அடக்கி, மெய்ம்மை விளம்புதல் விரதம் பூண்ட***
***தகைப் புலக்கருமத்தோரைக் கோறலின், தக்கார் யார்க்கும்***
***நகைப் புலன்பிறிது உண்டாமே ? நம் குலம் நவை உண்டாமே !***

***பகைப்புலன் நணுகி-*** *பகைவர்களுடைய இடத்தை அச்சமில்லாது சேர்ந்து;* ***உய்த்தார் பகர்ந்தது பகர்ந்து -*** *தம்மை அனுப்பியவர் சொல்லிய செய்தியை உள்ளபடியே சொல்லி;* ***பற்றார் மிகை புலன் அடக்கி -*** *பகைவர் கொள்ளும் கோப உணர்ச்சியைத் தமது சொல்லாற்றலால் அடக்கி;* ***மெய்ம்மை விளம்புதல் -*** *உண்மையான சொல்லைச் சொல்லுதலையே;* ***விரதம் பூண்ட தகைப்புலம் கருமத் தோரை -*** *தமக்கு விரதமாகக் கொண்ட சீரிய அறிவையும் செய்கையும் உடைய தூதுவரை;* ***கோறலின் -*** *நீ கொல்லுதலினால்;* ***தக்கார் யார்க்கும் நகைப்புலன் உண்டாமே -*** *அறிவினாலும் ஒழுக்கத்தாலும் சிறந்த மேலோர் யாவர்க்கும் இகழ்ந்து சிரிப்பதற்கு இடம் உண்டாகுமே !;* ***பிறிது நம் குலம் நவை உண்டாமே -*** *மற்றும், நம் குலத்துக்குக் குற்றம் உண்டாகுமே!;*

*ஏகாரம் இரண்டும்தேற்றம். தூதர் தன்மைகளும் செயல்களும் நன்கு விளக்கப்பட்டன.* ***(114)***

***5919. ‘முத் தலைஎஃகன், மற்றை முராந்தகன், முனிவன், முன்னா***
***அத் தலை நம்மைநோனா அமரர்க்கும், நகையிற்றாமால்;***
***எத் தலை உலகும்காக்கும் வேந்த ! நீ, வேற்றார் ஏவ,***
***இத் தலைஎய்தினானைக் கொல்லுதல் இழுக்கம்; இன்னும்,***

***எத்து அலைஉலகம் காக்கும் வேந்த ! -*** *மோதுகின்ற அலைகள் நிறைந்த கடல் சூழ்ந்த உலகம் முழுவதையும் ஆளுகின்ற அரச ! ;* ***வேற்றார் ஏவ இத்தலை எய்தினானை -*** *பகைவர் ஏவி அனுப்ப இங்குத் தூதனாய் வந்து சேர்ந்த இவனை;* ***நீ கொல்லுதல் இழுக்கம் -*** *நீ கொல்வது குற்றமுடைத்தாகும். (மேலும்);* ***முத்தலை எஃகன் -*** *மூன்று தலை கொண்ட சூலாயுதத்தை உடைய சிவபெருமானும்;* ***மற்றை முராந்தகன் -*** *மற்றுமுள்ள முரன் என்னும் அசுரனை அழித்த திருமாலும்;* ***முனிவன் -*** *பிரம்ம தேவனும்;* ***முன்னா -*** *முதலான;* ***நம்மை நோனா -*** *நம் ஆக்கத்தைக் கண்டு பொறாத;* ***அத்தலை அமரர்க்கும் நகையிற்று ஆம் -*** *அந்த வானத்தில் உள்ள தேவர்களுக்கும் இகழ்ந்து சிரிப்பதற்கு இடமாகும்.*

*‘எத் தலை உலகும்காக்கும்’ என்பதற்கு ‘எவ்விடத்து எல்லா உலகங்களையும் காக்கின்ற’ என்று பொருள் கூறல் சிறந்ததாயின் கொள்க. தூதரைக் கோறல் தக்கார் யார்க்கும் நகைப் புலனாம் என்ற வீடணன், இதனால், நம்மை நோனா அமரர்க்கும் நகையிற்றாம் என்று சொல்கின்றான். **(115)***

***5920.* ‘இளையவள் தன்னைக் கொல்லாது, இரு செவி**
**மூக்கொடு ஈர்ந்து,**
**“விளைவு உரை”என்று விட்டார், வீரர் ஆய்;**
**மெய்ம்மை ஓர்வார்;**
**களைதியேல் ஆவி,நம்பால் இவன் வந்து கண்ணின்**
**கண்ட**
**அளவு உரையாமல்செய்தி ஆதி’ என்று, அமையச்**
**சொன்னான்.**

**வீரர் ஆய்மெய்ம்மை ஓர்வார் -** *சுத்த வீரர்களாய்உண்மை நீதியை உணர்ந்த இராம இலக்குவர்கள்;* **இளையவள் தன்னைக் கொல்லாது -** *(தம்மிடம் வந்து தகாத முறையில் நடந்த) நம் தங்கை சூர்ப்பனகையைக் கொல்லாமல்;* **இரு செவி மூக்கொடு ஈர்ந்து விளைவு உரை என்று விட்டார் -** *இரண்டு காதுகளையும் மூக்கையும் அறுத்து,‘இவ்விடத்துச் செய்தியை (உன்தமையனிடம் சென்று) சொல்’ என்று உயிரோடு அனுப்பி விட்டார்கள்;* **ஆவிகளை தியேல் -** *(அவ்வாறிருக்க) நீ இந்தத் தூதனுடைய உயிரைப் போக்குவாயானால்;* **நம்பால் இவன் வந்து கண்ணில் கண்ட அளவு உரையாமல் செய்தி ஆதி -** *நம்மிடத்தில் ‘இவன் வந்து, தனது கண்ணால் கண்ட செய்தி அளவை (அவர்களிடம் சென்று அவர்களுக்கு) உரையாதபடி செய்தனை ஆவார்’;* **என்று அமைய சொன்னான் -** *என்று (இராவணன் மனதில்) பதியும் வண்ணம் (வீடணன்) கூறினான்.*

*அனுமனைக்கொல்லாது விடுவதற்கு, சூர்ப்பணகை கொல்லப்படாமல் விடப்பட்டதை எடுத்துக்காட்டாகக் கூறி, வீடணன் தனது நீதி உரையை அமைய (பொருந்த) முடித்தான் என்க.* ***(116)***

*இராவணன், அனுமன்வாலில் தீக் கொளுவப் பணித்தல்*

**அறுசீர்ஆசிரியவிருத்தம் (வேறு)**

***5921.* ‘நல்லது உரைத்தாய், நம்பி ! இவன் நவையே**
**செய்தான் ஆனாலும்,**
**கொல்லல்பழுதே’-‘போய் அவரைக் கூறிக்**
**கொணர்தி கடிது’ என்னா,**
**‘தொல்லை வாலை மூலம் அறச் சுட்டு, நகரைச்**
**சூழ்போக்கி,**
**எல்லை கடக்கவிடுமின்கள்’ என்றான்; நின்றார்**
**இரைத்து எழுந்தார்.**

***நம்பி ! நல்லதுஉரைத்தாய் -*** *(வீடணன் கூறியதைக்கேட்ட இராவணன், அவனை நோக்கி) உத்தமனே ! நீ நல்ல செய்தியை எடுத்துக் கூறினாய்;* ***இவன் நவையே செய்தான்; ஆனாலும் கொல்லல் பழுதே -*** *இந்த வானரன், குற்றமே செய்தவன்; ஆனாலும்,(இவனை நாம்) கொல்வது குற்றமேயாகும்; (என்று கூறி விட்டு, பிறகு அனுமனை நோக்கி);* ***போய் கூறி அவரை கொணர்தி***

***கடிது என்னா -*** *'நீ சென்றுஅவர்களிடம் எனது நோக்கத்தைச் சொல்லி அவர்களை விரைவில் இங்கு போருக்கு அழைத்து வருவாய்' என்று சொல்லி, (பிறகு அங்கிருந்த அரக்கர்களை நோக்கி);* ***தொல்லை வாலை -*** *இந்தக் குரங்கின் தொல்லைக்கிடமான வாலை;* ***மூலம் அற சுட்டு -*** *அடியோடு அழியும்படி நெருப்பைக் கொண்டு எரித்து;* ***நகரைச் சூழ் போக்கி எல்லை கடக்க விடு மின்கள் என்றான் -*** *இவனை நம் நகரைச் சுற்றி இழுத்துச் சென்று, இந்த நகரின் எல்லையைக் கடந்து போம்படி துரத்திவிடுங்கள் என்று கட்டளையிட்டான்;* ***நின்றார் இரைத்து எழுந்தார் -*** *அருகே நின்ற அரக்கர்கள் ஆரவாரஞ் செய்து கொண்டு கிளம்பினார்கள்.*

*இராவணன்,வீடணனிடமும் அனுமனிடமும் அரக்கர்களிடமும் கூறியது அனைத்தும் தொகுத்துரைக்கப்பட்டது என்க.* ***(117)***

*அரக்கர் அயன் படைநீக்கி அனுமன் வாலில் தீக் கொளுவுதல்*

***5922. 'ஆய காலத்து, அயன் படையோடு இருப்ப, ஆகாது***
***அனல் இடுதல்;***
***தூய பாசம் எனப்பலவும் கொணர்ந்து பிணிமின்***
***தோள்' என்னா,***
***மேய தெய்வப்படைக்கலத்தை மீட்டான், அமரர்***
***போர் வென்றான்;***
***'ஏ'எனாமுன், இடைபுக்கு, தொடை வன்கயிற்றால்***
***பிணித்து ஈர்த்தார்.***

***ஆய காலத்துஅமரர் போர் வென்றான் -*** *இவ்வாறு நிகழ்ந்த சமயத்தில், தேவர்களைப் போரில் வென்ற இந்திரசித்து;* ***அயன் படையோடு இருப்ப அனல் இடுதல் ஆகாது -*** *வானரம், பிரம்மாத்திரப் பிணிப்புடன் இருக்கும் போது, தீயிட்டு, அதனை எரித்தல் கூடாது, (அதனால்);* ***தூய பாசம் என பலவும் கொணர்ந்து தோள் பிணிமின் -*** *சிறந்த கயிறுகள் என்று சொல்லும் பலவற்றையும் கொண்டு வந்து, இதன் தோள்களை இறுகக் கட்டுங்கள்;* ***என்னா மேய தெய்வப் படைக் கலத்தை மீட்டான் -*** *என்று (அரக்கர்களிடம் சொல்லி) அனுமன் மீது, பாம்பு வடிவாய்ப் பொருந்தியிருந்த தெய்வத்தைன்மையுள்ள பிரமாத்திரத்தைத் தோள்களினின்று விடுவித்தான்;* ***ஏ எனா முன் -*** *(அக்கட்டளைப்படியே) அரக்கர்கள் ஏய் என்று ஒரு முறைசொல்லும் காலஅளவுக்குள்;* ***இடைபுக்கு தொடைவன் கயிற்றால் -*** *அனுமனிடம் வந்து, ஒன்றோடு ஒன்று இணைத்த கயிறுகளால்;* ***பிணித்து ஈர்த்தார் -*** *அனுமனைக் கட்டி இழுக்கலானார்கள்.*

*பிணி வீட்டுப்படலத்திற்கு உயிர் நிலையாக அமைந்த இந்தப் பாடலால் பிரம்மாத்திரத்தின் தெய்வத் தூய்மையும் உணர்த்தப்பட்டது.* ***(118)***

***5923. நாட்டின்,நகரின், நடு உள்ள கயிறு நவிலும்
தகைமையவே-
வீட்டின் ஊசல்,நெடும் பாசம் அற்ற; தேரும், விசி
துறந்த;
மாட்டும் புரவிஆயம் எலாம், மருவி வாங்கும்
தொடை அழிந்த;
பூட்டும் வல்லிமூட்டோடும் புரசை இழந்த, போர்
யானை !***

***வீட்டின் ஊசல்நெடும் பாசம் அற்ற -*** *(அரக்கர்களால்கொண்டு போகப்பட்டதனால்) வீடுகளில் உள்ள ஊஞ்சல்கள் தம் நீண்டகயிறுகள் அற்றன;* ***தேரும் விசி துறந்த -*** *தேர்களும் கட்டுக் கயிறுகளை இழந்தன;* ***மாட்டும் புரவி ஆயம் எலாம் மருவி வாங்கும் தொடை அழிந்த -*** *பிணிக்கப்பட்ட குதிரைக் கூட்டம் எல்லாம், கட்டி வாங்கும் கயிறுகள் ஒழியப் பெற்றன;* ***போர் யானை பூட்டு வல்லி மூட்டோடும் புரசை இழந்த -*** *போர்த்திறம் அமைந்த யானைகள் முடிச்சுடன் இடும் காற்கயிறுகளும், கழுத்தில் கட்டப்படும் கயிறுகளும் இல்லையாயின (என்றால்);* ***நாட்டின் நகரின் நடு உள்ள கயிறு -*** *அந்த நாட்டுப் புறத்திலும் நகரத்திலும் உள்ளனவான வெறுங்கயிறுகள்;* ***நவிலும் தகைமையவே -*** *சொல்லும் தன்மையுடையன ஆகுமோ? (ஆகாது என்றபடி).*

*அனுமனைக் கட்ட,கொண்டு வந்த கயிறுகள் பல திறப்பட்டனவாகும். இலங்கையில் கயிறு என்று காணப்பட்ட அனைத்தும் கொண்டு வரப்பட்டன என்க.* ***(119)***

***5924. மண்ணில்கண்ட, வானவரை வலியின் கவர்ந்த,
வரம் பெற்ற,
எண்ணற்கு அரியஏனையரை இகலின் பறித்த-
தமக்கு இயைந்த பெண்ணிற்குஇசையும் மங்கலத்தில்
பிணித்த கயிறே
இடை பிழைத்த-
கண்ணில் கண்டவன் பாசம் எல்லாம் இட்டு,
கட்டினார்.***

***மண்ணில் கண்ட -*** *நிலவுலகில் கண்ட கயிறு வகைகளும்;* ***வானவரை வலியின் கவர்ந்த -*** *தேவர்களைத் தன் வலிமை காட்டி அபகரித்துக் கொண்டு வந்த பாசங்களும்;* ***வரம் பெற்ற -*** *வரங்களால் பெற்றிருந்த தெய்வத்தன்மைப் பாசங்களும்;* ***எண்ணற்கு அரிய ஏனையரை இகலின் பறித்த -*** *எண்ண முடியாத மற்றையோரிடத்தினின்று போரிட்டுப் பறித்துக் கொண்ட பாசங்களும் (ஆக);* ***கண்ணில் கண்ட வன் பாசம் எல்லாம் இட்டு,கட்டினார் -*** *தம் கண்ணால் பார்த்த வலிய கயிறுகள் எல்லாம் கொண்டுவந்து போட்டு அரக்கர்கள் அனுமனைக் கட்டினார்கள்;* ***தமக்கு இயைந்தபெண்ணிற்கு இசையும் -*** *தங்களுக்கு மனைவியராய்ப் பொருந்தியிருந்தபெண்களுக்கு அமைந்த;* ***மங்கலத்தின் பிணித்த கயிறே இடை பிழைத்த -*** *திருமாங்கல்யம் என்னும் தாலியில் பிணித்துக்கட்டியிருந்த கயிறே, அந்தச்சமயத்தில் அறுத்துக் கொண்டு போகப்படாமல் தப்பின.*

*அரக்கியர்களின்தாலிக்கயிறு தவிர ஏனைய கயிறுகள் எல்லாவற்றையும் கொண்டு அரக்கர்கள் அனுமனைக் கட்டினார்கள் என்பதாம்.* ***(120)***

***5925. 'கடவுள்-படையைக் கடந்து அறத்தின் ஆணை***
***கடந்தேன் ஆகாமே***
***விடுவித்துஅளித்தார், தெவ்வரே; வென்றேன்***
***அன்றே இவர் வென்றி;***
***சுடுவிக்கின்றது,"இவ் வூரைச் சுடுக" என்று***
***உரைத்த துணிவு' என்று,***
***நடு உற்று அமையஉற நோக்கி, முற்றும்***
***உவந்தான்-நவை அற்றான்.***

***நவை அற்றான் -*** *குற்றமற்றவனாகிய அனுமான்;* ***கடவுள் படையை கடந்து அறத்தின் ஆணை கடந்தேன் ஆகாமே -*** *தெய்வத்தன்மை உடையபிரம்மாத்திரத்தை மீறி, தருமநிலையைத் தவறினேனாகாதபடி;* ***தெவ்வரேவிடுவித்து அளித்தார் -*** *பகைவர்களாகிய அரக்கர்களே (என்னைப்பிரம்மாத்திரத்தினின்றும்) விடுவித்துஉதவினார்கள்;* ***இவர் வென்றி வென்றேன் அன்றோ -*** *இவர் இது வரை அடைந்திருந்த வெற்றியை நான் வென்று விட்டேன் அல்லனோ ?;* ***சுடுவிக்கின்றது -*** *இராவணன் என்னை (அரக்கர்களைக் கொண்டு) வால் கொளுத்துகின்ற முயற்சி;* ***இ ஊரை சுடுக என்று உரைத்த துணிவு -*** *'இந்த ஊரை நீ எரிப்பாயாக' என்று எனக்குச் சொன்ன தெளி பொருளாகும்;* ***என்று -*** *என்று எண்ணி;* ***நடு உற்று அமையம் உற நோக்கி -*** *அரக்கர்களின் நடுவில் இருந்து கொண்டு (அவர்களிடத்தினின்று தான் அகல்வதற்குரிய) சமயத்தை எதிர்நோக்கி;* ***முற்றும் உவந்தான் -*** *நிரம்ப மகிழ்ச்சியுற்றான்.*

*அனுமனது வாலில்நெருப்பு வைக்குமாறு இராவணன் அரக்கர்களுக்கு இட்ட ஆணை, 'இலங்கை நகரைச் சுடுவாய்' என்று தனக்கு இராவணன் அனுமதி கொடுத்ததாக எண்ணி அனுமான் மகிழ்ந்தான் என்க.* ***(121)***

***5926. நொய்யபாசம் புறம் பிணிப்ப, நோன்மை இலன்போல்***
***உடல் நுணங்கி,***
***வெய்ய அரக்கர்புறத்து அலைப்ப, வீடும் உணர்ந்தே,***
***விரைவு இல்லா***
***ஐயன்,விஞ்சைதனை அறிந்தும் அறியாதான்போல்,***
***அவிஞ்சை எனும்***
***பொய்யைமெய்போல் நடிக்கின்ற யோகி போன்றான்;***
***போகின்றான்.***

***நொய்ய பாசம்புறம் பிணிப்ப -*** *வலிமையற்ற கயிறுகள்தனது உடலைக்கட்ட ;* ***நோன்மை இலன் போல் உடல் நுணங்கி -*** *(அதனை அறுக்கும்) ஆற்றல் அற்றவன் போன்று உடம்புது வண்டு;* ***வெய்ய அரக்கர் புறத்து அலைப்ப -*** *கொடிய அரக்கர்கள் தன்னைச் சூழ்ந்து நின்று இழுத்து வருத்த,;* ***வீடும் உணர்ந்தே -*** *அப்பிணிப்பினின்றும் விடுவித்துக் கொள்ளும் வழியை அறிந்தவனாயிருந்தும்;* ***விரைவு இல்லா ஐயன் -***

*அதனைச் செயலாற்றுவதில் விரைவு காட்டாத அனுமன்;* ***விஞ்சைதனை அறிந்தும் அறியாதான் போல் அவிஞ்சை என்னும் பொய்யை மெய் போல் நடிக்கின்ற -*** *தத்துவ ஞானம் விளைக்கும் பிரம வித்தையை அறிந்திருந்தும், (அதனை) அறியாதவன் போல், அவித்தை என்கின்ற பொய்ப் பொருளை மெய்ப்பொருள் போல எண்ணிக் கொண்டு வெளிக்குக் காட்டி ஒழுகுகின்ற யோகியைஒத்தவனாய்;* ***போகின்றான் -*** *தன்னையிழுக்கின்ற அவர்களுடன் செல்வானாயினான்.*

*மெய்யுணர்வுஇல்லாத உலகத்தினருடன் ஒத்து நடந்து அவர் சென்ற வழிச் சென்று அவரை நல்வழிப்படுத்த முயல்வது தத்துவ ஞானியரான யோகியரின் இயல்பு. அது போன்று அரக்கர்களது பிணிப்புக்கு அடங்கி, அவர்கள் சென்ற வழி எல்லாம் அனுமன் சென்றான் என்க. அவிஞ்சை - அவித்தை; அஞ்ஞானம்.* ***(122)***

***5927. வேந்தன்கோயில் வாயிலொடு விரைவில் கடந்து,***
***வெள்ளிடையின்***
***போந்து, புறம்நின்று இரைக்கின்ற பொறை தீர்***
***மறவர் புறம் சுற்ற,***
***ஏந்து நெடு வால்கிழி சுற்றி, முற்றும் தோய்த்தார்,***
***இழுது எண்ணெய்;***
***காந்து கடுந்தீக் கொளுத்தினார்; ஆர்த்தார்,***
***அண்டம் கடி கலங்க.***

***வேந்தன்கோயில் வாயிலொடும் -*** *(இவ்வாறாக அனுமனைக் கயிறுகள்கொண்டு கட்டி இழுத்துக் கொண்டே) இராவணனது அரண்மனை வாயிலை;* ***விரைவில் கடந்து -*** *விரைவாகக் கடந்து சென்று;* ***வெள்ளிடையின் போந்து-*** *வெட்ட வெளியை அடைந்து;* ***புறம் நின்று இரைக்கின்ற பொறை தீர்மறவர் -*** *அனுமனைச் சுற்றி எப்புறத்தும் நின்று ஆரவாரஞ் செய்கின்றபொறுமையில்லாத அந்த அரக்கவீரர்கள்;* ***ஏந்து நெடுவால் புறம் சுற்ற -*** *எடுக்கப்படுகின்ற நீண்ட (அனுமனது) வாலில் எப்புறமும் சூழும் படி;* ***கிழிசுற்றி முற்றும் இழுது எண்ணெய் தோய்த்தார் -*** *பலவகைச் சீலைகளைக்கொண்டு சுற்றி அவ்வால் முழுவதையும் நெய்யிலும் எண்ணெயிலும் தோய்த்தெடுத்து;* ***காந்து கடுந்தீ கொளுத்தினார் -*** *(அதில்) எரியும் கொடியநெருப்பைக் கொளுத்தி;* ***அண்டம் கடிகலங்க ஆர்த்தார் -*** *அண்ட கோளம்முழுவதும் நிலைகுலையும்படிப் பெருமுழக்கமிட்டார்கள். அனுமன் வாலில்அரக்கர் செய்த செயல் கூறப்பட்டது. கிழி - சீலை; (துணி) இழுது - நெய்.* ***(123)***

***5928. ஒக்க ஒக்கஉடல் விசித்த உலப்பு இலாத உரப்***
***பாசம்,***
***பக்கம் பக்கம்இரு கூறு ஆய், நூறாயிரவர்***
***பற்றினார்;***
***புக்க படைஞர்புடை காப்போர் புணரிக் கணக்கர்;***
***புறம் செல்வோர்,***
***திக்கின்அளவால்; அய் நின்று காண்போர்க்கு***
***எல்லை தெரிவு அரிதால்.***

***ஒக்க ஒக்க உடல்விசித்த* -** *பல ஒன்று சேர்ந்த,அனுமனது உடலைக்கட்டிய;* ***உலப்பு இலாத உரம் பாசம்* -** *அழிவு இல்லாத வலிமை உடையகயிறுகளை;* ***பக்கம் பக்கம் இரு கூறு ஆய்* -** *இரு பக்கங்களிலும் இரண்டுபிரிவுகளாக;* ***நூறு ஆயிரவர் பற்றினார்* -** *நூறு ஆயிரம் (இலட்சம்) அரக்கர்கள் பிடித்துக் கொண்டார்கள்;* ***புக்க புடை காப்போர் படைஞர்* -** *அவர்களுடன் வந்த பக்கங்களிலிருந்து பாதுகாப்பவர்களாகிய ஆயுத பாணிகள்;* ***புணரிக் கணக்கர்* -** *சமுத்திரம் என்னும் தொகை அளவினர்;* ***புறம்செல்வோர் திக்கின் அளவு* -** *அவர்களின் பக்கங்களில் சூழ்ந்து வருபவர்கள், திக்குகளின் அளவு வரை உள்ளவர்;* ***அயல் நின்று காண் போர்க்கு எல்லை தெரிவு அரிது* -** *அதற்கும் அப்பால் நின்று வேடிக்கை காண வருபவர்க்கு அளவு அறிய ஒண்ணாதது.*

*அனுமனை இழுத்துச்செல்லும் போது அங்கு கூடிய அரக்கர்களின் தொகை, நான்கு வகையாகக் கூறப்பட்டது. புணரிக் கணக்கு இருபத்தாறு தானம் உடைய சமுத்திரம் என்ற எண்.* ***(124)***

***5929. 'அந்தநகரும் கடி காவும் அழிவித்து, அக்கன்***
***முதலாயோர்***
***சிந்த நூறி,சீதையொடும் பேசி, மனிதர் திறம் செப்ப***
***வந்த குரங்கிற்குஉற்றதனை, வம்மின், காண வம்'***
***என்று,***
***தம்தம் தெருவும்,வாயில்தொறும், யாரும் அறியச்***
***சாற்றினார்.***

***அந்த நகரும்கடிகாவும் அழிவித்து* -** *(இராவணனின்ஏவலர்கள்) இலங்கை நகரையும் காவல் மிகுந்த அசோகவனம் என்னும் சோலையையும் அழியச் செய்தும்;* ***அக்கன் முதலாயோர் சிந்த நூறி* -** *அக்ககுமாரன்முதலிய சிறந்த அரக்கர்களை சிதறி அழியக் கொன்றும்;* ***சீதையொடும் பேசி மனிதர் திறம் செப்ப வந்த* -** *சீதையுடன் தனியே பேசியும், அற்ப மனிதர்களது வலிமையைச் சொல்லவும் இராவணனிடத்து வந்த;* ***குரங்கிற்கு உற்றதனை* -** *இந்தக் குரங்குக்கு நேர்ந்த துன்ப நிலையை;* ***காண வம்மின் வம் என்று* -** *பார்ப்பதற்கு வாருங்கள் வாருங்கள் என்று;* ***தம் தம் தெருவும் வாயில் தொறும்* -** *தத்தம் வீதிகளிலும்வீட்டு வாயில்கள் எல்லாவற்றிலும்;* ***யாரும் அறிய சாற்றினார்* -** *அனைவரும்அறியும்படிக் கூறினார்கள். இராவணனுடையஏவலர்கள், குரங்குக்கு ஏற்பட்டுள்ள துன்ப நிலையைக் காண வருமாறு அனைவரையும்அழைத்தனர் என்க.* ***(125)***

*அனுமனுக்கு உற்றது கேட்டுச் சானகி எரியைச் 'சுடாதே' எனல்*

***5930. ஆர்த்தார், அண்டத்து அப் புறத்தும்***
***அறிவிப்பார்போல்; அங்கோடு இங்கு***
***ஈர்த்தார்;முரசம் எற்றினார்; இடித்தார்; தெழித்தார்,***
***எம் மருங்கும்***
***பார்த்தார்;ஓடிச் சானகிக்கும் பகர்ந்தார்; அவளும்***
***உயிர் பதைத்தாள்;***

***வேர்த்தாள்;உலந்தாள்; விம்மினாள்; விழுந்தாள்;***
***அழுதாள்; வெய்து உயிர்த்தாள்.***

***அண்டத்துஅப்புறத்தும் அறிவிப்பார் போல் -*** *(அரக்கர்கள்) இந்த அண்ட கோளத்துக்கு அப்பால் உள்ள இடங்களுக்கும் இச் செய்தியைத் தெரிவிப்பவர் போல;* ***ஆர்த்தார் -*** *பேரொலி எழுப்பி ஆரவாரித்தார்கள்;* ***அங்கொடு இங்கு ஈர்த்தார் -*** *அங்கும் இங்குமாக அனுமனைக் கட்டி இழுத்தார்கள்;* ***முரசம் எற்றினார் -*** *பேரிகைகளைத் தாக்கி அடித்து ஒலி எழுப்பினார்கள்;* ***இடித்தார் -*** *(சிலர்) இடிமுழக்கம் போலக் கர்ச்சித்தார்கள்;* ***தெழித்தார் -*** *(சிலர்) அனுமனை அதட்டினார்கள்;* ***எம் மருங்கும் பார்த்தார் -*** *(சிலர்) எப்புறமும் அனுமனைச் சுற்றிப் பார்த்தார்கள்;* ***ஓடி சானகிக்கும் பகர்ந்தார் -*** *(சிலர்) ஓடிப் போய் அனுமனுக்கு உற்ற நிலையை, பிராட்டிக்கும் சொன்னார்கள்;* ***அவளும் உயிர் பதைத்தாள் -*** *(அது கேட்ட) பிராட்டியும் உயிர் துடித்தாள்;* ***வேர்த்தாள் -*** *உடல்வியர்த்தாள்;* ***உலந்தாள் -*** *(மனம்) அழிந்தாள்;* ***விம்மினாள் -*** *ஏக்கமுற்றாள்;* ***விழுந்தாள் -*** *நிலத்தில் சாய்ந்தாள்;* ***அழுதாள் -*** *வாய்விட்டு அழுதாள்;* ***வெய்து உயிர்த்தாள் -*** *வெப்பமாகப் பெருமூச்சு விட்டாள்.*

*அனுமனைக்கயிறுகளால் கட்டி இழுத்த அரக்கர்களது மகிழ்ச்சி ஆரவாரிப்பும், அது கேட்ட பிராட்டியின் சோக நிலையும் உரைக்கப்பட்டன.* ***(126)***

***5931. 'தாயே அனைய கருணையான் துணையை, ஏதும்***
***தகைவு இல்லா***
***நாயே அனைய வல்அரக்கர் நலியக் கண்டால்,***
***நல்காயோ ?***
***நீயே உலகுக்கு ஒருசான்று; நிற்கே தெரியும்***
***கற்பு;-அதனில்***
***தூயேன் என்னின்,தொழுகின்றேன்,-எரியே!-***
***அவனைச் சுடல் !' என்றாள்.***

***எரியே -*** *(பிராட்டிஅக்கினி தேவனை நினைத்து) ஏ! நெருப்புக் கடவுளே!;* ***தாயே அனைய கருணையான் துணையை -*** *(எல்லா உயிர்களிடத்தும்) தாய் போன்று அருள் புரியும் இராமபிரானுக்கு உயிர்த்துணைவனான அனுமனை;* ***ஏதும் தகைவு இல்லா -*** *சிறிதும் பெருமைக்குணம் இல்லாத;* ***நாயே அனைய -*** *நாய் போல இழிந்த;* ***வல் அரக்கர் நலிய கண்டால் -*** *கொடிய அரக்கர்கள் துன்புற்ற நீ பார்த்தால்;* ***நல்காயோ -*** *அவனுக்கு அருள் செய்ய மாட்டாயோ ?;* ***நீயே உலகுக்கு ஒரு சான்று நிற்கே கற்பு தெரியும் -*** *நீதான், உலகம் அனைத்துக்கும் ஒப்பற்ற சாட்சியாக விளங்குபவன்; (ஆதலால்) உனக்கே எனது கற்பு நிலை தெரியும்;* ***அதனில் தூயேன் என்னின் அவனை சுடல் -*** *அந்தக் கற்புத் திறத்தில் நான் தூய்மை உடையவள் என்பது உண்மையானால், அந்த அனுமனை நீ சுடாதே;* ***தொழுகின்றேன் -*** *உன்னை வணங்கிக் கேட்டுக் கொள்கின்றேன்;* ***என்றாள் -*** *என்று உறுதியிட்டுக் கூறினாள்.*

*பிராட்டிஅக்கினி தேவனிடம், அனுமனைச் சுட்டு வருத்தக் கூடாது என்று கேட்டுக் கொண்டாள் என்க.* ***(127)*** *அனல் குளிர்ந்தமைகண்டு அனுமன் மகிழ்தல்*

**கலிவிருத்தம்**

***5932. வெளுத்தமென் நகையவள் விளம்பும் ஏல்வையின்,***
***ஒளித்த வெங்கனலவன் உள்ளம் உட்கினான்;***
***தளிர்த்தனமயிர்ப் புறம் சிலிர்ப்ப, தண்மையால்,***
***குளிர்த்தது, அக்குரிசில் வால், என்பு கூரவே.+***

***வெளுத்த மென்நகையவள் -*** *வெண்மையான மெல்லியபற்களை உடைய பிராட்டி;* ***விளம்பும் ஏல்வையின் -*** *இவ்வாறு கூறிய போது;* ***ஒளித்த வெம் கனலவன் உள்ளம் உட்கினான் -*** *ஒளி பெற்ற வெவ்விய தீக்கடவுள் மனத்தில் அச்சம் கொண்டான்;* ***புறம் மயிர்தண்மையால் சிலிர்ப்ப -*** *(அவ்வளவில், அனுமனின்) உடலின் மேல் உள்ள உரோமங்கள் குளிர்ச்சியால் புளகித்து;* ***தளிர்த்தன -*** *செழிப்புற்றன;* ***அக்குரிசில் வால் -*** *அந்தச் சிறந்த அனுமனது வால்;* ***என்பு கூர குளிர்த்தது -*** *எலும்பு வரையிலும் மிகுதியாக (உட்புறமும்) குளிர்ச்சியடைந்தது.*

*தீக்கடவுளின்வெம்மை நீங்கினவுடன், அனுமனது மயிர்ப்புறம் சிலிர்ப்பத்தளிர்த்தன; வால் என்பு கூரக் குளிர்ந்தது என்க. குரிசில் - ஆண்டகையான அனுமான்.* ***(128)***

**அறுசீர் ஆசிரியவிருத்தம்**

***5933. மற்றுஇனிப் பல என் ? வேலை வட அனல், புவி***
***அளாய***
***கற்றை வெங்கனலி, மற்றைக் காயத் தீ, முனிவர்***
***காக்கும்***
***முற்றுறு மும்மைச்செந் தீ, முப்புரம் முருங்கச் சுட்ட***
***கொற்றவன்நெற்றிக் கண்ணின் வன்னியும்,***
***குளிர்ந்த அன்றே.***

***வேலை வட அனல் -*** *கடலில்உள்ள வடவாமுகாக் கினியும்;* ***புவி அளாய கற்றை வெம் கனலி மற்றை காயத் தீ -*** *பூமியில் பொருந்திய தொகுதியாகிய வெப்பம் உள்ள நெருப்பும், அதுவல்லாதவானத்தில் அமைந்த நெருப்பும்;* ***முனிவர் காக்கும் முற்றுறுமும்மை செந்தீ -*** *முனிவர்கள் காத்து வளர்க்கும் (வைதிகநியமம்) நிறைவேறற்குஉரிய மூன்றுவகை அக்கினிகளும்;* ***முப்புரம் முருங்க சுட்ட கொற்றவன் நெற்றிக் கண்ணின் வன்னியும் -*** *அசுரர்களுடைய திரிபுரங்கள் அழியச் சுட்டெரித்த வெற்றியை உடைய சிவபிரானது நெற்றிக் கண்ணிடத்தும் பொருந்தியுள்ள நெருப்பும்;* ***குளிர்ந்த -*** *குளிர்ச்சியை அடைந்தன;* ***மற்று இனிப்பல என் -*** *இனிப்பல சொல்வது என்ன இருக்கிறது?;*

*அன்று, ஏ - அசைநிலைகள்* ***(129)***

***5934. அண்டமும்கடந்தான் அங்கை அனலியும்***
***குளிர்ந்தது;-அங்கிக்***
***குண்டமும்குளிர்ந்த; மேகத்து உரும் எலாம்***
***குளிர்ந்த; கொற்றச்***

***சண்ட வெங் கதிரஆகித் தழங்கு இருள் விழுங்கும்***
***தா இல்***
***மண்டலம்குளிர்ந்த; மீளா நரகமும் குளிர்ந்த மாதோ.***

***அண்டமும்கடந்தான் அங்கை அனலியும் குளிர்ந்தது -*** *அண்டங்கள் எல்லாவற்றுக்கும் அப்பாலுள்ள சத்திய லோகத்தவனான பிரமனது உள்ளங்கையில் உள்ள நெருப்பும் குளிர்ச்சி அடைந்தது;* ***அங்கி குண்டமும் குளிர்ந்த -*** *வைதிக அக்கினிக் குண்டங்களும் குளிர்ந்துவிட்டன;* ***மேகத்து உரும் எலாம் குளிர்ந்த -*** *மேகத்தின் இடையில் உள்ள இடிகள் யாவும் குளிர்ச்சியுற்றன;* ***கொற்றம் சண்டம் வெம் கதிர ஆகி தழங்கு இருள் விழுங்கும் தா இல் மண்டலம் குளிர்ந்த -*** *வெற்றி பொருந்திய வலிய வெப்பம் மிகுந்த கிரணங்கள் கொண்டனவாய், முழங்கி எழும் இருளை விழுங்குகின்ற அழிவற்ற சூரிய மண்டலம் குளிர்ச்சியடைந்தது;* ***மீளா நரகமும் குளிர்ந்த -*** *தன் தன்மையினின்றும் மாறாத நரகத் தீயும் குளிர்ந்தது.*

*பிராட்டியின்பிரார்த்தனைக்கு இரங்கி, எங்கும் உள்ள அக்கினிகளும் தம் கொடுமை நீங்கி அனுதாபம் காட்டலாயின என்பது கருத்து.* ***(130)***

***5935.*** ***வெற்பினால் இயன்றது அன்ன மேனியை விழுங்கி,***
***வெந் தீ***
***நிற்பினும் சுடாதுநின்ற நீர்மையை நினைவின்***
***நோக்கி,***

***அற்பின் நார் அறாத சிந்தை அனுமனும், 'சனகன்***
***பாவை***
***கற்பினால்இயன்றது' என்பான், பெரியது ஓர்***
***களிப்பன் ஆனான்.***

***அற்பின் நார்அறாத சிந்தை அனுமனும் -*** *(சீதாராமர்கள்பக்கல்) தான் கொண்டுள்ள பக்தியாகிய பற்று நீங்காத மனத்தை உடைய அனுமனும்;* ***வெம் தீ -*** *அந்தக் கொடிய நெருப்பு;* ***வெற்பினால் இயன்றது அன்ன மேனியை விழுங்கி நிற்பினும் -*** *மலையால் அமைக்கப்பட்டது போன்ற தனது உடலை முழுவதும் கவர்ந்து நின்று எரித்தாலும்;* ***சுடாது நின்ற நீர்மையை நினைவின் நோக்கி -*** *தன்னைச் சுடாது குளிர்ச்சியோடு விளங்கிய தன்மையை தன் மனத்தால் நன்கு ஆராய்ந்து உணர்ந்து;* ***சனகன் பாவை கற்பினால் இயன்றது -*** *'சனகனின் மகளாகிய சானகியின் கற்பின் சிறப்பால் ஆனது (இது)';* ***என்பான் -*** *என்று தீர்மானித்தவனாகி;* ***பெரியது ஓர் களிப்பன் ஆனான் -*** *ஒப்பற்ற பெருங்களிப்பை உடையவன் ஆனான்.*

*நெருப்பு தன்னைச்சுடாமல் இருப்பதற்குக் காரணம் பிராட்டியின் கற்புச் சிறப்பே என்று உணர்ந்து அனுமன் மகிழ்ந்தனன் என்க.* ***(131)***

*அனுமன் இலங்கைநகர் முழுதும் காணுதல்*

***5936.*** ***அற்றை அவ்இரவில், தான் தன் அறிவினால்***
***முழுதும் உன்னப்***

***பெற்றிலன்எனினும், ஆண்டு, ஒன்று உள்ளது பிழை
உறாமே,
மற்று உறு பொறிமுன் செல்ல, மறைந்து செல்
அறிவு மான,
கற்றிலாஅரக்கர் தாமே காட்டலின், தெரிய,
கண்டான்.***

***தான் -*** *அந்த அனுமன்தான்;* ***அற்றை அ இரவில் -*** *பிராட்டியைக் காண ஊர் தேடி வந்த அன்றைத் தினத்து முன்னிரவிலே;* ***தன் அறிவினால் முழுதும் உன்ன பெற்றிலன்எனினும் -*** *தன் அறிவைக் கொண்டுநகர்ப் பகுதிகள்முழுவதையும் ஊன்றி அறியப் பெற்றிலனாயினும்;* ***ஆண்டு உள்ளது ஒன்றுபிழை உறாமே -*** *அந்நகரத்தில் உள்ளஇடம் ஒன்றேனும், தவறாமல்;* ***கற்றிலா அரக்கர் தாமே காட்டலின் -*** *கற்றறிவில்லா (மூடர்களான) அந்த அரக்கர்கள்தாங்களே எல்லாவற்றையும் காட்டிக் கொண்டு சென்றதனால்;* ***மற்று உறுபொறி முன் செல்ல -*** *புறத் துறுப்பாய்ப் பொருந்திய பொறிகள் (பொருள்களினிடத்து) முன்னே செல்ல;* ***மறைந்து செல் அறிவுமான -*** *(அவற்றின் பின்னே) மறைவாகச் செல்கின்ற அறிவை ஒப்ப;* ***தெரிய கண்டான் -*** *நன்றாகப் பார்த்தான்.*

*பிராட்டியைத்தேடி, இலங்கை நகரில் அன்றைய இரவில் அலைந்த போது காணாத இடங்களை எல்லாம் இன்று அரக்கர் செயலால் அனுமன் கண்டான் என்க. இதற்கு, பொறிகளின் வழி மன அறிவு புலன் வழிச் சென்று யாவும் அறிதல் உவமையாக்கப்பட்டது.* ***(132)***

*அனுமன் மேலெழஅரக்கர் தோள் அற்று விழுதல்*

***5937. முழுவதும் தெரிய நோக்கி, முற்றும் ஊர் முடிவில்
சென்றான்,
'வழு உறு காலம்ஈது' என்று எண்ணினன், வலிதின்
பற்றித்
தழுவினன், இரண்டுநூறாயிரம் புயத் தடக் கை
தாம்போடு
எழு என நால,விண்மேல் எழுந்தனன்; விழுந்த
எல்லாம்.***

***முழுவதும் தெரியநோக்கி -*** *அந்த இலங்கை நகர்முழுவதையும் நன்றாகப் பார்த்துக் கொண்டே;* ***ஊர் முற்றும் முடிவில் சென்றான் -*** *நகர் முழுவதும் சுற்றிக் கடை எல்லையில் சென்றவனான அனுமான்;* ***வழு உறு காலம் ஈது என்று எண்ணினன் -*** *தப்பிப் போதற்குரிய சமயம் இதுதான் என்று எண்ணி,;* ***வலிதின் பற்றி தழுவினன் -*** *(இரு புறத்துக் கயிறுகளையும்) வலியப் பிடித்து, (இரு புறத்து விலாவிலும் சேர) இடுக்கிக் கொண்டு;* ***இரு நூறாயிரம் புயம் தடம் கை தாம் போடு எழு என நால -*** *இரண்டு இலட்சம் தோள்களும் பெரிய கைகளும் இரு புறத்துக் கயிற்றுடனே தூண் போலத் தொங்கும்படி;* ***விண் மேல் எழுந்தனன் -*** *வானின் மேல் உயர் எழும்பினான்;* ***எல்லாம் விழுந்த -*** *அவ்வரக்கர் கூட்டம் எல்லாம் கீழே விழுந்தன. இலங்கை நகர்முழுவதையும் காணுதல் மூலம், தனது கருத்தை நிறைவேற்றிக் கொண்ட*

*அனுமன்,திடீரென மேலே எழும்பினான். அப்போது, அவனைக்கயிற்றொடு பற்றியிருந்த அரக்கர் கூட்டம் கீழே விழுந்தன என்க. புயத்திற்குஎழு (தூண்) உவமை.* ***(133)***

*விசும்பில்பொலிந்த அனுமன் தோற்றம்*

***5938. இற்ற வாள்அரக்கர் நூறாயிரவரும், இழந்த தோளார்,***
***முற்றினார் உலந்தார்; ஐயன் மொய்ம்பினோடு உடலை மூழ்கச்***
***சுற்றிய கயிற்றினோடும் தோன்றுவான், அரவின் சுற்றம்***
***பற்றிய கலுழன்என்ன, பொலிந்தனன் விசும்பின் பாலான்.***

***இற்றவாள்அரக்கர் நூறு ஆயிரவரும் -*** *தனிப்பட்டு விழுந்த கொடியஅந்த அரக்கர் நூறாயிரம் பேரும்;* ***இழந்த தோளார் முற்றினார் உலந்தார் -*** *தோள்களை இழந்தவர்களாய் உயிர் முடிந்து இறந்தார்கள்;* ***ஐயன் -*** *அனுமன்;* ***மொய்ம்பினோடு உடலை மூழ்கச் சுற்றிய கயிற்றினோடும் -*** *தோள்களோடுஉடம்பையும் அழுந்தக் கட்டிய கயிற்றினுடனே;* ***விசும்பின் பாலான்தோன்றுவான்-*** *ஆகாயத்திடத்துக் காணப்படுபவனாய்;* ***அரவின் சுற்றம்பற்றிய கலுழன் என்ன பொலிந்தனன் -*** *பாம்பின் கூட்டம் பற்றிய கருடனைப் போல விளங்கினான்.*

*கயிறுகளால்கட்டுண்டு வானில் விளங்கிய அனுமனுக்கு, அரவுகளால் சுற்றப்பட்டு வானில் பறக்கும் கருடன் உவமை. மொய்ம்பு - தோள். 'பூந்தாது மொய்ம் பினவாக' (கலித் தொகை 88:2)* ***(134)***

*அனுமன் தன் வாலைஇலங்கை மீது நீட்டுதல்*

***5939. துன்னலர்புரத்தை முற்றும் சுடு தொழில் தொல்லையோனும்,***
***பன்னினபொருளும், நாண, 'பாதகர் இருக்கை பற்ற,***
***மன்னனைவாழ்த்தி, பின்னை வயங்கு எரி மடுப்பென்' என்னா,***
***பொன் நகர்மீதே, தன் போர் வாலினைப் போக விட்டான்.***

***துன்னலர்புரத்தை முற்றும் சுடுதொழில் தொல்லை யோனும் -*** *பகைவர்களது திரிபுரத்தை முழுவதும் எரித்தலாகிய தொழிலைச் செய்த முன்னோனான சிவபெருமானும்;* ***பன்னின பொருளும் நாண-*** *(அப்பெருமானுக்குத் துணை புரிய வந்தனஎன்று) சொல்லப்படுகின்ற பொருள்களும் வெட்கப்படும்படி;* ***பாதகர் இருக்கைபற்ற -*** *பாவிகளான அரக்கர்களது இருப்பிடமாகிய இந்த இலங்கை நகர்முழுவதும் தீப்பற்றி எரியுமாறு;* ***மன்னனை வாழ்த்தி -*** *(முதலில்)இராமபிரானைத் துதித்து;* ***பின்னை வயங்கு எரி மடுப்பென என்னா -*** *பிறகு,விளங்கும் நெருப்பை*

*மூட்டுவேன் என்று எண்ணி;* ***தன் போர் வாலினை -*** *தனது போர்த்திறங் கொண்டவாலை;* ***பொன் நகர் மீதே போக விட்டான் -*** *பொன்மயமான இலங்கை நகரின் மேலே செலுத்தினான்.*

*சிவபிரான்,துணைவலியோடு (ஆதிசேடன், நாண், திருமால் அம்பு, பூமித்தேர்) திரிபுரத்தை எரித்தான். அனுமன் எந்தத் துணையும் இன்றி பகைவர் ஊரை எரித்தான். அதனால், தொல்லையோனுக்கும், பொருளுக்கும் நாணம் ஏற்பட்டது என்க. துணைவலியின்றி, பகைப்புலத்தை எரிப்பதற்கு அனுமனுக்கு ஆற்றல் அளித்தது, அவன் இராமபிரானை வாழ்த்தியதாகும். இது அனுமனது உட்கோள் ஆகும்.*
***(135)***

***5940. அப்பு உறழ்வேலைகாறும் அலங்கு பேர் இலங்கைதன்னை,***
***எப் புறத்துஅளவும் தீய, ஒரு கணத்து எரித்த கொட்பால்,***
***துப்பு உறழ் மேனிஅண்ணல், மேரு வில் குழைய, தோளால்***
***முப்புரத்து எய்தகோலே ஒத்தது-அம் மூரிப் போர் வால்.***

***அப்பு உறழ் வேலைகாறும் அலங்கு பேர் இலங்கை தன்னை -*** *நீர்மிக்க கடல் வரை விளங்கும் பெரிய இலங்கை நகரை,;* ***எப்புறத்து அளவும்தீய ஒரு கணத்து எரித்த கொட்பால் -*** *எல்லாப் பக்கங்களின் எல்லைவரையிலும் எரிந்து போக ஒரு கண நேரத்தில் எரித்த திறமையால்;* ***அம்மூரிபோர்வால் -*** *அனுமனுடைய அந்த வலிய போர்த்திறம் உள்ளவாலானது;* ***துப்பு உறழ் மேனி அண்ணல் -*** *பவழம்போல் சிவந்த திருமேனியை உடைய சிவபிரான்;* ***மேருவில் குழைய -*** *மேரு மலையாகிய வில் வளைய;* ***தோளால் -*** *தனது தோள் வலியால்;* ***முப்புரத்து எய்த கோலே ஒத்தது -*** *திரிபுரங்களின் மீது தூண்டிய (திருமாலாகிய) அம்பே போன்றிருந்தது.*

*அனுமன் வாலுக்கு,முப்புரம் எரித்த அம்பு உவமை ஆயிற்று. 'முன்னையிட்ட தீ முப்புரத்திலே, பின்னையிட்ட தீ தென்னிலங்கையில்' என்ற பட்டினத்தார் பாடல் இங்கு சிந்திக்கத் தக்கது. அனுமன், சிவபிரான் அமிசம் என்பது உறுதிப்படுகின்றது.*
***(136)***

***5941. வெள்ளியின் பொன்னின், நானா விளங்கு பல் மணியின், விஞ்சை***
***தெள்ளியகடவுள்-தச்சன் கை முயன்று அரிதின் செய்த***
***தள்ள அருமனைகள்தோறும், முறை முறை தாவிச் சென்றான்;***
***ஒள் எரியோடும்,குன்றத்து ஊழி வீழ் உருமொடு ஒத்தான்.***

***வெள்ளியின்பொன்னின் நானா விளங்கு பல் மணியின் -*** *வெள்ளியாலும் தங்கத்தாலும், பலவகைப்பட்ட பிரகாசிக்கின்ற அழகிய இரத்தினங்களாலும்;* ***விஞ்சை தெள்ளிய கடவுள் தச்சன் -*** *சிற்பக்கலையில் தேர்ந்தவனாகிய தெய்வத் தச்சனான் விசுவகர்மன்;* ***கை முயன்று அரிதின் செய்த -*** *தன் கைவன்மையால் முயற்சி செய்து அருமையாக அமைத்த;* ***தள்ள அரு மனைகள் தோறும் -*** *அழித்தற்கு அருமையான மாளிகைகளில் எல்லாம்;* ***ஒள் எரியோடும் குன்றத்து ஊழி வீழ் உருமொடு ஒத்தான் -*** *ஒள்ளிய நெருப்புடனே மலையின் மீது கற்பாந்த காலத்தில் விழுகின்ற பேரிடியைப் போன்றவனாய்;* ***முறை முறை தாவிச் சென்றான் -*** *வரிசையாகத் தாவித் தாவித் தீயை வைத்துக் கொண்டு செல்வானாயினான்.*

*இலங்கை நகரத்துமாளிகைகளுக்கு மலைகளும், தன் வாலின் நெருப்போடு பாயும் அனுமனுக்கு நெருப்புடன் வீழும் இடியும் உவமைகளாக வந்தன. கை முயலுதல் - செய்வதறிந்து செய்தல். (137) இலங்கை நகரைஎரியுண்ணுதல்*

***5942. நீல் நிறநிருதர், யாண்டும் நெய் பொழி வேள்வி நீக்க,***
***பால் வரு பசியன், அன்பான் மாருதி வாலைப் பற்றி,***
***ஆலம் உண்டவன்நன்று ஊட்ட, உலகு எலாம் அழிவின் உண்ணும்***
***காலமே என்னமன்னோ, கனலியும் கடிதின் உண்டான்.***

***நீல் நிறநிருதர் யாண்டும் நெய் பொழி வேள்வி நீக்க -*** *கருநிறத்தவர்களான அரக்கர்கள் எங்கும், நெய் சொரிந்து செய்யும் யாகங்களைப் புரிய வொட்டாமல் நீக்கி விட்டதனால்;* ***பால் வரு பசியன் -*** *தன்னிடத்தே மிக்க பசி உடையவனான;* ***கனலியும் -*** *அக்கினி தேவனும்;* ***மாருதி வாலை அன்பான் பற்றி*** *- அனுமனது வாலை அன்புடன் தனக்கு ஆதாரமாகப் பற்றிக் கொண்டு;* ***ஆலம் உண்டவன் நன்று ஊட்ட -*** *விஷத்தை உண்ட சிவபெருமானே ஏவி உண்பிக்க;* ***உலகு எலாம் அழிவின் உண்ணும் காலமே என்ன -*** *உலகம் முழுவதையும் ஊழி முடிவில் எரிக்கின்ற காலத்தைப் போல;* ***கடிதின் உண்டான் -*** *இலங்கை நகரை விரைவாக எரித்து அழித்தான்.*

*யாகங்களைச்செய்ய வொட்டாமல் அரக்கர்கள் தடுத்ததனால், உணவின்றிப் பசியினால் வருந்திய தீக்கடவுள், இப்போது, அனுமனது வாலைப் பற்றிக் கொண்டு, இலங்கை நகரை எரித்து, பசி அடங்கினான், என்பது கருத்து. அனுமனுக்கு, ஆலம் உண்டவனும், வாலின் தீக்கு, யுகாந்தகாலத் தீயும், இலங்கைக்கு உலகமும் உவமைகள்.* ***(138)***

## இலங்கைஎரியூட்டு படலம்

*அனுமன்இலங்கை நகரைக் கொளுத்திய செய்தியைக் கூறுவது இந்தப் படலம். இலங்கா புரியை அக்கினி தேவனுக்கு அனுமன் உணவாக்கினான் என்பது இதன் பொருள். ஊட்டுதல் உண்பித்தல்.*

*மாளிகைகளில்தீப்பற்ற மாந்தர் பூசலிட்டு ஓடுதல்*

**கலி விருத்தம்**

***5943. கொடியைப்பற்றி, விதானம் கொளுவி, தான்***
***நெடிய தூணைத்தழுவி, நெடுஞ் சுவர்***
***முடியச் சுற்றி,முழுதும் முருக்கிற்றால்-***
***கடிய மாமனைதோறும் கடுங் கனல்.***

***கடும் கனல் -*** *(அனுமன்வாலில் இட்ட) கொடிய நெருப்பு;* ***கடிய மாமனை தோறும் -*** *காவலை உடைய பெரிய மாளிகைகளில் எல்லாம்;* ***கொடியைப் பற்றி -*** *கொடிகளைப்பற்றிக்கொண்டும்;* ***விதானம் கொளுவி -*** *மேற் கட்டிகளைஎரித்தும்;* ***நெடிய தூணை தழுவி -*** *உயர்ந்த தூண்களைச் சூழ்ந்தும்;* ***நெடுஞ்சுவர் முடிய சுற்றி -*** *நீண்ட சுவர்களை முழுவதும் சுற்றிக் கொண்டும்;* ***முழுதும் முருக்கிற்று -*** *அம்மாளிகைகள் முழுவதையும் எரித்து அழித்தது;*

*முருக்கிற்று -அழித்தது; கடி - காவல்; கனல் - நெருப்பு; தான், ஆல்; அசைகள்.* ***(1)***

***5944. வாசல்இட்ட எரி மணி மாளிகை***
***மூச முட்டி, முழுதும்முருக்கலால்,-***
***ஊசலிட்டென ஓடி,உலைந்து உளை***
***பூசலிட்ட-இரியல்புரம் எலாம்.***

***வாசல் இட்ட எரி-*** *மாளிகையின் வாயிலில் அனுமனால் பற்றவைக்கப்பட்ட நெருப்பு;* ***மணி மாளிகை மூச முட்டி -*** *அழகிய மாளிகையை மொய்த்தாற் போலச் சூழ்ந்து தாக்கி;* ***முழுதும் முருக்கலால் -*** *முழுவதையும் எரித்து அழித்ததனால்;* ***இரியல் புரம் எலாம் -*** *நிலை தளர்ந்த அந் நகரத்து மக்கள் எல்லாம்;* ***ஊசல்இட்டு என ஓடி -*** *ஊஞ்சல் ஆடுவதுபோல் (போகும்வழி அறியாது) இங்கும் ஆங்குமாக ஓடி;* ***உலைந்து உளை பூசல் இட்ட -*** *வருந்தி வருத்தத்தினாலாகும் பேரொலியை உண்டாக்கினர்.*

*மாளிகைகள்முழுவதும் எரிந்து அழிந்ததனால், அந்நகரத்து மக்கள் அச்சத்தால் விரைந்து வெளியேறி ஓடுவதும், தமது பொருளை நினைந்து மீள நகரினுள் வருவதுமாய் இருத்தலால் 'ஊசல் இட்ட என ஓடி' எனக் கூறப்பட்டது. ஊசல் இட்டு மகிழ வேண்டிய மாளிகையில் மக்கள் ஊசல் போல அலைந்து திரிந்தனர் என்பது குறிப்பு. 'புரம்' என்பது இட ஆகு பெயராய் நின்று நகரத்து மக்களைக் காட்டிற்று. உளை பூசல் - வருந்தி அழைக்கும் கூப்பாடு.* ***(2)***

***5945. மணியின்ஆய வயங்கு ஒளி மாளிகை,***
***பிணியின் செஞ்சுடர்க் கற்றை பெருக்கலால்,***
***திணி கொள் தீஉற்றது, உற்றில, தேர்கிலார்***
***அணி வளைக் கைநல்லார், அலமந்துளார்.***

***மணியின் ஆயவயங்கு ஒளி மாளிகை** - இரத்தினங்களால் அமைக்கப்பட்ட விளங்குகின்ற ஒளியை உடைய மாளிகைகள்; **பிணியின் செஞ்சுடர் கற்றை பெருக்கலால்** - தொகுதியாக, செந்நிறமான ஒளியின் திரளை வீசுவதால்; **திணி கொள் தீ உற்றது உற்றில தேர்கிலார்** - நெருக்கங்கொண்ட நெருப்பு பிடித்த இடத்தையும் பிடியாத இடத்தையும் தெரிந்துகொள்ள முடியாதவர்களாய்; **அணிவளைக்கை நல்லார் அலமந்து உளார்** - அழகிய வளையல்களை அணிந்த மகளிர்கள் இன்னது செய்வதென்றுஅறியாமல் குழப்பமுற்று வருந்தினர். மாளிகை வீசும் மணி ஒளிக்கும், தீ பரவிய செஞ்சுடர் ஒளிக்கும் வேற்றுமை காணாது, மகளிர்கள் மயங்கி வருந்தினர் என்பது கருத்து. **(3)***

***5946. வானகத்தைநெடும் புகை மாய்த்தலால்,***
***போன திக்குஅறியாது புலம்பினார்-***
***தேன் அகத்தமலர் பல சிந்திய***
***கானகத்து மயில்அன்ன காட்சியார்***

***தேன் அகத்தமலர் பல சிந்திய** - தேனைத் தன்னுள்ளேஅடக்கிய பலவகையான மலர்கள் சிதறி விழப்பெற்ற; **கானகத்து மயில் அன்னகாட்சியார்** - காட்டிலே (தம்விருப்பின்படி விளையாடுகின்ற) மயில் போன்ற சாயலை உடைய மகளிர்கள்; **நெடும் புகை** - நெடுந்தூரம் பரந்த புகை; **வானகத்தை மாய்த்தலால்** - ஆகாயத்தை மறைத்ததனால்; **போனதிக்கு அறியாது** - (தம் கணவர் உயர எழுந்து) போன திசையைத் தாம்இன்னதென்று உணராமல்; **புலம்பினார்** - வாய்விட்டு அழுவாராயினார். வானையும் மறைத்தபுகையில், தம் கணவர் உய்ந்து போன திசை தெரியாது மகளிர்கள் வருந்தினர் என்க. மாய்த்தல் - மறைத்தல். **(4)***

***5947. கூய்,கொழும் புனல், குஞ்சியில், கூந்தலில்,***
***மீச்சொரிந்தனர், வீரரும், மாதரும்;***
***ஏய்த்ததன்மையினால், எரி இன்மையும்,***
***தீக்கொளுந்தினவும், தெரிகின்றிலார்.***

***வீரரும் மாதரும்**- அரக்கவீரர்களும் மகளிரும்; **கூய்** - (எரிபற்றியதனால்) பேராரவாரம் செய்து; **குஞ்சியில் கூந்தலில்** - தம்மைச் சார்ந்தவரின் தலைமயிரில்; **கொழும் புனல்** - மிக்க நீரை; **மீ சொரிந்தனர்** - மேலே ஊற்றுவாராயினர்; **ஏய்த்த தன்மையினால்** - (அங்ஙனமாகியும், தம்மவரின் செம்பட்டை மயிரும் நெருப்பும்) நிறத்தில் ஒத்திருக்கின்ற இயல்பினால்,; **எரி இன்மையும்** - (தலைமயிர்களில்) நெருப்பு இல்லாமையும்; **தீ கொளுந்தினவும்** - நெருப்புப் பற்றினவற்றையும்; **தெரிகின்றிலார்** - வேறுபாடு அறியாதவராக இருந்தார்கள்.*

*சில அரக்கர்,தம்மைச் சேர்ந்த ஆடவர் மகளிரின் தலைமயிரில் நெருப்புப் பிடிக்கவே, கூவி, அவர்கள் தலையில் நீரை ஊற்றியும், எரி அவிந்ததா, அவிய வில்லையா என்று தெரியாதவராயிருந்தனர். அவர்களது தலை மயிர் செம்பட்டையாதலின், நெருப்புக்கும் அதற்கும் வேறுபாடு தெரியவில்லை என்க.* ***(5)***

*தீயும் புகையும்ஓங்கிப் பரவுதல்*

***5948. இல்லில்தங்கு வயங்கு எரி யாவையும்,***
***சொல்லின் தீர்ந்தன போல்வன, தொல் உருப்***
***புல்லிக்கொண்டன-மாயைப் புணர்ப்பு அறக்***
***கல்லி, தம்இயல்பு எய்தும் கருத்தர்போல்.***

***மாயைபுணர்ப்பு அற கல்லி -*** *மாயையின் கலப்பு நீங்க, (அதனைத் தமது ஞானத்தால்) களைந்து;* ***தம் இயல்பு எய்தும் -*** *தமது இயல்பான (ஆத்மஞான) நிலையை அமையும்;* ***கருத்தர் போல் -*** *நோக்கமுடைய மேலோர் போல;* ***இல்லில் தங்கும் வயங்கு எரி யாவையும் -*** *அரக்கர்களது வீடுகளில் தங்கியிருந்த எரிகின்ற நெருப்புகளெல்லாம்;* ***சொல்லில் தீர்ந்தன போல்வன -*** *இராவணனது கட்டளைச் சொல்லினின்று விடுபட்டன போல்பவையாய்;* ***தொல் உரு புல்லிக் கொண்டன -*** *தமது தொன்மையான உருவைத் தழுவிக் கொண்டு விட்டன.*

*இராவணனுக்குஅஞ்சி, இலங்கை நகரில் அரக்கர்களுக்குப் பயன்படும் அளவில், அது வரை கட்டுப்பட்டிருந்த நெருப்புகள், (அக்கினி தேவன்) இப்போது, இராவணன் ஆணையை, மீறி, அனுமன் வைத்த நெருப்புடன் ஒன்று பட்டுத் தமது பழைய உருவத்தை அடைந்து விட்டன. இது, மாயைப்புணர்ப்பு அற்ற ஆன்மா, தமது உண்மை நிலையை அடைந்தது போல இருந்தது என்க. சொல் - கட்டளை. தொல் உரு - கட்டுப்பாட்டுக்கு முன் இருந்த உருவம்; மாயை - உண்மை நிலையை அறிய முடியாது ஆன்மாவைக் கட்டுப்படுத்திக் கொண்டிருக்கும் ஒரு ஆற்றல்; புணர்ப்பு - கலப்பு; தம் - இங்கு ஆன்மாவைச் சுட்டியது.* ***(6)***

***5949. ஆயது அங்குஓர் குறள் உரு ஆய், அடித்***
***தாய் அளந்து,உலகங்கள் தரக் கொள்வான்,***
***மீ எழுந்தகரியவன் மேனியின்,***
***போய் எழுந்துபரந்தது-வெம் புகை.***

***அங்கு ஓர் -*** *அக்காலத்தில், முதலில் ஒரு;* ***குறள் உரு ஆய் -*** *வாமனவடிவாகச் சென்று;* ***தர -*** *(மாவலி தனக்குக்) கொடுக்க;* ***உலகங்கள் அடி தாய் அளந்து கொள்வான் -*** *மூவுலகங்களையும், தன் அடிகளால் தாவி அளந்து கொள்ளும் பொருட்டு;* ***மீ எழுந்த கரியவன் மேனியின் -*** *மேலோங்கி வளர்ந்த கருநிறம் உடைய திருமாலின் திரு மேனியைப் போல;* ***வெம் புகை எழுந்து போய் பரந்தது ஆயது -*** *வெப்பமான புகை, மேல் எழுந்து சென்று எங்கும் பரந்ததாக ஆயிற்று.*

*மேல் எழுந்தகரும்புகை, உலகம் அளக்க எழுந்த திரிவிக்கிரமனான திருமாலைப் போல ஆயிற்று என்க. நிறத்தாலும், மேல் எழுதலாலும் வெம்புகை, திருமாலை ஒத்திருந்தது.* ***(7)***

***5950. நீலம்நின்ற நிறத்தன, கீழ் நிலை***
***மாலின் வெஞ்சின யானையை மானுவ;***
***மேல் விழுந்துஎரி முற்றும் விழுங்கலால்***
***தோல் உரிந்துகழன்றன, தோல் எலாம்.***

***நீலம் நின்றநிறத்தன -*** *கருநிறம்பொருந்தியனவாய் இருந்த;* ***தோல் எலாம் -*** *யானைகள் எல்லாம்;* ***மேல் எரி விழுந்து முற்றும் விழுங்கலால் -*** *தம்மீது நெருப்பு விழுந்து உடம்பு முழுவதும் பற்றிக் கொண்டதனால்;* ***தோல் உரிந்து கழன்றன -*** *தோல்கள் உரிந்து நீங்கப் பெற்றவையாய்;* ***கீழ் நிலை மாலின் -*** *கிழக்குத் திசையில் உள்ள இந்திரனுடைய;* ***வெம்சின யானையை மானுவ -*** *கொடிய கோபத்தோடு கூடிய ஐராவதம் என்னும் (வெள்ளை) யானையை ஒத்தனவாயின.*

*தீப்பற்றியதனால் தோல் உரிந்து வெள்ளெலும்பு தோன்ற நின்ற யானைகள், இந்திரனுடைய ஐராவதம் என்ற வெள்ளை யானையை ஒத்திருந்தன என்க. மால் - இந்திரன்.* ***(8)***

***5951. மீது இமம்கலந்தாலன்ன வெம் புகை,***
***சோதி மங்கலத்தீயொடு சுற்றலால்,***
***மேதி மங்குலின்வீழ் புனல், வீழ் மட***
***ஓதிமங்களின்,மாதர் ஒதுங்கினார்.***

***மீது இமம்கலந்தால் அன்ன வெம்புகை -*** *மேலே பனி கலந்தது போல் தோன்றும் கொடிய புகை;* ***சோதி மங்கலம் தீயொடும் சுற்றலால் -*** *ஒளியுள்ள மங்களகரமான நெருப்பினுடன் சூழ்ந்து கொண்டதனால்,;* ***மேதி -*** *(அஞ்சிய) எருமைகள்;* ***மங்குலின் -*** *மேகத்தைப் போன்று;* ***வீழ் புனல் வீழ் -*** *விரும்பத்தக்க நீர் நிலைகளில் விரைந்து விழ;* ***மாதர் -*** *(அங்கு விளையாடிக் கொண்டிருந்த) மகளிர்கள், (எருமைகள் விழுதலால் அஞ்சி);* ***மட ஓதி மங்களின் ஒதுங்கினர் -*** *இளமையான அன்னங்களைப் போல அவ்விடத்தை விட்டு நீங்கினார்கள்.*

*வீழ் -விருப்பம்; இரண்டாவது 'வீழ்' என்பது 'வீழ' என்பதன் வீகாரம். இமம் - பனி; மேதி - எருமை; மங்குல - மேகம்; ஓதிமம் - அன்னப் பறவை.* ***(9)***

***5952. பொடித்துஎழுந்து பெரும் பொறி போவன***
***இடிக் குலங்களின்வீழ்தலும், எங்கணும்***
***வெடித்த; வேலை வெதும்பிட, மீன் குலம்***
***துடித்து, வெந்து,புலர்ந்து, உயிர் சோர்ந்தவால்.***

***பொடித்து எழுந்துபோவன பெரும் பொறி -*** *(நெருப்பினின்றும்) சிதறி எழுந்து போவனவாகிய பெரிய தீப்பொறிகள்;* ***இடி குலங்களின் எங்கணும் வீழ்தலின் -*** *இடிக்கூட்டம் போல எல்லா இடங்களிலும் வீழ்ந்த அளவில்;* ***வெடித்த வேலை -*** வெடி

*ஓசை போன்ற ஓசையை உடைய கடல்,;* ***வெதும்பிட மீன் குலம் துடித்து -*** *கொதிப்படைய அக்கடலில் உள்ள மீன் கூட்டங்கள் (வெப்பம் தாங்காமல்) துடித்து;* ***வெந்து, புலர்ந்து உயிர் சோர்ந்த-*** *தாபமடைந்து வாடி, உயிர் ஒடுங்கி இறந்தன. நெருப்புப்பொறிகள் எல்லா இடங்களிலும்விழுந்ததனால், கடல் கொதித்தது; அதனால், அங்கிருந்த மீன்குலம் வெப்பம் தாங்காமல், துடிப்புண்டும் வெந்தும் காய்ந்தும் இறந்தன என்பதாம்.* ***(10)***

***5953. பருகு தீமடுத்து, உள்ளூறப் பற்றலால்,***
***அருகு நீடிய ஆடகத்தாரைகள்***
***உருகி, வேலையின்ஊடு புக்கு உற்றன,***
***திருகு பொன்நெடுந் தண்டின் திரண்டவால்.***

***பருகு தீ -*** *(தன்னிடம் கிடைப்பன யாவற்றையும்) பருகும் (அழிக்கும்) இயல்பினை உடைய நெருப்பு;* ***மடுத்து -*** *சூழ்ந்து நிறைந்து;* ***உள் உற பற்றலால் -*** *(பொன் மாளிகைகளின்) உள்ளே புகுந்து எரித்தலால்;* ***உருகி அருகு நீடிய ஆடக தாரைகள் -*** *உருகிப் பக்கங்களில் பெருகிய பொன்னின் ஒழுக்குகள்;* ***வேலையின் ஊடுபுக்கு உற்றன -*** *கடலின் அகத்தே புகுந்தவைகளாய்;* ***திருகு பொன் நெடும் தண்டின் திரண்ட -*** *முறுக்குகள் அமைந்த நீண்ட பொற்பாளங்களாக இறுகின.*

*நெருப்பு, மடுத்துபொன்மாளிகையில் புகுந்து எரித்ததால், பொன் ஒழுக்கு, கடலின் நீரில் சேர்ந்து, மறுபடியும் இறுகி பாளங்களாக மாறிற்று. நெருப்பு சூட்டில் உருகிய பொன், தண்ணீரின் குளிர்ச்சியில் இறுகிற்று. தண்டு - கட்டிப்பட்ட பாளம்; திரள்தல். இறுகுதல்.* ***(11)***

***5954. உரையின்முந்து உலகு உண்ணும் எரிஅதால்,***
***வரை நிவந்தனபல் மணி மாளிகை***
***நிரையும் நீள்நெடுஞ் சோலையும் நிற்குமோ ?***
***தரையும் வெந்தது,பொன் எனும் தன்மையால்.***

***உரையின்முந்து உலகு உண்ணும் எரி அதால் -*** *(சான்றோர்) சுடுமொழியினும் விரைவாக உலகை அழிக்கக் கூடிய நெருப்பானமையால்;* ***வரை நிவந்தன பல் மணி மாளிகை நிரையும் -*** *மலை போல் உயர்ந்த பல மணிகளால் இயன்ற மாளிகைகளின் வரிசைகளோடும்;* ***நீள் நெடும் சோலையும் -*** *நீண்டுயர்ந்த சோலைகளோடும்;* ***நிற்குமோ -*** *எரிந்து நிற்குமோ? (நில்லாது);* ***பொன் எனும் தன்மையால் தரையும் வெந்தது -*** *(அவைநின்ற) நிலமும் பொன் மயமாக இருத்தலினால் வெந்து உருகிவிட்டது. இலங்காபுரியிலுள்ள மாளிகையின் தளவரிசைகள் பொன்மயமானதால், சோலைகள் எரியும் போதே, தரையும் வெந்து அழிந்தது.* ***(12)***

***5955. கல்லினும்வலிதாம் புகைக் கற்றையால்***
***எல்லி பெற்றது,இமையவர் நாடு; இயல்***
***வல்லி கோலிநிவந்தன; மா மணிச்***
***சில்லியோடும் திரண்டன, தேர் எலாம்.+***

***கல்லினும்வலிதாம் புகைக் கற்றையால் -*** *கல்லைக்காட்டிலும் செறிவுள்ளதான புகைத் தொகுதி பரவிச் சூழ்தலால்;* ***இயல்வல்லி கோலி நிவந்தன இமையவர் நாடு -*** *அழகிய கற்பகக் கொடி போன்ற கொடிகள் சுற்றி உயர்ந்த பொன்மயமான தேவலோகம்;* ***எல்லி பெற்றது -*** *இருள் அடைந்தது;* ***தேரெலாம் மாமணி சில்லியோடும் திரண்டன -*** *தேர்கள் எல்லாம் சிறந்த இரத்தினங்களால் இழைக்கப் பெற்ற தம் உருளைகளோடும் (அத்தீயால் ஒன்றாகச் சேர்ந்து உருகி) ஒரே தொகுதியாக அமைந்தன.*

*தேர்கள்பொன்னால் அமைந்தமையால், தீயில் உருகி அவை உறுப்பு வேறுபாடின்றி ஒன்றாகத் திரண்டன என்க.* ***(13)***

## *5956. பேயமன்றினில் நின்று, பிறங்கு எரி,*
## *மாயர் உண்ட நறவுமடுத்ததால்;*
## *தூயர் என்றிலர்வைகு இடம் துன்னினால்,*
## *தீயர்;அன்றியும், தீமையும் செய்வரால்.*

***பிறங்கு எரி பேயமன்றினில் நின்று -*** *விளங்குகின்ற தீயானதுகள் முதலிய குடிக்கும் பொருள் பொருந்திய சாலையில் புகுந்து;* ***மாயர் உண்ட நறவு மடுத்தது -*** *வஞ்சனைத் தொழில் மிக்க அரக்கர் உண்டு எஞ்சிய கள்ளையும் குடித்தது;* ***தூயர் என்றிலர் வைகு இடம்துன்னினால் -*** *பரிசுத்தமானவர்என்று சொல்லத்தகாதவர் இருக்கும் இடத்தை (தூயவர்) சென்றடைந்தால்;* ***தீயர் அன்றியும் தீமையும் செய்வர் -*** *(தூயவர்) தீயவராகுவர் அத்தோடு தாமும் தீச் செயல்களைச் செய்பவர்களும் ஆவார்கள்.*

*தூயவர், தீயவர்தங்கும் இடம் சென்றால், தீயவராகி விடுவர். தீய செயல்களையும் செய்வர். 'தூயது என்று எவராலும் போற்றப்படும் நெருப்பு, கட் குடிலைப் பற்றியதனால், அரக்கர் உண்டு எஞ்சிய கள்ளையும் குடித்தது' என்ற செயலின் மூலம் வாழ்க்கைத் தத்துவம் விளக்கப் படுகின்றது. பேயம் - கள் முதலிய குடிக்கும் பொருள்; மன்று - இடம். (சாலை) 'ஆல்' இரண்டும் அசைநிலைகள்.* ***(14)***

## *5957. தழுவு இலங்கை தழங்கு எரி தாய்ச் செல,*
## *வழு இல் வேலைஉலையின் மறுகின;*
## *எழும் எழும்சுடர்க் கற்றை சென்று எய்தலால்,*
## *குழுவு தண் புனல்மேகம் கொதித்தவே.*

***இலங்கை தழுவுதழங்கு எரி -*** *இலங்கை நகரைச்சூழ்ந்து ஒலி முழக்கம் செய்யும் நெருப்பு;* ***தாய் செல -*** *தாவித் தாவி பரந்ததனால்;* ***வழு இல் வேலை உலையில் மறுகின -*** *அந் நகரத்தைச் சுற்றியுள்ள குற்றம் இல்லாத கடல், உலைநீர் போல மிகவும் கொதித்தன;* ***எழும் எழும் சுடர் கற்றை -*** *மேலும் மேலும் எழுந்த ஒளித் தொகுதிகள்;* ***சென்று எய்தலால் -*** *மேலே சென்று வீசுவதால்;* ***குழுவுதண் புனல் மேகம் கொதித்த -*** *வானத்திலே திரண்டுள்ள குளிர்ச்சியான நீரை உடைய மேகங்களும் கொதிப்படைந்தன.*

*இலங்கையைச்சுற்றியுள்ள கடல் நீரும், அந்நகரின் மீதாக உள்ள மேக நீரும் அனுமன் வைத்த நெருப்பால் கொதிப்படைந்தன என்க.* ***(15)***

***5958.  ஊனில்ஓடும் எரியொடு உயங்குவார்,***
***'கானில் ஓடும்நெடும் புனல் காண்' எனா,***
***வானில் ஓடும்மகளிர் மயங்கினார்,***
***வேனில் ஓடு அருந்தேரிடை வீழ்ந்தனர்.****

***ஊனில் ஓடும்எரியொடு  உயங்குவார் -*** *உடல்முழுதும் தீப்பற்றி எரிய வருந்துபவர்களாய்;* ***வானில் ஓடும் மகளிர் -*** *(தப்பி உய்தற் பொருட்டு) வானத்தில் எழுந்து ஓடும் அரக்க மாதர்கள்;* ***கானில் ஓடும் நெடும் புனல் காண் எனா -*** *காட்டிலே ஓடுகின்ற நீண்ட ஆற்று வெள்ளமேகாண் என்று;* ***மயங்கினார் -*** *மாறாகக் கருதியவர்களாய்;* ***வேனில் ஓடும் அருந்தேரிடை வீழ்ந்தனர் -*** *வேனிற்காலத்தில் நீர் ஓடுவது போலத் தோன்றும் அரிய பேய்த் தேரிடையே விழுந்தார்கள்.*

*நெருப்பு, பற்றியதனால் உடல் வருந்தி, அதனின்றும் உய்வதற்கு வானை நோக்கி மேல் எழுந்த மகளிர், கீழே காணும் வெப்பத்தை, காட்டில் ஓடும் நீர்ப் பெருக்கு என மாறாகக் கருதி, அக்கானல் நீரில் விழுந்தனர். வேனிற் காலத்தில் பரந்த வெளியில் உள்ள சூரிய வெப்பம், நீர்ப் பெருக்கு போன்று தோன்றும். இதற்குக் 'கானல் நீர்' என்று பெயர். இதுவே பேய்த்தேர் எனப்படும்.* ***(16)***

***5959.  தேன்அவாம் பொழில் தீப் பட, சிந்திய***
***சோனைமா மலர்த்தும்பி, 'தொடர்ந்து, அயல்***
***போன தீச் சுடர்புண்டரிகத் தடங்***
***கானம் ஆம்' என,வீழ்ந்து, கரிந்தவே.****

***தேன் அவாம்பொழில் -*** *தேன் மிக்க(அந்நகரத்துச்) சோலைகளில்;* ***தீ பட -*** *நெருப்புப் பற்ற (அதனால்);* ***சிந்திய -*** *சிதறிய;* ***சோனைமாமலர் தும்பி -*** *நீருண்ட மேகம் போல மலர்களில் மொய்த்துக் கொண்டிருந்த வண்டுகள்;* ***தொடர்ந்து அயல் போன -*** *அந்தச் சோலைகளைத் தொடர்ந்து அப்பாலும் பரவிச் சென்ற;* ***தீ சுடர் -*** *நெருப்புச் சுடர்களை (கண்டு);* ***புண்டரிகத்தடம் கானம் ஆம் என வீழ்ந்து கரிந்த -*** *பெரிய தாமரைக்காடுஎன்று மாறாகக் கருதி, அவற்றில் போய் விழுந்து கருகிப் போயின.*

*நெருப்புச்சுடரின் மிகுதியான தோற்றத்தை, தாமரைக்காடு என மாறாகக் கருதிய வண்டுகள் அதில் விழுந்து கருகின என்பதாம்.* ***(17)***

***5960.  'நல் கடன்இது; நம் உயிர் நாயகர்***
***மற்கடம் தெறமாண்டனர்; வாழ்வு இலம்;***
***இல் கடந்து இனிஏகலம் யாம்' எனா,***
***வில் கடந்தநுதல் சிலர் வீடினார்.****

***வில் கடந்தநுதல் சிலர் -*** *வில்லின் வளைவையும்வென்ற நெற்றியை உடைய அரக்க மகளிர் சிலர்;* ***நம் உயிர் நாயகர் -*** *நமது உயிர் போன்ற கணவன்மார்கள்;* ***மற்கடம் தெற மாண்டனர் -*** *ஒரு குரங்கு கொல்ல இறந்து போயினர்;* ***யாம் வாழ்வு இலம் -*** *யாம் மங்கல வாழ்க்கை இல்லாதவரானோம்;* ***இனி இல் கடந்து ஏகலம்***- *இனிமேல் (கைம்மைநிலையில்) வீட்டைக் கடந்து வெளியில் செல்லமாட்டோம்;* ***எனா -*** *என்று*

*உறுதி எடுத்துக் கொண்டு;* ***நல் கடன் இது வீடினார் -*** *இதுவே நல்ல கடப்பாடு ஆகும் என்று துணிந்து (அந்த நெருப்பிலே விழுந்து) இறந்தார்கள்.*

*சில உத்தமப்பெண்களின் இயல்பு கூறப்பட்டது.* ***(18)***

***5961. பூக்கரிந்து, முறி பொறி ஆய், அடை***
***நாக் கரிந்து,சினை நறுஞ் சாம்பர் ஆய்,***
***மீக் கரிந்துநெடும் பணை, வேர் உறக்***
***காக் கரிந்து,கருங் கரி ஆனவே.***

***பூ கரிந்து -*** *மலர்கள்கரிந்து போய்;* ***முறி பொறி ஆய் -*** *இளந் தளிர்கள் நெருப்புப் பொறியாய்;* ***அடை நாகரிந்து -*** *இலைகளும், இலைகளின் நடுவில் உள்ள ஈர்க்குகளும் கரியாகி;* ***சினை நறுஞ் சாம்பர் ஆய் மீகரிந்து -*** *சிறு கிளைகள் நல்ல சாம்பலாய் வெந்து அதன் மேலுள்ள மற்றப் பாகங்களும் வெந்து;* ***நெடும் பணை வேர் உற கா கரிந்து -*** *நீண்ட கிளைகளும், வேர்களும் ஒன்றுபட சோலைகள் முழுவதும் கரிந்து போய்;* ***கரும் கரி ஆன -*** *பெரிய கரிக்குவியல்களாக ஆயின.*

*முறி - இளந்தளிர்; அடை - இலை; நா இலையின் நடுவில் உள்ள ஈர்க்கு; சினை - சிறுகிளை; நெடும்பணை - பெரிய கிளை; கா - சோலை.* ***(19)***

***5962. கார் முழுக்க எழும் கனல் கற்றை போய்***
***ஊர் முழுக்கவெதுப்ப உருகின;***
***சோர் ஒழுக்கம்அறாமையின், துன்று பொன்***
***வேர் விடுப்பதுபோன்றன, விண் எலாம்.****

***கார் முழுக்கஎழும் கனல் கற்றை -*** *மேகங்களை முழுகச்செய்யும் படிமேலே எழுகின்ற நெருப்பின் தொகுதி;* ***போய் ஊர் முழுக்க வெதுப்ப -*** *மேற் சென்று, (பொன்மயமான) அமராவதி நகரம் முழுவதையும் சுட்டெரிக்க;* ***உருகின சோர் பொன் ஒழுக்கம் அறாமையின் -*** *(அதனால்) உருகிஒழுகுகின்ற பொன்னின் தாரைகள் இடைவிடாது பெருகுதலால்;* ***விண் எலாம்துன்று வேர் விடுப்பது போன்றன -*** *அவ்வான நாடு முழுவதும், அடர்ந்தமரத்தின் வேரைக் கீழே இறங்க விடுவது போன்று விளங்கின. மேகங்கள்முழுகும்படி எழுந்த தீச்சுடர், பொன் மயமான அமராவதி நகரை எரிக்க, அது உருகியது. உருகிய பொன் ஒழுக்கு, மரத்தின் வேர்கள் போன்று விளங்கிற்று என்பதாம்.* ***(20)***

***5963. நெருக்கி மீ மிசை ஓங்கு நெருப்பு அழல்***
***செருக்கும் வெண்கதிர்த் திங்களைச் சென்று உற***
***உருக்க,மெய்யின் அமுதம் உகுத்தலால்,***
***அரக்கரும் சிலர்ஆவி பெற்றார் அரோ.****

***மீமிசை நெருக்கிஓங்கும் நெருப்பு அழல் -*** *மேன்மேலும் திண்ணியதாக ஓங்கிய நெருப்பின் வெம்மை;* ***செருக்கும் வெண் கதிர் திங்களை -*** *களிப்பைத் தரும் வெண்மையான கிரணங்களை உடைய சந்திரனை;* ***சென்று உற உருக்க -*** *சென்று அடைந்து நன்றாக உருகச் செய்ய, (அதனால்);* ***மெய்யின் அமுதம் -*** *அச்சந்திரனின்*

*உடலிலிருந்து; **உகுத்தலால் -** அமிர்தம் சிந்துவதால்; **அரக்கர் சிலரும் -** இறந்த அரக்கரில் சில பேரும்; **ஆவி பெற்றார் -** உயிர் பெற்றார்கள்.*

*நெருப்பு, சந்திரமண்டலம் சென்று தாக்கியதனால், உருகிய அமிர்தத்துளி பட்டு, நெருப்பில் வெந்து இறந்த அரக்கர்களில் சிலரும் உயிர் பெற்று எழுந்தனர் என்பதாம். **(21)***

## *5964. பருதி பற்றி நிமிர்ந்து எழு பைங் கனல்,*
## *கருகி முற்றும்எரிந்து, எழு கார் மழை,*
## *அருகு சுற்றும்இருந்தையதாய், அதின்*
## *உருகுபொன்-திரள் ஒத்தனன், ஒண் கதிர்.**

***பருதி பற்றிநிமிர்ந்து எழு பைங்கனல் -** சூரிய மண்டலத்தை அளாவிஉயர்ந்து எழுந்த அந்தப் புதிய நெருப்பின் வெம்மையால்; **எழு கார் மழைமுற்றும் எரிந்து கருகி -** வானத்தில் செல்லுகின்ற காள மேகங்கள் முழுவதும்வெந்து கருகி; **அருகு சுற்றும் இருந்தை அது ஆய் -** பக்கங்களில்சூழ்ந்திருந்த கரியைப் போல விளங்க; **ஒள் கதிர் அதின் உருகு பொன்திரள் ஒத்தன -** ஒளி தங்கிய சூரியன், அக்கரித்தொகுதியினிடையே உருகுகின்ற பொற் கட்டியைப் போலத் தோன்றினான்.*

*சூரியனிடத்துஉள்ள நெருப்பினும் வேறுபட்டது அனுமன் இலங்கையில் இட்ட நெருப்பு. அதனால் 'பைங்கனல்' எனப்பட்டது, சென்ற பாடலும், இதுவும் சந்திரன் இருப்பதையும் சூரியன் தோற்றத்தையும் கூறுகின்றன.அதனால் இந்தக் காலம் பெளர்ணமி என்று அறியலாம். அனுமன் சீதாபிராட்டியைப் பார்த்த காலத்தை ஆராய்வதற்கு உதவும் கவிதைகள் இவை இரண்டும் என்னலாம். இருந்தை - கரி. **(22)***

## *5965. தளைகொளுத்திய தாவு எரி, தாமணி*
## *முளை கொளுத்தி,முகத்திடை மொய்த்த பேர்*
## *உளை கொளுத்த,உலந்து உலைவு உற்றன-*
## *வளை குளப்பின் மணி நிற வாசியே.*

***தளை கொளுத்தியதாவு எரி -** (குதிரைகளின்)பின்கால்களைப் பிணைத்திருக்கும் கயிறுகளை எரித்த மேலே தாவி எழும்பிய தீயானது; **தாமணி முளை கொளுத்தி -** தாமணி என்னும் கழுத்துக் கயிற்றுடன், அக்கயிறு கட்டப்பட்டிருந்த முளைகளையும் எரித்து; **முகத்திடை மொய்த்த பேர் உளை கொளுத்த -** முகத்தின் நடுவில் தொங்கிக் கொண்டிருந்த பெரியபுற மயிர்கள் கொளுத்தப்பட்டு எரிய, (அதனால்); **வளைகுளப்பின் மணி நிற வாசி -** வளைந்த குளம்பையும் அழகிய நிறத்தையும் உடைய குதிரைகள்; **உலந்து உலைவு உற்றன -** வாடித்தவித்து அழிந்தன.*

*தளை - விலங்குபோல் காலில் பூட்டப்படும் கயிறு; தாமணி - கழுத்தில் கட்டும் கயிறு; வளைகுளப்பு - வளைந்த கால் குளம்பு; வாசி - குதிரை. குளம்பு என்பது குளப்பு என வலித்தல் விகாரமாக வந்தது. **(23)***

*அரக்கரும்அரக்கியரும் உற்ற அவலம்*

***5966. எழுந்துபொன்தலத்து ஏறலின், நீள் புகைக்***
***கொழுந்து சுற்ற,உயிர்ப்பு இலர், கோளும் உற்று***
***அழுந்துபட்டுளர்ஒத்து, அயர்ந்து, ஆர் அழல்***
***விழுந்துமுற்றினர்-கூற்றை விழுங்குவார்.***

***கூற்றைவிழுங்குவார் -*** *யமனையும் விழுங்கக்கூடியஆற்றல் அமைந்தசில அரக்கர்கள்;* ***எழுந்து பொன் தலத்து ஏறலின் -*** *(அந்த நெருப்புக்குத்தப்பிப் பிழைக்க மேலே) எழுந்து பொன்னுலகமான சுவர்க்கத்துக்கு ஏறும்போது;* ***நீள் புகை கொழுந்து சுற்ற -*** *கொழுந்துவிட்டு எழுந்த நீண்ட புகைசுற்றிக் கொண்டதனால்;* ***உயிர்ப்பு இலர் -*** *மூச்சுவிட மாட்டாதவர்களாய்;* ***கோளும் உற்று -*** *அப் புகையையும் உள்ளே கொண்டு விட்டபடியால்;* ***அழுந்து பட்டுளர் ஒத்துஅயர்ந்து -*** *நீருள்அழுந்தியவர்களைப் போல மயக்கமுற்றவர்களாகி;* ***ஆர் அழல் விழுந்து முற்றினர் -*** *நீங்குதற்கு அருமையான நெருப்பில் விழுந்து இறந்தனர்.*

*அரக்கர்கள்,மேலே எழ முயன்றும், முடியாமல், புகையால் சூழப்பெற்று, அதில் அழுந்தி மயக்கம் அடைந்து, அந்நெருப்பிலேயே விழுந்து இறந்தனர் என்பதாம். தலம் - இடம்; உயிர்ப்பு - மூச்சுவிடுதல்; முற்றினர் - முடிந்தார்கள்.*
***(24)***

***5967. கோசிகத்துகில் உற்ற கொழுங் கனல்***
***தூசின்உத்தரிகத்தொடு சுற்றுறா,***
***வாச மைக் குழல்பற்ற மயங்கினார்-***
***பாசிழைப்பரவைப் படர் அல்குலார்.***

***பாசு இழை பரவைபடர் அல்குலார் -*** *பசிய பொன்னாபரணங்களையும் கடல் போலப் பரந்த அல்குலையும் உடையவரான அரக்கமகளிர்கள்;* ***கோசிகம் துகில் உற்ற கொழும் கனல் -*** *அவர்கள் இடையில் உடுத்திய கோசிகம் என்னும் பட்டாடையில் பற்றிய வலி மிகுந்த நெருப்பு;* ***உத்தரிக தூசின் ஒடும் சுற்று உறா -*** *மேலாடையுடனே சூழ்ந்து பற்றிக் கொண்டு;* ***வாசம் மை குழல் பற்ற -*** *நறுமணம் மிகுந்த கரு நிறமான கூந்தலில் பற்றிக்கொள்ளவும்;* ***மயங்கினார் -*** *என்ன செய்வது என்று அறியாது திகைத்து அழிந்தார்கள்.*

*சில அரக்கியர்,அரையாடை நெருப்பினால் சூழப் பெற்று, மேலாடையிலும் பரவிக் கூந்தலிலும் பற்றவே, திகைத்து மயங்கினர் என்பதாம். கோசிகம் - ஒரு வகைப் பட்டு; இது அரையாடை; உத்தரிகம் - மேலாடை; தூசு - பஞ்சினால் ஆகிய ஆடை.*
***(25)***

### கலிநிலைத்துறை

***5968. நிலவுஇலங்கிய துகிலினை நெருப்பு உண, நிருதர்,***
***இலவினும் சிலமுத்து உள எனும் நகை இளையார்,***
***புலவியின் கரைகண்டவர், அமுது உகப் புணரும்***
***கலவியின் கரைகண்டிலர், மண்டினர் கடல்மேல்.***

***புலவியின் கரைகண்டவர் நிருதர் -*** *ஊடலின் முடிவெல்லையைக் கண்டவர்களாகிய அரக்கர்களும்;* ***இலவினும் சில முத்து உள எனும் நகை இளையார் -*** *இலவம்பூவின் இதழிலும்,சில முத்துகள் பிறப்பதுஉண்டு என்று சொல்லத்தக்க வெண்மையான பற்களை உடைய அரக்கமகளிரும்;* ***நிலவு இலங்கிய துகிலினை நெருப்பு உண -*** *நிலவைப் போன்று வெண்ணிறமாய் விளங்குகின்ற தங்களது ஆடைகளை நெருப்பு எரிக்க;* ***அமுது உக புணரும் கலவியின் கரை கண்டிலர் -*** *இன்பம் சுரக்கத் தம்மில் கூடும் கலவியின்பமாகிய கடலின் கரை காணாதவர்களாய்;* ***கடல் மேல் மண்டினர் -*** *(நெருப்பைத் தணித்துக் கொள்ளும் பொருட்டு) கடலில் போய் விழுந்தார்கள்.*

*ஊடிய மைந்தரும்மகளிரும் ஊடல் தீர்ந்து கூடிய நிலையில், தமது ஆடையை நெருப்பு எரிக்க இன்பம் முடியாத நிலையில் கடலில் போய் விழுந்தார்கள் என்க. 'புலவியின் கரைகண்டவர் கலவியின் கரை காணாதவராயினார்' நயம் உணரத்தக்கது. இலவு - இலவம்பூ; முத்து பிறக்கும் இடம் இருபது அதற்கும் மேலாக இலவம்பூவினின் இதழகத்தும் முத்துப் பிறந்துள்ளது என்பது கற்பனை. முத்து, பற்களுக்கும், இலவம்பூ செவ்வாய்க்கும் உவமைகள்.* ***(26)***

***5969. பஞ்சரத்தொடு, பசு நிறக் கிளி வெந்து பதைப்ப,***
***அஞ்சனக் கணின்அருவி நீர் முலை முன்றில்***
***அலைப்ப,***
***குஞ்சரத்து அனகொழுநரைத் தழுவுறும்***
***கொதிப்பால்,***
***மஞ்சு உறப் புகும்மின் என, புகையிடை மறைந்தார்.***

***பசுநிறம் கிளி -*** *(தம்வளர்த்த) பசுமை நிறம் உள்ள கிளிகள்;* ***பஞ்சரத்தொடு வெந்து பதைப்ப -*** *(தாம் இருந்த) கூட்டுடனே நெருப்பில் வெந்துதுடிக்க (அதுகண்ட துன்பத்தால்);* ***அஞ்சனம் கணின் அருவி நீர் முலைமுன்றில் அலைப்ப -*** *மைபூசிய கண்களினின்றும் அருவி போலப் பெருகும்நீர், தம்தனங்களின் முகட்டிடத்து விழுந்து வருத்த;* ***குஞ்சரத்து அன கொழுநரை -*** *யானை போன்ற (வலிய பெரிய) தமது கணவன்மார்களை;* ***தழுவுறும் கொதிப்பால் -*** *தழுவிக் கொள்ளக் கருதிய பதைப்பினால்;* ***மஞ்சு உற புகும் மின் என புகையிடை மறைந்தார் -*** *மேகத்தினுள்ளே புகுகின்ற மின்னலைப் போல புகையினுள்ளே மறைந்தார்கள்.*

*எரிபுகுந்தமாளிகையில் இருந்த மகளிர்கள், தமது கணவரைப் பின்பற்றி வெளியில் வந்தார்கள். வந்த வேகத்தில் தாம் வளர்த்த கிளிகளின் கூட்டைத் திறந்து விட மறந்தார்கள். திரும்பிப் பார்க்கும் போது, அவைகள் கூட்டோடு வெந்து கிடந்தன. அந்தத் துன்பத்தால் அழுதனர். சோகத்தைத்தணித்துக் கொள்ள, தமது கணவன்மார்களைத் தொடர்ந்து சென்று தழுவிக்கொள்ள ஓடினர்; அதற்குள் புகை மிகுந்தமையால் அதில் மறைந்தனர். இக்காட்சி, மின்னல் மேகத்தில் மறைந்தததது போன்றிருந்தது.* ***(27)***

***5970. வரையினைப்புரை மாடங்கள் எரி புக, மகளிர்,***
***புரை இல் பொன்கலன் வில்லிட விசும்பிடைப்***
***போவார்,***
***கரை இல் நுண்புகைப் படலையில் கரந்தனர்;***

**கலிங்கத்**
**திரையினுள்பொலி சித்திரப் பாவையின் செயலார்.**

***வரையினை புரைமாடங்கள் எரி புக*** *- மலையை ஒத்த மிகப் பெரியமாளிகைகளில் நெருப்புப் பற்றிக் கொள்ள;* ***மகளிர்*** *- அங்கிருந்த அரக்கமாதர்கள்;* ***புரை இல் பொன் கலன் வில்லிட*** *- குற்றமற்ற அழகிய பொன்மயமான தமது ஆபரணங்கள் ஒளி வீச;* ***விசும்பிடை போவார்*** *- வானத்தில் எழுந்து சென்றவர்களாய்;* ***கரை இல் நுண் புகை படலையில் கரந்தனர்*** *- அளவு இல்லாத நுண்ணிய புகையின் திரளிலே மறைந்தார்கள்; (அதனால், அவர்கள்)* ***கலிங்கம் திரையினுள் பொலி சித்திரம் பாவையின் செயலார்*** *- கலிங்க நாட்டில் நெய்த துணித் திரையின் உள்ளே விளங்குகின்ற அழகிய பதுமையின் செயலை அடைந்தவர்களாயினர்.*

*நுண்புகைத்தொகுதிக்கு, கலிங்கத்திரையும், அழகிய மகளிர்க்கு சித்திரப் பதுமையும் உவமைகள். கலிங்கத்திரை - கலிங்க நாட்டுத் துணியால் ஆன திரைச் சேலை. பாவை - பெண் போன்ற ஓவியம்.* ***(28)***

*நந்தன வனங்கள்முதலியன வெந்தொழிந்த காட்சி*

***5971. அகருவும் நறுஞ் சாந்தமும் முதலிய, அனேகம்***
***புகல் இல் நல் மரத்து உறு வெறி, உலகு எலாம்***
***போர்ப்ப,***
***பகரும் ஊழியில் கால வெங் கடுங் கனல் பருகும்***
***மகர வேலையின், வெந்தன-நந்தனவனங்கள்.***

***பகரும் ஊழியில்*** *- நூல்களில் கூறப்படுவதான யுக முடிவுக் காலத்தில்;* ***காலம் வெம் கடும் கனல் பருகும் மகர வேலையின்*** *- மிகக் கொடிய காலாக்கினி உறிஞ்சி வற்றச் செய்யும் மகரம்முதலிய மீன்கள் வாழும்கடல்கள் (அழிந்தன) போல;* ***அகருவும் நறும் சாந்தமும் முதலிய அனேகம் புகர் இல் நல் மரத்து உறு வெறி*** *- அகில் மரங்களும், நறுமணம் உள்ள சந்தனமரங்களும் முதலான குற்றம் அற்ற சிறந்த பல மரங்களில் பொருந்திய நறுமணம்;* ***உலகு எலாம் போர்ப்ப*** *- உலகம் முழுவதும் வீசிக் கவிந்து கொள்ளுமாறு;* ***நந்தன வனங்கள்*** *- இலங்கையில் இருந்த சிங்காரத் தோட்டங்கள்;* ***வெந்தன*** *- அத்தீயில் வெந்து அழிந்தன.*

*கால முடிவில்,காலக் கொடுந்தீயால், கடல் நீர் வற்றி அழிவது போல, அனுமன் வைத்த தீயால், இலங்கை நகரத்துப் பூந்தோட்டங்கள் அழிந்தன என்பதாம். அகர் - அகில்; புகர் - குற்றம்; வெறி - மணம்; போர்ப்ப - மூட..*
***(29)***

***5972. மினைப்பரந்து எழு கொழுஞ் சுடர் உலகு எலாம்***
***விழுங்கி,***
***நினைவு அரும்பெருந் திசை உற விரிகின்ற***
***நிலையால்,***
***சினைப்பரந்து எரி சேர்ந்திலா நின்றவும், சில வெங்***
***கனல் பரந்தவும்,தெரிகில-கற்பகக் கானம்.***

***மினை பரந்து எழுகொழும் சுடர் -*** மின்னலைப் போல ஒளிபரவி எழும் செழுமையான அனல் கொழுந்து; ***உலகு எலாம் விழுங்கி -*** உலகம் முழுவதையும் தன்னுள் அடக்கிக் கொண்டு; ***நினைப்பு அரும் பெரும் திசை உற -*** நினைப்பதற்கு அரிய பெரிய திசைகளைப் போய் அடைய; ***விரிகின்ற நிலையால் -*** பரந்து விளங்கும் தன்மையால்; ***கற்பகம் கானம் வெங்கனல் பரந்த சிலவும் -*** கற்பகச் சோலைகள் கொடிய நெருப்புப் பற்றி எரிகின்றவை இவை சில என்றும்; ***சினை பரந்து எரி சேர்ந்திலா நின்ற சிலவும் -*** கிளைகளில் தாவி நெருப்புப் பற்றாது நின்றவை இவை சில என்றும்; ***தெரிகில -*** வேறுபாடு அறிய வொண்ணாதனவாயிருந்தன.

*இலங்கையில் இருந்தகற்பகச் சோலைகள் இயற்கையில் ஒளியுடைமையால்அனுமன் இட்ட தீயால் எரிந்தவை இவை என்றும் எரியாதவை இவை என்றும்அறிந்து கொள்ள முடியாதபடி விளங்கின என்பதாம். போந்து - போல;சினைப் பரந்து- கிளைகளில் தாவி.* ***(30)***

***5973. மூளும் வெம்புகை விழுங்கலின், சுற்றுற முழு நீர்***
***மாளும் வண்ணம்,மா மலை நெடுந் தலைதொறும்***
***மயங்கிப்***
***பூளை வீய்ந்தன்னபோவன, புணரியில் புனல் மீன்***
***மீள, யாவையும்தெரிந்தில, முகில் கணம் விசைப்ப.***+

***புணரியின் புனல்மீன் யாவையும் மீள -*** கடல் நீரினிடத்துள்ள மீனினம் யாவையும் இல்லையாகும்படி; ***மூளும் வெம்புகை -*** மூண்டெழுந்த வெவ்விய நெருப்புப் புகை; ***சுற்று உற முழு நீர் மாளும் வண்ணம் விழுங்கலின் -*** சுற்றியுள்ள நீர் முழுவதையும் குடித்துவிட்டமையால்; ***தெரிந்தில முகில் கணம் விசைப்ப -*** இது தெரியாத மேகக் கூட்டங்கள் நீர் முகக்க விரைந்து செல்வனவாய்; ***மாமலை நெடும் தலை தொறும் மயங்கி -*** பெரிய மலைகளின் உயர்ந்த இடங்களில் எல்லாம் மோதுண்டு; ***பூளை வீய்ந்தன்ன போவன -*** பூளைப் பூ சிதறுவது போல சிதறிப் போயின.

*புகை, கடலில்உள்ள மீனினம் மாயும்படி, நீர் முழுதையும் குடித்துவிட்டது. வழக்கமாக நீர் முகக்க வரும் மேகங்கள், அது தெரியாமல் சென்று, மலை உச்சியில் மோதுண்டு சிதறிப் போயின என்பதாம். மீள - இல்லையாக.*
***(31)***

***5974. மிக்க வெம் புகை விழுங்கலின், வெள்ளியங்கிரியும்,***
***ஒக்க,வெற்பினோடு; அன்னமும் காக்கையின் உருவ;***
***பக்க வேலையின்படியது, பாற்கடல்; முடிவில்***
***திக்கயங்களும்கயங்களும் வேற்றுமை தெரியா.***

***மிக்க வெம் புகைவிழுங்கலின் -*** மிகுதியான கொடிய புகைஉலகம் எங்கும் கவிழ்ந்து கொண்டமையால்; ***வெள்ளி அம் கிரியும் வெற்பினோடு ஒக்க -*** வெள்ளிய அழகிய கைலைமலையும் ஏனைய மலைகளைப் போலக் கருநிறம் பெற்றது; ***அன்னமும் காக்கையின் உருவ -*** வெள்ளை அன்னமும் காக்கையின் கருநிறத்ததாயிற்று; ***பாற்கடல் பக்க வேலையின் படியது -*** வெண்மையான பாற்கடலும் அருகில் உள்ள கடலின் தன்மையாய் கருங்கடலாயிற்று; ***முடிவில் திக்கயங்களும் கயங்களும் வேற்றுமை***

**தெரியா** - எல்லைக் கோடியில் உள்ள ஐராவதம் முதலிய (வெண்ணிறமான) திசையானைகளுக்கும் ஏனைய கருநிறயானைகளுக்கும் வேறுபாடு தெரியாததாயிற்று. புகை சூழ்ந்த பின்னர்,இயற்கையாக வெண்ணிறமாய் உள்ள சிறந்தவை அனைத்தும் கருநிறத்ததாயின என்பதாம். ***(32)***

*கனலுக்குப் பயந்துகடலில் வீழ்தல்*

***5975. கரிந்துசிந்திடக் கடுங் கனல் தொடர்ந்து உடல் கதுவ,***
***உரிந்தமெய்யினர், ஓடினர், நீரிடை ஒளிப்பார்,***
***விரிந்தகூந்தலும், குஞ்சியும் மிடைதலின், தாமும்***
***எரிந்து வேகின்றஒத்தன, எறி திரைப் பரவை.***

***கரிந்து சிந்திடகடுங்கனல் தொடர்ந்து உடல் கதுவ*** - கருகி உதிர்ந்து போகும்படி கொடிய நெருப்பு தொடர்ந்து அரக்கர்களது உடல்களைப் பற்றலும்; **உரிந்த மெய்யினர் ஓடினர் நீரிடை ஒளிப்பார்** - (அதனால்) தோல் உரியப் பெற்ற உடலினராய் ஓடிப் போய் (வெப்பம் தணிவதற்காக) கடல் நீரில் முழ்கி மறைந்து கொண்டவர்களாயினர்; **விரிந்த கூந்தலும் குஞ்சியும் மிடைதலின்** - (அரக்கரின் பெண்டிர் ஆடவர் என்ற இருபாலாரின்) விரிந்த தலைமயிரும் (அக்கடலில்) மிகுந்து நிறைந்தமையால்; **எறி திரை பரவை தாமும் எரிந்து வேகின்ற ஒத்தன** - வீசும் அலைகளை உடைய கடல்களும் தீப்பட்டு, வேகின்றவை போன்றன.

*அரக்கர்களின்தலைமயிர் செம்பட்டையாதலின், கடற்பரப்பில் அவை நெருங்கித் தோன்றியது. கடல் தீப்பற்றியது போல் காணப்பட்டது என்பது கற்பனை.*
***(33)***

***5976. மருங்கின்மேல் ஒரு மகவு கொண்டு, ஒரு தனி மகவை***
***அருங் கையால்பற்றி, மற்றொரு மகவு பின் அரற்ற,***
***நெருங்கினாரொடுநெறி குழல் சுறுக் கொள நீங்கிக்***
***கருங் கடல்தலைவீழ்ந்தனர், அரக்கியர் கதறி.***

**மருங்கின் மேல்ஒரு மகவு கொண்டு** - இடையில் ஒரு குழந்தையை வைத்துக் கொண்டு; **ஒரு தனி மகவை அரும் கையால் பற்றி** - மற்றொரு சிறு குழந்தையை தன் அரிய கையால் பற்றிக் கொண்டு; **மற்றொரு மகவு பின்அரற்ற** - வேறொரு குழந்தை பின்னே அழுது கொண்டு வர; **அரக்கியர்** - அரக்கிமார்கள்; **நெருங்கினாரொடு** - நெருங்கிய சுற்றத்தினரோடு; **நீங்கி** - தமது இடம் விட்டுச் சென்று, **நெறி குழல் சுறுக் கொள** - நெறித்த கூந்தலிலே சுறு சுறு என்றுநெருப்புபற்ற; **கதறி** - வாய்விட்டுக் கதறிக் கொண்டு; **கருங்கடல் தலை வீழ்ந்தனர்** - கரிய கடலினிடத்துப் போய் விழுந்தார்கள்.

*அரக்கியர்கூந்தலில் நெருப்புப் பற்றியதனால், வலி தாங்காமல் கதறிக் கொண்டு இடம் விட்டுச் சென்று, கடலில் குதித்தனர் என்பது கருத்து.* ***(34)***

*படைக்கலச்சாலையின் அழிவு*

***5977. வில்லும், வேலும், வெங் குந்தமும் முதலிய விறகாய்
எல்லுடைச் சுடர்எனப் புகர் எஃகு எலாம் உருகி,
தொல்லை நல்நிலை தொடர்ந்த, பேர் உணர்வு
அன்ன தொழிலால்
சில்லி உண்டையின் திரண்டன படைக்கலச் சாலை.***

***படைக்கலச் சாலை-*** *ஆயுதசாலைகளில் உள்ள;* ***வில்லும், வேலும், வெம் குந்தமும் முதலிய விறகாய் -*** *விற்களும் வேல்களும் கொடிய எறி ஈட்டிகளும் முதலியவற்றில் இருந்த மரப்பகுதிகள் விறகுகளாய் அமைய;* ***எல் உடை சுடர் என புகர் எஃகு எலாம் -*** *ஒளியை உடைய சூரியன் என்னும்படி காந்தியுள்ள மற்றைய ஆயுத வடிவம் பெற்ற இரும்புகள் எல்லாம்;* ***உருகி -*** *அத்தீயில் உருகி;* ***தொல்லை நல் நிலை தொடர்ந்த பேர் உணர்வுஅன்ன தொழிலால் -*** *தமது பழைய நல்ல உயர் நிலையை நாடிச் சென்றபெரிய ஆத்ம ஞானம் போன்ற செயல் பெற்று;* ***சில்லி உண்டையின் திரண்டன -*** *சிறு உருண்டையாகத் திரண்டு கிடந்தன.*

*தனித்தனி ஆயுதவடிவில் இருந்த இரும்புகள் அனைத்தும், நெருப்பில் உருகி, ஒன்றாகச் சேர்ந்து, ஒரு சிறு உருண்டையாயிற்று என்பது கருத்து. இதனை விளக்க வந்த உவமை தத்துவக் கருத்தைத் தாங்கியது. ஒரு திரளிலிருந்து பல் வேறு வகையாகப் பிரிந்து, தனிப்பட்டு நின்ற பிராணிகள் மீளவும் ஒற்றுமை கொண்டு ஒருங்கு சேர்தல் ஆத்ம ஞானச் செயல் எனப்படும். ஆயுதங்களின் தொல்லை நிலை இரும்பு. அனுமன் இட்ட தீயால், அவை உருகியதும் பழைய இரும்புத் துண்டாகத் திரண்டன. ஆத்ம ஞான உணர்வு தோன்றுவதற்கு முன்பு பல்வேறுபட்ட தோற்றம்; அவ்வுணர்வுக்குப் பின்பு, எல்லா வேற்றுமையும் மறைந்து ஒன்றாகவே காண்பது. இது, தொல்லை நல்நிலை தொடர்ந்த பேர் உணர்வு எனப்பட்டது.* ***(35)*** *யானைகள் ஓடல்*

***5978. செய்தொடர்க் கன வல்லியும், புரசையும், சிந்தி,
நொய்தின்,இட்ட வன் தறி பறித்து, உடல் எரி
நுழைய,
மொய் தடச்செவி நிறுத்தி, வால் முதுகினில்
முறுக்கி,
கை எடுத்துஅழைத்து ஓடின-ஓடை வெங் களி மா.***

***ஓடை வெம் களிமா-*** *நெற்றிப் பட்டம் அணிந்த கொடிய யானைகள்;* ***உடல் எரி நுழைய -*** *தமது உடலில் நெருப்புப் புகுந்து எரிய;* ***தொடர் செய் கன வல்லியும் -*** *சங்கிலியாகச் செய்யப்பட்ட கனமான பூட்டு விலங்கையும்;* ***புரோசையும் சிந்தி -*** *கழுத்தில் இடப்பட்ட கயிற்றையும் சிதறவிட்டு;* ***இட்ட வல் தறி நொய்தின் பறித்து -*** *தம்மைக் கட்டியிருந்த வலிய தூண்களை எளிதில் பிடுங்கி எறிந்துவிட்டு;* ***மொய் தட செவி நிறுத்தி -*** *வலிய அகன்ற தமது காதுகளை மேலே தூக்கி நிறுத்தி;* ***வால் முதுகினில் முறுக்கி -*** *வாலை முதுகின் மேல் முறுக்கி நீட்டி;* ***கை எடுத்து அழைத்து ஓடின -*** *தமது துதிக்கையைத் தூக்கி, வாய்விட்டுக் கதறிக் கொண்டு பயந்து ஓடின.*

*தீ, பற்றியயானைகளின் செயல்கள் கூறப்பட்டன. தொடர் - சங்கிலி; பலகரணைகள் ஒன்றாகத் தொடுக்கப்பட்டமையால் தொடர் எனப்பட்டது.* ***(36)***

*பறவைகள் கடலில்வீழ்ந்து மாய்தல்*

***5979.* வெருளும் வெம் புகைப் படலையின் மேற்செல வெருவி,**
**இருளும் வெங்கடல் விழுந்தன, எழுந்தில, பறவை;**
**மருளின் மீன்கணம் விழுங்கிட, உலந்தன-மனத்து ஓர்**
**அருள் இல்வஞ்சரைத் தஞ்சம் என்று அடைந்தவர் அனைய.**

**மனத்து ஓர்அருள்இல்வஞ்சரை தஞ்சம் என்று அடைந்தவர் அனைய -** *தம் மனத்தில் அருள் என்பது சிறிதும் இல்லாத வஞ்சகர்களைத் தமக்கு அடைக்கலமாகக் கருதிச் சரண் அடைந்தவர்களைப்போல;* **பறவை வெருளும் வெம் புகை படலையின் மேல் செல வெருவி -** *பறவைகள் அச்சத்தை உண்டாக்கும் கொடிய புகைக் கூட்டத்தைக் கடந்து அப்பால் செல்ல அஞ்சினவைகளாய்;* **இருளும் வெங்கடல் விழுந்தன -** *கருநிறம் கொண்ட கொடிய கடலில் விழுந்து;* **எழுந்தில -** *மேற்கிளப்ப முடியாது;* **மருளின் மீன் கணம் விழுங்கிட -** *அஞ்ச வேண்டிய அப் பறவைகளுக்கு அஞ்சுதல் இல்லாத மீன் கூட்டம் விழுங்க இறந்து அழிந்தன.*

*பகைவர்க்குப்பயந்து ஓடி வஞ்சகரைச் சரணம் அடைந்தவர், புகைக்குப் பயந்து கடலில் விழுந்த பறவைகளுக்கும், வஞ்சகர்கள் கடலுக்கும் மீன்களுக்கும் உவமைகள். 'பிறரிடம் அச்சம் கொண்டு வஞ்சரைத் தஞ்சம் அடைபவர், அவரால் பாதுகாக்கப் படாததோடன்றிதம் நலம் கருதி ஒழிக்கவும் படுவர்' என்ற உண்மை உணர்த்தப்பட்டது. (37)*

*இராவணன் மனையில்தீப்பற்றுதல்*

***5980.* நீரைவற்றிடப் பருகி, மா நெடு நிலம் தடவி,**
**தாருவைச் சுட்டு,மலைகளைத் தழல்செய்து, தனி மா**
**மேருவைப் பற்றிஎரிகின்ற கால வெங் கனல்போல்,**
**ஊரை முற்றுவித்து,இராவணன் மனை புக்கது- உயர் தீ.**

**உயர் தீ -** *உயர்ந்துஎழுந்த அந்த நெருப்பு;* **நீரை வற்றிட பருகி -** *கடல், குளம் முதலிய எல்லா நீர்நிலைகளும் வற்றிப் போகும் படி உறிஞ்சி;* **மாநெடுநிலம் தடவி -** *பெரிய நீண்ட நிலம் முழுவதும் பரந்து அழித்து;* **தாருவை சுட்டு -** *அங்குள்ள மரங்களை எரித்து;* **மலைகளை தழல் செய்து -** *மலைகளைத் தணல் போல விளங்கும்படி வேகச் செய்து;* **தனி மா மேருவை பற்றி எரிகின்ற கால வெம் கனல் போல் -** *ஒப்பற்ற மகா மேரு மலை என்னும் மலையைப் பற்றி எரிகின்ற வெவ்விய கற்பாந்த காலத்து அக்கினி போன்று;* **ஊரை முற்றுவித்து -** *அந்த இலங்கை நகர் முழுவதையும் எரித்துவிட்டு;* **இராவணன் மனை புக்கது -** *இராவணனுடைய அரண்மனையுள் புகுந்தது.*

*ஊழிக் காலத்துநெருப்பு, சுற்றிலும் எரித்த பின்பு, நடுவில் உள்ள மேருமலையில் புகுவது போல, அனுமன் இட்ட தீ, இலங்கை நகர் முழுவதையும் எரித்த பிறகு,இடையில் உள்ள இராவணன் மாளிகையில் புக்கது என்பதாம்.*
***(38)***

***5981. வான மாதரும், மற்றுள மகளிரும், மறுகிப்***
***போன போன திக்கு அறிகிலர், அனைவரும்***
***போனார்;***
***ஏனை நின்றவர்எங்கணும் இரிந்தனர்; இலங்கைக்***
***கோன் அவ்வானவர் பதி கொண்ட நாள் எனக்***
***குலைந்தார்.***

***வான மாதரும் -*** *இராவணன்மாளிகையில் இருந்த தேவ மகளிரும்;* ***மற்றுள மகளிரும் -*** *மற்றும் உள்ள (இயக்க கந்தருவ வித்தியாதரர் முதலான) பெண்களும்;* ***அனைவரும் மறுகி -*** *எல்லோரும் கலங்கி;* ***போன போன திக்கு அறிகிலர் போனார் -*** *அவரவர் போன திசை இன்னது என்று அறியாதவர்களாய் நிலை கெட்டுச் சென்றனர்;* ***ஏனை நின்றவர் எங்கணும் இரிந்தனர் -*** *மற்றும் ஓடாமல் நின்றவர்கள் எங்கும் சுற்றித் திரிந்தவர்களாய்;* ***இலங்கை கோன் -*** *இலங்கைக்கு அரசனான இராவணன்;* ***அவ்வானவர் பதி கொண்ட நாள் என குலைந்தார் -*** *அந்தத் தேவர்களது தலைநகராகிய அமராவதியைப் பற்றிக் கொண்ட நாள் போல நிலை குலைந்தார்கள்.*

*இராவணனதுமாளிகையைத் தீப்பற்றிய போது அங்கிருந்தவர்கள், பயந்து ஓடியது பற்றிக் கூறப்பட்டது. மேக நாதன் செயல் தகப்பன் இராவணன் மேல் ஏற்றிக் கூறப்பட்டது.* ***(39)***

***5982. நாவியும்,நறுங் கலவையும், கற்பகம் நக்க***
***பூவும், ஆரமும்,அகிலும் என்று இனையன புகைய,***
***தேவு தேன் மழைசெறி பெருங் குலம் எனத்***
***திசையின்***
***பாவைமார் நறுங்குழல்களும், பரிமளம் கமழ்ந்த.***

***நாவியும் -*** *(இராவணன்மாளிகையில் இருந்த) கத்தூரியும்;* ***நறும் கலவையும் -*** *வாசனை உடைய (குங்குமப் பூ முதலிய) கலப்புக்கு உரிய பொருள்களும்;* ***கற்பகம் நக்க பூவும் -*** *கற்பக மரங்களில் மலர்ந்த மலர்களும்;* ***ஆரமும் -*** *சந்தனமும்;* ***அகிலும் -*** *அகில் கட்டைகளும்;* ***என்று இனையன -*** *என்று சொல்லத்தக்க இவ்விதமான வாசனைப் பொருள்கள் எல்லாம்;* ***புகைய -*** *எரிந்து புகையாக, (அதனால்);* ***திசையின் பாவை மார் நறுங்குழல்களும் பரிமளம் தேன் மழை செறி தேவு பெரும் குலம் என கமழ்ந்த -*** *எட்டுத் திக்குகளைக் காக்கும் தெய்வமகளிரது இயற்கை மணம் கமழும் கூந்தல்களும் செயற்கை நறுமணம் பெற்று தேன்மழை பொழிகின்ற தெய்வத்தன்மை உடைய பெரிய மேகக் கூட்டம் போலத் தோன்றி மணம் வீசின.*

*இயற்கைமணத்தோடு செயற்கை மணமும் கமழும் திசைக்காவல் மகளிரது கூந்தலுக்கு, தேன் மழை பொழியும் மேகக் கூட்டம் உவமை ஆயிற்று. பரிமளம் மணம்.* ***(40)***

*5983.* ***சூழும் வெஞ்சுடர் தொடர்ந்திட, யாவரும் தொடரா***
***ஆழி வெஞ்சினத்து ஆண் தொழில் இராவணன்***
***மனையில்-***
***ஊழி வெங் கனல்உண்டிட, உலகம் என்று உயர்ந்த***
***ஏழும்வெந்தென-எரிந்தன, நெடு நிலை ஏழும்.***

***சூழும் வெம் சுடர்தொடர்ந்திட -*** *எங்கும் சூழ்ந்த கொடிய நெருப்புச்சுடர், போய்த் தாவியதனால்;* ***யாவரும் தொடரா ஆழி வெம் சினத்துஆண் தொழில் இராவணன் -*** *எவரும் அணுகமுடியாத கடல் போன்றகொடிய கோபத்தையும், வீரச் செயலையும் உடைய இராவணனது;* ***மனையின்நெடு நிலை ஏழும் உலகம் என்று உயர்ந்த ஏழும் -*** *மாளிகையின் நீண்டுஉயர்ந்த ஏழு நிலை மாடங்களும், ஒன்றன் மேல் ஒன்றாக உயர்ந்துள்ள,உலகம் என்று சொல்லப்படுகின்ற ஏழு இடங்களும்;* ***ஊழிவெம்கனல் உண்டிடவெந்து என எரிந்தன -*** *யுகாந்த காலத்துக் கொடிய நெருப்பு உண்ணஎரிந்தாற் போன்றனவாய் வெந்து அழிந்தன. ஊழித்தீயில்மேலுலகங்கள் ஏழும் எரிந்து அழிந்தது போன்று, இராவணனது மாளிகையின் எழு நிலை மாடங்களும் எரிந்து அழிந்தன என்பதாம்.* ***(41)***

*5984.* ***பொன் திருத்தியது ஆதலால், இராவணன் புரை தீர்***
***குன்றம் ஒத்துஉயர் தட நெடு மா நிலைக் கோயில்,***
***நின்று துற்று எரிபருகிட, நெகிழ்வுற உருகி,***
***தென் திசைக்கும்ஓர் மேரு உண்டாம் என, தெரிந்த.***

***இராவணன் -*** *இராவணனுடைய;* ***குன்றம் ஒத்து உயர் தட நெடு மாநிலை கோயில் -*** *மலை போல் உயர்ந்ததும், அகன்ற நீண்டபெரிய நிலைகளைஉடையதுமான அரண்மனை;* ***புரை தீர் பொன் திருத்தியது ஆதலால் -*** *குற்றமற்ற பொன்னால் அமைக்கப்பட்டதாதலால்;* ***எரி நின்று, துற்றுபருகிட -*** *நெருப்பு எழுந்து வாயினால் கவ்விக் குடிப்பது போல் எரிப்பதனால்;* ***நெகிழ்வு உற உருகி -*** *நெகிழ்ந்து உருகி, (ஒரே திரளாகி);* ***தென் திசைக்கும் ஓர் மேரு உண்டாம் என தெரிந்த -*** *தெற்குத்திக்கிலும் ஒரு மேரு மலை உள்ளது என்று சொல்லும்படி காணப்பட்டது. மேரு மலை வடதிசையில் உள்ளது என்பது புராணக் கொள்கை. இராவணன் மாளிகை மலை போல் உயர்ந்து பொன்னால் அமைக்கப்பட்டதால், அது நெருப்பில் உருகி ஒன்றாகத் திரண்டு, தென்திசை மேரு மலைபோல் தோன்றிற்று என்பதாம்.*
***(42)***

*இராவணன்முதலியோர் வெளியேறுதல்*

*5985.* ***அனையகாலையில் அரக்கனும், அரிவையர் குழுவும்,***
***புனை மணிப்பொலி புட்பக விமானத்துப் போனார்;***
***நினையும்மாத்திரை யாவரும் நீங்கினர்; நினையும்***
***வினை இலாமையின், வெந்தது, அவ் விலங்கல்மேல்***
***இலங்கை.***

***அனைய காலையில்-*** *அவ்வாறுஇராவணன் மனை வேகின்ற அப்பொழுது;* ***அரக்கனும், அரிவையர் குழுவும் -*** *தலைமை அரக்கனாகிய இராவணனும், அவனது*

*உரிமை மகளிர் கூட்டமும்;* ***மணி புனை பொலி புட்பக விமானத்து போனார் -*** *இரத்தினங்களால் அமைக்கப்பெற்று விளங்குகின்ற புட்பக விமானத்தில் ஏறி மேலே சென்றனர்;* ***யாவரும் -*** *இறந்தவர் போக மற்றைய அரக்கர்களும்;* ***நினையும் மாத்திரை நீங்கினர் -*** *நினைத்த அளவில் அவ்விடம் விட்டு அகன்றனர்;* ***நினையும் வினை இலாமையின் -*** *அவ்வாறு நினைக்கும் செயலைச் செய்யும் தன்மை தனக்கு இல்லாததால்;* ***அவ்விலங்கல் மேல் இலங்கை வெந்தது -*** *அந்த மலையின் மீது இருந்த இலங்கை நகர் வெந்து அழிந்தது.*

*நினைத்ததைச்செய்யக் கூடியவர்கள் அரக்கர்கள். அஃறிணைப் பொருளாகிய இலங்கைநகர் அவ்வாறு செய்ய முடியாததால் நெருப்பில் வெந்து அழிந்தது என்பது கருத்து. நினையும் மாத்திரை - மிகச் சுருங்கிய காலம்; புட்பக விமானம் - இராவணனது வானவூர்தி.* ***(43)*** *இராவணன் நகர்எரிந்த காரணம் வினவுதல்*

***5986. ஆழித்தேரவன் அரக்கரை அழல் எழ நோக்கி,***
***'ஏழுக்கு ஏழ் எனஅடுக்கிய உலகங்கள் எரியும்***
***ஊழிக் காலம்வந்து உற்றதோ ? பிறிது வேறு***
***உண்டோ ?***
***பாழித் தீச் சுடவெந்தது என், நகர் ?' எனப்***
***பகர்ந்தான்.***

***ஆழித் தேரவன் -*** *ஆணைச்சக்கரத்தை உடையவனாய்ப் பெருந்தேர் வீரனான இராவணன்;* ***அரக்கரை அழல் எழ நோக்கி -*** *தன்னுடன் வந்த அரக்கர்களைத் தன்கண்களில் கோபத் தீ பொங்கும் படிப் பார்த்து;* ***ஏழுக்கு ஏழ் என அடுக்கிய உலகங்கள் -*** *(பதினான்காக) ஒன்றன் மீது ஒன்று என ஏழொடு ஏழாக அடுக்கப் பெற்ற உலகங்கள்;* ***எரியும் ஊழிக்காலம் வந்து உற்றதோ ? பிறிது வேறு உண்டோ ? -*** *எரியும் கற்பாந்த காலம் வந்து சேர்ந்ததோ ? வேறு ஏதேனும் உண்டாயிற்றோ ?* ***பாழி தீ சுட நகர் வெந்ததுஎன் ? -*** *பெரு நெருப்பு எரித்ததால், இந்த இலங்கை நகர் வெந்ததற்குக்காரணம் என்ன;* ***என பகர்ந்தான் -*** *என்று கேட்டான். ஊழிக்காலத்தில்பதினான்கு உலகங்களும் தீயினால் அழியும். அந்த ஊழிக்காலம் வந்து விட்டதா? அல்லது இலங்கை வெந்து அழிவதற்கு வேறு காரணம் உண்டா? என்று இராவணன் அரக்கரைப் பார்த்துக் கேட்டான். ஏழுக்கு ஏழ் - பதினான்கு. பாழி - பெருமை. 'பாழியந் தோளால் வரை எடுத்தான்' - (திருவாய் மொழி 10. 4. 8)*
***(44)***

*அரக்கர்நிகழ்ந்தது கூற இராவணன் சினத்தல்*

***5987. கரங்கள்கூப்பினர், தம் கிளை திருவொடும்***
***காணார்,***
***இரங்குகின்ற வல்அரக்கர் ஈது இயம்பின்;***
***'இறையோய் !***
***தரங்க வேலையின்நெடிய தன் வால் இட்ட தழலால்,***
***குரங்கு சுட்டதுஈது' என்றலும், இராவணன்***
***கொதித்தான்.***

***தம் கிளைதிருவொடும் காணார் -*** *(அவ்வாறு இராவணன் கேட்டதும்)தமது*

*சுற்றத்தாரையும் வீரம் செல்வம் முதலிய பொலிவையும் இழந்து;* ***இரங்குகின்ற வல் அரக்கர் -*** *ஏங்கிக் கொண்டிருக்கின்ற வலிய அரக்கர்கள்;* ***கரங்கள் கூப்பினர் ஈது இயம்பினர் -*** *கைகளைக் கூப்பிக் கொண்டுபின்வரும் இச்செய்தியைச் சொன்னார்கள்;* ***இறையோய் ! -*** *அரசனே !;* ***தரங்க வேலையின் நெடியதன் வால் இட்டதழலால் -*** *அலைகளை உடையகடலினும் நீண்ட தனது வாலிலே நாம் வைத்த நெருப்பால்;* ***குரங்கு சுட்டதுஈது என்றலும் -*** *அக்குரங்கு எரித்தது இதுவாகும் என்று சொன்ன உடன்;* ***இராவணன் கொதித்தான் -*** *இராவணன் கோபம் கொண்டான்.* ***(45)***

***5988. 'இன்று புன்தொழில் குரங்குதன் வலியினால், இலங்கை***
***நின்று வெந்து,மா நீறு எழுகின்றது; நெருப்புத்***
***தின்றுதேக்கிடுகின்றது; தேவர்கள் சிரிப்பார்;***
***நன்று ! நன்று! போர் வலி' என, இராவணன் நக்கான்.***

***இன்று -*** *இன்றைக்கு;* ***புன் தொழில் குரங்கு தன் வலியினால் -*** *அற்பத் தொழிலை உடைய (ஒரு) குரங்கினது வலிமையினால்;* ***இலங்கை நின்று வெந்து மாநீறு எழுகின்றது -*** *இலங்கை நகர் நின்று எரிந்து பெருஞ் சாம்பல் பறக்கின்றதாயிற்று;* ***நெருப்பு தின்று தேக்கிடுகின்றது -*** *நெருப்பு நகரத்தை உண்டு ஏப்பம் விடுவதாயிற்று;* ***தேவர் சிரிப்பார் -*** *(இதனைக் கண்டால், நமக்குத் தோற்றுவலி இழந்த) தேவர்களும் நகைப்பார்கள்;* ***போர் வலி நன்று நன்று என -*** *தமது போர்த்திறமை மிக நன்றாக இருக்கிளது என்று சொல்லி;* ***இராவணன் நக்கான் -*** *இராவணன் (வெகுளி மேலீட்டால்) சிரித்தான்.*

*இலங்கைஎரியுண்டதற்கு, இராவணன் நாணம் தோன்ற, கோபத்தோடு நக்கான் என்க. தேக்கிடுதல் - நிறைந்து ஏப்பம் விடுதல். 'தீமுற்றத் தென்னிலங்கை ஊட்டினான்' என்ற திருவாய் மொழித் தொடர் (2.1.3) விளக்கத்துக்கு 'செந்தீ உண்டு தேக்கிட்டதே' என்று மேற்கோள் காட்டப்பெற்றுள்ளது.* ***(46)***

*எரியையும்அனுமனையும் பற்றி வர இராவணன் கட்டளை இடுதல்*

**வஞ்சித் துறை**

***5989. 'உண்டநெருப்பைக்***
***கண்டனர்பற்றிக்***
***கொண்டு அணைக'என்றான்-***
***அண்டரைவென்றான்.***

***அண்டரைவென்றான் -*** *முன்பு தேவர்களைவென்றவனான இராவணன்;* ***உண்ட நெருப்பை -*** *இலங்கையை எரித்த அக்கினித்தேவனை;* ***கண்டனர் பற்றி கொண்டு அணைக என்றான் -*** *பார்த்தவர்கள் பிடித்துக் கொண்டு இங்கே வருவீர்களாக என்று ஆணையிட்டான்.*

*இராவணன் ஆணைக்குஅஞ்சியிருந்த அக்கினி தேவன், இப்போது, ஆணையை மீறிச் செயல்பட்டதனால், அவனைத் தண்டிக்க வேண்டி, பிடித்துக் கொண்டு வருமாறு அரக்கர்களுக்குக் கட்டளையிட்டான் என்பதாம்.* ***(47)***

***5990. 'உற்றுஅகலாமுன்.***
***செற்ற குரங்கைப்***
***பற்றுமின்'என்றான்-***
***முற்றும்முனிந்தான்.***

***முற்றும்முனிந்தான் -*** *முழுவதும் சினந்தவனானஇராவணன்;* ***செற்ற குரங்கை -*** *இவ்வாறு தீங்கு இழைத்த குரங்கை;* ***உற்று அகலாமுன் -*** *அது, நம் ஊரைவிட்டு நீங்குவதற்கு முன்பாக;* ***பற்றுமின் -*** *பிடித்து வாருங்கள்;* ***என்றான் -*** *என்று கட்டளையிட்டான்.* ***(48)***

***5991. சார் அயல்நின்றான்,***
***வீரர்விரைந்தார்;***
***'நேருதும்' என்றார்;***
***தேரினர்சென்றார்.***

***சார் அயல்நின்றார் -*** *இராவணனைச் சார்ந்துபக்கத்தில் நின்றவர்களாகிய;* ***தேரினர் வீரர் நேருதும் என்றார் -*** *தேர்வீரர்கள்அவ்வாறே செய்வோம்என்று சொல்லி;* ***விரைந்தார் -*** *விரைந்து சென்றார்கள்.*

*நேருதல் - உடன்படுதல்.* ***(49)***

***5992. எல்லைஇகந்தார்***
***வில்லர்;வெகுண்டார்***
***பல் அதிகாரத்***
***தொல்லர்,தொடர்ந்தார்.***

***எல்லை இகந்தார்-*** *அளவற்றவில் வீரர்களும்;* ***வில்லர் -; பல் அதிகார தொல்லர் -*** *பழமையான பல்வகையான அதிகாரங்களை உடையவர்களும்;* ***வெகுண்டார் -*** *கோபங்கொண்டு;* ***தொடர்ந்தார் -*** *தேர் வீரர்களைத் தொடர்ந்து சென்றார்கள்.* ***(50)***

**வஞ்சி விருத்தம்**

***5993. நீர் கெழுவேலை நிமிர்ந்தார்;***
***தார் கெழு தானைசமைந்தார்;-***
***போர் கெழு மாலைபுனைந்தார்***
***ஓர் எழுவீரர்-உயர்ந்தார்.***

***உயர்ந்தார் ஓர்எழு வீரர் -*** *(அவ்வீரர்களுள்)உயர்ந்தவர்களாகிய ஒப்பற்ற ஏழுவீரர்கள்;* ***நீர் கெழு வேலை நிமிர்ந்தார் -*** *நீர்மிகும் கடல் போல எழுந்தவர்களாய்;* ***போர் கெழு மாலை புனைந்தார் -*** *போர்க்குரிய தும்பை மாலை அணிந்து;* ***தார் கெழு தானை சமைந்தார் -*** *அணிவகுக்கப் பெற்ற சேனையை ஆயத்தம் செய்தார்கள்.* ***(51)***

***5994. விண்ணினை,வேலை விளிம்பு ஆர்***
***மண்ணினை, ஓடிவளைந்தார்;***
***அண்ணலை நாடிஅணைந்தார்;***
***கண்ணினின் வேறுஅயல் கண்டார்.***

***விண்ணினை -*** *வானத்தையும்;* ***வேலை விளிம்பு ஆர் மண்ணினை -*** *கடலின் விளம்பிலே (ஓரத்திலே) பொருந்தியுள்ள இலங்கைப் பூமியையும்;* ***ஓடிவளைந்தார் -*** *ஓடிச் சென்று சூழ்ந்து கொண்டவர்களாய்;* ***அண்ணலை நாடி அணைந்தார் -*** *பெரியோனாகிய அனுமனைத் தேடி நெருங்கி;* ***அயல் வேறு கண்ணினின் கண்டார் -*** *ஒரு பக்கத்தில் (அனுமனை) தனியே (தமது) கண்களால் பார்த்தார்கள்.* ***(52)***

*அரக்கர்கள்அனுமனுடன் பொருது அழிதல்*

***5995. 'பற்றுதிர்! பற்றுதிர் !' என்பார்;***
***'எற்றுதிர் !எற்றுதிர் ! என்பார்;***
***முற்றினர்,முற்றும் முனிந்தார்;***
***கற்று உணர்மாருதி கண்டான்.***

***முற்றும்முனிந்தார் -*** *மிக்க கோபம் கொண்டஅந்த அரக்கர்கள்;* ***பற்றுதிர் பற்றுதிர் என்பார் -*** *(அனுமனைக் கண்டவுடன்) 'இவனைப் பிடித்துக் கொள்ளுங்கள் பிடியுங்கள்' என்று சொல்பவரும்;* ***எற்றுதிர் எற்றுதிர் என்பார் -*** *'இவனைத் தாக்குங்கள் தாக்குங்கள்' என்று சொல்பவர்களுமாய்;* ***முற்றினர் -*** *அனுமனை வளைந்து கொண்டார்கள்;* ***கற்று உணர் மாருதி கண்டான் -*** *நூல்களைக் கற்று உணர்ந்த அறிஞனான அனுமன் அவர்களைப் பார்த்தான்.* ***(53)***

***5996. ஏல்கொடுவஞ்சர் எதிர்ந்தார்;***
***கால்கொடுகைகொடு, கார்போல்,***
***வேல்கொடுகோலினர்; வெந் தீ***
***வால்கொடு தானும்வளைந்தான்.***

***ஏல் கொடுவஞ்சர் -*** *(அனுமனைப்பிடிப்பதற்கு) ஏற்றுக் கொண்டு வந்த வஞ்சகர்களான அரக்கர்கள்;* ***கார் போல் கோலினர் -*** *மேகம் போல் அனுமனைச் சூழ்ந்து கொண்டு;* ***கால் கொடு, கை கொடு வேல் கொடு -*** *காலைக் கொண்டும் கையைக் கொண்டும் வேலைக் கொண்டும்;* ***எதிர்ந்தார் தானும் -*** *எதிர்த்தார்கள்; அனுமனும்;* ***வெம்தீ வால் கொடு வளைந்தான் -*** *வெவ்விய நெருப்பு மூண்ட தனது வாலைக் கொண்டு அவர்களை வளைத்தான்.*

*ஏல் கொடு -ஏற்றுக்கொண்டு.* ***(54)***

*5997.* ***பாதவம்ஒன்று பகுத்தான்;***
***மாதிரம் வாலின்வளைத்தான்;***
***மோதினன்;மோத, முனிந்தார்***
***ஏதியும் நாளும்இழந்தார்.***

***மாதிரம் வாலின்வளைத்தான் -*** *எல்லாத் திசைகளையும்தனது வாலினால் வளைத்துக் கொண்ட அனுமன்;* ***பாதவம் ஒன்று பகுத்தான் -*** *ஒருமரத்தைப் பெயர்த்தெடுத்து;* ***மோதினன் -*** *அம்மரத்தால் அரக்கர்களை அடித்தான்;* ***மோத முனிந்தார் -*** *அடித்ததனால் கோபம் கொண்டு வந்தவர்களான அந்த அரக்கர்கள்;* ***ஏதியும் நாளும் இழந்தார் -*** *தமது ஆயுதங்களையும் வாழ்நாளையும் இழந்தார்கள்.*

*பாதவம் - மரம்;ஏதி - படைக்கலம்.* ***(55)***

*5998.* ***நூறிடமாருதி, நொந்தார்***
***ஊறிட, ஊன் இடுபுண்ணீர்,***
***சேறு இட, ஊர் அடுசெந் தீ***
***ஆறிட, ஓடினதுஆறாய்.***

***மாருதி நூறிடநொந்தார் -*** *அனுமன் அவ்வாறு அடிக்க வருந்தினவர்களான அரக்கர்கள்;* ***ஊறு இட ஊன் இடு புண்ணீர் சேறு இட -*** *காயம் அடைய அதனால், அவர் உடம்பினின்றும் பெருகிய இரத்தமானது, சேற்றை உண்டாக்க;* ***ஊர் அடு செந்தீ ஆறிட ஆறாய் ஓடினது -*** *அவ்வூரை எரித்த சிவந்த நெருப்பு தணியும் படி ஆறாகப் பெருகிற்று.*

*அனுமனால்மோதுண்ட அரக்கரின் இரத்தப் பெருக்கு பற்றிக் கூறப்பட்டது.*
***(56)***

*5999.* ***தோற்றினர் துஞ்சினர் அல்லார்***
***ஏற்று இகல்வீரர், எதிர்ந்தார்;***
***காற்றின் மகன்,கலை கற்றான்,***
***கூற்றினும் மும்மடி கொன்றான்.***

***துஞ்சினர்அல்லோர் தோற்றினர் ஏறு இகல்வீரர் -*** *இறந்தவர்கள் போக அங்குத் தென்பட்டவர்களான ஆண்சிங்கம் போன்ற வீரர்கள்;* ***எதிர்ந்தார் -*** *அனுமனை எதிர்த்தார்கள்;* ***காற்றின் மகன் கலை கற்றான் -*** *வாயு தேவன் மகனும் எல்லாக்கலைகளையும் கற்றவனுமாகிய அனுமன்;* ***கூற்றினும் மும்மடி கொன்றான் -*** *யமனைவிட மூன்று மடங்கு அவர்களைக் கொன்றுவிட்டான்.*
***(57)***

*6000.* ***மஞ்சு உறழ்மேனியர் வன் தோள்***
***மொய்ம்பினர்வீரர் முடிந்தார்***
***ஐம்பதினாயிரர்;அல்லார்,***
***பைம் புனல் வேலைபடிந்தார்.***

***மஞ்சு உறழ்மேனியர்*** - *மேகம் போன்றகருநிறம் கொண்ட உடலை உடையவர்களும்;* ***வன் தோள் மொய்ம்பினர்*** - *வலிய தோள்களும் ஆற்றலும் கொண்டவர்களுமான;* ***வீரர்*** - *படை வீரர்களில்;* ***ஐம்பதினாயிரர் முடிந்தார்*** - *ஐம்பதினாயிரம் பேர் இறந்தார்கள்;* ***அல்லார் பைம்புனல் வேலை படிந்தார்*** - *அவர்கள் அல்லாதவர் எல்லாம் பசுமையாகக் காணப்படுகின்ற நீரையுடைய கடலில் போய் விழுந்தார்கள்.* ***(58)***

***6001. தோய்த்தனன் வால்; அது தோயக்***
***காய்ச்சின வேலைகலந்தார்,***
***போய்ச் சிலர்பொன்றினர் போனார்***
***'ஏச்சு' என,மைந்தர் எதிர்ந்தார்.***

***வால்தோய்த்தனன்*** - *அனுமன் தனது வாலைக்கடலில் தோய்த்தான்;* ***அது தோய*** - *(நெருப்பு பிடித்த) அந்த வாலைத் தோய்த்ததினால்;* ***காய்ச்சின வேலை போய் கலந்தார் சிலர்*** - *கொதிப்படைந்த கடலில் சென்று முழுகியவர்களில் சிலர்;* ***பொன்றினர் போனார் மைந்தர்*** - *இறந்தொழிந்தார்கள் (சில இறவாது நின்ற) வீரர்கள்;* ***ஏச்சு என*** - *(இவ்வாறு கடலில் மூழ்குவது) நமக்கு இழிவு என்று கருதி;* ***எதிர்ந்தார்*** - *அனுமனை எதிர்த்தார்கள்.*

*மைந்தர் -வலிமை உடையவர்; வீரர்.* ***(59)***

***6002. சுற்றின தேரினர் தோலா***
***வில் தொழில்வீரம் விளைத்தார்;***
***எற்றினன்மாருதி; எற்ற,***
***உற்று எழுவோரும்உலந்தார்.***

***சுற்றின தேரினர்*** - *அனுமனைச் சூழ்ந்து கொண்ட தேர் ஏறிய வீரர்கள்;* ***தோலா வில் தொழில் வீரம் விளைத்தார்*** - *தோல்வி அடையாத தம்விற்போர்த் தொழிலில் வீரத்தைக் காட்டிப் போர் செய்தார்கள்;* ***மாருதி எற்றினன்*** - *அனுமன் அவர்களைத் தாக்கிஅடித்தான்;* ***எற்ற*** - *அவ்வாறு தாக்கியதனால்;* ***உற்று எழுவோரும் உலந்தார்*** - *அடிபட்டு பொர முனைந்து எழுந்த வீரர்களும் அழிந்தார்கள். 'எழுவோர்' - ஏழுவீரர்கள் என்றும், இவர்கள் அமைச்சர்களின் மக்கள் என்றும் பொருள் விளக்கம் கொடுக்கலாம். 51-ம் பாடலில் ஓர் எழு வீரர் உயர்ந்தார் ? என்ற தொடரை நோக்கும் போது எழுவோர் ? என்பதற்கு ஏழுவீரர்கள் எனப் பொருள் கொள்வது பொருத்தமே.* ***(60)***

*பிராட்டியின்திருவடிகளை வணங்கி, அனுமன் மீள, அழலும்மறைதல்*

***6003. விட்டுஉயர் விஞ்சையர், 'வெந் தீ***
***வட்ட முலைத் திருவைகும்***
***புள் திரள்சோலை புறத்தும்***
***சுட்டிலது' என்பதுசொன்னார்.***

***விட்டு உயர்விஞ்சையர்*** - *அவ்விடம் விட்டு மேலேசென்ற வித்தியாதரர்;* ***வெம் தீ*** - *அனுமன் வாலில் வைத்த கொடிய நெருப்பு, (அனைத்தையும் எரித்த நெருப்பு);* ***வட்ட***

***முலை திரு வைகும் புள் திரள் சோலை புறத்தும் சுட்டிலது -*** *வட்டமான முலையை உடைய திருமகள் (சீதை) இருக்கின்ற பறவைக் கூட்டம் நிறைந்த சோலையின், வெளியிடத்தைக் கூட சுடவில்லை;* ***என்பது சொன்னார் -*** *என்ற செய்தியை வியப்பாகத் தங்களுக்குள் பேசிக் கொண்டார்கள்.* ***(61)***

***6004. வந்தவர்சொல்ல மகிழ்ந்தான்;***
***வெந் திறல்வீரன் வியந்தான்;***
***'உய்ந்தனென்'என்ன, உயர்ந்தான்,***
***பைந்தொடிதாள்கள் பணிந்தான்.***

***வந்தவர் சொல்ல-*** *(வானத்தில்) வந்தவர்களான வித்தியாதரர் இவ்வாறுசொல்ல;* ***வெம் திறல் வீரன் -*** *(அது கேட்டு) ஆண்மை மிக்க வீரனானஅனுமன்;* ***மகிழ்ந்தான் -*** *மகிழ்ச்சி கொண்டு;* ***வியந்தான் -*** *வியப்படைந்து;* ***உய்ந்தனன் என்ன உயர்ந்தான் -*** *(தீ வினையினின்று யான்) தப்பினேன்என்று எண்ணி, அவ்விடம் விட்டு மேலே எழுந்தவனாகிச் சென்று;* ***பைந்தொடி தாள்கள் பணிந்தான் -*** *பசுமையான பொன் வளையல்களை அணிந்தபிராட்டியின் திருவடிகளில் பணிந்து வணங்கினான். தான் இட்டதீயினால், அசோகவனத்துக்கோ, பிராட்டிக்கோ, துன்பம் எதுவும் நேரவில்லை என்பதை வித்தியாதரர் பேசிக் கொண்ட பேச்சின் மூலம் அறிந்த அனுமன், உய்ந்தனன் என மகிழ்ந்தான். பிராட்டி தீப்பற்றி இறந்திருந்தால் அது தனக்குப் பெரும் பழியாகி விடுமே என்று பயந்து கொண்டிருந்தான் அனுமன் என்பதை, 'உய்ந்தனன், என்ற தொடர் உணர வைக்கின்றது. முதல் நூலில் விரிவாகச் சொல்லிக்காட்டப்பட்ட அனுமனது அச்சம் நிறைந்த எண்ணம் 'உய்ந்தனன்' என்ற ஒருதொடரில் சுருக்கிக் காட்டப்பட்டுள்ளது. இது 'சுருங்கச் சொல்லி விளங்கவைத்தல்' என்ற உத்திக்கு இலக்கணமாக அமைந்துள்ளது என்னலாம்.* ***(62)***

***6005. பார்த்தனள், சானகி, பாரா***
***'வேர்த்து எரிமேனி குளிர்ந்தாள்,***
***'வார்த்தை என்?' 'வந்தனை' என்னா,***
***போர்த்தொழில் மாருதி போனான்.***

***சானகிபார்த்தனள் -*** *பிராட்டி தன்னைவணங்கிய அனுமனைப் பார்த்தாள்;* ***பாரா -*** *பார்த்தவுடன்;* ***வேர்த்து எரி மேனி குளிர்ந்தாள் -*** *(அனுமனுக்கு என்ன ஆயிற்றோ என) வியர்த்துக் கொதிக்கின்ற தன் உடல் குளிர்ந்தவளானாள்;* ***வார்த்தை என் ? -*** *யான் சொல்ல வேண்டியது எதுவேனும் உளதோ என்றாள்;* ***போர் தொழில் மாருதி வந்தனை என்னா போனான் -*** *போர் செய்வதில் வல்லவனான அனுமன் 'வணக்கம்' என்று சொல்லி, பிராட்டியிடம் விடை பெற்றுச் சென்றான்.*

*'வார்த்தை என்?' என்பதை அனுமன் கூற்றாகவும் கொள்ளலாம். 'வார்த்தை உண்டோ என்று பிராட்டி கேட்டருளத் தேவரீரைச் சேவிக்க விடை கொண்டேன் என்று விண்ணப்பம் செய்தார் மாருதி' என்பது பழைய உரை.*
***(63)***

***6006. 'தெள்ளியமாருதி சென்றான்;***
***கள்ள அரக்கர்கள் கண்டால்,***

***எள்ளுவர்,பற்றுவர்' என்னா,***
***ஒள் எரியோனும்ஒளித்தான்.***

***தெள்ளிய மாருதி-*** *தெளிந்த ஞானமுடைய அனுமனோ;* ***சென்றான் -*** *போய்விட்டான்;* ***கள்ள அரக்கர்கள் கண்டால் எள்ளுவர் பற்றுவர் என்னா-*** *திருட்டுச் செயலுக்குரிய அரக்கர்கள் என்னைக் கண்டால் நிந்தித்து என்னைப் பிடித்துச் செல்வர்என்று நினைத்து;* ***ஒள் எரி யோனும் ஒளித்தான் -*** *ஒளி பொருந்திய அக்கினித் தேவனும் தன்னை மறைத்துக் கொண்டான்.*

*இது காறும்இராவணனுக்கு அஞ்சி அடங்கியிருந்த அக்கினி தேவன், அனுமனை அண்டை கொண்ட பலத்தால், இலங்கை நகரை எரித்தான். இப்போது அனுமன் இலங்கையை விட்டுச் சென்று விட்டதால், அரக்கர்கள் தன்னைப் பிடித்து விடுவார்கள் என்ற பயத்தால் தன்னை மறைத்துக் கொண்டான் அக்கினி தேவன் என்பதாம்,*
***(64)***

## திருவடி தொழுதபடலம்

*அனுமன், இராமபிரானதுதிருவடியைத் தொழுது, பிராட்டியைத் தான் கண்டு வந்த செய்தியைக் கூறுவது, 'திருவடியை நாரணனைக் கேசவனைப் பாஞ்சுடரை' என்ற திருவாய் மொழித் (4.9.11) தொடரை அடிப்படையாக்கிக் கொண்டு பார்த்தால், திருவடி என்ற தொடர் இராமபிரானையே குறிப்பதாகவும் கொள்ளலாம்.*

*மேலும் 'திருவடி' என்பது அனுமனைக் குறிப்பதாகக் கொண்டு, இராமபிரான் என்ற செயப்படு பொருளை வரவழைத்தும் பொருள் கொள்ளலாம். திருவடி (அனுமன்) யாரைத் தொழுதான்? இராமபிரானையா? அன்று.*

*இப்படலத்தின்22ஆம் கவிதை, இதனைத் தெளிவாக்குகிறது.*

***எய்தினன்அனுமனும் எய்தி, ஏந்தல் தன்***
***மொய் கழல்தொழுகிலன்***

*இராமபிரானது திருவடியைஅனுமன் தொழவில்லை என்பதை இக்கவிதையின் முன் பகுதி மூலம் நன்கு உணரலாம். அப்படியானால், யாரைத் தொழுதான்?*

***முளரிநீங்கிய***
***தையலைநோக்கிய தலையன் கையினன்***
***வையகம் தழீஇநெடிது இறைஞ்சி வாழ்த்தினான்***

*'பிராட்டியைத் தான்அனுமன் தொழுதான்' என்பதை இதன் மூலம் உணரலாம்.*

*ஆக, திருவடியாகியஅனுமன், பிராட்டியை, இருந்த இடத்திலிருந்தே தொழுது, தான் கண்டுவந்த செய்தியை இராமபிரானிடம் சொல்வதைத் தெரிவிப்பது இந்தப் படலம் என்று பொருள் கொள்வதே பொருத்தமாகும்.*

*வான்வழி மீளும் அனுமன், மயேந்திரத்தில் குதித்தல்*

**அறுசீர் ஆசிரியவிருத்தம்**

***6007. 'நீங்குவென் விரைவின்' என்னும் நினைவினன்,***
***மருங்கு நின்றது***
***ஆங்கு ஒரு குடுமிக்குன்றை அருக்கனின்***
***அணைந்த ஐயன்,***

***வீங்கினன்,உலகை எல்லாம் விழுங்கினன் என்ன;***
***வீரன்***
***பூங் கழல் தொழுதுவாழ்த்தி, விசும்பிடைக் கடிது***
***போனான்.***

***விரைவின்நீங்குவென் என்னும் நினைவினன் -*** *சீக்கிரத்தில் இந்த இலங்கையினின்றும் போவேன் என்கின்ற எண்ணம் உடையவனாய்;* ***ஆங்கு மருங்கு நின்றது ஒரு குடுமிக்குன்றை -*** *அந்த இலங்கையின் அருகேயிருந்த சிகரத்தை உடைய ஒரு மலையை;* ***அருக்கனின் அணைந்த ஐயன் -*** *சூரியனைப் போன்று சென்று சேர்ந்த அனுமன்;* ***உலகை எல்லாம் விழுங்கினன் என்ன வீங்கினன் -*** *எல்லா உலகங்களையும் உட் கொண்டவனான திருமால் போன்று தன் வடிவம் பூரித்து நின்று;* ***வீரன் பூங்கழல் தொழுது -*** *இரகு குல வீரனான இராமபிரானது அழகிய திருவடிகளை, (தனது மனத்தால் நினைத்து) வணங்கித் துதித்து;* ***விசும்பிடை கடிது போனான் -*** *ஆகாய வழியாக விரைவில் சென்றான்.* ***(1)***

***6008. மைந்நாகம்என்ன நின்ற குன்றையும், மரபின் எய்தி,***
***கைந் நாகம்அனையோன் உற்றது உணர்த்தினன்,***
***கணத்தின் காலை,***
***பைந் நாகம்நிகர்க்கும் வீரர் தன் நெடு வரவு***
***பார்க்கும்,***
***கொய்ந் நாகம்நறுந் தேன் சிந்தும், குன்றிடைக்***
***குதியும் கொண்டான்.***

***கை நாகம்அனையோன் -*** *துதிக்கையை உடைய யானை போன்றவனான அனுமன்;* ***மைநாகம் என்ன நின்ற குன்றையும் -*** *மை நாகம் என்று சொல்லப் படுகின்ற இடை நின்ற மலையையும்;* ***மரபின் எய்தி உற்றது உணர்த்தினன் -*** *(முன் அதனிடம் சொல்லி வந்த) முறைப்படி அடைந்து, இலங்கையில் நடந்த நிகழ்ச்சிகளை அதனிடம் கூறி;* ***கணத்தின் காலை தன் நெடும் வரவு பார்க்கும் -*** *ஒரு கணப் பொழுதிலே, நெடு நேரமாகத் தனது வருகையை எதிர்பார்த்துக் கொண்டிருக்கும்;* ***பை நாகம் நிகர்க்கும் -*** *படம் எடுத்து எழுந்து நோக்கும் பாம்பு போன்ற;* ***வீரர் -*** *அங்கதன் முதலிய வானரவீரர்கள் நின்ற;* ***கொய் நாகம் நறுந்தேன் சிந்தும் குன்றிடை -*** *பறித்துஎடுக்கக் கூடிய சுர புன்னை மரங்களின் மலர்கள் தேனைச் சிந்திக்கொண்டிருக்கும் மகேந்திரமலையிலே;* ***குதியும் கொண்டான் -*** *குதித்தலையுஞ் செய்தான்.*

*பாம்பு, ஒன்றைஆவலோடு எதிர் பார்க்கும் போது, படம் எடுத்துக் கொண்டு எழுந்து நோக்கும் இயல்புடையது. அதனால் வானர வீரர்கள் அனுமனது வரவை ஆவலோடு எதிர்பார்த்திருப்பதற்கு, பை நாகம் உவமையாக்கப்பட்டது. கணத்தின் காலை - காலத்தின் சிறிய அளவு; நாகம் - சுரபுன்னை. அனுமன், கடல் தாவிய செய்தி, ஒரு நீண்ட படலமாக விரிந்தது. ஆனால் அவன் திரும்பிய செய்தி இரண்டு பாடல்களில் முடிக்கப்பட்டுள்ளது. இது, கவிச்சக்கரவர்த்தியின் கதை அமைப்புத் திறனைக்காட்டுகின்றது.* ***(2)***

*வானர வீரர்அனுமனைக் கண்டு மகிழ்தல்*

***6009. போய் வரும் கருமம் முற்றிற்று என்பது ஓர் பொம்மல்***
***பொங்க,***
***வாய் வெரீஇநின்ற வென்றி வானர வீரர் மன்னோ,***
***பாய்வரு நீளத்துஆங்கண் இருந்தன பறவைப்***
***பார்ப்புத்***

*தாய் வரக்கண்டதன்ன உவகையின் தளிர்த்தார்*
*அம்மா !*

***வாய் வெரீ இநின்ற வானர வென்றி வீரர் -*** *(அனுமன் நிலை யாதாகுமோ என்ற அச்சத்துடன்) வாய் விட்டுப் புலம்பிக் கொண்டிருந்த வெற்றிக்குரிய (அங்கதன் முதலிய) வானர வீரர்கள்;* ***போய் வரும் கருமம் முற்றிற்று என்பது ஓர் பொம்மல் பொங்க -*** *(பிராட்டியை அனுமன் தேடிக் கண்டு பிடித்து) மீண்டு வருதலாகிய தம் செயல் முற்றுப் பெற்றது என்பதனாலாகிய ஒப்பற்ற மகிழ்ச்சி அதிகப்பட;* ***பாய் வரு நீளத்து ஆங்கண் இருந்தன பறவைப் பார்ப்பு -*** *(தாய்ப்பறவை ஆவலோடு) பாய்ந்து உட்புக வரும் கூட்டினிடத்து இருந்தனவாகிய பறவைக்குஞ்சுகள்;* ***தாய் வர கண்டது அன்ன -*** *தமது தாய்ப் பறவை (வெளியிற் சென்றது) மீண்டு வர, (அதனைப்) பார்த்ததைப் போன்ற;* ***உவகையின் தளிர்த்தார் -*** *மகிழ்ச்சியினால் உடல் பூரித்தார்கள்.*

*வானர வீரர்,பொம்மல் பொங்க உவகையின் தளிர்த்தார் என்க. வீரர்களது மகிழ்ச்சிக்கு, தாய்ப் பறவையின் வருகை கண்டு மகிழும் பறவைக் குஞ்சுகளின் உவகை உவமையாக்கப்பட்டுள்ளது. பொம்மல் - மகிழ்ச்சி; நீளம் - கூடு.*
*(3)6010.* *அழுதனர்சிலவர்; முன் நின்று ஆர்த்தனர் சிலவர்;*
*அண்மித்*
*தொழுதனர்சிலவர்; ஆடித் துள்ளினர் சிலவர்;*
*அள்ளி*
*முழுதுறவிழுங்குவார்போல் மொய்த்தனர் சிலவர்;*
*முற்றும்*
*தழுவினர்சிலவர்; கொண்டு சுமந்தனர் சிலவர்,*
*தாங்கி.*

***சிலவர் அழுதனர்-*** *(அனுமனைக் கண்ட அவ்வானர வீரர்களுள்) சிலர் மகிழ்ச்சியினால் அழுதார்கள்;* ***சிலவர் முன் நின்று ஆர்த்தனர் -*** *சிலர்அனுமனுக்கு முன்னாலே நின்று ஆரவாரித்தார்கள்;* ***சிலவர் அண்மி தொழுதனர் -*** *சிலர், (அனுமனை) நெருங்கி வணங்கினார்கள்;* ***சிலவர் ஆடி துள்ளினர் -*** *சிலர் குதித்துக் கூத்தாடினார்கள்;* ***சிலவர் அள்ளி முழுது உற விழுங்குவார் போல் மொய்த்தனர் -*** *சிலர் (அனுமனை) எடுத்து முழுவதும் விழுங்குபவர் போன்று (அவனை) நெருங்கிச் சூழ்ந்து கொண்டனர்;* ***சிலவர் சுற்றும் தழுவினர் -*** *சிலர் சுற்றிலும் அனுமனைஆலிங்கனஞ் செய்தார்கள்;* ***சிலவர் தாங்கிக் கொண்டு சுமந்தனர் -*** *சிலர்அனுமனைத் தாங்கித் தூக்கிச் சுமந்து கொண்டார்கள்.*

*அனுமனைக் கண்டவானர வீரர்களின் மகிழ்ச்சிச் செயல்கள் கூறப்பட்டன.*
*(4)*

*6011.* *'தேனொடு கிழங்கும் காயும் நறியன அரிதின் தேடி,*
*மேல் முறைவைத்தேம்; அண்ணல் ! நுகர்ந்தனை,*
*மெலிவு தீர்தி;*
*மான வாள் முகமேநங்கட்கு உரைத்தது மாற்றம்'*
*என்று,*

***தாம் நுகர்சாகம் எல்லாம் முறை முறை சிலவர்
தந்தார்.***

***சிலவர் -*** *சில வானரவீரர்கள்;* ***அண்ணல் மானம் வாள் முகமே நங்கட்கு மாற்றம் உரைத்தது -*** *(அனுமனை நோக்கி) பெரியோய் ! பெருமையும் ஒளியும் பொருந்திய உன் முகமே எங்களுக்கு (பிராட்டியைக் கண்ட நற்செய்தியாகிய) சொற்களைத் தெரிவித்துவிட்டது;* ***நறியன தேனொடு கிழங்கும் காயும் அரிதின் தேடி மேல் முறை வைத்தோம் -*** *(ஆதலால்) நல்ல சுவையுள்ளனவான தேனையும் கிழங்குகளையும் காய்களையும் அருமையாகத் தேடிக் கொணர்ந்து முன்னமே ஒழுங்காக வைத்துள்ளோம்;* ***நுகர்ந்தனை மெலிவு தீர்தி என்று -*** *நீ உண்டு, களைப்பைத் தீர்த்துக் கொள்வாயாக என்று சொல்லி;* ***தாம் நுகர் சாகம் எல்லாம் முறை முறை தந்தார் -*** *தாம் விரும்பி உண்ணக் கூடிய இலையுணவு முதலியவற்றை எல்லாம் ஒன்றன் பின் ஒன்றாகக் கொண்டு வந்து கொடுத்தார்கள்.* ***(5)***

*அனுமன் மேனியில் உள்ளபுண்களை நோக்கி வானரர் வருந்துதல்*

***6012. தாள்களில், மார்பில், தோளில், தலையினில், தடக்
கை தம்மில்,
வாள்களின்,வேலின், வாளி மழையினின் வகிர்ந்த
புண்கள்,
நாள்கள் மேல்உலகில் சென்ற எண் என, நம்பி
கண்ண
ஊழ் கொளநோக்கி நோக்கி, உயிர் உக, உளைந்து
உயிர்த்தார்.***

***தாள்களில்மார்பில் தோளில் தலையினில் தடக்கை தம்மில் -*** *(அவ்வானரவீரர்கள்) அனுமனுடைய பாதங்களிலும், மார்பிலும், தோள்களிலும், தலையிலும், பெரிய கைகளிலும்;* ***வாள்களின் வேலின் வாளி மழையினின் வகிர்ந்த புண்கள் -*** *அரக்கர்களான பகைவர்களுடைய வாள்களாலும், வேல்களாலும், அம்பு மழைகளாலும், பிளந்து உண்டாக்கப்பட்ட காயங்கள்;* ***உலகில் நாள்கள் மேல் சென்ற எண் என -*** *உலகத்தில் நாள்கள் மேலே கழிந்த எண்கள் போல (அளவு கடந்தனவாய்)* ***நம்பி கண்ண ஊழ் கொள நோக்கி நோக்கி -*** *அனுமனிடத்து உள்ளனவற்றை முறைமை பொருந்த ஒவ்வொன்றாகப் பார்த்துப் பார்த்து;* ***உயிர் உக உளைந்து உயிர்த்தார் -*** *தம்உயிர் சிந்திப் போகுமாறு வருந்திப் பெருமூச்சுவிட்டார். அனுமன் உடலில்உள்ள புண்கள் அளவற்றன என்பதை, 'நாள்கள் மேல் உலகில் சென்ற எண் என' என்ற தொடர் காட்டுகின்றது. எண்ணற்றவையைக் குறிக்க 'வையத்து இறந்தாரை எண்ணிக்கொண்டற்று' என்றதிருக்குறள் (22) தொடர் இங்கு ஒப்பு நோக்கத் தக்கது.*
***(6)***

*அங்கதன்முதலியோரிடம், அனுமன் சீதை கூறியஆசியைத் தெரிவித்தல்*

***6013. வாலி காதலனை முந்தை வணங்கினன்; எண்கின்
வேந்தைக்
காலுறப் பணிந்து,பின்னை, கடன்முறை,***

**கடவோர்க்கு எல்லாம்**
**ஏலுற இயற்றி,ஆங்கண் இருந்து, 'இவண்**
**இருந்தோர்க்கு எல்லாம்,**
**ஞால நாயகன்தன்தேவி சொல்லினள், நன்மை'**
**என்றான்.**

***முந்தை வாலிகாதலனை வணங்கினன்*** - *(அனுமன்) முதலில், வாலியின் மகனான அங்கதனை வணங்கி;* ***எண்கின் வேந்தை காலுறப் பணிந்து*** - *கரடிகளுக்கு அரசனான சாம்பவானை, அவன் அடிகளில் பொருந்துமாறு வணங்கி;* ***பின்னை கட வோர்க்கு எல்லாம்*** - *அதன் பிறகு, உரியவர்களுக்கு எல்லாம்;* ***கடன் முறை ஏல் உற இயற்றி*** - *செய்யத்தக்க மரியாதை முறைகளை ஏற்றபடி செய்து;* ***ஆங்கண் இருந்து*** - *அங்கு ஒரு புறத்தே அமர்ந்திருந்து;* ***இவண் இருந்தோர்க்கு எல்லாம்*** - *இங்கு உள்ளவரான உங்கள் அனைவர்க்கும்;* ***ஞால நாயகன் தன் தேவி*** - *உலகுடை நாயகனான இராமபிரானுடைய தேவியாகிய பிராட்டி;* ***நன்மை சொல்லினள் என்றான்*** - *நலந்தருவனவாகிய ஆசீர்வாதங்களைச் சொல்லி அருளினாள் என்று கூறினான்.*

*அங்கதன்இளவரசனும் படைத்தலைவனும் ஆதலால், அவனுக்கு முதல் வணக்கம். சாம்பவான் பிரம புத்திரனாதலாலும், வயதினாலும் அறிவினாலும் சிறந்தவனாதலாலும், கடல் கடந்து செல்ல அனுமனை ஊக்கப்படுத்திய சிறப்பினன் ஆதலாலும், அவனுக்கு, கால் உறப் பணிந்த வணக்கம். (சாஷ்டாங்க நமஸ்காரம்)* ***(7)***

*வானரர் விரும்பியவண்ணம், அனுமன் நடந்த செய்திகளைக் கூறுதல்*

***6014. என்றலும்,கரங்கள் கூப்பி எழுந்தனர், இறைஞ்சித்***
***தாழ்ந்து***
***நின்றனர், உவகைபொங்க விம்மலால் நிமிர்ந்த***
***நெஞ்சர், 'சென்றது முதலா,வந்தது இறுதியாச் செப்பற்பாலை,***
***வன் திறல்உரவோய் !' என்ன, சொல்லுவான்***
***மருத்தின் மைந்தன்:***

***என்றலும்*** - *என்று(அனுமன்) கூறியவுடன்;* ***எழுந்தனர்*** - *(வானர வீரர்கள் அனைவரும்) எழுந்து நின்றவர்களாய்;* ***கரங்கள் கூப்பி இறைஞ்சி தாழ்ந்து நின்றனர்*** - *தம் கைகளைக் குவித்து, வணங்கித் தாழ்ந்துநின்று;* ***உவகை பொங்க விம்மலால் நிமிர்ந்த நெஞ்சர்*** - *மகிழ்ச்சி மேலிட பூரிப்பால் நிமிர்ந்து (ஊக்கம் கொண்ட) மன முடையவர்களாய்;* ***வல் திறல் உரவோய் !*** - *(அனுமனை நோக்கி) மிக்க வலிமை உடையவனே !;* ***சென்றது முதலா வந்தது இறுதியா செப்பல் பாலை என்ன*** - *நீ இங்கிருந்து போனது முதலாக, இப்பொழுது இங்கு வந்து சேர்ந்தது முடிவாக, (நடந்ததை) இங்குச் சொல்வாயாக என்று கேட்டுக் கொள்ள;* ***மருத்தின் மைந்தன் சொல்லுவான்*** - *வாயு தேவனின் மகனான அனுமன் (பின்வருமாறு) சொல்லுவானாயினான்.* ***(8)***

***6015. ஆண்தகைதேவி உள்ளத்து அருந் தவம் அமையச்***
***சொல்லி,***

***பூண்ட பேர்அடையாளம் கைக் கொண்டதும் புகன்று,***
***போரில்***
***நீண்ட வாள்அரக்கரோடு நிகழ்ந்ததும், நெருப்புச்***
***சிந்தி***
***மீண்டதும்,விளம்பான்-தான் தன் வென்றியை***
***உரைப்ப வெள்கி.***

***ஆண்தகை -*** *ஆண்மைக்குணம் நிறைந்த அனுமன்;* ***தேவி உள்ளத்து அருந்தவம் -*** *பிராட்டியின் மனத்தில் உள்ள அரிய தவமாகிய கற்பொழுக்கத்தை;* ***அமைய சொல்லி -*** *(அவர்களுக்கு விளங்கும்படித்) தெளிவாகச் சொல்லி;* ***பூண்ட பேர் அடையாளம் கைக் கொண்டதும் புகன்று -*** *(பிராட்டி) அணிந்திருந்த (சூடாமணியாகிய) பெரிய அடையாளத்தைக் கையில் பெற்று வந்ததையும் சொல்லி;* ***தன் வென்றியை தான் உரைப்ப வெள்கி -*** *தனது வெற்றிச் சிறப்பைத் தானே சொல்ல வெட்கப்பட்டு;* ***போரில் நீண்ட வாள் அரக்கரோடு நிகழ்ந்ததும் -*** *யுத்தத்தில் நெடிய வாள்களை உடைய அரக்கர்களுடன் நடந்த செய்தியையும்;* ***நெருப்பு சிந்தி மீண்டதும் -*** *(இலங்கை முழுவதிலும்)நெருப்பைவைத்து விட்டுமீண்டு வந்த செய்தியையும்;* ***விளம்பான் -*** *சொல்லாமல் விட்டு விட்டான்.*

*தற்புகழ்ச்சிசெய்தல் மேன்மைக்கு இழுக்காம் ஆதலால், அரக்கரோடு நிகழ்ந்த போர்ச் செய்தியையும், இலங்கையில் நெருப்பு வைத்ததையும் அனுமன் சொல்லவில்லை.* ***(9)***

*பிறவற்றைக்குறிப்பால் உணர்ந்த வானர வீரர் வினவுதல்*

***6016. 'பொருதமை புண்ணே சொல்ல, வென்றமை போந்த***
***தன்மை***
***உரைசெய, ஊர் தீஇட்டது ஓங்கு இரும் புகையே***
***ஓத,***
***கருதலர் பெருமைதேவி மீண்டிலாச் செயலே காட்ட,***
***தெரிதரஉணர்ந்தேம்; பின்னர், என் இனிச்***
***செய்தும் ?' என்றார்.***

***பொருதமை புண்ணேசொல்ல -*** *(வானர வீரர்கள்அனுமனை நோக்கி,நீ சொல்லாவிட்டாலும்) நீ அங்குப் போர் புரிந்ததை உன் உடம்பில் உள்ளகாயங்களே தெரிவிக்கவும்;* ***வென்றமை போந்த தன்மை உரை செய -*** *நீபகைவரை வென்ற தன்மையை நீ இங்கு திரும்பி வந்த நிலையே சொல்லவும்;* ***ஊர் தீ இட்டது ஓங்கு இரும்புகையே ஓத -*** *இலங்கை நகரில் நீ நெருப்புவைத்ததை உயர்ந்து ஓங்கிய பெரிய புகையே அறிவிக்கவும்;* ***கருதலர்பெருமை -*** *அப் பகைவர்களது வலிமை முதலிய சிறப்புகளை;* ***தேவிமீண்டிலா செயலே காட்ட -*** *பிராட்டி உன்னோடு திரும்பி வராத செயலேஎடுத்துக்காட்டவும்;* ***தெரிதர உணர்ந்தோம் -*** *தெளிவாக அறிந்து கொண்டோம்;* ***பின்னர் இனி என் செய்தும் என்றார் -*** *இனிமேல், என்ன செய்யக் கடவோம் என்று வினாவினார்கள். வானர வீரர்உணர்ந்த வகை அனுமான அளவை எனப்படும் - அனுமானம் - காரியத்ததால் காரணம் அறிதல். கருதலர் - நன்மையை எண்ணாதவர்.* ***(10)***

*அனைவரும்இராமபிரானைக்காண விரைதல்*

***6017. 'யாவதும், இனி, வேறு எண்ணல் வேண்டுவது***
***இறையும் இல்லை;***
***சேவகன்தேவிதன்னைக் கண்டமை விரைவின்***
***செப்பி, ஆவது, அவ் அண்ணல் உள்ளத்து அருந் துயர்***
***ஆற்றலே ஆம்;***
***போவது புலமை' என்னா, பொருக்கென எழுந்து***
***போனார்.***

**இனி வேறு எண்ணல்வேண்டுவது யாவதும் இறையும் இல்லை -** *இனிமேல்,வேறு எண்ணிப் பார்க்க வேண்டியது, எதுவும் சிறிதும் இல்லை;* **ஆவது சேவகன் தேவிதன்னை கண்டமை விரைவின் செப்பி -** *இனி நாம் செய்யத்தக்கது மகாவீரனான இராமபிரானுடைய மனைவியாகிய சீதையைப் பார்த்ததை விரைவில் சென்று சொல்லி;* **அவ் அண்ணல் -** *அந்த இராமபிரானது,;* **உள்ளத்து அருந்துயர் ஆற்றலே ஆம் -** *மனத்தில் உள்ள, போக்குதற்கு அரிய துன்பத்தைத் தணியச் செய்தலே ஆகும்;* **போவதே புலமை என்னா -** *(அதற்காக இனி இராமபிரானிடம்) செல்வதே அறிவுள்ள செயலாகும் என்று அனைவரும் ஒருமித்த கருத்தினராய்க் கூறி;* **பொருக் கென எழுந்து போனார் -** *விரைவில் எழுந்து சென்றனர்.*

*இது, எல்லா வானரவீரரும் ஒரு சேரத் தீர்மானித்துச் சென்ற செயலைக் கூறுவதாகும். பொருக்கென விரைவுக் குறிப்பு.* ***(11)***

*வானர வீரரின்உரைப்படி, அனுமன் இராமனிடம்முந்திச் செல்லுதல்.*

***6018. 'ஏத நாள்இறந்த; சால வருந்தினது இருந்த சேனை;***
***ஆதலால்விரைவின் செல்லல் ஆவதுஅன்று; அளியம்***
***எம்மைச்***
***சாதல் தீர்த்துஅளித்த வீர ! தலைமகன் மெலிவு தீரப்***
***போது நீமுன்னர்' என்றார்; 'நன்று' என அனுமன்***
***போனான்.***

**அளியம் எம்மைசாதல் தீர்த்து அளித்த வீர ! -** *உம்மால் அன்பு செய்யத்தக்கவராகிய எங்களை இறந்து போதலினின்றும் நீக்கிக் காத்தருளிய பெரிய வீரனே !;* **ஏத நாள் -** *பிராட்டியைத் தேடி வரும் காரணமாய்க் குறிப்பிட்ட நாட்கள்;* **இறந்த -** *கடந்து போயின;* **இருந்த சேனை சால வருந்தினது -** *உம் வரவை எதிர் நோக்கி இங்கு தங்கியிருந்த சேனை, மிகவும் துயரம் மேற் கொண்டது;* **விரைவின் செல்லல் ஆவது அன்று ஆதலால் -***வேகமாகச் செல்லும்வலிமை உடையது அல்ல ! ஆகையால்;* **தலைமகன் மெலிவு தீர நீ முன்னர் போது என்றார் -** *தலைவனான இராமபிரானது துன்பம் நீங்க, நீ முன்னதாக, அப்பெருமானிடம் போவாயாக என்று வானர வீரர் கூறினார்கள்;* **நன்று என அனுமன் போனான் -** *'நல்லது' என்று சொல்லிவிட்டு இராமபிரான் இருக்கும் இடம் நோக்கி அனுமன் சென்றான்.*

*ஏத நாள் -பிராட்டியைத் தேடி வரும் காரணமாகக் குறிக்கப்பட்ட நாள்; அது ஒரு மாதத் தவணை; 'ஒரு மதி முற்றுறாத முன் முற்றுதிர்' (கம்ப. 4457) குறிப்பிட்ட நாள் கடந்தமையால், தமது அரசன் சுக்கிரீவன் தண்டிப்பானே என்பது, சேனையின் வருத்தம். சாதல் தீர்த்து அளித்தல் - சேனை சாகத் துணிந்தது. 'மாண்டுறுவது நலம் என வலித் தனம்'. (கம்ப. 4658) அனுமன், இராமபிரானிடம் விரைவில் செல்ல வேண்டியதைக் காரணத்துடன் வானர வீரர்கள் கூறியதைத் தெரிவிப்பது இது.*
***(12)***

***6019. முத் தலைஎஃகினாற்கும் முடிப்ப அருங் கருமம்***
***முற்றி,***
***வித்தகத் தூதன்மீண்டது இறுதியாய் விளைந்த***
***தன்மை,***
***அத் தலை அறிந்தஎல்லாம் அறைந்தனம்;***
***ஆழியான்மாட்டு***
***இத் தலைநிகழ்ந்த எல்லாம் இயம்புவான் எடுத்துக்***
***கொண்டாம்.***

***வித்தகத் தூதன்-** சதுரப்பாடுடைய தூதனாகிய அனுமன்; **முத்தலை எஃகினாற்கும் -** மூன்று தலைகளை உடைய சூலாயுதம் ஏந்திய சிவபிரானுக்கும்; **முடிப்ப அரும் கருமம் முற்றி -** செய்து முடிப்பதற்கு அருமையான காரியத்தை நிறைவேற்றி; **மீண்டது இறுதியாய் -** திரும்பி வந்தது முடிவாக; **அத்தலை விளைந்த தன்மை அறிந்த எல்லாம் அறைந்தனம் -** அங்கு நிகழ்ந்த செயல்களை தெரிந்த வரையிலும், சொன்னோம்; **இத்தலை ஆழியான் மாட்டு நிகழ்ந்த எல்லாம் -** இனி, இவ்விடத்தில் (கிட்கிந்தையில்) இராமபிரானிடத்தில் நடந்தனவற்றை எல்லாம்; **இயம்புவான் எடுத்துக் கொண்டாம் -** சொல்வதற்குத் தொடங்கினோம்.*

*இக்கவிதை,கவிக் கூற்று, முத்தலை எஃகினாற்கும் முடிப்பரும் கருமம்:- இலங்கையை எரியூட்டுதல். செயற்கரும் காரியம் செய்தமையால் அனுமன்வித்தகத்தூதன் எனப்பட்டான். வித்தகம் - திறமை. (சதுரப்பாடு)*
***(13)***

*சுக்கிரீவன்தேற்ற, இராமன் தேறுதல்*

**கலிவிருத்தம்**

***6020. கார் வரை இருந்தனன் கதிரின் காதலன்,***
***சீரிய சொற்களால் தெருட்ட, செங் கணான்***
***ஆர் உயிர் ஆயிரம் உடையன் ஆம் எனா,***
***சோர்தொறும் சோர்தொறும், உயிர்த்துத்***
***தோன்றினான்.***

***செங்கணான்சோர்தொறும் சோர்தொறும் -** சிவந்த கண்களை உடையவனான இராமபிரான் (பிராட்டியின் பிரிவாற்றாமையால்) உயிர் நீங்கினான் போன்று மூர்ச்சிக்கும் போதெல்லாம்; **கார் வரை இருந்தனன் கதிரின் காதலன் -** மேகம்*

*தங்கியுள்ள மலையில் இருந்தவனாகிய சூரியன் மகனான சுக்கிரீவன்;* ***சீரிய மொழிகளால் தெருட்ட -*** *சிறந்த மொழிகளைக் கூறித் தேற்ற, (அதனால்);* ***ஆயிரம் ஆர் உயிர் உடையன் ஆம் என -*** *(இராமபிரான்) பல அரிய உயிர்களை உடையவன் போல;* ***உயிர்த்து தோன்றினான் -*** *ஓய்ந்து மீண்டும் உயிர் பெற்றவன் போல (பலமுறை) மூச்சு விட்டுக் காணப் பெற்றான்.*

*பிராட்டியின்பிரிவுத் துயரம் வாட்டுதலினால், மூர்ச்சித்து உயிர் சோர்ந்த இராமபிரானை, சுக்கிரீவன், தனது நல்ல சொற்களால் தெளிவித்தான். அதனால் இராமபிரான் உயிர்த்துத் தோன்றினான் என்பதாம். இராமபிரான், உயிர் அடங்கியும், மீண்டு வந்தும், பலமுறை நிகழப் பெற்றவனாதலால், 'ஆர் உயிர் ஆயிரம் உடையன் ஆம்' எனப்பட்டான்.* ***(14)***

### *6021. 'தண்டல்இல் நெடுந் திசை மூன்றும் தாயினர், கண்டிலர்மடந்தையை' என்னும் கட்டுரை, உண்டு உயிர்அகத்து என ஒறுக்கவும், உளன், திண் திறல்அனுமனை நினையும் சிந்தையான்.*

***தண்டல் இல்நெடுந்திசை மூன்றும் தாயினர் -*** *தடையில்லாது, (வடக்கு, கிழக்கு மேற்கு என்ற) பெரிய மூன்று திசைகளிலும் தாவிச் சென்றவர்கள்;* ***மடந்தையைக் கண்டிலர்என்னும் கட்டுரை -*** *பிராட்டியைக் கண்டார் இல்லை என்று கூறிய உறுதிச் சொல்;* ***அகத்து உயிர் உண்டு என ஒறுக்கவும் -*** *தன்னுள் உயிர் இருக்கின்றது என்னும் நிலையில், தன்னை வருத்தவும்;* ***திண் திறல் அனுமனை நினையும் சிந்தையான் உளன் -*** *மிக்க வலிமை வாய்ந்த அனுமனை எண்ணுகின்ற மனத்தினான இராமபிரான், உயிர் உள்ளவன் என்ற நிலையில் இருந்தான்.*

*தென் திசை தவிரமற்றைய மூன்று திசைகளுக்கும் சென்றவர்கள் பிராட்டியைக் காணாதவர்களாக வந்தனர் என்ற சொல், வருத்தவும், இராமபிரான் உயிர் உளனாயிருந்தது, அனுமன் பிராட்டியைக் கண்டு வருவான் என்ற நம்பிக்கையால் தான். 'திண் திறல் அனுமனை நினையும் சிந்தையால், உயிர் உளன்' என்றும் பொருள் கொள்ளலாம்.* ***(15)***

### *6022. ஆரியன்,அருந் துயர்க் கடலுள் ஆழ்பவன், 'சீரியது அன்றுநம் செய்கை; தீர்வு அரும் மூரி வெம்பழியொடும் முடிந்ததாம்' என, சூரியன் புதல்வனைநோக்கிச் சொல்லுவான்;*

***ஆரியன் அரும்துயர்க் கடலுள் ஆழ்பவன் -*** *பெருமைக்குரியவனான இராமபிரான், அரிய துன்பமாகிய கடலுள் மூழ்குபவனாய்;* ***சூரியன் புதல்வனை நோக்கி -*** *சூரியனின் மகனாகிய சுக்கிரீவனைப் பார்த்து;* ***நம் செய்கை சீரியது அன்று -*** *நாம் மேற்கொண்ட காரியம் பயன்பட்டதாக அமையவில்லை;* ***தீர்வு அரும் மூரி வெம் பழி யொடும் முடிந்தது ஆம் என சொல்லுவான் -*** *தீராத பெரிய பழிச் சொல்லோடும் முடிந்ததாகும் என்று, பின்வருமாறு எடுத்துக் கூறுபவனானான்.*

*நம் செய்கை;இதுவரை பிராட்டியைத் தேட எடுத்துக் கொண்ட முயற்சி. மூரி வெம்பழி; தன் மனையாளை, தீயோன் ஒருவன் எடுத்துச் செல்ல, இராமன் அவளை மீட்கும் ஆற்றல் அற்றவனானான் என்று உலகத்தார் கூறுவது. இந்தக் கவியில் தொகுத்துக் காட்டப்பட்ட செய்கை. பழி ஆகியவைகள் அடுத்த நான்கு கவிகளில் வகுத்துக் காட்டப்படுகின்றன.* ***(16)***

*சுக்கிரீவனைநோக்கி இராமபிரான் துயருடன் பேசுதல்*

***6023. 'குறித்த நாள் இகந்தன குன்ற, தென் திசை***
***வெறிக் கருங்குழலியை நாடல் மேயினார்***

***மறித்து இவண்வந்திலர்; மாண்டுளார்கொலோ ?***
***பிறித்துஅவர்க்கு உற்றுளது என்னை ?-***
***பெற்றியோய் !'***

***பெற்றியோய் -*** *நற்பண்புடையவனே !;* ***வெறிகரும் குழலியை தென் திசை நாடல் மேயினார் -*** *நறு மணம் உள்ள கரிய கூந்தலை உடைய சீதையை தெற்குத் திசையில் தேடுதலை மேற்கொண்டு சென்ற அனுமன் முதலிய வானர வீரர்கள்;* ***குறித்த நாள் இகந்தன குன்ற -*** *நாம் குறிப்பிட்டுக் கூறிய தவணை நாட்கள் கடந்தன; நாள் கடந்து தேயவும்;* ***இவண்மறித்து வந்திலர் -*** *இங்கு திரும்பி வந்தாரல்லர்;* ***அவர்க்கு -*** *தேடச் சென்ற அவ்வானர வீரர்க்கு;* ***பிறிது உற்றுளது என்னை ? -*** *வேறு என்ன நேர்ந்துள்ளது ?;* ***மாண்டுளார் கொலோ ? -*** *இறந்து போயினார்களோ ?*

*குறித்தகாலத்துக்குள், தென் திசை சென்றவர்கள் வராததனால்; மாண்டுவிட்டனரோ என்று ஐயமுறுகின்றான் இராமபிரான். 'பிறிது' என்பது எதுகை நோக்கி பிறித்து என நின்றது; செய்யுள் விகாரம்.* ***(17)***

***6024. 'மாண்டனள்அவள்; "இவள் மாண்ட வார்த்தையை***
***மீண்டு அவர்க்குஉரைத்தலின், விளிதல் நன்று"***
***எனா,***
***பூண்டது ஓர் துயர்கொடு பொன்றினார்கொலோ ?***
***தேண்டினர்,இன்னமும் திரிகின்றார்கொலோ ?***

***அவள் மாண்டனள்-*** *(அதுவன்றி) அச்சீதை இறந்து விட்டாள்;* ***இவள் மாண்ட வார்த்தையை மீண்டு அவர்க்கு உரைத்தலின் -*** *'இந்த சீதா பிராட்டி இறந்த செய்தியைத் திரும்பிச் சென்று அந்த இராமபிரான் முதலியவர்களுக்குச் சொல்லுவதிலும்;* ***விளிதல் நன்று எனா -*** *நாம் இறந்து போதலே நல்லது' என்று எண்ணி;* ***பூண்டது ஓர் துயர் கொடு பொன்றினார் கொலோ? -*** *மேற்கொண்டதொரு துன்பத்தினால் (அவ்வனுமன் முதலானோர்) இறந்தார்களோ ?;* ***இன்னமும் தேண்டினர் திரிகின்றார்களோ ? -*** *(அன்றி) இன்னும், தேடினவர்களாய் வேறுபல இடங்களிலும் அலைகின்றார்களோ ?.*

*இராமபிரான்ஐயப்பாடு, மேலும் நீளுகின்றது.* ***(18)***

***6025. 'கண்டனர்அரக்கரை, கறுவு கைம்மிக,***
***மண்டு அமர்தொடங்கினார், வஞ்சர் மாயையால்***
***விண்தலம்அதனில் மேயினர்கொல்? வேறு இலாத்***
***தண்டல் இல்நெடுஞ் சிறைத் தளைப்***
***பட்டார்கொலோ?***

***அரக்கரைக்கண்டனர்*** - *(சீதையை எடுத்துச்சென்ற இராவணன் முதலிய) அரக்கர்களைப் பார்த்து;* **கறுவு கைம்மிக மண்டு அமர் தொடங்கினார்** - கோபம் *அதிகரிக்க, மிகுதியான போரைச் செய்யத் தொடங்கி;* **வஞ்சர் மாயையால் விண்தலம் அதனில் மேயினார் கொல்?** - வஞ்சகச் செயலுடைய அவ்வரக்கர்களின் மாயச் செயலால் (இறந்து) வீரசுவர்க்கத்தில் சென்று சேர்ந்தார்களோ?; **தண்டல் இல் நெடுஞ் சிறை தளைப்பட்டார் கொலோ?** - *(எக்காலத்திலும்)* நீங்குதல் இல்லாத பெரிய சிறையில் கட்டுப்பட்டார்களோ?

*ஓ: அசை.* **(19)**

***6026. ' "கூறின நாள், அவர் இருக்கை கூடலம்;***
***ஏறல் அஞ்சுதும்"என, இன்ப துன்பங்கள்***
***ஆறினர், அருந்தவம் அயர்கின்றார்கொலோ?***
***வேறு அவர்க்குஉற்றது என்? விளம்புவாய்!'***
***என்றான்.***

***கூறின நாள் அவர்இருக்கை கூடலம்*** - *(நமக்குத் தவணையாகக் குறிப்பிட்டுச்) சொன்ன நாட்களுள் இராமன் முதலியோர் இருப்பிடத்தைச் சேர்ந்தோமில்லை;* **ஏறல் அஞ்சுதும் என** - இனி அங்கு சென்று சேரும் செயலுக்குப் பயப்படுகின்றோம் என்று தீர்மானித்து; **இன்ப துன்பங்கள் ஆறினர்** - இன்ப துன்ப உணர்ச்சிகளினின்றும் நீங்கியவர்களாய்; **அருந்தவம் அயர்கின்றார் கொலோ** - அரிய தவத்தில் ஈடுபட்டு மற்றவற்றை மறந்தார்களோ?; **அவர்க்கு வேறு உற்றது என்?** - அந்த வீரர்களுக்கு வேறே நேர்ந்தது யாதோ?; **விளம்புவாய் என்றான்** - 'சொல்வாயாக' என்று (இராமபிரான் சுக்கிரீவனைப்) பார்த்துக் கேட்டான்.

*குறித்த காலம் கடந்ததனால், மீண்டும் இராமன் இருக்கும் இடத்துக்கு வருதற்கு அஞ்சி, வானர வீரர்கள் தவத்தை மேற்கொண்டனரோ என்பதும் இராமபிரான் உள்ளத் தெழுந்த ஒரு ஐயம் ஆகும்.* **(20)** *அனுமன்,இராமனுக்குச் சீதையின் நிலையைக்குறிப்பால் உணர்த்துதல்*

***6027. என்புழி,அனுமனும், இரவி என்பவன்***
***தென் புறத்துஉளன் எனத் தெரிவது ஆயினான்;***
***பொன் பொழி தடக் கை அப் பொரு இல் வீரனும்,***
***அன்புறுசிந்தையன், அமைய நோக்கினான்.***

***என் புழி*** - என்று(இவ்வாறு இராமபிரான் சுக்கிரீவனை நோக்கி) வினாவிய *காலத்தில்;* **அனுமனும் -; இரவி என்பவன் தென் புறத்து உளன் என தெரிவது ஆயினான்** - சூரியன் தெற்குத் திசையில் தோன்றியுள்ளான் போல (அவர் கண்களில்)

*காணப்பட்டான்;* ***பொன் பொழி தட கை அ பொரு இல் வீரனும் -*** *அழகு ததும்பி வழியும் பெரிய கைகளை உடைய ஒப்பற்ற வீரனான அந்த இராமபிரானும்;* ***அன்புறு சிந்தையன் அமைய நோக்கினான் -*** *அன்பு மிக்க மனத்தை உடையவனாய் நன்றாகப் பார்த்தான்.*

*அனுமனைச்சூரியனாகவும், அவன் தென் திசையிலிருந்து வருவதால், சூரியன் தெற்கிலிருந்துவருவதாகவும் கூறப்பெற்றது. கிழக்கிலிருந்து வரவேண்டியசூரியன், இப்போது தெற்குத் திக்கிலிருந்து வருகின்றான் என்று நயம் படக்கூறப்பட்டது.* ***(21)***

***6028. எய்தினன்அனுமனும்; எய்தி, ஏந்தல்தன்***
***மொய் கழல்தொழுகிலன்; முளரி நீங்கிய***
***தையலை நோக்கியதலையன், கையினன்,***
***வையகம் தழீஇநெடிது இறைஞ்சி, வாழ்த்தினான்.***

***அனுமனும்எய்தினன் -*** *அனுமனும் அவ்விடத்தைஅடைந்தான்;* ***எய்தி ஏந்தல் தன் மொய் கழல் தொழுகிலன் -*** *வந்து சேர்ந்து பெருமையிற் சிறந்தவனான இராமபிரானது வலிய கழல் அணிந்த திருவடிகளை வணங்காதவனாய்;* ***முளரி நீங்கிய தையலை நோக்கிய -*** *தாமரை மலரை விட்டு நீங்கி (பூமியில் அவதரித்த) திருமகளாகிய பிராட்டியை, அவள் இருக்கும் தென் திசை நோக்கிய;* ***தலையன் கையினன் -*** *தலையையும் கைகளையும் உடையவனாய் (த்திரும்பி);* ***வையகம் தழீஇ நெடிது இறைஞ்சி வாழ்த்தினான் -*** *நிலத்தைத் தழுவியது போன்று படிந்து நீட்சியாக நிலத்தில் கிடந்தபடியே வணங்கி, பிராட்டியை வாழ்த்தினான். சீதா பிராட்டிகற்புத் திண்மையுடன் இலங்கையில் இருக்கின்றாள் என்ற உண்மையை, இராமபிரான் முதலில் அறிந்து கொள்வதற்காக, அனுமன் தென் திசை நோக்கி வணங்கி, வாழ்த்தினான் என்க. மொய் - வலிமை; சீதை, திருமகளின் அவதாரம் என்பதை முளரி நீங்கிய தையல்' என்ற தொடர் காட்டுகின்றது.* ***(22)***

*செய்தி உணர்ந்தஇராமபிரான் மகிழ்தல்*

***6029. திண்திறல் அவன் செயல் தெரிய நோக்கினான்;***
***'வண்டு உறைஓதியும் வலியள்; மற்று இவன்***
***கண்டதும் உண்டு;அவள் கற்பும் நன்று' எனக்***
***கொண்டனன்,குறிப்பினால் உணரும்***
***கொள்கையான்.***

***குறிப்பினால்உணரும் கொள்கையான் -*** *அவயவங்களின்குறிப்பைக் கொண்டு நடந்ததை நன்கு உணர்ந்து கொள்ளும் நுண்ணறிவினனான இராமபிரான்;* ***திண் திறல் அவன் செயல் தெரிய நோக்கினான் -*** *மிக்க வலிமை உடைய அந்த அனுமனது செய்கையை நன்றாகப் பார்த்து அறிந்து;* ***வண்டு உறை ஓதியும் வலியள் -*** *வண்டுகள் தங்கும் கூந்தலை உடைய பிராட்டியும் நன்னிலையில் உறுதியுடன் இருக்கின்றாள்;* ***இவன் கண்டதும் உண்டு -*** *இவ்வனுமன் அவளை நேரில் பார்த்து வந்ததும் உண்டு;* ***அவள் கற்பும் நன்று என கொண்டனன் -*** *அவளது கற்பும் சிறப்புடையதாயிருக்கின்றது என்று ஊகித்துக் கொண்டான். அனுமன் தென் திசைநோக்கித் தொழுத*

*செய்கையிலிருந்து, இராமபிரான்உணர்ந்து கொண்ட பிராட்டியின் நிலை பற்றிப் பேசப்பட்டது என்க.* ***(23)***

***6030. ஆங்கு அவன்செய்கையே அளவை ஆம் எனா,***
***ஓங்கியஉணர்வினால், விளைந்தது உன்னினான்;***
***வீங்கின தோள்;மலர்க் கண்கள் விம்மின;***
***நீங்கியது அருந்துயர்; காதல் நீண்டதே.***

***ஆங்கு அவன்செய்கையே -*** *(இராமபிரான்)அவ்விடத்தில் அனுமன் செய்த குறிப்பான செயலே;* ***அளவை ஆம் எனா -*** *பிராட்டியின் நன்னிலையை அறிந்து கொள்வதற்கு அளவு கருவியாகும் என்று;* ***ஓங்கிய உணர்வினால் விளைந்தது உன்னினான் -*** *சிறந்த (தனது குறிப்பறியவல்ல) அறிவினால் அங்கு நடந்த செய்திகளைநுட்பமாய் அறிந்து கொண்டான்;* ***தோள் வீங்கின -*** *அந்த மகிழ்ச்சியினால், பெருமானது தோள்கள் பூரித்தன;* ***மலர்க்கண்கள் விம்மின -*** *தாமரை மலர் போன்ற கண்கள் ஆனந்த நீர் பெருகப் பெற்றன;* ***அருந்துயர் நீங்கியது -*** *அவனது நீங்குதற்கு அருமையான துன்பமும்நீங்கிற்று;* ***காதல் நீண்டது -*** *பிராட்டிபால் கொண்ட அன்பும் வளர்வதாயிற்று.* ***(24)***

*பிராட்டியைக்கண்டதை அனுமன் இராமபிரானிடம் கூறுதல்*

***6031. 'கண்டனென், கற்பினுக்கு அணியை, கண்களால்,***
***தெண் திரை அலைகடல் இலங்கைத் தென் நகர்;***
***அண்டர் நாயக !இனி, துறத்தி, ஐயமும்***
***பண்டு உள துயரும்'என்று, அனுமன் பன்னுவான்;***

***அனுமன், அண்டர்நாயக -*** *அனுமன் (இராமபிரானை நோக்கி) தேவர்களுக்குத் தலைவனே!;* ***தெண் திரை அலைகடல் இலங்கை தென் நகர் -*** *தெளிவானவும் சுருளும் இயல்புடையனவுமான அலைகளோடு கூடிய கடல் சூழ்ந்த இலங்கை என்ற சொல்லப் படுகின்ற தெற்கில் உள்ள நகரத்தில்;* ***கற்பினுக்கு அணியை கண்களால் கண்டனென் -*** *கற்பிற்கு ஒரு ஆபரணம் போன்ற பிராட்டியை, என் கண்களாலேயே பார்த்தேன்;* ***இனி ஐயமும் பண்டு உள துயரும் துறத்தி -*** *இனிமேல், (பிராட்டி கற்புடையளோ, இலளோ) என்ற சந்தேகத்தையும், இதுகாறும் கொண்டுள்ள துன்பங்களையும் நீக்குவாயாக';* ***என்று பன்னுவான் -*** *என்று தொகுத்துச் சொல்லி, மேலும் விரித்துக் கூறுவானானான்.*

*அனுமன், தான்பிராட்டியைக் கண்டதையும், அவன் கற்பின் சிறப்பையும், பிராட்டியிருக்கும் இடத்தையும் இராமபிரானுக்குக் கூறினான் என்பதாம். இக்கவிதையில் உள்ள ஒவ்வொரு சொற்களும், உணரும் தொறும் உணரும் தொறும் கற்பார்க்கு இன்பம் பயப்பனவாகும். 'கண்டனென்' என்ற சொல், 'த்ருஷ்டா ஸீதா' என்ற முதல் நூல் தொடரைத் தழுவியது. ஆனால், அடுத்துள்ள கற்பினுக்கு அணியை என்ற தொடர், 'ஸீதா' என்ற சொல்லைக் காட்டிலும் ஆழ்ந்த, சிறந்த, நுணுக்கமான பொருளை உடையதாகும். 'கண்டனென்' என்ற வினைச்சொல்லே கண்ணால் என்றும் கருவியைத் தரும் ஆதலின், 'கண்களால்' என்பதைச் சீதையின் கண்களால் என்று கொண்டுபொருள் செய்து. மேனிமுழுவதும் இளைத்து இருந்தமையால் இராமன் கூறிய அடையாளங்களைக் கொண்டு சீதையை அறிய இயலவில்லை. உள்ளம்*

*காட்டும் கண்களால், அவன் கண்களில் நீ உள்ளமையால் அவளைச் சீதை என்று அறிந்தேன் எனப் பொருள் உரைப்பது சிறந்தது.* ***(25)***

**அறுசீர் ஆசிரியவிருத்தம்**

***6032. 'உன் பெருந் தேவி என்னும் உரிமைக்கும், உன்னைப் பெற்ற***
***மன் பெரு மருகிஎன்னும் வாய்மைக்கும், மிதிலை மன்னன்-***
***தன் பெருந் தனயைஎன்னும் தகைமைக்கும், தலைமை சான்றாள்-***
***என் பெருந்தெய்வம் ! ஐயா ! இன்னமும் கேட்டி' என்பான்;***

***ஐயா -*** *ஐயனே !;* ***என்பெருந் தெய்வம் -*** *எனது சிறந்த தெய்வமாகியபிராட்டி;* **உன் பெருந் தேவி என்னும் உரிமைக்கும் -** *உனது சிறந்தமனைவி என்ற தகுதிக்கும்;* **உன்னைப் பெற்ற மன் பெருமருகி என்னும்வாய்மைக்கும் -** *உன்னை மகனாகப் பெற்ற அரசரான தசரத சக்கரவர்த்தியின் சிறந்த மருமகள் என்னும் சிறப்புக்கும்;* **மிதிலை மன்னன் தன் பெருந்தனயை என்னும் தகைமைக்கும் -** *மிதிலை நகரத்து அரசனாகிய சனகனுடைய சிறந்தமகள் என்ற குணச்சிறப்புக்கும்;* **தலைமை சான்றாள் -** *தலைமை உள்ளாதற்கு ஏற்பச் சால்புடையாள்;* **இன்னமும் கேட்டி என்பான் -** *இன்னும் நான் சொல்வதைக் கேட்பாயாக என்று மேலும் கூறுவானானான்.*

*நன்மகள்ஒருத்தி, தேவி, மருகி, தனயை என்ற முறைமைப் பெயருக்கு உரியவளாயிருப்பாள். ஆனால், பிராட்டியோ, அம்முறைமைப் பெயர்கள், தன் மூலம் சிறப்படையும் நிலைமைக்குத் தலைமை சான்றவளாயிருக்கின்றாள். பிராட்டி, ஏற்கனவே, தேவி, மருகி, தனயை என்ற அளவில், தம் கணவனாருக்கும், மாமனாருக்கும் தந்தையாருக்கும் சிறப்பு அளிக்கும் நிலையில், உயர்ந்த வாழ்வினளாகத் தான் நடந்து கொண்டிருந்தாள். அது இப்போது வெளிப்படுவது சிறைவாழ்வில். 'பிறருக்கு, உறவு முறையால் பெருமை சேர்த்த பிராட்டி, எனக்குப் பெருந்தெய்வமாகக் காட்சி கொடுத்தாள் என்று அனுமன் தெளிவாகக் கூறினான் என்க.* ***(26)***

***6033. 'பொன் அலது இல்லை பொன்னை ஒப்பு என, பொறையில் நின்றாள்,***
***தன் அலதுஇல்லைத் தன்னை ஒப்பு என; தனக்கு வந்த***
***நின் அலதுஇல்லை நின்னை ஒப்பு என, நினக்கு நேர்ந்தாள்;***
***என் அலது இல்லைஎன்னை ஒப்பு என, எனக்கும் ஈந்தாள்.***

***பொன்னை ஒப்புபொன் இலது இல்லை -*** *பொன்னை ஒத்திருக்கும் பொருள், பொன்னே அல்லது வேறு ஒன்றும் இல்லை;* ***என -*** *அதுபோல;* ***தன்னை ஒப்பு தன் அலது இல்லை -*** *தன்னை ஒத்திருப்பவள் தான் அல்லது வேறு ஒருத்தியில்லை;* ***என, பொறையில் நின்றாள் -*** *என்ற உலகத்தார் சொல்லும் வண்ணம் பொறுமைக் குணத்தில் தலை சிறந்து நின்றாள்;* ***தனக்கு வந்த நின் அலது நின்னை ஒப்பு இல்லை என நினக்கு நேர்ந்தாள் -*** *தனக்குக் கணவனாக வாய்த்த உன்னை அல்லாமல், உனக்கு ஒத்திருப்பவர் வேறு ஒருவரும் இல்லை என்ற புகழை உனக்குக் கொடுத்தாள்;* ***என்னை ஒப்பு என் அலது இல்லை என, எனக்கும் ஈந்தாள் -*** *என்னை ஒப்பவன் என்னை அல்லது வேறு ஒருவனும் இல்லை என்ற பெருமையை எளியேனாகிய எனக்கும் அளித்துள்ளாள்.*

*நின்றாள்,நேர்ந்தாள், ஈந்தாள் என்ற செயல்களின் மூலம் பிராட்டியின் பெருமையை அனுமன் உணர்த்தினான். பிராட்டியின் பொறுமைக் குணத்துக்கு, பொன் உவமை. பொன், தீயினால் உருக்கப்பட்டும், பின்பு தட்டப்பட்டும், சுடர் விட்டு ஒளிர்வதோடு, பிறர்க்கு அழகு தரும் ஆபரணமாகவும் இருந்து உதவுகிறது. அது போல், பிராட்டி இலங்கைச் சிறையில் துன்புற்றாலும், தானும் கற்புச் சிறப்பு விளங்குவதோடு, இராமபிரான், அனுமன் ஆகியோருக்கும் பெருமை நல்கி உள்ளான். 'பொறையின் நின்றாள்' என்பதை எழுவாயாகவும் கொள்ளலாம்.* ***(27)***

***6034. 'உன் குலம்உன்னது ஆக்கி, உயர் புகழ்க்கு ஒருத்தி ஆய***
***தன் குலம் தன்னதுஆக்கி, தன்னை இத் தனிமை செய்தான்***
***வன் குலம்கூற்றுக்கு ஈந்து, வானவர் குலத்தை வாழ்வித்து,***
***என்குலம்எனக்குத் தந்தாள்; என் இனிச் செய்வது, எம் மோய் ?***

***எம் மோய் -*** *எமதுதாயாகிய பிராட்டி;* ***உன்குலம் உன்னது ஆக்கி -*** *உனது குலம், உன்னால் சிறப்புள்ளதாகி உன் பெயரால் நிலை பெறுமாறு செய்து;* ***உயர் புகழ்க்கு ஒருத்தி ஆய தன் குலம் தன்னது ஆக்கி -*** *உயர்ந்த புகழுக்கு (தன்னை ஒப்பவர் இல்லாமல்) ஒருத்தியாய் நின்ற தான் பிறந்த (சனகர்) குலத்தைத் தன் பெயரால் விளங்குமாறு செய்து;* ***தன்னை இத்தனிமை செய்தான் வன்குலம் கூற்றுக்கு ஈந்து -*** *தன்னை (உன்னைவிட்டுப் பிரிந்து) இவ்வாறு தனித்திருக்கும்படிச் செய்த இராவணனது கொடிய அரக்கர் குலத்தை யமனுக்குக் கொடுத்து;* ***வானவர் குலத்தை வாழ்வித்து -*** *தேவர்களது குலத்தை வாழச் செய்து;* ***என் குலம் எனக்குத் தந்தாள் -*** *எனது வானர குலத்தை, அனுமன் குலம் என்று உலகம் கொண்டாடும் பெருமையை எனக்குக் கொடுத்தாள்;* ***இனி செய்வது என் ? -*** *அப் பிராட்டி, இனிமேலும் செய்யக் கூடிய சிறப்புச் செயல் யாது இருக்கிறது.*

*ஒரு குலத்தின்பெருமை, அக் குலத்தில் பிறந்த பெண்களிடத்தில் அடங்கியிருக்கின்றது. ஆனால், பிராட்டியோ, பிறந்த குலம், புக்க குலம், வானவர் குலம், வானரர் குலம் அத்தனையையும் பெருமைப் படுத்தி விட்டாள் என்பது பாடலின் கருத்து. இனி, அரக்கர் குலம், அழிவதும், வானவர்குலம் வாழ்வதும், தன் குலம் உலகின் பெருமை பெறுவதும், பிராட்டியின் கற்பால் நிகழக் கூடியது என்பதை,*

*அனுமன் தனது மதி நுட்பத்தால் ஊகித்துத் துணிந்து கூறினான் என்க. மோய் - தாய். எம்மோய் - எம்முடையவனே எனக் கூறி இராமனை நோக்கிய விளியாகயும் ஆக்கலாம்.* ***(28)***

***6035. 'விற் பெருந் தடந் தோள் வீர ! வீங்கு நீர் இலங்கை***
***வெற்பில்,***
***நற் பெருந்தவத்தள் ஆய நங்கையைக் கண்டேன்***
***அல்லேன்;***
***இற் பிறப்புஎன்பது ஒன்றும், இரும் பொறை என்பது***
***ஒன்றும்,***
***கற்பு எனும்பெயரது ஒன்றும், களி நடம் புரியக்***
***கண்டேன்.***

***வில் பெருந்தடந்தோள் வீர -*** *கோதண்டம் என்னும் வில்லை ஏந்தியபெரியதும் இடமகன்றதுமான தோள்களை உடைய வீரனே !;* ***வீங்கு நீர்இலங்கை வெற்பில் -*** *மிகுந்து விளங்கும் நீரை உடைய கடலால் சூழப்பட்டதிரிகூட மலை மேல் உள்ள இலங்கை நகரில்;* ***நற் பெருந் தவத்தள் ஆயநங்கையை -*** *பெரிய நல்ல கற்பொழுக்கத் தவத்தை உடையவளானபிராட்டியை;* ***கண்டேன் அல்லேன் -*** *யான் காணவில்லை;* ***இல் பிறப்புஎன்பது ஒன்றும் -*** *(கண்டது எவை என்றால்) உயர் குடிப் பிறப்பு என்றுசொல்லப்படுவது ஒன்றும்;* ***இரும் பொறை என்பது ஒன்றும் -*** *சிறந்தபொறுமை என்று சொல்லப்படுவதொரு குணமும் கற்பு என்ற பெயருடையதுஒன்றும்;* ***களி நடம் புரிய கண்டேன் -*** *(ஆகியவை ஒருங்கு கூடி)களிப்போடு நடனம் புரியப் பார்த்தேன்.*

*பெண்டிர்க்குரியசிறந்த குணங்கள் குலம், பொறுமை, கற்பு என்பவைகள். அக்குணங்கள் மூன்றும் ஒருங்கு கூடி, பிராட்டியிடம் சேர்ந்து, அவை பெருமை பெற்றன. அதனால், அவைகள் களி நடம் புரிந்தன. தவம் என்பது, தன்னைத் தான் கொண்டு ஒழுகும் நெறி. பெரும் தவம் என்பது, கணவனது வாழ்விலும் தாழ்விலும் உடனிருந்து கற்பு நெறி வழுவாதிருத்தல். நற்பெருந்தவமாவது, தன்னைப் பிறர் பிரித்த நிலையிலும், துன்புறுத்திய நிலையிலும், தனது குடிமை, பொறுமை, கற்பு என்பவைகட்குக் குறைவு நேராது ஒழுகுவது. சீதா பிராட்டி, நற்பெருந்தவத்தளாக விளங்குவதை அனுமன் எடுத்துக் கூறினான் என்க.* ***(29)***

***6036. 'கண்ணினும்உளை நீ; தையல் கருத்தினும் உளை***
***நீ; வாயின்***
***எண்ணினும் உளைநீ; கொங்கை இணைக்***
***குவைதன்னின் ஓவாது***
***அண்ணல் வெங்காமன் எய்த அலர் அம்பு***
***தொளைத்த ஆறாப்***
***புண்ணினும் உளைநீ; நின்னைப் பிரிந்தமை***
***பொருந்திற்று ஆமோ ?***

***நீ, தையல்கண்ணினும் உளை -*** *நீ, பிராட்டியின்கண்களிலும் எப்பொழுதும் நீங்காது இருக்கின்றாய்;* ***கருத்தினும் நீ உளை -*** *அவள் மனத்திலும் நீ தங்கியிருக்கின்றாய்;* ***வாயின் எண்ணினும் நீ உளை -*** *அவள் வாயினின்றும் தோன்றும் ஒவ்வொரு*

*சொற்களிலும் நீ இருக்கின்றாய்;* ***கொங்கை இணைகுவை தன்னில் அண்ணல்வெம் காமன் ஓவாது எய்த -*** *இரண்டு தனங்களின் முகட்டிலும், பெருமையும் கொடுமையும் உடைய மன்மதன் இடைவிடாமல் ஏவிய மலரம்புகள் தைத்து ஊடுருவிய ஆறாத புண்களிலும் நீ தங்கியிருக்கின்றாய்;* ***நின்னைப் பிரிந்தமை பொருந்திற்று ஆமோ ? -*** *(ஆதலால்) உன்னைப் பிரிந்திருக்கின்றாள் என்பது பொருத்தமான செய்தி ஆகுமோ ? (ஆகாது)*

*பிராட்டி, மனம்,மொழி, மெய் என்ற கரணங்களாலும் இராமபிரானைப் பிரியாது இருக்கிறாள் என்பது கருத்து. கண்களில் இருத்தல் உரு வெளித் தோற்றம்; வாயின் எண்ணின் இருத்தல் இராமநாமம் கூறுதல். கொங்கை..... புண்ணில் இருத்தல் இராமனைத் தழுவும் பாவனை.* ***(30)***

***6037. 'வேலையுள் இலங்கை என்னும் விரி நகர் ஒருசார், விண் தோய்,***
***காலையும்மாலைதானும் இல்லது ஓர் கனகக் கற்பச்***
***சோலை அங்குஅதனில் உம்பி புல்லினால் தொடுத்த தூய***
***சாலையில்இருந்தாள்-ஐய !-தவம் செய்த தவம் ஆம் தையல்.***

***ஐய ! -*** *ஐயனே !;* ***தவம்செய்த தவம் ஆம் தையல் -*** *தவம் என்பதுசெய்த தவத்தின் வடிவமாகிய பிராட்டி;* ***வேலையுள் -*** *கடலினிடையில் உள்ள;* ***இலங்கை என்னும் -*** *இலங்கை என்னும் பெரிய நகரின் ஒரு புறத்தில்;* ***விரிநகர் ஒரு சார் -*** *நகரின் ஒரு புறத்தில்;* ***விண்நோய் காலையும் மாலைதானும் இல்லது கனக கற்ப ஓர் சோலை அங்கு அதனில் -*** *ஆகாயத்தைஅளாவி வளர்ந்த, காலை, மாலை என்ற வேறுபாடு இன்றி ஒரே விதமாகவிளங்குகின்ற பொன்மயமான கற்பகத் தருவை உடைய ஒரு பூஞ்சோலையின்உள்ளே;* ***உம்பி புல்லினால் தொடுத்த தூய சாலையில் இருந்தாள் -*** *உன்தம்பி, புற்களைக் கொண்டு வேய்ந்து அமைத்த அதே பரிசுத்தமானபர்ணசாலையில் தங்கியிருந்தாள்.*

*பிராட்டி,இராவணனால் தொடப்படாத கற்புடையவளாக இருக்கின்றாள் என்பது தெரிவிக்கப்பட்டது. பொன் மயமான கற்பகத் தருக்கள் ஒளிவீசுவதால், பகல் இருள் என்ற வேறுபாடு இல்லை சோலையில். அன்றி, மரங்களின் அடர்த்தியால், சூரிய ஒளி புகாத சோலை என்றும், கொள்ளலாம். 'தவம் செய்த தவம் ஆம் தையல்' என்பது பிராட்டியின் கற்புத் தவத்தின் சிறப்பை உணர்த்துகின்றது.* ***(31)***

***6038. 'மண்ணொடும் கொண்டு போனான்-வான் உயர் கற்பினாள்தன்***
***புண்ணிய மேனிதீண்ட அஞ்சுவான், உலகம் பூத்த***
***கண் அகன்கமலத்து அண்ணல், "கருத்திலாள்- தொடுதல் கண்ணின்,***
***எண் அருங் கூறாய்மாய்தி" என்றது ஓர் மொழி உண்டு என்பார்.***

***கண் அகன்கமலத்து உலகம் பூத்த அண்ணல் -*** *இடம் அகன்ற திருமாலின் திரு உந்தித் தாமரை மலரில் தோன்றி உலகத்தைப் படைத்த பிரமதேவன்;* ***கருத்து இலாள் தொடுதல் கண்ணின் -*** *(இராவணனை நோக்கி)விருப்பம் இல்லாத பெண்ணை நீ வலிதாகத் தீண்டுதல் செய்வையானால்;* ***எண்அரும் கூறாய் மாய்தி -*** *நினைப்பதற்கு அரிதான கூறுகளாகப் பிளப்புண்டுஇறப்பாய்;* ***என்றது ஓர் மொழி உண்டு என்பார் -*** *என்று இட்டதாகிய ஒருசாப வார்த்தை உண்டு என்று சொல்வார்கள்;* ***வான் உயர் கற்பினாள் தன்புண்ணிய மேனி தீண்ட அஞ்சுவான் -*** *(ஆதலால் இராவணன்) மிகச்சிறந்த கற்பு நிலையை உடையவளான பிராட்டியினது பரிசுத்தமானதிருமேனியைத் தீண்டுவதற்கு அச்சம் உற்றவனாய்;* ***மண்ணொடும் கொண்டுபோனான் -*** *நிலத்தோடு எடுத்துக் கொண்டு போனான்.*

*பிராட்டி, தூயசாலையில் இருப்பதற்கும், இராவணன் பிராட்டியைத் தீண்டாமைக்கும் காரணம் கூறப்பட்டது. பிரமன் இராவணனுக்குச் சாபம் இட்ட வரலாறு, திரிசடை மூலம் பிராட்டி அறிந்திருந்தாள். அது (கம்ப 5365) பிராட்டியால் அனுமனுக்குத் தெரிவிக்கப்பட்டது.* ***(32)***

***6039. 'தீண்டிலன்என்னும் வாய்மை-திசைமுகன் செய்த முட்டை***
***கீண்டிலது;அனந்தன் உச்சி கிழிந்திலது; எழுந்து வேலை***
***மீண்டில;சுடர்கள் யாவும் விழுந்தில; வேதம் செய்கை***
***மாண்டிலது;-என்னும் தன்மை வாய்மையால், உணர்தி மன்னோ !***

***தீண்டிலன்என்னும் வாய்மை -*** *பிராட்டியை இராவணன் தொட்டானில்லை என்ற உண்மையை;* ***திசை முகன் செய்தமுட்டை கீண்டிலது -*** *பிரமன்படைத்த உலகம், பிளந்து போகவில்லை;* ***அனந்தன் உச்சி கிழிந்திலது -*** *ஆதிசேடனது தலைகளோடு கூடிய படம் கிழிந்து போகவில்லை;* ***வேலை எழுந்து மீண்டில -*** *கடல்கள் பொங்கி மேல் வந்தனவில்லை;* ***சுடர்கள் யாவும் விழுந்தில -*** *சூரியன் சந்திரன் முதலிய ஒளியுள்ள நட்சத்திரங்கள் யாவும் கீழே விழுந்து அழியவில்லை;* ***வேதம் செய்கை மாண்டிலது -*** *வேதங்களும் அவற்றில் கூறப்பட்டுள்ள ஒழுக்கங்களும் அழிந்தனவல்ல;* ***என்னும் தன்மை வாய்மையால் உணர்தி -*** *என்கின்ற இத்தன்மை மெய்யாயிருத்தலை நோக்கி, (அதனால்) உணர்வாயாக.*

*வாய்மை,வாய்மையால் உணர்தி' என இயையும், இராவணன் பிராட்டியைத் தீண்டிலன் என்னும் வாய்மை கடல்கள் எழுந்து பொங்காமை முதலியவற்றால் அறியக்கிடக்கும். பிராட்டியின் புனிதத் தன்மையால்தான், இயற்கை நிகழ்ச்சிகள் மாறுபடாமல் நிற்கின்றன என்று கூறப்பட்டது.* ***(33)***

***6040. 'சோகத்தாள் ஆய நங்கை கற்பினால், தொழுதற்கு ஒத்த***
***மாகத்தார்தேவிமாரும், வான் சிறப்பு உற்றார்; மற்றைப்***
***பாகத்தாள்,இப்போது ஈசன் மகுடத்தாள்;***

**பதுமத்தாளும்,**
**ஆகத்தாள்அல்லள், மாயன் ஆயிரம் மௌலி**
**மேலாள்.**

***சோகத்தாள் ஆயநங்கை*** - *(உன்னைப் பிரிந்த பெரும்) துக்கத்தை உடையவளான பிராட்டியின்;* ***கற்பினால் மாகத்தார் தேவி மாரும்*** - *கற்பின் சிறப்பால், வானில் உள்ள தேவர்களின் மனைவிமார்களும்;* ***தொழுதற்கு ஒத்த வான் சிறப்பு உற்றார்*** - *யாவரும் வணங்குவதற்கு ஏற்ற பெரும்சிறப்பை அடைந்தார்;* ***மற்றை ஈசன் பாகத்தாள் இப்போது மகுடத்தாள்*** - *அதுவல்லாமல் சிவபிரானது உடம்பின் ஒரு பாகத்தில் இருக்கும் உமாதேவி, இந்த சமயத்தில் அப்பெருமானது தலைமேல் இருக்கும் சிறப்பினை உடையவளானாள்;* ***பது மத்தாளும்*** - *தாமரை மலரில் வீற்றிருக்கும் திருமகளும்;* ***மாயன் ஆகத்தாள் அல்லன்*** - *இனித் திருமாலின் திருமார்பில் வீற்றிருக்கத் தக்கவள் அல்லள் (அப்பெருமானது) ஆயிரம்திருமுடிகளின் மேலிருக்கத் தக்கவளாவாள்.*

*உயர்ந்தோர்ஒருவரால், மற்றையோரும் சிறப்படைவர் என்பதற்கிணங்க, பிராட்டியின் கற்புச் சிறப்பால், மற்றைத் தெய்வ மகளிர், உமாதேவி, திருமகள் முதலியோரும் சிறப்படைந்தனர் என்பதாம். சிறையிருந்தாள் ஏற்றத்தால் மாதர் குல ஏற்றம் சொல்லுகிறது இச்செய்யுள் என்கின்றான் கம்பன்; பரம வைஷ்ணவனாதலின், என்ற பிள்ளை லோகாசாரியர் வாக்கும் நோக்கத்தக்கது.*
***(34)***

***6041. 'இலங்கையைமுழுதும் நாடி, இராவணன் இருக்கை***
***எய்தி,***
***பொலங் குழையவரைஎல்லாம் பொதுவுற நோக்கிப்***
***போந்தேன்,***
***அலங்கு தண்சோலை புக்கேன்; அவ்வழி, அணங்கு***
***அன்னாளை,***
***கலங்கு தெண்திரையிற்று ஆய கண்ணின் நீர்க்***
***கடலில், கண்டேன்.***

***இலங்கையை முழுதும்நாடி*** - *நான், இலங்கை நகர் முழுவதையும் தேடிப்பார்த்து;* ***இராவணன் இருக்கை எய்தி*** - *பிறகு, இராவணனது இருப்பிடத்தை அடைந்து;* ***பொலம் குழையவரை எல்லாம்*** - *பொன்னாலான காதணிகளை உடைய மகளிர்களை எல்லாம்;* ***பொதுவுற நோக்கி போந்தேன்*** - *பொதுவாகப் பார்த்துக் கொண்டு சென்று;* ***அலங்குதண் சோலை புக்கேன்*** - *அசைகின்ற குளிர்ந்த அசோகவனச் சோலையுள் நுழைந்தேன்;* ***அவ்வழி அணங்கு அனாளை*** - *அந்த இடத்தில் தெய்வம் போன்ற சீதா தேவியை;* ***கலங்கு தெண் திரையிற்று ஆய கண்ணின் நீர் கடலின் கண்டேன்*** - *கலங்கியனவும் வெண்மையானவுமான அலைகளோடு கூடிய கண்ணின் நீராகிய கடலின் இடையே கண்டேன்.*

*பிராட்டியின்கற்புத் திறத்தை உணர்த்திய பிறகு, அவளைத் தான் கண்டமையை உணர்த்துகின்றான் அனுமன். இராவணன் மாளிகையில் பிராட்டி இல்லை என்பதனால், அவன் வசப்பட்டிலள் பிராட்டி என்பது உணர்த்தப்படுகின்றது.*

*‘கண்களால்’ என்பதற்கேற்ப ‘அணங்கு அனாளை’ ‘கண்ணின் நீர்க் கடலில் கண்டேன்’ என்று இங்கே அனுமனின் முதற்காட்சி கூறப்பட்டது ஒப்பு நோக்குக.*

***(35)6042. ‘அரக்கியர் அளவு அற்றார்கள், அலகையின் குழுவும் அஞ்ச***
***நெருக்கினர்காப்ப, நின்பால் நேயமே அச்சம் நீக்க,***
***இரக்கம் என்றஒன்று தானே ஏந்திழை வடிவம் எய்தி,***
***தருக்கு உயர்சிறை உற்றன்ன தகையள், அத் தமியள்-அம்மா !***

***அளவு அற்றார்கள்அரக்கியர்** - எண்ணி அளவிட்டுக்கூறமுடியாத அரக்கியர்கள்; **அலகையின் குழுவும் அஞ்ச** - பேய்களின் கூட்டமும் அஞ்சும்படி; **நெருக்கினர் காப்ப** - தப்பிப் போவதற்கு இடைவெளி விடாது, நெருங்கி நின்று காவல் புரிய; **அச்சம் நின்பால் நேசமே நீக்க** - அப்போது தனக்கு ஏற்பட்ட அச்சத்தை உன்னிடம் தான் கொண்டுள்ள அன்பின் மிகுதியே போக்க; **அத் தமியள்** - தனியளாகிய அப் பிராட்டி; **இரக்கம் என்ற ஒன்றுதானே** - இரக்கம் என்று சொல்லப்படுகின்ற ஒரு குணமே; **ஏந்திழை வடிவம் எய்தி** - ஒரு பெண்ணின் உருவத்தைப் பெற்று; **தருக்கு உயர் சிறை உற்று அன்ன தகையள்** - கொடுமைமிக்க சிறையில் அடைபட்டிருப்பதைப் போன்ற தன்மை உடையவளாய் இருக்கின்றாள்.*

*பிராட்டி அசோகவனத்தில் இருந்த நிலை உணர்த்தப்பட்டது. ‘நின்பால் கொண்ட நேசமே, அச்சத்தை நீக்கினமையால், அரக்கியர் கொடுமைகட்குச் சினம் கொள்ளாமல், அவரிடம் இரக்கமே காட்டினாள் பிராட்டி’ என்று காரணம் காட்டிக் கூறினான் அனுமன் என்க. (36)*

***6043. ‘தையலை வணங்கற்கு ஒத்த இடை பெறும் தன்மை நோக்கி,***
***ஐய ! யான்இருந்த காலை, அலங்கல் வேல் இலங்கை வேந்தன்***
***எய்தினன்;இரந்து கூறி இறைஞ்சினன்; இருந்து நங்கை***
***வெய்து உரைசொல்ல, சீறி, கோறல் மேற்கொண்டு விட்டான்.***

***ஐய !** - ஐயனே !; **தையலை வணங்கற்கு ஒத்த** - பிராட்டியை, நான் எதிர் சென்று வணங்குவதற்குத் தகுதியான; **இடை பெறும் தன்மை நோக்கி** - சமயத்தைப் பெறும் நிலையை எதிர்பார்த்து; **யான் இருந்த காலை** - நான் இருந்த பொழுது; **அலங்கல் வேல் இலங்கை வேந்தன் எய்தினன்**- மாலை அணிந்த வேற்படை ஏந்திய இலங்கை மன்னனாகிய இராவணன் அங்கு வந்து; **இரந்து கூறி இறைஞ்சினன்** - (தன்னை விரும்பும்படி) இரக்கத்தோடு பலவிதமான வார்த்தைகளைச் சொல்லி, பிராட்டியை வணங்கினான்; **நங்கை இருந்து வெய்து உரை சொல்ல** - பிராட்டி நில்லாது, இருந்து கொண்டே கடுமையான வார்த்தைகளைக் கூற; **சீறி கோறல் மேற் கொண்டு விட்டான்** - (அதைக் கேட்ட அவன்) கோபித்து, பிராட்டியைக் கொல்லத்தலைப்பட்டுவிட்டான்.*

*பிராட்டியின்கற்புத் திண்மையைத் தான் நேரில் காண்பதற்கு நிகழ்ந்த சந்தர்ப்பத்தை, இதன் மூலம் விளக்கினான் அனுமன் என்க.* ***(37)***

***6044. 'ஆயிடை,அணங்கின் கற்பும், ஐய ! நின் அருளும் செய்ய***
***தூய நல் அறனும்என்று, இங்கு இனையன தொடர்ந்து காப்ப,***
***போயினன்,அரக்கமாரை, "சொல்லுமின் பொதுவின்" என்று, ஆங்கு***
***ஏயினன்; அவர்எலாம் என் மந்திரத்து உறங்கியிற்றார்.***

***ஐய ! -*** *ஐயனே!;* ***ஆயிடை அணங்கின் கற்பும் -*** *அப்பொழுது பிராட்டியின் கற்புத் திண்மையும்;* ***நின் அருளும் செய்ய தூய நல் அறனும் -*** *உனது அருளின் சிறப்பும் செம்மையும், தூய்மையும் நன்மையும் நிறைந்த அறமும்;* ***என்று இனையன தொடர்ந்து காப்ப -*** *என்று சொல்லத்தக்க இவைகள் எல்லாம் பிராட்டியின் உயிரை விடாமல் பாதுகாக்க;* ***ஆங்கு -*** *அப்பொழுது, (இராவணன்);* ***அரக்கிமாரை -*** *(அருகில் காவல் செய்து கொண்டிருக்கும்) அரக்கியர்களை;* ***பொதுவின் சொல்லுமின் -*** *நன்மை விளைதலும் தீய பயத்தலுமான வார்த்தைகளைப் பொதுப் படக் கூறுங்கள்;* ***என்று ஏயினன் -*** *என்று கட்டளையிட்டு;* ***போயினன் -*** *விட்டுத் தன்னிடத்துக்குச் சென்றான்;* ***அவர் எலாம் என் மந்திரத்து உறங்கியிற்றார் -*** *அந்த அரக்கியரெல்லாம் நான் உச்சரித்த மந்திரத்தின் வலிமையால் தூங்கிவிட்டார்கள். அனுமன்,பிராட்டியைத் தான் கண்டு பேசுவதற்குக் கிடைத்த வாய்ப்பினை விவரிக்கின்றான். கோறல் மேற்கொண்டுவிட்ட இராவணனது கொடுமையினின்றும், பிராட்டியைக் காத்த சக்திகளையும் அனுமன் விவரித்துள்ளான். 'என்று இங்கு' - இங்கு*

*இசை நிறைக்க வந்தஅசை நிலை.* ***(38)***

***6045. 'அன்னது ஓர் பொழுதில் நங்கை ஆர் உயிர் துறப்பதாக***
***உன்னினள்; கொடிஒன்று ஏந்தி, கொம்பொடும் உறைப்பச் சுற்றி,***
***தன் மணிக்கழுத்தில் சார்த்தும் அளவையில் தடுத்து, நாயேன்,***
***பொன் அடி வணங்கி நின்று, நின் பெயர் புகன்ற போழ்தில்,***

***அன்னது ஓர்பொழுதில் -*** *அத்தன்மையதானசமயத்தில்;* ***நங்கை -*** *பிராட்டி;* ***ஆர் உயிர் துறப்பதாக உன்னினன் -*** *அருமையான தனது உயிரைவிட்டு விடுவதாக நினைத்தவளாய்;* ***கொடி ஒன்று ஏந்தி கொம் பொடும் உறைப்ப சுற்றி -*** *ஒரு கொடியைக் கையில் எடுத்து ஒரு மரத்தின் கிளையில் உறுதியாகக் கட்டி;* ***தன் மணி கழுத்தில் சார்த்தும் அளவையில் -*** *தனது அழகிய கழுத்திலே சேர்த்துச் சுருக்கிட்டுக் கொள்ளும் சமயத்தில்;* ***நாயேன் தடுத்து -*** *எளியனான அடியேன் அதனைத் தடை செய்வதாகி;*

***பொன் அடி வணங்கி நின்று -*** *பிராட்டியின் திருவடிகளை வணங்கி நின்று;* ***நின் பெயர் புகன்ற போழ்தில் -*** *உனது திருநாமத்தைச் சொன்ன பொழுதில்.*

*குளகமாக அமைந்தஇச்செய்யுள் தொடர், அடுத்த செய்யுளில் சொன்னாள் என்று முடியும். இராமபிரான் திருநாமத்தை அனுமான் உச்சரித்ததே, பிராட்டி சுருக்கிட்டுக் கொண்டு உயிர் மாய்ப்பதைத் தடுத்தது என்க.* ***(39)***

***6046. ' "வஞ்சனைஅரக்கர் செய்கை இது" என***
***மனக்கொண்டேயும்,***
***"அஞ்சனவண்ணத்தான்தன் பெயர் உரைத்து,***
***அளியை, என்பால் துஞ்சுறு பொழுதில் தந்தாய் துறக்கம்"***
***என்று உவந்து***
***சொன்னாள்-***
***மஞ்சு என, வனமென் கொங்கை வழிகின்ற***
***மழைக் கண் நீராள்.***

***மஞ்சு என வனமென் கொங்கை வழிகின்ற மழைக்கண் நீராள் -*** *(மலைமேல் பெய்யும்) மழை போல், அழகும் மென்மையும் தவழும் தனங்களின் மேல் பெய்து தொடும் குளிர்ந்த கண்களின் நீரை உடையவளான பிராட்டி;* ***இது, வஞ்சனை -*** *(நான் இவ்வாறு உன் திருநாமம்) கூறியதை வஞ்சனை உடைய;* ***அரக்கர் செய்கை -*** *அரக்கர்களது செய்கையால்;* ***என மனம் கொண்டேயும் -*** *என்று கருதிச் சந்தேகித்தும்;* ***என் பால் அளியை -*** *(என்னை நோக்கி) என்னிடம் அருள் கொண்டவன் நீ;* ***துஞ்சுறு பொழுதில் -*** *யான் இறக்கும் சமயத்தில்;* ***அஞ்சன வண்ணத்தான் தன் பெயர் உரைத்து -*** *மை போல் கரிய திரு மேனியை உடைய இராமபிரானது திருநாமத்தைச் சொல்லி;* ***துறக்கம் தந்தாய் -*** *எனக்குப் பரலோக இன்பத்தைத் தந்தாய்;* ***என்று உவந்து சொன்னாள் -*** *என்று மகிழ்ச்சியோடு என்னிடம் கூறினாள்.*

*'எம்பிரான் நாமம் சொல்லி உருக்கினன் உணர்வைத்தந்தான் உயிர் இதின் உதவி உண்டோ' என்று (கம்ப. 5254.) பிராட்டி கூறியதை அனுமன் நினைவுபடுத்திக் கொண்டு சொன்னது இது. எம்பிரான் திருநாமம் கேட்டல் துறக்க இன்பத்துக்குச் சமமானது.*
***(40)***

***6047. 'அறிவுறத்தெரியச் சொன்ன, பேர் அடையாளம்***
***யாவும்,***
***செறிவுறநோக்கி, நாயேன் சிந்தையில் திருக்கம்***
***இன்மை***
***முறிவு அற எண்ணி,வண்ண மோதிரம் காட்ட,***
***கண்டாள்;***
***இறுதியின் உயிர்தந்து ஈயும் மருந்து ஒத்தது,***
***அனையது-எந்தாய் !***

***எந்தாய் -*** *எமதுதலைவனே !;* ***அறிவு உற தெரிய சொன்ன பேர் அடையாளம் யாவும் -*** *பிராட்டி அறியும்படி அடியேன் தெளிவாகச் சொன்ன பெரிய அடையாளங்களை*

*எல்லாம்;* ***செறிவு உற நோக்கி*** *- அதனைப் பொருத்தமாகப் பார்த்து;* ***நாயேன் சிந்தையில் திருக்கம் இன்மை முறிவு அற எண்ணி*** *- அடியேன்மனத்தில் மாறுபாடுஇல்லாமையை கேடின்றி யோசித்து;* ***வண்ண மோதிரம் காட்ட கண்டாள்*** *- அழகிய (உனது) மோதிரத்தை, நான் காட்ட, பார்த்தாள்;* ***அனையது*** *- அந்த மோதிரம்;* ***இறுதியின் உயிர் தந்து ஈயும் மருந்து ஒத்தது*** *- உயிர் போகும் முடிவுக் காலத்தில், உயிரை இறவாத படி நிலை நிறுத்திக் காக்கின்ற (மிருத சஞ்சீவி என்னும்) மருந்தைப் போன்றது.*

*'மோதிரம்பிராட்டிக்கு உயிர் தந்து ஈயும் மருந்தானது' என்பது, 'வீயும் உயிர் மீளும் மருந்தும் எனல் ஆயது வாழி மணி அழி' என்ற (கம்ப. 5296) காட்சியை நினைத்து அனுமன் சொன்னதாகும்.* ***(41)***

***6048. 'ஒரு கணத்துஇரண்டு கண்டேன்; ஒளி மணி ஆழி, ஆன்ற***
***திரு முலைத்தடத்து வைத்தாள்; வைத்தலும், செல்வ ! நின்பால்***
***விரகம்என்பதனின் வந்த வெங் கொழுந் தீயினால் வெந்து***
***உருகியது; உடனேஆறி, வலித்தது, குளிர்ப்பு உள் ஊற.***

***செல்வ !*** *- எல்லாச்செல்வமும் உடையவனே !;* ***ஒரு கணத்து இரண்டுகண்டேன்*** *- ஒரு கணப் பொழுதிலே, ஒன்றற்கு ஒன்று மாறுபாடான இரண்டுவியக்கத்தக்க நிகழ்ச்சிகளையான் பார்த்தேன்;* ***ஒளி மணி ஆழி*** *- (அவைஎன்ன எனில்) விளங்குகின்ற இரத்தினம் பதிக்கப் பெற்ற மோதிரத்தை;* ***ஆன்றதிருமுலைத் தடத்து வைத்தாள்*** *- பிராட்டி, தனது சிறந்த கொங்கைகளின்மேல் வைத்தாள்;* ***வைத்தலும்*** *- வைத்தவுடன்;* ***நின்பால் விரகம் என்பதனின்வந்த வெம் கொழும் தீயினால் வெந்து உருகியது*** *- உன்னிடத்தினின்றும்பிரிந்த விரகதாபம் என்பதனால் உண்டான வெப்பமாகிய செழித்தநெருப்பினால் சூடேறி உருகிவிட்டது;* ***குளிர்ப்பு உள் ஊற உடனே ஆறிவலித்தது*** *- (மோதிரம் உடம்பில் பட்ட மனமகிழ்ச்சியினாலாகிய) குளிர்ச்சிஉடலில் மிகுதலால் அப்பொழுதே (அவ்வெப்பம் தணிந்து) இறுகிமுன் போல்உறுதிப்பட்டுவிட்டது. மோதிரம்,பிராட்டியின் விரகத் தீயால் உருகுதலும், மகிழ்ச்சியாகிய குளிர்ச்சியால் இறுகுதலும் ஆகிய மாறுபட்ட இரு தன்மைகளையும் ஒருகணத்தில் கண்டேன் என்றதாம். விரகம் - பிரிவால் நிகழும் காம வேதனை.* ***(42)***

***6049. 'வாங்கிய ஆழிதன்னை, "வஞ்சர் ஊர் வந்ததாம்" என்று***
***ஆங்கு உயர்மழைக் கண் நீரால் ஆயிரம் கலசம் ஆட்டி,***
***ஏங்கினள்இருந்தது அல்லால், இயம்பலள்; எய்த்த மேனி***
***வீங்கினள்;வியந்தது அல்லால், இமைத்திலள்; உயிர்ப்பு விண்டாள்.***

***வாங்கிய ஆழிதன்னை*** - பிராட்டி, என்கையினின்றும் தன்கையில் வாங்கிக் கொண்ட மோதிரத்தை; ***வஞ்சர் ஊர் வந்த தாம் என்று*** - வஞ்சகரான அரக்கரது ஊருக்கு வந்ததனால் தூய்மை இழந்தது என்று எண்ணி; ***ஆங்கு உயர் மழைக்கண் நீரால் ஆயிரம் கலசம் ஆட்டி*** - அப்பொழுதே உயர்ந்த மழை போன்ற கண்களின் நீர் கொண்டு, ஆயிரம் குடங்களால் (திருமஞ்சனம் செய்து புனிதப்படுத்துவது போல) நீராட்டி; ***ஏங்கினள், இருந்தது அல்லாள் இயம்பலள்*** - ஏங்கியவளாய் வாளா இருந்தது அல்லால் வேறு ஒன்றும் கூறமாட்டாதவளாயினாள்; ***எய்த்த மேனி வீங்கினள்*** - இளைத் திருந்த திருமேனி பூரித்து; ***வியந்தது அல்லால் இமைத்திலள்*** - வியப்புற்றதல்லாமல் நோக்கிய கண்களை மூடினாள் இல்லை; ***உயிர்ப்பு விண்டாள்*** - பெருமூச்சு விட்டாள்.

*இராமபிரானதுதிருவாழியைத் தன்கையில் வாங்கிக் கொண்ட பிராட்டியின் செயல்கள் கூறப்பட்டன. ஒன்றைத் தூய்மையாக்கி, தெய்வப் பெற்றியதாகச் செய்வதற்குத் திருமஞ்சனம் செய்ய வேண்டும். வஞ்சர் ஊர் வந்த மோதிரம், தூய்மை இழந்ததால், தனது ஆனந்தக் கண்ணீர் கொண்டு அதனை நீராட்டித் தூய்மைப் படுத்தினாள் பிராட்டி என்பதாம்.* ***(43)***

***6050. 'அன்னவர்க்கு, அடியனேன், நிற் பிரிந்த பின்***
***அடுத்த எல்லாம்***
***சொல் முறை அறியச் சொல்லி, "தோகை ! நீ***
***இருந்த சூழல்***

***இன்னது என்றுஅறிகிலாமே, இத்தனை தாழ்த்தது"***
***என்றே,***
***மன்ன ! நின்வருத்தப்பாடும் உணர்த்தினென்;***
***உயிர்ப்பு வந்தாள்.***

***மன்ன !*** - தலைவனே!; ***அடியனேன் நின் பிரிந்தபின் அடுத்த எல்லாம் அன்னவர்க்கு சொல்முறை அறிய சொல்லி*** - அடியவனாகிய நான் உன்னைப் பிரிந்த பிறகு நேர்ந்த செய்திகளை எல்லாம் பிராட்டியார்க்குச் சொல்லும் முறைமையால் அறியும்படிச் சொல்லி; ***தோகை நீ இருந்த சூழல் இன்னது என்று அறிகிலாமே*** - மயில் போன்றவளே ! நீ இருந்த இடம் இன்ன இடத்தது என்று தெரியாமையினாலேயே; ***இத்தனை தாழ்த்தது என்று*** - இத்தனை காலம் நீட்டித்தது என்றும் சொல்லி; ***நின் வருத்தப்பாடும் உணர்த்தினென்*** - (பிராட்டியைப் பிரிந்ததனால்) நீ வருத்தப்படும் தன்மையையும் தெரியச் சொன்னேன்; ***உயிர்ப்பு வந்தாள்*** - (அது கேட்டு) மூச்சு விடுதல் உற்றாள்.

*பிராட்டியைஇராமபிரான் அதுவரை வந்து காணாமைக்குக் காரணம் கூறப்பட்டது.* ***(44)***

***6051. 'இங்கு உளதன்மை எல்லாம் இயைபுளி இயையக்***
***கேட்டாள்;***
***அங்கு உள தன்மைஎல்லாம் அடியனேற்கு அறியச்***
***சொன்னாள்;***
***"திங்கள் ஒன்றுஇருப்பென் இன்னே; திரு உளம்***
***தீர்ந்தபின்னை,***

***மங்குவென்உயிரோடு" என்று, உன் மலரடி சென்னி***
***வைத்தாள்.***

***இங்கு உள தன்மைஎல்லாம் இயைபுளி இயையக் கேட்டாள் -*** *இவ்விடத்தில் உள்ளனவான நிலைமைகள் எல்லாவற்றையும் நடந்தபடியே (நிகழ்ந்த முறையில்) பொருந்தக் கேட்டு;* ***அங்கு உள தன்மை எல்லாம் அடியனேற்கு அறியச் சொன்னாள் -*** *அவ்விடத்தில் உள்ள நிலைமைகளை எல்லாம், அடியவனாகிய எனக்குத் தெரிந்து கொள்ளும்படி விளக்கமாகக் கூறினாள்;* ***இன்னே திங்கள் ஒன்று இருப்பென் -*** *(மேலும்) இந்த இடத்தில் ஒரு மாத காலம் உயிர் வைத்திருப்பேன்;* ***திருவுளம் தீர்ந்த பின்னை -*** *(அதற்குள் என்னை மீட்க எம்பெருமானுக்கு) மனம் இல்லையாகுமானால், அதன் பின்பு;* ***உயிரோடு மங்குவென் என்று உன் மலரடி சென்னிவைத்தாள் -*** *உயிரிழப்பேன் என்று சொல்லி, உனது தாமரை மலர் போன்ற திருவடிகளைத் தலைமீது வைத்து (வணங்குவது போல) வணங்கிச் சொன்னாள்.*

*பிராட்டி, தன்னைமீட்கக் காலக் கெடு வைத்ததை அனுமன் சொன்னானாயிற்று. 'மலரடி சென்னி வைத்தாள்' பாவனை.* ***(45)***

*சீதாபிராட்டி தந்தசூடாமணியை அனுமன் இராமனிடம் சேர்த்தல்*

***6052. 'வைத்தபின், துகிலின் வைத்த மா மணிக்கு அரசை***
***வாங்கி,***
***கைத்தலத்துஇனிதின் ஈந்தாள்; தாமரைக் கண்கள்***
***ஆர,***
***வித்தக ! காண்டி!' என்று, கொடுத்தனன்-வேத***
***நல் நூல்***
***உய்த்துள காலம்எல்லாம் புகழொடும் ஒக்க நிற்பான்.***

***வேத நல் நூல்உய்த்துள காலம் எல்லாம் -*** *வேதங்களும் சாத்திர நல்ல நூல்களும் வழங்குவதான காலக் கணக்குகள் எல்லாம் உள்ள அளவும்;* ***புகழொடும் ஒக்க நிற்பான் -*** *புகழோடு கூடியிருக்கும் அனுமன்;* ***வைத்தபின் -*** *பிராட்டி, அவ்வாறு மலரடியைத் தன் சென்னியில் வைத்துக் கொண்ட பிறகு;* ***துகிலின் வைத்த மாமணிக்கு அரசை வாங்கி -*** *தன் ஆடையில் முடித்து வைத்திருந்த இரத்தினங்களுக்கெல்லாம் தலைமை பெற்று உயர்ந்த சூடாமணியை அவிழ்த்து எடுத்து;* ***கைத்தலத்து இனிதின் ஈந்தாள் -*** *எனது கையில் விருப்பத்துடன் கொடுத்தாள்;* ***வித்தக -*** *அறிவிற் சிறந்த பெரியோய்;* ***தாமரைக் கண்கள் ஆர, காண்டி என்று கொடுத்தனன் -*** *செந்தாமரை மலர் போன்ற உனது திருக்கண்கள் மகிழும்படி பார்த்தருளுக என்று கூறி (அச்சூடாமணியை இராமபிரானிடம்) கொடுத்தான்.*

*பிராட்டியிடமிருந்து பெற்று வந்த சூடாமணியை அனுமன் இராமனிடம் தந்தது பற்றிக் கூறப்பட்டது. அனுமன் எப்படி, வேத நல் நூல் உய்த்துள காலதத்துவம் வரை புகழோடு இருப்பானோ, அது போன்று, அவன் இப்போது, செய்த இந்த நற்செயலும் என்றும் நிற்கும் என்பது கருத்து. வேத நன்னூல் - வேதங்களாகிய நல்ல நூல்கள் என்றும் கொள்ளலாம்.* ***(46)*** *சூடாமணி பெற்றஇராமபிரான் நிலை*

***6053. பை பையப்பயந்த காமம் பரிணமித்து உயர்ந்து***
***பொங்கி,***
***மெய்யுறவெதும்பி, உள்ளம் மெலிவுறு நிலையை***
***விட்டான்;***
***ஐயனுக்கு, அங்கி,முன்னர், அங்கையால் பற்றும்***
***நங்கை***
***கை எனல் ஆயிற்றுஅன்றே-கை புக்க மணியின்***
***காட்சி !***

***கைபுக்க மணியின்காட்சி*** - *(இராமபிரான்) கையில்புகுந்த அந்தச் சூடாமணியின் தோற்றம்;* ***ஐயனுக்கு அங்கி முன்னர்*** - *அந்த இராமபிரானுக்கு, (திருமணக் காலத்தில்) அக்கினி முன்னிலையில்;* ***அம்கையால் பற்றும் நங்கை கைஎனல் ஆயிற்று*** - *அழகிய கையினால் பிடிக்கப்பட்ட பிராட்டியின் கையைப் போல விளங்கியது; (ஆதலின்)* ***பயந்த காமம் பைபைய பரிணமித்து உயர்ந்து பொங்கி*** - *(அதனால்) உண்டான ஆசை உணர்ச்சி மெல்ல மெல்ல வளர்ந்து மேன்மேல் எழுதலால்;* ***மெய் உற வெதும்பி*** - *உடல் நன்றாய் வெப்பமுற்று;* ***உள்ளம் மெலிவுறும் நிலையை விட்டான்*** - *மனம் தளர்ச்சியடைகின்ற தன்மையை நீக்கினான்.*

*சூடாமணியைஇராமபிரான் தன் கையில் கொண்டமை, தன் திருமணக்காலத்தில் பிராட்டியின் கையைப் பற்றியது போன்றிருந்தது. அம்மகிழ்ச்சியினால், ஆசையால் வளர்ந்த மனத் துன்பம் நீங்கிற்று என்பதாம்.* ***(47)***

***6054. பொடித்தனஉரோமம்; போந்து பொழிந்தன கண்ணீர்;***
***பொங்கித்***
***துடித்தன,மார்பும் தோளும்; தோன்றின வியர்வின்***
***துள்ளி;***
***மடித்தது, மணிவாய்; ஆவி வருவது போவது ஆகித்***
***தடித்தது, மேனி;என்னே, யார் உளர் தன்மை***
***தேர்வார் ?***

***உரோமம்பொடித்தன*** - *(இராமபிரானுக்கு)மயிர்கள் சிலிர்த்தன;* ***கண்ணீர் போந்து பொழிந்தன*** - *கண்ணீர் வழிந்து பெருகின;* ***மார்பும் தோளும் பொங்கி துடித்தன*** - *மார்பும் தோள்களும்பூரித்துத்துடித்தன;* ***வியர்வின் துள்ளி தோன்றின*** - *வியர்வையின் துளிகள் உண்டாயின;* ***மணிவாய் மடித்தது*** - *அழகிய வாய் இதழ் மடிப்புண்டது;* ***ஆவி வருவது போவது ஆகி மேனி தடித்தது*** - *உயிர்வருவதும் போவதும் ஆகப் பெற்று உடல் பூரித்தது;* ***என்னே !*** - *என்னவியப்பு;* ***தன்மை தேர்வார் யார் உளர் ?*** - *அப்போது இராமபிரான் அடைந்த நிலைமையை ஆராய்ந்து அறியவல்லார் யாரே உள்ளார் ? (ஒருவரும் இல்லை என்பதாம்,)*

*இராமபிரானுக்குஅப்பொழுது நேர்ந்த மெய்ப்பாடுகளைத் தெரிந்து உணர்த்துவது எம்மனோர்க்கு இயலாது என்றபடி. துள்ளி - துளி.* ***(48)***

*மேலே செய்வனகுறித்து இராமன் விரைதல்*

***6055. ஆண்டையின், அருக்கன் மைந்தன், 'ஐய ! கேள்,***
***அரிவை நம்பால்***
***காண்டலுக்குஎளியள் ஆனாள்' என்றலும், 'காலம்***
***தாழ,***
***ஈண்டு, இனும்இருத்தி போலாம்' என்றனன்;***
***என்றலோடும்,***
***தூண் திரண்டனையதோளான், பொருக்கென***
***எழுந்து சொன்னான்.***

***ஆண்டையின்அருக்கன் மைந்தன் -*** *அப்பொழுது சூரியன்மகன் சுக்கிரீவன்;* ***ஐய ! கேள் -*** *(இராமபிரானை நோக்கி) ஐயனே ! கேட்டருள்வீராக!;* ***அரிவை நம்பால் காண்டலுக்கு எளியள் ஆனாள் என்றலும் -*** *பிராட்டி, நாம் நம்மிடம் அழைத்துக் கொணர்தற்கு, எளிய தன்மையில் உள்ளாள் என்று சொன்ன அளவில்;* ***காலம் தாழ ஈண்டு இனும் இருத்தி போலாம் என்றனன் -*** *வீணே காலம் தாமதமாக, இங்கேயே இருக்கின்றாய் போலும் ! என்று சொன்னான்;* ***என்ற லோடும் -*** *என்ற சொன்னவுடனே;* ***தூண் திரண்டு அனைய தோளான் பொருக்கென எழுந்து சொன்னான் -*** *தூண் திரண்டிருப்பது போன்ற தோள்களை உடைய சுக்கிரீவன் விரைவில் எழுந்திருந்து கட்டளையிடுபவனானான்.*

*பொருக்கென - விரைவுக்குறிப்பு.* ***(49)*** *வானர சேனைபுறப்படுதல்*

***6056. 'எழுக, வெம் படைகள் !' என்றான்; 'ஏ' எனும்***
***அளவில், எங்கும்***
***முழு முரசு எற்றி,கொற்ற வள்ளுவர் முடுக்க, முந்தி,***
***பொழி திரைஅன்ன வேலை புடை பரந்தென்னப்***
***பொங்கி,***
***வழுவல் இல்வெள்ளத் தானை, தென் திசை***
***வளர்ந்தது அன்றே !***

***வெம் படைகள்ஏ எனும் அளவில் எழுக என்றான் -*** *கொடிய சேனைகள் எல்லாம் 'ஏ' உச்சரிக்கும் கால அளவுக்குள் புறப்படுவனவாக என்று சுக்கிரீவன் கட்டளையிட்டான்;* ***கொற்றவள்ளுவர் எங்கும் முழு முரசு எற்றி முடுக்க -*** *வெற்றியை உடைய முரசு அறைவோர், சேனைகள் உள்ள எல்லா இடத்திலும் பெரிய முரசுகளை அடித்து விரைவுபடுத்த;* ***முந்தி பொழி திரை அன்ன வேலை புடைபரந்தென்ன பொங்கி தென்திசை வளர்ந்தது -*** *பின்னடையாத (எழுபது) வெள்ளம் கொண்ட வானரச் சேனைகள், விரைந்து பாய்கின்ற அலைகளை உடைய அந்தக் கடல், தான் இருக்கும் நிலையை விட்டு வெளியிலே பரவினால் போல எழுந்து தெற்குத்திக்கை நோக்கிப் பரவலாயிற்று.*

*வள்ளுவர் - முரசுஅறைவோர்.* ***(50)***

*வீரர் எளிதில்வழி நடத்தல்*

***6057. வீரரும் விரைவில் போனார்; விலங்கல் மேல்***
***இலங்கை, வெய்யோர்***
***பேர்வு இலாக்காவற்பாடும், பெருமையும், அரணும்,***
***கொற்றக்***
***கார் நிறத்துஅரக்கர் என்போர் முதலிய, கணிப்பு***
***இலாத,***
***வார் கழல்அனுமன் சொல்ல, வழி நெடிது எளிதின்***
***போனார்.***

***விரைவில்போனார் வீரரும் -*** *விரைவில்புறப்பட்டவர்களாகிய வானரவீரர்கள் எல்லோரும்;* ***வார் கழல் அனுமன் -*** *நீண்ட வீரக்கழலை உடையஅனுமன்;* ***விலங்கல் மேல் இலங்கை -*** *திரிகூடம் என்னும்மலையின் மீதுள்ள இலங்கையில் வாழ்கின்ற;* ***கொற்றம் கார் நிறத்து அரக்கர் என்போர் வெய்யோர் -*** *வெற்றியையும் கரிய நிறத்தையும் உடைய அரக்கர்கள் என்று சொல்லப்படும் கொடியவர்கள் செய்யும்;* ***பேர்வு இலா காவல் -*** *பெயர்தல் இல்லாத காவல்;* ***பாடும் -*** *செய்யும் திறமும்;* ***பெருமையும் -*** *சிறப்பும்;* ***அரணும் -*** *கோட்டை முதலிய அரண்களும்;* ***முதலிய -*** *முதலான;* ***கணிப்பு இலாத -*** *அளவில்லாத பெருமைகளை எல்லாம்;* ***சொல்ல -*** *அவர்களுக்கு எடுத்துச் சொல்லிக் கொண்டுவர;* ***நெடிது வழி எளிதின் போனார் -*** *நீண்ட வழியை எளிதாகக் கடந்து போனார்கள்.* ***(51)***

*பன்னிரு நாளில்அனைவரும் தென்கடல் சேர்தல்*

***6058. அந் நெறிநெடிது செல்ல, அரிக் குலத்து***
***அரசனோடும்,***
***நல் நெறிக்குமரர் போக, நயந்து உடன் புணர்ந்த***
***சேனை,***
***இன் நெடும்பழுவக் குன்றில் பகல் எலாம் இறுத்த***
***பின்னர்,***
***பன்னிரு பகலில்சென்று, தென் திசைப் பரவை***
***கண்டார்.***

***அந்நெறி நெடிதுசெல்ல -*** *அந்த வழி நீண்டு செல்வதால்;* ***அரிக்குலத்து அரசனோடும் நல் நெறிக்குமரர் போக -*** *குரங்குக் கூட்டத்துக்கு அரசனாகிய சுக்கிரீவனுடன் நல்வழியைப் பின்பற்றுபவர்களாகிய இராம இலக்குவர் செல்ல;* ***நயந்து உடன் புணர்ந்த சேனை -*** *விரும்பிக் கூட வந்த வானரச் சேனைகள் எல்லாம்;* ***இன் நெடும் பழுவம் குன்றில் பகல் எலாம் இறுத்த பின்னர் -*** *இனிய நீண்ட சோலைகளை உடைய மலைவழியில்பகல் பொழுது முழுவதையும் கழித்த பிறகு;* ***பன்னிருபகலில் சென்று -*** *பன்னிரண்டாம் நாளில் போய்;* ***தென் திசைப் பரவை கண்டார் -*** *தெற்குத்திக்கில் உள்ள கடலைக் கண்டார்கள்.*

*சென்ற வழிநீண்டு கொண்டிருந்தமையால், சேனை பன்னிரண்டாம் நாளில், தென் திசைக்கடலைச் சென்று அடைந்தது. இராம இலக்குவர் சுக்கிரீவனுடன் சென்றனர்*

என்பதாம். ‘பகல் எலாம்’ - பகல் நேரம்; பன்னிருபகல் - பன்னிரண்டு நாள்.

***(52)மிகைப் பாடல்கள்***

***1. கடல் தாவு படலம*** ்

***383. சென்றனன்,இராமன் பாதம் சிந்தையில் நிறுத்தி- திண் தோள்***
***வன் திறல்அனுமன்-வாரி கடக்குமாறு உளத்தின் எண்ணி,***
***பொன் திணிசிகர கோடி மயேந்திரப் பொருப்பின் ஏறி,***
***நின்றிடும்தன்மை எம்மால் நிகழ்த்தலாம் தகைமைத்து ஆமோ ?***

*அனுமன்இராமபிரானின் திருவடியை மனத்திலே தியானித்து கடலைக் கடக்க எண்ணி மகேந்திர மலையில் நிற்கும் தன்மை எம்மால் கூறும் தன்மை உடையதோ.*

***384. இமையவர்ஏத்த வாழும் இராவணன் என்னும் மேலோன்***
***அமை திரு நகரைச்சூழ்ந்த அளக்கரைக் கடக்க, வீரன்,***
***சுமை பெறு சிகரகோடித் தொல் மயேந்திரத்தின், வெள்ளிச்***
***சிமையமேல்நின்ற தேவன் தன்மையின், சிறந்து நின்றான்.***

*மகேந்திர மலையில்நிற்கும் அனுமன் கயிலை மலையில் நிற்கும் சிவபெருமான் போன்றான். அளக்கர் - கடல் வெள்ளிச்சிமயம் - கயிலை. இவ்விரண்டு பாடல்கள் இப்படலத்தின் முன்னர் உள்ளன. இவற்றொடு கிட்கிந்தா காண்டம் மயேந்திரப்படல இறுதி நான்கு பாடல்களும் வரிசைமுறைமாறிக் கலந்துள்ளன.கைப் பாடல்கள் 861*

***385. பெருஞ் சிலம்பு அறையின் வாழும் பெரு வலி அரக்கர் யாரும்***
***பொரும் சின மடங்கல் வீரன் பொதுத்திட மிதித்தலோடும்***
***அருஞ் சினம்அடங்கி, தம்தம் மாதரைத் தழுவி, அங்கம்***
***நெரிஞ்சுற,கடலின் வீழ்ந்தார், நெடுஞ் சுறா மகரம் நுங்க***

அனுமன் திருவடி ஊன்றநிலை குலைந்த அரக்கர் தம்மாதரைத் தழுவிக்கடலில் விழுந்தனர். பொதுத்திட - துளை உண்டாக. நுங்க - உண்ண. நெரிஞ்சுற - சிதைவுற. *(7-1)*

***386. விண்ணோர்அது கண்டனர், உள்ளம் வியந்து மேல்மேல்***
***கண் ஓடியநெஞ்சினர், காதல் கவற்றலாலே,***
***எண்ணோடு இயைந்துதுணை ஆகும் இயக்கி ஆய***
***பெண்ணோடு இறைஇன்னன பெற்றி உணர்த்தினாரால்.***

தேவர்கள்,அனுமன் செல்வதைக் கண்டனர். சுரசையைப் பார்த்து கூறினர். கண் ஓடிய - இரக்கமுற்ற. ***(64-1)***

***387. பரவுக் குரல், பணிலக் குரல், பணையின் குரல், பறையின்***
***விரவுக் குரல்,சுருதிக் குரல், விசயக் குரல், விரவா,***
***அரவக் குலம்உயிர் உக்கு உக, அசனிக் குரல் அடு போர்***
***உரவுக் கருடனும் உட்கிட, உயிர்க்கின்றன-ஒருபால்.***

பல ஒலிகள்உண்டாகின்றன. பணிலம் - சங்கு. பணை - முரசம், அசனி- இடி. உயிர்த்தல் - ஒலித்தல். ***(74-1)***

***388. வானோர் பசுந் தருவின் மா மலர்கள் தூவ,***
***ஏனோரும் நின்று,'சயம் உண்டு' என இயம்ப,***
***தான் ஓர் பெருங்கருடன் என்ன, எதிர் தாவிப்***
***போனான்,விரைந்து, கடிதே போகும் எல்லை.***

பசுந்தரு -கற்பகம். ***(74-2)***

***389. என்று தன் இதயத்து உன்னி, எறுழ் வலித் தடந் தோள் வீரன்***
***நின்றனன், நெடியவெற்பின்; நினைப்ப அரும் இலங்கை மூதூர்***

***ஒன்றிய வடிவம்கண்டு, ஆங்கு, உளத்திடைப் பொறுக்கல் ஆற்றான்;***
***குன்று உறழ்புயத்து மேலோன் பின்னரும் குறிக்கலுற்றான்.***

எறுழ் - மிக்க. வீரன்- அனுமன், வெற்பு - மகேந்திரமலை ***(94-1)***

*2.* ***‘ஊறு மிகவேஉறினும், யானும் அமர் தேரேன்,***
***தேறல் இல்அரக்கர் புரி தீமை அது தீர்வுற்று,***
***ஏறும் வகை எங்குள? இராமனிடை அல்லால்,***
***மாறும் மதி வேறுபிறிது இல்’ என மதித்தான்.***

*பாடலின் (கம்ப. 4828) மறுபதிப்பு.* ***(73-1)***

***391. ‘கண்டவனப்பான், மேனி கரக்கும் கருமத்தான்,***
***கொண்டல்செறிப்பான், வானரம் என்றும் கொளல்***
***அன்றே;***
***அண்டம்அனைத்தும் பூரணன் ஆகும் அவன்***
***ஆகும்;***
***சண்டைகொடுத்தும் கொள்வன்’ எனத் தான் சலம்***
***உற்றாள்.***

*அனுமனை இறைவனாகஇலங்கைமாதேவி கருதுதல். சலம் - கோபம்.* ***(86-1)***

***392. ஆயவன்அருளால், மீட்டும் அந்தரி அறைந்தாள்,***
***‘முன் நாள்***
***மாய மா நகரம்தன்னை வகுத்து, அயன் என்னும்***
***மேலாம்***

*கைப் பாடல்கள் 863* **தூயவன் என்னைநோக்கி, “சுந்தரி ! காப்பாய்”**
***என்று, ஆங்கு, ஏயினன், இதற்குநாமம் இலங்கை என்று எவரும் போற்ற.***

*அந்தரி -இலங்கைமாதேவி* ***(93-1)***

***393. இத் திறம்அனந்த கோடி இராக்கதக் குழுவின்***
***உள்ளார்***
***தத்தம செய்கைஎல்லாம் தனித் தனி நோக்கி,***
***தாங்காது,***
***‘எத் திறம்இவர்தம் சீரை எண்ணுவது ?’ எனவே,***
***அண்ணல்***
***உத்தமன்தேவிதன்னை ஒழிவு அற நாடிப் போனான்.***

*இராக்கதரை எண்ணல்அரிது என்ற அனுமன் நினைவு.* ***(120-1)***

***394. கிடந்தனன்,வடவரை கிடந்தபோல்; இரு***
***தடம் புயம்திசைகளை அளக்கத் தாங்கிய***
***உடம்பு உறுமுயற்சியின் உறங்கினான், கடை***
***இடம் பெறுதீவினை யாவும் ஏத்தவே.***

*வடவரை - மேருமலை.* ***(123-1)***

*395.    குடம் தரும்செவிகளும், குன்றம் நாணுறத்*
*தடந் தருகரங்களும், தாளும், தாங்குறாக்*
*கிடந்தது ஓர்இருள் எனக் கிடந்துளான்தனை*
*அடைந்தனன்,அஞ்சுறாது-அனுமன் ஆண்மையான்.*

*கும்பகர்ணனைக் கிடந்தஇருள் என்றார்.*    ***(130-1)***

***3. காட்சிப்படலம்***

*396.    எயிலின்உட்படு நகரின் யோசனை எழு-நூறும்*
*அயிலினின் படர்இலங்கை மற்று அடங்கலும்*
*அணுகி,*
*மயல் அறத் தனிதேடிய மாருதி, வனசக்*
*குயில் இருந்தஅச் சோலை கண்டு, இதயத்தில்*
*குறித்தான்.*
*எயில் - மதில்.மயல் - மயக்கம். வனசக் குயில் - தாமரைக் குயில் சீதையைக் குறித்தது.*
***(1-1)***

*397.    அஞ்சனத்துஒளிர் அமலனை மாயையின் அகற்றி,*
*வஞ்சகத்தொழில் இராவணன் வவ்வினன்*
*கொடுவந்து,*
*இஞ்சி உட்படும்இலங்கையின் சிறையில் வைத்திட,*
*ஓர்*
*தஞ்சம் மற்றுஇலை; தான் ஒரு தனி இருந்து*
*அயர்வாள்.*

*இஞ்சி- மதில். தஞ்சம் - ஆதரவு.*    ***(2-1)***

*398.    கண்ணின்நீர்ப் பெருந் தாரைகள் முலைத் தடம்*
*கடந்து*
*மண்ணின்மீதிடைப் புனல் என வழிந்து அவை ஓட,*
*விண்ணைநோக்குறும்; இரு கரம் குவிக்கும்; வெய்து*
*உயிர்க்கும்;*
*எண்ணும் மாறுஇலாப் பிணியினால் இவை இவை*
*இயம்பும்*

*சீதையின் அவலம்கூறப்பெறுகிறது.*    ***(10-1)***

*399.    ‘மாய மானின்பின் தொடர்ந்த நாள், “மாண்டனன்”*
*என்று*
*வாயினால் எடுத்துஉரைத்தது வாய்மை கொள்*
*இளையோன்*

***போய், அவன்செயல் கண்டு, உடல் பொன்றினன்***
***ஆகும்;***
***ஆயது இன்னது என்றுஅறிந்திலேன்' என்று என்றும்***
***அயர்வாள்.***

*மாயமானின் பின்போய் இருவரும் இறந்தனரோ என்ற ஐயம் சீதைக்கு எழுகிறது.* ***(16-1)***

***400. இன்னஎண்ணி, இடர் உறுவாள் மருங்கு,***
***உன் ஓர் ஆயிரகோடி அரக்கியர்***

*கைப் பாடல்கள் 865* ***துன்னு காவலுள், தூய திரிசடை***
***என்னும் மங்கைதுணைஇன்றி, வேறுஇலாள்.***

*உன் - நினைக்கப்படும்.* ***(29-1)***

***401. தரும நீதிதழுவிய சிந்தை கொண்டு***
***உரிய வீடணன்தந்தருள் ஒண்டொடி,***
***திரிசடைக்கொடி, நாள்தொறும் தேற்று சொல்***
***அருளினால், தனதுஆவி பெற்று உய்ந்துளாள்.***

*வீடணன் மகள் திரிசடைதேற்றப்பிராட்டி உய்ந்தாள்.* ***(29-2)***

***402. அன்னள் ஆயஅருந்ததிக் கற்பினாள்***
***மன்னு சோலையில்மாருதியும் வர,***
***தன் இடம் துடித்துஎய்துற, சானகி***
***என்னும் மங்கை,இனிது இருந்தாள் அரோ.***

*அனுமன்வர சானகிக்குஇடம்துடித்தது.* ***(29-3)***

***403. 'தாட்சிஇன்று' என, திரிசடையும், 'சாலவும்***
***மாட்சியின்அமைந்தது, மலர் உளாள் தொழும்***
***காட்சியாய் !இக் குறி கருதும் காலையில்,***
***ஆட்சியே கடன்என அறிந்து நல்குவாய்.***

*மலர் உளாள் -இலக்குமி. இக்குறி - நிமித்தம்.* ***(32-1)***

***404. மீட்டும்,அத் திரிசடை என்னும் மென் சொலாள்,***
***'தோள் தடம்பொரு குழைத் தொண்டைத்***
***தூய்மொழி***

***கேட்டி; வெங் கடுஎனாக் கிளர் உற்பாதம்ஆய்,***
***நாட்டினை;யாவரும் நடுக்கம் காண்டுமால்.***

*தொண்டை -தொண்டைக்கனி போன்ற வாய். கடு - விடம். உற்பாதம் -துர்நிமித்தம்.* ***(53-1)***

***405. சிரம் ஒருமூன்றினார்; திருக்கு மூன்றினார்;***
***கரம் ஒருமூன்றினார்; காலும் மூன்றினார்;***
***உரம் உறு வனமுலை வெரிநின் மூன்று உளார்;***
***பொரு அரும் உலகையும் புதைக்கும் வாயினார்.***

*திருக்கு - கண்கள்.வெரிந் - முதுகு.* ***(55-1)***

***406. என்னவாழ்த்திய மாருதி, 'ஈது நாம்***
***இன்னும்காண்டும்' என, மறைந்து எய்தினான்;***
***சொன்ன வாள் அரக்கன் சுடு தீச் சுடும்***
***அன்னை வைகுறும்அவ் இடத்து ஆயினான்.***

*அரக்கன் -இராவணன்.* ***(101-1)***

***407. 'இன்று நாளைஅருளும் திருவருள்***
***என்று கொண்டு,இதனால் அழிவேனை நீ***
***கொன்று இறந்தனைகூடுதியோ ? குழை***
***தின்று உறங்கிமறம் தவாச் செல்வியே !***

*காட்சிப்படலம்102ஆம்பாட்டை (கம்ப. 5171) தழுவியது.* ***(103-1)***

***408. என்றனன்,எயிறு தின்னா, எரி எழ விழித்து நோக்கி***
***நி....லத் தாவிநிலன் ஒளி கலனில் தோய,***
***மின்தனை மின்சூழ்ந்தென்ன அரம்பையர் சூழ,***
***மெல்லச்***
***சென்று,அவன்தன்னைச் சார்ந்தாள், மயன் அருள்***
***திலகம் அன்னாள்.***

*மயன் அருள் திலகம் -மண்டோதரி.* ***(149-1)***

***409. பொருக்கெனஅவனி...க...கொடி முறுவல் பூப்ப,***
***அரக்கர்கோமகனை நோக்கி, 'ஆண்மை அன்று;***
***அழகும் அன்றால்***
***செருக்கு உறுதவத்தை, கற்பின் தெய்வத்தை,***
***திருவை இன்னே***

***வெருக் கொளச்செய்வது ! ஐயா !' என, இவை***
***விளம்பலுற்றாள்;***

*அரக்கர் கோமகனை -இராவணனை. இங்கே ஐந்து பாடல்கள் 408 முதல் 412 வரை. மண்டோதரி இராவணனைகைப் பாடல்கள் 867நோக்கிப் பேசியதாகவருவன. இத்ததைய குறிப்பு கம்பர் வேறெங்கும் அமைத்ததாக இல்லை.*
***(149-2)***

*410.* ***'செம் மலர்த் திருவின் நாளும் சிறப்பு உறு திலதம்***
***அன்னார்,***
***வெம்மை உற்றுஉன்மேல் வீழ்வார், வெள்கியே நகை***
***செய்து ஓத,***
***தம் மனத்து ஆசைவேறோர் தலைமகற்கு உடையாள்***
***தன்னை***
***அம்மலற்றுஇறைஞ்சும் வேட்கை ஆடவற்கு உரியது***
***அன்றே.***

*நகை செய்து -இகழ்ந்து. இறைஞ்சும் வேட்கைதான் உள்ளதே அன்றி வேறு பயன் இல்லை என்பதாம்.* ***(149-3)***

*411.* ***புலத்தியன்மரபின் வந்து புண்ணியம் புரிந்த***
***மேன்மைக்***
***குலத்து இயல்புஅதனுக்கு என்றும் பழி அன்றோ ?***
***என்றும் கொள்ளாய் !***
***வலத்து இயல்ஆண்மைக்கு ஈது மாசு' மதிப்பி.......***
***..............................................................................***

*வலத்து இயல் ஆண்மை -சென்ற போர் தொறும் வென்றியே புனையும்வல்லமையாம்.* ***(149-4)***

*412.* ***வாச மென்குழலினாரால், மண்ணினில், வானில்,***
***யார்க்கும்***
***நாசம் வந்துஏன்று... மறைகளே நவிலும் மாற்றம்***
***பூசல் வண்டுஉறையும் தாராய் ! அறிந்தும் நீ,***
***புகழால், பொற்பால்,***
***தேசுடையவளோ, என்னின், சீதையும் ?..........***

*புகழ் பொற்பு தேசுஆகியவற்றில் யானும் சீதையும் ஒன்றே என்பது மண்டோதரி வார்த்தை.* ***(149-5)****413.* ***என்றார்;இன்னும் எத்தனை சொல் கொண்டு இதம்***
***மாறக்***
***கன்றாநின்றார்,காலும் எயிற்றார், கனல் கண்ணார்;***

***ஒன்றோ ? மற்றும் ஆயிர கோடி உளர் அம்மா !***
***பொன்றா வஞ்சம்கொண்டவர் இன்னும்***
***புகல்கின்றார்;***

*அரக்கியர் சீதையைமனங்கொளத் தேற்ற வெருட்டி உரப்பியவாறு சொல்லப் பெறுகிறது.* ***(156-2)***

***414. தீயோர்செய்கைதானும், இராமன் ஒரு தேவித்***
***தாயாள் துன்பும், மாருதி கண்டே தளர்வு எய்தி,***
***மாயாது ஒன்றேஅன்றி, மனத்தே மலி துன்பத்து***
***ஓயாது உன்னிச்சோர்பவன் ஒன்று அங்கு***
***உணர்வுற்றான்.***

*தாயாள் - சீதை. மனத்தே மிக்க துன்பத்தால், சலியாது கருதிச் சோர்பவன் ஆயினன் அனுமன்.* ***(159-1)***

***4. உருக் காட்டுபடலம்***

***415. சுற்றிய கொடி ஒன்றைத் துணிந்து, தூயள், ஓர்***
***பொன் தடங்கொம்பினில் பூட்டி, 'பூமியே !***
***நல் தவம்உடையள் யான்ஆகின், நாயகன்***
***வெற்றி சேர்திருவடி மேவுவேன்' என்றாள்.***

*ஒரு கொடியை வெட்டிக்கொம்பில் பூட்டித் தற்கொலைக்கு முயற்சித்தாள் பிராட்டி.* ***(21-1)***

***416. என்றுஅருந்ததி, மனத்து, எம்மை ஆளுடைத்***
***துன்ற அருங் கற்பினாள், சுருதி நாயகன்***
***பொன் தரு மலர்ப் பதம் வழுத்தி, பூங் கொடி***
***தன் தனிக்கழுத்திடைத் தரிக்கும் ஏல்வையின்.***

*சுருதி நாயகன் -இராமன், ஏல்வை - பொழுது.* ***(21-2)***

***417. எய்தினள், பின்னம் எண்ணாத எண்ணி, 'ஈங்கு***
***உய் திறம்இல்லை !' என்று ஒருப்பட்டு, ஆங்கு ஒரு***
*கைப் பாடல்கள் 869* ***கொய்தளிர்க் கொம்பிடைக் கொடி இட்டே தலை***
***பெய்திடும்ஏல்வையில், தவத்தின் பெற்றியால்.***

*மேற்பாட்டு போன்றதே இதுவும்.* ***(21-3)***

***418. தோன்றினன், தனது உருக் காண; தூயவள்***
***மூன்றுஉலகினுக்கும் ஓர் அன்னை, மொய்ம் மலர்***

***தேன் திகழ்திருவடி சென்னியால் தொழுது***
***ஆன்ற பேர் அன்புகொண்டு, அறைதல்மேயினான்;***

*அனுமன் சீதையைக் கண்டுதிருவடி தொழுதல்.* ***(22-1)***

***419. நோக்கினேன்; அரக்கியர், நுனிப்பு இல் கோடியர்***
***நீக்கினர்துயிலினை; நின்னைக் காணுதற்கு***
***ஆக்கிய காலம்பார்த்து, அயல் மறைந்து, பின்***
***தாக்கு அணங்குஅவர் துயில் கண்டு, சார்ந்துளேன்.***

*நுனிப்பு - கணக்கு.தாக்கு அணங்கு அவர் - தீண்டி வருத்தும் தெய்வம்போன்றலர் அரக்கியர்.* ***(23-1)***

***420. 'நிலை பெற,அயன் இருந்து, இயற்று நீலத்தின்***
***சிலை மணிவள்ளமும் உவமை சேர்கல;***
***"அலவன், அது" என்பரால், அறிவு இலோர்; அவர்***
***உலைவு அறு திருமுழங்காலுக்கு ஒப்பு உண்டோ ?***

*இராமன் முழங்காலுக்குஒப்பு பிரமன் செய்த நீலமணியால் ஆகிய வள்ளம். நண்டு என்பன பொருத்தமற்றன என்பது இப்பாடல் கருத்து.* ***(43-1)***

***421. 'எள்ளற்கு அரிய நிலை ஆகி, இயைந்து தம்மில்***
***இணை உர ஆய்***
***தள்ளப்படாத தகைஆகி, சார் கத்திரிகை வகை***
***ஒழுகா,***
***அள்ளற் பள்ளத்துஅகன் புனல் சூழ் அகன்ற***
***வாவிக்குள் நின்ற***
***வள்ளைத் தண்டின்வனப்பு அழித்த, மகரம்***
***செறியாக்குழை' என்றான்***

*குண்டலம்அணியாச் செவிகளின் உவமை - கத்திரிக்கோலின் காது, வள்ளைத் தண்டு.* ***(49-1)***

***422. தவம் தந்தநெஞ்சின் தனது ஆர் உயிர்த்***
***தம்பியோடும்***
***நவம் தந்தகுன்றும், கொடுங் கானமும், நாடி ஏகி,***
***கவந்தன்தனது ஆவிகவர்ந்து, ஒரு காலும் நீங்காச்***
***சிவம் தந்து,மெய்ம்மைச் சபரிக்குத் தீர்ந்து வந்தான்.***

*கவந்தனுக்கு சிவம்தந்தான் - சிவம் - மங்கலம். தீர்ந்து வந்தான் - முடிபாகி வந்தான் என்று சாம்யப் பொருள் உரைக்கலாம்.* ***(88-1)***

*423.* **‘சென்றேன்அடியேன், உனது இன்னல் சிறிதே**
**உணர்த்தும் அத்துணையும்**
**அன்றே, அரக்கர்வருக்கம் உடன் அடைவது;**
**அல்லாது, அரியின் கை**
**மன்றே கமழும்தொடை அன்றே, நிருதர் குழுவும்**
**மாநகரும்**
**என்றே இறைஞ்சி,பின்னரும், ஒன்று இசைப்பான்**
**உணர்ந்தான் ஈறு இல்லான்.**

*அனுமன், நான்இராமன்பால் சென்று தெரிவிக்கும் அளவுதான் தாழ்த்தது. தெரிவித்தவுடன் அரக்கரும் இலங்கையும் ‘குரங்கின் கைப் பூமாலை போல்’ ஆகிவிடும் என்று பிராட்டியை வணங்கி, பிறகும் ஒன்று சொல்ல மனத்தில் உணர்ந்தான் ஈறு இல்லான் - அனுமன். சிரஞ்சீவி என்னும் பொருள்.*
***(117-1)***

### 5. சூடாமணிப்படலம்

*424.* **‘சேண் தவாநெறி செல் பகல் தீங்கு அற,**
**மீண்டு,தம்பியும் வீரனும் ஊர் புக,**
**பூண்ட பேர்அன்பினோருடன் போதியால் !**
**ஈண்டு யான் வரம்வேண்டினென், ஈறு இலாய் !’**

*ஈறு இலாய் - முடிவுஇல்லாத அனுமனே ! ஊர் -அயோத்தி.* ***(31-1)****கைப் பாடல்கள்*
*871425.* **என்றுஉரைத்திடுதி; பின், அயோத்தி எய்தினால்,**
**வென்றி வெஞ்சிலையினான் மனம் விழைந்திடாது;**
**அன்றியே, மறைநெறிக்கு அருகன் அல்லனால்;**
**பொன் திணிமௌலியும் புனைதல் இல்லையால்.**

*இராமனோடு நான்அயோத்தி வந்தாலும் மறைநெறி இயற்றும் தகுதியும், முடிபுனையும் தகுதியும் எனக்கு இல்லை என்று தன்மனம் நொந்து பிராட்டி கூறினாள்.*
***(38-1)***

*426.* **“கொற்றவன்சரத்தினால் குலைகுலைந்து உக,**
**இற்றது இவ்இலங்கை” என்று, இரங்கி ஏங்கவே,**
**மற்று ஒரு மயன்மகள் வயிறு அலைத்து உக,**
**பொற்றொடி ! நீயும் கண்டு, இரங்கப் போதியால்**

*அனுமன் சீதையைத்தேற்றியது, கொற்றவன் - இராமன். பொற்றொடி - சீதை. மண்டோதரி வயிற்றில் அடித்து அழ அதுகண்டு சீதை வருந்துவாள் என்பதாம்.*
***(65-1)***

***427. அங்கு, அதுஅஞ்சி நடுங்கி, அயன் பதி அண்மி,***
***"இங்கு நின் வரவுஎன்னை" எனக் கனல்வு எய்த,***
***மங்கை பங்கனொடுஎண் திசையும் செல, மற்றோர்***
***தங்கள் தங்கள்இடங்கள் மறுத்தமை தைப்பாய்.***

*அது - சயந்தன் ஆகியகாகம். மங்கைபங்கன் -சிவபிரான்., இதுமுதல் 5 பாடல்கள்5421 எண்ணுள்ள பாடலிற்கண்ட கதையின் விரிவாகும்.*
***(77-1)***

***428. 'இந்திரன்தரும் மைந்தன் உறும் துயர் யாவும்***
***அந்தரத்தினில்நின்றவர் கண்டு, "இனி, அந்தோ !***
***எந்தைதன் சரண்அன்றி, ஓர் தஞ்சமும் இன்றால்;***
***வந்து அவன் சரண்வீழ்க !" என உற்றதும்***
***வைப்பாய்.***

*மைந்தன் - சயந்தன்.எந்தை - இராமபிரான்.* ***(77-2)***

***429. "ஐய நின்சரணம் சரண் !" என்று, அவன் அஞ்சி,***
***வையம் வந்துவணங்கிட, வள்ளல் மகிழ்ந்தே,***
***"வெய்யவன் கண்இரண்டொடு போக !" என, விட்ட***
***தெய்வ வெம் படைஉற்றுள தன்மை தெரிப்பாய்.***

*அவன் - சயந்தன்.வள்ளல் - இராமன் "கண் இரண்டொடு போக" சயந்தன் ஆகிய காகத்துக்கு இரண்டு கண்களை மட்டும் போக்கியது, ஆகும். தெய்வ வெம் படை - "அயல் கல் எழு புல்லால் வேக வெம்படை" என்று (5421) முன்பு கூறப்பட்டது.*
***(77-3)***

***430. "எந்தை,நின் சரணம் சரண் !" என்ற இதன்னால்,***
***முந்தை உன்குறையும் பொறை தந்தனம்; முந்து உன்***
***சந்தம் ஒன்றுகொடித் திரள் கண்கள்தமக்கே***
***வந்து ஓர் நன்மணி நிற்க !" என, வைத்ததும்***
***வைப்பாய்.***

*காகம்எல்லாவற்றிற்கும் இரண்டு கண்களுக்கும் ஒரு மணி (ஒரு பார்வை) நிற்க என வைத்து கூறப்பெறுகிறது.* ***(77-4)***

***431. 'வேகம் விண்டு சயந்தன் வணங்கி, விசும்பில்***
***போக, அண்டர்கள் கண்டு, அலர் கொண்டு***
***பொழிந்தார்;***
***நாக நம்பன்இளங் கிளை நன்கு உணராத,***
***பாகு தங்கியவென்றியின், இன் சொல் பணிப்பாய்.***

*இளம் கிளை-இலக்குவன். உணராத என்னாது 'நன்கு உணராத' என்ற சொல்லாட்சி கருதுக. இதனைப் 'பாகு தங்கிய வென்றி' என்றது தன்னால் மட்டுமே நுகர்ந்து இன்புறும் வெற்றியாதலின். தனக்காகத் தன் நாயகன் மேற்கொண்ட செயல் ஆதலின் சீதை நினைந்து இன்புறற்கு ஏதுலாயிற்று.* ***(77-5)***

### *6. பொழில்இறுத்த படலம்*

***432. எனப் பதம்வணங்கி அன்னார் இயம்பிய வார்த்தை***
***கேளா,***
***கனக் குரல் உருமுவீழ, கனமலை சிதற, தேவர்***
***மனத்து அறிவுஅழிந்து சோர, மாக் கடல் இரைப்புத்***
***தீர,***
***சினத்து வாய்மடித்து, தீயோன், நகைத்து, இவை***
***செப்பலுற்றான்.***

*கைப் பாடல்கள் 873 அனுமனால் சோலைஅழிந்தது கேட்ட இராவணன் சீறிய படி இதில் சொல்லப் பெறுகிறது. தீயோன்-இராவணன்.* ***(57-1)***

### *7. கிங்கரர்வதைப் படலம்*

***433. ஓசையின்இடிப்பும் கேட்டு, ஆங்கு உருத்து எழு***
***சினத்தன் ஆகி,***
***'ஈசன் மால் எனினும் ஒவ்வாது, ஈது ஒரு குரங்கு***
***போலாம் !***
***கூசிடாது இலங்கைபுக்கு, இக் குல மலர்ச்***
***சோலையோடு***
***மாசு அறு நகரைமாய்க்கும் வலிமை நன்று ! என்ன***
***நக்கான்.***

*இராவணன் நக்கான்என்க.* ***(1-1)***

***434. என்றலும்,இரு கை கூப்பி, இரு நிலம் நுதலில்***
***தோய,***
***சென்று அடிபணிந்து, 'மண்ணும் தேவரும் திசையும்***
***உட்க,***
***வென்றி அன்றுஎனினும், வல்லே விரைந்து நாம்***
***போகி, வீரக்***
***குன்று அனகுரங்கைப் பற்றிக் கொணர்தும்' என்று***
***இசைத்துப் போனார்.***

'வென்றி அன்று' என்றதுகுரங்கினை வெல்வது ஒரு வெற்றியாகக் கருதப்படாது என்றதாம். *(2-1)*

***435. அதுபொழுது, அவர் அது கண்டார்; அடு படை பலவும் எறிந்தார்;***
***கதிகொடு சிலவர்தொடர்ந்தார்; கணை பலர் சிலைகள் பொழிந்தார்;***
***குதிகொடு சிலவர்எழுந்தே குறுகினர்; கதைகொடு அறைந்தார்;***
***மதியொடு சிலவர்வளைந்தார்; மழு, அயில், சிலவர் எறிந்தார்.***

கதி - வேகச்செலவு. கதை - தண்டு. *(24-1)*

***436. அனுமனும்,அவர் விடு படையால், அவர் உடல் குருதிகள் எழவே,***
***சின அனல் எழ,ஒரு திணி மா மரம்அதில் உடல் சிதறிடவும்***
***தனுவொடு தலைதுகள்படவும், சர மழை பல பொடிபடவும்***
***தினவு உறு புயம்ஒடிபடவும், திசைதிசை ஒரு தனி திரிவான்.***

அவர் படையால் அவர்உடல் குருதி எழச் செய்தான். *(24-2)*

***437. உரைத்தஎண்பதினாயிர கோடி கிங்கரரோடு***
***இரைத்த வந்தமாப் பெரும் படை அரக்கர் எண்ணிலரைத்***
***தரைத்தலத்தின்இட்டு அரைத்து, ஒரு தமியன் நின்றது கண்டு,***
***உருத்து அவ்எண்பதினாயிர கோடியர் உடன்றார்.***

எண்பதாயிரம் கோடிகிங்கரரோடு வந்த அரக்கர் மடிந்தனர். *(39-1)*

***438. சினந்துமற்று அவர், தீ எழப் படைக்கலம் சிதறி,***
***கனம் துவன்றியதுஎன, கரு மலை என, கடல் போல்***
***அனந்தனும் தலைதுளக்குற, அமரர்கள் அரவின்***
***மனம் துளக்குற,வளைத்தனர்,-எண் திசை மருங்கும்.***

கனம் துவன்றியது -மேகம் நெருங்கியது. அனந்தன் - ஆதிசேடன். *(39-2)*

*439. எடுத்துஎறிந்தனர் எழு மழுச் சிலர்; சிலர் நெருக்கித்*
*தொடுத்துஎறிந்தனர் சூலங்கள்; சுடு கதைப்*
*படையால்*
*அடித்து நின்றனர்சிலர்; சிலர் அருஞ் சிலைப் பகழி*
*விடுத்துநின்றனர்-வெய்யவர் விளைந்த வெஞ்*
*செருவே.*

*கைப் பாடல்கள் 875 கதை -தண்டு.* ***(39-3)***

*440. ஒழிந்திடும்கடை உகத்தினில் உற்ற கார்இனங்கள்*
*வளைந்து பொன்கிரிமேல் விழும் இடி என,*
*மறவோர்*
*பொழிந்த பல்படை யாவையும் புயத்திடைப்*
*பொடிபட்டு*
*அழுந்த,மற்றவரோடும் வந்து அடுத்தனன், அனுமன்.*

*பொன் மலை மேல்விழும் இடி - அனுமன் புயத் திடைப்பட்ட படைகள். அனுமன் - பொன்மலை.* ***(39-4)***

*441. 'கட்டும்' என்றனர்; 'குரங்கு இது கடிய கைப்*
*படையால்*
*வெட்டும்'என்றனர்; விழி வழி நெருப்பு உக,*
*விறலோர்*
*கிட்டி நின்றுஅமர் விளைத்தனர்; மாருதி கிளர் வான்*
*முட்டும் மா மரம்ஒன்று கொண்டு, அவருடன்*
*முனைந்தான்.*

*கிட்டி நின்று -நெருங்கி. வான்முட்டும் மாமரம் - மாமரம் என்றும் பெரிய மரம் என்றும் கூறலாம்.* ***(39-5)***

*442. தலைஒடிந்திட அடித்தனன், சிலர்தமை; தாளின்*
*நிலை ஒடிந்திடஅடித்தனன்; சிலர்தமை; நெருக்கிச்*
*சிலை ஒடிந்திடஅடித்தனன், சிலர் தமை; வயப்*
*போர்க்*
*கலை ஒடிந்திடஅடித்தனன், அரக்கர்கள் கலங்க.*

*போர்க்கலை ஒடிந்திட- எதிர்ந்தார் கற்று வைத்திருந்த போர்த்திற அறிவு இல்லையாம்படி.* ***(40-1)***

*443. என்றலும்அரக்கர் வேந்தன் எரி கதிர் என்ன*
*நோக்கி*
*கன்றிய பவழச்செவ் வாய் எயிறு புக்கு அழுந்தக்*
*கவ்வி,*

**ஒன்றுஉரையாடற்கு இல்லான், உடலமும் விழியும்**
**சேப்ப,**
**நின்ற வாள்அரக்கர்தம்மை நெடிதுற நோக்கும்காலை.**

வாய் எயிறு புக்குஅழுந்தக்கவ்வலும், உடலமும் விழியும் சிவத்தலும் இராவணன் சினத்தின் மெய்பாடுகள். ***(61-1)***

### *8. சம்பு மாலிவதைப் படலம்*

***444. அது கண்டுஅரக்கன் சினம் திருகி, ஆடற் பகழி***
***அறுநூறு***
***முதிரும் வயப்போர் மாருதிதன் புயத்தில் மூழ்க***
***விடுவித்தான்;***
***புதையுண்டு உருவிப்புறம் போக, புழுங்கி அனுமன்***
***பொடி எழும்பக்***
***குதிகொண்டு,அவன் தேர் விடும் பாகன் தலையில்***
***சிதறக் குதித்தனனால்***

*அரக்கன் - சம்புமாலி.600 அம்புகளும் அனுமன் புயத்தில் புதைந்து உருவிப் புறம் போயது.* ***(45-1)***

### *9. பஞ்சசேனாபதிகள் வதைப் படலம்*

***445. என்று அவர்ஏவு சரங்கள் இறுத்தே,***
***'பொன்றுவிர்நீர், இது போது' என, அங்கு ஓர்***
***குன்று இரு கைக்கொடு எறிந்து, அவர் கொற்றம்***
***இன்று முடிந்ததுஎனத் தனி ஆர்த்தான்.***

பொன்றுவிர் -அழிவீர். கொற்றம் - வெற்றி. ***(57-1)***

***446. அப்பொழுதுஅங்கு அவர் ஆயிர கோடி***
***வெப்பு அடை வெஞ்சரம் வீசினர்; வீசி,***
***துப்புறுவெற்புஅதனைத் துகள் செய்தே;***
***மெய்ப்படுமாருதிமேல் சரம் விட்டார்.***

வெப்பு அடை - வெம்மைபொருந்திய. துப்பு - வலிமை. ***(57-2)***

***447. விட்டசரத்தை விலக்கி, அ(வ்) வீரன்,***
***வட்ட விசும்புறுமா மரம் வாங்கித்***

***தொட்டுஎறிதற்கு மு(ன்)னே, துகளாகப்***
***பட்டிட,வெய்யவர் பாணம் விடுத்தார்.***

பாணம் -அம்பு. *(57-3)*

## *10.அக்ககுமாரன்வதைப் படலம்*

*448. தடுவையின்மரங்களோடு சகடைகள் திமிலை தாக்க*
*உடுஇனம் ஆனதுஎல்லாம் உதிர்ந்த, பூ உதிர்ந்தது*
*என்ன;*
*அடு புலி அனையவீரர் அணிகல ஆர்ப்பும், ஆனை*
*நெடு மணிமுழக்கும், ஓங்கி, மண்ணுலகு அதிர்ந்தது*
*அன்றே.*

இப்பாடலை *5737* ஆம்பாடலோடு ஒப்பிடுக. *(12-1)*

*449. பத்தியில்தேர்கள் செல்ல, பவளக் கால் புடைகள்*
*சுற்ற,*
*முத்தினில்கவிகை சூழ, முகில் என முரசம் ஆர்ப்ப,*
*மத்த வெங்கரிகள் யாவும் மழை என இருண்டு*
*தோன்ற*
*தத்திய பரிகள்தன்னின் சாமரை தழைப்ப,-போனான்.*

இப்பாடலை *5729* ஆம்பாடலோடு ஒப்பிடுக. *(15-1)*

*450. தீய வல்அரக்கர்தம்மில் சிலர் சிலர் செம் பொற்*
*சின்னம்*
*வாயின் வைத்துஊத, வீரர் வழி இடம் பெறாது*
*செல்ல,*
*காயும் வெங்களிறு, காலாள் கடும் பரி, கடுகிச்*
*செல்ல*
*நாயகன்தூதன்தானும் நோக்கினன்; நகையும்*
*கொண்டான்*

இப்பாடலை, *5731* ஆம்பாடலோடு ஒப்பிடுக. *(16-1)*

*451. புலிப் போத்தின் வயவர் எல்லாம்-பொரு கரி, பரி,*
*தேர், பொங்க.*
*கலித்தார்கள்உம்பர் ஓட, கடையுகத்து எறியும்*
*காலின்*
*ஒலித்து, ஆழிஉவாவுற்றென்ன உம்பர் தோரணத்தை*
*முட்ட*
*வலித்தார் திண்சிலைகள் எல்லாம்; மண்டின*
*சரத்தின் மாரி.*

இப்பாடலை. 5736ஆம் பாடலோடு ஒப்பிடுக. **(23-1)**

***452. எடுத்தனன்எழு ஒன்று; அங்கை எடுத்து இகல்***
***அரக்கர் சிந்தப்***
***பொடித்தனன்;இரதம், வாசி, பொரு களிறு, இதனை***
***எல்லாம்***
***முடித்தனன்,நொடிப்பில்; பின்னும், மூசு போர்***
***அரக்கர் வெள்ளம்***
***அடுத்து அமர்கோல, மேன்மேல் அடு படை தூவி***
***ஆர்த்தார்.***

*வாசி -குதிரை.* **(24-1)**

***453. செறி நாண்உரும் ஒலி கொண்டான்; ஒருபது***
***திசைவாய்கிழிபட அழல்கின்றான்;***
***'இறுவாய், இதுபொழுது' என்றான்; எரி கணை***
***எழு கார்மழை பொழிவது போல,***
***பொறிவாய் திசைதொறும் மின் தாரையின் நிலை***
***பொலியச்சினமொடு பொழிகின்றான்;***
***உறு மாருதி உடல்உக வெங் குருதிகள்***
***ஒழியாது,அவனொடு மலைவுற்றான்.***

*ஒருபது திசை -எண்திசையோடு மேல், கீழ் சேர்ந்து பத்து எனல் வழக்கு.*
**(32-1)**

***454. மலைபோல்உறு புய வலி மாருதி சினம்***
***வந்துஏறிட, எந்திரமும் தேர்த்***
***தொலையாது அவன்விடு சர மாரிகள் பல***
***துண்டப்படும் வகை மிண்டி, தன்***
***வலி சேர்கரம்அதில் எழுவால் முழுவதையும்***
***மண்டித்துகள் பட மடிவித்தான்;***
 ***புலிபோல் அடு சின நிருதன் கண்டு அழல்***
***பொங்கிப்பொரு சிலை விளைவித்தான்.***

*மிண்டி - நெருங்கி. நிருதன் - அக்ககுமாரன்.* **(32-2)**

***455. 'மாய்ந்தான், மாருதி கையால், அகிலமும்***
***உடையான்மகன்' என வானோர் கண்டு,***
***ஓய்ந்தார்இலர்,குதி கொண்டார்; உவகையின்***
***ஒழியா நறுமலர் சொரிகின்றார்;***
***சாய்ந்தார்நிருதர்கள் உள்ளார் தமர் உடல்***

***இடறித்திரைமிசை விழ ஓடித்***
***தேய்ந்தார்சிலர்; சிலர் பிடரியில் குதியடி***
***பட ஓடினர்;சிலர் செயல் அற்றார்.***

*அகிலமும் உடையான் -இராவணன். அவன் மகன் அக்ககுமாரன். பிடரியில் குதிபடல் - ஓட்டத்தின் விரைவைக் குறிக்கும் வழக்குச்சொல்.* ***(38-1)***

*456.* ***இன்னனநிகழ்வுழி, இராக்கதக் குழாம்***
***மன்னியசோதியும், அரக்கன் மைந்தனும்,***
***தன் நிகர்அனுமனால் இறந்த தன்மையை***
***முன்னினர் சொல,அவன் முன்பு கேட்டனன்.***

*மன்னிய சோதி -படைத்திரள் குறிக்கும் சொல் போலும்.* ***(47-1)***

*457.* ***அவ் வகைகண்டவர் அமரர் யாவரும்,***
***'உய்வகை அரிது'என ஓடி, மன்னவன்***
***செவ்அடிஅதன்மிசை வீழ்ந்து செப்பினார்,***
***எவ் வகைப்பெரும் படை யாவும் மாய்ந்ததே.***

*மன்னவன் - இராவணன் -அமரர் - பருவத்தேர்.* ***(47-2)***

*458.* ***ஈது மற்றுஇசைவுற, இது கண்டு ஏங்கியே***
***மா துயரத்தொடுமறுகு நெஞ்சுடைத்***
***தூதர் உற்றுஓடினர்; தொழுது, மன்னனுக்கு***
***ஓதினர்; ஓதல்கேட்டு, உளம் துளங்கினான்.***

*தூதர் - பருவத்தேவர்.மன்னன் - இராவணன்.* ***(47-3)***

*459.* ***நாடினார்;நாடியே, நனை வரும் கொம்பு அனார்***
***வாடினார்; கணவர்தம் மார்பு உறத் தழுவியே***
***வீடினார்; அவ்வயின், வெருவி விண்ணவர்கள்தாம்***
***ஓடினார்;அரசன்மாட்டு அணுகி நின்று உரை***
***செய்வார்;***

*விண்ணவர் -பருவத்தேவர் நனைவரும் கொம்பு - அரும்பு தளிர்க்கும் கொம்பை ஒத்தவர்* ***(47-4)***

*.460.* ***"மைந்தனைமடித்தது குரங்கு" என்று ஓதவும்***
***வந்தது போலும்,நம் வாழ்வு நன்று !' எனா,***
***சிந்தையின்அழன்று, எரி விழித்து, 'சென்று, நீர்***
***இந்திரன்பகைஞனைக் கொணருவீர்' என்றான்.***

*மைந்தன் -அக்ககுமாரன். இந்திரன் பகைஞன் - இந்திரசித்து.* ***(49-1)***

***461.*** **என்றலும்,ஏவலுக்கு உரியர் ஓடியே**
**சென்று, மற்றுஅவன் அடி பணிந்து, தீமை வந்து**
**ஒன்றியதிறங்களும் உரைத்து, 'நுந்தையும்**
**இன்று உனைக்கூவினன்' எனவும் சொல்லினார்.**

*ஏவலர் -இந்திரசித்தை அழைத்தபடி.* ***(49-2)***

***11.பாசப்படலம்***

***462.*** **என்றே,'இவன் இப்பொழுது என்கையினால் மடிந்தால்**
**நன்றே மலர்மேல்உறை நான்முகன் ஆதி தேவர்,**
**"பொன்றோம் இனி என்றும்; இருந்து உயிர் போற்றுதற்கு**
**நின்றே துயர்தீர நிறுத்தினன்" என்ப மன்னோ.'**
*கைப் பாடல்கள் 881* இவன் -இந்திரசித்து. 'என்கையால் மடிந்தால் பிரமன் முதலிய தேவர்கள் நம்துன்பம் நீங்கச் செய்தான் என்று சொல்வர்' என்று அனுமன் நினைத்ததாம். ***(50-1)***

***463.*** **எழுந்தான்;எழுந்த பொழுது, அங்கு அரக்கரும் எண்இல் கோடி**
**பொழிந்தார்படைகள்; அவை யாவையும் பொடிந்து சிந்திக்**
**கழிந்து ஓடிட,தன் கை மராமரம் கொண்டு வீசி,**
**செழுந் தார்ப்புயத்து அண்ணல் செறுத்து, உடன் மோதலுற்றான்.**

*செழுந்தார்ப்புயத்துஅண்ணல் - அனுமன். பெயராய் நின்றது.* ***(53-1)***

***464.*** **செறுத்துஎழுந்திடும் அரக்கர்கள் திசை திசை நெருக்கி,**
**மறித்து வெஞ்சமர் மலைதலும், மாருதிக் கடவுள்**
**கறுத்து வஞ்சகர்சிரத்தொடு கரம் புயம் சிதறிப்**
**பொறித்தெறித்திடப் புடைத்தனன், பொரு பணை மரத்தால்.**

*பொறி தெறித்திட -நெருப்புப் பொறி பறக்க.* ***(59-1)***

***465.*** **புகைந்து அரக்கர்கள் விடும் கொடும் படைகளைப் பொறியின்**

***தகைந்து, மற்றுஅவர் உடல்களைத் தலைகளைச்
சிதறி,
மிகும் திறல்கரி, பரி, மணித் தேர், இவை விளிய,
புகுந்துஅடித்தனன், மாருதி; அனைவரும் புரண்டார்.***

*பொறியின் தகைந்து -கலை வன்மையால் தடுத்து.* ***(59-2)***

***466. எடுத்து நாண்ஒலி எழுப்பினன்; எண் திசைக்
கரியும்
படித் தலங்களும்வெடி பட, பகிரண்டம் உடைய,
தொடுத்த வானவர் சிரதலம் துளங்கிட, சினம்
கொண்டு
அடுத்து, அம்மாருதி அயர்ந்திட, அடு சரம்
துரந்தான்***

*இந்திரசித்துவின்செயல்* ***(71-1)***

**12. பிணி வீட்டுபடலம்**

***467. இனையனபற்பலர் இசைப்ப, வெந் திறல்
அனுமனை அமர்க்களம்நின்று, வஞ்சகர்
புனை திருநகரிடைக் கொண்டு போதலை
நினையினர்,நெடிதுற நெருக்கி நேர்ந்துளார்.***

*வஞ்சகர் அனுமனைப்பிணித்து நகர்க்குக் கொண்டு செல்லுதலை நினைந்து நெருக்குகிறார்கள்.* ***(17-1)***

***468. என்னக்கேட்ட அரக்கனுக்கு ஈறு இலாத்
தன் ஓர்ஆற்றலின் மாருதி சாற்றுவான்;
'என் ஓர்நாயகன் ஏவலின், வாரிதி-
தன்னைத் தாண்டிவந்தேன், உனைக் காணவே.'***

*வாரிதி - கடல்.உனை - இங்கு இராவணனை.* ***(108-1)***

***469. தன் உறைக்குஉறுகண் வெய்யோர்தாம் இயற்றலும்
கேட்டு, 'இன்னே,
அன்னவர்க்குஇறுதி ஆக, அணி நகர் அழிப்பல்'
என்னா,
செந் நிறச்சிகைய வெம் போர் மழு, பின்னர்ச்
சேறல் ஒக்கும்-
அல் நிறத்துஅண்ணல் தூதன் அனல் கெழு
கொற்ற நீள் வால்.***

*தன் இறை - இராமன். உறுகண் - துன்பம். அனுமன் வால். மழு பின்னால் செல்வது போன்றது. மழு - நெருப்புப்படை. அனுமன் வாலில் நெருப்பு வைத்தபடியால் அது திருமாலின் மழு போன்றதாயிற்று.* ***(135-1)*** கைப் பாடல்கள் *883****470.*** **உகக்**
***கடை, உலகம் யாவும் உணங்குற, ஒரு தன்***
***நாட்டம்***
***சிகைக் கொழுங்கனலை வீசும் செயல் முனம்***
***பயில்வான் போல,***
***மிகைத்து எழுதீயர் ஆயோர் விரி நகர் வீய; போர்***
***வால்-***
***தகைத்தல் இல்நோன்மை சாலும் தனி வீரன்-***
***சேணில் உய்த்தான்.***

*உகக்கடை - ஊழிமுடிவு. உணங்குற - காய. தனிவீரன் - அனுமன்.*
***(136-1)***

**13. இலங்கைஎரியூட்டு படலம்**

***471. தெய்வநாயகி கற்பு எனும் செந் தழல்***
***பெய்து மாருதிவாலிடைப் பேணியே,***
***பொய் கொள் வஞ்சகப் புல்லர் புரம் எலாம்***
***வெய்தின் உண்டதகைமை விளம்புவாம்.***

*சீதையின் கற்பு எனும்நெருப்பு மாருதி வாலிடைப் பாதுகாக்கப்பட்டு வஞ்சகப் புல்லர் நகரை அழித்தது என்றார்.*

***(முதற்செய்யுள்)***

***472. தேர்எரிந்தன; எரிந்தன திரள் பரி எவையும்;***
***தார் எரிந்தன; எரிந்தன தருக்கு உறு மதமா;***
***நீர் எரிந்தன; எரிந்தன நிதிக் குவை; இலங்கை***
***ஊர் எரிந்தன; எரிந்தன அரக்கர்தம் உடலம்.***

*தார் - மாலை. நீர்எரிதல் தீயின் மிகுதியால்.* ***(37-1)***

***473. எரிந்தமாளிகை; எரிந்தன இலங்கு ஒளிப் பூண்கள்***
***எரிந்த பூந்துகில்; எரிந்தது முரசுஇனம் முதலாய்;***
***எரிந்த மாமணிப்பந்தர்கள்; எரிந்தது கடிகா;***
***எரிந்த சாமரை; எரிந்தது வெண்குடைத் தொகுதி.***

*கடி கா - காப்பமைந்த சோலை.* ***(37-2)***

*474.* **ஆடு அரங்குகள் எரிந்தன; அரக்கியர் சிறுவ-**
**ரோடு எரிந்தனர்; உலப்பில் பல் கொடிகளும் எரிந்த;**
**தேடு அரும் மணிச்சிவிகையோடு அருந் திறல்**
**அரக்கர்**
**வீடு எரிந்தன;எரிந்திடாது இருந்தது என், வினவில் ?**

*சிவிகை - பல்லக்கு.உலப்பு இல் - வற்றுதலற்ற.* ***(37-3)***

*475.* **இனையகாலையில் மயனும் முன் அமைத்தற்கு**
**இரட்டி**
**புனைய, மாருதிநோக்கின், இன்னன புகல்வான்;**
**'வனையும் என்உருத் துவசம் நீ பெறுக' என,**
**மகிழ்வோடு**
**அனையன்நீங்கிட, அனலியும் மறுபடி உண்டான்.**

*மயன் - தெய்வத்தச்சன். மயனுக்கு மிகுதி கூறியதாகிய செய்தி புலப்படவில்லை. அனலி - தீ.* ***(37-4)***

*476.* **'தா இல்மேலவர்க்கு அருந் துயர் விளைத்திடின்,**
**தமக்கே**
**மேவும், அத்துயர்' எனும் பொருள் மெய்யுற,**
**மேல்நாள்**
**தேவர்தம்பதிக்கு இராவணன் இட்ட செந்**
**தழல்போல்,**
**ஒவிலாது எரித்துஉண்டமை உரைப்பதற்கு எளிதோ ?**

*அழகான கருத்து. 'மேலோர்க்குத் துன்பம் செய்தால் அத்துயர் தமக்கே வரும்' என்பதற் கிணங்க. அமராவதிக்கு இராவணன் இந்திரசித்து மூலமாக இட்ட நெருப்பு இலங்கையை எரித்தது என்பதாம்.* ***(43-1)***

*477.* **மற்று ஒருகோடியர் வந்தார்;**
**உற்று எதிர் ஓடிஉடன்றார்;**
**கற்று உறு மாருதிகாய்ந்தே,**
**சுற்றினன்வால்கொடு, தூங்க.**

*உடன்றார் -சீறினார்.* ***(58-1)****கைப் பாடல்கள்* *885****478.***
**உற்றவர் யாரும் உலந்தார்;**
**மற்றுஅதுபோதினில் வானோர்**
**வெற்றி கொள்மாருதிமீதே**
**பொன் தரு மா மலர் போர்த்தார்.**

*உலந்தார் -வற்றினார். பொன்தரு - கற்பகம்.* ***(60-1)***

***479. வன் திறல்மாருதி கேண்மோ !***
***நின்றிடின், நீபழுது; இன்றே***
***சென்றிடுவாய் !'என, தேவர்***
***ஒன்றிய வானில்உரைத்தார்.***

*தேவர் அனுமனைச்செல்லப் பணித்தனர்.* ***(60-2)***

***480. விண்ணவர்ஓதிய மெய்ம்மை***
***எண்ணி, 'இராமனைஇன்றே***
***கண்ணுறலே கடன்'என்று, ஆங்கு***
***அண்ணலும் அவ்வயின் மீண்டான்,***

*கண்ணுறல் -சந்தித்தல்.* ***(60-3)***

***481. வாலிதின்ஞான வலத்தால்,***
***மாலுறும் ஐம் பகைமாய்த்தே,***
***மேல் கதிமேவுறும் மேலோர்***
***போல், வயமாருதி போனான்.***

*வாலிதின் -தூய்மையான. ஐம்பகை - ஐம்பொறிகளாய பகை. மேல்கதி செல்லும் மேலோர் போல் அனுமன் வானவழியில் இலங்கையினின்று சென்றான்.*
***(63-1)***

## *14. திருவடி தொழுதபடலம்*

***482. போயினர்களிப்பினோடும், புங்கவன் சிலையின்***
***நின்றும்***
***ஏயின பகழி என்னஎழுந்து, விண் படர்ந்து, தாவி,***
***காய் கதிர்க்கடவுள், வானத்து உச்சியில் கலந்த***
***காலை,***
***ஆயின வீரரும்போய், மதுவனம் அதில் இறுத்தார்.***

*வானரர் இராமன்அம்பு போல் சென்றனர்; நன்பகலில் மதுவனம் சேர்ந்தார்.*
***(11-1)***

***483. "ஏத நாள்இறந்த சால" என்பது ஓர் வருத்தம்***
***நெஞ்சத்து***
***ஆதலான், உணர்வுதீர்ந்து வருந்தினம், அளியம்;***
***எம்மைச்***
***சாதல் தீர்த்துஅளித்த வீர ! தந்தருள் உணவும்'***
***என்ன,***
***'போதும் நாம்,வாலி சேய்பால்' என்று, உடன்***
***எழுந்து போனார்.***

இப்பாடலை 6018ஆம்பாடலுடன் ஒப்பிடுக. வீர ! - அனுமனே. வாலி சேய் - அங்கதன். *(11-2)*

***484 அங்கதன்தன்னை அண்மி, அனுமனும் இரு கை கூப்பி***
***'கொங்கு தங்குஅலங்கல் மார்ப ! நின்னுடைக் குரக்குச் சேனை,***
***வெங் கதம்ஒழிந்து சால வருந்தின, வேடை ஓடி;***
***இங்கு, இதற்குஅளித்தல் வேண்டும், இறால் உமிழ் பிரசம்' என்றான்.***

கதம் - கோபம்.இங்கே வேகம் எழுச்சி எனலாம். வேடை களைப்பு. ***(11-3)***

***485. 'நன்று' என,அவனும் நேர்ந்தான்; நரலையும் நடுங்க ஆர்த்து,***
***சென்று, உறுபிரசம் தூங்கும் செழு வனம் அதனினூடே,***
***ஒன்றின் முன்ஒன்று, பாயும்; ஒடிக்கும்; மென் பிரசம் எல்லாம்***
***தின்றுதின்றுஉவகைகூரும்-தேன் நுகர் அளியின் மொய்த்தே.***

நரலை - கடல். மதுவனம்அழித்தல். ***(11-4)***கைப் பாடல்கள் 887***486.***
***ஒருவர் வாய்க் கொள்ளும் தேனை ஒருவர் உண்டு ஒழிவர்; உண்ண***
***ஒருவர் கைக்கொள்ளும் தேனை ஒருவர் கொண்டு ஓடிப் போவர்;***
***ஒருவரோடு ஒருவர் ஒன்றத் தழுவுவர்; விழுவர்; ஓடி***
***ஒருவர்மேல்ஒருவர் தாவி ஒல்லென உவகை கூர்வார்.***

மதுவனத்தில்குரங்குகளின் கூத்தாட்டம். ***(11-5)***

***487. இன்னனநிகழும்காலை, எரி விழித்து, எழுந்து சீறி,***
***அந் நெடுஞ்சோலை காக்கும் வானரர் அவரை நோக்கி,***
***'மன் நெடுங்கதிரோன் மைந்தன் ஆணையை மறுத்து, நீயிர்,***
***என் நினைத்துஎன்ன செய்தீர் ? நும் உயிர்க்கு இறுதி'என்ன.***

*மதுவனக் காவலர்அச்சுறுத்தல்* ***(11-6)***

***488. 'முனியுமால் எம்மை, எம் கோன்' என்று, அவர் மொழிந்து போந்து,***
***'கனியும் மாமதுவனத்தைக் கட்டழித்திட்டது, இன்று,***
***நனி தரு கவியின்தானை, நண்ணலார் செய்கை நாண;***
***இனி எம்மால்செயல் இன்று' என்னா, ததிமுகற்கு இயம்பினாரே.***

*ததிமுகன் - மதுவனக்காவல் தலைவன்; இவன் சுக்கிரீவன் ஏவலால் மதுவனம் காக்கும் வானரன்.* ***(11-7)***

***489. கேட்டவன்,'யாவரே அம் மதுவனம் கேடு சூழ்ந்தார் ?***
***காட்டிர்' என்றுஎழுந்தான்; அன்னார்,'வாலி சேய் முதல கற்றோர்***
***ஈட்டம் வந்துஇறுத்தது ஆக, அங்கதன் ஏவல் தன்னால்,***
***மாட்டின,கவியின் தானை, மது வளர் உல வை ஈட்டம்.***

*மதுவளர் உலவை -தேன்கூடு.* ***(11-8)***

***490. 'உரம் கிளர் மதுகையான்தன் ஆணையால், உறுதி கொண்டே,***
***குரங்கு இனம்தம்மை எல்லாம் விலக்கினம்; கொடுமை கூறி;***
***கரங்களால் எற்றநொந்தேம்; காலலோய் !' என்னலோடும்,***
***'தரம் கிளர் தாதை பட்டது அறிந்திலன் தநயன் போலும்.'***

*தாதை - வாலி - தநயன்- அங்கதன்.* ***(11-9)***

***491. என உரைத்து,அசனி என்ன எழுந்து, இரைத்து, இரண்டுகோடி***
***கனை குரல்கவியின் சேனை 'கல்' எனக் கலந்து புல்ல,***
***புனை மதுச் சோலைபுக்கான்; மது நுகர் புனிதச்***

*சேனை,*
***அனகனைவாழ்த்தி, ஓடி அங்கதன் அடியில் வீழ்ந்த.***

*அசனி - இடி. அனகன் -இராமன்.* ***(11-10)***

*492.* ***'இந்திரன்வாலிக்கு ஈந்த இன் சுவை மதுவின் கானம்;***
***அந்தரத்தவர்க்கும் நோக்கற்கு அரிய என் ஆணை தன்னைச்***
***சிந்தினை;கதிரோன் மைந்தன் திறலினை அறிதி அன்றே ?***
***மந்தரம் அனையதோளாய் ! இற்றது உன் வாழ்க்கை இன்றே.***

கைப் பாடல்கள் *889* ததிமுகன்அங்கதனை நோக்கிக் கூறியது. ***(11-11)***

*493.* ***'மதுவனம்தன்னை இன்னே மாட்டுவித்தனை, நீ' என்னா,***
***கதுமென வாலிசேய்மேல் எறிந்தனன், கருங் கற் பாறை;***
***அதுதனைப்புறங்கையாலே அகற்றி, அங்கதனும் சீறி,***
***ததிமுகன்தன்னைப்பற்றிக் குத்தினன், தடக் கைதன்னால்.***

*ததிமுகன் அங்கதன் போர்.* ***(11-12)***

*494.* ***குத்தினன்என்னலோடும், குலைந்திடும் மெய்யன் ஆகி,***
***மற்று ஒருகுன்றம்தன்னை வாங்கினன், மதுவனத்தைச்***
***செற்றனன்மேலேஏவிச் சிரித்தனன், ததிமுகன்தான்;***
***'இற்றனன், வாலிசேய்' என்று இமையவர் இயம்பும் காலை,***

*செற்றனன் -அங்கதன்.* ***(11-13)***

*495.* ***ஏற்று ஒருகையால் குன்றை இருந் துகள் ஆக்கி, மைந்தன்***
***மாற்று ஒருகையால் மார்பில் அடித்தலும், மாண்டான் என்ன,***
***கூற்றின் வாய்உற்றான் என்ன, உம்பர் கால் குலையப் பானு***

***மேல் திசைஉற்றான் என்ன, விளங்கினன், மேரு***
***ஒப்பான்.***

*பானு- சூரியன்* ***(11-14)***

***496. வாய் வழிக்குருதி சோர, மணிக் கையால் மலங்க***
***மோதி,***
***'போய் மொழி, கதிரோன்மைந்தற்கு' என்று, அவன்***
***தன்னைப்போக்கி,***
***தீ எழும் வெகுளிபொங்க, 'மற்று அவன்***
***சேனைதன்னை,***
***காய் கனல்பொழியும் கையால் குத்துதிர், கட்டி'***
***என்றான்.***

*ததிமுகனை அடித்துசுக்கிரீவன் பால் சென்று சொல்க என்று அங்கதன்அனுப்புதல்.* ***(11-15)***

***497. பிடித்தனர்;கொடிகள் தம்மால் பிணித்தனர்; பின்னும்***
***முன்னும்***
***இடித்தனர், அசனிஅஞ்ச, எறுழ் வலிக் கரங்கள்***
***ஓச்சி;***
***துடித்தனர்,உடலம் சோர்ந்தார்; 'சொல்லும் போய்***
***நீரும்' என்னா,***
***விடுத்தனன்,வாலி மைந்தன்; விரைவினால் போன***
***வேலை,***

*ததிமுகன்சேனையினரை அங்கதன் சேனையைச் சேர்ந்தவர் செய்தபடியைக் கூறியது.* ***(11-16)***

***498. அலை புனல் குடையுமாபோல், மதுக் குடைந்து ஆடி,***
***தம்தம்***
***தலைவர்கட்குஇனிய தேனும் கனிகளும் பிறவும்***
***தந்தே,***
***உலைவுறு வருத்தம்தீர்ந்திட்டு, உபவனத்து இருந்தார்;***
***இப்பால்***
***சிலை வளைத்துஉலவும் தேரோன் தெறும் வெயில்***
***தணிவு பார்த்தே.***

*மாலை நேரம் வருவதுபார்த்து மதுவுண்டு தேன், கனி, பிறவற்றைத் தலைவர்களுக்குத் தந்து அங்கதன் சேனையினர் இருந்தபடி. 11-1 (482) முதல் 11-16 (498) வரை உள்ளபதினேழு பாடல்கள் வானரவீரர்கள் மதுவனம் அழித்தமை கூறியது.* ***(11-17)***

***499. ‘சேற்று இளமரை மலர்த் திருவைத் தேர்க !’ எனக்***
***காற்றின் மா மகன் முதல் கவியின் சேனையை,***

*கைப் பாடல்கள் 891* ***நாற்றிசைமருங்கினும் ஏவி, நாயகன்-***
***தேற்றினன்இருந்தனன்-கதிரின் செம்மலே.***

*மரை - தாமரை; முதற்குறை, கதிரின் செம்மல் - சுக்ரீவன்.* ***(12-1)***

***500. நோக்கின்தென் திசை அல்லது நோக்குறான்,***
***ஏக்குற்றுஏக்குற்று இரவி குலத்து உளான்,***
***‘வாக்கில் தூயஅனுமன் வரும்’ எனா,***
***போக்கிப்போக்கி, உயிர்க்கும் பொருமலான்.***

*இராமன் அனுமனை ஏவிஎதிர்பார்த்து இருந்தவாறு கூறியது.* ***(14-1)***

***501. என்றுஉரைத்து, இடர் உழந்து இருக்கும் ஏல்வையின்***
***வன் திறல்ததிமுகன் வானரேசன் முன்,***
***தன் தலைபொழிதரு குருதிதன்னொடும்,***
***குன்று எனப்பணிந்தனன், இரு கை கூப்பியே.***

*மதுவனக் காவலன்ததிமுகன் சுக்ரீவனைக் காணல். இது முதல் இருபது பாடல்கள் ததிமுகன் வருகையால் வானரர் சீதையைக் கண்டு இனிது திரும்பிய படியைக் குறிப்பால் அறிந்தது கூறப்பெறுகிறது.* ***(19-1)***

***502. எழுந்துநின்று, “ஐய ! கேள், இன்று நாளையோடு***
***அழிந்தது மதுவனம்அடைய’ என்றலும்,***
***வழிந்திடுகுருதியின் வதனம் நோக்கியே,***
***‘மொழிந்திடு,அங்கு யார் அது முடித்துளோர் ?’ என,***

*ததி முகன்கூற்று.* ***(19-2)***

***503. ‘நீலனும், குமுதனும், நெடிய குன்றமே***
***போல் உயர்சாம்பனும், புணரி போர்த்தென***
***மேல் எழுசேனையும், விரைவின் வந்து உறா,***
***சால்புடைமதுவனம்தனை அழிப்பவே.***

*நீலன், குமுதன்,சாம்பன், வானர சேனைகள் மதுவனம் அழித்தார் என்று ததிமுகன் கூறல்.* ***(19-3)504. தகைந்த அச்சேனையைத் தள்ளி, நின்னையும்,***
***இகழ்ந்துஉரைத்து, இயைந்தனன் வாலி சேய்;***
***மனக்கு***

***உகந்தன புகன்றஅவ் உரை பொறாமையே,***
***புகைந்து, ஒருபாறையின் புணர்ப்பு நீக்கியே,***

*அங்கதன் செயல்கூறியது* ***(19-4)***

***505. ‘இமைத்தல்முன், “வாலி சேய், எழில் கொள்***
***யாக்கையைச்***
***சமைத்தி” என்றுஎறிதர, புறங்கையால் தகைந்து,***
***அமைத்தரு கனல்என அழன்று, எற் பற்றியே***
***குமைத்து, உயிர்பதைப்ப, “நீ கூறு போய்” என்றான்.***

*அங்கதன் என்னை அடித்து ‘நீ போய் கூறு’ என அனுப்பினான் என்று ததிமுகன் கூறல்.* ***(19-5)***

***506. ‘இன்று நான்இட்ட பாடு இயம்ப முற்றுமோ ?’***
***என்று உடல்நடுக்கமோடு இசைக்கும் ஏல்வையில்,***
***அன்று அவன்உரைத்தல் கேட்டு, அருக்கன்***
***மைந்தனும்***
***ஒன்றியசிந்தையில் உணர்ந்திட்டான் அரோ.***

*ததிமுகன்கூற்றால் சுக்ரீவன் உணர்தல்.* ***(19-6)***

***507. ஏம்பலோடுஎழுந்து நின்று, இரவி கான்முளை,***
***பாம்பு அணைஅமலனை வணங்கி, “பைந் தொடி***
***மேம்படுகற்பினள்” என்னும் மெய்ம்மையைத்***
***தாம்புகன்றிட்டது, இச் சலம்’ என்று ஓதினான்.***

*ததிமுகனுக்கும் வானரவீரர்க்கும் நிகழ்ந்த இச்சண்டை ‘பிராட்டி மேம்படு கற்பினள்’ என்பதை நமக்குத் தெரிவிக்கிறது என்று சுக்ரீவன் இராமனிடம் கூறல்.* ***(19-7)***

***508. ‘பண் தரு கிளவியாள்தன்னைப் பாங்குறக்***
***கண்டனர்; அன்னதுஓர் களிப்பினால், அவர்***
*கைப் பாடல்கள் 893* ***வண்டு உறைமதுவனம் அழித்து மாந்தியது;***
***அண்டர் நாயக !இனி அவலம் தீர்க’ என்றான்.***

*சீதையைக் கண்டமகிழ்ச்சியால் வானரர் ‘மதுவனம் அழித்து மாந்தியது’ என்று சுக்ரீவன் உணர்த்துதல்.* ***(19-8)***

***509. ‘வந்தனர்தென் திசை வாவினார்’ என,***
***புந்தி நொந்து,‘என்னைகொல் புகலற் பாலர் ?’ என்று***

***எந்தையும்இருந்தனன்; இரவி கான்முளை,***
***நொந்த அத்ததிமுகன்தன்னை நோக்கியே.***

*சுக்ரீவன் ததிமுகனை வினாவுதல்.* ***(19-9)***

***510. 'யார் அவண்இறுத்தவர், இயம்புவாய் ?' என,***
***'மாருதி, வாலிசேய், மயிந்தன், சாம்பவன்,***
***சோர்வு அறுபதினெழுவோர்கள் துன்னினார்,***
***ஆர்கலி நாணவந்து ஆர்க்கும் சேனையார்.'***

*ததிமுகன்பதில்* ***(19-10)***

***511. என்று,அவன் உரைத்த போது, இரவி காதலன்,***
***வன் திறல்ததிமுகன் வதனம் நோக்கியே,***
***'ஒன்று உனக்குஉணர்த்துவது உளது; வாலி சேய்,***
***புன் தொழில்செய்கை சேர் புணர்ப்பன் அல்லனால்.***

*அங்கதன்நல்லவனே என்று ததிமுகனுக்குச் சுக்ரீவன் கூறுதல்.*
***(19-11)***

***512. 'கொற்றவன்பணி தலைக்கொண்டு, தெண் திரை***
***சுற்றிய திசைஎலாம் துருவி, தோகையைப்***
***பற்றியபகைஞரைக் கடிந்து, பாங்கர் வந்து***
***உற்றனர்; அவரையாம் உரைப்பது என்னையோ ?***

*அரசுப்பணி மேற்கொண்டு திரும்பியவர்களைக் கடிதல் ஒல்லாது என சுக்ரீவன் உணர்த்தல்.* ***(19-12)***

***513. 'அன்றியும், வாலி சேய் அரசு அது; ஆதலின்,***
***பின்றுதல்தீதுஅரோ; பிணங்கும் சிந்தையாய் !***
***ஒன்றும் நீஉணரலை; உறுதி வேண்டுமேல்,***
***சென்று,அவன்தனைச் சரண் சேர்தி, மீண்டு'***
***என்றான்.***

*அங்கதன் இளவரசன்ஆகவே அவனையே சரணமாக அடை என்று ததிமுகனுக்குச் சுக்ரீவன் கூறுதல்.* ***(19-13)***

***514. என்ற அத்ததிமுகன் தன்னை, ஏனைய***
***வன் திறல் அரசுஇளங் குரிசில் மைந்தனைப்***
***பின்றுதல் அவனைஎன் பேசற் பாற்று நீ;***
***இன்று போய்,அவன் அடி ஏத்துவாய்' என்றான்.***

இதுவும்அது. *(19-14)*

***515. வணங்கியசென்னியன்; மறைத்த வாயினன்;***
***உணங்கியசிந்தையன்; ஒடுங்கும் மேனியன்;***
***கணங்களோடு ஏகி,அக் கானம் நண்ணினான்-***
***மணம் கிளர்தாரினான் மறித்தும் வந்துஅரோ.***

*மீண்டும் ததிமுகன்மதுவனம் வருதல். **(19-15)***

***516. கண்டனன்வாலி சேய்; கறுவு கைம்மிக,***
***'விண்டவன், நம்எதிர் மீண்டுளான்எனின்,***
***உண்டிடுகுதும்உயிர்' என்ன, உன்னினான்;***
***'தொண்டு' என,ததிமுகன், தொழுது தோன்றினான்.***

*அங்கதன் கோபிக்கவும்ததிமுகன் அவன் அடி பணிதலும். **(19-16)***

***517. 'போழ்ந்தனயான் செய்த குறை பொறுக்க !' எனா,***
***வீழ்ந்தனன்அடிமிசை; வீழ, வாலி சேய்,***
***தாழ்ந்து, கைப்பற்றி, மெய் தழீஇக்கொண்டு,***
***'உம்மை யான்***
***சூழ்ந்ததும்பொறுக்க !' எனா, முகமன் சொல்லினான்.***

*ததிமுகனும் அங்கதனும்ஒருவர்க்கொருவர் மன்னிப்புக் கேட்டு சமாதானம் அடைதல். **(19-17)**கைப் பாடல்கள் 895**518. 'யாம் முதல்***
***குறித்த நாள் இறத்தல் எண்ணியே***
***ஏமுற, துயர்துடைத்து, அளித்த ஏற்றம்போல்,***
***தாமரைக்கண்ணவன் துயரம் தள்ள, நீர்***
***போம்' என,தொழுது, முன் அனுமன் போயினான்.***

*அனுமனை முன்னர்இராமனிடம் அனுப்பல். **(19-18)***

***519. 'வன் திறல்குரிசிலும் முனிவு மாறினான்;***
***வென்று கொள்கதிரும் தன் வெம்மை ஆறினான்'***
***என்றுகொண்டு,யாவரும், 'எழுந்து போதலே***
***நன்று' என,ஏகினார், நவைக்கண் நீங்கினார்.***

*அனைவரும் மாலையில்மதுவனத்திருந்து புறப்படுதல். **(19-19)***

***520. இப்புறத்துஇராமனும், இரவி சேயினை***
***ஒப்புற நோக்கி,'வந்துற்ற தானையர்;***
***தப்பு அறக்கண்டனம் என்பரோ ? தகாது***
***அப்புறத்துஎன்பரோ ? அறைதியால் !' என்றான்.***

*இராமன் சுக்ரீவனைப்பார்த்து வினாவுதல். இதுவரை மதுவன நிகழ்ச்சிக்குப் பின் நடந்தவை கூறப்பெற்றன.* ***(19-20)***

***521. வனை கருங்குழலியைப் பிரிந்த மாத் துயர்***
***அனகனுக்கு அவள்எதிர் அணைந்ததாம் எனும்***
***மன நிலை எழுந்தபேர் உவகை மாட்சி கண்டு,***
***அனுமனும்அண்ணலுக்கு அறியக் கூறுவான்;***

*இராமன் மகிழ்ச்சியும்அனுமன் கூற்றும்.* ***(23-1)***

***522. மாண்பிறந்து அமைந்த கற்பின் வாணுதல் நின்பால்***
***வைத்த***
***சேண் பிறந்துஅமைந்த காதல், கண்களின் தெவிட்டி,***
***தீராக்***
***காண்பிறந்தமையால், நீயே, கண் அகன் ஞாலம்***
***தன்னுள்,***
***ஆண் பிறந்துஅமைந்த செல்வம் உண்டனையாதி***
***அன்றோ ?***

*'கற்பிற் சிறந்த ஒருபெண்ணின் உயரிய காதலை அப்பெண் தன் கண்களில் திரட்டி வைத்துக் கொண்டு உன்னை எதிர்பார்த்துக் காத்திருக்கும் செல்வம் பெற்ற நீயே உலகில் ஆடவராய்ப் பிறந்தவர் பெற வேண்டிய செல்வத்தை முழுதும் பெற்றவனாக ஆனாய்' என்று அனுமன் இராமனைப் பாராட்டிய இப்பாடல் உயர்ந்த கருத்துடையதாகும்.* ***(35-1)***

***523. 'அயிர்ப்பு இலர், காண்பார்; முன்னும் அறிந்திலர்***
***எனினும், ஐய !-***
***எயில் புனைஇலங்கை மூதூர் இந்திரன் யாக்கைக்கு***
***ஏற்ற***
***மயில் புரைஇயலினாரும், மைந்தரும், நாளும் அங்கே***
***உயிர்ப்பொடும்,உயிரினோடும், ஊசல் நின்று***
***ஆடுவாரும்.'***

*இலங்கையில் ஆடவரும்மகளிரும் நுகர்ந்து நிற்கும் தன்மை கூறியது.* ***(35-9)***

***524. ஆயிடை,கவிகளோடும், அங்கதன் முதலினாயோர்***
***மேயினர்,வணங்கிப் புக்கார், வீரனை, கவியின்***
***வேந்தை;***
***போயின கருமம்முற்றிப் புகுந்தது ஓர் பொம்மல்***
***தன்னால்,***
***சேயிரு மதியம்என்னத் திகழ்தரு முகத்தர் ஆனார்.***

*அங்கதன் முதலியோர் வருகை.* ***(47-1)***

***525. நீலனை நெடிதுநோக்கி, நேமியான் பணிப்பான்; 'நம்தம்-***
***பால் வரும்சேனைதன்னைப் பகைஞர் வந்து அடரா வண்ணம்,***
***சால்புறமுன்னர்ச் சென்று, சரி நெறி துருவிப் போதி,***
***மால் தரு களிறுபோலும் படைஞர் பின் மருங்கு சூழ.'***

*இராமன் நீலனைநோக்கிச் சேனைகளை அழைத்துக் கொண்டு நேர் வழியை ஆராய்ந்து செல்க எனப் பணித்தல்.* ***(49-1)****கைப் பாடல்கள் 897****526.***
***என்று உரைத்து எழுந்த வேலை, மாருதி இரு கை கூப்பி,***
***'புன் தொழில்குரங்கு எனாது என் தோளிடைப் புகுது' என்னா,***
***தன் தலை படியில்தாழ்ந்தான்; அண்ணலும், சரணம் வைத்தான்;***
***வன் திறல் வாலிசேயும் இளவலை வணங்கிச் சொன்னான்;***

*இராமன் அனுமன் மேல்வீற்றிருத்தல்.* ***(49-2)***

***527. 'நீ இனிஎன்தன் தோள்மேல் ஏறுதி, நிமல !' என்ன,***
***வாய் புதைத்து இறைஞ்சி நின்ற வாலி காதலனை நோக்கி,***
***நாயகற்கு இளையகோவும். 'நன்று' என அவன்தன் தோள்மேல்,***
***பாய்தலும், தகைப்பு இல் தானை படர் நெறிப் பரந்தது அன்றே.***

*இலக்குவன்அங்கதன் தோள் மேல் ஏறுதல்.* ***(49-3)***

***528. கருடனில் விடையில் தோன்றும் இருவரும் கடுப்ப, காலின்***
***அருள் தரு குமரன்தோள்மேல், அங்கதன் அலங்கல் தோள்மேல்,***
***பொருள் தரும் வீரர் போத, பொங்கு ஒளி விசும்பில் தங்கும்***
***தெருள் தகு புலவர்வாழ்த்திச் சிந்தினர், தெய்வப் பொற் பூ,***

*திருமாலும்,சிவபெருமானும் போல இராமலக்குவர்; கருடனும், விடையும் போல அனும அங்கதர் தோள் மேல் ஏறிப் புறப்படுதல்.* ***(49-4)***

***529. 'வையகம் அதனில் மாக்கள் மயங்குவர்,வய வெஞ் சேனை***
***எய்திடின்'என்பது உன்னி, இராகவன் இனிதின் ஏவ,***
***பெய் கனி,கிழங்கு, தேன் என்று இனையன பெறுதற்கு ஒத்த***
***செய்ய மால்வரையே ஆறாச் சென்றது, தகைப்பு இல் சேனை.***

*நாடுவழியாகச்சென்றால் மக்கள் மயங்கி வருந்துவர் என்று கருதிய இராமன் ஏவ, வானர சேனை கனி, கிழங்கு, தேன் பெறுவதற்கு ஒத்த மலை வழியாகத் தெற்கு நோக்கிச் சேறல்.* ***(49-5)***